# குருதிச்சாரல் - 1

**பகுதி ஒன்று : பாலைமகள் – 1**

அஸ்தினபுரிக்கு வடமேற்கே கள்ளிப்புதர்களும் முள்மரங்களும் மண்டி மானுடரில்லா செம்மண்வெளியாகக் கிடந்த தொல்நிலமாகிய குருக்ஷேத்ரத்தின் வடமேற்கு எல்லையில் இருந்த புண்டரீகம் என்னும் சிறிய சுனையில் நீராடுவதற்காக சிபிநாட்டரசி தேவிகை தன் தோழியரான பூர்ணையுடனும் சுரபியுடனும் வந்தாள். சிபிநாட்டிலிருந்து கொடியடையாளங்கள் இல்லாத எளிய பயணத்தேரில் ஏழு சிந்துக்களை கடந்து அஸ்தினபுரியின் எல்லைக்குள் நுழைந்து எல்லையிலமைந்த சாயாகிருகம் என்னும் சிற்றூரின் காவல் மாளிகையில் இரவு தங்கி அங்கிருந்து முதற்புலரியில் கிளம்பி குருக்ஷேத்ரத்திற்குள் நுழைந்தாள்.

குருக்ஷேத்ரத்தில் பரசுராமர் அமைத்த ஐந்து தூநீர் வாவிகளில் நீராடுவதற்கே பெரும்பாலானவர்கள் செல்வது வழக்கம். பெருந்தேர்களுக்குரிய மையச்சாலை அந்த வாவிகளை நோக்கியே போடப்பட்டிருந்தது. செம்மண்சாலையின் நான்காவது நாழிகைக்கல்லில் கள்ளிப்புதர்களின் நடுவே ஒன்றன்மேல் ஒன்றென தூக்கி வைக்கப்பட்டிருந்த மூன்று கற்கள் பக்கவாட்டில் பிரிந்த சாலையை சுட்டின. அதன் வழியாக சென்ற பாதை நெருஞ்சியும் சிறுமுட்செடிகளும் பரவி தடமழிந்திருந்தது. புரவிகள் கால்களை தூக்கித்தூக்கி வைத்து தாவிச்செல்ல சகடங்கள் கற்களில் முட்டி ஏறி இறங்கியும் முயல்வளைகளில் புதைந்து சரிந்து எழுந்தும் தேர் மெதுவாகச் சென்றது.

தேருக்குள் தேவிகை உதடுகளை இறுக்கியபடி சிறிய சாளரத்தினூடாக கடந்துசென்ற நிலவிரிவை நோக்கியபடி அமர்ந்திருந்தாள். தேரின் குலுக்கத்தில் அவளும் தோழிகளும் ஒரு நடனத்திலென உலைந்தாடினர். பூர்ணை அரைத்துயிலில் ஆடிக்கொண்டிருக்க மறுபக்கச் சாளரத்தினூடாக சுரபி வெளியே பார்த்துக்கொண்டிருந்தாள். உள்ளே இருந்த வெண்கல யானத்திற்குள் செம்புக் கிண்ணம் உருண்டு ஓசையிட்டது. தேரின் அத்தனை உலோகப்பரப்புகளும் மணிகளாக மாறி குலுங்கின.

குருஷேத்ரத்தின் நிலம் குருதிச்செம்மண்ணால் ஆனது என தேவிகை அறிந்திருந்தாள். அங்கு நிகழ்ந்த மாபெரும் போர்களின் கதைகளை இளமையிலேயே கேட்டு குருதிப் பெரும்பரப்பாகவே அதை எண்ணியிருந்தாள். எண்ணியிருந்ததுபோலவே அது குருதியாக விரிந்திருந்தது அவளுக்கு ஒரு நிறைவை அளித்தது. குருதி என்னும் சொல்லாக இருந்தது உள்ளம். பின்னர் செம்மையின் விரிவே அச்சொல்லை அழித்தது. சொல்லென்றாகாதபோது செம்மை அவள் அகமாகவும் இருப்பாகவும் மாறியது.

செம்மை பல்லாயிரம் இதழ்களாக விரிந்து தொலைவான்கோடுவரை பெருகிக்கொண்டிருந்தது. காலை இளங்கதிர் ஒளி விழுந்து மின்னிய ஒரு நிலக்கீற்று விழிகளைச் சீண்டியபோது விழித்துக்கொண்டு செம்மை எனும் சொல்லென அதை ஆக்கி உள்ளத்தின் ஓரத்தில் ஒதுக்கினாள். எஞ்சிய பகுதி குருதி குருதி என கொந்தளித்தது. செம்மைக்கு நிகரான வண்ணம் பிறிதில்லை. அழகும் வன்மையும் ஒருங்கிணைந்தது அது என எண்ணிக்கொண்டாள்.

கருக்கிருளில் அவர்கள் சாயாகிருகத்திலிருந்து கிளம்பிய கணம் முதலே அவள் குருக்ஷேத்ரத்தை விழிகளால் எதிர்பார்க்கத் தொடங்கியிருந்தாள். இருளுக்குள் கரிய மெழுகுவழிவுகளென நின்றன மரங்கள். கரிக்கறைகள் என வானில் முகில்கள். காற்று நிலைத்து குளிர் பரந்திருந்தது. இலைகள் பனிசொட்டி விடுபட்டு எழுந்தசைந்தன. தேரொலி கேட்டு விழித்த கரிச்சான் ஓசை எழுப்பியது. இருளுக்குள் புதைந்துசென்றுகொண்டே இருப்பதாகத் தோன்றியது. பின்னர் அவள் தொடுவானில் செந்நிறக் கீற்றை கண்டாள். சூழ்ந்திருந்த நிலம் அப்போதும் இருளலைகளாகவே இருந்தது.

மரங்கள் குறையத் தொடங்கின. சாலையோரமாக மிகப் பெரிய வேலமரம் குற்றிலைக் குடைசூடி நின்றிருந்தது. அதை கிளைநிறைத்திருந்த பறவைகள் தேரொலியில் எழுந்து வானில் கலைந்தன. பின்னர் காற்று புழுதிமணத்துடன் வந்து தேருக்குள் சுழலத் தொடங்கியது. புழுதிக்காக அவள் மேலாடையால் முகத்தை மூடிக்கொண்டு வெளியே பார்த்தாள். எதுவோ மாறியிருந்தது. ஒளி வந்துவிட்டதா? வானம் தெரியத்தொடங்கியதா? பின்னர் அறிந்தாள் மரங்களற்ற திறந்த நிலவெளிக்கு வந்துவிட்டிருப்பதை.

தேரின் சகட ஒலி மாறுபட்டிருந்தது. அது என்ன மணம் என அவள் அறியவிரும்பினாள். புழுதிமணம், ஆனால் பிறிதொன்று கலந்திருந்தது. சாம்பல் மணம்போல. உப்புமணம் போல. அவள் பூர்ணையிடம் “என்ன மணம்?” என்றாள். அவள் வெற்றுவிழிகளால் நோக்கினாள். “என்ன மணம் அது?” என்றாள் தேவிகை. பூர்ணை சிறு சாளரக்கதவை விலக்கி அதனூடாக தேரோட்டியிடம் “என்ன மணம் அது?” என்றாள். அவன் “குருக்ஷேத்ரத்திற்குள் நுழைகிறோம், அரசி…” என்றான். “ஆம்,

காற்றில் வீசுவது என்ன மணம்?" என்றாள் பூர்ணை. அவன் தயங்கியபின் "குருஷேத்ரத்தின் மணம்" என்றான்.

அவள் விழிகூர்ந்து இருட்டுக்குள் நோக்கிக்கொண்டே வந்தாள். வானில் முகில்களின் விளிம்புகள் செந்நிறப் பூச்சுகொண்டன. தேரோட்டி நான்கு வேலமரங்கள் கிளைபின்னி நின்றிருந்த இடத்தில் தேரை நிறுத்தி இறங்கிவந்து படிப்பெட்டியை வைத்தான். தோழிகள் முதலில் இறங்க அவள் மேலாடையை நன்கு சுற்றிக்கொண்டு பெட்டிமேல் காலெடுத்து வைத்தாள். புழுதியில் அடுத்த காலை வைத்தபோது உடல் கூச்சம் கொண்டது. அந்த மணம் அவர்களை சூழ்ந்துகொண்டது. "மூடிக்கிடக்கும் வீடுகளில் படிந்துள்ள மணம் இது, அரசி" என்றாள் பூர்ணை. அவள் அதைச் சொன்னதும் அந்த மணம் அவ்வடிவை சூடிக்கொண்டது.

புதர்களுக்கு அப்பால் அவர்கள் நடந்தபோது பூர்ணை மர மிதியடிகளை எடுத்துப்போட்டு "முட்கள் நிறைந்துள்ளன..." என்றாள். மிதியடியின் ஓசை மரத்தரையில் நீர் சொட்டுவதுபோல கேட்டது. மரங்களுக்கு அப்பால் சென்று நின்றபோதுதான் அவள் குருஷேத்ரத்தின் நிலத்தை ஒரே விழிவீச்சில் முழுமையாக பார்த்தாள். சில கணங்களுக்கு உளச் சொற்களேதும் எழவில்லை. பின்னர் பூர்ணையிடம் "இதுதானா?" என்றாள். அவள் "ஆம் என்றார் பாகன்" என்றாள். "செந்நிறமாக இருக்கும் என்றார்கள்" என்றாள் தேவிகை. "செந்நிறமாகத்தானே இருக்கிறது?" என்றாள் பூர்ணை. அவள் நோக்கியபோது நிலம் செந்நிறமெனக் காட்டியது. மழைவழிந்த வழித்தடங்களும் விரிசல்களும் உருளைக்கற்களும் குற்றுப்புதர்களுமாக விரிந்து சூழ்ந்திருந்தது.

மீண்டும் தேரிலேறிக்கொண்டபோது நோக்க நோக்கவே நிலம் செம்மை கொண்டது. அதன் உள்ளிருந்து ஒளி ஊறிஎழுவதுபோல. அல்லது குருதி கசிந்து பரவுகிறதா? இறங்கி நடந்தால் ஊன்கதுப்பென கால்குழிந்து செந்நிணம் ஊறிநிறையுமா? அது என்ன மணம்? அப்போது அதை கெடுமணம் என உணர்ந்தாள். மட்கிய துணிகளின் மணம். நோயுற்ற முதியவர்கள் இருக்கும் இல்லங்களில் அத்தகைய மணத்தை அவள் உணர்ந்ததுண்டு. எண்ணங்களில் அலைந்து விழிக்கு சித்தம் மீண்டபோது செந்நிலம் நோக்கு கூசும்படி திசைகளை முட்டி விரிந்து தேர்விரைவில் மெல்ல திரும்பிக்கொண்டிருப்பதை கண்டாள்.

கரடியோ பன்றியோ நிலத்தை அகழ்ந்து உருவாக்கிய குழி சோரிஎழும் புண்போலத் தெரிந்தது. வாள்போழ்ந்த வடுபோல சில ஒற்றையடிப்பாதைகள். முட்புதர்கள் காற்றில் சுழன்று வரைந்த அரைவட்டங்கள். அத்தனை மரங்களுக்குக் கீழேயும் செம்மண்புற்றுக் குவைகள். மரப்பட்டைகளில் பரவியேறிய செம்புற்றுப்பரப்பு. குருஷேத்ரத்தின் மண் ஆறாப்பெரும்பசி கொண்டது. அதில் விழுந்த ஒவ்வொன்றையும் புற்றென எழுந்து மூடி அது உண்டது. நோக்கு சென்ற தொலைவிலெல்லாம் செம்புற்றுகளின் குவைகள். அந்தக் குருதிக்கடலின் நுரைகள்போல.

அவள் வரும் செய்தி புண்டரீகத்தின் பூசகர் பிரஜங்கருக்கு மட்டுமே அறிவிக்கப்பட்டிருந்தது. அவரும் சிபிநாட்டிலிருந்து அரசி ஒருத்தி வருவதாகவே அறிந்திருந்தார். ஆகவே சுனைக்கு வரும் சிறுபாதையின் தொடக்கத்தில் இரு துணைப்பூசகர்களையும் ஒரு காவலனையும் நின்றிருக்க ஆணையிட்டார். அவர்களும் வழக்கமான சலிப்புடன் அங்கே

நின்றிருந்த பெரிய கருவேலமரத்தின் குடைநிழலில் அமர்ந்திருந்தனர். பூசகர்களில் ஒருவன் துயில்கொள்ள இன்னொருவன் வாயிலிட்ட பாக்கின் சுவையில் கண்சொக்கி அமர்ந்திருந்தான். காவலன் மடியில் வைத்த வேலின் கூர்முனையை ஒரு பட்டைக் கருங்கல்லால் உரசி மேலும் தீட்டி அவ்வப்போது விரலால் வருடி கூர்நோக்கி மீண்டும் தீட்டினான். அந்த ஓசை ஏதோ அறியாக் கிளி ஒன்றின் குரலென பொட்டலில் ஒலித்துக்கொண்டிருந்தது.

தேவிகை அந்த ஓசையை தொலைவிலேயே கேட்டாள். அது எந்தப் பறவையின் ஒலி என எண்ணம் ஓட்டிச்சலித்து விழிவிலக்கி ஆங்காங்கே காற்றில் கிளைவளைந்து நின்றிருந்த முள்மரங்களை நோக்கினாள். பறவைகள் எழுந்து வானில் சிறகடித்துச் சென்றமரும் தொலைவு ஒவ்வொரு மரத்திற்கும் இடையே இருந்தது. அங்கு நின்றவை அனைத்துமே இலைசிறுத்து, தடிகுறுகிய முள்மரங்களாகையால் காற்று வீசும்போது சீறலோசை எழுந்தது. பெருமூச்சுடன் குருஷேத்ரம் எழுந்துகொள்ளப்போவதுபோல. அலையெனச் சுருண்டு. செந்நிற நாகச்சுருள்களென அவிழ்ந்து. அத்தனை நேரமும் தன்னுள் நாகங்களைப்பற்றிய எண்ணம் ஏன் ஓடிக்கொண்டிருந்தது என அவள் திடீரென கண்டுகொண்டாள்.

அவள் வந்த தேரைக் கண்டு காவலன் எழுந்து நின்றான். அதற்கு ஒரு கணம் முன்பே அவன் கருங்கல் சில்லால் வேல்முனையை உரசுவதை அவள் கண்டுவிட்டிருந்தாள். விழிவிலக்கி பூர்ணையிடம் “அணுகிவிட்டோம்” என்றாள். காலைவெயில் சரிந்து மண்ணில் விழுந்து கூழாங்கல் பரப்புகளை ஒளிவிடச் செய்திருந்தது. இலைநுனிகள் வேல்முனைக் கூர்கொண்டு மின்னின. மண்பரப்பு

மென்பொருக்காக இருப்பதை அவள் கண்டாள். இரவுப்பனி உலர்ந்துகொண்டிருந்தது. இன்னும் சற்றுநேரத்தில் புழுதியாகி பறக்கத் தொடங்கிவிடும். காவலன் எழுந்தபோது வேல்நுனி மெல்ல திரும்ப அவள் கண்களை கிழித்துச்சென்றது அதன் ஒளி.

பூசகர்கள் தேர் அருகே வந்து பணிந்தனர். ஒருவன் "வணங்குகிறேன் தேர்ப்பாகரே, என் பெயர் கன்மதன். இவன் காவகன். நாங்கள் இங்கே புண்டரீகையன்னையின் பூசகர்கள். சிபிநாட்டரசிக்காக காத்திருக்கிறோம். அது தாங்கள் என எண்ணுகிறேன்" என்றான். பாகன் சிபிநாட்டு முத்திரையை காட்ட மேலும் தலைவணங்கி "சிபிநாட்டு அரசியை புண்டரீகத்திற்கு வரவேற்கிறோம். இங்கிருந்து நடந்தேதான் செல்லவேண்டும்... ஒற்றையடிப்பாதை" என்றான்.

"இறுகிய பொட்டல்தானே?" என்றான் பாகன். "ஆம், ஆனால் நடுவே ஓரிரு நீரோடைகள் உள்ளன. நாலைந்து இடங்களில் நிலம் ஆழமாக வெடித்துமிருக்கிறது. புரவிகளிலும் செல்லலாம்... ஆனால் ஓடைகள் கூழாங்கற்சரிவுகொண்டவை..." என்றான். தேவிகை "தாழ்வில்லை, நான் நடந்தே வருகிறேன்" என்றாள். பாகனிடம் "தேர் இங்கேயே நிற்கட்டும்..." என்று சொல்ல அவன் தலையசைத்தான். பூசகன் "அத்தனை தொலைவு இல்லை, அரசி" என்றான்.

தேர்ப்பாகன் இறங்கி படிமேடையை வைக்க அவள் அதில் கால்வைத்து இறங்கினாள். பூர்ணையும் சுரபியும் பூசனைப்பொருட்கள் அடங்கிய மூங்கில் பெட்டிகளை எடுத்துக்கொண்டனர். மாற்றாடைகள் கொண்ட எடைமிக்க பெட்டியை காவலன் எடுத்துக்கொண்டான். பாகன் புரவிகளை அவிழ்த்து விட்டு "இங்கே அருகே நீர் உள்ளதா?" என்றான்.

“இந்த நீர்த்தடத்தை தொடர்ந்துசெல்க! குருஷேத்ரத்தில் தெரியும் எந்த நீர்வழிந்த தடமும் இறுதியில் ஒரு சுனையைத்தான் சென்று சேரும்” என்றான் காவகன்.

இரு பூசகர்களும் வழிகாட்ட அவர்கள் நடக்கத் தொடங்கினர். கன்மதன் “ஆண்டுக்கு நாலைந்துமுறையாவது அரசகுடியினர் வந்துகொண்டிருக்கிறார்கள், அரசி. புண்டரீக தீர்த்தத்தில் மூழ்கி நீராடி அருகிலிருக்கும் புண்டரீகை அன்னையின் ஆலயத்தில் வழிபடுபவருக்கு புண்டரீக வேள்வியை இயற்றியதன் நற்பயன் கிடைக்கும் என்று தொல்கூற்று உள்ளது” என்றான். காவகன் “சென்ற ஆண்டு இந்திரப்பிரஸ்தத்தில் இருந்து பேரரசி குந்தி இங்கு வந்திருந்தார்கள். அதற்கு முன்னர் அஸ்தினபுரியின் அரசி பானுமதியும் இணையரசி அசலையும் வந்தார்கள்” என்றான்.

தேவிகை மேலாடையால் முகத்தை மூடிக்கொண்டு நடந்தாள். காற்றில் அவள் ஆடை பறந்தது. கூழாங்கற்களில் பட்டு அவள் மிதியடி பிறழ நின்று மீண்டும் காலெடுத்து வைத்தாள். “பொன், நிலம், மைந்தர் என்னும் மூன்று முதன்மைச்செல்வங்களை அடைவதற்கானது புண்டரீக வேள்வி. ஆயிரமிதழ் தாமரைமேல் அமர்ந்த பேரன்னையை வணங்கி இங்குள்ள மங்கலங்கள் அனைத்தையும் அளிக்கும்படி கோருகிறோம். இங்கு நிறைவதென்பது அங்கு செல்வதற்கான எளிய வழி என்றனர் முன்னோர். அரசர்கள் மட்டுமல்லாது வணிகர்களும் வேளிர்களும் ஆயர்களும்கூட இங்கே வருவதுண்டு” என்றான் காவகன்.

தேவிகை காலில் ஏதோ தடுக்க நின்று குனிந்து நோக்கி மூச்சொலியுடன் “ஆ!” என்று கூவினாள். “என்ன?” என்று நோக்கிய பூர்ணை “அய்யோ!” என்றாள். கன்மதன் அருகே வந்து

குனிந்து நோக்கி அந்த மண்டையோட்டை எடுத்தான். சுண்ணத்தாலானதுபோல அது வெளுத்து மெருகிழந்திருந்தது. உதிராது எஞ்சிய பற்கள் மரத்தில் செதுக்கப்பட்டவைபோலத் தெரிந்தன. விழிகளின்மையின் குழியில் இருள் தேங்க அதுவே விழியென்றாக பற்களின் நகைப்புடன் இருள்நோக்கு இணைந்துகொண்டது.

"இவை இங்கே ஏராளமாக உண்டு அரசி... இது தொன்மையான போர்க்களம். மாண்டவர்களை களத்திலேயே அப்படியே விட்டுவிடுவது அந்நாளைய வழக்கம். ஓரிரு நாட்களிலேயே உடல்கள் மட்கி வெள்ளெலும்பு மண்ணில் புதைந்து மறையும். அரிதாக மழையில் புற்றுகள் கரையும்போது இப்படி வெளிவந்து விழுகின்றன" என அதை அவன் வீசிவிட்டு "வருக!" என்றான். அவள் அதை திரும்பி நோக்கினாள். அதற்கப்பால் இரண்டு விலா எலும்புகள் மண்ணில் பாதி புதைந்திருப்பதை கண்டாள்.

"இந்தத் தொல்நிலம் போருக்கென தேர்ந்தெடுக்கப்பட்டதே இதில் பெரும்பசியின் தெய்வமாகிய அன்னை ஜடரை வாழ்கிறாள் என்பதனால்தான். இங்கு வெறும்மண்ணில் படுத்து அசையாது உறங்கினால் விழிக்கையில் நம் உடலை மண் எழுந்து கவ்வத் தொடங்கியிருப்பதை காணலாம். நோக்குங்கள், இங்கே சருகுகளே இல்லை. விழுந்துமடிந்த மரங்களுமில்லை. அனைத்தும் அக்கணமே உண்ணப்படுகின்றன. மூண்டெழும் பசியினால் சிவந்த நிலம் என இதை சூதர்கள் பாடுகிறார்கள்."

அவள் ஒன்றும் சொல்லாமல் தலைகுனிந்து நடந்தாள். காவகன் "சுண்ணம்போலாகிவிட்டிருக்கிறது. ஆயிரமாண்டுத் தொன்மையான எலும்புகள்கூட இங்கே கிடைக்கின்றன" என்றான். கன்மதன் "இங்கு நிகழ்ந்த போர்களைப்பற்றி ஏழு

காவியங்கள் எழுதப்பட்டுள்ளன. அவற்றில் சுப்பிரபாவரின் குருஷேத்ரவைபவம்…” என்று தொடர தேவிகை “போதும்” என்றாள். அவன் திகைத்து “அரசி…” என்றான். பூர்ணை போதும் என கைகாட்டினாள். அவன் தலைவணங்கி பேசாமல் நடந்தான்.

குருஷேத்ரத்தின் செந்நிலம் திடீரென்று சரியத்தொடங்கியது. உருளைக்கற்கள் பரவிய பரப்பில் நோக்கி எண்ணி காலெடுத்துவைத்து நடக்கவேண்டியிருந்தது. இருந்தும் சுரபி நிலைதடுமாறி விழப்போக கன்மதன் வலக்கையால் அவள் தோளைப்பற்றி நிறுத்தினான். இன்னொரு கையால் அவன் பூசைப்பொருள்களிருந்த கூடையை பற்றியதனால் அது விழாமலிருந்தது. “கால்களை அகற்றி வையுங்கள். முன்னங்காலை ஆழ ஊன்றுங்கள்” என்று அவன் சொன்னான். அவர்கள் காலடி பட்டு உருண்டுசென்ற கற்கள் உறுதிப்பட்ட தசைத்துண்டுகள் போலிருந்தன. செம்மண் கதுப்பில் விழுந்த சுவடுகளில் மிதியடியின் விரிசல்கள்கூட பதிவுகொண்டிருந்தன.

இரு ஆழமான நீரற்ற ஓடைகளைக் கடந்து அப்பால் சென்றனர். நீர் ஒழுகிய பாறைகளில் உப்புத்தடங்கள் வெண்மையாக படிந்திருந்தன. ஒரு முட்புதர்மரம் பெருமழையில் செழித்ததுபோல இலைசெறிந்து பசுங்குவை என நின்றிருக்க அந்தக் கூடாரத்திற்குள் நூற்றுக்கணக்கான சிறுகிளிகள் செறிந்திருந்தன. அவற்றின் சிற்றொலிகள் கூடி அந்த மரத்தின் உள்ளமென ஒலித்துக்கொண்டிருந்தது.

ஒருவர் மட்டுமே செல்லத்தக்க இரும்பாலான நீண்ட பாலம் ஒன்றுக்கு அடியில் மண் பசிகொண்ட அரக்கனின் வாய் என பிளந்திருந்தது. அதன்மேல் செல்லும்போது தேவிகை கால்

பதறினாள். ஆழத்திற்குள் இருள் நிறைந்திருந்தது. “இருபது வாரை ஆழத்திற்குமேல் உள்ளது, அரசி. அடியில் சேற்றுக்குழம்பு மேலும் பல வாரை ஆழத்தில் தேங்கியிருக்கிறது. தவறிவிழுந்தவர்களை மீட்கவே முடியாது” என்றான் கன்மதன். அவள் மறுபக்கம் செல்வதுவரை நோக்கை அப்பால் நின்ற பெரிய புற்றில் நிறுத்தினாள்.

ஒவ்வொருவராகக் கடந்து மறுபக்கம் சென்றதும் “அரிதாகவே சிலர் இதன்மேல் புரவியில் வருகிறார்கள். இளைய பாண்டவர் அர்ஜுனரின் புரவி பாய்ந்தே கடந்துவிடும்” என்றான் கன்மதன். தேவிகை “பார்த்து வாடி” என பூர்ணையிடம் சொன்னாள். சுரபி அப்போதும் துயில்விலகா விழிகளுடன் நடந்தாள். சிபிநாட்டிலிருந்து அவர்கள் கிளம்பியபின் ஒவ்வொருநாளும் பின்னிரவில் மஞ்சம் சென்று முன்காலையில் எழுந்துகொண்டிருந்தனர். செல்லுமிடத்திற்கு உளம்சென்றுவிட்டபின் உடல் பிந்துவது பெரும் துன்பம் என அவள் உணர்ந்தாள். விரைந்துசெய்யவேண்டிய எவையெவையோ எங்கோ காத்திருப்பதாக உள்ளம் பதைப்பு கொண்டிருந்தது.

நிலஇறக்கத்தில் நூற்றுக்கணக்கான சிற்றோடைகள் வலையென பின்னிப் பரவி இறங்கிச் சென்றன. அன்னை வயிற்றின் பேற்றுவரிகள்போல என அவள் எண்ணினாள். பின்னர் அவை இணைந்து ஓடையென்றாவதை கண்டாள். எல்லா ஓடைகளும் ஒரு மையம் நோக்கி செல்வது தெரிந்தது. எவற்றிலும் நீர் இல்லை, ஆனால் தடம் என நீர் தன் வழியையும் நெளிவையும் பதிவுசெய்திருந்தது. ஒலியின்மையை உளச்செவி கேட்குமென அப்போது அறிந்தாள்.

“இவை சென்றுசேரும் மையக்குழிதான் புண்டரீக தீர்த்தம். அதை கமலநாபி என்பார்கள். இந்த ஓடைகளை அதன் ஆயிரம் இதழ்கள் என்று சொல்வதுண்டு” என்றான் கன்மதன். “மழைக்காலத்தில் பார்த்தால் செம்மண் கலங்கி வழியும் சிற்றோடைகள் தாமரையிதழ்கள்போலவே தோன்றும். மையத்தில் ஊற்று பெருங்குமிழிகளாக கொப்பளித்தெழும். புண்டரீக பீடம்மீது அன்னை அமர்ந்திருப்பதை காணமுடியும்.” தேவிகை நின்று இளைப்பாறி பெருமூச்சுவிட்டு மீண்டும் நடந்தாள்.

பிரஜங்கர் வந்து வணங்கி அவர்களை வரவேற்றார். “சிபிநாட்டு அரசியை வணங்குகிறேன். தங்களுக்கு இந்நாளுக்குரிய தேவர்கள் காவலாகுக! புண்டரீகை அன்னையின் நல்லருள் சூழ்க!” என முகமன் உரைத்தார். ஒற்றையடிப்பாதை வளைந்து ஓர் ஆள் உயரமிருந்த செந்நிறக் கல்லால் ஆன சிறிய ஆலயத்தை சென்றடைந்தது. அதன் முற்றத்தில் இரு துணைப்பூசகர்கள் நின்றிருந்தனர். பூசனைக்குரிய பொருட்கள் அடுக்கப்பட்டிருந்தன.

தேவிகை ஏமாற்றத்துடன் ஆலயத்தையும் அருகே இருந்த சுனையையும் பார்த்தாள். “சிறிய சுனை” என்றாள். “ஆம், மழைக்காலத்தில் பெருகி நிறையும். ஆண்டு முழுக்க உள்ளிருந்து சற்றே ஊறிக்கொண்டிருக்கும்” என்றார் பிரஜங்கர். “வருக, அரசி!” என அழைத்துச்சென்றார். சுனையைச் சூழ்ந்து செம்மண்சேறு காலடித்தடங்கள் உலர்ந்து படிந்திருந்தது. மீண்டும் விழிசெலுத்தியபோதுதான் அந்த நீர் செந்நிறமானது என்பதை அவள் உணர்ந்தாள். “செந்நிற நீரா?” என்றாள். “ஆம், அரசி. இச்சுனையின் சிறப்பே இதுதான். செம்மண்ணில் ஊறிவரும் நீர் இது. குருதிச்சுனை என்று இதை சொல்வார்கள்.”

ஆறாப்புண் என அவள் எண்ணிய கணம் பிரஜங்கர் “இது புண்டரீகையன்னையின் யோனிச்சுழி என்று முனிவர்கள் சொல்கிறார்கள்” என்றார். அவள் அகம் அதிர்ந்து விழிவிலக்கிக்கொண்டாள். “இந்த நீர் அடர்த்தியானது. இதில் மீன்களோ பிற உயிர்களோ வாழ்வதில்லை. விலங்குகள் அருந்துவதுமில்லை” என்றார் பிரஜங்கர். அவள் மீண்டும் அச்சுனையை பார்த்தாள். நீரில் வானம் தெரியவில்லை. நோக்கிழந்து கலங்கிய விழி என அப்போது தோன்றியது.

ஆலய முகப்பை அவர்கள் அடைந்தபோது துணைப்பூசகர்களில் ஒருவன் சங்கோசை எழுப்ப இன்னொருவன் மணிமுழக்கினான். பிரஜங்கர் “அன்னையே! அழிவற்றவளே! முடிவிலாது மலரும் அனல்பூவே! அழகுருவே!” என கைகூப்பி வணங்கியபின் தேவிகையிடம் “வருக!” என்றார். அவள் சென்று முற்றத்தில் நின்று குனிந்து ஆலயத்திற்குள் நோக்கினாள். புடைப்பாக சிலை செதுக்கப்பட்ட தொன்மையான நிலைக்கல். கரிய சிறிய சிலையாக அன்னை தாமரைமேல் அரை யோகநிலையில் ஒரு கால் மடித்து வலக்கை ஊன்றி இடக்கையில் மலருடன் அமர்ந்திருந்தாள். காலடியில் செந்தாமரை இதழ்கள் வைக்கப்பட்டிருந்தன. இரு நெய்யகல்கள் அசையாச் சுடர் கொண்டிருந்தன.

பிரஜங்கர் “நீராடி வருக, அரசி!” என்றார். தேவிகை திரும்பி பூர்ணையை நோக்கிவிட்டு நடந்தாள். அவர்கள் மாற்றாடை இருந்த பெட்டியுடன் உடன் செல்ல கன்மதன் வழிகாட்ட அவள் சரிவிறங்கிச் சென்றாள். கால்தடப் பாதை வளைந்து இறங்கி சுனையைச் சென்றடைந்தது. சேற்றுப்பரப்பைக் கடந்து சுனையை அடைய பெரிய கற்களை பாதையாக போட்டிருந்தனர். நீர்விளிம்பில் ஒரு பாறை படியாகக் கிடந்தது.

கன்மதன் தலைவணங்கி மேலேறி சற்று அப்பால் திரும்பி நின்றான். சேடியர் மூங்கில் பெட்டியிலிருந்து சேலை ஒன்றை எடுத்து விரித்து வேலிபோல பிடித்துக்கொண்டார்கள். உள்ளே தேவிகை தன் ஆடையைக் களைந்து ஒற்றையாடை உடுத்திக்கொண்டாள்.

நீர்விளிம்பில் அவள் தயங்கி நின்றாள். "இறங்குங்கள், அரசி..." என்றாள் பூர்ணை. "சேறு..." என்றாள். "தாழ்வில்லை... ஆழமிருக்காது என்றே நினைக்கிறேன்" என்றாள் பூர்ணை. அவள் சொல்வதைக் கேட்டு மேலே நின்றிருந்த பூசகன் "ஆழமுண்டு. உள்ளே போட்டிருக்கும் கல்லில் மிதித்து நின்று மூழ்கி கரையேறவேண்டும். மையக்குழி பத்து வாரைக்குமேல் ஆழமானது..." என்றான். "அதோடு அது கால்புதையும் சேறு... இங்கே விழுந்து இறந்தவர்களும் உண்டு." அவள் திகைப்புடன் நோக்க பூர்ணை "நாம் இதற்காகவே வந்தோம்" என்றாள். தேவிகை பெருமூச்சுடன் தலையசைத்தாள்.

ஒருகணம் தலைகுனிந்து நின்றபின் கண்களை மூடி கைகளைக் கூப்பியபடி அவள் நீரில் இறங்கினாள். நீருக்குள் அகலமான கல் போடப்பட்டிருந்தது. அதன்மேல் படிந்திருந்த செந்நிறச்சேறு கால்பட்டுக் கலங்கி எழுந்தது. இடையளவு ஆழத்திற்குச் சென்று மூச்சை இழுத்துக்கொண்டு மூழ்கினாள். வேண்டுதலை உளம்கொள்ளவேண்டும் என அவள் எண்ணினாலும் "யௌதேயன்" என்னும் சொல் மட்டுமே எஞ்சியிருந்தது. மும்முறையும் யௌதேயன் என்றே மூழ்கியெழுந்தாள்.

நீர்வடிந்த குழலை கைகளால் நீவி பின்னால் வழித்து முகத்தை துடைத்தபோது குற்றவுணர்வு கொண்டு முழுவேண்டுதலையும் முனைந்து உளத்தில் ஓட்டினாள். "என்

மைந்தர் ஒன்பதின்மரும் நலம்கொண்டு முழுவாழ்வு வாழவேண்டும். என் கணவரும் தம்பியரும் துயரற்று வாழவேண்டும். என் கொடிவழிகள் செழிக்கவேண்டும்.” நீர் கொழுவிய துளிகளாக புருவத்தில் நின்றாடியது. வாயில் உப்பு கரித்தது. “போதும் அரசி, ஆடையைக் களைந்து மேலெழுக!” என்றாள் பூர்ணை.

தேவிகை தன் ஒற்றையாடையை நீரிலேயே விட்டுவிட்டு வெற்றுடலுடன் மேலேறினாள். சுரபி அளித்த மாற்றாடையை வாங்கி விரைவாக உடலில் சுற்றிக்கொண்டாள். அவள் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது. உதடுகள் துடித்தன. கைகளை மார்பின்மேல் கட்டியபடி உதறும் குரலில் “செல்வோம்” என்றாள். “குளிரா, அரசி?” என்றாள் பூர்ணை. “ஆம்” என்றாள். “செல்வோம்” என மீண்டும் சொன்னாள். இரு சேடியரும் திரையை விலக்கிக்கொண்டனர். அந்த ஆடையை சுரபி சுருட்டி கூடைக்குள் வைக்க பூர்ணை ஒரு மரவுரியால் தேவிகையின் குழலை துடைத்தாள். அவள் “வேண்டாம்” என்றாள். பூசகன் நீரில் கிடந்த அவள் ஆடையை நீண்ட கழியால் தொட்டுச் சுழற்றி மேலெடுத்துக்கொண்டு பின்னால் வந்தான்.

அவர்கள் உருளைக்கற்கள் பரவிய சரிவினூடாக மேலேறிச் செல்ல அங்கே முழவோசை எழத் தொடங்கியது. தேவிகை இருமுறை கால் பதறினாள். “மெல்ல நடக்கலாம், அரசி. உணவும் நீரும் கொள்ளாததன் சோர்வு இருக்கும்” என்றாள் பூர்ணை. தேவிகை “யௌதேயன் யௌதேயன்” என்றே தன் உள்ளம் ஓடிக்கொண்டிருப்பதை உணர்ந்தாள். வேண்டுதல்மொழிகளை சொல்லவேண்டும் என எண்ணினாலும் அவளால் சொல்கூட்ட முடியவில்லை. ஆலயமுகப்பில் பூசகர்கள் மண்ணில் மலர்க்களம் அமைத்து

நடுவே நெய்விளக்கை ஏற்றியிருந்தனர். மணியும் முழவும் தாளமிட்டுச்செல்ல நடுவே ஓங்காரமாக சங்கொலி எழுந்தது.

தேவிகை தன் இடது குதிகாலில் ஒரு சொடுக்கலை உணர்ந்தாள். நாண் ஒன்று அறுந்து சுருண்டு துடிதுடிப்பதாகத் தோன்றியது. இடக்காலும் இடது தோளும் துடித்தன. வாய் இழுபட விழிகளில் நோக்கு நீர்படர்ந்ததுபோல கலங்கியது. அவள் தூக்கிவீசப்பட்டவள்போல நிலத்தில் விழுந்து இடக்கையும் இடக்காலும் இழுத்துக்கொள்ள வலிப்புகொண்டு துடித்தாள். அலறியபடி சேடிகள் அவளை பிடித்தனர். அவள் கைகால்களின் துடிப்பைப் பற்றி நிறுத்த பூர்ணை முயல "அழுத்தக்கூடாது... இறுக்கவேண்டாம்... தசைகள் உடைந்துவிடும்" என்றபடி பிரஜங்கர் ஓடிவந்தார்.

அவள் வாயின் ஓரம் எச்சில்கோழை வழிந்தது. கண்களுக்குள் கருவிழிகள் மேலேறி மறைந்து வெண்மை தெரிந்தது. மூச்சிறுகும் விலங்குபோல ஓசை எழுந்தது. பின்னர் சுருட்டப்பட்டிருந்த கைகள் தளர்ந்தன. உள்ளங்கைக் குழிவில் பதிந்திருந்த நகங்கள் அகல அங்கே குருதிக்கறை தெரிந்தது. உதடுகளில் பதிந்திருந்த பற்கள் விலகி வாய் திறக்க நாக்கு உள்ளே பதைப்பது தெரிந்தது. "பக்கவாட்டில் படுக்க வையுங்கள்... நாக்கு உள்ளே மடிந்து மூச்சை மூடிவிடக்கூடாது" என்றார் பிரஜங்கர்.

"யௌதேயன்" என்ற சொல்லாக தேவிகை மீண்டு வந்தாள். கண்களுக்குள் பொழிந்த ஒளியை உணர்ந்து இமையதிர விழித்துக்கொண்டு "யார்?" என்றாள். இடவுணர்வு பெற்று கையூன்றி எழுந்தமர்ந்தாள். "என்ன? என்னடி?" என்றாள். பிரஜங்கர் "ஒன்றுமில்லை, அரசி... இக்குளிர்ந்த நீர்... சற்று நடுக்கம்கொண்டுவிட்டீர்கள்" என்றார். திரும்பி பூர்ணையிடம்

“சற்றுநேரம் ஆலயத்தருகே படுத்து ஓய்வுகொள்ளட்டும். பூசனையை மெதுவாக தொடங்குவோம்” என்றார்.

# குருதிச்சாரல் - 2

**பகுதி ஒன்று : பாலைமகள் – 2**

“சரஸ்வதிக்கு தெற்கே திருஷத்வதிக்கு வடக்கே இக்‌ஷுமதிக்கு கிழக்கே அமைந்துள்ளது குருஷேத்ரம் என்பது தொல்நூலோர் கூற்று” என்றார் பிரஜங்கர். “சரஸ்வதி இன்றில்லை. பயோஷ்ணி பழைய சரஸ்வதியின் தடத்தில் ஒழுகுவது என்கிறார்கள். இக்‌ஷுமதி மிக அப்பால் அஸ்தினபுரிக்கும் இந்திரப்பிரஸ்தத்திற்கும் நடுவே ஓடுகிறது. அன்றிருந்த குருஷேத்ரம் மிக விரிந்த ஒரு நிலம். அது நகரங்களும் ஊர்களும் கழனிகளும் மேய்ச்சல்நிலங்களுமாகச் சுருங்கி இன்றிருக்கும் வடிவை அடைந்து ஆயிரமாண்டுகளாகியிருக்கும்.”

தேவிகை தலையாடையை நன்றாக முகத்தின்மேல் இழுத்துவிட்டுக்கொண்டு அவர் முன் அமர்ந்து அதைக் கேட்டுக்கொண்டிருந்தாள். அவளுக்கு சற்று பின்னால் பூர்ணையும் சுரபியும் அமர்ந்திருந்தனர். காவகனும் கன்மதனும் கைகளைக் கட்டியபடி நின்றிருந்தனர். புண்டரீகையன்னைக்குப் பூசனைகள் முடித்து உணவுண்டு ஓய்வெடுக்க வந்திருந்தார்கள். ஆலயத்தை ஒட்டி ஈச்சஓலை வேய்ந்த கூரைகொண்ட தாழ்வான கொட்டகைக்குள் தரையில் விரிக்கப்பட்ட புல்பாயில் அவர்கள் அமர்ந்திருந்தனர்.

கொட்டகையின் தூண்கள் இரும்பாலானவை. இரும்பின்மேல்கூட சிதல்மண் ஏறி கொடிவீசி கூரையை நாடியிருந்ததை முதலில் கண்டபோது தேவிகை திகைத்து திரும்பி கன்மதனை நோக்கினாள். தரையில் கிடந்த அத்தனை பொருட்களையும் சிதல் எழுந்து மூடியிருந்தது. இரண்டு நாட்களுக்கு முன்பு போடப்பட்ட ஒரு மலர்மாலை இதழ்கள் வாடுவதற்குள்ளாகவே ஒருமுனையில் சிதல் பற்றியிருந்தது. அவள் நோக்குவதைக் கண்ட கன்மதன் தூணிலெழுந்த சிதலை தட்டினான். பின்னர் "ஒவ்வொன்றையும் இங்குள்ள நிலம் கண்காணித்துக்கொண்டே இருக்கிறது, அரசி. சற்றே அசைவிழப்பதைக் கூட கைநீட்டி கவ்விக்கொள்கிறது" என்றான்.

"ஒவ்வொரு கல்லிலும் தெய்வம் உறங்குகின்றது என அறிந்திருப்பீர்கள், அரசி. அவை காலமின்மையில் உறங்கிக்கொண்டிருக்கின்றன. குருதித் துளி ஒரு கல்லில் விழுமென்றால் அதன் தெய்வம் விழித்தெழுகிறது. பலியை சுவைத்து நிறைவடைகிறது. அடுத்த பலிக்காக காத்திருக்கிறது. குருதிதொட்ட கல் மீண்டும் குருதிகொள்ளும் என்பார்கள். அதன்பொருட்டே அது பின்னர் காத்திருக்கிறது" என்றார் பிரஜங்கர்.

"இந்த நிலத்தில் பலமுறை குருதி சிதறிப்பரவியிருக்கிறது. கோடானுகோடி தெய்வங்கள் இதன் மணற்பருக்களில் விழித்தெழுந்தன. குருதி தேடித் தவித்த அவை பிரம்மனை நோக்கி தவமிருந்தன. எழுந்த படைப்புத்தெய்வம் அவற்றுக்கு நற்சொல் அளித்தார். அதன்படி அவற்றில் ஆயிரத்தில் ஒரு மணல்பரு ஆயிரமாண்டுகளுக்கு கால்களும் விழிகளும் கொடுக்கும் வாயும் கொண்டு சிதலுருக்கொண்டது. தன்னுடன் உறையும் தெய்வங்களின் பசியனைத்தையும் தான்

பெற்றுக்கொண்டு மணம் தேடி அலையலாயிற்று. இங்கு விழும் அனைத்தையும் உண்டு பசியாறியது. உயிர்கொண்ட மணல் என்று இவற்றை சொல்கின்றனர் சூதர்." அவர் சொல்வதை அவள் வெறுமனே நோக்கி நின்றாள்.

காவகன் "ஜீவரேணுக்கள் என்கிறார்கள்" என்றான். அவள் பெருமூச்சுடன் விழிவிலக்கிக்கொண்டாள். அங்கே நிறைந்திருக்கும் மணம் சிதலுக்குரியது என்று அப்போது உணர்ந்திருந்தாள். "தங்கள் எதிரியின் இல்லத்தின் அடியிலும் அவர்களின் விளைநிலங்களிலும் இங்கிருந்து புற்றுமண் எடுத்துக் கொண்டு புதைத்திடும் வழக்கம் முன்பு இருந்தது, அரசி. ஆயிரம் கொடிகளாக முளைத்தெழுந்து சிதல் அனைத்தையும் கவ்விக்கொள்ளும். புற்றுக்குமிழிகள் நாளுக்குநாளெனப் பெருகி இல்லம் மிக விரைவிலேயே மாபெரும் புற்றுமலை என ஆகும். விளைநிலம் முழுக்க கொப்புளங்கள் எழுந்துவெடிக்கும். அங்கு நடும் அத்தனை பொருட்களையும் வேருடன் சிதல் உண்டு மேலேறும்."

"எத்தனை அள்ளினாலும் நெருப்பிட்டு எரித்தாலும் மானுடரால் அதை வெல்லமுடியாது. அதை காலரூபி என்று சூதர்கள் சொல்கின்றனர். ஏழு அடித்தட்டுகளாக மண்ணுக்குள் இறங்கிச்செல்வதனால் பாதாளரேணு என்று சொல்வதுமுண்டு" என்று அவன் தொடர்ந்தான். "மாமன்னர் ஹஸ்தி இங்குள்ள மண்ணை எடுத்துச்செல்வது கொலைக்குரிய குற்றம் என்று அறிவித்தார். ஆயினும் இரவுகளில் எவருமறியாது வந்து சிலர் கொண்டுசெல்வதுண்டு. அள்ளிக்கொண்டு செல்பவனின் ஆடையிலோ மிதியடியிலோ ஓர் அணுவாக எஞ்சியிருந்து அவன் இல்லத்திலேயே முளைத்தெழும் இது என்று சூதர்கள் பாடுகிறார்கள்" என்றார் பிரஜங்கர்.

அவள் தனக்குள் ஆழ்ந்திருப்பதைக் கண்டு பிரஜங்கர் பேச்சை நிறுத்தினார். அவள் அதை உணர்ந்து விழிதூக்கியதும் மெல்ல கனைத்தபடி மீண்டும் தொடந்தார். “இறந்தவர்களுக்குமேல் அல்லாமல் இறப்பவர்களை புதைக்கமுடியாது. சிதைமேலன்றி சிதை வைக்கமுடியாது. இல்லங்களின் மீதே இல்லங்கள் அமைகின்றன. இன்றிருக்கும் அஸ்தினபுரியின் முன்நகரம் குருநகரி. யயாதி ஆண்ட தலைநகர். அன்று இப்பெருநிலம் குருநாடு என அழைக்கப்பட்டது. அதற்கு முன்பிருந்த நகரம் குருஜாங்கலம் என்று பெயர்கொண்டிருந்தது. ஒரு நகரம் மறைகையில் அங்கிருந்து செல்பவர்கள் பெயரை மட்டும் கொண்டுசென்று புதிய இடத்தில் பதியனிடுகிறார்கள். இன்று இந்திரப்பிரஸ்தத்திற்கு அப்பால் அறியப்படாத சிற்றூரென அமைந்துள்ளது குருஜாங்கலம்.”

குருஜாங்கலத்தை தலைநகரமெனக்கொண்டு ஆண்ட மன்னர் முதற்குரு. அவரை தங்கள் பிரஜாபதி என இன்று பன்னிரு மன்னர்குலங்கள் வணங்குகின்றன. விஷ்ணுவிலிருந்து பிரம்மன் எழுந்தான். பிரம்மனின் மைந்தர் பிரஜாபதியாகிய சுயம்புமனு. அவர் மைந்தர் உத்தானபாதர். அவர் குருதியில் எழுந்தவர் அழிவற்றவரான துருவன். சிஷ்டி, ரிபு, சாக்ஷுவான் என நீண்ட அவருடைய கொடிவழியில் பிறந்தவர் குருமாமன்னர்.

அவருக்கு புரு, ஊரு, சதத்யும்னன், தபஸ்வி, சத்யவாக், சூசி, அக்னிஷு, அதிரதன், சுதுயும்னன், அபிமன்யூ என பத்து உடன்பிறந்தார் இருந்தனர். குருநிலம் அன்று விரிந்துபரந்திருந்தமையால் பத்து உடன்பிறந்தாரை தன் முகங்களென ஆக்கி குரு இந்நிலத்தை ஆண்டார். ஆகவே தசமுகன் என அவர் அழைக்கப்பட்டார். அறம் நிலைக்க, விளை

செழிக்க, முடி ஒளிர அவர் ஆட்சிசெய்தபோதுதான் குருநாடு அதன் முழுச்சிறப்புடன் இருந்தது என்கிறார்கள். நீரூற்றின்மேல் புல் என அந்நிலம் எட்டுதிசைக்கும் பரவியது அன்று.

ஆத்ரேய குலத்தில் பிறந்த அரசியை மணந்து குரு ஏழு மைந்தர்களை பெற்றார். அங்கன், சுமனஸ், சுவாதி, கிருது, அங்கிரஸ், கயன், சிபி என ஏழு மைந்தரும் அவருக்குப்பின் குருநாட்டை ஏழாகப் பிரித்து ஆண்டனர். அங்கன் குருநகரியை ஆட்சிசெய்தார். அவர் மணந்த சுனீதையில் வேனன் பிறந்தார். அரசி, வேனனின் மைந்தராகப் பிறந்தவர் பிருது. அவரே இப்புவியை வென்றெடுத்தவர். அவருடைய மகளென்றே இந்நிலம் பிருத்வி என அழைக்கப்படுகிறது.

பேரரசர் பிருதுவுக்கு அந்தர்த்தானன், வாதி, சூதன், மாகதன், பாலிதன் என்னும் ஐந்து மைந்தர்கள் பிறந்தனர். சூதனிலிருந்து சூதர் குலமும் மாகதனிலிருந்து மாகதர் குலமும் உருவாகிப்பெருகின. அந்தர்த்தானன் குருநாட்டின் முடிசூடினான். அவனுக்கு சிகண்டினி என்னும் மனைவியில் ஹவிர்த்தானன் என்னும் மைந்தன் பிறந்தான். ஹவிர்த்தானன் தீஷணையை மணந்து பிராசீனபர்ஹிஸ், சுக்ரன், கயன், கிருஷ்ணன், விருஜன், அஜினன் என்னும் ஆறு மைந்தரை பெற்றான். அவர்களிலிருந்து இன்றைய அரசகுடிகள் பதினெட்டு உருவாகி பாரதமெங்கும் பரவின.

அரசியே, குருவின் மைந்தர்கள் ஒவ்வொருவரும் கொடிவழிகளாகப் பெருகி குடிகளாக விரிந்து நிலம் நாடினர். குருதிமுறை சொல்லி முடி கோரி போரிட்டுக்கொண்டார்கள். நிலத்தை அடைந்தவர்கள் மேலும் நிலம் கோரினர். நிலம் பெறாதவர்கள் நிலத்தை வஞ்சமென உளம்சூடிக்கொண்டனர். நிலம் குருதிவெறிகொண்ட கொடுந்தெய்வமென அவர்களின்

கனவுகளில் நிறைந்தது. சொற்களில் நுரைத்தது. படைக்கலங்களில் ஒளிர்ந்தது. அவர்களின் குருதி விழுந்து குருஷேத்ரம் எப்போதும் ஈரமாகவே இருந்தது என்கின்றன நூல்கள்.

முதல் குருமன்னர் தன் கண்ணெதிரில் தன் மைந்தரும் பெயரரும் போரிட்டு இறந்து விழுந்ததைக் காணும் தீயூழ் கொண்டிருந்தார். நிலத்துக்குரியவன் மூத்தவனாகிய அங்கன். ஆனால் உடன்பிறந்தார் அறுவரும் நாடாள விழைந்தனர். அவர்களுக்குக் கீழே நூற்றெட்டு குலங்கள் அணிதிரண்டு நின்றிருந்தன. வேளாண்குடிகள் அங்கனை ஆதரித்தமையால் ஆயர் சுமனசை ஆதரித்தனர். எனவே வேடர் சுவாதியை ஆதரித்தனர். வணிகர் கிருதுவை ஆதரித்தனர். தொன்மையான வஞ்சங்கள் அனைத்தும் எழுந்துவந்து அவர்களை தங்கள் முகங்களென சூடிக்கொண்டன.

மைந்தர் கூடிய அவையில் "நாடு ஒன்றென்றிருந்தாலொழிய அசுரரையும் அரக்கரையும் எதிர்த்து நின்றிருக்கமுடியாது" என்றார் குரு. "பிரிவதென்பது ஓர் உளநிலை. இணைவதற்கு எதிர்ப்போக்கு அது. ஒரு பிரிவு மேலும் பிரிவுகளையே உருவாக்கும். விழுந்துடையும் நீர்த்துளி என இக்குலம் சிதறிப்பரந்து அழியும்" என எச்சரித்தார். "போரிடும் குலங்களின் இயல்பென்பது அவை ஒன்றை ஒன்று விட்டு செயல்படமுடியாதென்பதே. அவை போரிடுவதும் அதனாலேயே. ஆகவே போரிடும் குலங்கள் போரிட்டாலும்கூட பிரிந்துசெல்லலாகாது."

"அறிக, ஒற்றுமை அழிந்தபின் நீங்கள் சின்னஞ்சிறுகுடியினரே. உங்களில் ஒருவரை எதிரிகள் வேட்டையாடும்போது பிறர்

வாளாவிருப்பீர்கள். உடன்குருதியினரில் ஒருவரை எதிரிகள் அழிக்கையில் அந்த வேட்டைப்பொருளில் பங்குகொள்வதற்காக நீங்கள் வேட்டைக்காரர்களுடன் சேரவும்கூடும். ஏனென்றால் பிரிதலென்பது தனக்குரிய அனைத்துப் படைக்கலங்களுடன் எழும் தெய்வம். எட்டு கைகளில் சொல்திரிபு, புறம்கூறல், பெருவிழைவு, மிகைகற்பனை, சினம், கசப்பு, ஐயம், வஞ்சம் ஆகியவற்றை ஏந்தியது அது. குருதி உண்டு நாகுளிராதது. அமர்ந்த பீடத்தில் இருப்பு கொள்ளாதது."

"ஒருங்கிணைதல் வேண்டின் அதற்கான உளநிலைகளையும் சொல்லாடல்களையும் கண்டடைந்து தொகுத்துக்கொள்வீர்கள். பிரிய விழைந்தால் அதற்குரியவற்றை அள்ளி அள்ளி அளிக்கும் ஊழ். பிரியத் தொடங்கியது பிரிந்துகொண்டே இருக்கும் என்பதே பொருளின் நெறி. உங்கள் மைந்தர்களுடனும் மைந்தர் மைந்தருடனும் பிரிவுகொள்வீர்கள். உங்கள் ஒவ்வொரு சொல்லும் ஒன்றுடனொன்று முரண்கொள்வதையே காண்பீர்கள். எனவே பிரிதல் ஒழிக!" என்றார்.

"என் விழிமுன் நீங்கள் பிரிந்தழிவதை ஒப்பமாட்டேன். இந்நிலம் ஒன்றென்றே இருக்கும். இதன் குடிகள் உடன்பிறந்தாரென்றே வாழ்வர். இதன் ஒரு படைக்கலம் பிறிதை எதிர்கொள்ளாது" என்றார் குரு. மைந்தர் அவர்முன் தலைகுனிந்து நின்று கேட்டார்கள். பிரியும்போது ஒருவர் விழியை ஒருவர் நோக்காது பிரிந்தனர். அகல்கையிலேயே அவர் சொன்னவற்றை எதிர்ச்சொற்களால் நிகர்செய்து முற்றிலும் எதிர்நிலையில் சென்று நின்றனர். அவர்கள் பிரியவேண்டுமென்பதை முன்னரே ஊழ்

முடிவுசெய்துவிட்டிருந்தது. ஏனென்றால் விதைகளுக்குள் பரவுக என்னும் ஆணையாக உள்ளது பிரம்மம்.

முரண்கொண்டு பகைவளர்த்த மைந்தர் எழுவரையும் மீண்டும் மீண்டும் அழைத்து ஒப்புதல்பேச்சு நிகழ்த்தி தோல்வியுற்றார் மாமன்னர் குரு. எழுவரும் படைதிரண்டு அருகிருக்கும் சமந்தபஞ்சகம் என்னும் ஐங்குளத்துக்கு அருகே விரிந்திருந்த பெரும்பொட்டலில் நின்றிருப்பதை கேட்டார். அவர் துணைவி கண்ணீருடன் அவர் காலில் விழுந்து "சென்று என் மைந்தரை காப்பாற்றுங்கள். அவர்கள் ஒருவரை ஒருவர் கொன்றுவீழ்த்த விடாதீர்கள்" என கதறினாள்.

கசப்புடன் குரு சொன்னார் "அரசி, உடன்பிறந்தாரே ஒருவரை ஒருவர் கூர்ந்து வெறுக்கமுடியும். இணைக்குருதியன் கையின் படைக்கலமே குறிபிறழாது நம் நெஞ்சை வந்தடையும்." அவள் கதறி அழுது "என் முலைப்பால் முளைத்தெழுந்த மைந்தர் அவர்கள்" என்றாள். குரு "நாம் ஒன்றும் செய்வதற்கில்லை. அவர்கள் ஊழ் அதுவென்றால் நம் சொற்கள் பயனற்றவை. அம்பெய்து மலையை விலகச்செய்ய முயல்வதுபோல பொருளற்றது அது" என்றார்.

அரசி வெகுண்டெழுந்து "என் மைந்தர் போரிட்டு இறந்தார் என்றால் நான் அக்கணமே நெஞ்சுபிளந்து உயிர்விடுவேன்" என்றாள். அவர் திகைத்து அவளைப்பற்றி நிறுத்தினார். "நான் சென்று அவர்களின் அம்புகளுக்கு நடுவே நிற்கிறேன். என்னைக் கொன்றபின் அவர்கள் போரிடட்டும்" என்று எழுந்தார். அமைச்சர்களை அழைத்து "எவரும் என்னை தொடரவேண்டியதில்லை" என ஆணையிட்டுவிட்டு தனியாக புரவியில் கிளம்பிச்சென்றார்.

சமந்தபஞ்சகத்தை அவர் சென்றடைந்தபோது அங்கே போர் உச்சத்திலிருந்தது. இரு கைகளையும் விரித்தபடி குரு புரவியில் விரைந்து படைகளுக்கு நடுவே சென்று நின்றார். அவரைக் கண்டதும் மைந்தர் வில் தாழ்த்தினர். "நான் ஆணையிடுகிறேன், நாடு ஏழாக பிரிக்கப்படுகிறது. அதுவே உங்கள் ஊழென்றால் ஆகுக!" என்றார். மைந்தர்கள் ஒரு சொல்லில்லாமல் பிரிந்துசென்றனர். படைகள் நிரையுடைந்து ஒழுகி விலகின. அங்கே விழுந்துடந்த சடலங்களுடன் குரு மட்டும் நின்றிருந்தார்.

உயிர்நீத்தவர்களின் உடல்கள் கண்ணெட்டும் தொலைவுவரை பரவிக்கிடந்தன. குருதி வழிந்து நிலம் நனைந்துகொண்டிருந்தது. சுற்றிச்சுற்றி நோக்கி வெற்றுக்கையுடன் நின்றிருந்த ஒரு கணத்தில் தன்னை ஒரு பேரன்னை என்றும் அவர்களனைவரையும் தன் மைந்தர் என்றும் அவர் உணர்ந்தார். அந்நிலத்தில் கால்தளர்ந்து அமர்ந்து நெஞ்சிலறைந்து அழுதார். அந்த உடல்கள் ஒவ்வொன்றையாக அள்ளி நெஞ்சோடணைத்து கதறினார். தலைமயிரை கோதினார், நெற்றியில் முத்தமிட்டார். கைகளை எடுத்து தன் முகத்திலும் நெஞ்சிலும் அறைந்துகொண்டார்.

இரவாயிற்று. சடலங்களை நாய்நரிகள் கடித்திழுத்தபோது எஞ்சிய விழைவை ஒன்றுதிரட்டி அவை எழ விரும்புபவைபோலத் தோன்றின. அவரைத் தேடிவந்த அமைச்சர்கள் பித்தன்போல களத்தில் உழன்றுகொண்டிருந்த அவரை கண்டுபிடித்து அழைத்துச்சென்றார்கள். அவர் வெறிகொண்டு அவர்களை அறைந்தார். தன் நெஞ்சிலறைந்து கூச்சலிட்டார். தொல்காடுகளின் அன்னைத் தெய்வமொன்று அவரில் எழுந்துள்ளது என்றனர் நிமித்திகர். அவரை

அறையிலிட்டு பூட்டினர். அவர் கதவுகளை அறைந்தும் சுவர்களில் முட்டியும் கூச்சலிட்டார். பின்னர் களைத்து விழுந்து விம்மி அதிர்ந்துகொண்டிருந்தார்.

பதினேழாம் நாள் அவரிலிருந்து அன்னை ஒழிந்தபோது அவைகூட்டி ஆவதென்ன என்று உசாவினார். “அரசே, அந்தப் பெருநிலத்தில் இறந்த ஒவ்வொருவரும் விண்ணுலகெய்தவேண்டும். அதற்குரிய கடன்களை நீங்கள் ஆற்றவேண்டும்” என்றனர் நிமித்திகர். “அன்னையென்று உணர்ந்தீர்கள். மாண்டவர் அனைவருக்கும் மைந்தரென்று ஆகுக!” என்றனர். வைதிகர்களையும் முனிவரையும் அழைத்து தான் செய்யவேண்டிய சடங்குகள் என்ன என்று வினவினார். அவர்கள் அங்கு ஒரு அஷ்டாங்க வேள்வியை நிகழ்த்தும்படி கூறினர்.

அதை ஏற்று நூற்றெட்டு முனிவரும் ஆயிரத்தெட்டு வைதிகரும் துணைநிற்க அந்நிலத்தில் மாமன்னர் குரு எண்செயல் பெருவேள்வியை நிகழ்த்தினார். எட்டுபகுதிகள் கொண்டது அந்த வேள்வி. அனல்பேணல், வேதமோதுதல், பொற்கொடை, அன்னக்கொடை, அறமுரைத்தல், நிலமுழுதல், கதிர்கொள்ளுதல், விதைபரப்புதல். அங்கு விளைந்த பயிரின் விதை அங்கேயே விதைக்கப்படுகையில் வேள்வி நிறைவுகொள்ளும். அதன்பொருட்டு குரு அந்நிலத்தை பொற்கலப்பையால் உழுதார். அவர் குடியின் நூறு இளையோர் உடன் உழுதனர்.

அப்போது உலகியலின்பத்தின் தலைவனாகிய இந்திரனை வழிபடுபவர்களாகிய சார்வாகர்கள் எழுவர் அவர்களின் தலைவரான சக்ரர் என்பவரின் தலைமையில் அங்கு வந்தனர். அவர்கள் உழுதுகொண்டிருந்த மன்னனை தடுத்தனர்.

வேள்விமுறைப்படி படைக்கலம் கொண்டு வேள்வியைத் தடுப்பவரை படைக்கலத்தாலும் சொல்கொண்டு தடுப்பவரை சொல்லாலும் வெல்லாமல் வேள்வியை முன்னெடுக்கவியலாது. "அரசே, நான் கேட்கும் கேள்விகளுக்கு விடைசொல்க! இந்த வேள்வியை எதன்பொருட்டு நிகழ்த்துகிறீர்கள்?" என்றார் சக்ரர்.

"இங்கே மண்மறைந்த அனைவரும் விண்ணுலகெய்தவேண்டும்" என்றார் குரு. "விண்ணுலகம் ஏகுவதற்கு தொல்மரபு பல நெறிகளை அமைத்துள்ளது என அறிந்திருப்பீர். வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்தவர், இங்குற்றதில் நிறைவுகொண்டு உடலுதறி எழுந்தவர், வேதப்பொருளுணர்ந்தவர், சொல்நிறைந்த கவிஞர், ஐந்தடக்கி அகம் முதிர்ந்த முனிவர் ஆகிய ஐவரே விண்ணுக்குச் செல்லவேண்டியவர்கள். எவருக்காகவோ எதற்காகவோ இங்கு படைக்கலம்கொண்டு வந்து பிறரைக் கொல்ல முற்பட்டு கொல்லப்பட்டவரும் அவர்களுக்கு நிகராக விண்ணேகுவார் என்றால் ஐவகைத் தவத்துக்கும் என்ன பொருள்?" என்றார் சக்ரர்.

"சக்ரரே, அந்த ஐவகைத் தவங்களும் நெறிபுழங்கும் நாட்டில் மட்டுமே நிகழமுடியும். நெறி காக்க வாளில்லையேல் அது காடென்றே அமையும். எனவே ஐவகைத் தவத்திற்கும் நிகரானது வாள்கொண்டு களம்புகுந்து மடிதல். ஐவகைத் தவத்தார் பண்புகளை, உறவுகளை, அன்னத்தை, சொல்லை, விழைவுகளை தங்கள் வேள்வியில் அவியாக்குகிறார்கள். வீரன் தன்னையே அவிப்பொருளென்று அளிக்கிறான். அந்தக் கொடையினூடாகவே அவன் தூய்மையடைகிறான்" என்றார் குரு. "ஆம்" என சக்ரர் திரும்பிச்சென்றார்.

மீண்டும் குரு நிலத்தை உழுதுகொண்டிருக்கையில் மூன்றாம்நாள் சக்ரர் திரும்பிவந்தார். “அரசே, நிற்க! நான் கேட்பவற்றுக்கு மறுமொழி சொல்க! வெறும் உலகவிருப்பால், வஞ்சத்தால் களம்பட்டவன் விண்ணுலகம் எய்துவானா என்ன? அவனுக்கு அவை மீட்பளிக்குமென்றால் விழைவும் வஞ்சமும் மெய்மை வழிகளென்றாகுமா? அவற்றைப் பேணுவது வேள்வியென்றும் தவமென்றும் பொருள்படுமா?” என்றார். குரு திகைத்து நின்றுவிட்டார். “சொல்லுங்கள், இப்புவியின் மாயைகளில் உயிரெல்லை வரை உழல்வதா அவ்வுலகில் சென்றமைவதற்கான வழி?” என்றார் சக்ரர். குரு தன் மேழியை எடுத்துக்கொண்டு திரும்பிவந்தார்.

வேதசாலைக்கு மீண்ட குரு ஏழு நாட்கள் கற்றோரிடமும் வைதிகரிடமும் முனிவரிடமும் சொல்லுசாவிவிட்டு மீண்டும் உழுவதற்காகச் சென்றார். அங்கே வந்து நின்றிருந்த சக்ரரிடம் “இந்திரவழிபாட்டாளரே, போருக்கு எழுபவன் அதற்கு முந்தைய கணத்திலேயே அனைத்தையும் துறந்துவிடுகிறான். எதன்பொருட்டு அவன் போருக்குக் கிளம்புகிறானோ அதையும் அகற்றிவைத்த பின்னரே அவன் படைக்கலம் எடுக்கிறான். இவ்வுலகில் உள்ள எது உயிருக்கு நிகராகும்? உயிரை வைத்தாடுபவன் இவ்வுலகிலுள்ள எதையேனும் உள்ளூர பொருட்டெனக் கொள்வானா என்ன? எனவே போர் என்பது துறவேயாகும்” என்றார்.

“சார்வாகரே, போருக்குக் கிளம்புவது வரைக்குமே வஞ்சமும் வன்மமும் மானுடரை ஆள்கிறது. களம்நிகழத் தொடங்கிய பின்னர் அவர்கள் முற்றிலும் தங்களை இழக்கிறார்கள். படைக்கலங்கள் அவர்களை கையில் ஏந்திக்கொள்கின்றன. போர்நின்ற எவரும் அறிவதொன்றுண்டு, போர் என்பது மானுடர்

ஒருவரோடொருவர் மோதுவதல்ல. பல்லாயிரம் கைகளும் கால்களும் தலைகளும் விழிகளும் கொண்ட பேருருவம் ஒன்றின் களித்தாண்டவம் மட்டும்தான் அது. ஊழ்கத்திலிருக்கும் முனிவரின் உள்ளம்போல் அங்கே சித்தம் குவிந்திருக்கிறது. களியாடும் இளமைந்தர்போல உள்ளம் உவகைகொண்டாடுகிறது" என்றார் குரு.

சக்ரர் திரும்பிச்சென்று மீண்டும் மூன்றாம் நாள் குரு உழுதுகொண்டிருக்கையில் வந்து மேழியை மறித்தார். "அரசே, கொலைவன்மையா கொல்லாமையா எது வானோர்க்கு உகந்தது? அதைமட்டும் சொல்லிவிட்டு மேலே செல்க!" என்றார். "சக்ரரே, கொல்லாமையே அறங்களில் முதன்மையானது" என்றார் குரு. "ஆனால் கொலைவல்லமையை ஈட்டியவனே கொல்லாமையை தான்கொள்ள முடியும். அஞ்சி அமைவது கொல்லாமை அல்ல. இரங்கி விலகுவதும் கொல்லாமை அல்ல. கொலையே இவ்வுலகின் இயற்கை என்று முற்றுணர்ந்து ஆம், நான் முரண்படுகிறேன் தெய்வங்களே என்றுரைத்து திரும்பிநின்று படைக்கலம் தாழ்த்துபவனே மெய்யாக கொல்லாமைநோன்பை கடைக்கொள்கிறான். தான் கொல்லப்படினும் படைக்கலமேந்தா நிலையே கொல்லாமையின் உச்சம்."

"அறிக, கொலைவன்மைகொண்ட வாள்களால் காக்கப்படும் நாட்டிலேயே கொல்லாமை திகழமுடியும். எனவே மண்காக்கவும் நெறிநாட்டவும் கொலைத்தொழில் செய்பவர்கள் கொல்லாமையைப் பேணும் அறம்கொண்டவர்களே" என்றார் குரு. மீண்டு சென்று மூன்றாம்நாள் வந்த சக்ரர் கேட்டார் "செயலா அதன் பின்னுள்ள புரிதலா, எது மீட்பளிக்கிறது?" திகைத்து நின்ற குருவை நோக்கி சக்ரர் மேலும் கேட்டார்

“சொல்க, இப்படைவீரர்களில் எவருக்கு தாங்கள் செய்வதென்ன என்று தெரியும்?”

குரு “பெரும்பாலானவர்கள் அரச ஆணைப்படி படைக்கலமேந்தி வந்தவர்களே” என்றார். “ஆம், அவர்கள் கூலிபெற்று போருக்கெழுந்தவர்கள். அக்கூலியே அவர்கள் ஈட்டுவதென்பதனால் விண்ணுலகு அவர்களுக்குரியதல்ல. ஒன்றுக்கு இரண்டு விலை இல்லை” என்றார் சக்ரர். “சொல்க, அறியாதுசெய்வதும் அப்பயன் அளிக்குமென்றால் அவியளித்து வேள்விநிகழ்த்த வேதம் எதற்கு? சுட்ட ஊனில் எஞ்சிய நெய்யை தீயிலிடும் காட்டாளருக்கும் அமையுமா வேள்விப்பயன்?”

ஏழு நாட்கள் பொழுதுகோரிவிட்டு குரு திரும்பிவந்தார். வைதிகரையும் அறிஞரையும் கவிஞரையும் அழைத்து சொல்லுசாவினார். “ஆம், அவியால் அல்ல வேதத்தாலேயே வேள்வி நிகழ்கிறது. வேதமோதி அனலூட்டப்படும் மலமும் அவியே” என்றனர் வைதிகர். “ஓதும் சொல் தன் பொருளாலேயே அறிவென்றாகிறது” என்றனர் அறிஞர். “பதர் விதைத்துக் கொய்வதெங்கனம்?” என்றனர் உழவர். “வெற்றூழ்கம் தவமென்றால் வெயில்காயும் விலங்குகள் அனைத்தும் விண்ணேகவேண்டுமே?” என்றார்கள் முனிவர்கள்.

சோர்ந்திருந்த குருவை தேற்றி உணவருந்தச் செய்தாள் அவர் துணைவி. “என்ன விடையென்றே தெரியவில்லை. எட்டுத்திசையும் மூடியுள்ளது” என்றார் குரு. “சொல்தோன்றாது உளம் நிலைக்கையில் நீங்கள் வழக்கமாகச் செய்வதேது?” என்றாள் அரசி. “அன்னையிடம் சென்றமர்வேன். அவர்முன் குழந்தையென்றாவேன். அறிந்தவை அனைத்தும் அகன்று

உள்ளம் தெளிகையில் அகன்றிருக்கும் சில உள்ளே எழுந்துவரும். அவற்றிலிருக்கும் நான் தேடியவை” என்றார் குரு. “இப்போதும் அதையே செய்க!” என்றாள் ஆத்ரேயி.

அரண்மனைக்குச் சென்று முதிய அன்னையின் காலடியில் அமர்ந்தார். அவளுக்கு பணிவிடை செய்தார். சிறுகுழவி என அவளுடன் விரல்தொட்டு விளையாடினார். “வேள்விக்கு ஏன் நீங்கள் வரவில்லை, அன்னையே?” என்றார் குரு. “நான் ஏன் வேள்வி செய்யவேண்டும்? உன்னை ஈன்றதனாலேயே வீடு பெற்றேன்” என்றாள் மூதரசி. “என்னைப் பெறுவதை எண்ணினீர்களா? என்பொருட்டு எப்படி நீங்கள் பெருமை கொள்ளமுடியும்?” என்றார் குரு. “எண்ணிப் பிள்ளைபெறும் அன்னையருண்டா என்ன? ஆனால் பிள்ளை அடைவதனைத்தையும் அன்னையே அடைகிறாள்” என்றாள் பேரரசி.

விடைபெற்று எழுந்து மீண்டும் உழுநிலத்திற்கு வந்தார். அங்கே வந்த சக்ரரிடம் “இந்திரரே, இதோ என் மறுமொழி. மண்ணில் மானுடர் ஆற்றும் எச்செயலுக்கும் அவர்கள் முழுப்பொறுப்பேற்க இயலாது. எனவே எதையும் முழுதுணர்ந்து ஆற்றுவதும் நடவாதது. தன்னை முழுதளித்து, தன்னறத்தை ஆற்றுபவன் அதற்குரிய முழுமையை அடைகிறான். அவன் ஆற்றும் செயலால் பேரழிவும் பெருந்தீங்கும் விளைந்தாலும்கூட அவனுக்கு அப்பழி இல்லை. அது அவனை ஆட்டுவிக்கும் ஊழுக்கே சென்று சேரும்” என்றார்.

“இங்கு இறந்த வீரர்கள் தங்கள் கடமையைச் செய்து மடிந்தனர். அவர்கள் அதன் அரசியலையும் அறத்தையும் முழுதறிய ஆற்றலற்றவர்கள். அறிந்த பின்னரே அவர்கள்

செயலாற்றவேண்டும் என்றால் இங்கே எதுவும் நிகழாது.” சக்ரர் தலையசைத்தார். “ஆம், அவர்கள் கூலிகொண்டனர். சக்ரரே, காம இன்பத்தின்பொருட்டே உறவாடுகிறார்கள் மானுடர். அதன் விளைவாகப் பெறும் மைந்தரின் பேறுகளை பெற்றோர் அடைவதில்லையா என்ன?”

“வாழ்வறங்கள் நான்கும் துறவும் வேள்வியும் கல்வியும் தவமும் வாள்வேலியின்றி வாழாதென்று அறிந்தவர்கள் ஒருபோதும் வீரத்தையும் உயிர்க்கொடையையும் இகழமாட்டார்கள். களம்பட்டவர் விண்ணுலகு செல்லார் என்றால் பிறர் விண்ணுலகு செல்லும் பாதைகள் முழுமையாகவே மூடிவிடும்” என்று குரு சொன்னார்.

சக்ரர் “ஆம், அவ்வாறே” என்று ஒப்புக்கொண்டார். இந்திரனின் மின்படை முத்திரை பொறித்த கோலை அந்த வேள்விநிலம் மீது ஆழ ஊன்றி “இங்கு நிகழும் இந்த வேள்வி நிறைவுறுக! இங்கு களம்பட்டு மடிபவர், உளம் உதிர்த்து ஊழ்கத்திலமர்ந்து மறைபவர் அழிவற்ற பேருலகம் செல்க! அங்கே என்றும் அழியாது வாழ்க!” என்றபின் திரும்பிச் சென்றார். அந்தக் கோல் அருகே சென்று வானை நோக்கி “இடிமின்னலின் அரசே, இது உன் ஆணையென்றாகுக! இங்கு மடிபவர் அழிவின்மை கொள்க. சொல்லில், விண்ணில்” என்றார். மின்னல் வெட்டி அடங்கியது. இடி எழுந்து ஆம் ஆம் ஆம் என்றது.

“அஷ்டாங்க வேள்வி நிறைவிற்குப்பின் இந்நிலம் குருஷேத்ரம் என்றே அழைக்கப்படலாயிற்று” என்றார் பிரஜங்கர். “இங்கு எட்டு மாதகாலம் நிகழ்ந்த அப்பெருவேள்வியில் நிலம் உழுது வஜ்ரதானியத்தை விதைத்தபின் மாமன்னர் குரு தன் வேலால் தோண்டியபோது நிலம்கரந்தோடும் தொல்நதியாகிய சரஸ்வதி ஊறி எழுந்து வழிந்தோடி வேள்விப்பந்தலை நனைத்தாள்.

அவள் கொண்டுவந்த நீரில் விதைகள் முளைத்து மணி காய்த்தன. அவற்றை மீண்டும் விதைத்தபோது இங்கு உறைந்த அணையா உயிர்களனைத்தும் வெண்முகில்களாக மாறி விண்ணகம் சென்றன.”

“சிறுமணலூற்றென ஊறிய சரஸ்வதியை சுரேணு என்றனர் கவிஞர். குருஷேத்ரத்திற்கு வடக்கே அது இன்றும் ஒரு சிறிய ஊற்றாக எழுந்து வழிந்தோடி இக்ஷுமதியில் கலக்கிறது” என பிரஜங்கர் தொடர்ந்தார். “இன்று தரந்துகை அரந்துகை என்னும் இரு சிற்றோடைகளுக்கு நடுவே உள்ள நிலமே குருஷேத்ரம் என்றழைக்கப்படுகிறது. பரசுராமர் அமைத்த ஐந்து நீர்நிலைகள் இதன் மையம். இங்கே நூற்றெட்டு புனித நீரூற்றுகள் உள்ளன.”

“அரசி, இங்கே மாமன்னர்கள் வேள்விகளை செய்திருக்கிறார்கள். மாந்தாதா என்னும் மாமன்னர் செய்த மண்புரக்கும் வேள்வியால் இந்நிலம் விண்ணவர்க்கு இனியதாகியது. இங்கு விழுந்தவர்கள் அனைவரும் எழுந்துள்ளனர். இது அன்னையின் மடி என்று அறிக!” தேவிகை அவர் சொல்வதை பொருள்வாங்காத விழிகளால் நோக்கியபடி அமர்ந்திருந்தாள். “இங்கு புண்டரீகை அன்னையை நிறுவியவர் முல்க்கலர் என்னும் மாமுனிவர். இங்குள்ள நூற்றெட்டு நன்னீர்களில் பெண்கள் வந்து நீராடி வேண்டிக்கொள்வது இங்கு மட்டுமே.”

“போருக்குப்பின் அன்னையரும் கைம்பெண்களும் இங்கு கண்ணீருடன் வருவதுண்டு” என்று பிரஜங்கர் சொன்னார். “இங்கு களம்பட்ட தங்கள் மைந்தர்களுக்கும் கணவர்களுக்கும் மலரும் நீருமளித்து அன்னையை வணங்கி அவர்களை விண்ணேற்றி மீள்வார்கள்.” தேவிகை கைகளைக் கூப்பியபடி அசைவில்லாது அமர்ந்திருந்தாள். “களம்பட்ட தங்கள் மைந்தரின் பெயரையும் நாள்மீனையும் சொன்னீர்கள் என்றால்

இங்கு முறைப்படி விண்ணேற்றப் பூசனைகளை ஆற்றி நிறைவுசெய்வேன்” என்றார் பிரஜங்கர்.

பூர்ணை ஏதோ சொல்ல வாயெடுக்க தேவிகை அவளை நோக்கி அடக்கியபின் “என் மைந்தன் யௌதேயன் இறக்கவில்லை” என்றாள். பிரஜங்கர் இருவரையும் மாறிமாறி நோக்கினார். “அவன் இறக்கலாகாதென்று வேண்டிக்கொள்ளவே வந்தேன்” என்றாள் தேவிகை. “அவ்வாறு வேண்டிக்கொள்ளும் வழக்கமில்லையே, அரசி” என்றார் பிரஜங்கர்.

“அன்னை என் அழலை அறிவாள்” என்றாள் தேவிகை. “அவளிடம் சொல்லியிருக்கிறேன். ஆயிரம்கோடி குருதிகண்ட விழிகள் அவளுடையவை என்கின்றன நூல்கள். அதைவிட மிகுதியாக விழிநீரையும் அவை கண்டிருக்கும். அன்னையிடம் மட்டுமே நான் சொல்வதற்குள்ளது.” பிரஜங்கர் கைகூப்பி “அவ்வாறே” என்றார்.

# குருதிச்சாரல் - 3

**பகுதி ஒன்று : பாலைமகள் – 3**

சாயாகிருகத்திலிருந்து முதற்புலரியிலேயே தேவிகை சேடியருடன் கொடியில்லாத சிறுதேரில் கிளம்பி இருள் செறிந்துகிடந்த கிரிபதம் என்னும் வணிகச்சாலையினூடாக சென்றாள். தெற்கே கங்கையின் கரையிலமைந்த வாரணவதம் என்னும் துறைநகரிலிருந்து கிளம்பி யமுனையையும் திருஷ்டாவதியையும் பயோஷ்ணியையும் கடந்து வடக்கே இமயமலையடிவாரத்திலமைந்த திரிகர்த்தத்தின் தலைநகரமான பிரஸ்தலை வரை செல்லும் அந்தப் பாதை மாமன்னர்

ஹஸ்தியின் காலத்தில் அமைக்கப்பட்டது. சம்வரணர் அதை அகலப்படுத்தி சாவடிகளை மும்மடங்காக்கினார். மலையுச்சிகளில் நூறு காவல்மாடங்களை உருவாக்கி அவற்றின் ஆணைக்கேற்ப விரையும் புரவிப்படைகளை நிறுத்தினார்.

அதில் ஒழியாமல் வணிகக்குழுக்கள் செல்லத்தொடங்கியதும் அவர்கள் தங்குமிடங்களிலெல்லாம் சந்தைகள் உருவாயின. அச்சந்தைகளிலிருந்து கிளைப்பாதைகள் பிரிந்து உள்கிராமங்களையும் மலையடிவாரங்களையும் சென்றடைந்தன. சந்தைகள் விரியும்தோறும் அதை ஒட்டியிருந்த ஊர்களெல்லாம் வளர்ந்து நகரங்களாயின. வடக்கே இருந்த நாடுகள் அனைத்திற்கும் குருதியும் மூச்சும் கொண்டுசெல்லும் வழிகளென்று அவை ஆயின.

உசிநாரர், திரிகர்த்தர், சௌவீரர், பால்ஹிகர், பாஞ்சாலர் என்னும் ஐந்து அரசர்களும் குருகுலத்து அரசர் பிரதீபரின் தலைமையில் வாரணவதத்தில் கூடி அப்பாதையை அரசுகளுக்கு அப்பாற்பட்டு ஆட்சிசெய்யும் கிரிபாலசஹ்யம் என்னும் பொதுக்காவல்குழு ஒன்றை உருவாக்கினர். அதில் அத்தனை அரசர்களும் இணையான அளவுக்கு படைகளை அனுப்பவேண்டுமென முடிவெடுக்கப்பட்டது. ஒவ்வொரு நாடும் தன் எல்லைக்குள் அச்சாலையில் சாவடிகளை அமைத்து சுங்கம் கொண்டன.

கிரிபதம் தொலைவிலிருந்து நோக்கியபோது மின்மினிகளின் ஒழுக்கென தெரிந்தது. அணுகியபோது மணியோசைகளும் சகடஒலிகளும் குளம்படிகளும் ஆணைகளும் விலங்குகளின் மூச்சொலிகளும் இணைந்த முழக்கமாகியது. அவர்களின் தேர் சிற்றோடையில் வந்த சருகு ஆற்றுச் சருகுப்பெருக்கிலென கலந்து ஒழுகத்தொடங்கியது. முன்னும் பின்னும்

சென்றுகொண்டிருந்த வணிகக்குழுக்களில் இருந்து காவல் வீரர்கள் உரத்த குரலில் “ஆணை! அடையாளம் காட்டுக!” என்றனர். தேர்ப்பாகன் அடையாள முத்திரையை காட்டியதும் “நற்செலவாகுக!” என அவர்கள் வாழ்த்தினர்.

பூர்ணையும் சுரபியும் கிளம்பியதுமே துயில்கொள்ளத் தொடங்கினர். தேவிகை கூண்டில் தலைசாய்த்து வெளியே இருளிலாடிய சுடர்நிழலாட்டத்தை நோக்கிக்கொண்டிருந்தாள். சகடத்தின் ஒலியிலிருந்த ஒழுங்கே அவள் அகம்செல்லும் தடமென அமைந்தது. அவ்வப்போது எழும் மணியோசை என அவளறியாத ஒன்று ஊடே ஒலித்துக்கொண்டிருந்தது. பெருமூச்சு என புரவியின் சினைப்போசை. எண்ணமெனத் திரளாத உள்ளப்பெருக்கு தலை கூண்டில் முட்டியோ சகடம் கல்மேல் ஏறியோ அறுபடும்போது நீள்மூச்சுடன் அசைந்தமர்ந்தாள். அவள் அசைவில் விழித்துக்கொண்ட பூர்ணை “என்ன வேண்டும் அரசி?” என்றபோது வெறுமனே தலையை அசைத்தாள்.

இத்தனை பொருட்களும் மலைகளுக்கு சென்றுகொண்டிருக்கின்றன என வெறுமனே எண்ணினாள். கங்கை அழிமுகத்திலிருக்கும் தாம்ரலிப்தியிலிருந்து கொள்ளப்பட்ட பீதர்நாட்டுப் பட்டும் யவனர் பொற்கலங்களும் தென்னவர் முத்தும் அவற்றில் இருக்கும். அவை மலைகளுக்குச் செல்கையில் பெருமதிப்பு கொண்டுவிடும். அங்கிருந்து அருங்கற்களும் தந்தங்களும் மலையிறங்கிச் சென்று தாம்ரலிப்தியை அடையும். முகிலாக வந்து மழையாக மீண்டும் கடலுக்குச் செல்கிறது நீர். தன்னைத்தானே கலக்கிக்கொள்கிறது நீர் என அவள் இளமையில் நெறிநூல்

ஒன்றில் படித்திருந்தாள். சிறுசிமிழ் நீர்கூட அலைபாய்ந்துகொண்டேதான் இருக்கிறது.

அமைதியற்றவை நீரும் நெருப்பும் காற்றும். அவை மூன்றும் ஒன்றுடன் ஒன்று உறவாடி புவிநாடகத்தை நிகழ்த்திக்கொண்டிருக்கின்றன. ஒன்றையொன்று நிரப்புகின்றன. ஊட்டி வளர்க்கின்றன. உண்டு அழிகின்றன. வானும் மண்ணும் நிலையானவை, ஆகவே அமைதியானவை. ஒன்றை ஒன்று நோக்கி காலமிலாத் தவம் செய்கின்றன. நீரை மண்ணுக்கு ஏவுகிறது வான். அனலை விண்ணுக்கு செலுத்துகிறது மண். காற்று மண்ணிலெழுந்து விண்ணில் நிறைந்து திரும்பிவருகிறது.

எண்ணங்களை உணர்ந்து அவள் தன்னை நிறுத்திக்கொண்டாள். படிமங்கள் எப்போதுமே முடிவின்மை நோக்கியே செல்கின்றன. முடிவின்மையை உணர்ந்ததும் பொருளற்று நின்றுவிடுகின்றன. கற்றது மிகக் குறைவு என்பதனால்தான் கற்றவற்றை அளைந்து விரைவிலேயே சலிப்புகொள்கிறோம் போலும். யுதிஷ்டிரர் கற்றுக்கொண்டே இருப்பவர். எனவே முடிவிலாது திளைக்கிறார். “உங்களுக்கு சலிப்பதேயில்லையா?” என அவரிடம் அவள் கேட்டாள்.

அது அவர்களின் முதலிரவு. கங்கைக்கரையில் அமைந்த சாயாகுடீரம் என்னும் கோடைமாளிகை. வெளியே கங்கை சுழித்தோடும் ஓசை கேட்டுக்கொண்டிருக்கும். சாளரத்தின் அருகே சென்று நின்றால் நீரலைகள்மேல் நிலவொளி அலைவதை காணமுடியும். அவள் அங்கு சென்றதிலிருந்தே சாளரத்தருகிலும் உப்பரிகையிலும் நின்றிருப்பதையே விரும்பினாள். அவர் வரும்போதே பின்னால் தொடர்ந்து வந்த ஏவலன் ஏட்டுப்பேழையை கொண்டுவந்து இறக்கி வைத்தான்.

முகமலர்வுடன் அவளை நோக்கி “இன்றிரவுக்கான காவியங்கள் இவை. அனிதரின் சாரஸசந்திரிகை. கிருபாகரரின் பூர்ணஜாலகம். சொல்லில் நிலவொளியை விரிக்கத் தெரிந்தவர்கள்” என்றார்.

அவள் முதலில் அவர் விளையாடுகிறார் என்றே எண்ணினாள். புன்னகையுடன் நோக்கி நின்றிருந்த அவளிடம் பேழையிலிருந்து எடுத்த சுவடியைக் காட்டி “நிலவொளி ஊடு. நீரலை பாவு. நெய்யப்படுகிறது இவ்விரவு” என்றார். “அரிய வரி. பொருளின்மையே சொல்லுக்கு இத்தனை அழகை அளிக்கமுடியும். நீ என்ன எண்ணுகிறாய்?” என்றார். அவள் புன்னகைத்தாள். “பிறைநிலவில் விரியும் மலர்கள் மொட்டுகளாக கனவுகண்ட பிறைநிலவு எங்குள்ளது? இந்த வரியைப்பற்றி நானும் சகதேவனும் உரையாடியிருக்கிறோம். வெண்மலர்களுக்குள் நிலவொளி உள்ளது என்னும் சாரசரின் வரியை அவன் சொன்னான்.”

அவள் விழிகள் மாற நோக்கி நின்றாள். “அருகே வா... ஏன் விலகி நிற்கிறாய்?” என்றார். அவள் அருகே வந்து மஞ்சத்தில் அமர்ந்து “சுவடி பயிலவா போகிறோம்?” என்றாள். “இல்லை, இவ்விரவை இச்சொற்கள் ஒளிபெறச் செய்யட்டும் என எண்ணினேன்” என்றார். “வெளியே நிலவு பொழிகிறது” என்றாள். “ஆம், வரும்போதே பார்த்தேன். இன்று பன்னிரண்டாம் நிலவு” என்றார். “நிலவு ஓர் ஒளிவட்டம் அன்றி வேறல்ல. அதற்கு பொருள் கொடுப்பவை கவிஞர்களின் சொற்கள்.”

யுதிஷ்டிரர் “ஒற்றை ஒரு சொல்லை அறியவே வாழ்வு போதாதென்பார்கள் கவிஞர்” என்றபோது. “எனக்கு விரைவிலேயே சொற்கள் சலித்துவிடுகின்றன” என்றாள் அவள். “அது சொல்லில் இருந்து எழத் தெரியாதவர்கள் சொல்வது.

சொற்கள் கருவறைச் சிலைகள்போல. வழிபடுவோனுக்கு அவற்றில் பிரம்மம் எழுகிறது.” அன்று விடியற்காலையில் அவள் ஓசையற்ற காலடிகளுடன் எழுந்துசென்று உப்பரிகையில் நின்று நிலவொளி சிற்றலைகளென பரவியிருந்த கங்கையை நோக்கிக்கொண்டிருந்தாள். அதில் வணிகப்படகுகளின் ஒளிப்புள்ளிகள் ஒழுகிச்சென்றன.

அவள் துயின்றுவிட்டிருந்ததை விழித்தபோதே உணர்ந்தாள். யௌதேயன் அவளிடம் கானேக ஒப்புதல் கோருகிறான். “நீ பயிலும் நூல்களை இங்கிருந்தே அறியலாமே? ஏன் கானேக வேண்டும்?” என்று அவள் கேட்டாள். “நூல்களின்மேல் சொற்களை கொட்டிக்கொண்டே இருக்கின்றது இந்த நகரம். காடு மொழியற்றது” என்று அவன் சொன்னான். “அங்கேயும் மானுடர் சூழவே இருக்கப்போகிறாய்” என்றாள். “அந்த மானுடரும் காட்டுக்குள் வாழ்பவர்கள். அன்னையே, நம்முள் சொல்லை நிறைப்பவை மானுடரால் அமைக்கப்பட்டவைதான். புழக்கப்பொருட்கள், இல்லங்கள், கோட்டைகள், சாலைகள். அவை ஒவ்வொன்றும் சொல்லில் இருந்து தொடங்கி பருவடிவு கொண்டவை. காட்டிலுள்ளவை அனைத்தும் சொல்லிலாப் பெருவெளியில் இருந்து தொடங்கியவை.”

பூர்ணை “சற்று ஓய்வு கொள்ளலாம், அரசி...” என்றாள். “இது எந்த இடம்?” என பாகனிடம் சுரபி கேட்டாள். “சபரிதலம் என்னும் சாவடி. இதுதான் சாவடிகளில் பெரியது... நீராடி ஆடைமாற்றக்கூட இங்கே அறைகளும் சுனைகளும் உள்ளன” என்றான் பாகன். தேவிகை மேலாடையை மூடிக்கொண்டு இறங்கினாள். அவள் உள்ளம் திடுக்கிட்டது. நெஞ்சு படபடக்க பூர்ணையிடம் “என்னடி?” என்றாள். “என்ன, அரசி?” என்றாள் பூர்ணை. “நீ என்ன சொன்னாய்?” என்றாள். “இறங்குவோம்

என்றேன்." ஏன் அந்தப் படபடப்பு வந்தது? அந்தப் பெயரா? சபரிதலம். எங்காவது அதை முன்னர் கேள்விப்பட்டிருக்கிறேனா?

பூர்ணை "வருக, அரசி" என கூடையுடன் முன்னால் செல்ல சுரபி பின்னால் வந்தாள். தேவிகை மீண்டும் நெஞ்சதிர நின்றுவிட்டாள். "என்ன, அரசி?" என்று பூர்ணை திரும்பிப் பார்த்தாள். தேவிகை அங்கு நின்றிருந்த புரவிகளை நோக்கி "அவை..." என்றாள். பூர்ணை புரிந்துகொண்டு "பால்ஹிக நாட்டு முத்திரைகொண்டவை... அங்கிருந்து எவர் வேண்டுமென்றாலும் இவ்வழிச் செல்லலாமே" என்றாள். ஆனால் அவளும் அறிந்திருந்தாள். அவர்கள் பேசிக்கொள்வதை கேட்காத சுரபி "அரசி, இளைய பால்ஹிகரின் இலச்சினை கொண்ட புரவி அது" என்றாள். பூர்ணை "பேசாமல் வாடி" என அவளை கடிந்தாள்.

தேவிகை பூர்ணையின் கையை பற்றிக்கொண்டு "நாம் திரும்பிச்சென்றுவிடுவோம்" என முணுமுணுத்தாள். "ஏன்?" என்றாள் பூர்ணை. "என்னால் எதிர்கொள்ள முடியாது..." என்றாள் தேவிகை. பூர்ணை "அரசி, தாங்கள் மும்முடிசூடி அரியணை அமர்ந்த யுதிஷ்டிரரின் அரசி இன்று. மெய்ச்சொல் அறியும் மைந்தனின் அன்னை" என்றாள். தேவிகை "நான் தேருக்குச் செல்கிறேன்" என்றபின் "நாம் சென்றுவிடுவோம்" என்றாள். "நாம் வந்ததை விடுதியினர் அறிந்துவிட்டனர். நாம் திரும்பிச்சென்றால் அது செய்தி என்றாகும். அரசகுடியினரை குடிகள் நோக்கிக்கொண்டிருக்கின்றனர் என்பதை மறக்கவேண்டியதில்லை" என்றாள் பூர்ணை. "நிமிர்ந்த தலையுடன் அவரை நோக்கி முறைமைச்சொல் உரைத்து கடந்துசெல்லுங்கள்... அதையே நீங்கள் செய்யவேண்டும்."

“என்னால் அவர்முன் நின்று பேச முடியாது” என்றாள் தேவிகை. “ஏன்? நீங்கள் மாமன்னரின் அரசி அல்லவா?” என்றாள் பூர்ணை. “அல்ல” என்றாள் தேவிகை. பூர்ணை திகைக்க “அதை அவர் என்னை நோக்கிய கணமே அறிந்துகொள்வார். அதை நான் விரும்பவில்லை” என்றாள். பூர்ணை “அரசி, தாங்கள் என்றில்லை. மணமான எந்தப் பெண்ணும் காட்டவேண்டியது ஒரு நடிப்பையே. நீங்கள் மகிழ்வுடன் இருக்கிறீர்கள். மைந்தரும் செல்வமும் குடியும் என வாழ்வு நிறைந்துள்ளது. உங்கள் கொழுநரை அனைவருக்கும் மேலாக விரும்புகிறீர்கள். குன்றில் நின்று அடிவாரத்தை நோக்குவதுபோலத்தான் கடந்தவற்றை காண்கிறீர்கள்” என்றாள்.

“நடிப்பா?” என்றாள் தேவிகை. “நடிப்பென்று சொல்லவேண்டியதில்லை. ஒரு நிலைபேணல். அதைச் செய்யாத மங்கையர் இல்லை... வருக!” என அவள் கையைப்பற்றி பூர்ணை அழைத்துச்சென்றாள். தடுமாறும் கால்களுடன் தேவிகை நடந்துசென்றாள். தாழ்ந்த முகப்பு கொண்ட விடுதி நூறாண்டு பழமையானது. எடைமிக்க அடிமரங்களை அடித்தளமாக போட்டு அதன்மேல் அதே தடிமன் கொண்ட மரங்களை தூண்களாகவும் உத்தரங்களாகவும் அமைத்துக் கட்டடப்பட்டது. அதன் முகப்புக்கூம்பின்மேல் எழுந்த கொடிக்கம்பத்தில் கிரிபாலசஹ்யத்தின் இரட்டைவாள் கொடி பறந்தது.

முகப்பில் மூங்கில் நட்டு ஈச்சஓலைக் கூரையிட்டிருந்தனர். வலப்பக்கம் ஓங்கிய தூண்களின்மேல் கூம்புவடிவக் கூரை அமைந்த கொட்டகையில் வணிகர்களும் வழிப்போக்கர்களும் கூடிய இரைச்சல் எழுந்தது. மூன்று பக்கங்களிலும்

சூழ்ந்திருந்த முற்றங்களிலும் அப்பாலிருந்த குறுங்காட்டிலும் தேர்களும் வண்டிகளும் புரவிகளும் அத்திரிகளும் காளைகளும் நிறைந்திருந்தன. விடுதிக்காவலன் வந்து வணங்கி முகமனுரைத்து அவர்களை பெண்டிருக்கான இடப்பக்க கட்டடத்திற்கு அழைத்துச்சென்றான்.

அவள் கூடையை கொண்டுவரும்படி சொல்லிவிட்டு திரும்பியபோது எதிரில் பூரிசிரவஸ் வருவதை கண்டாள். புன்னகையுடன் கைகூப்பியபடி வந்து “இந்திரப்பிரஸ்தத்தின் அரசிக்கு வணக்கம். தாங்கள் வந்திருப்பதாக என் ஏவலன் சொன்னான். உள்ளே உணவு அருந்திக்கொண்டிருந்தேன். முறைமை உரைப்பதற்காக வந்தேன்” என்றான். அவள் புன்னகையுடன் அவன் முகத்தை நோக்கி “பால்ஹிக இளவரசரைப் பார்ப்பதில் மகிழ்ச்சி அடைகிறேன். நெடுநாளாயிற்று நோக்கி” என்றாள். அவளுடைய புன்னகையால் அவன் ஒரு கணம் தடுமாறி விழிகளை விலக்கிக்கொண்டு “ஆம், நெடுநாட்கள்...” என்றான்.

“இங்கே குருக்ஷேத்ரத்தில் ஒரு ஆலயப்பூசனை. அதன்பொருட்டு சென்றுவிட்டு சிபிநாட்டுக்கே திரும்புகிறேன்” என்றாள். அவன் “நான் அஸ்தினபுரிக்கு ஒரு தூதுச்செய்தியுடன் செல்கிறேன். அரசியை சந்தித்ததில் மகிழ்ச்சி” என்றான். “எந்த அரசகுடியில் மணம்செய்துகொண்டிருக்கிறீர்கள்? நான் நினைவுகொள்ளவில்லை” என்றாள். பூரிசிரவஸ் திடுக்கிட்டு விழிகள் சுருங்க “என் குடியிலேயே” என்றான். அவள் “ஆம், அதுவும் நன்றே. நன்கறிந்திருப்பீர்கள்” என்றாள். தலையசைத்து “வருகிறேன்” என்றபின் நிமிர்ந்த தலையுடன் மலர்ந்த முகத்துடன் நடந்தாள். அவளை காத்து நின்றிருந்த

விடுதிக்காவலனிடம் “நான் அரைநாழிகை பொழுதையே இங்கே கழிக்கமுடியும், காவலரே” என்றபடி சென்றாள்.

பூர்ணை பூரிசிரவஸை நோக்கிவிட்டு அவளை பின்தொடர்ந்தாள். பூரிசிரவஸின் முகத்திலிருந்த மெல்லிய தவிப்பை அவள் அவன் முன் விலகியபின்பு மேலும் தெளிவுறக் கண்டாள். “பூர்ணை” என தேவிகை அழைக்க அவள் அருகே ஓடினாள். “என் பெட்டியிலிருந்து ஆடைகளை எடு…” என்றாள் தேவிகை. பூர்ணை சுரபியிடமிருந்து பெட்டியை வாங்கி ஆடைகளை எடுத்தபடி “வீணே அஞ்சினீர்கள், அரசி. இப்போது எத்தனை நிமிர்வுடனும் மலர்வுடனும் அவரை எதிர்கொண்டீர்கள்!” என்றாள். தேவிகை “நான் கைகால் கழுவிக்கொள்ள வேண்டும்” என்றாள். “எல்லா பெண்களும் இத்தருணத்தை இப்படித்தான் எதிர்கொள்கிறார்கள்” என்றாள் பூர்ணை. “போதும், வாயைமூடு!” என்றாள் தேவிகை.

கூண்டுத்தேரிலேறிக்கொண்டு கதவை மூடியதும் பட்டுவிரித்த மெத்தைமேல் கால்களை நீட்டி தலையணையை அருகே அமைத்து சரிந்துகொண்ட தேவிகை பெருமூச்சுடன் கண்களை மூடிக்கொண்டாள். “கிளம்பலாம்” என்றாள் பூர்ணை. தேர் அசைந்து கிளம்பி திரும்பி மேலேறி சாலையை அடைவதை அசைவாலேயே உணர்ந்தாள். சாலையின் வண்டிப்பெருக்கின் ஓசையில் அவள் தேர் கலப்பதை கேட்டாள். குளம்படிகளின் தாளம் சீராக எழத் தொடங்கியது.

பூர்ணை தன் தலையருகே பெட்டியை வைத்துக்கொண்டு தேவிகை மேல் கால்படாமல் அமர்ந்து கண்மூடினாள். தேரில் ஏறிக்கொண்டதுமே துயில்கொள்ளத் தொடங்கும் வழக்கம் கொண்ட சுரபி இருமுறை கொட்டாவி விட்டு உடலை

நெளித்தபின் தேர்க்கூண்டில் தலைசாய்த்தாள். தேவிகையின் குறட்டையோசை கேட்கத் தொடங்கியது. பூர்ணை விழித்துக்கொண்டு அவள் முகத்தை பார்த்தாள். அவள் விழிகளும் சொக்கத் தொடங்கின. அவளை தோள்தொட்டு தேவிகை எழுப்புவதாக உணர்ந்தாள். சிபிநாட்டின் அரண்மனையின் கல்லால் ஆன மஞ்சத்தறையில் அவள் படுத்திருந்தாள். விழித்தெழுந்து “அரசி” என்றாள்.

படுத்திருந்த தேவிகை விழிகள் தாழ்ந்திருக்க “அவர் கண்களை பார்த்தாயா?” என்றாள். பூர்ணை ஒன்றும் சொல்லவில்லை. “அவர் எனக்காக எதையும் செய்வார்” என்றாள். பூர்ணை வெறுமனே தலையசைத்தாள். “நான் அவரிடம் கோரினால் என்ன?” பூர்ணை “எதை?” என்றாள். “வரவிருக்கும் போரைப்பற்றி…” பூர்ணை “அதற்கு அவர் என்ன செய்ய முடியும்?” என்றாள். “அவர் தூதுசெல்ல முடியும்…” என்றாள் தேவிகை. “அவரா?” என்றாள் பூர்ணை. “எண்ணிப்பார், இதுவரை நாம் முறைமைத் தூதுகளையே அனுப்பியிருக்கிறோம். மைந்தர் சென்றதெல்லாம் தூதே அல்ல. ஏன் உண்மையிலேயே இரு சாராரின் நலத்தையும் விரும்பும் மூன்றாம்தரப்பினர் ஒருவர் சென்று பேசிப்பார்க்கக் கூடாது?”

பூர்ணை “ஆம், ஆனால் அதை நாம் எப்படி செய்வது?” என்றாள். “நாம் மட்டுமே செய்யும் ஒன்றுள்ளது. இன்றுவரை இந்தப் போர் ஒருக்கங்களும் பேச்சுக்களும் எல்லாம் அரசியலாளர்களாலும் அரசகுலத்தாராலும் மட்டுமே செய்யப்பட்டுள்ளன. அவை பேசப்பட்டதெல்லாம் அவைகளிலேயே. அவை என்பது அதிலிருக்கும் அத்தனைபேருக்கும் அயலான பிறிதொரு உள்ளம் என்பார்கள். அது தன்போக்கில் செவிகொள்கிறது, சொல்லாடுகிறது,

முடிவெடுக்கிறது. அங்கிருக்கும் எவரிடமும் தனிப்பட்ட முறையில் எவரும் இதுவரை நம் தரப்பைச் சொன்னதில்லை.”

பூர்ணை “ஆம், மெய்தான்” என்றாள். “அவைகளுக்கே செல்லாமல் நம் தூது ஒன்று செல்லவேண்டும். துரியோதனரிடம், சகுனியிடம், திருதராஷ்டிரரிடம், அங்கரிடம் நம் எண்ணங்களை ஒருவர் தனியாக சந்தித்து எடுத்துச் சொல்லவேண்டும். அதற்கு இவரைவிட பொருத்தமான எவருமில்லை” என்றாள் தேவிகை. “அரசி, ஆனால் இவருக்கு அத்தகைய இடம் அங்கே உண்டா? பால்ஹிகம் மிகச்சிறிய நாடு. அஸ்தினபுரியின் படையுதவியால்தான் அது இன்று அப்பகுதியில் சற்றேனும் மேல்கோன்மை கொண்டுள்ளது” என்றாள் பூர்ணை.

“ஆம், ஆனால் இவரை அவர்கள் விரும்புவர். ஏனென்றால் எத்தனை அரசியலாடினாலும் அழியாத நல்லியல்பொன்று தெரியும் முகம் இவருடையது. இன்று நான் இவரைப் பார்த்ததும் எப்படி உணர்ந்தேன் தெரியுமா?” பூர்ணை வெறுமனே நோக்கினாள். “நான் முதிர்ந்து அன்னையென்றாக இவர் அதே மாறா இளமையுடனிருப்பதாக. யௌதேயனிடம் பேசுவதைப்போலவே இவரிடம் பேசினேன்.” பூர்ணை புன்னகைத்தாள். “அதே உணர்வுதான் அங்கே அஸ்தினபுரியிலும் இருக்கும். இவர் சென்று பேசிப்பார்க்கட்டும். உள்ளத்தோடு உள்ளம் எனச் சொல்லப்படும் சொற்கள் வீண்போகாதென்று என் அன்னை சொல்வதுண்டு. ஒருவேளை அப்படி ஒரு சொல்லுக்காக அங்கும் நல்லியல்புகள் காத்துள்ளனவோ என்னவோ?”

பூர்ணை சற்றுநேரம் தன்னிலமைந்திருந்தபின் “அவ்வண்ணமெனில் நாம் ஏன் அரசர்களுக்கு

தூதனுப்பவேண்டும்?” என்றாள். “என்ன சொல்கிறாய்?” என்றாள் தேவிகை. “நீங்கள் அரசி. அஸ்தினபுரியின் அரசி பானுமதிக்கு தூதனுப்புங்கள். துச்சாதனரின் அரசி அசலைக்கும் அங்கநாட்டரசி விருஷாலிக்கும் நம் தூது செல்லட்டும். நாம் கொள்ளும் அச்சங்களையும் வெறுமையையும் அவர்களும் கொள்வார்கள். நம் சொற்கள் பிறிதெவரையும்விட அவர்களுக்கே புரியும்.”

தேவிகை “ஆம்” என்றாள். எழுந்தமர்ந்து “எண்ணிநோக்கும்போது அதுவே மிக உகந்தது என தோன்றுகிறது. ஆனால் அவர்களால் ஏதும் செய்ய இயலுமா?” என்றாள். “அவர்களால் அவையில் எதையும் நிகழ்த்தமுடியாது. ஆனால் தங்கள் கொழுநர்களின் உள்ளங்களை வெல்லமுடியும்” என்றாள் பூர்ணை. “அங்கரின் அரசிக்கு அவர்மேல் சொல் ஏதுமில்லை. ஆனால் பானுமதியும் அசலையும் தங்கள் கணவர்களை மைந்தர்களைப்போல ஆள்பவர்கள்.” தேவிகை “ஆம், அறிந்திருக்கிறேன்” என்றாள். “அரசி, மேலுமொன்றுண்டு. அவர்களனைவருமே இளைய யாதவரை இறைவடிவென வணங்குபவர்கள்” என்றாள் பூர்ணை.

தேவிகை “அத்துடன் ஒன்றையும் சேர்க்கலாம்” என்றாள். சுரபி “இளைய பால்ஹிகர் பெண்களுக்கு மிகவும் இனியவர்” என்றாள். தேவிகை திரும்பி நோக்கி “எவ்வாறு சொல்கிறாய்?” என்றாள். “அவருடைய மாறா இளமையால்” என்றாள் சுரபி. தேவிகை அவளை ஒருகணம் நோக்கிவிட்டு பூர்ணையிடம் திரும்பி “அவரிடம் பேசவேண்டும்… அவர் மறுபக்கம் நெடுந்தொலைவு சென்றிருப்பார் அல்லவா?” என்றாள். “ஆம்” என்றாள் பூர்ணை. “புரவியில் செல்வதனால் விரைவும் மிகுதி. நாம் அடுத்த காவல்மாடத்தில் சென்று கூறினால் அவர்கள்

முழவுச்செய்தியினூடாக அவரை மறிக்க அங்கிருக்கும் காவல்மாடத்திற்கு ஆணையிடுவார்கள்.”

சுரபி “அவர் அங்கே விடுதியில்தான் இருப்பார்” என்றாள். “என்ன சொல்கிறாய்?” என்றாள் தேவிகை. “அப்படி தோன்றியது. அங்கிருந்து உடனடியாக அவரால் கிளம்பமுடியாது.” தேவிகை மேலும் சற்றுநேரம் அவளை கூர்ந்து நோக்கிவிட்டு “தேரைத் திருப்பு” என்றாள். பூர்ணை “இவள் இளையவள். என்னவோ உளறுகிறாள்” என்றாள். தேவிகை ஒன்றும் சொல்லாமலிருந்தாள். தேரோட்டியிடம் தேரை மீண்டும் விடுதிக்கே விடும்படி சொன்னாள். தேர் திரும்பி ஓடத்தொடங்கியதும் தேவிகை மெல்ல உடல் இறுக்கம் தளர்ந்து பெருமூச்சுவிட்டாள். பின்னர் பூர்ணையிடம் திரும்பி புன்னகைத்து “அங்கே இருக்கிறாரா என்றுதான் பார்ப்போமே” என்றாள்.

பூர்ணை தலையசைத்தாள். “அங்கு இருக்கிறார் என்றால் நாம் அவரை தூதனுப்புவோம்” என்றாள் தேவிகை மீண்டும். பூர்ணை “ஆம்” என்றாள். “நீ என்ன நினைக்கிறாய்?” என்றாள் தேவிகை. “எதைப் பற்றி?” என்றாள் பூர்ணை. “அங்கே அவர் இருப்பாரா?” பூர்ணை ஐயமின்றி தன்னுள் உணர்ந்தாள், ஆனால் பேசாமலிருந்தாள். “இருப்பார்” என்றாள் தேவிகை. பூர்ணை ஒன்றும் சொல்லவில்லை. “இருக்கவேண்டும்” என்றாள் தேவிகை. பின்னர் சுரபியிடம் “அவர் எனக்காக ஏன் அங்கே இருக்கவேண்டும்?” என்றாள். சுரபி தயங்கி பூர்ணையை நோக்கியபின் விழிகளை விலக்கினாள்.

“என்னடி?” என்றாள் தேவிகை எரிச்சலுடன். “அவர் உங்களுக்காக அங்கே காத்திருக்கவில்லை” என்றாள் சுரபி. தேவிகை முகம் சிவக்க “பின்?” என்றாள். “அவர் அந்தத்

தருணத்தை கொஞ்சம் மீட்டிக்கொள்ள விரும்புவார். அதில் இன்னும் சற்று வாழ்வதற்கு... ஆண்களுக்கு அது பிடிக்கும். பெண்கள் விரைவில் அதிலிருந்து விலகியோடவே விரும்புவார்கள்.” தேவிகை படபடப்புடன் உதடுகளை அழுத்திக்கொண்டு பூர்ணையை பார்த்தாள். அவள் வெளியே பார்த்துக்கொண்டிருந்தாள். சிறுசாளரத்தினூடாக வந்த ஒளி அவள் முகத்தில் மின்னிச் சென்றது.

“அது என்னால் நிகழ்ந்தது அல்லவா?” என்றாள் தேவிகை. “இல்லை அரசி, ஒருவேளை நம்மைக் கண்டால் அவர் எரிச்சல்கூட கொள்ளக்கூடும்” என்றாள் சுரபி. “ஏன்?” என்றாள் தேவிகை. “அது அவர்களுக்கு மிக ஆழ்ந்த தனித்த அகநிகழ்வு. அதில் எவரும் உள்நுழைவதை விழையமாட்டார்கள்.” தேவிகை உரத்த குரலில் “அதில் நானுமிருக்கிறேன்” என்றாள். பூர்ணை திடுக்கிட்டு திரும்பி நோக்கினாள். தேவிகை முலை எழுந்தமைய மூச்சிரைத்தாள். “இல்லை அரசி, அதில் நீங்கள் இல்லை” என்றாள் சுரபி. “என்ன சொல்கிறாய், அறிவிலி?” என்றாள் தேவிகை. “அது அப்படித்தான், அரசி” என்றாள் பூர்ணை.

நெடுநேரம் தேருக்குள் அமைதி நிலவியது. தளர்ந்தவளாக தேவிகை பட்டுமேல் படுத்தாள். சுரபி “அவர்களுக்கு நாம் அளித்த அந்த உலகில் நாம் மீண்டும் நுழையமுடியாது, அரசி. இன்று நாம் அவர்கள் அறிந்தவர்கள் அல்ல” என்றாள். தேவிகை “போதும்” என்றாள். “நாம் முதுமைகொள்கிறோம்” என்றாள் சுரபி. “போதும்” என உரக்கக் கூவி தேர்த்தட்டை அறைந்தாள் தேவிகை. தேர் நின்றது. பூர்ணை சாளரம் வழியாக எட்டிப்பார்த்து “ஒன்றுமில்லை, செல்க!” என்றாள். சுரபி “முன்பு

அவர்கள் கண்டதும் நாம் அல்ல” என்றாள். “வாயை மூடடி” என்றாள் பூர்ணை.

“நான் சொல்லாவிட்டால் அரசி அதை எண்ணி எண்ணி விரித்துக்கொள்வார்கள். அது துன்பம். சொன்னால் முடிந்துவிடும்” என்றாள் சுரபி. “அரசி, ஆண்கள் பெண்களிடமிருந்து பெற்றுக்கொள்வது பெண்களை அல்ல.” தேவிகை கண்களை மூடிக்கொண்டு தேரின் ஆட்டத்தில் தலை அசைய படுத்திருந்தாள். அவள் இமைகள் சுருங்கி அதிர்ந்துகொண்டிருந்தன.

# குருதிச்சாரல் - 4

**பகுதி ஒன்று : பாலைமகள் – 4**

தேர் மீண்டும் விடுதியை அணுகி விரைவழிந்தபோது மூவருமே சிறுசாளரங்களினூடாக வெளியே நோக்கிக்கொண்டிருந்தனர். மிகத் தொலைவிலேயே தேவிகை அங்கே பூரிசிரவஸின் புரவிகள் நிற்பதை கண்டுவிட்டாள். அருகில் அவனுடைய படைவீரன் ஒரு புரவியின்மேல் பொதிகளை கட்டிக்கொண்டிருந்தான். “கிளம்பப்போகிறார்கள்” என்றாள் பூர்ணை. “கிளம்பிக்கொண்டே இருக்கிறார்கள், நெடுநேரமாக” என்றாள் சுரபி. தேவிகை நெஞ்சு படபடக்க அதை பார்த்துக்கொண்டிருந்தாள். பின்னர் பூர்ணையின் கையைத் தொட்டு “ஏன் வந்தோம் என உணரத்தொடங்கிவிட்டேன், பூர்ணை” என்றாள்.

“என்ன சொல்கிறீர்கள், அரசி?” என்றாள் பூர்ணை. “நான் எப்படி அவர் முன் சென்று நிற்பேன்? எதை பேசத் தொடங்குவேன்?

முன்பு நான் பேசியது முறைமைச்சொல். அதை எவரிடமும் சொல்லலாம். அடுத்த சொல்லை எடுப்பதுதான் கடினம்” என்றாள். “இக்கட்டான சூழல்களில் நடிப்பதுதான் நல்லது. அது ஒரு முகப்போர்வையென நம்மை காக்கும். நடிப்பில் நாம் நன்கு இயன்று அமைந்தபின்னர் மெல்ல அதை விலக்கி மெய்முகம் காட்டமுடியும்” என்றாள் பூர்ணை.

தேவிகை “என்ன நடிப்பது?” என்றாள். “அங்கே உங்கள் கணையாழி ஒன்று விழுந்துவிட்டது. அதைத் தேடி வந்தீர்கள்” என்ற பூர்ணை ஒரு கணையாழியை எடுத்து “இது” என்றாள். “அதை எடுத்ததும் நீங்கள் கிளம்பும்போது தற்செயலாக அவரை பார்க்கிறீர்கள். இந்தக் கணையாழி எத்தனை இன்றியமையாதது என்கிறீர்கள், மீண்டும் கண்டதனால் முகமனுரைப்பவர்போல. பின்னர் எண்ணியிராதபடி நினைவுகூர்ந்து நீங்கள் அஸ்தினபுரிக்கல்லவா செல்கிறீர்கள் என்று கேளுங்கள். ஆம் என்று சொல்வார். அவ்வாறென்றால் ஒரு தூதை அளிக்கமுடியுமா என்று பேச்சை தொடங்குங்கள். அதற்குள் உங்கள் கால்நடுக்கம் நின்றுவிட்டிருக்கும்.”

தேவிகை சில கணங்கள் எண்ணியபின் “சரி” என்றாள். சுரபி “அக்கணத்தில் எவ்வுணர்வு எழுமென்று முன்னரே வகுக்கமுடியாது, அரசி. எதுவாயினும் அது அக்கணத்தை ஆளும் தெய்வங்களுக்குரியதென்று கொள்ளுங்கள். நாம் எதற்கும் பொறுப்பல்ல” என்றாள். தேவிகை அவளை ஒருகணம் நோக்கி இமைக்காமல் அமைந்து மீண்டு “நம்மை மீறியா?” என்றாள். “ஆம், நாம் என்ன, பெருக்கில் துகள்கள் மட்டும்தானே?” தேவிகை பெருமூச்சுடன் “ஆம்” என்றாள்.

தேரிலிருந்து பூர்ணை முதலில் இறங்கினாள். தேவிகை இறங்கியதும் பூர்ணை மட்டும் முன்னால் சென்று அவளை

எதிர்கொண்ட காவலனிடம் ஓரிரு சொற்கள் பேசிவிட்டு உள்ளே சென்றாள். சுரபியும் தேவிகையும் நடந்து விடுதி முகப்பை அடைந்தனர். தேவிகையின் தொடைகள் நடுங்கிக்கொண்டிருந்தன. மூச்சில் முலைகள் எழுந்தமைந்தன. அவள் அப்போது தன் முகத்தை ஏதேனும் ஆடியில் பார்க்க விரும்பினாள். கூந்தல் கலைந்து நெற்றியில் விழுந்திருப்பதை உணர்ந்து அள்ளி காதோரம் செருகிக்கொண்டாள். நெஞ்சை உலைத்தபடி பெருமூச்சு ஒன்று வந்தது.

சுரபி "முகம் கழுவிக்கொள்ளலாம், அரசி" என்றாள். அதை தேவிகை மிக விரும்பினாள். "ஆம்" என்றபடி பக்கவாட்டில் சென்று அங்கிருந்த நீர்த்தொட்டியை அணுகி குனிந்து அதில் தன் முகத்தை பார்த்தாள். அந்த முகம் அவளை திடுக்கிடச் செய்தது. படபடப்புடன் உதடுகளை மடித்து அழுத்திக்கொண்டாள். பின்னர் முகத்தின்மேல் நீரள்ளிவிட்டு கழுவினாள், அந்த முகத்தை நீர்ப்பாவையை என கலைக்க விழைபவள்போல. சுரபி அளித்த மரவுரியால் முகத்தை துடைத்தாள்.

சுரபி பேழையிலிருந்து கொம்புச்சீப்பை எடுத்து அளித்தாள். அவள் விழிகளை ஒருகணம் சந்தித்துவிட்டு தேவிகை அதை வாங்கி தன் தலையை சீவிக்கொண்டாள். சுரபி அவள் கழுத்திலணிந்திருந்த நகைகளை சீரமைத்தாள். தேவிகை அதை முரண்கொண்ட உடலசைவால் தவிர்த்து தானே சீரமைத்துக்கொண்டாள். ஆனால் அவள் எடுத்தளித்த நறுஞ்சுண்ணச் செப்பை மறுக்க முடியவில்லை. அவளை நோக்காமல் அதை வாங்கி சுண்ணத்தை சிறுதுணியில் சிறிது உதிர்த்து அதைக்கொண்டு முகத்தை அழுத்தி துடைத்தாள்.

“அகவைகளுக்கு அவற்றுக்குரிய அழகுகள், அரசி” என்றாள் சுரபி. அந்த மீறல் அவளை எரிச்சல் கொள்ளச்செய்ய ஒன்றும் பேசாமல் திரும்பினாள். வெளியே வந்த பூர்ணை “கிடைத்துவிட்டது, அரசி. கீழே விழுந்து கதவுக்குப் பின்னால் கிடந்தது” என்றாள். அவள் உதடுகள் வளைய “நன்று” என்றாள். உளமொருங்காமல் புன்னகை செய்வது இத்தனை கடினமா என்ன? விடுதிக்காவலர் அவள் பின்னாலேயே வந்து “நல்லவேளை… இல்லையென்றால் ஏவலர் அனைவரையும் நோக்கவேண்டியிருக்கும். நாளுக்கு இரண்டாயிரம்பேர் வந்து உண்டு மீளும் விடுதி இது” என்றார்.

பூர்ணை “அரசி, இளைய பால்ஹிகர் இங்குதான் இருக்கிறார். சற்றுமுன் அவருடைய ஏவலனை பார்த்தேன்” என்றாள். பொருளில்லாமல் “ஆம்” என்றாள் தேவிகை. விடுதிக்காவலர் “கிளம்பிக்கொண்டிருக்கிறார். அவர் எதையோ எழுத வேண்டியிருந்தமையால் பிந்துகிறது. பிறர் காத்திருக்கிறார்கள்” என்றார். சுரபி “இங்குதானிருக்கிறாரா? என் எண்ணம் நீங்கள் அவரைச் சந்தித்து அப்பொறுப்பை அளிக்கலாம் என்பதுதான்” என்றாள். அனைத்தும் ஒரே கணத்தில் எளிதாகிவிட்டதைக் கண்ட பூர்ணை “ஆம் அரசி, அவரிடம் சொல்லலாம். காவலரே, அரசியை அவருக்கு அறிவியுங்கள். அறையில்தான் இருக்கிறார் அல்லவா?” என்றாள்.

“ஆம், அங்குதான்… வருக, அரசி” என்றார் விடுதிக்காவலர். ஆனால் தேவிகை தயங்கி நின்றாள். “செல்க!” என்று அவள் தோளை மெல்ல தொட்டாள் பூர்ணை. அவள் காலகள் எழ மறுத்தன. “செல்க, அரசி” என்றாள் பூர்ணை. விடுதிக்காவலர் முன்னால் சென்றுவிட்டிருந்தார். “நாம் திரும்பிவிடுவோம்” என்றாள் தேவிகை. “அரசி, அவர் உங்கள் வருகையை

அறிவித்துவிட்டார்” என்றாள் பூர்ணை. “ஆம், நீங்கள் திரும்பினால் பிழையென்றாகும்” என்றாள் சுரபி. “நான் எதையும் அவரிடம் பேசவிரும்பவில்லை” என்றாள் தேவிகை. “சரி, அவ்வாறெனில் முகமன் மட்டும் உரைத்துவிட்டு கிளம்புங்கள்” என்றாள் பூர்ணை.

தேவிகை தளர்ந்த காலடிகளுடன் நடந்தாள். விடுதிக்காவலர் வந்து “இளவரசர் காத்திருக்கிறார்” என்றார். “ஆம்” என்றபின் அவள் முகத்தின்மேல் ஆடையை நன்றாக இழுத்துவிட்டுக்கொண்டு சென்று அறைவாயிலில் நின்றாள். விடுதிக்காவலர் அதை மெல்ல தட்டி “சிபிநாட்டு அரசி” என்றார். “வருக!” என பூரிசிரவஸின் குரல் கேட்டது. அப்போது அந்தக் குரல் அவளுக்கு திகைப்பை அளித்தது. முற்றிலும் அயலான, முதிர்ந்த மனிதரின் குரல். விடுதிக்காவலர் கதவைத் திறந்து “செல்க, அரசி!” என்றார். அவள் உள்ளே சென்றாள்.

உள்ளே குறும்பீடத்தில் அமர்ந்திருந்த பூரிசிரவஸைக் கண்டதும் தேவிகை நின்றாள். அவனே எழுந்து தலைவணங்கி “வருக, அரசி… இந்நாள் இனியது. இருமுறை அரசியால் வாழ்த்தப்பட்டேன்” என்றான். அத்தருணத்தில் முறைமைச்சொல் மிக இனிதாக இருந்தது. “ஆம், நானும். தற்செயலாக இங்கே வரவேண்டியிருந்தது. என் கணையாழி இங்கே விழுந்துவிட்டிருந்தது. நீங்கள் கிளம்பாததும் நன்றே” என்றாள். “கிளம்பிக்கொண்டிருந்தேன்… ஒரு கடிதம்” என்றான்.

அவள் கைகளை மார்பில் கட்டிக்கொண்டபோது முகத்திரை நழுவியது. அதை தலைமேல் இழுத்துவிட்டுக்கொண்டு புன்னகையுடன் “ஆம், நீங்கள் அஸ்தினபுரிக்கல்லவா கிளம்புகிறீர்கள்?” என்றாள். “ஆம், இந்த ஓலை என்

மூத்தவருக்கு…” அவள் சிரித்து “என்னைப்பற்றி அல்ல என நினைக்கிறேன்” என்றாள். அவன் தலையை அண்ணாந்து உரக்க சிரித்து “இல்லை, இது ஒற்றர்செய்தி” என்றான். அவன் குரல்வளை அழகாக இருந்தது என நினைத்தாள். இளமையிலிருந்ததைவிட தோள் பெருத்திருந்தான். மலைமக்களுக்கே உரிய சுண்ணவெண்ணிறம். சிவந்த உதடுகள். காதுகள் கூட ஒளிகொண்டு சிவந்திருந்தன.

அவன் “தாங்கள் என்னிடம் பேசவிழைவதாக சொன்னார்கள்” என்றான். “ஆம், நான் ஒரு தூது சொல்லி அனுப்பலாமென எண்ணினேன்” என்றாள். “தூதா? நானா?” என்றான். கண்களில் சிரிப்புக்கு அப்பால் உள்ளம் எச்சரிக்கை கொள்வதை கண்டாள். உணர்வுகளை மறைக்கத்தெரியாத இளைஞனாகவே இருக்கிறான் என எண்ணியதும் மேலும் உளஅணுக்கம் கொண்டாள். அது அவளை அவனை நோக்கி இரண்டு அடியெடுத்துவைத்து நெருங்கும்படி செய்தது. “ஏன், எனக்காக தூது செல்லமாட்டீர்களா?” என்றாள். “என் கடமை அது. ஆணையிடுக!” என்றான். “எவரிடம்?”

அவள் வாய்க்குள் நாவைச் சுழற்றி சிரித்து தோள்களில் மெல்லிய குழைந்த அசைவு வெளிப்பட “இந்திரப்பிரஸ்தத்தின் அரசர் யுதிஷ்டிரரிடம்” என்றாள். அவன் மூச்சுத்திணறுவது நன்றாகவே தெரிந்தது. விடுவித்துக்கொண்டு சிரித்து “ஆணையிடுங்கள்…” என்றான். “வெறுமனே சொன்னேன்” என்றாள். அவள் விளையாடுவது அவனை நிலைகுலையச் செய்தது. அங்கிருந்து விலகிவிடவேண்டுமென அவன் விழைவது அவன் அசைவுகளில் தெரிந்தது. அது அவளை மேலும் உவகைகொள்ளச் செய்தது. அகவை மறந்து இளமகளென்றானதுபோல.

“நான் சொல்லும் தூது உங்கள் நாட்டு நலன்களுக்கு எதிரானது என்றால் என்ன செய்வீர்கள்?” என்றாள். அவன் “இல்லை... அதாவது, அப்படி நீங்கள் சொல்ல மாட்டீர்கள்” என்றான். “சொன்னால்?” என தலைசரித்து கேட்டாள். “சொல்லமாட்டீர்கள், அரசி.” அவள் வாய்விட்டுச் சிரித்து “மெய்யாகவே உங்கள் நாட்டுக்கு எதிரானதுதான்” என்றாள். அவன் பேசாமல் நின்றான். முகத்தில் தெரிந்த அச்சத்தையும் குழப்பத்தையும் கண்டு அவள் புன்னகையுடன் “அஞ்சவேண்டாம்... இது வேறு. எங்களுக்கும் அஸ்தினபுரிக்கும் இடையேயான பூசல்” என்றாள்.

“அதுவும் என் நாட்டுடன் தொடர்புள்ளதுதான், இளவரசி” என்றான் பூரிசிரவஸ். “நான் உங்களை துரியோதனரின் அரசி பானுமதியிடம் பேசுவதற்காக அனுப்புகிறேன்” என்றாள் தேவிகை. அவன் முகம் தத்தளிப்பு விலகி கூர்கொண்டது. அவள் அகம் ஏமாற்றமடைந்தது. அதை சொல்லியிருக்கக்கூடாது என்று எண்ணினாள். அந்தத் தூதையே தவிர்த்திருக்கவேண்டும். அந்தத் தருணத்தை முடிந்தவரை நீட்டி அதில் திளைத்திருக்கவேண்டும். “சொல்லுங்கள், அரசி” என்றான்.

அவள் “துச்சாதனரின் துணைவி அசலையிடமும் அங்கரின் அரசி விருஷாலியிடமும் நீங்கள் என் செய்தியை கொண்டுசெல்லவேண்டும்” என்றாள். அவன் தலையசைத்தான். “கொண்டுசெல்வீர்களா?” என்றாள். அதிலிருந்த கெஞ்சலை அவள் எண்ணியிருக்கவில்லை. “சொல்லுங்கள், அரசி” என்றான். “சொல்வேன் என்று கூறுங்கள்” என்றாள். குரல் மேலும் தழைந்து கெஞ்சியது. “தூதை சொல்லுங்கள்” என்றான் பூரிசிரவஸ். “அதையொட்டியே நான் முடிவெடுக்கமுடியும்.”

அவள் உள்ளம் ஏமாற்றத்தில் சூம்பியது. நெஞ்சு விம்மிக்கொண்டிருந்தது. தொண்டை அடைக்க விழிகளை திருப்பிக்கொண்டாள். உருக்குறைந்து புழுவென்று ஆகி நிற்கிறேன். இவனிடம் இரக்கிறேனா? இவனிடமா? யார் இவன்? என் அரசரின் முன் நிகரென அமரக்கூட இடமில்லாத சிறுநாட்டின் இளவரசன். இவன் எனக்கு பரிசிலளிக்கிறானா? வேண்டாம், திரும்பிவிடுவோம். ஆனால் அவள் தொண்டையிலிருந்து மெல்லிய விம்மல் ஒன்று வெளிவந்தது. "நான், என் மைந்தனுக்காக…" என்றதுமே அழுகை பொங்கி வர அவள் கைகளால் முகத்தை பொத்திக்கொண்டாள். தோள்கள் குலுங்க விசும்பல்களும் சீறல்களுமாக அழத்தொடங்கினாள். அவன் வெறுமனே நோக்கி நின்றான்.

"என்னால்… எனக்குத் தெரிகிறது, அனைத்தும் எங்கு செல்கின்றன என்று. என் வாழ்க்கையில் நான் பொருட்டென நினைப்பது என் மைந்தனை மட்டுமே. இப்புவிவாழ்க்கையில் நான் வேறேதும் காணவில்லை. அவனை இழந்தால்…" என்றாள். கேவல்களும் விம்மல்களுமாக சொற்கள் உடைந்து தெறித்தன. பெருமூச்சுகளுடன் மெல்ல அமைதியடைந்து மேலாடையால் முகத்தை துடைத்தாள். முகத்தை நன்றாக மூடிக்கொண்டு திரும்பி நின்றாள். திரும்பிவிட்டோம் என்ற உணர்வே அவளுக்கு விடுதலையை அளித்து எண்ணங்களை திரட்டிக்கொள்ளச் செய்தது.

"என் மைந்தன் வாழவேண்டுமென்றால் போர் நிகழலாகாது. ஆனால் அங்கும் இங்கும் ஆண்களனைவரும் போரையே எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். அனைவரும் போரை நோக்கி காலத்தை உந்திச் செலுத்திக்கொண்டிருக்கிறார்கள்" என்றாள். "இல்லை அரசி, போரைத் தவிர்க்கவே அனைவரும்

முயல்கிறோம்” என்றான் பூரிசிரவஸ். அவள் சீற்றம்கொண்டு திரும்பி “அதை மட்டும் என்னிடம் சொல்லவேண்டியதில்லை. போர் வேண்டாம் என்று நாளுக்கு நூறுமுறை சொல்பவரின் அகமென்ன என்று நானும் அறிவேன்” என்றாள்.

அவன் திகைத்து விழிவிரிய நோக்கிநின்றான். அவள் குரலைத் தாழ்த்தி “நான் கோருவது இதுவே. அரசர்களிடமும் அவையிடமும் அல்ல, என்னைப்போன்ற அன்னையரிடம். இந்தப் போர் நாளுக்குநாள் பெருகிக்கொண்டே செல்கிறது. இது நிகழ்ந்தால் இங்கே எவரும் எஞ்சப்போவதில்லை. எவர் எஞ்சினாலும் உறுதியாக அழியப்போவது நம் மைந்தர். என் மைந்தன் மட்டுமல்ல அவர்களின் மைந்தர்களும்கூடத்தான். அவர்களை காக்கவேண்டியது அன்னையராக நம் கடமை.”

அவன் “அரசி, அவர்கள் அரசருக்கும் மைந்தர்களே” என்றான். “ஆம், நான் சொல்வது அதைத்தான். நிலம்வென்று கொடிவழிகளுக்கு அளிக்க நினைப்பவர்கள் முதலில் செய்வது என்னவாக இருக்கும்? தன் எதிரிகளின் கொடிவழியை முற்றழிப்பதை அல்லவா?” அந்த நேரடி உண்மையின் முன் அவன் சொல்லிழந்து உதடுகளை மட்டும் அசைத்தான். “அதுதான் நிகழும். களத்தில் இரு தரப்பும் எதிர்நிற்பவர்களின் மைந்தர்களை நோக்கியே படைக்கலம் எடுப்பார்கள்... அனைவரும் கொல்லப்படுவார்கள். ஆம், ஒருவர்கூட எஞ்சமாட்டார்கள்.”

மூச்சிரைக்க அவள் சொன்னாள் “இதை நான் சொன்னதாக சொல்லுங்கள். அன்னையர் அனைவருமே அதை உணர்ந்திருப்பார்கள். சொல்லென்றாக்க அஞ்சி உள்புதைத்திருப்பார்கள். ஏனென்றால் சொல்லென்றானது நிகழ்வென்றாகும் என்பது தொல்மொழி.” பூரிசிரவஸ் “நான்

சொல்கிறேன்” என்றான். “அன்னையராகிய நமக்கு நிலமில்லை, குலமும் குடியும் நகரும் கொடியும் ஒன்றுமில்லை. நாம் பெண்கள், அன்னையர். பிறிதெவருமில்லை. அதை அவர்களிடம் சொல்லுங்கள். இதோ இந்திரப்பிரஸ்தத்தின் முடியுரிமைப்போரில் என் மைந்தன் களமிறங்குகிறான். நான் இந்திரப்பிரஸ்தத்தை தெரிவுசெய்யவில்லை. அவனை ஆக்கிய உயிர்த்துளியை விரும்பி ஏற்றுக்கொள்ளவுமில்லை. பானுவும் அசலையும் அவ்வாறே. இந்தப் போர் எங்களுடையதல்ல. ஆனால் இழப்புகளனைத்தும் எங்களுக்கே. எவர் வென்றாலும் தோற்பவர் அன்னையர்…”

பெருகிவந்த சொற்கள் தடைபட அவள் மூச்சிழுத்து உதடுகளை அழுத்தியபடி தலைகுனிந்து நின்றாள். அவன் ஏதோ சொல்ல வாயெடுத்த மெல்லிய ஓசையைக் கேட்டு உளமுலுக்கப்பட்டு சொற்கள் மீண்டும் பொழிந்தன. “மகளென்று நம் சொல் அவையேறவில்லை. மனைவியென்றும் செவிகொள்ளப்படவில்லை. அன்னையென்று ஆனபின்னராவது அதற்கு ஆற்றல் வந்தாகவேண்டும். என் கொழுநர் முன் சென்று நிற்கிறேன். அவர்கள் மீறிச்சென்றார்கள் என்றால் வழியில் சங்கறுத்து விழுகிறேன். எங்கள் குருதிமேல் கடந்து அவர்கள் நிலம்கொண்டு முடிசூடட்டும். அதையே அவர்களும் செய்யவேண்டுமென்று கூறுக!”

“ஆம், நான் தங்கள் உணர்வுகளுடன் இச்சொற்களை அரசியர் மூவரிடமும் சொல்கிறேன்” என்றான் பூரிசிரவஸ். “கூடவே அரசரிடமும் பேசுகிறேன். இளவரசர்கள் குறிவைக்கப்படுவார்கள் என்று நீங்கள் சொன்னது உண்மை என உணர்கிறேன். அதை சொல்கிறேன். முடிந்தால் இரு தரப்பிலும் இளவரசர்களை அனைத்திலிருந்தும்

தவிர்க்கமுடியுமா என்று பிதாமகரிடம் பேசிப்பார்க்கிறேன்." தேவிகை சினத்துடன் உதடுகள் வளைய "பார்த்தீர்களல்லவா, நீங்களும் போரை வரவழைக்கவே அறியாது முயல்கிறீர்கள். மைந்தருக்காக அன்னையர் எழுந்தால் போர் நின்றுவிடுமோ என அஞ்சும் உங்கள் உள்ளம் கண்டுபிடித்த வழி இது" என்றாள்.

"இல்லை, அரசி. மெய்யாகவே..." என்று பூரிசிரவஸ் தொடர அவள் கைகாட்டி தடுத்து "பிதாமகரோ பேரரசரோ போர் என்று வந்துவிட்டால் வேறேதும் அவர்கள் விழியில் படாது. மேலும் குடிகளின் இளமைந்தர் போரில் சாக நம் மைந்தர் மட்டும் ஒளிந்துகொள்ளவேண்டும் என்று சொன்னால் நானே அதை ஏற்கமாட்டேன்" என்றாள். "மைந்தரைக் குறிவைப்பதையாவது தடுக்கலாம்" என்றான் பூரிசிரவஸ். "மைந்தரைக் குறிவைப்பது அரசர்களோ அவர்களின் படைக்கலங்களோ அல்ல. தொல்விலங்கின் உகிர்களும் பற்களும் கொம்புகளும்" என்றாள் தேவிகை மீண்டும் சீற்றம்கொண்டு. "கானாடல்களில் குருளைகளைக் கொல்லவரும் ஆண்புலிகளையும் ஓநாய்க்கடுவன்களையும் மீண்டும் மீண்டும் கண்டிருக்கிறேன்."

கைகளை விரித்து ஒன்றும் சொல்வதற்கில்லை என்று காட்டியபின் பூரிசிரவஸ் "நான் சென்று சொல்கிறேன், அரசி. என்னுள் வாழும் காட்டுதெய்வங்கள் என்ன எண்ணுகின்றன என்றறியேன். நான் மெய்யாகவே இப்போர் எவ்வகையிலேனும் தவிர்க்கப்பட்டாக வேண்டுமென்றே விழைகிறேன். அதன்பொருட்டு எதைச் செய்வதும் என் கடன் என்றே உணர்கிறேன். அரசியரை தனித்தனியாகக் கண்டு பேசுகிறேன். கண்ணீரையும் சினத்தையும் கொண்டு அவர்கள் போராடவேண்டுமென்று கோருகிறேன்" என்றான்.

“ஆனால் இப்போர் நிகழாதென்றே இப்போதும் எண்ணுகிறேன். நீங்கள் சொன்னதுதான் அடிப்படை. நாளுக்குநாள் பெரிதாகிக்கொண்டே செல்கிறது களம். பாரதவர்ஷமே இரு கூறாக பிரிந்துகொண்டிருக்கிறது. போர் நிகழ்ந்தால் அது பேரழிவாகவே எஞ்சும். வென்றவர்கள் பெரும்பழி சூடவேண்டியிருக்கும். அந்த அச்சமே போரைத் தவிர்க்கும் விசையாக ஆகும்.” தேவிகை ஏளனத்துடன் சிரித்து “இன்னமும் மானுடரின் நல்லகத்தை நம்பும் இளையோனாகவே இருக்கிறீர்கள். எண்ணிக்கொள்க, ஓங்கிய படைக்கலம் குருதியின்றி அமையாது. நான் விழைவது என் மைந்தன் வாழும்காலம் வரை இப்போர் தவிர்க்கப்படவேண்டும் என்றே” என்றாள்.

“உண்மையில் இப்போர் தொடங்கி நீண்டகாலமாகிறது. இது சத்யவதி குறித்திட்ட போர். இரு தலைமுறைக்காலம் இதை நீட்டிக்கொண்டுவந்து நிறுத்தியவர் பிதாமகர் பீஷ்மர். இன்று நாமனைவரும் முயன்றால் மீண்டும் ஒரு தலைமுறைக்காலம் கடத்திச்செல்லமுடியும். தெய்வங்கள் காத்திருக்கும் ஆற்றல்மிக்கவை. ஏனென்றால் அத்தனை வேட்டைவிலங்குகளும் பொறுமையானவை. நாம் இன்று தப்புவதைப்பற்றி மட்டுமே பேசுகிறேன்” என்றாள் தேவிகை. “ஆம், அரசி. நாம் நம்மால் இயன்றதை முயல்வோம்” என்றான்.

அவள் பெருமூச்சுடன் தன் தலையாடையைத் தூக்கி அணிந்துகொண்டு திரும்பினாள். பூரிசிரவஸ் சற்று தயங்கி சொல்கோத்து “அரசி, ஒரு சொல்” என்றான். அவள் நின்றாள். “நீங்கள் செல்லவேண்டிய இடம் சிபிநாடல்ல, உபப்பிலாவ்யம்” என்றான். அவள் ஏறிட்டு நோக்கினாள். “அங்குதான் உங்கள் அரசி இருக்கிறார். குருதிவஞ்சம் அவர்களுடையது. அவர் தன்

வஞ்சமொழிந்து குழல் அள்ளிமுடிந்தால் போர் பாதி முடிந்துவிட்டது என்றே பொருள். எஞ்சியது எளிது” என்றான் பூரிசிரவஸ். அவள் தலையசைத்தாள். “ஆம், நான் அதை எண்ணிநோக்கவில்லை. நானும் எதிரியையே எண்ணுபவளாகிவிட்டேன். இங்கிருந்தே உபப்பிலாவ்யம் கிளம்புகிறேன்” என்றாள்.

“நன்று, நான் வருகிறேன்” என்று தேவிகை திரும்பினாள். கதவு தொலைவிலெனத் தெரிந்தது. காலடிகள் வைக்க வைக்க அகன்றது. பிசினில் ஒட்டிய ஈயென சிறகுகள் துடிக்க தவித்தாள். அவன் விட்ட மூச்சொலியில் மெல்லிய மெய்ப்புகொண்டு திரும்பாமலேயே நின்றாள். “என்னை எண்ணியமைக்கு நன்றி, அரசி” என்றான். அவள் கழுத்து மூச்சில் குழிந்தெழ உடலிறுக நின்றாள். “அச்சொற்கள் பொய்யென்றும் கனவென்றும் ஆகவில்லை என்று இப்போது உணர்கிறேன்” என்றான். “வேண்டாம்” என அவள் மெல்லிய குரலில் சொன்னாள். “ஏன்?” என்றான். “நாம் அதைப் பற்றி பேசவேண்டாம்.”

அவன் அருகே வந்தான். ஒவ்வொரு காலடியோசையும் நீர்நிலையில் கல் விழுவதுபோல் அவள் உடலை அலைகொள்ளச் செய்தது. அணுகிய அவன் உடலின் மென்வெம்மையை உணர்ந்தாள். வகிட்டில் அவன் மூச்சை. “நான் இரவுபகலாக புரவியில் வந்தேன் என அறிவீர்களா?” என்றான். “ஆம்” என்றாள். ஓசை மூச்சென வெளிவந்தது. “என்றாவது என்னை எண்ணியிருக்கிறீர்களா?” என்றான். “அதெல்லாம் எதற்கு? நான் செல்கிறேன்” என்றாள். “நன்று!” என்றான்.

அவள் மேலும் சற்றுநேரம் நாண் இறுகி ஒடிவதற்கு முந்தையகணத்து வில்லென நின்றாள். பின்னர் மெல்ல தோள் தளர்ந்தாள். கைவளைகள் ஓசையிட்டு தழைந்தன. பெருமூச்சுடன் ஏதோ சொல்ல வந்தபின் தலையசைத்து அதை உளத்திலேயே கலைத்தாள். விழிதூக்கி அவனை நோக்கினாள். அவன் கன்னத்தில் தாடி நரையோடியிருந்தது. கண்களுக்குக் கீழே சுருக்கங்கள். திடீரென அகவைகொண்டுவிட்டான் என. அவள் பெருமூச்சுடன் "நான் கிளம்புகிறேன்" என்றாள். அவன் "ஆம்" என்றான்.

உடலை அசைத்தபோது அது கல்லென எடைகொண்டிருப்பதாகத் தோன்றியது. வேறேதும் சொல்லி உளம்விலக்கவேண்டுமென்று எண்ணி "கானேகியபின் திரௌபதி மிகவும் கனிந்துவிட்டாள் என்றனர்" என்றாள். "ஆம், அப்படித்தான் நானும் அறிந்தேன். மேலும் பிறரைவிட அவர்களுக்கு ஐந்துமடங்கு மைந்தர்துயர்" என்றான் பூரிசிரவஸ். அவள் சினத்துடன் கண்கள் சுருங்க "என்ன சொல்கிறீர்கள்? அவ்வாறு நாவிலெழலாமா?" என்றாள். "இல்லை, நான் நாவழங்கி..." என அவன் தடுமாறினான். அவள் மீண்டும் "நான் வருகிறேன். தேரை உபப்பிலாவ்யத்திற்கே செலுத்தச்சொல்கிறேன்" என்றாள்.

"மீண்டும் எங்காவது பார்ப்போம்" என்றான். அவள் "இல்லை, மீண்டும் சந்திக்கவேண்டியதில்லை" என்றாள். "ஏன்?" என்றான். "நான் இவ்வாறு எதிர்பார்க்கவில்லை." அவன் மீண்டும் "ஏன்?" என்றான். "இல்லை. ஒன்றுமில்லை" என்றபின் அவள் கதவைத் திறந்து வெளியே சென்றாள். அவன் அவள் பின்னால் வந்து கதவைப் பற்றியபடி நின்றான். அவன் நோக்கை உடலெங்கும் உணர்ந்தபடி அவள் நடந்து இடைநாழியை கடந்தாள். ஏன்

திரும்பி நோக்கவில்லை என எண்ணியபோது அவனையே எண்ணிக்கொண்டிருந்தமையால் என மறுமொழி எழுந்தது நெஞ்சில்.

கூடத்திற்கு வந்தபோது அவள் எங்காவது படுத்துவிடவேண்டும் என எண்ணுமளவுக்கு களைப்படைந்திருந்தாள். “இளைப்பாறிவிட்டுச் செல்லலாமா, அரசி?” என்றாள் பூர்ணை. “இல்லை, கிளம்பிவிடுவோம்” என்றாள். நேராகச் சென்று தேரிலேறிக்கொண்டாள். அங்கிருந்து விலகிவிடவேண்டும் என்னும் விரைவு அவளுள் எழுந்தது. எதையோ அஞ்சுகிறவள்போல வண்டிக்குள் கதவை மூடிக்கொண்டாள். பூர்ணை ஏறிக்கொண்டதும் “நாம் உபப்பிலாவ்யம் செல்லவேண்டும்” என்றாள். “அரசி?” என்றாள் பூர்ணை. “ஆம், அங்குதான் செல்லவேண்டும். பாகனிடம் சொல்!”

பூர்ணை பாகனிடம் சொல்ல அவன் அதை வியப்பின்றி ஏற்று “ஆணை” என்றான். தேவிகை பொறுமையிழந்து “விரைக!” என்று பூர்ணையிடம் தாழ்ந்த குரலில் சொன்னாள். அவள் வியப்புடன் நோக்க முகத்தின்மேல் ஆடையை இழுத்துவிட்டுக்கொண்டு அவள் கண்மூடினாள். அவள் கால் கட்டைவிரல் நெளிந்துகொண்டே இருப்பதை பூர்ணை கண்டாள். சுரபி தேரில் ஏறி அமர்ந்ததும் பாகன் தேர்மேடைமேல் அமர்ந்தான். ஒரு புரவி உறுமியது. குளம்புகளால் தரையைத் தட்டியது.

வண்டி கிளம்பியதும் தேவிகை ஆறுதலடைந்து கால்களை நீட்டிக்கொண்டாள். கண்கள் செருக துயில் உடலெங்கும் பரவியது. எண்ணங்கள் நனைந்து படிந்தன. சொற்கள் கரைந்து மறைந்தன. நெடுநாட்களுக்குப்பின் அவள் முற்றிலும் தன்னை இழந்து துயிலில் மூழ்கினாள். வண்டியின் ஆட்டத்தில் அவள்

தலை ஆடிக்கொண்டிருந்தது. பூர்ணை அவளை நோக்கியபின் சுரபியை பார்த்தாள். சுரபி புன்னகைக்க அவள் விழிவிலக்கிக்கொண்டு வெளியே பார்க்கத்தொடங்கினாள்.

'வெண்முரசு' – நூல் ஆறு – 'வெண்முகில் நகரம்' – 61

'வெண்முரசு' – நூல் ஆறு – 'வெண்முகில் நகரம்' – 62

'வெண்முரசு' – நூல் ஆறு – 'வெண்முகில் நகரம்' – 35

'வெண்முரசு' – நூல் ஆறு – 'வெண்முகில் நகரம்' – 23

'வெண்முரசு' – நூல் ஆறு – 'வெண்முகில் நகரம்' – 22

# குருதிச்சாரல் - 5

**பகுதி ஒன்று : பாலைமகள் – 5**

தேவிகை உபப்பிலாவ்யத்திற்குள் நுழைந்தபோது கோட்டைவாயிலில் காவலர்கள் அவளை அடையாளம் கண்டுகொள்ளவில்லை. தேர்ப்பாகன் முத்திரைக் கணையாழியை காட்டியபோது காவலன் திரும்பி தலைவனை நோக்க அவன் இறங்கிவந்து கணையாழியை வாங்கி கூர்ந்து நோக்கியபின் குழப்பம் விலகாமலேயே தலையசைத்தான். தேர் நகருக்குள் நுழைந்தபோதுதான் அத்தனை சிறிய ஊர் அது என தேவிகை உணர்ந்தாள். ஒரு சிறிய பெட்டிக்குள் நுழைந்ததுபோலத் தோன்றியது. பெரிய சகடங்கள் கொண்ட தொலைபயணத் தேரில் இருந்து நோக்கியபோது அத்தனை கட்டடங்களும் சற்று கீழே எனத் தெரிந்தன.

இடுங்கலான தெருக்களில் இருந்த நெரிசல்கூட அங்கே பாண்டவர்கள் இருப்பதனால் மிக அண்மையில் உருவானதென்று தெரிந்தது. கட்டடங்கள் புதுப்பிக்கப்பட்டு வண்ணம்பூசப்பட்டிருந்தன. "இளைய மைந்தர் அபிமன்யூவின் திருமணத்தின்பொருட்டு செப்பனிடப்பட்டிருக்கலாம்" என்றாள் பூர்ணை. தேவிகை தலையசைத்தாள். "இது நகரமே அல்ல, எல்லைப்புற காவல்கோட்டை. நகரமாகிக்கொண்டிருக்கிறது" என்றாள் சுரபி.

அரண்மனை முகப்பில் சுரேசர் அவர்களை எதிர்கொண்டார். "தாங்கள் வந்துகொண்டிருக்கும் செய்தி நேற்றுதான் இங்கே வந்தது, அரசி. நெடுந்தொலைவுப்பயணம்... உரிய ஏற்பாடுகளுமின்றி" என்றார். "ஆம், உடனே வரவேண்டியிருந்தது" என்றாள். "அரசர் இளையவர்களுடன் அருகே உள்ள சம்புகம் என்னும் சோலைக்கு சென்றிருக்கிறார்... இங்கே நாட்கணக்காக நிகழ்ந்த அரசுசூழ்தல்களால் சலிப்புற்றுவிட்டார். சிலநாட்கள் நூலாய்ந்துவிட்டு வரலாமென்று கிளம்பினார். இளையவர்கள் நகுலனும் சகதேவனும் உடன் சென்றனர்."

அவள் கேளாமலேயே "பீமசேனரும் பார்த்தரும் நகரில் இல்லை. பீமசேனர் மகதத்திற்கு சென்றிருக்கக் கூடும். அங்கே ஜரர்களில் நமக்கு ஆதரவாக சிலர் உள்ளனர் என்கிறார்கள். பார்த்தர் காம்பில்யம் சென்றிருக்கிறார்" தேவிகை "அரசி இருக்கிறார்களா?" என்றாள். உடனே அவள் வந்த நோக்கத்தை உணர்ந்துகொண்டு "ஆம் ஆரசி, இருக்கிறார்கள்" என்றார் சுரேசர். "தாங்கள் நீராடி சற்று ஓய்வெடுத்துவிட்டு வாருங்கள். நான் சந்திப்புக்கு ஒழுங்குசெய்கிறேன்." திரும்பி அருகே நின்றிருந்த ஏவலனிடம் "அரசியருக்கான மாளிகைக்கு அழைத்துச் செல்க!

நீண்டபயணம். உடல்நீவும் விறலியரை வரச்சொல்” என்றதும் தேவிகை “தேவையில்லை” என்றாள். சுரேசர் தலைவணங்கினார்.

ஏவலனைத் தொடர்ந்து மகளிர்மாளிகை நோக்கி செல்லும்போது பூர்ணை “அரசியிடம் பேசவேண்டியதென்ன என்பதை முன்னரே சொல்வகுத்துக்கொள்வது நன்று” என்றாள். “ஆம்” என்றாள் தேவிகை. “அரசி, அவர் உங்கள் இணைமனைவி என்பதை மறக்கவேண்டியதில்லை. எந்நிலையிலும் அதை பெண்ணுள்ளம் மறப்பதில்லை. அத்துடன் அவர் இந்திரப்பிரஸ்தத்தில் மும்முடிசூடி அமர்ந்தவர். அனலில் இருந்து பிறந்தவர் என்று சூதர்களால் பாடப்படுபவர். அனைத்தும் நம் உள்ளத்தில் இருக்கவேண்டும்.”

தேவிகை “நான் அன்னையென அவளிடம் பேசப்போகிறேன்” என்றாள். “ஆம், ஆனால் மானுடருக்கு அப்படி நிலையான அடையாளமேதும் இல்லை, அரசி” என்றாள் சுரபி. “அவர்கள் அந்தந்த தருணங்களில் அதற்குரியதை சூடிக்கொள்கிறார்கள். அதை முடிவுசெய்வது அச்சூழலில் எதிர்நிற்போர், அங்கு ஒலிக்கும் சொற்கள், அதற்கு முந்தைய கணத்தில் அவர்களிருந்த நிலை, அவர்கள் எதிர்பார்த்திருக்கும் வருசூழல். அரசி, மானுடர் எண்ணத்தாலோ உணர்வாலோ முடிவுகளை எடுப்பதில்லை. பெரும்பாலும் தன்முனைப்பாலேயே முடிவுகளை எடுக்கிறார்கள்.”

தேவிகை “இப்படி ஆராய்ந்துசெல்வதனால் என்ன பயன்? நான் பேசப்போவது மிகமிக எளிய செய்தி. ஓர் அன்னையென எண்ணிநோக்கும்படி கோருகிறேன்” என்றாள். பூர்ணை “ஆம், அரசி. ஆனால் அதை பாஞ்சாலத்தரசியின் ஆணவம் உரசாதபடி உரிய சொற்களில் சொல்லவேண்டும். அறிவுறுத்தல்களையும்

வழிகாட்டல்களையும் அவர்கள் விரும்புவதில்லை” என்றாள். தேவிகை தளர்ந்து “நான் என்னடி சொல்வது?” என்றாள். “எளிய முகமன்களில் தொடங்குங்கள். சிபிநாட்டிலிருந்து வந்தது உங்கள் மைந்தன் யௌதேயனையும் பிறமைந்தரையும் பார்ப்பதற்காக என்று சொல்லுங்கள். போர் குறித்து இயல்பாகவே பேச்சு வரும். அப்போது உங்கள் மைந்தரைப்பற்றி சொல்லுங்கள். அவரைப்பற்றிய உங்கள் அச்சங்களைப் பற்றி சொல்லி அழத்தொடங்குங்கள். எண்ணிக்கொள்க, உங்கள் மைந்தரைப்பற்றி மட்டும் பேசுங்கள். பேச்சினூடாக அனைத்து மைந்தருக்கும் உயிரிடர் இருப்பதைப்பற்றி சொல்லுங்கள். அவர்களை எச்சரிக்கவேண்டாம். அவர் தன் மைந்தரைப்பற்றி எண்ணவேண்டுமென்று கோரவும் வேண்டாம்.”

தேவிகை “ஆனால் அவர் மிகவும் கனிந்துவிட்டார் என்றார்கள்…” என்றாள். பூர்ணை “கனியலாம். மிளகும் கனியே” என்றாள். சுரபி “அரசி, அத்தனை எண்ணிச்சூழ வேண்டியதில்லை. நீங்கள் சந்திக்கச்சென்றதுமே அரசி அனைத்தையும் உணர்ந்துகொள்வார்கள். அவர்களின் நுண்ணுள்ளம் அத்தகையது. நேரடியாகவே உங்கள் துயர்களையும் அச்சங்களையும் சொல்லி அடைக்கலம் கோருங்கள். போரைத் தவிர்க்க ஆவனசெய்யவேண்டுமென்று சொல்லுங்கள். ஆம் என ஒரு சொல்லை அவர் சொன்னார் என்றால் நாம் வென்றோம்” என்றாள்.

தேவிகை பெருமூச்சுடன் “என்னவென்றே தெரியவில்லை. என் உள்ளம் அச்சத்தில் தவித்துக்கொண்டே இருக்கிறது” என்றபின் தனக்குள் என “அவளிடம் சென்று கையேந்தும் நிலை அமைந்துவிட்டதே” என்றாள். பூர்ணை “அரசி, இவ்வெண்ணம்

உங்கள் உள்ளத்தில் துளியேனும் இருந்தால்கூட அரசி அதை அறிந்துகொள்வார்கள். நான் அஞ்சியது அதையே” என்றாள். தேவிகை “நான் அவளுக்கு எவ்வகையில் குறைந்தவள்? நானும் அரசியே” என்றாள். “ஆம் அரசி, ஆனால் நீங்கள் வஞ்சினம் உரைக்கவில்லை” என்றாள் பூர்ணை.

சுரபி “ஏன் நாம் பொய்மொழி பேசிக்கொள்ளவேண்டும்? அரசி, நீங்கள் அரசி. அவர்கள் அரசியலாளர். அவர்களே இன்று பாரதவர்ஷத்தின் இரு மையங்களில் ஒன்று. இப்போரைத் தவிர்க்க இருவராலேயே இயலும். இளைய யாதவர் எண்ணவேண்டும். இந்திரப்பிரஸ்தத்தின் அரசி உளமிளகவேண்டும். நாம் அதன்பொருட்டே வந்துள்ளோம். போரைத்தவிர்க்க விழைபவர்கள் அனைவரும் அவர்களின் காலடிகளில் பணிந்தேயாகவேண்டும்” என்றாள். தேவிகை சினத்துடன் திரும்பி அவளை நோக்கியபோது காதில் குழைகள் ஆட நிழல் கன்னத்திலும் கழுத்திலுமாக ஊசலாடியது. அவள் விழிகளை இமைக்காமல் நோக்கி நின்றாள் சுரபி. விழிவிலக்கி தேவிகை பெருமூச்சுவிட்டாள்.

திரௌபதியின் சேடியான சல◌ைப “உள்ளே செல்லலாம், அரசி” என்றாள். தேவிகை உள்ளே சென்றபோது திரௌபதி உயரமற்ற பீடத்தில் அமர்ந்து மடிமேல் பலகையை வைத்து எழுதிக்கொண்டிருந்தாள். எழுதப்பட்ட ஓலைகள் அருகே ஒரு மரப்பேழையில் இருந்தன. புதிய ஓலைநறுக்குகள் பிறிதொன்றில் காத்திருந்தன. விழிதூக்கி “வருக!” என்றாள். தேவிகை அவளை நோக்கியபடி அசையாமல் நின்றாள். அவளிலெழுந்த முதல் எண்ணம் திரௌபதி மேலும் பலமடங்கு

அழகுகொண்டிருக்கிறாள் என்பதுதான். முதுமையின் சாயல்களாலேயே அழகுமிகுவதும் இயல்வதுதான் போலும்.

காதோரமயிரில் ஓரிரு நரையிழைகள் இருந்தன. முகவாய்க்கோடுகள் அழுத்தம்கொண்டிருந்தன. கண்களுக்குக் கீழே மெல்லியநிழல். கழுத்தின் தசை சற்று தளர்ந்திருந்தது. தோள்களில் மென்மணல் என மின்னிய வரிகள்.

திரௌபதி எழுந்து வந்து அவள் முன் நின்றாள். அவள் தோள்களுக்குக் கீழே தேவிகையின் தலை இருந்தது. அண்ணாந்து நோக்கியபோது அவள் முகம் உயரத்திலென தெரிந்தது. அவள் ஆடை சீரமைப்பதுபோல சற்று விலகி தூணில் முட்டி அதை பற்றிக்கொண்டு சாய்ந்து நின்றாள். திரௌபதி புன்னகையுடன் “வருக, அரசி. பார்த்து நெடுநாளாகிறது” என்றாள். “ஆம், இந்திரப்பிரஸ்தத்திலிருந்து அஸ்தினபுரிக்குக் கிளம்பும்போது பார்த்தது” என்றாள்.

அச்சொல் அவள் விழிகளுக்குள் மெல்லிய மாறுதலொன்றை உருவாக்குவதைக் கண்டதும் அவளுக்குள் கூர்மை ஒன்று விழித்தெழுந்தது. “அஸ்தினபுரியில் நிகழ்ந்தவற்றை சூதர்சொல் வழியாகவே அறிந்தேன். இன்றும் என்னை பதறச்செய்கிறது அது” என்றாள். ஆனால் அவள் எண்ணியதுபோல அச்சொற்கள் திரௌபதியை மேலும் துன்புறுத்தவில்லை. அவள் புன்னகை ஒன்றை அணிந்துகொண்டு அதை தவிர்த்தாள். “ஆம், அதெல்லாம் ஊழ். இந்திரப்பிரஸ்தத்தில்தான் இருந்தீர்களா?” என்றாள். தேவிகை “இல்லை, அரசர்கள் நீங்கியதுமே நான் சிபிநாட்டுக்கு சென்றுவிட்டேன்.”

அதைச்சொன்னதுமே அவள் வென்றுவிட்டாளென்பதை தேவிகை உணர்ந்தாள். “இளவரசர்கள் இந்திரப்பிரஸ்தத்தில்

இருந்தது நன்று. துரியோதனர் தந்தையென நின்று அவர்களை வளர்த்தார் என அறிந்தேன்.” தேவிகை சொல்லிழந்து வெறுமனே நோக்கிக்கொண்டிருந்தாள். பின்னர் “ஆம், சிபிநாட்டில் இங்கிருக்கும் ஆசிரியர்கள் இல்லை. மேலும் அவன் தன் உடன்பிறந்தாருடன் இருப்பதே நன்று என்றும் தோன்றியது” என்றாள். “அன்னையர் மைந்தருடன் இல்லாமலிருப்பதே நன்று என்றும் ஆசிரியர் சொல்வதுண்டு” என்றாள் திரௌபதி.

முழுமையாக தோற்கடிக்கப்பட்டவளாக தேவிகை நின்றாள். இவளை என்னால் வெல்லவே முடியாதென நூறுமுறை உணர்ந்தபின்னரும் ஏன் இதை செய்கிறேன்? என்னிலிருந்து ஆட்டுவிப்பதை எப்படி கடப்பேன்? தன்னிரக்கத்தால் அவள் உள்ளம் துயர்கொண்டது. கண்களில் நீர் திரள தொண்டை ஏறியிறங்கியது. “என் மகன்…” என்றாள். அச்சொல்லால் அத்துயரை மடைமாற்றி மைந்தனுக்கானதாக ஆக்கிக் கொண்டாள். “போர் அணுகுகிறது, அரசி… போரில் என் மைந்தன் படுவான் என நிமித்திகர் சொன்னார்கள்.”

“யார்?” என்று திரௌபதி கேட்டாள். அவள் விழிகள் சுருங்கியிருந்தன. “சிபிநாட்டில் பீதகிரி என்னும் மலை உள்ளது. அங்கிருக்கும் நாகசூதர்கள் வருபொருள் உரைப்பதில் வல்லவர்கள். அவர்களில் ஒருவர் நெய்க்கலம் நோக்கி சொன்னார்.” திரௌபதி சில கணங்களுக்குப்பின் “அது வருவது என்றால் நாம் என்ன செய்யமுடியும்?” என்றாள். “நாம் கைகட்டி நிற்கமுடியுமா? ஊழ் என்றால் அதன் முன் சென்று பாய்ந்து உயிர்விடவேண்டாமா? சாவித்ரி கொழுநனுக்காக யமனை வென்றதை நானும் கேட்டிருக்கிறேன்” என்றாள். திரௌபதி

“ஆம், ஆனால் போரில் இறக்கும் அத்தனை மைந்தரின் அன்னையரும் உணர்வது இது” என்றாள்.

தேவிகை சீற்றத்துடன் “எவர் உணர்கிறார்கள் என்று நான் அறியேன். நான் உணர்வது இது. என் மைந்தன் களம்படலாகாது. அவனை நான் காத்தாகவேண்டும்” என்றாள். திரௌபதி “போரிலிருந்து உங்கள் மைந்தருக்கு மட்டும் விடுதல் கோருகிறீர்களா?” என்றாள். தேவிகை கடும் சினத்துடன் பற்களை இறுகக் கடித்து “விளையாடுகிறீர்களா? எவருடன் விளையாடுகிறீர்கள் என்று தெரியுமா? என்னைப்போன்றவர்களை பூனை எலியை என வைத்தாடும் வல்லமை உங்கள் உகிர்களுக்கு உண்டு. ஆனால் ஊழ் உங்களை வைத்து விளையாடும்” என்று கூவினாள்.

அவள் கொண்ட கட்டுகள் அனைத்தும் சிதறின. “அறிக, நான் கோருவது என் மைந்தனுக்காக மட்டும் அல்ல. உங்கள் மைந்தர் ஐவருக்காகவும்தான்” என்று இருகைகளையும் இறுகப்பற்றி தொண்டையில் நரம்புகள் புடைக்க விழிகள் ஈரமாக வெறித்திருக்க அவள் கூச்சலிட்டாள். “நான் கண்டேன். இறந்துகிடந்தவர்கள் உபபாண்டவர்கள் அனைவரும்தான்... ஒன்பதின்மரும் ஒருவர்கூட எஞ்சாமல் அழிவதைக் கண்டேன். நீங்கள் அன்னைப்பெரும்புலி. பெற்ற குருளைகளை உண்டு பசியாறப்போகும் குருதிவிலங்கு, அதில் என் மைந்தனும் சேரக்கூடாதென்று சொல்லவே வந்தேன்...”

“நீங்கள் அனல்மகளாக இருக்கலாம். பெருநகர் அமைத்து மும்முடிசூடி அமர்ந்த சத்ராஜித்தாக இருக்கலாம். ஆனால் ஒன்றுண்டு, நீங்களும் மானுடப் பெண்ணே. மிஞ்சிவிளையாட எவரையும் ஊழ் ஒப்புவதில்லை. உங்களை கூர்ந்து நோக்கிக்கொண்டிருக்கிறது அது. மாமலைகளைப்போல உங்கள்

நெஞ்சின்மேல் பெருந்துயரை தூக்கி வைக்க அது காத்திருக்கிறது. அதைச் சொல்லவே வந்தேன்” என்றாள் தேவிகை. “இந்தப் போர் எவர் பொருட்டு? உங்கள் வஞ்சத்தின் பொருட்டு. உங்கள் ஒரு சொல்லுக்காகவே இந்திரப்பிரஸ்தத்தின் அரசர்கள் படைக்கலமெடுக்கிறார்கள். உங்களுக்காகவே இன்று பாரதவர்ஷம் இரண்டெனப்பிரிந்து போர்முகம் கொண்டுள்ளது.”

“உங்கள் வஞ்சம் வெல்லக்கூடும். ஆனால் நீங்கள் வெல்லமாட்டீர்கள். வஞ்சத்தின் பயனின்மையை உலகுக்கு உணர்த்துவதாக உங்கள் விழிநீர் என்றும் இம்மண்ணில் இருக்கும். இதைச்சொல்பவள் அரசியல்ல, பெண்ணல்ல, வெறும் அன்னை” அவள் சொல்லிழந்து தணிந்தாள். “எனக்கு சரியாக சொல்லத்தெரியவில்லை. வெற்றுணர்ச்சிகளால் ஆளப்படும் வெறும்பெண் நான். நான் எதைச்சொன்னேன் என்றே எனக்குத்தெரியவில்லை” என்று விம்மலுடன் சொல்லி மேலாடையை இழுத்து முகத்தின்மேல் போட்டுக்கொண்டாள்.

“நம் மைந்தருக்காகவே நான் கோருகிறேன். அவர்கள் இளையோர், இன்னும் இவ்வுலகில் எதையும் அறியாதவர். வாழ்ந்தோரின் வஞ்சத்தின்பொருட்டு வாழவேண்டியவர்களை ஒறுப்பதுபோல இழிவு பிறிதில்லை” என்றாள். மீண்டும் அவளிடம் சொற்கள் எழுந்தன. “மைந்தரை இழந்து எதை அடைந்து என்ன? வெல்வது நம் வீரமா அன்றி ஆணவமா? நாம் கொள்வது நிலமா அன்றி பெரும்பழியா?” அவள் பெருமூச்சுகள் ஒன்றன்பின் ஒன்றாக எழ சொல்லொழுக்கு முறிந்து தவித்தாள். ஆடையைப் பற்றி முறுக்கியபடி “நான் கெஞ்சி கால்பற்றி கண்ணீர்விடவே வந்தேன். நான் அரசியல்ல,

இணைமனைவியும் அல்ல. அடைக்கலம் கோரி வந்த எளியவள் என்றே கொள்க!”

திரௌபதி ஒன்றும் சொல்லவில்லை. அவள் மூச்சொலிகூட கேட்கவில்லை. அவள் முற்றிலும் அங்கில்லை என புலன்கள் சொல்ல தேவிகை அவளை நிமிர்ந்து நோக்கினாள். பெரிய இமைகள் சரிய அவள் தலைகுனிந்திருந்தாள். நெற்றிமயிர்க்கற்றை முகத்தில் சரிந்திருந்தது. அந்த அமைதி தேவிகையையும் அமைதிப்படுத்தியது, “எண்ணிநோக்குக, அரசி! நான் உங்களுக்கு எதையும் சொல்லத்தகுதியற்றவள். நூலாய்ந்ததில்லை, அவையமர்ந்து அரசு சூழ்ந்ததுமில்லை. அதெல்லாம் இல்லாதவளென்பதனால் நான் அறிந்த சிலவற்றை நீங்கள் அறியாமலுமிருக்கக் கூடுமல்லவா?” என்றாள்.

சற்று அருகே சென்று “இந்தப்போர் நிகழ்வதே அரசுரிமைக்காக. இது தொடங்கி இருதலைமுறைக்காலமாகிறது. அடுத்த தலைமுறையிலும் இது நீடிக்கக்கூடாது. தன் கொடிவழியினர் பிறரின்றி நாடாளவேண்டும் என்றே அரசர்கள் இருதரப்பிலும் எண்ணுவார்கள். ஆகவே இப்போரில் முதல் அம்புகள் மைந்தர் நெஞ்சுக்காகவே குறிக்கப்படும். குறிபிழைக்காத பெருவில்லவர்களே இருதரப்பிலும் உள்ளனர். போர்தொடங்கியதுமே மைந்தர்பலிகள் நிகழத்தொடங்கும். ஐயமே வேண்டியதில்லை” என்றாள்.

திரௌபதியின் கைகளை பற்றிக்கொள்ள நீண்ட தன் கைகளை கட்டுப்படுத்திக்கொண்டு “அவர்கள் களம்படுவதே ஊழ் என்று இருந்தால்கூட நாம் ஒன்றும் செய்யவில்லை என்று இருக்கலாகாது. அரசி, அது நம்மால் நிகழ்ந்தது என்று ஒருபோதும் அமையக்கூடாது. இத்தருணத்தில் நாம்

செய்யவேண்டியது அதை மட்டுமே” என்றாள். திரௌபதி மெல்ல கலைந்து திரும்பிச்சென்று தன் பீடத்தில் அமர்ந்தாள். பெருமூச்சுடன் “ஆம், உண்மை” என்றாள். “நான் இதை எண்ணவில்லை என்றல்ல. ஆனால் இவையனைத்தையும் ஏனோ ஒதுக்கிவைத்து பிறிதொரு உலகில் வாழ்ந்தேன்” என்றாள்.

சுவடிகளை எடுத்துக்காட்டி “முதற்புலவர் எழுதிய சீதையின் கதை. அதையே படித்துக்கொண்டிருந்தேன். உளம் அதில் அமையவில்லை என்று கண்டபோது அதை சுவடியில் திருப்பி எழுதத் தொடங்கினேன். மெல்ல மெல்ல உள்ளிழுத்துக்கொண்டது. இத்தனைநாட்களாக பிறிதில்லாமல் அவள் கதைக்குள்தான் இருக்கிறேன்” என்றாள். “என்னை இழுத்து தரையிலிட்டுவிட்டீர்கள். நான் செய்வதற்குரியவை பல உள்ளன என்று உணர்கிறேன். ஆனால்…” அவள் முகத்தில் தெரிந்த வலி தேவிகையை துயர்கொள்ளச்செய்தது. “அனைத்தும் மிக அப்பால் சென்றுவிட்டன என்று தோன்றுகிறது, தேவிகை” என்றாள்.

“இல்லை, அப்படி தோன்றும். ஆனால் இவர்கள் ஒவ்வொருவரும் அஞ்சிக்கொண்டுதான் இருப்பார்கள். இவர்களை நாம் செலுத்த முடியும். முதலில் நம் கொழுநர் அவைநின்று உரைத்த வஞ்சம்தான் அவர்களை பின்னகர முடியாமலாக்குகிறது. அந்த வஞ்சத்திலிருந்து அவர்களை நாம் விடுவிக்க முடியும். முதலில் அவ்வஞ்சத்தை நாம் கைவிட்டால்போதும். அது பொருளிழந்துவிடும். அவர்கள் அதைப்பற்றி நின்று எதையும் செய்யவியலாது. அரசி, இன்று அவர்களை சவுக்கென பின்நின்று சொடுக்கி விசைகூட்டுவது உங்கள் வஞ்சினமே” என்றாள் தேவிகை.

“அது நிகழ்ந்தால் அவர்களுக்குமுன் பல வழிகள் திறந்து கிடக்கின்றன. இன்னமும் அங்கே பிதாமகரும் முதலாசிரியரும் முதுதந்தையும் இருக்கிறார்கள் என்பதே நல்லூழ். மைந்தர் அவர்கள் முன் தோள்தழுவிக்கொண்டு வஞ்சம் மறந்தார்கள் என்றால் எவரும் எவரையும் கோழையென்றும் தன்னலத்தான் என்றும் சொல்லப்போவதில்லை” என தொடர்ந்தாள். “இருகுலத்து மைந்தரும் அதேபோல இப்பால் நின்று அவர்களை இணைக்கமுடியும்.”

“.ஆயிரம்தான் போர்வஞ்சம் கொண்டிருந்தாலும் ஒவ்வொரு அரசரும் உள்ளூர அஞ்சிக்கொண்டே இருப்பார்கள் என்பதில் ஐயமில்லை. ஒருகுடிப்பிறந்தார் முடிப்பூசலிட்டு போர்முகம் நிற்பது இதுவே பாரதவர்ஷத்தில் முதல்முறை. இந்த முன்நிகழ்வு தொடர்ந்தால் அவர்கள் ஒவ்வொரு குடிக்கும் அது பேரிடராக நாளை வந்துவிழும் என்று அவர்களும் உள்ளறிந்திருப்பார்கள். போர் தவிர்க்கப்படுமென்றால் அது முன்னிகழ்வாகும். அதை எண்ணி அரசர்கள் அனைவரும் ஆறுதலே கொள்வார்கள்” என்றாள் தேவிகை.

திரௌபதி அவள் சொற்களை சரிந்த விழிகளும் சற்றே விலகிய உலர்ந்த உதடுகளுமாக கேட்டுக்கொண்டிருந்தாள். அவள் உடலின் கருமைக்குள் அனல்கொண்டதுபோன்றதோர் செம்மை ஓடுவதை தேவிகை கண்டிருந்தாள். அவளை அழகியாக்குவது அது. அனல் மேலும் மேலும் வெம்மைகொண்டு வருவதுபோலத் தோன்றியது. “நாம் என்ன செய்யவேண்டுமென்று தௌம்யரை அழைத்து கேட்போம். இப்போது நாம் செய்யவேண்டியது நீங்கள் வஞ்சமின்றி இருக்கிறீர்கள் என அவர்கள் அறியவேண்டும். அதன்பின் உலகறியவேண்டும்” என்று தேவிகை தொடர்ந்தாள்.

“அதற்கு ஒரே வழி நீங்கள் எந்த முறைமையும் இல்லாமல் அஸ்தினபுரிக்குள் நுழைவதுதான். எளியபெண்ணாகச் சென்று அஸ்தினபுரியின் அரசியரை தழுவிக்கொள்ளுங்கள். அங்கிருக்கும் மைந்தர் ஆயிரத்தவரை நெஞ்சோடணையுங்கள். அவர்களுடன் விளையாடுங்கள். பிதாமகரையும் முதுதந்தையையும் கால்பணிந்து வணங்குங்கள். அதன்பின் துரியோதனரின் அவையில் நின்று நீங்கள் அவர்மேல் கொண்ட வஞ்சத்தை முற்றாக மறந்துவிட்டதாக அறிவியுங்கள்.”

“முழுமையாகத் தோற்று, அடிபணிந்து, ஒன்றும் எஞ்சாதவளாக அந்நகர்விட்டு விலகி வாருங்கள். நீங்கள் அனைத்தையும் வென்றவர் ஆவீர்கள். ஆணை, அதன்பின் இப்பாரதவர்ஷமே உங்களை பேரன்னை என வணங்கும். அரசரவைகள் உங்களை என்ன சொன்னாலென்ன? அன்னையர் நாவில் அருந்ததிபோல அனுசூயைபோல சாவித்ரிபோல மைத்ரேயிபோல அழியாது வாழ்வீர்கள்” என்றாள் தேவிகை.

“அரசமுடியை கண்டுவிட்டீர்கள். கானகவாழ்விலும் உழன்றுவிட்டீர்கள். இனி உங்களுக்கு எஞ்சுவது என்ன? நம் மைந்தரை நாம் நம்புவோம். அபிமன்யூ மட்டும் போதும். கிழக்கோ தெற்கோ செல்வோம். வென்றெடுக்க மண்ணும் குலங்களும் அங்குள்ளன. நம் மைந்தர் அங்கு அரசு அமைத்து முடிசூடட்டும். அவர்கள் பிறப்பால் இளவரசர்களல்ல அரசி, தோள்வல்லமையால் இளவரசர்கள். ஷத்ரியர்களுக்கு தந்தைவழி நிலம் உகந்தது. குலவழிநிலம் மேலும் உகந்தது. வென்றடக்கிய நிலமோ விண்ணகத்திலும் புகழ்சேர்ப்பது என்கின்றன நூல்கள்.”

திரௌபதி அருகிருந்த நூலை இழுக்க வெளியே மணியோசை எழுந்தது. கதவைத்திறந்து உள்ளே வந்த சல॰ைபையிடம்

“தௌம்யரை அழைத்துவருக!” என்றாள். பின்னர் “அமர்க, அரசி!” என்றாள். தேவிகை ஆடையை ஒதுக்கியபடி அமர்ந்துகொண்டாள். மேலும் சொல்வதற்கேதுமில்லை என்று தோன்றியது. பெருமூச்சுடன் அங்கிருந்த ஓலையை எடுத்துப்பார்த்தாள். அது தொன்மையான ஓலை, பழுப்பேறியிருந்தது. அதிலிருந்த எழுத்துக்களை அவளால் படிக்கமுடியவில்லை. “மிகத்தொன்மையானது. அன்றிருந்த எழுத்துவடிவம்” என்றாள் திரௌபதி. தேவிகை ஓலையை கீழே வைத்தாள்.

திரௌபதி ஓலைகளை ஒவ்வொன்றாக நோக்கி அடுக்கி வைத்தாள். பின்னர் பட்டுநூல்கொண்டு கட்டினாள். அவ்வாறு வெளியே ஒன்றை திருத்துவதென்பது அகம்திருத்துவதே என அறிந்திருந்தாள். அவள் தன் அணிப்பேழையை அவ்வாறு திருத்துவதுண்டு. அவள் அதையே நோக்கிக்கொண்டிருந்தாள். தொன்மையான ஓலைகள். தொன்மையான சொற்கள். கல்வி என்பது தொன்மையானவற்றை அறிவது மட்டுமே. வருவனவற்றுக்கு ஏதேனும் ஒழுங்குள்ளதா என்று அறிய வந்தவற்றை அறிவது. வருவனகுறித்த விழைவேதுமின்றி வந்தவற்றை அறிய எவருக்கேனும் இயலுமா என்ன? அவள் கண்டவர்களிலேயே நூலறிந்தவர் யுதிஷ்டிரர். அவருக்கு ஒன்றுமே தெரியாது என்றுதான் அவள் உள்ளம் மீண்டும் மீண்டும் சொல்லிக்கொண்டிருந்தது. சொற்களில் விழைவுகளை கண்டடையும் பயிற்சியன்றி அவர் கற்றது ஏதுமில்லை.

அவள் அசைந்தமர்ந்தபோது ஏறிட்டு நோக்கிவிட்டு திரௌபதி மீண்டும் சுவடிகளை அடுக்கிவைத்தாள். சலஃபை வந்து தௌம்யரின் வரவை அறிவித்தபோது அவள் மிக விலகிவந்துவிட்டிருந்தாள், அவர் ஏன் வருகிறார் என்பதுகூட

உள்ளத்தில் உறைக்காத அளவுக்கு. திரௌபதி தலையசைக்க சலஃபை சென்று தௌம்யரை உள்ளே அனுப்பினாள். அவர் வந்து வணங்கி முகமன் உரைத்து அமர்ந்தார். அவள் சுவடிக்கட்டை அப்பால் வைத்துவிட்டு நேரடியாக “தௌம்யரே, நான் அஸ்தினபுரிக்கு செல்ல விழைகிறேன்” என்றாள்.

அவர் வாய்திறந்து சொல்லெழாது அமைந்தார். “பானுமதியையும் அசலையையும் பிற பெண்டிரையும் சந்திக்கவேண்டும். முதன்மையாக பேரரசி காந்தாரியை சந்திக்கவேண்டும்” என்றாள். தௌம்யர் “ஆனால்…” என்றார். “நான் என் வஞ்சத்தை கைவிட்டுவிட்டேன் என்று அவர்கள் அறிவதற்காகத்தான் செல்கிறேன். நம் அரசர்களும் குடிகளும் அறியவேண்டும். பாரதவர்ஷமே அறியவேண்டும். என் மைந்தருக்கு உடன்குருதியரான மைந்தர் ஆயிரவர் அங்கிருக்கிறார்கள். அவர்களைக் கண்டு தழுவி மீளவிரும்புகிறேன்.”

தௌம்யர் புரிந்துகொண்டார். ஆனால் அவர் உள்ளம் அதை முழுதும் வாங்கிக்கொள்ளவில்லை. “அரசர்களின் எண்ணம்…” என தொடர்ந்தார். திரௌபதி மறித்து “இது என் எண்ணம்” என்றாள். “ஆம், அது நன்று” என்றார் தௌம்யர். “நான் செல்வதற்குரிய தருணம் உடனே ஏதேனுமுள்ளதா? அதை ஆராய்ந்துசொல்லவே அழைத்தேன்” என்றார். “தருணம் என்றால்…” என குழம்பிய தௌம்யர் முகம் மலர்ந்து “ஆம், உள்ளது. உடனடியாகவே உள்ளது. மாத்ருபிரஸ்தானநாள்… பேரரசி சத்யவதியும் அரசியர் அம்பிகையும் அம்பாலிகையும் கானேகியது அன்றுதான். இது அறுபதாம் ஆண்டு. அதை அவர்கள் அங்கே அரசமுறைப்படி கொண்டாடுகிறார்கள். முறைப்படி நமக்கும் அழைப்பு வந்துள்ளது” என்றார்.

தேவிகை “மிகப்பொருத்தமான நாள்” என்றாள். “ஆம், அரசி. அன்னையருக்குரிய நாள் இது. மூதன்னையர் இந்நாளில் தர்ப்பைப்புல் ஏந்தி நெறியுறுதி ஏற்று குடிகளிடமிருந்து முற்றிலும் விலகி புறநோன்பு வாழ்க்கைக்கு செல்வார்கள். கானேகலுக்கு நிகரானது அது. அவர்கள் கங்கைக்கரையில் புற்குடில் அமைத்து அங்கே சென்று வாழ்வார்கள். அவர்களை அவர்களின் குடியினரும் குருதியினரும் சென்று சந்திக்கக்கூடாது. குடியின் எந்த நிகழ்வுகளிலும் அவர்கள் பங்கேற்பதுமில்லை. அவர்கள் மண்நீங்கினால்கூட குருதிவழிவந்தவர்கள் அனற்கடனோ நீர்க்கடனோ செய்யக்கூடாது. இதே நோன்புகொண்ட பிறர்தான் அவற்றை செய்யவேண்டும். ஆண்டுதோறும் அளிக்கப்படும் அன்னமும் நீரும்கூட அவர்களுக்கு வேண்டியதில்லை என்பது மரபு” என்றார் தௌம்யர்.

“அப்பூசனைக்கு நாம் செல்வோம்” என்றாள் திரௌபதி. தௌம்யர் “நீங்கள் செல்வதாக முறைப்படி அறிவித்துவிடுகிறேன்” என்றாள். “தேவையில்லை. நாளை புலரியில் நானும் இவளும் இங்கிருந்தே கிளம்புகிறோம். அச்சடங்குக்குரிய முறைமைகள் ஏதேனுமுண்டா? முன்பு சிலமுறை சென்றது நினைவிலுள்ளது” என்றாள். “மூவன்னையர் ஆலயம் கங்கையின் தெற்குக்காட்டில் உள்ளது. மிகச்சிறிய ஆலயம். மூன்று கிடைக்கற்கள் மட்டும்தான் அங்கே நிறுவப்பட்டுள்ளன. புறநோன்பு கொள்ளும் அன்னையர் ஈன்று மறைந்த குழந்தைகளின் உருவை பச்சரிசியில் அப்பம்போல் செய்து இறைவடிவாக அமைந்திருக்கும் மூன்று அன்னையருக்கும் படைப்பார்கள். பிறர் பச்சரிசியில் செய்த முகங்களை அப்பங்களாக்கி படைத்து அனைவருக்கும்

அளிப்பர். வழக்கமான நீராட்டும் பூசனைகளும் மட்டுமே” என்றார் தௌம்யர்.

திரௌபதி “நன்று” என்றாள். தௌம்யர் “பூசனைக்கு ஏழுநாட்களுக்கு முன்பிருந்தே ஆண்களை முற்றிலும் தவிர்த்துவிடவேண்டும் என்பதே நெறி. பூசனையில் பூசகர் உட்பட அனைவரும் பெண்களே. தெற்குக் காட்டுக்குள்ளேயே அன்று ஆண்கள் செல்ல ஒப்புதலில்லை” என்றார். திரௌபதி “அதுவும் நன்று” என்றபின் “நான் கிளம்புவதற்குரிய ஒருக்கங்களைச் செய்ய சுரேசருக்கு ஆணையிடுக!” என்றாள். தௌம்யர் தலைவணங்கி “அவ்வண்ணமே” என எழுந்துகொண்டார்.

அவர் சென்றதும் தேவிகை “நான் இத்தனை எளிதாக அனைத்தும் முடியுமென எண்ணவே இல்லை, அரசி” என்றாள் “நெஞ்சிலிருந்து பேரெடை ஒன்று இறங்கியதாகவே உணர்கிறேன்.” திரௌபதி “பார்ப்போம், என் நெஞ்சு எடை இழக்கவேயில்லை” என்றாள். “வஞ்சத்தை மறக்க முடிவெடுப்பது முதல் அடிவைப்பு. வஞ்சத்தை மறப்பது அடுத்தது. அங்குசென்று அம்மைந்தரையும் அன்னையரையும் கண்டு தழுவிக்கொண்டால் அனைத்திலிருந்தும் விடுபட்டுவிடுவீர்கள். நீங்கள் மட்டுமல்ல, அவர்களும் நம்மவரும் அனைவருமே விடுதலைகொள்வோம்” என்றாள் தேவிகை.

திரௌபதியின் முகம் குனிந்து சொட்டப்போகும் துளி எனத் திரண்டு இருப்பதைக் கண்டு அவள் மேலும் தொடர்ந்தாள் “ஒருவேளை இது இங்ஙனம் நிகழவேண்டுமென்பதற்காகவே இப்படி கூர்கொண்டிருக்கக்கூடும். இது அன்னையர் சொல்லால் நிறைவுற்றாகவேண்டிய ஆடல்போலும்.” திரௌபதி வெறுமனே

தலையசைத்தாள். “இன்று முழுக்க இதை நெஞ்சில் ஓட்டிக்கொண்டே இருங்கள், அரசி. எண்ண எண்ண இது விரிவதை காண்பீர்கள். ஒவ்வொன்றாக கடந்துசெல்வீர்கள்” என்றாள்.

“மெய்யாகவே நீங்கள் இத்தனை எளிதில் வஞ்சத்திலிருந்து விலகுவீர்கள் என நான் எண்ணவில்லை. ஆனால் இப்போது பிறிதென்ன நிகழக்கூடும் என்ற வியப்பே எழுகிறது. நீங்கள் எழுந்த உயரத்திலிருந்து இவர்களை எல்லாம் குனிந்து நோக்கி பொறுத்துக்கொள்வதுதான் இயல்பானது. கானேகி நீங்கள் கனிந்துவிட்டீர்கள் என்று சொன்னார்கள். அதற்கு முன் மும்முடிசூடியதுமே அக்கனிதல் தொடங்கிவிட்டிருக்கும் என்று நான் இப்போது எண்ணுகிறேன். எந்தப்பெண்ணும் இவ்வுலகின் வெற்றிகள்மேல் அமர்ந்து நிறைவுகொள்ள மாட்டாள். எய்தியதுமே வெறுமையை கண்டடைவாள். அதிலிருந்தே நீங்கள் தொடங்கியிருக்கிறீர்கள்.”

“மெய்தான்” என்றாள். திரௌபதி. “நான் கிளம்புகிறேன். இன்றிரவு நான் நன்கு துயில்வேன் என எண்ணுகிறேன்” என்றாள் தேவிகை. அவள் எழுந்தபோது திரௌபதியும் எழுந்து அவள் கைகளை பற்றிக்கொண்டாள். “நன்று சொன்னீர்கள், அரசி. எனக்குத் தேவையாக இருந்த சொல்” என்றாள். “நம் மைந்தருக்காக” என்றபின் பெருமூச்சுடன் தேவிகை விடைபெற்றாள். கதவைத்திறந்து வெளியே சென்றதும் மெல்லிய ஏமாற்றம்தான் தன்னுள் இருக்கிறதென்று உணர்ந்தாள். அதனுடன் கலந்த அதைவிடமெல்லிய எரிச்சல். அது ஏன் என வியந்தபடி நடந்தாள்.

# குருதிச்சாரல் - 6

**பகுதி ஒன்று : பாலைமகள் – 6**

தன் அறைக்குத் திரும்பியதுமே பூர்ணையிடம் நடந்ததை சொல்லிவிட்டு தேவிகை மஞ்சத்தில் படுத்தாள். துயில் வராதென்றே உள்ளத்தின் அலைக்கழிப்பு காட்டியது. அறைக்குள் நின்றிருந்த பூர்ணையிடம் "நானும் உடன்செல்கிறேன். நெடுநாட்களுக்குப்பின் அஸ்தினபுரிக்குள் நுழைவதுதான் என்னை அலைக்கழிக்கிறதா?" என்றாள். "ஆம், அரசி" என்று பூர்ணை சொன்னாள்.

சுரபி உள்ளே வந்து "பயணத்திற்கான அனைத்தையும் ஒருக்கிவிட்டேன், அரசி" என்றாள். "நீ என்னடி நினைக்கிறாய்?" என்றாள் தேவிகை. "எதைப் பற்றி?" என்றாள் சுரபி. "நான் ஏன் அமைதிகொள்ளாமலிருக்கிறேன்?" அவள் பேசாமல் நின்றாள். "சொல், ஏன்?" என்றாள் தேவிகை. "நீ வாளால் அறுத்துச்சொல்லும் இரக்கமற்ற நெஞ்சுகொண்டவளாயிற்றே." சுரபி "அவர்கள் ஒருதுளி விழிநீர் விட்டிருந்தால் நீங்கள் அமைதிகொண்டிருப்பீர்கள், அரசி" என்றாள். "அவ்வளவுதானா?" என தேவிகை புன்னகைத்துக்கொண்டு கேட்டாள்.

"அவர்களை நீங்கள் வெறுத்தீர்கள். அவ்வெறுப்புக்குரியவர்களாக அவர்கள் இல்லை என்பதன் ஏமாற்றம்" என்றாள் சுரபி. "மேலும் ஏதேனும் சொல்" என்றாள் தேவிகை. சுரபி பேசாமல் நின்றாள். "நீ சொன்ன இரண்டும் அல்ல" என்ற தேவிகை புரண்டுபடுத்து "பிறிதொன்று. நான் அதை தெளிவாகவே இப்போது உணர்கிறேன்" என்றாள். சுரபி புன்னகைத்து "ஆம், அரசி. சில ஆழங்கள் பொதுமைக்கு அப்பாற்பட்டவை" என்றாள். "துயில்க!" என்றபின் பூர்ணை

சுரபியை தோளில் தொட்டு அழைத்துக்கொண்டு வெளியே சென்றாள்.

தேவிகை திரௌபதியை எண்ணியபடி கண்மூடிக்கிடந்தாள். அவள் முகம், அதில் மாறா இளமையை நிறுத்துவது எது? கண்களில் வந்துசெல்லும் சிறுமியருக்குரிய சிரிப்பு. அதற்குமப்பால் ஒன்று. அவள் மீண்டும் மீண்டும் தேடினாள். சிறிய மூக்கும் குமிழுதடும் அளிக்கும் குழந்தைமை அல்ல, அதற்கப்பால். அவள் துயிலில் இருந்து எழுந்தபோது அப்பால் என்னும் சொல் நெஞ்சில் பொருளின்றி எஞ்சியிருந்தது. பூர்ணை அவளை எழுப்பிக்கொண்டிருந்தாள். "அரசி, அரசர் அரண்மனை மீண்டுவிட்டார்" என்றாள். "எப்போது?" என்றாள். "சற்று முன்பு…" தேவிகை "அவர் எப்போது அங்கிருந்து கிளம்பினார்?" என்றாள். "நாம் இங்கு வருவதற்கு முன்னரே கிளம்பியிருக்கவேண்டும்" என்றாள் பூர்ணை.

மெல்ல அனைத்தையும் உளம்வாங்கியபின் "நாங்கள் அவரறியாமல் நாளை கிளம்புவதாக இருந்தோம்" என்றாள் தேவிகை. "அரசி, இனி அது இயலாது. நீங்கள் சென்று அவரிடம் தெரிவிப்பதே முறையாகும்." தேவிகை "அவர் ஏன் இப்போது வந்தார்?" என்றாள். "அரசியின் உளமாற்றமோ நாம் கிளம்புவதோ அவரை சென்றுசேரப் பொழுதில்லை. அவர் அங்கிருந்து வரவே ஒருநாள் ஆகும்" என்றாள் பூர்ணை. "இது வேறேதோ செய்தியால் நிகழ்ந்தது. ஆகவே ஊழ் என்றே கொள்ளவேண்டும்" என்றாள்.

தேவிகை தன் எண்ணங்களில் தொலைவுசென்று மீண்டுவந்து "அவர் அரசி அஸ்தினபுரி செல்வதை விரும்பமாட்டார்" என்றாள். "ஏன்? அவர் போரை விழைவார் என நான் எண்ணவில்லை" என்றாள் பூர்ணை. "அவர் போரை அஞ்சுகிறார்.

அஞ்சுபவர்கள் ஆவலுடன் அச்சமூட்டுவதை எதிர்பார்க்கவும் செய்வார்கள். அதையே எண்ணியிருப்பார்கள். போர் நிகழாதுபோனால் மிகப் பெரிய ஏமாற்றம் கொள்பவர் அவராகவே இருப்பார்."

பூர்ணை சற்றுநேரம் அவளை நோக்கியபின் "எவ்வாறாயினும் அவரால் தடுக்கமுடியாது" என்றாள். "அரசி வஞ்சம் தவிர்த்ததை அவர் வரவேற்றாகவேண்டும். வெறுமனே அல்ல, உளம்நெகிழவேண்டும், விழிநீர் நனைய தழுவிக்கொள்ளவேண்டும்" என்றாள். தேவிகை "அதெல்லாம் நிகழும். ஆனால் பிறிதொன்றும் நிகழும். அதைத்தான் என்னால் இப்போது கணிக்கமுடியவில்லை" என்றபின் "இதை எதிர்பார்த்திருந்தேனா? இத்தனை எளிதல்ல என்று என் அகம் அறிந்திருந்ததா?" என்றாள். "ஏனிந்த வீண் எண்ணச்சுழல்? நேராகச்சென்று அரசரை பாருங்கள். அங்கு நிகழ்வது நிகழட்டும்" என்றாள் பூர்ணை. "ஆம், நான் உடனே கிளம்பவேண்டும்" என்றாள் தேவிகை.

தேவிகை நீராடி உடைமாற்றி வந்தபோது ஏவலன் அரசரின் அழைப்புடன் வந்திருந்தான். அவள் அவனுடன் சென்றபோது உள்ளம் ஆழ்ந்த அமைதியுடன் இருப்பதை உணர்ந்தாள். ஒரு சொல்லும் இல்லாது ஒழிந்திருந்தது நெஞ்சு. படியேறி இடைநாழியில் நடந்து அரசரின் அறைவாயிலில் நின்றாள். வாயிற்காவலனிடம் தலையசைக்க அவன் உள்ளே சென்று அவள் வருகையை அறிவித்தான். உள்ளே நகுலனும் சகதேவனும் இருப்பார்கள் என அவள் எண்ணியிருந்தாள். ஆனால் யுதிஷ்டிரரின் தோற்றத்தைக் கண்டதும் திகைத்து நின்றுவிட்டாள்.

அவள் சற்றுமறியாத முதியவர் போலிருந்தார் யுதிஷ்டிரர். முனிவரைப்போல நீண்ட நரைத்த தாடியும் தோளில் புரண்ட குழலும் தொய்ந்த தோள்களும் கூன்விழுந்த முதுகுமாக. ஆனால் சிலகணங்களுக்குள்ளேயே அவள் யௌதேயனின் முகத்தை அதில் கண்டடைந்தாள். அது மேலும் கசப்பை கொடுக்க அவள் விழிகளை திருப்பிக்கொண்டாள். நகுலனும் சகதேவனும்கூட முதுமையெய்தியிருந்தனர். அவள் பூரிசிரவஸை நினைத்துக்கொண்டாள். முகத்தின்மேல் ஆடையை இழுத்துவிடும் அசைவால் அவ்வெண்ணத்தை ஒதுக்கினாள்.

“அரசரையும் இளையோரையும் வணங்குகிறேன்” என்றாள். யுதிஷ்டிரர் “நலன் திகழ்க!” என வாழ்த்தி அமரும்படி பீடத்தை காட்டினார். அவள் இல்லை என தலையசைத்து சாளரத்தருகே சென்று ஒளி மறைக்காமல் நின்றாள். வெளியே அந்தியெழத் தொடங்கிவிட்டிருந்தது. பறவைகள் கலைந்தெழுப்பிய குரல்களால் தோட்டம் உயிர்கொண்டிருந்தது. யுதிஷ்டிரர் தலைகுனிந்து தாடியை நீவிக்கொண்டிருந்தார். அவர்கள் ஏதோ பேசிக்கொண்டிருந்தார்கள் என அவள் நினைத்தாள். ஆனால் அந்த எச்சத்தை அவர்களின் முகங்களில் காணமுடியவில்லை.

ஏவலன் வந்து திரௌபதியின் வரவை அறிவித்தான். தேவிகை பெருமூச்சுடன் நிமிர்ந்து நின்றாள். திரௌபதி உள்ளே வந்து முகமன் ஏதுமில்லாமல் யுதிஷ்டிரரை வணங்கி பீடத்தில் அமர்ந்தாள். “நாங்கள் உடனே திரும்பிவரவேண்டியிருந்தது. இரு செய்திகள். அஸ்தினபுரியிலிருந்து திருதராஷ்டிரரின் தனித்தூதனாக சஞ்சயன் கிளம்பி வந்துகொண்டிருக்கிறான்” என்றார். “அதோடு இளைய யாதவன் நாளை இங்கு வருவான் என்றும் செய்தி வந்துள்ளது.” திரௌபதி தலையசைத்தாள்.

அவள் மேலே பேசுவதற்காக காத்தபின் யுதிஷ்டிரர் “சஞ்சயன் தூதின் உள்ளடக்கம் என்ன என்று அறியக்கூடவில்லை. நிலம் அளிக்கமுடியாதென்று முற்றாக மறுத்தபின் எதை பேசமுடியும்? நன்று என்னவென்றால் நாளை சஞ்சயன் அவைநிற்கையில் இளைய யாதவனும் இருப்பான் என்பதே” என்றார்.

திரௌபதி “நான் நாளை புலரியில் கிளம்பி அஸ்தினபுரிக்கு செல்கிறேன்” என்றாள். “ஆம், தௌம்யர் சொன்னார்” என்றார் யுதிஷ்டிரர். “நான் அங்குள்ள அரசியரிடம் என் வஞ்சினத்திலிருந்து விலகிவிட்டதாக சொல்லவிருக்கிறேன். அந்த மைந்தரைத் தழுவி அவர்களின் அன்னை நான் என்று சொல்லிவர விழைகிறேன். வரும் மூன்றாம் வளர்நிலவில் மாத்ருப்பிரஸ்தான நோன்பு அஸ்தினபுரியில் நிகழ்கிறது. அதற்கு எனக்கும் அழைப்புள்ளது. அதன்பொருட்டு செல்வதுபோல செல்லலாமென்றிருக்கிறேன்” என்றாள்.

அவளுடைய இயல்பான குரலும் நேர்நோக்கும் அவரை நிலையழியச் செய்தன. குனிந்து மடியிலிருந்த தன் கைகளை நோக்கியபடி “ஆனால் இம்முடிவை நீ ஏன் உடனடியாக எடுத்தாய் என்றுதான் என் உள்ளம் ஐயம்கொள்கிறது. எங்கள் ஆற்றல்மேல் ஐயம்கொண்டாயா?” என்றார். “இல்லை” என்று அவள் சொன்னாள். அவள் மேலும் சொல்ல காத்திருந்து பின்னர் நிமிர்ந்து “இல்லையென்றாலும் அவ்வாறே அது பொருள் கொள்ளப்படும். இளையோர் இருவருக்கும் அது இழுக்கென்றே ஆகும்” என்றார்.

“இளையவர்களைப்பற்றி நான் அறிவேன். மாருதர் என் உளமறிவார். பார்த்தருக்கு நான் ஒரு பொருட்டல்ல” என்றாள் திரௌபதி. யுதிஷ்டிரரின் முகத்தில் ஒரு சுளிப்பு உருவாகியது.

“நீ அவர்களை முற்றாகப் பொறுத்து கடந்துவிட்டாய் என்பதை நான் நம்பவில்லை. கான்வாழ்க்கையில் நீ இருந்த நிலையை நான் கண்டிருக்கிறேன். ஆண்டுக்கணக்கில் கந்தமாதனம்போல கனன்றுகொண்டிருந்தாய். எத்தனை இரவுகளில் துயில்நீத்திருப்பாய் என நான் சொல்லமுடியும். துயிலில்லாது உளம்வெந்து நான் எழுந்துவந்து உன் அறைக்கு வெளியே நின்றிருப்பேன். இரவெல்லாம் நீ புரண்டுபடுப்பதை, பெருமூச்சுவிட்டுக்கொண்டிப்பதை கேட்பேன். எத்தனையோ முறை உளமுருகி விழிநீர் சிந்தியிருக்கிறேன். நான் கற்றவற்றை எல்லாம் முற்றிலும் மறந்து பெருவஞ்சம் கொண்டு வானோக்கி சீறியிருக்கிறேன். எத்தனையோ முறை நெஞ்சிலறைந்து தீச்சொல்லும் இட்டிருக்கிறேன். அதையெல்லாம் கடந்துசெல்லமுடியுமா என்ன?”

“அரசே, கானேகிய நீங்களும் திரும்பிவந்த நீங்களும் ஒன்றா என்ன?” என்றாள் தேவிகை. “இல்லை, நான் சென்ற வழி நீண்டது” என்றார் யுதிஷ்டிரர். “ஆம், இளையவர் இருவரும் அதைப்போலவே நெடுவழி சென்று கண்டடைந்து மீண்டனர். நாங்கள் மூவரும் எங்கும் செல்லவில்லை. சிறியவர் எதையும் புதிதாக தெரிந்துகொள்ளவேண்டிய தேவையற்றவர். அவருக்கு இணையர் புரவிகளுடன் ஓடியே தொலைவுகளை கடந்தவர்” என்று திரௌபதி சொன்னாள். “அவர் கால்களால் சென்ற தொலைவை எல்லாம் நெஞ்சால் சென்றுகொண்டு நான் இருந்தேன். அரசே, ஊஞ்சலும் பயணம் செய்துகொண்டுதான் இருக்கிறது.”

யுதிஷ்டிரர் தம்பியர் இருவரையும் நோக்கிவிட்டு “நீ எப்படி அவ்வஞ்சத்தை கடந்தாய்? என்னால் எண்ணிநோக்கவே இயலவில்லை” என்றார். திரௌபதி “நான் அகவை

முதிர்ந்தேன், வேறேதும் செய்யவில்லை. வஞ்சத்தைக் கடப்பதைவிட கடினமாக இருந்தது மண்விழைவை கடப்பதுதான். அதற்கு நான் புற்குடில்களிலும் மலைக்குகைகளிலும் மரத்தடிகளிலும் துயிலவேண்டியிருந்தது. இன்று இளையவர் வந்து என்னிடம் பேசிமீண்டபின் நான் என்னை நோக்கி மீளமீள கேட்டுக்கொண்டேன். நான் கடந்துவிட்டேனா என்று. ஆம், கடந்துவிட்டேன் என்றே என் உள்ளம் உறுதிசொன்னது" என்றாள்.

மேலும் என்ன பேசுவதென்றறியாமல் அங்கே அமைதி உருவாகியது. தேவிகை "நீங்கள் இதை மகிழ்ந்து வரவேற்பீர்கள் என நினைத்தேன்" என்றாள். அவளை நிமிர்ந்து நோக்கிய யுதிஷ்டிரர் "இல்லை, என்னால் முடியவில்லை. ஆனால் நான் போரையும் விரும்பவில்லை. எனக்கு உளக்குழப்பமே எஞ்சுகிறது. அங்கே திரண்டிருப்பவர்கள் என் உடன்பிறந்தார், என் மைந்தர். மண்ணின்பொருட்டு அவர்களுடன் போரிட நான் விரும்பவில்லை. போர் எந்நிலையிலும் தவிர்க்கப்படவேண்டும் என்றே விரும்புகிறேன். ஆனால்..." என்ற யுதிஷ்டிரர் தலையை அசைத்தார். அவர் நாவில் எழுந்த ஒன்று தயங்கியது.

பின்னர் குரல் மேலெழ விழிதூக்கி "உண்மையில் நம் நிலவுரிமையை முற்றாக விட்டுக்கொடுத்து கிழக்குநோக்கி சென்றாலென்ன என்று உசாவும்பொருட்டே சம்புகச் சோலைக்கு சென்றோம். அங்கு அமர்ந்து நாம் சென்று நிலைகொள்ளவேண்டிய இடங்களைப்பற்றிய செய்திகளை தொகுத்தோம். செல்வதெப்படி என்று வகுத்தோம். இளையோரிடம் அதைச் சொல்லி ஏற்கவைப்பதைப்பற்றிக்கூட பேசிவிட்டோம். அது பின்னடைவதுதான். கோழைகளென

நம்மை இளிவரல்செய்ய வழிவகுக்கும் என்பதும் உண்மை. இளையோர் இருவருக்கும் அதில் உடன்பாடில்லை என்றும் தெரிந்தது. ஆயினும் அதில் உயர்ந்தது என ஒன்று இருந்ததாகவே உணர்ந்தேன்” என்றார்.

“என் கோழைத்தனமா அது என எண்ணி எண்ணி நோக்கினேன். எங்கோ சிறுதுளி அச்சம் இருக்கலாம். ஆனால் எனைச்சார்ந்தோர் நன்மைக்கே அதை செய்கிறேன் என உறுதியடைந்தேன். இன்று எப்பழி சூழ்ந்தாலும் சரி சில தலைமுறைகள் கழித்தேனும் என் நன்னோக்கத்தை உலகம் உணரும் என்று எண்ணிக்கொண்டேன். ஆனால் அரசி சென்று பணிவது என்று கேட்டபோது என் உளம் கூசுகிறது. பெண் என நின்று அவள் கொண்ட வஞ்சத்தை உதறுகிறாள் என்றால் ஆணென்று சொல்லி உடனமர எனக்கும் தம்பியருக்கும் தகுதியில்லை என்று அகம் கசப்புகொள்கிறது” என்றார்.

“நான் வஞ்சத்தை தவிர்க்கவில்லை அரசே, மெய்யாகவே என்னுள்ளத்தில் இன்று வஞ்சம் இல்லை” என்றாள் திரௌபதி. “நான் இவையனைத்திலும் ஈடுபடாமல் முற்றிலும் விலகி ஏன் இருந்தேன் என்று கேட்டுக்கொண்டபோதுதான் அது எனக்குத் தெரிந்தது. வஞ்சம் இல்லை என்பதனால் வஞ்சமொழிவதன் நெகிழ்ச்சியும் மீண்டுவிட்டேன் என்னும் பெருமிதமும்கூட என்னில் இல்லை. வஞ்சமுரைத்து அவையில் நின்று கனன்ற அவள் இன்று என்னுள் இல்லை. எனக்கு அவை பிறர்வாழ்வென்றே தோன்றுகிறது.”

“இல்லை, இவள் எதன்பொருட்டு வந்தாள் என நான் அறிவேன். தன் மகனுக்காக உன்னிடம் இரந்தாள். நீ அவளுக்கு அடைக்கலம் அளித்தாய். அரசியென உன்னால் அதை செய்யாமலிருக்க இயலாது” என்றார் யுதிஷ்டிரர். “ஆம், அது

உண்மை. ஆனால் அவர் வந்து பேசியபோதுதான் நான் எத்தனை விலகி எங்கோ நின்றிருக்கிறேன் என்று உணர்ந்தேன். நான் அவ்வாறு விலகி நின்றிருந்தமையால் அவர் ஏமாற்றமும் எரிச்சலும் கொண்டார் என்பதையும் உணர்ந்தேன். நான் விலகி நிற்க இயலாதென்று அவர் சொற்களிலிருந்து தெரிந்துகொண்டேன். வஞ்சத்தை என் உள்ளத்திலிருந்து விலக்கிவிட்டேன், அதை என் வாழ்விலிருந்தும் விலக்காவிட்டால் அதன் பழியை சுமக்கவேண்டியிருக்கும் என்று தெளிந்ததும் இம்முடிவை எடுத்தேன்."

"தேவி, நான் நேரடியாகவே கேட்கிறேன். உன் மைந்தருக்காகவா அஞ்சுகிறாய்?" என்றார் யுதிஷ்டிரர். அவள் அவர் விழிகளை நோக்கி "இல்லை என்று சொல்லமாட்டேன். சிபிநாட்டரசி வந்து சொன்ன கணம் முதல் அஞ்சத்தொடங்கிவிட்டேன். என் மைந்தருக்காக மட்டுமல்ல, மைந்தர் அனைவருக்காகவும். இங்குள்ள மைந்தரை எண்ணி மட்டுமல்ல, அங்குள்ள மைந்தரையும் எண்ணித்தான்" என்றாள் திரௌபதி. "மைந்தரை வாள்தந்து களமனுப்பும் பேரன்னையின் கதைகளை கேட்டுவளர்ந்தவள்தான் நான். கானேகாமலிருந்தால் அந்தக் கதைகளுக்குள்ளேயே வாழ்ந்திருப்பேன்."

யுதிஷ்டிரர் "என்னால் எதுவுமே எண்ண முடியவில்லை. ஆம், மைந்தருக்காக நாம் முற்றொழிவோம் என்றே எண்ணுகிறேன். ஆனால் அது நீ எடுக்கும் முடிவாக இருக்கலாகாது" என்றார். "நான் விலகிவிட்டேன். அதற்கப்பால் சொல்வதற்கேதுமில்லை" என்றாள் திரௌபதி. "நீ எண்ணுவதென்ன, இளையோனே?" என்றார் யுதிஷ்டிரர். சகதேவன் "இப்போதுதான் என்னிடம் இதை கேட்கிறீர்கள், மூத்தவரே" என்றான். அதை அப்போதுதான்

உணர்ந்த யுதிஷ்டிரர் “ஆம், கேட்கவில்லை… ஏனென்றே அறியேன். இதுவே தருணம்போலும்” என்றார்.

“மூத்தவரே, அங்கே அவையில் நிகழ்ந்தது ஓர் நெறியழிவு. அந்த வஞ்சினம் மானுடரில் தெய்வமிறங்கி வந்து உரைப்பது. அதில் ஒரு நிறைவு இருந்தது. இன்று அரசி அதை கைவிடுகையில் அம்முழுமை அழிகிறது. அந்த நெறியழிதலுக்கு அளிக்கப்படும் ஒப்புதல் அது” என்றான் சகதேவன். “ஒவ்வொரு பிழையும் தண்டிக்கப்படவேண்டும். தண்டிக்கப்படாத பிழை என்பது மீண்டும் முளைத்தெழுந்து ஒன்றுநூறு ஆயிரமென தழைக்கும். நெறிநூல்கள் மீண்டும் மீண்டும் சொல்வது அதையே.”

“அரசி, அவைநடுவே பெண்ணை சிறுமைசெய்தல் எளிதாகக் கடந்துசெல்லப்பட்டதென்றால் இந்நிலத்தில் வேறு எதுதான் பிழையெனக் கொள்ளப்படும்? அரசி, நாம் அரசர்கள். எப்போதும் இன்றும் நாளையும் எதிர்காலம் முழுக்கவும் நிறைந்திருக்கும் பெருந்திரள் முன் நின்றிருக்கிறோம். நாம் செய்வன அனைத்தும் முன்நிகழ்வுகள், வழிகாட்டல்கள். எண்ணிப்பார், நாளை பிறிதொரு சிறுபிழைக்காக ஒருவனை அரசனின் கோல் தண்டிக்குமென்றால் அவன் கேட்கமாட்டானா, அவைநடுவே பெண்ணை ஆடைகளைதலைவிடவா பெரிய பிழையை நான் செய்துவிட்டேன் என்று?”

“குற்றம் குற்றமேதான், எச்சொல்லால் சொல்லப்பட்டாலும் எங்கு நின்று நோக்கினாலும் எதைக்கொண்டு நிகர்செய்தாலும். அது பருப்பொருட்களைப் போன்று நாமில்லை என்றாலும் நின்றிருப்பது” என்றான் சகதேவன். “தேவி, நெறிநூல்கள் சொல்லும் முதல் வரி ஒன்றே. குற்றமென்பது அதனால் பாதிக்கபட்டவருக்கு எதிரானது அல்ல. மானுடருக்கு

எதிரானதும் அல்ல. விராடவடிவென நம்மைச் சூழ்ந்திருக்கும் பேரியற்கைக்கு எதிரானதுகூட அல்ல. இங்கே வாழ்வையும், வானில் அறிவையும், கடுவெளியில் அறியமுடியாமையையும் நிரப்பிவைத்திருக்கும் முதல்முழுமைக்கு எதிரானது.”

“எனவேதான் குற்றம் பொறுக்க எவருக்கும் உரிமை இல்லை என்று நூல்கள் சொல்கின்றன. தெய்வங்கள்கூட குற்றத்தைப் பொறுத்தருளியதாக நம் தொல்கதைகள் சொல்லவில்லை. ஒருவருக்கு ஒன்றின்பொருட்டு தண்டனை விலக்கப்படுமென்றால் தண்டிக்கப்பட்ட அனைவருமே நெறிமறுக்கப்பட்டவர்களாகிறார்கள்.” தேவிகை “அப்படியென்றால் இரக்கத்திற்கு இப்புவியில் இடமே இல்லையா?” என்றாள். “உண்டு. தனிமனித உறவுகளில். இது உறவுக்குள் நிகழவில்லை, அவையில் நிகழ்ந்திருக்கிறது. ஆயிரம் பல்லாயிரம் பேரால் அறியப்பட்டிருக்கிறது.”

“அன்று நிகழ்ந்தது என்ன என்று நீங்கள் முழுதறியவில்லை, தேவி. ஒவ்வொரு நிகழ்வும் ஒன்று ஓராயிரமென உள்ளங்களில் எழுகின்றன. ஆகவே நிகழ்வை அவை கொள்ளும் விரிவையும் கருத்தில்கொண்டே அணுகவேண்டும். அன்று நீங்கள் ஓர் அரசி என அவைநடுவே சிறுமைகொள்ளவில்லை, அங்கு நின்றவள் பெண். இங்கே இல்லந்தோறும் பெண் இருக்கிறாள். அவளை இழித்துநடத்தும் கீழ்மக்களும் இருக்கிறார்கள். அன்றுரைத்த வஞ்சினம் அவர்கள் அனைவருக்கும் எதிராகவே. கைகட்டி அமர்ந்திருந்த மூத்தோரும் கற்றோரும்கூட அதற்கு ஈடு அளித்தாகவேண்டும்.”

“நாளை ஒருவன் பெண்ணை சிறுமைசெய்ய கையெடுத்தான் என்றால் அந்தக் கை அச்சத்தில் குளிர்ந்தமைய வேண்டாமா?

அவன் கால்கள் கல்லாக வேண்டாமா? பெண்சிறுமைசெய்வதென்றால் என்ன விளைவென்று பாரதம் அறியவேண்டும். துலாவின் இத்தட்டில் வைக்கப்பட்டது குலமகளின் விழிநீர் என்றால் மறுதட்டில் நூறாயிரம் தலைகள் வைக்கப்பட்டு அது நிகர் செய்யப்படட்டும். அரசி பொறுத்தருளலாம், அவள் அன்னை. நாங்கள் பொறுத்துக்கொள்ளமுடியாது. நாங்கள் இங்கு அவள் மைந்தரின் தந்தையென நின்றிருக்கிறோம்" என்றான் சகதேவன்.

"பழிவாங்குதல் குறித்து சொல்கிறீர்கள்" என்றாள் தேவிகை சலிப்புடன். "ஆண்களின் உள்ளம் அதிலிருந்து விலகவே முடியாதா என்ன?" சகதேவன் "பழிவாங்குதல் என்றால் இழிவா என்ன? நெறியின் வரலாற்றை அறிந்தோர் அதை சொல்லமாட்டார்கள். விலங்குகள் பழி வாங்குவதில்லை. ஏனென்றால் அவை ஒன்றுடனொன்று இயற்கையின் நெறியாலன்றி எந்த அறத்தாலும் கட்டுண்டிருக்கவில்லை. மானுடன் தனக்கென அறத்தை உருவாக்கி அதற்கு ஒப்புக்கொண்டதனால்தான் பழிவாங்குகிறான். தன் குருதியினனுக்காக, தன் குலத்தோனுக்காக பழிவாங்க வஞ்சினம் உரைப்பவன் முன்வைப்பது எதை? வஞ்சமெனும் கீழ்மையை அல்ல. அவன் கொண்டிருக்கும் அறப்பற்று எனும் மேன்மையை. அவன் தன் நலத்திற்காக வாளேந்தவில்லை, தன்னை ஆளும் பெருநெறி ஒன்றுக்காகவே தன்னை அழிக்கவும் சித்தமாகிறான்" என்றான்.

"அரசி, மானுடத்தில் நீதி என்பது பழிவாங்குதல் வழியாகவே நிலைகொண்டது என்று உணர்க! இன்று நீதி என்றும் நெறி என்றும் அறம் என்றும் நாம் எதைப் பேசினாலும் ஆழத்தில் உறைவது பழிக்குப்பழி என்னும் முறையே. பழிதீர்ப்பதை

தன்னிடமிருந்து தன் குலத்திற்கு அளிக்கிறான் மானுடன். குலம் அதை அரசனுக்கு அளிக்கிறது. அறத்தில் கனிந்தோர் அதை தெய்வத்திற்கு அளித்து அகல்கிறார்கள். வேறுபாடு அவ்வளவே. நீதி என்பது பாகுபாடில்லாமல், நலம்நாடிச் செய்யப்படும் பழிவாங்குதல்" என்றான் சகதேவன்.

மீண்டும் ஆழ்ந்த அமைதி நிலவியது. "இதற்குமேல் நான் ஒன்றும் சொல்வதற்கில்லை" என்றான் நகுலன். தேவிகை சீற்றத்துடன் "அப்படியென்றால் இங்கே போர்தவிர்த்தல் என்று பேசிக்கொள்கிறீர்களே அதற்கு என்ன பொருள்?" என்றாள். "போரைத்தவிர்ப்பது குறித்தே பேசுகிறோம், வஞ்சம் தவிர்ப்பது குறித்து அல்ல. நாம் நிலத்தை கைவிட்டோமென்றால் போர் தவிர்க்கப்படுகிறது. ஆனால் துரியோதனன் தொடை பிளக்கவும் கர்ணனின் தலைகொய்யவும் துச்சாதனின் குருதியருந்தவும் தடையேதுமில்லை. அரசர்களை தனிப்போருக்கு அழைக்க ஷத்ரியர் எவருக்கும் உரிமை உண்டு" என்று நகுலன் சொன்னான்.

தேவிகை "அது எப்படி?" என்றாள். "நம் வஞ்சம் நீடிக்கட்டும். நம் மைந்தருக்கு நிலமும் கொடியும் அமைத்துக்கொடுப்போம். இந்த வஞ்சம் நம்முடையது, நம் மைந்தருக்குரியது அல்ல. அவர்களின் மைந்தருக்கும் இதில் இடமில்லை. இருபுறமும் திரண்டுள்ள அரசர்களும் படைகளும் இதில் ஆடவேண்டியதில்லை" என்று நகுலன் தொடர்ந்து சொன்னான். யுதிஷ்டிரர் "அவன் சொல்லும்போது அதுவே சரியென்று தோன்றுகிறது. ஆனால் உள்ளம் எதையோ எண்ணி அலைக்கழிகிறது" என்றார்.

தேவிகை "இது நன்று. நான் இதையே வலியுறுத்துகிறேன். அரசே, அரசி தன் வஞ்சினத்தை களையவேண்டியதில்லை.

அதனூடாக நீங்கள் அடையும் இழிவும் தேவையில்லை. இளையவர் சொன்னபடி இங்கே நெறி நிலைகொள்ளட்டும். வஞ்சம் நம்முடையது. நாமே அதை எதிர்கொள்வதே முறை" என்றாள். திரும்பி திரௌபதியிடம் "எண்ணிப்பாருங்கள் அரசி, எவரும் எங்கும் தாழவேண்டியதில்லை. ஆனால் போர் தவிர்க்கப்படுகிறது. நம் மைந்தர் நீடுவாழவும் வழி உருவாகிறது" என்றாள்.

"நான் வஞ்சினத்தைத் தவிர்த்தது எதையும் எண்ணி அல்ல, வஞ்சமிழந்தமையால் மட்டுமே. நான் வஞ்சினம் உரைத்தது அவர்களின் அவையில். ஆகவே அவர்களின் அவையில்தான் அவ்வஞ்சினத்தை நான் விலக்கிக்கொண்டதையும் அறிவிக்கவேண்டும். எண்ணி எடுத்த முடிவு, நாளை காலை கிளம்புவதென்பது. அதை அறிவிக்கிறேன்" என்றாள். யுதிஷ்டிரர் "சகதேவன் சொன்னவற்றை நீ எண்ணவே இல்லை, அரசி" என்றார். "ஆம், எண்ணினேன். நீங்கள் வஞ்சினமொழியவேண்டும் என்று நான் சொல்லவில்லை. போரிடுவதோ தவிர்ப்பதோ தனிப்போர் செய்வதோ அதையும் கைவிடுவதோ உங்கள் விருப்பப்படி. நான் என்னைப்பற்றி மட்டுமே சொல்லமுடியும். நான் இப்போர்க்களத்தில் இனி இல்லை" என்றாள் திரௌபதி.

மேலாடையை எடுத்து அணிந்துகொண்டு "மைந்தரின் குருதி விழுமென்றால் அதில் எனக்கு பொறுப்பில்லை என்று அறிவிக்கவே செல்கிறேன். என் மைந்தர், அவர் மைந்தர். படைக்கலமேந்தி களம்புகவிருக்கும் அனைவரும் என் மைந்தரே" என்றாள். "பொறு, அரசி" என்றபடி யுதிஷ்டிரர் எழுந்தார். "நீ கிளம்புவதற்கு முன் இரண்டு செய்திகளை தெளிவுபடுத்திவிட்டு செல். சஞ்சயனிடம் அனுப்பப்பட்ட செய்தி

என்ன என நீ அறிந்தாகவேண்டும்." திரௌபதி "அது எவ்வகையிலும் என்னை மாற்றப்போவதில்லை" என்றாள்.

"ஆம், ஆனால் நீ அறிவது நன்று. அத்துடன் இளைய யாதவன் இங்கு வரவிருக்கிறான். அவனிடம் நீ செல்வதை சொல்லிவிட்டு செல்" என்றார் யுதிஷ்டிரர். "நான் எவரிடமும் சொல்லுசாவ வேண்டியதில்லை. இது என் உளம்கொண்ட மெய்" என்றாள் திரௌபதி. "ஆம், அதையும் நான் மறுக்கவில்லை. ஆனால் இப்போர் இங்கு நிகழ இரண்டு தூண்டுதல்கள். அதில் ஒன்றுதான் உன் வஞ்சினம். பிறிதொன்று அவன் கொண்டுள்ள வேதமுடிபுக் கொள்கை. நீ விலகிக்கொண்டாய் என்று முதலில் அறியவேண்டியவன் அவன். இப்போர் உன்பொருட்டு நிகழ்கிறது என்னும் நடிப்பு இனித் தேவையில்லை என்று அவனிடம் சொல். இதற்கு மேலும் அது நிகழுமென்றால் அது அவன்கொண்ட கொள்கையின் பொருட்டே என அவன் அறியட்டும். அதன் முழுப் பொறுப்பையும் அவனே ஏற்கவேண்டும்."

திரௌபதி எண்ணியபடி சிலகணங்கள் நின்றாள். "எப்போது வருகிறார்?" என்றாள். "நேற்றுமுன்னாளே கிளம்பிவிட்டான். பெரும்பாலும் நாளைமாலை இங்கிருப்பான்." திரௌபதி தனக்குத்தானே என தலையசைத்தாள். "சரி, அவரை பார்த்துவிட்டுச் செல்கிறேன்" என வெளியே சென்றாள். அதுவரை அங்குமிங்கும் பறந்து முட்டிக்கொண்டிருந்த உள்ளம் அசைவிழந்து மெல்ல படியத் தொடங்குவதை தேவிகை உணர்ந்தாள். எவரிடமென்றில்லாமல் கடும்சினம் எழுந்து அவள் கைவிரல்நுனிகள் நடுங்கின.

யுதிஷ்டிரர் பெருமூச்சுடன் கால்நீட்டி உடல்தளர்த்தி சாய்ந்து "இளையோனே, நாம் இங்கே என்ன

செய்துகொண்டிருக்கிறோம்?” என்றார். சகதேவன் எழுந்துகொண்டு “மூத்தவரே, நிலநடுக்கம் வருவதற்கு முன்பு விலங்குகள் அலைக்கழிந்து முட்டிமோதுவதை கண்டிருக்கிறீர்களா?” என்றான். யுதிஷ்டிரர் வெறுமனே நோக்கினார். “ஒருமுறை தொட்டிமீன்கள் நிலநடுக்கை உணர்ந்து நிலையழிந்து துள்ளுவதைக் கண்டேன்” என்றபின் புன்னகைத்து தலைவணங்கி வெளியே சென்றான்.

# குருதிச்சாரல் - 7

**பகுதி இரண்டு : பெருநோன்பு – 1**

அஸ்தினபுரியின் மேற்குக்கோட்டைவாயிலுக்கு அப்பால் செம்மண்ணாலான தேர்ச்சாலைக்கு இரு பக்கமும் விரிந்த குறுங்காட்டிற்குள் பிரிந்து சென்ற சிறுபாதையில் ஏழு சேடியரும் காவலுக்கு பதினெட்டு வில்லவர்களும் கரிய ஆடையணிந்த நிமித்திகர்குலத்துப் பூசகர் மூவரும் சூழ கையில் பூசனைத் தட்டுகளுடன் பானுமதியும் அசலையும் நடந்தனர். முதலில் சென்ற காவலன் ஒரு சிறுமேட்டின்மேல் ஏறி நின்று கொம்பொலி எழுப்பினான். செவிகூர்ந்த பின் வருக என பிறருக்கு கைகாட்டினான். அவர்கள் நடந்தபோது சருகுகள் நொறுங்கும் ஒலியும் கற்கள் கால்பட்டு உருளும் ஒலியும் எழுந்து காட்டின் காற்றுமுழக்கத்துடன் இணையாமல் தனித்து ஒலித்தன.

ஓசையென்று தெரிந்து கரிய பாறைகளில் ஒளியுடன் விழுந்து வளைந்து அணுகிய ஓடையின் கரையில் கற்களை அடுக்கியும் சரிந்த மண்ணில் தடம்வெட்டி மரத்தடிகளை பதித்தும் அவர்கள்

மேலே செல்வதற்கான பாதை அமைக்கப்பட்டிருந்தது. ஒருவர் பின் ஒருவராகவே அந்தப் பாதையில் அவர்கள் செல்லமுடிந்தது. தொலைவில் கரிய கற்களாலான சிற்றாலயம் தெரிந்ததும் காவலர்தலைவன் கைகாட்டிவிட்டு வேலை நீட்டியபடி முன்னால் சென்றான். ஆலயமுகப்பில் நின்று வேல்முனையை மூன்றுமுறை நிலத்தில் முட்டியபோது அவ்வதிர்வால் சினம்கொண்டு சீறியபடி மண்செந்நிறமான அன்னை நரி ஒன்று வெளிவந்தது.

அன்னை நரி மூக்கை நீட்டி தலை தாழ்த்தி பழுப்புக் கற்கள் போன்ற கண்களுடன் பிடரி குலைத்து வால் சுழற்றியது. அதைத் தொடர்ந்து அதன் இரண்டு மைந்தர்களும் மயிர் சிலிர்த்த உடலும் இதழ்விரிந்து கோட்டி அசைந்த செவிகளுமாக வெளிவந்தன. அன்னை மெல்ல உறுமியது. ஒருவன் வில்லில் அம்புதொடுத்த ஒலி கேட்டு தலைவன் வேண்டாம் என கையசைத்தான். அவன் தன் வேலால் தரையைத் தட்டியபோது அத்தனை வீரர்களும் அதேபோல தரையில் வேல்தண்டுகளாலும் மிதியடிக்கால்களாலும் முட்டி ஓசையெழுப்பினர்.

நரிகள் வெருண்ட நோக்குடன் அவர்களை மாறிமாறி பார்த்தபின் கால்களைத் தூக்கி பின்னால் வைத்து பதுங்குவதுபோல பின்னடைந்தன. புதர்களில் மூழ்கியதும் காற்று செல்வதுபோல இலைத்தழைப்பில் தடம் எழ விரைந்து ஓடி அகன்றன. காவலர்தலைவன் கைகாட்ட பூசகர்கள் சென்று ஆலயத்திற்குள் நுழைந்து உள்ளே கிடந்த நரிகளின் மட்கிய முடியையும் உணவு எச்சங்களான எலும்புகளையும் வால்மயிர்களையும் கொண்டுவந்து அப்பாலிட்டு ஆலயத்தை தூய்மைசெய்தார்கள். அதுவரை பானுமதியும் அசலையும் சற்று

அப்பால் காவலர் வெட்டி விரித்து அமைத்த தழைப்பரப்பின்மேல் அமர்ந்தனர்.

இரு வீரர்கள் மரக்குடுவையுடன் சென்று ஓடையிலிருந்து நீர் அள்ளிவந்து அளிக்க பூசகர்கள் அதை வாங்கி ஆலயத்திற்குள் வீசி கழுவி தூய்மை செய்தனர். ஒருவர் அங்கிருந்த கல்விளக்குகளில் நெய் ஊற்றி திரியிட்டு சுடரேற்றினார். கருவறை மட்டுமேயான ஆலயத்தின் இருளுக்குள் இருந்து கன்னங்கரிய நீளுருளைக் கல்லில் பொறிக்கப்பட்ட இரு விழிகள் தெளிந்து வந்தன. நோக்கியிருக்கவே அத்தெய்வம் பார்வையும் இருப்பும் கொண்டது. பூசகர் தலைவணங்கி முடிந்துவிட்டதென அறிவிக்க பானுமதியும் அசலையும் எழுந்து ஆலயத்தருகே சென்றனர்.

கைகூப்பியபடி பானுமதி ஆலயத்தின் முன் நிற்க அவளருகே அசலை நின்றாள். பூசகர்களில் ஒருவன் தன் தோள்பையிலிருந்து உடுக்கை எடுத்து கொட்டத்தொடங்கினான். தாளம் முறுகி எழுந்தோறும் ஆலயச்சூழல் அறியாமல் மாற்றம் கொண்டது. கண்ணுக்குத் தெரியாத தெய்வங்கள் சூழ்ந்து நின்று தங்களை நோக்கிக்கொண்டிருக்கும் உணர்வை அசலை அடைந்தாள். பூசகர் மூங்கில் பேழையிலிருந்து நீலத்தாமரையும் குவளையும் நீலச்செண்பகமும் சேர்த்துத் தொடுத்த மலர்மாலையை எடுத்து கலிதேவனுக்கு சூட்டினார். அருகே சிறிய நீளுருளைக் கல்லாக அமர்ந்திருந்த கபாலனுக்கு இன்னொரு நீலமாலையை சூட்டினார்.

அசலை கபாலனையே நோக்கிக்கொண்டிருந்தாள். கலியின் படைக்கலமான கபாலதண்டின் உருவம் அது என்று அவளுக்கு சொல்லப்பட்டிருந்தது. முன்பு அந்தத் தெய்வம் அங்கிருக்கவில்லை. எப்படி வந்ததென்று தெரியாமல் அங்கே

அது வந்தமைந்தது. அதற்கான கதை உருவானது. “அஸ்தினபுரியில் மானுடரைவிட கூடுதலாகவே தெய்வங்கள் பிறந்துகொண்டே இருக்கின்றன” என்று அரண்மனை விறலி சந்திரிகை அவளிடம் சொன்னாள். கலியின் காவலன். கலியின்பொருட்டு இருளையும் கெடுமணத்தையும் சுமந்துசெல்பவன். காகமாகவும் நரியாகவும் வௌவாலாகவும் உருக்கொண்டு நகர்களுக்குள் நுழைபவன்.

இளம்பூசகர் கொண்டுவந்த அனற்கலங்களை இரு பக்கமும் வைத்து தூபம் எழுப்பினார் பூசகர். இன்னொரு பூசகர் சங்கொலி எழுப்ப உள்ளிருந்து கைமணி ஒலித்து கலிக்கு சுடராட்டு காட்டினார். பானுமதி சுடர்தொட்டு வணங்கி பூசகர் அளித்த கரிப்பொடியைத் தொட்டு நெற்றியிலணிந்துகொண்டாள். அசலை வணங்கி வந்ததும் பூசகர் “நீங்கள் செல்லலாம் அரசி, நாங்கள் தேவனுக்கு குருதிபலி கொடுத்து மீள்வோம்” என்றர். பானுமதி தலையசைத்துவிட்டு தாழ்ந்த விழிகளுடன் நடக்க அசலை உடன்சென்றாள். காவலர் அவர்களைச் சூழ்ந்து அழைத்துச்சென்றார்கள்.

அசலை கால்தளர்ந்து சற்று நின்றாள். பானுமதி திரும்பிநோக்கி “இன்று பேரரசியை சந்திக்கச் செல்லவேண்டும். பிந்திக்கொண்டிருக்கிறது” என்றாள். அசலை கூந்தலை சீர்செய்தபடி அவளருகே வந்து “இந்தத் தெய்வங்களைப்பற்றி அஸ்தினபுரியின் குலவரலாறுகளில் எங்குமே சொல்லப்பட்டதில்லை. இதைப் பூசனை செய்யவேண்டுமென்ற வழக்கம் எப்போது உருவானது?” என்றாள். பானுமதி “இது அரசரின் அடையாளதெய்வம்” என்றாள். “ஆம், அதை நானும் அறிவேன். அதை சொன்னது யார்?” பானுமதி ஒன்றும்

சொல்லாமல் நடந்தாள். “அரசர் பிறந்தபோதுதான் இந்த தெய்வத்தைப்பற்றிய பேச்சுக்கள் எழுந்தன” என்றாள் அசலை.

“ஆம், ஆனால் இது அப்போது நிறுவப்பட்ட ஆலயம் அல்ல. அதற்கு பல தலைமுறைகளுக்கு முன்னரே இது இங்கிருந்திருக்கிறது” என்றாள் பானுமதி. “அப்படி நூற்றுக்கும் மேற்பட்ட தெய்வங்கள் இந்த நகரைச் சுற்றிய காட்டுக்குள் நிறுவப்பட்டுள்ளன. இந்த ஆலயம் ஏன் கண்டடைந்து அரசருக்குரியதென்று ஆக்கப்பட்டது?” என்றாள் அசலை. “இங்கே அனைத்தையும் முடிவுசெய்பவர்கள் நிமித்திகர்கள்” என்றாள் பானுமதி. “நிமித்திகர்களை எவரேனும் செலுத்தியிருக்கக் கூடுமா? பேரரசி அவ்வாறுதான் நம்புகிறார்கள்.”

பானுமதி “அரசர் பிறந்தபோது நடந்தவை பதிவாகியிருக்கின்றன. முதலில் அவர் மதங்ககர்ப்பம் கொண்டு மண்நிகழ்ந்தார். அது அசுரர்களுக்குரிய பிறப்பு. அரசர்களில் கார்த்தவீரியர் மட்டுமே அவ்வாறு பிறந்தார் என்கிறார்கள். அவரை கருவுற்றநாள் முதல் தான் கண்ட கொடுங்கனவுகளை அரசியே முறையாக சொல்லி அரண்மனை நிமித்திகர் பதிவுசெய்திருக்கிறார்கள். அது அவர் கண்ட கனவு மட்டும் அல்ல. இந்நகரமே அக்கனவுக்குள் அன்றிருந்தது. பெருங்கோடையால் நகரைச் சூழ்ந்துள்ள காடுகள் காய்ந்து தீப்பற்றிக்கொண்டன. புகை மூடி நகர் கருகியது. நகருக்குள் நடுப்பகலிலும் நரிகள் ஊளையிட்டன. பல்லாயிரக்கணக்கான காகங்கள் நகருக்குள் நுழைந்து இங்கிருந்த காற்றே கருமைகொண்டது என்கிறார்கள்” என்றாள் பானுமதி.

“அவர் மண்நிகழ்ந்ததை ஒட்டிய நிகழ்வுகளில் உபாலன் என்னும் யானை உயிர்விட்டது. தீர்க்கசியாமர் என்னும் விழியிழந்த

நிமித்திகர் எதையோ கண்டு அஞ்சி உயிரிழந்தார்" என்று பானுமதி தொடர்ந்தாள். "அனைத்தையும் எவரும் அமைக்கமுடியாது. நம்மைச் சூழ்ந்தவற்றில் நம்மைப்பற்றிய மந்தணம் ஒன்று பொதிந்திருக்கிறது. இந்த மரம் எவ்வகையிலோ நாம் இங்கு வந்ததை அறிந்திருக்கிறது. அந்தப் பறவை அக்கிளையில் அமர்ந்திருப்பதற்கும் நாம் இப்போது அதை கடந்துசெல்வதற்கும் தொடர்பிருக்கிறது. இவையனைத்தும் வெறும் தற்செயல்களே என்றால் இப்புவிமேல் நிகழ்வன எதற்கும் எப்பொருளும் இல்லை என்றே பொருள்."

"அவர் கலியின் வடிவமென நினைக்கிறீர்களா? பேரழிவை கொண்டுவருவார் என எதிர்பார்க்கிறீர்களா?" என்றாள் அசலை. பானுமதி "நான் எண்ணுவதை நிறுத்தி நெடுநாட்களாகின்றன. என் எண்ணங்களுக்கு அப்பால் அகன்று விரிந்து சென்றுவிட்டன அனைத்தும். எண்ணிச்சலிப்பதன்றி பயன் ஒன்றும் இல்லை" என்றாள். அசலை "ஆனால்..." என்றபின் உதடுகளை அழுத்திக்கொண்டாள். "என்னடி?" என்றாள் பானுமதி. அசலை மறுமொழி சொல்லவில்லை. "என்னடி?" என்று பானுமதி நின்றாள். அசலையிடமிருந்து விசும்பலோசை கேட்டது. அவள் நின்று மேலாடையால் முகத்தை மூடி தலைகுனிந்திருந்தாள்.

பானுமதி அவள் அருகே சென்று தோளைப்பற்றி "என்னடி? என்ன இது, ஏவலர் காண பாதையில் நின்று?" என்றாள். "கண்களை துடை. ஓசையெழலாகாது" என்று மேலும் தாழ்ந்த குரலில் சொன்னாள். அசலை விம்மல்களை விழுங்கி முகத்தை அழுந்தத் துடைத்துக்கொண்டு உடன்வந்தாள். "என்னடி?" என்றாள் பானுமதி. "கலிவடிவமாகிய தமையன்,

கொலைப்படைக்கலத்தின் வடிவமாகிய இளையோன். இங்கு வந்தநாள் முதல் கேட்ட கதை. அவற்றை அள்ளி ஒதுக்கி நெஞ்சை விலக்கித்தான் இதுவரை வாழ்ந்தேன். ஆனால்…” பானுமதி “என்ன?” என்றாள். “அச்சமெழுகிறது” என்றாள் அசலை.

பானுமதி அதற்கு மறுமொழி சொல்லவில்லை. இருவரும் பேசாமல் நடந்தனர். “அக்கையே, இதெல்லாம் பேரரசி சொல்வதுபோல வெறும் சூழ்ச்சியென்றே இருக்குமோ? இங்கு வந்து வழிபட்டுச் செல்வதனூடாக நாம் அச்சூழ்ச்சியை ஏற்று பெருக்குகிறோமா?” என்றாள். பானுமதி ஒன்றும் சொல்லாமல் நடந்தாள். “நாமறிவோம் இருவரையும். மூத்தவர் பெரும்போக்கும் நெறிநிலையும் கொண்டவர். அளி நிறைந்தவர். இளையவர் மூத்தவரை இறைவடிவெனக் காணும் எளிய உள்ளம் கொண்டவர். அவர்களை குருதிவிடாய் கொண்ட கொடுந்தெய்வங்களெனக் காண நம்மால் இயலுமா என்ன?” பானுமதி பெருமூச்சுவிட்டாள். “சொல்லுங்கள், மூத்தவளே” என்றாள் அசலை.

“ஒருமுகம் கொண்ட தெய்வம் ஏதுமில்லை” என்று பானுமதி சொன்னாள். “அவர்கள் நமக்கு இனியவர்கள். அந்த முகத்தையே நாம் கொழுநர்களெனக் கொண்டோம். மைந்தரைப் பெற்றோம்.” அசலை நின்று அச்சம் தெரிந்த குரலில் “அவ்வாறென்றால் இக்கதைகளனைத்தும் மெய்யென்றே நினைக்கிறீர்களா? குலமழிக்கும் கொடியவராக எழுவாரா அரசர்?” என்றாள். “குலம் அழிவதோ குருதி பெருகுவதோ மானுடர் எவர் கையிலும் இல்லை. அது ஊழ். ஊழ் தனக்குரிய மானுடரை தெரிவு செய்கிறது” என்றாள்

பானுமதி. “நம் அரசரும் இளையோருமா?” என்றாள் அசலை. “அவர்கள் அத்தகையவர்களா?”

“அல்ல” என்று பானுமதி சொன்னாள். “அவர்களில் நல்லியல்புகள் மட்டுமே நிறைந்துள்ளன என நாம் அறிவோம். இப்புவியில் இன்று வாழ்பவர்களில் என் கொழுநருக்கு நிகரான பேரன்பும் அறப்பற்றும் கொண்ட பிறிதொரு அரசர் இல்லை.” அசலை அவளை நோக்கியபடி நடந்தாள். “ஆனால், மாவலிச் சக்ரவர்த்தியும் அத்தகையவரே. கார்த்தவீரியரும் அவ்வாறே வழுத்தப்பட்டார்” என்றாள் பானுமதி. “என்னால் நடக்கமுடியவில்லை, மூத்தவளே” என்றாள் அசலை. “சரி, நாம் இப்பேச்சை விட்டுவிடுவோம்” என்றாள் பானுமதி. “இல்லை, சொல்லுங்கள். இதை பேசாமலிருந்தால் என் உள்ளம் எண்ணி எண்ணிப் பெருகும்” என்றாள் அசலை.

“இளையவளே, மானுடரில் முழுமையாகவே தீமை உறைவதில்லை. தெய்வங்கள் எவரையும் அவ்வாறு முழுக்க கைவிடுவதில்லை. இருட்தெய்வங்கள் குடியேற ஓர் ஊசிமுனையளவுக்கு பழுது போதும்” என்றாள் பானுமதி. “இருட்தெய்வங்களின் படைக்கலங்கள் எவை என்று அறிவாயா? நல்லியல்புகள் என்கின்றனர் அறிவோர். கொடுந்தெய்வமான கலியை வழுத்தும் கலிதசகத்தில் பாவனர் பாடுகிறார், அன்பு, இரக்கம், அறம், குடிப்பிறப்பு, பண்பு, இன்சொல், பணிவு, வீரம் என்னும் எட்டு படைக்கலங்களை கைகளில் ஏந்தி அமர்ந்திருப்பவர் அவர் என்று.”

“எண்ணிப்பார், அரசர் இத்தனை துணைவர்களை எப்படி தனக்கென சேர்த்துக்கொண்டார்? அவருடைய நல்லியல்புகளால் அணுகி ஆட்பட்டவர்கள் அவர்கள். அழிவிலும் இழிவிலும் அவர்கள் அவரை விட்டு நீங்குவதில்லை. அவருள் எழுந்த

இருட்தெய்வம் அவர்கள் மேலேறி பேருருக்கொள்கிறது” என்றாள் பானுமதி. அசலை பெருமூச்சுவிட்டபடி அவளை தொடர்ந்து நடந்தாள். பின்னர் “அந்தச் சிறுபழுது எதுவென எண்ணுகிறீர்கள், அரசி?” என்றாள். “மண்விழைவுதான்” என்றாள் பானுமதி. “தெய்வங்களே வந்து எதிர்நின்றாலும் அவரிலிருந்து அதை அகற்றவியலாது.”

“ஆம்” என்று அசலை சொன்னாள். “ஒவ்வொருவருக்கும் ஒன்றில் நிறைவும் மீட்பும் உள்ளது. அரசரென அமைந்து நாடாள்கையிலேயே முழுதும் நிகழ்பவர் அரசர். ஆகவே ஆளும் மண்மேல் அழியாப் பற்று கொண்டிருக்கிறார். பிறிதொருவர் பாரதவர்ஷத்தை ஆள்வதை அவரால் ஏற்கமுடியாது” என்றாள் பானுமதி. “ஆம், மெய்” என்று சொன்ன அசலை “அவள் மட்டும் மும்முடிசூடி அரசமரவில்லை என்றால் இவையெதுவுமே நிகழ்ந்திருக்காது” என்றாள். “அவளும் இவருக்கு நிகரான உள்ளம் கொண்டவள். மண்ணாளவென்றே பிறந்தவள்” என்றாள் பானுமதி.

அசலை “போரை எவராலும் தவிர்க்கமுடியாதென்று ஒவ்வொருவரும் பேசிக்கொள்கிறார்கள். நான் என் ஆழத்தில் போர் நிகழாதென்ற நம்பிக்கையை அணையாது பேணி அதன் வெளிச்சத்தில் வாழ்கிறேன். நீங்கள் சொல்வதைக் கண்டால் போர் நிகழ்ந்தே தீரும் என்று தோன்றுகிறது” என்றாள். “நிகழ்ந்தாகவேண்டும்” என்றாள் பானுமதி. “என்ன சொல்கிறீர்கள்?” என்றாள் அசலை. “அவள் அவைநின்று வஞ்சினமுரைத்தாள். அது நிகழவேண்டாமா என்ன?” அசலை திகைத்து “மூத்தவளே...” என்றாள்.

பானுமதி சிவந்த முகத்துடன் “அன்று நிகழ்ந்த அவைச்சிறுமையில் நீ என்னவாக இருந்தாய்?” என்றாள்.

அசலை “நான்…” என்றாள். “சொல்லடி, நீ என்னவாக இருந்தாய்?” அசலை “நான் திரௌபதியாக அவைநடுவே நின்று சிறுத்தேன். அவள் அனல்கொண்டு எழுந்தபோது நானும் உடன்கனன்றேன்” என்றாள். “ஆம், நீயும் நானும் அங்கிருந்த அத்தனை பெண்களும் அவ்வாறே அன்று எரிந்தோம். அந்த வஞ்சினம் அவள் உரைத்ததா என்ன? நானும் நீயும் உரைத்தது, பாரதவர்ஷத்து மகளிர் அனைவரும் அதை ஒருகணமேனும் தாங்களும் சொல்லியிருப்பார்கள். அது தோற்கலாகாது” என்றாள் பானுமதி.

அவள் முகம் குருதிகொண்டிருந்தது. கண்கள் சிவந்து நீர்படிந்திருந்தன. மூச்சு எழுந்தமைய “பெண்பழி நிகர் செய்யப்படவேண்டும். அது தோற்றதென்றால் விண்ணமைந்த மூதன்னையர் சீற்றம்கொள்வார்கள். நம் கொடிவழிகளென எழுந்துவரும் பெண்கள் பழிதூற்றுவார்கள்” என்றாள். “நம் கொழுநர் அவர்கள்” என்று நிலம்நோக்கி அசலை சொன்னாள். “ஆம், ஆயினும் ஆண்கள்” என்றாள் பானுமதி. அவளில் பிறிதொன்று குடியேறுவதை அசலை கண்டாள். வெண்ணிற வட்ட முகத்தில் நீல நரம்புகள் எழுந்தன. கழுத்தில் குருதிநாளங்கள் புடைத்தன. பற்கள் கிட்டித்து மூச்சொலி எழுந்தது.

“நீங்கள் மண்ணாளுங்கள். மண்ணுக்கென போரிட்டு நெஞ்சுபிளந்து உயிர்விடுங்கள். வீரப்பேருலகு சென்று அங்கும் நிறைந்திருங்கள். ஆனால் பெண்பழி கொண்டமைக்கு ஈடுசெய்தே ஆகவேண்டும். நெஞ்சுபிளந்து மண்ணில் கிடந்தாகவேண்டும். அதுதான் மூதன்னையர் விரும்பும் முடிவு” என்றாள் பானுமதி. மெல்ல மூச்சு தணிய உடலில் இருந்து ஒன்று எழுந்து அகன்றது. பெருமூச்சுடன் நடக்கத்

தொடங்கினாள். "நாம் அவ்வாறு எண்ணலாகாது, மூத்தவளே" என்றாள் அசலை. "கொழுநன் தொழுதெழுவதே நம் அறம் என்றுதான் கற்று வளர்ந்திருக்கிறோம்."

"ஆம், அவ்வாறுதான் நானும் இதுநாள் வரை எண்ணியிருந்தேன். இவையெவற்றையும் எனக்குள்கூட எண்ணிக்கொண்டதில்லை. அனைத்தையும் கடந்து இத்தனை ஆண்டுகளை கழித்திருக்கிறேன். ஆனால்..." என்றபின் திரும்பி "நீ கங்கைப் படித்துறைக்கு சென்றிருக்கிறாயா?" என்றாள். "ஆம்" என்றாள் அசலை. "அங்கே அம்பையன்னையின் ஆலயம் இருக்கிறது, அறிவாயா?" என்றாள் பானுமதி. "ஆம், ஒருமுறை சென்று தொழுதிருக்கிறேன்." பானுமதி "நம் குடியின் மூதன்னை அவர்" என்றாள். "ஊழின் எந்த ஆடலால் இக்குடிக்கே நாம் மருமகள்கள் என வந்தோம்? நம்மால் எண்ணிச் சென்று தொட்டுவிட முடியாது அதை."

"நான் அவர் ஆலயத்திற்கே சென்றதில்லை. பதினெட்டுமுறை அப்படித்துறையிலிருந்து படகு ஏறியிருக்கிறேன், ஒருமுறைகூட திரும்பி அவரை நோக்கியதில்லை. அவர் இங்கில்லை என்று எண்ணியே இத்தனை ஆண்டுகளை இங்கு கழித்தேன். ஆனால் அவர் என்னை விடவில்லை. என் கனவில் வந்தார்." அசலை "எப்போது?" என்றாள். "அவள் கானேகல் முடித்து உபப்பிலாவ்யத்திற்கு வந்த நாளில். அவள் அங்கு வந்த செய்தியை இரண்டு நாட்களுக்குப் பின்னர் பறவைச்செய்தியினூடாகவே அவையும் அரசரும் அறிந்தனர். நானும் அப்போதே அறிந்தேன். ஆனால் அன்னை அறிந்திருந்தார்" என்றாள் பானுமதி.

"ஐம்புரிக் குழலில் குருதி சொட்ட விழிகள் செங்கனல்துண்டுகளென எரிய என் முன் எழுந்தார். வெறுமனே

நோக்கிக்கொண்டு நின்றார். குழல்நுனியில் இருந்து குருதி சொட்டும் ஒலி மட்டும் கேட்டுக்கொண்டிருந்தது. அன்னையே என்றேன். அவர் விழிகள் என்னை பார்த்தனவென்றாலும் அறிந்திருக்கவில்லை. அன்னையே, நான் உங்கள் சிறுமகள் என்றேன். அருகே ஓர் ஓசை கேட்டது. விழித்துக்கொண்டு எழுந்தமர்ந்தேன். அன்று தோன்றியது, நான் எதையும் கடந்துசெல்லமுடியாதென்று. நான் என் மூதன்னையரின் தொடர்ச்சியென்று மட்டுமே இங்கே இருக்கமுடியும். இவர்கள் எவரும் எனக்கு அணுக்கர் அல்ல. தந்தையோ கொழுநரோ மைந்தரோ அல்ல. நான் வேறு" என்றாள் பானுமதி.

"அந்தக் குருதிசொட்டும் ஐம்புரிக் குழலை நான் முதல்முறை கனவில் கண்டது அவையில் குலச்சிறுமை நிகழ்ந்த அந்நாள் இரவில். எழுந்தமர்ந்து நெஞ்சைப் பற்றிக்கொண்டு விழிநீர் உகுத்தேன். அந்நாளுக்குப் பின் நான் அவர் என்னைத் தொட ஒப்பியதில்லை. பதினெட்டாம் நாள் என் மஞ்சத்தறைக்கு வந்தார். உள்ளே அழைத்து நான் சொன்னேன். என்னை தொடுக, ஆனால் என்னுள் ஐங்குழல் விரித்து அவள்தான் இருப்பாள் என்று. அஞ்சியவர்போல பின்னடைந்தார். ஒரு சொல் இன்றி என்னை நோக்கிக்கொண்டிருந்தார். பின்னர் திரும்பிச்சென்றார். அதன்பின் இன்றுவரை நாங்கள் விழிநோக்கிக்கொண்டதில்லை" என்று பானுமதி சொன்னாள்.

"என்னை இளையவர் அந்நாளுக்குப்பின் அணுகியதே இல்லை" என்றாள் அசலை. "நானும் அதை விரும்பவில்லை என்பதனால் அவரை தேடிச் சென்றதுமில்லை. பதினான்காண்டுகளில் இருமுறை அவையில் அருகே நின்றிருக்கிறேன். ஒருமுறைகூட முகம்நோக்கவோ சொல்லாடவோ செய்யவில்லை." தலையை அசைத்து

எண்ணங்களை கலைத்தபின் “நான் சேடியர் வழியாக உசாவினேன். அவர் அதன்பின் எந்தப் பெண்ணையும் அணுகவில்லை. அவருக்கு பணிசெய்யும் பெண்களையும் விலக்கிவிட்டார். பெண்களை விழிநோக்கவே அவரால் இயலவில்லை என்றனர். ஆம், அது அவ்வாறே என நானும் எண்ணிக்கொண்டேன்” என்றாள்.

பானுமதி “ஆம், வஞ்சத்தின் விசையால் அன்று அதை செய்தனர். அதிலிருந்து எவர் அகன்றாலும் அவர்களால் அகலமுடியாது. ஏனென்றால் அவர்கள் கீழ்மைகொண்டவர்கள் அல்ல. பேரறத்தாராகிய திருதராஷ்டிரருக்கும் பெருங்கற்பினள் காந்தாரிக்கும் பிறந்தவர்கள் அவர்கள். அன்னையின் முன் இன்றுவரை அவர்கள் வந்ததில்லை” என்றாள். அசலை “அன்னை மைந்தரை மெல்ல மன்னித்துவிட்டார் என்றே எனக்குத் தோன்றியது” என்றாள். “ஆம், அவர் மன்னித்துவிட்டார். ஆனால் உள்ளே அனல் இருப்பதை மைந்தர் அறிவர். ஆகவேதான் ஒருமுறைகூட அவர்கள் அவர் முன் வந்ததில்லை” என்றாள் பானுமதி.

அவர்கள் அதன்பின்னர் பேசிக்கொள்ளவில்லை. தலைகுனிந்து தங்கள் உள்ளோட்டங்களில் சுழித்தவர்களாக நடந்தனர். தேர்ச்சாலையில் நின்ற மூடுதேரில் ஏறிக்கொண்டனர். பானுமதி தலைகுனிந்து அமர்ந்திருக்க அசலை சாளரம் வழியாக நோக்கிக்கொண்டிருந்தாள். கோட்டைக்குள் நுழைந்து ஏரிக்கரையின்மேல் சென்ற பாதையில் வந்து நகருக்குள் நுழைந்தனர். பானுமதி மேற்கு மாளிகையின் சாளரத்தருகே இரு வண்ண ஆடையசைவை கண்டாள். மகாநிஷாதகுலத்து இளவரசியரான சந்திரிகையும் சந்திரகலையும். அவர்களை

அவள் பார்த்தும் நினைவுகூர்ந்தும் நெடுநாட்களாகின்றன என்று வியப்புடன் எண்ணிக்கொண்டாள்.

பேரரசியின் அரண்மனையில் வழக்கம்போல சடங்குபோலவே ஒவ்வொன்றும் நிகழ்ந்தன. கௌரவர்களின் அரசியர் அனைவரும் முறைப்படி அரச ஆடையணிந்து வந்திருந்தனர். ஐவரும் அறுவருமாக காந்தாரியின் அறைக்குள் சென்று அவளை வணங்கி சூழ்ந்து அமர்ந்தனர். அவள் ஒவ்வொருவரையாகத் தொட்டு நோக்கி அவர்களின் பெயர்களைச் சொல்லி அழைத்து நலம் உசாவினாள். இரைதேடும் மலைப்பாம்புகள் என அவளுடைய பெரிய வெண்ணிறக் கைகள் மகளிரின் கன்னங்களையும் தோள்களையும் தழுவி வருடி அலைந்துகொண்டே இருந்தன. அவர்களில் எவர் துயருற்றிருக்கிறார்கள், எவர் சோர்வுகொண்டிருக்கிறார்கள் என அத்தொடுகையாலேயே அவள் அறிந்தாள். அவர்களை மட்டும் அருகணைத்து தோளுடன் தழுவிக்கொண்டாள்.

ஒவ்வொருவரின் மணத்தையும் அவள் நினைவில் வைத்திருந்தாள். தைலங்கள், மலர்கள், சுண்ணம், செங்குழம்பு என அவர்கள் அணிந்திருந்த அத்தனை நறுமணங்களையும் அகற்றி அவர்களின் மணத்தை பிரித்தெடுக்க அவளால் இயன்றது. அதனாலேயே அவள் மருகியர் அவளை விரும்பினர். அவளுடன் தங்களுக்கு மிக ஆழ்ந்த தனிப்பட்ட தொடர்பு ஒன்று இருப்பதாக நம்பினர். தங்களுக்கே உரிய மணமே தாங்கள் என்பதுபோல, அதை அறிபவர் தங்களுள் கரந்துள்ள அனைத்தையும் தொட்டுவிட்டார் என்பதுபோல.

காந்தாரியின் முகம் மலர்ந்து சிவந்த உதடுகள் இழுபட்டு நீண்டிருந்தன. மெல்லிய பறவையொலி போன்ற சிரிப்பு எழுந்துகொண்டே இருந்தது. மகளிர் அவளருகே வந்ததுமே அனைத்தையும் மறந்து தாங்களும் சிரித்து களியாடத் தொடங்கினர். அகவையை இழந்து மணம்முடித்து அங்கு வந்துசேர்ந்த சிறிய பெண்களாக மாறினர். பானுமதி அரசியின் அருகிலேயே அமர்ந்திருந்தாள். ஒவ்வொருவரைப்பற்றியும் காந்தாரி அவளிடம் ஒருசில சொற்களை உரைத்தாள். சிலரை அன்புடன் கடிந்துகொண்டாள். அவள் முன் பெண்களை நிரையாக அனுப்பியபடி அறைவாயிலில் அசலை நின்றிருந்தாள்.

“இவள் ஸ்வாதா அல்லவா? என்னடி மெலிந்துவிட்டாய்?” என்றாள் காந்தாரி. ஸ்வாதா “சற்று மெலியவேண்டும் என்றனர் மருத்துவர். அன்னையே, எடைமிகுந்து என் கால்கள் வலிகொண்டுவிட்டன” என்றாள். “எடைமிகுந்தால் வலியெழும் என எவர் சொன்னது? என்னளவு எடைகொண்ட எவருள்ளனர் இங்கே?” என்றாள் காந்தாரி. “நீ ஸ்வாகை அல்லவா? உன் உடன்பிறந்தாள் ஸதி எங்கே?” என்றாள். பானுமதி “அனைவர் பெயரும் எனக்கே தெரியாது, அன்னையே” என்றாள்.

“தெரியாதா? இவ்வரண்மனையில்தானே அவர்கள் வாழ்கிறார்கள்? இதோ இவள் ஸ்வாதா, அவள் துஷ்டி, அவள் உடன்பிறந்தவள் புஷ்டி. ஸ்வஸ்தி, ஸ்வாகா, காமிகை, காளிகை, ஸதி, க்ரியை, சித்தை, சாந்தி, மேதா, பிரீதி, தத்ரி, மித்யா என அவர்கள் காந்தாரத்திலிருந்து சேர்ந்தே வந்த இளவரசிகள். இவர்களை நீ அறியவில்லை என்றால் எவர் அறிவார்கள்?” என்றாள் காந்தாரி. பானுமதி அப்பெண்களை நோக்கி புன்னகை புரிந்தாள்.

அசலை விழிகாட்ட பெண்கள் எழுந்து “நாங்கள் மீண்டும் வருகிறோம், அன்னையே. அடுத்த நிரை வெளியே காத்திருக்கின்றது” என்றனர். வெளியே இருந்து அவந்திநாட்டு இளவரசியரான அபயை, கௌமாரி, ஸகை, சுகுமாரி, சுகிர்தை, கிருதை, மாயை, வரதை, சிவை, முத்ரை, வித்யை, சித்ரை ஆகியோர் ஒரு குழுவாக உள்ளே வந்து காந்தாரியை வணங்கினர். “வாடி, நீ சிவை அல்லவா? வித்யை… என்னடி தாழம்பூ சூடியிருக்கிறாய்?” ஒரு பெண்ணின் கன்னத்தை வருடி “சுகிர்தை… நேற்றுதான் உன்னை தொட்டதுபோல் உணர்கிறேன். உன் தோழி கிருதை எங்கே?” என்றாள். கிருதை “இங்கிருக்கிறேன், அன்னையே” என்றாள்.

மூஷிககுலத்து இளவரசியர் கமலை, ருத்ராணி, மங்கலை, விமலை, பாடலை, உல்பலாக்ஷி, விபுலை ஆகியோர் அசலையின் அருகே வந்து காத்து நின்றனர். அவர்கள் முகங்கள் ஆலயம் தொழும் அடியார் என மலர்ந்திருந்தன. “அந்தியாகிவிடும் போலிருக்கிறதே? அன்னை ஓய்வெடுக்க வேண்டாமா?” என்றாள் மங்கலை. “அன்னைக்கு இதுவே பெரிய ஓய்வு” என்றாள் அசலை. “என் கணவர் கேட்டார், அங்கே என்னதான் செய்வீர்கள் என்று. மகிழ்ச்சியாக இருப்போம் என்றேன். அது அவருக்கு புரியவில்லை” என்றாள் கமலை. “உணவுண்பதுபோன்ற ஒரு நிலை என்று சொல்லவேண்டியதுதானே?” என்றாள் பாடலை. அவர்கள் சிரித்தனர்.

ருத்ராணி “அவருக்கும் வர விருப்பம்தான்” என்றாள். “இங்கு ஆண்களுக்கு ஒப்புதலில்லை. ருதுபங்கம் நிகழ்ந்தபின் அன்னை ஜீவசுத்தி நோன்பு கொள்கிறார். ஆண்களை சந்திப்பதை முற்றிலும் தவிர்க்கவேண்டும் அதற்கு” என்றாள் அசலை. “ஆம்,

அறிவேன். ஆனால் அதை காட்டில் சென்றுதான் செய்வார்கள் என்று என் சேடி சொன்னாள்” என்றாள் கமலை. “காடென்பது என்ன? உலகை விலக்கிக்கொண்டால் அனைத்துமே காடுதான்” என்றாள் உல்பலாக்ஷி. “எத்தனை நேரம் கொஞ்சிக்கொண்டிருக்கிறார்கள்?” என்று கமலை உள்ளே நோக்கினாள். “அவர்களுக்கு இன்னும் பொழுதிருக்கிறது. அனைவருக்கும் ஒரே நேரம்தான்” என்றாள் அசலை.

“மாத்ருபிரஸ்தான விழா வருகிறது. அன்னை அதற்கு செல்லும்போது நாங்களும் உடன்செல்வோம் அல்லவா?” என்றாள் கமலை. “இல்லை, அது நோன்புகொண்டவர்களுக்கு மட்டும்.” கமலை “என்ன நோன்பு?” என்றாள். “முன்னும் பின்னும் காமவிலக்கு நாட்கள் உண்டு” என்றாள் ருத்ராணி. “நாம்தான் ஆண்டுக்கணக்காக காமவிலக்கு கொண்டிருக்கிறோமே?” என்றாள் கமலை. அசலை திகைப்புடன் அவளை நோக்கியபின் பிறரை பார்த்தாள். “காமவிலக்கா?” என்றாள். கமலை தலைகுனிந்து “ஆம், அவையில் அது நிகழ்ந்தபின் நாங்கள் அவர்களை அணுகவிடவில்லை. அவர்களுக்கும் எங்களை அணுகுவதில் தயக்கமிருக்கிறது” என்றாள். “அனைவருமா?” என்றாள் அசலை. “ஆம், ஆண்டுகள் கடந்தபோது அதுவே வழக்கமென்றாகிவிட்டது” என்றாள் பாடலை. அசலை பெருமூச்சுவிட்டாள்.

பானுமதி கையசைக்கக் கண்டு “செல்க!” என்றாள். மறுபக்க வாயில் வழியாக உள்ளிருந்தவர்கள் வெளியே செல்ல அவர்கள் உள்ளே சென்றனர். காந்தாரி நெடுங்காலம் காத்திருந்து அவர்களை சந்தித்தவள்போல கூச்சலிட்டு நகைத்தபடி கைவிரித்து அவர்களை இழுத்து

அணைத்துக்கொண்டாள். சிரிப்போசையும் கூச்சல்களும் எழுந்தன.

உத்கலத்தின் இளவரசியர் திதி, சுரசை, பானு, சந்திரை, யாமி, லம்பை, சுரபி, தாம்ரை ஆகியோர் வந்து நின்றனர். அசலை அவர்களை சற்றுநேரம் நோக்கிவிட்டு “நான் ஒன்று கேட்கிறேன், மெய் சொல்க!” என்றாள். அவர்கள் ஏறிட்டுநோக்க “காமவிலக்கு நோன்பு கொண்டவர்கள் உள்ளீர்களா உங்களுள்?” என்றாள். சந்திரை தலைகுனிந்து “நாங்கள் அனைவருமே” என்றாள். லம்பை “அகத்தளத்தின் அரசியர் அனைவருமே அவ்வாறுதான்... அவர்கள் எவரும் இங்கு வருவதில்லை” என்றாள். அசலை பெருமூச்சுவிட்டாள்.

# குருதிச்சாரல் - 8

**பகுதி இரண்டு : பெருநோன்பு – 2**

வாயில்கதவு பேரோசையுடன் வெடித்து திறக்க அறைக்குள் நுழைந்த துருமசேனன் இரு கைகளையும் விரித்து உரத்த குரலில் “அன்னையே!” என்றான். சுவடியை நோக்கி தலைகுனிந்திருந்த அசலை திடுக்கிட்டு உடல் அதிர அவனை நோக்கியபின் மூச்சை இழுத்துவிட்டு சலிப்புடன் சுவடியை பீடத்தில் போட்டாள். “ஒப்புதல் இல்லாமல் அறைகளுக்குள் நுழையலாகாதென்று எத்தனை தடவை சொல்லியிருக்கிறேன் உன்னிடம்?” என்றாள். துருமசேனன் “இது என் அன்னையின் அறை. நான் காற்றுபோல உள்ளே நுழையலாம் என்று சொன்னார்கள்” என்றான். “யார் சொன்னார்கள்?” என்று அவள்

கேட்டாள். துருமசேனன் திரும்பி பின்னால் இருந்த வாமதேவனைக் காட்டி “இவன்” என்றான்.

துருமசேனனைப் போலவே கரிய பேருடல் கொண்டிருந்த வாமதேவன் வெண்ணிறப் பற்களைக் காட்டி சிரித்து “அது முன்பொருமுறை சொன்னது. அப்போது நீங்கள் இப்படி தனியறையில் இல்லை” என்றான். “நான் உன்னை மட்டும்தான் வரச்சொன்னேன்” என்றாள் அசலை. “ஆம், நான் மட்டும்தான் கிளம்பினேன். நான் மட்டும் செல்லும்போது இவனும் வருவதுண்டு. ஆகவே இவனும் வந்தான். அப்போது பிறரும் கூட வந்தனர்” என்றான் துருமசேனன்.

அசலை திடுக்கிட்டு “பிறர் என்றால்?” என்றாள். துருமசேனன் திரும்பிப்பார்த்து “கர்க்கன், காவகன், சபரன், சம்புகன், சித்ரன் ஆகியோர் வந்திருக்கிறார்கள்” என்றபின் எட்டிப்பார்த்து “படிகளில் உக்ரனும் சதுர்புஜனும் முக்தனும் ஏறிக்கொண்டிருக்கிறார்கள்” என்றான். அசலை தலையில் தட்டிக்கொண்டு “ஒரு படையே வருகிறது போல” என்று சலிப்புடன் சொன்னாள். “ஆம் அன்னையே, கூடத்தில் சாந்தனும் திரிகுணனும் பிரமதனும் கூர்மனும் சக்ரனும் திரிவக்ரனும் உக்ரபாகுவும் பேசிக்கொண்டிருக்கிறார்கள். அவர்களும் மேலே வந்துவிடுவார்கள்” என்றான்.

“இன்னும் ஒரு குழு முற்றத்தில் நிற்குமே?” என்றாள் அசலை மெல்ல கையூன்றி எழுந்தபின். “ஆம், எப்படி தெரியும்?” என்றான் வாமதேவன். “தெரிந்துகொள்வதற்கென்ன, நீங்கள் எவருமே தனி உள்ளம் இல்லாதவர்கள். இவன் வருவதை கண்ணால் பார்த்த அத்தனை பேருமே உடன்வந்துகொண்டிருப்பார்கள். ஆயிரம் பேரும் அரண்மனைக்குள் பெருகி நிறைந்தால்கூட வியப்படைய

மாட்டேன்” என்றாள் அசலை. துருமசேனன் “நீங்கள் எதற்காக என்னை பார்க்க வேண்டுமென்று சொன்னீர்கள்? தூதன் வந்து ஒன்றும் சொல்லவில்லை” என்றான். “வெறுமனே பார்ப்பதற்காகத்தான். நேற்று மாலை உன்னை கனவில் கண்டேன். பார்த்து நெடுநாள் ஆகிறதே என்று உன்னை மட்டும் வரச்சொன்னேன். ஆனால் நீங்கள் இப்படித்தான் வரமுடியுமென்று தெரிகிறது” என்றபின் சிரித்து “ஒருவகையில் இப்படி உங்களைப் பார்ப்பதும் நன்றாகவே இருக்கிறது. நூறுமுறை பார்ப்பதை சேர்த்தே பார்ப்பதுபோல” என்றபின் “வருக!” என்றாள்.

“அன்னையே, எனக்கு நீங்கள் சிறப்பான விருந்து எதையோ இங்கு ஒருக்கியிருப்பதாக இவன் சொன்னான்” என்றான் துருமசேனன். “விருந்து ஒருக்காமல் உங்களை அழைப்பேனா?” என்று அசலை மகனின் கைகளைப்பற்றி தன் தோளில் வைத்துக்கொண்டாள். அதன் எடையால் அவள் முதுகு சற்று வளைந்தது. “இத்தனை பெரிய உடலை தூக்கிக்கொண்டு எப்படித்தான் அலைகிறீர்களோ?” என்றாள். வாமதேவன் “மாறாக இவ்வளவு பெரிய உடலை எங்கள் உள்ளத்தால் நிறைக்க முடியவில்லை. ஏராளமான இடம் மிஞ்சியிருக்கிறது. ஆகவேதான் நாங்கள் நிலையழிந்துகொண்டே இருக்கிறோம்” என்றான்.

“கதைப்பயிற்சி நடக்கிறதா?” என்றாள் அசலை. “பயிற்சி நடக்கிறதா என்றால் ஒவ்வொரு நாளும் நடக்கிறது. அது பயிற்சியா என்று கேட்டீர்கள் என்றால் அதை மூத்த தந்தைதான் சொல்லவேண்டும்” என்றான் வாமதேவன். அவர்கள் அறையை விட்டு வெளியே வந்தனர். பேரொலியுடன் ஒரு கூட்டம் படிகளில் ஏறி மேலே வந்தது. “பார்த்து,

மாளிகையை இடித்துத் தள்ளிவிடப்போகிறார்கள்” என்றாள் அசலை. உக்ரன் இரு கைகளையும் விரித்து உரத்த குரலில் “அன்னையே!” என்றான். “கத்தாதே! உத்தரமே இடிந்து தலையில் விழுவது போலிருக்கிறது” என்றாள் அசலை. அதற்குள் சாந்தன் “அன்னையே!” என்று இரு கைகளையும் தட்டி வெடியோசை எழுப்பினான்.

“நீங்கள் ஒருவருக்கொருவர் மந்தணமாக எதையாவது சொல்லிக்கொள்வதுண்டா?” என்றாள் அசலை செவிகளை மூடிக்கொண்டபடி. “மந்தணமாகச் சொன்னால் அனைவருக்கும் தெரிந்துவிடுகிறது” என்றான் வாமதேவன். கும்பன் படிகளின் அருகேயிருந்த தூணில் தொற்றி மேலேறிவந்து அவள் இரு கைகளையும் பற்றி “அன்னையே” என்று கூவினான். “இன்னும் பல நாட்களுக்கு என் தலைக்குள் இந்த ஓசைதான் ஒலித்துக்கொண்டிருக்கப்போகிறது” என்றாள் அசலை.

அவளுக்குப் பின்னாலிருந்து நிகும்பன் “அன்னையே!” என்றான். திடுக்கிட்டு உடல் அதிர திரும்பிப்பார்த்து “மூடா! பின்னாலிருந்து கூச்சலிடாதே” என்றாள். “அன்னையே, நீங்கள் என்னை பார்க்கவேண்டுமென்று அழைத்தீர்களா?” என்றான் சம்புகன். “நான் பார்க்க அழைத்தது இவனை” என்றாள் அசலை துருமசேனனை சுட்டிக்காட்டி. “அதைத்தானே நான் சொன்னேன்?” என்றான் அவன். “சரி, வாருங்கள்” என்று அவள் அவர்களை அழைத்துச் சென்றாள்.

முன்னால் சென்ற ஒருவன் அங்கு பாதி திறந்திருந்த கதவை ஓங்கி உதைத்தான். பேரொலியுடன் அது கீலிலிருந்து உடைந்து அப்பால் மரத்தரையில் விழுந்து வெடியோசை எழுப்பியது. அனைத்து வாயில்களிலும் சாளரங்களிலும் சேடியரின் அஞ்சிய முகங்கள் தோன்றின. ஒருவன் ஓடிச்சென்று சாளரத்தில்

தோன்றிய முதிய சேடியின் தலையைப்பற்றி இழுத்து வெளியே விட்டான். “இவள் பெயர் மரீசி. இவளை எனக்குத் தெரியும். ஒருமுறை இவள் எனக்கு பன்றியூன் பரிமாறியிருக்கிறாள்” என்றான். “பன்றியூன்! பன்றியூன்!” என்று குரல்கள் எழுந்தன. “எல்லா ஊனும் ஒருங்கியிருக்கிறது. ஓசையிடாமல் வருக!” என்று அவன் தோள்களைத் தட்டி அசலை சொன்னாள்.

“நாங்கள் அங்கே ஊனுணவு உண்டுவிட்டுத்தான் வருகிறோம். ஆனால் வரும் வழியிலேயே எங்களுக்குள் ஒரு சிறுபூசல். இவன் சொன்னான், மூன்றுமாத யானைக் குழவியாகிய சந்தீபனை அவனால் தூக்க முடியும் என்று. தூக்கிப்பார் என்று அறைகூவினேன். இவன் அருகே சென்று அதை தூக்க முயன்றபோது அதன் அன்னை இவனை துதிக்கையால் அறைந்து தள்ளிவிட்டாள். ஆகவே நாங்கள் அனைவரும் சேர்த்து இவனைத் தூக்கி ஏரியில் போட்டோம். ஏரியிலிருந்து இவன் நீந்திக் கரையேறாமலிருக்கும்பொருட்டு பிறர் ஏரியில் குதித்தார்கள். அவர்கள் கரையேறாமல் இருக்கவேண்டுமென்று கரையிலிருந்த கற்களைத் தூக்கி நாங்கள் ஏரிக்குள் எறிந்தோம். அதன் பிறகுதான் பொழுதாகிவிட்டது என்று நினைவு வந்து இங்கே வந்தோம்” என்றான் துருமசேனன்.

“யாருடைய உடையும் நனைந்ததுபோல தெரியவில்லையே?” என்றாள் அசலை. “நாங்கள் வரும்வழியில் புரவிவீரர்கள் சென்றார்கள். புரவியைத் துரத்திப் பிடிக்கமுடியுமா என்று மார்க்கன் கேட்டான். புரவியிலிருந்த வீரனைத் தூக்கி அப்பால் வீசிவிட்டு அந்தப் புரவியை சவுக்கால் அடித்து துரத்தினோம். அதைத் துரத்தியபடி வடக்கு வாயிலினூடாக புராண கங்கைக்குள் நுழைந்து காந்தாரக் குடியிருப்புகளினூடாகச்

சுற்றி இங்கே வந்தோம் அதற்குள் உடைகள் காய்ந்துவிட்டன” என்றான் சாந்தன்.

துருமசேனன் “அன்னையே, உணவைப்பற்றி பேசத்தொடங்கியதுமே பசித்தது. இவ்வளவு தூரம் வருவதற்குள் பசி மிகுந்துகொண்டே செல்கிறது” என்றான். மிக அப்பால் வந்து பணிந்து நின்ற அடுமனைச் சேடியிடம் “உணவு ஒருங்கிவிட்டதா?” என்று அசலை கேட்டாள். “ஆம், அரசி” என்று அவள் சொன்னாள். “வாருங்கள், நான் உணவு அளிக்கிறேன்” என்று அசலை அவர்களை அழைத்துச் சென்றாள். “நீங்கள் மெதுவாக எண்ணி எண்ணி வைக்கிறீர்கள். எங்கள் உணவை நாங்களே அள்ளி எடுத்து உண்டால்தான் நிறையும்” என்றான் துருமசேனன். “இன்றொருநாள் ஓர் அகப்பை உணவை மட்டும் நானே வைக்கிறேன். அதன்பிறகு நீங்களே உண்ணுங்கள்” என்றாள் அசலை.

அகத்தளத்திற்குள் பெண்கள் உணவுண்ணும் கூடம் இருந்தது. அதில் மணை பரப்பி ஏற்கெனவே தொடுகறிகளை இலைகளில் பரிமாறியிருந்தனர். ஊன் உணவும் அப்பங்களும் கிழங்குகளும் கனிகளும் அருகே பெரிய கூடைகளில் நிரப்பி வைக்கப்பட்டிருந்தன. உணவைப் பார்த்ததும் கூச்சலிட்டபடி அவர்கள் ஒருவரை ஒருவர் உந்தி, ஒருவர் மேல் ஒருவர் தாவி, உள்ளே நுழைந்து மணைகளில் அமர்ந்தனர். “பன்றியூன்! பன்றியூன்!” என்று உதரன் கூவினான். சாந்தன் பாய்ந்தெழுந்து ஒரு பன்றித் தொடையை இரு கைகளாலும் தூக்கிக்கொண்டு சென்று தன்னிடத்தில் அமர்ந்து புலிபோல வாயால் கடித்து உண்ணத்தொடங்கினான். சில கணங்களிலேயே கூடம் மெல்லும் ஒலியால் நிறைந்தது.

துருமசேனனை கைபற்றி அழைத்துச்சென்று மணையில் அமரவைத்த அசலை “இரு, நான் பரிமாறுகிறேன் உனக்கு” என்றாள். “அதற்குள் இவர்கள் தின்று முடித்துவிடுவார்கள்” என்றான் துருமசேனன். “பொறு” என்றபின் அவள் திரும்பி அன்னம் பரிமாற ஏனத்தை எடுத்து அகப்பையை அதிலிட்டு திரும்புவதற்குள் துருமசேனன் மாட்டுத் தொடை ஒன்றை எடுத்து உண்ணத் தொடங்கிவிட்டான். கையில் அன்னத்துடன் அவள் அவனைப் பார்த்து சலிப்புடன் தலையசைத்தாள். அவன் விழிதூக்கி “இங்கு உணவு இன்னும் சுவையாக இருக்கிறது, அன்னையே” என்றான். அவள் சிரித்து “உண்ணுக!” என்று சொல்லி அவன் தலையைத் தொட்டு வருடினாள்.

மைந்தனை நினைக்கும்போது அவனை சிறுமகவாக கையிலேந்தி முலையூட்டிய நினைவுகளும், அவன் வந்து புன்னகைத்த கனவுகளும் கூடி எப்போதும் அவளை உளம் நெகிழச் செய்வதுண்டு. அவள் அந்நினைவுகளை தன்னைச் சூழ பரப்பி அதில் வாழ்ந்தாள். தன்னறையில் அவனுடைய இளமைக்கால ஆடைகளை வைத்திருந்தாள். அறைக்குள் அவற்றை வெவ்வேறு இடங்களில் பொருத்திவைத்து ஒவ்வொரு நாளும் அவனை ஒவ்வொரு அகவையில் உளம்பார்த்துக்கொண்டிருந்தாள். அவனைக் குறித்த தன் எண்ணங்களை ஒவ்வொரு நாளும் ஓலையில் எழுதி பேழையில் சேர்த்து வைப்பாள். பின்புலரியில் அவன் எப்போதும் அவள் கனவில் வந்தான்.

அவனுக்கு வெவ்வேறு மணங்கள் இருந்தன. கைக்குழந்தையாக இருக்கையில் அவன் வாயிலெழுந்த சற்றே புளித்த முலைப்பாலின் மணம். ஓடிவிளையாடுகையில் உலர்ந்த வியர்வையின் மணம். அவன் தலையிலெழும்

எண்ணெயும் தாழம்பூவும் கலந்த நெடி. வளரும்போது அவன் உடல்மணம் மாறத்தொடங்கியது. உப்பு கலந்த மண் மணம். கசங்கிய தழை மணம். பின்னர் குருதியின் கிளர்ச்சியூட்டும் மணம். ஆண்புரவிகளிலும் களிறுகளிலும் அந்த மணத்தை அவள் அறிந்திருந்தாள். அன்று காலை எந்த மணத்தில் அவன் தன் கனவில் தோன்றுவான் என்பதை முந்தைய நாளிரவில் படபடப்புடன் எண்ணிக்கொள்வாள். அவள் எண்ணியதைக் கடந்து முற்றிலும் புதிய தோற்றத்திலேயே அவன் எப்போதும் இருந்தான்.

கனவுகளில் கௌரவ நூற்றுவரின் முகமும் அவனுக்கு இருந்தது. நூற்றுவரில் முதல்வனாகவும் அவனே இருந்தான். ஒருமுறை மட்டும் இளைய யாதவனின் சிற்றுடலில் அவன் முகம் புன்னகையுடன் திகழ்ந்தது. எழுந்தமர்ந்து படபடப்புடன் அக்கனவை நினைவிற்கு மீட்டுக்கொள்ள முயன்றாள். தொடத் தொட கலையும் ஒன்றை பெயர்த்தெடுத்துப் பதிப்பதன் பதற்றமும் கைசலிப்பும் உளச்சலிப்பும் கடந்து பின்னர் எழுந்து நீராடச் செல்கையில் தன் இதழ்களில் ஒரு புன்னகையை கொண்டிருந்தாள்.

அவளால் எங்கும் அவன் காலடி ஓசையை தனித்துக் கேட்கமுடியும். அவர்கள் அனைவருமே இல்லம் இடிபடும் ஓசையில் நடப்பவர்கள். இரு கைகளையும் ஓங்கி அறைந்துகொண்டு கூச்சலிட்டுப் பேசுபவர்கள். கையருகே எட்டும் ஒவ்வொன்றையுமே ஓங்கி அறைபவர்கள். அவர்களை ஒருவரிலிருந்து பிறிதொருவர் என்று பிரித்தறியவே இயலாதென்று அஸ்தினபுரியில் அனைவரும் கூறினர். ஆனால் அவள் அவனை மட்டும் அறிந்திருந்தாள்.

ஒவ்வொரு எண்ணமும் மிக இயல்பாக அவனையே சென்றடைந்தது. அடுமனை வாயிலுக்குச் சென்று உள்ளிருந்து எழும் உணவு மணத்தை முகர்ந்தபடி நிற்கையில் அவனை மிக அண்மையாக உணர முடிந்தது அவளால். சூதர்கள் புரவிகளை உருமிவிடுகையில் பளபளத்து எழுந்தமையும் இறுகிய பெருந்தசைகளை சாளரத்தினூடாக நோக்கி நிற்பாள். அவன் தோள்களும் முதுகும் நெஞ்சும் என அவை உருக்காட்டும். இறுக்கமே அசைவென்றான அவற்றின் மிடுக்கு. பரு வடிவ ஆற்றலுக்கு மட்டுமே உரிய மிதப்பு. இங்கு நான் இக்கணம் என்னும் தன்னில் நிறைவு.

ஆனால் ஒவ்வொரு முறையும் அவனை நேரில் பார்க்கையில் ஏமாற்றத்தால் அவளுக்குள் விரிந்த அனைத்தும் சுருங்கி உள்மடங்கும். முற்றிலும் பிறிதொருவனாக அவன் வந்து அவள் முன் நிற்பான். பல மாதங்களுக்கு ஒருமுறைதான் அவள் அவனை நேரில் பார்த்தாள். ஒவ்வொரு முறையும் அவன் உருமாறிக்கொண்டே இருந்தான். தோள்கள் அகன்று தடித்தன. நெஞ்சிலும் கைகளிலும் மயிர் அரும்பியது. மேலுதடுக்குமேல் மென்மயிர் முளைத்து அடர்ந்து பெரிய மீசையென்றாகியது. தாடையில் கரிய வலை என தாடி வளர்ந்தது. அவன் குழல் சுருளற்ற தடித்த கருமயிர்க்கற்றைகளால் ஆனது. நீண்ட சரங்களாக அவன் தோளில் தொங்கியது. அவன் குரல் ஒவ்வொரு முறையும் பிறிதொன்றாகியது.

அவன் கண்கள் மட்டுமே மாறாதிருந்தன. ஆனால் அவற்றை எதிர்கொள்ள அவளால் முடியவில்லை. “அன்னையே!” என்ற பெருங்குரலுடன் அவன் வந்து நிற்கும்போது ஏன் அவனை அழைத்தோம் என்றே அவள் எண்ணுவாள். அவனை முடிந்த

விரைவில் திருப்பி அனுப்பிவிடவேண்டுமென்று தோன்றும். அத்தருணத்தைக் கடக்கவேண்டுமெனில் பொருளற்ற எதையேனும் பேசவேண்டும். அதை அவனே உருவாக்குவான். மிகப் பெரும்பாலும் அவன் உணவுண்ணும் பொருட்டே அங்கு வந்தான். அவன் உள்ளத்தில் அன்னை உணவின் வடிவில் அமைந்திருந்தாள். அவளும் உணவைப்பற்றிய பேச்சுகளினூடாக அவனிலிருந்து தன்னை முழுமையாக விலக்கிக்கொண்டாள்.

உணவுண்ணும்போது அவன் அவளிடமிருந்து முழுமையாக விலகிச்செல்வான். அப்போதுதான் இயல்பாக அவனை பார்க்கத் தொடங்குவாள். மெல்ல மெல்ல விழிக்குப் பழகி அன்றைய புத்துருவுடன் தன் முன் வந்து நின்றிருக்கும் அவனை தன்னவன் என்று தன்னுள்ளத்திலிருந்து தயங்கும் பெண்ணுக்கு உணர்த்துவாள். மிகத் தயங்கி நூறுமுறை பின்வாங்கி அவள் எழுந்து வந்து மைந்தனை அறியும் கணம் ஒன்று உண்டு. எப்போதும் அது ஒரு தொடுகை. நோக்கில் முற்றிலும் அயலவனாகத் தெரியும் அவன் தொட்டதுமே தன் மைந்தனாக ஆவதன் விந்தையை அவள் மீண்டும் மீண்டும் உணர்ந்தாள்.

இயல்பாக தோளையும் கையையும் தொடும்போதே கண் ஒன்று சொல்ல உள்ளம் பிறிதொன்று சொல்லும் அலைக்கழிவையே உவகையெனக் கண்டு அமர்ந்திருப்பாள். தலைக்குமேல் ஓங்கி பெருந்தோள்களும் எடைமிக்க கைகளுமாக நிற்பவன் முதிராத் தசைகொண்ட குழவி என தொடுகைக்கு தென்படுவான். புளித்த முலைப்பாலின் மணமும் பொடிவியர்வை மணமும் மூக்கினுள் எழுவதெனத் தோன்றும். அவள் அப்போது அவனை பெயர் சொல்லி அழைக்க விரும்புவாள். துருமசேனன் என்ற பெயர் அவள் நாவறியாதது.

அது அவன் முதுதந்தை மடியிலமர்த்தி நிமித்திகர் வகுத்தளிக்க அவனுக்கிட்ட பெயர். அவளிட்ட பெயர் கிருஷ்ணன். அவனை அவள் அவ்வாறு ஒருமுறைகூட அழைத்ததில்லை. எப்போதும் மைந்தா என்றே அழைத்தாள். மைந்தன் என்றே சொன்னாள்.

அவள் இயல்பாக கைநீட்டி அவன் முழங்காலை தொட்டாள். பன்றி நெஞ்சை பற்களால் நொறுக்கி ஊனை இழுத்து மென்று தின்றுகொண்டிருந்த அவன் திரும்பி அவளைப் பார்த்து புன்னகைத்தான். அத்தருணத்தில் அனைத்தும் விலகி மீண்டும் கருவறையிலிருந்து குருதி மணத்துடன் வெளிவந்தான். கண்ணீர் மல்குமளவுக்கு அவள் உளநெகிழ்வை அடைந்தாள். இதழ்களை அழுத்தியபடி தலைகுனிந்து பெருமூச்சுவிட்டாள். ஏறியிறங்கும் நெஞ்சை கைகளால் அழுத்தியபடி மூச்சை இழுத்துவிட்டு மெல்ல தன்னை நிலைப்படுத்திக்கொண்டாள். பின்னர் புன்னகையுடன் "தந்தையை பார்த்தாயா?" என்றாள்.

உண்பதை நிறுத்தி துருமசேனன் "அவர்களை நான் பார்த்தே நெடுநாட்களாகின்றன" என்றான். அவனருகே இருந்த வாமதேவன் "எங்களைப் பார்த்ததுமே சினம்கொள்கிறார்கள். சென்றமுறை தந்தை துர்மதர் என்னை ஓங்கி அறைந்தார்" என்றான். "நீ என்ன செய்தாய்?" என்று அசலை கேட்டாள். "நான் காலையுணவுக்காக ஒரு கன்றுக்குட்டியை தூக்கிச் சென்றுகொண்டிருந்தேன்." அசலை புருவத்தை சுளித்து "கன்றுக்குட்டியா?" என்றாள். "அது பசுக்கன்று என்று நான் பார்க்கவில்லை…" என்று வாமதேவன் சொன்னான். "ஏனென்றால் அதை கவிழ்த்தால்தான் பார்க்கமுடியும்" என்றான் சாந்தன்.

துருமசேனன் "சிம்மமும் புலியும் பசுவா காளையா என்று பார்த்தா வேட்டையாடுகின்றன? தந்தையருக்கு எதுவுமே

புரிவதில்லை” என்றான். “ஆம், உண்க!” என்று அவன் தோளை தட்டினாள் அசலை. பின்னர் கைகளால் மெல்ல அவன் முழங்கால் தசைகளை வருடத்தொடங்கினாள். முழங்கால் முடி யானைமயிர் என தடித்து கம்பிச்சுருளாக கையில் தட்டுப்பட்டது. இறுகிய கெண்டைக்கால் தசையை வருடி உள்ளங்காலை அடைந்தாள். ஒவ்வொரு விரலும் அடிமரத்து வேர்கள்போல மண் செறிந்து விரிந்திருந்தன. தன் மெலிந்த வியர்வை கொண்ட கைகளால் அவள் ஒவ்வொரு விரலாக தொட்டு இழுத்தாள். பெரிய நகங்களின்மேல் விரலோட்டினாள். விரலிடுக்குகளில் விரல் செலுத்தி அழுத்தினாள். அவன் காலை வருடிக்கொண்டே தலைகுனிந்து அமர்ந்திருந்தாள்.

ஏதோ கனவிலென இருந்த அவள் சூழுணர்ந்து விழித்துக்கொண்டபோது தன்னைச் சூழ்ந்து உணவுண்டுகொண்டிருந்த மைந்தர் திரளை நோக்கி ஒருகணம் எதுவும் புரியாதவள்போல திகைத்தாள். உண்ணலின் சுவையில் உடல்கள் மெல்ல அசைய கரியநீர் நிறைந்த சுனை என அலைகொண்டது அவ்வறை. ஊழ்கத்திலென நிலைமறந்த விழிகள். அவிகொள்ளும் அனலென அசைந்த உதடுகளும் கைகளும். மெல்லும், நொறுங்கும், அரையும் ஓசை. கலங்கள் ஓசையிட்டன. மூச்சொலிகள் அங்கே நாகக்கூட்டம் நிறைந்திருப்பதுபோல எண்ணச்செய்தன.

எத்தனை முகங்கள்! ஒருநோக்கில் ஒன்றுபோலெனக் காட்டி கூர்நோக்கில் ஒவ்வொன்றும் வேறென விளையாடுபவை. குருகுலத்தின் அத்தனை மூதாதையரும் முகில்திரண்டு மழையென இறங்குவதுபோல அஸ்தினபுரிமேல் பொழிந்துவிட்டனர் போலும். ஒவ்வொருவரும் பிற மானுடர்

உண்பதைவிட நான்குமடங்கு உண்கிறார்கள். உண்பதற்கு மட்டுமென்றே மண்நிகழ்ந்தவர்கள்போல. ஒருகணம் அவள் உடல் மெய்ப்புகொண்டது. அதன்பின்னரே அவ்வெண்ணம் அவளுள் துலங்கியது. இனியில்லை என்றுணர்ந்து இனி ஆயிரமாண்டுகளுக்கான அன்னத்தை உண்டு செல்ல வந்திருக்கிறார்களா என்ன?

உணவுண்டு எழுந்து அவன் உரக்க ஏப்பம் விட்டபோது புன்னகையுடன் அண்ணாந்து பார்த்து “அடுத்தது என்ன? ஏதாவது யானை வாலை இழுத்துப் பார்ப்பதுதானே?” என்றாள். “யானை வாலையா? ஏன்?” என அவன் ஆவலுடன் கேட்டான். அவள் சிரித்து “அறிவிலி, நான் வேடிக்கைக்காக சொன்னேன். மெய்யாகவே சென்று யானை வாலை இழுத்துவிடாதே” என்றாள். “ஏன் இழுத்துப்பார்த்தால்தான் என்ன?” என்று அவன் திரும்பி வாமதேவனிடம் கேட்டான். “இழுக்கலாம்தான்…” என்று அவன் சொன்னான். அசலை “வேண்டாம். நேராக உங்கள் காட்டில்லத்திற்கே செல்லுங்கள்” என்றாள். “ஆம், ஆனால் இம்முறை நாங்கள் தெற்குவாயில் வழியாக செல்வதாக இருக்கிறோம்” என்றான் சாந்தன்.

துருமசேனன் “அன்னையே, போர் வந்துகொண்டிருக்கிறது என்கிறார்களே. மெய்யாகவா?” என்றான். “எவர் சொன்னது?” என்றாள். “மூத்தவர் சொன்னார். ஆகவே நாங்களெல்லாம் முறையாக கதை பயிலவேண்டும் என்றார்.” அசலை “போர் வராது” என்றாள். துருமசேனன் “வரும்!” என்று உரக்க சொன்னான். “அதில் நாங்களெல்லாம் இறந்துபோவோம்.” அசலை நெஞ்சு உறைய சிலகணங்கள் நின்று பின் கடந்து “என்ன சொல்கிறாய், அறிவிலி?” என்றாள். “நிமித்திகர் பார்த்துவிட்டார்கள். எங்களிடம் செவிலி காந்திமதி வந்து

சொன்னாள்” என்றான் துருமசேனன். “நான் போரில் இறப்பதற்கு முன் நூறுபேரை கொல்வேன்.” அசலை “அதெல்லாம் வெறும் செய்திகள். போர் நிகழப்போவதில்லை” என்றாள்.

“அன்னையே, நாங்களெல்லாம் இறந்துவிட்டால் இந்த அடுமனையாளர்கள் குறைவாகத்தான் சமைக்கவேண்டும் இல்லையா?” என்றான் கும்பன். “தந்தையர் இருப்பார்களே. அவர்கள் நிறைய உண்பார்கள்” என்றான் சாந்தன். “தந்தையரும் இறப்பார்கள் என்றுதானே நிமித்திகர் சொன்னார்கள்? செவிலி சொல்வதை நீ கேட்டாய் அல்லவா?” என்றான் உக்ரன். அசலை “அதெல்லாமே பொய்... நீங்கள் வாழ்வீர்கள். சென்று விளையாடுங்கள்” என்றாள். “சென்று வருகிறோம், அன்னையே” என்று துருமசேனன் அவள் காலைத்தொட்டு தலைவைத்தான். “சென்று வருகிறோம், அன்னையே” என்று ஒவ்வொருவராக அவளை வணங்கினர். அது நெடுநேரமாக அலைகளைப்போல நிகழ்ந்துகொண்டே இருப்பதாக அவளுக்குத் தோன்றியது.

கூச்சலிட்டபடி அவர்கள் படியிறங்கி முற்றத்தில் பரவினர். அவர்களைக் கண்டதும் ஏவலர்களும் காவல்வீரர்களும் பதறி பல திசைகளிலாக பதுங்கிக்கொண்டனர். அவள் வாயில்வரை வந்து அவர்களை புன்னகையுடன் நோக்கி நின்றாள். பின்னர் பெருமூச்சுடன் எண்ணிக்கொண்டாள், அம்முறையும் அவள் அவனை அவளுக்கு உகந்த பெயர் சொல்லி அழைக்கவில்லை.

# குருதிச்சாரல் - 9

**பகுதி இரண்டு : பெருநோன்பு – 3**

அறைக்குள் அசலை நுழைந்தபோது பானுமதி மான்தோல் விரிப்பில் அமர்ந்து மடியின்மேல் மென்பலகையை வைத்து அதில் பரப்பப்பட்ட ஓலைகளை கூர்ந்து படித்துக்கொண்டிருந்தாள். நிமிர்ந்து நோக்கி “வாடி” என்று புன்னகைத்து அருகே விரிக்கப்பட்ட மான் தோல் இருக்கையை காட்டினாள். அசலை சுவரில் சாய்ந்தமர்ந்து கைகளை மார்பில் கட்டிக்கொண்டாள். பானுமதி மேலும் சுவடிகளை படித்து முடித்து கட்டிவைத்துவிட்டு “நாம் அனுப்பிய ஓலைக்கு மறுமொழிகள் வந்துள்ளன” என்று சொன்னாள். “ஆம், அனைத்தும் சுருளோலைகள், நோக்கினேன்” என்றாள் அசலை.

“பெரும்பாலான அரசர்கள் லட்சுமணனுக்கு மகள்கொடை அளிப்பதை தங்கள் பேறென்றே மறுமொழி அளித்திருக்கின்றனர். ஒரு சில அரசர்கள் மட்டும் தங்கள் குலக்குழுக்களைக் கூட்டி உசாவிவிட்டு மறுமொழி அளிப்பதாக எழுதியுள்ளார்கள். மறுத்து எவருமே எழுதவில்லை” என்றாள் பானுமதி. அசலை “ஆம், அனைவரும் ஒரு பெரும்போரை எதிர்பார்க்கிறார்கள். அதில் அஸ்தினபுரி வெல்லுமென்பதில் எவருக்கும் ஐயமில்லை. சத்ராஜித்தாக மும்முடி சூடப்போகும் துரியோதனரின் பட்டத்து இளவரசருக்கு தன் மகளை கொடுக்க விரும்பாத அரசர் எவரும் இருக்கமாட்டார்கள்” என்றாள்.

பானுமதி போர் குறித்த சொல்லால் சற்று உளம் சீண்டப்பட்டு முகம் சுளித்தாள். ஆனால் உடனே கடந்துவந்து புன்னகைத்து “உடனடியாக மைந்தரில் மூத்தவர்கள் அனைவருக்குமே பெண்நோக்கி மணம் செய்வித்துவிடலாம் என்று நினைக்கிறேன். லட்சுமணனின் மணத்தூதுக்கு அரசர்கள் எந்த வகையில் எதிர்வினையாற்றுவார்கள் என்றுதான் சற்று

தயங்கினேன். இது நம்பிக்கையளிக்கிறது” என்றாள். “அஸ்தினபுரியின் இளவரசர்களுக்கு மகள்கொடை அளிக்க எவர் தயங்க வேண்டும்?” என்றாள் அசலை. “அது நீயும் நானும் எண்ணுவது. நம் மைந்தரைப்பற்றி பாரதவர்ஷம் முழுக்க இருக்கும் சித்திரம் பிறிதொன்று. கல்லாதவர்கள், கடும்போக்கு கொண்டவர்கள், மானுட உடல் கொண்ட விலங்குகள்... சூதர்கள் சொல்லி பரப்பிவைத்திருக்கிறார்கள்” என்றாள் பானுமதி.

அசலை புன்னகைத்து “ஒரு போரில் வென்றுவிட்டார்கள் என்றால் அதுவேகூட அவர்களுக்கு புகழ்சேர்க்கும். ஏனெனில் பாரதவர்ஷத்தின் பெரும்பாலான அரசர்கள் அத்தகையவர்கள்” என்றாள். பானுமதியும் சிரித்து “ஆம், ஒருவகையில் அது உண்மை” என்றபின் கைகளைத் தூக்கி சோம்பல்முறித்து “அமைச்சரை அழைத்து பிற அனைவரின் இயல்புக்கேற்ப பெண்கள் எங்குள்ளனர் என்று பார்க்கச் சொல்லியிருக்கிறேன். இப்போது வந்திருக்கும் ஒப்புதல் ஓலைகளிலிருந்து லட்சுமணனுக்கு உகந்த பெண் யாரென்று தேர்ந்தெடுக்க வேண்டும். கலிங்க அரசனின் மகள் சௌபர்ணிகை அழகி. நிமித்திகர் அவளுக்கு பன்னிரண்டு மைந்தர் பிறப்பார்கள் என்று கணித்திருக்கிறார்கள். கலிங்கம் நமது நட்பு நாடும்கூட” என்றாள்.

அசலை புன்னகைத்தாள். பானுமதி “மாளவ அரசமகள் சுப்ரதீபையை அடுத்ததாக எடுத்து வைத்திருக்கிறேன். படைக்கலம் பயின்றவள். அங்கு அவையமரும் வழக்கமும் அவளுக்கு இருக்கிறது” என்றாள். “காந்தாரத்திலிருந்தும் ஓலை வந்துள்ளது. அவனுக்கு இரண்டு துணைவியர் அமைவதை தவிர்க்க முடியாது. ஒருத்தி பாரதவர்ஷத்தின் ஷத்ரிய குலத்திலிருந்தும் இன்னொருத்தி காந்தார நாட்டின்

தொல்குடியிலிருந்தும். இரு வல்லமைகளாக அவர்கள் அவன் பின்னால் நிற்க வேண்டும். என்றிருந்தாலும் காந்தாரமே அவனுடைய அடித்தள வல்லமை.”

அசலை “ஆம், அதையும் எண்ணிப் பார்க்கவேண்டியதுதான்” என்றாள். பானுமதி சுவடிகளை பேழையில் இட்டு அப்பால் நீக்கிவிட்டு “ஏன் ஆர்வமின்றி பேசுகிறாய்?” என்றாள். “இல்லையே” என்றாள் அசலை. “மைந்தனின் திருமணம் எனும்போது அன்னைக்கு வரவேண்டிய உளஎழுச்சி உனக்கு ஏற்படவில்லை” என்றாள் பானுமதி. “அவ்வாறு ஒரு உளஎழுச்சி ஏற்படுமா என்ன?” என்று அசலை கேட்டாள். பானுமதி சில கணங்களுக்குப்பின் முகம் மாறுபட “உருவாகாதுதான். அவனுக்கு மணம்தேவை எனும் எண்ணம்கூட என்னில் எழவில்லை. அதை தந்தை சகுனிதான் என்னிடம் சொன்னார்” என்றாள்.

“ஆமாம், நானும் அப்போது இருந்தேன்” என்றாள் அசலை. “அவர் சொன்னது வேறு பொருளில். போர் நிகழ்வதற்குள் மைந்தர் அனைவருக்கும் திருமணம் செய்துவைத்துவிட வேண்டும் என்று அவரிடம் கணிகர் சொல்லியிருக்கிறார். மைந்தரின் கொடிவழியினர் அவர்களின் மகளிர் கருவில் உருவான பிறகு அவர்கள் களம் காணலாம் என்னும் பொருளில். அவர் அவ்வாறு சொன்னதே எனக்கு கடும்கசப்பை உருவாக்கியது. என் முகத்தைப் பார்த்ததும் அவர் சொல்மாற்றிக்கொண்டார். நாம் படை திரட்டிக்கொண்டிருக்கிறோம் அரசி, இளவரசர்களுக்கு மணம் செய்விப்பதனூடாக அரசர்களைத் திரட்டி குருதியுறவினூடாக இறுக்கி செறிவாக்கிக்கொள்ள முடியும் என்றார். ஆம் அது நன்று என்று சொல்லி திரும்பிவந்தேன்.”

“உண்மையில் ஓரிரு நாட்கள் அவ்வெண்ணத்தையே என் உள்ளத்தில் எழவிடாமல் ஒதுக்கினேன். தந்தை சகுனி சொல்லியனுப்பினார் என்று சேடியர் வந்து என்னிடம் கேட்டுக்கொண்டே இருந்தார்கள். உகந்த முறையில் அனைவருக்கும் ஓலை செல்லட்டும் என்று ஓர் ஆணையை பிறப்பித்துவிட்டு அதை அப்படியே மறந்துவிட்டேன். இன்று கலியின் ஆலயத்திற்குச் சென்று வணங்கி மீள்கையில்தான் என்னென்ன ஓலைகள் வந்துள்ளன என்று பார்க்கவேண்டுமெனத் தோன்றியது. இவற்றை தந்தை சகுனியின் அமைச்சுநிலையிலிருந்து வரவழைத்தேன்” என்றாள். அசலை பெருமூச்சுவிட்டாள். “என்னடி?” என்றாள். “மணம் என்பது மங்கலம். ஆனால் இன்று அதைப்பற்றிய பேச்சு குறைமங்கலமாகவே காதில் ஒலிக்கிறது.” பானுமதி “ஏனடி?” என்றாள். அசலை தலைகுனிந்து அமர்ந்திருந்தாள். “சொல்லடி” என்றாள் பானுமதி.

“இன்று காலைமுதலே என்னில் ஒரு நிலைகுலைவு இருந்தது. புலரியில் கனவில் மைந்தனை பார்த்தேன். அவனை அழைத்து பார்த்துவிடவேண்டும் என்று எண்ணினேன். அந்நினைவுடன்தான் கலி ஆலயத்திற்கு வந்தேன். அவன் என்னை பார்க்க வந்தான். உணவு பரிமாறி அனுப்பினேன். ஆனால் அவன் சென்றபின் அப்படியே படுத்துவிட்டேன். உள்ளத்திலிருந்தும் உடலிலிருந்தும் அனைத்து விசைகளும் ஆற்றலும் ஒழுகி மறைய, இமையைக்கூட அசைக்க முடியாதென்று தோன்றியது. மஞ்சத்தில் பிணமெனப் படுத்திருந்தேன். நீங்கள் அழைக்கும் செய்தி வந்தபோது சேடியர் பலமுறை என்னிடம் சொல்லவேண்டியிருந்தது.”

பானுமதி அவளை கூர்ந்து நோக்கி “நாம் எதை அஞ்சுகிறோம்?” என்றாள். அசலை “நாம் அதைப்பற்றி பேசவேண்டாமே” என்றாள். “அஞ்சுவதிலிருந்து ஒளிந்தால் அது கரவுப்பாதைகளினூடாக வந்து நம்மை சூழ்ந்துகொள்ளும். அச்சமூட்டுவதை விழிதூக்கி நேருக்கு நேர் நோக்குவதே நன்று என்று இளமையிலேயே நமக்கு கற்பிக்கப்பட்டுள்ளது” என்றாள் பானுமதி. அசலை “அச்சம் ஒன்றுமில்லை” என்றாள். “புரிந்துகொள்ளமுடியாத ஒரு வெறுமை, அல்லது பொருளின்மை. அல்லது உள்ளீடின்மை என்று அதை சொல்லவேண்டுமா? எப்படி சொன்னாலும் எஞ்சும் ஓர் உளநிலை அது.”

பானுமதி கைகளை மார்பில் கட்டியபடி பின்னுக்கு சாய்ந்தாள். இருவருக்கும் இடையே பொழுது கடந்துசென்றது. சிறிய அசைவொன்றில் உயிர்கொண்டு திரும்பிப்பார்த்த பானுமதி “இன்று கலிதேவனிடம் என்ன வேண்டிக்கொண்டாய்?” என்றாள். “நானா?” என்றாள் அசலை. “ஆம், நீதான். என்ன வேண்டிக்கொண்டாய்?” என்றாள் பானுமதி. “என் மைந்தனுக்காக.” பானுமதி “மைந்தனுக்காக மட்டுமா?” என்றாள். அசலை அவள் விழிகளைப் பார்த்து “ஆம்” என்றாள். பானுமதி “நான் என் மைந்தனுக்காகவும் உடன்பிறந்தாருக்காகவும் மட்டுமே வேண்டிக்கொண்டேன்” என்றாள். “அதுவே நம் இயல்பு. நாம் நம்மை ஏமாற்றிக்கொள்ள வேண்டியதில்லை” என்று அசலை சொன்னாள்.

பானுமதி பெருமூச்சுடன் “ஒவ்வொரு நாளும் இந்த அரண்மனை சுருங்கிச் சுருங்கி வருகிறது. இதன் சுவர்கள் இருபுறமும் அழுத்தி விலாவெலும்புகள் நொறுங்கும்படி விசை கொள்கின்றன” என்றாள். “நான் நன்கு உறங்கி

பதினான்காண்டுகளாகின்றன. உடலும் உள்ளமும் களைத்து பின்னிரவில் சற்றே துயில்வேன். முன்புலரியில் ஏதேனும் ஒரு கனவில் விழித்தெழுவேன். பின்னர் நெடுநேரம் நெஞ்சழிந்து அமர்ந்திருப்பேன்" என்றாள் அசலை. "இன்று எனக்கும் ஒரு கனவு. எப்போதும்போல கொடுங்கனவு" என்றாள் பானுமதி.

அசலை பேசாமல் அமர்ந்திருந்தாள். "என்ன கனவு என்று கேட்கமாட்டாயா?" என்றாள் பானுமதி. அசலை அவளை நோக்கி திரும்பவேயில்லை. சில கணங்கள் காத்திருந்துவிட்டு பானுமதி தன் விழியை திருப்பிக்கொண்டாள். அசலை எழுந்து "நான் கிளம்புகிறேன்" என்றாள். "ஏனடி இந்த ஓலைகளை நீ பார்க்கவேண்டாமா?" என்றாள் பானுமதி. "இதில் எந்த முடிவையும் நாம் எடுக்க முடியாது. இவ்வோலைகள் அனைத்தையும் காந்தார அரசரிடமே அளித்துவிடுவோம். மைந்தருக்குரிய இளவரசியை அவர் தெரிவு செய்யட்டும்" என்றாள் அசலை. "ஏன்?" என புருவம் சுளித்து பானுமதி கேட்டாள். "நாம் தெரிவுசெய்வதில்தான் மங்கலப்பிழை உள்ளது."

பானுமதி விழிநிலைக்க நோக்கி அமர்ந்திருந்தாள். "நாம் செய்யவேண்டியது மைந்தரின் அன்னையென்று அவை சென்று நிற்பதை மட்டுமே" என்றாள் அசலை. மீண்டும் ஓர் அமைதி உருவாகியது. விண்ணிலிருந்து எடைமிக்கதும் விழியறியாததுமான ஒரு அரக்கு உள்ளே பொழிந்து அனைத்தையும் கவ்வி நிறுத்திவிட்டதைப்போல. அங்கிருக்கும் அனைவரும் அதில் சிக்கிச் சிறகடித்துக்கொண்டிருக்கிறார்கள். நெடுநேரம் கழித்து பானுமதி மீண்டுவந்து "மைந்தன் எப்படி இருக்கிறான்?" என்றாள். "அவனுக்கென்ன? வழக்கம் போல உணவும் களியாட்டும்" என்றாள் அசலை. பானுமதி

புன்னகைத்து “நல்லூழ்கொண்டவர்கள். அவர்கள் துயரென்பதையே அறிந்ததில்லை” என்றாள்.

“ஆம், நானும் அதையே எண்ணினேன். மானுடர்க்குரிய உளச்சோர்வும் தனிமையும் வெறுமையும்கூட அவர்களிடம் உருவானதில்லை. எப்போதும் மாபெரும் பறவைக்கூட்டம்போல கலைந்து சுழன்றுகொண்டே இருக்கிறார்கள்” என்றாள் அசலை. பானுமதி “அவர்கள் இங்கு அரசர் பிறந்தபோது வந்து சூழ்ந்த காகங்களின் மானுடப்பிறப்பு என ஒரு சூதர்சொல் உண்டு” என்றாள். அசலை “எனக்கு அவர்களைப் பார்க்கும்போது ஏரியில் அலைகள் அடித்துக்கொண்டிருப்பதைப்போல் தோன்றுகிறது. ஒரு கணமும் ஓயாது ஏதோ நிகழ்ந்துகொண்டிருக்கிறது. கூர்ந்து நோக்கினால் ஒன்றேதான் மீண்டும் மீண்டும் நிகழ்கிறது. மீண்டும் கூர்ந்து நோக்கினால் ஓர் அலைபோல் பிறிதொன்று இல்லை” என்றாள்.

பானுமதி உரக்க நகைத்து “நல்ல ஒப்புமையடி. இதை ஏதேனும் சூதனிடம் சொல். பாட்டில் வைப்பான்” என்றாள். அசலை சிரித்தபடி “வருகிறேன்” என்று திரும்பியபோது கதவு திறந்து பானுமதியின் அணுக்கச்சேடி சத்யை வந்து தலைவணங்கினாள். பானுமதி “என்ன?” என்றாள். “இளைய பால்ஹிகர் தங்களை சந்திக்கும்பொருட்டு பொழுதுகோரியிருக்கிறார்” என்றாள் சத்யை. “யார், பூரிசிரவஸா?” என்று பானுமதி கேட்டாள். “ஆம், இன்று காலைதான் அவர் நகர் நுழைந்திருக்கிறார். அவையில் தோன்றி முறைமைகளை முடித்தபின் அரசரையும் காந்தாரத்து அரசரையும் சந்தித்திருக்கிறார். இப்போது ஓய்வெடுக்கச்

சென்றுவிட்டார். மாலையில் தங்களை சந்திக்க முடியுமா என்று பொழுது கோரினார்."

"தனியாகவா?" என்று பானுமதி கேட்டாள். "இல்லை, இளைய அரசியும் கூடவே இருக்கலாம் என்று அவரே சொன்னார்" என்றாள் சத்யை. பானுமதி அசலையை பார்த்துவிட்டு "பெண்களை நன்றாக பயின்றவர்" என்றாள். அசலை புன்னகைத்தாள். "என்னடி?" என்றாள் பானுமதி. "பெண்களைப் பயில்பவர்கள் அவர்களை அடைவதே இல்லை" என்றாள் அசலை. "பிறகு?" என்றாள் பானுமதி சிரிப்பு தெரிந்த முகத்துடன். "விற்கலை பயில்பவர்களே பறவைகளை அடைகிறார்கள். பறவைகளை நோக்குபவர்கள் கவிதைகளை எழுதுகிறார்கள்" என்றாள் அசலை. பானுமதி உரக்க சிரித்தாள். அவள் சிரிக்க விரும்பியது தெரிந்தது.

சத்யை "நான் என்ன சொல்ல?" என்றாள். "எதன்பொருட்டு சந்திப்பு என்று சொன்னாரா?" என்றாள் பானுமதி. "இல்லை அரசி, தனிப்பட்ட சந்திப்பென்று மட்டுமே சொல்லப்பட்டது" என்றாள் சத்யை. "இன்று மாலை புறத்தோட்டத்தில் சந்திக்கலாம் என்று அவரிடம் சொல்" என்று பானுமதி சொன்னாள். சத்யை வணங்கி வெளியே சென்றாள். "எதற்காக என நினைக்கிறீர்கள்?" என்றாள் அசலை. "தெரியவில்லை. பெரும்பாலும் மைந்தர்களின் மணம்குறித்ததாக இருக்கும்" என்றாள் பானுமதி.

அசலை "இல்லை, வேறேதோ ஒன்று" என்றாள். பானுமதி "வேறென்ன?" என்றாள். அசலை "அவர்தான் இங்கே போருக்கான அனைத்தையும் ஒருங்கமைக்கிறார். தூதுகள் செல்கிறார். அது குறித்த ஒன்று. அக்கையே, அது பெரும்பாலும்

வரவிருக்கும் போர்குறித்தே” என்றாள். பானுமதி எண்ணி தலையசைத்து “ஆம்” என்றாள்.

பூரிசிரவஸ் அவர்களை நோக்கி சீரான நடையில் வருவதை அசலை நோக்கினாள். அவன் அரசமுறையாக வருவதை அந்நடை வழியாக தனக்கே சொல்லிக்கொள்கிறான் எனத் தோன்றியது. அவர்களை அணுகி முறைப்படி தலைவணங்கி “அஸ்தினபுரியின் அரசியையும் இளைய அரசியையும் வணங்குகிறேன். இந்நாள் எனக்கு சிறப்புற அமைந்துள்ளது. என் குடியின்பொருட்டும் வணக்கங்களை தெரிவிக்கிறேன்” என்றான். பானுமதி “மலைநாட்டின் இளவரசரை சந்திப்பது எனக்கும் நற்பேறு” என்றாள். பூரிசிரவஸ் அவள் காட்டிய இருக்கையில் கால்களைச் சேர்த்து முறைப்படி அமர்ந்து “நான் தங்கள் பொழுதை வீணடிக்க விழையவில்லை, அரசி. என் செய்தியை சொல்லிவிடுகிறேன்” என்றான். பானுமதி “சொல்க!” என்றாள்.

“சில நாட்களுக்கு முன்னர் பால்ஹிகத்திலிருந்து வரும்போது வழியில் ஒரு சாவடியில் இந்திரப்பிரஸ்தத்தின் இளைய அரசியும் சிபிநாட்டு மகளுமான தேவிகையை சந்தித்தேன். குருஷேத்ரத்தில் புண்டரீகம் என்னும் வாவியில் நீராடி பூசனைசெய்து திரும்பிக்கொண்டிருந்தார்கள்.” பானுமதி “ஆம், அவர்களுக்கும் உங்கள் அரசுக்குமான குடித்தொடர்புகளை அறிவேன்” என்றாள். அச்சொல்லில் இருந்தே அவள் குறிப்பதை உணர்ந்துகொண்ட பூரிசிரவஸ் சற்று முகம்சிவந்து மெல்லிய மூச்சுத்திணறலுக்கு ஆளானான். “ஆம், அவர்களை நான் முன்னரே அறிவேன்” என்றான்.

“புண்டரீகத்திற்கு எதற்காகச் சென்றாள்?” என்றாள் பானுமதி. “அங்கே வாவிநீராடி அன்னையை வணங்கினால் மைந்தர்நலம் திகழும் என அவர் நாட்டு நாகசூதன் கணித்துரைத்திருக்கிறான்” என்றான் பூரிசிரவஸ். “அனைத்து அன்னையரும் மைந்தர்களின் பிறவிநூல்களுடன் நிமித்திகரை அணுகிக்கொண்டிருக்கிறார்கள்” என்றாள் பானுமதி. “அரசி, சிபிமகள் என்னிடம் சொன்னதை சொல்கிறேன். அவர் மைந்தர் போரிலிருந்து மீளமாட்டார் என்பது நாகசூதனின் குறிச்சொல். இருதரப்பிலும் மைந்தர்களே உயிரிழப்பார்கள் என்று அவர் சொன்னார். அது உண்மை என்று அக்கணமே நானும் உணர்ந்தேன்.”

“ஏனென்றால் இது நிலவுரிமைக்கான போர். நாளை தன் கொடிவழிகளுக்கும் இதே நிலப்பூசலின் இடர் எழக்கூடாதென்றே இருசாராரும் எண்ணுவார்கள். அரசி, போர் நிகழ்ந்தால் முதல் அம்புகளே இளையவர்களை நோக்கித்தான் தொடுக்கப்படும்” என்று பூரிசிரவஸ் தொடர்ந்தான். “பெருமழை என கூடிப்பெருகி சூழ்ந்து வந்துகொண்டிருக்கிறது போர். இதுவரை பாரதவர்ஷத்தில் அத்தனை அரசர்களும் இரு தரப்பிலாக அணிதிரண்டதில்லை. இந்நிலம் இரண்டாகப் பிளந்து மோதிக்கொள்ளவிருக்கிறது.” அசலை “ஆனால் அதை ஒருக்கூட்ட முயன்றவர்களில் நீங்கள் முதன்மையானவர்” என்றாள்.

“மெய்தான். கலிங்கம், வங்கம், பௌண்டரம், கூர்ஜரம், மாளவம், அவந்தி, காமரூபம், அயோத்தி, கோசலம், விதர்ப்பம் என அனைத்து நாடுகளுக்கும் மன்னர்பொருட்டு தூதுசென்றவன் நானே. நம் தரப்பு வலுவாக ஆவதே போர் தவிர்க்கப்படுவதற்கான சிறந்த வழி என எண்ணினேன். வெல்லற்கரிய தரப்பாக நம்மை நிறுத்திக்கொண்டால்

அனைத்தும் அடங்கிவிடுமென்றுதான் அனைவரையும் நம் தரப்புக்கு கொண்டுவந்தேன்” என்று பூரிசிரவஸ் சொன்னான்.

“இன்று என் கணிப்புகள் இரு வகையில் பிழையாகிவிட்டன என உணர்கிறேன். நான் இளைய யாதவர் என்னும் பேராற்றலை கணிக்கத் தவறிவிட்டேன். இந்நாட்டில் ஷத்ரியர்களுக்கு மட்டுமே பயின்ற படைகள் உள்ளன என்றும் அவர்களே ஒப்பந்தங்களின்படி இணைந்து போரிடமுடியும் என்றும் எண்ணினேன். அசுரரும் நிஷாதரும் ஒன்றிணைந்த படைகளாக ஆன வரலாறே பாரதவர்ஷத்தில் இல்லை. அதை இளைய யாதவர் நடத்திக்காட்டிவிட்டார். உருவாகி வந்துள்ள பாண்டவப் படையும் நமக்கு பெரும்பாலும் நிகரானதே” என்றான் பூரிசிரவஸ். “அதோடு அவர்களிடமிருப்பவர்கள் அசுரர்களும் நிஷாதர்களும். அவர்கள் களத்தில் யுதிஷ்டிரரின் ஆணைகளை நிறைவேற்றுவர் என எண்ணவேண்டியதில்லை. நம் குழந்தைகளை அவர்கள் வெறும் அம்பிலக்காகவே எண்ணுவர்.”

பெருமூச்சுடன் “நிலைமை இதுதான், அரசி. நீங்கள் இதை எந்த அளவில் உணர்ந்துள்ளீர்கள் என அறியவில்லை. ஆகவேதான் நான் வந்தேன். இன்றுகூட அவர்கள் வெல்லும் நிலையில் இல்லை. ஆனால் அவர்களால் நமக்கு பேரழிவை அளிக்கமுடியும். நாம் பாதுகாப்பாக இருக்கிறோம் என்றும் வென்றுவிட்டோமென்றும் எவ்வகையிலும் எண்ணிக்கொள்ள வேண்டியதில்லை” என்றான் பூரிசிரவஸ். பானுமதி “நாம் வெல்லமுடியாது” என்றாள். “ஏன்?” என அவன் திகைப்புடன் கேட்டான். “ஏனென்றால் அவரை மானுடர் எவரும் வெல்லமுடியாது” என்றாள் பானுமதி. “அத்துடன் அவளுடைய சொல் நின்றுவெல்லும் பெருந்தழல்.”

பூரிசிரவஸ் சொல்லவிந்து அமர்ந்துவிட்டான். அசலை “அவள் என்ன சொன்னாள்?” என்றாள். பூரிசிரவஸ் மீண்டுவந்து “இப்போரை தவிர்க்கவேண்டும் என்றார். இது ஆண்களின் போர், ஆனால் அழிவும் துயரும் பெண்களுக்கே மிகுதி. ஆகவே அவர்கள் போரைத் தவிர்க்க முயன்றாகவேண்டும் என்றார். பேரரசி காந்தாரியும் நீங்களிருவரும் இளவரசி துச்சளையும் அங்கநாட்டு அரசியும் இதில் இணைந்துகொள்ளவேண்டும். என்ன செய்யலாமென்று எண்ணி இயன்ற எல்லா வழிகளிலும் முயலவேண்டும். தங்கள் மைந்தரைக் காப்பதே அவர்களின் முதன்மைக்கடன்” என்றான்.

“அதை முதலில் எண்ணவேண்டியவர் பாஞ்சாலத்து அரசி” என்றாள் அசலை. “ஆம், அதையே நானும் சொன்னேன். பாஞ்சாலத்தரசியிடம் சென்று பேசுமாறு சொல்லி சிபிமகளை அனுப்பினேன். உங்களிடம் சொல்லும்பொருட்டு நான் இங்கு வந்தேன்” என்றான் பூரிசிரவஸ். “பால்ஹிகரே, பாஞ்சாலத்தரசி பகையொழிந்தாலும் அவள் சொன்ன வஞ்சினம் மறையாது. சொல்லப்பட்ட சொற்கள் சொன்னவர்களுக்குரியவை அல்ல. அவை பிறந்த மைந்தர்போல. கருவறை குழவிகளை திரும்ப உறிஞ்சிக்கொள்ள முடியாது” என்றாள் பானுமதி. பூரிசிரவஸ் அவள் சொற்களை நம்பமுடியாதவன்போல பார்த்தான்.

“அந்தச் சொற்கள் நின்றிருக்கும். முழுமைகூடிய எதுவும் தெய்வமே என்கின்றன நூல்கள். நன்றோ தீதோ, அன்போ பகையோ. அச்சொற்கள் பகைகொண்டெழுந்த தெய்வங்கள். அவை உரிய குருதிபலி கொள்ளாமல் அமையா” என்று பானுமதி சொன்னாள். பூரிசிரவஸ் வாய்நீர் விழுங்கும் ஒலி மட்டும் கேட்டது. அவன் இமையசையும் ஒலி கேட்கிறதா என அசலை எண்ணினாள். “அரசி…” என அவன் தொண்டையைக்

கமறியபடி அழைத்தான். “அவ்வஞ்சினத்தில்கூட நம் மைந்தர் குறிக்கப்படுவதில்லை.” பானுமதி “ஆம், நம் மைந்தர் அந்தப் பன்னிரு படைக்களத்தில் இல்லை” என்றாள். “அதனால் என்ன? இது அவர்களின் தந்தையரின் போர். அவர்கள் களம்புகாதொழிந்தால் அவர்களுக்கு என்ன மதிப்பிருக்கமுடியும்?”

பூரிசிரவஸ் “அரசி, அவ்வஞ்சினம் அவ்வண்ணமே நிகழட்டும். அதற்கும் போருக்கும் என்ன தொடர்பு?” என்றான். “போர் அந்த வஞ்சினத்துக்காக அல்ல. அது ஒரு முகம் மட்டுமே. போர் நிகழ்வது மண்ணுக்காக. அஸ்தினபுரி மண்ணுக்காக மட்டும் அல்ல, பாரதவர்ஷ மண்ணுக்காக. மண்ணை ஆளும் கொள்கைகள் போரிடுகின்றன. அப்போரை நாம் தவிர்ப்போம். வஞ்சினத்தின்பொருட்டு நிகழும் போர் அவற்றுக்குரியவர் நடுவே நிகழ்க! பீமனும் அர்ஜுனனும் அரசரையும் இளையவரையும் சகுனியையும் தனிப்பட்ட முறையில் அறைகூவட்டும். நெஞ்சுபிளக்கட்டும், குருதியுண்ணட்டும். அத்தகைய போர்கள் முன்னரும் நிகழ்ந்துள்ளன இங்கு.”

“ஆம்” என்றாள் பானுமதி. “அதுவே நானும் சொல்லிவருவது. இப்பெரும்போர் தவிர்க்கப்படவேண்டும். இது மைந்தரை மைந்தருக்கு எதிராக நிறுத்தும் போர்.” பூரிசிரவஸ் “நான் நேரடியாகவே சொல்கிறேனே. பீமனின் கதையும் அபிமன்யூவின் அம்புகளும் நம் குலத்தை முற்றழிக்க எழுந்துள்ளன. நாம் அவற்றுக்கும் நம் மைந்தருக்கும் குறுக்காகச் சென்று நின்றாகவேண்டும்” என்றான். பானுமதி தலைகுனிந்து அமர்ந்திருந்தாள். “சொல்லுங்கள், அரசி. உங்கள் சொல்லுக்கு பெருமதிப்புண்டு” என்றான் பூரிசிரவஸ். “நான் என்ன சொல்லவேண்டும்?” என்றாள் பானுமதி. “நீங்கள்

அரசரிடம் பேசுங்கள்” என்றான் பூரிசிரவஸ். “இல்லை, நான் அவரிடம் பேசமுடியாது” என்றாள் பானுமதி.

சற்றுநேரம் கழித்து “நீங்கள் பிதாமகர் பீஷ்மரிடம் பேசலாம். துரோணரிடமும் கிருபரிடமும் பேசலாம். இருவரும் இணைந்து பேரரசி காந்தாரியிடம் பேசலாம். அங்கர் நம் குரலை உணர்ந்தாரென்றாலே போர் பெரும்பாலும் தவிர்க்கப்பட்டுவிட்டது என்றே பொருள்” என்றான் பூரிசிரவஸ். “இப்போரை எவராலும் எப்போதைக்குமாக தவிர்க்கமுடியாதென்று எனக்குத் தெரியும். மீண்டும் ஒரு தலைமுறைக்கு ஒத்திப்போடலாம். நம் கண்முன் நம் மைந்தர் இறப்பதை மட்டும் தவிர்க்கலாம்...” பானுமதி “அவர்கள் வாழவேயில்லை, பால்ஹிகரே. நான் எண்ணுவது அதை மட்டுமே” என்றாள்.

“இரண்டு தலைமுறைக்காலம் இப்போரை தள்ளிவைக்க பீஷ்மரால் இயன்றது. அவர்பொருட்டு நாம் மீண்டுமொருமுறை இதை செய்வோம். தன் குடி முழுதழிவதைக் காணும் தீயூழை அவருக்கு அளிக்காமாலிருப்போம்” என்றான் பூரிசிரவஸ். பானுமதி பெருமூச்சுவிட்டு “நான் பீஷ்மபிதாமகரிடம் பேசுகிறேன்” என்றாள். “நீங்கள் அரசரிடமும் பேசலாம்” என்றான் பூரிசிரவஸ். “அதனால் பயன் ஏதுமில்லை, பால்ஹிகரே. அதை நான் நன்கறிவேன்” என்றாள் பானுமதி. “போர் ஒத்திவைக்கப்படவேண்டும் என்றால் இறுதியாக எதை அளிக்கவேண்டியிருக்கும்? ஆகக் குறைந்த அளவில்?” என்றாள். பூரிசிரவஸ் “அஸ்தினபுரியின் நிலம். அவர்கள் ஒப்புக்கொள்ளுமளவுக்கு சற்றேனும்” என்றான். “அது நிகழாது” என்றபடி பானுமதி எழுந்துகொண்டாள்.

பூரிசிரவஸும் எழுந்தான். “அங்கே தேவிகை பாஞ்சாலத்து அரசியிடமும் பிற அரசியரிடமும் பேசுகிறேன் என்று சென்றிருக்கிறார். அவருடைய கண்ணீரின் ஆற்றலை நான் நம்புகிறேன். அதைவிட பாஞ்சாலத்து அரசியின் உள்ளக்கனிவை.” பானுமதி மெல்ல புன்னகைத்து “அவள் கனிவாள் என்றே நான் எண்ணுகிறேன், பால்ஹிகரே. கனியாதது ஒன்றே. இளைய யாதவர் உள்ளம். அது கனியாதவரை ஒன்றும் நிகழாது” என்றாள். “அவர்…” என பூரிசிரவஸ் தடுமாறினான். “வெறும் போர்வீரர் அல்ல. அவர் சாந்தீபனி குருநிலையின் இன்றைய முதலாசிரியர்… அவரிடம் கனிவில்லையேல்…”

பானுமதி “மலரின் உச்ச வடிவமே வைரம்” என்றாள். அசலையின் தோளைத் தொட்டு “செல்வோமடி” என்றாள். திகைப்பு மாறா முகத்துடன் பூரிசிரவஸ் “விடைகொள்கிறேன், அரசி” என தலைவணங்கினான். அவன் செல்வதை நோக்கியபடி பானுமதி பெருமூச்சுவிட்டாள். “வா” என்றபடி பானுமதி நடக்க எடைமிகுந்து தலை தழைய அசலை உடன்நடந்தாள்.

# குருதிச்சாரல் - 10

### பகுதி இரண்டு : பெருநோன்பு – 4

“பேரரசி உணவருந்திக்கொண்டிருக்கிறார்” என்று சத்யசேனை சொன்னாள். அசலை “நாங்கள் காத்திருக்கிறோம்” என்றாள். சத்யவிரதை “உணவுண்கையிலேயே உங்களிடம் பேசவிரும்புகிறார்களா என்று கேட்டுச் சொல்கிறேன்” என்று உள்ளே சென்றாள். அவளுடன் வந்த காந்தார இளவரசியர்

ஸ்வாதா, துஷ்டி, புஷ்டி, ஸ்வஸ்தி, ஸ்வாகா, காமிகை, காளிகை, ஸதி, க்ரியை, சித்தை, சாந்தி, மேதா, பிரீதி, தத்ரி, மித்யா ஆகியோர் நின்றனர். அவர்கள் வருவதைக் கண்டதுமே சத்யசேனையின் முகம் மாறிவிட்டது. அவர்களின் விழிகளை ஏறிட்டு நோக்க அவள் அஞ்சுவதுபோலத் தோன்றியது.

கோசல இளவரசிகளான காமிகை, கௌசிகை, கேதுமதி, வசுதை, பத்ரை, சிம்ஹிகை, சுகிர்தை ஆகியோர் தனியாக அப்பால் நின்றிருந்தார்கள். அவர்களுடன் அவந்திநாட்டு இளவரசியரான அபயை, கௌமாரி, ஸகை, சுகுமாரி, சுகிர்தை, கிருதை, மாயை, வரதை, சிவை, முத்ரை, வித்யை, சித்ரை ஆகியோர் இணைந்துகொண்டனர். வேசரநாட்டு இளவரசியரான குமுதை, கௌமாரி, கௌரி, ரம்பை, ஜயந்தி ஆகியோர் ஒட்டரநாட்டு அரசியர் விஸ்வை, பத்ரை, கீர்த்திமதி, பவானி, வில்வபத்ரிகை, மாதவி ஆகியோருடன் பிறிதொரு குழுவாக நின்றிருந்தனர். அவர்களின் மூச்சொலியும் ஆடைநலுங்கும் ஒலியும் பெரிய கூடத்தை நிறைத்திருந்தது.

சத்யவிரதை வெளியே வந்து “இத்தனைபேர் உள்ளே செல்லமுடியாது. அக்கை உணவருந்தி முடித்துவிட்டார். கைகழுவியதும் வெளியே கூட்டிவருகிறோம்” என்றாள். அசலை “நன்று” என்றாள். சத்யவிரதையும் அவள் விழிகளை நோக்குவதை தவிர்த்தாள். அவர்கள் எவரும் எவர் விழிகளையும் நோக்கவில்லை. கூடத்தின் சாளரங்களில் திரைச்சீலைகள் அலைபாய்ந்துகொண்டிருந்தன. மூஷிககுலத்து இளவரசியர் கமலை, ருத்ராணி, மங்கலை, விமலை, பாடலை, உல்பலாக்ஷி, விபுலை ஆகியோர் காமரூபத்து இளவரசியர் ஏகவீரை, சந்திரிகை, ரமணை, நந்தினி, ருக்மிணி, அபயை,

மாண்டவி, சண்டிகை ஆகியோருடன் உள்ளே வந்தனர். உள்ளே இருந்தவர்கள் அவர்களை விழிகளால் வரவேற்றனர்.

எப்படி இயல்பாகவே நூற்றுவரும் பல தனிக் குழுக்களாக ஆகிக்கொள்கிறார்கள் என அசலை வியந்தாள். நூற்றுவர் என்பது ஒரு குழுவல்ல, திரள். திரளாக இருப்பது நெருக்கடிகளில் ஆற்றலையும் பாதுகாப்புணர்வையும் அளிக்கிறது. ஆனால் சிறுகுழுக்களே அன்றாடத்துக்கு உதவுவன. பகிர்வதற்கும் பிறரை உருவாக்கிக்கொண்டு வெறுப்பதற்கும். இந்த நூற்றுவரும் மடிப்பு மடிப்பாக விரிந்து சென்ற அரண்மனைகளுக்குள்ளேயே ஒருவரை ஒருவர் சார்ந்தும் வெறுத்தும் புறம்கூறியும் இக்கட்டுகளில் உதவியும் வாழ்க்கையை கழித்துவிட்டிருக்கிறார்கள். அவர்கள் அனைவருக்குமே நெற்றியோரம் நரைவரிகள் எழுந்திருந்தன. கண்கள் நிழல்கொண்டிருந்தன.

ஆனால் முதுமையை முதலில் வெளிக்காட்டுவது பற்கள். அவை ஈறுகளிலிருந்து நீட்டிக்கொள்வது. வாயைச் சூழ்ந்து விழும் கோடு. நானும் இப்படித்தான் இருக்கிறேனா என அசலை எண்ணிக்கொண்டாள். இன்னமும்கூட எனக்கு அகவை தெரியலாம். இவர்கள் அனைவரிலும் விளக்கவியலாத சிறுமியரியல்பு ஒன்றும் திகழ்கிறது. அவர்கள் விழிகளை உருட்டி, தலையை ஆட்டி பேசிக்கொள்கையில், வாய்பொத்தி கண்கள் ஒளிர நகைக்கையில், ஒருவரோடொருவர் தாழ்ந்த குரலில் பூசலிடுகையில், துயர்கொண்டு கண்ணீர் மல்குகையில் அவர்களுக்கு பதினைந்து அகவை கடக்கவில்லை என்றே தோன்றும்.

இந்த அரண்மனைக்குள் காலமில்லை போலும். எவரையும் சந்திக்காமல், எந்த இடர்களிலும் தொட்டுக்கொள்ளாமல்

இவர்கள் காலத்தை கடந்து வந்துவிட்டார்கள். அகவை என்பது வாழ்தலின் தடம். இவர்கள் வாழவே இல்லை. நாளை இவர்களின் உடல்கள் முதுமைகொண்டு சிதையிலேறுகையில் ஆத்மா காற்றில் எழுந்து நின்று ஏன் என்றறியாது தவிக்கும் போலும். பிறிதொரு பிறவிகொண்டு துயர்களும் உவகைகளுமாக இருண்டும் ஒளிர்ந்தும் வாழ்ந்து நிறைந்தாலொழிய இவர்களுக்கு விண்ணுலகில்லை. அவ்வெண்ணங்களைக் கருதி அவளே உள்ளத்துள் புன்னகைத்துக்கொண்டாள்.

மச்சநாட்டு இளவரசியர் சிம்ஹிகி, தாரை, புஷ்டி, அனங்கை, கலை, ஊர்வசி, அமிர்தை ஆகியோர் மல்லநாட்டு இளவரசியர் தேவமித்ரை, தேவபிரபை, தேவகாந்தி, தேவமாயை, தேவகி ஆகியோருடன் வந்தனர். மச்சர்களும் மல்லர்களும் நிஷாதர்களிடமிருந்து எழுந்துவந்த அரசகுடியினர். அவர்களின் குலம் அவர்களின் தோற்றத்திலேயே தெரிந்தது. கரிய பெரிய உடல்களும் எருமைவிழிகளும் ஒளிரும் வெண்பற்களும் கொண்டவர்கள். உத்கலத்தின் இளவரசியர் திதி, சுரசை, பானு, சந்திரை, யாமி, லம்பை, சுரபி, தாம்ரை ஆகியோர் வந்தபோது அவர்கள் முறைப்படி சொல்லுரைத்தாலும் வெளிர்நிறமும் சிறிய விழிகளும் ஒடுங்கிய தோள்களும் கொண்ட அவர்களுடன் ஒன்றாகச் சேரவில்லை. இருவண்ணப் பறவைகள் என தனியாகவே அவர்கள் குழுக்கொண்டனர்.

விதேகநாட்டு இளவரசியர் துஷ்டி, வபுஸ், சாந்தி, ஸித்தி ஆகியோர் ஔஷதி, இந்திராணி, பிரபை, அருந்ததி, சக்தி, திருதி, நிதி, காயத்ரி ஆகிய திரிகர்த்தர்நாட்டு இளவரசிகளுடன் உள்ளே வந்தனர். அனைவரும் வந்துவிட்டார்களா என எண்ணிப்பார்க்கவேண்டும் என அசலை எண்ணியதுமே

அறியாது புன்னகைத்தாள். அப்புன்னகை சத்யசேனையை சீண்டியதுபோல அவள் “எவர் பேரரசியிடம் பேசப்போகிறீர்கள் என்பதை முன்னரே வகுத்துக்கொள்க! அக்கை அமர்ந்தபின் இங்கே கூச்சல்கள் எழலாகாது” என்றாள். “நான் மட்டுமே பேசப்போகிறேன்” என்றாள் அசலை.

மச்சநாட்டு அரசி தாரை “நானும் பேசவேண்டுமென்று வந்துள்ளேன்” என்றாள். அசலை அவளை திகைப்புடன் பார்த்தாள். அவளை முன்னரே கண்டதாகக்கூட நினைவு சொல்லவில்லை. “நான் விகர்ணரின் துணைவி” என அவள் அசலையின் திகைப்பைக் கண்டதும் சொன்னாள். “ஆம், நினைவுகூர்கிறேன்” என்றாள் அசலை. அந்தப் பெண் அதற்குமுன் எங்கும் குரலெழுப்பியதை அவள் கேட்டதே இல்லை. ஷத்ரிய குலத்து அரசர்கள் நடுவே அவள் குலத்தவர் சேடியர்போலவே உடலசைவு கொண்டிருப்பார்கள். “ஆம், நீயும் பேசலாம். ஆனால் ஓரிருவரே பேசமுடியும். பேசுபவர் எவர் என்பதை இப்போதே சொல்லிவிடுங்கள்” என்றாள் அசலை. வேறு எவரும் எதுவும் சொல்லவில்லை. தாரை “நான் பேசுகிறேன்” என்றாள்.

அசலை அவளை நினைவுகூர்ந்தாள். விகர்ணன் மணந்த காந்தார நாட்டு விருஷகரின் மகள் மித்யை மகட்பேறில் இறந்தபோது அவன் மறுமனைவியாக அவளை மணந்தான். மச்சநாட்டு இளவரசியும் வாதவேகனின் அரசியுமான அனங்கையின் இளையவள் அவள். மெலிந்த சிற்றுருவுடன் சிறுமியைப்போல வந்தவள். அரண்மனையின் சூழலில் முற்றிலும் அயலவளாக தன் தமக்கையின் சேடியென திரிந்தவள். காலை சற்று தட்டினாலே மயிர்சிலிர்த்து விழித்து உறையும் எலி போன்றவள். ஆனால் அவள் அனைத்தையும்

கூர்ந்து நோக்கும் விழியொளி கொண்டிருந்தாள். கூர்ந்து நோக்குபவர்கள் எப்போதும் கடந்துவிடுகிறார்கள்.

சத்யசேனை காந்தார இளவரசி ஸ்வாதாவிடம் "நீ பேசவேண்டாமா?" என்றாள். ஸ்வாதா ஆம் என்று தலையசைத்தாள். "அப்படியென்றால் பேசவேண்டும் என சொல்வதற்கென்ன? மண்பாவை என நின்றிருக்கிறாய்?" என்றாள் சத்யசேனை. ஸ்வாதா தலைகுனிந்தாள். சத்யவிரதை உள்ளிருந்து வந்து "பேரரசி வருகிறார்" என்றாள். இரு சேடியர் வந்து காந்தாரி அமர்வதற்கான இருக்கையை பட்டுவிரித்து செம்மையாக்கினர்.

பேரரசி கால்வைப்பதற்கான பட்டுத்தலையணை பீடத்தின் அருகே கொண்டு வைக்கப்பட்டது. அந்த ஏற்பாடுகள் வழியாகவே நுண்வடிவில் அவள் வந்துவிட்டதாகத் தோன்றியது. அங்கிருந்த ஒவ்வொருவரும் அவள் இருப்பை உணரத்தொடங்கினர். அணியாடைகளை சீர்படுத்தினர். நிமிர்ந்தும் தனித்தும் நின்றனர். சத்யசேனை குரல் கொடுத்ததும் பணிப்பெண் முன்னால் வந்து சங்கு ஊதி "பேரரசி காந்தாரி வருகை!" என்றாள். காந்தாரியின் உருவம் வாயிலில் தோன்றியதும் மருகியர் அனைவரும் ஒரே குரலில் வாழ்த்துரைத்தனர்.

சத்யவிரதையின் தோளைப்பற்றியபடி பெருமூச்சுவிட்டுக்கொண்டு மெல்ல காந்தாரி நடந்துவந்தாள். அவளுடைய பெரிய வெண்ணிற உடலில் தசைகள் அலையடித்தன. கழுத்திலும் தோள்களிலும் மென்தசை நனைந்த வெண்பட்டு என ததும்பியசைந்தது. சின்னஞ்சிறிய கால்களால் அவள் எடையை தாளமுடியவில்லை. பெரிய

கைகளின் முடிவில் மிகச் சிறிய மணிக்கட்டும் குழந்தைகளுடையதுபோன்ற உள்ளங்கையும். அவள் மெல்ல பட்டுப்பீடத்தில் அமர்ந்துகொண்டு பெருமூச்சுவிட்டாள். “என்னடி, நேற்றுதான் வந்தீர்கள்? என்ன மீண்டும்?” என்றாள். அசலை “நான்தான் தங்களை சந்திக்க விரும்பினேன். இவர்களும் உடனிருக்க விழைந்தனர்” என்றாள்.

“நீதான் நாளும் என்னை வந்து பார்க்கிறாயே? பிறகென்ன?” என்றாள் காந்தாரி. “இது அரசமுறையான சந்திப்பு, பேரரசி” என்றாள் அசலை. காந்தாரியின் முகம் சுருங்கியது. மற்ற பெண்களை நோக்கி செவிகூர்ந்தபோது அவள் முகம் கோணலாக திரும்பியது. பெருமூச்சுவிட்டு “சொல்!” என்றாள். அசலை “பேரரசி, இப்போது என்ன நிகழ்ந்துகொண்டிருக்கிறது என்று அறிந்திருப்பீர்கள்” என்றாள். “பெரும்போர் நெருங்கி வந்துகொண்டிருக்கிறது. அரசியலாளர் சொல்வதைப் பார்த்தால் ஒரு மாதத்திற்குள் போர் மூண்டுவிடக்கூடும். நாடெங்கிலுமிருந்து படைகள் அஸ்தினபுரி நோக்கி வந்துகொண்டிருக்கின்றன. தெற்கே திருவிடத்திலிருந்தும் தமிழ்நிலத்திலிருந்தும்கூட படைகள் கிளம்பி வருகின்றன.”

காந்தாரி தலையசைத்தாள். “பாரதவர்ஷம் கண்டவற்றிலேயே பெரும்போராக அது இருக்கலாம். இங்கே என்னென்னவோ முரண்கள் சென்ற பலநூறாண்டுகளாகவே வளர்ந்து வந்துள்ளன. ஷத்ரியர்களுக்கும் பிற குடி அரசர்களுக்கும் பூசல். தொல்குடிகளுக்கும் பிறருக்குமான பூசல். கடல்வணிகத்தால் வளர்ந்த நாடுகளுக்கும் உள்நில நாடுகளுக்குமான வணிகச்சிக்கல்கள். சாலைகளில் சுங்கவரி கொள்வதைப்பற்றிய மோதல்கள். தொல்வேதங்களுக்கும் எழும்வேதங்களுக்குமான கருத்துப்போர். நம்மால் புரிந்துகொள்ளவே முடியாத அளவுக்கு

சிக்கலானவை அவை. அனைத்தும் இந்த ஒற்றைமுனையில் இன்று கூர்கொண்டு நின்றிருக்கின்றன. நம் குடிப்போரில் பாரதவர்ஷம் தன் அனைத்துச் சிக்கல்களையும் தீர்த்துக்கொள்ள எண்ணுகிறது.”

“வீழ்வது நம் குருதி, அரசி” என்றாள் அசலை. “நம் இளமைந்தரே இப்போரில் முதற்களப்பலியாவர். நாம் நம் குடிப்பூசலை நமக்குள்ளேயே தீர்த்துக்கொள்ளவேண்டும். குடும்பப்பூசலில் ஊர் தலையிட்டால் அது அக்குடும்பத்தையே பலிகொள்ளும் என சிற்றூரில்கூட பேசிக்கொள்வதுண்டு. இந்தப் போர் பொருளற்ற பேரிழப்பு. அதற்கு நாம் ஒப்புக்கொள்ளலாகாது.” காந்தாரி ஏதோ சொல்வதற்குள் அசலை குரலை உயர்த்தி “நாம் பெண்கள். நாம் செய்வதற்கு எல்லை உண்டு. நாம் சொல்வதை அவர்கள் இதுவரை பொருட்படுத்தியதில்லை. இனிமேல் பொருட்படுத்துவார்கள் என்றும் சொல்லமுடியாது. ஆனாலும் நாம் முழுமூச்சாக முயலவில்லை என்றே சொல்வேன். நம் உயிரையும் முன்வைத்து எதிர்க்கவில்லை. நம் மைந்தருக்குமுன் நாம் இறப்போம் என நாம் அவர்களிடம் இன்னும் சொல்லவில்லை” என்றாள்.

காந்தாரி அமைதியிழந்து தலையை அசைத்தாள். அவளுடைய சிறிய சிவந்த வாய் திறந்து மூடியது. மீண்டும் பெருமூச்சுவிட்டு “மூத்தவள் எங்கே?” என்றாள். “அக்கை உங்களிடம் தனியாக பேசுவார்கள். இளையவர்களுடன் வந்து உங்களை சந்திக்கும்படி அவர்கள்தான் சொன்னார்கள்” என்றாள் அசலை. “உம்” என்ற காந்தாரி மீண்டும் தலையை அசைத்துக்கொண்டே இருந்தாள். அவள் விழிகள் நெடுநாட்களாகவே நோக்கின்றியிருந்தமையால் சூழுணர்வை

முற்றாகவே இழந்துவிட்டிருந்தாள். அங்கிருந்து எழுந்துசெல்ல விரும்புபவள்போலத் தோன்றினாள்.

மூச்சுத்திணற முனகியபடி கைகளால் துழாவி காந்தாரி "சத்யை" என்றாள். சத்யசேனை "அக்கையே" என்றாள். "இளையவள் எங்கேடி?" சத்யவிரதை "இங்கிருக்கிறேன், அக்கை" என்றாள். "என் நஸ்யம் எங்கே?" என்றாள் காந்தாரி. சத்யவிரதை சிறிய தந்தச் சிமிழை அளிக்க அதை வாங்கி மூக்கில் வைத்து அதிலிருந்த ஊசித்துளை வழியாக ஏலக்காய்ச்சுக்குப் பொடியை சற்று உறிஞ்சினாள். முகம் இழுபட்டு கோணலாகியது. ஓங்கி தும்மி அடங்கினாள். சத்யவிரதை அளித்த பட்டுத்துணியால் மூக்கை துடைத்துக்கொண்டாள். அசலையிடம் திரும்பி "அசலைதானே பேசிக்கொண்டிருந்தாய்?" என்றாள்.

"பேரரசி, நான் சொன்னவற்றை தாங்கள் உளம்கொள்ளவேண்டும். இது எங்கள் மைந்தரின் வாழ்வு. உங்கள் மருகியர் அனைவரும் இங்கே வந்துள்ளோம். இந்தப் போர் எவ்வகையிலேனும் நிறுத்தப்பட்டாகவேண்டும்" என்றாள். காந்தாரி "நாம் என்னடி சொல்வது? தீர்வை மூத்தவர்கள் அல்லவா கண்டுபிடிக்கவேண்டும்?" என்றாள். "மூத்தவர்கள் அதில் தோற்றுவிட்டார்கள். எப்போது பெண்ணை அவைநடுவே துகிலுரிந்தபோது நோக்கியிருந்தார்களோ அப்போதே அவர்கள் அதற்கான ஆற்றலை இழந்துவிட்டார்கள். நாம் சொல்லியாகவேண்டும். இந்நாடே பாண்டவர்களுக்குரியது. அனைத்து அரசமுறைகளின்படியும் இது அவர்களுக்குரிய நிலம்" என்றாள் தாரை.

"என்னடி சொல்கிறாய்?" என்றாள் காந்தாரி. "ஆம், இது அவர்களின் நிலம். அவர்கள் வைத்திழந்தது மட்டுமல்ல.

மொத்த அஸ்தினபுரியே அவர்களின் தந்தை பாண்டு வழியாக அவர்களுக்குரியதே” என்றாள் தாரை. “அவர்களுக்கு காண்டவப்பிரஸ்தத்தை மட்டும் அளித்து அனுப்பியதுதான் முதற்பெரும்பிழை. அங்கு நம் குரல் எழுந்திருக்கவேண்டும். அப்போது செய்த பிழையே பெருகிப்பெருகி பூதப்பேருருவென நம் முன் வந்து நின்றிருக்கிறது.”

சீற்றத்துடன் கைநீட்டி முன்னால் வந்த சத்யசேனை “என்ன உளறுகிறாய்? இது பாண்டுவுக்கு பதினெட்டாண்டு காலம் மட்டும் ஆட்சிசெய்யும்பொருட்டு அளிக்கப்பட்டது. பட்டத்து இளவரசன் துரியோதனன் அகவைநிறையும்போது இயல்பாகவே அவனுக்கு வந்துவிட்டது” என்றாள். “இது எந்த ஊர் வழக்கம்? முன்பு பாரதவர்ஷத்தில் இது நடந்துள்ளதா என்ன?” என்றாள் தாரை. “அரசமுடி என்பது முற்றுரிமைகொண்டது. முடிசூட்டிக்கொண்டவர் அதை தெய்வங்களிடமிருந்தே பெற்றுக்கொள்கிறார், எந்த மானுடரும் அதை அளிக்கவில்லை என்றே நெறிநூல்கள் சொல்கின்றன. பாண்டு முடிசூட்டிக்கொண்டதுமே இந்நாட்டின் முழுமுதல் உரிமையாளர் ஆகிவிட்டார். அவர் அளித்தாலொழிய இந்நிலம் பிறருக்குரியதல்ல. அவர் அளித்திருந்தாலும்கூட அவர் மைந்தர் அதை மறுக்க நூல்கள் ஒப்புகின்றன.”

சத்யசேனை திகைத்துவிட்டாள். உதவிக்கு என அவள் சத்யவிரதையையும் அசலையையும் பார்த்தாள். காந்தாரி “அதை இப்போது நாம் பேசவேண்டியதில்லை” என்றாள். “இப்போது நாம் செய்யவேண்டியதென்ன?” தாரை “நாட்டை அவர்களிடம் அளிக்கவேண்டும். அவர்கள் அளிக்கும் நிலத்தைப்பெற்று கௌரவர்கள் ஆளட்டும். அதுவே நெறி. நெறி ஒன்றே பாதுகாப்பு. தலைமுறைகளைக் காப்பதும் அதுவே”

என்றாள். அசலை “வீண்பேச்சு வேண்டியதில்லை” என்றாள். “பேரரசி, அஸ்தினபுரியின் அரசர் பாண்டவர்கள் ஒப்புக்கொள்ளும் குறைந்த ஒத்துதீர்ப்புக்கு முன்வரவேண்டும். அதை பீஷ்மரும் துரோணரும் கிருபரும் அவருக்கு சொல்லவேண்டும்” என்றாள்.

“அவர் சொன்னால்கூட இன்று அவன் கேட்கமாட்டான்” என்றாள் காந்தாரி. “நான் பலமுறை அவனிடம் சொல்லமுயன்றேன். என் சொற்கள் எழவே அவன் ஒப்புவதில்லை.” அசலை பேசுவதற்குள் தாரை “பேரரசி, இதெல்லாம் நாம் எவரை ஏமாற்ற சொல்லிக்கொள்வது? பிதாமகர் பீஷ்மரே இன்றும் குருகுலத்தின் மூத்தவர். விழைந்தால் இந்த நாட்டின் மணிமுடியை கொள்ளவும் உரிமைகொண்டவர். நால்வகைப் படைகளும் அவர் ஆணைப்படியே என்பது எவருக்குத் தெரியாது? அவர் படைகளுக்கு ஆணையிடாமல் அஸ்தினபுரி போருக்கு எழமுடியுமா என்ன? அவர் போருக்கு மறுக்கட்டும். படைகளை தன் ஆணையில் எடுத்துக்கொண்டு அஸ்தினபுரியின் அரசருக்கு ஆணையிடட்டும்” என்றாள்.

அசலை அவளையே நோக்கிக்கொண்டிருந்தாள். மாநிறமான சிறிய வட்டமுகம். நீண்ட கண்கள். சிறிய உதடுகள். குழந்தைபோலவே அவள் முகபாவனைகள் இருந்தன. குரலும் மழலையுடன் இருந்தது. ஆனால் சொற்கள் பலமுறை எண்ணிக்கூர்கொண்டவை போலிருந்தன. சத்யசேனை “நாம் அவரை வழிநடத்துவதா? பேசுவதற்கும் ஒரு முறை வேண்டும்… யாரிடம் கேட்டு இதையெல்லாம் இங்கே சொல்கிறாய்?” என்று கூவ காந்தாரி கையமர்த்தி அவளை அமையச்செய்துவிட்டு “அவள் சொல்வதும் சரிதான்.

பிதாமகருக்கு இன்று அவனை நிறுத்தும் உரிமை உண்டு. அவர் அதை செய்யட்டும்” என்றாள்.

“நாம் அதை அவரிடம் சொல்லமுடியுமா, அக்கையே?” என்றாள் சத்யசேனை. “இப்படி எண்ணித்தான் இதுவரை அகத்தளத்திலேயே இருந்துவிட்டோமா என எண்ணுகிறேன். நான் என்னை அனைத்திலுமிருந்தும் விலக்கிக்கொண்டது போலவும் அனைத்தும் நன்மைக்கே முடியும் என்றும் கற்பனை செய்துகொண்டேன். அது என் துணிவின்மையை மறைத்துக் கொள்வதற்காகவே. பேரன்னையாக நான் இன்று எழுந்து என் மக்களைக் காக்காவிடில் பேரழிவே எஞ்சும். நான் சென்று பீஷ்மரை பார்க்கிறேன். அவரிடம் சொல்கிறேன், இப்போர் நிகழலாகாது என்று. நிகழ்ந்தால் அவரே அதற்கு முழுப் பொறுப்பு என்று.”

அசலை “அத்துடன் நீங்கள் உங்கள் இளையவருக்கும் ஆணையிடவேண்டும், பேரரசி” என்றாள். “இவ்வழிவின் ஊற்றுமுகம் அவர் என்பதை மறக்கவேண்டாம்.” அவள் சொல்லிமுடிப்பதற்குள் தாரை “அவரல்ல, பேரரசியேதான். பேரிழப்பு அணுகுவது அவருக்கே. எனவே அதன் கருத்துளியும் அவரிலிருந்தே எழுந்திருக்கும்” என்றாள். சத்யசேனை பாய்ந்து தாரையை ஓங்கி அறைந்தாள். அந்த ஓசை கூடமெங்கும் ஒலித்தது. கன்னத்தைப் பற்றியபடி தாரை உடல்வளைத்து தலைகுனிந்தாள். “கொன்றுவிடுவேன், கீழ்மகளே. உன் குலத்துக்குரிய கீழ்மையை காட்டிவிட்டாய்” என்றாள்.

காந்தாரி “என்ன செய்தாய்? என்ன செய்தாய், அறிவிலி? கைநீட்டினாயா? விலகு... போ உள்ளே!” என்றாள். சத்யசேனை “அக்கையே...” என்றாள். “போடி உள்ளே” என்று காந்தாரி கூவினாள். சத்யசேனை சினத்துடன் உள்ளே சென்றாள்.

காந்தாரி "அருகே வா, மகளே" என்றாள். தாரை ஒரு கையால் கன்னத்தைப் பொத்தியபடி அருகணைந்தாள். காந்தாரியின் பெரிய கை நீண்டு அவளை தேடியது. அசலை அதைப்பற்றி தாரையின்மேல் வைத்தாள்.
அவள் தோளைத்தொட்டு தன்னருகே இழுத்தாள்.

தாரை அருகே நிலத்தில் அமர்ந்தாள். அவள் தலையை வருடியபடி "நீ சொன்னது உண்மை, மகளே. உண்மைதான் அவர்களை கொந்தளிக்கச் செய்கிறது" என்றாள் காந்தாரி. "நெடுநாட்களுக்கு முன்பு நான் என் இளையோனுடன் காந்தாரப்பா லையில் புரவியில் பாய்ந்தோடி விளையாடினேன். ஒரு மலைமேல் ஏறிநின்று தொலைநிலத்தை நோக்கினேன். கிழக்கே பசுமை நிறைந்த பெருநிலங்கள் பரவிக் கிடப்பதாக அன்று நூல்களில் கற்று அறிந்திருந்தேன். முகில்கள் இடைவிடாது மழைபொழியும் வானம். வானவிற்கள் சூடிய திசைகள். பொன்விளையும் வயல்கள்... நான் அந்நிலத்தை வெல் ல விரும்பினேன்."

காந்தாரி பெருமூச்சுவிட்டாள். "அந்நாளை நன்றாகவே நினைவுகூர்கிறேன். செம்மண்புழுதி தரைமுகில்கள்போல சுழன்றுபரவிய பாலைநிலம். அந்தியின் செந்நிற ஒளி. அன்று நான் சொன்ன சொற்களை இன்று என நினைவுகூர்கிறேன்." பிறிதொரு காலத்திற்குச் சென்று நிற்பவள்போல அவள் சொன்னாள் "இந்த மண்மீது குதிரையில் விரைகையில் இதை தழுவிக்கொள்வதாகவே உணர்கிறேன், மைந்தனை தழுவித்தழுவி நிறைவுகொள்ளாத அன்னைபோலத்தான் நானும்."

தன்னுள் ஆழ்ந்து அமைந்திருந்துவிட்டு அவள் தொடர்ந்தாள் "அன்று அச்சொற்களை என் நாவில் வந்தமைத்த தெய்வம் எது

என எண்ணி வியந்துகொள்கிறேன். என்னைச் சூழ்ந்து மைந்தர்களை நிரப்பியது அது. அவர்களைப் பெருக்கி ஒரு குலமென்றாக்கியது. எண்ணி எண்ணி நினைவில்கொள்ளமுடியாதபடி மைந்தர். தழுவித் தழுவி தீராத தோள்கள். இன்று கேட்கிறது அக்கொடுந்தெய்வம். இப்போது சொல், இத்தனை மைந்தரையும் அளித்தால் நீ விழையும் நிலத்தை தருகிறேன் என்று. தெய்வங்களுக்கு மானுடர்மேல் உள்ள வஞ்சத்துக்கு அளவேயில்லை. ஆணவத்தையும் பெருவிழைவையும் கருக்களாகக்கொண்டு அவை ஆடும் ஆடலுக்கு முடிவுமில்லை.”

“அன்று அவன் சொன்னான், நான் அடையவேண்டியவை எல்லாம் அங்கே இருக்கின்றன. என் நிலம்... தென்குமரி முனைவரை செல்லும் பாரதவர்ஷம் என. அன்று அவன் விழிகள் மின்னியதை நான் அருகிருந்து கண்டேன். என் கண்ணில் உடன்பிறந்தான் என எஞ்சியிருப்பது அந்த முகம்தான். பொருள்வல்லமையே படைவல்லமையாகவும் குலப்பெருமையாகவும் மாறும் யுகம் பிறந்துகொண்டிருக்கிறது என்று அவன் அன்று சொன்னான். அவன் நாடுவது எது என இன்றும் எனக்குப் புரியவில்லை. ஒன்று தெரிகிறது, முதிரா இளமையில் உள்ளத்தை அள்ளிக்கொண்டுவிடும் பெருங்கனவுகள் கொடியவை. அவை நச்சுநோய் என உடலில் ஊறி நிறைகின்றன. எஞ்சிய வாழ்க்கையை முழுக்க உண்டு திகழ்கின்றன. அழித்துவிட்டே செல்கின்றன” என்றாள் காந்தாரி.

அவைக்கூடத்திலிருந்த பெண்கள் விழிகளில் நீர்மை மின்ன அசைவிலாது அமர்ந்திருந்தனர். தாரை அண்ணாந்து காந்தாரியின் முகத்தை நோக்கிக்கொண்டிருந்தாள். “ஆம் குழந்தை, நீ சொல்வது மெய். நன்றும்தீதும் பிறர்தர வாரா”

என்றாள் காந்தாரி. “என் பெருந்துயர் என்னிலிருந்து எழுந்தது. நான் அதை என்னால் முடிந்தவரை சிறைகட்ட முயல்கிறேன். அது என்னைக் கொன்று கடந்துசெல்லுமென்றால் அவ்வாறே ஆகுக!” அசலை “நீங்கள் சொல்வதை பேரரசர் தட்டமாட்டார்” என்றாள். காந்தாரி மெல்ல உதடு கோணலாக நகைத்து “மதயானைக்கு காதுமடல், ஒட்டகத்திற்கு மூக்குச்சவ்வு. ஆற்றல்மிக்க எவருக்கும் மிக மெல்லிய இடமொன்று உண்டு. அணையின் ஆற்றலை அதன் மிக நொய்ந்த பகுதியைக்கொண்டே கணிக்கவேண்டும்” என்றாள்.

அசலை அவள் முகத்தை நோக்கிக்கொண்டிருந்தாள். விழியற்றிருந்தமையாலேயே அனைத்தையும் நோக்குபவள் என்று அப்போது காந்தாரி தோற்றமளித்தாள். அவைக்கூடத்தில் மீண்டும் அமைதி நிலவியது. காந்தாரி “நான் பசுநிலப்பெருக்கை விழைந்தபோது என் பின்னால் நின்று இளங்காற்றாக நகைத்தது என் ஊழின் தெய்வம். இளையோரே, நான் பசுமையையே கண்டதில்லை. என் விழிகளில் எஞ்சியிருப்பது நான் பிறந்து வளர்ந்த காந்தாரத்துச் செம்புலம்தான்” என்றாள். அவள் முகம் மெல்ல மலர்ந்தது. “ஆனால் இன்று அது பேரழகுமிக்கதாகத் தோன்றுகிறது. இத்தனை ஆண்டுகளில் அது என் கனவுக்குள் வளர்ந்துவிட்டது. ஒவ்வொரு கணமும் அழகுகொண்டபடியே செல்கிறது.”

“என் மைந்தர், மைந்தர் மைந்தர், அவர் மகளிர் அனைவருமே அந்தச் செம்புலத்து புழுதிப்பரப்பில்தான் வாழ்கிறார்கள்” என்று அவள் தன் சிறிய பற்கள் தெரிய சிரித்தாள். அவள் பற்கள் சிறுகுழந்தைகளின் பற்கள்போல உப்புப்பரலென மின்னின. “நான் இறக்கையில் என்னை நீங்கள் இங்கே பச்சைபொலியும் பெருங்காட்டில் எரித்தாலும் நான் எரிவது

செம்புழுதிமேட்டில்தான். எனக்கு நீங்கள் இங்குள்ள எதையும் சொல்லி புரியவைக்கவே இயலாது.” அவள் முகம் விரிந்துகொண்டே சென்றது. “என்ன ஒரு நல்லூழ்! இதை நான் தெய்வங்களிடம் கோரவில்லை, அவை எனக்கு கனிந்தளித்தன. ஆயிரம் பெயர்மைந்தருக்கு அன்னையான பின்னரும் பிறந்த நிலத்திலேயே வாழ்வதுபோல பேறு வேறுண்டா என்ன?”

மீண்டும் அவள் முகம் எண்ணத்தால் முழுத்தது. “என் திருமணநிகழ்வுக்கு தாலிப்பனையின் பூ வேண்டுமென்றனர் பூசகர். எங்கள் தொல்குடிப்பெண்டிர் பாலையெங்கும் அலைந்தனர். இறுதியில் ஒருத்தி தனித்து நின்ற தாலிப்பனையை கண்டுபிடித்தாள். தாலிப்பனை எப்போதும் பாலைநிலத்தின் சரிவில் தனித்தே நிற்கும். அது நின்றிருக்கும் இடத்தின் அடியில் மந்தண ஊற்றொன்று இருக்கும். அது மலர்விட்டிருந்தது. மலர் என்றால் பெரிய சாமரக்குடைபோல் ஒன்று. அதைக் கொண்டுவந்து என் மணநிகழ்வை நடத்தினர்.”

“அதன் சிறப்பு என்னவென்றால் ஒரு மலரிலிருந்து ஒரு பாலையையே நிறைக்கும் மகரந்தப்பொடி கிளம்பும் என்பதுதான். காற்றில் பறந்து பல நாழிகை தொலைவு செல்லும். தன் இணையை கண்டுகொண்டு கருவுறும். பாலையில் கோடியில் ஒன்று கருவுற்றால் நன்று. மாருதர்கள் அருளவேண்டும்” என்றாள் காந்தாரி. “தாலிப்பனை கங்கைச்சதுப்புக்கு வந்ததென்றால் அதற்கு இந்நிலம் போதுமா என்ன?” அவள் சொல்லோய்ந்து அமர்ந்திருந்தாள். நெடுநேரம் அங்கே ஒலியே எழவில்லை. பின்னர் “இளையவளே” என்றாள். சத்யவிரதை “அக்கையே” என்றாள். காந்தாரி கைநீட்ட அவள் பற்றித்தூக்கினாள்.

எழுந்துநின்று “நான் பீஷ்மபிதாமகரையும் துரோணரையும் இளையோனையும் சந்திக்கிறேன். அசலை…” என்றாள். “பேரரசி” என்றாள் அசலை. “நீயும் உடனிரு…” என்றாள் காந்தாரி. “நன்று நிகழுமென எண்ணுகிறேன்” என்றபின் “தாரை” என்றாள். “பேரரசி” என்றாள் அவள். அவள் தலையைத்தொட்டு “எண்ணுவதில் உறுதிகொள், மகளே. நீ அகநிறைவுகொள்வாய்” என்றபின் “செல்வோம்” என்று சத்யவிரதையிடம் சொன்னாள். தங்கை தோள்பற்றி அவள் மெல்ல நடந்து உள்ளே செல்ல அனைவரும் நோக்கி அமர்ந்திருந்தனர். எவரோ பெருமூச்சுவிட்ட ஒலியில் கலைந்து ஆடையோசையும் அணியோசையுமாக கூடம் உயிர்கொண்டது.

# குருதிச்சாரல் - 11

**பகுதி இரண்டு : பெருநோன்பு – 5**

அரசத்தேருக்கு காவலாகச் சென்ற புரவிவீரர்கள் குடில்முற்றத்தில் சென்று பரவி நின்றனர். குடிலிலிருந்து பீஷ்மரின் மாணவர் விஸ்வசேனர் தன் மாணவர்களுடன் கைகூப்பியபடி வெளியே வந்தார். தேர் குடிலின் முற்றத்தில் நுழைந்து நின்றது. புரவிகள் குளம்பு மாற்றிவைத்து பிடரி சிலுப்பி தலைகுலுக்கி பெருமூச்சுவிட்டன. அவற்றின் வியர்வை இளவெயிலில் ஆவியாக எழுந்தது. வீரர்களில் ஒருவன் வந்து தேரின் கதவைத் திறந்து மரப்படிக்கட்டுகளை எடுத்து வைத்தான். அசலை கைகளைக் கூப்பியபடி படிகளினூடாக இறங்கி கீழே நின்று காந்தாரியை கைபற்றி மெல்ல இறக்கினாள்.

பீஷ்மரின் முதன்மை மாணவரான விஸ்வசேனர் கூப்பிய கைகளுடன் அருகே வந்து “இத்தவக்குடிலுக்கு பேரரசியின் வருகை எங்கள் அனைவருக்கும் அன்னையின் வாழ்த்தென அமைகிறது. இந்நாள் தங்கள் தண்ணளியால் பொலிகிறது” என்று முகமன் உரைத்தார். காந்தாரி கைதூக்கி அவர் தலையில் வைத்து “நல்லூழ் தொடர்க! நலம் பெருகுக!” என்று வாழ்த்தினாள். விஸ்வசேனரின் மாணவர்கள் ஒவ்வொருவராக வந்து காந்தாரியை கால்களைத் தொட்டு சென்னி சூடினார்கள். ஒவ்வொருவர் தலையிலும் கைவைத்து “வெற்றி கொள்க! புகழ் விளைக!” என்று அவள் வாழ்த்தினாள்.

விஸ்வசேனர் “குடிலுக்குள் வந்து அமர்க, அரசி! எங்கள் எளிய இன்னீரில் ஒரு வாய் அருந்தினீர்கள் என்றால் தலைமுறைகள் அதைப் பெருமையென சொல்லிக்கொள்ளும்” என்றார். அசலை மெல்லிய குரலில் “பிதாமகர் எங்கே?” என்றாள். விஸ்வசேனர் “சோலைக்குள் இருக்கிறார். இப்போதெல்லாம் நாங்கள் எவரும் அவருடன் செல்வதில்லை. அவர் எங்களிடம் பேசுவதை நிறுத்தியே பல ஆண்டுகளாகின்றன” என்றார். காந்தாரி “நான் அவரிடம் தனியாக பேசவே வந்தேன், விஸ்வசேனரே” என்றாள். விஸ்வசேனர் “ஆம், அதை அவரிடம் தெரிவித்தோம். மறுமொழி ஏதும் அவர் சொல்லவில்லை” என்றார்.

அசலை “குடிலுக்குள் நுழைந்து அமர்ந்துவிட்டு செல்வோம் அரசி, அதுவே முறை” என்றாள். “ஆம்” என்று காந்தாரி சொல்லி அசலையின் தோளைப்பற்றியபடி சந்தன மிதியடிகளிட்ட தனது கால்களை பசுஞ்சாணி மெழுகிய முற்றத்தில் மெல்ல எடுத்துவைத்து நடந்தாள். வெட்டுகல்லாலான படிகளிலேறி குடிலின் திண்ணையில் விரிக்கப்பட்ட மான் தோல் பீடத்தில் அமர்ந்தாள். விஸ்வசேனர் கண்காட்ட இரு மாணவர்கள்

உள்ளிருந்து மரக்குடைவுக் கலத்தில் காய்ச்சிய பசும்பாலை கொணர்ந்தனர். விஸ்வசேனர் அதை வாங்கி காந்தாரியிடம் அளித்து “எங்கள் எளிய கொடை, பேரரசி” என்றார். “காராம்பசுவென்று நினைக்கிறேன். நறுமணம் கொண்டுள்ளது பால்” என்றபடி காந்தாரி குவளையை எடுத்து மூன்று முறை அருந்தி அருகே வைத்தாள். “இஞ்சிப்புல்வெளியில் மேய்கிறது போலும். பாலில் அந்த மணமும் உள்ளது.”

விஸ்வசேனர் முகம் மலர்ந்து “ஆம் பேரரசி, சுமதி என்று அப்பசுவுக்கு பெயர். இது இரண்டாவது பேறு” என்றார். “நன்று, அவளுக்கு எனது வணக்கங்களை தெரிவியுங்கள்” என்று காந்தாரி கைகூப்பியபின் “உங்கள் மாணவர்களில் ஒருவர் என்னோடு வரட்டும். பிதாமகர் இருக்கும் இடத்தை காட்டுங்கள்” என்றாள். விஸ்வசேனர் தன் மாணவர்களில் ஒருவரிடம் பேரரசியை அழைத்துச்செல்லும்படி கைகாட்டினார். அவன் அருகே வந்து “வணங்குகிறேன், பேரரசி” என்றான். காந்தாரி அசலையின் தோளைத்தொட்டு எடைமிக்க உடலை உந்தி மேலெழுப்பி எழுந்து கைநீட்டி அசலையின் தோளை பற்றிக்கொண்டாள். அசலை “வழியில் நீ பேசவேண்டியதில்லை. பாதையைப் பற்றி நான் சொல்லிக்கொண்டே இருக்கவேண்டியுள்ளது” என்று அவனிடம் சொன்னாள். அவன் தலையசைத்தான்.

குடிலிலிருந்து மீண்டும் முற்றத்திற்கு இறங்கி, பக்கவாட்டில் திரும்பி, அதற்குப் பின்னால் பசுமை செறிந்து திசைமூடி விரிந்து கிடந்த ஒழுங்குபடுத்தப்படாத தோட்டத்திற்குள் நுழைந்துசென்ற ஒற்றையடிப் பாதையில் அவர்கள் நடந்தனர். அசலை “ஒற்றையடிப் பாதை. செம்மண் புழுதி” என்றாள். காந்தாரி அச்சொற்களிலிருந்து பாதையை தனக்குள் எழுப்பி

மெல்ல காலெடுத்து வைத்து நடந்தாள். “இருபுறமும் மந்தார மரங்கள். வழியருகே நீண்ட ஒரு கிளை” என்று அசலை சொன்னாள். “இலஞ்சி மரம். வேர்கள் பாதையில் பரவியுள்ளன. மெல்லிய சரிவு, இடவளைவு” என்று சொல்லிக்கொண்டே நடந்தாள்.

மேலும் மேலும் சோலைக்குள் புதைந்துசென்ற அப்பாதை முன்னந்தி என இருள் காட்டியது. காந்தாரி “இது பராமரிக்கப்படாத சோலை” என்றாள். “ஆம், அன்னையே” என்றாள் அசலை. “இத்தனை மரங்கொத்திகளின் ஒலி பராமரிக்கப்படும் சோலையில் எழுவதில்லை” என்று காந்தாரி கூறினாள். “ஆம், காடுபோலவே மரங்களனைத்திலும் கொடிகள் படர்ந்து ஏறியுள்ளன. ஒற்றையடிப் பாதையன்றி வேறு வழிகளேதும் இங்கில்லை. அடிமரம் பெருத்து வேர்கள் நிலம்கவ்வ எழுந்த பெருமரங்கள். அத்திகள், ஆலமரங்கள், மருதுகள், வேங்கைகள்” என்றாள் அசலை. “பாதை சரிந்திறங்குகிறது. சரளைக்கல் வழுக்கக்கூடும்” என்றாள்.

காந்தாரி மிக மெதுவாக தயக்கமில்லாத காலடிகளை வைத்து நடந்தாள். பின்னர் பெருமூச்சுடன் நின்று சிறிய உதடுகள் குவிய வாய் குவித்து மூச்சுவிட்டாள். அவளுடைய வெண்ணிறத் தோளிலும் கழுத்திலும் வியர்வை வழிந்தது. “அமர்கிறீர்களா, அன்னையே?” என்று அசலை கேட்டாள். “இல்லை, சற்று மூச்சு திரட்டிக்கொண்டேன். செல்வோம்” என்று காந்தாரி மீண்டும் நடக்கையில் “மண் மாறுபடுகிறது. இது சற்று இறுகிய சேற்றுப்பாறைநிலம்” என்றாள். “ஆம் அன்னையே, உலர்ந்த ஊன்போல இங்கே கற்கள் சிதறிக் கிடக்கின்றன” என்று அசலை சொன்னாள்.

காந்தாரி மூச்சுத் திணறும் குரலில் “ஏராளமான நாவல்பழங்கள் தரையெங்கும்” என்றாள். “ஆம், நாவல் மரங்கள் செறிந்துள்ளன” என்று அசலை சொன்னாள். “பறவைகளின் களியாட்டை கேட்கிறேன்” என்று காந்தாரி கூறினாள். மேலும் சரிந்திறங்கிய பாதை ஊடாக கடந்துசென்ற சிறிய ஓடையை தாண்டியது. “ஊற்றிலிருந்து வரும் நீர், இளவெம்மை கொண்டிருக்கிறது. ஊற்று மிக அருகிலுள்ளது” என்றாள் காந்தாரி. “ஆம் அன்னையே, இங்கிருந்து பார்த்தாலே தெரிகிறது” என்று அசலை சொன்னாள்.

காந்தாரி “அவர் இங்கு அருகேதான் இருக்கிறார்” என்றாள். அசலை சுற்றுமுற்றும் பார்த்தபடி “இல்லை அன்னையே, தெரியவில்லை” என்றாள். “என் உள்ளுணர்வு சொல்கிறது. மிக அருகிலேதான் இருக்கிறார்” என்றபின் இளைஞனிடம் “எங்கிருக்கிறார் என்று பார்” என்றாள். அவன் “ஆணை” என்றபின் காட்டுக்குள் சென்று சுற்றும் நோக்கிவிட்டு வந்து தாழ்ந்த குரலில் “அருகிலேதான். ஓடைக்கரையில் பாறையில் ஊழ்கத்தில் அமர்ந்திருக்கிறார்” என்றான். “என்னை அழைத்துச் செல்” என்றாள் காந்தாரி. அசலை அவள் கைகளைப் பற்றி ஓடையினூடாகவே அழைத்துச் சென்றாள்.

ஓடைக்கரையில் அமைந்த கரிய பாறையை நீர் வளைந்து கடந்து சென்றது. அதன் மீது விழிமூடி கைகளை மடியில் வைத்து நிமிர்ந்த முதுகுடன் பீஷ்மர் அமர்ந்திருந்தார். நரைத்த வெண்தாடி காற்றில் உலைந்துகொண்டிருந்தது. சற்றுமுன் நீராடி விரல்களால் நீவி முதுகிலிட்ட வெண்ணிறக் குழல்கற்றைகள் திரிகளாக தோளில் பரவி காய்ந்திருந்தன. உடல் உலர்ந்திருந்தாலும் நீராடியதன் ஒளி தெரிந்தது. கால்களின் நகங்கள் காய்ந்த நெற்றுகள்போல நீண்டு

சுருண்டிருப்பதை அசலை பார்த்தாள். உள்மடிந்த உதடுகள்மேல் மூக்கு வளைந்து தொங்கியதுபோல் இருந்தது. மூச்சு ஓடுவதை அங்கிருந்து பார்க்க முடியவில்லை, ஆனால் அவர்களின் காலடிகளை அவர் கேட்டுவிட்டாரென்பதை அவர் முகம் எவ்வாறோ காட்டியது.

காந்தாரி இளைஞனிடம் "நீ செல்லலாம், மைந்தா" என்றாள். அவன் "ஆணை" என்று தலைவணங்கி ஓசையற்ற காலடிகளுடன் விலகிச்சென்று ஓடையினூடாக அப்பால் மறைந்தான். அசலை "தாங்கள் தனியாக உரையாடுவதென்றால்..." என்றாள். காந்தாரி "இல்லை, அது முறையல்ல. நீ அருகிருக்கவேண்டும்" என்றாள். அசலை "ஆணை" என்றாள். காந்தாரி தனக்குத்தானே என புன்னகைத்து "நெறியேற்புக் காமஒறுப்பாளர்களை சிதைவரைக்கும்கூட தெய்வங்கள் நம்புவதில்லை. சுற்றமும் சொல்லும் அவர்களை ஆயிரம் விழிகளால் நோக்கிக்கொண்டிருக்கின்றன" என்றாள்.

பாறையின் அருகணைந்ததும் அசலை "பிதாமகரே, அஸ்தினபுரியின் பேரரசி தங்களைப் பார்க்கும்பொருட்டு வந்துள்ளார்" என்றாள். பீஷ்மரின் இமைகள் கைதொட்ட தொட்டால்சிணுங்கி இலைகள்போல் சுருங்கி அசைந்தன. பின்னர் விழிகளைத் திறந்து அவர்களை பார்த்தார். சிலகணங்கள் அவர் அவர்களை அடையாளம் காணவில்லை என்று தோன்றியது. அசலை மீண்டும் பணிந்து "நான் அசலை, அஸ்தினபுரியின் கௌரவ இளவரசர் துச்சாதனரின் மனைவி. பேரரசி காந்தாரியை தங்களை சந்திக்கும்பொருட்டு அழைத்து வந்திருக்கிறேன்" என்றாள்.

பீஷ்மர் காந்தாரியை பார்க்க அவள் இரு கைகளையும் கூப்பி தலைவணங்கி "தங்கள் கால்களை சென்னி சூடுகிறேன்,

பிதாமகரே. இத்தருணம் என் மைந்தருக்கும் கொடிவழிகளுக்கும் நலம் பயப்பதாக அமையட்டும்" என்றாள். பீஷ்மர் வலக்கையைத் தூக்கி அவளை வாழ்த்தியபின் அருகிருந்த மரத்தடியை நோக்கி அமரும்படி கைகாட்டினார். அசலை சுற்றுமுற்றும் பார்த்தபின் அருகே நின்றிருந்த பெரிய இலை கொண்ட பகன்றையிலிருந்து நாலைந்து இலைகளைப் பறித்து தரையில் வைத்தாள். காந்தாரியின் கைபற்றி "அமர்க, பேரரசி!" என்றாள்.

அவள் தோளைப்பற்றியபடி எடை மிக்க உடலை மெல்ல தாழ்த்தி பெருமூச்சுடன் காந்தாரி அமர்ந்தாள். "எனக்குப் பின்னால் நீ நின்றுகொள்" என்றாள். பீஷ்மர் "இந்த ஓடையின் நீர் அருந்துவதற்கு உரியதே" என்றார். காந்தாரி "ஆம், சற்று நீர் தேவை எனக்கு" என்றாள். அசலை பகன்றையின் இன்னொரு இலையைப் பறித்து அதை தொன்னையாகக் கோட்டி ஓடை நீரை அள்ளி காந்தாரிக்கு அளிக்க அவள் அதை அருந்தி இலையை திரும்ப அளித்தாள்.

மேலாடையால் முகத்தையும் கழுத்தையும் துடைத்தபின் "பிதாமகரே, நான் தங்களிடம் ஒரு கொடையை கோரி வந்துள்ளேன்" என்றாள். "இன்று தங்கள் முன் அரசியாக அல்ல, தங்கள் குடியின் மருமகளாக அமர்ந்து இதை கோருகிறேன்." சொல் என்பதுபோல் பீஷ்மர் கையசைத்தார்.

காந்தாரி "பெரும்போர் ஒன்று அணுகிவருகிறதென்பதை தாங்கள் அறிந்திருப்பீர்கள். நினைவறிந்த நாள் முதல் தாங்கள் ஆற்றிய அனைத்துமே இப்போரை தவிர்ப்பதற்காகத்தான். என் கணவரும் அவருடைய இளையோரும் பிறப்பதற்கு முன்னரே இப்போர் கருக்கொண்டுவிட்டது என்கிறார்கள் அரசுசூழ்வோர். இது ஊழெனில் இதன் முன் வணங்கி நிற்பதன்றி நாம்

செய்வதற்கொன்றுமில்லை. ஆயினும் அன்னையென என் உள்ளம் ஏங்குகிறது. என் மைந்தர் அலைகளென எழுந்து என்னைச் சூழ்ந்து நிறைந்திருக்கிறார்கள். அவர்களில் ஒருவர் களம்பட்டால்கூட அது எனக்குப் பெருந்துயர். இதுவரை பேரன்னையென அவை நிறைந்து வாழ்ந்தேன். அரசித்தேனீ என்று என்னை சூதர்கள் பாடுகிறார்கள். நான் வேண்டுவதெல்லாம் ஒன்றே. பிதாமகரே, என் கண் முன் என் மைந்தர் களம்படலாகாது. எனவே இப்போர் நிகழக்கூடாது" என்றாள்.

பீஷ்மர் தாழ்ந்த இமைகளுடன் இடக்கை தாடியை அளைந்துகொண்டிருக்க தலைகுனிந்து அமர்ந்திருந்தார். அவர் என்ன எண்ணுகிறார் என்று அசலை உளம் ஓட்டி நோக்கினாள். உண்மையில் அவருள் எண்ணமென்றே எதுவும் ஓடவில்லை என்று தோன்றியது. உள்ளம் இயங்குவதற்கும் விசை தேவைப்படுகிறது. அதையும் இழந்து வெற்றுடலென அவர் அங்கு இருப்பதுபோல் தோன்றியது. காந்தாரி "அரசர் எனில் மண்ணுக்காக போரிடுவார்கள். களம்படாது போர் நிகழவேண்டுமென்று விரும்பும் அறிவிலியுமல்ல நான். ஆனால் இது அத்தகைய போர் அல்ல. இரு தரப்பிலும் நின்றிருப்பவர்கள் உடன்பிறந்தார். ஒருவரை ஒருவர் நன்கு அறிந்தவர்களே முழுமையாக வெறுக்க முடியும் என்று நீங்கள் அறிந்திருப்பீர்கள். பிதாமகரே, உடன்குருதியினர் தொடுக்கும் இலக்குகள் ஒருபோதும் பிழைப்பதில்லை. இரு படைகளிலிருந்தும் முதன்மைப் படைக்கலங்கள் இங்குள்ள இளமைந்தரையே நோக்கி எழும் என்று தாங்களும் உணர்ந்திருப்பீர்கள்" என்றாள்.

“மைந்தரை களப்பலியிட்டு நாம் அடையப்போவது என்ன?” என்றபோது அவள் குரல் ஓங்கியது. “என் மைந்தனிடம்தான் நான் முதன்மையாக பேசவேண்டும். ஆனால் ஒரு சொல்லும் ஊடுருவமுடியாத கற்பரப்பென ஆகியிருக்கிறது அவன் உள்ளம். என் கொழுநர் எதையும் செவிகொள்ளாமல் வாயில்களை மூடிவிட்டு அமர்ந்திருக்கிறார். நான் பேசக்கூடுவது மூவரிடம்தான். உங்களிடமும் துரோணரிடமும் கிருபரிடமும். அஸ்தினபுரியின் நால்வகைப் படைகளும் உங்கள் சொல்லின்படியே இயங்குகின்றன. உங்கள் வில்லாற்றலை நம்பியே அவன் போர் வெற்றி குறித்து உறுதி கொண்டிருக்கிறான். நீங்கள் முடிவெடுத்தால் இந்தப் போர் இக்கணமே நின்றுவிடும் என்பதில் ஐயமில்லை.”

“எனவேதான் உங்களிடம் வந்தேன். என் மைந்தரை வாழவிடுங்கள். இப்போரை நிறுத்துங்கள். உங்கள் கொடிவழிகள் உங்கள் விழிமுன் குருதி சிந்தி அழிவதை ஒப்பாதீர்கள். இந்த எளியவள் தங்களிடம் சொல்வதற்கு இதற்குமேல் ஒன்றுமில்லை” என்றாள் காந்தாரி. பேச்சின்போதே அவள் விழிகள் நீரணிந்து ஒளிகொண்டன. மூக்கு சிவந்து முகம் சுண்டியது. அவளை அறியாமல் கைகூப்பியிருந்தாள் கண்களைக் கட்டியிருந்த நீலப்பட்டு விழிநீரால் நனைந்து நிறம் மாறியது. அதன் விளிம்புகளில் கசிந்த கண்ணீர் கன்னங்களை நனைத்து கீழிறங்கியது. ஒன்றையொன்று அழுத்தி உள்மடிந்திருந்த சிறிய சிவந்த உதடுகள் நெளிந்தன. வெண்ணிறக் கழுத்தில் நீலநரம்புகள் எழுந்து மெல்ல அசைந்தன. மூச்சில் ஏறியிறங்கிய பெருந்தோள்களும் குவைமுலைகளும் மெல்ல அடங்கின.

பீஷ்மர் இமை தூக்கவோ உடலில் அசைவெழவோ இல்லை. அவர் அங்கு இல்லையென்ற எண்ணத்தையே அசலை மீண்டும் அடைந்தாள். ஒரு சொல்கூட அவரை சென்றடையவில்லையென்று. நெடுந்தொலைவிலிருந்து அவர் மெல்லிய ஏளனத்துடன் அனைத்தையும் பார்த்துக்கொண்டிருப்பதைப்போல. தெய்வங்களுக்குரிய ஏளனம் அது. கருவறை இருட்டுக்குள் மறைந்து கைகூப்பி நின்றிருக்கும் மானுடரை நோக்கி தெய்வங்கள் புன்னகைத்துக் கொள்கின்றன. ஒருவரோடொருவர் நோக்கி சொல்லில்லாது இளிவரல் பரிமாறிக்கொள்கின்றன. மானுடரை முழுக்க நோக்கி புன்னகை புரியத் தொடங்குகையில் ஒவ்வொருவரும் தெய்வமாகிறார்கள் போலும். இங்கிருந்து விண்ணோக்கி எழுந்து அப்பெரும்பரப்பில் பதிந்து கீழே நோக்கிக்கொண்டிருக்கிறார்கள். இது அவர்களின் விழைவுகள் விளையாடும் களம். அவர்களின் வெற்றிகள் தோல்விகள். வெற்றியிலும் தோல்வியிலும் அவர்களிலெழும் சிரிப்பு.

பொழுது ஓடிக்கொண்டிருந்தது. காந்தாரி மீண்டும் சொல்லெடுக்கவில்லை. ஒருமுறை அவள் வாய்நீர் விழுங்கும் ஓசைக்கு அப்பால் எதுவும் எழவில்லை. அசலை கால்மாற்றி நின்று கைநீட்டி அருகிருந்த அடிமரத்தை பற்றிக்கொண்டாள். ஒருகணத்தில் சலிப்பெழுந்து பெருகி அங்கு நிற்க முடியாதென்று தோன்றியது. இருவரையும் அப்படியே விட்டுவிட்டு விலகிச்சென்று அந்தத் தோட்டத்தின் பசுமையலைகளுக்குள் மூழ்கி மறைந்துவிடவேண்டுமென்று எண்ணினாள். எத்தனை நேரமாகியிருக்கும்? நெடுநேரமாகியிருக்கும். உள்ளத்தின் நேரம் வேறொரு விசை கொண்டது. அரிதாகவே அது புறப் பொழுதை இணைகொள்கிறது.

நாவெடுத்து ஏதேனும் சொன்னால் என்ன? ஆனால் ஒரு சொல்லும் அவளுக்குள் எழவில்லை. அல்லது ஏதேனும் ஓசையையாவது எழுப்பவேண்டும். இந்த மரக்கிளையைப் பிடித்து உலுக்கலாம். கால்களால் இந்த உருளைக்கல்லை உதைத்து இருளை நோக்கி உருட்டிவிடலாம். ஆனால் அவளாலும் தன் உடலை அசைக்க முடியவில்லை. அத்தனை திமிறிக்கொண்டிருந்தாலும் உள்ளத்தின் பிறிதொரு பகுதி அசைவிழந்து குளிர்ந்தே கிடந்தது.

அவள் மூச்சை இழுத்து பெருமூச்சுவிட்டு தன்னுடலை உயிர்கொள்ளச் செய்தாள். அவ்வோசையால் கலைந்தவர்போல பீஷ்மர் விழிதூக்கி அவளைப் பார்த்தார். சிவந்த கண்கள் அப்போது தணலில் இருந்து எடுத்த கூழாங்கற்கள்போல் இருந்தன. விழிகளும் நரைக்குமா என்ன? முதுமையில் அவரை இவையனைத்திலிருந்தும் அப்பால் எனக் காட்டுபவை அந்த நரைத்த விழிகள். அன்போ கனிவோ அறிமுகமோ அற்றவை. சிறுத்தையின் கொலைவிழிகள். தெய்வச் சிலைகளின் கல்லித்த நோக்கு.

பீஷ்மர் காந்தாரியை நோக்கி திரும்பி "நான் இல்லையெனிலும் இப்போர் நிகழும், அரசி" என்றார். "உண்மையில் நெடுங்காலம் நானே இப்போரை தடுக்கும் ஆற்றல் கொண்டவன் என்று எண்ணியிருந்தேன். ஒவ்வொரு முறையும் இப்போரை ஒத்திப்போட்டவன் நானே என்று தருக்கினேன். இதுநாள் வரை என் வாழ்வில் நான் கொண்ட இன்பம் என்பது இவையனைத்தையும் நான் ஆள்கிறேன் என்னும் ஆணவம்தான். நெடுங்காலம் முன்னரே அது கலைந்துவிட்டது. எப்போது இந்நகருக்குள் பயின்ற வில் கொண்டு பெருந்தோளுடன் அங்கன் நுழைந்தானோ அன்று. பேரரசி,

உங்கள் மகன் இன்று நால்வகைப் படைக்கும் தலைவன் என்றும் களம் நின்று வெற்றியை ஈட்டித்தருபவன் என்றும் கருதுவது என்னையோ துரோணரையோ அல்ல, அங்கனைத்தான்.”

“அத்துடன் அது வீண் நம்பிக்கையும் அல்ல” என்றார் பீஷ்மர். “பாரதவர்ஷத்தில் இன்றிருக்கும் முதன்மைப் படைத்தலைவனும் களவீரனும் அவனே. அதையறிந்தமையால்தான் முதற்கணமுதல் அவனை நான் வெறுத்தேன். அவைகளில் அவனை இழிவுசெய்து அவன் கொண்ட தன்னம்பிக்கையை குலைக்க முயன்றேன். அவனுக்கும் உங்கள் மைந்தனுக்குமான நல்லுறவை அழிக்கவும் முயன்றேன். அவ்வாறு முயன்றபோதே ஒவ்வொரு முறையும் என் ஆணவத்தை இழந்துகொண்டே இருந்தேன். இன்று அறிகிறேன், இரு சாரானால் எவ்வகையிலும் பொருட்படுத்தப்படாத ஒரு முதியவன் மட்டும்தான் நான்.”

“ஆகவே, நீங்கள் எண்ணுவது பிழை. என் சொல்லில் இல்லை, அஸ்தினபுரியின் நால்வகைப் படைகள். ஆம், மரபுப்படி இந்த முடி எனக்குரியது. அவையெழுந்து நான் நாற்படைத் தலைவர்களுக்கும் ஆணையிடலாம். ஆனால் அவர்களே அதை மீறிச்சென்றார்கள் என்றால் என்னால் செய்யக்கூடுவது ஏதுமில்லை. ஒருபோதும் நாம் நமது புலன்களை, நமது அறத்தை, நமது சொல்லை அவற்றின் இறுதி எல்லைவரை சென்று உரசிப்பார்க்கலாகாது. அவை நமக்களிக்கும் வாய்ப்புகளின் தொடக்கத்திலேயே நின்றுவிடுவதே நன்று. மறுஎல்லையிலிருப்பவை மானுடனை வெல்லத்துடிக்கும் தெய்வங்கள்” என்றார் பீஷ்மர்.

காந்தாரி “அஸ்தினபுரியின் படைத்தலைவர்கள் அனைவரும் தங்கள் கொடிவழியினர். உங்களைக்கண்டு வளர்ந்த மூன்றாம் தலைமுறை. உங்கள் சொல் அவர்களுக்கு வேதம்” என்றாள். “ஆம், இக்கணம் வரை அவ்வாறே. ஆனால் அவர்களில் ஒருவர் ஒரு சொல் எனக்கெதிராக உரைத்துவிட்டாரென்றால் இங்குள்ள அனைவரும் அனைத்துச் சொற்களாலும் என்னை மறுதலித்துவிட்டதாகவே பொருள். இன்று இங்கு நான் நின்றிருப்பது மண்மறைந்த நமது மூதாதையர்நிரையின் முகமாக. அவர்களின் சொல் என் நாவில் எழுகிறது. அது மறுக்கப்படுமென்றால் அவர்கள் அனைவரையும் இந்நகரம் உதறிவிட்டதென்றே பொருள். அந்த எல்லைவரை நான் செல்லலாகாது, என் குடியை கொண்டுசெல்லவும் கூடாது” என்றார் பீஷ்மர்.

காந்தாரி “நீங்கள் சொல்லிக்கொண்டிருப்பது முறைமைகளைப்பற்றி. நான் என் மைந்தரின் இறப்பைப்பற்றி பேசிக்கொண்டிருக்கிறேன்” என்றாள். “இறப்பு அவர்கள் ஊழென்றால் அவ்வாறே ஆகட்டும். என் தோள்களும் நெஞ்சும் தளர்ந்துவிட்டன. பேரெடை தாங்கி இத்தனை காலம் வாழ்ந்துவிட்டேன். இனி என்னால் ஆகக்கூடியதொன்றுமில்லை” என்றார் பீஷ்மர். “தங்கள் சொல் மறுக்கப்படும் என்று அஞ்சுகிறீர்களா?” என்றாள் காந்தாரி. அவள் முகத்தை நோக்கி “ஆம், அதைத்தான் அஞ்சுகிறேன்” என்றார் பீஷ்மர். “ஏனென்றால் முதியவர்களின் கெடுநரகம் என்பது இளையோரால் மறுக்கப்படுதல். முதுமை அவ்வாறு மறுக்கப்படுவதற்கான அனைத்தையும் அமைத்து அளிக்கவும் செய்கிறது.”

தலையை அசைத்து பெருமூச்சுடன் “நோயிற்கொடிது முதுமை. உளநிகரை, அறிவை, மெய்யுணர்தலை அழிக்கிறது. வெற்றுத்தசைக்குவியலென மானுடரை ஆக்குகிறது. அனைத்தையும் அழித்த பின்னரும் இருந்துகொண்டிருப்பதற்கான விழைவை மட்டும் எச்சம் வைக்கிறது. இங்குள்ளவை அனைத்தும் வெற்றுத்துயரென்று ஆனபின்னரும் ஒவ்வொன்றாக முகர்ந்து முகர்ந்து நீள்மூச்செறிந்தபடி சித்தம் சுழன்று அலைந்து சலிக்கிறது” என்றார். அவர் விரல்கள் ஒன்றையொன்று தொட்டு வருடிச் சலித்து விலகி மீண்டும் கவ்வி தவித்துக்கொண்டிருந்தன.

அசலை அந்தத் தவிப்பைக் கண்டதனாலேயே உளவிலக்கம் கொண்டாள். அது சினமென்று உள்ளே ஊறியது. “பிதாமகரே, இங்கும் இன்னும் தங்கள் ஆணவமல்லவா எழுந்து நிற்கிறது?” என்றாள். பீஷ்மர் விழிகளை தூக்கினார். “உங்கள் மைந்தர்மேல் உங்களுக்கு அன்பிருக்குமென்றால், முதுதந்தையாக அவர்களை ஆயிரம் கைவிரித்து நெஞ்சோடணைத்துக்கொள்வீர்கள் என்றால் உங்கள் சொல் மறுக்கப்படுவதைப்பற்றி எண்ணுவீர்களா?” என்றாள். நடுங்கும் தலையுடன் அவளை சில கணங்கள் கூர்ந்து பார்த்த பீஷ்மர் உதடுகள் வளைய புன்னகைத்து “நீ எண்ணுவது உண்மை. இவர்களின் இறப்பு எனக்கு எவ்வகையிலும் பொருட்டாகத் தெரியவில்லை. தந்தையென என் உள்ளம் கனிவு கொள்ளவும் இல்லை” என்றார்.

மீண்டும் நஞ்செழ நகைத்து “ஆனால் அது என் ஆணவத்தால் அல்ல. நீ சொன்னபின்னர் என் உளம்நோக்கி நான் மீண்டும் கேட்டுக்கொள்கிறேன். மெய்யாகவே அது ஆணவத்தால் அல்ல. அன்பின்மையால்தான்” என்றார். அசலை அவர் முகத்தை

நோக்கிக்கொண்டிருந்தாள். மீண்டும் புன்னகைத்து பீஷ்மர் சொன்னார் "ஆம், முற்றிலும் அன்பற்றவனாக இருக்கிறேன். இங்குள்ள இளமைந்தர்மேல், என் குடியினர்மேல், இந்நகர் மக்கள்மேல், இப்புவியிலுள்ள மானுடத்தின்மேல் அன்பென்றும் கனிவென்றும் ஒருதுளிகூட என்னில் எஞ்சவில்லை." அவர் வஞ்சமென விரிந்த புன்னகையுடன் தாடியை நீவினார். "என் உடலைப்பற்றி அன்றி நான் எதைப்பற்றியும் இன்று எண்ணவில்லை. நெறியென்றும் கடனென்றும் பற்று என்றும் என்னை ஆண்ட அனைத்திலிருந்தும் விடுபட்டுவிட்டேன்."

"ஒருவேளை, அன்பிலிருந்து விடுதலை கொள்வதுதான் முதுமையோ? அதுதான் முழுமையோ?" என்று அவர் சொன்னார். "யோகியர் தவம் செய்து அடைந்த விடுதலையை விரும்பியும் வெறுத்தும் இங்கு வாழ்ந்து வாழ்ந்து உழன்றுச் சலித்து நான் அடைந்துவிட்டேன் போலும்." வில் என உடல் துள்ள எழுந்து "இதற்குமேல் ஒன்றும் சொல்வதற்கில்லை, மகளே. மைந்தர் அனைவரும் களத்தில் இறந்து குவிந்து கிடந்தால்கூட ஒருதுளி விழிநீர் என்னில் எழுமென்று எனக்குத் தோன்றவில்லை. இது என் களமே அல்ல" என்றபின் திரும்பி ஓடையினூடாக நடந்து சென்றார்.

அவர் கால்கள் நீரை அளையும் ஓசை கேட்டுக்கொண்டிருந்தது. அசலை உளக்கொதிப்புடன் திரும்பி காந்தாரியை பார்த்தாள். அவள் தன் கையை நீட்டி "என்னை தூக்கு. என் கால்கள் மரத்துள்ளன" என்றாள். அவளது சிறிய உள்ளங்கையைப்பற்றி முழு உடல் விசையாலும் தூக்கினாள் அசலை. காந்தாரியின் கைத் தசைகள் தொங்கி ஆடின. உடலை எழுப்பும் விசையில் கழுத்துத் தசைகள் இறுகி அதிர்ந்தன. எழுந்து நின்று மூச்சுவிட்டு "உண்மையில் இங்கு வரும்போது இதைத்தான்

எதிர்பார்த்தேன். எப்போதுமே உணர்ந்து வந்த ஒன்றுதான் இது. இப்போது சொல்லென முன்வந்து நிற்கையில் இது இவ்வாறுதான் என்று அறிந்த ஆறுதலே எஞ்சுகிறது” என்றாள். அசலையின் தோள்மேல் கைவைத்து “செல்வோம்” என்றாள்.

# குருதிச்சாரல் - 12

**பகுதி இரண்டு : பெருநோன்பு – 6**

தேர் உருளத்தொடங்கியதுமே அசலை சினத்துடன் காந்தாரியிடம் “அவர் நம்மை தவிர்க்கிறார். எது மெய்யோ அதை எதிர்கொள்ளாதொழிகிறார்” என்றாள். “அது முதியவர்களின் இயல்பு. அவர்களின் உள்ளம் ஆற்றல் இழந்திருக்கிறது. உணர்வுகள் தொடர்ச்சியை இழந்துவிட்டிருக்கின்றன. புலன்கள் கூர் மழுங்கியிருக்கின்றன. ஆகவே சூழ நிகழ்ந்துகொண்டிருப்பதை ஒன்றோடொன்று பொருத்தி முழு வடிவாக உருவாக்கிக்கொள்ள அவர்களால் இயல்வதில்லை. தங்களால் புரிந்துகொள்ள முடியாதவற்றை முற்றாக தவிர்ப்பது முதியவர்களின் இயல்பு. தாங்கள் இளமையில் புரிந்துகொண்ட மெய்மையை திரும்பச் சென்று தழுவிக்கொள்வதும் அதை கொண்டுவந்து நிகழ்காலத்தின் மீது கண்மூடித்தனமாக பொருத்தி வைப்பதும் அவர்கள் எங்கும் செய்வதுதான்” என்றாள்.

காந்தாரி கைகளைக் கட்டியபடி அசையாது அமர்ந்திருந்தாள். தேரின் சகடகுலுக்கலில் அவள் உடலின் தசைகள் மெல்ல ததும்பிக்கொண்டிருந்தன. “அவர் சொல்வது மெய். அரசர் அவர் சொல்வதை கேட்கப்போவதில்லை. நூற்றுவர் கௌரவரும்

கேட்கப்போவதில்லை. ஒருவேளை படைத்தலைவர்களும் அவரை தவிர்க்கலாம். அங்கர் முன்நின்று நடத்தினால் அஸ்தினபுரி அவரை மீறி படைமுகம் கொள்ளவும்கூடும். ஆனால் இக்குலப்பேரழிவை நோக்கி செல்கையில் மூதாதையர் தரப்பிலிருந்து ஓர் எதிர்க்குரல் எழுந்ததென்று வேண்டாமா? அவர்கள் அழியவேண்டுமென்றால் அவர்களை மீறிச்சென்று அழிந்தால்தானே அது முறையாகும்? அவர்களுடன் தானும் சென்று வில்லேந்தி நிற்பேன் என்று சொல்வது பிழையென அவருக்கு ஏன் தோன்றவில்லை?” என்றாள் அசலை.

காந்தாரி அவள் சொற்களைக் கேட்டதுபோலவே தெரியவில்லை. அவள் கைகளைப்பற்றி மெல்ல உலுக்கி அசலை “அன்னையே, தன் வாழ்நாளெல்லாம் எதன்பொருட்டு போராடினாரோ அதை இறுதியில் போட்டுடைக்க எப்படி அவரால் இயல்கிறது? என்ன நிகழ்கிறதென்று அவர் உணர்ந்திருக்கிறாரா என்ன? ஒவ்வொன்றையும் கண்முன்னால் இழந்துவிட்டு வெறுமையுடன் திரும்பப்போகிறாரா?” என்று கேட்டாள். “மானுடர் முன்வாழ்வில் வென்று எழுந்தபின் பின்வாழ்வில் தங்களைத்தாங்களே தோற்கடித்துக்கொள்கிறார்களா?”

காந்தாரி மெல்ல உடலை அசைத்தபின் “அனைத்திற்கும் விடையாக அவர் ஒன்றை சொன்னார். அவரிடம் முற்றிலும் அன்பில்லையென்று” என்றாள். “அது எப்படி முதுதாதை ஒருவர் முற்றிலும் அன்பிழந்து போகமுடியும்?” என்றாள் அசலை. “அவர் அதை சொன்னதுமே அது பொய்யல்ல என்று உணர்ந்தேன்” என்று காந்தாரி சொன்னாள். “என் உள்ளத்தின் ஆழத்தில் ஒன்று அக்கணமே அதை ஏற்றுக்கொண்டு ஆம் ஆம் என்றது. நீயும் நானும் அன்பில் நின்றுகொண்டு பேசுகிறோம்.

அன்பு மிகச் சிறிய பீடம். அன்பின்மை சூழ்ந்திருக்கும் எல்லையின்மை. இங்குள எளிய உண்மைகள் மட்டுமே அன்பினால் அறியப்படும். என்றுமுள பேருண்மைகள் அன்பின்மையில் அமைந்தவை. அவர் அவற்றை கண்டிருக்கலாம். இங்கு நின்றபடி நாம் அவரிடம் சொல்லாட முடியாது" என்றாள்.

"என்ன சொல்கிறீர்கள், அன்னையே? நாம் அன்பின்மை கொள்ளமுடியுமா என்ன?" என்றாள் அசலை. காந்தாரி தன் சிறிய செவ்விதழ்களை அழுத்தியபடி அமர்ந்திருந்தாள். தேரசைவில் அவள் உடல் குலுங்கியதில் உள்ளே சொற்கள் முண்டியடித்து வெளிவர உந்துபவைபோல் இருந்தன. பின்னர் "இப்போது மேற்கு மாளிகை சாளரத்தோரம் இருவர் அமர்ந்திருக்கிறார்களே, இறுதியாக அவர்களை எப்போது நீ எண்ணினாய்?" என்றாள். அசலை எதிர்பாராத குளிர்ந்த அடியென அதை ஏற்று உடல்குலுங்கினாள். காந்தாரியை தொட்டிருந்த அவள் கைகள் அறியாமல் நழுவி பின்னகர்ந்தன.

"மகாநிஷாதகுலத்து இளவரசியரான சந்திரிகையும் சந்திரகலையும். அதற்கு முன் அங்கு சம்படை அமர்ந்திருந்தாள். அவளுக்கு முன் சிவை அமர்ந்திருந்தாள். சம்படையை இளமையில் என் இடையிலிருந்து நான் இறக்கிவிட்டதே இல்லை. ஒவ்வொரு நாளும் அவளுக்கு உணவூட்டி உறங்க வைத்த பின்னரே நான் மஞ்சத்திற்கு செல்வேன். என் கையாலேயே அவளுக்கு ஆடை அணிகளும் பூட்டுவேன். எத்தனை எளிதாக அவளை மறந்தேன்! எவ்வளவு இயல்பாக ஒவ்வொருவரும் அவர்களிடமிருந்து விலகுகிறோம்! நம் அன்பின் வலையில் ஏன் அவர்கள் இல்லை?" என்றாள் காந்தாரி.

அசலை மூச்சை நிறுத்த முயல்பவள்போல் உதடுகளை அழுத்தி தோள்களை குறுக்கினாள். “ஏனெனில் அன்பில் திளைத்து நாம் வாழ்வது அது இனிதென்பதனால்தான். மைந்தரை நெஞ்சோடணைப்பதும், கொழுநருடன் தழுவியிருப்பதும், உடன்பிறந்தவருடன் ஆடிக்களிப்பதும் உவகை அளிக்கிறது. முற்றிலும் உவகையளிக்காத ஒன்றை முழுமையாகவே நம் உலகிலிருந்து விலக்கிவிடுகிறோம்” என்றாள் காந்தாரி.

“நான் எண்ணிப்பார்க்கிறேன், சம்படை நோயுற்றிருந்தால் நாங்கள் பத்து உடன்பிறந்தாரும் ஒவ்வொரு கணமும் அவளை உடனமர்ந்து பேணியிருப்போம். ஏனெனில் நோயுற்ற ஒருவரை பேணுவதென்பது முதல் நோக்கில் துயரென்றாலும் அடியில் இன்பமளிப்பது. நம்மை அளிநிறைந்தவர்கள் என்றும் அருள்கொண்டவர்கள் என்றும் நமக்குக் காட்டுவது. இது அப்படியல்ல. அவர்கள் ஏன் நம்மால் முற்றிலும் புறக்கணிக்கப்பட்டார்கள்? ஏனெனில் நம் அனைவரிலும் ஒரு சிறுபகுதி அவர்களாகவும் இருக்கிறது. அது நாம் பார்க்க விரும்பாத பகுதி. அதை நம்மிலிருந்து வெட்டி வீசினாலொழிய நாம் மகிழ்ந்திருக்க இயலாது.”

“இதெல்லாம் நாமே நம்மை துன்புறுத்தும்பொருட்டு எண்ணிக்கொள்வதுதான். நமது குற்றஉணர்வையும் நாம் இனிதென சுவைக்கிறோம்” என்றாள் அசலை. “இல்லை, எந்தப் பேரன்பின் பீடமும் அன்பின்மை எனும் வேலியால் பாதுகாக்கப்பட்டே நிலைகொள்கிறது. அன்பின் எந்த எல்லையையும் இறுதிவரை சென்று தொட்டுப்பார், அப்பால் விரிந்திருக்கும் அன்பின்மையின் பெருவெளி

காணக்கிடைக்கும். அதுவே மெய்மை. அவர் அங்கிருக்கிறார்” என்றாள் காந்தாரி.

அசலை பற்களை இறுகக்கடித்து காந்தாரியின் முகத்தை நோக்கிக்கொண்டிருந்தாள். அவள் கழுத்தில் வெண்ணிறத் தசை மூச்சில் அசைந்தது. இரு புயங்களிலும் வெண்தசை அதிர்ந்துகொண்டிருந்தது. அக்கணம் அவள்மேல் அத்தனை வெறுப்பு ஏன் வருகிறதென்று அசலையின் உள்ளாழம் அவளை நோக்கியே வியந்தது. மறுகணம் கூர்கொண்டு சினம்கொண்டு முன்னெழுந்தது. “நாம் இதை ஏன் பேசிக்கொள்கிறோம்? ஏனெனில் இத்தருணம் அடைபட்டுவிட்டது என்று நமக்குத் தோன்றுகிறது. ஆகவே இப்படி சில கொள்கைகளை உருவாக்கிக்கொண்டு அதை கடந்து செல்கிறோம். வேறொன்றுமில்லை” என்று அசலை சொன்னாள். “ஆனால் நான் அன்னை. என்னால் அப்படி இயல்வது எளிதல்ல. அனைத்து வாயில்களையும் நான் முட்டியாகவேண்டும்.”

காந்தாரி “ஆம், அன்னையர் இறுதிக்கணம் வரை முயல்வார்கள். விலங்குகளும் பறவைகளும்கூட அப்படித்தான். ஒருபோதும் அவை பின்வாங்குவதில்லை” என்றாள். “நானும் அன்னையென உன்னுடன் எழவே விரும்புகிறேன். நீ சொல்வது எதுவானாலும் அதை இயற்றுகிறேன். எனக்கு எண்ணங்கள் எழவில்லை. என் உள்ஆழத்தில் கதவுகள் ஒவ்வொன்றாக மூடிக்கொண்டிருக்கின்றன. நான் சொன்னது அதைப்பற்றி மட்டும்தான்” என்றாள் காந்தாரி. “அப்படியானால் தேரை திருப்பச் சொல்லுங்கள். பீஷ்மரிடம் செல்வோம், அவர் உருவாக்கி வைத்திருக்கும் அந்த சொற்கவசத்தை உடைப்போம். அதற்குள் முதுமையின் வெற்றுச் செயலின்மை

மட்டுமே உள்ளது, எந்த அறமும் அல்ல என்று அவருக்குக் காட்டுவோம்” என்றாள் அசலை.

மீண்டும் காந்தாரியின் கைகளைப்பற்றி மெல்ல உலுக்கி “அன்னையே, இத்தருணத்தில் இப்போரில் தான் கலந்துகொள்ளப்போவதில்லை என்று ஒரு சொல் மட்டும் அவரால் உரைக்கப்படுமென்றால் அதிலிருந்து நாம் நெடுந்தொலைவு செல்லமுடியும். கிருபரையும் துரோணரையும் பின்னிழுக்க முடியும். நம் படையில் பாதியையேனும் தயங்கவைக்க முடியும். தங்கள் ஆற்றல் பாரதவர்ஷத்தையே வெல்லும் தகைமைகொண்டதென்ற எண்ணத்தால்தான் அரசர் இங்கு போருக்கெழுந்திருக்கிறார். அவரை நம்மால் நிறுத்த முடியும்” என்றாள்.

காந்தாரி “மீண்டும் முயல்வதில் எனக்கு தடையேதுமில்லை. ஒருமுறை என்ன நூறுமுறை உன்னுடன் வந்து அவருடன் சொல்லாடுகிறேன். இப்போது நாம் அரண்மனைக்கு மீள்வோம். பிறிதொரு தருணத்தில் அவரை சந்திப்போம்” என்றாள். “இன்று நாம் அவரைப் பார்த்த இடமும் பொருத்தமானதல்ல என்று எனக்குத் தோன்றுகிறது. அந்தக் காடும் தனிமையும் ஊழ்கத்திற்குரியவை. அங்கிருப்பவர் தன்னை முனிவரென்று உருவகித்துக்கொண்டு நம்மிடம் பேசினார். அவர் படைக்கலம் பயில்கையில் அல்லது அவையமர்ந்து நெறிநூலாய்கையில் சென்று மீண்டும் அவரை பார்ப்போம். அங்கிருப்பவர் தன்னை களவீரரென்றும் அரசசூழ்பவரென்றும் உருவகித்துக்கொண்டிருப்பார். அவரிடம் சொல்லவே நம்மிடம் சொற்கள் உள்ளன.”

“ஆம் அன்னையே, நாம் மீண்டும் அவரை சந்திப்போம். அவர் இப்போருக்கு எதிர்நின்றாக வேண்டும், நமக்கு வேறுவழியில்லை” என்று அசலை சொன்னாள்.

காந்தாரியின் அரண்மனையில் அவளை கொண்டு இறக்கிவிட்டு தன் அரண்மனை நோக்கி செல்கையிலேயே அசலை கடந்ததொன்று நினைவுமீள்வதுபோல் இயல்பாக அவ்வெண்ணத்தை அடைந்தாள். பீஷ்மரின் குடிலிலிருந்து கிளம்பிய கணம் முதல் தன் உள்ளத்தின் ஒரு பகுதி திரும்பிச் சென்று அக்குடிலில் அவருடன் இருந்துகொண்டிருப்பதையும் அவருடைய ஒவ்வொரு அசைவையும் உற்றுநோக்கிக்கொண்டிருப்பதையும் அவள் உணர்ந்தாள். அமைதியிழந்தவராக வில்லையும் அம்புகளையும் எடுத்துக்கொண்டு பயிற்சிக்களத்திற்கு சென்றார். இலக்குகளை மேலும் மேலும் சேய்மையானவையாகவும் சிறியவையாகவும் அரிதானவையாகவும் மாற்றி பயிற்சி செய்துகொண்டிந்தார். ஒவ்வொருமுறை இலக்கு எய்தப்படுகையிலும் அவர் மேலும் நிறைவின்மை கொண்டார்.

மீண்டும் மாளிகை முற்றத்திற்கு வந்து தேர்ப்பாகனை கையசைத்து அருகே அழைத்தாள். ஏறி அமர்ந்துகொண்டு பீஷ்மரின் குடிலுக்கு செல்லும்படி ஆணையிட்டாள். தேர் கிளம்புவது வரை அவளிடம் ஒரு பதற்றம் இருந்தது. இரு கைகளையும் விரல்கோத்து மடியில் வைத்து பிசைந்துகொண்டிருந்தாள். சகட ஒலியுடன் தேர் கிளம்பி முற்றத்தைக் கடந்து சாலையை அடைந்து சீராக ஓடத்தொடங்கியதும் சற்று இயல்புநிலையடைந்து பின்னால் சாய்ந்து அமர்ந்து கால்களை நீட்டிக்கொண்டாள். மெல்ல

மெல்ல தன் உள்ளத்தை தளர்த்தி கண்களை மூடி அமர்ந்தாள். மெல்லிய துயில் ஒன்று அவள்மேல் படிந்து அவள் சித்தப்பெருக்கை கலைத்து விளையாடியது. அதற்குள் ஆயிரம் இளமைந்தர்களின் கூச்சல்களும், கங்கையின் கோடைக்கால நீர்ப்பெருக்கும், மிக அப்பால் எங்கோ கேட்டுக்கொண்டிருக்கும் மணியோசையும் ஊடுருவின. ஒரு மயிற்பீலி. அகலுமொரு குழலோசை. இவை இல்லாத கனவு எனக்கில்லையா? நான் கனவா கண்டுகொண்டிருக்கிறேன்? இல்லை, தேரில் அமர்ந்திருக்கிறேன்.

விழித்தெழுந்து ஆடையை சீர்படுத்தி வெளியே பார்த்தபோது அஸ்தினபுரியின் தெருவினூடாக தேர் சென்றுகொண்டிருப்பதை உணர்ந்து எங்கு சென்றுகொண்டிருக்கிறோம் என்பதை மீட்டுக்கொண்டாள். அக்கணமே அவள் உள்ளம் பீஷ்மரின் குடிலுக்கு சென்றுவிட்டிருந்தது. அவரிடம் பேசவேண்டிய சொற்றொடர்களை ஒவ்வொன்றாக எடுத்து முறையாக அடுக்கிக்கொண்டாள். அது ஒழுங்குபெறும்தோறும் தன்னம்பிக்கையும் மெல்லிய உளநிறைவும்கூட அவளுக்கு ஏற்பட்டது.

பீஷ்மரின் குடில் முன்னால் தேர் சென்று நின்றபோது இறங்கி தேர்ப்பாகனிடம் அதை அப்பால் கொண்டுசென்று நிறுத்தும்படி ஆணையிட்டுவிட்டு குடில் நோக்கி சென்றாள். சகட ஒலி கேட்டு உள்ளிருந்து வந்த விஸ்வசேனர் அவளைப் பார்த்ததும் வியந்து பின் அதை மறைத்துக்கொண்டு கைகூப்பியபடி அருகணைந்தார். அவரது இரு மாணவர்களும் பின்னால் வந்தனர். முகமன் ஏதும் உரைக்காமல் “நான் பிதாமகரிடம் ஒன்று சொல்ல விட்டுவிட்டேன். அவரிடம் பேச வேண்டும்” என்று அசலை சொன்னாள்.

“பொறுத்தருள்க, அரசி! அவர் விற்பயிற்சிக் களத்திலிருக்கிறார். உளம்கூரும்பொருட்டு அவர் அங்கு செல்கையில் இங்கிருந்து ஒரு சொல்லும் அங்கு செல்லக்கூடாதென்பது ஆணை” என்றார் விஸ்வசேனர். “நன்று, ஆனால் எங்கிருந்து எச்சொல் வந்தாலும் உளம்கூர்வதற்கான பயிற்சியல்லவா மெய்யானது?” என்று சொல்லி புன்னகைத்த அசலை “என் வருகையை கூறுக! அவர் என்னை மறுதலித்தால் திரும்பிவிடுகிறேன்” என்றாள்.

“இல்லை, நாங்கள் அவரிடம் செல்லவேகூடாது என்பது ஆணை” என்று விஸ்வசேனர் சொன்னார். “சரி, நானே செல்கிறேன். அதன்பொருட்டு அவர் அம்புகளில் ஒன்று என்னை நோக்கி வருமென்றால் ஏற்றுக்கொள்கிறேன்” என்று சொன்ன அசலை “பயிற்சிக்களம் இத்திசையில்தானே?” என்று திரும்பினாள். அவளுக்குப் பின்னால் வந்தபடி விஸ்வசேனர் “அரசி, இது ஒப்புதலற்ற செயல்” என்று சொல்ல “நான் பார்த்துக்கொள்கிறேன், துயருற வேண்டாம்” என்று அவரை கையமர்த்திவிட்டு அவள் நடந்தாள்.

முதலில் காட்டுக்குள் செல்கையிலேயே அந்தப் பெரிய பயிற்சிக்களத்தை அவள் கண்டிருந்தாள். அங்கு மட்டும் மரங்களும் செடிகளும் வெட்டி விரிவாக்கப்பட்டு ஒளி ஒரு பெருங்குளம்போல் தேங்கிக் கிடந்தது. தொலைவிலேயே பீஷ்மரின் உடலசைவுகளை அவள் கண்டாள். வானில் தான் ஏவிய அம்புகளைத் தொடர்ந்த அம்புகளால் தைத்து மெல்ல கீழிறக்கிக்கொண்டிருந்தார். அவள் வருவதை உடை வண்ண அசைவிலிருந்தே உணர்ந்து திரும்பிப் பார்த்தார். அவர் உடலில் சினம் தெரிவதை அவள் கண்டாள். எனினும் நடையின் விரைவை குறைக்காமல் அவரை அணுகி “வணங்குகிறேன், பிதாமகரே” என்றாள்.

பீஷ்மர் மறுமொழி சொல்லாமல் அவளை உற்றுப்பார்த்துக்கொண்டு நின்றார். “தங்களிடம் சில சொற்கள் சொல்ல விட்டுப்போய்விட்டது. அரண்மனைக்குச் சென்ற பிறகே அதை உணர்ந்தேன். ஆகவே திரும்பி வந்தேன்” என்றாள் அசலை. “இங்கு எவருக்கும் நுழைவொப்பு இல்லை” என்று பீஷ்மர் சொன்னார். “ஆம், அறிவேன். அதன்பொருட்டு தாங்கள் ஏவும் அம்பை பெற்றுக்கொள்கிறேன் என்று சொல்லித்தான் இங்கு வந்தேன்” என்று அசலை சொன்னாள்.

பீஷ்மர் விழிகளை திருப்பிக்கொண்டு “நான் தனிமையில் பெண்டிரை சந்திப்பதில்லை” என்றார். “அத்தனை நொய்மையானதா உங்கள் நோன்பு?” என்று அசலை புன்னகையுடன் கேட்டாள். கடுஞ்சினத்துடன் திரும்பி “என்ன சொல்கிறாய்?” என்று பீஷ்மர் கேட்டார். “அத்தனை நொய்மையான ஒன்றை பற்றிக்கொண்டா இத்தனை காலம் வாழ்ந்திருக்கிறீர்கள் என்று கேட்டேன். சொல் பயின்றும் வில் பயின்றும் இத்தனை ஆண்டுகளாகப் புதைத்தும் அது இன்னமும் மட்கவில்லையா?”

பீஷ்மர் பெருகிஎழுந்த சினத்தை மெல்ல அடக்கி உதடுகள் இழுபட புன்னகைத்து “என்னை சீண்டும்பொருட்டு வந்தாய் போலும்” என்றார். “இல்லை, மூத்தவர்களின் மென்மையும் தயக்கமும் இல்லாமல் நேரடியாகச் சென்று உண்மைகளைத் தொடுவது என் வழக்கம். பிதாமகரே, இந்தப் போர் தொடங்குவது உங்கள் உள்ளுறைந்த ஒழியாக் காமத்திலிருந்து என்பதை தாங்கள் அறிவீர்கள்” என்றாள் அசலை. பீஷ்மர் “நீ இன்னும்கூட கடுமையாக சொல்லலாம். உனக்கு அது நிறைவளிக்குமெனில் நன்று” என்று புன்னகைத்தார்.

“இப்புன்னகையினூடாக நீங்கள் எதையும் மறைத்துவிட முடியாது. இது என்னை தடுக்கவும் இயலாது” என்று அசலை சொன்னாள். “இங்கு மூன்று தலைமுறைகளுக்கு முன்பு அம்பை வந்து நின்றாள். அன்று உங்கள் உதடுகளிலிருந்து எழுந்த இதே போன்ற நச்சுப்புன்னகை ஒன்றுதான் அவளில் அனல் எழச்செய்தது. அஸ்தினபுரியின் நுழைவாயிலில் அணையாது அமைந்த அந்த எரியிறைதான் மூண்டெழுந்து இந்நகரை இன்று அழிக்கப்போகிறது” என்றாள்.

பீஷ்மர் “சூதர் கதைகளை நன்கு கேட்டிருக்கிறாய்” என்றார். “ஆம், அவையன்றி கடந்த காலத்திற்குச் செல்ல நமக்கு வழியேதும் இல்லை. ஆனால் அந்நிகழ்வை கதையென்று நீங்கள் கடந்துசெல்ல முடியாது. இங்கு நீங்களும் இருக்கிறீர்கள். அழியாக் குருதிவிடாயுடன் அங்கு அவளும் அமர்ந்திருக்கிறாள்” என்றாள் அசலை. “உங்கள் பிழைக்கு உங்கள் கொடிவழியினர் முழுமையாக பலிகொடுக்கப்பட வேண்டுமா?” என்று அசலை சீற்றத்துடன் கேட்டாள். அவளுடைய நிகர்நிலை அழியலாயிற்று. மூச்சில் முலைகள் எழுந்தமைய முகம் சிவந்து கண்கள் நீர்மைகொண்டன.

பீஷ்மர் உரக்க நகைத்து “இதைத்தான் கேட்க விட்டுப்போனாயா? செல்லும் வழியிலும் மீளும் வழியிலும் இச்சொற்களை புனைந்துகொண்டாயா?” என்றார். “இந்நகைப்பும் எதையும் மறைப்பதோ விலக்குவதோ இல்லை, பிதாமகரே” என்றாள் அசலை. “நீங்கள் அறிவீர்கள், இப்புவியில் எவரும் இளைய யாதவரை வெல்ல இயலாது. ஆகவே களம் அமையுமென்றால் உங்கள் மைந்தரும் பெயர்மைந்தரும் வழிமைந்தரும் முற்றாக இறந்தொழிவார்கள் என்பதும் உறுதி. எதன்பொருட்டு அப்பலியை கொடுக்கிறீர்கள்? அன்று

அம்பையின் முன் ஓர் அம்பெடுத்து சங்கறுத்து குருதி சிந்த விழுந்திருந்தீர்கள் என்றால் அன்றே முடிந்திருக்கும் உங்கள் அழல். அன்று செய்யத் தவறியதை ஆயிரம் பல்லாயிரம் மடங்கு துயர் பெற்று நிகர்செய்ய விரும்புகிறீர்களா?”

பீஷ்மர் பொறுமையிழப்பதை அவரது கைகள் காட்டின. ஆனால் முகம் அதே புன்னகையை கொண்டிருந்தது. “உங்கள் மைந்தர் அனைவரையும் போரில் பலியிட்டு விண்ணுக்கான உங்கள் பாதையை அமைத்துக்கொள்ளுங்கள். நான் அன்னை. என் மைந்தரை இழக்க நான் ஒருபோதும் ஒப்பமாட்டேன். அதை உங்களிடம் சொல்லிவிட்டுச் செல்லவே வந்தேன்” என்றாள் அசலை. அவள் குரல் எழுந்தது. சினத்துடன் அவரை நோக்கி இரு காலடி வைத்து அணுகி கைநீட்டி கூவினாள்.

“இதையும் சொல்கிறேன்… நான் பெண்ணென்பதால் போருக்குப் பின்னரும் எஞ்சியிருப்பேன். உங்களுக்கு நீர்க்கடன் கொடுக்க எவன் கங்கையில் கைப்பிடி அள்ளியெடுக்கிறானோ அங்கு சென்று அவனிடம் சொல்வேன், ஆணவத்தால் அல்லது அச்சத்தால் ஆற்றவேண்டிய ஒன்றைத் தவறவிட்டு ஆயிரம் மடங்காக திருப்பி அளித்த அறிவிலி ஒருவருக்கான நீர் அது என. அதற்கு உன் அகமளித்தால் நீயும் அறிவிலிகளின் உலகிற்கே செல்வாய். தவிர்த்துவிடுக என்பேன். இங்கிருந்து என் எஞ்சிய வாழ்நாள் எல்லாம் உங்களை வீணரென்றும் கோழையென்றும் சொல்லில் நிறுத்துவேன். இது என் மைந்தர்மேல் ஆணை!”

பீஷ்மர் சினத்துடன் கைதூக்கி ஏதோ சொல்லவந்து, அச்சொல்லை அடக்கி வெறும் கையசைவாக அதை மாற்றி தலைதிருப்பி நின்றார். இல்லை என்பதுபோல் தலையசைத்து “நீ செல்லலாம். உன்னிடம் நான் பேசவேண்டியது

ஒன்றுமில்லை” என்றார். “உங்கள் நோன்பில் உறுதியிருந்தால் என் விழிகளை நோக்கி பேசலாமே?” என்று அசலை சொன்னாள். “செல்க!” என்று பீஷ்மர் நடுங்கும் குரலில் சொன்னார். “உங்களிடம் உறுதியை எதிர்பார்க்கிறார்கள். நானும் எதிர்பார்த்தேன். ஆனால் அவ்வுறுதி சற்றேனும் இருந்திருந்தால் அன்று அம்பையை எதிர்கொண்டிருக்கலாம். ஒரு மூதாதை தன்னால் சுமக்க முடியாத எடையொன்றை தோளில் ஏற்றிக்கொண்டதன் விலையை அஸ்தினபுரி இன்று அளித்துக்கொண்டிருக்கிறது” என்றாள் அசலை.

அக்கணம் பொறையுடைந்த பீஷ்மர் திரும்பி உறுமியபடி கையை ஓங்கிக்கொண்டு அவளை நோக்கி வந்தார். அசையாது அவர் விழிகளைப் பார்த்து “நன்று” என்று அசலை சொன்னாள். “சென்றுவிடு!” என்று இறுகிய பற்களூடாக மூச்சொலியுடன் பீஷ்மர் சொன்னார். “உங்கள் கையிலிருக்கும் அம்பால் என் கழுத்தை வெட்டலாம். வாழ்நாளில் முற்றுறுதியுடன் ஒரு முடிவையேனும் எடுத்தீர்கள் என்ற புகழ் உங்களுக்கு அமையும்” என்று அசலை சொன்னாள். பீஷ்மர் தோள்கள் தொய்வுற தளர்ந்த காலடிகளுடன் பின்னகர்ந்து சென்று அங்கு இடப்பட்டிருந்த மூங்கில் பீடத்தின்மேல் அமர்ந்தார். தனக்குத் தானே என “இத்துயரையும் நான் தாங்கவேண்டுமென்பது ஊழ் போலும். இது ஒன்றுதான் எஞ்சியிருந்தது போலும்” என்றார்.

அசலை அவர் அருகே வந்து “இதுவும் தாங்கள் நடிக்கும் ஒரு மாற்றுரு மட்டுமே. நினைவறிந்த நாள் முதலே ஒன்றிலிருந்து பிறிதொன்றென மாற்றுருக்களைத் தாங்கி இந்த மேடையில் நடித்துக்கொண்டிருக்கிறீர்கள். பிறருக்குமேல் எழுந்த தலைகொண்ட பெருவீரர். ஆனால் நீங்கள் செருவென்ற களங்கள் எவை? அன்னைக்கென நோன்பு பூண்டவர். ஆனால்

அணுகிய அத்தனை பெண்களுக்கு முன்னாலும் தோற்றவர். பிறருக்கென துயர் தாங்குபவர், ஆனால் குடியை முற்றழித்த மூதாதை. அனைவராலும் புறக்கணிக்கப்படுபவர், மைந்தராலும் பெயர்மைந்தராலும் துயருறுபவர். ஆனால் தன்னையன்றி பிறரை எண்ணாதவர். பிதாமகரே, நீங்கள் இவர்களில் எவருமல்ல. இத்தனை மாற்றுருக்களுக்கும் அடியில் உங்கள் மெய்யுரு என்ன என்று இத்தனிமையிலிருந்து எண்ணிக்கொள்ளுங்கள்" என்றாள்.

பீஷ்மர் விழிகளைத் தூக்கி அவளைப் பார்த்து "நான் மட்டும்தான் இவ்வண்ணம் இருக்கிறேனா? மானுடர் அனைவரும் மாற்றுருக்களிலிருந்து பிறிதொரு மாற்றுருவுக்குச் செல்வதையே அகநிகழ்வெனக் கொண்டவர்கள் அல்லவா?" என்றார். "அனைவரும் அல்ல" என்று அசலை சொன்னாள். "தன் குருதியறத்தை மட்டுமே அறிந்தவர்கள், ஐயமின்றி தன் கடமையை ஆற்றுபவர்கள், ஊழ்கத்தில் அமர்ந்து உய்பவர்கள் தங்கள் மெய்யுருவிலேயே அமைகிறார்கள். பிதாமகரே, அன்னையர் அன்னையராக நிற்கையில் தாங்களாகவே நிலைகொள்கிறார்கள்" என்றாள் அசலை. "அன்னையென்று உணர்கையில் பிறிதொன்றும் அல்ல நான் என்று உறுதி கொள்கிறேன்."

"சொல்க!" என்றார் பீஷ்மர். "என்னையாவது எதிர்கொள்வீர்கள் என எண்ணினேன். இத்தனை அகவைமுதிர்வுக்குப் பின்னரும் நீங்கள் என்னை தவிர்க்கவே முயல்கிறீர்கள்" என்றாள் அசலை. பீஷ்மர் நடுங்கும் நீள்விரல்களால் தாடியை நீவினார். அவள் திரும்பியபோது பின்னிருந்து அவர் குரலெழுந்தது. "என்னை யார் என்று நீ பார்க்கிறாய்? இத்தருணத்தில் நான் செய்ய வேண்டியதென்ன ?" என்றார்.

“நீங்கள் வெறும் ஒரு முதியவர் மட்டுமே. உடலுருக்கொள்ளாத பல்லாயிரம் மைந்தரின் தந்தை. நுண்வடிவில் அவர்கள் அனைவரும் வாழ்வது உங்கள் உடலுக்குள்” என்றாள் அசலை. “பிதாமகரே, நிகழா மைந்தரை உடன்பிறந்தார் குருதியில் கண்டு அதன் இசைவையும் இசையாமையையும் மாறி மாறி உணர்ந்து அலைக்கழிந்து இங்கு வந்து சேர்ந்திருக்கிறீர்கள். பாலையின் முளைக்காத விதைமண்ணின் துயரம்தான் நீங்கள். இன்று கௌரவமைந்தரின் பெருக்கைக்கண்டு நீங்கள் கொண்டிருப்பது அன்பின்மை அல்ல, விலகலும் கசப்பும்தான். உங்கள் குருதியில் இக்கொடிவழி முளைத்திருந்தால் இம்மைந்தரும் பெயர்மைந்தரும் சிறப்புற்று அமைந்திருப்பார்களென்று ஒருகணமேனும் நீங்கள் எண்ணியதுண்டா?”

பீஷ்மர் அவளை ஒரு கணம் நோக்கிவிட்டு திரும்பிக்கொண்டார். “சொல்லுங்கள், உங்கள் மைந்தரும் பெயர்மைந்தரும் உங்களுக்கு அளிக்கும் ஒவ்வாமையைத்தானே அவர்கள் மீதான பற்றாகவும் கடமையாகவும் மாற்றிக்கொண்டிருந்தீர்கள்? அவர்கள் பொருட்டு வில்லேந்தவும் வேலேந்தவும் உங்களைத் தூண்டுவது நீங்கள் அவர்களை வெறுக்கிறீர்கள் என்பதுதானே?”

பீஷ்மர் அவளை நோக்கி “உறவுகளை இப்படி ஆராய்ந்தால் ஒன்றும் எஞ்சாது, பெண்ணே. ஒவ்வொருமுறையும் ஒவ்வொன்றும் உண்மையென்று தோன்றும். எதையும் எப்படியும் விளக்கிக்கொள்ளவும் இயலும்” என்றார். “அவையமர்ந்திருக்கையில் உங்கள் கண்களில் தெரியும் விலக்கத்தையும் கசப்பையும் தொலைவிலிருந்து நோக்கிக்கொண்டிருப்பவள் நான். பதினைந்தாண்டுகளாக நான்

நன்கறிந்தவை அவ்வுணர்வுகள். பிதாமகரே, பல தருணங்களில் தாங்களாக மாறி பீடத்தில் அமர்ந்து அந்த அவையை நானே நோக்கியதுண்டு” என்றாள் அசலை.

பீஷ்மர் “உள்ளத்தைப்பற்றி எவரும் எதையும் சொல்லிவிடமுடியாது, அல்லது எவரும் எதையும் சொல்லலாம்” என்றார். “ஆம், முழுமையாக எதையும் சொல்லிவிடமுடியாது. ஆனால் அத்தருணத்தில் அக்காலத்தில் பொருத்தி சிலவற்றை வகுத்துரைக்கவும் கூடும்” என்று அசலை சொன்னாள். “இன்று நீங்கள் வில்லேந்தி களம்புகுவது எதற்காக? இவர்கள் அனைவரும் இறந்து மறைகையில் உங்கள் உள்ளம்கொண்ட கசப்பு நிறைவடையும். அவர்களின் பொருட்டு வில்லேந்தி உடன்நின்று பொருதி விழுந்தால் உங்கள் குற்றவுணர்வும் சொல்நிகர் அடையும். உங்கள் முடிவுக்கு வேறென்ன அடிப்படை?” என்றாள்.

பீஷ்மர் “இத்தனை சொல்லாய்வும் மெய்யாய்வும் செய்து நாம் அடையப்போவதென்ன?” என்றார். அவர் விழிகளில் ஏளனம் எழுந்தது. துடுக்காகப் பேசும் இளமகளிடம் விளையாடும் தந்தை என முகம்சூடி “இந்த ஆடலால் நாம் நம்மை அறிந்துள்ளோம், பிறரை அதைக்கொண்டு உய்த்துள்ளோம் என்னும் நம்பிக்கையன்றி வேறென்ன கிடைக்கிறது?” என்றார்.

அசலை “உங்கள் உள்ளத்தை நீங்கள் எதிர்கொள்வதே இல்லை. பிதாமகரே, மிக இளமையில் காமத்தை விட்டு ஒழிந்துசெல்வதே அதை வெல்வதற்கான வழி என்று கண்டுகொண்டீர்கள். அதன்பொருட்டே பாரதவர்ஷத்தின் காடுகளிலும் நகரங்களிலும் மாற்றுருக்கொண்டு அலைந்தீர்கள். பின்னர் ஒவ்வொன்றிலிருந்தும் ஒழிந்துசெல்வதே கடந்துசெல்வது என்று கற்றுக்கொண்டீர்கள். இதோ, இவ்வெளிய

உண்மையிலிருந்து ஒழிந்துசெல்லும் பொருட்டே இத்தருணத்தில் நீங்கள் எடுக்கவேண்டிய முடிவை தவிர்க்கிறீர்கள்” என்றாள்.

“இப்போது பெருந்தந்தையென தலையெழுந்து நின்று இப்போரை தவிர்க்கும்படி நீங்கள் ஆணையிடவேண்டும். இல்லை, எந்நிலையிலும் என் மைந்தர் களமெதிர் நின்று குருதி சிந்த நான் ஒப்பேன் என்று நீங்கள் சொல்ல வேண்டும். ஆம், அவர்களில் ஒருசாரார் உங்களை புறந்தள்ளி முன்செல்வார்கள். ஒருவேளை அங்கரையோ சல்யரையோ முன்நிறுத்தி களம்காணவும் கூடும். ஆனால் அவர்கள் அதை செய்தால் உங்கள் சொல்லை கடந்துசென்றே அதை செய்யவேண்டும். இருசாராரும் உங்களை கொன்றுவிட்டே தங்களுக்குள் மோதிக்கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் எது உகந்தததோ அதைச் செய்தவர் ஆவீர்கள். பிற அனைத்தும் வெறும் நடிப்புகளே.”

பீஷ்மர் அவளை நோக்கிக்கொண்டு வெறுமனே அமர்ந்திருந்தார். “இங்கு இந்தப் பொருளற்ற பயிற்சிகளைச் செய்துகொண்டு, காட்டிலும் களத்திலும் ஒடுங்கி அமர்ந்திருந்தால் பிறிதொருநாள் தெய்வங்களுக்கு முன் பெரிய ஒரு நிகர்பலியை நீங்கள் அளிக்கவேண்டியிருக்கும். கருதுக, ஒவ்வொரு முறையும் நீங்கள் ஒழிந்துசென்றதை ஓராயிரம் மடங்காக திருப்பி அளிக்க வேண்டியிருந்திருக்கிறது. இது இறுதி வாய்ப்பு. இத்தருணத்திலும் ஒழிந்தீர்கள் என்றால் எஞ்சுவதென ஏதுமில்லை. இதற்கப்பால் தங்களிடம் நான் சொல்வதற்கு என்னிடம் ஒருசொல்லும் இல்லை” என்றாள் அசலை.

பீஷ்மர் விழிதாழ்த்தி புன்னகைத்தார். உளவிசை தளர உடல் தொய்வுகொள்ள “நான் அறிவின்மை பல சொல்லியிருக்கக்கூடும். அதை நான் அறிவேன். அச்சொற்களனைத்தும் என் உளமறிந்த மெய் என்பதற்கப்பால் எனக்கு சொல்வதற்கொன்றுமில்லை” என்றாள் அசலை. பீஷ்மர் விழிதூக்கி “அல்ல, நான் அறிந்த அரசுசூழ் உரைகளில் இப்போது நீ நிகழ்த்தியதே மிகச் சிறந்தது. இத்தனை கூரிய சொற்களையும் முழுமுற்றான சொல்லாடலையும் உன்னால் எப்படி இயற்றிக்கொள்ள இயன்றது என்று வியந்தேன்” என்றார்.

அசலை நீள்மூச்சுடன் புன்னகைத்து “தன் குஞ்சுகளைக் காக்க சிறுதாய்க்குருவி கருநாகத்தை கொத்தி துரத்துவதை தாங்கள் கண்டிருக்கலாம். இது அன்னையரில் தெய்வங்கள் எழுந்தளிக்கும் ஆற்றல்” என்றபின் “வணங்குகிறேன், பிதாமகரே” என்றாள். பீஷ்மர் கைதூக்கி அவளை வாழ்த்தினார்.

# குருதிச்சாரல் - 13

**பகுதி இரண்டு – பெருநோன்பு – 7**

இடைநாழியினூடாக அசலையின் தோள்களை பற்றிக்கொண்டு சிறிய காலடிகளை எடுத்துவைத்து மூச்சுவாங்க நடந்த காந்தாரி நின்று நீள்மூச்செறிந்து “நெடுந்தொலைவு வந்துவிட்டோம் போலும்!” என்றாள். “இல்லை அன்னையே, நாம் இரு இடைநாழிகளையே கடந்துள்ளோம்” என்று அசலை சொன்னாள். “நான் முன்பு கால்களாலும் எண்ணங்களாலும் அறிந்த அரண்மனையல்ல இது. மிகப் பெரிதாக பரந்துவிட்டது” என்றாள் காந்தாரி. அசலை

“காலம் அவ்வாறு பரந்துவிட்டது போலும்” என்றாள். “வருக!” என்று மீண்டும் அவளை அழைத்துச் சென்றாள்.

முகம் சிவந்து உருகிவிடப்போவதுபோலிருக்க மூச்சு சீறியபடி “ஒவ்வொரு தூணுக்குமிடையே இத்தனை இடைவெளி இருந்ததில்லை. ஒவ்வொரு படிக்கட்டும் இத்தனை மடிப்புகள் கொண்டிருந்ததும் இல்லை. இந்த அரண்மனைக்கு என்ன ஆயிற்று?” என்றாள் காந்தாரி. அசலை “அது நம்முடன் விளையாடுகிறது, பேரரசி. நம் மைந்தர்களுக்கு முன் சின்னஞ்சிறு மரப்பெட்டி போலாகிவிடுகிறது. அவர்கள் இதன் ஒருமுனையிலிருந்து மறுமுனைக்கு கிளை விட்டு கிளை தாவும் குரங்குகள்போல செல்கிறார்கள்” என்றாள். “வீடுகள் ஒருபோதும் நிலையாக இருப்பதில்லை என்று எங்கோ சூதர்கள் பாடி கேட்டிருக்கிறேன். தவழும் குழந்தைகளுக்கு சுவர்களும் தரையும் மென்பஞ்சுகளென குழைந்து சூழ்ந்து கொள்கின்றன. முதியோருக்கு கடுமை கொண்டு காத்து நிற்கின்றன” என்றாள் காந்தாரி.

ஒரு தூணைப் பற்றியபடி நின்று “முதுசெவிலி அகலிகை சென்ற ஆண்டு அடுமனை வாயிலில் முட்டி விழுந்தபோது மருத்துவர் பிரகதர் கூறினார், ஒவ்வொரு சுவரும் படிகளும் தூண்களும் வஞ்சத்துடன் முதியோரை சூழ்ந்திருக்கின்றன என்று. உரிய தருணம் அமையும்போது அறைந்து வீழ்த்துகின்றன. பன்னிரண்டு நாட்கள் படுக்கையில் உழன்றபின் அவள் இறந்தாள். அவள் அரண்மனைக்குள் நுழைந்தபோது பதின்மூன்று வயது. அறுபதாண்டுகாலம் அந்த உத்தரம் அவளுக்காக காத்திருந்திருக்கிறது என்றாள் விறலி. ஆயிரம் முறை அது அவளை அறைய எழுந்து பின்

தவிர்த்திருக்கவும் கூடும்” என்றவள் மீண்டும் உடலை எழுப்பியபடி “இன்னும் எவ்வளவு தொலைவு?” என்றாள்.

“இந்த இடைநாழிக்கு அப்பால்...” என்றாள் அசலை. “அங்கு யார் இருக்கிறார்கள்? துரோணர் மட்டுமா?” என்று காந்தாரி கேட்டாள். “இல்லை பேரரசி, விதுரரையும் கிருபரையும் வரச்சொன்னேன்” என்றாள் அசலை. காந்தாரியின் முகம் சுருங்கியது. “விதுரர் எதற்காக?” என்றாள். அசலை “நம்பொருட்டு அவரும் பேசுவார் என்று எண்ணினேன்” என்றாள். காந்தாரி தலையசைத்து “இல்லை. அவர் முன் அவர்கள் உளம் திறக்கமாட்டார்கள். அவர் அங்கு இருக்கவேண்டியதில்லை” என்றாள். “நான் சொல்கிறேன் அவரிடம்” என்று அசலை சொன்னாள்.

மீண்டும் நடந்தபடி “அவர் முன் நானும் உளம் திறக்க இயலாது” என்று காந்தாரி சொன்னாள். “எப்போதுமே அவரை நான் விரும்பியதில்லை. எங்கோ உள ஆழத்தில் அவரும் என்னை வெறுக்கிறார் என்று அறிவேன். எங்கள் இருவருக்கும் தலைவர் ஒருவர் என்பதால்...” அசலை இடைநாழியின் ஓரமாக நின்ற சேடியை விழிகளால் அருகழைத்து தாழ்ந்த குரலில் “அறைக்குள் இரு ஆசிரியர்களை மட்டுமே பேரரசி பார்க்க விழைகிறார்” என்றாள். காந்தாரி பதறி “அல்ல, இது என் ஆணை அல்ல. என் விழைவும் அல்ல. அவ்வாறு அவரிடம் சொல்லவேண்டியதில்லை” என்றாள்.

அசலை “அவள் நுட்பமறிந்த சேடி. முறைப்படி அதை அவரிடம் கூறுவாள்” என்றாள். “வேண்டியதில்லை. எப்படி கூறினாலும் என் விருப்பின்மை அவள் சொற்களில் எழுந்துவிடும்” என்று காந்தாரி சொன்னாள். “இல்லையேல் நம் சந்திப்பே வீணாகிவிடக்கூடும், பேரரசி” என்றாள் அசலை. “நான் அமைச்சரிடம் சொன்னது அவர் அறியாமல் இங்கொரு சந்திப்பு

நிகழ இயலாது என்று அறிந்திருந்தமையால்.” காந்தாரி “தாழ்வில்லை, அவர் இருக்கட்டும்” என்றாள். “அவரை விலக்க நாம் எவ்வாறு முயன்றாலும் அவர் அறிவார். அவருடைய சிறு உளச்சுளிப்பையும் அவர் தமையன் அறிவார்.”

சேடியை விழிகளால் விலக்கிவிட்டு அவள் தோள்களைப்பற்றி அசலை அழைத்துச் சென்றாள். சிற்றறையின் வாயிலை அவர்கள் அடைந்தபோது அங்கு நின்றிருந்த காவலன் தலைவணங்கி வாழ்த்துரை சொன்னான். அசலையின் தோள்களைப் பற்றியபடி நின்ற காந்தாரி “முற்றிலும் பிறிதொரு இடத்திற்கு வந்துவிட்ட உணர்வு. அஸ்தினபுரிக்கு அப்பால் இதுவரை நான் அறிந்திராத ஒரு புதுநகர்போல இது உள்ளது” என்றாள். “அரண்மனையின் இப்பகுதிகளுக்கெல்லாம் நீங்கள் வந்து பல ஆண்டுகளாகின்றன, பேரரசி” என்றாள் அசலை. “ஆம், நான் மிகக் குறைவாகவே அகத்தளத்திலிருந்து வெளியே வருகிறேன். படியிறங்கி தேர் முற்றத்திற்கு செல்வதற்கப்பால் இவ்வரண்மனையில் நான் உலவுவது மிகக் குறைவு” என்றாள் காந்தாரி.

அறைக்கதவு திறந்து வெளியே வந்த விதுரர் “பேரரசியை வணங்குகிறேன். தங்கள் பணிக்காக காத்திருக்கிறேன்” என்றார். “ஆசிரியர்கள் இருவரையும் என் தனி நலன்பொருட்டு சந்திக்கலாம் என்று விழைந்தேன், அமைச்சரே” என்றாள் காந்தாரி. விதுரர் அசலையிடம் காந்தாரியை உள்ளே கொண்டு செல்லும்படி விழிகாட்டிவிட்டு “அவ்வண்ணமே ஆகுக! சந்திப்பு முடிந்ததும் நான் வந்து தங்களை பார்க்கிறேன்” என்றார். அசலை சிறிது துணுக்குறலுடன் விதுரர் முகத்தை பார்க்க அங்கே ஏதும் தெரியவில்லை. காந்தாரி “நன்று!” என்றபின் தன்னை உள்ளே அழைத்துச் செல்லும்படி கைகாட்டினாள்.

விழியின்மையால் அவள் தன் முகவுணர்வுகளை மறைக்க முடியவில்லை என்பதை அசலை கண்டாள். விதுரர் அதை நோக்கினாரா என அறியமுடியவில்லை.

அசலை காந்தாரியை உள்ளே அழைத்துச் சென்றபின் கதவை மூடினாள். அறைக்குள்ளிருந்த கிருபரும் துரோணரும் எழுந்து "காந்தாரப் பேரரசிக்கு வணக்கம். தங்கள் வருகையால் மாண்புற்றோம்" என்றனர். துரோணர் "இது என் குடிக்கும் எனக்கும் நற்பொழுது, பேரரசி" என்றார். காந்தாரி கைகூப்பியபடி "என் மைந்தர்களின் ஆசிரியர்கள் என் குடிக்கு அருள்புரியும் தெய்வங்களைப் போன்றவர்கள். உங்கள் வாழ்த்துக்களால் நானும் என் கொடிவழியினரும் நலம்பெற்று பொலிகிறோம்" என்றபின் பீடத்தில் உடல் பொருத்தி அமர்ந்தாள். தன் கால்களை அவள் நீட்ட அசலை மண்டியிட்டு அவள் கால்களைப் பற்றி மெல்ல நீவி இழுத்துவிட்டாள்.

அலுப்புடன் முனகியபடி இரு கைகளையும் இரு பீடத்தில் வைத்து சாய்ந்துகொண்ட காந்தாரி கிருபரிடம் "இது அரச முறை சந்திப்பு அல்லவென்பதனால் தங்களை என் அரண்மனைக்கு அழைக்கவில்லை. முறைப்படி தங்களை தங்கள் பயிற்றுக்குடில்களில் வந்து நான் பார்க்கவேண்டும். என் உடலின் இயலாமையால் அது அரிதென்பதனால் பொதுவாக இங்கு வரச்சொன்னேன். பிழையாக எண்ணலாகாது" என்றாள். கிருபர் "இது எங்கள் பேறு, பேரரசி. தங்கள் ஆணை எதுவும் எங்கள் கடமையே" என்றார். துரோணர் "எங்களிடம் தாங்கள் எந்நிலையிலும் பேரரசியென்றே சொல்லாடலாம்" என்றார்.

காந்தாரி "நான் எதன்பொருட்டு தங்கள் இருவரையும் சந்திக்க விரும்பினேன் என்று ஒருவாறு உணர்ந்திருப்பீர்கள், ஆசிரியரே" என்றாள். துரோணர் தாடியை கைகளால் சுழற்றி நீவி

கசக்கியபடி கிருபரை பார்த்தார். கிருபர் “ஆம் பேரரசி, அரண்மனையிலும் நகரிலும் அணுகிவரும் போரைப்பற்றியன்றி பிறிது எதைப்பற்றியும் எவரும் பேசாமாலாகியிருக்கிறார்கள்” என்றார். “ஆம், ஏனெனில் இப்போர் நிகழுமென்றால் அணுக்கமான ஒருவரையேனும் இழக்காமல் எக்குடியும் பாரதவர்ஷத்தில் எஞ்சாது. பாரதவர்ஷத்திலேயே தீயூழ் நிறைந்தவள் நானாக இருப்பேன். எப்படி இருப்பினும் நான் என் மைந்தர்களிலும் பெயர்மைந்தர்களிலும் பெரும்பாலானவர்களை இழந்துவிடுவேன்” என்றாள்.

துரோணர் “அந்த அச்சம் தேவையில்லை, பேரரசி. என் வில்லும் என் மைந்தனின் வில்லும் என் தோழர் கிருபரின் வில்லும் தங்கள் மைந்தர்க்கு அரண் என நின்றிருக்கும்” என்றார். “ஆம், அதை அறிவேன். அவ்வேலியைக் கடந்து தேவர்களும் வரமுடியாதென்று அறிவேன். ஆனால் ஊழுக்கு வேலி கட்ட இயலாது என்று இளமையிலேயே கற்றவர்கள் நாமனைவரும். ஊழ் வடிவாக மானுடர் எழுகிறார்கள். ஆசிரியர்களே, நான் அஞ்சுவது மின்னலின் மைந்தன் வில்லை அல்ல. காற்றின் மைந்தனின் கதாயுதத்தையும் அல்ல. இளைய யாதவனை மட்டுமே” என்றாள் காந்தாரி.

கனவிலென அவள் சொன்னாள் “ஏனெனில் நான் அவனை மிக அணுக்கமாக அறிவேன். என் மைந்தரைவிட, என் ஆயிரம் பெயர்மைந்தரைவிட, இப்புவியிலுள்ள வேறெந்த மானுடரையும் விட. எண்ணப்போனால் நானறிந்தவன் அவன் ஒருவனே. அவன் சொல் வெல்லும். அதன் முன் வெற்புகளும் பெருங்கடல்களும்கூட நிற்க இயலாது. தடைநிற்கும் எவரும் அழிவர். என் மைந்தர் அவன் சொல்லுக்கு எதிர்நிற்கலாகாது. என் மைந்தர் இன்னமும் அவன் பெருந்தோற்றத்தை

உணரவில்லை. தங்கள் தோள்களிலும் தோழர்களின் படைக்கலங்களிலும் மிகை நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். பருப்பொருட்கள் பருப்பொருட்களுடனேயே மோதமுடியும், நுண்வடிவான ஊழுடனல்ல. பேருருக்கொண்டு கைபெருகி விழிபெருகி நின்றிருக்கும் ஊழின் வடிவே அவன். அவர்களிடம் கூறுக, எந்நிலையிலும் இப்போரில் அவர்கள் வெல்லமுடியாது! முற்றிலும் குல அழிவு மட்டுமே அவர்களுக்கு எஞ்சியிருக்கிறது.”

கிருபரும் துரோணரும் சொல்லிழந்ததுபோல் அமர்ந்திருந்தனர். கிருபர் மெல்லிய குரலில் “இதை தாங்களே தங்கள் மைந்தரிடம் சொல்லியிருக்கலாமே, பேரரசி” என்றார். “சொன்னதுண்டு, ஆனால் பதினான்கு ஆண்டுகளுக்கு முன்பு அன்று அச்செய்தியைக் கேட்டபின் அவன் என் மைந்தனல்ல என்று விலக்கிக்கொண்டேன். பிறிதொரு பெண்ணின் பெற்றி அறியாதவன் அன்னையை அறிந்தவன் அல்ல. பெண்ணுக்கிழைக்கும் சிறுமை எதுவும் தன் மூதன்னையருக்கு எதிரானதே என்றுணராதவனிடம் எச்சொல்லை நான் உரைப்பது? அவன் அழிந்தால் அதை மூதன்னையரின் சொல் என்றே கொள்வேன். எனக்கு அதில் துயரேதுமில்லை.” அதிர்ந்தவர்போல கிருபர் துரோணரை நோக்கினார். துரோணர் விழிதாழ்த்தியிருந்தார்.

“இப்போர் திரண்டெழுவதை பல மாதங்களாக பார்த்துக்கொண்டிருக்கிறேன். இதை தவிர்க்கவியலாதென்றும் அறத்தின் ஆறு இதுவென்றும் எண்ணினேன். இவள் வந்து என்னிடம் சொன்னாள், என் பெயர்மைந்தரின் பொருட்டேனும் இப்போரை தவிர்க்க வேண்டும் நான் என்று. இங்கு நான் வந்திருப்பது என் மைந்தரின் பொருட்டல்ல. அவர்களின்

முடிவை அவர்களே தங்கள் செயல்களால் வடித்துக்கொண்டார்கள். என் பெயர்மைந்தர் ஏதுமறியாதவர்கள். காட்டில் விளையாடும் களிற்றுக்குழவிகள்போல இனிய அறியாமையால் நிறைந்தவர்கள். அவர்கள் வாழ்வதற்கு முன் மண்படுவது துயர்மிக்கது. அது நிகழலாகாது. அதன்பொருட்டே உங்களிடம் மன்றாட வந்தேன்."

துரோணர் கிருபரை பார்த்துவிட்டு "நாங்கள் அரசரிடம் என்ன சொல்லமுடியும், அரசி? போர் ஒழியவேண்டுமென்றால் நிலம் பகுக்கப்படவேண்டும். அதை ஒருபோதும் அரசர் செய்யமாட்டார்" என்றார். கிருபர் "படை திரண்டுவிட்டது. ஷத்ரியப் பேரவை ஒன்று விரைவில் கூட்டப்படவிருக்கிறது. அதில் படைத்தலைவர்களும் அறிவிக்கப்படுவார்கள். இந்நிலையில் போரைத் தவிர்ப்பது குறித்து நாம் பேச என்ன இருக்கிறது?" என்றார். "நீங்கள் இருவரும் படைக்கலம் கொண்டு அவனுக்காக களம் நிற்கமாட்டீர்கள் என்று சொல்லுங்கள். உங்களை நம்பி போருக்கெழவேண்டாம் என்று அறிவுறுத்துங்கள்" என்றாள் காந்தாரி.

துரோணர் "அது தங்கள் ஆணை என்றால் அதை மீற இயலாது. ஆனால் அதன்பின் உயிர்துறப்பதன்றி எங்களுக்கு வேறுவழியில்லை, பேரரசி. எங்கள் வில் அரசருடன் நிற்குமென்று சொல்லளித்தவர்கள் நாங்கள். எதன்பொருட்டும் கடமையிலிருந்து விலகி நிற்பது எங்களால் இயலாது" என்றார். கிருபர் "நீங்கள் பிதாமகரிடம் பேசிப்பார்க்கலாம். இத்தருணத்தில் அவர் ஒருவரே அரசருக்கு அறிவுறுத்தும் நிலையிலிருப்பவர்" என்றார். "நான் அவரிடமும் பேசினேன்" என்றாள் காந்தாரி. "இங்கிருக்கும் ஒவ்வொருவரிடமும் பேசுவதாக இருக்கிறேன். அங்கன் என் மைந்தனுக்கு ஒரு படி

மேலானவன். அவனை அழைத்து சொல் பெறலாமென்றும் எண்ணுகின்றேன்.”

துரோணர் “பாரதவர்ஷமே இரு அணிகளாக பிரிந்துவிட்டது, பேரரசி. தொல்புகழ் வேதங்களின் தரப்பு நாம். வேதத்திற்கு அரணென எழுந்த ஷத்ரியர் அனைவரும் இங்கு அணிவகுத்திருக்கிறார்கள். இங்கு நின்றிருப்பதே பிதாமகரும் நாங்களும் இயல்பாக எடுக்கக்கூடிய நிலை. வேதம் மறுத்து பிறவேதம் காண்பவர் எவராக இருந்தாலும் இங்கு தங்கள் பிழையுணர்ந்து வந்து பணிந்து மறுவழி தேர்வதே உகந்தது” என்றார். காந்தாரி புருவம் சுளித்து அவர் சொல்லை கேட்டு அமர்ந்திருந்தாள். கிருபர் “ஆம், குடிக்கும் மண்ணுக்கும் நெறிக்கும் சொல்லுக்கும் மேலானது வேதக்கடன்” என்றார்.

அசலை “வேதம் வகுத்த வழியில் எனில் அந்தணர் அரசாள்வதெப்படி, ஆசிரியரே?” என்றாள். “மகளே…” என்று காந்தாரி அசலையின் கைகளை பற்றினாள். துரோணரின் கைகள் நடுங்கத் தொடங்கின. “என்ன சொல்கிறாய்? யாரிடம் பேசுகிறாய் என்று தெரிகிறதா?” என்றார். “தங்களிடம்தான், ஆசிரியரே. வேதம் அந்தணருக்கு வேள்வியையும் ஊழ்கத்தையும் மட்டுமே அறிவுறுத்தியது. இரந்துண்ணுதலும் துறந்து மீளுதலுமின்றி பிறிதொரு வாழ்வையே அவர்களுக்கு அது வகுக்கவில்லை. வில்லேந்தி போரிடுவதோ மண்வென்று முடிசூடுவதோ அவர்களுக்கு உகந்ததல்ல. வேதமறுப்பென்றால் அதன் முதன்மை பழி உங்களுக்கே அமையும்” என்றாள்.

துரோணர் பீடம் ஓசையிட விசையுடன் எழுந்து “என்னை சிறுமை செய்யும்பொருட்டு பேசுகிறாயா?” என்றார். “மெய் உங்களை சிறுமை செய்யும் என்றால் பொய் மேலும் சிறுமை செய்யும் என்று உணர்க!” என்று அசலை சொன்னாள். “உங்கள்

உள்ளம் எவ்வகையில் ஓடுகிறதென்று உணர்வது மிக எளிது. உங்கள் மைந்தர் பாஞ்சாலத்தின் அரசரென முடிசூடியபோது உங்களுள் வாழ்ந்த அந்தணர் முற்றாக மறைந்தார். அவையில் பட்டுத்துணிக்கு இப்பால் அமர்ந்து உங்கள் சொற்களை கூர்ந்து கேட்டிருக்கிறேன். எந்த அவையிலும் உங்கள் மைந்தரின் புகழ் பாடாமல் நீங்கள் இருந்ததில்லை" என்றாள் அசலை.

"ஆம், அவன் என் மைந்தன். வில்லேந்தினால் பாரதவர்ஷத்தை வென்று மும்முடி சூடும் ஆற்றல் கொண்டவன். அவன் வேண்டாமென ஒழிந்த நிலத்தை ஆள்பவரே உங்கள் அரசர்கள் என்று உணர்க!" என்றார் துரோணர். "திரைநீக்கி ஆணவம் வெளிவந்தது நன்று. இனி பிறிதொன்றை எண்ணி மயங்கி சொல்லெடுக்க வேண்டியதில்லை. நேரிடையாகப் பேசுவோம்" என்று அசலை சொன்னாள். "நீங்கள் அறிவீர்கள் வில்லெடுத்த அந்தணர் என்பதனால் உங்களுக்கு வேதமுறைமை சார்ந்த ஒப்புதல் இல்லை என்று. வேதத்தின்பொருட்டு வில்லெடுப்பதாக நடித்தால் இப்போருக்குப்பின் உங்கள் மைந்தரின் கொடிவழிகளுக்கு முறைமை ஒப்புதல் கிடைக்கும் என்று எண்ணுகிறீர்கள். இது அறத்தால் அல்ல, கடமையால் அல்ல, தன்னலத்தால் எடுக்கப்பட்ட முடிவு."

துரோணர் பதறும் குரலில் உரக்க "ஆம், இத்தரப்பிலும் மறுதரப்பிலும் படைகொண்டு வந்து கூடியுள்ள அத்தனை பேரும் தங்கள் நலம் கருதியே வருகிறார்கள். இப்புவியில் தங்கள் நலம் கருதித்தான் உழவர் வளம் பெருக்குகிறார்கள். ஆயர் உயிர் பெருக்குகிறார்கள். அரசர் கோல் கொண்டிருக்கிறார்கள். அந்தணர் வேள்விகள் செய்கிறார்கள். நான் இவ்வுலகைத் துறந்து இன்னும் காடேகவில்லை. என் கொடிவழிகள் இங்கு பேரரசர்களின் நிரையெனப்

பெருகவேண்டுமென என் உள்ளம் விழைகிறது. அதை எந்த அவையிலும் சொல்வதற்கு எனக்கு தயக்கமில்லை” என்றார்.

சொல்லச் சொல்ல தன் சொற்களை அவர் கண்டுகொண்டார். “ஆம், நான் இத்தரப்பிலேயே நின்றிருக்கமுடியும். இங்குதான் என் குலம் மதிப்புகொள்ளும். நிஷாதரும் அசுரரும் கூடிய பாண்டவர் தரப்பில் நின்று இழிவுசூட எனக்கு விருப்பில்லை” என்றார் துரோணர். “நன்று, குல இழிவின் துயரை அறிந்தவர் நீங்கள். பிற குலத்தை இழிவுசெய்தே அதிலிருந்து மீளமுடியுமென்று கண்டுகொண்டிருக்கிறீர்கள். நலம் திகழ்க!” என்றாள் அசலை. ஒருகணம் சினத்துடன் பற்களைக் கடித்த துரோணர் உடனே தன்னை வென்று “ஆம், அது மெய்யே. இழிவுசெய்யப்பட்ட நான் என் திறனால் வென்று உயர்ந்தேன். திறன்கொண்டவர்கள் எழுக! அதுவே உயர்வுதாழ்வின் நெறி” என்றார்.

காந்தாரி அசலையிடம் “போதும் மகளே, நாம் இங்கு பூசலிட வரவில்லை” என்றபின் துரோணரிடம் “பொறுத்தருள்க, ஆசிரியரே! இவள் நாத்துடுக்கை நானும் கணிக்கவில்லை” என்றாள். “ஒருவர் நாவிலெழுவது பிற அனைவரின் உள்ளத்தில் ஊறியதே” என்றார் துரோணர். “ஆம் அந்தணரே, இந்நகரில் அனைவரும் எண்ணியதே நான் சொன்னது” என்றாள் அசலை. “போதும்” என்று உரக்க காந்தாரி கூவினாள். அவள் முகம் குருதிச் செம்மை கொண்டது. “போதும். இனி ஒரு சொல்லும் எவரும் எடுக்கவேண்டியதில்லை” என்றாள்.

கிருபர் “அமர்க, ஆசிரியரே! அமர்க!” என்றார். துரோணர் மூச்சுவாங்க தன் பீடத்தில் அமர்ந்து “பேரரசி ஆணையிட்டால் நான் அரசரிடம் சென்று இப்போரில் நான் பங்கெடுக்கவில்லை என்று சொல்கிறேன். அவர் கூறுவாரென்றால் என்

மைந்தனையும் போரிலிருந்து விலக்குகிறேன். ஆனால் அதன் பிறகு நான் உயிர்வாழமாட்டேன். சொல்லுக்கு என்னை ஆளும் பொறுப்பை அளித்துவிட்டமையால்தான் நான் ஆசிரியன்" என்றார். "வேண்டியதில்லை. நான் கேட்டதற்கு பொறுத்தருள்க!" என்றாள் காந்தாரி.

கிருபர் "நாம் இயற்றக்கூடியதொன்றே, பேரரசி. பீஷ்மப் பிதாமகர் முடிவுசொல்லட்டும். இப்போரிலிருந்து அவர் ஒழிவாரென்றால் அவரை நாங்கள் துணைக்கிறோம். அது எங்கள் சொல் மீறலாகாது. நாங்கள் சொல்லளித்திருப்பது அவருக்காகத்தான். துரோணரும் அவருக்கே கட்டுப்பட்டவர்" என்றார். "ஆம்" என்று துரோணர் சொன்னார். "அவர் எடுப்பது எந்த முடிவாயினும் அவருடன் நான் நிற்கிறேன்."

காந்தாரி இரு கைகளையும் விரித்து "இன்று காலை நான் அவரிடம் பேசினேன். என் சொற்களை அவர் மறுத்துவிட்டார்" என்றாள். அசலை "இல்லை, அதன் பின் நான் சென்று அவரிடம் பேசினேன்" என்றாள். கிருபர் திகைப்புடன் அசலையைப் பார்த்து "தனியாகவா ?" என்றார். "ஆம், அவரது நீண்ட வாழ்வில் இரண்டாம் முறையாக அவர் விழிகளைப் பார்த்து பேசிய பெண் நான். அவர் கேட்க விரும்பாத அனைத்தையும் சொன்னேன். அவையனைத்தும் உண்மையென்று அவர் உணர்ந்தார். அவர் ஒப்புவார்" என்றாள்.

"அவர் வந்து அவையில் உரைப்பாரா, எழவிருக்கும் இப்போரிலிருந்து தான் முற்றொழிவதாக??" என்று கிருபர் கேட்டார். "ஆம், அவர் ஒழிவார். பிறிதொரு நிலையும் அவர் எடுக்க இயலாது" என்று அசலை சொன்னாள். "பிறகென்ன? அவர் ஒழிவாரெனில் நானும் துரோணரும் போர் ஒழிகிறோம்" என்று கிருபர் சொன்னார். "நாங்கள் மூவரும் போரிலில்லை

என்றால் அங்கனை மட்டும் நம்பி இளைய யாதவனை எதிர்க்க முடியுமா என்று அரசர் எண்ணாமலிருக்க மாட்டார். ஒருகணம் அவ்வாறு அவர் ஐயுற்றால்கூட அதை பற்றிக்கொண்டு போரிலிருந்து நீங்கள் அவரை பின்னிழுக்க முடியும்."

காந்தாரி தளர்ந்தவள்போல் தலைகுனிந்து அமர்ந்திருந்தாள். அசலை "அவர் அரசரிடம் அதை கூறட்டும். அதன் பின் அரசரை போரிலிருந்து பின்னிழுக்க நானும் அரசியும் முயல்கிறோம்" என்றாள். துரோணர் "உன் உணர்வுகள் புரிகின்றன, அரசி. அன்னையென மைந்தரையன்றி பிற எதையும் நீங்கள் எண்ணவில்லை. அதுவே உயிர்களுக்கு இறையளித்த தன்னியல்பு. உங்கள் முயற்சி வெல்லட்டும் என வாழ்த்துகிறேன்" என்றார்.

காந்தாரி அசலையின் கைகளைப் பற்றியபடி நடந்தாள். "பழுதற்ற பெருஞ்சுவர்முன் நிற்பதைப்போல் உணர்கிறேன்" என்றாள். "ஏதேனும் ஒரு வழி இருக்கக்கூடும். இருந்து அதை நாம் ஆராயாமல் விட்டுவிட்டோமென்று ஆகவேண்டியதில்லை" என்றாள் அசலை. "இவர்கள் தவிர்க்கிறார்கள். போரை விரும்பும் அகம் தெரிகிறது" என்றாள் காந்தாரி. "அவர்கள் போரை விரும்புவது உலகியல்நலன் நாடி மட்டும் அல்ல. அவர்கள் சலித்திருக்கிறார்கள். வாழ்நாளெல்லாம் படைக்கலங்களுடன் புழங்கியவர்கள். படைக்கலம் அவர்களை கையிலெடுத்துவிட்டது."

அசலை "இருக்கலாம், அன்னையே. ஆனால் அவர்களுக்குள்ளும் தந்தையர் வாழ்வர். இத்தனை சொல்லெடுத்தாலும் துரோணர் உள்ளாழத்தில் தன் மைந்தனின் உயிருக்காக அஞ்சுவார் என்றே எண்ணுகிறேன். அதை நோக்கியே நான் பேசினேன். அவர் மகனை நினைவுறுத்தாமல்

நாம் அவரிடம் எதையும் கோரமுடியாது” என்றாள். காந்தாரி “அவரை வெல்லப்போவது எதுவென்று பார்ப்போம்” என்றாள். “மூதன்னையரே, வாழ்வதே வீணென்று தோன்றும் கணம் எத்தனை கொடிது” என தனக்குத்தானே என சொல்லிக்கொண்டாள்.

# குருதிச்சாரல் - 14

**பகுதி இரண்டு : பெருநோன்பு – 8**

விகர்ணனின் துணைவி தாரை பானுமதியின் அறைவாயிலில் நின்றிருந்தாள். அகலத்திலேயே அசலையைக் கண்டதும் அணிகள் குலுங்க ஓடி அணுகி “அக்கையே, தங்களை அரசி இருமுறை உசாவினார்” என்றாள்.

அசலை களைத்திருந்தாள். அன்று காலைமுதலே அவளை பெருவிசையுடன் இயக்கிய உள்ளாற்றல் சற்றுமுன் தன் அறையிலிருந்து கிளம்பிய கணம் ஏனென்றறியாமல் முற்றிலுமாக வடிந்துமறைய நின்றிருக்கக்கூட முடியாமல் உடல் எடைகொண்டு இருபுறமும் நிலையழிந்து தள்ளாடியது. மீண்டும் சென்று மஞ்சத்தில் படுத்து விழிகளை மூடிவிட வேண்டுமென்று தோன்றியது. புற உலகென சூழ்ந்திருக்கும் காட்சிகளிலிருந்தும் ஓசைகளிலிருந்தும் முழுமையாக அவள் அகம் தன்னை விடுவித்துக்கொண்டது. அந்த விடுபடல் நிகழ்ந்த கணமே அனைத்தும் பொருளற்றவையாயின. பொருளற்றவற்றை உள்ளம் விலக்கத்தொடங்கி மேலும் சற்று நேரத்தில் அவள் எதையும் அறியாதவளானாள். அவள் கால்களே நடந்துகொண்டிருந்தன.

பின்னர் அவளது அணுக்கச் சேடி “அரசி” என்று பலமுறை அழைத்தபோதுதான் தான் நின்றுவிட்டிருப்பதை உணர்ந்தாள். அடுத்த அடியை எடுத்து வைப்பது நெடுந்தொலைவை தாவிக்கடப்பதுபோல் தோன்றியது. மலைவிளிம்பில் நின்றிருப்பதுபோல் ஆயம்கூட்டி, கால்பதறி, மூச்சிழுத்து, முழு உளவிசையாலும் காலை உந்தி தூக்கி வைத்து அதை கடந்தாள். அதன் பின் ஒவ்வொரு காலடியையும் உளம் செலுத்தி தூக்கிவைக்க வேண்டியிருந்தது. எங்கு செல்கிறோம் என்றும் எதை விழைகிறோம் என்றும் அவளால் எண்ணிக்கொள்ள இயலவில்லை. பானுமதியின் அறை வரைக்கும் செல்வதற்கு அப்பால் தனக்கென்று இலக்கேதுமில்லை என்று தோன்றியது.

தாரையைப் பார்த்த பின்புகூட முதல் சில கணங்கள் அவள் எவளென்றே புரிந்துகொள்ள முடியவில்லை. அணிகள் குலுங்க, ஆடை நலுங்க, அவள் ஓடி அருகணைந்து மூச்சிரைக்க பேசத்தொடங்கிய பின்னரே அவளை உணர்ந்து தோள்மேல் கைவைத்தாள். “உடல்நலமில்லையெனத் தோன்றுகிறீர்கள்” என்றாள் தாரை. “ஆம், துயில்நீப்பின் களைப்பு” என்றாள் அசலை. சொன்ன பின்னரே அது மெய் என்று தோன்றியது. அவள் முந்தையநாளிரவு முழுக்க துயிலின்றி விழித்து படுத்திருந்தாள். எண்ணங்கள் அவளை மீறி பெருகிச் சென்றுகொண்டிருந்தன, ஒன்றுடனொன்று இணையாத சொற்களாகவும் காட்சிகளாகவும்.

பானுமதியின் முதலறைச்சேடி அறைக்கதவைத் திறந்து வெளிவந்து அசலையைப் பார்த்து “வருக, அரசி. பட்டத்தரசி புறப்படவிருக்கிறார்கள்” என்றாள். அசலை “வா” என்று சொல்லிவிட்டு பானுமதியின் அறைக்குள் நுழைந்தாள்.

“என்னடி, ஏன் பிந்திவிட்டாய்? அரசர் அவையமர்வதற்காக எனக்காக காத்திருக்கிறார் என்று செய்தி வந்தது. நீயில்லாமல் செல்ல வேண்டாமென்று நான் பொழுதுகடத்தினேன்” என்றாள் பானுமதி. அசலை புன்னகைத்து “நான் அணிகொள்ள சற்று பொழுதாகியது” என்றாள். “அப்படியொன்றும் கருதி அணி செய்ததுபோல் தெரியவில்லையே” என்றபின் “இது சிற்றவை. அரசருடன் இதில் பேரரசரும் பேரரசியும் கிருபரும் துரோணரும் விதுரரும் மட்டுமே கலந்துகொள்கிறார்கள்” என்றாள்.

“ஆம்” என்றாள் அசலை. “பீஷ்ம பிதாமகர் அரசரிடம் தனது முடிவை இன்று அறிவிப்பார் என்று அவருடைய மாணவர் சொன்னார். நீ கூறியதுபோல அந்த முடிவு நமக்குகந்ததே என அவர் எண்ணுவதாகச் சொன்னார். இந்த அவையிலேயே அரசரை அவரது எண்ணங்களிலிருந்து நம்மால் பின்னிழுக்க முடியும் என்றால் நன்று” என்றாள். அசலை ஒளியற்ற புன்னகையுடன் “பார்ப்போம்” என்றாள். “என்னடி? நேற்று இரவு வரை முழுநம்பிக்கையுடன் இருந்தவள் நீ. இன்று என்ன ஆயிற்று?” என்றாள் பானுமதி. “இல்லை, இப்போதும் நம்பிக்கையுடன்தான் இருக்கிறேன். சற்று தலை வலிக்கிறது. நேற்றிரவு சரியாக துயிலவில்லை” என்று அசலை சொன்னாள்.

அவளை ஐயத்துடன் பார்த்தபின் பானுமதி “கிளம்புக!” என்றாள். அவள் கைகாட்ட சேடியர் மங்கலத்தாலங்களுடன் முன்னால் சென்றனர். நிமித்தச்சேடி சங்கு ஒலித்து அவள் கிளம்புவதை அறிவித்தாள். பானுமதியுடன் அசலையும் தாரையும் இருபக்கமும் நடந்தனர். பானுமதி தாழ்ந்த குரலில் “இன்று பிதாமகரின் கூற்றுக்குப்பின் பிறிதொரு முடிவெடுக்க அரசருக்கு சூழல் இருக்காது என எண்ணுகிறேன் துரோணரும்

கிருபரும் பிதாமகருடன் நின்றிருப்போமென சொல்லளித்துள்ளார்கள். பேரரசியும் பேரரசரும் போர் தவிர்க்கப்பட்டாகவேண்டுமென்று உறுதி கொண்டிருக்கிறார்கள். நானும் நீயுமிருக்கிறோம். அரசருக்கு உகந்ததைப் பேச இன்று சிற்றவையில் எவரும் இருக்கப்போவதில்லை” என்றாள். மேலும் குரல் தழைத்து “இதை எண்ணியே அங்கர் இந்த அவைக்கு வராமல் பார்த்துக்கொண்டிருக்கிறேன்” என்றாள்.

அசலை “காந்தாரரும் கணிகரும் வரமாட்டார்களல்லவா?” என்றாள். “ஆம், அவர்களிருவரும் இன்று நகர்புகும் மாளவ அரசரை வரவேற்கும்பொருட்டு கோட்டை முகப்புக்கு சென்றிருக்கிறார்கள். சிற்றவை முடிந்த பின்னரே இப்படி ஒன்று நடந்தது காந்தாரருக்கு தெரியவரும்” என்றாள் பானுமதி. அசலை மீண்டும் நீள்மூச்செறிந்து “பார்ப்போம்” என்றாள். “உன்னுடைய சோர்வு எனக்கும் தொற்றிக்கொள்கிறது. இந்நாளில் இவ்வரண்மனையிலுள்ள அனைவருமே உளச்சோர்வு கொள்வதற்கான உந்துதலுடன் இருக்கிறார்கள். அஸ்தினபுரியில் இன்று சுட்டுவிரலால் உந்தி களிறுகளை சாய்த்துவிடமுடியும் என்று நேற்றுமுன்னாள் ஒரு விறலி பாடினாள். ஆம் என்று நான் எண்ணிக்கொண்டேன்” என்று பானுமதி சொன்னாள்.

“நான் சோர்வுறவில்லை, அக்கையே. நன்று நிகழுமென்றே எண்ணுகிறேன்” என்று அசலை சொன்னாள். அச்சொற்களை அவள் தனக்கென்றே சொல்லிக்கொண்டாள். ஆம், சோர்வு கொள்வதற்கு என்று எதுவுமில்லை. போரைத் தவிர்க்கவேண்டுமென்பதில், அது முதன்மையாக குலப்பிதாமகராகிய தனது கடமை என்பதில், பிதாமகர் உறுதி கொண்டிருப்பதாக விஸ்வசேனர் அவளிடமும் சொன்னார்.

அவையில் பிறிதொன்றை பீஷ்மர் சொல்ல வாய்ப்பில்லை அதன் பின்னர் அரசர் எந்நிலைப்பாடும் எடுக்க முடியாது. பீஷ்மரும் துரோணரும் கிருபரும் அஸ்வத்தாமனும் இன்றி துரியோதனர் களமிறங்கமுடியாது.

அங்க நாட்டரசரின் ஆற்றலை அனைவரும் அறிவர் என்றாலும் அவர் படைமுகம் நின்றால் ஷத்ரிய அரசர்கள் பின்நிற்பார்கள் என்று சொல்ல முடியாது. அவருடைய குலம் அவர்களுக்கு ஏற்புடையதல்ல. மேலும் வேதச்சொல் காக்க வில்கொண்டு எழுவதாக ஆரியவர்த்த மன்னர்கள் கொண்டுள்ள தன்விளக்கம் அங்கர் களம் முன் நிற்பதனாலேயே பொய்யென்றாகும். அவர் நாகவேதத்தின் காவலராக சொல்லுறுதி கொண்டவரென்பது செவியுலாச் செய்தியாக அனைவரும் அறிந்ததே.

எந்தக் கோணத்தில் எண்ணினாலும் பிறிதொன்று நிகழ வாய்ப்பில்லை. ஆனால் எண்ணி எண்ணி உள்ளம் முன்செல்கையில் அறியாது பின்னகர்ந்துகொண்டிருக்கும் ஆழம் எதை அறிந்தது? அதற்கென்று வேறு புலன்கள் உள்ளனவா என்ன? அசலை மீண்டும் பெருமூச்சுவிட்டாள். உளச்சுமை ஏன் பெருமூச்சை எழுப்புகிறது? உள்ளிருக்கும் கரிய நாகமொன்றின் சுருளவிழும் சீறல்போலும் அது.

சிற்றவை வாயிலில் நின்றிருந்த விகர்ணன் பானுமதியைக் கண்டதும் கைகூப்பி “வருக அரசி, தங்கள் வரவை அவைக்கு அறிவிக்கிறேன்” என்றான். பானுமதி “நன்று திகழ்க!” என்று வாழ்த்தினாள். அவளுக்கு முன் மங்கலத்தாலத்துடனும் வலம்புரிச்சங்குடனும் நின்றிருந்த சேடியர் இருபுறமும் தலைவணங்கி அகன்றனர். விகர்ணன் உள்ளே சென்று அவள் வரவை அறிவித்தபின் கதவைத் திறந்து பணிந்து நிற்க கைகளைக் கூப்பியபடி பானுமதி அறைக்குள் நுழைந்தாள்.

அசலையும் தாரையும் கைகளைக் கூப்பியபடி பின்னால் நுழைந்தனர்.

நீண்ட சிற்றவைக்கூடத்தில் மான்தோலிட்ட பீடங்களில் கிருபரும் துரோணரும் அமர்ந்திருந்தனர். அவள் வருகையைக் கண்டதும் அவர்கள் இருவரும் எழுந்து கைகூப்பினர். அவர்களைப் பணிந்து வணங்கி வாழ்த்துபெற்று வலப்பக்கமாக ஒதுங்கி நின்றாள். அவளருகே அசலையும் தாரையும் நின்றனர். பானுமதி அவை புகுந்த செய்தி சங்கொலியாக அறிவிக்கப்பட்டதும் அருகிலிருந்த அறையிலிருந்து துரியோதனன் துச்சாதனன் தொடர கைகூப்பியபடி அறைக்குள் நுழைந்தான். துரோணரையும் கிருபரையும் குனிந்து கால்தொட்டு சென்னிசூடி வணங்கியபின் தன் அரியணைப்பீடத்தருகே கூப்பிய கைகளுடன் அமர்ந்தான்.

பிறிதொரு சங்கொலி எழ மறுபக்க அறையிலிருந்து சஞ்சயனின் கைகளைப் பற்றியபடி திருதராஷ்டிரரும் சத்யசேனையால் வழிநடத்தப்பட்டு காந்தாரியும் உள்ளே நுழைந்தனர். துரியோதனனும் பானுமதியும் சென்று திருதராஷ்டிரரையும் காந்தாரியையும் கால்தொட்டு வணங்கி வாழ்த்து பெற்றனர். கிருபரையும் துரோணரையும் வணங்கியபின் திருதராஷ்டிரர் தனக்குரிய பெரிய பீடத்தில் அமர்ந்தார். அவர் அருகே காந்தாரி அமர்ந்தாள். துரியோதனன் அரியணைப்பீடத்தில் அமர, அருகமைந்த பீடத்தில் பானுமதி அமர்ந்தாள். துரியோதனனுக்கு வலப்பக்கம் கைகளைக் கட்டியபடி துச்சாதனன் நின்றான்.

அவையமைப்பாளராகிய கனகர் கைகாட்ட ஏவலர் தாலங்களில் இன்நீரும் வாய்மணமும் கொண்டுவந்து அனைவருக்கும் அளித்தனர். எவரும் ஓரிரு முறைச்சொற்களுக்கு அப்பால்

எதுவும் பேசிக்கொள்ளவில்லை. உடலசைவுகளின் ஒலி மட்டுமே அவைக்குள் நிறைந்திருந்தது. அசலை அந்த அறை தனக்குள் என எதையோ முணுமுணுத்துக்கொண்டிருப்பதாக எண்ணினாள். கண்ணுக்குத் தெரியாத எவரோ அங்கு உலவுவதின் ஓசை என்று பின்னர் தோன்றியது. அறியாத பேருருவங்கள் கைகளை கோத்துக்கொள்கின்றன. உடல்கள் உரச, மூச்சொலிகள் ஒன்றையொன்று கலைக்க, விழிகளை இணைத்துக்கொண்டு மெல்ல சுற்றிவருகின்றன. மாபெரும் மற்போரொன்றின் தொடக்கம் என.

வாய்மணத்தை மென்றபடி திருதராஷ்டிரர் "விதுரன் எங்கே?" என்றார். கனகர் "வந்துகொண்டிருக்கிறார். பிதாமகர் கிளம்பிவிட்டாரா என்பதை உறுதிசெய்துவிட்டு வருவார்" என்றார். துரியோதனன் "காந்தாரர் வருகிறாரா?" என்றான். கனகர் "அவர் மாளவரை எதிர்கொள்வதற்காக கோட்டை முகப்புக்கு சென்றிருக்கிறார். மாளவருக்குரிய அரண்மனைக்கு அவரை கொண்டுசென்று அமர்த்திவிட்டு அங்கிருந்து கணிகரை அழைத்துக்கொண்டு வருவார்" என்றார். அந்த உரையாடலும் அங்கிருந்த தயக்கத்தை உடைக்கவில்லை. மேலும் சற்று அமைதி நீடித்தது.

துரியோதனன் "இச்சிற்றவைக் கூட்டம் எதன்பொருட்டு? பிதாமகர் என்னிடம் எதையோ சொல்ல விழைவதாக எனக்கு சொல்லப்பட்டது" என்றான். கனகர் "அதை அமைச்சரே தங்களிடம் உரைப்பார், அரசே. இதோ, அவர் வந்துவிட்டாரென்றே எண்ணுகிறேன். நான் அழைத்து வருகிறேன்" என்றபின் கதவைத் திறந்து வெளியே சென்றார். அசலை தன் உள்ளம் மெல்ல அச்சம்கொள்ளத் தொடங்குவதை உணர்ந்தாள். அச்சமூட்டும் எதையோ அவள் விழிகளுக்கு

அப்பாலிருக்கும் தன்னுணர்வு ஒன்று கண்டுவிட்டிருந்தது. அதை எங்கு கண்டேன் என அவள் விழிகள் வியந்தபடி, பதற்றமடைந்தபடி அறையை சுற்றிவந்தன. ஒவ்வொரு முகங்களாகத் தொட்டு ஒவ்வொரு உடல்களாக வருடி எதையும் காணாமல் சலித்து மீண்டும் மீண்டும் சுழன்றலைந்தன.

கதவு திறந்து உள்ளே வந்த கனகர் தலைவணங்கி "அமைச்சரும் பிதாமகரும் காந்தாரரும் அவைபுகுகிறார்கள், அரசே" என்றார். பானுமதி திகைப்புடன் அசலையைப் பார்க்க கால்கள் தளர்ந்து அசலை சற்று பின்னடைந்து சுவருடன் சாய்ந்து கொண்டாள். துரியோதனன் "நன்று, அனைவருமே வந்துவிட்டார்கள். இனி தடையேதுமில்லை. அவை நிகழட்டும்" என்றான். கனகர் தலைவணங்கி வெளியே சென்று முகமன் கூறி வரவேற்று பீஷ்மரையும் சகுனியையும் விதுரரையும் உள்ளே அழைத்துவந்தார்.

விதுரர் அறைக்குள் நுழைந்த முதற்கணமே துரோணரை நோக்கி விழிவிலக்கிக்கொள்வதை அசலை கண்டாள். உடனே அவளுக்கு தன் உளம் தொட்ட அந்த செய்தியென்ன என்று புரிந்தது. துரோணரின் விரல்கள் ஒன்றையொன்று தட்டிக்கொண்டிருந்தன. அது அவர் அறிந்திருக்கிறாரென்றும் எதிர்பார்க்கிறாரென்றும் அதில் மகிழ்கிறாரென்றும் காட்டின. அங்கு நிகழப்போவதென்ன என்று ஐயமின்றி அவள் ஆழத்தில் உறையும் பேருருக்கொண்ட பிறிதொன்று அறிந்துவிட்டிருந்தது. அவள் உள்ளத்திலிருந்து பதற்றம் முழுமையாக விலகியது. அதுவரை இருந்த சோர்வும் அகல கைவளைகள் ஒலிக்க மார்பில் கைகளை கட்டிக்கொண்டு தயக்கமற்ற விழிகளால்

அவைநுழைந்த பீஷ்மரையும் சகுனியையும் பார்த்துக்கொண்டு நின்றாள்.

பீஷ்மர் கைகூப்பி நிற்க துரோணரும் கிருபரும் எழுந்து கைகூப்பி “பிதாமகருக்கு வணக்கம். தங்கள் சொல்கேட்கும் இந்நாள் சிறப்புறுக!” என்று முகமன் உரைத்தனர். திருதராஷ்டிரரும் காந்தாரியும் எழுந்து கைகூப்பி “வாழ்த்துங்கள், பிதாமகரே” என்றனர். வலக்கையால் அவர்களுக்கு வாழ்த்து சொல்லி பின்னர் அப்பால் நின்றிருந்த அரசியரை நோக்கி வாழ்த்தும் முகமாக கைகாட்டிவிட்டு அவர் தன் பீடத்தில் அமர்ந்தார். துரியோதனனும் பானுமதியும் அவர் கால்களைத் தொட்டுவணங்கி வாழ்த்து கொண்டனர். சகுனி துரோணரையும் திருதராஷ்டிரரையும் வணங்கிவிட்டு தன் இருக்கையில் அமர்ந்தார்.

விதுரர் அவை நடுவே நின்று “பிதாமகர் பீஷ்மரின்பொருட்டு இந்தச் சிற்றவை கூட்டப்பட்டுள்ளது. சில முதன்மை முடிவுகளை அவர் எடுத்திருப்பதாகவும் இந்த அவையில் அவற்றை அரசருக்கும் பிறருக்கும் உரைக்க விரும்புவதாகவும் கூறினார். இங்கு எடுக்கும் முடிவுக்குப் பின்னரே அரசப் பேரவையில் இதை முன்வைக்க வேண்டுமென்று விழைந்தார். நலம் திகழ்க!” என்றார். கனகரும் சஞ்சயனும் தலைவணங்கி வெளியே சென்றனர். விதுரரும் திரும்ப திருதராஷ்டிரர் “நீ எங்கே செல்கிறாய், மூடா?” என்றார். விதுரர் “இது அரசகுடியினருக்குள் மட்டும் நிகழும் உரையாடலாக அமையட்டும் என்று பிதாமகர் விரும்பியமையால்…” என்றார்.

“அதைத்தானே சொன்னேன்? நீயின்றி எப்படி அவை முழுமையடையும்? சொற்பொருளை நீ விளக்காமல் வேறு யார் செய்வார்கள்?” என்றார் திருதராஷ்டிரர். “அறிவிலி…” என

தனக்குத்தானே முணுமுணுத்துக்கொண்டு தலையை அசைத்தார். “இருக்கிறேன், மூத்தவரே” என்றார் விதுரர். “எதையுமே சொன்னால் மட்டும் புரிந்துகொள்... மூடன்” என்றார் திருதராஷ்டிரர். “இங்கே வந்து என் அருகே அமர்க!” விதுரர் “இல்லை மூத்தவரே, நான் இங்கு நின்றுகொள்கிறேன்” என்று சொன்னார்.

அசலை அங்கு நிகழ்ந்த முறைமைகளையும் வணக்கங்களையும் விழியசைவுகளால் நோக்கிக்கொண்டு நின்றாள். அவை ஒவ்வொன்றும் முற்றாக வகுக்கப்பட்டிருந்தன. மீண்டும் மீண்டும் ஆற்றப்பட்டு பழுதற்ற அசைவுகள் கொண்டிருந்தன. ஒவ்வொரு சொல்லும் பல்லாயிரம் முறை கூறப்பட்டதன் முழுமை பெற்றிருந்தன. ஒவ்வொன்றும் அத்தனை பழகியதாக பிழையற்றதாக மாறுந்தோறும் அவை குறிக்கும் உறவுகள் மேலும் சிக்கலானவையாக, உள்மடிப்புகள் மிக்கவையாக மாறிக்கொண்டிருந்தன. முதலில் இன்சொற்கள் அங்குள்ள சிடுக்குகள் அனைத்தையும் மறைப்பவையாக ஆயின. பின்னர் அவ்வுள முடிச்சுகளை ஒவ்வொருவரும் பிறருக்குணர்த்தும் அடையாளங்களாக உருமாற்றம் பெற்றுவிட்டிருந்தன.

முறைமைகள் அனைத்தும் முடிந்த பின்னர் சொற்கள் எழவில்லை. ஒவ்வொருவரும் தங்களை அங்கு நிகழ்த்துவதைப்பற்றி எண்ணியபடி, பிறரை கூர்ந்தபடி, தங்கள் அறைகளின் வாயில்களுக்கு அப்பால் தயங்கி நின்றிருந்தனர். எத்தனை நேரம் அது நீளுமென்று பார்க்கலாமென்று அசலை எண்ணினாள். முதலில் அவ்வமைதியை பீஷ்மரே உடைப்பார் என்று அவள் அறிந்திருந்தாள். அங்கிருந்தவர்களில் முறைமைகளுக்கு அப்பால் செல்பவர் அவர் ஒருவரே. தான்

கிளம்பிவந்த கங்கர்நாட்டுக் காடுகளில் தன் பெரும்பகுதியை இன்னமும் வைத்திருப்பவர். தன்னை முற்றிலும் மறைத்து பிறிதொருவராக காடுகளிலும் பாலைகளிலும் அறியா நகர்களிலும் அலைபவர்.

காந்தாரியின் மூச்சொலி கேட்டது. கிருபர் அசைந்தமர்ந்தபோது அவரது கை பீடத்தின் கைப்பிடியில் முட்டிய ஓசை எழுந்தது. மீசையை மெல்ல நீவிவிட்ட துரியோதனனின் கங்கணம் குலுங்கியது. பானுமதியின் அணிகள் மெல்ல அசைந்து ஒலித்தன. சாளரத் திரைச்சீலை காற்றில் இருமுறை படபடத்து அமைந்தது. அப்பால் தோட்டத்தில் பறவைகளின் ஓசைக்கு நடுவே அறியாத பறவையொன்றின் நீளொலி எழுந்தமைந்தது. மிகத் தொலைவில் உலோக ஓசையொன்று செவித்தீற்றலாக கடந்து சென்றது. எவரோ எங்கோ மழுங்கிய குரலில் எதையோ ஆணையிட்டனர்.

அசலை மீண்டும் துரோணரை பார்த்தாள். அவர் விழிவிலக்காது பீஷ்மரையே பார்த்துக்கொண்டிருந்தார். அவரை தான் அறிந்துவிட்டேன் என்பதை அவருக்கு தெரியப்படுத்த வேண்டுமென்று அசலை விரும்பினாள். அவர்மேல் விழிநிறுத்தி நின்றாள். நோக்கை உணர்ந்து தடுமாறி அவளை நோக்கிய துரோணர் அவள் விழிகளை சந்தித்ததும் பதறி திரும்பிக்கொண்டார். ஒன்றுடன் ஒன்று கோக்கொண்டிருந்த விரல்கள் விலகின. இரு கைகளாலும் பீடத்தின் கைப்பிடியைப் பற்றி நடுங்கும் விரல்களால் அதை வருடத் தொடங்கினார். மீண்டும் அவர் நோக்கு வந்து அசலையின் கண்களை சந்தித்து மீண்டது. மூச்சு எழ அதை அடக்கி தாடியை விரல்களால் சுழற்றி நீவியபடி கண்களை சரித்தார். அவர் முகம் சினம்கொண்டதுபோல, நாணுவதுபோல சிவந்தது.

பீஷ்மர் சற்று முன்னால் சரிந்த ஓசை கேட்டு அனைவரும் அவரை நோக்கினர். அவர் "இந்த அவையில் நான் கூறுவதற்கு ஒன்றேயுள்ளது. நேற்று பேரரசியும் அதன்பின் இளைய அரசியும் வந்து என்னை பார்த்தனர். இப்போரை நிறுத்தவேண்டுமென்றும் இது என் கொடிவழியினரை பேரழிவுக்கு இட்டுச் செல்லுமென்றும் அறிவுறுத்தினர். இப்போரில் குடித்தலைவனாகவும் நாற்படை நடத்துபவனாகவும் நான் கலந்துகொள்ள முடியாதென்று இங்கு அறிவிக்க வேண்டுமென்று கோரினர். நேற்று இரவு முழுக்க அதைப்பற்றியே எண்ணிக்கொண்டிருந்தேன்" என்றார்.

"என்னை எவ்வாறு நான் வனைந்துகொள்கிறேன் என்பது முதன்மையான வினா என்று இன்று புலரியில் கண்டடைந்தேன். இளஅகவையில் வரலாற்றுத்தலைவனாக நான் என்னை எண்ணிக்கொண்டேன். நானறிந்த மெய்மையின் அடிப்படையில் வரலாற்றை திசைதிருப்ப வேண்டுமென்றும் மாற்றியமைக்க வேண்டுமென்றும் கற்பனை செய்தேன். நீங்கள் அனைவரும் அறிந்ததுபோல் அம்பெய்து ஆற்றுக்கு அணைகட்ட முயன்றவன் நான். கங்கையை அவ்வாறு அணைகட்ட இயலாதென்று இந்த அகவையில் உணர்கிறேன். கங்கையை அம்பெய்து நிறுத்தும் ஆற்றல்கொண்ட தெய்வங்கள்கூட விண்ணுலாவும் முகில்பெருக்கை நிறுத்த இயலாது."

"பின்னர் என்னை இக்குடியின் பிதாமகன் என்று எண்ணிக்கொண்டேன். என் கண்ணெதிரில் இவர்களின் வாழ்வழியலாகாதென்ற இலக்கொன்றை முன்வைத்து இதுநாள் வரை வாழ்ந்தேன். அதுவும் என் நெஞ்சுக்கும் அறிவுக்கும் கைகளுக்கும் அப்பாற்பட்டதென்று இப்போது உணர்கிறேன்.

இன்று என்னை எளிய முதுமகன் மட்டுமே என எண்ணுகிறேன். அதுவாக என்னை நிறுத்திக்கொள்கையிலேயே என்னால் இயன்ற ஒன்றை உறுதியாக இயற்ற முடியும்” என்றார் பீஷ்மர். “அவையீரே, முதுமகனாகிய நான் இரண்டு நெறிகளுக்கு மட்டுமே கட்டுப்பட்டவன். என் அன்னையரும் தந்தையரும் குலமும் மூதாதையரும் எனக்களித்த ஆணைகளுக்கு முதலில். நான் பிறருக்கு அளித்த சொற்களுக்கு பிறகு. அதையன்றி பிறிதனைத்தையும் என்னிலிருந்து உதிர்த்துவிட முடிவெடுத்தேன்.”

“எந்நிலையிலும் அஸ்தினபுரியின் முடிக்குக் காவலாக படைக்கலமேந்தி துணை நின்றிருப்பேன் என்பது என் அன்னை சத்யவதிக்கும் தந்தை சந்தனுவுக்கும் நான் அளித்த சொல். அதிலிருந்து எதன்பொருட்டும் நான் பிறழ முடியாது. தொல்காலம் முதல் இக்குடி பேணிவரும் நெறிகளுக்கு முற்றிலும் கட்டுப்பட்டவன் என்பது நான் என் பிறப்பால் தலைக்கொண்ட கடமை. இங்கு எவரை அரியணை அமர்த்தவேண்டுமென்பது எனது பொறுப்பல்ல. அரியணை அமர்ந்தோருக்குக் காவலென அமைவதே நான் செய்யக்கூடியது. எது குடிமுறையோ அதை பிழையின்றி பேணியாகவேண்டியவன் நான்.”

“குலநெறிகளின்படி இந்த மணிமுடி என் மைந்தன் திருதராஷ்டிரனுக்குரியது. பதினெட்டு ஆண்டுகளுக்கு அவனால் பாண்டுவுக்கு கையளிக்கப்பட்டது. அச்சொல் மூதாதையருக்கும் தெய்வங்களுக்கும் முன் என் விழிசெவி சான்றாக அளிக்கப்பட்டதாகையால் எந்நிலையிலும் மாற்றத்தக்கதல்ல. அவனால் கூட. ஆகவே பதினெட்டாண்டுகள் அகவை நிறைவடைகையிலேயே திருதராஷ்டிரனின் மைந்தன்

துரியோதனன் அரியணைக்குரியவனாகிவிட்டான். அவன் கோல்கொண்டு முடிசூடி இங்கு அமர்ந்திருப்பது மாறாத குலநெறிகளின்படியே.”

“ஒரு குடியின் மூத்த மைந்தனே முடிசூட வேண்டுமென்பது தொல்மரபு. ஆனால் அவர்களில் எந்த மைந்தன் முடிசூட வேண்டுமென்று தந்தையர் விரும்புகிறார்களோ அவர்களுக்கே மேலும் உரிமை என்பதும் தொல்மரபே” என பீஷ்மர் தொடர்ந்தார். “குடிமைந்தரில் மூத்தவர் எவர் என்பதும் எளிதில் வகுக்கக்கூடியதல்ல. இன்று ஒருவர் மூத்தவராக இருக்கலாம். உண்மையில் பிறிதொருவரே மூத்தவரென்று பின்னர் தெரியவரலாம். அவ்வாறு தெரியவரும்போதெல்லாம் முடியுரிமை தொடர்ந்து மாற்றப்படுமென்றால் அக்கோல் நிலைபெறாது.”

“ஆகவே அஸ்தினபுரியின் அரசனென அறுதியாக துரியோதனனை நான் ஏற்கிறேன். இனி அதில் எந்த பிறசொல்லுக்கும் இடமில்லை. அவன் அருகே வாளேந்தி நிற்கவும் அவனுக்காக களம்புகவும் உறுதி கொண்டிருக்கிறேன்” என்றார் பீஷ்மர். “அவையோரே, எனது சொல் இருமுறை அளிக்கப்பட்டது. முதற்சொல் என் மைந்தனாகிய திருதராஷ்டிரனுக்கு நான் அளித்தது, இறுதி வரை அவனுக்கும் அவன் மைந்தருக்கும் கொடிவழியினருக்கும் உரியவனாக நின்றிருப்பேன் என்று. அவன் ஆணவமனைத்தையும் இழந்து விழியிழந்த வெறும் இளையோனாக அன்று என் முன் வந்துநின்றான். தந்தை என என் உளம் நெகிழ்ந்தது. அச்சொல்லை நான் அவனுக்களிக்கையில் வானும் மண்ணும் சான்றாகுக என்றேன்.”

திருதராஷ்டிரர் விழிகளில் நீர்வழிய கைகூப்பி அமர்ந்திருந்தார். “இரண்டாவது சொல் நான் காந்தாரருக்கு அளித்தது” என பீஷ்மர் தொடர்ந்தார். “அஸ்தினபுரியின் மணிமுடி பாண்டுவுக்கு அளிக்கப்படுகையில் பதினெட்டாண்டுகளுக்குப் பின் அதை நானே பெற்று காந்தார அரசியின் மைந்தனுக்கு அளிக்கிறேன் என்று இளைய காந்தாரருக்கு சொல்லுறுதி அளித்தேன். அதிலிருந்து எந்நிலையிலும் நான் வழுவ இயலாது.” சகுனி தலைவணங்கினார்.

பீஷ்மர் “இவ்விரு சொற்களுக்கும் என் வாழ்வை அளிக்கும் பொறுப்பும் எனக்கு உண்டு. இதற்கப்பால் அஸ்தினபுரியில் அரசுசூழ்தலில் என்ன நிகழ்கிறது என்பதை அறியவோ, வழிநடத்தவோ, முரண் கொள்ளவோ நான் முனையப் போவதில்லை. போர் நிகழவேண்டுமா, நிலம் பகுக்கப்படவேண்டுமா, பிறிதேதும் வழிகள் உண்டா என்பதை இவ்வரசும் அவையும் தங்கள் விருப்பப்படி முடிவெடுக்கட்டும். அதில் ஒருபோதும் ஒரு சொல்லையேனும் நான் உரைக்கப் போவதுமில்லை. இனி எவரும் இதன்பொருட்டு என்னை அணுகவேண்டியதும் இல்லை” என்றார்.

நெடுநேரம் அவை அமைதியில் உறைந்திருந்தது. வேறெங்கோ சென்று மீண்டு கலைந்து எழுந்து அவர் அவையை வணங்கி விதுரரிடம் தான் வெளியேறுவதாக கைகாட்டிவிட்டு நடந்தார். விதுரர் கதவைத் தட்ட வெளியே இருந்து கனகர் கதவை திறந்தார். பீஷ்மர் வெளியே சென்று கதவு மூடப்பட்டதும் துரோணர் எழுந்து “அரசே, நாங்களும் பிறிதொன்று சொல்வதற்கில்லை. அரசுசூழ்தலில் எந்நிலையிலும் நானும் கிருபரும் தலையிடுவதாக இல்லை. பீஷ்ம பிதாமகரின் வழி எதுவோ அதுவே எங்களுடையதும்” என்றபின்

தலைவணங்கினார். கிருபரும் உடன் எழுந்து தலைவணங்க விதுரர் கதவை தட்டினார். வெளியே இருந்து கனகர் கதவை திறக்க அவர்கள் வெளியேறினர்.

மலர்ந்த முகத்துடன் துரியோதனன் "முன்னரே அறிந்தது என்றாலும் பீஷ்ம பிதாமகர் இத்தனை தெளிவாக தன் நிலைபாட்டை அறிவித்துவிட்டபின் இதைப்பற்றி நாம் பிறிதொன்றும் பேசவேண்டியதில்லை என்று நினைக்கிறேன். இதை முறையாக பேரவையிலேயே அறிவித்துவிடலாம்" என்றான். சகுனி "ஆம், அவருடைய சொற்கள் இக்குடியை ஆளும் மூதாதை நாவிலிருந்து எழுந்தவைபோல. இந்நகர்மேல் அவை திகழ்க!" என்றார். தாரை அசலையின் செவியில் மெல்ல "தமக்குத்தாமே நடித்துக்கொள்வதில் மானுடர் பல்லாயிரமாண்டு தேர்ச்சி கொண்டவர்கள்" என்றாள்.

# குருதிச்சாரல் - 15

**பகுதி இரண்டு : பெருநோன்பு – 9**

அசலை காந்தாரியின் அறைவாயிலை அடைந்தபோது அங்கு நின்றிருந்த சேடி வியப்புடன் அவளை நோக்கி புருவம் தூக்கி அவ்வசைவை உடனே தன்னுள் ஆழ்த்தி தலைவணங்கினாள். "பேரரசி உணவருந்திக்கொண்டிருக்கிறார்கள். இளைய அரசிகள் உடனிருக்கிறார்கள்" என்றாள். "நான் பேரரசியை பார்க்கவேண்டும், உடனடியாக" என்றாள் அசலை. "தாங்கள் அதை முன்னரே அறிவித்திருக்கிறீர்களா?" என்று கேட்டாள் முதிய சேடி. "இல்லை, ஓர் எண்ணம் தோன்றி எழுந்து

வந்தேன். அவரை நான் சந்தித்தாகவேண்டும்” என்று அசலை சொன்னாள். சில கணங்களுக்குப் பின் “நன்று, நான் தங்கள் வரவை அறிவிக்கிறேன். பேரரசி விரும்பினால் தாங்கள் சந்திக்கலாம்” என்று முதுமகள் சொன்னாள்.

அவள் உள்ளே செல்ல கதவு மூடியபோது அசலை மீண்டும் தனிமையை உணர்ந்தாள். மூச்சை இழுத்துவிட்டு தன்னுள் கலைந்து கிடந்த சொற்களை ஒன்றன்பின் ஒன்றென அடுக்கிக்கொண்டாள். கைவளைகளைப்பற்றி திருகியபடி கதவு திறப்பதற்காக காத்து நின்றிருந்தாள். மெல்லிய ஓசையுடன் கதவு திறந்தபோது உள்ளத்தில் ஓர் அதிர்வு எழ சொற்கள் கைபட்ட தேனீக்கூட்டமென கலைந்து ரீங்கரித்து பறக்கலாயின. தன்னை உந்தி உள்ளே செலுத்தவேண்டியிருந்தது. ஒவ்வொரு எண்ணமும் நம்பிக்கையூட்டி உளவிசை கூட்டுகிறது. அணுகும்தோறும் பொருளிழந்து இறந்து குளிர்ந்து கிடக்கிறது. ஏன்? என்ன ஆயிற்று எனக்குள்?

அறைக்குள் தரையில் அமர்ந்து குறுபீடத்தில் உணவை வைத்து காந்தாரியும் ஒன்பது அரசியரும் உணவருந்திக்கொண்டிருந்தனர். ஏழு சேடியர் அவர்களுக்கு உணவு பரிமாறினர். அவர்கள் எவரும் பேசிக்கொண்டிருக்கவில்லை. கலங்களின் ஓசையும் நாவுகளின் ஓசையும் கலந்த ஓசை பொருட்களின் உரையாடலென கேட்டுக்கொண்டிருந்தது. அசலை உள்ளே நுழைந்தபோது அரசியர் அனைவரும் நிமிர்ந்து அவளை பார்த்தனர். சத்யசேனை மட்டும் “அமர்ந்துகொள்” என்று சொல்லி அருகிருந்த குறும்பீடத்தை காட்டினாள். “நான் முன்னரே

உணவருந்திவிட்டேன், அன்னையே” என்றாள் அசலை.
“தாழ்வில்லை, சற்று ஊன்சாறு அருந்து” என்றாள் சத்யசேனை.

குறுபீடத்திற்குப் பின்னால் அமர்ந்து ஆடையை சீர்செய்துகொண்டாள் அசலை. முதிய சேடி அவளுக்கு வெள்ளித்தாலத்தை வைத்து அதில் ஊன்சாறையும் தீயில் சுட்ட அரிசி அப்பத்தையும் வைத்தாள். அசலை ஐம்பருக்களை நுண்சொல்லால் வணங்கிவிட்டு அதை உண்ணத் தொடங்கினாள். அங்கே ஒலித்த சீரான நாவோசை அவளுக்கு ஓர் அமைதியை அளித்தது. மீண்டும் தன்னுள் சொற்களை திரட்டிக்கொண்டாள். அவள் பேசுவதற்காக காந்தாரியும் அரசியரும் காத்திருந்தனர். இருமுறை நாவசைத்த பின் “நான் பேரரசியிடம் ஒரு சொல்லை உரைக்கும்பொருட்டு வந்தேன்” என்று அசலை சொன்னாள்.

காந்தாரி அவள் சொற்களைக் கேட்க முகம்திருப்பி செவிகளை இயல்பாக சரித்தாள். “அரசி, தாங்கள் இன்னமும்கூட இப்போரை தவிர்க்க இயலும்” என்றாள். காந்தாரி “நேற்றைய அவை என்னிடம் காட்டியது ஒன்றே. அனைத்துத் தரப்பிலிருந்தும் நம்மிடம் நாம் வெறும் பெண்கள் மட்டுமே என்கிறார்கள். நம் ஆடையும் அணியும் அரியணையும் மணிமுடியும் வெறும் அடையாளங்கள் மட்டுமே என்று நம்மிடம் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள்” என்றாள். “ஆம், ஆனால் இங்குள்ள ஒவ்வொருவருமே அவ்வாறு அடையாளங்களை மட்டுமே சூடிக்கொண்டிருக்கிறார்கள். தன்முடிவால் எதையும் ஆற்றும் இடத்தில் எவருமே இல்லை” என்று அசலை சொன்னாள். “பேரரசி, இன்னமும்கூட இந்நகரில் பிறர்மேல் சொல் ஆதிக்கம் கொண்டவர்களில் முதன்மையானவர் தாங்களே.”

“இனி எவரிடம் பேசுவதற்கு இருக்கிறது? ஒவ்வொருவரும் தங்களை அறிவித்துவிட்டார்கள்” என்றாள் காந்தாரி. “ஆம் அன்னையே, ஆனால் இன்னமும் ஒருவர் தன்னை அறிவிக்காமல் இருக்கிறார்” என்றாள் அசலை. காந்தாரி புருவம் சுளித்தாள். “தாங்கள் பேரரசரிடம் பேசலாம்” என்றாள் அசலை. காந்தாரி புன்னகைத்தாள். பின்னர் கைகளை நீட்ட முதிய சேடி யானத்தில் நறுமணநீரை வைத்து அவள் கையைப்பற்றி அதில் வைத்து கழுவினாள். சேடி அளித்த மரவுரியால் கைகளை துடைத்தபடி “நீ அவர் எப்படி இருக்கிறார் என்பதை அறிந்திருக்கமாட்டாய். ஒவ்வொரு வாயில்களாக மூடி மிக உள்ளே சென்றுவிட்டிருக்கிறார். இப்போது சென்று சொல்லப்படும் எந்தச் சொல்லும் அவரை சென்றடையாது” என்றாள்.

பெருமூச்சுடன் “தன்னை இசை சற்றே நெகிழ்த்துகிறது என்று உணர்ந்து அதையும் துறந்துவிட்டிருக்கிறார். அரசன் இறுகியிருப்பதைவிட மேலும் இருமடங்கு இறுகியிருக்கிறார்” என்றாள். “அவ்வாறுதான் நானும் உங்களிடமிருந்து அறிந்துகொண்டிருந்தேன். ஆனால் சற்றுமுன் என் கனவில் அவர் தோன்றினார்” என்றாள். அனைத்து விழிகளும் முள்ளம்பன்றி முள்முனைகள் என சிலிர்த்து அசைந்து அவளை நோக்கின. “யார்?” என்று காந்தாரி கேட்டாள். “இன்று காலை முழுக்க நிலையழிந்திருந்தேன், அன்னையே. என்னென்னவோ எண்ணங்கள். உணர்வுகள் உருத்திரளாத அலைக்கழிப்பு. உணவுக்குப் பின் சற்று துயின்றேன். அதில் ஒரு கொடுங்கனவு” என்று அசலை சொன்னாள். “ஆம், வேறெதையும் எவரும் கனவு காண்பதில்லை” என்றாள் காந்தாரி.

அசலை கனவுநிறைந்த விழிகளுடன் “பெருங்களம். அதில் அப்போது முடிந்த போரில் கொன்று குவிக்கப்பட்ட வீரர்களின் உடல்கள் திசையெல்லை வரை சிதறிக்கிடந்தன. துடித்துக்கொண்டிருக்கும் புரவிகள், உடைந்து சிதறிய தேர்கள். அதனூடாக கூந்தல் பறக்க ஆடை நெகிழ நெஞ்சில் ஓங்கி அறைந்து கதறியபடி விரைந்தோடுகிறேன். தொலைவில் இளைய அரசர் விழுந்துகிடப்பதை பார்க்கிறேன். கைகளால் என் நெற்றியின் குங்குமத்தை அழித்தபின் ஓடிச்சென்று அவர் அருகே மண்டியிட்டு கால்களை பற்றிக்கொண்டேன். அவர் மார்பு பிளக்கப்பட்டிருந்தது. உள்ளிருந்து செங்குலையென நெஞ்சு பிடுங்கி வீசப்பட்டிருந்தது. அவர் கால்களை பற்றிக்கொண்டு கதறி அழுதேன். தலையை அவர் பாதங்களில் அறைந்தேன்” என்றாள்.

“அப்போது அவர் மெல்ல முனகுவதை கேட்டேன். வலது கையை ஊன்றி மெல்ல எழுந்தமர்ந்து இடக்கையை என் தலைமேல் வைத்தார். திடுக்கிட்டு நான் அவர் முகத்தை பார்த்தேன். அது பேரரசரின் முகம். நோக்கற்ற விழிகள். உதடுகள் மெல்ல அசைய அவர் எதையோ சொல்லிக்கொண்டிருந்தார். என்ன சொல்கிறீர்கள் என்று நான் கேட்டேன். அவர் சொல்லிக்கொண்டிருந்த சொற்கள் எனக்கு நன்றாகவே கேட்டன. ஆனால் முற்றிலும் நானறியாத பிறிதொரு மொழி என அது தோன்றியது. நான் விழித்துக்கொண்டேன். அக்கனவை எண்ணி நடுங்கியபடி மஞ்சத்தில் அமர்ந்திருந்தேன். பின்னர் எழுந்து வந்து யானத்திலிருந்து குளிர்நீரை அள்ளி முகத்தை கழுவினேன். மரவுரியால் துடைத்துக்கொண்டிருந்தபோது தோன்றியது, அது என் கனவல்ல அவருடைய கனவு என்று. ஆகவேதான் தங்களைப் பார்க்க ஓடிவந்தேன்” என அசலை சொன்னாள்.

சத்யசேனை “என்ன சொல்கிறாய்?” என்றாள். சத்யவிரதை “இத்தகைய கனவுகள் அனைவருக்கும் வருகின்றன. இங்கிருக்கும் சூதர்கள் சொல்லிச் சொல்லி கனவுகளை உருவாக்கி நம்மேல் திணித்திருக்கிறார்கள். நாம் இவற்றுக்கு அடிமைப்பட்டிருக்கிறோம்” என்றாள். அசலை “அவர்கள் புதிய கனவுகளை உருவாக்கவில்லை, அரசி. நாம் அனைவரும் காணும் கனவுகளை அவர்கள் ஒன்றுடன் ஒன்று இணைத்து பின்னி பெருங்கனவாக்கி இந்நகர்மேல் பரவச்செய்திருக்கிறார்கள். இப்போது நாமனைவரும் ஒரே கனவில் வெவ்வேறு இடங்களில் வாழ்ந்துகொண்டிருக்கிறோம்” என்றாள். “ஆனால் அது அவர்களின் கடமை. கலைஞர்களும் கவிஞர்களும் காலந்தோறும் செய்துகொண்டிருப்பது அதையே.”

அவள் சொன்னது அவர்களுக்குப் புரியவில்லை என விழிகள் காட்டின. “சொல்க!” என்றாள் காந்தாரி. “பேரரசி, அங்கே தன் அறையில் பேரரசர் தொடர்ந்த கொடுங்கனவுகளில் வாழ்கிறார். ஆயிரம் மைந்தரின் தந்தை ஒவ்வொரு மைந்தருடனும் தானும் இறந்து மீண்டுகொண்டிருக்கிறார். ஒவ்வொரு நாளும் ஆயிரம் இறப்புகள். மீண்டும் பிறக்கும் இறப்புகளே துயரத்தின் உச்சிப்புள்ளிகள். இன்று அவர் இருக்கும் கொடுநரகில் ஆயிரம் பழிசேர்த்து தெய்வத்தீச்சொல் பெற்றவர்கள்கூட இருந்ததில்லை. தாங்கள் அவரை கைவிட்டுவிட்டீர்கள் என்றே எனக்குத் தோன்றுகிறது” என்றாள்.

காந்தாரி சேடியை நோக்கி நீட்டிய மரவுரி அவ்வாறே அசைவற்று நிற்க அவளை நோக்கி செவிநாட்டி நிலைத்தாள். பின்னர் பெருமூச்சுடன் கைகளைத் தாழ்த்தி “மெய்தான்” என்றாள். “துயர் கொண்டவுடன் நாம் பிறரை நோக்கி ஓடுகிறோம். பகிர்ந்துகொள்ளத் துடிக்கிறோம். ஆனால்

பெருந்துயர் கொண்டதும் அனைத்து வாயில்களையும் மூடி தனிமை கொள்கிறோம். முற்றிலும் பிறர் அறியாது நம்மை ஒடுக்கிக்கொள்கிறோம். ஏனெனில் துயர்கள் மானுட உருவாக்கம், பெருந்துயர் என்பது தெய்வத்தின் கொடை" என்று அசலை சொன்னாள். "நீங்கள் இருவரும் முற்றாக விலகிக்கொண்டுவிட்டீர்கள். சென்ற பதினைந்தாண்டுகளில் நீங்கள் ஆண்டுக்கொருமுறை அவருடன் அரியணை அமர்ந்ததற்கு அப்பால் அவரை அணுகியதே இல்லை."

காந்தாரி "மெய்தான், நானும் அத்தகைய பெருந்துயரில்தான் இப்பதினைந்து ஆண்டுகளை இங்கு கடந்தேன்" என்றாள். "ஆனால் அது அன்னையின் துயர். அது உடல் சார்ந்தது, எனவே பருவடிவு கொண்டது. இப்புவியில் பருப்பொருள் தன் அளவை விட்டு பெருகாதென்னும் தெய்வ ஆணையை கொண்டுள்ளது. அன்னையே, தந்தையின் துயர் இருளென, வெறுமையென நுண்வடிவானது. கணம் கோடிமடங்கென பெருகும் வல்லமை கொண்டது அது. அது கடல் எனில் உங்கள் துயர் துமி" என்றாள் அசலை. காந்தார அரசிகள் ஒன்பதின்மரும் பெருமூச்சுவிட்டனர். சத்யசேனை "மெய்தான், நாங்களும் அவரை முற்றாக கைவிட்டுவிட்டோம். எங்கள் துயரை வெல்ல அக்கையுடன் ஓருடலென ஒட்டிக்கொண்டோம்" என்றாள்.

தசார்ணை "சில நாட்களுக்கு முன் அவர் அறைக்குச் சென்று எதையோ அளித்தபோது மஞ்சத்திலிருந்து எழும்பொருட்டு என் கையை பற்றினார். என் உடல் சிலிர்த்து குளிர்ந்தது. அவர் ஏற்கெனவே இறந்துவிட்டாரென்றும் உடல் குளிர்ந்துவிட்டிருக்கிறதென்றும் எனக்குத் தோன்றியது. பின்னர் அவ்வறைக்குள் செல்வதைப்பற்றி என்னால் எண்ணவே

இயலவில்லை. அவ்வுடலிலிருந்து குளிர்காற்று கிளம்பி அம்மஞ்சத்தையும் அறைகளையும் அங்கிருக்கும் பீடங்களையும் கலங்களையும் தண்ணென்றாக்கிவிட்டிருக்கிறது. குளிர்நீர் நிறைந்த சுனையில் முங்குவது போன்றது அவர் அறைக்கதவைத் திறந்து அவ்வறைக்குள் நுழைவது” என்றாள்.

“என் கனவில் அவர் வருகையிலெல்லாம் வெம்மை கொண்டிருக்கிறார். அவர் காதுகளிலிருந்தும் கண்களிலிருந்தும் தூளையின் துளைகளினூடாக தழல் என அனல் பீறிடுவதை கண்டிருக்கிறேன்” என்றாள் சுதேஷ்ணை. சத்யவிரதை “இருமுறை என் கனவில் அவர் வந்தார். அஞ்சி விழித்துக்கொண்டு அக்கையை நோக்கி ஓடிவந்தேன்” என்றாள். சம்ஹிதை “இங்கு அக்கையுடன் இருக்கையில் அவர் கனவுகளில் எழுவதில்லை. செம்மண் அலைகளெனப் படர்ந்து வான்விளிம்பால் எல்லையிடப்பட்ட காந்தாரப் பெருநிலத்தில் வாழமுடிகிறது” என்றாள்.

“நீங்கள் அனைவரும் அவர்மேல் உள்ளூர வெறுப்புத்துளி ஒன்றை கொண்டிருந்தீர்கள். அதையே அவருக்கு மைந்தர்களென பெருக்கி திருப்பியளித்தீர்கள். மைந்தர்கள் கணவர்களை நோக்கும் அன்னையரின் கண்மணிகளுக்குள் ஒளியென்றோ இருளென்றோ முதலில் தோன்றுகிறார்கள் என்று நூல்கள் சொல்கின்றன” என்றாள் அசலை. அவர்கள் எவரும் மாற்றுச்சொல் எடுக்கவில்லை. சற்று அசைந்த சத்யசேனை “ஏன் நாங்கள் அவரை வெறுக்கவேண்டும்?” என்றாள். “பெண்கள் கொழுநரை சற்றேனும் வெறுக்காமலிருக்க முடியாது, அரசி” என்றாள் அசலை. “ஏனென்றால் பெண்களின் முற்றுவகை முதிரா இளமையில்

மட்டுமே. இளமையை இழப்பதே அவர்களின் துயர். அத்துயரின் விழிதொடு வடிவென இருப்பவர் கொழுநர்.”

அரசியர் அமைதியிலாழ்ந்து அமர்ந்திருந்தனர். விழிகள் ஒவ்வொரு கோணத்தில் தரையிலும் அருகிருந்த பொருட்களிலும் ஊன்றி தழைந்திருந்தன. “உங்கள் எவருக்கும் அவருடன் சொற்தொடர்போ உளத்தொடர்போ இன்றில்லை. அத்தொடர்பு உள்ளவர் சூதஅரசி அன்னை பிரகதி மட்டுமே” என்றாள் அசலை. காந்தாரி சீற்றத்துடன் “அவளா?” என்றாள். “ஆம், தாங்கள் சற்று அறிந்திருப்பீர்கள். இன்று ஒவ்வொரு நாளும் யுயுத்ஸுவின் அன்னை மட்டுமே அவரைச் சென்று சந்திக்கிறார். பகலெல்லாம் அவர் அறைக்குள் இருப்பவர் அவர் மட்டுமே. பேரரசர் அவருடனும் சஞ்சயனிடமும் யுயுத்ஸுவிடமும் மட்டுமே சொல்லெடுக்கிறார்” என்றாள் அசலை.

இளைய அரசியர் சீறி எழுவர் என்று அசலை நினைத்தாள். ஆனால் அவர்கள் அமைதியாக அமர்ந்திருந்தனர். காந்தாரி “ஆம், அவள் இதற்காக காத்திருந்தாள். அத்தனை துணைவியராலும் அவர் கைவிடப்படும்போது அருகே சென்றமர்ந்து தன் இடத்தை உருவாக்கிக்கொள்ளலாம் என்று எண்ணினாள். ஊழ் அதற்கான வாய்ப்பை அளித்தது” என்றாள். “நன்று, அம்மைந்தனுக்கு மணிமுடியும் அமைக!” அத்தனை அரசியரும் திகைப்புடன் விழிதூக்க அசலை துயருடன் புன்னகைத்தாள். “நான் இன்று விழைவதெல்லாம் சத்யவதி சென்றதுபோல காடணைவதை மட்டுமே...” என்றாள் காந்தாரி. “ஆனால் இங்கல்ல. மீண்டும் காந்தாரச் செம்புலத்திற்கு.”

“அன்னையே, உண்மையில் இப்படியொரு தருணம் அரசருக்கு வருமென்று எண்ணித்தான் தெய்வங்கள் அன்னை பிரகதியை

அவருக்கு சேர்த்தனவோ?" என்றாள் அசலை. சத்யவிரதை உரத்த குரலில் "இப்படியெல்லாம் இதை விளக்கிக்கொள்ளவேண்டிய தேவையென்ன? அவர் காட்டை நிறைக்கும் மதகளிறு. ஆயிரம் பெண்டிர் அவருக்கு. யார் அமைந்தாலென்ன, மறைந்தாலென்ன?" என்றாள். "அது உண்மையல்ல என உங்களுக்குத் தெரியும்" என்றாள் அசலை. "இதைப்பற்றி நீ பேசவேண்டியதில்லை" என்றபடி சத்யவிரதை எழுந்து அருகே வந்தாள். "எதற்கு இப்போது வந்தாய்? எங்கள்மேல் பழிசுமத்தவா? அன்றி, அக்கையை துன்புறுத்தவா?"

கையசைவால் அவளை அமரவைத்த காந்தாரி "நீ சொல்வது மெய். அவரை நாங்கள் விலக்கினோம். அவ்விடத்தில் அவள் சென்று அமர்ந்தும்விட்டிருக்கிறாள். ஆனால் எனக்கு முள்முனையளவுகூட குற்றஉணர்வு இல்லை" என்றாள். "அன்று அவையில் எழுந்து சூழ்ந்து பெண்ணை துகில் களைந்து இழிவுபடுத்தியது அவருடைய குருதி. மைந்தரை தந்தையிலிருந்து பிரித்துப் பார்க்கவேண்டியதில்லை" என்றாள். அசலையின் இதழ் மெல்ல பிரிந்த ஓசையைக் கேட்டவள்போல "ஆம், அவர் பேரறத்தான் என்றும் பெருந்தன்மையே அன்றாட இயல்பென்று கொண்டவரென்றும் நான் அறிவேன். ஆனால் உள்ளாழத்தில் எங்கோ உறையும் இருள் ஒன்று அவருள்ளில் இருந்துவந்து மைந்தராகிப் பெருகி இந்நகரை நிறைத்திருக்கிறது" என்றாள் காந்தாரி.

"திரௌபதி சிறுமை செய்யப்பட்டபின் அவரை நான் சந்தித்தபோது நெஞ்சுடைந்து கதறி அழுதார். அவ்வழுகை எத்தனை மெய்யானது என்று எனக்குத் தெரியும். அதன் பின்னரும் பலநாட்கள் எண்ணி எண்ணி கலுழ்ந்தார். சொல்லிச் சொல்லி நெஞ்சாற்றாமல் கைகளால் தரையை ஓங்கி

அறைந்துகொண்டு விம்மும் அவரை இளையவர்கள் கண்டிருக்கிறார்கள். அவ்வுணர்வுகள் முற்றிலும் மெய்யானவை. ஐயத்திற்கு இடமில்லை. ஆனால் அது அச்செயலை இயற்றியது தானே என்னும் உணர்விலிருந்து எழுந்ததல்லவா? அச்செய்தியைக் கேட்டதும் ஒருகணமேனும் மைந்தரென நின்று அவர் அதை நடிக்கவில்லையா? அவ்வினாவை நான் சென்றடைந்த அன்றே அவரிடமிருந்து ஒழிந்தேன்."

உரத்த குரலில் காந்தாரி சொன்னாள் "அப்பழியிலிருந்து அவர் ஒருபோதும் விலகமுடியாது. தன் கைகளால் குருதிபலி அளித்து அப்பழியை அவர் ஈடுகட்டியாகவேண்டும். இரக்கத்துக்குரியவர் என்பதில் மாற்று எண்ணமில்லை எனக்கு. பழிக்குரியவர் என்பதிலும் பிறிதொரு கருத்தில்லை." சிறிய உதடுகளை வெண்முனைப் பற்கள் கடித்து அழுத்த அவள் தலைகுனிந்து அமர்ந்திருந்தாள். முகம் சிவந்து குருதிவண்ணம் கொண்டிருந்தது. கழுத்திலும் தோளிலும் கன்னங்களிலும் பச்சை நரம்புகள் புடைத்திருந்தன. மூச்சில் பெருமுலையின் இடுக்கு அசைந்தது.

அசலை பெருமூச்சுவிட்டு "இத்தனை பெருவஞ்சத்தையா நாம் இங்கு ஈட்டியிருக்கிறோம்?" என்றாள். பின்னர் "அன்னையே, நீங்கள் சொல்லும் ஒவ்வொரு சொல்லையும் என் கணவரைப்பற்றி நானும் எண்ணியிருக்கிறேன். இப்போது இச்சொற்கள் என் செவியில் விழுகையில் ஆம் ஆம் என்று என் உள்ளமே எழுகிறது" என்றாள். காந்தாரி நாகச்சீறலென "ஆம், பெருவஞ்சமேதான். வஞ்சம் பாஞ்சாலத்து அரசியுடையது அல்ல, பெண்குலத்து முழுமைக்கும் உரியது. பேரன்னையருக்கு உரியது. அறிக, இந்தச் சிற்றறையில் அமர்ந்திருக்கும் நான்

இம்மண் மறைந்த அத்தனை பேரன்னையரின் தசைவடிவம். எந்நிலையிலும் அச்செயலுக்காக இவர்களை நான் பொறுத்துக்கொள்ள மாட்டேன். அன்னையென்று ஆயிரம் கைநீட்டி கண்ணீருடன் மைந்தருக்காக எழுகையிலேயே குருதி குருதி என்று கூவும் ஒரு கொடுந்தெய்வத்தையும் என்னுள் கொண்டிருக்கிறேன். அப்பழியின் முதல் புள்ளி பேரரசரே" என்றாள்.

அசலை உள்ளம் எடைகொண்டு மெல்ல அசைய அணியோசை ஒரு சொல்லென காந்தாரியிடம் எதையோ உரைத்தது. அவள் முகம்தூக்கி "அவர்மேல் காழ்ப்பு என்று சொன்னாய் அல்லவா? அது மெய். எங்கிருந்து எழுகிறது அது என்று அறிவாயா?" என்றாள். "முன்பு நானும் இதை எண்ணியதுண்டு. சுனையில் மிதக்கும் ஓர் இலையின் நிழல் ஆழத்தில் அதன் சேற்றுத்தட்டில் விழுந்திருப்பதைபோல அவர் உடல்கொண்ட இவ்விழியின்மை உள்ளாழத்தில் எங்கோ நிழலாக விழுந்து வடுவென பதிந்துள்ளது. அவர் கொண்ட நல்லியல்புகள் அனைத்தும் அதற்கெதிராக அவர் கற்று எண்ணி நிரப்பிக்கொண்டவையே. நாம் காணும் பேரரசர் அந்நல்லியல்புகளால் மட்டுமே ஆனவர். ஆனால் துலாவின் மறுதட்டில் சற்றே மிகுந்த எடையுடன் அக்கருந்துளி அமைந்திருக்கிறது. வென்று தன்னுள் ஒடுக்கி அவர் ஆண்ட அக்கருநிழலே மைந்தரென எங்கள் வயிற்றினூடாக எழுந்து பெருகி அவரைச் சூழ்ந்துள்ளது. அவை நடுவே அரசியை சிறுமை செய்த கீழ்மை எது? அது ஒரு விழியின்மை அல்லவா?"

அசலை "அன்னையே, அவ்விழியின்மை இல்லாத ஆண்கள் உண்டா? அவ்விழியின்மை இல்லாத ஒருவர் பெருந்தந்தை

என்று ஆகமுடியுமா?” என்றாள். “தீர்க்கதமஸின் கதையை நாம் அறிவோம். பெருங்காமமும் பெருவிழைவும் பேராற்றலும் விழியற்றவை. விழியின்மையே வேதப்பெற்றியென்றான தீர்க்கதமஸின் குருதியிலிருந்து பிறந்தவர்களல்லவா இன்று பாரதவர்ஷத்தை நிறைத்திருக்கும் அரசர்களில் பெரும்பகுதியினர்?” காந்தாரி அதை எண்ணியதனால் மெல்ல தணிந்து “ஆம், தீர்க்கதமஸின் விழியின்மையே இங்கு படைக்கலங்களாகி பெருகி பாரதவர்ஷத்தை நிறைத்திருக்கிறது. மாறி மாறி கொன்று களம்பட்டு குருதி பெருக்கி அழியப்போவது அதுதான்” என்றாள்.

“அக்கையே, இத்தனைக்கும் அப்பால் நாம் ஒருபோதும் மறுத்துவிட முடியாத ஒன்றுண்டு. அவர் நம் மைந்தரின் தந்தை” என்றாள் சத்யவிரதை. சத்யசேனை “ஆம், நம் மைந்தரின் தந்தை அவர். நம் மைந்தர் எவராயினும் நாம் அளித்த குருதிகொண்டவர் என்பதை மறக்க முடியாது. உளம் அளித்தது தந்தையென்றால் உடல் அளித்தது நாம். அப்பழியிலிருந்து நமக்கும் மீட்பு கிடையாது” என்றாள். அசலை “நான் சொல்லவந்ததும் அதுதான், அன்னையே. தாங்கள் பேரரசரை சென்று சந்திக்கவேண்டும். அதற்கு முன் யுயுத்ஸுவையும் அவர் அன்னையையும் சந்தித்தாகவேண்டும்” என்றாள். காந்தாரி “நானா?” என்றாள். “ஆம், அது தாங்கள் இறங்கும் எளிமையின் இறுதி எல்லை என்று நானும் அறிவேன். மைந்தர்பொருட்டு அங்குவரை நீங்கள் சென்றீர்கள் என்று இருக்கட்டும்” என்றாள் அசலை.

“பிரகதியை நான் இன்றுவரை அரசவிழாக்களிலன்றி எங்கும் சந்தித்ததில்லை. முறைமைச்சொற்களுக்கு அப்பால் ஒன்றும் பேசியதில்லை” என்றாள் காந்தாரி. “ஆனால் யுயுத்ஸுவை

மைந்தர் என நெஞ்சிலேற்றியிருக்கிறீர்கள். அதுவே அவ்வன்னைக்கு நீங்கள் அளிக்கும் நற்சொல்தான். அன்னை பிரகதியிடம் தாங்கள் நேரில் பேச வேண்டிய சொல் இதுவே என முன்னரே ஊழ் வகுத்திருக்கும் போலும்" என்று அசலை சொன்னாள். "அவர்களிடம் சென்று சொல்லுங்கள் அன்னையே, அவர்களின் சொல்லே இன்று பேரரசரின் உள்ளத்தில் நுழையும் என்று. அவர் கட்டிவைத்திருக்கும் கோட்டைச் சுவர்கள் அனைத்தையும் கடந்து சென்று ஆழத்தில் ஒளிந்திருக்கும் அவ்வெளிய உயிரிடம் அன்னை பிரகதி பேச முடியும்."

"நடுங்கி கூசி சிறுத்து அமர்ந்திருக்கும் அவ்வுயிரிடம் அவர் சொல்லட்டும், இத்தருணத்தில் இனியும் ஒன்று அவர் செய்வதற்கு உள்ளதென்று. யுதிஷ்டிரர், பீமசேனர், அர்ஜுனன், இளையோர் இருவரும் என ஐவரும் செவிகொள்ளும் ஒரு சொல் இன்று பேரரசருடையதே. ஏனென்றால் இப்புவியில் அவர்களுக்குச் செவியறியும் தந்தைசொல் என இருப்பது இது ஒன்றே" என்றாள் அசலை. காந்தாரி தலையசைத்தாள். தாழ்ந்த குரலில் "அதைவிடவும் பேரரசி குந்தி அவர் சொல்லை கேட்பார். எங்கோ உள ஆழத்தில் யாதவப் பேரரசிக்குள் நம் பேரரசர் வாழ்கிறார்..." என்றாள்.

காந்தாரி கைநீட்டி சொல்மறித்து "பெண்டிருக்குள் என்றாலும் நாம் பேசக்கூடாத சில உள்ளன" என்றாள். அசலை தணிந்து "ஆம்" என்றாள். சத்யவிரதை "மெய்தான், பேரரசரின் சொல்லென ஒன்றை யாதவஅரசி அடைந்தால் அவள் மறுக்க மாட்டாள்" என்றாள். காந்தாரி "அதைவிட பீமன் மறுக்கமாட்டான். தெய்வங்களுக்குப் பின் அவன் உள்ளத்தில் வாழும் மானுடன் பேரரசராகவே இருப்பார். தந்தையென பிறிதொருவரைக் கொள்ள அவனால் இயலாது" என்றாள்.

அசலை “பேரரசரின் சொல் ஒன்று பாண்டவர்களைச் சென்று அடையட்டும். எதன்பொருட்டும் இப்போருக்கு அவர்கள் துணியலாகாதென்று அவர்களிடம் பேரரசர் சொல்லவேண்டும்” என்றாள்.

“எப்படி அதை அவர் சொல்லமுடியும்? அவர்களுக்கு உகந்த பங்கை அளிக்க தன் மைந்தருக்கு ஆணையிடும் இடத்தில் அவர் இல்லையே” என்றாள் காந்தாரி. “மெய். கௌரவர்களின் தந்தையென அமைந்து பேரரசர் அச்சொல்லை அனுப்பவேண்டியதில்லை. பாண்டவர்களின் தந்தையென அச்சொல் எழட்டும். கௌரவர் அளிப்பது எதுவோ அதை பெற்றுக்கொண்டு அமையும்படி அவர் ஆணையிடட்டும்.”

“எதுவோ என்றால்?” என்றாள் சத்யசேனை. “எதுவாயினும். தாங்கள் கோருவன அனைத்தையும்கூட போரைத் தவிர்ப்பதற்காக அவர்கள் கைவிடவேண்டுமென்று பாண்டவர்களுக்கு பேரரசர் ஆணையிடட்டும். அவ்வாணை தலைமேல்கொள்ளப்படும், ஐயமே வேண்டியதில்லை” என்றாள் அசலை. “ஆனால் பேரரசி பிரகதியை சந்திப்பதென்பது…” என்று சத்யசேனை சொல்லத்தொடங்க காந்தாரி கைநீட்டி “நான் செல்கிறேன். பிறிதொரு எண்ணம் தேவையில்லை. நான் செல்கிறேன்” என்றாள்.

# குருதிச்சாரல் - 16

**பகுதி இரண்டு : பெருநோன்பு – 10**

தேரில் அமர்ந்திருந்த காந்தாரி ஓசைகளுக்காக செவி திருப்பியிருந்தாள். ஒவ்வொரு தெருவையும் செவிகளாலேயே

கண்டாள். “இது தெற்குக்கோட்டைக்கான திருப்பம்” என்றாள். “சூதர் தெருக்கள்…” என தனக்குத்தானே சொல்லிக்கொண்டாள். “நாம் வருவதை யுயுத்ஸுவுக்கு அறிவித்துவிட்டேன், அன்னையே” என்றாள் அசலை. “அவனுக்கு நாம் வருவது ஏன் என்று தெரியுமா?” என்று காந்தாரி கேட்டாள். “சொல்லவில்லை, ஆனால் மிக எளிதில் உய்த்துணரக்கூடியவர்” என்றாள் அசலை. “ஆம்” என்று காந்தாரி சொன்னாள். “அவன் பொன்றாப் புகழ் பெறுவான், ஐயமில்லை.”

“அவர் அரசராவார் என்று உங்கள் சொல்லும் உள்ளது” என்று அசலை சொன்னாள். “நானா? நான் சொன்னேனா?” என்றாள் காந்தாரி திகைத்தவளாக. “ஆம், உங்கள் வாயில் அச்சொல் எழுந்தது. அது மூதன்னையரின் சொல்.” சிலகணங்களுக்குப் பின் காந்தாரி “மூதன்னையரின் விருப்பம் அதுவென்றால் ஆகுக! நாம் அப்பெருக்கின் வெறும்துகள்கள்” என்றாள். “அனைத்துத் தகுதிகளும் கொண்டவர். தெய்வங்கள் எதையோ கருதியிருக்கின்றன” என்றாள் அசலை. காந்தாரி மேலும் சொல்லெடுக்காமல் வலச்செவியை தெருக்களை நோக்கி திருப்பிக்கொண்டாள்.

காந்தாரி அசலையின் தோள்பற்றி தேரிலிருந்து இறங்கியதும் அரண்மனை முற்றத்தில் நின்றிருந்த யுயுத்ஸு கைகூப்பியபடி அருகணைந்தான். “வணங்குகிறேன், பேரரசி. இவ்வில்லத்திற்கு தாங்கள் வந்தது என் குடி என்றும் பெருமையுடன் எண்ணும் தருணமாக அமையும்” என்றான். “நான் உன் அன்னையென வந்திருக்கிறேன். குலமுறைப்படி கால்தொட்டு வணங்குக!” என்று காந்தாரி சொன்னாள். யுயுத்ஸு ஒருகணம் திகைத்தபின் உடலில் விரைவு குடியேற குனிந்து அவள் கால்களைத் தொட்டு சென்னிசூடி “வணங்குகிறேன், அன்னையே” என்றான்.

அவன் தலையில் கைவைத்து “பெரும்புகழ் பெறுக! என்றேனும் உன் தலையில் மணிமுடி அமையும். அதை இத்தருணத்தில் அணுக்கமாகவே உணர்கிறேன்” என்று காந்தாரி சொன்னாள். தேம்பிய குரலில் “அன்னையே…” என்றான் யுயுத்ஸு. அசலை புன்னகையுடன் “அன்னை சொல் அது. விண்ணிலிருந்து வருவது” என்றாள். யுயுத்ஸு கண்களில் நீர் பரவிய ஒளியுடன் இடறித் தாழ்ந்த குரலில் “வருக, அன்னையே” என்றான்.

காந்தாரி அவன் தோளில் கைவைத்து புறாபோல சிறிய காலடிகளை எடுத்துவைத்து மெல்ல நடந்தபடி “இது அரசமுறை சந்திப்பல்ல. உன் அன்னையை அவளுக்கு மூத்தவள் என்ற நிலையில் பார்க்க வந்திருக்கிறேன். ஆகவேதான் இங்கு நானே வரவேண்டும் என்று எண்ணினேன்” என்றாள். “ஆம், தாங்கள் வரப்போகும் செய்தியை சற்று முன்னர்தான் கனகர் வந்து சொன்னார். அன்னை பதறிவிட்டிருக்கிறார். சேடியர் வாழ்வில் உழன்ற எங்களுக்கு அரசச் சொல்முறைகள் எதுவும் தெரியாது. எப்பிழையெனினும் தாங்கள் உளம் கொள்ளலாகாது” என்றான்.

“முறைமையின்றி பேசும்பொருட்டே வந்துள்ளேன்” என்று காந்தாரி சொன்னாள். மெல்லிய குரலில் “படிகள்” என்றாள் அசலை. “ஆம், என் முன் ஓர் இல்லத்தை உணர்கிறேன்” என்ற காந்தாரி படிகளில் கால் வைத்து எடைமிக்க உடலை உந்தி மேலெடுத்து வைத்தாள். “இச்சிறுகூடத்திற்குள் வருக, அன்னையே! இது எளியவர் இல்லமாயினும் பேரரசர் பலமுறை வந்த பெருமை கொண்டது” என்றான் யுயுத்ஸு. காந்தாரி உரக்க நகைத்து “நுண்ணிய சொற்கள். இவன் விதுரரைப் போலவே இருக்கிறான், இல்லையாடி?” என்றாள்.

அசலை “ஆம், விதுரரின் மறுவடிவம் என்றே இவரை இங்குள்ள சூதர்கள் கூறுகிறார்கள்” என்றாள்.

யுயுத்ஸு புதிய மான்தோல் விரிக்கப்பட்ட மஞ்சத்தை நோக்கி காந்தாரியை கைபிடித்து கொண்டுசென்று அமரவைத்தான். அவள் அதில் அமர்ந்து மூச்சுவிட்டு இளைப்பாறி இரு கைகளையும் பரப்பிக்கொண்டாள். அவள் அருகே சிறுமஞ்சத்தில் அசலை அமர்ந்தாள். “நான் அன்னையை அழைத்து வருகிறேன்” என்று யுயுத்ஸு உள்ளே சென்றான். காந்தாரி “இங்கு வருவது என் உள்ளத்திற்கு இடர் அளிப்பதாக இருக்குமென்று எண்ணி இத்தனை காலம் தவிர்த்தேன். தேர் கிளம்பிய பின்னரே உணர்ந்தேன், மெல்ல மெல்ல நான் விடுபட்டுக்கொண்டிருப்பதை. இவ்வறைக்குள் வந்து இப்படி அமர்ந்திருக்கையில் முற்றிலும் விடுதலை கொண்டவளாக உணர்கிறேன். நான் முன்பு இங்கு வந்திருக்க வேண்டும். இறுகிச் சுழற்றிய இச்சுருள் வில்லை உள்ளத்தில் கொண்டபடி இத்தனை காலம் வாழ்ந்திருக்கலாகாது” என்றாள்.

அசலை “தங்கள் உள்ளத்தில் எஞ்சியிருந்த ஒரே வஞ்சம் இதுதான். இப்போது முற்றிலும் எழுந்துவிட்டீர்கள், அன்னையே” என்றாள். “மெய்தான். இது ஏன் என்று எனக்குத் தெரியவில்லை” என்றாள். “மிக எளிது. தாங்கள் கேட்க மறந்த பேரரசரின் உள்ளத்தின் இசையை கேட்பவர் வைசியகுலத்து அன்னை” என்றாள். “ஆம்” என்றாள் காந்தாரி. “அவ்விசையை ஒருமுறைதான் நான் கேட்டேன். அதன்பொருட்டு என் விழிகளையே அளித்தேன். ஆனால் அந்த இசை என்னிடம் இருந்து மறைந்துவிட்டது. இப்போது எண்ணுகையில் உணர்கிறேன், என் மைந்தரை கருவுற்றபோதே இசையை இழந்தேன். அவர் தன்னுள்ளத்திலிருக்கும் அவ்வடுவின்

ஆயிரம் வடிவங்களைத்தான் எமக்களித்தார். தன் இசையை இவளுக்கு அளித்தார். எம் வயிற்றில் துரியோதனனும் கௌரவத் தம்பியரும் பிறந்தனர். இவள் வயிற்றில் பேரரசரின் அறத்தின் வடிவாக இவன் பிறந்திருக்கிறான்" என்றாள். "எவருக்கு எதையளிப்பது என்பது அவர் கையிலா உள்ளது? அவரை மீட்டுபவை தெய்வங்களல்லவா?" என்றாள் அசலை.

யுயுத்ஸு அறைக்கதவைத் திறந்து உள்ளேவந்து தலைவணங்கி "அன்னையே, என் அன்னை வருகிறார்" என்றான். பிரகதியின் சேடியர் இருவர் மங்கலத்தாலங்களுடன் உள்ளே வந்தனர். முதல் சேடி பேரரசியின் காலடியில் பழங்கள், மலர்கள், பொன், நீர், விளக்கு கொண்ட ஐம்மங்கலத் தாலத்தை வைத்தாள். இரண்டாவது சேடி குங்குமம், சந்தனம், அகில் என நறுமணங்கள் கொண்ட தாலத்தை வைத்தாள். இருவரும் "பேரரசியின் வருகை அனைத்து மங்கலங்களையும் இக்குடியில் நிரப்பட்டும்" என்று சொல்லி விலக பிரகதி கைகூப்பியபடி தளர்ந்த காலடிகளுடன் வந்து "தாள் வணங்குகிறேன், பேரரசி. இத்தருணத்திற்காக இத்தனை ஆண்டுகள் விழிநீருடன் இங்கு காத்திருந்தேன்" என்று சொல்லி முழந்தாளிட்டு தலை நிலம்வைத்து காந்தாரியை வணங்கினாள்.

காந்தாரி தன் வலக்கையை நீட்டி "அருகே வருக!" என்றாள். பிரகதி அசலையை சிறிய திடுக்கிடலுடன் பார்த்தபின் தயங்கினாள். அத்தயக்கம் அவள் உடலில் நின்று ததும்பியது. அருகே செல்லும்படி அசலை கைகாட்ட பிரகதி உடலை மெல்ல அசைத்து காந்தாரியின் அருகே சென்றாள். காந்தாரியின் கை அவள் காதுகளை தொட்டது. எழுந்து அவள் தலையைத் தொட்டு வகிட்டை வருடி கழுத்திலிறங்கியது.

அவளைச் சுற்றி இழுத்து தன் தோளுடன் அணைத்துக்கொண்டு “இத்தனை நாள் நான் இங்கு வந்ததில்லை. உன் மைந்தன் பிறந்த அன்றே வந்திருக்கவேண்டும். என் உளத்தில் அமர்ந்த எளிய பெண் அதை ஏற்கவில்லை. இன்று அதைக் கடந்து வந்திருக்கிறேன், இவளால்” என்று அசலையை கைகாட்டினாள்.

பிரகதி கண்ணீர் பெருகி கன்னத்தில் வழிய தலைகுனிந்து அமர்ந்திருந்தாள். காந்தாரி “என் இளையவள்களில் ஒருத்தியாக இரு. என்னை மூத்தவளே என்று மட்டும் அழை” என்றாள். பிரகதியிடமிருந்து மெல்லிய விசும்பல் ஓசை மட்டுமே எழுந்தது. “அவருக்கு அணுக்கமாக இருந்திருக்கிறாய். நாங்கள் பதின்மரும் அறிய முடியாத இசை மிகுந்த ஆழமொன்றை நீ அறிந்திருக்கிறாய். எங்கள் பொருட்டு பெரும்பணியொன்றை இயற்றியவள் என்றே உன்னை எண்ணுகிறேன். எங்களுக்கு அவர் அளித்த அரசும் பட்டமும் குடிநடுவே இடமும் உனக்களிக்கப்படவில்லை. அதற்கு நிகராக என்றேனும் உன் மைந்தன் முடிசூடி அமர்வான். அவரிடம் ஒருநாள் சொல்வேன்” என்றாள்.

“மைந்தனுக்கோ எனக்கோ அரசுபட்டம் எதையும் நான் விரும்பியதில்லை, பேரரசி. மெய்யாகவே யாழுடன் அவர் முன் அமர்கையில் தவத்தோர் அடையும் வாழ்வுப் பொருள் ஒன்றையே ஈட்டியிருக்கிறேன் என உணர்கிறேன்” என்றாள் பிரகதி. “ஆம், அது நீ கொண்ட நற்பேறு. நாங்கள் அறிந்த இருண்ட திருதராஷ்டிரரை நீ உணர்ந்ததுகூட இல்லை. ஆகவே நீ இந்நல்மைந்தனை பெற்றாய். இரு வகையிலும் அருளப்பட்டவள் நீ” என்ற காந்தாரி கைநீட்டி யுயுத்ஸுவை அருகழைத்தாள். யுயுத்ஸு கண்களில் நீருடன் கைகூப்பி நின்றிருந்தான். அவள் கை அவனை அழைத்து அசைய அவன்

அருகணைந்து முழந்தாளிட்டு அவள் பீடத்தின் அருகே அமர்ந்தான். காந்தாரியின் பெரிய வெண்ணிறக் கை அவன் தலைமேல் அமைந்தது. குழலை வருடி பின்கழுத்தில் சரிந்து தோளைப்பற்றி அவனை தன்னுடன் இழுத்துக்கொண்டாள்.

“எத்தனை சிறிய உடல். மெலிந்த தோள்கள். திருதராஷ்டிரரின் உடலிலிருந்து இப்படி ஒரு மைந்தன் எழமுடிகிறதென்றால் இப்படி ஒருவன் அவருக்குள் வாழ்ந்திருக்கிறான் என்றே பொருள். நன்று” என்றாள். பின்னர் நகைத்து “எங்கோ அவர் நாணி உள்கரந்த ஒரு மைந்தனாக இவன் இருந்திருப்பான். ஏனெனில் தன்னுள் உறையும் நல்லியல்பையே மானுடர் பெரிதும் நாணுகிறார்கள். இனிதை இயற்றுகையில் மக்கள் முகம்சிவந்து கூச்சம்கொள்வதை கண்டிருக்கிறேன்” என்றாள். பிரகதி புன்னகைக்க அவளிடம் “உன் மைந்தன் இயல்பாகவே கூச்சமும் ஒழுக்கமும் கொண்டவனாக இருப்பான் என்று எண்ணுகின்றேன்” என்றாள்.

பிரகதி கண்களைத் துடைத்து “ஆம், கூச்சம் நிறைந்தவன். அவையிலெழுந்து சொல்லெடுக்கத் தயங்குபவன். அரிதாகவே என்னிடமும் பேசுபவன்” என்றாள். “இவன் குரல் தாழ்ந்திருக்கிறது. தாழ்ந்த குரல்கொண்ட மைந்தன் ஒருவன் எனக்கிருக்கிறான் என்பதை எண்ணுகையில் என்னை அறியாமலேயே புன்னகை எழுகிறது” என்றாள் காந்தாரி. மீண்டும் யுயுத்ஸுவின் தலையில் கைவைத்து “நீணாள் வாழ்க! நிறை வாழ்வு அடைக!” என்றாள். “இதற்கப்பால் இப்புவியிலிருந்து நானோ என் மைந்தனோ எண்ணுவதற்கும் ஈட்டுவதற்கும் ஏதுமில்லை, அரசி” என்று பிரகதி சொன்னாள்.

பிரகதியும் உடல்தளர்ந்திருந்தாள். முகத்தில் முதுமை கவிந்திருந்தது. ஆனால் பிறிதொன்று இருந்தது அவளிடம்.

அது என்ன என்று அசலையின் உள்ளம் துழாவியது. அவள் விழிகள். அவை காதல்கொண்ட கன்னியருக்குரியவை. அத்தனை காலம் அவ்விழிகளை தக்கவைத்துக்கொள்ள முடிகிறது. அதிலிருந்து ஆடவர் தப்பவே இயலாது. “நான் வந்தது இவள் என்னை ஆற்றுப்படுத்தியதனால்தான்” என்று காந்தாரி அசலையை சுட்டிக்காட்டி சொன்னாள். “நீ அறிவாய், அவை நடுவே பாஞ்சாலத்து அரசி சிறுமைசெய்யப்பட்ட பின் திருதராஷ்டிரரிடமோ தார்த்தராஷ்டிரர்களிடமோ நான் எவ்வுறவும் வைத்துக்கொள்ளவில்லை. முற்றிலும் தவிர்த்து என் தனிஉலகில் வாழ்ந்தேன். அவர் தன்னை விலக்கி பிற உலகிலிருக்கிறார். அங்கு அவருடன் சொல்லாடும் நிலையில் இருக்கும் பெண் நீ மட்டுமே.”

பிரகதி தலையசைத்தாள். “இன்று நான் அவருடன் சென்று பேசமுடியாது. அச்சொற்களை அவர் பெற்றுக்கொள்வாரா என்றும் தெரியவில்லை. நீ அவரிடம் சொல். என்ன சொல்லவேண்டுமென்பதை இவள் சொல்வாள். இப்போர் தவிர்க்கப்படவேண்டும். என் மைந்தர்கள் காக்கப்படவேண்டும். அதற்கு அவர் இன்று செய்வதொன்று உண்டு. அரசர் என்றும் குடிமூத்தார் என்றும் அவர் கொண்டுள்ள அனைத்து அடையாளங்களையும் முற்றுதிர்த்து வெறும் மானுடராகவும் எளிய தந்தையாகவும் சென்று பாண்டவர் முன் நிற்கவேண்டும். அவர்கள் அவர் ஆணையை மீற மாட்டார்கள். பாண்டவர்களும் வெறும் மைந்தர்களாக நின்றிருந்தாலொழிய இப்போர் இனி தவிர்க்கப்படமுடியாது. அவ்வாணையை அவர் பிறப்பிக்க வேண்டும்” என்றாள்.

பிரகதி “தங்கள் சொல்லெதுவும் எனக்கு ஆணையே. என் இறுதி உயிராலும் அதை இயற்றுவேன், பேரரசி” என்றாள். “உன்

நாவில் இன்னும் மூத்தவளே எனும் சொல் எழவில்லை” என்றாள் காந்தாரி. இருமுறை உதடுகளை நாவால் நனைத்து மூச்சைத் திரட்டி “ஆம், மூத்தவளே” என்றாள் பிரகதி. காந்தாரி “நன்று! மைந்தர் வாழ்க!” என்றாள். பிரகதி “ஆம், அவர்கள் வாழ்வார்கள். ஆயிரம் பல்லாயிரம் பிழைகளை அவர்கள் இயற்றலாம். ஆனால் பெருந்தந்தைக்கும் பேரன்னைக்கும் பிறந்தவர்கள் என்ற பெற்றியை அவர்கள் ஒருபோதும் இழக்கமாட்டார்கள்” என்றாள்.

அசலை பிரகதியுடன் நடந்தபோது முதல்முறையாக அனைத்தும் முடிந்துவிட்டதென்றும், இனி ஏதும் செய்யவேண்டியதில்லை என்றும் ஆழ்ந்த எண்ணத்தை அடைந்தாள். பிரகதி அவளை தன்னுடன் வரவேண்டுமென்று அழைத்தபோது காந்தாரி “அவள் எதற்கு?” என்றாள். “இல்லை மூத்தவளே, அவர் இப்போது சஞ்சயன் இல்லாமல் என்னிடமும் பேசுவதில்லை. நான் இசைப்பதை கேட்பதுமில்லை. ஆகவே தனியாகச் செல்வதில் பொருளில்லை” என்றாள். பின்னர் “இது அரசச்சொல்லாடல். எனக்கு பழக்கமில்லாதது. அரசி உடனிருக்கட்டும்” என்றாள். காந்தாரி “நன்று” என்றாள்.

அன்று காலை அசலை பிரகதியின் இல்லத்திற்கே சென்றாள். பிரகதி அன்று தாழம்பூ சூடிக்கொண்டிருந்தாள். “தாழம்பூவா? அதை தலையில் சூடுவார்களா என்ன?” என்றாள். “காந்தாரத்தில் எவரும் மலர்சூடுவதே இல்லை” என்று அவள் விழிகளை பார்க்காமல் பிரகதி சொன்னாள். “தாழம்பூவைச் சூடுபவர்கள் வங்கத்தினர் மட்டுமே” என்றாள் அசலை. “ஆம்” என்றாள் பிரகதி. வங்கத்தில் எவர்?” என்ற அசலை புன்னகைத்து “அந்த

ஆழம்வரை நம்மால் செல்லவே முடிவதில்லை” என்றாள். பிரகதி புன்னகைத்தாள்.

புஷ்பகோஷ்டத்தின் முன்னால் யுயுத்ஸு நின்றிருந்தான். “பேரரசர் சூதாடிக்கொண்டிருக்கிறார்” என அருகே வந்து தாழ்ந்த குரலில் சொன்னான். “எவருடன்?” என்றாள் அசலை. “தன்னுடனேயேதான். எதிரில் இருப்பவன் சஞ்சயன். ஆனால் அவன் ஆடுவதில்லை. காய்களின் இருப்பை சொல்லிக்கொண்டிருப்பது மட்டுமே அவன் பணி.” அசலை “மொழியில் காய்கள் எப்படி உருக்கொள்ளும் எப்படி வளருமென்று எண்ணிக்கொள்கிறேன்” என்றாள். யுயுத்ஸு “அன்னை சந்திக்க வருகிறார் என்று அவரிடம் சொன்னேன். அச்சொற்களை செவிகொண்டதாகவே காட்டிக்கொள்ளவில்லை” என்றான்.

இசைக்கூடத்தின் வாயிலில் இருந்த பேருருவம்கொண்ட காவலன் ஒருகணம் அவளை திடுக்கிடச் செய்தான். துரியோதனனும் பீமனும்கூட அவன் முன் சிற்றுருவினர் என்று தோன்றியது. அவன் முகத்தை முன்னரே பார்த்திருக்கும் உணர்வை அசலை அடைந்தாள். அவள் மணமாகி பேரரசரிடம் வாழ்த்து பெறுவதற்காக வந்ததற்குப் பின் அதற்குள் நுழைந்ததே இல்லை. அவள் தன் நினைவுகளை துழாவினாள். பேரரசர் பங்குகொள்ளும் விழவுகளிலும் அவைநிகழ்வுகளிலும் அவன் உடன்வந்ததில்லை. வேறெங்காவது அவனை கண்டிருந்தால் அது நினைவிலிருந்து மறைந்திருக்காது. அவனைப் பார்த்த எவரும் மறக்க முடியாது.

காவலன் வணங்கி அவர்களின் வரவை அறிவிக்க உள்ளே சென்றான். அவள் விழிகளை உணர்ந்த யுயுத்ஸு “இங்கு முன்பிருந்த விப்ரரின் மைந்தன்” என்றான். “அவருக்கு முதிய

அகவையில் ஓர் அடுமனை பணிப்பெண்ணில் பிறந்தவன். அவர் இறக்கும்வரை இப்படி ஒரு தொடர்பிருந்தது எவருக்கும் தெரியாது. அவர் இறந்த பின்னர் அவள் விப்ரர் அவளுக்கு முன்பு அளித்திருந்த ஓர் ஓலையுடன் அரசரிடம் வந்தாள். அரசர் அம்மைந்தனை தன் பொறுப்பில் ஏற்றுக்கொண்டார். அவன் விரும்பியபடி இங்கே தனிக்காவலனாகவும் நிறுத்தினார். அவருடன் தனியறைகளில் மட்டும் இருக்கும் அகத்துணைவன்."

"மிக இளையவன்" என்றாள் அசலை. "ஆம், அவருக்கிணையான பெருமல்லன். அவரை தாங்கிச்செல்லவும் அமர்த்தவும் என்னாலோ சஞ்சயனாலோ இயலாது. சஞ்சயன் அவர் விழிகள், இவன் அவர் கால்கள்" என்றான் யுயுத்ஸு. "இவன் பெயர் சங்குலன். இவன் தந்தை விப்ரர் பேரரசரின் இளமைக்கால மற்போர்தோழர், அறிந்திருப்பீர்கள்." பிரகதி "மைந்தர் இருக்கும் வரை மானுடர் மடிவதேயில்லை என்பார்கள்" என்றாள். சங்குலன் வந்து தலைவணங்கி "அவை நுழைய ஒப்புதல்" என்றான். அவர்கள் உள்ளே நுழைந்தனர். அந்தக் கூடத்திலிருந்த முற்றமைதி அங்கிருப்பது கனவிலோ என எண்ணச் செய்தது. தரையில் மென்மணலென கால்புதையும் மரவுரி மெத்தை. சுவர்களிலும் மெத்தைப்பரப்பு. ஓசையின்றி நடப்பது கனவிலன்றி வேறெங்கும் இயல்வதேயல்ல என்று அசலை எண்ணிக்கொண்டாள்.

உள்ளே அகன்ற பெரிய பீடத்தில் கால்களைப் பரப்பி நீட்டி இடக்கையில் தலையைத் தாங்கி திருதராஷ்டிரர் அமர்ந்திருந்தார். அவர் முன் விரிக்கப்பட்டிருந்த நாற்களத்தில் காய்கள் காத்திருந்தன. எதிரே சஞ்சயன் கைகளை மார்பில் கட்டியபடி குனிந்து அமர்ந்து அவர் கைகள் சென்று தொடும்

காய்களை சொல்லிக்கொண்டிருந்தான். அவர் கை நிலையழிந்த பாம்புபோல ஒவ்வொரு காயாக தொட்டு சுற்றிவந்த பின் நிலைத்தது. “பிரகதியா?” என்றார். “உடன் யார்?” பிரகதி “தங்கள் மருகி, அசலை” என்றாள். “இளையவனின் துணைவி. நன்று” என்றபின் அவர் கைகளை மார்பில் கட்டி நிமிர்ந்தமர்ந்து “ஏதேனும் சொல்லவேண்டியிருந்தால் சொல்லிவிட்டு அகல்க!” என்றார்.

அசலை அருகே சென்று அவர் காலடிகளைத் தொட்டு வணங்க அவர் சொல்லின்றி அவள் தலையைத் தொட்டு வாழ்த்தினார். அசலை “அன்னையுடன் நானும் தங்களை பார்க்கலாமென்று வந்தேன்” என்றாள். “பார்வைக்குரிய பொருள்தான்” என்றார் திருதராஷ்டிரர். “பெருந்தோளன், ஆனால் ஒளியற்றவன். ஆகவே முற்றிலும் பயனற்றவன்.” இகழ்ச்சியுடன் உதடுகள் வளைய “முன்பொருமுறை ஒரு கானகப் பயணி கரும்பாறையை விளக்குகள் அணைந்த மூடிய இல்லமென்று எண்ணினான் என்று ஒரு கதை உண்டு. விளக்குகள் இல்லாத வீட்டுக்கும் கரும்பாறைக்கும் என்ன வேறுபாடு? நன்று, என்ன சொல்ல வந்தாய்?” என்றார். அசலை பிரகதியை நோக்க அவள் கைகளைக் கூப்பியபடி அப்பால் அமர்ந்திருந்தாள்.

அசலை “நான்...” என தயங்கினாள். “நீ வந்ததை சொல்லிவிட்டுச் செல். வெறுமனே நீ வரமாட்டாய். நீ எவரென நான் அறிவேன்...” என்று திருதராஷ்டிரர் சொன்னார். “நான் தங்களிடம் ஒரு மன்றாட்டை முன்வைத்துச் செல்லலாம் என்றே வந்தேன்” என்றாள் அசலை. “அரசுசூழ்தல் சார்ந்தது என்றால் என்னிடம் சொல்லவேண்டியதில்லை” என்று திருதராஷ்டிரர் சொன்னார். “நான் விலகிவிட்டேன். இந்தச் சிற்றறையில் என் சூதுக்காய்களுடன் ஒதுங்கிவிட்டேன்.

என்னை துன்புறுத்த வேண்டியதில்லை. இது என் ஆணை அல்ல, மன்றாட்டு.”

அசலை “அரசுசூழ்தல் அல்ல” என்றாள். “நான் என் மைந்தரின்பொருட்டு பேசவே வந்தேன். என் மைந்தர்கள் செய்த பிழை என்ன? அவர்கள் ஏன் களப்பலியாக வேண்டும்?” திருதராஷ்டிரர் “இதையெல்லாம் நான் எண்ணப்போவதில்லை... விலகு” என்றார். “என்னால் எண்ணாமலிருக்க முடியாது. அவர்கள் ஏன் மடியவேண்டும்?” என்றாள் அசலை. “பிழையும் பழியும் தனிமனிதர்களால் இயற்றப்படுவதில்லை. தனிமனிதர்களுடன் முடிவதுமில்லை. மனிதர்களை தெய்வங்கள் காலத்தில் ஓடும் பெருக்கென்றே நோக்குகின்றன, துளிகளாக அல்ல.” அசலை “எதன்பொருட்டென்றாலும் அவர்கள் மடிவதை நான் ஒப்ப முடியாது. அவர்களைக் காக்க என்னால் இயல்வதை நான் செய்தாகவேண்டும்” என்றாள்.

“அவரவருக்கு இயன்றதைச் செய்யவேண்டியதுதான்... செய்க!” என்று திருதராஷ்டிரர் காய் ஒன்றை கையில் எடுத்தார். “எட்டாம் குதிரை” என்றான் சஞ்சயன். அசலை “அதை நீங்கள் செய்யவில்லை... நீங்கள் செய்யவேண்டிய ஒன்று எஞ்சியிருக்கிறது, அதை கோரும்பொருட்டே வந்தேன்” என்றாள். “நான் எவர் சொல்லையும் கேட்கவேண்டியதில்லை...” என்றார் திருதராஷ்டிரர். “சங்குலா மூடா, அங்கே என்ன செய்கிறாய்? இவர்களை வெளியே அனுப்பு.” சங்குலன் வாயிலருகே கைகளை மார்பில் கட்டியபடி தலைகுனிந்து நின்றிருந்தான். “சங்குலா, அறிவிலி... உன் காதென்ன பழுதா? இவர்களை வெளியே அனுப்பு.” அவன் உடலில் அசைவே எழவில்லை என்பதை அசலை கண்டாள்.

“அவன் வரமாட்டான். ஏனென்றால் இச்சொற்களை நீங்கள் கேட்கவேண்டுமென அவன் எண்ணுகிறான்” என்றாள் அசலை. “தந்தையே, நீங்கள் உங்கள் குருதிமைந்தருக்கு ஆணையிட்டீர்கள். குலமைந்தருக்கு ஆணையிட்டீர்களா? இப்போரை நிறுத்தும்படி அவர்களிடம் சொன்னீர்களா?” ஊன்விழிக்குமிழிகள் அசைய தலையை அரைப்பதுபோலச் சுழற்றியபடி திருதராஷ்டிரர் “சங்குலா… வாடா இங்கே” என்றார். “வாடா இங்கே… மூடா, என் கையில் சிக்கினால் உன் சங்கை முறிப்பேன். வா இங்கே. இவளை வெளியே தூக்கி வீசு… இது என் ஆணை.” அசலை “தந்தையே, உங்கள் சொல்லை இளையோரின் மைந்தர் தட்டமாட்டார்கள். குலத்தலைவரென நின்று அவ்வாணையை நீங்கள் இன்னும் பிறப்பிக்கவில்லை. அவர்கள் போருக்கெழுவார்களென்றால் அது உங்கள் சொல்லை மீறியே நிகழவேண்டும்” என்றாள்.

திருதராஷ்டிரர் காலால் நாற்களப் பலகையை தட்டி வீழ்த்திய பின் கைகளை விரித்து எழுந்து பிளிறலோசை எழுப்பி சுற்றினார். காலில் தட்டிய பெரிய மரப்பீடத்தைத் தூக்கி தரையிலறைந்தார். ஓசையின்மை நிறைந்திருந்த அந்தக் கூடம் பிறிதொன்றென ஆகியது. நெஞ்சில் ஓங்கி அறைந்தபடி “அனைவரையும் கொல்வேன்… யுயுத்ஸு… சங்குலா, யாரங்கே?” என்று கூவினார்.

யுயுத்ஸு அஞ்சி மிக விலகி அறையின் மூலைக்குச் சென்று ஒடுங்கினான். சஞ்சயன் கட்டிய கைகளை பிரிக்காமல் அப்படியே அமர்ந்திருந்தான். அவன் அங்கு நிகழ்ந்த எதையுமே அறியவில்லை எனத் தோன்றியது. திருதராஷ்டிரர் தரையை ஓங்கி மிதித்தார். நெஞ்சில் வெடியோசை எழ அறைந்தார். சிம்மக்குரலெழுப்பியபடி சுழன்றார்.

அசலை அச்சம் கொள்ளவில்லை. தன் உள்ளம் ஏன் அச்சம் கொள்ளவில்லை என எண்ணி அவள் உள்ளத்தின் பிறிதொரு மூலை வியப்பும் கொண்டது. அவர் கைகளுக்குச் சிக்காமல் மெல்ல பின்னடைந்து தூணருகே நின்றாள். தூணருகே நிற்பது மிகச் சிறந்த வழி என உணர்ந்து அது எப்படி தனக்கு அப்போது தோன்றியது என அவ்வுளமூலை மேலும் வியந்தது. விழியின்மையின் நுண்புலனால் பொருட்களின் பிறிதொரு இருப்பை திருதராஷ்டிரர் உணர்வதை அவள் அதற்குள் அறிந்திருந்தாள். பொருளில் எழும் எதிரொலியா, வெம்மையா, அதிர்வா? அவள் சாய்ந்து நின்றிருந்த தூணை திருதராஷ்டிரர் ஓங்கி அறைந்தார். அந்த கூடமே அதிர்வுற்றது. "சங்குலா... டேய்... இவர்களை உடனே வெளியே அனுப்பு... என் ஆணை இது. இங்கு எவரும் நிற்கலாகாது..."

சங்குலன் அருகணைவதை அசலை கண்டாள். அவனுடைய காலடியோசை கேட்டு திருதராஷ்டிரர் அவனை நோக்கி சென்று அவன் முகத்தில் ஓங்கியறைந்தார். அவ்வோசை கூடம் அதிரும்படி ஒலித்தது. சற்று பின்னடைந்த அவன் சிறு உறுமலுடன் முன்னால் பாய்ந்து அவருடைய இரு கைகளையும் பிடித்துச் சுழற்றினான். அவர் முனகியபடி மெல்ல சரிய அவர் தொடையை ஓங்கி மிதித்து அவர் கால்மடிய அமரச்செய்தான். அவர் முதுகெலும்பின் கீழ்ப்பகுதியில் உதைத்து இரு கைகளையும் பற்றி பின்னால் முறுக்கிப் பின்னி அப்படியே அள்ளி தூக்கிக்கொண்டான். அவர் தொண்டை முழை பிதுங்கி அசைய, நரம்புகள் புடைத்து நெளிய விலங்கென குரலெழுப்பி திமிறினார். அவன் அவரைக் கொண்டுவந்து பீடத்தில் போட்டு "அமர்க!" என்றான்.

“கொல்வேன்! விப்ரா, மூடா! உன்னைக் கொல்வேன்” என்றார் திருதராஷ்டிரர். “வாயை அடக்குக! அரசி சொல்வதை செவிகொள்க!” என்றான் சங்குலன். “மூடா, அறிவிலி… உன் சங்கை உடைப்பேன்” என்று திருதராஷ்டிரர் கூவ அவன் ஆழ்ந்த தனிக்குரலில் “நிறுத்துங்கள்… நிறுத்துங்கள் என்றேன்” என்றான்.

அவர் கைகளைப் பற்றியிருந்த அவன் கைகளின் தசைகள் உச்சவிசையில் இறுக அவர் கைகளிலும் கழுத்திலும் தசைகள் இறுகி அதிர்ந்து பின் மெல்ல தளர்ந்தன. “உம்” என்று அவர் சொன்னார். அவன் தன் பிடியை விடுவித்தான். அவர் கைகளை எடுத்துக்கொண்டு “உம்” என்றார். “செவிகொள்க… புரிகிறதா? அமைதியாக அமர்ந்து செவிகொள்க!” என்றான் சங்குலன் தாழ்ந்த உறுமலோசையாக.

திருதராஷ்டிரர் விம்மியபடி “என்னை துன்புறுத்துகிறார்கள்… என்னை வதைக்கிறார்கள்” என்றார். “அவர்களை அகலச் செய்… அவர்களை உடனடியாக விலகச் சொல்!” அவர் கழுத்தில் கைவைத்து தலையைத் தூக்கி செவியில் “செவிகொள்க…” என்றான் சங்குலன். திருதராஷ்டிரர் தலையசைத்தார். “ஓசையின்றி அமர்ந்து செவிகொள்க!” என்று சொன்ன பின் சங்குலன் அசலையிடம் “சொல்க!” என்று கைகாட்டிவிட்டு மீண்டும் சென்று தன் இருக்கையில் அமர்ந்தான்.

திருதராஷ்டிரர் தலைகுனிந்து அமர்ந்திருந்தார். அசலை தன் கைகள் பதறிக்கொண்டிருப்பதை அறிந்து விரல்களைச் சுருட்டி இறுக்கிக்கொண்டாள். மெல்ல மெல்ல குருதி முழுக்க தலையிலிருந்து இறங்கியபோது கால்கள் தளர்ந்து நிற்கமுடியாமலாகியது. மூச்சுக்கு வாய்திறந்து உடலில் வெம்மை குளிர்ந்து வியர்வையாகி வழிய நின்றாள். யுயுத்ஸு

அவளருகே வந்து “சொல்லுங்கள், அரசி” என்று மெல்லிய குரலில் சொன்னான். அவள் உதடுகளில் சொல் எழவில்லை. “சொல்க!” என்றான் யுயுத்ஸு. “என்ன இது? பேரரசரை அவன்…” என்றாள் அசலை. “அவர்களுக்குள் இன்னொருவர் நுழையமுடியாது, அரசி…” என்றான் யுயுத்ஸு. “அது அவர்களின் ஆடல். நீங்கள் எண்ணிவந்ததை சொல்க!”

அசலை சஞ்சயனை பார்த்தாள். அவன் விழுந்துகிடந்த பீடத்தை நிமிர்த்தி வைத்து அதன்மேல் நாற்களத்தை பரப்பிக்கொண்டிருந்தான். அவள் மீண்டும் பெருமூச்சுவிட்டாள். சஞ்சயன் ஒவ்வொரு காயாக எடுத்து பரப்புவதை நோக்கிநின்றாள். அவர் ஆடி நிறுத்திய அதே வடிவில் களம் அமைந்ததும் அவன் கைகளைக் கட்டியபடி பின்னகர்ந்துகொண்டான். பின்னர் நடந்தவை எல்லாம் கனவென்பதுபோல காலம் சென்று அவர் கருக்களிலிருந்து கையெடுத்த கணத்துடன் பொருந்திக்கொண்டது.

# குருதிச்சாரல் - 17

**பகுதி இரண்டு : பெருநோன்பு – 11**

அசலை தணிந்த குரலில் “தந்தையே” என்றாள். அச்சொல் திருதராஷ்டிரரில் மெல்லிய அதிர்வை உருவாக்கியது. “நான் என் சொற்களை சொல்லலாமா?” திருதராஷ்டிரர் “சொல்” என்பதுபோல கையசைத்தார். “தந்தையே, உங்கள் மைந்தர் ஒருவர் மிச்சமின்றி களம்படுவார்கள் என்பதை நீங்கள் அறிவீர்களல்லவா?” என்றாள் அசலை. திருதராஷ்டிரர் உடல் விதிர்த்தது. “அக்காட்சிகளை கனவில் காண்கிறீர்கள் அல்லவா?”

அவர் கழுத்துத் தசைகள் இழுபட்டு அதிர நெஞ்சு மூச்சில் அசைய அமர்ந்திருந்தார். “உங்களால் முடிந்திருந்தும் போரைத் தடுக்கவில்லை என்றால் அவர்களின் குருதி உங்கள் கைகளால் என பொருள்கொள்ளப்படும் அல்லவா?” என்றாள் அசலை.

“ஆம், அவர்கள் அனைவரையும் கொல்பவன் நான். என்மேல் முன்னரே அப்பழி சூழ்ந்துவிட்டது. இனி அதிலிருந்து நான் தப்பமுடியாது” என்றார் திருதராஷ்டிரர். “நான் செய்திருக்கவேண்டியது ஒன்றே. எப்போது என் மைந்தன் சூழ்வோர் சொல்கேட்டு பாண்டவரை வாரணவதத்தில் மாளிகையுடன் எரிக்க முயன்றானோ அன்றே அவனை காட்டுக்கு அனுப்பியிருக்கவேண்டும். மண்ணை யுதிஷ்டிரனுக்கு அளித்திருக்கவேண்டும். அறம்மீறி மண்ணை அடைந்தவன் அம்மண்ணில் எந்த அறத்தையும் பேண முடியாது. அதை அறிந்தும் அவனை நான் பொறுத்துக்கொண்டேன். அவன் மீதான பற்றினால் அனைத்தையும் அறிய மறுத்தேன். அங்கிருந்து தொடங்குகிறது இப்போர்.”

“அது உண்மை” என்றாள் அசலை. “உங்கள் உளமாறும்பொருட்டுகூட நான் அதை மறுக்கப்போவதில்லை. ஆனால் தன்னிரக்கத்தால் ஆவதென்ன? இப்போது ஆற்றவேண்டியதென்ன என்று சூழ்வோம்.” திருதராஷ்டிரர் “ஆற்றக்கூடியது ஒன்றே, பாதி நிலத்தையும் இந்திரப்பிரஸ்தத்தையும் பாண்டவருக்கு அளிக்கும்படி நான் என் மைந்தனுக்கு ஆணையிடவேண்டும். அது வீண்சொல். அவனை கொல்ல ஆணையிடலாம், என்னாலோ இங்குள்ள பிறராலோ அது இயல்வதுமல்ல” என்றார். “தந்தையே, நான்

முன்னர் உங்களிடம் சொன்னேன், நீங்கள் உங்கள் அந்த மைந்தருக்கு ஆணையிட முடியும்.”

“ஆம், யுதிஷ்டிரன் என் மென்சொல்லை தட்டமாட்டான். பீமனிடம் நான் ஆணையிடமுடியும்” என்றார் திருதராஷ்டிரர். “ஆனால் என்ன சொல்வது? நிலத்தை முற்றிலும் கைவிடுக என்றா? மனைவியரையும் மைந்தரையும் தவிர்த்துவிட்டு மீண்டும் கானேகுக என்றா?” அசலை “அதை சொல்லவேண்டியதில்லை. எந்நிலையிலும் போரை அவர்கள் தவிர்க்கவேண்டுமென்று நீங்கள் சொல்லலாம்” என்றாள். திருதராஷ்டிரர் உரக்க “அதன் பொருள் அதுவே, வேறொன்றுமில்லை” என்றார். அசலை “அவ்வாறென்றால் அவ்வாறே… உங்கள் ஆணை அவர்களுக்கு இன்னமும் அளிக்கப்படவில்லை” என்றாள்.

“அதை நான் செய்யப்போவதில்லை. தந்தை எனும் நிலையில் நான் இன்று இல்லை. என் பிழைகளுடனும் பழிகளுடனும் இங்கே இருந்துகொண்டிருக்கிறேன். தனியனாக, தோற்கடிக்கப்பட்டவனாக” என்றார் திருதராஷ்டிரர். “என்னை விட்டுவிடு… இத்தனிமையில் நான் மட்கிச்சாகவேண்டும். இதுவே தெய்வங்கள் எனக்கு அளித்த இறுதி.” அசலை மேலும் அருகில் வந்தாள். “நீங்கள் அஞ்சுவது அறத்தை அல்ல” என்றாள். “கீழிறங்குவதை. எதையும் கொடுக்காமல் எந்த நெறியையும் பேணாமல் மைந்தர் உயிருக்காக மன்றாடும் முதிய தந்தை மட்டுமென அவர்கள் முன் சென்று நின்றிருக்க நாணுகிறீர்கள்.”

“ஆம், அவ்வாறுதான்! ஆம்!” என்று திருதராஷ்டிரர் விழி சரித்து தலைதூக்கி கூவினார். விழிக்குமிழிகள் உருள பெரிய வெண்பற்கள் தெரிய அவர் முகம் சீற்றம்கொண்ட

கானுறைத்தெய்வம் போலிருந்தது. “மெய்தான், நான் நாணுகிறேன். இழிமகனாக அவர்கள் முன் நின்றிருக்க என்னால் இயலாது. நீ சொல்வதுபோல் என்னிடமிருந்து ஒரு சொல் எழுந்தால் என்னை அவர்கள் வெறுப்பார்கள். என் சொல்லுக்கு கட்டுப்பட்டு விலகினால் மேலும் வெறுப்பார்கள். அவர்களின் தலைமுறை நினைவுகள்தோறும் இழிமகனாகவே நின்றிருப்பேன். ஐயமென்ன அதில்?”

“இப்போது நீங்கள் தெரிவுசெய்யவேண்டியது இரண்டில் ஒன்றே” என்றாள் அசலை. “நூறு மைந்தரும் ஆயிரம் பெயர்மைந்தரும் களம்பட்டு மறைய பாழுற்று எஞ்சும் வாழ்க்கையையா? அன்றி, மைந்தருள்ளத்தில் இழிவுசூடி நின்றிருக்கச்செய்யும் அத்தருணத்தையா? பிறிதொரு வழியில்லை. இதில் எதை தெரிவுசெய்யினும் அதன் பொறுப்பை ஏற்றுக்கொள்ளவேண்டும் நீங்கள்.” திருதராஷ்டிரர் “இல்லை, என் குடியே அழிந்தாலும் நான் அவ்விழிவை சூடமாட்டேன். அது என் இளையோன் பாண்டுவின் முன் இழிமகனாக நின்றிருப்பதற்கு நிகர். என் இளையோனை மைந்தனுக்கிணையாகப் பேணியவன் நான். தந்தையெனச் செருக்கி மட்டுமே அவன் முன் நின்றிருக்கிறேன். அவன் முன் சிறுமைகொள்ள என்னால் இயலாது” என்றார்.

அசலை மீண்டும் ஏதோ சொல்ல வாயெடுக்க “இயலாது!” என்று திருதராஷ்டிரர் கைதூக்கி சொன்னார். “போதும், இனி சொல் வேண்டியதில்லை. என்னால் இயலாது.” அசலை “தந்தையே, உங்கள் ஒரு சொல்லில் உள்ளது என் மைந்தனின் வாழ்க்கை. நான் வந்தது அவனுக்காக. அவன் தனியனல்ல, ஆயிரம் உடல்கொண்டவன். என் மைந்தனை காத்தருள்க! தெய்வங்களிடமென உங்களிடம் இறைஞ்சுகிறேன்” என்றாள்.

“இல்லை இல்லை” என்றார் திருதராஷ்டிரர். தாழ்ந்த குரலில் தன்னிடமென அதை சொன்னபடி தலையை அசைத்துக்கொண்டே இருந்தார். “தந்தையே, அளிகூர்க! தங்கள் காலடியில் விழுந்து கேட்கிறேன்” என்றாள் அசலை. அச்சொல்லில் இருந்த தற்சிறுமையால் அவள் உளம் கரைந்தது. விழிநீர் வழிய கைகூப்பினாள். விம்மலோசை எழ அதை அடக்கியபோது பிறிதொரு மூச்சொலி எழுந்தது. அடக்கவியலாதென்று தோன்ற அவள் விசும்பி அழத்தொடங்கினாள்.

“நான் செய்வதற்கொன்றே உள்ளது. இறக்கலாம். விழியிருந்திருந்தால் இறந்திருப்பேன். இப்பாழுயிரை இரும்புடலுக்குள் பொறித்து அனுப்பின தெய்வங்கள். இதை உடைத்து வெளியேறுவதும் எளிதல்ல… அந்த மூடனிடம் ஆயிரம் முறை சொன்னேன், என்னை அழுத்திக் கொன்றுவிடு என்று. அவன் நான் சொல்வதை கேட்பதில்லை. என்னுள் இருந்து ஆணையிடும் தெய்வங்களால் வழிநடத்தப்படுபவன் அவன். கீழ்மகன்… அறிவிலி…” திருதராஷ்டிரர் கண்களிலிருந்து நீர் வழிந்து மார்பில் சொட்ட தலையை உருட்டினார். “இல்லை, என்னால் இயலாது. என்னை வதைப்பதென்றால் இங்கு நில். என்னிடமிருந்து ஒப்புதலை நீ பெறமுடியாது…”

அசலை மேலாடையால் முகத்தைப் பொத்தி அழுத்தித் துடைத்தாள். திரும்புவதற்காக அவள் எண்ணினாலும் உடல் திரும்பவில்லை. ஆனால் அதை திருதராஷ்டிரர் உணர்ந்தார். இரு கைகளையும் விரித்து “இனி என்னிடம் எவருக்கும் சொல்ல எதுவுமில்லை. இதற்கு அப்பால் கீழிறங்க என்னால் இயலாது. செல்க!” என்றார். அத்தருணத்தில் பிரகதியின் கையிலிருந்து யாழ் ஒலிக்கத் தொடங்கியது. அசலை

திடுக்கிட்டு திரும்பி நோக்கினாள். அதுவரை அவள் அங்கிருந்ததையே மறந்துவிட்டிருந்தாள். யாழ்த்தந்திகளின் இசைச்சொட்டுகள் கூரிய வெள்ளி ஊசிகளென அவள்மேல் பாய்ந்தன. அவள் நரம்புகள் கூச பற்கள் கிட்டித்தன.

"என்ன அது? யார்?" என்றார் திருதராஷ்டிரர். மேலும் உரக்க "யார்?" என்றார். "நிறுத்து அதை... அறிவிலி, நிறுத்துக!" என்றார். அந்த இசை அசலை முற்றிலும் அறியாத ஒன்றாக இருந்தது. அனல்பட்ட புழு என யாழ்நரம்புகள் துடித்து எழுப்பும் இசை. மிகப் பிந்தியே அவளால் அந்தப் பண்ணை அடையாளம் காணமுடிந்தது. அது ஒன்றையே சொல்லிக்கொண்டிருந்தது. பசித்து வீறிடும் கைக்குழந்தைபோல. அனைத்துப் புலன்களையும் பதறச் செய்தது.

ஆறு அருவியென்றாவதுபோல அறியாமல் அது நடைமாறியது. இரு கைகளையும் கோத்து நெஞ்சில் வைத்து குனிந்து சென்னிநரம்புகள் அதிர அதை கேட்டுக்கொண்டிருந்த திருதராஷ்டிரர் மெல்ல தளர்ந்தார். அவர் தோள்தசைகள் குழைவதை, முகம் மெல்லுணர்வுகொள்வதை அவள் கண்டாள். மெழுகுச்சிலை வெப்பம் கொள்வதுபோல. பின்னர் அவர் பெருமூச்சுவிட்டார். அவர் கால்கள் நீண்டன. கைகள் தளர்ந்து இரு பக்கங்களிலுமாக சரிந்து விழுந்தன. முகவாய் மார்பில் படிந்தது. மூச்சு சீரடைய அவர் துயில்வதுபோலத் தோன்றியது.

இசையின் நடை மேலும் மேலும் மாறிக்கொண்டே சென்றது. அது அகன்று ஒளிகொண்டு செல்வதறியாது ஒழுகும் பெருநதியென்றாகியது. பிரகதி யாழுடன் இணைந்தவள் போலிருந்தாள். அவள் விரல்களில் மட்டுமே அசைவிருந்தது. சிறுசெங்குருவிகள் என அவை நரம்புகளில் எழுந்து, அமர்ந்து, பறந்து விளையாடின. யாழிசை சுவர்களிலிருந்தும்

கூரையிலிருந்தும் மென்மையாக பொழிந்துகொண்டிருந்தது. அவள் முகத்தில் அமைதி இருந்தது. ஒருபோதும் அப்படி அவளை பார்த்ததில்லை என அசலை எண்ணிக்கொண்டாள். அவளை விழியின்மையால் திருதராஷ்டிரர் அவ்வுருவில்தான் பார்க்கிறார் போலும்.

இசை முடியப்போகிறதென்று அதுவே உணர்த்தியது. அது விரிந்துகொண்டுதான் இருந்தது, ஆனால் நான் நிலைக்கிறேன் என்றும் சொன்னது. விரிந்து சென்று நிலைத்து நிறையும் பிறிதொன்றின் வடிவென்று உள்ளம் அறிந்தமையால் அதை உணர்ந்தது போலும். ஓர் இசைக்குமிழி ஆம் என்றது. பிறிதொன்று ஆம் என பெருமூச்சுவிட்டது. பிறிதொன்று ஆம் என புன்னகைத்தது. ஆம் ஆம் ஆம் என கூவியபடி ஒரு குழந்தை துள்ளி ஓடி மறைந்தது. புல்வெளிமேல் இளவெயில் மட்டும் எஞ்சியிருந்தது.

கால்களில் உடலின் எடையை உணர்ந்து அசலை இடை ஒசிந்தாள். திருதராஷ்டிரரும் பிரகதியும் ஒரே ஊழ்கத்தின் இரு முனைகளில் பிணைக்கப்பட்டிருந்தனர். அவள் திரும்பி நோக்கியபோது அப்பால் சங்குலனும் அதற்குள் இருப்பதை கண்டாள். யுயுத்ஸு அறைக்கு வெளியே சென்றுவிட்டிருந்தான். பிறிதொருவரும் அறைக்குள் இல்லை என்னும் தன்னுணர்வை அடைந்தபோதே சஞ்சயனை உணர்ந்து அகம் திடுக்கிட்டது. திரும்பி அவனை பார்த்தாள். அவன் கைகளைக் கட்டியபடி அசையாமல் அமர்ந்திருந்தான். அவள் அவன் விழிகளை பார்த்தாள். அவன் அங்கு நடந்த எதையுமே அறிந்திருக்கவில்லை என்று தோன்றியது. முற்றிலும் அயலான நோக்கு.

அவள் விழிகளை விலக்கிக்கொண்டாள். விழிமணி விலகுவதே கூட உடலில் ஓர் அசைவென வெளிப்படமுடியுமென்று திருதராஷ்டிரர் விழித்துக்கொண்டபின் உணர்ந்தாள். கைகளைத் தூக்கி வானை நோக்கி ஏதோ சொல்ல விழைபவர்போல சில கணங்கள் இருந்தபின் பெருமூச்சுடன் “நான் ஒப்புகிறேன்... நான் சொல்லவேண்டியதென்ன என்று சொல்லுங்கள்” என்றார். அசலை “சஞ்சயன் செல்லட்டும்” என்றாள். “ஆம், அவன் என் விழியும் நாவும்” என்றார் திருதராஷ்டிரர். “நான் சொல்லவேண்டியதென்ன என்பதையும் அவனிடம் நீயே சொல்க! எதுவானாலும் அவன் சொல்வான்.”

அசலை “அதை நீங்களே சொல்லலாம், அரசே” என்றாள். “இல்லை, என்னிடம் ஒரு சொல்லும் எஞ்சவில்லை” என்றார் திருதராஷ்டிரர். “உங்களுக்குள் இருந்து சொல் எழும். அதை அவர் சென்று சொல்கையிலேயே மெய்யான ஆற்றல் இருக்கும் அதற்கு. அவருடன் தனித்திருங்கள்...” என்றபின் அசலை திருதராஷ்டிரரின் கால்தொட்டு சென்னிவைத்து “வாழ்த்துக, தந்தையே!” என்றாள். “நலம் சூழ்க!” என்றார் திருதராஷ்டிரர். அவள் திரும்பி பிரகதியை நோக்கினாள். அவள் துயில்கொண்ட முகத்துடன் அமர்ந்திருந்தாள். முதல் சுதியின் பெருநரம்பில் விரல் தயங்கித் தயங்கி ஊர்ந்துகொண்டிருந்தது. இன்னுமொரு கூற்று அவளுக்குள் எஞ்சியிருப்பதைப்போல.

அசலை “அன்னையே” என்றாள். திடுக்கிட்டு விழித்து எழுந்துகொண்ட பிரகதி “ஆம்” என்றாள். “செல்வோம்” என்றாள் அசலை. பிரகதி எழுந்து ஆடை சீரமைத்து அவளுடன் நடந்தாள், அக்கணம் வேறெங்கிருந்தோ வந்து சேர்ந்துகொண்டவள்போல. அறைக்கு வெளியே சென்றதும் யுயுத்ஸு வந்து இணைந்துகொண்டான். “அவர்

ஒப்புக்கொண்டார். சஞ்சயனை அனுப்பும்படி சொன்னேன். அவனிடம் சொல்லவேண்டிய சொற்களை அவருள் இருந்து கண்டடையும்படி கோரினேன். அவர்கள் தனிமையிலிருக்கட்டும்” என்றாள் அசலை.

“ஆம், அவர் உடைவதற்கு சற்று பொழுது தேவை” என்றான் யுயுத்ஸு. அசலை “ஆனால் இக்காவலன் அங்கிருப்பது…” என்றாள். “சங்குலன் அவர் தனிமையின் ஒரு பகுதி” என்றான் யுயுத்ஸு. பிரகதியிடம் “வருக, அன்னையே!” என்றான். பிரகதி அவனுடன் நடந்தாள். அசலை அவள் காலடிகளை நோக்கியபடியே நடந்தாள். தன் மாளிகைக்குச் செல்ல விடைபெறும்போது அவள் பிரகதியின் கால்களைத் தொட்டு வணங்கி “விடைகொள்கிறேன், அன்னையே” என்றாள். அவள் தலையைத் தொட்டு “நல்லவை நிறைக!” என்றாள் பிரகதி.

தன் அறை நோக்கிச் செல்கையில் “ஆம், அவர்களுக்குள் சொற்கள் எஞ்சியிருக்கின்றன” என்று அசலை சொல்லிக்கொண்டாள். முழுதொழிவது எளிதா என்ன என்னும் எண்ணத்தை பின்னர் அடைந்தாள்.

பானுமதியின் அறையில் அசலை சொல்லாடிக்கொண்டிருக்கையில் சஞ்சயன் அவர்களை சந்திக்க வருவதாக செய்தி வந்தது. சேடியிடம் “அவரை சோலைமண்டபத்திற்கு வரச்சொல்க!” என்றாள் பானுமதி. சேடி சென்றபின் அசலையிடம் “அவர் சொன்ன தூதுச்செய்தியை நாம் அறியவேண்டுமா என்ன? அது தந்தைக்கும் மைந்தருக்கும் இடையேயான சொல் அல்லவா?” என்றாள். அசலை “நாம் அறியவேண்டாம் என்றால் சஞ்சயன் நம்மிடம் அதை சொல்லப்போவதில்லை” என்றாள்.

ஆடைமாற்றிவிட்டு சோலைக்குச் சென்று கொடிமண்டபத்தில் அமர்வது வரை அவர்கள் அதைப்பற்றி பேசிக்கொள்ளவில்லை. சிறிய சொற்களில் ஆடைகள் குறித்தும் சேடியர்பற்றியும் உரையாடினர். அமர்ந்தபின் அசலை "நாம் இதை பேரரசிக்கு தெரிவிக்க வேண்டியதில்லையா?" என்றாள். "பேரரசிக்கு சொல்வோம். சொல்ல பேரரசர் விழைகிறாரா என்று அறிந்த பின்" என்றாள் பானுமதி. "அதெப்படி பேரரசி அறியாமல்?" என்றாள் அசலை. "சில தருணங்களில் அப்படித்தான்" என்றாள் பானுமதி.

சஞ்சயன் வருவதை சேடி அறிவித்தாள். "அவன் சொலல்வலன். ஆனால் சொல்லெடுக்காமல் அமர்ந்திருக்கவும் கற்றவன். ஏதோ ஓர் உளத்தொடர்பால் இவனை எண்ணுகையிலேயே எனக்கு இளைய யாதவர் நினைவுக்கு வருகிறார்" என்றாள் பானுமதி. "ஆம், எனக்கும் அவ்வுள்ளுணர்வு உண்டு. நான் அதை எண்ணி வியந்ததும் உண்டு" என்றாள் அசலை. இருவரும் அவ்வெண்ணத்தின் விந்தையை உணர்ந்தவர்களாக சொல்லின்றி அமர்ந்திருந்தனர். காற்றில் இறகு என மெல்லிய நடையுடன் சஞ்சயன் அவர்களை நோக்கி வந்தான். அருகணைந்து "அரசியரை வணங்குகிறேன்" என்றான். அவன் முகமனுரைகளையும் முறைச்சொற்களையும் சொல்வதில்லை என்பதை அசலை நினைவுகூர்ந்தாள். சொல்வானென்றால் அது உட்கரந்த இளிவரலுடன்தான். அவர்கள் மறுவாழ்த்து உரைத்து அமரும்படி செய்தனர்.

சஞ்சயன் அவர்கள் பேசுவதற்காகக் காத்து அமர்ந்திருந்தான். மிகச் சில கணங்களிலேயே அங்கே அவன் இல்லையென்றே அவர்கள் உணரும்படி செய்ய அவனால் இயன்றது. அசலை "என்ன சொன்னார் தந்தை?" என்றாள். "அவருடைய

செய்தியுடன் நான் இன்றே கிளம்பவேண்டும் என்றார். நீங்களிருவரும் அதை அறியலாம் என்றும் செல்லும்போது விதுரரிடம் மட்டும் ஆணை பெற்றுக்கொள்ளும்படியும் கூறினார். நீங்கள் கூறியதுபோலவே அவர் தன் குலமைந்தருக்கு எந்நிலையிலும் போரை தவிர்க்கவேண்டுமென்று ஆணையிட்டிருக்கிறார்" என்றான்.

"ஆணையிட்டாரா?" என்றாள் பானுமதி. "ஆம், அதை ஆணை என்று கொள்ளமுடியாது" என்றான் சஞ்சயன். "என்ன நிகழ்ந்தது?" என்றாள் அசலை. "நீங்கள் சென்றபின் எழுந்து தனியறைக்கு சென்றுவிட்டார். அவருடன் அணுக்கனும் சென்றான். அவர் துயின்றபின் அவன் மட்டும் வெளியே வந்தான். என்ன செய்கிறார் என்று கேட்டபோது உடல் பிடித்துவிட்டேன், துயில்கிறார் என்றான். நான் வெளியே காத்திருந்தேன். விழித்துக்கொள்ளும் பொழுதை அணுக்கன் சங்குலன் அறிவான். அவன் உள்ளே சென்று சற்று கழித்து என்னை அழைக்கிறார் என்றான்."

நான் உள்ளே செல்லும்போது அவர் மஞ்சத்தில் அமர்ந்திருந்தார். அருகமர்ந்ததும் என்னை நோக்கி முனகிவிட்டு மீண்டும் சொல்லின்மையிலாழ்ந்தார். நான் அவரையே நோக்கிக்கொண்டிருந்தேன். அவருடைய உணர்வுகளை என்னால் கணிக்க முடியவில்லை. ஒப்புக்கொள்ள இயலாது என்று கூறி எழுந்துசெல்ல ஆணையிட்டிருந்தாலும் வியந்திருக்கமாட்டேன். பின்னர் மெல்லிய குரலில் என்னிடம் "நான் அனுப்பும் செய்தியால் என்ன நிகழும்?" என்றார். "நன்று நிகழலாம்" என்று பொதுவாக சொன்னேன். "எனக்கு இழிவு சூழுமா?" என்றார். "இல்லை, மெய்யான உணர்வுகளை எப்போதுமே மானுடம் மதிக்கிறது" என்றேன்.

முனகிவிட்டு மீண்டும் தலைகுனிந்து அமர்ந்திருந்தார். “நான் கோரவேண்டியதென்ன?” என்றார். “போர் நிகழலாகாதென்று. எந்நிலையிலும் பாண்டவர்கள் படைக்கலம் எடுக்கலாகாது. அனைத்தையும் இழக்க நேரிட்டாலும்கூட” என்றேன். “ஆம், என்ன சொன்னாலும் மெய்யான பொருள் அதுவே” என்றார். “அதை நான் கோரினேன் என்று அவர்களிடம் சொல்” என்றார். “ஆணை” என்றேன். அவர் மேலும் சொல்வார் என அறிந்திருந்தேன். அதற்காக காத்திருந்தேன். அவர் தலைதூக்கி “போர் நிகழுமென்றால் நாம் வெல்வோமா?” என்றார். பிறிதொருவர் அவரில் இருந்து எழுவதை கண்டேன். புல்லிதழும் அசையாமல் புதருக்குள் இருந்து எழும் வேங்கை என.

“மாட்டோம்” என்றேன். “ஆம்” என்ற அவர் “அவன் அங்கிருப்பது வரை எவரும் வெல்லமுடியாது. வேதமுடிவே வெல்லும். ஏனென்றால் அது வேதத்தாலேயே திரட்டி எடுக்கப்பட்டது. வேதம் அதன் முன் வணங்கும், கனல்விழித் தந்தைக்கு கந்தன் மெய்யுரைத்ததுபோல” என்றார். அவர் கைகள் நடுங்கத்தொடங்கின. “எனக்கு அமைதியில்லை. ஒரு கணமும் நிறைநிலை இல்லை” என்றார். “நான் நன்கறிவேன் அவனை. நான் அவனை நேர்நின்று அறியவில்லை. ஏனென்றால் நான் ஆண். அவனை அறிந்த பெண்டிரை கண்டுகொண்டிருக்கிறேன்” என்றார்.

அவர் கைகள் குளிரில் என நடுங்கி அதிர்ந்தன. “அவனை அறியாத பெண் என எவரையும் இன்றுவரை கண்டதில்லை. அத்தனை பெண்டிரும் அவனை அறிகிறார்கள் என்றால் அவனே முழுமுதல் ஆண். பெண்ணென்றாகி அவனை அறிவோர் சிலர் இருக்கலாம். அடியான் என்றாகி அறிவதும்

இயல்வதாகலாம். அஞ்சியும் வியந்தும் என்னைப்போன்றோர் அறிவதற்கு ஓர் எல்லை உண்டு" என்றார். "அவன் அழகன், இன்னகையும் மென்சொல்லும் கொண்டவன். ஆனால் அவன் கையிலமர்ந்த படையாழி கொடிது. அளியற்றது. தொடுவதனைத்தையும் துண்டென்றாக்கி மீளும் ஒளி அது. அது என் குடியை அழிக்கும்" என்றார்.

"அவன் படைக்கலமேந்துவதில்லை என்றான் என இவன் வந்து கொண்டாடினான். மூடன். இங்குள்ள அனைத்தும் அவன் படைக்கலங்களே" என்றார். "என் குடி அழியும். அழிவதாக முடிவெடுத்து நிரைவகுத்து சென்றுகொண்டிருக்கிறார்கள். அவர்களை அவன் இரு பெரும்படைக்கலங்களில் ஒன்று முற்றழிக்கும். குலாந்தகன் என அவன் பிறந்தபோதே நிமித்திகர் சொன்னார்கள்" என்றார். எதிர்பாராத கணத்தில் உடைந்து அழலானார். நெஞ்சிலறைந்தபடி உடல்குலுங்க விலங்கென ஒலியெழ அழுதார்.

நான் அவருடைய அழுகையை வெறுமனே நோக்கியிருந்தேன். அவர் அழுகை எதன்பொருட்டென்றாலும் அது அவர் விழிகொண்டுள்ள இருளின்பொருட்டே என எண்ணச் செய்கின்றது அவர் முகம். "சஞ்சயா பீமனிடம் சொல், என் மைந்தரை கொல்லலாகாதென்று. என் மைந்தர் களம்பட்டுக் கிடப்பதைக் காணும் தீப்பேறை எனக்கு அளிக்கலாகாதென்று" என்றபடி என் கைகளைப் பற்றி உலுக்கினார். அவர் நெஞ்சில் விழிநீர் சொட்டி வழிந்தது. "நான் அவர்களிடம் மன்றாடினேன் என்று சொல். குலமூத்தான் என்றோ பெருந்தந்தை என்றோ அல்ல, எளிய முதியவன் என்று நின்று இரந்தேன் என்று சொல். இப்புவியில் நான் விழைவது என் மைந்தரின் உயிர் மட்டுமே" என்றார்.

“அவர்கள் பலிபீடம் நோக்கி முண்டியடிக்கும் வெள்ளாடுகள். அவர்களை காத்திருக்கிறது பலிகொண்டு ஒளிபெறும் கத்தி. அவர்கள் பேதைகள். பழிசூழ்ந்த வீணர்கள். ஆயினும் என் மைந்தர். அர்ஜுனனிடம் சொல், அவர்களைக் கொன்றால் அவன் காண்டீபம் நாணும் என்று.” மெல்ல அவர் குரலில் வஞ்சம் ஏறியது. “எவராயினும் என் மைந்தரைக் கொன்றவர்களை நான் பொறுத்துக்கொள்ள மாட்டேன். அவர்கள்மேல் என் தீச்சொல் என்றுமிருக்கும். விண்ணிலிருந்து அவர்கள் அளிக்கும் நீர்க்கொடையை மறுப்பேன். இருளுலகில் நான் படும் துயர் அனைத்தும் அவர்களின் கொடிவழிகள்மேல் பெய்ய வைப்பேன்... என் பழி ஒருபோதும் அழியாது. வஞ்சப் பெருந்தெய்வமென அவர்களின் வீட்டுமுற்றங்களில் நின்றிருப்பேன். சென்று சொல் அவர்களிடம்” என்றார்.

பின்னர் அவரே மீண்டும் தணிந்தார். “அங்கே யாதவன் இருந்தால் அவனிடம் கேள், இப்புவிமேல் இதுவரை விழுந்த குருதியும் கண்ணீரும் போதவில்லையா என்று. தெய்வங்களெனில் குருதிபலி கொண்டுதான் விண்ணில் நிறையவேண்டுமா என்று. அவனிடம் சொல், மானுடரை அவர்களின் எளிய விழைவுகளுடனும் கசப்புகளுடனும் வஞ்சங்களுடனும் வாழவிடுக என்று. தெய்வங்கள் இனி இப்புவிக்கு தேவையில்லை. மண்ணிறங்கிய தெய்வங்களின் எடை தாளாமல் வெற்புகள் விரிசலிடுகின்றன. அவனிடம் திரும்பிச்செல்லும்படி சொல். ஆம், அவன் திரும்பிச்சென்றாகவேண்டும். அவன் மானுடரை அள்ளி அளைந்து விளையாடுவதை நிறுத்தியாகவேண்டும்” என்றார்.

சொல்லிச் சொல்லி குரலோங்கினார். “அவன் காலடியில் சிற்றெறும்பு நான். ஆயினும் அவனையும் நான்

தீச்சொல்லிடுவேன். அவனை என்ன, படைத்த பிரம்மனை ஆளும் அரியை, அனைத்துமான அரனை பழிச்சொல்லிட்டு கருகச் செய்வேன். அவன் என் கண்ணீரிலிருந்து தப்பமுடியாது. சொல் அவனிடம், என் மைந்தரை விட்டுவிடும்படி. இப்போரிலிருந்து ஒழியும்படி சொல். இப்போரை அவன் எண்ணினால் தவிர்க்க முடியும். எளியோர்மேல் அளிகொள்கையிலேயே தெய்வம் பொருள்கொள்கிறது என்று அப்பழிகாரனிடம் சொல்" என்றார்.

"மேலும் சொல்லப்போகிறார் என எண்ணியிருக்கையில் அவர் என்னிடம் செல்லும்படி கையசைத்தார். அதுவரை அறையில் அப்பால் நின்றிருந்த சங்குலன் வந்து அவரை தூக்கி எழுப்பினான். "பேரரசர் நீராட்டறைக்குச் செல்கிறார்" என்றபின் அவரை கொண்டுசென்றான். நான் அங்கேயே சில கணங்கள் நின்றிருந்தேன். பின்னர் திரும்பி நடந்தேன்" என்றான் சஞ்சயன். "விதுரரிடம் பயணத்திட்டத்தை சொல்லிவிட்டு உங்களிடம் வந்தேன். இப்போதே கிளம்பவிருக்கிறேன்."

"அவர் சொன்னதை அவையில் சொல்க! அவர் சொன்ன உணர்வுகளை யுதிஷ்டிரரிடம் தனியறையில் கூறுக!" என்றாள் பானுமதி. "ஆணை" என்றான் சஞ்சயன். அசலை "சஞ்சயரே, பேரரசர் இச்செய்தியை பேரரசியிடம் சொல்லலாகாதென்று சொன்னாரா?" என்றாள். "ஆம் அரசி, அவ்வாறு கூறினார்." அசலை அவன் விழிகளை நோக்கி "பிரகதியன்னையை அவரிடம் அனுப்பியதே பேரரசிதான், அதை அவர் அறிவாரா?" என்றாள். "ஆம், அறிவார். மஞ்சத்தறைக்குச் சென்றதுமே அவரிடம் அனைத்தையும் சங்குலன் கூறியிருப்பான். அவருடைய தனியொற்றர்கள் அவனிடம் அனைத்தையும் சொல்வார்கள்" என்றான் சஞ்சயன்.

சில கணங்கள் அமைதி நிலவியது. சஞ்சயன் வணங்கி எழுந்தான். “சஞ்சயரே, பேரரசியிடம் சொல்லவேண்டியதில்லை என ஏன் சொன்னார் பேரரசர்?” என்றாள். “அதை நாம் எவ்வாறு சொல்லமுடியும்? கணவன் அறிந்த மனைவியை பிறர் அறிவதில்லை” என்றபின் புன்னகைத்த சஞ்சயன் “விடைகொள்கிறேன், அரசியரே” என்றான்.

# குருதிச்சாரல் - 18

**பகுதி மூன்று : மலைச்சுனையின் ஓசை – 1**

விஜயை தேரின் முகப்புச்சாளரத்தின் சிறு திரையை மெல்ல விலக்கி அப்பால் ஏவுபீடத்தில் அமர்ந்திருந்த தேரோட்டியிடம் “அணுகிவிட்டோமா?” என்றாள். அவன் “முதல் காவல்நிலை தெரிகிறது, அரசி” என்றான். “நன்று” என்றபின் அவள் திரையை மூடிவிட்டு இருக்கையில் சாய்ந்தாள். அவளருகே தாழ்ந்த பீடத்தில் அமர்ந்திருந்த முதிய சேடியான அபயை “பெருஞ்சாலை வந்துவிட்டதே காட்டுகிறது, நகர் நெருங்கிக்கொண்டிருக்கிறது” என்றாள். வெறுமனே அவளை நோக்கிவிட்டு விஜயை விழிதிருப்பிக்கொண்டாள்.

அவள் பேச விரும்புகிறாளா இல்லையா என்பதை கணிப்பதற்காக அபயை அவள் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தாள். பின்னர் அவளே புரிந்துகொண்டு “சிபிநாட்டு அரசி இப்போது அங்குதான் இருக்கிறார்கள் என்று அறிந்தேன்” என்றாள். “ஆம்” என்று விஜயை தலையசைத்தாள். “போர் குவியம் கொண்டிருக்கிறது. சிம்மக்குரல் கேட்ட மான்கூட்டமென ஒவ்வொருவரும் ஒவ்வொரு திசைக்கு

சிதறிச் சுழல்கிறார்கள்” என்று சேடி சொன்னாள். “சிம்மத்தை நோக்கியே ஓடுபவர்களும் உண்டு” என்று மேலும் அழுத்தினாள்.

விஜயை திரும்பி அவள் விழிகளை பார்த்தாள். இருமுறை சொல்லுக்கு ஆயம்கூட்டி அதைத் தவிர்த்து பின் எடுத்த சொல்லை தவிர்க்கமுடியாமல் “போரைத் தவிர்ப்பதற்கு ஒவ்வொருவரும் தங்கள் இயல்பில் முயல்கிறார்கள். ஏதேனும் ஒரு குரலுக்கு தெய்வங்கள் உளம் அளித்தால்கூட நன்றுதானே?” என்றாள். அபயை நகைத்து “தெய்வங்களிடம் உள்ள தீய வழக்கம் என்னவென்றால் அவை மனிதரின் சொற்களையோ எண்ணங்களையோ நம்புவதில்லை, ஆழங்களை மட்டுமே கருத்தில் கொள்கின்றன” என்றாள்.

விஜயை அவளை கூர்ந்து நோக்கிக்கொண்டிருந்தாள். முப்பதாண்டுகளுக்கும் மேலாக அவளுடன் இருந்துகொண்டிருக்கும் சேடி அவள். அவள் சிறுமியாக இருக்கையில் எப்போதும் அபயையுடன் இருக்கவே விரும்பினாள். அரண்மனைச்சேடியரின் சிரிப்பும் பேச்சும் உடலசைவுகளும்கூட ஒன்றுபோலவே இருக்கையில் அவள் மட்டும் எங்கும் எப்போதும் தனித்து தெரிந்தாள். இளமையில் அவள் விழிகளில் நஞ்சு கலந்த நகைப்பு எப்போதும் இருந்தது. அன்று அது ஒவ்வொரு கணத்தையும் பொருள்கொள்ளச் செய்வதாக, வெடித்து நகைக்கச் செய்வதாக இருந்தமையால் அவள் தனக்கு அணுக்கமாக ஆனாள்.

அகவை நீளும்தோறும் அபயையில் இருந்த பிற கூறுகள் அனைத்தும் மறைந்து அந்த நச்சு நகைப்பே அவளென்றாகி திரண்டது. முகத்தில், விழிகளில், சிரிப்பில் எங்கு அந்நகைப்பிருக்கிறதென்றே தெரியாமல் அதுவே அவள்

உருவென எப்போதும் முன் நின்றது. எப்போது அவளை தன் உள்ளம் விலக்கத் தொடங்கியது என்று விஜயை எண்ணிப் பார்த்தாள். அவைநடுவே திரௌபதி சிறுமை செய்யப்பட்ட அன்று, அச்செய்தியை அவளிடம் சொன்ன அபயை கோணலாக வளைந்த கீழுதடும் விழிகளில் எள்ளலின் ஒளியுமாக “நன்று, இனி பாரதவர்ஷத்தில் பெண்டிர் அனைவரும் எண்ணிக்கொதிக்க பிற உரு ஒன்று கிடைத்தது. தன்னை எண்ணிக்கொதிக்கையில் சார்ந்தோரை வெறுத்தும் தப்பித்துக்கொள்ளலாம்” என்றாள். அக்கணத்தில் தான் விஜயை அவளை முற்றாக வெறுத்தாள். வாளை உருவி அவள் சங்கை அறுத்து பெருகும் குருதியைக் காணவேண்டுமென்று பொங்கி எழுந்த ஆழம் ஒன்றை வென்று அத்தருணத்தை கடந்தாள்.

பிறகு அவள் சொல்லும் அத்தனை சொற்களிலும் அந்த நஞ்சையே உணர்ந்தாள். ஆனால் அவளை தவிர்க்க இயலவில்லை. அவளை ஒழித்து கானாடலுக்கோ ஆலயம் தொழவோ சென்று சில நாட்களை கழித்ததுண்டு. அந்நாட்கள் முற்றிலும் வெறுமைகொண்டு எண்ணுவதற்கும் மகிழ்வதற்கும் ஏதுமின்றி கடந்து சென்றன. அவ்வெறுமை தாளாமல் மீண்டும் அவளிடமே திரும்பி வந்தாள். வெறுப்பையும் கசப்பையும்போல நாட்களை நிறைக்கும் பேருணர்வுகள் பிறிதில்லை என்று உணர்ந்தாள். அவ்விருள் பின்புலத்தில் மின்னுகையிலேயே உவகை பொருள்கொள்கிறது. இனிமைகள் அணுக்கமாகின்றன.

பின்னர் அவளின்றி தானில்லையென்று தெளிந்தாள். அவளை விலக்கும் முயற்சியை கைவிட்டாள். ஒவ்வொரு எண்ணம் தனக்குள் எழுகையிலும் இதை அபயை எப்படி சொல்லென ஆக்குவாள் என்று உள்ளிருந்து ஒரு கணிப்பு ஓடுவதை உணர்ந்தபோது தன் விழைவுகளால் அவளை அத்தனை

ஆண்டுகளில் மெல்ல வளைந்தவள் தானே என்றுணர்ந்தாள். கல்லைச் சூழ்ந்து வேர்பரப்பி கவ்வி கல்லை அசைவிலாது நிறுத்தும் அருகத்து நச்சுமரமென அவள் தன்னை ஆட்கொண்டிருக்கிறாள்.

பெரிய தந்தை சல்யர் இந்திரப்பிரஸ்தத்திற்குத் துணையாக படையுடன் கிளம்பிச்சென்று வழியிலேயே அஸ்தினபுரியுடன் சேர்ந்துகொண்ட செய்தியை அவளிடம் வந்து சொன்ன உளவுச்சேடி காத்யை "அஸ்தினபுரியுடன் படைக்கூட்டு அமைவதற்கு நம் அரசர் கைச்சாத்திட்டிருக்கிறார். நான்கு நாட்களுக்கு முன் அஸ்தினபுரியில் அச்செய்தி அவையறிவிப்பாகவும் பின்னர் நகர்மன்றுகளில் அரசறிவிப்பாகவும் வெளிப்படுத்தப்பட்டுள்ளது, அரசி" என்றாள். "நன்று" என்று சொல்லி அருகே நின்ற அபயையிடம் "உளவுச்சேடிக்கு பரிசில் அளித்து அனுப்புக!" என ஆணையிட்டுவிட்டு கைகளை மார்பில் கட்டியபடி பீடத்தில் உளம் செயலிழந்து அமர்ந்திருந்தாள். பரிசில் பெற்று அவள் செல்வதை வெறித்து நோக்கிக்கொண்டு நெடுநேரம் இருந்தாள்.

"ஒருவழியாக அவர் நிலைகொண்டார்" என்றாள் அபயை. "என்ன?" என்றாள் விஜயை. "எளிய மனிதர்களுக்கு நிலை என்பதே வாழ்வின் பெரிய அறைகூவல். எதிலாவது மீளவியலாதபடி சிக்கிக்கொண்டுதான் அவர்களால் நிலைபேறை அடையமுடியும்." விஜயை "விந்தையான நடத்தை" என்றாள். அபயை "இதை முன்னரே உணர்ந்திருக்காவிடில் நீங்கள் பெரிய தந்தையை அறிந்ததில்லை என்றே பொருள்" என்றாள். "இதை நீ உணர்ந்திருந்தாயா?" என்று விஜயை சீற்றத்துடன் கேட்டாள். "தன் மருகனுக்கெதிராக, மகள்கொடையளித்த அரசுக்கெதிராக

படைகொண்டெழுபவர் தந்தையென்றா இதுநாள்வரை கருதியிருந்தாய்?”

அபயை “இல்லை. ஆனால் அரசியல்களம் மாறிக்கொண்டே இருக்கிறது. இருபதாண்டுகளுக்கு முன்பு மத்ரநாடு பால்ஹிகக் கூட்டமைப்பின் சிறுபகுதியாக நின்றிருந்தபோது இந்திரப்பிரஸ்தத்தின் மணவுறவு அதை மேலெடுத்தது. பாண்டவர் உறவைக் காட்டியே மத்ரம் வளர்ந்தது. சகலபுரி செல்வத்தை அடைந்தது. கோட்டையும் படைக்கலத்திரளும் கூலிப்படைகளும் அமைந்தன. ஆனால் இந்திரப்பிரஸ்தம் வீழ்ந்து அஸ்தினபுரிக்கு அடிப்பட்ட பின்னரும் பதினான்காண்டுகள் மத்ரம் தனித்து நிற்கமுடிந்தது” என்றாள் அபயை.

“அரசி, பதினான்காண்டுகள் அஸ்தினபுரியை அஞ்சி அஞ்சித்தான் இங்கே வாழ்ந்திருந்தோம். அஞ்சுபவர்களைப்பற்றி அல்லும்பகலும் எண்ணுவது மானுடர் இயல்பு. எண்ணுந்தோறும் வளர்வதே எதுவும். அஞ்சும் எதிரியைப்போல மானுடர் உள்ளூர வழிபடும் பேருருவம் பிறிதொன்றில்லை. துரியோதனர் தேடிவந்திருக்கிறார் என்ற செய்தியாலேயே மூத்த அரசர் உவகைகொண்டு திளைத்திருப்பார். அவரை நேரில் கண்டதுமே அவர் அகம் ஓடிச்சென்று அடிபணிந்திருக்கும். அதை தன் வெற்றி என்றே கொண்டாடியுமிருக்கும். இனி அச்சமில்லை என்ற செய்திக்கு அப்பால் நாம் அடையும் விடுதலை பிறிதில்லை.”

அவளை வெறித்து நோக்கிக்கொண்டு விஜயை அமர்ந்திருந்தாள். எண்ணங்களேதும் ஓடவில்லை. “இப்பதினைந்து ஆண்டுகளில் பால்ஹிகக் கூட்டமைப்பு சோமதத்தரின் மைந்தர்களால் வலுவுறக் கூட்டப்பட்டது.

பால்ஹிகபுரியின் பெருங்கோட்டை இம்மலைநாடுகள் அனைத்துக்கும் அச்சமூட்டும் மையமென்றாகியது. பால்ஹிக அரசர் சலன் தலைமையில் நம்மை மலைவெள்ளச் சரிவெனச் சூழ்ந்துகொள்ளும் பெரும்படை உள்ளது. ஆயினும் நம்மை அவர்கள் இன்றுவரை தொடவில்லை. அந்தத் தன்னம்பிக்கையும் துணிச்சலும் நம் மூதரசரில் இருந்தாகவேண்டும்” என்றாள் அபயை.

“நம்மை நசுக்குவது இளைய பால்ஹிகருக்கு மிக எளிய செயல். அவர் அதை செய்யவில்லை” என்றாள் விஜயை. அடுத்த சொற்றொடரைச் சொல்ல அவள் உதடுகள் அசையவில்லை. “அவர் உங்கள் மீதான காதலால் சகலபுரியை விட்டுவிட்டார் என்கிறீர்களா?” என்றாள் அபயை. “ஏன் இருக்கக்கூடாது?” என்று விஜயை சீற்றத்துடன் கேட்டாள். “இருக்கலாம்... வேறு எண்ணங்களாலும் இருக்கலாம்” என்றாள் அபயை. “அதற்கு ஏன் நகைக்கிறாய்? உன் நச்சுநகைப்பு என்னை சீற்றம்கொள்ளச் செய்கிறது” என்றாள் விஜயை. “இளவரசி, நஞ்சில்லாத நகைப்பென ஏதுமில்லை” என்றாள் அபயை.

“நம் மூத்த அரசர் மாறா முடிவுகள் கொண்டவரல்ல. அந்தந்தத் தருணங்களுக்கு எதிர்வினையாற்றி முன் செல்பவர். அத்துடன்...” என்றாள் அபயை. விஜயை தலை தூக்கி “அத்துடன்?” என்றாள். மெல்லிய புன்னகையுடன் அபயை “அங்க நாட்டரசருக்கெதிராக படைகொண்டு நிற்கவேண்டும் என்று அவருள்ளம் எப்படி முடிவெடுக்கும்?” என்றாள். அவள் விழிகளை கூர்ந்து நோக்கி “என்ன சொல்கிறாய்?” என்றாள் விஜயை. “பல்லாயிரம் தயக்கங்களால் ஆனது ஒவ்வொரு முடிவும். அதை மட்டுமே சொன்னேன்” என்றாள் அபயை.

விஜயை கைவீசி “உளறாதே” என்று சொன்னாள். தலைதிருப்பி அப்பேச்சை அப்படியே தள்ளி அப்பால் ஒதுக்கினாள்.

பின்னர் “தந்தை இதை ஏற்பாரென்று எண்ணுகிறாயா?” என்றாள். “ஏன்?” என்று அபயை கேட்டாள். “இத்தனை நாள் பாண்டவர்களின் நட்பு நாடென்றே மத்ரம் தன்னை எண்ணியுள்ளது. இங்கு பிறந்து வளர்ந்த அனைவருமே ஐவரின் கதைகளைக் கேட்டு உளம் விரிந்தவர்கள். ஒருநாளில் ஒரு செய்தியில் அவர்கள் மாறக்கூடுமா என்ன?” என்றாள். அபயை புன்னகைத்து “தாங்கள் மக்களையும் அறிந்திருக்கவில்லை, அரசி” என்றாள். “எப்படி இதை நம் மக்கள் ஏற்பார்கள்? களத்தில் எதிர்நின்று பாண்டவர் ஐவரையும் கொல்லும் வஞ்சினத்தை அரசர் உரைப்பதை இவர்களின் உள்ளம் எவ்வாறு ஏற்றுக்கொள்ளும்?” என்று விஜயை கேட்டாள். அபயை “உள்ளத்திற்கு தேவையென்ன? சொற்கள்தானே? இப்புவியில் எல்லையின்றிச் சிக்குபவை, எப்போதும் பஞ்சமில்லாதவை சொற்களே” என்றாள்.

“நான் தந்தையிடம் சென்று பேசவிருக்கிறேன். இது தீய முடிவு. இக்குலம் முற்றழிவதற்கு வழிவகுக்கும். தந்தை எடுத்த முடிவென்பதால் மைந்தர்கள் இதை ஒப்பவேண்டியதில்லை. தந்தையை சொல்கொண்டு பின்னிழுக்கும் பொறுப்பும் அரசரென அதை செய்யும் கடமையும் மூத்தவருக்குள்ளது” என்றாள். அபயை “இப்போது தாங்கள் அவைபுகுந்து இச்சொற்களை சொன்னால் அது எந்நிலையில் நின்று உரைக்கப்படுவதாக அவர்களால் கொள்ளப்படும், அரசி?” என்றாள். “நான் இந்நாட்டு மகள்” என்றாள். ஆனால் “தாங்கள் சூடியிருக்கும் மணிமுடி இந்திரப்பிரஸ்தத்திற்குரியது. சகதேவரின் ஆழியை விரலில் அணிந்திருக்கிறீர்கள்.

மாற்றுநாட்டு அரசி வந்து அவைநின்று பேசுவதற்கு நிகராகவே உங்கள் சொற்கள் பொருள்கொள்ளப்படும்” என்றாள் அபயை.

“நீங்கள் இம்மண்ணைச் சார்ந்தவர் என்பதனால் அவையில் கடுமையாக மறுத்துரைக்கப்படமாட்டீர்கள். வெற்று முறைமைச்சொற்கள் உங்களுக்கு முன் விரிக்கப்படும். இயல்பாக அவற்றினூடாக வழுக்கி நகர்ந்து மறு எல்லை சேர்ந்து திரும்பி வருவீர்கள். அனைத்தும் பிசிறின்றி நடந்ததென்று உள்ளம் சொல்கையில் ஆழத்தில் பிறிதொன்று நீலம் பாரித்து அடிபட்டு கன்றி வலிகொண்டு துடித்துக்கொண்டிருக்கும்” என்றாள். விஜயை அவள் விழிகளையே நோக்கியபின் “என்ன செய்யச் சொல்கிறாய்?” என்றாள். “பொறுத்திருங்கள். இச்செய்தி நமக்கு வந்திருப்பதனால் இதற்கு முன்னரே அரசரை வந்தடைந்திருக்கும். இளவரசர்கள் ருக்மாங்கதரும் ருக்மரதரும் இதற்குள் இறுதி முடிவை எடுத்துவிட்டிருப்பார்கள். இங்கே அவர்களே சொற்கோன்மை கொண்டவர்கள், உங்கள் தந்தையும் உடன்பிறந்தாருமல்ல” என்றாள் அபயை.

“அவையில் இது பேசப்பட்டதென்றால் ஓரிரு நாழிகைக்குள்ளேயே அரண்மனை எங்கும் இதுவே பேச்சென்றாகும். நோக்குக, சற்று நேரத்திலேயே இங்குள்ள மக்களின் உள்ளங்கள் திசைமாறத் தொடங்கும். அதை அவர்கள் உடல்களே காட்டும். ஏவலரையும் மக்களையும் மட்டும் கூர்ந்து நோக்குங்கள். ஆவதென்ன என்று அவர்களே உங்களுக்கு காட்டுவார்கள்” என்றாள். “நான் மூத்தவர் ருக்மாங்கதரிடம் பேசலாமென்று எண்ணினேன்” என்றாள் விஜயை. “முதலில் நம் வாயிற்காவலனிடம் பேசமுடியுமா என்று பார்ப்போம்” என்றாள் அபயை.

விஜயை “உன் நஞ்சு எப்போதும் எனக்கு ஒவ்வாமையையே அளிக்கிறது” என்றாள். “அது உண்மை என்பதனால்கூட” என்றாள் அபயை. சினத்துடன் எழுந்து மேலாடையை எடுத்து சுற்றிக்கொண்டு விஜயை தன் அறைக்குள் சென்றாள். ஓசையுடன் கதவை மூடி மஞ்சத்தில் குப்புற விழுந்து இரு தலையணைகளால் முகத்தை அழுத்திக்கொண்டாள். சீராக முறையாக உளச்சொல் கோக்க வேண்டுமென்று எண்ணினாலும் சிதறிச் சிதறி பரந்துகொண்டிருந்தது அகம். ‘எவ்வாறு அது இயலும்? எவ்வாறு?’ என்றே உளம் மையச்சொல் கொண்டிருந்தது. பின்னர் சலித்து மல்லாந்து படுத்தபோது இனி என்ன செய்வதென்று வினா எழுந்தது.

இந்திரப்பிரஸ்தத்தில் அரசமுறைமைகளின்றி அரசியர் இருப்பது தகாதென்பதனால் அவர்கள் அனைவரும் பிறந்த இல்லத்திற்கே செல்லும்படி குந்திதான் ஆணையிட்டிருந்தாள். மைந்தனைப் பிரிந்து மத்ரநாட்டுக்கு அவள் வந்து பதின்மூன்று ஆண்டுகள் ஆயின. ஆண்டுக்கு ஒருமுறை மைந்தர்கள் வந்து அவளை பார்த்துச் சென்றார்கள். பதின்மூன்று ஆண்டுகள் ஒரு முழுவாழ்வை வாழ்ந்து முடிக்கப் போதுமானவை. நிமித்தநூலின்படி ஒரு வியாழவட்டம் ஒரு முழுப் பிறப்பிறப்புக்கு நிகர். நினைவுகள் நதியொழுக்கில் நுரையுடன் ஒதுங்கிச்சுருளும் குப்பைப்படலமென்றாகி உள்ளத்தில் எங்கோ ஒதுங்க அவள் பிறிதொருத்தியென எழுந்தாள்.

இந்திரப்பிரஸ்தத்திலிருந்து அகம்படியும் துணைப்படையும் இன்றி மத்ரம் நோக்கி கிளம்பியபோது சிறுமையுணர்வும் சோர்வும் இருந்ததென்றாலும் உள்ளத்தின் ஆழத்தில் மெல்லிய இனிமையொன்றும் உணரக் கிடைத்தது. என் இளமைக்குத் திரும்புகிறேன் என்று அதை சொல்லென ஆக்கிக்கொண்டாள்.

விட்டுவந்த அனைத்தும் அங்கு அங்கிருக்கின்றன. முதிரா அகவை! அறியாமையின் ஆயிரம் உவகைகள்! மத்ரம் அவளை கண்ணீருடன் எதிர்கொண்டது. சகலபுரியின் தெருக்களில் மக்கள் கூடி கண்ணீருடன், உளவிசையுடன் அவளுக்கு வாழ்த்து கூவினர். அவர்களின் கண்ணீரை தான் பெற்று பெருக்கி முகம்பொத்தி பீடத்தில் அமர்ந்திருந்தாள்.

அரண்மனைக்குள் நுழைந்து அன்னையை அணுகி கால்தொட்டு சென்னிசூடியபோது அழுதபடி அவள் மடியில் விழுந்துவிட்டாள். அவள் தலையை தன் உடலுடன் அணைத்து குழலை வருடியபடி அன்னை “பொறுமை கொள், மகளே! அனைத்திற்கும் தெய்வங்கள் நல்ல நோக்கம் ஒன்றை கரந்திருக்கும் என்று எண்ணிக்கொள். அரசியரின் வாழ்வு நூறு மடங்கு பெரிது. செல்வங்களும், துய்ப்புகளும், உவகைகளும், புகழும் போலவே தனிமையும், துயர்களும், சிறுமைகளும் நூறு மடங்கு. எனவே ஆற்றலும், துணிவும், கூடவே அகன்று நிற்கும் தெளிவும் நூறு மடங்கு தேவை” என்றாள்.

சேடியர் கைபற்றித் தூக்க தளர்ந்த காலடிகளுடன் நடந்துசென்று மஞ்சத்தில் விழுந்து கண்ணீர் வடித்துக்கொண்டிருந்தாள். அன்று துயின்று மறுநாள் காலை எழுந்தபோது மீண்டும் சிறுமகளாக மாறிவிட்டிருப்பதுபோல் உணர்ந்தாள். அரண்மனையெங்கும் உலவி ஒவ்வொரு தூணையும் சுவரையும் தொட்டு மீட்டெடுத்தாள். அடுமனை முகப்பிலிருந்த தூணின் மேலிருந்த சிறுவெடிப்புக்குள் அவள் ஒருமுறை கரந்து வைத்திருந்த சிறுசோழியை கண்டெடுத்தபோது சிரித்தபடி துள்ளிக்குதித்து அன்னையை அணுகி “அன்னையே, இது என்ன தெரிகிறதா?” என்றாள். அன்னை குனிந்து நோக்கி “இது தென்கடல் சோழி. இங்கு வந்த

விறலி ஒருத்தியால் உனக்கு பரிசளிக்கப்பட்டது. எங்கு வைத்திருந்தாய்?” என்றாள். “அடுமனை முகப்புத்தூணின் ஒரு சிறுபொந்தில். இத்தனை ஆண்டுகள் அங்கேயே இருந்திருக்கிறது” என்றாள். “ஆம், ஒன்றிரண்டு அவ்வாறு எஞ்சிவிடும்” என்று அன்னை சிரித்தபடி சொல்லி அவள் தலையை வருடினாள்.

அன்று பகல் முழுக்க சோழியை அரண்மனையின் சேடியரிடமும் தோழியரிடமும் காட்டிக்கொண்டு அலைந்தாள். அன்றிரவு அதை தன் கைகளுள் வைத்து நெஞ்சோடணைத்துக்கொண்டு துயின்றாள். ஒவ்வொரு நாளுமென மீண்டு வந்தாள். மைந்தரை, கணவரை, புகுந்த நகரை, அங்கிருந்த பெற்றிகளை முற்றிலுமாக மறந்தாள். மீண்டுமொரு இளமை. இம்முறை அது மிக அரிதென்றும் எளிதில் மறைவதென்றும் உணர்ந்திருந்தமையால் இருமடங்கு வெறியுடன் அள்ளி அணிந்துகொண்டாள். ஒவ்வொரு மலரையும் சூடினாள். ஒவ்வொரு இனிமையையும் எண்ணி எண்ணிப் பெருக்கி அருந்தினாள். ஒவ்வொரு நாளும் நிறைவின்மையுடன் துயின்று எதிர்பார்ப்புடன் மறுநாள் விழித்தெழுந்தாள்.

மத்ரத்தை அவள் அதுபோல முன்பு விரும்பியதே இல்லை. தொட்டுத் தொட்டு விரித்து அதை நூறு மடங்கு பெருக்கிக்கொண்டாள். அதன் கோட்டைகள், மாளிகைகள், பறவைகள், சுனைகள் அனைத்தும் ஒன்றுஆயிரமென பெருகி அவளைச் சூழ்ந்தன. முன்பு அச்சிறுமலைநகரை அவள் சிறையென எண்ணியிருந்தாள். அதன் கோட்டை இறுக்கிக் கட்டிய இரும்புக் கச்சை என மூச்சுத்திணறச் செய்தது. சற்றே சினமெழுந்தாலும் கையில் சிக்கும் பொருட்களைக்கொண்டு

அவ்வரண்மனையின் மரச்சுவர்களை அறையும் வழக்கம் கொண்டிருந்தாள். அவையே தன்னை காவல்காக்கும் பூதங்களென்பதுபோல.

பாண்டவர்கள் உபப்பிலாவ்யத்திற்கு திரும்பிவிட்டார்கள் என்று செய்தி வந்தபோது அவள் அடைந்தது ஏமாற்றத்தைத்தான். அவையில் அச்செய்தியை பாண்டவர்களின் தூதன் உரைத்தபோது சல்யரும் தந்தையும் மூத்தவர்களும் எழுந்து மகிழ்வொலி எழுப்பினர். அவையமர்ந்திருந்த குடித்தலைவர்கள் அனைவரும் தங்கள் கோல்களைத் தூக்கி “பாண்டவர்கள் வெல்க! இந்திரப்பிரஸ்தம் வெல்க! மத்ர அரசி வெல்க! தொல்குடி பெற்றுப்பெருகுக!” என்று வாழ்த்துரைத்தனர். அவைமுறைப்படி எழுந்து கைகூப்பி புன்னகையுடன் நின்றபோது அவ்வொலிகளை உள்ளிருந்து உந்தி வெளியே தள்ளும் பிறிதொன்றை தன்னில் உணர்ந்தாள்.

சல்யர் “இது நற்செய்தி… இந்திரப்பிரஸ்தம் இல்லாமலிருந்தும்கூட நாம் பால்ஹிகக் கூட்டமைப்புக்கு அடிபணியவில்லை. இனி பாண்டவர்களின் அவையில் நம் இடம் அவர்களின் உதவியைக் கோருபவர்கள் என்றல்ல, அவர்களுக்கு உதவும் நட்புநாடு என்று” என்றார். தியுதிமானர் “ஆனால் நாம் அவர்களின்றி நிற்கமுடியாது. அவர்கள் மீண்டுவருவார்கள் என்ற அச்சமே நம்மை காத்தது” என்றார். ருக்மாங்கதன் “நம்மை நாமே குறைத்துக்காண வேண்டியதில்லை, இளைய தந்தையே. இங்கே நாம் எத்தகைய படைவல்லமை கொண்டிருக்கிறோம் என்பது சோமதத்தனின் மைந்தர்களுக்குத் தெரியும்” என்றான்.

ருக்மரதன் “போர் நிகழ்ந்தால் அது பால்ஹிகர்களை ஆற்றலிழக்கச்செய்யும். கின்னரர்களும் உசிநாரர்களும் இறங்கி

மலைநாட்டில் பரவுவார்கள். அந்த அச்சமே அவர்களை விலக்கியது" என்றான். சல்யர் "அதற்கும் அப்பால் ஒன்றுண்டு, நம் விற்கள்" என்றார். ருக்மாங்கதன் "ஆம் தந்தையே, நான் அதையே சொன்னேன்" என்றான். த்யுதிமானர் "நான் குறைத்துச் சொல்லவில்லை..." என்றார். அவையிலிருந்த குடிமூத்தார் ஒருவர் "சல்யரை அறியாதோர் மலைநாட்டில் இல்லை" என்றார். "ஆம்! ஆம்! ஆம்!" என்று அவை கூச்சலிட்டது. ருக்மாங்கதன் "மீண்டுவரும் பாண்டவர்கள் தங்கள் நகரை வெல்லவும் நம் மூத்தஅரசரின் படைவல்லமையும் வில்லாற்றலும் தேவையாகும். அளிப்போம், மறுவினையாக நம்மை அவைமுதன்மையாக அமர்த்தக் கோருவோம்" என்றான். மீண்டும் "ஆம்! ஆம்! ஆம்!" என்று அவை கூச்சலிட்டது.

தன்னை இரண்டெனப் பகுத்து ஒன்றை இந்திரப்பிரஸ்தத்திற்கு அனுப்பிவிட்டு அங்கேயே தங்கிவிட முடியுமா என்று எழுந்த எண்ணத்தை என்ன இது என்று வியந்துநோக்கி விலக்கினாள் விஜயை. "அபிமன்யூவுக்கு மணமகளென்று ஒருத்தியை கொண்டுவந்திருக்கிறார்கள். விராட குலத்தவள். அத்திருமணம் இன்னும் சில நாட்களில் அங்கு நிகழும். இங்கிருந்து அரசக் குழுவொன்று அங்கு செல்லவேண்டியுள்ளது" என்று அன்னை சொன்னாள். "நீ இந்திரப்பிரஸ்தத்து மருகி. அன்னையரசியர் அனைவரும் அங்கிருப்பதே முறை. ஆனால் நாம் இங்கிருந்து கிளம்பி அங்கே செல்ல இனி பொழுதில்லை. எண்ணி நாளெடுத்து முடிவு சூழ்ந்திருக்கிறார்கள்."

சல்யர் அவையில் "பொறுப்போம். அது ஒரு சிற்றூர். அங்கு முறையாக அரசியர் தங்கும் மாளிகைகள் உள்ளனவா என்று அறியவேண்டும். பிற அரசியர் அங்கு செல்கிறார்களா என்பதை

உறுதி செய்துகொள்ளவேண்டும். அதன் பின்னர் பிறர் வியக்கும் சீர்வரிசைகளுடன் மத்ரநாட்டு அரசியை அனுப்புவோம்” என்றார். “ஆம், அதுவே முறை” என்று அவை ஏற்பொலி எழுப்பியது. சிபிநாட்டரசி தேவிகை செல்லவில்லை என்று செய்தி வந்தபோது அவளுடைய பயணமும் தவிர்க்கப்பட்டது. அவளுக்குள் சிறுமியொருத்தி கைவிரித்து துள்ளிக் குதித்தாள். சிறுபாவாடை உடையென விரிய சுழன்று சுழன்று படிகளில் ஏறி ஓடினாள்.

இன்னும் சிலநாள். அந்நாட்கள் மேலும் விரியக்கூடும். இங்கிருக்கும் வரை எனக்கு முதுமையும் இறப்பும் இல்லை. அகத்தறைக்குத் திரும்புகையில் அபயை அவள் கைகளைப் பற்றி “நன்று, இன்னும் சில நாட்கள்” என்றாள். அவள் கண்களை நோக்கி “இங்கிருந்து விரைந்து சென்று அவரைப் பார்க்கவே நான் விழைகிறேன்” என்றாள் விஜயை. “ஆம், அவ்விழைவும் தேவைதான்” என்று சொன்ன அபயை “ஆனால் இவையனைத்தும் உடனே முடியுமென்றில்லை. இந்திரப்பிரஸ்தம் கௌரவரால் திருப்பியளிக்கப்படும்போதே தாங்கள் இங்கிருந்து கிளம்புவீர்கள்” என்றாள்.

“அதற்கு எத்தனை நாட்களாகும்?” என்றாள் விஜயை. “ஆம், மாதங்களும் ஆண்டுகளும் யுகங்களும்கூட எண்ணிநோக்கினால் நாட்கள்தானே?” என்றாள் அபயை. சினத்துடன் அவளை நோக்கிவிட்டு அகத்தறைக்குள் சென்றபோது உண்மையிலேயே அந்த அரசியல் பூசல் பலமாதம் நீடிக்குமென்றும் அதுவரை மத்ர நாட்டிலேயே வாழலாம் என்றும் அவள் விழைந்தாள்.

மறுநாள் அபயையிடம் “அங்கு என்னடி நடக்கிறது? மெய்யாகவே சொற்படி நகரை திருப்பியளிக்க அவர்கள்

மறுக்கிறார்களா?” என்றாள். “ஒன்று கணித்துக்கொள்ளுங்கள், அரசி. ஒருபோதும் அஸ்தினபுரியின் அரசர் தன் மண்ணில் ஒரு துளியையேனும் பிறருக்கு அளிக்கமாட்டார். தம்பியருக்கோ தந்தையருக்கோ கூட” என்றாள் அபயை. “அப்படியென்றால் என்ன ஆகும்?” என்று அவள் கேட்டாள். அபயை “அனைத்தும் இனிதே. அது நமது ஆடலே அல்ல. இங்கிருந்து நோக்கி காத்திருப்போம்” என்றாள் . “ஆம்” என்று விஜயை சொன்னாள்.

அக்கணமே அவ்வெண்ணங்கள் அனைத்தையும் உள்ளத்தின் ஓரத்தில் ஒதுக்கி ஒவ்வொரு அடியாக வைத்து பின்னகர்ந்து மத்ரத்தில் எதுவும் அறியாது திளைத்த இளமகளென தன்னை ஆக்கிக்கொண்டாள். இசை கேட்டாள். சூது விளையாடினாள். தோழியருடன் சென்று நீர்விளையாடிக் களித்தாள். சோலையாடலும் நிலவூணும் நூல்பயில்தலுமென நாட்கள் சென்றன. போர் முதிர்ந்துவிட்டதென்று ஒருநாள் அறிந்தபோது அது அதிர்ச்சியளிக்கும் புதிய செய்தியாக இருந்தது. “போரா?” என்று அபயையிடம் கேட்டாள். “ஆம், உருள் பெருந்தேரை ஆயிரம் வடம் பற்றி இழுத்துகொண்டு வந்து இல்லத்து முன் நிறுத்துகிறார்கள் ஷத்ரியர்கள். அதன் பீடத்தில் கடலென குருதி கிடைத்தாலும் விடாய் அடங்காத காலதேவி அமர்ந்திருக்கிறாள்” என்றாள் அபயை.

“நீ கற்ற காவியங்களெல்லாம் உன் வஞ்சத்தால் திரிந்து புளித்து சொற்களாக வெளிவருகின்றன” என்றாள் விஜயை. “காவியங்களின் இயல்பு அது, அரசி. அவை ஒவ்வொரு உள்ளத்திலும் ஒவ்வொரு கணமும் திரிபடைந்துகொண்டே இருக்கின்றன. சற்றேனும் சொல்திரிபோ பொருட்திரிபோ இன்றி கவிதை வரி ஒன்றை திரும்பச்சொல்பவர் அதை

அடைந்ததே இல்லை என்று பொருள்” என்று அபயை சொன்னாள்.

சல்யர் கிளம்பிச்சென்ற அன்று அவருக்கு குருதிப் பொட்டிட்டு கோட்டை முகப்பு வரை சென்று வழியனுப்பி திரும்புகையில் விஜயை “இப்போரில் எவர் வெல்வார்கள்?” என்றாள். அபயை “வெல்வது அவளே, காலதேவி” என்றாள். “வாயை மூடு” என்று அவள் உரக்க சீறினாள். “இனி இச்சொல்லை என்னிடம் உரைக்காதே.” அபயை சிரித்து “ஆம், இனி நாம் போர் பற்றி பேசவே வேண்டியதில்லை” என்றாள். பின்னர் சிலநாட்களில் மீண்டும் அவள் அனைத்தையும் மறந்தாள். போரை, அஸ்தினபுரியை, இந்திரப்பிரஸ்தத்தை, கணவரை, மைந்தரை. சல்யர் அஸ்தினபுரியுடன் சேர்ந்துகொண்ட செய்தி வரும்வரை.

முதல் காவல் கோட்டத்தில் தேர் நின்றது. தேர்ப்பாகன் “மத்ரநாட்டு அரசி விஜயை” என்று அறிவித்து முத்திரையை காட்டினான். காவலன் அதை வாங்கி நோக்குவதும் பிறிதொரு காவலனிடம் காட்டுவதும் ஓசைகளாகவே தெரிந்தது. திரைக்கு அப்பால் வாயிலில் வந்துநின்ற காவலர் தலைவன் “மத்ரநாட்டு அரசியை வணங்குகிறேன். இந்நகர் தங்கள் வருகையின் பொருட்டு மகிழ்கிறது” என்றான். “நன்று, நலம் சூழ்க!” என்றாள் விஜயை. தேர் கடந்துசென்றது. அவள் மெல்ல சாய்ந்து கண்களை மூடிக்கொண்டு கற்பனையிலிருந்த அந்தச் சிறுநகரின் கோட்டை அணுகுவதை பார்த்துக்கொண்டிருந்தாள்.

# குருதிச்சாரல் - 19

**பகுதி மூன்று : மலைச்சுனையின் ஓசை – 2**

உபப்பிலாவ்யத்தின் சிறிய கோட்டையை அணுக அணுக விஜயை விந்தையானதோர் எக்களிப்பை அடைந்தாள். தன்னுள் எழுந்துகொண்டிருப்பது உவகை என்றுகூட அவள் முதலில் அறியவில்லை. “மிகச் சிறிய கோட்டை, அது கோட்டைதானா?” என்றாள். அபயை “கோட்டை என்பது ஒரு பொதுப்புரிதல்தான், அரசி. காவலர்கள்தான் மெய்யான கோட்டை” என்றாள். விஜயை “இது ஒரு வேலி... வெறுமனே மண்ணை அள்ளிவைத்து கட்டியிருக்கிறார்கள்” என்றாள். “இது விராடர்களின் வட எல்லைக் காவலரண் மட்டுமே... காலப்போக்கில் சிற்றூரென உருவாகியது.”

விஜயை “இங்கா அரசர்நிரையை அழைத்து தங்கச்செய்து அபிமன்யூவின் மணநிகழ்வை முடித்தனர்?” என்றாள். சிரித்தபடி “அரசர்கள் தங்க தவக்குடில்களை அமைத்தனர் போலும்” என்றபோதுதான் அபயையே அவள் உள்ளத்தை புரிந்துகொண்டாள். “ஆம், சகலபுரியில் இளவரசர்களுக்கு மணநிகழ்வு ஒருங்குசெய்தபோதுகூட நாம் மரப்பட்டை இல்லங்களைத்தான் மலைச்சாரலில் அமைத்தோம்” என்றாள். திரும்பிப்பார்த்த விஜயை அபயையின் விழிகளில் இருந்த நகைப்பைக் கண்டதுமே தன்னுள்ளத்தை தானே புரிந்துகொண்டாள். “மூத்தவர் ருக்மாங்கதர் இதை புரிந்துகொள்ளாமல் தந்தையிடம் பூசலிட்டார், அரசர்களை பாடிவீடுகளில் தங்கச்செய்வதாக. இதோ குருகுலத்து அரசர்கள் குடிலமைத்து தங்கவைத்திருக்கிறார்கள்” என்றாள் அபயை.

விஜயை கைகளை கட்டிக்கொண்டு தேர் கோட்டைக்குள் நுழைவதை நோக்கிக்கொண்டிருந்தாள். கோட்டைக்கு அப்பாலிருந்த சிறு முற்றத்தில் காவலர்களின் சிறிய குழு

நின்றிருந்தது. அவர்களுக்குப் பின்னால் நூற்றுக்கணக்கான கைவிடுவிற்படைகள் நின்றிருந்தன. ஐந்தாள் உயரமான முதுமூங்கில்கள் எருமைத்தோல் நாணால் இழுத்துக்கட்டி அம்பு பூட்டப்பட்டு விம்மிக் காத்திருந்தன. அவை அமைக்கப்பட்டிருந்த கோணங்களை விஜயை நோக்குவதைக் கண்ட அபயை "சாலையை மட்டும் அம்புகள் குறி வைக்கவில்லை, அருகிருக்கும் குறுங்காட்டை முழுமையாகவே குறி வைத்துள்ளன" என்றாள். "ஆம்" என்றாள் விஜயை. "அதுதான் புரியவில்லை."

அபயை "சாலையை கோட்டை மேலிருந்தே எதிர்கொள்ளமுடியும். குறுங்காட்டுக்குள் பதுங்கிவரும் எதிரி உயரமற்ற கோட்டை மேலிருந்து தெரியமாட்டான்" என்றாள். "வரும்வழியிலேயே பார்த்திருப்பீர்கள். குறுங்காடெங்கும் தைலமரங்களும் எண்ணைப்புல்லும் நட்டு வளர்க்கப்பட்டுள்ளன" என்றாள் அபயை. விஜயை "நான் நோக்கவில்லை" என்றாள். "இந்த அம்புகளில் அரக்குப் பந்தங்கள் அமைத்து கொளுத்தி ஏவினால் போதும், நகரைச் சூழ்ந்து ஒரு அனல் வளையம் உருவாகிவிடும்..." என்றாள் அபயை. விஜயை திகைத்து "ஆம்" என்றாள்.

"அரசி, இது சிறிய கோட்டை. மிக எளிதில் மகதமோ மாளவமோ கூர்ஜரமோ படைகொண்டுவந்து இதை கைப்பற்றிவிடமுடியும். ஏன் இதுவரை அவர்கள் அதை செய்யவில்லை?" என்றாள் அபயை. விஜயை பேசாமலிருந்தாள். "உள்ளிருப்பவர் இளைய பாண்டவர் அர்ஜுனர். வெல்லற்கரியவர்... மெய்யாகச் சொன்னால் இச்சிறுகோட்டை ஒரு பெரிய பொறி. இதில் விழாமலிருக்கும் அறிவு அரசர்களுக்கிருக்கிறது." விஜயை பெருமூச்சுவிட்டாள்.

“இந்திரப்பிரஸ்தத்தால் பாண்டவர்கள் ஆற்றல்பெறவில்லை அரசி, அவர்களின் பெருமையும் அந்நகரால் அல்ல” என்றாள் அபயை.

விஜயை அச்சொற்களை கேளாதவளாக உபப்பிலாவ்யத்தின் சிறிய தெருக்களை நோக்கிக்கொண்டிருந்தாள். உயரமான தேர்த்தட்டிலிருந்தபோது இருபுறமும் இருந்த மாளிகைகளின் கூரைவிளிம்பே தெரிந்தது. ஈரடுக்கு மாளிகைகளின் உப்பரிகைகளில் இருந்த காவலர்கள் விழிதிருப்பி தேரின் கொடியை நோக்கினர். விஜயை பெருமூச்சுவிட்டாள். சகலபுரிக்கு வெளியே அவள் கண்ட முதல் பெருநகரம் காம்பில்யம். அதுவே அவளை திகைக்கச் செய்தது. அந்நகரின் கோட்டை அவளுக்குள் ஒரு கொடுங்கனவெனப் பதிந்திருந்தது. கலப்பைக்கொடி பறக்கும் தேரில் அவள் காம்பில்யத்திற்குள் நுழைந்தபோது நாற்புறமும் கட்டடங்கள் சினம்கொண்ட யானைகள்போல கரிய அலைகளாக எழுந்து சூழ்ந்துகொண்ட உணர்வையே அடைந்தாள். அருகே அமர்ந்திருந்த அபயை “காம்பில்யத்தைவிட இருமடங்கு பெரியது அஸ்தினபுரி, அரசி” என்றாள்.

முன்னரே அஸ்தினபுரியைப்பற்றி அவள் கேள்விப்பட்டிருந்தாள். கதைகளினூடாக அது அவளுக்குள் வளர்ந்து ஒரு மாயநகரியாகவே கனவுகளுக்குள் நிறைந்திருந்தது. அதன் கோபுரமுகடுகளில் மலைக்கழுகுகள் அமர்ந்திருக்கும் என்றும் ஆயிரம் கைவிடுபடைகளில் ஆயிரம் கந்தர்வர்கள் நிறுவப்பட்டு எதிரிகளுக்காக காத்திருக்கிறார்கள் என்றும் அந்நகரில் காலையிலும் மாலையிலும் முன்னோர் இளங்காற்றுகளாக வீசி நகரை தூய்மைப்படுத்துகிறார்கள் என்றும் விறலியர்

பாடுகையில் அதை மேலும் பெரிய உளக்காட்சியாகவே அவள் வளர்த்துக்கொண்டாள்.

அவளை அஸ்தினபுரியின் இளவரசர் சகதேவருக்கு மணம்பேசி முடித்திருக்கும் செய்தியை அபயைதான் வந்து சொன்னாள். “ஆனால் பாண்டவக்குடியை இன்று ஆள்பவர் பேரரசி திரௌபதி. இளையவரின் அரசி என்று உங்களுக்கு கொடியும் பல்லக்கும் உண்டு. மலைமகளுக்கு அதுவே பெரிய பேறு” என்றாள். அவள் அருகிருந்த கலத்தை எடுத்து அபயைமேல் வீசி “கொன்றுவிடுவேன்... கொன்றுவிடுவேன்” என்று கூவினாள். அபயை அதை எளிதில் தவிர்த்து “இந்தச் சினமே நீங்கள் ஒருநாளில் மணமகளாகிவிடுவீர்கள் என்பதற்கான சான்று, இளவரசி. மணம்பேசப்படுவதை நான்கு நாட்களாகவே அறிந்திருப்பீர்கள். அஸ்தினபுரி மீது கொண்ட விழைவால் அந்த மணத்தை ஏற்றுக்கொண்டுவிட்டீர்கள். அதன்பொருட்டு நாணமும் கொள்கிறீர்கள். ஆகவே சினம் கொள்கிறீர்கள்” என்றாள்.

விஜயை வாளை உருவியபடி “கொன்றுவிடுவேன்... இழிமகளே, என்னை சிறுமைசெய்கிறாயா?” என்றாள். “கன்னியருக்கு காதல் சங்குவளைபோல. அணிவதெல்லாம் உடைந்தே அகலும், புதியதற்கு இடமளிக்கும்” என்றாள் அபயை. “போ! போய்விடு!” என்று விஜயை கூவினாள். பின் உடைந்து அழுதபடி மஞ்சத்தில் விழுந்தாள். பகலெல்லாம் அழுதுகொண்டிருந்தாள். அன்னை மாலையில் அவள் அறைக்கு வந்தாள். “ஏன் விழிநீர் விடுகிறாய், என் செல்லமே?” என்று அவள் கூந்தலை வருடினாள். “நன்றாக அழுதுவிடு... அழட்டும், அழுகையினூடாகவே பெண்கள் தங்களைத்தாங்களே

கடக்கிறார்கள் என்று நான்தான் சொன்னேன்.” அவள் அன்னையின் மடியில் தலைவைத்து கதறி அழுதாள்.

“இதோ பார், நாம் அரசியர். நீ அடுமனைப்பெண்டாகவோ வயலில் உழலும் வேளாட்டியாகவோ பிறக்கவில்லை. நீ அடைந்த அரசகேளிக்கை அனைத்தும் இப்பிறப்பால் உனக்கு கிடைத்தவையே. அவை வெறுமனே அளிக்கப்படுவதில்லை. ஆணென்றால் களம்நின்று குலம்காக்கவேண்டுமென்ற கடமை உள்ளது. பெண்ணென்றால் குடிபெருக்கவேண்டும் என்பது மூதாதையரின் ஆணை. நாம் கருவறைகளன்றி பிறிதல்ல. எது மத்ரத்திற்கு உகந்ததோ அதைச் செய்வதே உன் கடமை. இன்று பாண்டவகுடியுடனான உறவே நமக்கு உகந்தது என எவருமறிவர். பால்ஹிகம் சிற்றரசு. அவனோ அதற்கு அரசன்கூட அல்ல. அவ்வெண்ணத்தை ஒழிக! அது நமக்கு நன்றல்ல. பாண்டவர்களின் உறவு நம்மை இங்கே உரம்கொண்டவர்களாக நிறுத்தும்.”

“உன் உளத்துயரை நான் அறிவேன். மெய்யே, இது ஓர் அரசியல் பலிபீடம். நீ மட்டுமல்ல, பெண்களெல்லாம் அதில் பலிவிலங்குகளே. ஆனால் அரசியர் பிறந்ததே அவ்வாறு தன்னை பலிகொடுக்கவே” என்றாள் அன்னை. அவள் மீண்டும் கதறி அழுதாள். ஆனால் மிக எளிதாக அந்த பாவனையினூடாக கடந்து மறுபக்கம் சென்றாள். தன்னை பலிமகள் என்றும் நாட்டுக்காக தற்கொடை கொடுத்துக்கொண்டவள் என்றும் எண்ணி எண்ணி பின் அதை நம்பினாள். மணநாள் நெருங்குகையில் எண்ணி எண்ணி கன்னம் சிவப்பவளாக ஆகிவிட்டிருந்தாள்.

எப்போதுமே அவள் சடங்குகளை சலிப்பாகவே பார்த்துவந்திருந்தாள். அரசவையில் முகத்தின்மேல்

தலையாடையை இழுத்துவிட்டுக்கொண்டு அரைத்துயிலில் அமர்ந்திருப்பாள். ஆனால் திருமணத்தை ஒட்டிய ஒவ்வொரு சடங்கும் அவளை உளம்கிளரச்செய்து கனவுமயக்கில் நிறுத்தி வைத்தது. மங்கல இசையும் நறுமணங்களும் வண்ணங்களும் இன்சுவையுமாக புலன்களனைத்தும் நிறைந்து வழிந்தன. எண்ணங்கள் நேற்றுநாளை இல்லாமல் அன்றில் நின்று நுரைத்தன. அணிகொள்ளல்கள், அவையமர்வுகள், ஆலயம்தொழல்கள், கலைநிகழ்வுகள், வாழ்த்துக்கள், வணக்கங்கள். சடங்குகள் என்பவை தான்கொண்ட மகிழ்வை அடையாளநிகழ்வுகளாக ஆக்கி மூதாதையர் வகுத்துவைத்தவை என அவள் உணர்ந்தாள். அவற்றை மீண்டும் மகிழ்வுகளாக ஆக்கிக்கொள்பவர்கள் மானுடத்தினூடாக ஓடிச்செல்லும் கொண்டாட்டமொன்றின் துளியென்றாகிறார்கள்.

முதல்முறை அவள் சகதேவனை காம்பில்யத்திலிருந்து வந்திருந்த மணக்குழுவின் நடுவே கண்டபோது உள்ளம் நுரைத்தெழ விழிதாழ்த்திக்கொண்டாள். “இருவர், ஒருவர் கரியவர். இன்னொருவர் வெண்மை. வெண்ணிறத்தார் உங்களுக்கு, அரசி” என்றாள் அபயை. “அழகர்... பாண்டவர்களிலேயே அவர் மாறா இளமைகொண்டவர் என்கிறார்கள்.” ஒருகணம் மட்டுமே நோக்கியமையாலேயே அவ்வுருவம் விழிகளுக்குள் பருப்பொருளெனப் படிந்து எண்ணப்பெருக்கு அலைத்தலைத்து கழுவிச்சென்றாலும் அழியாது அங்கிருந்தது. அவனை அகவிழிகளால் நோக்கியபடி புறவிழிகள் மலைத்திருக்க மஞ்சத்தில் கிடந்தாள். சித்தமழிந்து துயில்கொள்கையில் அவன் மேலும் தெளிவுருக்கொண்டு புன்னகையும் விழியொளியும் சூடி அருகணைந்தான். அவன் உடலின் வெம்மையையும் மணத்தையும் உணரமுடிந்தது.

அவன் விரல்களின் மெல்லிய தொடுகையை அறிய இயன்றது. பின் அவன் உதடுகளின் ஊன்மணம்கொண்ட முத்தத்தையும் அவள் அடைந்தாள்.

பதினெட்டு நாள் மணநிகழ்வுகள் முடிந்த பின்னர் காம்பில்யத்திலிருந்து வந்த மகட்கோள் குழுவுடன் அவள் கிளம்பியபோது அன்னையர் அரண்மனை முற்றம் வரை வந்து தழுவி விழிநீர் உகுத்து அன்புச்சொல்லும் ஆற்றுப்படுத்தலும் உரைத்து வழியனுப்பினர். மூத்த அரசரும் தந்தையும் கோட்டைமுகப்பு வரை வந்து வாழ்த்தி சொல்லளித்தனர். மூத்தவர்கள் ருக்மாங்கதனும் ருக்மரதனும் நூற்றெட்டு வண்டிகளில் சீர்வரிசைகளுடன் உடன்வந்தனர். தேரின் பட்டுத்திரைகளை விலக்கி தொடர்ந்து வந்த அந்த வண்டிநிரைகளை நோக்கியபோது அவள் உளம்பெருகினாள். அருகிருந்த அபயையிடம் “இத்தனை சீர்வரிசை தேவையா? சகலபுரியின் கருவூலமே ஒழிந்து உடன்வருவது போலுள்ளது” என்றாள். “ஆம் அரசி, பெரும்பாலும் கருவூலம் நம்முடன் கிளம்பிவிட்டது” என்றாள் அபயை.

பின்னர் புன்னகைத்து “ஆனால் தாழ்வில்லை. இன்னும் ஓராண்டுக்குள் அதை ஈட்டிவிடமுடியும்” என்றாள் அபயை. விஜயை அவள் சொற்களிலிருந்த நஞ்சை உணர்ந்து “ஏன்?” என்றாள். “நேற்றே மூத்த அரசர் சுங்கநிலைகளின்மேல் மத்ரத்தின் கலப்பைக்கொடி ஏறுவதைப்பற்றி பேசிக்கொண்டிருந்தார்” என்றாள். “என்னை வைத்து வணிகம் செய்கிறார்கள் என்கிறாயா?” என்றாள் விஜயை. “ஆம், என்ன ஐயம்?” என்றாள் அபயை. சினத்துடன் சொல்லெடுத்தபின் விஜயை வாய்நிறுத்திக்கொண்டாள். ஆனால் சற்றுநேரத்திலேயே உள்ளம் மீண்டும் திரும்பிக்கொண்டது.

ஆம், என்னை வைத்து வணிகம் செய்கிறார்கள். என் மதிப்பு சகலபுரியைவிட, மத்ரத்தைவிட பெரியது. என் குடியே பெருங்குலமாகும். என் நகரின் கோல் பெருகும். நான் அவர்களுக்கு அருளிய திருமகள்.

அந்த மிதப்பை அபயை கலைக்கக்கூடும் என்று எண்ணி அதன்பின் காம்பில்யம் வருவதுவரை அவளிடம் ஒருசொல்லும் பேசவில்லை. "நாம் நாளை காலை காம்பில்யத்தை சென்றடைவோம், அரசி" என்றாள் அபயை. அவர்களின் தேர்நிரை மலைச்சரிவுப் பாதையில் இறங்கிக்கொண்டிருந்தது. முன்னால் சென்றுகொண்டிருந்த தேர்களில் மின்கதிர்கொடியும் கலப்பைக்கொடியும் பறந்துகொண்டிருந்தன. "ஆம், சொன்னார்கள்" என்றாள் விஜயை. "அஸ்தினபுரி கதைகளினூடாக நம் உள்ளத்தில் பேருருவம் கொண்டிருக்கும், ஆனால் நேரில் பார்க்கையில் நம் கற்பனைகளை வெல்லும் என்கிறார்கள்." அப்போது அந்நகரமே தன் உடைமை என்னும் மாயஎண்ணத்தால் அவள் உளமெழப்பெற்றாள்.

"ஆம், ஹஸ்தியின் நகரம்! பிரதீபரின் நகரம்" என்றாள். அபயை "இன்று பாரதவர்ஷத்தில் அதைவிடப் பெரிய நகரம் துவாரகை மட்டுமே என்கிறார்கள்" என்றாள். அவள் நெஞ்சு கொப்பளிக்க "ஆம், ஆனால் துவாரகை என்ன இருந்தாலும் யாதவபுரி" என்றாள். அபயை "ஆனால் அதை அனைவரும் அஞ்சுகிறார்கள். இங்குள்ள அத்தனை அரசுசூழ்தல்களும் துவாரகைக்கு எதிராகவே மையம்கொள்கின்றன. அறிந்திருப்பீர்கள் அரசி, நேற்றுமுன்நாள் அஸ்தினபுரியின் இளவரசி துச்சளையை சிந்துவின் அரசர் ஜயத்ரதருக்கு மணமளிக்க முடிவெடுத்திருக்கிறார்கள்" என்றாள். அவள்

கயிற்றைப்பற்றி ஒளிவிடும் நீர்ப்பரப்பை நோக்கியபடி “ஓ” என்றாள்.

“சோமதத்தரின் மைந்தர் பூரிசிரவஸும் அங்குதான் இருக்கிறார்” என்றாள் அபயை. அவள் தலையசைத்தாள். உள்ளம் விம்மி அவளுக்கு விழிநீர் சுரந்தது. எண்ணிய அனைத்தும் என ஒரு சொல் எழுந்தது அகத்தில். ஆம், எண்ணிய அனைத்தும். எண்ணிய அனைத்தும். ஆனால் எண்ணிய அனைத்தும் அவ்வாறு எளிதில் நிகழுமா என்ன? எண்ணிய அனைத்தும் நிகழும் ஒருவர் உண்டா? எண்ணிய அனைத்தும் நிகழ்வது நன்றா? உளம்விலக்கி காம்பில்யத்தின் பெருஞ்சாலையில் சென்றுகொண்டிருந்த தேர்களை நோக்கினாள். சாலையின் மேடுபள்ளங்களில் ஏறியமைந்து அவை மெல்லிய கூட்டுநடனம் ஒன்றிலிருந்தன. கொடிகள் அவற்றை வானில் தூக்கமுயலும் பறவைகள்போல.

காம்பில்யத்தின் கோட்டை அணுகிவருவதைக் கண்டதும் அவள் ஒரு திடுக்கிடலை உணர்ந்தாள். முதலில் அது ஒரு மலைச்சுவர் என்றே எண்ணினாள். அதன் நடுவே கணவாய் ஒன்றுள்ளதுபோலும் என எண்ணி விழிவிலக்கியபோது அதன்மேல் காவல்மாடங்கள் தெரிந்தன. அது கோட்டை என்று தெரிந்ததும் அபயையின் கைகளை பற்றிக்கொண்டாள். “இத்தனை பெரிய கோட்டை!” என்று நீண்டநேரத்திற்குப்பின் சொன்னாள். “ஆம், அத்தனை பெரிய எதிரிகள்” என்றாள் அபயை. ஒருகணம் கழித்தே அச்சொல்லின் பொருள் அவளுக்குள் நுழைந்தது. திடுக்கிட்டவளாக அபயையின் தோளை பற்றிக்கொண்டாள். “ஆம்” என்றாள்.

அதன்பின் அவளால் அச்சமின்றி அக்கோட்டையை பார்க்கமுடியவில்லை. கோட்டைகளும் பெருநகர்களும்

அவளை பதற்றப்படுத்தின. காம்பில்யத்திலிருந்து மறுநாளே துவாரகைக்குச் சென்றபோது அப்பெருநகரின் மாளிகைகள் அரக்கர்படைகள் என வந்து சூழ்ந்துகொண்டதாகவே உணர்ந்தாள். தொலைவிலேயே அக்கோட்டையை பார்ப்பதைத் தவிர்க்க கைகளால் கண்களை மூடிக்கொண்டாள். புற்றுவளர்வதுபோல நகரங்கள் வளர்கின்றன என்று அவளுக்குத் தோன்றியது. சிறுசிதல்பெருக்கென மக்கள் பிறந்திறந்து பிறந்திறந்து அதை அவர்கள் எழுப்பிக்கொண்டே இருக்கிறார்கள். இந்திரப்பிரஸ்தம் அவளுக்கு நகரென்றே தோன்றவில்லை. அது மலைமுடிகளின் சூழ்கை. மானுடரை ஒருபொருட்டெனக் கருதாதவை மலைகள்.

உபப்பிலாவ்யத்தின் மக்களை விஜயை திரைச்சீலையினூடாக நோக்கிக்கொண்டிருந்தாள். அவர்கள் அவள் தேரிலிருந்த கலப்பைக்கொடியை பார்த்துவிட்டிருந்தார்கள். உணர்வில்லாத விழிகளுடன் அதை நோக்கி நின்றனர். அவள் காவலரின் விழிகளை நோக்கினாள். அவற்றிலும் அதே உணர்வின்மை. திரையை மூடிவிட்டு “மத்ரம் அஸ்தினபுரியுடன் சேர்ந்துகொண்டதை இவர்கள் அறிவார்களா?” என்றாள். “உறுதியாக அறிந்திருப்பார்கள், அரசி. பொதுவாக இத்தகைய தருணங்களில் மக்கள் அரசுச்செய்திகளை அறிய மிகுந்த ஆவல்கொண்டிருப்பார்கள்.”

விஜயை மீண்டும் வெளியே பார்த்துவிட்டு “ஆனால் அவர்கள் அரசுச்செய்திகளை எப்படி அறியமுடியும்?” என்றாள். அபயை “ஒருவராக அவர்கள் அறிவது சிறிதே. ஆனால் ஒரு நகரென்பது பல்லாயிரம்பேர் சேர்ந்த பேருள்ளம். அதற்கு செவியும் கண்ணும் நாவும் பல்லாயிரம் மடங்கு. ஊசிவிழும்

ஒலியையும் அது கேட்கும். விழியசைவில் எண்ணங்களை படித்தெடுக்கும்” என்றாள் அபயை. “அரசி, மக்களிடமிருந்து எதையும் மெய்யாகவே மறைக்கவியலாது. மறைப்பதற்கு வழி ஒன்றே, மக்கள் விரும்புவதொன்றை அவர்களுக்கு அளித்தல். அதைக்கொண்டு மெய்யை மறைத்தல். அவர்களே அதை பெருக்கிக்கொள்வார்கள்.”

“நீ அரசவைகளில் அமரவேண்டியவள்” என்றாள் விஜயை. “நினைவறிந்தநாள் முதலே நான் அரசவைகளில்தானே இருக்கிறேன்? எந்தப் பக்கமும் நிற்காதவளென்பதனால் மேலும் கற்கிறேன்” என்றாள் அபயை. விஜயை “இவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்னைப்பற்றி?” என்றாள். “அவர்களின் விழிகளை நோக்கவேண்டாம், அரசி. மேலெழுந்தவர்கள் முன் அவற்றை மறைக்கக் கற்றிருப்பார்கள். அவர்களின் உடல்களை நோக்குக! அவை கட்டற்றவை…” என்றாள் அபயை. “விழிகளை மறைக்கும்தோறும் உடல்கள் திமிறிக்கொண்டு பேசத்தொடங்குகின்றன.”

அதைத்தான் மத்ரத்திலும் அபயை சொன்னாள் என்பதை விஜயை நினைவுகூர்ந்தாள். ஆனால் அவள் அதை தவிர்த்தாள். “மக்கள் ஏற்கபோவதில்லை. மூத்தவர்களை அஞ்சி உடனே எதிர்வினை எழாமலிருக்கலாம். அவைகூடுகையில் குரல்கள் எழும், ஐயமில்லை” என்றாள். “இது பாண்டவர்களின் குருதி என தங்களை எண்ணிக்கொள்பவர்களின் மண்.” அபயை “நோக்குக… உடல்களில் வெளிப்படுவதென்ன என்று மட்டும் நோக்குக!” என்றாள். செய்தி வந்த அன்று பகலெல்லாம் மஞ்சத்தில் சோர்ந்து கிடந்துவிட்டு மாலை எழுந்து கொற்றவை ஆலயத்திற்கு திறந்த பல்லக்கில் செல்கையில் இருபுறமும் ஒழுகிய நகர்மக்களின் முகங்களை நோக்கிக்கொண்டிருந்தாள்.

ஒவ்வொரு கண்களும் மாறிவிட்டிருந்தன. முற்றிலும் புதிய சிரிப்புகள் முகங்களில் ஒளிவிட்டன.

அவற்றிலிருந்த மாறுபாட்டை முதலில் உணர்ந்தாள். அது என்ன என்று தொட்டறிந்து சென்று அது ஓர் எக்களிப்பென்று புரிந்துகொண்டாள். அது எதன் பொருட்டென்று துழாவிய உள்ளம் சென்று எதிலோ முட்டி அஞ்சி திரும்பிவந்தது. அருகிருந்த அபயையின் கைகளைப்பற்றி "ஆமடி, இந்நகர் மக்கள் மகிழ்கிறார்கள். அஸ்தினபுரியுடனான உறவை அவர்கள் கொண்டாடுகிறார்கள்" என்றாள்.

"அது ஏன் என்று எண்ணுகிறீர்கள்?" என்று அபயை கேட்டாள். "நீ சொல்!" என்றாள். "தங்கள் எண்ணத்தை சொல்லுங்கள், உடன் வந்து இணைந்து கொள்கிறேன்" என்று அபயை சொல்லி சிரித்தாள். "நினைவறிந்த நாள் முதலே இவர்கள் பாண்டவர்களை தங்களவர் என்று எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே அது பழகிய எண்ணம். அஸ்தினபுரியுடன் சேர்ந்துகொள்வதென்பது புதியது. ஆகவே உளக்கிளர்ச்சி அளிப்பது. மக்கள் உளக்கிளர்ச்சி அளிக்கும் எதையும் சென்று தழுவிக்கொள்கிறார்கள். அது ஆலகாலமாகவோ எரியாகவோ இருப்பினும்."

"மெய்தான்" என்று நகைத்த அபயை "மேலும் ஒன்றுள்ளது. இவர்கள் தங்கள் அன்பை பாண்டவர்களுக்கு அளித்துக்கொண்டே இருக்கிறார்கள். அன்பை அளிக்கும் ஒவ்வொருவரும் மிக அரிதான ஒன்றை தங்களிடம் இருந்து அளிக்கிறோம் என்று எண்ணம் கொண்டிருப்பார்கள். அவ்வுள்ளத்தின் ஆழத்தில் பிறிதொரு மூலை அதற்கு நிகரான ஒன்றை எதிர்பார்த்துக்கொண்டே இருக்கும். அவ்வன்பு அவர்களுக்கு மிக மிக அரிதானதென்பதனால் அவர்கள்

எதிர்பார்ப்பது அதைவிட மிக அரிதான ஒன்றையே. ஆகவே அன்பை அளிக்கும் எவரும் அதற்கு அவர்கள் வைக்கும் மிகச் சிறிய விலையைக்கூட திரும்பப் பெறுவதில்லை” என்றாள்.

“அன்புகாட்டுபவர்கள் சிறுமைபடுத்தப்பட்டதாக ஒரு தருணத்தில் உணராமல் இருக்க வாய்ப்பேயில்லை” என்றாள் அபயை. “அரசி, அன்பு திரிந்தே வெறுப்பாகிறது. இப்புவியில் இதுவரை பேரழிவுகளை உருவாக்கியது அன்பே. கடல் எனக் குருதி கோரி பீடத்தில் அமர்ந்திருக்கும் அப்பெருந்தெய்வம் அன்பென பிறிதொரு பெயரையும் கொண்டது.” “இப்படி எதை வேண்டுமானாலும் சொல்லிக்கொண்டே போகலாம்” என்று சொல்லி விஜயை தலைதிருப்பினாள்.

முழந்தாளிட்டு அவள் அருகே வந்த அபயை “எண்ணி நோக்குக, அரசி! இந்த மக்களில் எழுந்த சொற்களை நான் சொல்கிறேன். எங்களை எளிதென்று எண்ணினாயல்லவா? எங்கள் அன்பு காற்றென நீரென வெறுமனே கிடைப்பதென்பது உன் கருத்தல்லவா? இப்போது உணர்க, அது அரிது. உன் தகுதியால் அல்ல, நம் ஊழினாலும் அல்ல, என் கனிவால் அது உனக்கு அளிக்கப்பட்டது. அதை அடைந்தபோது நீ வணங்கவில்லை. இன்று அதை தவிர்க்கையில் உணர்ந்து உணர்ந்து நீ தவிப்பாய். இறங்கி வருவாய், மன்றாடி விழிநீர் சிந்துவாய், ஏமாற்றம் கொண்டு துயில் நீப்பாய். அதுவே என் அன்புக்கு நீ அளிக்கும் மெய்யான எதிர்வினை. அது உச்சம்கொண்டு நீ என்மேல் கொலை வஞ்சம் கொள்வாய் எனில் என் அன்பு முற்றுணரப்பட்டதென்றே நான் பொருள்கொள்வேன். அதுதான் அவர்களின் உள்ளம், ஐயமே வேண்டாம்” என்றாள்.

இருண்ட திரைகளை கிழித்துச்செல்கையில் அபயை புல்லினூடாக பதுங்கிச்செல்லும் சிறுத்தையென்றாவாள். அவள் காலடிகள் ஓசையற்றவையாகும். விழிகள் சுடர்விடும். அவள் குரல் தாழ்ந்து தாழ்ந்து விஜயைக்குள் இருந்தே எழுவதைப்போல் ஒலித்தது. “அரசி, மானுட உள்ளங்கள் அனைத்தும் ஒன்றே. வேறுபாடுகள் மிகச் சிறியவை. மானுடர் திரளென ஆகுகையில் அனைவருள்ளும் திரளும் பொதுவான ஒன்றே பருவுருக்கொண்டெழுகிறது” என்றாள் அபயை. “ஆம்” என்று விஜயை பெருமூச்சுவிட்டாள்.

உபப்பிலாவ்யத்தின் ஒவ்வொரு கட்டடமும் அவளை அமைதியடையச் செய்தது. அரண்மனைக்குச் சென்று சேர்வதற்குள்ளாகவே முகப்பில் அவளை வரவேற்க தேவிகையும் சேடியரும் வந்திருந்தார்கள். தேர் சிறிய அரண்மனை முற்றத்தைச் சென்றடைந்தபோது உபப்பிலாவ்யம் அவளுக்குள் சகலபுரியாகவே உருமாறிவிட்டிருந்தது. தேரிலிருந்து இறங்கிய அவளை அணுகிய தேவிகை “வருக, மத்ரநாட்டரசி... நல்வரவாகுக!” என்றாள். “உன்னை முதலில் சந்தித்தது நிறைவளிக்கிறது” என்றாள் விஜயை.

உபப்பிலாவ்யத்தின் சேடிகள் அனைவரும் விராடபுரியினர் என்பதை விஜயை கண்டாள். அவர்களின் விழிகள் அவளை தொட்டுச்சென்றபோது ஓர் ஒவ்வாமையை உணர்ந்தாள். அரண்மனைக்குள் நுழைகையிலேயே அந்நகர் அளித்த அனைத்து ஆறுதல்களும் அகன்றன. அக்கணமே அங்கிருந்தே சகலபுரிக்கு திரும்பிவிடவேண்டும் என்ற விழைவை அடைந்தாள். அது ஏன் என எண்ணியபடியே சென்றாள். தேவிகை “பேரரசியும் அரசியும் மைய அறையில் உள்ளனர்.

நாம் நேராக அங்கே செல்வோம்” என்றாள். அப்போது அவள் தன் உணர்வுகளின் ஊற்றை அடையாளம் கண்டுகொண்டாள்.

காம்பில்யத்திற்கு சீர்வரிசை நிரையுடன் சென்று அரண்மனை முகப்பில் இறங்கியபோது அவளை எதிர்கொள்ள குந்தியும் திரௌபதியும் வந்திருந்தனர். மங்கல இசை சூழ, எழு மங்கலத்தாலங்களேந்தி வந்து அணிச்சேடியர் குரவையிட்டு வாழ்த்தினர். வைதிகர் கங்கை நீர்தெளித்து வேதமோதி நலம் வழுத்தினர். குரவையொலிகள் சூழ அருகணைந்த குந்தியின் கால்களைத் தொட்டு அவள் வணங்கினாள். அவள் நெற்றியில் கைவைத்து “நன்மங்கலங்கள் கொள்க! நீடு வாழ்க! கொடிவழி பெருகுக!” என வாழ்த்திய குந்தி அவளை தோள்தொட்டு தூக்கி அணைத்தபடி திரௌபதியிடம் “பீதர்நாட்டுப் பெண்டிரைப் போலிருக்கிறாள் அல்லவா?” என்றாள். திரௌபதி புன்னகை புரிந்தாள்.

# குருதிச்சாரல் - 20

**பகுதி மூன்று : மலைச்சுனையின் ஓசை – 3**

உபப்பிலாவ்யத்தின் சிறு அவைக்கூடத்திற்குச் சென்று குந்தியையும் திரௌபதியையும் சந்தித்து முறைமைகளும் இன்சொற்களும் ஆற்றிமுடிந்த பின்னர் விஜயை அவளுக்கென அளிக்கப்பட்ட சிறிய அறைக்குள் அபயையுடன் சென்றாள். “ஒவ்வொருவரும் இங்கு பிறிதொன்றிற்காக காத்திருக்கிறார்கள்” என்று அபயை சொன்னாள். “என்ன?” என்று அவள் கேட்டாள். “தூதொன்று வந்திருக்கிறது என்றார்கள்” என்றாள் அபயை. “அஸ்தினபுரியிலிருந்து திருதராஷ்டிரரின்

மொழியணுக்கன் சஞ்சயன் அவருடைய தனிச்செய்தியுடன் வந்திருக்கிறான். இன்று மாலை அவையில் அதை உரைக்கவிருக்கிறான்.”

விஜயை ஆர்வமின்றி “என்ன செய்தி?” என்றாள். “அதை உய்த்துணர்வது மிக எளிது. பேரரசரின் சொற்கள் இவையே” என்ற அபயை திருதராஷ்டிரர் போலவே குரலெழுப்பி “என் மைந்தர் என் சொற்களை பொருட்டாக எடுக்கவில்லை. ஆகவே என்மேல் மெய்யான அன்புள்ள மைந்தராகிய உங்களிடம் என் சொற்களை சொல்லுகிறேன். என் சொற்களை நீங்கள் தலைக்கொள்வீர்கள் என்று நம்புகிறேன். எதன்பொருட்டும் போருக்கு எழவேண்டியதில்லை. முற்றிலும் நிலம் துறந்தாலும்கூட படைமுகம் நிற்கவேண்டியதில்லை. இது என் ஆணையும் மன்றாட்டுமாகும்” என்றாள்.

விஜயை கண்களைச் சுருக்கி நோக்கி “பதினான்கு ஆண்டுகள் கானில் உழன்ற பின்னர் திரும்பி வந்தது இச்சொற்களை கேட்பதற்கா?” என்றாள். அபயை “அப்படி துணிந்து அவை நடுவே கேட்கும் இயல்பு கொண்டவர் இரண்டாமவர் பீமசேனர். ஆனால் அவர் அதை கேட்கமாட்டார்” என்றாள். விஜயை “ஏன்?” என்றாள். “பெருந்தோள்கள் இருவருக்கும்” என்றாள் அபயை. விஜயை அதை உள்வாங்காமல் தலையை அசைத்தபடி “என்ன நிகழ்கிறது என்றே புரியவில்லை. இந்நகருக்குள் நுழைந்த முதற்கணம் நான் உணர்ந்ததென்ன தெரியுமா? நான் அங்கிருந்து கிளம்பியே இருக்கக்கூடாது என்றுதான்” என்றாள்.

“நீங்கள் அங்கிருக்க இயலாது என்று உங்களுக்கே தெரியும். அந்நகர் உங்களை புறந்தள்ளிவிட்டது. இனி எந்நிலையிலும் அங்கே மீண்டும் செல்லவியலாது” என்றாள் அபயை. “ஆம், ஆகவேதான் கிளம்பினேன். ஆனால் ஏதேனும் ஒரு

வழியிருக்கிறதா என்று பிறிதொருமுறை எண்ணியிருக்கலாமோ என்று தோன்றுகிறது. மத்ர நாட்டுக்குள் நான் இருந்தால்தானே அரசியல் சிக்கல்? அருகில் உள்ள காடுகளில் தவக்குடில் ஒன்று அமைத்து அங்கு குடியிருந்திருந்தால் அதிலென்ன பிழை? இவ்விரு நாடுகளின் போர்களுக்குள் என் உள்ளத்தை அளிக்காமல் அங்கே நான் வாழ்ந்தாலென்ன?” என்றாள்.

அபயை “விழைவின் பொருட்டு துறத்தல், புதிய கருத்துதான். முனிவர்களும் ஒருவேளை இதை பிறிதொருமுறை எண்ணிப்பார்க்கக்கூடும்” என்றாள். சீற்றத்துடன் “செல்க! எதுவும் உனக்கு நகையாடலே” என்றபின் விஜயை தன் அறைக்குள் நுழைந்து மஞ்சத்தில் அமர்ந்தாள். அவள் ஆடைப்பேழையையும் அணிப்பேழையையும் அறைக்குள் வைத்துவிட்டு “இளைப்பாறுக, அரசி! நான் தங்களுக்குரிய ஒழுங்குகளைச் செய்துவிட்டு வருகிறேன்” என்று அபயை வெளியே சென்றாள்.

விஜயை கைகளைக் கட்டியபடி தலைகுனிந்து மஞ்சத்தில் அமர்ந்திருந்தாள். சாளரத்திற்கு வெளியே பறவைக்குரல்கள் எழுந்துகொண்டிருந்தன. காற்றில் இலைகளின் சலசலப்பு. மாளிகையின் கதவு கீல்களில் அசையும் ஓசையும் சேடியரும் ஏவலரும் பேசும் மங்கிய ஓசைகளும் எழுந்தன. அங்கு வந்த பயணத்திலும் நகர் நுழைவிலும் அரண்மனை அமைவிலும் ஒருமுறைகூட சகதேவனையோ சுகோத்ரனையோ எண்ணிக்கொண்டதில்லை என்று அவள் நினைவுகூர்ந்தாள். அவர்களின் தோற்றங்களே நீர்ப்பாவைபோல் மெல்ல அசைந்தபடி தொலைவில் தெரிந்தன. உற்றுநோக்குந்தோறும் தெளிவிழந்தன.

சகதேவன் கானகமேகும்போது சுகோத்ரனுக்கு அகவை இரண்டு அணுகிக்கொண்டிருந்தது. அவன் அவளிடம் “அவன் தௌம்ரரிடம் நிமித்தநூலும் வானூலும் கற்கவேண்டும். அவரிடம் நான் கூறியிருக்கிறேன். நிமித்தநூல் யாத்த சூரியதேவரின் வழிவந்தவர் தௌம்ரர். அவரிடம் மைந்தன் வளரட்டும்” என்றான். அவள் தலைதாழ்த்தி அவ்வாறே என்றாள். மேலும் ஒரு சொல் உரைக்கலாகாதென்று எண்ணினாள். ஆனால் சேடியர்அறையில் தொட்டிலில் துயின்றுகொண்டிருந்த சுகோத்ரனின் தோற்றம் விழிமுன் எழ ஆற்றமாட்டாமல் “அவன் சொல்திருந்தா குழந்தை” என்றாள்.

“அறிக, நிமித்தஞானம் மட்டும் மொழிக்கு முன்னரே கற்கப்படவேண்டும். சொற்களுக்கு உலகியல் அளிக்கும் பொருளே இயல்பாகக் கிடைப்பது. அதற்கு முன்னரே காலமும் வானமும் அளிக்கும் மெய்ப்பொருளை அறிந்தவனே நிமித்தவியலின் மெய்மையை தொடமுடியும். மொழியறிந்த பின் நிமித்தநூல் கற்பவன் நிமித்தஞானத்தை தானறிந்த உலகியல் மொழிக்குபெயர்த்து புரிந்துகொள்பவன். அவன் புரிந்துகொள்ளலாம், உணர்ந்துகொள்ளல் இயலாது. இது கல்லையும் மண்ணையும் அளக்கும் கணக்கு அல்ல, வான்முகிலையும் காற்றையும் அளக்கும் கணக்கு” என்றான் சகதேவன்.

“ஆசிரியரிடமிருந்தே அவன் மொழியையும் கற்கவேண்டும். அவன் வந்து நின்றிருக்கையில் அவனிடமிருந்து நான் மேலும் கற்கவேண்டும்.” அவள் தலையசைத்தாள். அவன் அவள் கன்னத்தைப்பற்றி தூக்கி “கண்ணீர்விடுகிறாயா?” என்றான். அவள் கன்னங்களில் நீர் வழிய “ஆம்” என்றாள். “இன்றொருநாளோடு விழிநீரை விடுக! பதின்மூன்றாண்டுகள்

துயருடனிருக்க எவராலும் இயலாது. அத்தனை காலம் நோன்புகள் கொள்வதும் மடமை. நான் மீண்டுவருவேன். உன் உள்ளத்திலும் உடலிலும் இளமையை தக்கவைத்துக்கொள்" என்றான்.

சுகோத்ரனின் தாலிக்காப்பு விழவுக்கு மறுநாளே தௌம்ரர் தன் ஏழு மாணவர்களுடன் இந்திரப்பிரஸ்தத்திற்கு வந்தார். குந்தி மைந்தனை ஒரு தாலத்தில் படுக்கவைத்து பொன்நாணயங்களால் மூடி இரு கைகளால் எடுத்து அவருக்கு அளிக்க அவர் வணங்கி பெற்றுக்கொண்டார். தேவிகையும் கரேணுமதியும் பலந்தரையும் விழிநீர் உகுத்தனர். அவள் வெற்றுவிழிகளுடன் நோக்கி நின்றாள். அத்தருணத்தை கண்ணீருடன், கொந்தளிப்புடன் தன்னுள் நிகழ்த்திச் சலித்திருந்தாள். மைந்தன் விழிமுன் இருந்து அகன்றதும் பெருமூச்சுடன் திரும்பினாள். கால்தளர்ந்து மயங்கிவிழுந்தாள். விழித்துக்கொண்டபோது மஞ்சத்தில் இருந்தாள். அருகே தேவிகையும் கரேணுமதியும் இருந்தனர். அவள் சொல்லின்றி அழுதுகொண்டிருந்தாள்.

இரண்டு நாட்களுக்குப் பின் அவள் மத்ரநாட்டுக்கு கிளம்பினாள். ஆடைகளை களைந்திடுவதுபோல அனைத்தையும் விலக்கிக்கொண்டு சகலபுரியை சென்றடைந்தாள். சுகோத்ரன் ஆண்டுக்கொருமுறை வந்து அவளைக் கண்டு வணங்கி வாழ்த்துபெற்றுச் சென்றான். அவனுக்கும் அவன் உடன்பிறந்தாருக்குமிடையே உறவேதுமிருக்கவில்லை. அவன் படைக்கலம் ஏந்தத் தெரியாதவனாகவும் அரசமுறைமைகள் ஏதும் கற்காதவனாகவும் இருந்தான். அவர்கள் அவனை இன்சொல்லுடன் விலக்கினர். அவனும் அவர்களை விட்டு அகன்றே நின்றான். அவன் அவளைக் கண்டு வணங்கும்போது

விழியும் கையும் அறிந்ததை மறுத்து அறியாத அந்தணச் சிறுவன் அவன் என்றே அவள் உள்ளம் உணர்ந்துகொண்டிருந்தது.

சகதேவன் எப்படி இருப்பான் என அவள் தன்னுள் வினவிக்கொண்டாள். அவர் முதுமை கொண்டிருக்கக்கூடும். தலை நரையோடி முகம் தொய்ந்து இதழ்களில் நகை மறைந்து, விழிகள் சலிப்புக்கொண்டு… அவள் எழுந்து சென்று அறையிலிருந்த சிறிய ஆடியில் தன் முகத்தை பார்த்தாள். திடுக்கிட்டவள்போல அப்பால் சென்றாள். நெஞ்சு படபடத்து நின்றாள். மீண்டும் ஒருமுறை அவ்வாடியை தன்னால் பார்க்க முடியுமென்று தோன்றவில்லை. இல்லை, இது என் முகமல்ல என்று அவளுக்குள்ளிருந்த சிறுமி வீரிட்டாள். இல்லை இல்லை இல்லை என சித்தம் ஓடிக்கொண்டிருந்தது.

மத்ரநாட்டு எல்லை கடந்ததும் தன்னில் அமைந்த முகம் இது. நெற்றியோர நரை, வாயைச்சுற்றிய மடிப்புகள், கண்களுக்குக்கீழ் கருநிழல். இம்முதுமகள் நிழல் என என்னைத் தொடர்ந்து வந்துகொண்டிருந்தாள். இவளை அஞ்சியே விரைந்தோடிக்கொண்டிருந்தேன். இவளை இங்கே உதறி மீண்டும் மத்ரநாட்டுக்குச் சென்றுவிடவேண்டும். இந்த ஆடியில் இவள் இருப்பாள். மீண்டும் ஒருமுறை இங்கு வந்தால் என்னை பற்றிக்கொண்டு படர்வாள். ஆனால் இங்கே வரப்போவதே இல்லை. எனது சிறுநாட்டின் மலைமுடிகள் சூழ்ந்த எல்லைக்கு வெளியே காலடி வைக்கப்போவதே இல்லை.

எழுந்து கதவைத் திறந்து வெளியே ஓடி படிகளில் இறங்கி கூடத்தை அடைந்து தேர்ப்பாகனிடம் “பூட்டுக தேரை!” என்று ஆணையிட்டாள். தேர் வந்து நிற்க ஏறியமர்ந்து “செல்க…

செல்க!” என்றாள். “எங்கு அரசி?” என்றான். “மீண்டும்… மீண்டும்” என்றாள். அவையனைத்தும் நொடியில் நிகழ்ந்து மறைய நீள்மூச்செறிந்து மீண்டும் சென்று தன் மஞ்சத்தில் அமர்ந்தாள். பெருமூச்சுக்கள் வந்தபடியே இருந்தன.

கதவு மெல்ல தட்டப்பட்டது. “வருக!” என்று அவள் குரலெழுப்பியதும் தேவிகை உள்ளே வந்தாள். அவளை வெறுமனே நோக்கி அமர்ந்திருந்தாள் விஜயை. தேவிகை அவள் அருகே வந்து பீடத்தில் அமர்ந்து “இளைப்பாற வேண்டுமல்லவா?” என்றாள். “இல்லை, தேரிலேயே நன்கு துயின்றுகொண்டுதான் வந்தேன்” என்றாள் விஜயை. “நீ களைத்திருந்தாய். உன்னைப் பார்த்ததும் நான் அடைந்த முதல் எண்ணமே இத்தனை அகவை ஆயிற்றா இருவருக்கும் என்றுதான்” என்றாள் தேவிகை. விஜயை கசப்புடன் “நான் திரும்பிப்போக விரும்புகிறேன்” என்றாள். “அவ்வாறு திரும்ப முடிந்தால் எவ்வளவு நன்று! நானும் சிபிநாட்டின் செம்பாலையில் அன்றி பிறிதெங்கும் வாழ விரும்பவில்லை” என்று தேவிகை சொன்னாள். “ஆனால் நாம் இங்கேதான் இருந்தாகவேண்டும். ஒவ்வொரு கணமுமென போர் அணுகிக்கொண்டிருக்கிறது.”

“அதற்கு நாமென்ன செய்ய முடியும்?” என்று விஜயை கேட்டாள். ஒருமுறைகூட அவள் போரை தன்னுடன் தொடர்புடையதென்று எண்ணவேயில்லை என்று அப்போதுதான் உணர்ந்தாள். “நாம் அதை தடுக்க முடியும். பிறருக்கு பல கணிப்புகள் உள்ளன, நிலம் குலம் புகழ் என. நமக்கு எதுவுமில்லை. நமது மைந்தர் தவிர” என்றாள். “நமது மைந்தர் இதில் எங்கு வருகிறார்கள்?” என்றாள் விஜயை. “அறிவிலியா நீ? போர் நிகழ்ந்தால் முதற்களப்பலி யார்? நமது

மைந்தரல்லவா?" விஜயை "ஆனால்..." என்றாள். "களம்செல்பவர் மட்டும் எதிரிகளின் இலக்காக இருக்கவேண்டும் என்பதில்லை" என்றாள் தேவிகை.

ஒரு கணத்தில் அனைத்தையும் உணர்ந்துகொண்டு விஜயை எழுந்து நின்றாள். அவள் கால்கள் நடுங்கத்தொடங்கின. எதையாவது பற்றிக்கொள்ள வேண்டுமென்று தவித்த கைகள் தேவிகை அமர்ந்திருந்த பீடத்தின் கைப்பிடியை சென்றடைந்தன. "ஏன்? அவர்கள் என்ன பிழை செய்தார்கள்?" என்றாள். "அரசமைந்தராகப் பிறந்தது, வேறென்ன?" என்றாள் தேவிகை. "அறிக, இரு தரப்பிலும் முதல் அம்புகள் மைந்தரின் பொருட்டே எடுக்கப்படும். இந்தப் போர்விரும்பிகளின் முன் தலையை அறைந்து உடைத்தாவது இப்போரை நாம் நிறுத்தியாகவேண்டும். இல்லையேல் மைந்தரை இழந்தவராவோம். நம் வயிற்றில் பிறந்ததன்றி அவர்கள் பிழை எதுவும் செய்யவில்லை. இக்கடனை நாம் நிறைவேற்றியாகவேண்டும்."

"ஆம்" என்ற விஜயை தேவிகையின் கைகளை பற்றிக்கொண்டு "நாம் என்னடி செய்வது?" என்றாள். அவள் கண்களிலிருந்து கண்ணீர் வழியத் தொடங்கியது. "நான் அவரை பார்த்தேன்" என்று தேவிகை சொன்னாள். "யாரை?" என்று கேட்டபோதே விஜயைக்கு புரிந்துவிட்டது. "குருஷேத்திரத்தில் ஒரு பூசெய்கைக்குச் சென்றிருந்தேன். திரும்பிவரும் வழியில் ஒரு விடுதியில் அவரை சந்தித்தேன். அவரிடம் இப்போரை அவர் நிறுத்த முடியுமா என்று நான் மன்றாடினேன். என்னை இங்கு வரச்சொன்னார். அவர் அஸ்தினபுரிக்கு கிளம்பிச்சென்றார் . தன் முழு வல்லமையாலும் நமக்காக இப்போரை நிறுத்த முயல்வதாக சொன்னார்."

“அவருடைய முயற்சியின் விளைவாகவே சஞ்சயன் இங்கு வந்துள்ளான். இறுதி வாய்ப்பு அது. பாண்டவர்களுக்குமேல் தந்தையின் ஆணை இன்று அவையில் ஒலிக்கும். போரிலிருந்து பீமசேனர் விலகுவாரென்றால் அதன்பின் இங்கே ஒன்றும் நிகழாது” என்றாள் தேவிகை. “திருதராஷ்டிரரின் ஆணையை பீமசேனர் ஒருபோதும் மீறமாட்டார் என்று என் உள்ளம் உறுதியாகச் சொல்கிறது.” விஜயை “போர் நின்றுவிடுமா? மெய்யாகவா?” என்று கேட்டாள். “நின்றுவிடும் என்றால் இனி இதன்பொருட்டே நிகழும். பேரரசரின் தனிச்சொல்லைக் கொண்டு சஞ்சயன் வந்துள்ளான். சஞ்சயனின் நாவில் எழும் சொற்கள் அவருடைய சொற்களே. இந்த அவையிலாவது அது ஒலிக்கட்டும்.”

விஜயை மீண்டும் மஞ்சத்தில் அமர்ந்து “தெய்வங்கள் அருளவேண்டும். உளம் கொண்டு எப்பிழையும் செய்யாதவர்கள் நம் மைந்தர். இன்னும் வாழ்க்கையை அவர்கள் அறியவில்லை. அவர்கள் பொருட்டேனும் நன்று நிகழவேண்டும்” என்றாள். “இரு தரப்பிலும் பலர் விழைவது இதுவே. அவ்விழைவுகள் முனை கொள்ளட்டும்” என்றாள் தேவிகை. பின்னர் “நான் உன்னிடம் சொல்லவந்தது ஒன்றே. அவையில் இன்று சஞ்சயன் தூது முன்வைக்கப்படுகையில் பாஞ்சாலத்து அரசி தன் வஞ்சினத்தை ஒழிப்பதாக எழுந்து அறிவிப்பாள். ஏனென்றால் அவள் முன்னரே அதை சொல்லிவிட்டாள். அவள் இன்று இந்த வஞ்சங்களின் சூழலில் இல்லை” என்றாள்.

“மெய்யாகவா?” என்றாள் விஜயை. “அவளுடலுக்குள் பிறிதொருத்தி குடியேறியதுபோல் தோன்றுகிறது. அவளருகே நின்றிருக்கையில் முற்றிலும் அறியாத ஒருவரின் அணுக்கத்தையே என் உள்ளம் உணர்கிறது” என்றாள் தேவிகை.

“தந்தை சொல்லை மீறலாகாதென்று சான்றோரும் உரைப்பார்கள். அதற்கப்பால் ஏதேனும் சொல் அவையிலெழுமென்றால் நம் மைந்தர் பொருட்டு நாம் எழுந்து பேசவேண்டும். அவையை அஞ்சியோ முறைமைக்குப் பணிந்தோ நாம் வாளாவிருக்கக் கூடாது.”

“ஆம்” என்றாள் விஜயை. தேவிகை “நாம் பேசவேண்டியதென்ன என்பதை வகுத்துக்கொண்டிருக்கிறேன். இந்த அவையில் இன்றே அனைத்தும் முடிவாகவேண்டும்” என்றாள். “ஆம், நான் உன் அருகே அமர்ந்திருப்பேன். நான் எழுந்து அவை நடுவே சொல்வேன். தேவையென்றால் அரசர் முன் சென்று நெஞ்சில் அறைந்து ஆணையிடுகிறேன். என் இறப்பின்மீது இப்போர் முடியுமென்றால் அவ்வாறே ஆகட்டும் என்று சொல்வேன்” என்றாள். “நாம் முழு உணர்வையும் வெளிக்காட்டியாகவேண்டும்” என்று சொன்ன தேவிகை எழுந்து “ஓய்வெடு. நான் வருகிறேன்” என்றாள்.

தோளைத் தட்டியபின் அவள் திரும்பிச்செல்லும்போது மெல்லிய குரலில் விஜயை “தேவிகை’ என்றாள். தேவிகை நின்று திரும்ப “நம் பொருட்டா அவர் இதை செய்தார்?” என்றாள். தேவிகை விழி தாழ்த்தி முகம் கனிந்து “நம் பொருட்டும்தான்” என்றாள். விஜயை “அவ்வளவு எஞ்சியிருக்குமா என்ன?” என்றாள். “ஏன்?” என்றாள் தேவிகை. “நாம் மறந்துவிட்டோம் அல்லவா?” என்றாள் விஜயை. தேவிகை “முயன்றோம்” என்றாள். “இருந்தாலும் அவ்வளவு காலத்திற்குப் பிறகு…” என்றாள் விஜயை. “காலம் என்ன செய்யும்?” என்றபின் தேவிகை வெளியே சென்றாள்.

விஜயை ஒரு ஊழ்க நுண்சொல்லென அதை பெற்றாள். மஞ்சத்தில் அமர்ந்து கைகளை மடியில் கோட்டியபின் “காலம்

என்ன செய்யும்! காலம் என்ன செய்யும்!” என்று தனக்குள் மீள மீள சொல்லிக்கொண்டாள்.

உபப்பிலாவ்யத்தின் ஏவல்பெண்டு அறைக்குள் வந்து முறைமைச்சொல் உரைத்து சகதேவன் அவளைப் பார்க்க வருவதை அறிவித்தபோது முதலில் அச்சொற்கள் விஜயைக்கு எந்தப் பொருளையும் அளிக்கவில்லை. தனது ஆடைப்பேழையிலிருந்து பொன்னூல் பின்னலிட்ட வெண்பட்டு ஒன்றை வெளியே எடுத்தவள் இயல்பாகத் திரும்பி “யார்?” என்றாள். அவள் “பாண்டவ இளைய அரசர் சகதேவர்” என்றாள். அப்போதும் அகம் எழாமல் “நான் அவைக்கு செல்லப்போகிறேன் அல்லவா?” என்றாள்.

ஏவல்பெண்டு விழிகளில் எந்த மாறுதலுமின்றி “இளைய பாண்டவர் சகதேவர் தன் அரசியை சந்திக்க வருவதாக செய்தி அனுப்பியிருக்கிறார், அரசி” என்றாள். அதன் பின்னரே அவள் அகம் விழித்துக்கொண்டது. தன்னை முற்றிலும் உள்ளிழுத்துக்கொண்டு “அது அடியவளின் பேறு. தவம் முதிர்ந்தவள் என காத்திருக்கிறேன் என்னும் சொல்லை அவருக்கு உரை” என்றாள். அவள் தலைவணங்கி வெளியே சென்றபின் தளர்ந்த காலடிகளுடன் சென்று மஞ்சத்தில் அமர்ந்தாள். அத்தருணத்தை ஏன் முன்னரே எதிர்பார்த்து உளம் நடித்துக் கொண்டிருக்கவில்லை என்று வியந்தாள்.

ஒரு வாழ்வுத்தருணம் நிகழும்போது முன்னரே எதிர்பார்த்தபடி இருப்பதில்லை. ஆனால் அவ்வெதிர்பார்ப்பின்போது அதை மீள மீள உளம்நடிப்பதால் அத்தருணம் பழகியதாக இருக்கிறது. அப்போது பூணவேண்டிய தோற்றமும், இயற்றவேண்டிய நடிப்பும், கொள்ளவேண்டிய உணர்வுகளும் பெரும்பாலும்

வகுக்கப்பட்டுவிட்டிருக்கின்றன. முற்றிலும் புதியதாக அது நிகழ்கையில்கூட நின்றிருக்கும் இடத்திலிருந்து அப்புதிய இடத்திற்குச் செல்வதன் உலைவு மட்டும்தான் உள்ளது. ஓர் எண்ணா இடர் என அது நிகழ்கையில் அனைத்துப் புலன்க ofளும் முற்றிலும் செயலற்றுவிடுகின்றன. சொற்கள், விழியசைவுகள், மெய்ப்பாடுகள் எதுவும் உடலிலிருந்து எழுவதில்லை. உள்ளிருக்கும் அது தன்னை ஒரு சிறுபுள்ளியென சுருக்கிக்கொண்டு இருளில் புதைந்து அமர்ந்து விழியொளி மட்டுமென மாறி வெறுமனே நோக்கிக்கொண்டிருக்கிறது.

ஒவ்வொரு தருணத்தையும் முன்னரே நிகழ்த்திக்கொள்ளும் உளநடிப்புகள் ஒன்று தொட்டு ஒன்றென ஒழுகும் வாழ்வெனும் பெருக்கில் ஒவ்வொரு தருணத்தையும் பொருத்துவதற்கான முயற்சிகளே என்று அவளுக்குத் தோன்றியது. எண்ணியிரா நிகழ்வு எழுகையில் அது அப்பெருக்குடன் ஒட்டாமல் முற்றிலும் அயலென நிற்கிறது.

தன் கைகள் பட்டாடையை கசக்கிக்கொண்டிருப்பதை உணர்ந்து அதை மஞ்சத்தில் வைத்து கைகளால் நீவினாள். பின்னர் எழுந்து சென்று வாயிலிலிருந்த சிறிய மணியை அடித்தாள். அபயை வந்து அறைவாயிலில் நின்று தலைவணங்கினாள். “அரசரை நான் சந்திக்கவிருக்கிறேன்” என்றாள் விஜயை. “ஆம், இங்கு வந்தால் நிகழவேண்டியது அதுதானே?” என்றாள் அபயை. “அதற்குமுன் மைந்தரை சந்திக்கலாம் என்று எண்ணினேன்” என்றாள் விஜயை. “இப்போது அவர்கள் எவரும் இங்கில்லையே” என்றாள் அபயை. “அதை அறிந்துதானே வந்தோம்?”

விஜயை பொருளற்ற வினாவாக “சுகோத்ரன் எப்போது வருவதாக சொல்லப்பட்டது?” என்றாள். “போரில் அவரை ஈடுபடுத்தும் எண்ணம் இவர்களுக்குண்டா என்று தெரியவில்லை. அவருக்கு படைக்கலப் பயிற்சியே இல்லை என்றார்கள்” என்றாள் அபயை. “ஆம், அந்தணன்போலவே இருந்தான் சென்றமுறை பார்க்கையிலும். நீ படைக்கலமே பயிலவில்லையா என்றேன். உள்ளத்தில் ஒரு பகுதியை அதற்கென பகுக்கவேண்டாம் என்றார் ஆசிரியர் என்றான்.” அபயை சிரித்து “அவ்வண்ணமென்றால் காமத்திற்கும் பகுக்கமாட்டார் என நினைக்கிறேன்” என்றபின் “அணிகொள்க, அரசி!” என்றாள். “வேண்டாம், நான் இவ்வண்ணமே இருக்க விழைகிறேன்” என்றாள் விஜயை. அபயை ஒருகணம் நோக்கிவிட்டு “அதுவும் நன்றே” என வெளியே சென்றாள்.

சகதேவன் அறைக்குள் நுழைந்ததும் முதற்கணம் அவளைப் பார்த்து திகைத்ததை அவள் உணர்ந்தாள். அது அவள் தோற்றத்திலிருந்த முதுமையால்தான் என்பதை அக்கணமே அவளுள் உறையும் பெண் அறிந்தாள். அவன் மீது எழுந்த கடும்கசப்பை விழிகளிலும் புன்னகையிலும் காட்டாமல் இருக்கும் பொருட்டு விழிதாழ்த்தி முகம் திருப்பிக்கொண்டாள். சகதேவன் அந்த விலக்கத்தை அப்போது விரும்பினான். அவ்விடைவெளியில் தன்னை அவன் மீண்டும் தொகுத்துக்கொண்டான். இயல்பான குரலில் “பார்த்து நெடுநாளாகிறது” என்றான்.

அந்தச் சொற்றொடரின் பொருளின்மை அவளை மீண்டும் சீற்றம்கொள்ளச் செய்தது. ஒருபோதும் அவன் அன்பையோ, எல்லைக்கப்பால் அணுக்கத்தையோகூட தன் சொல்லில் வெளிக்காட்டியவனல்ல என்று அவளுக்குத்

தெரிந்திருந்தாலும்கூட அத்தருணத்தில் அவள் பிறிதொன்றை எதிர்பார்த்தாள். “ஆம், பதினான்கு ஆண்டுகள்” என்று அவளில் எழுந்த பிறிதொருத்தி மறுமொழியுரைத்தாள். “மைந்தனை எப்போது பார்த்தாய்?” என்று சகதேவன் கேட்டான். “சென்ற ஆண்டு” என்று அவள் சொன்னாள். “வளர்ந்துவிட்டிருப்பான்” என்றான் சகதேவன். “ஆம், அந்தணச் சிறுவன் போலிருக்கிறான்” என்றாள். “அவ்வண்ணம் அவன் ஆகவேண்டுமென்றே விரும்பினேன். பிற எந்தப் பறவையும் அமராத மரத்தில் அமர்வது நிமித்தமெய்ஞானம் எனும் பறவை” என்றான் சகதேவன்.

அவன் முகத்தில் எழுந்த கனிந்த புன்னகை அவனை அவளுக்கு சற்று அருகே கொண்டுவந்தது. “இள அகவையில் நான் இருந்ததைப் போலவே இருக்கிறான், அதே சொற்களைக்கூட சொல்கிறான் என்றார்கள்” என்றான். அவன் நினைவில் அவள் அகம் மலர்ந்தது. புன்னகையுடன் “அவனையும் பிறரையும் இங்கு பார்க்கலாமென்று எண்ணினேன்” என்றாள். “மைந்தர்கள் இந்திரப்பிரஸ்தத்துக்கு சென்றிருக்கிறார்கள். இங்கு அவர்கள் தங்குவதற்கு இடமுமில்லை, ஆற்ற பணியுமில்லை” என்று சகதேவன் சொன்னான். “ஆனால் அவன் இங்கு வருவான் என்று ஏனோ எண்ணினேன்” என்று விஜயை சொன்னாள். “அவன் இன்னமும் கற்றுநிறையவில்லை” என்றான் சகதேவன்.

மைந்தனின் நினைவுகளினூடாக இருவரும் அணுகி வந்து ஒருவரை ஒருவர் உளம் தொட்டுக்கொள்வதை அவள் உணர்ந்தாள். அப்போது தன் முன் நின்றுகொண்டிருப்பது மைந்தனா கொழுநனா என்றே அவள் அகம் மயங்கியது. அவனைப்பற்றி பேசவிரும்பினாள். “பதினான்கு ஆண்டுகள்

அவனையும் பிரிந்துதான் இருந்தேன். ஆண்டுக்கு ஒருமுறை அவன் அங்கு வருவதுண்டு. விழவுகளிலும் முறைமைகளிலும் பங்கெடுப்பதற்காக. ஒவ்வொரு முறையும் முற்றிலும் பிறிதொருவனாக அவன் உளம் மாறியிருப்பான். சொல்திருந்துவதையும் எண்ணங்கள் கூர்கொள்வதையும் ஓரிரு சொற்களிலேயே உணர்வேன்” என்றாள்.

“நிமித்தநூல் அனைவரையும் நூல்களைப்போல அறிந்து கடக்கப்படவேண்டிவையாக ஆக்கிவிடுகிறது” என்றான் சகதேவன். “அவன் என்னிடம் அணுக்கமாக உரையாடுவதில்லை. நாங்கள் இருவரும் தனித்து பேசும் தருணங்களே பெரும்பாலும் அமைந்ததுமில்லை. ஆயினும் அவன் வந்து சென்ற பல மாதங்களுக்கு நான் அவனுடன்தான் இருப்பேன்” என்றாள்.

சகதேவன் மஞ்சத்தில் இயல்பாக படுத்தபடி “விந்தைதான், நான் கிளம்புகையில் அவன் கைக்குழவி. குழவி என்றே அவனை என் உள்ளத்தில் இருத்தியுமிருந்தேன். பதினான்கு ஆண்டுகள் காட்டிலும் கானகவாழ்விலும் அவனை இளமைந்தனென்றே நெஞ்சிலும் தோளிலும் அமரவைத்து இன்சொல்லாடினேன். மீண்டு வந்து இளைஞனாக அவனை என் முன் காண்கையில் எவ்வாறு உணர்வேன் என்று எண்ணியபோது தயங்கி பின்னடைந்தேன். ஆனால் இந்நகருக்குள் நுழைந்ததுமே என் அகத்தில் அவன் வளர்ந்து இளைஞனாகிவிட்டான்” என்றான். “என் உள்ளத்தில் பிறிதொரு ஆழம் அவனை ஒவ்வொரு நாளும் வளரவைத்து பார்த்துக்கொண்டிருந்தது என்பதை அப்போது உணர்ந்தேன்.”

மஞ்சத்தில் அவனருகே அவள் அமர்ந்தாள். “நினைவிருக்கிறதா? ஒருமுறை இந்திரப்பிரஸ்தத்தின்

காண்டவக்காட்டின் உள்ளே சூக்தவனம் என்னும் சோலையில் நாம் தங்கியிருந்தோம். சிறிய காட்டுக்குடில். மூங்கில் பிளந்து அமைத்த சிறிய மஞ்சம். நம் இருவருக்குமிடையே அவனை படுக்க வைத்தபடி ஒற்றைதோல் போர்வையால் போர்த்து வெளியே சீவிடின் ஒலியும் மான்களின் குமிறலும் இரவின் ஒட்டுமொத்த முழக்கத்திற்குள் எழுவதை கேட்டுக்கொண்டிருந்தோம். சிறுசாளரத்துக்கு வெளியே ஒரு விண்மீன் கண்மின்னிக்கொண்டிருந்தது” என்று சகதேவன் சொன்னான்.

“அதை எப்படி மறப்பது!” என்று அவள் சொன்னாள். அவள் உள்ளம் உருகி விழிநீர் துளிர்த்தது. அழுகையை அடக்க உதடுகளை அழுத்தியபடி தலைகுனிந்தாள். முற்றிலுமாக அந்நாட்களை அம்முகங்களை எப்படி மறந்தோம் என்று அவள் உள்ளம் வியந்தது. அவ்வியப்பினாலோ என்னவோ மறுமுனை மேலும் மேலும் துயர்கொண்டு நீர்மைபெற்றது. அவன் கால்களை இடக்கையால் தொட்டாள். மெல்ல வருடிச்சென்று கால்விரல்களைப் பற்றி இழுத்தபடி “நான் அந்நாட்களிலேயே வாழ்ந்தேன்” என்றாள். அவன் “என்ன செய்வது? பெரும்பாலும் இறந்தகாலத்திலேயே வாழும்படி அமைக்கப்பட்டோம்” என்றான்.

அவள் தலைகுனிந்து மென்குரலில் “மீண்டு வந்தீர்களே, அதுவே நிறைவெனக்கு” என்றாள். அவன் சற்றே புரண்டு அவள் கையைப்பற்றி “முதற்கணம் உன்னை பார்த்தபோது உன் முதுமை என்னை துணுக்குற வைத்தது. ஏனெனில் என் உள்ளத்தில் நீ வளரவே இல்லை. என்னை மணந்து வந்த அதே கோலத்திலேயே உன்னை உளம் செதுக்கியிருக்கிறேன். ஆனால் சில கணங்களுக்குள்ளேயே இப்போது உன் முதுமையை விரும்புகிறேன் என்று தோன்றுகிறது” என்றான்.

அவள் கைகளில் புடைத்திருந்த நீல நரம்புகளை அழுத்தியபடி “முதுமை உன் தசைகளை குழைய வைத்திருக்கிறது. பிறிதொரு கனிவு உன் முகத்தில் குடியேறியிருக்கிறது. என் உள்ளத்திலும் உடலிலும் எழுந்துள்ள முதுமைக்கு அதுவே துணையென அமைய முடியும்” என்றான்.

அவள் புன்னகைத்து “இப்படி சொல்லி ஆற்றிக்கொள்கிறீர்களா?” என்றாள். “இல்லை, மெய்யாகவே உன் அகவைமுதிர்வை அழகின் உருமாற்றம் என்றே உணர்கிறேன்” என்று அவன் சொன்னான். “முன்பு உன் கன்னங்கள் இத்தனை கொழுவியதாக இருக்கவில்லை. உன் கழுத்திலும் தோள்களிலும் இந்த அழகிய வரிகள் விழுந்திருக்கவும் இல்லை.” அவள் குனிந்து தன் தோள்களை பார்க்க அவன் கைகளால் அவள் கழுத்தை தொட்டான். “மிக நுண்ணிய ஆரங்களை நீ சூடியிருப்பதுபோல் இந்தத் தோல்வரிகள்” என்றான். “இதை கவிஞர் தாமரை நூலிழைகள் என்கிறார்கள்.”

அவள் அவன் விழிகளுக்குள் நோக்கி “நீங்கள் சொன்ன பின்னர் அதை நானும் அழகென்று உணர்கிறேன்” என்றாள். மிக மெல்ல ஒரு இழுப்பு அவன் கையில் எழுந்தது. அதை காத்திருந்தவள்போல் அவன் அருகே படுத்தாள். அவன் கைகள் அவளை அணைத்து உடலுடன் சேர்த்துக்கொண்டன. “முற்றிலும் தனிமை. பதினான்கு ஆண்டுகள்” என்றான். அவள் மிகக் கூரிய நச்சு முள்ளொன்றை தன்னுள் உணர்ந்து “ஏன்? அவள் உடன் இருந்தாளே?” என்றாள். “ஆம், ஆனால் அவள் பேரரசி. நாங்கள் அவள் ஏவலர்” என்றான். அவள் மேலும் கருதி கணுக்கணுவென முன் சென்று “பேரரசியின் துணைவர் ஆகுகையில் பெருமிதம் அல்லவா எழவேண்டும்?” என்றாள்.

“ஆம், பெருமிதம் உண்டு. கூடவே விலக்கமும் உண்டு” என்றான்.

அவளை முத்தமிட்டான். அம்முத்தத்தினூடாக உடலணுக்கமும் ஆழ்ந்த அகவிலக்கமும் கொண்டு இருவரும் மூச்சிரைத்தனர். “என் குருதியில் பீதர்நிலம் உள்ளது. எங்கள் முகங்களில் சுருக்கங்கள் மிகுதி” என்றாள். “ஆம், நனைந்த மஞ்சள்பட்டுபோல” என அவன் அவள் கன்னங்களை வருடி முத்தமிட்டான். “நான் உன்னை நினைத்துக்கொண்டதெல்லாம் சோர்ந்து தனிமைகொள்ளும்போது மட்டுமே. ஆடைகளைந்து அமர்வதற்கான இடம் ஒன்று மானுடர் அனைவருக்கும் வேண்டும். எனக்கு அது உன் மஞ்சம்” என்றான்.

அவள் அச்சொற்களின் பொருளை முழுமையாக உள்வாங்கிக்கொள்ளவில்லை. “என்னை முற்றிலும் வெல்ல நான் ஒப்புக்கொள்ளும் ஒரு களம். நான் முழுதமையும் ஒரு பீடம்” என்று அவன் சொன்னான். ஒரு கணத்தில் அவன் சொன்னதனைத்தும் அவளுக்கு புரிய “என் தெய்வமே!” என்ற மெல்லிய முனகலுடன் கைகளாலும் கால்களாலும் அவனை அள்ளி தன் உடலுடன் அணைத்துக்கொண்டாள். வெறிகொண்டவள்போல அவன் முகத்திலும் தோள்களிலும் முத்தமிட்டாள். அவன் முகத்தை தன் முலைக்குவடுகளுக்குள் வைத்து இறுக்கிக்கொண்டாள். கேவி அழுபவன்போல் மெல்லிய முனகலொன்று அவனிடம் எழுவதை கேட்டாள்.

# குருதிச்சாரல் - 21

**பகுதி மூன்று : மலைச்சுனையின் ஓசை – 4**

உபப்பிலாவ்யத்தின் அவையில் அரசியருக்குரிய பீடத்தில் முன்னரே தேவிகையும் குந்தியும் அமர்ந்திருந்தனர். அவைச்சேடி வழிகாட்ட தேவிகையின் அருகிலிருந்த சிறுபீடத்தில் விஜயை அமர்ந்தாள். தேவிகை சற்றே தலை தாழ்த்தி “பிந்திவிட்டாய்” என்றாள். “ஆம்” என்ற விஜயை “துயின்றுவிட்டேன்” என்றாள். தேவிகை புன்னகைத்து “புரிகிறது” என்றாள். அவள் கையை மெல்ல தட்டி விஜயை புன்னகைத்தாள்.

தேவிகை அவள் விழிகளுக்குள் நோக்கி “தேவையிருக்கிறதே, இல்லையா?” என்றாள். விஜயை தலைகுனிந்து சிரிக்க “அதிலும் இன்று…” என்றாள். “ஏன்?” என்றாள் விஜயை. “இன்று பால்ஹிகரைப் பற்றி பேசிக்கொண்டோம்.” விஜயை நெஞ்சு படபடக்க “மெதுவாக” என்றாள். “என்ன மெதுவாக? அன்னை எதையும் கேட்கமாட்டார்” என்றாள் தேவிகை. விஜயை சற்றுநேரம் கழித்து “அது ஏன்?” என்றாள். “என்ன?” என்றாள் தேவிகை. “ஏன் அவை இரண்டும் இணைகின்றன?” தேவிகை புன்னகைத்த பின் “நாம் விரும்பப்படுகிறோம் என்பதனாலா?” என்றாள். “இல்லை, வெல்லப்படுகிறோம் என்பதனால்” என்றாள் விஜயை. “உன் நச்சுநா சேடியிடம் கேள், என்ன சொல்வாள் என” என்றாள்.

விஜயை திரும்பி நோக்க அபயை அருகே வந்து தலைதாழ்த்தினாள். “நாங்கள் இங்கு பேசிக்கொண்டிருந்ததைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய் என கேட்க விரும்பினோம்” என்றாள் தேவிகை. “தெரிகிறது” என்ற அபயை “அடிமைகளின் உவகை அது, உடையோனை ஏமாற்றுவதன் களி” என்றாள். தேவிகை சினத்துடன் நோக்க

புன்னகைத்து தலைவணங்கி அபயை அப்பால் சென்றாள். “அவளிடம் கேட்டிருக்கக்கூடாது” என்றாள் விஜயை. சட்டென்று நகைத்து “சரியாகவே சொல்கிறாள்” என்றாள் தேவிகை.

அவையில் குடித்தலைவர் ஒவ்வொருவராக வந்து அமரத் தொடங்கியிருந்தனர். நகுலனும் சகதேவனும் அவையமைவை மேல்நோட்டம் செய்துகொண்டிருந்தனர். இறுகக் கட்டிய தோலாடையும் தோள்களில் பரவிய குழல்கற்றைகளுமாக பீமன் வந்து அவனுடைய பீடத்தில் அமர்ந்தான். “விராடஇளவரசி வரவில்லையா?” என்று விஜயை மெல்லிய குரலில் தேவிகையிடம் கேட்டாள். “அவளுக்கு தலைசுழற்சியும் மயக்கமும் இருக்கிறது. ஐந்து நாட்களாக வாயுமிழ்கிறாள்” என்றாள் தேவிகை. “ஏன்?” என்று புருவங்கள் சுளிக்க விஜயை கேட்டாள். தேவிகை “அதுதான் என்று ஐயுறுகிறார்கள். இன்னும் ஓரிரு நாட்களுக்குப் பின்னரே எதையும் கூறமுடியும் என்கிறார்கள்” என்றாள்.

“அத்தனை விரைவாகவா? இளையோன் இங்கு ஓர் இரவு மட்டும்தான் உடன் தங்கினான் என்கிறார்கள்?” என்றாள் விஜயை. “ஓரிரவு போதுமே” என்று தேவிகை சொன்னாள். “ஆம், அதுவும் ஓர் அரசமுறைமை மட்டுமே என்றால் போதும்” என்றாள் விஜயை. தேவிகை புன்னகைத்தாள். விஜயை திரும்பி அபயையை நோக்கிய பின் விழிதிருப்பிக்கொண்டாள். அவர்கள் உரையாடுவதை உணர்ந்த குந்தி திரும்பிப்பார்க்க இருவரும் சொல்லடங்கி அமைதியாயினர்.

அர்ஜுனன் அவை புகுந்தபோது வாழ்த்தொலிகள் எழுந்தன. அவனை சுரேசர் அழைத்துச்சென்று பீடத்தில் அமர்த்தியதும் சௌனகர் அவை மேடைமேல் ஏறி அனைவருக்கும் வாழ்த்துரைத்து அரசரும் அரசியும் அவைபுகவிருப்பதை

அறிவித்தார். வெளியே மங்கல இசையும் குரவையொலியும் எழுந்தன. அவை எழுந்து நின்று வாழ்த்து கூவியது. சிறிய வாயிலினூடாக வந்த அறிவிப்புநிமித்திகன் அவை நடுவே நின்று வலம்புரிச் சங்கொலி எழுப்பி யுதிஷ்டிரரின் வரவை அறிவித்தான். மங்கலத்தாலங்களுடன் ஐந்து அணிச்சேடியர் அவைக்குள் நுழைந்தனர். இசைச்சூதர்கள் எழுவர் முழங்கியபடி தொடர்ந்து வந்தனர்.

வாழ்த்தொலிகள் முழங்க அரிமலர் பொழிய கைகூப்பியபடி யுதிஷ்டிரரும் திரௌபதியும் அவைக்குள் புகுந்து வணங்கிய பின் அரியணையில் அமர்ந்தனர். சௌனகர் அரசையும் குடியையும் கோலையும் வாழ்த்தி மங்கலச் சொல்லுரைத்தார். அந்தணர் மூவர் எழுந்து வேதம் ஓதி கங்கை நீர் தெளித்து யுதிஷ்டிரரை வாழ்த்தினர். பொற்தாலத்தில் கொண்டுவரப்பட்ட மணிமுடியை சௌனகரும் தௌம்யரும் எடுத்து அளிக்க யுதிஷ்டிரர் சூடிக்கொண்டார். தௌம்யர் அளித்த செங்கோலை வாங்கி அரியணையில் அமர்ந்து சூழ்ந்திருந்த அவையினர் வீசிய மஞ்சள் அரிசியையும் மலர்களையும் தலைதாழ்த்தி பெற்றுக்கொண்டார்.

‘இந்தச் சிற்றூரின் அரசனென்று இருப்பது இழிவு, அதை அவர் உணர்ந்திருக்கிறாரா என்ன?’ என்று விஜயை எண்ணிக்கொண்டாள். அக்கணமே திரும்பி விழிகளை சந்தித்த தேவிகையும் அதையே எண்ணுவதை உணர்ந்தாள். புன்னகைத்து முகத்தை திருப்பிக்கொண்டாள். உணர்வுகள் வெளிப்படவேண்டாம் என்பதற்காக தலைஆடையை இழுத்து மறைத்துக்கொண்டு கைகளை மடியில் வைத்தாள். வளைகள் குலுங்கிய ஓசை கேட்டு திரும்பிப்பார்த்த குந்தி

அவ்வுணர்வுகளை புரிந்துகொண்டவள்போல ஒருகணம் விழிநிலைத்த பின் திரும்பினாள்.

அவைவணக்கங்களும் குடியினர் அரசருக்கு திருமுன்வைப்பு அளிக்கும் சடங்குகளும் முடிந்த பின் யுதிஷ்டிரர் முறையான அரசாணைகளாக அந்தணர்களுக்கு கொடையளிக்கும் மூன்று நறுக்குகளை வெளியிட்டார். அதன்பின் சௌனகர் அவை மேடைமேல் எழுந்து அனைவருக்கும் வாழ்த்து கூறி சஞ்சயன் திருதராஷ்டிரரின் தூதுச் செய்தியுடன் அவைபுகுந்திருப்பதை அறிவித்தார். அவை அதைத்தான் எதிர்பார்த்துக்கொண்டிருந்தது. “இன்று காலை அஸ்தினபுரியிலிருந்து பேரரசர் திருதராஷ்டிரரின் தனிச்செய்தியுடன் அவரது அணுக்கராகிய சஞ்சயன் இங்கு வந்திருக்கிறார். அரசருக்கும் அவையினருக்கும் பேரரசரின் செய்தியை முன்வைக்கவேண்டுமென்று அவரிடம் இந்த அவை கோருகிறது” என்றார்.

சஞ்சயன் சற்றே கூன் விழுந்த சிறிய உடலும் பெரிய குரல்வளையும் நரம்புகள் தெரிந்த நீண்ட கைகளும் ஒட்டிய வயிறும் கொண்டிருந்தான். ஒருகணத்தில் வேதவேள்விக்குப் பிந்தைய பெருங்கொடையாட்டில் நிரையில் கைநீட்டி நின்றிருக்கும் பல்லாயிரம் எளிய அந்தணர்களில் ஒருவனென்று எண்ணும்படி தோன்றினான். சூதன் உடலில் எழுந்த அந்தணன். அவையிலெழுந்து அரசரையும் அவையையும் கைகூப்பி வணங்கியபின் உரத்த குரலில் அவன் பேசத்தொடங்கியதுமே விஜயை சிறிய துணுக்குறலுடன் அவன் விழியறியா பிறிதொருவன் என்றுணர்ந்தாள்.

அவன் குரல் நன்கு அமைக்கப்பட்ட வெண்கல மணியின் கூர்கொண்டிருந்தது. அந்த அவையில் அந்தக் கணம் அவன்

வாயிலிருந்து எழுந்தாலும்கூட அச்சொற்கள் அவனினூடாக வேறெங்கிருந்தோ ஒலிப்பவை என்று தோன்றியது. அவன் உச்சரிப்பே அவன் செம்மொழி கற்றுத்தேர்ந்தவன் என காட்டியது. சொல்லடுக்குகளில் இருந்த பிசிறற்ற இணைவு அவன் நூல்களில் திளைப்பவன் என தெரிவித்தது. ஆனால் கற்று அறிந்த நூல்கள் எவையும் அவன் உடலிலோ விழியிலோ முற்றிலும் தெரியவில்லை என்பதன் விந்தையைத்தான் அவள் எண்ணிக்கொண்டாள்.

ஐந்து பேர் இருக்கும் ஓர் அவையில் ஓரிரு சொற்றொடர்களுக்குள்ளேயே அங்கிருப்போர் அனைவரும் முற்றிலும் அவனை மறந்துவிடக்கூடும். ஓர் உயிரற்ற பொருளென அவர்களின் நுண்புலனும் அவனை பிழையாக எண்ணிவிடக்கூடும். ஏன் அவனை இளைய யாதவருடன் இணைத்து எண்ணிக்கொள்கிறோம் என்று அவள் திகைப்புடன் தனக்குள் உசாவிக்கொண்டாள். அவ்விணைவு நிகழ்வதற்கான எந்த முதல்வைப்பும் எண்ணத்திற்கு சிக்கவில்லை. அவன் ஒருமுறையேனும் இளைய யாதவரை நேரில் பார்க்கவோ சொல்லாடவோ வாய்ப்பிருந்திருக்காது என்றே தோன்றியது.

“இவன் ஏன் அவரை நினைவூட்டுகிறான்?” என்று தேவிகை மெல்ல கேட்டாள். அதை எண்ணிக்கொண்டிருந்தாலும் செவியொலியாகக் கேட்டபோது விஜயை திடுக்கிட்டாள். “ஆம்” என்றாள். “ஒரு மன்றுமேடையில் அவர் சொற்களை இவன் எழுந்து சொல்வதுபோல உளமயக்கு ஏற்பட்டது எனக்கு” என்றாள் தேவிகை. “இவன் கற்றவன்” என்றாள் விஜயை. “கற்றவர் அமரும் அவைகள் இங்கே பலநூறு” என்று தேவிகை சொன்னாள். “இவன் முற்றிலும் ஒளியற்றவன், அவரோ அருமணி.”

விழிதிருப்பிய கணம் ஒரு விந்தையான உளமயக்கு அவளுக்கு ஏற்பட்டது. அந்த அவை இருக்கும் காலவெளியுடன் தொடர்பின்றி வேறெங்கோ நின்றவனாக சஞ்சயன் பேசிக்கொண்டிருந்தான். முற்றிலும் அனைத்திலிருந்தும் விடுபட்டு நிற்கும் இவன் யார்? அச்சொல் உள்ளத்தில் எழுந்ததுமே விஜயை மெய்ப்பு கொண்டாள். இவனும் அவரைப்போல முற்றிலும் அகன்று நின்றிருக்கிறான். இங்கு நிகழும் எதிலும் எவ்வகையிலும் உளம் அளிக்காது நோக்கி நின்றிருப்பவர்கள் அவர்கள் இருவருமே.

இம்மானுடப்பெருந்திரளின் பதற்றமும் சினமும் விழைவும் வஞ்சமும் துயரும் தனிமையும் இவனுக்கும் ஒரு பொருட்டே அல்ல. இவையனைத்தும் நிகழ்ந்து மொழி பதிவென்றாகி ஓலை அடுக்குகளின் எழுத்துகளென உருமாறி மந்தணச் சுவடி அறைகளின் தடுக்குகளில் ஒடுங்கிய பின் காலத்தின் வேறேதோ மூலையிலிருந்து கிளம்பிவந்து எடுத்து புழுதி போக மேலாடையால் மெல்லத் துடைத்து ஒவ்வொன்றாக படித்துக்கொண்டிருக்கும் ஒருவனின் விழிகள் இவை.

அவ்வெண்ணம் தோன்றியதுமே அவள் சஞ்சயன்மேல் கடும்வெறுப்பை அடைந்தாள். அவன் தன்னை நோக்கி ஒரு சொல் சொன்னால்கூட நெய் எரிகொண்டதென பற்றி எழுவோம் என்று தோன்றியது. இங்கிருக்கும் எவரும் உனக்கு மானுடரே அல்லவென்றால் இந்த அவையில் எழுந்து எதை பேசிக்கொண்டிருக்கிறாய்? ஆணவம் மிகுந்தவன். ஆணவத்தாலேயே அகன்றவன். அல்லது அகன்றிருப்பதே ஆணவமா? அகன்றிருப்பவர்கள் அளியற்றவர்கள். அன்பென்றும் வெறுப்பென்றும் விழைவென்றும் உறுதியென்றும் பற்றென்றும் மீட்பென்றும் இப்புவியுடன் தொடர்பு கொண்டிருக்கிறவர்கள்

மட்டுமே நம்மிடம் பேச தகுதி கொண்டவர்கள். இவன் கருவறை தெய்வங்களின் இரக்கமற்ற குளிர்ந்துறைந்த கன்மை கொண்டவன்.

சஞ்சயன் முறைமைப்படி யுதிஷ்டிரரின் கொடிவழியையும் கோலையும் மணிமுடியையும் அரியணையையும் குடிச்சூழலையும் வாழ்த்தி முகமனுரைத்தான். பாண்டவர் நால்வரையும் அரசி திரௌபதியையும் தனித்தனியாக புகழ்மொழி கூறி வணங்கினான். உபப்பிலாவ்யத்தின் அந்தச் சிற்றவைக்கு வாழ்த்துரைத்த பின் தன் செய்திக்கு வந்தான். "அரசருக்கும் அவைக்கும் என மாமன்னர் திருதராஷ்டிரரின் தனிச்செய்தியுடன் இங்கு வந்துள்ளேன். குருமரபின் குருதித் தொடர்ச்சியென இன்று எஞ்சியிருக்கும் திருதராஷ்டிரரின் சொல் இந்த அவையில் என் நாவினூடாக எழுகிறது. சொல்லில் அமைகிறது ஆத்மா என்கின்றன நூல்கள். சொல்லென இங்கு அவர் அவைநிற்கிறார். அவர் வாழ்க!"

"அவையோரே, இங்கு வருவது வரை அச்செய்தியின் புறத்தை பேரவைக்கும் அகத்தை அரசரின் தனிச் சிற்றவைக்கும் அளிக்கவேண்டுமென்று பகுத்துக்கொண்டிருந்தேன். இக்கணம் இவ்வவையில் எழுந்தபோது ஒன்றுணர்ந்தேன். மாமன்னரின் அவ்வுணர்வுகள் அனைத்துமே பாண்டவ முதல்வருக்கோ இளையோருக்கோ மட்டும் உரியவை அல்ல. இப்பேரவை நோக்கி, இதன் பின்புலமாக அமைந்துள்ள பாரதவர்ஷத்தை நோக்கியே அவருள்ளம் வெளிப்பட்டிருக்கிறது" என்றான் சஞ்சயன். அவையினரின் விழிகளை விஜயை நோக்கினாள். அவர்கள் எதை எதிர்பார்க்கிறார்கள்?

"அவர் இதற்குமுன் கூறாச் சொற்கள் ஏதும் இப்போது எழவில்லை. மேலென வெறும் விழிநீர் மட்டுமே அவரிடம்

இருந்து எழுந்திருக்கிறது” என்றான் சஞ்சயன். “இங்கு நான் அவருடையதென சொல்லும் அத்தனை சொற்களும் விழிநீர்த்துளிகளே. பாண்டவ முதல்வரே, இளையோரே, தந்தையென எழுந்து நின்று உங்கள் தலைதொட்டு வாழ்த்தி குருவின் கொடிவழி வந்த திருதராஷ்டிர மாமன்னர் இவ்வாறு உரைக்கிறார். மைந்தரே, எந்நிலையிலும் போர் ஒழிக! போரெனில் கொலை. கொலையில் நன்றென்றும் கொடிதென்றும் இல்லை. உடன்பிறந்தார் குருதிகொண்டு எவரும் இப்புவியில் இன்பத்தையும் புகழையும் அடையமுடியாது.”

“பின்னர் மண்டியிட்டு உங்களை அள்ளி நெஞ்சோடணைத்து கௌரவரின் தந்தை இவ்வாறு கோருகிறார். இனியவர்களே, களத்தில் என் மைந்தர் குருதி சிந்தி வீழ்வதைக் காணும் தீயூழை நீங்கள் அளிக்கலாகாது. என் மைந்தருக்கு எத்தீங்கும் நிகழலாகாது. எளிய தந்தையென என் கண்ணீர் உங்கள் காலடியில் விழுகிறது. ஆணையென்றல்ல, மன்றாட்டென்று என் சொற்கள் அமைக! அளிகூர்க! யுதிஷ்டிரா, உன் இளையோர் ஏவும் அம்பனைத்தும் என் நெஞ்சுக்கே என்றுணர்க! ஒரு சொல்லே நான் கோருவது. மைந்தர்களே, என் மைந்தர்களை கொல்லற்க!” சஞ்சயன் கைகூப்பி தலைவணங்கினான்.

யுதிஷ்டிரரும் இளையோரும் அவையோரும் அச்சொற்களை முற்றிலும் எதிர்பார்க்கவில்லை என்று தெரிந்தது. சஞ்சயன் சொல்லி முடித்த பின்னரும் அவை ஓசையின்றி திகைத்து அமைந்திருந்தது. விஜயை பெருமூச்சு எழ அதை அடக்கியபடி தேவிகையை நோக்கினாள். அவள் விழிகள் பக்கவாட்டில் இரு பெரிய நீர்மணிகள் என

மின்னிக்கொண்டிருந்தன. குந்தி அரக்குச் சிலை என அமைந்திருந்தாள். ஒரு கூட்டத்தின் அமைதி என்பது எத்தனை எடைகொண்டது என்று அவள் உணர்ந்தாள்.

அரசரையும் இளையோரையும் குடித்தலைவர்களையும் விழியோட்டி நோக்கியபின் சௌனகர் "இந்த அவையில் அரசர் எம்முடிவை எடுக்க வேண்டுமென்று உரைக்கவிரும்பும் குடித்தலைவர்கள் தங்கள் எண்ணத்தை கூறலாம்" என்றார். அதன் பின்னரும் குடியவை மெல்லிய மெய்நடுக்கு கலந்த அமைதியுடன் அமர்ந்திருந்தது. யுதிஷ்டிரர் மெல்ல அசைந்து "உரைக்கப்பட்ட சொற்களுக்கு என்ன பொருள் என்பதை என் உள்ளம் இன்னும்கூட முழுதும் உள்வாங்கவில்லை. ஒன்றுமட்டும் உரைக்கிறேன், தந்தையென எழுந்து நின்று திருதராஷ்டிரர் சொல்லும் ஒவ்வொரு சொல்லுக்கும் நாங்கள் கட்டுப்பட்டவர்கள்" என்றார்.

அவை மெல்ல தளர்ந்தது. அது எதிர்பார்த்திருந்ததும் அச்சொற்களையே என முகங்களின் இயல்புமீளல் காட்டியது. "தந்தையின் ஆணையை மீறி ஒருகணமேனும் எண்ண எனக்கு இயலாது. ஆகவே இக்கணத்தில் இந்த அவையில் பாண்டவப் படைத்தரப்பு கௌரவரை போரில் சந்திப்பதென்னும் வாய்ப்பு முழுமையாகவே தவிர்க்கப்படுகிறது. அதை குறித்து எவரும் எச்சொல்லும் என்னிடம் உரைக்கவேண்டியதில்லை. பிறிதென்ன என்று மட்டும் நாம் பேசுவோம்" என்றார். தான் வேண்டியதை உரைத்துவிட்ட நிறைவுடன் யுதிஷ்டிரர் கால்களை நீட்டிக்கொண்டார்.

மீண்டும் அவை அமைதி கொண்டிருந்தது. சௌனகர் அர்ஜுனனிடம் "இளையவரே, தங்கள் எண்ணத்தை சொல்க!" என்றார். அர்ஜுனன் எழுந்து வணங்கி "மூத்தவருக்கு தந்தை

எப்படியோ அப்படியே எனக்கு மூத்தவர். அவரது சொல் எதுவோ அதுவே எனக்கு ஆணை. நான் உரைப்பதற்கு எதுவுமில்லை” என்றான். சௌனகர் சகதேவனை நோக்கி “இளையவரே, உங்களை நோக்கியே இந்த அவை காத்திருக்கிறது என்று அறிவீர்கள்” என்றார். சகதேவன் எழுந்து “தந்தையின் ஆணை மைந்தரென நம்மை முற்றாக கட்டுப்படுத்தும். உண்மையில் அவர் நம்மிடம் இரந்து சொல் கோரும்வரை நாம் சென்றதே பெரும்பிழை. ஆகவே போரை முற்றிலும் தவிர்ப்போம். அதைக் குறித்து சொல் இனி இல்லை” என்றான்.

அவை “ஆம்! ஆம்! ஆம்!” என கார்வைகொண்டது. “அதன் பொருளென்பது நமக்கு அவர்கள் நாம் உரிமைகொண்ட நிலத்தையோ நகரையோ அளிக்கப்போவதில்லை என்பதே. சஞ்சயன் அதை தெளிவுபடுத்தவேண்டும்” என்றான் சகதேவன். சஞ்சயன் “என் தூதில் அச்சொற்கள் இல்லை. எளிய தந்தையொருவரின் விழிநீரை மட்டுமே இந்த அவைக்கு நான் கொண்டுவந்தேன்” என்றான். சகதேவன் “அது போதும். இந்தத் தூது துரியோதனன் அறியாமல் இங்கு வந்துள்ளது என்பதே அதை உணர்த்துகிறது. நாம் எண்ண பிறிதொன்றுமில்லை” என்றான்.

“அவையீரே, அரசே, நாம் நம் முடியுரிமையை, மண்ணுரிமையை முற்றிலும் இந்த அவையில் இப்போதே கைவிடவேண்டும். எவரும் மறுக்கமுடியாத குருதியடையாளமே நம் மூத்தோர் நமக்களித்த செல்வம் எனக் கொள்வோம். மூத்தவரின் காண்டீபம் துணையுள்ளது. இரண்டாமவரின் பெருந்தோள்கள் உடனுள்ளன. நம் நிலத்தை நாம் வெல்வோம். நம் குடிவழிகளுக்கு புதிய ஒரு மணிமுடியை உருவாக்கிச்

செல்வோம். இன்னுமொரு பதினைந்தாண்டு காலம் கான்வாழ்வும் அலைவுகளும்தான் நமக்கு தந்தை அளிக்கும் கொடை எனில் அவ்வாறே ஆகுக!” என்றான் சகதேவன்.

சகதேவனின் சொற்களுக்காக அவை காத்து அமைந்திருந்தது. அவன் “தந்தையர் மைந்தருக்கு அளிக்கும் நற்பெயரும் புகழும் செல்வமும் மட்டுமல்ல இழிசொல்லும் பழியும் கடனும் கூட அவர்களின் நல்வாழ்த்தென்றே கொள்ளப்படவேண்டும். தந்தையர் மைந்தருக்களிப்பவை எவையாயினும் இறுதியில் அவை நலம்பயப்பவையே என்று சொல்கின்றன நூல்கள். நம் தந்தை அளித்த இவற்றை தலைகொள்வோம். நன்றே நமக்கு நிகழும்” என்றான்.

யுதிஷ்டிரர் “இளையோனே, நீ பிறிதொன்று சொல்லமாட்டாய் என்று எனக்குத் தெரியும். இன்று தந்தைசொல் எழுந்தபோது ஒருகணத்தில் என் உள்ளம் தெளிவு கொண்டது. இத்தனை நாள் அலைப்புண்டு நிலையழிந்திருந்தேன். ஆற்றா கொடுநோயொன்று நீங்கியதென்று நிறைவடைகிறேன். இனி நாம் எண்ணுவதற்கேதுமில்லை” என்றார்.

சகதேவன் “மூத்தவரே, எஞ்சுவது ஒரு வினா மட்டுமே. நம் குலமகள் அவை நடுவே சிறுமையுற்று நின்றாள். அது மண்ணுக்கும் முடியுரிமைக்குமான பூசல் சார்ந்ததல்ல. பெண்ணுக்கும் ஆணெனை எழும் கீழ்மைக்குமான பூசல். மண்ணையும் முடியையும் துறந்து போகலாம். அன்றுரைத்த வஞ்சினச் சொல்லைத் துறந்து நாம் போகலாகாது. மண்ணையும் முடியையும் துறந்தால் நாம் போற்றப்படுவோம். அவ்வஞ்சினத்தை துறந்து போனால் தலைமுறைகள்தோறும் இழிவு நம்மை தொடர்ந்து வரும். நம் கொடிவழிகள் நம்மை தூற்றும்” என்றான்.

“அறிக, நாம் கொண்டுள்ள வஞ்சம் நம் குலமகளுக்காக அல்ல. குலமகளிர் என இப்புவியில் எழுந்த அத்தனை பெண்டிருக்காகவும்தான். நாம் எண்ணியும் உணரமுடியாத நெடுங்காலத்தில் பிறந்தெழுந்துவரும் அனைத்து தலைமுறைகளுக்காகவும் அவ்வவையில் நின்று வஞ்சினம் உரைத்தோம். அதை துறக்கவிருக்கிறோமா? அது ஒன்றே இவ்வவையில் நாம் எண்ணிமுடிக்கவேண்டியது” என்றபின் கைகூப்பி அவன் அமர்ந்தான்.

யுதிஷ்டிரர் தலையை கையால் பற்றியபடி “ஆம், அதை நம்மால் துறக்க இயலாது. பதினான்கு ஆண்டுகள் ஒரு நாள்கூட ஒழியாது என் தலைக்குள் ஓடியது மண்ணோ முடியோ அல்ல, அவ்வஞ்சமே. எரிந்தெழுந்த பேருருவென பிரம்மத்தை என் கண் முன் கண்டபோதுகூட அங்கு சென்று அதுவென்றாகி அமையாமல் இவ்வுருக்கொண்டு இங்கு நான் மீண்டது அவ்வொரு வஞ்சத்துளி என்னில் எஞ்சியிருந்ததனால்தான். மெய்யாகவே இந்த அவையிலிருந்து இதையே நான் சொல்லவேண்டியிருக்கிறது. அவ்வஞ்சத்திலிருந்து என்னால் விலக இயலவில்லை. ஒருகணமேனும் நான் அவ்வஞ்சத்தை பொறுத்துக்கொண்டதும் இல்லை. அனல்மேல் சருகென சொற்களை அள்ளி அள்ளி போட்டுக்கொண்டிருக்கிறேன்” என்றார்.

சகதேவன் “முதல்வஞ்சம் உரைத்தவர் பாஞ்சாலத்தரசி. அவ்வஞ்சத்தை அவர் கடக்கிறாரா என்று அறிய விரும்புகிறேன்” என்றான். திரௌபதி எங்கோ விழியமைத்து கனவிலென அமைந்திருந்தவள் கலைந்தெழுந்து விழி அளித்து மெல்லிய குரலில் “நான் முன்னரே மும்முறை இதை சொல்லிவிட்டேன். இப்புவியில் எவர் மீதும் எனக்கு

வஞ்சமில்லை" என்றாள். அவையில் ஒரு வியப்பொலி மெல்லிய இரைச்சலென எழுந்தது. "மானுடர் மிக மிகச் சிறியவர் என்றே இவ்வாண்டுகளினூடாக வாழ்ந்தறிந்திருக்கிறேன். ஆகவே அவர்கள் செய்யும் பிழைகளும், சூடும் சிறுமைகளும், கொள்ளும் வஞ்சங்களும் மிக மிகச் சிறியவையே. பொருட்படுத்தி நினைவுகூர்ந்து கொண்டு உடன்செல்லும் தகுதி படைத்த மானுடச் செயல் எதுவும் இப்புவியில் இல்லை."

அவையை நோக்கி "அனைத்தும் கடந்து போகட்டும். இன்றுவரை வாழ்ந்துவந்த என் வாழ்விலிருந்து ஒரு சொல்லையேனும் நாளை நிகழும் என் வாழ்வுக்கு கொண்டுசெல்ல நான் எண்ணவில்லை. என் அன்னையரின் குடிமரபை, நான் இருந்த அரசை, கொழுநரை, ஈன்ற மைந்தரை, கொண்டுள்ள இப்பெயரையும்கூடத் துறந்து பிறிதொரு வாழ்வுக்குச் செல்லவே விழைகிறேன். முதுதந்தையின் ஆணை அதற்கொரு தொடக்கமாகுமென்றால் அது நன்றே" என்று அவள் சொன்னபோது பலர் அறியாது கைகூப்பினர்.

சகதேவன் "இனி அவையெழுந்து உரைக்கவேண்டியவர் மூத்தவர்" என்றான். பீமன் குழல் கற்றைகள் முகத்தில் சரிய தலைகுனிந்து மடியில் கோர்த்த பெருங்கைகளுடன் அமர்ந்திருந்தான். "மூத்தவரே..." என்றான் அருகே அமர்ந்திருந்த நகுலன். பீமனில் அசைவெழாதது கண்டு மீண்டும் "மூத்தவரே..." என்றான். பீமன் எழுந்து "ஆம்" என்றான். உரத்த குரலில் "மெய் உரைப்பதென்றால் என் வஞ்சத்தை ஓர் அணுவும் நான் குறைக்கவில்லை. எஞ்சிய வாழ்நாள் முழுக்க அவ்வஞ்சத்தை எரியவிட்டே வாழவும் செய்வேன். ஒரு தருணத்திலும் என் குலமகளின் பொருட்டு அவைநின்று நான்

உரைத்த சொற்களில் ஒரு மாத்திரையேனும் பின்னெடுக்க மாட்டேன்” என்றான்.

“ஆனால் எந்தை இட்ட ஆணை என்னை முழுக்க ஆள்வதே. குலமூதாதையென தருக்கி நின்று அவர் சொல்லியிருந்தால் அதை உதறி முன்சென்றிருப்பேன். குலத்தின்மேல் சொல்லாண்மை அற்றவர் குலமூதாதை என்று ஆணையிடும் உரிமையற்றவர். குடிமூத்தார் என்றும் அவர் நின்று ஆணையிடமுடியாது, ஏனெனில் குடிநெறியனைத்தையும் கைவிட்டுவிட்டு அங்கு அமர்ந்திருக்கிறார். ஆனால் மைந்தரை முன்வைத்து எளிய தந்தையென்று அவர் கூறிய சொல் என்னை முற்றிலும் ஆள்கிறது. எந்தையின் கண்ணீரை அருகிலென காண்கிறேன். அதற்கப்பால் ஒரு சொல்லும் என்னுள் இல்லை.”

சஞ்சயனிடம் திரும்பி “சஞ்சயரே சென்று சொல்க, அவர் சொல் தலைகொள்ளப்பட்டது என்று. என் கை எத்தருணத்திலும் அவர் மைந்தருக்கெதிராக எழாது என்று. கூடவே இதையும் உரையுங்கள், அவர் மைந்தனாகிய நான் ஒவ்வொரு கணமும் அனல்பற்றி எரிந்தபடி எஞ்சிய வாழ்நாளெல்லாம் திகழவே அவர் ஆணையிட்டிருக்கிறார் என்று. உடல்நீத்து விண்ணேகிய பின்பும்கூட ஒருகணமும் அமைதியற்றே இருப்பேன் என்று. மண்ணிலிருந்து வரும் ஒரு துளிநீரையோ அன்னத்தையோ ஏற்கும் தகுதியவற்றனாக மூச்சுலகில் வாழ அவர் எனக்கு ஆணையிட்டிருக்கிறார். அவ்வாணையும் தலைகொள்ளப்பட்டது என்று அவரிடம் சொல்க!” என்றபின் திரும்பி அவையிலிருந்து வெளியே சென்றான்.

அவன் காலடியோசை அவைக்குள் எதிரொலித்து அடங்கியது. தொலைவில் அது நுண்ணொலியாக தொடர்வதாக விஜயைக்கு

தோன்றியது. அவையில் நிகழ்ந்த எந்த உணர்வையும் பெற்றுக்கொள்ளாதவனாக சஞ்சயன் நின்றான். சகதேவன் “அன்னையே, உங்கள் சொல்லும் எழுந்தால் அவைநிறைவு செய்யலாம்” என்று குந்தியை நோக்கி சொன்னான். குந்தி தலைகுனிந்து அமர்ந்திருந்தாள். விஜயை தேவிகையை நோக்க தேவிகை குந்தியின் கைகளை மெல்ல தொட்டாள். குந்தியின் விரல்கள் நடுங்கிக்கொண்டிருப்பதை விஜயை கண்டாள்.

சகதேவன் “அன்னையே, இந்நிலத்தில் தொல்குடி முறைமையின்படி தந்தை சொல்லை மீற ஆணையிடும் உரிமை அன்னையருக்கு உண்டு. நீங்கள் உங்கள் மைந்தருக்கு ஆணையிடலாம். இக்கணம்முதல் அவர் உங்கள் தந்தையல்ல என்றுகூட சொல் வகுக்கலாம். உங்கள் சொல்லில் உள்ளது அவை முடிவு” என்றான். குந்தி மேலும் தலைகுனிய வெண்பட்டாடை அவள் தலையிலிருந்து சரிந்து முகத்தை மறைத்தது. அவள் கண்களிலிருந்து கண்ணீர் மடிமேல் வைக்கப்பட்ட முழங்கையில் சொட்டுவதை விஜயை கண்டாள்.

தேவிகையிடம் மெல்ல “என்னடி?” என்றாள். ஒன்றுமில்லை என்று தலையாட்டிய பின் தேவிகை குந்தியின் கைகளை பற்றினாள். குந்தி மேலும் நடுங்கிக்கொண்டிருந்தாள். திரௌபதி அங்கில்லை என அமர்ந்திருப்பதை விஜயை கண்டாள். குந்தியின் வலக்காலும் வலக்கையும் சுண்டியிழுக்கப்பட்டதுபோல் அதிர்ந்தன. இருக்கையின் ஒருபக்கமாக சரிந்து விழுந்தாள். தேவிகை எழுந்து அவளை மெல்ல தூக்கினாள். சேடி ஓடிவந்து “என்ன? என்ன?” என்றாள். தேவிகை “நினைவிழந்துவிட்டார்… களைப்புதான்” என்றாள்.

# குருதிச்சாரல் - 22

**பகுதி மூன்று : மலைச்சுனையின் ஓசை – 5**

மரப்படிகளின் ஓசை கேட்டதும் தேவிகை விஜயையின் கையை தொட்டு "அரசர்" என்றாள். "எப்படி தெரியும்?" என்றாள் விஜயை. "அவருடைய காலடி ஓசைதான்" என்றபடி தேவிகை எழுந்து வெளியே சென்றாள். சகதேவனின் காலடியோசை தனக்குத் தெரியாது என்று எண்ணியபடி விஜயை எழுந்து அறைவாயிலில் நின்றுநோக்க கீழிருந்து மரப்படிகளில் யுதிஷ்டிரர் ஏறிவருவதை கண்டாள். தொடர்ந்து நகுலனும் சகதேவனும் வந்தனர். தேவிகை யுதிஷ்டிரரை எதிர்கொண்டு கைகூப்பி "வருக, அரசே!" என்றாள். யுதிஷ்டிரர் "அன்னை எப்படி இருக்கிறார்?" என்றார். "விழித்துவிட்டார்கள். ஆனால் ஒன்றும் பேசவில்லை" என்றாள் தேவிகை .

அவர்களுக்குப் பின்னால் பெரிய கால்களை ஓசையின்றி எடுத்துவைத்து பீமன் மேலேறி வந்தான். அவன் பேருருவம் ஒரு வெண்நிழலென எழுவதாக அவளுக்குத் தோன்றியது. யுதிஷ்டிரர் அறைவாயிலில் நின்று விஜயையிடம் "உள்ளே நுழையலாமா என்று அன்னையிடம் கேட்டு சொல்க, அரசி!" என்றார். திடுக்கிட்டு "வாழ்த்துகிறேன், அரசே" என்றபின் விஜயை அறைக்குள் திரும்பிப்பார்த்தபோது குந்தி கண்மூடி மஞ்சத்தில் படுத்திருந்தாள். துயிலிலென மூச்சு ஏறி இறங்கிக்கொண்டிருந்தது. ஆனால் இமைகளுக்குள் விழிகள் உருள்வது தெரிந்தது. விஜயை "சற்று பொறுங்கள்" என்றபின் அறைக்குள் சென்றாள்.

குந்தியின் அருகே குனிந்து "அன்னையே, அரசர் தங்களை பார்க்க வந்துள்ளார்" என்றாள். குந்தி உதடுகளை அழுத்திக்கொண்டு வாய்நீரை விழுங்கினாள். "அவர்களை

உள்ளே வரச் சொல்லலாமா, அன்னையே?” என்றாள் விஜயை. குந்தி விழிதிறக்கவோ சொல்லெடுக்கவோ இல்லை. நெஞ்சு மட்டும் மெல்ல அசைந்தது. ஒருசிலகணங்கள் பொறுத்துவிட்டு “அவர்களை உள்ளே அழைக்கிறேன், அன்னையே” என்றாள் விஜயை. பின்னர் வெளிவந்து “உள்ளே வருக, அரசே!” என்றாள்.

யுதிஷ்டிரர் கூப்பிய கைகளுடன் தலைகுனிந்து சிறிய மஞ்சத்தறைக்குள் நுழைந்தார். நகுலனும் சகதேவனும் தொடர்ந்து வந்து அவருக்குப் பின்னால் நின்றனர். வாயிலை முற்றாக அடைத்தபடி வந்த பீமன் நன்றாக தலைகுனிந்து உள்ளே வந்து மறுபக்கமிருந்த சாளரத்தருகே சென்று அதில் சாய்ந்து வெளியே நோக்கியபடி நின்றான். யுதிஷ்டிரர் அமர்வதற்காக சிறிய மூங்கில் பீடமொன்றை இழுத்துப்போட்டாள் விஜயை. அவர் அதில் அமர்ந்தபடி “அன்னையே, தங்கள் உடல்நலம் மேம்பட்டிருக்கிறதென்று எண்ணுகிறேன்” என்றார்.

குந்தியின் கழுத்தில் மீண்டும் வாய்நீர் விழுங்கும் அசைவு ஏற்பட்டது. “அன்னையே, எங்கள் தரப்பில் ஏதேனும் பிழை இருந்தால் பொறுத்தருள்க! எதன்பொருட்டு தாங்கள் உளக்கொதிப்படைந்தீர்கள் என்று தெரியவில்லை. எதன்பொருட்டென்றாலும் உங்கள் மைந்தர் உங்கள் காலடியில் வணங்கி கனிவை கோர வந்துள்ளோம். தாங்கள் உடல்நலம் தேறி எழவேண்டும்” என்றார். குந்தி மறுமொழி உரைக்காததைக்கண்டு யுதிஷ்டிரர் திரும்பி சகதேவனை பார்க்க சகதேவன் அருகே வந்து “தாங்கள் அவையில் நான் எழுப்பிய சொற்களுக்கு மறுமொழி ஏதும் உரைக்கவில்லை. தங்களுக்கு மாற்றுரை உண்டென்றால் அதை இப்போது உரைக்கலாம், அன்னையே” என்றான்.

குந்தியின் கண்கள் அதிர்ந்தன. உதடுகள் இழுபட்டு கன்னம் ஒருபக்கமாக கோணியது. அவள் வலக்கை துடித்து இழுபடுவதை விஜயை கண்டாள். “இப்போது பேசவேண்டாமே” என்று சொல்ல அவள் வாயெடுப்பதற்குள் குந்தி விழிதிறந்து “அவ்வினாவை உனது இறுதிமுடிவை அறிவிப்பதற்கு முன் என்னிடம் கேட்டிருக்கவேண்டும், அறிவிலியே” என்றாள். முதுமையில் சிவந்து சுருங்கிய அம்முகத்தில் தெரிந்த கடும்வஞ்சம் விஜயையை அச்சுறுத்தியது. முதுமையில் தசைதளர்ந்த முகம் வஞ்சத்தையும் கசப்பையும் மேலும் ஆற்றலுடன் வெளிப்படுத்துகிறதா?

ஈரமான விழிகள் வெறிக்க, சிறிய வாய் திறந்து வெண்பற்கள் வெளித்தெரிய, கடுஞ்சினத்தால் சிரிப்பென்றே தோன்றிய முகஅமைப்புடன் மூச்சிரைக்க குந்தி சொன்னாள் “உன் முடிவை அவை கேட்க அறிவித்த பின் என்னிடம் கேட்கிறாய் என்றால் என்ன பொருள்? நான் உன் ஏவல்நாய் அல்லவா?” சகதேவன் “அன்னையே, நான் அவையில் கூறிய அனைத்து முடிவுகளையும் மறுத்து கடக்க உங்களுக்கு உரிமை உண்டு என்று சொல்லியே நான் அதை கோரினேன்” என்றான்.

“கீழ்மகனே!” என்று அவனை நோக்கி சீறியபடி கையூன்றி எழ முயன்றாள் குந்தி. “போரின் முழுப் பொறுப்பையும் என் மீது சுமத்துகிறாயா? முழுக் குருதியையும் என் கையிலிருந்து நான் பெருக்கினேன் என்று கொடிவழிகள் எண்ணவேண்டுமென்று வகுக்கிறாயா?” என்றாள். “அவ்வாறல்ல…” என்று சகதேவன் சொல்லத்தொடங்க “ஆம், அதற்கு அதுதான் பொருள். உங்கள் விழைவுகளை துறந்துவிட்டீர்கள். அச்சிறுமதியள் தன் வஞ்சத்தையும் துறந்துவிட்டாள். அப்படியானால் எஞ்சுவதென்ன? என்னுடைய காழ்ப்பும், என்னுடைய

பெருவிழைவும், அவ்வளவுதானே? அதை நான் எழுந்து அவையில் அறிவிக்கவேண்டும் அல்லவா? குடிகளென அங்கு அமர்ந்திருக்கும் கீழ்மக்கள் அதை ஊரெங்கும் சொல்லவேண்டும். சூதர்கள் பாடவேண்டும். தலைமுறைகள் அதை ஏற்றுரைக்கவேண்டும். வரலாறெங்கும் வஞ்சக்கொடுமகளாக நான் அறியப்படவேண்டும். எனக்கு முன் நீ நீட்டிய வினாவுக்கு பிறிதென்ன பொருள்?" என்றாள்.

சகதேவன் மறுமொழி சொல்லமுடியாமல் தலைகுனிந்தான். யுதிஷ்டிரர் தாழ்ந்த குரலில் "அவ்வாறல்ல அன்னையே, ஒவ்வொருவரும் தங்கள் உணர்வுகளை முன்வைத்தார்கள்" என்றார். "என் உணர்வுகளை அந்த அவையில் நான் முன்வைக்க முடியாது. நான் அந்த அவைக்கு கட்டுப்பட்டவள் அல்ல, உங்கள் அன்னையென்றே அந்த அவையில் அமர்ந்திருந்தேன். நான் சொல்வதற்கிருந்தது எல்லாம் உங்களிடம் மட்டுமே" என்றாள் குந்தி. "கொழுநர் எனக்களித்த நிலத்தை எந்நிலையிலும் நான் உதறமுடியாது. என் மைந்தருக்கு நான் அளிக்கவேண்டிய நிலம் அது. அதற்கு முன்னும்பின்னும் எனக்கு சொல்லில்லை. ஆம், எவரிடமும் நான் பேச ஏதுமில்லை."

யுதிஷ்டிரர் மெல்ல நடுங்குவதை விஜயை கண்டாள். "அறிவிலியே, நீ என்ன எண்ணினாய்? உன் கடன் என்பது நீ எண்ணி ஏற்றுக்கொள்வதென்றா? என்று நீ என் வயிற்றில் பாண்டுவின் மகனாக பிறந்தாயோ அப்போதே வந்தமைந்தது அக்கடன். அது உன் முன்னோரால் உனக்கு அளிக்கப்பட்டது. உன்னிலிருந்து உன் மைந்தருக்குச் செல்வது. பிறவிக்கடனைத் துறக்க எந்த மனிதனுக்கும் உரிமை இல்லை" என்றாள் குந்தி. சிறுநடுக்கத்துடன் அவள் குரல் ஓங்கி ஒலித்தது. "நீ எதை

துறக்கிறாய்? மண்ணையா? குடியையா? புகழையா? சிறுக்கனே, நீ துறப்பது உன் அறத்தை. அறத்தைத் துறக்க எவருக்கு உரிமை? சொல், நீ கற்ற நூல்கள் என்ன சொல்கின்றன? சொல்!”

யுதிஷ்டிரர் “கொள்வதையும் கொடுப்பதையும்விட துறப்பது மேலென்றே நான் கற்றிருக்கிறேன், அன்னையே” என்றார். “நீ என்ன, முழுதும் துறந்து காடேகும் முனிவனா? மண்ணைத் துறக்கும் ஷத்ரியன் தன் குலத்தை துறக்கிறான். தன் மூதாதையரையும் கொடிவழியினரையும் துறக்கிறான். மெய்ப்பொருள் காணும்பொருட்டு மட்டுமே ஷத்ரியன் மண்ணை துறக்கவேண்டும். தனக்கு நிகரான மைந்தனொருவனிடம் தன் மண்ணை ஒப்படைத்த பின்னரே அவன் கானேக வேண்டும். அஞ்சியும் வருந்தியும் விட்டுச்செல்பவன் மூதாதையருக்கு பெரும்பிழையை இழைக்கிறான். கொடிவழியினரை வஞ்சிக்கிறான். கீழ்மகனே, இன்று அவையில் அறிவித்த சொற்களுக்கு வேறென்ன பொருள்? நீ துறந்தது உன் தந்தை பாண்டுவை.”

உளவிசையால் அவள் எழுந்தமர்ந்தாள். “அவைநின்று பாண்டுவைத் துறப்பது என்னை பரத்தை என்று அறிவிப்பதற்கு நிகர். அதையும் சொல், உனக்கு பேரறத்தான் எனும் பெயர் கிடைக்கும். சொல் மூடா, துணிவிருந்தால் சொல்! மீண்டும் கூட்டு அவையை. என் அன்னை பரத்தை, பாண்டுவின் குருதிச்சரடில் நான் இல்லை என்று கூறு! ஆகவே அஸ்தினபுரியின் மண்ணை நான் துறக்கிறேன் என்று சொன்னால் எவரும் மறுமொழி சொல்லமுடியாது.” அவள் கழுத்தில் நரம்புகள் உடுக்கின் தோல்வார்கள் என இழுபட்டு விம்மி நின்றன. குரல் உடைந்து பிசிறியது.

“சொல் கீழ்மகனே, ஆண்மையுள்ளவன் என்றால் சொல்! இதோ நான் சொல்கிறேன், நீ பாண்டுவின் மைந்தனல்ல. ஆம், நீ பாண்டுவின் குருதிமைந்தன் அல்ல. நீ கேட்ட கதைகளெல்லாம் உண்மை, உன் தந்தை உடல்முளைக்கா தீயூழ் கொண்டவர். ஏற்புநெறியின்படி முகமறியா முனிவர் ஒருவரின் வெண்துளியில் முளைத்தவன் நீ” என்றாள். “அன்னையே” என்று நடுங்கும் குரலில் யுதிஷ்டிரர் அழைத்தார். இரப்பதுபோல அவருடைய இரு கைகளும் நீண்டிருந்தன. “குருதிவழியில் அல்ல, தொல்வேதம் ஒன்றின் நெறிவழியிலேயே நீ என் வயிற்றில் பிறந்து பாண்டுவுக்கு மைந்தனானாய். உன் தந்தை அருள நான் உனக்களித்ததுதான் குருகுலத்து மைந்தனென்னும் பட்டம். நீ அவையில் இன்று வீசிச் சுழற்றி எறிந்தது அதை” என்றாள்.

“நான் அவர் மைந்தன். என் தந்தையின் ஆணை அது, அன்னையே” என்று தழுதழுக்கும் குரலில் யுதிஷ்டிரர் சொன்னார். “அவருள்ளத்தை நான் அறிவேன். அவர் தொடுகை என் தோள்களில் இன்னமும் உள்ளது. நான் விழிநீர் சொட்டாமல் இன்றுவரை அவருக்கு நீரளித்ததில்லை.” குந்தி “விழியிழந்தவர் உனக்கும் தந்தை என்றால் பாண்டு உனக்கு யார்? எந்த நெறியின்படி அவர் உன்னிடம் தன் மைந்தர் உயிரை காக்கும்படி கேட்கிறார்? வெறும் குருதித்தொடர்பால். அறிவிலியே, அக்குருதித் தொடர்பல்லவா உனக்கும் பாண்டுவுக்கும் உள்ளது? எதன்பொருட்டு துரியோதனனை தான் துறக்க இயலாது என்று திருதராஷ்டிரர் சொன்னாரோ அதே நெறியின்படி நீ பாண்டுவை துறக்க முடியாது என்று உணராத கீழுள்ளமா உனது?” என்றாள்.

தான் சொல்லவேண்டிய இறுதிச் சொற்களை சென்றடைந்து மெல்ல கையூன்றி குந்தி மஞ்சத்தில் சாய்ந்தாள். தேவிகை பஞ்சுத் தலையணை ஒன்றை எடுத்து குந்தியின் முதுகுக்குப் பின்னால் வைத்தாள். கைகளை மார்பில் கட்டியபடி “இது என் ஆணை! பாண்டுவின் மைந்தனாகிய நீ பாண்டுவின் நிலத்தைப்பெற்று ஆட்சிசெய்தே ஆகவேண்டும். அதன்பொருட்டு இப்புவியை எதிர்த்தாலும் சரி. உடன்பிறந்தாரை மட்டுமல்ல, தந்தைமுறையென உன்னிடம் கையேந்துபவரையேகூட கொல்ல நேர்ந்தாலும் சரி. அதன்பொருட்டு நீ களம்பட்டாலும் எனக்கு அது பெருமையே” என்றாள் குந்தி.

மேலும் தெளிந்த குரலில் தொடர்ந்தாள் “அதை துறக்கிறாயென்றால் பிறிதொரு அவை கூட்டு. பாண்டுவின் மைந்தனென நீ அமைந்தது ஏற்புமகன் என்னும் முறைமைப்படியே என்றும், அதை துறக்கிறேன் என்றும் அறிவி. பாண்டவர் அல்லாதாகுக நீங்கள் ஐவரும். அசுரரோ நிஷாதரோ ஆகி கானேகுக! அம்பும் தோளும் கொண்டு மண் வென்று ஆள்க! அந்நிலமும் குலமும் உங்களிடமிருந்து புதுப்பெயர் கொண்டு எழட்டும். பாண்டுவின் பெயர் உன் கொடிவழிக்கோ நிலத்திற்கோ அமையலாகாது.”

யுதிஷ்டிரர் “அன்னையே, என்னை பேரிடருக்குள் தள்ளுகிறீர்கள். தாங்களே அறிவீர்கள், இப்புவியில் பாண்டவனெனும் பெயருக்கு அப்பால் நான் விழைவது பிறிதொன்றுமில்லை. என் தந்தையிடமிருந்து பிறிதனைத்தையும் துறந்தாலும் தலைசூட விரும்புவது அப்பெயரை மட்டுமே. அதை நான் எப்படி துறப்பேன்?” என்றார். குந்தி “அது உனக்கு முதன்மையானது என்றால் உன் தந்தை உனக்களித்த நிலத்தை வென்று

முடிசூடுக! அப்பெயரை மட்டும் ஏந்தி பிறர் நிலத்தில் சிற்றரசனென கையேந்தி நீ நின்றிருப்பாய் என்றால் விண்வாழும் அவருக்கும் அவர் மூதாதையருக்கும் அதற்கிணையான இழிவு பிறிதில்லை” என்றாள்.

காற்றில் உமிநீறென மீண்டும் அவள் சினம் மூண்டெழுந்தது. “கீழ்மகனே, இன்று நீ இருக்கும் இடத்தில் உனக்கு உளம் கூசவில்லையா? ஒவ்வொரு முறை இந்த சிற்றூரின் அவையில் வந்திருந்து நீ மணிமுடியும் செங்கோலும் கொள்கையில் என் உடல் தீப்பற்றி எரிகிறது. மகட்கொடையாகக் கிடைத்த இந்தக் கையளவு மண்ணில் ஓர் அரியணை அமைத்து அதில் பொய்முடியும் வெறுங்கோலும் கொண்டு அமர்ந்திருக்கிறாய். ஒவ்வொரு முறை நீ அவ்வாறு அமரும்போதும் பாண்டுவின் முகத்தில் காறி உமிழ்கிறாய். ஒவ்வொரு நாளும் அவரை நினைத்திருக்கும் துணைவியாக இங்கிருந்து நான் அதைக் கண்டு நாணுகிறேன்” என்றாள். “வேண்டாம்! நீ எனக்கு ஆற்றும் கடன் ஒன்றே உள்ளது, அப்பெயரை துறந்துவிடு.”

“அன்னையே!” என்று யுதிஷ்டிரர் சொல்லி அவள் கால்களை நோக்கி கைநீட்டினார். “தொடாதே! நீ அப்பெயரைத் துறந்தாய் என்றால் அக்கணமே உங்கள் ஐவரையும் துறப்பேன். எக்கணமும் நான் பாண்டுவின் மனைவி மட்டுமே. பிறிதெவரும் அல்ல. செல்க!” என்று குந்தி சொன்னாள். “அன்னையே!” என்று மீண்டும் கண்ணீருடன் யுதிஷ்டிரர் அழைத்தார். நீர்மணிகள் அவர் தாடியிலும் மார்பிலும் சொட்டின. “எழுந்து வெளியே செல்! இனி ஒரு சொல்லும் என்னிடம் கூறாதே. செல்க!” என்றாள் குந்தி.

பீமனின் பேருடலின் அசைவை விழிதிருப்பாமலேயே விஜயை உணர்ந்தாள். உரத்த குரலில் பீமன் "அன்னையே, இங்கு நீங்கள் உரைத்த சொற்கள் காட்டுவது ஒன்றே. போர் நிகழுமென்றால் அது உங்கள் விழைவின்பொருட்டே. ஏனென்றால் தன் வஞ்சத்தை நம் குலமகள் உதறிவிட்டாள். மண்விழைவை மூத்தவர் உதறிவிட்டார். அவர்களிருவரின் சொல்லுக்கு முற்றடங்கியவர்கள் நாங்கள் நால்வரும். உங்கள் விழைவு குருதிப்பெருக்கு என்றாகும். அதன் முடிவில் கொள்ளும் மண்ணும் செங்கோலும் பெற்றியும் உங்களுக்குத் தேவை என்றால் அச்சமோ நாணமோ இன்றி அவை நடுவே எழுந்து அதைச் சொல்வது அல்லவா முறை? அதற்குத் தயங்கி அப்பொறுப்பை மூத்தவர்மேல் சுமத்துவதற்காக நீங்கள் இந்த விழிநீர் நாடகம் இயற்றுவது கீழ்மை என்று உங்களுக்குத் தோன்றவில்லையா?" என்றான்.

ஒரு கையை ஊன்றி ஒருக்களித்து அவனை நோக்கி இருமுறை ஏதோ சொல்ல வாயெடுத்து பின்பு மெல்ல தளர்ந்தாள் குந்தி. அவள் வலக்கையும் வலக்காலும் துடித்துக்கொண்டிருந்தன. பின்னர் மீண்டும் மல்லாந்து இடக்கையை ஊன்றி மஞ்சத்தில் படுத்தாள். உலர்ந்த உதடுகளை அவள் நாவுகள் வருடிச் சென்றன. சகதேவன் திரும்பி உதடசைவால் "நீர்" என்றான். விஜயை அருகிருந்த மண் குவளையிலிருந்து நீரை ஊற்றி கொண்டுசென்று "அன்னையே, நீர் பருகுக!" என்றாள். குந்தி சற்றே தலைதூக்கி நீரை வலக்கையால் வாங்கி குடித்தாள். வலக்கை அதிர்ந்துகொண்டிருந்ததனால் நீர் ததும்பி அவள் உடலில் கொட்டியது. விஜயை மரவுரியால் அதை துடைத்தாள்.

அருந்தி முடித்து மீண்டும் தலையணையில் படுத்து கண்களை மூடினாள் குந்தி. அவள் முகத்தை துடைத்த பின் விஜயை “அன்னை நலம் குன்றியிருக்கிறார். இப்போது நாம் பேசவேண்டியதில்லை. அனைத்தையும் முடிவெடுப்போம்” என்றாள். “ஆம், அன்னை இன்னும் சற்று அமைதி கொள்ளட்டும்” என்றபின் யுதிஷ்டிரர் எழுந்தார். குந்தி கண்திறந்து “அமர்க!” என்றாள். பிறிதொருவர் அவளுடலில் எழுந்ததுபோல் குரல் மாறுபட்டிருந்தது. யுதிஷ்டிரர் மீண்டும் அமர்ந்தார். பீமன் பெருமூச்சுடன் சாளரத்தில் சாய்ந்தான்.

குந்தி “இதை நான் முதன்மையாக இளையவன் பீமனிடம் சொல்கிறேன். ஏனென்றால் அவன் என் உள்ளத்திற்கு முதன்மை அணுக்கன்” என்றாள். விழிகள் சரிந்திருக்க, இமைக்குமிழிகள் அலைபாய “அவனுடைய பேருடல் பாண்டுவின் அகவிழைவு. அவனை பிறர் விழிநோக்க அவர் குலவியதில்லை. ஆனால் எவரும் நோக்கவில்லை என்று உணர்ந்தால் அவன் பெருந்தோள்களையும் நெஞ்சையும் வருடி வருடி உளம் மகிழ்வார். அப்போது அந்த முகத்திலெழும் கனவை நான் அருகிலென காண்கிறேன். என் உடலினூடாக அவர் கொண்ட கனவே பேராற்றலுடன் எழுந்து முன்னிற்கிறது. மந்தா, அவைநின்று விழியிழந்த மூத்தவரின் மைந்தரைக் கொல்வேன் என வஞ்சினம் உரைத்தது நீயல்ல, அவருடைய அகத்தமைந்த அறியாத ஒன்றே என்று நான் உணர்ந்தேன். பிற எவரிடமும் பகிரமுடியாத கனவொன்றில் அதை அவரே சொல்லவும் கேட்டேன்” என்றாள்.

விஜயை அந்தச் சிற்றறைக்குள் பிறிதொருவர் வந்து நுண்வடிவில் நின்றிருக்கும் உணர்வை அடைந்து மெய்ப்புகொண்டாள். “அவையில் எழுந்து நான் யார், என்

விழைவென என்று சொல்வதற்கு எனக்கு எந்தத் தயக்கமும் இல்லை. எந்த விழிமுன்னும் நான் எப்போதும் தயங்கியிருந்ததும் மறைந்திருந்ததும் இல்லை. இன்று ஏன் அவ்வாறு சொல்லாதொழிகிறேன் என்றால் இது என் விழைவல்ல என்பதனால்தான்” என்றாள் குந்தி. “நீங்கள் அறியாத பாண்டுவை நான் அறிவேன். பிற எவரும் அறியாத பாண்டு. மணமங்கலத் தனியறையில் இரவில் என்னை முதலில் அருகே கண்டதும் தன் உடலின் எல்லையை உணர்ந்து உளம் தளர்ந்து நின்ற அந்தத் தோற்றம் அணுவிடையும் கலையவில்லை. நான் இன்சொல்லெடுத்ததும் சிறுமைந்தன் எனக் குழைந்து என்னருகே விழுந்தார். அடைக்கலம் கோரி விழிநீர் விட்டார்.”

“எந்தப் பெண்ணும் அக்கணமே தன்னை அவருக்கு முழுதளிப்பாள். நான் என்னை எதுவும் எஞ்சாது அவருக்கு கொடுத்தேன். மாவீரமும் மங்காத அறநிலையும் கொண்டவர் என் கொழுநர். என் இறையே இச்சிறு போதாமையால் நீ தோற்று உடையவேண்டுமா என்று என் உளம்உருகி கொந்தளித்தது. என் மடிமீது முகம் புதைத்து அழுத ஆண்மகனை நெஞ்சோடணைத்தபோது அவருக்கு அன்னையென்றும் ஆனேன். செயலற்ற உடல்கொண்ட ஆண்மகனின் துயர் தெய்வங்களும் திகைத்தொழியும் ஆழம் கொண்டது. பெண்ணுடலில் இருந்தபடி அந்த இருண்ட எல்லைகளுக்கு நானும் சென்று அவரை அடுத்தறிந்தேன். நான் அறிவேன் என அவர் அறிவார். ஆகவே நாங்கள் ஒருசொல்கூட அதைப்பற்றி பேசிக்கொண்டதில்லை.”

“அன்று அவ்விரவில் என் அன்னைதெய்வங்களைச் சான்றாக்கி அவரை அணைத்து என்றும் உங்கள் துணைவி மட்டுமே

என்றேன். என் வாழ்வும் மீட்பும் உங்கள் அரசியென மட்டுமே என்று சொல்லளித்தேன். இக்கணம் வரை ஒவ்வொரு கணமும் வாழ்வது அச்சொல்லுக்காகவே. எண்ணி நோக்குக, அரசும் குடிமுதன்மையும் அளிக்கப்பட்ட பின்னரும் அரசு துறந்து ஏன் காட்டுக்குச் சென்றார் உங்கள் தந்தை? இங்கிருக்கும் விழிகளை எதிர்கொள்ள இயலாமல். கேட்கப்படாத வினாக்களால் சூழ்ந்திருக்கும் இந்நகரில் வாழமுடியாமல். அனைத்தையும்விட பேருடலும் பெருந்தந்தையுமான தமையனுக்கு நிகராக அவையமர முடியாமல்… அவருடன் சென்று அக்காட்டில் நானும் வாழ்ந்தேன்.”

“மண்ணையோ முடியையோ விழைவதாக ஒருகணமும் அவர் உரைத்ததில்லை. என்னிடம் எந்த விழைவையும் ஆணையையும் அவர் தெரிவித்ததுமில்லை. ஏனெனில் தனக்கு அதற்கான தகுதியில்லை என்று அவர் எண்ணினார். நாணிலாத வில்லென்று ஒவ்வொரு கணமும் உணரும் பெருந்துயரில் வாழ்ந்து மறைந்தார். இங்கு வாழ்ந்த நாட்களில் அவர் அறிந்த உவகை மைந்தர்களாக உங்களைப் பெற்றது. மேலும் மேலும் மைந்தர்களைக் கொடு என என்னிடம் கேட்டார். அவர் என்னிடம் கேட்டதை நான் மறுத்தேன். கேட்காதொழிந்ததை தலைக்கொண்டேன்” என்றாள் குந்தி.

“ஒவ்வொரு நாளும் அவர் அருகே அமர்ந்து அவர் கால்களை வருடி முகம் நோக்கி இருக்கையில் என் நெஞ்சுக்குள் சொல்லிக்கொள்வேன். என் தெய்வமே, இயற்ற முடியாமையினால் நீ துறந்த எதுவும் உன்னை விட்டுச் செல்லாதென்று அறிவாயா? நீ வென்றெடுக்காமல் சென்றாய் என்றால் விண்ணிலும் நிறைவு கொள்ளமாட்டாய். நான் நீயே என்றுணர்க! உன்பொருட்டு இந்நிலத்தை வெல்கிறேன்.

இப்பாரதவர்ஷத்தின் மீது உனது வாள் நிலைகொள்ளச் செய்கிறேன். ஆணவம் மிக்க வாள். பிறிதொன்றிலாது ஆளும் வாள். அறத்தின் இரக்கமின்மையால் ஒளிகொண்டது. என் கண்ணீர் எத்தனைமுறை அவர் காலடியில் விழுந்திருக்கும்? என் வாழ்வு அச்சொல்லுக்கென இயற்றப்படும் தவம். அதை என் அன்னைதெய்வங்கள் அறியும்."

"முன்பொருமுறை சௌவீரத்தை வென்று அம்மணிமுடியுடன் நகர்புகுந்தீர்கள். அதை களியாட்டாக என் தலையில் சூட்டினீர்கள். அக்கணம் நான் மெய்ப்புகொண்டேன். என் உடல் நடுங்கிக்கொண்டே இருந்தது. என்னில் எழுந்து அதை பாண்டு சூட்டிக்கொள்வதை உணர்ந்தேன். அன்று முடிவெடுத்து உறுதிகொண்டேன். விண்ணமர்ந்திருக்கும் தெய்வமே, மும்முடி சூடி உன் மைந்தர் சத்ராஜித் என அரியணை அமர்ந்தார்கள் என்றால் வென்றேன் என்று." உள்ளிருந்து எழுந்த விசை மீண்டும் அவளை எழுப்பி அமரச்செய்தது. அவள் முகத்தில் ஒரு தசையமைப்பென்றே ஆகி எப்போதும் இருந்த வஞ்சச்சுளிப்பு முற்றிலும் மறைந்து அவள் அழகுகொண்டிருப்பதை மெல்லிய அகநடுக்குடன் விஜயை உணர்ந்தாள்.

"உங்களை என்னிடம் விட்டுவிட்டு அவர் மறைந்தார். அது உதிர்தல் அல்ல, அறுபட்டு விழுதல். யுதிஷ்டிரா, நீ பார்த்திருப்பாய் அவர் உடலில் எழுந்து இறுகி நின்றிருந்த விழைவை. பார்த்தாயல்லவா? சொல், பார்த்தாயல்லவா? அது என்ன? ஒருகணமேனும் அதை நீ மறக்கமுடியுமா?" என்றாள் குந்தி. யுதிஷ்டிரர் வலிப்புகொள்ளப்போகிறவர்போல அதிர்ந்துகொண்டிருந்தார். நடுங்கும் கைகளை ஒன்றுடன் ஒன்று சேர்த்து அதில் முகம் சேர்த்துக்கொண்டான் சகதேவன்.

“வெறுங்காற்றில் வீணென நின்ற அவ்விழைவு அடங்கவேண்டுமென்றால் அவன் எத்தனை மகளிரை கொள்ளவேண்டும்? இவன் எத்தனை மல்லர்களை வெல்லவேண்டும்? நீ எத்தனை அரியணைகளில் அமரவேண்டும்? எண்ணியிருக்கிறாயா?” குந்தி கேட்டாள்.

சிலகணங்கள் அவள் சொல்லின்றி உறைந்தாள். மானுடர் உள்ளும்புறமும் சொல்லில்லாமலாகும் கணங்கள் தெய்வங்களுக்குரியவை என விஜயை எண்ணினாள். குந்தி பெருமூச்சுடன் மீண்டும் மஞ்சத்தில் சாய்ந்தாள். “அதன்பொருட்டே என் வாழ்வு. ஒருமுறைகூட சொல்லென பாண்டு திரட்டிக்கொள்ளாத வஞ்சினமே என்னுள் நிறைந்துள்ளது. அவர்பொருட்டு என் மைந்தர் அரியணை அமர்ந்தாகவேண்டும். மும்முடி சூடியாகவேண்டும். அவர் கொடிவழிகள் பாரதவர்ஷத்தை ஆளவேண்டும். ஆயிரம் ஆண்டுகள் பல்லாயிரம் ஆண்டுகள் இப்புவியில் பாண்டு என்னும் சொல் நின்றாகவேண்டும்.”

உறுதியான குரலில் அவள் சொன்னாள் “பிற எதுவும் எனக்கு பொருட்டல்ல. ஆயிரம் பெண்டிரின் மங்கல நாணறுக்க நான் சித்தமாக இருக்கிறேன். பல்லாயிரம் குழந்தைகளின் சங்கறுத்து குருதிகொள்ள தயங்கமாட்டேன். புரங்களை எரிக்க, விளைநிலங்களை தரிசாக்க, வேதியர் பழிகொள்ள, முனிவர் தீச்சொல்லேற்க, நூறாயிரம் யுகங்கள் கொடுநரகில் நின்றெரிய எனக்கு தயக்கமில்லை. எழுபதாண்டுகளுக்கு முன் என் மடியில் தலைவைத்து விழிநீர் உகுத்த என் கொழுநனைக்கண்டு நெகிழ்ந்து எழுந்த ஒரு துளி விழிநீரே என் உள்ளம். அது எந்த அவையும் அறியவேண்டியதல்ல. அதை

சூதர்கள் பாடவேண்டியதில்லை. தலைமுறைகளும் நினைவுகூரவேண்டியதில்லை.”

“நீங்களும் அறியவேண்டியதில்லை என்றே எண்ணியிருந்தேன். இத்தருணத்தில் அதை கூறும்படி அமைந்தது. இனி உங்கள் பொறுப்பு” என்றபின் திரும்பி விஜயையிடம் அவர்கள் செல்லலாம் என்பதுபோல் கைகாட்டினாள். விஜயை பெருமூச்சுவிட்டாள். தேவிகை விஜயையின் கைகளை தொட்டாள். குந்தி கண்களை மூடிக்கொண்டு நீள்மூச்செறிந்தாள். தேவிகை விஜயையிடம் தலையசைத்துவிட்டு “அரசே, கிளம்பலாம்” என்று யுதிஷ்டிரரிடம் சொன்னாள்.

உடல் பலமடங்கு எடைகொண்டுவிட்டதைப்போல சகதேவனின் கைகளைப்பற்றி உந்தி எழுந்து மெல்லிய தள்ளாட்டத்துடன் நடந்து யுதிஷ்டிரர் வெளியே சென்றார். நகுலனும் சகதேவனும் அவரை தாங்கிக்கொண்டு வெளியே சென்ற பின்னரும் பீமன் அசையாமல் சாளரத்தருகே நின்றிருந்தான். அறையின் ஒலியின்மையும் அசைவின்மையும் மூச்சுத்திணற வைத்தன. விஜயை தானும் வெளியே ஓடிவிடவேண்டுமென்று எண்ணினாள். ஏதோ அறியா விசையால் தூக்கி அகற்றப்பட்டதுபோல ஒருகணத்தில் பீமன் எழுந்து வெளியே சென்றான்.

# குருதிச்சாரல் - 23

**பகுதி மூன்று : மலைச்சுனையின் ஓசை – 6**

வாயிற்காவலன் ஆற்றுப்படுத்தி தலைவணங்க உயரமற்ற கதவைத் திறந்து விஜயை சிற்றவைக்குள் நுழைந்தபோது முன்னரே அங்கு யுதிஷ்டிரரும் திரௌபதியும் நகுலனும் சகதேவனும் அமர்ந்திருந்தனர். சாளரத்தருகே உடல் சரித்து சாய்ந்து பீமன் நின்றிருந்தான். சௌனகர் மறுபுறம் நின்று யுதிஷ்டிரரிடம் உளவுச்செய்தி எதையோ சொல்லிக்கொண்டிருந்தார். அவள் உள்ளே நுழைந்ததும் அவைக்கு தலைவணங்கி தனியாக அமர்ந்திருந்த தேவிகையின் அருகே சென்று உயரமற்ற பீடத்தில் கால்மடித்து அமர்ந்தாள்.

சௌனகர் தொடரலாமா என்று விழிகளால் சகதேவனிடம் வினவிவிட்டு "செய்திகளின்படி இன்னும் பன்னிரண்டு நாட்களில் அஸ்தினபுரியில் பாரதவர்ஷத்து அரசர்களின் பேரவை கூடவிருக்கிறது. நம் தரப்பில் நின்றிருக்கக்கூடும் என நாம் எண்ணிய பலரும் அப்பக்கம் சேர்வதாக செய்தி வந்துகொண்டிருக்கிறது. அன்று அப்பேரவையில் எதன்பொருட்டு போர் என்றும் எவரெவர் முதன்மைப் பங்கு வகிப்பதென்றும் முறையாக அறிவிக்கப்படும் என்கிறார்கள். போர் அறிவிப்பு நிகழ்ந்துவிட்டதென்றால் பின்னர் அதிலிருந்து அவர்கள் பின்வாங்க இயலாது. அது ஓர் அறைகூவல் என்பதனால் நாம் அதே வகையில் தவிர்க்கவும் இயலாது" என்றார்.

சகதேவன் "எதன்பொருட்டேனும் அந்தப் பேரவை தள்ளிப்போவதற்கு வாய்ப்புள்ளதா, அமைச்சரே?" என்றான். சௌனகர் "பெரும்பாலும் இல்லை. உளவுச்செய்திகள் சொல்வதன்படி பார்த்தால் பீஷ்மரும் துரோணரும் கிருபரும்

அறுதிநிலை எடுத்துவிட்டார்கள். அங்கு மாற்றுச்சொல்லுரைக்க எவருமில்லை. ஒருவேளை இனிமேல் அந்த அவையில் போர்முதன்மையின் பொருட்டு அரசர்களிடையே சிறுபூசல்கள் எழலாம். அது ஒன்றே நாம் எதிர்பார்க்கக்கூடியது" என்றார். சகதேவன் "அதில் பயனில்லை. போர்முதன்மை கொள்பவர் எவரென்பது அனைவருக்குமே தெரியும். பீஷ்மரும் கிருபரும் துரோணரும் சல்யரும் அஸ்வத்தாமனும் ஜயத்ரதனும். பிறர் அவர்களின் சொற்படி பின்னால் நிற்பவரே" என்றான்.

"அங்கர்?" என்றான் நகுலன். "அங்கர் படைத்தலைமை கொள்ள ஷத்ரிய அரசர்கள் ஒப்பமாட்டார்கள். ஆனால் அதன்பொருட்டு அங்கர் உளவேறுபாடு கொள்ள வாய்ப்பில்லை. அவர் தன்னை துரியோதனருக்கு முற்றளித்தவர்" என்றார் சௌனகர். யுதிஷ்டிரர் "ஆம், மெய்யே" என்றார். சௌனகர் தலைவணங்கி தன் பீடத்தில் அமர்ந்தார். அவைக்குள் அமைதி நிலவியது. சகதேவன் சற்று அசைந்து தன் ஆடையை ஓசைப்படுத்தியது கேட்டது. யுதிஷ்டிரர் "நாம் என்ன செய்யக்கூடும், இளையோனே?" என்றார். சகதேவன் "இத்தருணத்தில் நாம் செய்வதற்கேதுமில்லை, மூத்தவரே. இரு பக்கமிருந்தும் பெருவிசைகளால் அழுத்தப்பட்டிருக்கிறோம்" என்றான்.

"ஆம், நாம் செய்வதொன்றுமில்லை" என்றார் யுதிஷ்டிரர். "தந்தைக்கு எதிர் எழுந்து போர் செய்தால் அன்னை சொல் கேட்டே அவ்வாறு செய்தோம் என்று எவருமறியாத நிலையில் அப்பெரும்பழியை தாங்களே சுமக்க வேண்டியிருக்கும்" என்றான் சகதேவன். "அதிலெனக்கு தயக்கமில்லை" என்று யுதிஷ்டிரர் சொன்னார். "அன்னையின்பொருட்டு அப்பழியும் என் தலையில் அமையட்டும். கொடியவன் என்று தலைமுறைகள்

முன்பு நிற்பது கடினமானதே. அதைவிடக் கடினம் அவ்வாறு நம்முன் நாம் நிற்பது" என்றார்.

சகதேவன் "அவ்வாறெனில் நாம் உடனே நம் தரப்பு அரசர்களுக்கான பேரவையை கூட்டவேண்டும். நமது படைவல்லமையை அதன் பின்னரே அளவிடமுடியும். அதன் அடிப்படையிலேயே நமது படைசூழ்கையை அமைக்கமுடியும்" என்றான். "சஞ்சயனிடம் இப்போது என்ன சொல்லி அனுப்புவது? நாம் இங்கு அவைகூடியது அதன்பொருட்டே" என்று நகுலன் சொன்னான். "நாம் இறுதிமுடிவெடுத்தோமானால் அம்முடிவையே அறிவிப்போம்" என்று சகதேவன் சொன்னான். "நமது நிலத்தில் எதையும் நாம் விட்டுக்கொடுப்பதாக இல்லை. தந்தையின் ஆணையை நாம் தலைக்கொள்ளும்போதே அவர் மைந்தரும் அதை ஏற்கவேண்டுமென்று விழைகிறோம். அதுவே நம் செய்தியாகட்டும்."

நகுலன் "மூத்தவரே, அதுவே தங்கள் ஆணையென்றால் சௌனகரிடம் தெரிவியுங்கள்" என்றான். யுதிஷ்டிரர் சௌனகரை நோக்கி "இளையோன் சொன்னதே நமது ஆணை. அதை தாங்கள் முறையாக சஞ்சயனிடம் தெரிவியுங்கள்" என்றார். பின்னர் தயங்கி "ஆனால் தந்தையின் ஆணையை நான் மீறுவதுபோல அச்சொற்களில் தெரியலாகாது. அவர் ஆணையை நான் தலைக்கொள்கிறேன். ஆனால் தந்தை எனக்களித்த மண்ணுரிமையை விடப்போவதில்லை என்றுரைத்தால் நன்றாக இருக்குமா?" என்றார். பீமன் "எந்தச் சொற்களில் சொன்னாலும் அது தந்தையின் ஆணையை புறந்தள்ளுவதே ஆகும். அரசுமுறைச் சொற்களில் இருக்கும் மென்மையையும் தண்மையையும் தவிர்த்து கூர்மையையும்

அனலையும் எடுத்துக்கொள்ளப் பயின்றவர்களே அரசகுடியினர் அனைவரும்” என்றான்.

சகதேவன் “பார்த்தர் எங்கே?” என்றான். நகுலன் “காலையிலேயே அவர் வேட்டைக்குச் சென்றுவிட்டார் என்றார்கள்” என்றான். யுதிஷ்டிரர் “எதிலும் ஈடுபடாமல் இருக்கிறான். ஒவ்வொரு முறையும் உங்களுக்குத் தேவை போர்தானே, என் வில்லிருக்கிறது நானிருக்கிறேன் என்பதற்கு அப்பால் எதுவுமே அவன் சொல்வதில்லை. ஒவ்வொரு முறை அதை அவன் சொல்கையிலும் விளக்கமுடியாத சிறுமை ஒன்றை அடைகிறேன், அவனை என் படைக்கலமாக மட்டுமே பயன்படுத்துகிறேனா என்று” என்றார்.

பீமன் “அதில் பிழையென்ன? அரசன் தன் குடிகள் அனைவரையுமே படைக்கலங்களும் பலிக்கொடைகளும் வேள்விப்பொருட்களுமாகவே கருதவேண்டுமென்று நூல்கள் சொல்கின்றன” என்றான். “எந்த நூல்?” என்றான் சகதேவன். “ஏதேனும் ஒரு நூல். எல்லா கருத்தும் எங்கேனும் ஒரு நூலில் இருக்கும்” என்றான் பீமன். யுதிஷ்டிரர் எரிச்சலுடன் “மந்தா, நீ சற்று சொல்லடங்கி இரு” என்றார். “உன்னை அவையிலமர்த்தவே அஞ்சவேண்டியிருக்கிறது. உன் நாவிலிருந்து நீ உண்ட அக்கசப்பு எழுந்தபடியே உள்ளது. நேற்று உன் சொற்களிலிருந்துதான் அன்னை அத்தனை பெருஞ்சினத்தை சென்றடைந்தார்.”

“அது நன்று, மூத்தவரே. அவர் உள்ளக்கிடக்கை என்ன என்பது அதன் வழியாக தெரியவந்ததல்லவா?” என்றான் பீமன். சகதேவன் “அவர் உள்ளக்கிடக்கை அது. ஆனால் அத்தனை கூர்மையுடன் அவர் அதை முன்வைக்க உங்கள் சொற்களே தூண்டுகை” என்றான். சௌனகர் “நாம்

பூசலிட்டுக்கொள்ளவேண்டியதில்லை. இளைய பாண்டவர் மறுத்தொரு சொல் சொல்லப்போவதில்லை. அரசியும் பிறிதொரு தரப்பில்லை என்று உரைத்துவிட்டால் இதையே சஞ்சயனிடம் உரைப்பேன்” என்றார். திரௌபதி “எனக்கு மாற்றுச்சொல் இல்லை, அமைச்சரே” என்றாள். “பிறகென்ன?” என்றான் பீமன். சௌனகர் “ஆணை இறுதிசெய்யப்படுகிறது” என்றார்.

கதவு மெல்ல திறந்து உள்ளே வந்த ஏவலன் “இளைய பாண்டவர் அர்ஜுனர்” என்றான். வியப்புடன் சகதேவனை நோக்கியபின் உள்ளே வரச்சொன்னார் யுதிஷ்டிரர். உள்ளே வந்து தலைவணங்கியபின் நகுலன் எழுந்த இருக்கையில் அமர்ந்த அர்ஜுனன் “நீங்கள் அமர்ந்திருப்பதை பார்த்தால் சஞ்சயனுக்கு சொல்லவேண்டிய முடிவை எடுக்கும்பொருட்டே என்று உணர்கிறேன்” என்றான். “ஆம், இன்றே ஒரு மறுமொழியை நாம் சொல்லி அனுப்பவேண்டியிருக்கிறது” என்றார் யுதிஷ்டிரர். “இன்னொரு நாள் பொறுப்போம். நாளை காலைக்குள் இளைய யாதவர் நகர்புகுவார்” என்று அர்ஜுனன் சொன்னான்.

“எப்படி தெரியும்?” என்று யுதிஷ்டிரர் கேட்டார். “நான் அறிவேன்” என்ற அர்ஜுனன் “அவர் முடிவெடுக்கட்டும், ஒரு வழி அவரால் அடையப்படும்” என்றான். ஒருகணத்தில் முகம் தெளிந்து இயல்பாக ஆன யுதிஷ்டிரர் “ஆம், அவர் முடிவெடுக்கட்டும்” என்றார். பீமன் நகைத்து “முடிவெடுப்பதற்குத்தான் முதன்மையாக தெய்வங்கள் தேவைப்படுகின்றன” என்றான். யுதிஷ்டிரர் சினத்துடன் திரும்பிப்பார்த்து பின் முகம் எளிதாகி “மெய்தான்” என்று சிரித்தார்.

மூடிய கதவுக்கு அப்பால் பித்தளைத் தாழ்கள் குலுங்கும் ஒலியும் “விஜயை! விஜயை!” என்று தேவிகையின் குரலும் கேட்டது. மஞ்சத்தில் அரைத்துயிலில் இருந்த விஜயை அதை மிக ஆழத்தில் எங்கோ கேட்டாள். சகலபுரியில் தன் அறைக்குள் விழித்தெழுவதாகவே அவளுக்குத் தோன்றியது. மறுகணம் நினைவு திரள எழுந்தமர்ந்து “யார்?” என்றாள். “நான்தான், கதவைத் திறடி” என்றாள் தேவிகை. விஜயை பதற்றத்துடன் எழுந்து வந்து கதவைத்திறந்து “என்னடி?” என்றாள்.

“வா, ஒன்று காட்டுகிறேன்” என்றாள் தேவிகை. “என்னடி?” என்றாள் விஜயை குழல்கற்றைகளை சுழற்றிக்கட்டியபடி. “அவர் வந்துவிட்டார்” என்றாள் தேவிகை. “யார்?” என்றதுமே விஜயை புரிந்துகொண்டு “இன்னும் பொழுது விடியவில்லையே?” என்றாள். “யார் சொன்னது? முதல் ஒளி பரவிவிட்டது. வா, வந்து பார்” என்று அவளை உப்பரிகைக்கு அழைத்துச் சென்றாள். அவளுடன் சென்றபோது விஜயையின் ஆடை நெகிழ்ந்தது. அதை அள்ளி இடுப்பில் செருகிக்கொண்டாள். இடைநாழியில் சரிந்த காலைவெளிச்சம் செந்நிறப் பட்டுவிரிப்புபோல விழுந்து கிடந்தது.

“நான் இன்னமும் முகம் கழுவி உடை சீராக்கவில்லை” என்று சொன்னபடி விஜயை அவளுடன் சென்றாள். “இது கணிமங்கல நன்னாள் எனக் கொள். விழித்த முதல் நோக்கு அவருக்குரியது. வந்து பார்” என்று தேவிகை அவளை உப்பரிகைக்கு அழைத்துச் சென்றாள். சிறிய மரமேடையில் நின்றபோது காலை குளிர்காற்று வந்து விஜயையின் ஆடையை எழுந்து சிறகடிக்க வைத்தது. அதைப்பற்றி

உடலுடன் சுருட்டிக்கொண்டாள். இரு தோள்கள் மீதும் பட்டாடையின் நுனி படபடத்தது. "எங்கே?" என்றாள். "அதோ பார், அங்கே அவர்கள் காத்திருக்கிறார்கள்" என்றாள் தேவிகை.

மாளிகையின் மறுபக்க முற்றத்தில் யுதிஷ்டிரரும் பீமனும் நகுலனும் சகதேவனும் காத்து நின்றிருப்பதை விஜயை கண்டாள். இசைச்சூதரும் மங்கலச்சேடியரும் வேதியரும் இரு பக்கமும் நிரைகொண்டிருந்தனர். அப்பால் பட்டத்துயானை முகபடாம் அணிந்து விழிமங்கலத்திற்கென நிறுத்தப்பட்டிருந்தது. "வந்துகொண்டிருக்கிறாரா?" என்றாள். "ஆம், சற்று முன்னர்தான் கோட்டைமுகப்பில் முரசு அவர் வருகையை அறிவித்தது." விஜயை "எங்கிருந்து வருகிறார்? இத்தனை விரைவாகவா? அவ்வாறென்றால் மிக அருகிலெங்கோதான் இருந்திருக்கிறார். இங்கெவரும் அதை அறிந்திருக்கவில்லையா?" என்றாள்.

தேவிகை "அவரை அணுக்கத்தில் அறிந்தவர்களுக்கே எங்கிருக்கிறார், எங்கு தோன்றுவாரென்று சொல்ல முடிந்ததில்லை. ஒவ்வொரு முறையும் வியந்து அதையே ஓர் உவகையென கொண்டாடிக் கொண்டிருக்கிறார்கள்" என்றாள். அரண்மனைக் கோட்டையின் முதற்காவல்கோட்டத்தில் கொம்போசை எழுந்தது. "வருகிறார்கள்" என்று தேவிகை சொல்லியபடி தூணை பற்றிக்கொண்டு மெல்ல குதித்தாள். "ஏன் குதிக்கிறாய்? எவராவது பார்த்துவிட்டால் என்ன ஆவது?" என்றாள் விஜயை.

தேவிகை சிரித்தபடி "இந்த ஒரு தருணத்திலாவது கன்னியராகவும் சிறுமியராகவும் இருப்போமே" என்றாள். விஜயை நகைத்து "தொலைவிலிருந்து பார்ப்பதற்கு முதுமைக்குள் கன்னி குடியேறியிருக்கும் செய்தி

தெரியாதல்லவா? பித்தி எழுந்துவிட்டாளென்று எண்ணுவார்கள்” என்றாள். “எவர் பார்த்தாலென்ன? யாருக்கு நான் கட்டுப்பட்டவள்? இத்தனை நாள் இவ்வுடலில் வெளிப்பட்டதெல்லாம் நானல்ல, நான் பிறிதொன்றென்று உணரும் இத்தகைய தருணங்களே அரிது” என்றாள் தேவிகை. அச்சொற்களினூடாக தன் துள்ளலை அடக்கி மீண்டும் இயல்படைந்து “அந்தப் புரவிகள்தான்” என்றாள்.

முற்றத்தில் இந்திரப்பிரஸ்தத்தின் மின்கொடியை ஏந்தி நின்றிருந்த வீரன் கொம்போசை முழக்கியபடி முன்னால் சென்றான். மங்கலத்தாலமேந்தி நின்றிருந்த சேடியரும் இசைச்சூதரும் அவனை தொடர்ந்தனர். வலப்பக்கம் கூடி நின்றிருந்த ஏழு வைதிகர்கள் கங்கை நீர் நிறைந்த குடங்களுடன் வந்து அவர்களுக்குப் பின்னால் இணைந்துகொண்டனர். முதலில் அரண்மனைக்கோட்டத்தின் காவல்மாடத்தைக் கடந்து கரிய புரவிமேல் சாத்யகி முன்னால் வந்தான். விஜயை “நெடுநாட்களுக்குப் பின் அவரை பார்க்கிறேன். முதுமை கொண்டுவிட்டார்” என்றாள்.

அவனுக்குப் பின்னால் அர்ஜுனன் வர தொடர்ந்து வந்த புரவியைப் பார்த்த தேவிகை “அதோ” என்றாள். விஜயை அக்கணம் அவரை பார்த்தாள். இருவரும் முற்றிலும் சொல்லிழந்தவர்களாக விழிமட்டுமே தங்கள் உளமென்று நின்றிருந்தனர். கொடிவீரன் முன்னால் சென்று அதைத் தாழ்த்தி வணங்கினான். மங்கலத்தாலமேந்திய சேடியர் மும்முறை உழிந்து குரவையிட்டனர். இசைச்சூதர் நல்லிசை முழக்கிநின்றனர். வேதியர் கங்கைநீர் தெளித்து வேதமோதி வாழ்த்தினர். புரவியை அணுகிய ஏவலரின் கைகளில்

ஒப்படைத்துவிட்டு சாத்யகியும் அர்ஜுனனும் இறங்கினர். அரண்மனைக்குமேல் பெருமுரசம் முழக்கமிட்டது.

இளைய யாதவரின் வெண்புரவி நடனம்போல் மெல்லென்று காலடிகளை எடுத்து வைத்து நடந்துவந்து நின்று தலைதாழ்த்தி பிடரி சிலிர்த்து மூச்சு சீறியது. அதிலிருந்து கால் சுழற்றி நிலத்தில் இறங்கி தன்னை எதிர்கொண்ட யுதிஷ்டிரர் அருகே சென்று குனிந்து தாள்தொட்டு வணங்கினார். யுதிஷ்டிரர் அவரை அள்ளி தன் மார்போடு அணைத்துக்கொண்டார். அவருக்கு இருபுறமும் நின்ற நகுலனையும் சகதேவனையும் நோக்கி சிரித்து ஓரிரு சொற்கள் சொன்ன பின் பீமனை நோக்கி இரு கைகளையும் விரித்தார். பீமன் பாய்ந்து செல்வதுபோல் அணுகி தன் பெரிய கைகளால் இளைய யாதவரை அள்ளி நெஞ்சோடணைத்து தூக்கி இருமுறை சுழற்றி நிறுத்தினான். அவர்களின் சிரிப்போசையும் சொல்திரளா குரல்களும் கேட்டன.

இளைய யாதவரை பீமனும் நகுலனும் சகதேவனும் தங்கள் கைகளால் தொட்டுக்கொண்டே இருப்பதை விஜயை கண்டாள். “அவர்கள் அவரைத் தொட விழைகிறார்கள்” என்றாள். “அனைவரும் அவரைத் தொடவே விரும்புகிறார்கள்” என்று தேவிகை சொன்னாள். “அவர் மட்டும் மாறவே இல்லை. அகவை அவரை அணுகாது போலும்” என்றாள் விஜயை. தேவிகை “மாறாக நான் அவரில் பிறிதொருவரை காண்கிறேன். முன்பு கண்டபோது இளம்புரவியின் துள்ளலும் விரைவும் உடையவராக இருந்தார். இன்று முதுகளிற்றுக்குரிய ஆற்றல்மிக்க அமைதி அவர் அசைவுகளில் தெரிகிறது” என்றாள் தேவிகை.

யுதிஷ்டிரரும் இளையோரும் இளைய யாதவரை தழுவியவர்களாக இடைநாழியைக் கடந்து படிகளில் ஏறி

உள்ளே சென்றனர். அர்ஜுனன் புரவிகளை கொண்டுசென்று கொட்டிலில் கட்டும்படி சூதர்களுக்கு ஆணையிட்டுவிட்டு சாத்யகியிடம் பேசியபடி அவர்களைத் தொடர்ந்து மேலேறிச் சென்றான். ஒழிந்த முற்றத்தை பார்த்தபடி தேவிகையும் விஜயையும் நின்றனர். தேவிகை “சென்றபின்னும் அவ்விடத்தில் தன்னை அவ்வாறே விட்டுச்செல்கிறார்” என்றாள். “அய்யோ, நான் அதையேதான் எண்ணினேனடி” என்றாள் விஜயை. “ஒவ்வொரு முறையும் அவர் சென்ற இடத்திலிருந்து என்னால் விழிவிலக்க இயல்வதில்லை.”

தேவிகை பெருமூச்சுடன் “இப்போது ஓர் எண்ணம் எனக்கு எழுந்தது. அது முற்றிலும் பிழையென்றும் இருக்கக்கூடும். பெண்ணென்பதால் பேதை என நின்றிருக்க நாம் விரும்புகிறோம். அதற்குரிய எண்ணங்களை உருவாக்கிக்கொள்கிறோம் என்றும் தோன்றுகிறது” என்றாள். “என்னடி?” என்றபடி விஜயை அவள் கைகளை பற்றினாள். தேவிகை விழிகளைத் தாழ்த்தி “ஒன்றுமில்லை, அவ்வாறு தோன்றியது” என்றாள். “என்ன?” என்றாள் விஜயை. தேவிகை பேசாமல் நடந்தாள். “சொல்லடி” என்றாள் விஜயை.

“அவரில் கரைக்கமுடியாத தனிமை நிறைந்திருக்கிறதோ? பெருந்துயரொன்று குளிர்காற்றென அவரைச் சூழ்ந்து நின்றிருக்கிறதோ? அவரைக் காணும் முதற்கணம் உள்ளம் உவகைகொண்டு துள்ளுகிறது. நோக்க நோக்க அறியாத் துயர் வந்து நெஞ்சை நிறைக்கிறது. நோயுற்ற குழவியைக் காணும் அன்னைபோல் நெஞ்சு நெகிழ்கிறது. அவரைக் காணும் பெண்டிரெல்லாம் அணுக்கம் கொள்வதும் அருகணைய விழைவதும், எண்ணி நெஞ்சு நிறைப்பதும், கனவில் மீட்டு

கருத்தழிப்பதும், தன்னவர் என்று எண்ணுவதும், தானே என மயங்குவதும் அதனால்தானா?” என்றாள்.

விஜயை “என்னென்னவோ சொல்கிறாய், எனக்கெதுவும் புரியவில்லை” என்றாள். “நான் சொல்வதைப்போல் நீ எண்ணியதில்லையா?” என்றாள் தேவிகை. “ஆம், அவரை காண்கையிலெல்லாம் துயரும் நெகிழ்ச்சியும் எனக்கும் ஏற்படுகிறது. அது நீ சொல்வதனால்தானா என்று தெரியவில்லை. ஆனால் இத்தனை கூரிய சொற்களில் என்னிடம் ஒன்று சொல்லப்பட்டால் அதையே எண்ணமெனக் கொள்வது என் வழக்கம்” என்றாள். தேவிகை புன்னகைத்து “சென்று உன் நச்சுநாவிடம் கேள், இவ்வெண்ணத்தைக் கிழித்து உனக்களிப்பாள்” என்றாள்.

“ஆம், அவளை நான் அஞ்சுகிறேன்” என்றாள் விஜயை. அவளே சொல்லட்டுமென தேவிகை உடன்நடந்தாள். “நேற்று அவளிடம் சொன்னேன், பேரரசி குந்தி விழியிழந்த பெருந்தோளரின் சொல்லை மீறமாட்டார் என.” அவளை நோக்காமல் தேவிகை “ஏன்?” என்றாள். “தோன்றியது” என்றாள் விஜயை. “சரி, சொல்” என்றாள் தேவிகை. “அவர் அதை தூக்கி வீசியது என்னை திகைக்கச் செய்தது என்றேன். திருதராஷ்டிரரை அவர் ஒருபொருட்டென்றே எண்ணவில்லை. விண்நின்ற பாண்டு மன்னர் அவர் மேல் கொண்ட நுண்வஞ்சத்தையே வெளிப்படுத்தினார் என்றேன்.”

“அவள் என்ன சொன்னாள்?” என்றாள் தேவிகை. “அவள் நா கார்க்கோடகனைவிட கொடியது” என்றாள் விஜயை. “சொல்” என்றாள் தேவிகை. “பெண் என்று குந்தி பெருந்தோளரின் சொல்லுக்கு பணிந்தார். அப்படிப் பணிந்தமை கண்டு மனைவி என்று சீறி எழுந்தார் என்றாள். அவள் சொன்னதுமே அவர்கள்

அவையிலமர்ந்திருந்த அமைதியை நினைவுகூர்ந்தேன். மெய் என்று எண்ணினேன். அவ்வாறு எண்ணுவதைக் கண்டு நானே நாணி அவளை வசைபாடி துரத்திவிட்டேன்” என்றாள். “வசைபாடுவதையே அவள் வாழ்த்தெனக் கொள்வாள். கசப்பு இனிக்கும் உள்ளம் அவளுக்கு” என்றாள் தேவிகை.

விஜயை “போடி” என்றபின் முன்னால் செல்ல தேவிகை அவளைத் தொடர்ந்து வந்தபடி “இன்று அரசகுடியினருக்கான அவை கூடவுள்ளது. நம்மையும் செல்லும்படி பணித்திருக்கிறார்கள்” என்றாள். “நாம் எதற்கு?” என்றாள் விஜயை. “இளைய யாதவர் நம்பொருட்டு முடிவெடுக்க இருக்கிறார். இது பெண்களுக்கும் பங்குள்ள அரசியல். எனவே நம் குரலையும் விழைகிறார்கள்” என்றாள். “இங்கல்ல எங்கும் எனக்கென்று ஒரு குரல் இல்லை. இனி எந்த அவையிலாவது எப்போதாவது என்னால் எழுந்து ஒரு சொல் உரைக்கமுடியுமா என்று தெரியவில்லை. இயன்றிருந்தால் சகலபுரியின் அவையிலெழுந்து என் உடன்பிறந்தாரிடம் உரைத்திருப்பேன்” என்றாள் விஜயை.

“என் கொழுநரையும் அத்தையை கொண்ட குடியையும் வெறும் அரசியல் சூழ்ச்சியின் பொருட்டு சகலபுரி உதறியபோது சினந்தும் பழித்தும் என் நெஞ்சுக்குள் சொல்பெருக்கினேன். ஆனால் மூத்தவரையோ தந்தையையோ நேரில் பார்த்து ஒரு சொல் உரைக்காமல் அன்னையிடமும் சேடியிடமும் சொல்லிவிட்டு முன்காலையிலேயே அந்நகர்விட்டு நீங்கினேன். சொல்லப்படாத சொற்கள் தொடர்ந்து வந்து வதைத்தன. பின்னர் நான் ஒருபோதும் அவற்றை சொல்லியிருக்க முடியாதென்று உணர்ந்து என்னையே ஆற்றிக்கொண்டேன்.”

“என்னாலும் ஓர் அவையில் எழுந்து உறுதியுடன் சொல்கோக்க முடியுமென்று தோன்றவில்லை” என்றாள் தேவிகை. “இளமையில் அவைகளில் எழுந்து நின்று சீறுவேன். அன்று நான் எனக்கென்று ஒரு நிலத்தையும் வாழ்வையும் என் எண்ணங்களிலிருந்து சமைக்கவிருக்கிறேன் என நம்பினேன்” என்று விஜயை சொன்னாள். “நான் எப்படி இவ்வாறு தணிந்தேன்?” தேவிகை “நாம் மணம்கொள்ளப்பட்டபோது தோற்கடிக்கவும்பட்டோம்” என்றாள். “என்னடி சொல்கிறாய்?” என்றாள் விஜயை. “நாம் எதை அடைந்திருந்தாலும் அது நம்மால் வெல்லப்பட்டதல்ல.” விஜயை “ஆம்” என பெருமூச்சுவிட்டாள்.

“ஆனால் நீ அவரிடம் பேசியிருக்கிறாய். அவரை இப்பணியின் பொருட்டு ஏவியிருக்கிறாய். இவையனைத்தும் உன் சொல்லிலிருந்து தொடங்கியிருக்கின்றன” என்றாள் விஜயை. “அவரிடமா? அவரிடம்கூட என்னால் இயல்பாக பேச முடியவில்லை. நான் அவர் முன் வெறும் பெண்ணென்று, பேதையென்று நின்று அழுதேன். என் விழிநீரிலிருந்துதான் இவையனைத்தும் தொடங்கியிருக்கின்றன” என்றாள். விஜயை “ஒருவேளை வேறெந்த சொல்லைவிடவும் அவருக்கு செய்தி அளிப்பது விழிநீரோ என்னவோ?” என்றாள்.

“அதைத்தான் பல்லாயிரம் ஆண்டுகளாக பெண்கள் கைக்கொண்டு வருகிறார்கள். அவையில் சொல்லெடுப்பவள் பெண்டிரில் முதன்மையானவள். நாமெல்லாம் அரசியென்று ஆடையும் அணியும் அணிந்து குடிமுத்திரையும் கொடியும் கொண்டு வாழ்ந்தாலும்கூட வெறும் பெண்ணென்றே உள்ளில் அமைந்திருக்கிறோம் போலும்” என்றாள் தேவிகை. “அதைத்தான் ஆண்கள் விரும்புகிறார்கள். தோற்கும் பெண்

ஆண்களால் உதவப்படுகிறாள். வெல்லவிழைபவள் ஆண்குலத்தின் முற்றெதிர்ப்பை எதிர்கொள்கிறாள்" என்றாள் விஜயை.

தேவிகை "ஆம், மெய்" என்று நீள்மூச்செறிந்தாள். "அவையில் திரௌபதியைப் பார்க்கையில் உள்ளம் பதைக்கிறதடி. நான் எப்போதும் அவளை வெறுத்து வந்தவள், அதை மறுக்கமாட்டேன். ஆனால் அவள் வெல்லவேண்டுமென்றும் என் ஆழம் விரும்பியிருந்தது. அவையில் அவள் நிமிர்ந்து அமர்ந்திருக்கையில் எங்கோ பெண் என நான் தருக்கியிருந்தேன். மும்முடிசூடி அவள் கனல்வண்ண அரியணை அமர்ந்த அந்நாளில் அதைக் கண்டு நான் விழிநீர் வீழ்த்தினேன். இன்று அவள் அனைத்தையும் துறக்கிறேன் என்றபோது அவளுடன் சேர்ந்து நம் மூதன்னையர் அனைவரும் தோற்றுவிட்டதாகவே உணர்ந்தேன்."

அவர்கள் மீண்டும் விஜயையின் அறைக்குள் சென்றனர். தேவிகை சிறுபீடத்தில் அமர்ந்தபடி "இந்தச் சிற்றறைகள் இவ்வுளநிலைக்கு உகந்தவை. இவற்றுக்குள் நாம் உலவ முடியாது. அமர்ந்திருக்கவோ படுக்கவோதான் முடியும். வெளியே புயல்காற்று சுழன்றடிக்கையில் தன் வளைக்குள் வந்து பதுங்கியிருக்கும் எலிபோல இவ்வறைக்குள் இருக்கையில் உணர்கிறேன்" என்றாள். விஜயை "ஆம், இவ்வறைக்குள் முதலில் நுழைந்தபோது இது ஒரு பொறி என்று எனக்குத் தோன்றியது. இன்று இவ்வறையின் அரையிருள்போல எனக்குகந்தது பிறிதொன்றில்லை" என்றாள்.

வாயிலில் வந்துநின்று அபயை "வணங்குகிறேன், அரசியரே" என்றாள். "காலையில் வந்தேன், அரசி. துயின்றுகொண்டிருந்தீர்கள்." விஜயை "நேற்று நான் துயில

மிகவும் பிந்திவிட்டது. சற்று துயின்றவுடனே சகலபுரியில் இருப்பதாக ஒரு கனவு வந்து விழித்துக்கொண்டேன். அதன் பின் எண்ணங்கள் கட்டின்றி பெருகிச் சென்றன. நெஞ்சு அடங்கி துயில்வதற்கு நெடுநேரம் ஆயிற்று” என்றாள். மாப்பு கோரும் குரலில் “ஆகவே புலரிக்கடன்கள் எதையும் இன்று ஆற்றவில்லை. பொழுது ஒளிகொள்வது வரை துயின்றுவிட்டேன்” என தொடர்ந்தாள். அபயை “நான்குமுறை வந்து பார்த்தேன், நன்கு துயின்றுகொண்டிருந்தீர்கள். அவ்வாறே ஆகுக என்று திரும்பிச்சென்றேன்” என்றாள்.

தேவிகை அப்பேச்சை மறித்து “இளைய யாதவர் வந்திருக்கிறார்” என்றாள். “ஆம், கீழே இடைநாழியில் நின்று பார்த்தேன்” என்றாள் அபயை. “அரசர் இன்று அவை கூட்டியிருக்கிறார். அதில் இளைய யாதவர் அவர் ஆற்றவேண்டியதென்ன என்பதை முடிவெடுத்து சொல்வார் என்று எதிர்பார்க்கிறார்” என்றாள் விஜயை. அபயை “யார் எம்முடிவை எடுத்தாலும் அது அவருடைய முடிவேதான். யுதிஷ்டிரர் அவரே முடிவெடுக்கிறார் என்னும் தன்னுணர்வை மட்டுமே துறந்திருக்கிறார். அதனூடாக தன் பொறுப்புணர்வையும் குற்றவுணர்வையும் கடக்க முயல்கிறார்” என்றாள். “இளைய யாதவர் என்ன முடிவெடுக்கக்கூடும்?” என்றாள் விஜயை. “அதையறிந்தால் நான் அவருக்கு அணுக்கியாக இருந்திருப்பேன் அல்லவா?” என்று அபயை புன்னகைத்தாள்.

“நான் உன்னிடம் ஒன்று கேட்க வேண்டுமடி. அவரிடம் ஒரு தனிமையும் துயரும் உள்ளது அல்லவா? காணும் பெண்டிரெல்லாம் அவரிடம் உளம் கனிவதும் அணுக்கம் கொள்வதும் அதனால்தான் அல்லவா?” என்றாள் தேவிகை.

“காலத்திரளில் ஒன்றென அமையாத அத்தனை மானுடரிலும் இருக்கும் தனிமையும் துயரும்தான் அது. அவர்கள் பேருருக் கொள்ளும்தோறும் அவையும் வளர்ந்து பெருகுகின்றன. அவை தெய்வங்களின் தனிமை, தெய்வங்களின் மாற்றிலாப் பெருந்துயர்” என்றாள் அபயை. “அதை ஏன் நாம் விரும்புகிறோம்?” என்றாள் தேவிகை. “ஏனெனில் நாம் அவற்றை புவியில் நிலைநிறுத்த விரும்புகிறோம்” என்றபின் அபயை தலைவணங்கி வெளியே சென்றாள்.

# குருதிச்சாரல் - 24

**பகுதி மூன்று : மலைச்சுனையின் ஓசை – 7**

சிற்றவையின் வாயிலை தேவிகையும் விஜயையும் அடைந்தபோது அங்கு நின்றிருந்த காவலன் தலைவணங்கி “அவை கூடிக்கொண்டிருக்கிறது, அரசியரே. தங்கள் வருகையை அறிவிக்கிறேன்” என்றான். அவன் உள்ளே செல்ல தேவிகை “இப்புவியில் தனிச்சொல்லவைகளைப்போல நான் வெறுப்பவை பிறிதில்லை. அங்கே மானுடர் கூடியிருந்து ஊழுக்கும் தெய்வங்களுக்கும் எதிராக சூழ்ச்சி செய்கிறார்கள் என எண்ணுவேன்” என்றாள். விஜயை “இம்முறை இந்த அவையில் அவர் இருப்பார்” என்றாள். “ஆம், நான் வந்தது அதற்காக மட்டுமே” என்றாள் தேவிகை.

ஏவலன் திரும்பிவந்து உள்ளே செல்லும்படி வணங்கி கைகாட்ட தேவிகை முதலில் சென்றாள். அவளுக்குப் பின் சற்று மறைந்தவள்போல விஜயை நுழைந்தாள். அறைக்குள் சௌனகர் மட்டுமே இருந்தார். ஓர் ஏவலன் பீடங்களை

அமைத்துக்கொண்டிருந்தான். சௌனகர் திரும்பி “வருக அரசியரே, அமர்க!” என்று இரு பீடங்களை காட்டினார். “இப்போதுதான் சந்திப்பு என்றார்கள்” என்றாள் தேவிகை. “ஆம், அனைவரும் வந்துகொண்டிருக்கிறார்கள். இது அரசகுடியினர் மட்டும் பங்கெடுக்கும் சிற்றவை” என்றார் சௌனகர். அவர்கள் அமராமல் சுவர் அருகே நின்றனர். “காத்திருக்கும் அவைகள் எவ்வளவு வெறுமையுடனிருக்கின்றன!” என்றாள் தேவிகை. விஜயை வெறுமனே அவள் முழங்கை மடிப்பை தன் வலக்கையால் பற்றினாள்.

நகுலனும் சகதேவனும் உள்ளே வந்தனர். தேவிகையும் விஜயையும் தலைவணங்கினர். சற்றே தலையசைத்து மெல்லிய குரலில் சௌனகரிடம் “அன்னை எவ்வாறிருக்கிறார்?” என்றான் சகதேவன். “அதே உளநிலையில்தான்” என்று சௌனகர் சொன்னார். மேலும் பேசாமல் அவர்களும் மறுபக்கம் நின்றனர். பீமன் வருவதை ஏவலன் அறிவித்தான். கதவைத் திறந்து உள்ளே வந்த பீமன் வணக்கங்களுக்கு தலையசைத்தபின் சௌனகரிடம் “மூத்தவர் கிளம்பிவிட்டார்” என்றபடி சாளரத்தருகே சென்று கைகளை மார்பில் கட்டியபடி வெளியே நோக்கி நின்றான். அவன் முகத்தில் சாளரத்தின் மெல்லிய ஒளி விழுந்து மெல்லிய பூனைமயிர்களை பொன்னிறம் கொள்ள வைப்பதை தேவிகை பார்த்தாள்.

விஜயை அவளிடம் “பலந்தரையை நீ எப்போது பார்த்தாய்?” என்றாள். “நெடுநாளாயிற்று. இங்கிருப்பாள் என்று எண்ணினேன்.” தேவிகை “இந்திரப்பிரஸ்தத்தில் இருக்கிறார்கள் அனைவரும். ஒருவேளை சில நாட்களில் இங்கு வரக்கூடும்” என்றாள். “யாரெல்லாம்?” என்றாள் விஜயை. “கரேணுமதியும்,

பிந்துமதியும். சுபத்திரை துவாரகையில் இருக்கிறாள்.” விஜயைக்கு அவ்வாறு தாழ்குரலில் பேசிக்கொள்வது பிடித்திருந்தது. “இந்திரப்பிரஸ்தத்தில் அல்லவா இருந்தாள்?” என்றாள். “ஆம், அங்கிருந்து துவாரகைக்கு சென்றாள். எதன்பொருட்டென்று தெரியவில்லை” என்றாள் தேவிகை. “அவள் மைந்தன் அங்கிருக்கிறான்” என்றாள் விஜயை.

காவலன் மீண்டும் அறைக்குள் நுழைந்து “இந்திரப்பிரஸ்தத்தின் அரசர் யுதிஷ்டிரர் அரசியுடன் எழுந்தருள்கிறார்” என்றான். கதவு திறந்து உள்ளே வந்த முதன்மைக்காவலன் வலம்புரிச்சங்கை ஊதி “குருகுல அரசர், பாண்டவ முதல்வர் யுதிஷ்டிரர் வருகை!” என அறிவித்தான். அனைவரும் நிமிர்ந்து கைகூப்பி நிற்க யுதிஷ்டிரர் தொய்ந்த தோள்களும், நீராடி உலர்ந்து திரிகளாக தோளில் விழுந்த நரைத்த குழலும், மார்பில் படிந்து அசைந்த தாடியுமாக கைகளைக் கூப்பியபடி அறைக்குள் நுழைந்தார். அவரைத் தொடர்ந்து திரௌபதி வந்தாள். துயில்கலைந்து எழுந்து நடந்துவரும் சிறுகுழவி போலிருந்தாள். முகம் அவள் அங்கிருப்பவர் எவரையுமே அறியவில்லை என்று காட்டியது.

நகுலனும் சகதேவனும் பீமனும் முறைப்படி வணங்க அப்பால் நின்று தேவிகையும் விஜயையும் வணங்கினர். சௌனகர் வணங்கி “அவைகொள்க, அரசே!” என்று இருவரையும் அமரவைத்தார். பீமனும் நகுலனும் சகதேவனும் அருகே செல்ல அவர்களை அவர் கைதூக்கி வாழ்த்தினார். நகுலன் ஏதோ நலம் உசாவ அவர் மறுமொழி அளித்தார். சற்றும் உளம் செலுத்தாமல் வெறும் சடங்கென்றே அவ்வசைவுகளும் சொற்களும் வணக்கங்களும் நிகழ்ந்தன.

ஏவலன் உள்ளே நுழைந்து “இளைய யாதவர் வந்துகொண்டிருக்கிறார். உடன் இளைய பாண்டவர் வருகிறார்”

என அறிவித்தான். தேவிகையின் உடலில் எழுந்த எதிர்பார்ப்பை வெறும் தொடுகையாலேயே விஜயை உணர்ந்தாள். யுதிஷ்டிரர் தாழ்ந்த குரலில் திரௌபதியிடம் ஏதோ சொல்ல பாதி சரிந்த இமைகளுடன் கைகளை மார்பில் கட்டி பீடத்தில் சாய்ந்திருந்த அவள் தலையசைத்தாள். பீமன் அங்கிலாதவன்போல் சாளரத்தினூடாக நோக்கிக்கொண்டிருந்தான். நகுலனும் சகதேவனும் தங்களுக்குள் மிகத் தாழ்ந்த குரலில் உரையாடினர்.

தேவிகை "எவரும் இங்கு நிகழ்பவற்றில் முழுதுளம் அளிக்காதவர்கள்போல் அவரவருக்குரிய தனியுலகில் இருக்கிறார்கள். அப்படியென்றால் எவர்தான் இங்கு இவற்றை நடத்துபவர்?" என்றாள். விஜயை "முழுதுளம் அளிப்பவர் ஒருவரே, அன்னை குந்தி" என்றாள். ஏவலன் உள்ளே நுழைந்து "பேரரசி குந்தி வருகை" என்றான். பக்கவாட்டு அறையிலிருந்து முதுசேடி ஒருத்தியால் வழிநடத்தப்பட்டு குந்தி உள்ளே வந்தாள். ஒரு கையால் சேடியின் தோளை பற்றியிருந்தாள். பிறிதொரு கை மேலாடையைப்பற்றி உடலோடு அழுத்தியிருந்தது. அவள் உடலில் ஒரு நடுக்கம் இருப்பது ஒவ்வொரு அடிவைப்பிலும் தெரிந்தது.

குந்தியின் முகம் நன்கு வெளுத்திருந்தது. சேடி குந்தியை பீடத்தில் அமர்த்தியதும் எழுந்து நின்றிருந்த யுதிஷ்டிரரும் மைந்தரும் குந்தியை சொல்லின்றி வணங்க அவர்களின் தலையில் கைவைத்து அவள் வாழ்த்தினாள். யுதிஷ்டிரர் சேடியிடம் "அன்னைக்கு அருந்துவதற்கு..." என்று சொல்ல எதுவும் தேவையில்லை என்று குந்தி கைகளால் விலக்கினாள். கண்களை மூடிக்கொண்டு துயில்கொள்பவள்போல் மெல்ல உடல் அடங்கினாள். அவள் உதடுகள் வெளுத்திருப்பதைக்

கண்ட விஜயை “நோயுற்றிருக்கிறார்” என்றாள். “நோயல்ல, உளக்கொதிப்பு. இன்று பாரதவர்ஷத்தின் முழு எடையும் அவர்மேல் அழுந்துகிறது” என்றாள்.

ஏவலன் உள்ளே வந்து “இளைய யாதவர் இளைய பாண்டவருடன் வருகை” என்றான். குந்தியைத் தவிர பிறர் எழுந்து நின்றனர். இளைய யாதவர் கைகூப்பியபடி உள்ளே வந்து குந்தியை அணுகி கால்தொட்டு சென்னிசூடினார். குந்தி வலக்கையை அவர் தலையில் வைத்து சொல்லில்லாமல் வாழ்த்தினாள். பிறர் வணக்கங்களை ஏற்றபின் தன் பீடத்தில் இளைய யாதவர் அமர அவருக்குப் பின்னால் இருந்த இருக்கையில் அர்ஜுனன் அமர்ந்தான். அவர்கள் இருவரின் முகங்களில் இருந்தே அவர்கள் பெரிதாக ஏதும் பேசிக்கொள்ளவில்லை என்பது தெரிவதை விஜயை வியப்புடன் எண்ணிக்கொண்டாள்.

சௌனகர் குந்தியின் சேடியை நோக்கி விழிகாட்ட அவள் தலைவணங்கி வெளியே சென்றாள். அறைக்குள் இருந்த இரு ஏவலர்கள் வெளியேற சௌனகர் தானும் வெளியே செல்ல கதவை தொட்டார். குந்தி “தாங்கள் இருக்கலாம், சௌனகரே” என்றாள். “ஆணை” என்றபின் சௌனகர் சுவரோரமாக இருந்த சிறிய பீடத்தில் அமர்ந்து கைகளை மார்பில் கட்டிக்கொண்டார். தேவிகை “சௌனகர் மிகச் சிறந்த நடிகர்” என்றாள். “ஏன்?” என்றாள் விஜயை. “அனைத்திலும் முற்றார்வம் இருப்பதுபோலிருக்கிறார். அவருக்கு எதிலும் மெய்யான பற்று இல்லை” என்றாள். விஜயை “வேதமறிந்த அந்தணர் அவ்வாறுதான். அவர்கள் பற்றையும் பற்றின்றி ஆற்றவேண்டும் என்பது நெறி” என்றாள்.

அறைக்குள் ஆழ்ந்த அமைதி நிலவியது. வெளியே சோலையிலிருந்து எழுந்த காற்றோசையும் இலையோசையும் கலந்த ஒழுக்கொலி மட்டும் கேட்டுக்கொண்டிருந்தது. ஒவ்வொருவரும் பிற எவரையும் நோக்காமல் தங்கள் கைகளையோ அருகிருக்கும் பொருட்களையோ தரையையோ நோக்கிக்கொண்டிருந்தார்கள். தேவிகை மெல்ல அசைந்து பெருமூச்சுவிட்டபோது இயல்பாக கலைந்து அவளை நோக்கிய யுதிஷ்டிரர் சூழுணர்வு பெற்று சகதேவனிடம் “இளையவனே, நீ சொல்!” என்றார்.

சகதேவன் தலைவணங்கி “துவாரகையின் அரசே, இங்கு நிகழ்வன தங்களுக்கு சௌனகரால் விரிவாக சொல்லப்பட்டிருக்கும். தங்கள் சொல்லினூடாக இந்த இக்கட்டைக் கடக்கமுடியுமென்று நம்பியே இவ்வவை கூட்டப்பட்டுள்ளது. எப்போதும்போல தங்களை நம்பியிருக்கிறோம்” என்றான். “இருபுறமும் மதகளிறுகளால் இழுக்கப்படும் கொலைத்தண்டனையாளனின் நிலையிலிருக்கிறேன், இளைய யாதவனே” என்றார் யுதிஷ்டிரர். “ஒவ்வொரு அணுவிலும் பிளக்கும் பெருவலியுடன் இங்கு அமர்ந்திருக்கிறேன். நான் என்ன செய்யவேண்டும்?” என்றார்.

இளைய யாதவர் “இரு நிலையே துயர். மெய்யறிவரும் பேதையும் இரண்டின்மையின் உவகையிலிருக்கிறார்கள்” என்றார். “ஒருபுறம் தந்தையின் ஆணை. அதை மீறுவது எளிதல்ல. இத்தருணத்தை, இச்சூழலை மட்டும் எண்ணினால் மிக மிக எளிதாக மீறலாம். காலமும் நாடும் கண்ணுக்குப் படுமென்றால் நெஞ்சு பதைத்து பின்னடி வைப்போம். பாண்டவர்களே, படைக்கலங்களாலும் நால்வகைப் படைகளாலும் கோட்டையாலும் அரண்மனையாலும்

அரியணையாலும் ஆனது நம் அரசு என்று எண்ணவே நம் விழிச்செவி ஆணையிடுகிறது. நம் சொற்கள் முற்றிலும் நம்முடையவை என எண்ணவே உள்ளம் விழைகிறது. விழிச்செவி முற்றாக எதையும் சொல்லவியலாதென்றும் உள்ளமென்பது ஆணவத்தின் அணிப்போர்வை என்றும் உணர்வதே மெய்யறிதல்.”

“மானுடச் சித்தம் உணரும் கால வடிவே வரலாறு. நம் அறிதலின் ஓர் ஒழுங்கு அது. யுதிஷ்டிரரே, வரலாற்றினூடாக உருவாகித் திரண்டு வந்துள்ளது அரசு என்னும் அமைப்பு. அது தனித்த கட்டகம் அல்ல. ஒன்றுடன் ஒன்று கலந்து ஒன்றையொன்று யாக்கும் பலநூறு குமுகக் கட்டகங்களின் தொகையின் உச்சிப்புள்ளி மட்டுமே. குடியும் குலமும் மன்றும் ஆலயமும் அரசும் ஒன்றே. எண்ணிநோக்குக, சந்தையும் பணமும் நெறியவையும் அரசும் வெவ்வேறல்ல” என்று இளைய யாதவர் சொன்னார். “குமுகக் கட்டகங்கள் ஒவ்வொன்றும் மானுடர் ஒருவருக்கொருவர் அளித்துக்கொள்ளும் சொல்லுறுதிகளால் நிலைகொள்பவை. மொழிச்சரடின் முடிச்சுகள் அவை. ஒன்றை அவிழ்த்தால் பிற அனைத்தும் அவிழத் தொடங்குவதை காணலாம். ஆகவேதான் அரசரும் சான்றோரும் தெய்வங்களுக்கு நிகராக சொற்களை கொள்கிறார்கள். அரசே, நாம் புழங்கும் ஒரு சொல்லின் பொருளை அழிக்கையில் நம்மை ஏந்தியிருக்கும் தெய்வங்களில் ஒன்றை திருப்பியனுப்புகிறோம்.”

“பல்லாயிரம் சொல்லுறுதிகளின் மையப்புள்ளியில் அமைந்துள்ளது நம் அரியணை. இங்குள்ளோர் ஒவ்வொருவரையும் நால்வகை வாழ்வுநெறிகளுக்கும், குடியறத்திற்கும், குலமுறைமைகளுக்கும் கட்டுப்பட்டவராக

ஆக்குவது தந்தையும் தாயும் ஆசிரியரும் குடியும் அளிக்கும் சொல்லுறுதிகளே. ஒவ்வொரு குடியும் பிறிதொன்றுடன், ஒவ்வொரு குலமும் பிற குலங்களுடன் கொண்டுள்ள சொல்லுறுதிகளால் உருவாக்கப்படுவதே நல்லாட்சி. பல்லாயிரம் சொல்லுறுதிகள். ஒவ்வொன்றும் ஒவ்வொரு இலக்கும் கட்டமைப்பும் கொண்டவை. அனைத்திற்கும் மாறாமல் இருப்பது ஒன்றுண்டு, சொல்லுறுதி என்பது மானுடரால் கடைப்பிடிக்கப்படவேண்டியது என்னும் பொது ஏற்பு.”

“ஆகவே ஒரு சொல்லுறுதியை நாம் மீறிச்செல்கையில் சொல்லுறுதிகள் மீறப்படலாம் என்று மானுடத்திடம் சொல்கிறோம். அதன்பின் அண்டை வீட்டாரிடம் வாங்கிய ஒரு செம்பு நாணயத்தை தான் திருப்பி தரவேண்டியதில்லை என்று ஒருவன் எண்ணலாம். அன்னைக்கு உணவளிக்க ஒருவன் மறுக்கலாம். துயின்றுகொண்டிருக்கும் அந்தணனை ஒருவன் கொலை செய்யலாம். வேள்வித் தீயில் இழிபொருளெடுத்து வீசலாம் ஒருவன். எதுவும் ஒப்புக்கொள்ளப்பட்டதென்றே ஆகும்” என்றார் இளைய யாதவர். “ஆகவே சொல்லுறுதிகள் அனைத்திற்கும் முற்றிலும் கட்டுப்பட்டவன் அரசன். மரபு முறைமைகளுக்கு, நூல்நெறிகளுக்கு, குடிநம்பிக்கைகளுக்கு, தானே விடுத்த சொல்லுக்கு முற்றிலும் தலையளிக்கையிலேயே அவன் பிறர்மேல் ஆணை கொண்டவனாகிறான்.”

குந்தி “மருகனே, என்னுடைய உணர்வுகளை நேற்றே சொல்லிவிட்டேன். தந்தைசொல் ஏற்று இவர்கள் கானேகலாம். ஆனால் பாண்டுவின் மைந்தரெனும் அடையாளத்தை இவர்களுக்கு அளிக்கமாட்டேன், அதற்கான முற்றுரிமை

என்னிடமுள்ளது. அதைத் துறந்து இவர்கள் செல்லட்டும். நான் சொல்வதற்கு ஒன்றுமில்லை” என்றாள். யுதிஷ்டிரர் மெல்லிய நடுக்குடன் கைகூப்பி “இவ்வாழ்வில் பிறரிடமிருந்து நான் பெற்றுக்கொள்ள விரும்பும் ஒன்றே ஒன்று அதுதான் யாதவனே, என் தந்தையின் பெயர். அதையும் அன்னை எனக்கு மறுப்பார்களென்றால் அதன்பின் நான் உயிர்வாழ்வதில் பொருளில்லையென்றே எண்ணுகின்றேன்” என்றார்.

“ஆம், அத்தை உரைத்தது மறுதரப்பு” என்றார் இளைய யாதவர். “அன்னைசொல்லே இறையாணை என்று கொள்வது யாதவர் குடிமரபு. நான் இதில் எதை சொன்னாலும் ஒன்றை மீறுவதே ஆகும்.” மெல்ல சிரித்து “நெறிகளுக்கு ஒரு தனிச்சிறப்பு உள்ளது. அவை நிகரான பிறிதொரு நெறியால் எதிர்கொள்ளப்படுகையில் பேராற்றல் கொள்கின்றன. மறுக்கப்படுகையில் பேருருக்கொண்டு படைக்கலங்கள் ஏந்துகின்றன. மீறப்பட்ட பின் வஞ்சத்தெய்வங்களாக மாறி தொடர்ந்து வருகின்றன” என்றார். யுதிஷ்டிரர் “நான் இறப்பதே வழி என்றால் அதுவே நிகழ்க!” என்றார். “நீ இறப்பதும் என் ஆணையை மீறுவதே. உன் தந்தையின் பெயரும் உன் குலமும் சொல்லாமல்தான் உனக்கு நீர்க்கடன் அளிக்கப்படவேண்டும். விண்ணுலகிலும் நீ குலமிலியும் குடியிலியுமாகவே உறையவேண்டும்” என்றாள் குந்தி.

யுதிஷ்டிரரிடமிருந்து மெல்லிய விம்மலோசை எழுந்தது. அந்தச் சிற்றொலி கூரிய கத்திபோல தன் வயிற்றில் இறங்குவதை விஜயை உணர்ந்தாள். ஆனால் தேவிகையின் தாடை இறுகியது. அவள் உதடுகள் மட்டும் அசைய “கோழை” என்றாள். விஜயையின் உள்ளம் நடுக்கு கொண்டது. அவள் தேவிகையின் கைகளைப் பற்றியிருந்த கையை

விலக்கிக்கொண்டாள். பீமனின் முகம் வெறுப்புகொண்டதுபோல் இருந்தது. நகுலனும் சகதேவனும் உறைந்த சிலைமுகங்களுடன் இருந்தனர். அர்ஜுனனும் திரௌபதியும் எதையும் அறியாதவர்களாக வெற்றிருப்பு கொண்டிருந்தனர். உதடுகளை இறுக்கி முகம் தாழ்த்தி குந்தி அமர்ந்திருந்தாள்.

“பேரரசி, இப்பொழுது ஒரு சிறு வாய்ப்பு உள்ளது” என்றார் இளைய யாதவர். அனைவரும் இளைய யாதவரைப் பார்த்தபோது அம்முகங்களிலிருந்த எதிர்பார்ப்பு விஜயையின் உள்ளத்தை நெகிழவைத்தது. அவர்கள் ஒவ்வொருவரும் எதிர்கொண்டிருக்கும் அந்த இக்கட்டே அவர்களின் விலகலாக தனிமையாக வெளிப்படுகிறது என்று அவள் உணர்ந்தாள். “நமக்கு இவ்வாறு ஒரு தூது வந்த செய்தியை நாமே சென்று துரியோதனருக்கு சொல்வோம். திருதராஷ்டிரரின் ஆணையை யுதிஷ்டிரராகிய அவரது முதல் மைந்தர் தலைக்கொண்டிருக்கிறார் என்றும், எந்நிலையிலும் உடன் பிறந்தாருக்கு எதிராக அவர் போர்புரிவதில்லை என்று முடிவெடுத்திருக்கிறார் என்றும் அறிவிப்போம். அதற்கு முன்னரே அச்செய்தியை சூதர்கள் அஸ்தினபுரியின் குடிகளிடையே பரவச் செய்யட்டும். அவையில் எழுந்து நம் தூதர் துரியோதனனிடம் வினவட்டும், அவருடைய தந்தை அவருக்களிக்கும் ஆணையை அவர் நிறைவேற்றக்கூடுமா என்று.”

“இன்றும் அஸ்தினபுரியின் பேரவைக்கு அவர் கட்டுப்பட்டவரே. அங்கே பிதாமகரும் ஆசிரியர்களும் அமர்ந்திருக்கிறார்கள். தந்தைசொல் கொள்ளாதவரை அவர்கள் எப்படி எதிர்கொள்கிறார்கள் என்று பார்ப்போம். அதற்கப்பால் ஷத்ரியர்களின் அரசப்பேரவை அவரை எதிர்பார்த்திருக்கிறது.

ஷத்ரியர்கள் மண்விழைவு கொண்டவர்கள், தன்முனைப்பு மிகுந்தவர்கள். ஆனால் தொல்வேதம் சொல்லும் அறத்தை அவர்களால் மீற முடியாது. ஏனென்றால் அதன் பொருட்டே அவர்கள் இன்று வாளெடுத்திருக்கிறார்கள். தந்தைசொல் குறித்து தொல்வேதம் சொல்வதென்ன என்று அவர்கள் கூறட்டும். வேதம் காக்க வேதச்சொல் மீறி படைக்கலம் கொள்ளலாமா என்று கேட்போம்.”

பாண்டவர்கள் முகங்களில் குழப்பமும் தயக்கமுமே தெரிந்தது. இளைய யாதவர் “அஸ்தினபுரியின் பேரவையில் நின்று திருதராஷ்டிரரின் விழிநீர் கலந்த சொல்லை முன்வைக்கட்டும் நம் தூதர். அதை துரியோதனர் ஒதுக்கமுடியாது” என்றார். சகதேவன் மெல்ல அசைந்தமர யுதிஷ்டிரர் அவனை நோக்கினார். பீமன் உரத்த குரலில் “எவர் சொன்னது? மண்ணின்பொருட்டு மூன்று தெய்வங்களையே விலக்கத் துணிபவன் அஸ்தினபுரியின் அரசன்” என்றான். சகதேவன் “ஆம், எத்தனை தூதுகள் வந்து சென்றுவிட்டன. மேலுமொரு தூதால் ஆவதென்ன?” என்றான்.

“இது வேதத்தின் மீதான வினா. அவ்வாறு வேதச்சொல்லை அவர் விலக்கினால் ஷத்ரியர்களை, தன் அவையை, படைத்துணையாக அமையும் மூத்தோரை அவர் விலக்கவேண்டியிருக்கும். அதன்பின் அவரால் களம்நிற்க இயலாது. இந்த அவையில் ஒலித்த திருதராஷ்டிரரின் குரல் அந்த அவையிலும் ஒலிக்கட்டும்” என்றார் இளைய யாதவர். “நாம் அவையில் கோரப்போவதென்ன?’ என்று பீமன் கேட்டான். “நெறிப்படி பாதிஅரசும் இந்திரப்பிரஸ்த நகரும். அதுவே உங்களுக்கு வாக்களிக்கப்பட்டது. ஆனால் மாற்றுச்சொல் ஒன்றை அளிப்போம், எந்நிலையிலும் இந்திரப்பிரஸ்தம்

அஸ்தினபுரியுடன் போரில் களம்நிற்காது. அஸ்தினபுரியின் மண்ணையோ அதன் துணைவரின் கோலையோ இந்திரப்பிரஸ்தம் கொள்ள எண்ணாது.”

“அதை அவன் அளிப்பானென்று எண்ணுகிறீர்களா, யாதவரே?” என்று பீமன் கேட்டான். “அளித்தாகவேண்டும். தொல்வேதத்தின் பொருட்டு படைமுகம் கொண்டிருப்பதாக அவர்கள் இன்னும் சில நாட்களில் அறிவிக்க இருக்கிறார்கள். தந்தைசொல்லுக்கு அப்பால் தெய்வச்சொல் இல்லையென்று ஆணையிடும் வேதத்தைக் கடந்துசென்று அம்முடிவை எடுக்கிறார்களா என்று பார்ப்போம். வேதத்தின் ஒரு சொல் மீறப்பட்டால் வேதம் மீறப்பட்டதாகவே பொருள் என்று உரைத்த முன்னோருக்கு அவர்கள் என்ன விளக்கம் அளிக்கிறார்கள் என்று நாடு அறிக!”

“நாம் அவர்களின் மண்ணையோ அணுக்கரின் அரசையோ கொள்ளமாட்டோம் என்னும் சொல்லுக்கு பொருளேதுமில்லை” என்றான் பீமன். “அனைவரும் அறிவர், அவன் விழைவது அஸ்தினபுரியின் அரசாட்சியை மட்டும் அல்ல. மும்முடி சூடி பாரதவர்ஷத்தின்மேல் குடைகவிக்க விழைகிறான். இந்திரப்பிரஸ்தம் இருக்கும் வரை அது நிகழாது என அறிவான்.” இளைய யாதவர் “அது பின்னர். இப்போது போரை தவிர்க்கமுடியும் அல்லவா?” என்றார். “ஏன் தவிர்க்கவேண்டும்? அவன் நோக்கில் நாம் இன்றுபோல் என்றும் ஆற்றலின்றி இருந்ததில்லை. முட்செடியை முளையிலேயே கிள்ளுவதல்லவா நன்று?” இளைய யாதவர் “ஆம், ஆனால் இந்த வினாவுக்கு முன் அங்கு அவையமர்ந்துள்ள பிதாமகரும் ஆசிரியர்களும் நிலையழிவார்கள் என்றே எண்ணுகிறேன்.” என்றார்.

“நான் நம்பிக்கை கொள்ளவில்லை, யாதவனே” என்றார் யுதிஷ்டிரர். “நான் முயலலாம் என எண்ணுகிறேன்” என்றார் இளைய யாதவர். சகதேவன் “தாங்களா? தங்கள் தரப்பிலிருந்து தூதா?” என்றான். “நானே செல்லலாம் என எண்ணுகிறேன்” என்றார் இளைய யாதவர். சகதேவனும் நகுலனும் அறியாது எழுந்துவிட்டார்கள். சகதேவன் உரக்க “தாங்களே தூது செல்வதாக இருக்கிறீர்களா?” என்றான். “ஆம், இம்முறை நானே செல்லலாம் என்று எண்ணுகிறேன். பிறிதெவரும் என் சொற்களை உரைக்க இயலாது” என்றார் இளைய யாதவர். “நீயேவா?” என்று யுதிஷ்டிரர் கேட்டார். “யாதவனே, அவ்வழக்கம் இங்கில்லை. நீ பிறிதொரு நாட்டின் முடிசூடிய அரசன். பிறர்பொருட்டு தூது செல்வது உனக்கு இழிவு.”

“என் இழிவும் பெருமையும் இங்குள்ள எதன்பொருட்டும் அல்ல” என்று இளைய யாதவர் புன்னகையுடன் சொன்னார். “இது நான் ஆட வேண்டிய களம். இனிமேல் இது மண்ணுரிமையின்பாற்பட்டதல்ல, வேதச்சொல் குறித்தது. அதை அவ்வவையில் நானே கேட்டு மீள்கிறேன்” என்றார். “யாதவரே, தாங்கள் எங்கள்பொருட்டு தூதுசெல்வது தங்கள் எண்ணத்தை மட்டும் சார்ந்தது அல்ல. நீங்கள் முடிசூடியிருக்கும் யாதவ அரசின் அவை என்ன எண்ணுகிறதென்பதும் கருதப்படவேண்டும்” என்றான் பீமன். “நான் துவாரகையின் முடியை துறந்துவிட்டேன்” என்றார் இளைய யாதவர்.

ஒரு சில கணங்களுக்குப் பின்னரே அவர்கள் அச்சொல்லின் மெய்ப்பொருளை உணர்ந்தனர். பலமுறை அது அவர்களுக்குள் ஒலித்து ஓய்வதை உணர முடிந்தது. யுதிஷ்டிரர் சொல்லடங்கி வாய்திறந்து விழிமலைத்து அமர்ந்திருந்தார். தேவிகை அஞ்சியவள்போல விஜயையின் கைகளை பற்றினாள். அவள்

விரல்கள் நடுங்கிக்கொண்டிருந்தன. ஆனால் அதை தான் முன்னரே அறிந்திருப்பதுபோல விஜயைக்கு தோன்றியது. அவள் இளைய யாதவரின் புன்னகை நிறைந்த முகத்தையே விழிவிலக்காமல் நோக்கிக்கொண்டிருந்தாள்.

யுதிஷ்டிரர் மெல்ல மீண்டு "என்ன சொல்கிறாய், யாதவனே?" என மெல்லிய குரலில் கேட்டார். "விளையாடுகிறாயா?" இளைய யாதவர் "நான் என் நகரை ஆளும் பொறுப்பை சாம்பனுக்கு அளித்துவிட்டு நகர்நீங்கினேன். நேற்றுதான் கோகுலத்திலிருந்து படையாழியும் வேய்குழலுமாகக் கிளம்பியவன் என உணர்கிறேன்" என்றார். "ஏன்? எதற்காக அதை செய்தாய்?" என்றார் யுதிஷ்டிரர். "அரசே, ஒருவேளை போர் நிகழுமென்றால் தன் விருப்பப்படி முடிவெடுக்க யாதவப்படைகளுக்கு முற்றுரிமை தேவை. அவர்கள் களத்தில் என்னைக் கொன்றால் அது அரசப்பழியாக ஆகக்கூடாது" என்றார் இளைய யாதவர். "என் தந்தையும் மூத்தவரும் படைகளும் என்னை கைவிட்டபின் அந்தச் செங்கோலை மட்டும் ஏந்துவதில் எப்பயனும் இல்லை. இனி நான் பார்த்தனின் பாகன் மட்டுமே."

யுதிஷ்டிரர் சில கணங்களுக்குப் பின் "நீ அம்முடிவை எடுத்தால் பிறிதொன்று நான் சொல்வதற்கில்லை" என்றார். "மண்ணால் அமைவதல்ல உன் மாண்பு என்று அறியாதவர்கள் அல்ல நாங்கள்." சகதேவன் "ஒருவகையில் அது நன்றே. யாதவமுடியை நீங்கள் சூடியிருக்கும் வரை எச்செயலையும் யாதவநலன் கருதியே செய்தாகவேண்டும். அந்தப் பொறுப்பிலிருந்தும் விடுதலை கொண்டுவிட்டீர்கள்" என்றான். இளைய யாதவர் "என் சொற்களுக்கு அப்பால் நான் பொறுப்பேற்றுக்கொள்வது ஏதுமில்லை" என்றார். "நீயே

தூதுசெல்வதாக இருந்தால் நான் நம்ப தெய்வங்கள்கூட தேவையில்லை. நலம் விளையும்" என்றார் யுதிஷ்டிரர். இளைய யாதவர் "அன்னையே, தாங்கள் இதை ஏற்பீர்கள் என்று எண்ணுகிறேன்" என்றார். "ஆம், நீ சென்று அவ்வவையில் வென்று என் மைந்தருக்குரிய மண்ணைப் பெற்று மீளும்வரை நான் காத்திருக்கிறேன்" என்று குந்தி சொன்னாள்.

மேலும் சற்றுநேரம் அனைவரும் அசையாது அமர்ந்திருந்தனர். இன்னும் ஏதோ சொல்லவும் கேட்கவும் எஞ்சுவதுபோல. குந்தி இறுகிய முகத்துடன் கைகளை நீட்ட தேவிகை ஓடிச்சென்று பற்றிக்கொண்டாள். மெல்ல எழுந்து சிற்றடி வைத்து அவள் நடக்க தேவிகை வெளியே அழைத்துச்சென்றாள். இளைய யாதவர் புன்னகையுடன் விஜயையை நோக்கி "அவையில் சல்யரை பார்ப்பேன் என நினைக்கிறேன், அரசி" என்றார். அவளால் அவர் விழிகளை நோக்கமுடியவில்லை. புன்னகையுடன் தலையாட்டிவிட்டு நோக்கை திருப்பிக்கொண்டாள். யுதிஷ்டிரர் எழுந்து "நன்று திகழ்க, யாதவனே!" என்றார்.

திரௌபதி எழுந்து "நலமாகுக!" என்றாள். இளைய யாதவர் தலைவணங்கினார். அவர்களுக்குள் சொல்லோ விழியாடலோ ஒன்று நிகழுமென விஜயை எதிர்பார்த்தாள். அவர்கள் ஒருவரை ஒருவர் அறியாதவர்கள் போலிருந்தனர். யுதிஷ்டிரரும் திரௌபதியும் வெளியேற அர்ஜுனனும் இளைய யாதவரும் உடன் சென்றனர். சகதேவன் விஜயையை ஒருகணம் கூர்ந்து நோக்கிவிட்டு நகுலனின் தோளை தொட்டான். அவர்கள் இருவரும் வெளியே சென்றனர். சௌனகர் அவர்களைத் தொடர்ந்து சென்றார். தேவிகை மீண்டு

வந்து “செல்வோம்” என்றபோதுதான் விஜயை அவ்வறையிலிருந்து தன் உள்ளத்தை பெயர்த்தாள்.

# குருதிச்சாரல் - 25

**பகுதி மூன்று : மலைச்சுனையின் ஓசை – 8**

தன் தனியறைக்குள் விஜயை மஞ்சத்தில் கண்மூடி, கைகால்கள் முற்றிலும் தளர்ந்து வாழைத்தண்டுகள் என எடைகொண்டு இறகுச் சேக்கைமேல் படிந்திருக்க, புதைந்தவள்போல கிடந்தாள். அன்று நிகழ்ந்த ஒவ்வொன்றும் ஒன்றுடன் ஒன்று தொடர்பற்ற ஓவியங்களாக அவள் முன் தோன்றி மறைந்துகொண்டிருந்தன. மிக அப்பால் சிறுவர்கள் விளையாடும் ஓசையை அவள் கேட்டாள். ஒரு சுவருக்கு அப்பாலென அவர்கள் அங்கே துரத்தி விளையாடுகிறார்கள் என்று தோன்றியது. அல்லது அவர்கள் நடுவே ஒரு குட்டிப்புரவி இருக்கக்கூடும்.

அவள் எழுந்து சென்று அச்சுவரைப்பற்றி மறுபக்கம் நோக்க விரும்பினாள். தான் இருப்பது ஒரு சிறு மலர்ச்சோலையில் என்று உணர்ந்தாள். சகலபுரிக்கு அருகே இருந்த பிரம்மகிரி எனும் சிறுநகரம். இமயமலைச் சரிவுகளுக்கு ஏறும் மலைப்பாதைகள் தொடங்கும் புள்ளி அது. சிறுசந்தையாக இருந்து வளர்ந்து கோட்டையும் சுங்கச்சாவடியும் கொண்டு நகரமென்றாகியது. அதன் வடமேற்கே இருந்த குளத்தினருகே அந்த மாளிகை அமைந்திருந்தது. எப்போதாவது மலையில் வேட்டைக்குச் செல்கையில் மூத்த தந்தை தன்

படைவீரர்களுடன் அங்கு சென்று தங்குவதுண்டு. அவள் இருமுறை மட்டுமே அங்கு சென்றிருந்தாள்.

மலைச்சரிவுகளில் மட்டுமே வளரும் புதர்ச்செடிகள் மண்டிய தோட்டம். அதற்கு வேலியிட்டதுபோல் வான்தொட எழுந்த தேவதாருப் பெருமரங்களின் நிரை. மறுபுறம் பெருங்கூச்சல். என்ன செய்கிறார்கள் அங்கே? சிரிப்பொலி கேட்டமையால் அது பூசலல்ல என்று தெரிந்தது. அவள் சுற்றுமுற்றும் பார்த்தபோது புரவிகளுக்கு நீர் வைக்கும் மரக்குடைவுத் தொட்டி ஒன்றை கண்டடைந்தாள். அதை இழுத்துச் சென்று அச்சுவரருகே போட்டு மேலேறினாள். மதிலின் விளிம்பை கைகளால் பற்ற முடிந்தது. கட்டைவிரல் ஊன்றி எழுந்து மறுபுறம் பார்த்தபோது அங்கே சிறுவர்கள் ஒருவரையொருவர் துரத்தி வாழைமட்டையால் மாறி மாறி அறைந்துகொண்டிருப்பதை கண்டாள்.

ஒவ்வொரு முகமும் முன்னரே அவள் அறிந்தது எனத் தோன்றியது. மூத்தவர் ருக்மரதன் சிறுவடிவம் கொண்டதுபோல் ஒருவன். ருக்மாங்கதரின் மைந்தனா பிறிதொருவன்? அவர்களின் மைந்தர்கள் பிரபாகரன், சந்திரசூடன்... முக்தனும் மூஷிகனும் தப்தனும் வக்ரசிம்ஹனும் குபேரனும்... அனைவருக்கும் மலைமக்களுக்குரிய மென்மஞ்சள் நிறம். கரிய நீள்கூந்தல். எலும்புகள் தெரியும் சிற்றுடல். நடுவே ஓடிச் சிரித்த ஒருவன் மட்டும் கரியவன். தோல்கீறி எடுத்த காராமணிவிதையின் ஒளி கொண்டிருந்தான். வியர்வையில் மேலும் மின்னியது தோல். திரும்புகையில் விழிதொட்டுச் செல்லும் சுடர்கொண்ட பற்கள்.

அவன் கால்கள் செம்மண்ணில் உதைத்து உதைத்துத் தாவின. கைகள் காற்றில் சுழன்றன. கரிய சுருள்குழல் கற்றைகள்

தோளிலும் முதுகிலும் விழுந்து உலைந்தெழுந்தாடின. உச்சிக்கொண்டையில் சிறு மயிற்பீலி சூடியிருந்தான். அவனை இருவர் சேர்ந்து பற்றினர். பிற இருவர் சேர்ந்து அவன் கால்களை பற்றினர். அவன் பிடிபட்டுவிட்டதைக் கண்டதும் அத்தனை சிறுவர்களும் அவனை சூழ்ந்துகொண்டனர். கூச்சலிட்டு நகைத்தபடி அவனை இழுத்துச்செல்ல முயன்றனர்.

எண்ணியிராக் கணமொன்றில் அவன் அப்பிடிகளை இலை கிளைகளை என உதறிவிட்டு இருவரின் தோள்மேல் மிதித்தேறி பிற இருவரின் தலையை மிதித்து தாவி ஓடி அப்பாலிருந்த மரக்கிளையொன்றைப் பற்றிஆடி மேலே சென்றான். கீழிருந்து அவர்கள் கைநீட்டிக் கூச்சலிட மரக்கிளையில் நின்று கால் எம்பி உதைத்தபடி சிரித்தான். மரக்கிளையிலிருந்து மலர்கள் அவர்கள்மேல் பொழிந்தன. மலர்மழையில் கைவிரித்துக் கூத்தாடி அவர்கள் சிரித்தனர். ஒரு கூரிய நினைவுபோல் அவள் உணர்ந்தாள். அம்மைந்தர் அனைவரும் முன்னரே இறந்துவிட்டிருந்தனர்.

பெருவிடாயுடன் அவள் விழித்துக்கொண்டாள். மஞ்சத்தில்தான் படுத்திருக்கிறோம் என்னும் உணர்வே ஆறுதலை அளிப்பதாக இருந்தது. அது என்ன கனவு என்று மீண்டு சென்று அள்ள முயன்றாள். மரக்கிளை ஒன்றில் நின்று உலுக்கி மலர் பொழியவைத்த கால்கள் மட்டுமே தெளிவுறத் தெரிந்தன. கருநிறக் கால்கள். செம்பவள நகங்கள். செம்மண்ணால் சிவந்த அடி. அதன் பின்னரே கதவுக்கு வெளியே சேடியின் குரல் கேட்டுக்கொண்டிருப்பதை உணர்ந்தாள். எழுந்து சென்று கதவைத் திறந்து ஆடையை சீரமைத்தாள். அப்போதும் உள்ளம் முழுவிழிப்பு கொள்ளவில்லை.

“துயின்றுவிட்டீர்களா, அரசி?” என்றாள் சேடி. “இல்லை” என்றாள். “இளைய அரசர் தங்கள் அறைக்கு வருகிறார்” என்றாள். அவள் ஒருகணம் உளமுறைந்த பின் மீண்டு “இல்லை, எனக்கு உடல்நலமில்லை” என்று சொன்னாள். அதற்குள் இடைநாழியின் மறுமுனையில் சகதேவன் தோன்றினான். புன்னகைத்தபடி அவளை நோக்கி வந்தான். அவள் என்ன சொல்வதென்று தெரியாமல் கதவைப் பற்றியபடி அவனை விழிதூக்கி நோக்கி நின்றாள். அருகணைந்து “நன்று, துயின்றிருப்பாய் என்று எண்ணினேன்” என்றான்.

சேடி தலைவணங்கி விலகிச் செல்ல “உள்ளே வருக!” என்றாள் விஜயை. அவன் அவள் தோளில் கைவைத்து “அவை நிகழ்வுகள் உனக்கு சலிப்பை ஏற்படுத்துவதை உன் உடலசைவாலேயே அறிந்தேன். உன்னை பார்க்கவேண்டுமென்று தோன்றியது. உனக்கிணையாகவே சலிப்பு கொண்ட ஒருவன் எனக்குள் இருந்து உன்னை பார்த்துக்கொண்டிருந்தான்” என்றான். “நான் ஒன்றும் சொல்லவில்லையே” என்றாள் அவள். “நீயும் சிபிநாட்டரசியும் பேசிக்கொண்டு செல்வதை கேட்டேன். என்ன சொல்கிறீர்கள் என்று புரியவில்லை என்றாலும் முகம் சலிப்பையே தெரிவித்தது.”

“சலிப்பல்ல” என்று அவள் சொன்னாள். “எனக்கு அந்நிகழ்வுகளில் சொல்வதற்கு ஒன்றுமில்லை என்னும் உணர்வு மட்டுமே.” சகதேவன் “ஆம், உண்மையில் எங்கள் எவருக்கும் சொல்வதற்கு எதுவுமில்லை, இது அன்னையும் இளைய யாதவரும் மட்டுமே ஆற்றும் ஒரு களமாடல்” என்றபடி அறைக்குள் சென்று மஞ்சத்தில் அமர்ந்தான். அவள் அவனருகே கைகளைக் கட்டியபடி நின்றாள். “வா,

அமர்ந்துகொள்!” என்று தன்னருகே மஞ்சத்தை சுட்டிக்காட்டினான். “இல்லை, இங்கு நின்றுகொள்கிறேன்” என்றாள் அவள்.

அவன் விழிகள் சற்று மாற புருவம் சுருங்க “ஏன்?” என்றான். “களைப்பு. இன்று பகல் முழுக்க அங்குமிங்கும் அலைந்துகொண்டிருந்தேன்” என்றாள். “ஆம், நானும் நன்கு களைத்திருக்கிறேன். தூது ஓலைகள், உளவுச் செய்திகள், அரசாணைகள். ஒருகணத்தில் சலித்து வேறெங்காவது சென்று என்னை முற்றிலும் கழற்றி வைக்காவிடில் இன்றிரவு துயிலமுடியாதென்று தோன்றியது. அதனால் இங்கு வந்தேன்” என்றான். அவள் “புரிகிறது” என்றாள். அவன் அவளை நோக்கியபடி சில கணங்கள் அமர்ந்திருந்தான். அவன் விழிகளை தவிர்த்து அவள் ஆடையை கையில் சுழற்றிக்கொண்டிருந்தாள்.

சகதேவன் மெல்ல கனைத்து “சுகோத்ரனை இங்கு வரும்படி ஆணையிட்டு ஓலை அனுப்பியிருக்கிறேன்” என்றான். அவன் என்ன எண்ணுகிறான் என அவளுக்கு அக்கணமே புரிந்தது. நெய்யில் அனல் என சினம் எழுந்தது. எண்ணியபடி அவள் முகத்தை அது மலரவைக்கவில்லை என்று கண்டு அவன் “இங்கு அவன் இருந்தால் இந்நாட்கள் இத்தனை வெறுமைகொள்ளாது” என்றான். அவள் உணர்ச்சியின்றி “நன்று” என்றாள். “நீ மைந்தனைப் பார்க்க விழையவில்லையா?” என்று அவள் விழிகளை நோக்கி கேட்டான். அவள் அவன் முகத்தை ஏறிட்டு “அவ்வாறல்ல” என்றாள்.

“நீ கேட்ட முதற்கணம் மகிழவில்லை” என்றான். “இல்லையே…” என்றாள். “நம் மைந்தன். அவன் இங்கிருப்பதைப்போல இனிது பிறிதில்லை” என்றான். “ஆம்” என்றாள். அதிலிருந்த

உணர்வுத்தண்மை அவனை சினம்கொள்ளச் செய்தது. “நீ அவன் வரவில் மகிழவில்லை. எனக்கு அவன் என் தந்தையர் வடிவம். எனவே என் உள்ளம் எண்ணியதும் எழுகிறது” என்றான். அவள் விழிதாழ்த்தி வெறுமனே நின்றாள். அவள் உடலிலேயே புறக்கணிப்பை உணர்ந்து அவன் மூண்டெழுந்தான். “தோள்விரிந்த மைந்தனுடன் இருந்தால் நீ சகலபுரியின் சிறுமியென நடிக்கமுடியாது போலும்” என்றான்.

அவள் உள்ளத்தில் அக்கணம்வரை இருந்திராத பெருஞ்சீற்றம் உருவாயிற்று. அவன் விழிகளை கூர்ந்து நோக்கி, வெறுப்பில் சுருங்கிய முகத்துடன் “அவன் வந்தால் என்ன? அணுகி வருவது பெரும்போர். அவன் மடிந்த பின்னர் நினைவுகொள்வதற்காகவா நோக்குவது?” என்றாள். அக்கூரிய சொல்லால் அவன் திடுக்கிட்டு இரு கைகளும் நடுங்க விரல்களை கோத்துக்கொண்டான். “என்ன சொல்கிறாய்? என்ன…?” என்றான். அவன் நடுக்கமே அவளை மேலும் மேலுமென எழச் செய்தது. “மைந்தரை களப்பலி கொள்ளும் போர். உங்கள் அன்னையின் ஆணை. என் மைந்தன் பத்தாவது தலை. அதை இறுதியாக நோக்க இங்கு வரவழைக்கிறீர்கள். நோக்கி மகிழ்க!” என்றாள்.

சகதேவன் விடாய்கொண்ட பறவைபோல வாய் திறந்து தாடை தவிக்க “அன்னைக்கு அவருக்குரிய உணர்வுகள் உள்ளன. நீயும் அறிவாய் அல்லவா?” என்றான். அவன் குரல் குலுங்கும் தேரில் அமர்ந்திருப்பதுபோல் இடறியது. “எச்செயலுக்கும் அத்தனை மிகையுணர்வுகளை காட்ட முடியும். உங்கள் அன்னை தன்னை கணவருக்காக வாழ்பவராக நடிக்கிறார். அதை அவர் மைந்தரிடம் சொல்லட்டும், என்னைப்போன்ற பெண்களிடம் சொல்லவேண்டாம்” என்றாள் விஜயை. “நீ அன்னையை

சிறுமை செய்கிறாய்... என் செவியறிய அன்னையைப் பழிக்கும் சொற்களை பொறுக்கமாட்டேன்” என்றான் சகதேவன். “என்ன செய்யப்போகிறீர்கள்? வாளெடுத்து என் சங்கை அறுங்கள். நான் என் மைந்தனுக்கு முன்னரே விண்செல்கிறேன்” என்றாள் விஜயை.

அவன் வெறுப்பு நிறைந்த விழிகளுடன், இறுகிய உதடுகளுடன் அவளை நோக்கி அமர்ந்திருந்தான். அவள் விசைகொண்டமையால் உடைந்தெழுந்த குரலில் “என்ன சொன்னார்கள்? அவர்கள் விழைவதெல்லாம் பாண்டுவின் அகத்திலெழுந்ததை என்றா? பாண்டுவின் அகம் இவர்களின் விழைவுக்கு மாறானதென்றால் இவர்கள் கருத்தில் அது பதிந்திருக்குமா? தன் விழைவுக்கு மாறாக பாண்டு இருந்தார் என இவர்கள் சலித்துக்கொண்ட சொற்களை நானும் கேட்டிருக்கிறேன். கன்றோட்டும் குலத்தில் பிறந்த இவர்களுக்கு மும்முடி சூடிய மைந்தனின் அன்னை என அமைய விழைவே இல்லையா? ஆணிலியின் உள்ளத்து ஆழத்தை சென்றறிந்தார்களா? எத்தனை நடிப்புகளினூடாக தன்னை புனைந்துகொள்கிறார்கள் மானுடர்!” என்றாள்.

அவள் மூச்சிரைக்க தன் மேலாடையை இழுத்தாள். அது இடையிலிருந்து நழுவ சலித்தபடி சுருட்டி அப்பால் வீசினாள். “போதும்!” என்றபடி சகதேவன் எழுந்தான். “குருதிவிடாய் கொண்டு பீடத்தில் அமர்ந்திருக்கும் கொற்றவை உங்கள் அன்னை. எங்கள் மைந்தரை வெள்ளாடுகளென இழுத்துச் செல்கிறார்கள் அவர்களுடைய பலிபீடத்திற்கு” என்றாள் விஜயை. வலிகொண்டவன்போல முகம் சுளிக்க பற்களைக் கடித்தபடி சில கணங்கள் அமர்ந்தபின் சகதேவன் “சுகோத்ரன் படைக்கலம் பயிலவில்லை” என்றான்.

அந்தத் தாழ்ந்த குரல் அவளை மேலும் வெறிகொள்ளச் செய்தது. சினமும் இளிவரலுமாக முகம் கோட "நன்று! முப்பொழுதும் உணர்ந்தவர் அல்லவா? ஆகவே முன்னரே மைந்தனை படைக்கலம் பயிலாது காட்டுக்கு அனுப்ப முடிந்தது" என்றாள். அவன் முகம் வெளுத்து உயிரிலாதவன்போல் அவளை நோக்க அவளுக்குள் பெருவஞ்சம் கொண்ட பிறிதொருத்தி எக்களித்தாள். "நன்று! ஒரு மைந்தன் எஞ்சும்போது அவனிலூடாக குடி வாழ்கிறது. அவனில் தோள்வல்லமையும் அவைமுறைமையும் திகழவில்லையென்றால் என்ன? தன் குடியிலிருந்து மண்மறைந்த அனைவர் பெயரையும் பிறழாது சொல்லும் நினைவுத்திறன் கூடியிருக்கும் அல்லவா? பாரதமெங்கும் சென்று பாண்டுவின் கொடிவழியின் நிரையை உரைத்து மன்னர் அவைகளில் பரிசில் பெற்று வாழட்டும்" என்றாள்.

"வாயை மூடு!" என்றபடி சகதேவன் கையோங்கி எழுந்தான். உரக்க நகைத்து "விராடபுரியில் முற்றும் துறந்து அகன்று அமைந்திருந்தவர் என்றனர். இச்சினம் வியப்பூட்டுகிறது" என்றாள் விஜயை. அவன் தாடை இறுகியது. கைகளை இறுக்கிச்சுருட்டி பற்கள் கிட்டிக்க "நீ என்னை துன்புறுத்த விழைகிறாய்" என்றான். அவள் "கண்டடைந்துவிட்டீர்கள், நன்று!" என்றாள். சகதேவன் மெல்ல அடங்கி "இன்று நீ வேறேதோ உளநிலையில் இருக்கிறாய். எவர் மீது எழுந்த கசப்பை என் மீது கொட்டுகிறாய்?" என்றான். "எவர் மீதும் அல்ல. என் மீதான கசப்புதான். ஷத்ரியக்குடி பிறந்தவள் நான். என் மைந்தனை கணியன் ஆக்க வேண்டாம் என்று அன்று உரைக்கும் சொல்லற்று இருந்தேன். அந்தத் தயக்கத்திற்கு விலையாக இன்று சிறுமையை ஈட்டியிருக்கிறேன்" என்றாள்.

சகதேவன் அவளை வெறித்து நோக்கிக்கொண்டிருந்தான். “செல்க, உங்கள் மைந்தனை கொண்டுவந்து குலவுக! ஆனால் தோள்தேம்பி உடல்மெலிந்த அச்சிறுவனை என் முன் கொண்டு நிறுத்தி இவனே உன் மைந்தன், இவனைப் பெறுவதற்குத்தான் நீ தகுதியானவள் என்று என்னிடம் சொல்லவேண்டாம்” என்றாள். அவள் முலைக்குவைகள் மூச்சில் எழுந்தமைந்தன. ஆடையை கசக்கிக்கொண்டிருந்த கைகள் இறுகப்பற்றி நிலைத்து பின் மெல்ல தளர்ந்தன.

சகதேவன் எழுந்து மெல்லிய புன்னகையுடன் “அனைத்து நஞ்சையும் கொட்டிவிட்டாயா?” என்றான். “இல்லை, எஞ்சியதை என் மைந்தர் களம்பட்டுக் கிடக்கையில் நெஞ்சிலும் வயிற்றிலும் ஓங்கி அறைந்து கதறியபடி சொல்கிறேன். என் குடிப்பிறந்த அனைவரும் என் மைந்தரே. இங்கும் அங்கும்” என்றாள். சகதேவன் பெருமூச்சுடன் “இனி நாம் இவ்வாறு காணநேராது” என்று மேலாடையை எடுத்து அணிந்தபடி வெளியே செல்ல திரும்பினான். அவன் முகத்தில் புன்னகை எழுந்தது. “விஜயை, இப்போது அந்த அருகனடியார் என்னில் எழுகிறார். அவர் உன்னிடம் சொல்வது ஒன்றே. உள்ளத்தின் ஆழத்திலிருந்து எழுவனவற்றுக்கு மானுடர் பொறுப்பேற்க வேண்டியதில்லை. அதை தெய்வங்களுக்கு அளித்துவிடுவதே நம்மை துயரிலிருந்து விடுபடச் செய்யும். தன்னை இரண்டாக பகுத்துக்கொண்டபடிதான் மானுடர் புவியில் வாழமுடியும்” என்றான்.

அச்சொற்கள் முற்றெழுவதற்குள்ளாகவே அவள் நடுக்கம் கொண்டாள். “என்ன சொல்கிறீர்கள்?” என்று அவள் பேரச்சம் கொண்டவள்போல கேட்டாள். “உன் நாகநாக்குச் சேடியிடம் அதை கேள். அவள் சொல்வாள்” என்றபின் “என்னிலும் இருவர்

உண்டு. அறிபவர் ஒருவர், அறிவனவற்றைக் கடந்தவர் பிறிதொருவர்” என்றான். அவளை நோக்கி மீண்டும் ஒருமுறை புன்னகைத்துவிட்டு வெளியேறினான். மலைத்த விழிகளுடன் அவள் அவன் செல்வதை பார்த்து நின்றாள்.

முதற்புலரியில் அபயை வந்து அவளை எழுப்பும்வரை விஜயை அரைத்துயிலில் எங்கென்றில்லாமல் இருந்தாள். சகலபுரியா அஸ்தினபுரியா இந்திரப்பிரஸ்தமா துவாரகையா என. விழித்தெழுந்த பின்னர் அந்நகர் அவள் அதற்கு முன் எப்போதுமே அறிந்திராதது என தெளிந்தாள். அந்த அறியா நகரை எண்ணியபடி அவ்வாறே படுத்திருந்தாள். அபயை “அரசி, இளைய யாதவர் அஸ்தினபுரிக்கு செல்லவிருக்கிறார். இன்னும் சற்றுநேரத்தில் அரண்மனை முற்றத்திலிருந்து கிளம்புவார்” என்றாள்.

விஜயை எழுந்தமர்ந்து “அறையிலிருந்து கிளம்பிவிட்டாரா?” என்றாள். “சங்கொலி கேட்டேன்… அரண்மனை முகப்புக்கு அரைநாழிகைக்குள் சென்றுசேர்வார்” என்றாள் அபயை. “நான் அதற்குள் நீராடி ஆடைமாற்ற முடியுமா?” என்றாள் விஜயை. “பொழுதிருக்கிறது, அரசி” என்றாள் அபயை. நீராட்டறையை அடைந்து வெந்நீரில் நனைந்தெழுந்து தலையும் உடலும் துவட்டி பொன்னூல் கரையிட்ட வெண்பட்டாடை அணிந்து ஈரக்குழலை தோளில் விரித்திட்டு விஜயை மூச்சிரைக்க இடைநாழியினூடாக ஓடினாள். உடன்வந்த அபயையிடம் “தலையில் மலர் இல்லையடி… ஓடிச்சென்று ஒரு மந்தாரமாவது கொய்து வா” என்றாள்.

படிகளில் இறங்கி இடைநாழியினூடாக முதன்மை முற்றம் நோக்கி செல்லும்போதே அவள் சங்கொலியை மீண்டும்

கேட்டாள். இந்நகரின் அரண்மனை இத்தனை சிறிதாக இருப்பது எத்தனை நன்று என எண்ணிக்கொண்டாள். தொலைவிலேயே முகப்புவாயிலில் தேவிகையும் சேடியும் நிற்பதை கண்டாள். மூச்சுவாங்க அருகே சென்று நின்றாள். தேவிகை "துயிலெழமாட்டாய் என எண்ணினேன்" என்றாள். "ஏன்?" என்றாள் விஜயை. "இந்நாட்களில் நீ பெரும்பாலும் ஒளியெழுந்த பின்னரே விழிப்பு கொள்கிறாய்." விஜயை புன்னகைத்தாள். "நீ எப்படி இருக்கிறாய் தெரியுமா? ஒவ்வொருநாளுமென உன் விழிகள் களைப்பு கொள்கின்றன. முகம் வெளுத்து வருகிறது. விழித்திருக்கையிலேயே துயில்கொள்பவள் போலிருக்கிறாய்" என்றாள் தேவிகை.

"நான் துயின்று நெடுநாட்களாகின்றன என்று தோன்றுகிறது. படுத்ததும் சித்தம் சற்றே மயங்குகிறது. பின்னர் விழிப்பு. எண்ணங்களை என்னால் நிறுத்தவே முடியாது. ஆனால் துயில்நீத்தலும் அல்ல. இரவு செறிந்து வெளுப்பதையே என்னால் உணரமுடியாது. ஒரு நாழிகை கடந்திருக்குமென எண்ணுவேன். கரிச்சான் ஒலி கேட்கும். முதற்புலரியில்தான் சற்றே எண்ணம் அழியும்" என்றாள் விஜயை. "ஆம், நீ துயில்நீப்பு கொண்டிருக்கிறாய் என்பதை உன் விழிகளே காட்டுகின்றன" என்று தேவிகை சொன்னாள். "நீ அரண்மனை மருத்துவரிடம் ஏதேனும் மருந்து கேட்டுப்பெறலாம்." விஜயை "எதற்கு?" என்றாள். "துயிலுக்கு" என்றாள் தேவிகை.

விஜயை ஒன்றும் சொல்லவில்லை. "அது பிழையல்ல. அரண்மனைகளில் பெரும்பாலானவர்கள் அகிபீனாவோ பிறிதோ துணைகொண்டுதான் இரவில் துயில்கின்றனர். பேரரசியும்கூட ஒவ்வொருநாளும் மருந்துண்டுதான் துயில்கொள்கிறார்" என்றாள் தேவிகை. "அவள்?" என்றாள் விஜயை. "நானும்

அவ்வாறே எண்ணினேன். அவள் சேடியிடம் கேட்டேன். இல்லை என்றாள். இரவில் நூல்நவில்கிறாள். எழுந்துசென்று படுத்து அக்கணமே துயின்று முதற்புலரியின் பறவைக்குரலில் விழித்துக்கொள்கிறாள்." விஜயை சில கணங்களுக்குப் பின் "ஆம், அவள் இயல்பு அது" என்றாள்.

அபயை வெண்ணிற மந்தார மலருடன் வந்தாள். அதை வாங்கி விஜயை தன் குழலில் முடிச்சிட்டு சூட்டிக்கொண்டாள். சங்கொலி எழுந்தது. இடப்பக்க வாயிலினூடாக நிமித்தக்காவலன் சங்கொலி எழுப்பியபடி வந்தான். தொடர்ந்து மங்கலத்தாலமேந்திய மூன்று சேடியர் வர அவர்களுக்குப் பின்னால் திரௌபதி இருபுறமும் அணுக்கச்சேடியர் தொடர சீராக காலடி வைத்து அன்னம் ஆற்றில் ஒழுகுவதுபோல வந்தாள். தேவிகையும் விஜயையும் தலைவணங்கி வாழ்த்துரைத்தனர். "நன்று சூழ்க!" என வாழ்த்திவிட்டு அவள் படிகளில் இறங்க இருவரும் அவளுக்கு இருபுறமும் இணைந்தனர்.

அரண்மனையின் மறுபக்கத்தில் இருந்து கொம்போசை எழுந்தது. கொடிவீரனும் கொம்பூதியும் முன்னால் வர மங்கலத்தாலமேந்திய சேடியர் மூவர் தொடர்ந்து வந்தனர். இசைச்சூதர் மூவர் அவர்களை தொடர யுதிஷ்டிரர் நகுலனும் சகதேவனும் பின்னால் வர தொய்ந்த தோள்களுடன் சிற்றடிகளை விரைந்து எடுத்துவைத்து வந்தார். முற்றத்தில் அவர் கிழக்கு நோக்கி நிற்க அவருக்கு இடப்பக்கம் திரௌபதி சென்று நின்றாள். அவளருகே தேவிகையும் விஜயையும் நின்றனர். முற்றத்தில் எரிந்த புன்னையெண்ணைப் பந்தங்களின் தழல் காற்றில் கிழிந்து பறந்துகொண்டிருந்தது.

நிரைகொண்டு நின்றிருந்த காவலர்களின் வேல்முனைகளில் நெருப்புத்துளிகள் தெரிந்தன.

காவல்மாடத்திற்கு அப்பாலிருந்து பீமன் தனியாக நடந்து வந்தான். பேருடல் மெல்ல உலைந்தாட பருத்த கைகளை விசி அங்கிருக்கும் எவரையும் பார்க்காதவனாக அவன் வந்து யுதிஷ்டிரருக்கு தலைவணங்கி பின்னால் சென்று கைகளை மார்பில் கட்டியபடி நின்றான். குளிர்காற்று ஆடைகளை படபடக்கச் செய்தபடி சூழ்ந்து கடந்துசென்றது. அரண்மனைக்குள் எங்கோ எவரோ எவரையோ அழைத்தார்கள். அரண்மனைக்குப் பின்னால் மிக அப்பால் ஒரு புரவி கனைத்தது. காவல்மாடத்திற்கு அப்பால் சாலையில் புரவிக்குளம்படிகள் கேட்டன. “வருகிறார்கள்” என்றாள் தேவிகை. விஜயை பெருமூச்சுவிட்டாள்.

மூன்று புரவிகள் இழுத்த விரைவுத்தேர் காவல்மாடத்தருகே சற்று தயங்கி வளைந்து முற்றத்தில் ஏறியது. கற்பலகைகளில் அதன் சகட ஓசை மாறுபட்டது. புரவிகள் விரைவு குறைந்து குளம்புத்தாளம் ஓய முன்பின் காலெடுத்து வைத்து நின்றன. இரு ஏவலர் சென்று மரப்படியை வைத்தனர். தேருக்குள்ளிருந்து இளைய யாதவர் இறங்கியதும் மங்கல இசை எழுந்தது. யுதிஷ்டிரர் அருகணைந்து கைகூப்பி முகமன் உரைத்தார். தேருக்குள் இருந்து அர்ஜுனன் இறங்கி இளைய யாதவரின் பின்னால் நின்றான்.

இளைய யாதவர் அனைவருக்குமாக கைகூப்பி “சென்றுவருகிறேன். நன்று நிகழ்க!” என்றார். யுதிஷ்டிரர் “உன் சொல் வெல்லும்” என்றார். புன்னகைத்த பின் இளைய யாதவர் திரௌபதியிடம் “இப்பயணத்தில் எனக்கு உளநிறைவளிப்பது ஒன்றேதான் அரசி, நீங்கள் பொறுத்தருளி

கடந்துசென்றுவிட்டீர்கள் என்று அந்த அவையிலேயே சென்று அறிவிக்கும் பேறு எனக்கு அமைகிறது. அத்தருணம் தெய்வங்களால் வாழ்த்தப்படுக!” என்றார். திரௌபதி புன்னகைத்து “அவ்வாறே ஆகுக! அன்னை காந்தாரியிடம் என் வணக்கங்களை தெரிவியுங்கள், யாதவரே” என்றாள். “ஆம், அவர்களை தனியாகவும் சந்திப்பேன்” என்றார் இளைய யாதவர்.

நகுலனையும் சகதேவனையும் தழுவிக்கொண்டு “நம் மைந்தருக்காக நன்றே சூழ்வோம்” என்றார் இளைய யாதவர். “ஆம், மூத்தவரே. ஒவ்வொன்றும் கூடிவருவதாகவே தோன்றுகிறது” என்றான் சகதேவன். பீமன் அருகே வர அவர் கைவிரித்தார். பீமன் அவரை தன் விரிந்த கைகளால் தழுவிக்கொண்டு “தாங்கள் சொல்லும் எச்சொல்லும் எங்களுடையதே” என்றான். தேவிகையிடமும் விஜயையிடம் கைகூப்பி வணங்கிவிட்டு தேர் நோக்கி சென்றார். தேர் அருகே நின்ற அர்ஜுனனின் தோளில் மெல்ல தொட்டுவிட்டு படியில் ஏறி மேலே சென்று உள்ளே அமர்ந்தார். அர்ஜுனன் செயலிழந்து தொங்கிய கைகளுடன் அவரை நோக்கியபடி நின்றான்.

மீண்டும் மங்கல இசை முழங்கியது. சேடியர் குரவையிட்டனர். கோட்டைக்காவலர் கைகாட்ட பாகன் கடிவாளத்தை மெல்ல சுண்டினான். புரவிகள் காலடிகளை எடுத்துவைக்க சகடம் மெல்ல அசைந்து தேர் உயிர்கொண்டது. மெல்ல திரும்பி காவல்மாடம் நோக்கி சென்றது. பந்த ஒளியில் குடைவளைவு மின்ன கடந்துசென்று அப்பாலிருந்த சாலையில் ஏறி மறைந்தது. அர்ஜுனன் பெருமூச்சுவிட்டபின் திரும்பி உடன்பிறந்தாரை நோக்காமல் நடந்து அரண்மனைக்குள்

சென்றான். திரௌபதி சொல்லின்றி யுதிஷ்டிரரை வணங்கிவிட்டு தானும் அரண்மனைக்குள் சென்றாள்.

யுதிஷ்டிரர் “நாம் எவ்வகையிலேனும் அவருக்கு இழுக்கு சேர்க்கிறோமா, இளையோனே?” என்றார். “அவருக்கு இப்புவியில் எவரும் புகழோ இழுக்கோ சேர்க்கவியலாது” என்றான் சகதேவன். “ஆம்” என்றார் யுதிஷ்டிரர். எதையோ சொல்ல எண்ணுபவர்போல தயங்கிவிட்டு “அவர் முடிமன்னராகச் சென்ற நகர் அது” என்றார். “ஆம், அவருக்கு அனைத்தும் ஒன்றே” என்றான் சகதேவன். யுதிஷ்டிரர் தொண்டை அடைத்துக்கொண்டதுபோல மெல்ல கனைத்தார். பின்னர் மெல்லிய ஓசையுடன் விம்மியழுதார்.

“மூத்தவரே, என்ன இது?” என அவர் கைகளை பற்றிக்கொண்டான் சகதேவன். “என்ன நிகழ்ந்தது என்று…” என்றான். யுதிஷ்டிரர் விரைவிலேயே தன்னை அடக்கி இருமுறை மூச்சிழுத்துவிட்டு மேலாடையால் முகத்தை துடைத்தார். “இல்லை… ஏனென்றறியவில்லை. ஒருகணம் உளம்பொங்கிவிட்டேன்…” என்றார். உதடுகளை மடித்தபடி தலைகுனிந்து அவர் செல்ல நகுலனும் சகதேவனும் உடன்சென்றனர். பீமன் அவர்கள் செல்வதை இடையில் ஊன்றிய கைகளுடன் நோக்கி நின்றபின் சற்றுபின்னால் தானும் சென்றான்.

தேவிகை விஜயையின் கைகளைத் தொட்டு “வாடி!” என்றாள். இடைநாழியில் நடக்கையில் விஜயை துயில் ஓர் அலையென வந்து தன்மேல் அறைந்து முழுக்க நனைத்து மூடிக்கொள்வதுபோல் உணர்ந்தாள். மஞ்சத்தை சென்றடைவதைப் பற்றி எண்ணியபோது அது நெடுந்தொலைவு என்று தோன்றியது. அங்கு சென்று விழுந்தால் முற்றழிந்து

மறைய துயில்கொள்வோம், பிறகு விழித்துக்கொள்ளவே வேண்டாம் என்பதுபோல.

# குருதிச்சாரல் - 26

**பகுதி நான்கு : ஒளிர்பரல் – 1**

பித்தளை எண்ணெய்க்குடங்களும் ஏற்றுவிளக்குகளின் செம்மணிச்சுடர்களுமாக விளக்கேற்றிகள் அரண்மனைத் தூண்களிலிருந்த பொருத்துவிளக்குகளையும், நிலைவிளக்குகளையும், தட்டுவிளக்குகளையும், மேலிருந்து தொங்கிய தூக்குவிளக்குகளையும், அறைமூலைகளில் முத்துச்சிப்பிகள் மாற்றொளி பரப்ப நின்ற கொத்துவிளக்குகளையும் சுடர் பொருத்தியபடியே கடந்து சென்றதை தாரை நோக்கிநின்றாள். காட்டெரி பரவிச் செல்வதுபோல அரண்மனையின் சாளரங்கள் அனைத்தும் செவ்வொளி கொண்டன. சுவருக்கும் கூரைக்குமான இடைவெளிகளினூடாக அனல்சட்டங்கள் அரையிருள் பரவியிருந்த வானில் நீட்டிப் புதைத்திருந்தன. அவற்றினூடாக பறந்து சென்ற பறவைகள் கனல்கொண்டு இருளில் அமிழ்ந்தன.

பொழுதொலி கார்வை கொண்டது. பறவைக்குரல்கள் கலைந்து செறிந்து முழக்கமென்றாகி அவியத் தொடங்கின. தொலைவில் ஒலித்துக்கொண்டிருந்த முரசொலிகளும் சகடங்களின் ஓசைகளும் அருகிலெனச் சூழ்ந்தன. இடமயக்கு விழிமயக்குடன் கலக்க ஒவ்வொன்றும் பிறிதொன்றென ஆயின. உப்பரிகை மேடையில் தூண்சாய்ந்து நின்றபடி கீழே விரிந்திருந்த பெருமுற்றத்தை தாரை

நோக்கிக்கொண்டிருந்தாள். ஏவலரின் தலைப்பாகை வண்ணங்கள் மேலும் துலக்கம் கொண்டன. செந்நிறப் புரவிகளும் பல்லக்குகளின் திரைச்சீலைகளும் வண்ணமிழந்து வெண்மையோ என எண்ணச் செய்தன.

கீழே வெவ்வேறு செயல்களில் அலைந்துகொண்டிருந்த ஒவ்வொருவரும் அதுவரை இருந்த சோர்வை உதறி விரைவும் உள்ளுவகையும் கொண்டதுபோல் தோன்றினர். நோக்கியிருக்கவே இருள் மூடியது. ஒவ்வொன்றும் அதுவரை இல்லாத அறியா ஆழங்களை சென்றடைந்தன. ஒவ்வொரு பொருளும் பிறிதொரு பொருள்சூடி அமைந்திருந்தன. அந்திக்கு எப்போதுமிருக்கும் தனிமை. அதனுடன் அறியா இசை ஒன்று கலந்துவிட்டதுபோல. மச்சநாட்டில் அவளுடைய நதிக்கரை ஊரில் அந்திக்குரிய இசை உண்டு. காலை கொம்புகளின் ஓசையாலானது. உச்சிமயக்கம் சுருளவிழும் குழலோசை. அந்தி எப்போதும் தேம்பி மயங்கும் சிறுகுழலின் ஒலி அமைந்தது. வானில் கரையும் புகைபோன்ற இசை அது.

தாரை பெருமூச்சுவிட்டபடி முற்றத்தையே நோக்கிக்கொண்டிருந்தாள். காவல்மாடத்திற்கு அப்பால் முற்றத்தின் முதல் எல்லையில் விகர்ணனின் புரவி தோன்றியது. நீள்மூச்சுடன் எழுந்து கைவளை ஒலிக்க கூந்தலை அள்ளி காதோரம் செருகி ஆடை திருத்திக்கொண்டு அவள் இடைநாழியை நோக்கி சென்றாள். அரண்மனை முகப்பில் புரவியில் வந்திறங்கி கடிவாளத்தை ஏவலனிடம் அளித்துவிட்டு படிகளில் ஏறி அவன் கூடத்தை அடைந்தபோது அவள் மரப்படிகளின்மேல் கைக்குமிழைப் பற்றியபடி நின்றிருந்தாள். அவனைக் கண்டதும் புன்னகைத்தாள். அவனும் புன்னகையுடன் வந்து படிகளிலேறி அவளை அணுகி “ஏன்

இங்கு நிற்கிறாய்?” என்றான். “வெறுமனே இவ்வறைகளில் காத்திருப்பதன்றி பிறிதென்ன செய்ய முடியும்? உள்ளே காத்திருப்பதற்கு உப்பரிகையில் காத்திருப்பது மேலல்லவா?” என்றாள்.

விகர்ணன் சிரித்தபடி அவள் தோளைப்பற்றி “வருக!” என்றான். அவள் அவன் கையை விலக்கியபடி “இடைநாழியில் ஏவலர் மட்டுமல்ல மூத்த அரசியரும் வரக்கூடும்” என்றாள். “ஏன், வந்தாலென்ன?” என்று அவன் கேட்டான். “அவர்களனைவரும் காமவிலக்கு நோன்பு கொண்டவர்கள்…” என்றாள். “அவர்களின்பொருட்டு நாமும் அதை கொண்டுள்ளோம்” என்றான் விகர்ணன். “அவர்கள் கொழுநரை சந்திப்பதே இல்லை” என்றாள் தாரை. “ஆம், அது முறை. ஆனால் நீ என்னை விலக்குவதற்கு பொருளேதுமில்லை” என்றான். அவள் குழலைப்பற்றி “மலர்மணம்…” என்றான்.

“நாம் இளையோரல்ல” என்று அவள் அவன் கையை தட்டினாள். அவன் புன்னகைத்து “இந்த எல்லையைக் கடந்து மேலேறும்போது எப்போதும் இளையோனாகவே உணர்கிறேன்” என்றான். அவள் “இதுவும் பலமுறை சொன்ன மொழி” என்றாள். “மெய்யாகவே இங்கு உன்னுடன் இருக்கையில் மட்டுமே இப்புவியில் உவகை என ஒன்றுண்டு என அறிகிறேன். எங்கும் தனித்தவனாக, எதையும் புரிந்துகொள்ள முடியாதவனாக, எங்கோ செல்வதற்கு காத்திருப்பவனாக உணர்கிறேன். மெல்லிய உளத்தவிப்பின்றி எவர் முன்னும் அமர்ந்திருக்க என்னால் இயலவில்லை” என்றான் விகர்ணன்.

அவளுடன் நடந்தபடி “நான் எப்போதும் புரவிமேல் இருக்கிறேன் என்று உடன்பிறந்தார் நகையாட்டு உரைப்பதுண்டு. புரவி மீதிருக்கையில் ஓரிடத்திலும் நில்லாமல்

ஒன்றிலிருந்து ஒன்றென உளம் தொட்டுச்செல்ல இயல்கிறது. அப்போது மட்டுமே என் அகத்தில் ஏதோ ஒன்று சற்றேனும் நிலைகொள்கிறது. ஓரிடத்தில் இருக்கையில் என்னுள் எழும் ஊசலாட்டம் நிலைகுலைய வைக்கிறது. பொறுமையிழந்து எழுந்து நின்று நெஞ்சிலும் தலையிலும் அறைந்துகொண்டு கூச்சலிட வேண்டுமென்று தோன்றும். பாய்ந்து எங்காவது தலையை முட்டிக்கொள்ள வேண்டுமென்று, எவரையாவது அறைந்து வீழ்த்த வேண்டுமென்று வெறி எழும்" என்றான்.

அவன் உணர்வை எளிதாக்கும்பொருட்டு சிரித்தபடி "இப்போது அந்த வெறி இல்லையே?" என்று அவள் கேட்டாள். அவனும் சிரித்தபடி "பார்த்துக்கொண்டே இரு. இன்னும் சில நாட்களில் பித்தனாகி இந்நகரின் தெருக்களில் அலையப்போகிறேன்" என்றான். தாரை அவன் கைகளைப்பற்றி "என்ன இன்று சற்று மிகையாக?" என்றாள். அவன் உணர்வெழுச்சி சற்றே தணிந்து "சற்று முன் செய்தி வந்தது. உபப்பிலாவ்யத்திலிருந்து இளைய யாதவர் கிளம்பி வந்துகொண்டிருக்கிறார். பாண்டவர்களிடமிருந்து நம் அவைக்கு செய்தி கொண்டுவருகிறார்" என்றான். "இளைய யாதவரா, ஏன்?" என்று தாரை கேட்டாள். "பாண்டவர்களின் தூதராகவா வருகிறார்?" அவன் "ஏன்?" என்றான். "அவர் யாதவபுரியின் மணிமுடி சூடிய அரசர் அல்லவா?" என்றாள் தாரை.

"இல்லை, துவாரகையின் மணிமுடியைத் துறந்து மைந்தனை அமர்த்திவிட்டு கிளம்பியிருக்கிறார். இன்று அவருடன் சாத்யகி அன்றி யாதவர் எவரும் இல்லை" என்றான் விகர்ணன். தாரை "ஆம், அவ்வாறே நிகழுமென்று நான் எதிர்பார்த்தேன்" என்றாள். "அவர் வருவது ஏன் என்பதும் உளவுச்செய்திகளினூடாக தெரிந்துவிட்டது. இங்கிருந்து சஞ்சயன் அங்கு தூது

சென்றிருக்கிறான். தந்தையின் தனிப்பட்ட மன்றாட்டை அங்கு அவைமுன் வைத்திருக்கிறான். எந்நிலையிலும் பாண்டவர்கள் தங்கள் உடன்குருதியினரான கௌரவர்களுக்கு எதிராக படைக்கலம் ஏந்தலாகாதென்று தந்தை கண்ணீருடன் மன்றாடியிருக்கிறார். அதை ஏற்று அவ்வாறே என யுதிஷ்டிரர் உறுதி அளித்திருக்கிறார்."

தாரை அவன் எண்ணியதுபோல் முகம் மலரவில்லை. புருவங்கள் சுளிக்க "அதன் பின் என்ன?" என்றாள். அவள் முகம் நோக்கி உளம் குழம்பி குரல் தழைய "அவ்வுறுதிமொழியுடன் இங்கு வருகிறார் இளைய யாதவர்" என்றான். தாரை "இங்கிருக்கும் நிலை அவருக்குத் தெரியாதா என்ன? அவ்வுறுதிமொழியை பேரரசருக்கு யுதிஷ்டிரர் அளிப்பதென்றால் ஒன்றே பொருள், தங்கள் மண்ணுரிமையை முற்றாக பாண்டவர்கள் கைவிடுகிறார்கள்" என்றாள். "ஆம், நானும் அதையே எண்ணினேன்" என்றான் விகர்ணன். அவன் உண்மையில் அப்போதுதான் அதை உணர்கிறான் என தெரிந்தது.

"அவ்வாறெனில் எதற்காக இளைய யாதவர் இங்கு தூது வருகிறார் என்று புரியவில்லை" என்றாள் தாரை. சிற்றறைக்குள் நுழைந்து மஞ்சத்தில் எடையுடன் அமர்ந்தபடி "நீ என்ன எண்ணுகிறாய்?" என்று விகர்ணன் கேட்டான். "நமக்கு முன் அகச்சான்றின் வினாவுடன் வந்து நிற்க எண்ணுகிறார். தந்தையின் ஆணையை தலைமேற்கொண்டு போரைத் தவிர்ப்பதாக யுதிஷ்டிரர் அறிவித்திருப்பதை நம் அவையில் சொல்வார். அதே தந்தையின் ஆணையை துரியோதனரும் கடைபிடிக்க வேண்டுமென்று கோருவார்." விகர்ணன் கசப்புடன் சிரித்து "உளச்சான்றா? இவர்களுக்கா?" என்றான். பின்னர் "அவர்

அறுதியாகக் கோருவது என்னவாக இருக்கும் என கருதுகிறாய்?” என்றான். “பாதி நாடு, இந்திரப்பிரஸ்தம்” என்றாள் தாரை. “அதை எப்படி மூத்தவர் ஏற்பார்? அவர் இன்றிருக்கும் நிலை நாடறிந்தது” என்று விகர்ணன் சொன்னான்.

தாரை “அதையே நானும் எண்ணுகிறேன்” என்றாள். விகர்ணன் மஞ்சத்தில் மெல்ல படுத்து முனகியபடி உடலை விரித்துக்கொண்டான். “நான் எண்ணி நோக்குவதை விட்டுவிட்டேன். எத்திசையில் எழுந்தாலும் சென்றடைய முடியாத முடிவிலியே தெரிகிறது. எனது எண்ணங்களோ விசை குறைந்தவை” என்றான். தாரை “நாம் தொடங்குமிடம் தெளிவாக இருந்தால் போதும், அது ஒன்றே நாம் செய்ய வேண்டியது. எது அறமோ அதில் உறுதி கொண்டிருப்போம். எங்கும் தயங்காமல் அதை முன் வைப்போம்” என்று அவன் அருகே சிறுபீடத்தில் அமர்ந்தபடி சொன்னாள்.

அவன் கண்களை மூடிக்கொண்டு “நம் சொல்லுக்கென்ன மதிப்பு?” என்றான். தாரை “அறம் எவர் நாவில் எழுந்தாலும் தனக்குரிய மதிப்பை கொண்டிருக்கிறது. ஒரு குரலேனும் இந்த அவையில் எழுகிறதென்பதே தெய்வங்களுக்கு உகந்ததாக இருக்கும். நீங்கள் அதன்பொருட்டு பழிக்கப்பட்டாலும் வெறுக்கப்பட்டாலும் ஏன் கொல்லப்பட்டாலும்கூட அது முறையே என்றாகும். பெரிய நோக்கங்களுக்காக நின்றிருப்பதிலும் மடிவதிலும் இருக்கும் தன்னிறைவு பிறிதெதிலும் இல்லை” என்றாள்.

“ஆம், இத்தனை அலைக்கழிப்புகளுக்கு மத்தியில் என்னை நிலைகொள்ளச் செய்வது அந்த எண்ணம்தான்” என அவன் விழிகளை திறக்காமலேயே சொன்னான். “நான் என எண்ணும்போது என்னால் பெருமிதம் கொள்ள இயல்கிறது.

இன்று அஸ்தினபுரியில் நெஞ்சில் கைவைத்து நாணமோ தயக்கமோ இலாது தன்னைப்பற்றி எண்ணிக்கொள்ள தகுதிகொண்ட ஆண்கள் சிலர் மட்டுமே உள்ளனர்” என்றான். “நான் எனும் சொல்லைப்போல தூயது பிறிதில்லை என்று என் அன்னை சொல்வாள்” என்றாள் தாரை. “தன்முனைப்பு தீயது, ஆனால் விழைவிலாத தன்முனைப்புபோல் நலமியற்றுவது பிறிதொன்றுமில்லை.” அவன் கண்களை மூடியபடியே பெருமூச்சுவிட்டான். அவர்கள் சற்றுநேரம் தங்களுக்குள் சொல்லுழன்று அமர்ந்திருந்தனர்.

பின்னர் தனக்கே என “மீண்டும் மீண்டும் அவைகளில் எது அறமென்றும் முறையென்றும் சொல்லிக்கொண்டிருக்கிறேன்” என்றான் விகர்ணன். “நேற்று தூதரவையிலும் சொன்னேன். இந்நிலம் பாண்டுவின் மைந்தருக்குரியது. எந்நிலையிலும் இதை முழுதாள கௌரவருக்கு உரிமையில்லை. போரில் ஒருவேளை பாண்டவர்களை முற்றழித்து இந்நிலத்தை நாம் கொண்டால்கூட நம் குடிகளின் நெஞ்சிலிருந்து இது அவர்களின் நிலமென்னும் எண்ணத்தை நம்மால் அகற்ற இயலாது. நம் உள்ளத்தின் ஆழத்திலிருந்தும் அகற்ற இயலாது. அதை அகற்றும்பொருட்டு ஆயிரம் ஊடுவழி சூழ்வோம். அதனூடாக இது அவர்களின் நிலமென்பதை மீள மீள நாமே நிறுவிக்கொண்டிருப்போம்.”

“நம் கொடிவழிகள் அவ்வச்சத்தையும் தயக்கத்தையுமே நம்மிடமிருந்து எடுத்துக்கொள்வார்கள் என்றேன். ஒருபோதும் கௌரவர்களின் கோல் இம்மண்ணில் நிலைக்காது என்றபோது மூத்தவர் என்னை நோக்கி சிரித்து மூடன் என்றார். ஆம், மூடன் சொல் இது. பாண்டவர்களை போரில் வெல்ல இயலாதென்று மீண்டும் சொல்கிறேன். அவையிலும் தனி

அவையிலும் மீள மீள அதையே சொல்வேன். ஏனெனில் இதுவரையிலான நிகழ்வுகள் அனைத்துமே ஊழ் அவர்களின் தரப்பிலிருப்பதை காட்டுகின்றன. அத்துலா நம்மை நோக்கி சரியவேண்டுமென்பதற்கான எந்த முறைமையும் கண்ணுக்குத் தென்படவில்லை. ஊழை ஆள்பவராக அவர்கள் தரப்பில் இன்று இளைய யாதவர் நின்றிருக்கிறார் என்றேன்."

"இன்று காலை மீண்டும் மூத்தவரிடம் மன்றாடினேன், முற்றழிவை தவிர்ப்பதற்கேனும் நாம் அவர்களுக்குரிய நிலத்தை கொடுத்தாகவேண்டும் என்று. காலை களப்பயிற்சியின்போது மூத்தவரிடம் பேச வாய்த்தது. அவர் கதையுடன் இருந்தார். இதற்குமேல் ஒரு சொல்லில்லை மூத்தவரே, முனிந்தால் என் தலையை அடித்து உடையுங்கள் என்றேன். அவர்களுக்குரிய நிலத்தை நாம் அளிப்போம். அதனூடாக அறம் காத்தோம் எனும் பெரும்மதிப்பை அடைவோம். நம் குடிகளை முற்றழிவிலிருந்தும் காத்துக்கொள்வோம். பிறிதொரு வழி உங்கள் முன் இல்லை. பழிகொண்டு அழிய வேண்டாம் என்றேன்."

அவன் கசப்புடன் சிரித்து ஒருக்களித்து "முன்பெல்லாம் என் மீது சினந்தார்கள். என்னை முனிந்து ஒதுக்கினார்கள். இப்போது எளிய நகையாட்டினூடாக என்னை கடந்து செல்கிறார்கள். என் சொற்களைக் கொண்டு விளையாடுகிறார்கள். அவர்கள் என்மேல் சினம் கொண்டபோது எப்படியோ என் சொற்கள் அவர்களுக்குள் கடக்கின்றன என்று எண்ணினேன். இன்று வெறும் அவைநகையாட்டென மாறி நின்றிருக்கையில் முற்றிலும் பொருளற்றவனாக உணர்கிறேன்" என்றான். "ஆம், உங்களை ஓர் இளியன் என சமைத்துவிட்டனர். இன்று காலை ஆலயம் செல்லும் வழியில் ஒரு சூதன் அப்படி ஒரு பாடலை

பாடுவதை கேட்டேன். நம் வீரர்கள் கூடிநின்று அவனை ஊக்கி கைதட்டியும் சிரித்தும் மகிழ்ந்தனர்” என்றாள் தாரை.

“இன்று மாலை முடிவெடுத்தேன், இனி ஒருபோதும் இந்நெறியை இவர்கள் முன் சொல்வதில்லை என்று. நகையாட்டுக்கு இலக்காகும் நெறி இழிவுபடுத்தப்படுகிறது. பின்பு அதில் அனலென ஏதும் எஞ்சியிருப்பதில்லை” என்றான் விகர்ணன். “உளக்கொதிப்பை ஆற்றுவதற்காக புரவியிலேறி நகரை சுற்றிவந்தேன். கிழக்குத்திசை காட்டுக்குள் நுழைந்து நெடுந்தூரம் சென்றேன். இங்கு திரும்பிவர வேண்டியதில்லை, அப்படியே சென்றுவிடலாம் என்று எண்ணினேன். பின்னர் ஏதோ ஓர் உள்ளுணர்விலென புரவியை திருப்பினேன். இங்கே எனக்கு ஏதோ செய்தி இருக்கிறதென்று தோன்றியது. நகர்நுழைந்தபோது அதை உணர்ந்தேன்.”

“கோட்டை முகப்பிலேறி அங்கிருந்த ஒற்றனிடம் என்ன நிகழ்கிறது என்றேன். அவன்தான் இளைய யாதவர் நகர்புகவிருப்பதை கூறினான். கோட்டை முகப்பில் இளைய யாதவருக்குரிய புதிய கொடி ஒன்றை கொண்டுவந்திருந்தான். அது துவாரகையின் கருடக்கொடி அல்ல. யாதவ குலத்துக்குப் பொதுவான பசுக்கொடி. இப்போது இளைய யாதவர் துவாரகையின் தலைவரல்ல என்று அவனிடமிருந்து அறிந்தேன். விதுரரை சென்றுகண்டு முழுச் செய்தியையும் அறிந்துவிட்டு வந்தேன்” என்றான் விகர்ணன்.

தாரை “இது ஒருவகையில் நற்செய்தியே” என்றாள். “இதனால் என்ன விளையுமென்று என்னால் கணிக்க முடியவில்லை. இச்செய்தியுடன் வெறும் ஒரு தூதன் வருவான் எனில் அவனால் இங்கு இயற்றப்படுவதென எதுவுமில்லை என்றே சொல்வேன். வருபவர் இளைய யாதவர் என்பதனால் ஏதேனும்

நன்று நிகழக்கூடுமென்று கருதுகிறேன்.” விகர்ணன் “நன்றென எது நிகழும்?” என்று கேட்டான். “ஒருவேளை பிதாமகர் உளம் திரும்பக் கூடும். இப்போரில் தான் நேரிடையாக இறங்க இயலாதென்று அவர் உரைப்பாரெனில் அரசர் மற்றொன்றை எண்ணியே ஆகவேண்டும்” என்றாள்.

“அங்கர் இன்று போரிலிறங்கும் நிலையில் இல்லை. அவரால் மதுவின்றி ஒருபொழுதும் கடக்க முடியவில்லை என்றார்கள். அவரை ஷத்ரிய அரசர்கள் ஏற்றுக்கொள்வார்கள் என்றும் தோன்றவில்லை. இன்னும் சில நாட்களில் தொடங்கவிருக்கும் ஷத்ரியப் பேரவையில் பீஷ்மரோ அங்கரோ படைமுகம் நிற்பார்கள் என்று சொல்லித்தான் நம் அரசர் முதன்மை கொள்ளமுடியும். அவர்கள் இருவரும் படைநடத்த வரமாட்டார்கள் என்றால் ஷத்ரியர்கள் போருக்கு தயங்கக்கூடும். போருக்கு அவர்கள் எழுந்தார்கள் என்றாலும்கூட நம் அரசருக்கு முதன்மை அமையாது. சல்யரோ ஜயத்ரதரோ அஸ்வத்தாமரோதான் முதன்மை கொள்வார்கள். அதை நம் அரசர் விரும்பமாட்டார்.”

விகர்ணன் “அவர்களும் நம் அரசருக்கு அணுக்கமானவர்கள் அல்லவா?” என்றான். “நீங்கள் அரசர்களின் உள்ளம் அறியாத எளியவர்” என்றாள் தாரை. “அரசர் எவராயினும் அவர்களின் பிறரறியா முதன்மைக் கனவு மும்முடி சூடி பாரதவர்ஷம் மீது கோலோச்சுவதே. எவர் படைமுதன்மை கொண்டாலும் அவரே பாரதவர்ஷத்தை வென்றார் எனக் கொள்ளப்படும்.” விகர்ணன் “அங்கர்?” என்றான். “அவர் எளிய அரசர் அல்ல. பெருங்கொடையாளர். அவர் அளிக்கும் முதன்மைக் கொடையை பெற்றுக்கொள்பவர் நம் அரசரே” என்றாள்.

விகர்ணன் “இவையனைத்துமே வெறும் வாய்ப்புகள்தான், பகடையின் பக்கங்கள்போல” என்றான். தாரை புன்னகைத்து “இன்று இந்த அரண்மனையில் போருக்கு எழுபவர்கள், போர்ஒழிய விழைபவர்கள் என அனைவருமே இத்தகைய எளிய வாய்ப்புகளில் தொற்றிக்கொண்டுதான் எண்ணம் வளர்க்கிறார்கள்” என்றாள். “நான் என்ன செய்வது?” என்று விகர்ணன் கேட்டான். “நீங்கள் இயற்றுவதற்கு ஒன்றே உள்ளது. இளைய யாதவரை எதிர்கொண்டு அழைத்துச் சென்று தங்கவைக்கும் பொறுப்பை நீங்கள் ஏற்றுக்கொள்ளுங்கள். அவருடன் இருங்கள். அவையில் அவர் எழுந்து தன் தரப்பை கூறுகையில் கௌரவர் பக்கத்திலிருந்து அவரை ஏற்றுக்கொண்டு பேசுங்கள். இங்கிருந்து எழும் அறத்தின் குரலாக ஒலியுங்கள்” என்றாள் தாரை.

விகர்ணன் “ஆம், இப்பொழுதுபோல பிறிதெப்போதும் நான் செய்ய வேண்டியது தெளிவாக இருந்ததில்லை” என்றான். தாரை அவன் முழங்காலில் தலை வைத்து அவன் கால்விரல்களைப் பிடித்து இழுத்து விளையாடியபடி “அறத்தைச் சார்ந்திருப்பதற்கு நமக்குக் கிடைக்கும் பரிசென்பது நாம் கலங்காதிருக்க முடியுமென்பதுதான். தீதைச் சார்ந்திருத்தல் எத்தனை வலுக்கொண்டதாயினும் எத்தனை சொற்பெருக்கால் நிலைநிறுத்தப்படினும் ஆழத்தில் கலக்கம் கொண்டதாகவே இருக்க இயலும்” என்றாள். “ஆம்” என்றபின் விகர்ணன் அவள் குழலை மெல்ல நீவினான். நெற்றி வகிட்டின்மேல் சுட்டுவிரலை வைத்து வருடி குழல்பற்றி அளைந்தான். அவள் விழிதாழ்த்தி அவன் விரல்களுடன் ஆடிக்கொண்டிருந்தாள்.

விகர்ணன் குனிந்து நோக்கி “சிறுமியைப்போலவே இருக்கிறாய்” என்றான். “ஏன்?” என்று அவள் கேட்டாள். “ஒவ்வொருமுறையும் இவ்வெண்ணம் எழுகிறது, நீ ஒரு சிறுமி என்று” என விகர்ணன் சொன்னான். அவள் சிரித்து “நன்று, பெண்கள் கேட்க விழையும் சொல்” என்றாள். “சிறுமியருக்குரிய கள்ளமின்மை ஒன்று உன்னிடம் இருக்கிறது. அதுவே உன்னை இயல்பாக அறத்தில் நிறுத்துகிறது” என்றான் விகர்ணன். “பிறிதொன்று அறியாமல் அறத்தில் நிலைகொள்வதென்பது பெரும்பேறு. இருளை அறிந்து ஒளிக்கு மீள்பவர்கள் மிகச் சிலரே. வந்த பின்னரும் சற்றேனும் அவர்களிடம் இருள் எஞ்சியிருக்கும். ஏனென்றால் இருள் என்பது சுவைகளால் ஆனது என்பார்கள். இருளையே அறியாதவர்கள் தெய்வங்களால் வாழ்த்தப்பட்டவர்கள்.”

தாரை மீண்டும் விழிதாழ்த்தி முகம் மெல்ல சிவந்து அனல்கொள்ள “என்னைப்பற்றி நான் கொண்டுள்ள எண்ணம் ஒன்றே, அன்னையிடமிருந்து நான் கொண்ட சொற்களே என் நெறி. எது என்னுள் சரியென்று தோன்றுகிறதோ அதன்பொருட்டு முற்றிலும் நிலைகொள்வது. அதற்கப்பால் எதையும் நான் அறிந்துகொண்டதும் இல்லை” என்றாள். “இந்த முதிரா இளமையே உன்மேல் பெரும் ஈர்ப்பை எனக்களிக்கிறதுபோலும்” என்றான் விகர்ணன். அவன் புன்னகையும் மறைந்தது. “இவ்வறையிலிருந்து வெளியேறினால் ஒவ்வொரு அடிக்கும் எனக்கு அகவை கூடுகிறது. முதுமைகொண்டு உடல் கால்களின்மேல் எடை கொள்கிறது. இதற்குள் நுழைகையில் அகவைகளை உதறி சிறுவனாகிறேன். ஒவ்வொரு நாளும் இளமை எனும் ஆற்றில் நீராடி அழுக்கை களைந்து மீள்வதுபோல.”

தாரை எழுந்து “சற்று ஓய்வெடுங்கள். நான் உங்களுக்கு உணவும் இன்நீரும் கொண்டுவருகிறேன்” என்று ஆடை திருத்தினாள். விகர்ணன் எழுந்து கைகளை விரித்து சோம்பல் முறித்தபின் மேலாடையைத் தூக்கி பீடத்திலிட்டு மஞ்சத்தில் கால்களை நீட்டிப்படுத்தான். “கண்களை மூடியபடி படுத்துக்கொள்ளும்போதுதான் எத்தனை களைப்புற்றிருக்கிறேன் என்று தெரிகிறது. மெய்யில் பகல் முழுக்க நான் ஆற்றிய பணியென ஒன்றுமில்லை. உளக்கொந்தளிப்பே எடை தூக்கி அலைந்ததற்கு நிகரான களைப்பை அளிக்கிறது” என்றான். அவள் “ஓய்வெடுங்கள்” என்றபின் வெளியே சென்று கதவை மெல்ல மூடினாள்.

.

விகர்ணனின் தோளுக்குப் பின்னால் மறைந்தவளாக மரப்படிகளில் ஏறி நீண்ட இடைநாழியினூடாக தாரை நடந்தாள். கால் தளர அவள் தயங்கி நின்றபோது சற்று முன்னால் சென்று அவள் தொடராமையை முதுகால் உணர்ந்து அவன் திரும்பிப் பார்த்தான். அருகணைந்து “என்ன?” என்றான். இல்லை என்று அவள் தலையசைத்தாள். “என்ன?” என்று அவன் மீண்டும் கேட்டான். நோயுற்றதுபோன்ற புன்னகையுடன் “ஒன்றுமில்லை” என்றாள்.

விகர்ணன் சிறிய எரிச்சலுடன் “இப்போது அவர் தனித்திருக்கிறார். ஆனால் எப்போது வேண்டுமானாலும் அவரைப் பார்க்க மக்கள் வரக்கூடும். இன்றும் அஸ்தினபுரியின் மக்களில் பெரும்பகுதியினர் யாதவர்களே. இங்கு அவர் தங்கியிருப்பது இன்னமும் அவர்களுக்குத் தெரியாதென்று தோன்றுகிறது” என்றான். தளர்ந்த மெல்லிய குரலில் தாரை

“அப்படியென்றால் நாம் பிறிதொருமுறை அவரை வந்து பார்க்கலாமே?” என்றாள். முகம் சுளிக்க “ஏன்?” என்று அவன் கேட்டான். “ஒன்றுமில்லை” என்றாள் புன்னகைக்க முயன்றபடி.

“இது உகந்த தருணமென்றுதானே உன்னை அழைத்து வந்தேன்?” என்றான் விகர்ணன். “ஒன்றுமில்லை…” என்று அவள் தலைகுனிந்து உதடுகளை உள்மடித்து அழுத்திக்கொண்டாள். எண்ணியிராதபடி விம்மலொன்று நெஞ்சிலிருந்து எழுந்து மூச்சை அடைத்தது. அவ்வோசை கேட்டு அருகணைந்து அவன் “என்னடி?” என்றான். அவன் குரல் கனிந்திருந்தது. கைகளைக் கூப்புவதுபோல் வைத்து வாயையும் மூக்கையும் அதில் அழுத்திக்கொண்டு அவள் தலைகுனிந்து நின்றாள். அவன் அவள் முகவாயைப்பற்றி முகத்தை தூக்கி “என்னடி?” என்றான். இரு சிப்பிகள்போல அவள் விழிகள் மூடியிருந்தன. இமைப்பீலிகளை நனைத்து மெல்ல ஊறிய விழிநீர் கன்னங்களின் பக்கவாட்டில் வழிந்தது.

“நீ அவரை நூல்களில், கதைகளில் மட்டுமே அறிந்திருக்கிறாய். அது பிறிதொருவர் என்று உணர்க! நான் அறிந்த இளைய யாதவர் ஒவ்வொருவருக்கும் அணுக்கமானவர். இப்புவியிலிருக்கும் எந்த மானுடனும் சற்று உளம் கனிந்தால் தந்தையென்று, தோழனென்று, மைந்தனென்று அவரை உணரமுடியும். அவரிடம் நீ எத்தயக்கத்தையும் உணரவேண்டியதில்லை. எந்த முறைமையையும் கடைபிடிக்க வேண்டியதில்லை. நீ விரும்பி எச்சொல்லையும் உரைக்கலாம். தந்தை மடிநோக்கிச் சென்று ஏறி அமரும் இளமகளின் உரிமை உனக்குண்டென்று உணரலாம்” என்றான்.

அவள் மேலாடையால் முகத்தையும் கண்களையும் துடைத்தபின் “அதை நான் அறிவேன்” என்றாள். “பிறகென்ன?”

என்றான். “அதனாலல்ல” என்றாள். “பின்பு?” என்றான் விகர்ணன். “ஒன்றுமில்லை” என்றபின் “செல்வோம்” என்று அவள் அவனுடன் நடந்தாள். ஒருமுறை அவளை நோக்கியபின் மறுமொழி எதுவும் சொல்லாமல் அழைத்துச் சென்றான். அவர்களின் காலடிகளிலேயே உள்ளம் ஒலித்தது. அவன் காலடிகளில் விரைவுத்தாளம் இருந்தது. அவள் வலக்கால் சற்று இழுபட்டு மரத்தரையில் உரசும் ஒலி எழுந்தது.

இளைய யாதவரின் அறைவாயிலில் நின்ற காவலன் விகர்ணனைக் கண்டதும் தலைவணங்கினான். “எங்கள் வருகையை அறிவி” என்றான் விகர்ணன். தாரை மீண்டும் விகர்ணனின் கைகளை பற்றிக்கொண்டு அவன் உடலோடு ஒட்டிக்கொண்டாள். “அஞ்சாதே” என்றான் விகர்ணன். “நானும் அவரை அஞ்சியே அணுகினேன். முதற்புன்னகையிலேயே அவர் என்னை முற்றிலும் வென்றார். ஒன்று உணர்க, சான்றோர்களும் அரசர்களும் முனிவர்களும் தங்கள் பெருமையால் நம்மைவிட்டு தொலைவிலிருக்கிறார்கள். ஆனால் கால வடிவான பேருருவர்களோ தங்கள் முழுவுருவால் நம் ஒவ்வொருவருக்கும் மிக அணுக்கத்தில் இருக்கிறார்கள்.”

“அழைக்கிறார்” என்று காவலன் வந்து சொல்ல விகர்ணன் “வா” என்று சொன்னான். தாரை அறைக்குள் நுழைந்து விகர்ணனுக்குப் பின்னால் நின்றாள். ஏதோ சுவடியை நோக்கியபடி மஞ்சத்தில் கால்நீட்டி அமர்ந்திருந்த இளைய யாதவர் விகர்ணனிடம் முதல் வினாவாக “அது யார் உனக்குப் பின்னால்?” என்றார். “அரசே, இவள் என் துணைவி தாரை. உங்களை சந்திக்க வந்தாள்” என்றான் விகர்ணன். “மச்சநாட்டு சூக்திகனின் மகள் அல்லவா? உன் இல்லத்திற்கு

வந்திருக்கிறேன். சிறுமகவென உன்னை தூக்கி எறிந்து பிடித்தாடியிருக்கிறேன்” என்று சிரித்தபடி இளைய யாதவர் எழுந்து அருகே வந்து அவள் வலக்கையைப் பிடித்து இழுத்து தன் தோளுடன் சேர்த்துக்கொண்டார்.

அவள் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது. “என்ன அச்சம்?” என்றார். “அச்சமில்லை” என்று அவள் சொன்னாள். “வா, இங்கு அமர்ந்துகொள்!” என்று அவளை கைப்பற்றி அழைத்துச்சென்று தன் முன்னால் பீடத்தில் அமர்த்திக்கொண்டார். விகர்ணனிடம் மஞ்சத்தைக் காட்டி “அங்கு அமர்க!” என்றார். விகர்ணன் “இல்லை, நான் நிற்கிறேன்” என்றான். “அமர்க!” என்றார். “தங்கள் மஞ்சம்...” என அவன் தயங்க “அதற்கென்ன?” என்றார். அவன் தயங்கி மெல்ல அதன் விளிம்பில் அமர அவர் அவள்முன் பிறிதொரு பீடத்தில் அமர்ந்தார்.

“உன்னை நான் நன்கு அறிவேன், தாரை. பதினான்கு ஆண்டுகளுக்கு முன் அஸ்தினபுரியின் அவையில் இவன் நாவில் எழுந்த சொல் உன்னால் உரைக்கப்பட்டதென்று அப்போதே உணர்ந்தேன்” என்றார். “இல்லை” என்று தாரை மறுத்தாள். “நான் அவரிடம் பேசுவதுண்டே ஒழிய...” என்று அவள் தயங்க “நீ அவன் உளச்சான்று” என்று இளைய யாதவர் சொன்னார். அவள் புன்னகைத்து விகர்ணனைப் பார்த்துவிட்டு நாணத்துடன் தலைகுனிந்து “அவ்வாறல்ல, தன்னியல்பிலேயே நேர்நிலை கொண்டவர் அவர். அது என் நல்லூழ்” என்றாள்.

“உண்மை. பின்னர் திரும்பிப்பார்க்கையில் உங்களைப்பற்றி நீங்களே நிறைவுகொள்ளும் செயல்களை இப்போது இயற்றுகிறீர்கள். இது உங்களை ஆற்றுப்படுத்தட்டும்” என்று இளைய யாதவர் சொன்னார். “அரசே...” என தாரை ஏதோ சொல்ல வாயெடுக்க அவள் கன்னத்தைத் தட்டி “நான் உன்

தந்தையால் மூத்தவரே என அழைக்கப்படுபவன். என்னை நீ தந்தையே என அழைக்கலாம்” என்றார் இளைய யாதவர். அவள் கழுத்திலும் நெற்றியிலும் நரம்புகள் புடைக்க முகம் சிவக்க மூச்சுத்திணறுபவள்போல தலைகுனிந்தாள். “கூறுக, தந்தையே என” என்று அவர் அவள் தலையை மெல்ல அறைந்தார். “தந்தையே” என விம்மலோசையுடன் கூறிவிட்டு தாரை கைகளில் முகம் அமைத்து விம்மியழலானாள்.

அவர் அவள் தோளைப்பற்றி மெல்ல உலுக்கி “என்ன விழிநீர்? நிறுத்து” என்றார். அவள் உதடுகளை அழுத்திக்கொள்ள “நிறுத்து” என அவள் பின்னந்தலையை மீண்டும் அறைந்தார். அவள் நிலைதடுமாறி அவர் மேலேயே விழப்போக அவர் அவளை பற்றிக்கொண்டார். “மிகச் சிறிய உடல்கொண்டிருக்கிறாள். குழந்தையாக இருக்கையில் நான் இவளை ஒற்றைக்கையில் தூக்குவேன். இவள் குடியில் இவள் அரிய வெண்ணிறம் கொண்டிருந்தாள். ஆகவே சூக்திகன் இவளை வெள்ளிப்பரல் என அழைத்தான். இவர்களின் மொழியில் ரஜதி…” என்றார்.

நெடுநாட்களுக்குப் பின் அச்சொல் காதில் விழுந்ததனால் தாரை முகம் மலர்ந்தாள். “ஆம், என்னை அப்படித்தான் அனைவரும் அழைப்பார்கள்” என்றாள். “மிகச் சிறியது ரஜதி. ஆனால் சர்மாவதியின் பேரொழுக்குக்கு எதிராக நெடுந்தொலைவு செல்லும் ஆற்றல்கொண்டது. ஆற்றுமுகப்பின் பெருஞ்சதுப்பு வரை முட்டையிடுவதற்காகச் செல்லும் என்கிறார்கள்” என்றார். தாரை நாணமும் சிரிப்புமாக “சர்மாவதியில் நீந்தியிருக்கிறீர்களா?” என்றாள். “தொடர்ச்சியாக ஏழுமுறை நதியை நீந்திக் கடந்திருக்கிறேன்.” அவள்

“ஏழுமுறையா?” என்றாள். “ஏன், ஐயமா? மீண்டும் அங்கு சென்று நீந்திக் காட்டட்டுமா?” என்றார்.

“அய்யோ இல்லை, உங்களால் இயலும்… எந்தை மட்டுமே ஏழுமுறை நீந்தியவர்” என்றாள் தாரை. “செம்பட்டையன் என நான் உன் தந்தையை அழைப்பேன். அந்த மூடனை நான் இரண்டுமுறை தோற்கடித்திருக்கிறேன்” என்றார் இளைய யாதவர். விகர்ணன் “எந்தையே, உங்களைச் சந்திக்கும் கணம் வரை என் உள்ளம் ஊசலென ஆடிக்கொண்டிருந்தது. முதல் நோக்கிலேயே முழுமையாக நிலைபேறு கொண்டேன். அதன்பொருட்டே இவளை அழைத்து வந்தேன்” என்றான். அவர் அவள் காதைப் பிடித்து இழுத்து “இவளுக்கு எப்போதுமே நிலைபேறுள்ள நெஞ்சுதான்” என்றார்.

# குருதிச்சாரல் - 27

### பகுதி நான்கு : ஒளிர்பரல் – 2

தாரை அசலையின் அறைவாயிலுக்குச் சென்றபோது முன்னரே அவள் தன் சேடியருடன் பேரவைக்கு கிளம்பிச் சென்றிருக்கும் செய்தியை அறிந்தாள். இடைநாழியினூடாக விரைந்து ஓடியபோது கழுத்தணிகளும் வளையல்களும் சிலம்புகளும் இணைந்து குலுங்கும் ஓசை பெரிதாக ஒலிக்கக்கேட்டு நின்று நெஞ்சில் கைவைத்து மூச்சிழுத்துவிட்டாள். பின்னர் பெருநடையாக தாவி ஓடி படிகளில் இறங்கி சிறுகூடத்திற்கு வந்து அங்கு நின்றிருந்த முதுசேடியிடம் “இளைய அரசி நெடுந்தொலைவு

சென்றுவிட்டார்களா?" என்றாள். அவள் "இல்லை அரசி, நான்காவது வளைவு அணுகியிருப்பார்கள் இந்நேரம்" என்றாள்.

ஒவ்வொரு தூணையும் தொட்டுத் தொட்டு நுனிக்கால் வைத்து தாவித்தாவி அவள் ஓடினாள். நடுவில் ஒரு தூணை தொடாமல் விட்டபோது திரும்பி வந்து அதை தொட்டுவிட்டு முன்னால் சென்றாள். நின்று மூச்சிரைத்து கண்களை மூடி ஒருகணம் இளைப்பாறி மீண்டும் ஓடினாள். அவ்வரண்மனையில் அவ்வாறு ஓடுபவர்கள் அவளும் அவள் குலத்தைச் சேர்ந்த சிம்ஹிகி, புஷ்டி, அனங்கை, கலை, ஊர்வசி, அமிர்தை ஆகியோரும் மட்டுமே. மல்லநாட்டு இளவரசியர் தேவமித்ரை, தேவபிரபை, தேவகாந்தி, தேவமாயை, தேவகி ஆகியோர்கூட அவ்வாறு ஓடுவதில்லை.

தோட்டத்திலாடுகையில் தேவமித்ரை ஒருமுறை அவள் தோளைத் தொட்டுஅணைத்து "அவ்வாறு ஓடக்கூடாது தாரை... அரசியர் ஓடுவதில்லை" என்றாள். "ஏன்?" என்றாள் தாரை. "நம் அணிகளை பார். இவை ஓடுவதற்கும் விரைவதற்கும் உரியவை அல்ல." தாரை அணிகளை நோக்கிய பின் "ஏன் ஓடக்கூடாது?" என்றாள். "அரசியருக்கு அனைத்தும் அருகிலுள்ளன. ஆணையிட்டால் அருகணையக் காத்திருக்கின்றன" என்றாள் சிம்ஹிகி. கலை "அவ்வாறு அருகணையாதவற்றை அவர்கள் நாடுவதும் பிழை" என்றாள். அவள் இளிவரலாடுகிறாளா என விழிகளிலிருந்து தெரியவில்லை. "அரசியரின் காலம் மிகமிக மெல்ல ஊர்வது, சினைகொண்ட பிடியானை என" என்றாள் தேவப்பிரபை.

"மெய்யாகவே சொல்க, ஏன் அரசியர் ஓடலாகாது?" என்றாள் தாரை. "ஓடும்போது அவர்கள் அரசியல்லாமலாகிறார்கள்" என்றாள் தேவகாந்தி. "ஏன்?" என்று தாரை மீண்டும் கேட்டாள்.

புஷ்டி “நான் இதை ஒருமுறை செவிலியிடம் கேட்டேன்” என்றாள். “அரசி என்பது ஒரு நிறைநிலை. ஆகவே அவர்கள் ஓடக்கூடாது என்றாள். பின்னர் என் தோளைத்தொட்டு நிறைந்திருக்கையில்தான் அது நீர்நிலை. அரசியர் ஓயாது தன்னிலூறும் சுனை ஆகலாம். ஊருக்கே உணவூட்டும் குளமோ ஏரியோ ஆகலாம். உணவூட்டும் ஊருணியாகலாம். ஓயாது அலைக்கும் கடலுமாகலாம். ஆனால் நிலைகொண்டாகவேண்டும் என்றாள்.”

தாரைக்கு அவள் சொன்னது புரியவில்லை. அவள் “எங்களூரில் ஓடுவதே முதல் பயிற்சி. நெடுந்தொலைவு ஓடுவதும் நெடுநேரம் துடுப்பிடுவதுமே ஆற்றல் என கொள்ளப்பட்டன” என்றாள். தேவமாயை “உங்களூரில் வெள்ளி என எதை சொல்வீர்கள்?” என்றாள். “அயிரை, கெண்டை” என்றாள். “பொன் என்று?” என்றாள் தேவமாயை. “செங்கயல்” என்றாள். தேவமாயை உதடு வளைய புன்னகைத்து “எங்களூரில் வெள்ளி என்றால் சருகு. பொன்னென்றால் தளிர்” என்றாள். “இங்கே வெள்ளியும் தங்கமும் வெறும் உலோகங்கள் மட்டுமே.” தாரை நீள்மூச்செறிந்தாள். தேவமித்ரை அவள் தோளை மீண்டும் அணைத்து “நீ துயர்கொள்ள வேண்டியதில்லையடி. மெய்யாகவே உன்னைப்போல் ஓடமுடியாதா என ஏங்குபவள் நான்” என்றாள்.

அவள் ஓடிவரும் ஓசையைக் கேட்டு அசலை நின்று திரும்பிப்பார்த்து புன்னகைத்தாள். அவளை அணுகி மூச்சை அடக்கி “பொறுத்தருள்க, அரசி. தாங்கள் பட்டத்தரசியுடன் அவைபுகுவீர்கள் என்று எண்ணினேன். தனியாக செல்கிறீர்கள் என்று அறிந்த பின்னரே அங்கு வந்தேன். அதற்குள் கிளம்பிவிட்டீர்கள்” என்றாள். “ஆம், இது பேரவை என்பதனால்

பேரரசியுடன் தானும் செல்வதாக அரசி சொன்னார்கள். ஆகவே நான் தனித்து கிளம்பினேன்” என்றாள் அசலை.

மூச்சு அமைய தாரை “பேரவைக்கு பேரரசி வருகிறார்களா?” என்றாள். “ஆம், இன்றையநாள் அஸ்தினபுரியில் அனைவரும் எதிர்பார்த்திருப்பதல்லவா?” என்று அசலை சொன்னாள். “மேலும் அவருடைய சொற்களில் பாதி அன்னையை நோக்கியே எழும் என அனைவரும் அறிவர்.” தாரை “ஆம்” என்றபின் முகம்மலர்ந்து அசலையின் கையைப்பற்றி “நேற்று நான் சென்று இளைய யாதவரை பார்த்தேன்” என்றாள். அசலை திடுக்கிட்டு “நீயா?” என்றாள். “ஆம், நானும் என் கொண்டவருமாக சென்றோம். உண்மையில் நான் தயங்கிக்கொண்டிருந்தேன். அவர்தான் என்னை வற்புறுத்தி அழைத்துச் சென்றார்” என்றாள் தாரை.

சிறுமியைப்போல மூச்சிழுத்துவிட்டு “என்னால் எப்படி அத்தனை தொலைவைக் கடந்து அவர் அருகே அணுக முடிந்ததென்று இப்போது எண்ணினாலும் திகைப்பாக இருக்கிறது. ஆனால் அருகணைந்த பின்னர் நான் எப்போதும் அங்குதான் இருந்துகொண்டிருந்தேன் என்றுணர்ந்தேன். அவர் பிறிதெவருமல்ல, அங்கே மச்சபுரியில் சர்மாவதியில் படகோட்டி முதலைகளை வேட்டையாடி வாழ்ந்துகொண்டிருக்கும் என் தந்தைதான். அவர் என் கைகளைப் பற்றியதுமே நான் அதை உணர்ந்தேன். கண்களை மூடினால் தந்தையின் தொடுகையென்றே அது தோன்றியது” என்றாள் தாரை.

அசலை அதை கேட்கவிழையாதவள்போல மறுபக்கமாக தலைதிருப்பியிருந்தாள். ஆனால் தாரை அதை கண்ணேற்காமல் தொடர்ந்து பேசினாள். “நான் அதை அவரிடம்

சொன்னேன். நான் உன் தந்தையேதான் என்று அவர் சொன்னார். என் தலையை மெல்ல தட்டினார், காதைப் பிடித்து முறுக்கினார். மெய்யாகவே அவருக்கு என் தந்தை எப்படி என்னை கொஞ்சுவார் என தெரிந்திருக்கிறது." அசலை பெருமூச்சுடன் "நன்று" என்றாள். "நீங்களும் சென்று பார்க்கலாமே, அக்கை?" என்றாள் தாரை. "உன்னுடன் உன் கணவர் வந்தார்" என்றாள் அசலை. "ஆம், அது மெய். முறைமைகளைக் கடந்துசெல்ல இங்கு எவருக்கும் ஒப்புதலில்லை" என்றாள் தாரை.

இருவரும் பேசிக்கொண்டு நடந்தனர். அசலை தலைகுனிந்து எண்ணங்களில் ஆழ்ந்தவளாக நடந்தாள். தாரை அச்சூழலை விழியோட்டி நோக்கியபடி அவ்வப்போது இயல்பாக நின்று ஆடைகளும் அணிகளும் குலுங்க ஓடி அணுகி உடன்வந்தாள். அசலை விழிப்புற்றவள்போல "நீங்கள் எதைப்பற்றி பேசிக்கொண்டீர்கள்?" என்றாள். தாரை மெல்லிய திடுக்கிடலுடன் அக்கேள்வியை அடைந்தாள். துள்ளலுடன் அவளுடன் இணைந்து நடந்தபோது அவள் அணிகளும் வளைகளும் குலுங்கின. அவள் சொல்லெடுப்பதற்கு முன்னே அவள் உடல் ஒரு சொல்லை உரைத்தது போலிருந்தது.

"உண்மையை சொல்லப்போனால் நாங்கள் இருவரும் பேசிக்கொண்டது முழுக்க மச்சநாட்டை பற்றித்தான், அரசி. இளைய யாதவர் என் தந்தையின் தோழர். எங்கள் நிலத்தை நன்கறிந்தவர். நீங்கள் எங்கள் நிலத்தை பார்த்திருக்கமாட்டீர்கள். சர்மாவதி சேற்றுநதி. அதன் இரு கரைகளும் சதுப்பு நிரம்பியவை. எங்கள் இல்லங்கள் அனைத்தும் சதுப்பின் மீதுதான் அமைந்திருக்கும். நீரலைக்கு இருபுறமும் கோரைப்புல்லின் அலைகள். நீரில் படகுகள்

ஒழுகிக்கொண்டிருக்கும். கோரைப்புற்களின் மீது எங்கள் இல்லங்கள் மூங்கில்கால் ஊன்றி நின்றிருக்கும். அவ்வளவே வேறுபாடு. படகுகளைப் பார்த்து அமர்ந்திருந்தால் வீடுகள் ஒழுகிச்செல்வதைப்போல தோன்றும்…”

அவள் சிறுமியைப் போன்ற விரைவுக்குரலில் “குடில்களுக்கு அடியில் இஞ்சிப்புல்லிட்டு புகையெழுப்பிக்கொண்டிருப்போம். இல்லையேல் சதுப்பின் கொசுக்கள் உடலை மொய்த்துவிடும். அப்புகை எங்கள் ஊர்களை முகில்போல மூடியிருக்கும். இளமையிலிருந்து நான் கண்ட அத்தனை முகங்களும் அப்புகைப்படலத்தினூடாக எழுந்தவைதான். எப்போதேனும் நல்ல கோடையின் இளங்காலையில் ஆற்றுக்குமேல் படகில் செல்கையிலேயே புகையில்லாத காட்சிகளை காண்பது. அது விழியிலிருந்து ஒரு மென்பால் படலத்தை உரித்து அகற்றியதுபோல காட்சி துலங்கும் ஒரு கனவறிதல். அதற்காகவே நான் சர்மாவதிக்கு செல்வேன்” என்றாள்.

“ஆனால் அது மிக அரிது. ஆற்றின்மேல் எப்போதும் நீராவிப் படலம் இருக்கும். காட்சிகள் மழையினூடே என நெளிந்தாடித்தான் தெரியும்…” என அவள் தொடர்ந்தாள். சொல்லச்சொல்ல எழுந்தபடியே இருந்தது அவள் உள்ளம். “நானே மீன் பிடிக்கத்தொடங்கியது ஏழாவது அகவையில். எனக்கு என் தந்தை கைக்கோடரியால் மென்மரம் குடைந்து ஒரு படகு செய்து தந்தார். அதில் துடுப்பிடுவதற்கும் அவரே கற்பித்தார். சிறுதூண்டிலுடன் ஆற்றில் தனித்துச் சென்று என் முதல் மீனை பிடித்துக்கொண்டு வந்ததை ஒவ்வொரு காட்சித்துளியெனவும் நினைவு கூர்கிறேன்.”

“அதுவொரு நீள்வால் கெளுத்தி. ஆழத்திலிருந்து விடியலில் மட்டுமே வெளிவரும் மீன். அதற்கு செவுள்கள் இல்லை.

இலைக்குருத்துச் சுருள்போல மென்மையாக பளபளத்தது. அதை என் கையில் எடுத்தபோது துள்ளி நெளிந்தது. அது சர்மாவதியின் விரல் என்றும் என்னை உடல்கிளுப்பூட்டி சிரிக்கவைக்க முயல்கிறதென்றும் எண்ணினேன். படகை சேற்றுவிளிம்பில் நிறுத்தி பாய்ந்திறங்கி சதுப்பினூடாகச் செல்வதற்கு போடப்பட்டிருந்த மரத்தடி மீது தாவி என் குடில் நோக்கி ஓடினேன். 'தந்தையே, நானே பிடித்த மீன்' என்று கூவினேன். தந்தை என் அக்கையருடன் இல்லமுகப்பிலமர்ந்து பேசிக்கொண்டிருந்தார். எழுந்து ஓடிவந்து இரு கைகளையும் விரித்து என் இடை பற்றி தூக்கிக்கொண்டார். 'என் குட்டி மீனே! என் ஒளிமிக்க மீனே!' என்று கூவி என்னை முத்தமிட்டார்."

"அதைத்தான் அவரிடம் பேசிக்கொண்டிருந்தாயா?" என்றாள் அசலை. "ஆம், என்னை என் தந்தை பரல் என்று அழைப்பார். அதை அவரே சொன்னார். நானே நிறுத்தாமல் பேசிக்கொண்டிருந்தேன். சென்ற பதினாறாண்டுகளில் நான் ஒருமுறைகூட பேசாதவை அவை. அவ்வளவு சொற்களும் என்னுள் ஆழத்தில் மீன்முட்டைகள் என கிடந்திருக்கின்றன. பெருகிக் கொப்பளித்து எழுந்தன. அக்கையே, நீங்கள் மழைக்காலம் முடிந்து முதல் வேனிலில் செம்பரலும் வெண்பரலும் முட்டைகள் விரிந்து மீன்குஞ்சுகள் எழுவதை கண்டிருக்கிறீர்களா? புயற்காற்றில் மணல்பரப்பு கொப்பளித்து எழுந்துசுருண்டு அணைவது போலிருக்கும்..."

"பெரும்படை! முகில்போல பெருஞ்சுருள்கள்! ஒன்றன்மேல் ஒன்றென எழும் அலைகள்! கண்ணிமைநுனி என பல்லாயிரம் சிறுவால்கள். பல இலக்கம் வெள்ளிச் செவுள்கள். பலகோடி கடுகு விழிகள். ஆனால் உள்ளம் ஒன்று. அவற்றை அள்ளிச் சுழற்றிவரும் விழைவுதான் மீன்களை நீரில் வாழச்செய்யும்

இறையாணை. அதை விழிமுன் காண்பதென்பது இறைவடிவை எதிர்நின்று நோக்குவதுபோல. படகுகளில் ஏறி நாங்கள் சர்மாவதியின்மேல் சென்று அசைவற்று நிற்போம். எடைகொண்ட கற்களிரண்டை நங்கூரமாகக் கட்டி நீரிலிறக்கிய பின் எதிரொழுக்கில் துடுப்பிட்டால் படகுகள் அசைவிலாது நீர்மேல் நின்றிருக்கும். எங்கள் குடியில் எழமுடியாத முதியோர்கூட அப்போது நீரின்மேல்தான் இருப்போம்.”

“பரலெழுகை தொடங்குவதை நீரிலெழும் வண்ண மாற்றத்தினூடாக ஏழு நாட்களுக்கு முன்னரே எங்கள் குலமுதியோர் சொல்லிவிடுவார்கள். ஒருநாளுக்கு முன்னரே நீரின் மணம் அதை தெளிவாக காட்டும். இளஞ்சேற்றுமணம். ஆனால் அதில் சற்று குருதியும் கலந்ததுபோலிருக்கும். இரவே படகுகளில் சென்று நதிமேல் காத்திருப்போம். பரல்பெருக்கு அணைவதற்கு முன்னரே காற்றில் சுழலும் பறவைக்கூட்டம் அதை அறிவிக்கும். பின்னர் சர்மாவதி நிறம் மாறுவதை காண்போம். நீருக்குள் எழும் அலைகளென அவை வந்து சூழ்ந்துகொள்ளும். இளையோரெல்லாம் நீரில் பாய்ந்து மூழ்கித்திளைத்து அவற்றை நோக்குவோம்...”

அசலை புன்னகைக்க தாரை நிறுத்தி “நான் என்ன பேசிக்கொண்டிருந்தேன்?” என்றாள். “அவரிடம் நீ பேசியதை” என்றாள் அசலை. “ஆம், ஒரு கட்டத்தில் அவரிடமிருந்து எனக்கு தெரிந்துகொள்வதற்கு எதுவுமே இல்லை என்று தோன்றியது. தந்தையிடமென நான் எண்ணியதனைத்தையும் பேச விரும்பினேன். ஏதோ ஒரு மாயம் நிகழ்ந்தது. அவர் என் களித்தோழரானார். அதன்பிறகு முழுக்க மீன் வேட்டை குறித்தும் படகுப் போட்டிகளைப்பற்றியும் ஆற்றில் பாய்ந்து ஒழுக்குமுறித்து நீந்தி மீள்வதைப்பற்றியும் மட்டுமே

பேசிக்கொண்டிருந்தோம். பேசிப் பேசி நெடுந்தொலைவு சென்ற பின்னர் உணர்ந்தேன், நானும் அவரும் மட்டும் வேறெங்கோ சென்றுவிட்டிருப்பதை. எங்கள் அறைக்குள்ளேயே என் துணைவர் நின்றிருந்தார். அவரை உணர்ந்து நான் திரும்பி வந்து அய்யோ நெடுநேரமாயிற்றே என்று புன்னகைத்தேன். தாழ்வில்லை, நீ ஒவ்வொரு அகவையாக உதிர்த்து மீண்டு செல்வதை கண்டேன். கருக்குழந்தையாக மாறிவிடுவாய் என்று தோன்றியது என்று அவர் சொன்னார்."

மூச்சுத் திணறுவதுபோல சொல் இறுக நிறுத்தி "அப்போது நான் ஏன் அப்படி சொன்னேன் என்று தெரியவில்லை. அவ்வண்ணம் கருக்குழந்தையாக மாறினால் அவர் உடலுக்குள் புகுந்து ஓர் அணுவாக அமைந்துவிட வேண்டுமென்று தோன்றுகிறது என்றேன். இருவரும் நகைத்தனர். இளைய யாதவர் என் தோளைப்பற்றி சென்று வா, மீண்டும் நாம் சந்திப்போம் என்றார். சந்திக்கவில்லையென்றாலும் எப்போதும் நான் உடனிருந்துகொண்டிருப்பேன் என்று சொன்னார்" என்றாள் தாரை.

அசலை "ஆம்" என்றாள். பின்னர் நீள்மூச்செறிந்து "அனைவரிடமும் இருந்து கொண்டிருக்கிறார்" என்றாள். தாரை "பின்னர் என் அறைக்கு மீள்கையில்தான் அவர் வந்திருப்பது இந்திரப்பிரஸ்தத்தின் தூதுச் செய்தியுடன் என்பதை நினைவுகூர்ந்தேன். அவர் என்ன கூறினாலும் அதனுடன் முழுதுளம்கொண்டு நிற்பதாக அறிவிக்கவே நானும் அவரும் சென்றிருந்தோம். அதை மட்டும் அவரிடம் சொல்லவே இல்லை" என்றாள்.

"அல்லது அதை மட்டும்தான் சொல்லிக்கொண்டிருந்தாய்..." என்றாள் அசலை. தாரை அவள் கையைப்பற்றி "மெய்யாகவா?

மெய்யாகவா, அக்கை? நான் அதை சொல்லிவிட்டேனா?” என்றாள். “நீ அறைக்குள் புகுந்ததுமே விழிகளால் அதைத்தான் சொல்லியிருப்பாய்” என்றாள் அசலை. “ஆம், அறைக்குள் நுழைந்ததுமே நான் முதலில் பார்த்தது அவர் கால்களைத்தான். அவர் முகத்தை நெடும்பொழுது கழித்தே பார்த்தேன். அவர் கால்களை நீங்கள் பார்க்கவேண்டும், அக்கையே. அவர் முகம் நம் கனவுகளில் இருப்பது. கனவுகள் மிக அண்மையிலும் மிகத் தொலைவிலுமென ஒரே தருணம் அமைந்திருப்பவை. கால்கள் அப்படி அல்ல, நாம் அன்றாடம் புழங்கும் ஒவ்வொரு பொருளும்போல கைக்கும் கருத்துக்கும் எட்டுபவை.”

“அக்கால்களை இப்போதும் விழிமுன் என பார்க்கிறேன். நீலத்தாமரை மொட்டுகள் போன்றவை. நகங்கள் இரு புன்னகைகள். அந்தக் கால்களை மலர்களாக குழலில் சூடிக்கொள்ள வேண்டுமென்று நேற்றிரவு எண்ணினேன். இனி என் குழலில் நீல மலர்களை அன்றி எதையும் சூடுவதில்லை என்று அப்போது முடிவெடுத்தேன்” என்றாள் தாரை. அசலை “நான் அம்முடிவை எடுத்து நெடுங்காலமாகிறது” என்று தன் குழலைத் திருப்பி அதில் சூட்டப்பட்டிருந்த நீலச் செண்பகத்தை காட்டினாள். தாரை திரும்பி அதைப் பார்த்து “மெய்தான்” என்றபின் “நானும்தான்” என்று தன் குழலில் சூட்டியிருந்த நீலமலர்களை காட்டினாள்.

“நீலம்போல் அழகிய வண்ணம் பிறிதெதுவுமில்லை. செம்மையும் பொன்மஞ்சளும் ஒளிகொண்டவை. நீலம் ஆழம் மிக்கது” என்றாள் அசலை. “ஆம் அக்கையே, பிறவண்ணங்கள் நம்மை நோக்கி வருகின்றன. நீலம் நம்மை இழுத்து தன்னுள் ஆழ்த்துகிறது” என்று தாரை சொன்னாள்.

காவலர் வாழ்த்துரைக்க நிமித்திகன் வரவறிவிக்க அஸ்தினபுரியின் குடிப்பேரவையை ஒட்டியிருந்த சிற்றறைக்குள் அசலையும் தாரையும் நுழைந்தனர். அங்கு மச்சநாட்டு இளவரசியர் சிம்ஹிகி, புஷ்டி, அனங்கை, கலை, ஊர்வசி, அமிர்தை ஆகியோர் மல்லநாட்டு இளவரசியர் தேவமித்ரை, தேவபிரபை, தேவகாந்தி, தேவமாயை, தேவகி ஆகியோருடன் பேசிக்கொண்டிருந்தனர். புஷ்டி எழுந்து வந்து தாரையிடம் “உன்னை தேடினேன்… எங்கே சென்றாய்?” என்றபின் அசலையை பார்த்தாள். “வணங்குகிறேன், அரசி” என்றாள்.

மூஷிககுலத்து இளவரசியர் கமலை, ருத்ராணி, மங்கலை, விமலை, பாடலை, உல்பலாக்ஷி, விபுலை ஆகியோர் காமரூபத்து இளவரசியர் ஏகவீரை, சந்திரிகை, ரமணை, நந்தினி, ருக்மிணி, அபயை, மாண்டவி, சண்டிகை ஆகியோருடன் பேசிக்கொண்டிருந்தனர். அவர்கள் எழுந்து அசலையை வணங்கினர். அசலை அவர்கள் நடுவே பீடத்தில் அமர்ந்தாள். அவளுக்குப்பின்னால் பீடத்தின் பின் வளைவைப் பற்றியபடி தாரை நின்றாள். உத்கலத்தின் இளவரசியர் திதி, சுரசை, பானு, சந்திரை, யாமி, லம்பை, சுரபி, தாம்ரை ஆகியோர் உள்ளே வந்து அசலையை வணங்கினர்.

மெல்ல மெல்ல அவ்வறை தோள்கள்தொடச் செறிந்து வண்ணங்களும் நறுமணங்களும் அணியொலிகளும் மூச்சுவெம்மையும் கொண்டதாக ஆகியது. கனகர் உள்ளே வந்து வணங்கி “இளவரசி, அவை கூடிக்கொண்டிருக்கிறது. ஒவ்வொருவராக வந்து அமர்கிறார்கள்” என்றார். “அரசர்கள் உள்ளே சென்றுவிட்டனரா?” என்று அசலை கேட்டாள்.

“பெரும்பாலும் சென்று அவையமர்ந்துவிட்டனர். இளையவர் அரசருடன் அவைபுகுவாரென்று எண்ணுகிறேன்” என்றார் கனகர். அசலை “பேரரசி அவைபுகுந்துவிட்டார்களா என்று நோக்கிக் கூறுக!” என்றாள். “அவர்கள் மறுபக்க அவையில் இருக்கிறார்கள். பேரரசி அவைபுகுந்ததும் அணுக்கச்சேடி எனக்கு செய்தி அறிவிப்பாள்” என்றார் கனகர். “அவர்கள் அவைபுகும்போது நாமும் அவைபுகலாம்” என்று அசலை சொன்னாள். கனகர் வெளியே ஓடினார்.

அசலை கைகாட்ட சேடி மயிலிறகு விசிறியை அளித்தாள். அவள் தன் பின்னலைத் தூக்கி பின்கழுத்தை விசிறிக்கொண்டாள். “நான் வீசுகிறேன், அரசி” என்றாள் பாடலை. “வேண்டாம், நீ அரசணிக்கோலத்திலிருப்பவள்” என்று அசலை புன்னகை செய்தாள். பேரரசி அவைபுகுவதை அறிவிக்கும் சங்கொலி மறுபக்கம் எழுந்தது. குரவையும் மங்கல இசையும் ஒலித்தன. “அவைநுழைகிறார்கள்” என்றாள் லம்பை. அசலை தாரையிடம் “நீ என் அருகில் அமர்ந்துகொள்” என்றாள். தாரை “அவை முறைமைப்படி...” என்று சொல்தயங்க “இது என் ஆணை என்று கொள்க!” என்றாள் அசலை. “அவ்வாறே” என்றாள் தாரை.

அவர்கள் ஆடைகளை சீரமைத்தபடி எழுந்தனர். கமலையும் மங்கலையும் அசலையின் ஆடையின் பின்சுருக்கங்களை நீவிவிட்டனர். “பேரவையில் எவரும் நம்மை நோக்கப்போவதில்லை... ஆயினும் அணியாடைகள்” என்றாள் திதி. சுரசை “நாம் பார்ப்போமே?” என்றாள். கனகர் மூச்சிரைக்க மீண்டும் சிற்றறைக்குள் புகுந்து தலைவணங்கி “அவை ஒருங்கிக்கொண்டிருக்கிறது, அரசியரே” என்றார். அசலை “செல்வோம்” என்று பிறரிடம் சொன்னபின் முன்னால்

சென்றாள். அவளுடைய நிமித்தச்சேடி வலம்புரிச்சங்கை ஊதி அரசியர் அவை புகவிருப்பதை அறிவித்தாள் மங்கலத்தாலமேந்திய மூன்று சேடியர் முன்னால் நடக்க அசலை அருகே தாரையுடன் நீளடி வைத்து மிதப்பவள்போல் நடந்து சென்றாள். கௌரவ அரசியர் மூவர் மூவராக நிரைவகுத்து அவளைத் தொடர்ந்து அவை நோக்கி சென்றனர்.

பேரவைக்குள் புறவாயிலினூடாக நுழைந்து அங்கு போடப்பட்டிருந்த இருக்கைகளில் அவர்கள் பரவினர். முன்னரே காந்தாரத்து மூத்த அரசியரான சுதேஷ்ணையும் சம்ஹிதையும் தேஸ்ரவையும் சுஸ்ரவையும் நிகுதியும் சுபையும் தசார்ணையும் இருக்கைகளில் அமர்ந்திருக்க அவர்களுக்குப் பின்னால் காந்தாரத்து அரசியர் ஸ்வாதா, துஷ்டி, புஷ்டி, ஸ்வஸ்தி, ஸ்வாகா, காமிகை, காளிகை, ஸதி, க்ரியை, சித்தை, சாந்தி, மேதா, பிரீதி, தத்ரி, மித்யா ஆகியோர் அமர்ந்திருந்தனர். சுதேஷ்ணையை வணங்கிவிட்டு தங்கள் இருக்கைகளில் அமர்ந்தனர்.

பேரவை முழுக்க நிறைந்துவிட்டிருப்பதை அவர்களுக்கு முன்னால் போடப்பட்டிருந்த மெல்லிய பட்டுத் திரைச்சீலைக்கு அப்பால் மென்புகையிலூடாக என தாரை பார்த்தாள். குடித்தலைவர்களும் பெருவணிகர்களும் வைதிகர்களும் அவர்களுக்குரிய இருக்கைகளில் அமைந்து ஓசையின்றி அவைமேடையை நோக்கிக்கொண்டிருந்தனர். பின்நிரைகளில் மட்டும் ஓரிருவர் வந்து அமர்ந்தனர். அரசர்களுக்குரிய பகுதியில் கௌரவர்கள் முடிகளுடனும் கவசங்களுடனும் மாலைகளுடனும் முழுமையாக நிறைத்து அமர்ந்திருந்தனர். சகுனியின் அருகே தரையில் இடப்பட்ட மென்பஞ்சு சேக்கையில் கணிகர் சரிந்து படுப்பதுபோல் அமர்ந்திருந்தார்.

பீஷ்மரும் துரோணரும் கிருபரும் வலது எல்லையில் அந்தணர் நிரையை ஒட்டி போடப்பட்டிருந்த இருக்கைகளில் அமர்ந்திருந்தனர். பீஷ்மர் அவருடைய இயல்புப்படி மெலிந்து நீண்ட உடலை மரவுரியிட்ட பீடத்தில் சற்றே வளைத்ததுபோல அமர்த்தி வலக்கையால் தாடியை உருவியபடி விழிதாழ்த்தி ஊழ்கத்திலென அமர்ந்திருந்தார். துரோணர் கிருபரிடம் தாழ்ந்த குரலில் எதையோ தொடர்ந்து உரையாடிக்கொண்டிருந்தார். சுபாகு எழுந்து சென்று யுயுத்ஸுவிடம் ஏதோ ஆணையிட்டுவிட்டு மீண்டுவந்து தன் இருக்கையில் அமர்ந்தான்.

சத்யசேனையும் சத்யவிரதையும் இருபக்கமும் நின்று காந்தாரியை அழைத்துக்கொண்டு அவைபுக மகளிர் அனைவரும் எழுந்து நின்று வாழ்த்தினர். அரசியர் நிரைக்கு எல்லையில் இடப்பட்ட அரியணையில் காந்தாரி அமர அவள் அருகே சத்யசேனையும் சத்யவிரதையும் அமர்ந்தனர். காந்தார அரசியர் தங்கள் குடி வழக்கப்படி முற்றிலும் முகத்தை மூடும்படி ஆடையணிந்து தாழ்ந்த குரலில் ஒருவரோடொருவர் உரையாடிக்கொண்டிருந்தனர். அரசியர் நிரையில் சிலரே அவையை நோக்கினர். பெரும்பாலானவர்கள் தலைகுனிந்து முற்றிலும் உளம் அகன்று அமர்ந்திருந்தனர். சிலர் பொருளின்றி எதையேனும் வெறித்து நோக்க சிலர் எதையோ துழாவுபவர்கள்போல அவை நோக்கி வெறுமனே விழிசுழற்றினர்.

திருதராஷ்டிரரின் அவைநுழைவை அறிவித்தபடி நிமித்திகன் கொம்பூதிக்கொண்டு அவைக்குள் நுழைந்தான். அவனைத் தொடர்ந்து மங்கலச்சேடியரும் இசைச்சூதரும் நிரைகொண்டு வர சஞ்சயனின் தோள்பற்றி திருதராஷ்டிரர் நடந்து வந்தார்.

அவையிலிருந்த விதுரர் எழுந்து சென்று முகமனுரைத்து வணங்கி திருதராஷ்டிரரை எதிரேற்றார். கைகூப்பியபடி அவைக்குள் நுழைந்து அவையை மும்முறை தலைதாழ்த்தி வணங்கிய பின் தன் இருக்கை நோக்கி சென்றார் திருதராஷ்டிரர். பீஷ்மரையும் துரோணரையும் கிருபரையும் வணங்கிவிட்டு அமர்ந்தார். அவருக்கு அருகே தாழ்ந்த பீடத்தில் சஞ்சயன் அமர்ந்தான். அவர் சென்று அமர்வதுவரை அவை வாழ்த்தொலி எழுப்பிக்கொண்டிருந்தது.

# குருதிச்சாரல் - 28

**பகுதி நான்கு : ஒளிர்பரல் – 3**

அவைநிகழ்வுகள் விரைவுகொண்டு ஒரு முனைநோக்கி சென்றுகொண்டிருந்தன. அனைவரும் வாயில்களைப்பற்றிய உணர்வுடனிருந்தார்கள். அசலை “அவர் அரசருக்கு முன்னாலேயே அவைபுகவேண்டுமே?” என்றாள். தாரை “அங்கிருந்து அவர் கிளம்பியதுமே செய்தி தெரிந்துவிட்டது. நம் எல்லைக்குள் அவரும் படைக்குழுவும் நுழைந்ததுமே பேரரசர் அனுப்பிய எதிரேற்புக் குழு அவர்களைக் கண்டு வணங்கி முறைமையும் வரிசையும் செய்ய முற்பட்டனர். தான் இப்போது அரசர் அல்ல என அவர் அவற்றை மறுத்துவிட்டார். வழியில் அவர்கள் தங்குவதற்கு காவலரண்களிலுள்ள அரண்மனைகளை ஒருங்குசெய்திருந்தனர். அவர்கள் வழியில் மரத்தடிகளிலும் பொதுச்சாவடிகளிலும் மட்டுமே தங்கினர்” என்றாள்.

அசலை “ஆம், அவர் அரசுதுறந்தார் என்றனர்” என்றாள். தாரை “அவர் எப்போதும் அவ்வரசை சுமந்ததில்லை” என்றாள். “தனியாகவா வந்தார்?” என்று அசலை கேட்டாள். “ஆம், என்றே சொல்லவேண்டும். அவருடைய தேரில் பிறர் எவருமில்லை. பின்னால் புரவிகளில் சாத்யகியும் எட்டு யாதவக் காவலர்களும் வந்தனர்.” அசலை “ஆம், அவருக்கெதற்கு காவல்?” என்றாள். “இங்கு புஷ்பகோஷ்டத்திலுள்ள அரசர்களுக்குரிய அரண்மனையில் தங்கமாட்டோம் என்றார். ஆகவே அப்பால் அயல்நாட்டுத் தூதர்களுக்குரிய மாளிகையே அவருக்கு அளிக்கப்பட்டுள்ளது.”

விதுரர் அவைக்குள் நுழைந்த யுயுத்ஸுவிடம் ஓடிச்சென்று மெல்லிய குரலில் ஆணைகளை இட்டார். அவரை நோக்கி ஓடிவந்த கனகரிடம் மேலும் சில ஆணைகளை பிறப்பித்தார். ஒவ்வொருவரும் சிற்றமைச்சர்களை நோக்கிச்சென்று ஆணைகளை ஏவினார்கள். கைவீச்சுகள் நாவென சொல்லெடுப்பதை தாரை கண்டாள். விழியறியும் சொல் என எண்ணிக்கொண்டாள். யுயுத்ஸு மெல்லிய அடிகளுடன் ஓடிச்சென்று திருதராஷ்டிரரிடம் ஏதோ சொல்ல அவர் தலையைச் சரித்து முகம் சுளித்து அவன் சொற்களை கேட்டார்.

அப்போது அவையில் ஓசையெழுந்தது. தாரை விழிதிருப்பி அவையை நோக்கினாள். ஓசை வலுத்தது. “என்ன ஓசை?” என்று அவள் அசலையிடம் கேட்டாள். அசலை மறுமொழி சொல்லவில்லை. அவள் விழிகள் நிலைத்திருந்த இடத்தை தாரை நோக்கினாள். அங்கே இளைய யாதவரை கண்டாள். நெஞ்சில் கைவைத்து “ஆ” என மூச்சொலியால் ஏங்கினாள்.

இளைய யாதவர் எவரும் எண்ணியிராத வகையில் இயல்பாக கிழக்குச் சிறுவாயிலினூடாக உள்ளே வந்தார். கைகூப்பியபடி உள்ளே வந்து ஓரிரு நிரைகளைக் கடந்த பின்னரே அவர் வருகையை அவை அறிந்தது. அனைத்து தலைகளும் திரும்பி அவரை பார்த்தன. சிலர் அறியாது எழுந்தனர். கைகூப்பியபடி அவரை நோக்கிச் சென்ற விதுரர் தலைவணங்கினார். அவர் விதுரரிடம் முகம் சிரிப்பில் மலர மென்சொல்லுரைப்பது தெரிந்தது. கைவணங்கி தலைதாழ்த்தியபடி சென்று பீஷ்மரையும் துரோணரையும் கிருபரையும் வணங்கிவிட்டு திருதராஷ்டிரரின் அருகே நின்றார். அவர் இளைய யாதவர் அணுகியதுமே தலைகுனித்திருந்தார். தலைநிமிராமலேயே வலக்கை தூக்கி வாழ்த்தினார்.

முன்நிரையில் அரசர்களுக்குரிய இருக்கையில் அமரும்படி இளைய யாதவரிடம் விதுரர் கோருவது தெரிந்தது. இளைய யாதவர் புன்னகையுடன் அதை மறுத்து தனக்கு பொதுஇருக்கைகளின் நிரையிலேயே தூதர்களுக்குரிய இடம் அளிக்கும்படி கோர விதுரர் தயங்கி மேலும் ஒரு சொல்லெடுக்க அவர் தோளில் தொட்டு புன்னகையுடன் தலையசைத்து இளைய யாதவர் வலியுறுத்தினார். அவரை அழைத்துச் சென்று வணிகர்களுக்கும் குடித்தலைவர்களுக்கும் இடையே இடப்பட்டிருந்த அரசத் தூதர்களுக்கான இருக்கைகளில் ஒன்றில் அமரவைத்தார். யுயுத்ஸு அவரிடம் சென்று தலைவணங்கி முகமனுரைத்தான். அவர் அவனிடம் ஏதோ நகையாட்டுரைக்க அவன் நாணிச் சிரித்தான்.

இளைய யாதவர் அரசு பீடத்தில் அமராது எளிய தூதர்களுக்கான பீடத்தில் அமர்ந்த செய்தி அவை முழுக்க மெல்ல ஓர் அலைபோல பரவிச்செல்வதை கண்களால் பார்க்க

முடிந்தது. அவைக்குள் நுழைந்த கனகர் யுயுத்ஸுவை நோக்கி கைகாட்டினார். யுயுத்ஸு நிமித்திகரிடம் ஆணையிட முதுநிமித்திகர் அரச மேடையிலெழுந்து தன் வெள்ளிக்கோலை மும்முறை சுழற்றினார். அவை ஓசையடங்கி அமைதி கொண்டது. யுயுத்ஸுவும் கனகரும் வெளியே சிற்றடி வைத்து ஓடினர். வாயிலில் மேலாடையை சீரமைத்தபடி விதுரர் நின்றார்.

நிமித்திகர் உரத்த மணிக்குரலில் "அவை வெல்க! விண்சூழ் மூதாதையர் புகழ் கொள்க! வெளியாளும் தெய்வங்கள் நிறைவு கொள்க! இத்தருணம் இதிலமைந்த அனைவரின் உள்ளங்களாலும் முழுமை கொள்க! ஆம், அவ்வாறே ஆகுக!" என்றார். வெள்ளிக்கோலைச் சுழற்றி "அவையோர் அறிக! யயாதியின் குடித்தோன்றல், ஹஸ்தியின் நகர்த்தலைவர், குருவின் குருதிமரபர், பிரதீபரின் சந்தனுவின் விசித்திரவீரியரின் திருதராஷ்டிரரின் மைந்தர், நால்வகைக் குடிகளின் அரசர் துரியோதனர் அவைக்கு எழுந்தருள்கிறார்!" என்று அறிவித்தார். அவையிலமர்ந்த தலைவர்கள் தங்கள் குடிக்குறி கொண்ட கோல்களையும் கைகளையும் தூக்கி "மாமன்னர் துரியோதனர் வாழ்க! குருகுல மூத்தோன் வாழ்க! அஸ்தினபுரி வெல்க!" என வாழ்த்தொலி எழுப்பினர்.

வெளியே கொம்போசையும் மங்கல இசை முழக்கமும் எழுந்தது. அஸ்தினபுரியின் அமுதகலசக் கொடியுடன் முதற்கொடிவீரன் முன்னால் வந்து அவைக்கு முன்னால் அதை நாட்டி வணங்கினான். நிமித்திகன் உள்ளே வந்து மும்முறை கொம்பூதி அஸ்தினபுரியின் அரசர் துரியோதனர் அவை நுழைகை என்று அறிவித்தான். வாழ்த்தும் குரவையொலிகளும் முழங்கிச் சூழ மங்கலத் தாலமேந்தி

சேடியர் நுழைந்து இரு பிரிவுகளாகப் பிரிந்து அகன்றனர். இசைச்சூதர் முழங்கியபடி நுழைந்து அவையமைந்தனர்.

கைகூப்பியபடி அவைநுழைந்த துரியோதனனை அவையின் வலது பக்கத்திலிருந்து பொற்குடங்களில் நீருடன் சென்ற வைதிகர் வேதம் ஓதி வாழ்த்தி நீர்தெளித்து எதிர்கொண்டார்கள். அவர்கள் அரச மேடையேறி கங்கை நீர் தெளித்து தூய்மை செய்த அரியணையில் விதுரர் அழைத்துச்செல்ல துரியோதனன் சென்று அமர்ந்தான். இடப்பக்கச் சிறுவாயிலினூடக சுடர்த்தாலமேந்திய மங்கலச்சேடியர் உள்ளே வர அவர்களுக்குப் பின் பானுமதி கைகூப்பியபடி அரசமேடையை அடைந்து துரியோதனனுக்கருகே அரியணையில் அமர்ந்தாள். அவை வாழ்த்து கூவ, சேடியர் குரவையிட மங்கல இசை அனைத்தையும் ஒன்றெனத் திரட்டி அக்கூடத்தை நிறைத்தது.

அஸ்தினபுரியின் தொல்குடிமூத்தவர்கள் எழுவர் பொற்தாலத்தில் மணிமுடியை கொண்டுவந்து அளிக்க வைதிகர் அதை எடுத்து துரியோதனனுக்கு சூட்டினர். அவையமர்ந்தோர் அரிசியும் மலரும் தூவி வாழ்த்தினர். குடிமூத்தோர் கொண்டுவந்த செங்கோலைப் பெற்று துரியோதனன் அணிக்கோலம் கொண்டமர்ந்தான். வேதமோதி வாழ்த்தி நின்ற வைதிகர்களுக்கு இரு ஏவலர் கொண்டுவந்த தாலத்திலிருந்து பொன்நாணயங்களை இரு கைகளாலும் அள்ளி பணிந்து கொடையளித்தான். அதன்பின்னர் ஐந்து குடிகளிலிருந்தும் அஸ்தினபுரியின் மக்கள் மூவர் மூவராக மேடையேறி அவனிடமிருந்து கொடைகளை பெற்றுக்கொண்டு வாழ்த்தி இறங்கினர். ஏழு புலவர்கள் துரியோதனனைப்பற்றி

அவர்கள் இயற்றிய பொதுச்செயல்களைப் பாடி பரிசில் பெற்றனர்.

கனகர் பொற்தாலத்தில் கொண்டுவந்த மூன்று அரசாணை ஓலைகளைத் தொட்டு அவன் ஏற்க அவர் அவற்றை மேடையில் படித்து அறிவித்தார். அஸ்தினபுரியின் வடகிழக்கு எல்லையில் அமைந்த மூவிழியன் ஆலயத்திற்கு நெய்விளக்கேற்றுவதற்கான நிலக்கொடையும் ஆயர்குடியினருக்கு புதிய புல்வெளிக்காவல் அமைப்பொன்றை உருவாக்குவதற்கான ஒப்புகையும் ஷத்ரியக்குடிகளுக்கு கங்கைக்கரையில் புதிய கொற்றவை ஆலயம் அமைப்பதற்கான ஏவலும் மேடையில் அறிவிக்கப்பட்டன. அவற்றை கோல் தூக்கி "நிலம் பொலிக!! குடி வாழ்க! தேவர்கள் பெருகுக!" என வாழ்த்தி அவை ஏற்றுக்கொண்டது.

தாரை அவை நிகழ்வுகளை மெல்லிய பதற்றத்துடன் நோக்கிக்கொண்டிருந்தாள். இளமையிலிருந்தே அவள் மீண்டும் மீண்டும் பார்த்தவை அவை. மச்சநாட்டிலிருந்து அஸ்தினபுரிக்கு வந்தபோது அங்கிருந்த ஒவ்வொன்றும் அவளுக்கு திகைப்பும் அச்சமும் அளித்தன. நகரின் மாபெரும் கோட்டை அவள் மூதன்னை சொன்ன கதைகளில் வரும் பாதாளத்து நாகமாகிய கத்ருவைப்போல் தோன்றியது. அக்கோட்டைக்குள் நுழையும்போது நாகத்தால் விழுங்கப்படுபவளாகவே உணர்ந்தாள். அஞ்சி மெய்ப்புகொண்டு அருகிருந்த முதிய சேடியின் உடலுடன் ஒட்டி கண்களை மூடி விம்மி அழுதாள்.

அவளை அணைத்து சேடி "அஞ்சற்க அரசி, இப்பெருநகரில் அரசியென தாங்கள் நுழைவது மச்சர் குலத்திற்கு பெருமை. சதுப்புகளில் மீன்வேட்டையாடி முதலையூன் உண்டு வாழும்

நாம் இதோ அஸ்தினபுரியின் உறவினர் என அறிவிக்கப்பட்டிருக்கிறோம். தங்கள் வயிற்றில் பிறக்கும் மைந்தர் ஷத்ரியக் குடியினர் என்று பாரதவர்ஷத்தால் ஏற்கப்படுவார்கள். தாங்கள் நம் குடியின் முகப்புக்கொடி. நாம் வெல்லவிருக்கும் பெருமீனைப் பற்றுவதற்காக வீசிய தூண்டில். கொழுமுனையே தாங்கள். தங்கள் உறுதியாலேயே நம் குலம் எண்ணிய அனைத்தையும் எய்த வேண்டும்" என்றாள்.

அஸ்தினபுரியின் விரிவான சடங்குகளும் முறைமைகளும் அணிச்சொற்களும் அவளுக்கு முற்றிலும் புரியாத நாடகம்போல் இருந்தன. ஒவ்வொரு முறையும் திகைத்துச் சொல்லிழந்து நின்றாள். பின்னர் ஓரக்கண்ணால் நோக்கி பிறர் செய்வதைப்போலவே செய்வதற்கு கற்றுக்கொண்டாள். உடலிலும் நாவிலும் பழக்கமென அவை அமைந்த பின்னர் எண்ணத்திலிருந்தே விலகிச் சென்றன. வெற்றுச்சடங்குகளும், பொருளற்ற சொற்களும் மீள மீள நிகழும் நீண்ட பகல்கள். களைத்து உறங்கிக் கடந்துபோகும் குறுகிய இரவுகள். நாட்களும் மாதங்களும் ஆண்டுகளும் கடந்துசென்றன. அவள் தனக்குரிய சிறிய உலகொன்றை தன் அறைக்குள் உருவாக்கிக்கொண்டாள். சோலைச்சுனையின் மீன்களே அவளை மச்சநாட்டுக்கு கொண்டுசெல்லப் போதுமானவையாக ஆயின.

பிறகெப்போதோ அனைத்துச் சடங்குகளும் பொருள் கொண்டவையாக தெரியத்தொடங்கின. அது எப்போது தொடங்கியது என்று அவளால் உணர முடியவில்லை. ஒவ்வொரு முறையும் அன்னமூட்டும் வற்றாப்பெருநதியின் நீரால் தூய்மைப்படுத்தப்பட்ட அரியணையில் அரசன்

அமர்வதும், குடித்தலைவர்கள் எடுத்து அளித்த பின்னரே மணிமுடி சூடுவதும், கோல்கொண்டு அவை வாழ்த்திய பின்னரே அரசன் என்று ஆகி அவன் அவர்களுக்கு ஆணைகள் இடுவதும், குலக்குறி பொறிக்கப்பட்ட செங்கோலும் இலைகளைக் கோத்து பின்னி அமைக்கப்பட்டவை எனத் தோன்றிய தொன்மையான அஸ்தினபுரியின் மணிமுடியும் அங்கு முன்பெப்போதோ நிகழ்ந்தவற்றின் மீள்நிகழ்வுகள் என்று தோன்றியது.

அங்கு நிகழும் ஒவ்வொன்றும் மூதாதையரால் பேருணர்வுடன் குருதியும் கண்ணீரும் நனைந்து நிகழ்த்தப்பட்டவை. எவரும் எதையும் புதிதாக செய்ய இயலாது. மூதாதையரின் வாழ்வை மீள மீள நடிப்பதன்றி அரசகுடிகளிடம் ஆற்றுவதற்கு பிறிதொன்றுமில்லை. அதை உணர்ந்த உடனே பிற அனைத்தையும் புரிந்துகொண்டோமென்று அவளுக்குத் தோன்றியது. மச்சர் நாட்டு ஒன்பது சிறுகுடிகளின் தலைவராகிய தன் தந்தையும் பாரதவர்ஷத்தின் முதன்மை அரசின் முடிதாங்கி அமர்ந்திருக்கும் துரியோதனனும் வேறுபட்டவர்கள் அல்ல. அரசென்றும் கோலென்றும் நெறி என்றும் அமைவதனைத்தும் ஒன்றே.

அரசுச் சடங்குகள் ஒவ்வொன்றாக நிகழ்ந்து முடிந்தன. விதுரர் அவைமுகப்பில் தோன்றி கையுயர்த்தி “அவை சிறப்படைக! முடிமன்னர் வெல்க!” என்றார். “அஸ்தினபுரிக்கு இன்று ஒரு நன்னாள். அவை மங்கலம் நிறைந்துள்ளது. அஸ்தினபுரியின் அரசர் தன் குடிமூத்தாரின் நெறிநின்று கொடையும் அறமும் ஆற்றி நிறைவுகொண்டமர்ந்திருக்கிறார். இந்தப் பெருநாளில் நம் பேரரசரின் இளையோர் பாண்டுவின்

மைந்தர்கள் தங்கள் தூதரென யாதவகுலத்துப் பெருவீரரும் சாந்தீபனி மெய்மரபின் இன்றைய முதலாசிரியருமான இளைய யாதவரை இங்கு எழுந்தருளி தங்கள் தூதராக சொல்வைக்கும்படி அனுப்பியிருக்கிறார்கள். அவர் அளிக்கும் தூதை இந்த அவைநின்று கேட்க நாம் நல்லூழ் கொண்டுள்ளோம். அவ்வாறே ஆகுக!" என்றார்.

இளைய யாதவர் கைகூப்பியபடி எழுந்தபோது அவை முற்றமைதி கொண்டிருந்தது. "அஸ்தினபுரியின் பிதாமகரையும், ஆசிரியர்களையும், அவையமர்ந்த பேரரசரையும் அரியணை ஏறிய அரசரையும் ஆன்றோர் நிறைந்த தொல்லவையையும் வணங்குகிறேன். மதுவனத்து சூரசேனரின் பெயர்மைந்தனும் யாதவக் குடியினனுமாகிய நான் அஸ்தினபுரியின் பாண்டுவின் மைந்தர் யுதிஷ்டிரரின் அவைத்தூதனாக இங்கு வந்து அவருடைய சொற்களை முன்வைக்க பணிக்கப்பட்டுள்ளேன். என் சொற்கள் கனிந்த நன்னிலத்தில் விழுந்த விதைகள் என்றாகுக! மலரும் கனியும் கொண்டு நூறு மேனி பொலிக! இத்தருணத்தின் தெய்வங்கள் தங்கள் முழு அருளையும் சொரிக! நலம் சூழ்க!" என்று வாழ்த்தினார்.

தாரை அத்தருணத்தின் எடை தாளாமல் பெருமூச்சுவிட்டாள். காலம் நின்றதன் எடை அது. அது பனிமலைகள்போல குளிர்ந்தது. இளைய யாதவர் "அவையீரே, தங்களில் பலர் அறிந்திருப்பீர்கள். அஸ்தினபுரியின் பேரரசர் திருதராஷ்டிரரின் தூதுச் செய்தியுடன் அவருடைய சொல்லணுக்கராகிய சஞ்சயன் சில நாட்களுக்கு முன் உபப்பிலாவ்யத்தை வந்தடைந்தார். அங்கு குடிகளனைவரும் அமர்ந்த பேரவையில் அரசரின் தனிச் செய்தியை அவர் சொல்லில் தான் உரைத்தார்" என்றார். "அரசரின் சொற்கள் இவை. எந்நிலையிலும் எதன்

பொருட்டும் தன் மைந்தரை பாண்டுவின் மைந்தர்கள் கொல்லலாகாது. அதற்கு வழியமைக்குமென்பதனால் அவர்கள் படையெழுச்சியை மறுசொல்லின்றி கைவிடவேண்டும்."

"ஆன்றோரே, அஸ்தினபுரியின் அரசர் என்றல்ல, மைந்தரைப் பெற்ற தந்தையென்று நின்று அச்சொல்லை பேரரசர் முன்வைத்தார். பாண்டுவின் மைந்தரின் முதற்றாதையென நின்று அவர் அக்கோரிக்கையை ஆணையென்றும் மன்றாட்டென்றும் முன்வைத்திருந்தார். அவையிலெழுந்து அதை சஞ்சயன் உரைத்தபோது பாண்டவ முதல்வராகிய யுதிஷ்டிரர் விழிநீர்மல்கி தந்தையின் ஆணை தலைமேற்கொள்ளப்பட்டது, மறுசொல்லோ மறுஎண்ணமோ எனக்கில்லை, எந்நிலையிலும் பாண்டவர்கள் கௌரவர்களுக்கெதிராக படைமுகம் கொள்ளமாட்டார்கள் என்றார். பாண்டவர் தரப்பிலிருந்து படையெழுச்சி நிகழாதென்றும் எப்படைக்கலத்தாலும் எங்கும் பாண்டவர்கள் கையால் கௌரவர்கள் தாக்கப்பட மாட்டார்கள் என்றும் ஆணையுரைத்தார். சான்றோரே, அவ்வுறுதியை இந்த அவையில் மீண்டும் உரைக்கவே நான் வந்துள்ளேன்."

இளைய யாதவர் கைகூப்பியபோது அவையெங்கும் பரவிய மெல்லிய முழக்கத்தை தாரை கேட்டாள். அது வாய்களோ மூக்குகளோ எழுப்பியதல்ல, உள்ளம் நேரடியாக ஒலித்தது என்று தோன்றியது. திருதராஷ்டிரர் கைகூப்புவதுபோல் விரல்களைக் கோட்டி அதன்மேல் தன் முகத்தை அமைத்து தலைகுனிந்து அமர்ந்திருந்தார். அவருடைய பெரிய தோள்களில் தசைகள் நெளிந்துகொண்டிருந்தன. பீஷ்மர் எச்சொல்லையும் கேளாதவர்போல் வேறெங்கோ விழிநட்டு

அமர்ந்திருக்க துரோணர் குனிந்து கிருபரிடம் எதையோ சொன்னார். கிருபர் தலையசைத்தார்.

மேலும் எதையோ எதிர்பார்ப்பவன்போல இளைய யாதவரையே நோக்கிக்கொண்டிருந்தான் துரியோதனன். அவனருகே பானுமதி வெண்சுண்ணத்தாலான பாவை என வெறும்முகம் கொண்டு அமர்ந்திருந்தாள். அவன் இளையோர் மலைத்த விழிகளுடன் அவைநிறைத்திருந்தனர். சகுனி விழிகளைத் தாழ்த்தி தாடியை நீவிக்கொண்டிருக்க கணிகர் தான் அமர்ந்திருந்த சேக்கையிலிருந்த மரவுரியின் ஒரு நூலை மெல்ல பிரித்து எடுத்துக்கொண்டிருந்தார். தாரை தன் சூழலை உணர்ந்து அரசியரை நோக்கினாள். காந்தாரியின் நீலக் கண்பட்டை நனைந்து கன்னங்களில் விழிநீர் வழிந்தது. அசலை உதடுகளை உள்மடித்திருந்தாள். ஆனால் பிற அரசியர் அனைவரும் என்ன நடக்கிறதென்றே தெரியாமல் விழியொழிந்த தோற்றம் கொண்டிருந்தனர்.

“இந்த அவையில் பாண்டவரின் தரப்பில் நின்று நான் அறிவிப்பது ஒன்றே, போர் அகன்றுவிட்டது” என்று இளைய யாதவர் சொன்னார். “பாண்டவர்கள் இனி அஸ்தினபுரியிடம் கோருவதென ஏதுமில்லை. மண்ணோ, முடியோ, பிற உரிமைகளோ அவர்களுக்குத் தேவையில்லை. தங்கள் ஆற்றலால் தங்கள் ஊழின் வழியில் தொடர்வதென அவர்கள் முடிவெடுத்திருக்கிறார்கள். இந்த அவையில் பிதாமகரையும் ஆசிரியர்களையும் பேரரசரையும் பேரரசியையும் தன் இளையோனாகிய அஸ்தினபுரியின் அரசரையும் உடன்குருதியினர் அனைவரையும் வணங்கி, வாழ்த்துரைத்து யுதிஷ்டிரர் அனைத்து நலமும் சூழ்க என்கிறார். அவர் சொல் இந்த அவையில் திகழ்க!” என்றார். அவை மெல்ல

சொல்லடங்கியது. இளைய யாதவர் மேலும் உரைக்கப்போகும் ஒன்றுக்காக செவிகூர்ந்தது.

“அவையோரே, இதனால் விளைவதென்ன என்று நன்கறிந்தே யுதிஷ்டிரர் இதை இயற்றியிருக்கிறார் என்றறிக! தந்தையென நின்று திருதராஷ்டிரர் சொன்னவற்றுக்கு தலைகொடுத்து இம்முடிவை அவர் எடுத்திருக்கிறார். ஆனால் செயல்களே வரலாறு, ஏன்களும் எவ்வாறுகளும் அல்ல. இன்னும் சிலநாட்களில் அவர் தன் முடியையும் மண்ணையும் துறந்து அகன்றது மட்டுமே சொல்லில் நின்றிருக்கும். அது அச்சமுடைமை என்றும் ஆண்மையின்மை என்றும்தான் விளக்கப்படும்” என இளைய யாதவர் சொன்னார்.

“விட்டுச்செல்வது எளிதல்ல. அவருடன் இணைந்து படைமுகம் வரை வந்த அரசர்களை கைவிடுவதுதான் அது. அவர்கள் இப்பக்கம் உங்களுடன் இணைந்த அரசர்களால் இனி வேட்டையாடப்படுவார்கள், கொன்று உண்ணப்படுவார்கள். அறிக, யுதிஷ்டிரர் அவர்களுக்குச் செய்தது பெரும் அறமின்மை. தந்தைசொல்லின் பலிபீடத்தில் தோழர்களை குருதியளிக்கிறார். உளமுவந்து அவர் அதை செய்ய முடியாது. அவர்கள் ஒவ்வொருவரும் அவர் விழிமுன் எழுந்து மெய்யுருக சொல்நெகிழ நெறியா என்று கேட்பார்கள். அவர்களின் நோக்குக்கு முன் அனல்முன் என்பிலி என சுருண்டுதுடிக்காமல் அவர் இனி எஞ்சிய வாழ்நாளை கடக்க முடியாது.”

இளைய யாதவரின் சொற்கள் அவையெங்கும் உணர்வலை ஒன்றை பரவவிடுவதை தாரை கண்டாள். கைகளை மார்பில் கட்டி பார்வையை மறுபக்கமிருந்த தூணொன்றில் நிலைக்கவிட்டு முற்றிலும் உணர்வற்ற கற்சிலை முகத்துடன் துரியோதனன் அமர்ந்திருந்தான். “அவருக்கிருக்கும் ஆறுதல்

ஒன்றே, தோழரைக் கைவிட்டு அவர் எதையும் ஈட்டவில்லை என்பது. ஐவரும் தங்கள் அரசியரையும் மைந்தரையும் அன்னையையும் அழைத்துக்கொண்டு அறியா நிலம் நோக்கி செல்லவேண்டும். மலைவேடர்களாகவோ மச்சர்களாகவோ வாழவேண்டும். இனி அரண்மனையோ படைத்துணையோ குடியோ கோட்டையோ இல்லை. பாண்டுவின் பெயரன்றி அவர்கள் கொண்டுசெல்வதேதும் இல்லை. குடியிலிகளாக அவர்கள் வாழ்ந்து மடியவேண்டும்."

"மேலும் பல தலைமுறைகளுக்குப் பின் அவர்களுக்குரிய குடி உருவாகிவரக்கூடும். அதுவரை பாண்டுவின் பெயரை மலைவேடர்மைந்தர்களே சூடியிருப்பர். இங்கு கொடியும் கோட்டையுமாக சொல்கொண்டு தார்த்தராஷ்டிரர்கள் அமர்ந்திருக்கையில் பாண்டவர்கள் அங்கே அவ்வண்ணம் ஆகவேண்டுமென்பதே தெய்வங்கள் வகுக்க முதற்றாதை சொல்லில் எழுந்தது என்றால் அதுவே நிகழ்க!" இளைய யாதவர் தலைவணங்கி அமர்ந்ததும் அவையில் சொல் என ஏதும் எழவில்லை. ஆனால் தொண்டை தீட்டும் ஒலியும் மூச்சொலிகளும் உடலசைவில் அணிகள் எழுப்பும் ஓசைகளும் கேட்டுக்கொண்டிருந்தன.

அனைத்து விழிகளும் துரியோதனனையே எதிர்பார்த்திருப்பதை தாரை கண்டாள். அசலை மெல்ல அசைந்து நீள்மூச்செறிந்து தலைசரித்து தாரையின் காதில் "அவர் ஒரு சொல்லும் உரைக்கப்போவதில்லை" என்று சொன்னாள். தாரை அந்த அமைதியின் உச்சநிலையில் எரிபட்ட கந்தகக்குவை என பெருங்குரலுடன் துரியோதனன் எழக்கூடும் என எதிர்பார்த்தாள். இரு கைகளாலும் தொடைகளையும் தோள்களையும் தட்டிக்கொண்டு அரசனென்றும்

தொல்குடியினனென்றும் தான் சூடிய அடையாளங்கள் அனைத்தையும் வீசி வெறும் மல்லனாக அவன் எழும் தருணங்கள் பலவற்றை அவள் முன்னரே கண்டிருந்தாள்.

அவள் துரியோதனனையே நோக்கிக்கொண்டிருந்தாள். அவன் முற்றிலும் அசைவற்றிருந்தான், வேறு ஒரு காலத்திற்கு சென்றுவிட்டதுபோல. அவன் நீண்ட மூக்கு, கருங்கல்லில் கலிங்கச் சிற்பியால் செதுக்கப்பட்டவை போன்ற வாயும் தாடையும், நேர்கொண்ட உடல், பெருந்தோள்கள் என அவள் நோக்கு அலைந்தது. அவரை எப்போதும் பார்த்துக்கொண்டே இருக்கிறோம் என அவள் உணர்ந்தாள். விழிகளை திருப்பிக்கொண்டு பெருமூச்சுவிட்டாள். இக்கணம் அவர் எழுந்து அரசுரிமையில் பாதியை தன் உடன்குருதியினருக்கு அளித்து அறத்தாறு நிற்பதாக அறிவித்தால் மகிழ்வோமா? அவளுக்கு அவ்வினாவே பொருளற்றதாகத் தோன்றியது. ஆனால் அவ்வினா ஏன் எழுந்தது?

அதைவிட தன் உள்ளத்தில் அதற்குரிய விடை என என்ன எழுகிறதென்று நோக்கலாம். அவள் சலிப்புடன் தலையசைத்தாள். எதிரில் அமர்ந்திருக்கும் கௌரவர்களை ஒவ்வொருவராக நோக்கினாள். துச்சலன், துர்மதன், சலன், சகன், துர்மர்ஷணன், துர்முகன், சத்வன், சுலோசனன், சித்ரன், சாருசித்ரன், ஊர்ணநாபன், நந்தன், உபநந்தன், சித்ரபாணன், சுபாகு... அனைவரும் அவரே என்று முதல்நோக்கிற்கு தோன்றினர். இயல்பாக விழிதூக்கியபோது அவையமர்ந்த அனைவருமே அவர் முகம்கொண்டிருப்பதாகத் தோன்றி திகைப்பு எழுந்தது.

ஆனால் அவர்கள் அவர் அல்ல. விழிநட்டு நோக்க நோக்க ஒவ்வொருவரும் அவரிடமிருந்து கூரிய வேறுபாடு கொண்டனர். அமர்வின் கோணலால், முகத்தின் பிழையால்,

விழிகளின் மங்கலால், தோள்களின் வடிவால், நெஞ்சின் விரிவால், விழிதொட்டறிய முடியாத ஏதேதோ கூறுகளால் அவர்கள் அவர் அல்லாதாயினர். அவர்களினூடாகச் சென்று அவர் தன் முழுமையை அடைந்துவிட்டிருக்கிறார் என்பதுபோல. ஒவ்வொருவரும் அவரே, ஆனால் ஒவ்வொருவரையும் ஒவ்வொருவகையில் உதறிக் கடந்துசென்றே அவர் அவ்வாறு ஆகியிருக்கிறார்.

மீண்டும் அவள் துரியோதனனை நோக்கினாள். சிம்மங்களும் வேங்கைகளும் கொள்ளும் முற்றமைதி. தனக்கு அப்பால் உலகே இல்லை என்பதுபோல் முற்றிலும் தன்னுடலுக்குள்ளேயே அமைதல். முற்ற நிறைந்து ஒரு துளிசொட்டா கலம்போல. குழல்கற்றைகள், நேர்நெற்றி, கூர்மீசை, அழுந்திய உதடுகள், குமிழ்ந்த முகவாய், மல்லர்களுக்குரிய காளைக்கழுத்து. முற்றிலும் பிழையின்மை கூடிய பேருடல். பிழைக்காகவே அவரை நோக்கும் விழிகளெல்லாம் தவித்துத் தேடுகின்றன. பிழையினூடாக அவரை மானுடனாக்கிக்கொள்ள விழைகின்றன. நிறைவு கண்டு திகைத்துச் சோர்ந்து விலகிக்கொள்கின்றன. அஞ்சி அகல்கின்றன. பின்னர் வெறுக்கத் தொடங்குகின்றன.

அங்கே அமர்ந்திருப்பவர்களில் எவரேனும் துரியோதனனை நோக்குகிறார்களா? அவள் விழிதிருப்பி நோக்கியபோது அனைவருமே அவரையும் இளைய யாதவரையும் மட்டுமே நோக்கிக்கொண்டிருப்பதை கண்டாள். விழிகள் துலாமுள் என அலைபாய்ந்துகொண்டிருந்தன. அவள் இளைய யாதவரை கண்டாள். சற்றே சரிந்த துலாத்தட்டு அளிக்கும் பொறுமையின்மையுடன் அன்றி அவரை பார்க்க

முடிவதில்லை. படையாழியும் வேய்குழலும் நிகர்கொள்ளலாகுமா? குழல்சூடிய அப்பீலி ஒரு துலாமுள்.

அவள் திரும்பி காந்தாரியை பார்த்தாள். எவரும் எதுவும் சொல்லாமல் பொழுது கடந்தது. ஒரு கணத்தில் அவ்வெண்ணம் அவளுக்கு எழுந்தது. எவர் என்ன சொல்லமுடியும்? மேலும் சற்று முன்னகர்ந்தபோது அவள் உள்ளம் திகைத்து அசைவிழந்தது. என்ன சொல்லமுடியும்? ஆம், யுதிஷ்டிரரின் துறப்பை ஏற்கிறோம் என்றா? போர் நின்றுவிட்டதென கொண்டாடுவதா?

அப்போது செய்வதற்கு எஞ்சியது ஒன்றே. அவையெழுந்து ஆம், நிகராக நானும் முடி துறக்கிறேன் என்று சொல்லுதல். தந்தை அளிக்க பெற்றுக்கொள்கிறேன் என்று அறிவித்தல். அல்லது அனைத்தையும் கைவிட்டு மூத்தவரே என யுதிஷ்டிரரை அழைத்து ஏற்றுக்கொள்ளுதல். ஒருகணத்தில் அத்தனை முடிச்சுகளும் முற்றவிழலாம், அல்லது முற்றிலும் அசைவற்று முடிவிலி வரை தொடரலாம். பிறிதொன்றில்லை. அவளால் அமர்ந்திருக்க இயலவில்லை. எழுந்து ஓடிவிடவேண்டும் போலிருந்தது. அசலையின் கையை தொட்டாள். ஆனால் சொல்லெழவில்லை. அசலை அத்தொடுகையால் மெல்ல விதிர்த்தாள்.

அவள் இளைய யாதவரின் முகத்தை நோக்கினாள். அவர் கைகளை மார்பில் கட்டியபடி அங்கிலாத எதையோ நோக்கி புன்னகைப்பவர்போல அமர்ந்திருந்தார். அவள் முந்தையநாள் அறிந்த தந்தை வடிவம் அல்ல அது எனத் தோன்றியது. திகைப்புடன் அவர் குழலில் சூடிய பீலியை நோக்கினாள். அதுவும் அவளுக்கு நோக்களிக்கவில்லை. படபடக்கும் உள்ளத்துடன் அவள் அவர் புன்னகையை, ஒற்றைக்கல்லாரம்

துவண்ட மார்பை நோக்கினாள். பின்னர் காலடிகளுக்கு நோக்கு தழைந்தாள். அறிந்தவை, அணுக்கமானவை. அவள் உளக்கொந்தளிப்பு அடங்கியது. அவள் அவர் கால்களையே நோக்கிக்கொண்டிருந்தாள்.

# குருதிச்சாரல் - 29

**பகுதி நான்கு : ஒளிர்பரல் – 4**

கலையாமல் காலமென நீடிக்கும் என எண்ணமூட்டிய அந்த அமைதி ஏதோ ஒரு கணத்தில் இதோ உடையப்போகிறதென்று தோன்றியது. எவர் எழவிருக்கிறார்கள்? திருதராஷ்டிரர், சகுனி, கணிகர், பீஷ்மர்? அல்லது எவரென்றே அறியாத ஒரு குடித்தலைவர்? அல்லது அவரே அதை உடைக்கப்போகிறார் போலும். மறுசொல் என எழக்கூடுவது எது? ஏற்புக்கும் மறுப்புக்கும் அப்பாற்பட்ட இந்தச் செயலின்மையிலிருந்து முளைப்பது. பெரும்பாறைகளை விலக்கியெழும் சிறு ஆலமரத்துமுளை.

விகர்ணன் எழுவதைக் கண்டதும் தாரை அசலையின் கைகளை பற்றினாள். அசலை “நான் இதைத்தான் எதிர்பார்த்தேன்” என்றாள். “ஆம், அவர் ஆற்றவேண்டிய பணி இது” என்றாள் தாரை. ஆனால் அத்தருணத்தில் அவன் கூறவிருக்கும் வழக்கமான நெறிச்சொற்கள் மேலும் கேலிக்கிடமாகக்கூடும். அவை நகைப்பினூடாகவே அவற்றை கடந்துசெல்வதை அவள் முன்னரே கண்டாள். விகர்ணன் உரத்த குரலில் “தந்தையே, இந்த அவையில் எழுந்து நான்

கேட்க விரும்பும் வினா ஒன்றே” என்றான். திருதராஷ்டிரர் அவன் சொற்களுக்காக செவிதிருப்பினார்.

“உங்கள் உள்ளத்தில் மைந்தரென முதன்மை கொண்டிருப்பவர்கள் யார்? கௌரவர்களாகிய நாங்களா, அன்றி உங்கள் இளையோன் மைந்தர்களா?” என்றான் விகர்ணன். “உங்கள் குருதியின் அடையாளத்தை நீங்கள் எங்களுக்கு அளித்திருக்கிறீர்களா, அவர்களுக்கா?” என்று தொடர்ந்தான். திருதராஷ்டிரர் தலைகுனிய குழல்கற்றைகள் முகத்தில் படிந்து ஆடின. விகர்ணனின் சொற்கள் அவர்மேல் இரும்புருளைகள்போல் விழுவதை அவர் தசைகள் இறுகி நெகிழும் அசைவுகள் காட்டின. “கூறுக, தந்தையே! எங்களிடம் முன்வைக்காத அம்மன்றாட்டு எப்படி பாண்டவர்களுக்கு சென்றது? எங்களை உதறி நீங்கள் உங்கள் குருதியின் மூத்த மைந்தரை நோக்கி கைநீட்டி இரந்தது ஏன்?”

“தாங்கள் அதை மந்தணமாக அனுப்பியிருக்கலாம், ஆனால் இதோ இந்த அவையில் அது முன்வைக்கப்பட்டுவிட்டது. என்றும் இனி சூதர் நாவில் அது தவழும். தன் குருதியில் பிறந்த மைந்தர்களை நீங்கள் நம்பவில்லை என்றும் அவர்கள் உங்கள் சொல்லுக்கு பணிவார்கள் என்று எதிர்பார்க்கவில்லை என்றும் நாடறிந்துவிட்டது. முன்னரே இந்நகர் மக்கள் நம்புவதொன்றுண்டு, உங்கள் இளையோன் மைந்தர்களே அறத்தில் அமைந்தவர்கள், அவர்களில் மூத்தவரே பேரறத்தான், வெறும் குருதித்தொடர்பால் மட்டுமே என் மூத்தவரும் நாங்களும் இங்கே அரசர்கள் என அமர்ந்திருக்கிறோம் என்று. தங்கள் செயல் மூலம் அதை உறுதி செய்துவிட்டீர்கள்.”

திருதராஷ்டிரர் இல்லை இல்லை என்பதுபோல் தலையசைத்தார். இருமுறை வாயசைய தொண்டையை

கமறினார். பின்னர் விழியற்றவர்களுக்குரிய முறையில் வாய் திறந்து தலையை உருட்டினார். அவருடைய தாடை இறுகியசைந்தது. கழுத்தில் குரல்வளை ஏறியமைந்தது. அவர் அருகே நின்ற சஞ்சயன் செவிகளை அவர் உதடுக்காக சாய்த்தான். "தங்கள் சொல் எங்களால் தூக்கிவீசப்படுமென்று தாங்கள் அஞ்சினீர்கள் என்றால் அச்சொல்லை பாண்டவர்களிடம் கொண்டுசென்றிருக்கக் கூடாது, தந்தையே" என்றான் விகர்ணன். "தூக்கிவீசியவர் நீங்கள், எங்களையும் எங்கள் மூத்தவரையும். இந்த அவையில் இதை மட்டுமே உங்களிடம் சொல்ல விழைகிறேன், கௌரவர் நூற்றுவருக்கும் தாங்கள் இழைத்த பேரிழிவு இது" என்றான் விகர்ணன்.

அவையில் எவரும் விகர்ணனை தடுக்க முயலவில்லை. ஏதேனும் நிகழட்டும், சொல்கிளம்பி அந்த அமைதி கலையட்டுமென அவர்கள் எதிர்பார்த்தனர். விகர்ணன் திரும்பி காந்தாரியிடம் "அன்னையே, இன்று தாங்கள் அவை வந்திருக்கிறீர்கள். தாங்கள் கூறுக, இங்கிருக்கும் இவ்விழியிழந்தவரின் வெண்துளியில்தான் நாங்கள் பிறந்தோமா? அவர் எங்களை நம்பவில்லையென்றால் நாங்கள் உங்கள் கற்பை நம்புவதெப்படி?" என்றான். தாரை அறியாது தலையில் கைவைத்தாள். "சொல் மிஞ்சிவிட்டார்" என்றாள் அசலை. "ஆனால் ஏளனம் எழாதபடி கடந்துசென்றுவிட்டார்."

தாரையின் கைகளும் உடலும் நடுங்கத் தொடங்கின. அஸ்தினபுரியின் அவையெங்கும் பதற்றம் நிறைந்த குரல்கள் பரவின. துச்சாதனன் இரு கைகளையும் விரித்தபடி "அறிவிலாக் கீழ்மகனே!" என்று கூவியபடி முன்னகர்ந்தான். துர்மதனும் துச்சலனும் சகனும் நந்தனும் உபநந்தனும் எழுந்தனர். "என்னை கொல்லலாம். ஆனால் நான் கேட்ட

வினாவை என் குருதியால் நீங்கள் உறுதிசெய்வீர்கள்” என்றான் விகர்ணன். துச்சாதனன் இரு கைகளையும் பேரோசையுடன் சேர்த்து அறைந்தபடி உடலுக்குள் இருந்து பேருருக்கொண்ட பிறிதொன்று தோல்கிழித்து எழ வெம்புவதுபோல தசைகள் அலைபாய நின்றான்.

“என் உள்ளத்தில் எழுந்த எண்ணம் இது. தன் துணைவியின் நெறிமீது இம்முதியவருக்கு நம்பிக்கை இருந்திருந்தால் ஒற்றைச்சொல்லில் தன் மைந்தனுக்கு ஆணையிட்டிருக்கவேண்டும்” என்ற விகர்ணன் திரும்பி தன் உடன்பிறந்தவர்களை நோக்கி “மீண்டும் உரைக்கிறேன், நீங்கள் என்னை கொல்லலாம். இந்த அவையிலேயே குருதி சிந்தி நான் மடிகிறேன். அதனூடாக என் கேள்வியை குருதியால் முழுக்காட்டுகிறேன். அது தெய்வமாகுக!” என்றான். கௌரவர்கள் அனைவரும் எழுந்து கைகளை வீசி கூச்சலிட்டனர். துச்சலன் “அக்கீழ்மகனைக் கொன்று குருதி கொள்க!” என்று கூவினான்.

துரியோதனன் மெல்லிய கையசைவால் துச்சாதனனை தடுத்தான். பற்களை நெறித்து இரு பெருங்கைகளையும் விரித்தபடி விகர்ணனை நோக்கி ஓர் அடியெடுத்து வைத்த துச்சாதனன் பற்றி எரிபவன்போல் நின்று பின்னர் தன்னை அடக்கி நீள்மூச்சுவிட்டு தளர்ந்து தலையை அசைத்தபடி திரும்பினான். கௌரவர்கள் ஒருவரை ஒருவர் நோக்கியபடி முனகியும் முரண்டும் மெல்ல அமைந்தனர். துச்சாதனன் அவை மூலையை அடைந்து இரு விரல்களால் கண்களை அழுத்திக்கொண்டு தலைகுனிந்து நின்றான்.

விகர்ணன் மேலும் குரலெழுப்பினான். “கூறுக அன்னையே, உங்கள் குருதியினர் என்றால் மறுசொல்லின்றி நாங்கள்

கட்டுப்படவேண்டிய மனிதர் யார்? இவரல்ல என்றால் பிறிதெவர்?” துரோணர் பற்களைக் கடித்தபடி “மூடா, நீ கூறுவன கீழ்மையின் சொற்கள். அதை நீ உணரவில்லையா, அறிவிலி?” என்றார். “இல்லை, எந்தை இயற்றிய அச்செய்கையில் உள்ள கீழ்மையை சொல்வடிவாக்கியதொன்றே நான் செய்தது. அது கீழ்மை அல்லவென்றால் அவரோ அன்னையோ அவையெழுந்து சொல்லட்டும் எவர் எங்கள் தந்தை என. எவர் சொல்லுக்கு நாங்கள் மாற்றிலாது கட்டுப்பட்டவர்கள் என்று” என்றான்.

தன் இடையிலிருந்து வாளை உருவி நீட்டி “இந்த அவையில் என் சொற்களுக்கு முழுப் பொறுப்பேற்று நான் அறிவிக்கிறேன். அன்னை கூறட்டும், இவர் எங்கள் தந்தையென்று. ஆம் என்று மூத்தவர் சொல்லட்டும். தந்தையென்று நின்று பாண்டவருக்கு முன் அவர் வைத்த அதே ஆணையை அவர் எம்மிடம் இங்கு உரைக்கட்டும். அவரை தந்தையென ஏற்கும் கௌரவர் நூற்றுவரும் அதை தலைமேல் கொள்ளட்டும். அப்போதுதான் ஐயமின்றி நிறுவப்படுகிறது என் அன்னையின் கற்பும், தந்தையின் மாண்பும். நான் உரைத்த சொற்கள் அப்போதுதான் கீழ்மையென்றாகும். அக்கணமே இந்த வாளால் என் கழுத்தை அறுத்து இவ்வவையில் விழுகிறேன். ஆம், என் மூதாதையர் மேல், குடித்தெய்வங்கள் மேல், அவை நிறைந்திருக்கும் என் குலத்தின் மேல் ஆணை!” என்றபின் பின்னடைந்து விழுபவன்போல பீடத்தில் சரிந்து தலையை இரு கைகளாலும் பற்றிக்கொண்டு குனிந்து அமர்ந்தான் விகர்ணன்.

அவை மீண்டும் தளர்ந்தது. காந்தாரி தன் சேடியிடம் மெல்லிய குரலில் எதையோ உரைப்பதை தாரை கண்டாள். சேடி அவைமுகப்பில் ஏறி கைகூப்ப அனைவரும் அவளை

நோக்கினர். அவள் உரத்த குரலில் “பேரரசி காந்தாரி தன் சொற்களை அவையில் உரைக்க என்னை பணித்திருக்கிறார். இவை அவருடைய சொற்கள். இங்கு இளவரசர் விகர்ணர் கேட்ட வினா தன் அன்னையை நோக்கி அல்ல, தன் தந்தையை நோக்கியே. அவையிலெழுந்து மறுமொழி உரைக்கவேண்டியவர் அவர் மட்டுமே. அவர் உரைக்கட்டும், மைந்தர் மறுமொழி கூறட்டும். அவர்கள் இருவரும் இணைந்து முடிவெடுக்கட்டும் அன்னை கற்புடையவளா அல்லவா என்று” என்றாள்.

“ஏனென்றால் காந்தாரத்துப் பெண் தன் கற்பை எந்த ஆணிடமும் நிறுவவேண்டியதில்லை, தந்தையிடமோ கணவரிடமோ மைந்தரிடமோ குடியிடமோ அவையிடமோ. தேவர்களும் முதல்மூவரும்கூட அவளிடம் அதை உசாவ இயலாது. தன் மூதன்னையருக்கும் அனலன்னை ஸ்வாகைக்கும் பாலைநிலத்து அன்னை தெய்வங்களாகிய மரு, இருணை, ஃபூர்ணி, காமலை, கிலை, ஆரண்யை ஆகியோருக்கும் மட்டுமே அவள் சொல்லளிக்கக் கடமைப்பட்டவள். இது அன்னையர் அமரா அவை. எனவே இனி இந்த அவையில் அரசி என்னும் சொல்லே எழலாகாது” என்று சொல்லி வணங்கி பின்னகர்ந்தாள்.

திருதராஷ்டிரர் காற்றாடியில் பொருத்தப்பட்ட அரவைக்கல் என தலையை விரைந்து சுழற்றிக்கொண்டிருந்தார். கைகள் காற்றில் துழாவுவதுபோல் அசைந்தன. சஞ்சயன் அவரை கட்டுப்படுத்துவான் என அவையோர் எண்ணி அவனை நோக்க அவன் வெற்றுவிழிகளுடன் அமர்ந்திருந்தான். பின்னர் திருதராஷ்டிரர் மெல்ல அடங்கினார். நீண்ட பெருமூச்சுகளுடன் தோள் தளர்ந்தார். கைகளால் இருக்கையின் பிடிகளை

நெருடிக்கொண்டிருந்தார். அனைவரும் சகுனியையும் கணிகரையும் நோக்கி திரும்பியபோது பேரொலியுடன் கைகளை பீடத்தின் பிடிமேல் அறைந்தபடி எழுந்தார். அவ்விசையில் பெரிய பீடம் பின்னால் நகர்ந்து ஓசையுடன் மரத்தரையில் அறைபட்டு விழுந்தது.

சஞ்சயன் எழுந்து “அரசே!” என்று அவர் கையைத் தொட அவன் கையைத் தட்டி விலக்கிவிட்டு “தெய்வங்கள் அறிக! அவை அறிக! இப்புவியில் நான் கொண்ட நற்பேறென்பது காந்தாரத்து அரசியரை அடைந்தது. பாலையில் மலர்ந்த பனைகள் என்னை பெருந்தந்தையென்றாக்கின. என் முதற்கடன் அவர்களுக்கே. அவர்களில் முதல்விக்கே இப்புவியில் நான் முதலில் தலையளிப்பேன். தெய்வங்களுக்கு அல்ல, மூதாதையருக்கு அல்ல, பிதாமகருக்கும் ஆசிரியருக்கும் மைந்தருக்கும் அல்ல. குடிக்கும் கோலுக்கும் அல்ல. இப்புவியில் என்னையாள்வது அவளே. விசித்திரவீரியனின் மைந்தனாகிய நான் அவளுக்கு அடிமைசெய்பவன் என்றே என் கொடிவழிகள் அறிக! இங்கிருந்து செல்வது வரை என்னுடன் அவளிருப்பாளென்றால் மூன்றுதெய்வங்களிடமும் பிறிதொன்று வேண்டேன்” என்றார்.

அவர் கண்களிலிருந்து கண்ணீர் வழியத்தொடங்கியது. உதடுகளை அழுத்தி நெஞ்சிலிருந்து கிளம்பிய விம்மல்களை வெல்ல முயன்றார். அவரை மீறி அவை கொதிகலக் குமிழிகளென உடைந்து தெறித்தன. இரு கைகளையும் நெஞ்சில் வைத்து அழுத்தி இருமுறை விக்கலோசை எழுப்பினார். விதுரர் பதறியவராக அவரை நோக்கி செல்ல சஞ்சயன் தேவையில்லை என கைகாட்டினான். கண்களை அழுந்தத் துடைத்தபடி நிமிர்ந்து “என் மைந்தன் விகர்ணன் கோரியது சரியானதே. நான் என் மன்றாட்டை என் நேர்க்குருதி

மைந்தரிடமே முதலில் முன்வைத்திருக்கவேண்டும். அது பிழையே, அதை உணர்கிறேன்” என்றார்.

“இதுவரை அரசன் என ஆணையிட்டிருக்கிறேன். தந்தை என அறிவுறுத்தியுமிருக்கிறேன். முதுதந்தையின் இறுதிக் கோரிக்கை என அவர்களிடம் சொன்னவற்றை இவர்களிடம் கேட்டதில்லை. இது தருணமென்றாகுக! இந்த அவையில் அதை முன்வைக்கிறேன். பிதாமகரும் ஆசிரியரும் அவையோரும் கேட்கட்டும். என் மைந்தன் துரியோதனனிடமும் அவன் இளையோரிடமும் நான் கைநீட்டி இரந்து நிற்கிறேன். அறம் வழுவற்க! குலநெறி பிறழாதொழிக! பாண்டவருக்குரியவை இந்திரப்பிரஸ்தமும், இந்நிலத்தில் மேற்கும், கருவூலத்தில் பாதியும். அதை அவர்களுக்கு அளியுங்கள்.”

காற்றில் மழையெச்சம் அகல்வதுபோல சொற்களால் துயர் விலக அவர் குரல் எழுந்தது. “இதுவே அத்தருணம். இதோ, அவர்கள் என் சொல் கேட்டு போரொழிந்துள்ளனர். இப்போது இரு கை விரித்து நீங்கள் சென்று அவர்களை தழுவிக்கொண்டால் அதுவே அரசாண்மை எனக் கருதப்படும். அரசனுக்குரிய பெருங்குணம் வீரம். அதைவிட மேலானது கொடை. அதைவிடச் சிறந்தது பணிவு. மைந்தர்களே, அனைத்தையும்விட மேலானது பேரியல்பு. இத்தருணத்தில் சிறுமையை உதறி நீங்கள் எழுந்தால் பாரதவர்ஷமே உங்களை போற்றும். நீங்கள் இரு தரப்பும் இணைந்தால் இங்குள்ள அரசரெல்லாம் உங்கள் அடிபணிவார்கள். உங்கள் கொடிவழிகள் இந்நிலத்தை நிறைத்து இங்கே செழிக்கும். தெய்வமென எழுந்தருளிய யாதவர் அளித்த வழி இது எனக் கொள்க!”

பெருமூச்சு எழ அவர் சொல்நின்றார். இருமுறை பேச்செடுக்க முயன்றாலும் மூச்சுச்செறிவு சொற்களை தடுத்தது. மீண்டும் அவர் பேசத்தொடங்கியபோது குரல் தழைந்திருந்தது. "இந்த அவையில் நான் உங்கள் உச்சிமுகர்ந்து கோருகிறேன். அடிபணிகிறேன், மைந்தரே. உங்கள் பாதங்கள் என் நெஞ்சிலும் தலையிலும் ஆடியவை என்பதனால் அதில் பிழையில்லை. தொழுது மன்றாடுகிறேன். இப்பிறவியில் இனி நான் விழைவதற்கொன்றும் இல்லை. மண்மறைந்தபின் மைந்தர் அளிக்கும் அன்னமும் நீருமே தந்தையருக்கு அவர்கள் ஆற்றும் முதற்கடன் என்பர். இது நான் வாழ்கையில் எனக்களிக்கும் அன்னமும் நீருமெனக் கொள்க! இதை மட்டும் எனக்களியுங்கள்."

சொற்களால் உளமழிய அவர் மீண்டும் விம்மி அழத்தொடங்கினார். விம்மல்களும் கேவல்களும் எழ நெஞ்சில் கைவைத்து நின்று தேம்பியழுதார். அவ்வழுகை ஒலி அவைக்கூடமெங்கும் ஒலித்ததை தாரை கேட்டாள். நுண்வடிவான யயாதியும் ஹஸ்தியும் குருவும் அங்கே நின்று விம்முவது போலிருந்தது. சற்று உளவிழி கூர்ந்தால் பிரதீபரையும் சந்தனுவையும் விசித்திரவீரியரையும் பார்த்துவிடலாமெனத் தோன்றியது.

"என் மைந்தரே, உங்கள் உடன்குருதியினரிடம் எந்நிலையிலும் பூசலிடாதிருங்கள். எதன்பொருட்டும் அவர்களுக்கு எதிராக உங்கள் படைக்கலங்கள் எழக்கூடாது. உங்கள் கையால் அவர்களின் குருதி சிந்தக்கூடாது. அவர்களின் மைந்தரும் மைந்தர்மைந்தரும் உங்களுடையவர்களென்றே ஆகுக! அதுவே விண்ணமைந்த நம் மூதாதையர் உகக்கும் செயல். நம் குடியினருக்கு நலம்பயப்பது. நம் கொடிவழியினர் தழைக்க

அடிகோலுவது. அளி கூர்க! தந்தைக்கு புன்கொடையென இதை அளியுங்கள், என் குழந்தைகளே…”

இரு கைகளையும் இரப்பதுபோல நீட்டி அவர் விம்மியழுதார். கண்ணீர்த்துளிகள் மார்பில் சொட்டி வழிந்து அகன்ற கரிய பரப்பை மழைவழியும் பாறையென்றாக்கின. விம்மல்களில் எட்டு அடுக்குகளாக அமைந்த செறிவயிறு அதிர்ந்தது. சஞ்சயன் அவர் கைகளை தொட்டான். அவர் தடுமாறியவர்போல தன் பீடத்தை நோக்கி பின்னகர்ந்து அதைத் தொட்டு உறுதிசெய்தபின் அமர்ந்தார். இரு கைகளாலும் தலையை பற்றிக்கொண்டார்.

சஞ்சயன் திரும்பி பின்னால் நின்ற ஏவலனிடம் ஆணையிட அவன் பெருங்கலத்தில் இன்னீர் கொண்டுவந்தான். அவரிடம் அது நீட்டப்பட்டபோது வேண்டாம் என மறுத்தார். ஏவலன் கலத்துடன் திரும்பியபோது அதை கைநீட்டி வாங்கி கொப்பளிக்கும் ஓசை எழ குடித்து திரும்ப அளித்தார். இன்னீர் அவர் உள்ளெழுந்த அனலை மெல்ல அடக்கியதுபோல அவர் முகம் தெளிவுற்றது. நீண்ட மூச்சுடன் மெல்ல தளர்ந்தார். கைகளையும் கால்களையும் நீட்டிக்கொண்டு உடலை விரித்தார். சஞ்சயன் ஏதோ கேட்க வேண்டாம் என மறுத்தார்.

அவர் தலை துயில்கொள்வதுபோல சரிந்தது. அக்கணமே விழித்துக்கொண்டு மெல்ல எழுந்துநின்று சஞ்சயனிடம் செல்வோம் என கைகாட்டினார். சஞ்சயன் அவர் கையை பற்றிக்கொள்ள தளர்ந்த சிற்றடி வைத்து நடந்து அவைநீங்கினார். அவையிலிருந்த அனைவரும் எழுந்து நின்று அவரை கைகூப்பி வணங்கினர். அவர் அவையைவிட்டு மறைந்தபோது மட்டும் “பேரரசர் வாழ்க! குருகுலத்தலைவர் வாழ்க!” என்னும் வாழ்த்தொலிகள் எழுந்தன. அவரை

முன்னுரைத்து அழைத்துச்சென்ற நிமித்திகனின் குரல் அப்பால் அப்பாலென ஒலித்தது.

தேய்ந்தடங்கிய ஓசைகளை பார்க்க முடிகிறது என்று தாரை எண்ணினாள், புட்கள் வானில் சென்று மறைவதுபோல. அவள் பெருமூச்சுடன் எழுந்தமைந்தாள். அருகே அசைவெழ திரும்பியபோது காந்தார அரசியர் எழுந்ததை கண்டாள். சத்யசேனையும் சத்யவிரதையும் காந்தாரியை கைதொட்டு அழைத்துச்சென்றார்கள். அவர்கள் செல்லும் ஓசையையும் அவளால் கண்மூடி கேட்க முடிந்தது. கலத்திலிருந்து நீர் ஒழுகி ஒழியும் ஓசை.

விழிதிறந்தபோது பெண்டிரவை எவருமில்லாமல் இருந்தது. அசலை அவளிடம் "அவர்கள் அனைவரும் சென்றுவிட்டனர்" என்றாள். "காந்தாரியர் செல்லட்டும், பிறர் ஏன் செல்லவேண்டும்?" என்றாள் தாரை. "பிறர் செல்வதற்கு தருணம் தேர்ந்திருந்தனர்" என்று அசலை புன்னகை செய்தாள். தாரை முகத்தால் மட்டுமே புன்னகை செய்தபின் அவையை நோக்கினாள். அவையினர் ஒருவரை ஒருவர் நோக்கியபடியும் மெல்லிய குரலில் உரைகொண்டபடியும் இருக்க கூடத்தின் குவைமாடம் வீணைக்குடமென கார்வை கொண்டிருந்தது.

"இவர்கள் பேரரசர் அவையொழிந்ததில் மகிழ்கிறார்கள் போலும்" என்றாள் தாரை. "ஆம், அவர் அழுதபோது அவையில் எவருமே விழிகசியவில்லை" என்றாள் அசலை. தாரை "விந்தைதான்" என்றாள். "தங்கள் தந்தை என அவரை கொண்டிருந்தவர்கள். அவருடைய உணர்வுகளுடன் இணைந்து வளர்ந்தவர்கள்" என்றாள். அசலை அவையை நோக்கி விழிநட்டபடி "அது மெய். ஆனால் அவர்கள் போரை நோக்கி நெடுந்தொலைவு சென்றுவிட்டார்கள். ஒன்றை நாம்

உள்ளத்தில் வளர்க்கத் தொடங்கிவிட்டால் பின்னர் அது தானாகவே வளரும். நீரூற்றி வளர்த்த மரத்தின் கிளைகளில் இன்று அமர்ந்திருக்கிறார்கள். இன்று பேரரசர் பேசியதைக் கேட்கையில் சென்ற தொலைவனைத்தையும் திரும்பி கடக்கவேண்டும் என்று சொல்லப்பட்டதன் கசப்பையே அவர்களில் காணமுடிந்தது" என்றாள்.

தாரை புரியாமல் தலையை மட்டும் அசைத்தாள். "எங்காவது மக்கள் போருக்கு எதிராக எழுந்ததை கேட்டிருக்கிறாயா?" என்றாள் அசலை. தாரை "இல்லை" என்பதுபோல தலையசைத்தாள். யுயுத்ஸு துரியோதனனின் அருகே சென்று குனிந்து ஏதோ சொல்வதையும் அரசன் தலையசைப்பதையும் கண்டாள். அவை தங்களுக்குள் பேசத்தொடங்கிய ஒலி வலுத்தது. ஒற்றை உளக்குவிப்பு அகன்றதுமே அது அவையல்லாதாகி வெற்றுத்திரள் என உருக்கொண்ட விந்தையை அவள் உணர்ந்தாள்.

அசலை "நான் எண்ணி எண்ணி நோக்கியது அது, எளிய மக்களுக்கு எப்போதும் போரில் பேரிழப்பே. அவர்களின் மைந்தர்கள் இறப்பார்கள். ஆநிரைகளும் வயல்வெளிகளும் அழிக்கப்படும். ஊர்கள் எரிகொள்ளும். சந்தைகளும் சாலைகளும் மறையும். ஒவ்வொரு போரும் பெருநோய் என அவர்களை பீடிக்கிறது. அவர்கள் மீண்டெழுவதற்கு மீண்டுமொரு தலைமுறை தேவைப்படும். வெற்றியின் செல்வம் மக்களுக்கு அளிக்கப்படுவதில்லை. வென்றாலும் தோற்றாலும் அவர்களுக்கு பொருளிழப்பே. வெற்றியின் புகழ் மக்களை எவ்வகையிலும் சென்றடைவதில்லை. ஆயினும் இன்றுவரை ஒருமுறைகூட எளிய மக்கள் போருக்கெதிராக

கிளர்ந்ததில்லை. எங்களுக்கு போர் தேவையில்லை எனும் குரல் எந்த அவையிலும் எழுந்ததில்லை” என்றாள்.

அப்போதுதான் அவள் சொல்வதன் உள்ளுறையை தாரை உணர்ந்தாள். “மெய்தான்... எண்ண எண்ண விந்தை” என்றாள். “ஏனென்றால் காலந்தோறும் தெய்வக்கதைகளும் குலநெறிகளும் நூல்களும் போரை போற்றி வந்துள்ளன. தன்மதிப்பென்றும் வீரம் என்றும் புகழென்றும் சொல்லிச்சொல்லி வளர்க்கப்பட்டவர்கள் இங்குள்ள அனைவரும். போருக்குகந்த உளநிலைகளை ஒவ்வொருநாளும் பயிரிட்டு வளர்த்துக்கொண்டிருக்கின்றன ஒவ்வொரு நாடும். எண்ணிப் பார், நாம் கேட்கும் கதைகளும் நோக்கும் கலைகளும் அனைத்துமே போர்குறித்தவை அல்லவா?”

“ஆம்” என்றாள் தாரை. யுயுத்ஸு சென்று சகுனியிடம் குனிந்து பேசத்தொடங்குவதை கண்டாள். அதற்குள் அவையமர்ந்திருந்தவர்கள் அனைவரும் அந்நிகழ்வை நோக்கிவிட்டனர். மெல்ல அவை அமைதிகொள்ளத் தொடங்கியது. அனைவரும் சகுனியை நோக்கிக்கொண்டிருக்க விதுரர் எழுந்தார். “அவையோரே” என்றார். அவையினர் திடுக்கிட்டவர்கள்போல அவரை நோக்கினர். சகுனியின் உடலில் எழப்போவதற்கான மெல்லிய அசைவு தோன்றிய அக்கணத்தில் விதுரர் எழுந்ததாக தாரைக்குத் தோன்றியது. விதுரரின் முகம் நோயுற்றது போலிருந்தது. உதடுகள் வெளுத்திருந்தன. வலியுடன் நின்றிருப்பதுபோல் உடலில் ஒரு வளைவு இருந்தது.

“அவையோரே, எளியோன் சொல்லை கேட்டருள்க! இக்குடியில் பிறந்தவன் என்பதாலும் இந்த அவையை பேரரசி சத்யவதியின் காலம் முதல் வகுத்து நடத்துபவன் என்பதாலும் மட்டுமல்ல,

சென்ற எட்டு வியாழவட்டத்திற்கும் மேலாக என் மூத்தவர் திருதராஷ்டிரரின் குரல் நான் என்பதனாலும்கூட" என்றார் விதுரர். "இதோ, கண்ணீருடன் என் மூத்தவர் நடந்து அகல்கிறார். நான் இருக்கவேண்டிய இடம் இதுவல்ல. அங்கே அவருடைய காலடியில்தான். இங்குள்ள எவருக்கும் நான் சற்றும் பொறுப்பல்ல. எவர் நலமும் எனக்கு ஒரு பொருட்டும் அல்ல. நான் இங்கிருப்பது இந்த மண்ணுக்காகவோ குடிக்காகவோ இதன் தொல்மூதாதையருக்காகவோ இதை ஆளும் தெய்வங்களுக்காகவோகூட அல்ல. என் மூத்தவரன்றி இப்புவியில் எனக்குரியவர் எவருமில்லை."

"அவருடைய செவியும் நாவும் கொண்டு இந்த அவையில் நிற்கவேண்டுமென்பதற்காகவே இங்கிருக்கிறேன்" என விதுரர் தொடர்ந்தார். "இங்கு என் மூத்தவரின் விழிநீர்த்துளிகள் விழுந்தபோது உடன்சொட்ட என் விழிநீர் மட்டுமே எழுந்தது. நான் எவரென்றும் என் பணி ஏதென்றும் காட்டியது அது. அதை நிகழ்த்திய தெய்வங்களை வணங்குகிறேன். நீங்கள் இருக்கும் நிலையென்ன என்று அறிவேன். எங்கும் எப்போதும் எளிய மானுடர் போரை விலக்கியதில்லை. ஒவ்வொருநாளும் அவர்கள்மேல் ஏற்றிவைக்கப்படும் எடைகளுக்கு எதிராக அவர்கள் கொள்ளும் வன்களியாட்டே போர்." தாரை அசலையின் முழங்கையை பற்றினாள். அசலை "ஆம்" என்றாள்.

"போர் ஒருங்கும் பொழுதுகளில் உச்சநிலை உணர்வுகள் உருவாக்கப்படுகின்றன. விருப்புவெறுப்புகள் ஆழ நிறுவப்படுகின்றன. தலைமுறை வஞ்சங்கள் கிளர்த்தப்படுகின்றன. உள்ளூறையாக பெருமிதங்களும் மிகைவிழைவுகளும் ஏற்றப்படுகின்றன. நெறியுரைக்கவும்

நலம்நிறுத்தவும் உதவும் கதைகளும் இசையுமே அப்பணியையும் செய்கின்றன. மெல்ல மெல்ல மக்கள் பழக்கப்படுத்தப்படுகிறார்கள், நாகர் நஞ்சுக்கு உடலை பழக்குவதுபோல. அவர்கள் புழங்கும் மொழி முற்றிலும் நஞ்சென்றாகிவிடுகிறது. நஞ்சுண்டு நஞ்சில் திளைக்கிறார்கள். நஞ்சல்லதை அறியவும் ஒண்ணாதவர் ஆகிறார்கள். பின்னர் அவர்களின் நகக்கீறல் போதும், உமிழ்நீர்த்துளி போதும், நஞ்சு பரவும். அஸ்தினபுரியை பார்த்துக்கொண்டிருக்கிறேன். இந்நகர் நஞ்சு கொள்ளத்தொடங்கி நெடுநாளாகிறது.”

“போருக்கு ஒருங்கும் மக்களிடம் எவரும் எந்த நெறியையும் சொல்லிவிடமுடியாது. எரியுணர்வும் வஞ்சக் கொந்தளிப்புமாகவே அவர்கள் அதை எதிர்கொள்வார்கள். தங்களுடன் இணைந்து வாளேந்தாத எவரும் கொன்றொழிக்கப்படவேண்டிய எதிரிகளே என்றன்றி அவர்களால் எண்ண முடியாது. போர் முதிரும் அக்காலகட்டத்தில் மக்கள் தங்கள் கனவுள்ளங்களில் நூறுநூறு முறை களம்கண்டு கொன்று குருதியாடி களித்திருப்பார்கள். பெருவிழைவு கொண்டு சூறைகொண்டாடியிருப்பார்கள். அத்தனை கீழ்மைகளும் விடுதலைகொண்ட களிப்பிலிருப்பார்கள்” என்றார் விதுரர்.

அவர் குரல் உடைந்தது. “உங்கள் முன் இரந்து நின்றார் என் தமையன். தெய்வங்களும் அஞ்சும் தோள்கொண்டவர். பேரறத்தான் என அழியாச் சொல்லோர் புகழ்ந்த பெருமகன். இவ்வூழை அவருக்கென கரந்திருக்கின்றன தெய்வங்கள்.” நெஞ்சு உலைய தொண்டை எழுந்தமைய அவர் தலைகுனிந்து தன்னை அடக்கினார். மேலாடையால் முகம் துடைத்து நிமிர்ந்து “நான் சொல்வதற்கு ஏதும் மீதியில்லை.

அவையோரே, உங்களை ஆட்கொண்டு அள்ளிச்செல்லும் இச்சூறாவளியை சற்று நோக்குங்கள். இது செல்லும் திசை நீங்கள் எவ்வகையிலும் அறியக்கூடுவதல்ல. மீன்கூட்டங்கள் படையெனக் கிளம்பி வாய்பிளந்து அமைந்த கவந்தப்பெருமீனை நோக்கி செல்கின்றன. இக்கணம் இந்த அவையில் அவன் எவரென்றே நான் அறிவேன்" என்றார்.

சொல்நிலைக்க நீள்மூச்செறிந்து விதுரர் தொடர்ந்தார் "உங்கள் ஊழ் அதுவென்று அறிந்தாலும் அறிந்தவன் என்ற முறையில் கைநீட்டி உங்களிடம் நானும் இரக்கிறேன். உங்கள் மைந்தரை இருளகழிக்குள் தள்ளவேண்டாம். எரியெழுந்து அணுகுகிறது இந்த யுகத்தை. துளி உளத்தெளிவிருந்தால், ஒருகணம் விலகிநின்று நோக்கமுடிந்தால் நம்மை நாம் காத்துக்கொள்லலாம். நம் குடிகளையும் கொடிவழியினரையும் வாழவைக்கலாம். எண்ணிநோக்குக... சற்றேனும் விலகி விழிகொள்க!" கைகூப்பியபடி அவர் அமர்ந்தார்.

தாரை இளைய யாதவரை நோக்கினாள். அதே அறியாப் புன்னகையுடன் அங்கிலாத எதையோ நோக்கியவர்போல் அமர்ந்திருந்தார். அவர் நோக்குவதை தான் நோக்கமுடியுமென ஒருகணம் தோன்றியபோது அவள் உடல் அஞ்சி மெய்ப்பு கொண்டது. தன்னை விலக்கி அவர் கால்களை நோக்கி விழிசரித்தாள். புன்னகைக்கும் நகநிரைகள். அவை "அறிவேன் யான்" என்றன.

# குருதிச்சாரல் - 30

**பகுதி நான்கு : ஒளிர்பரல் – 5**

யுயுத்ஸு எழுந்து “ஆன்றோரே, இப்போது அவையில் இளைய யாதவரின் தூதுச்செய்தியும் அதன்மேல் பேரரசரும் அமைச்சரும் கொண்ட உணர்ச்சிகளும் முன்வைக்கப்பட்டன. ஆகவே பிதாமகர் பீஷ்மரும் ஆசிரியர்களான துரோணரும் கிருபரும் தங்கள் எண்ணங்களையும் முன்வைக்கவேண்டுமென கோருகிறேன். பிறிதெவரேனும் தங்கள் வழிச்சொற்களை உரைப்பதென்றாலும் ஆகலாம். அதன் பின்னர் இந்த அவையில் ஒரு முடிவை நோக்கி செல்லும் முயற்சிகள் நிகழ்வதே முறையென்றாகும்” என்றான்.

அவனுடைய எண்ணம் என்னவென்று அவையினரால் உய்த்துணர முடியவில்லை. ஆனால் விதுரரின் சொற்கள் அவர் எண்ணியதற்கு மாறாக அவையை சினம்கொள்ளச் செய்துவிட்டன என்று தோன்றியது. மெல்லிய அலையாக எழுந்துசென்ற குரல்முழக்கம் அவை எதிர் உளநிலையில் இருப்பதையே காட்டியது. அசலை அவள் எண்ணியதையே சொன்னாள். “புலியின் உடலுக்குள் எழும் உறுமல்போல் ஒலிக்கிறது.” தாரை “ஆம்” என்றபின் பீஷ்மரை நோக்கினாள்.

துரோணரும் விதுரரும் பீஷ்மரையே நோக்கிக்கொண்டிருந்தார்கள். யுயுத்ஸு மீண்டும் “பிதாமகரே, தங்கள் சொல்லைக் காத்து நின்றிருக்கிறோம்” என்றான். பீஷ்மர் திகைத்து விழித்துக்கொண்டவர்போல குருதிச்சிவப்பு படிந்த விழிகளுடன் துரோணரை நோக்கி “என்ன?” என்றார். “தங்கள் சொல்” என்றார் துரோணர். “ஆம்” என்றபடி அவர் தாடியை வருடிக்கொண்டிருந்தார். பின்னர் மெல்ல எழுந்து “அவையோரே, இந்த அவையில் என் மைந்தன் சொன்னதை கேட்டுக்கொண்டிருந்தேன். அவன் தன் துணைவியை

மண்திகழ்தெய்வம் என ஏற்றுக்கொண்டிருப்பதாக உரைத்தான். அதற்கு எனக்குரிய உட்பொருளும் உண்டு, அவன் என்னையும் ஆசிரியர்களையும் கைவிடுகிறான். ஏனென்றால் நாங்கள் அவனை கைவிட்டுவிட்டதாக எண்ணுகிறான்” என்றார்.

“அது மெய். இந்நாட்களில் நான் அறமும் அல்லதும் தேர்ந்து என் நிலையை எடுத்தபோது அவனைப்பற்றி எண்ணியதேயில்லை” என தொடர்ந்தார். “அவனுக்கு நானளித்த சொல்லைப்பற்றி எண்ணினேன். அது என்னைப்பற்றிய எண்ணமே. பெருந்தந்தையாகிய அவன் உளம் இத்தருணத்தில் கொள்ளும் அழலை என் அகம் வாங்கிக்கொள்ளவில்லை. மெய்யுரைப்பதென்றால் இத்தருணத்தில்கூட அதை நான் உணரவில்லை. இங்குள்ளோர் உள்ளூர எண்ணுவதையே நானும் எண்ணுகிறேன், ஒருவேளை முளைக்காத குருதிகொண்ட எனக்கு அதை ஒருபோதும் புரிந்துகொள்ளமுடியாது போலும்.”

மேலும் சொல்ல ஏதுமில்லாதவர்போல அவர் தாடியை நீவிக்கொண்டிருந்தார். பின்னர் நிமிர்ந்து இளைய யாதவரை நோக்கி “அவனைப்போலவே பெருந்தந்தை அவையமர்ந்த இளைய யாதவர். அவர் சொல் தன் மைந்தருக்கும் சேர்த்துத்தான் எழுந்திருக்குமென எண்ணுகிறேன். குடியினரே, தந்தையரை ஏதோ ஒரு தருணத்தில் மைந்தர்கள் விலக்கவேண்டியிருக்கிறதா, விதையை முளை கீறியுடைத்து எழுவதைப்போல? அமைதியாக உணவாகுதல்தான் தந்தையருக்கு தெய்வங்கள் வகுத்த மெய்நெறியா?” என்றார். அச்சொற்களிலிருந்த நேரடியான முள் அனைவரையும் இளைய யாதவரை நோக்கச்செய்தது. அவர் புன்னகைத்துக்கொண்டிருந்தார்.

“இந்த அவையில் நான் சொல்வதற்கென்ன உள்ளது? என் நிலைபாட்டை இறுதியாக முன்னரே அனுப்பிவிட்டேன். எந்நிலையிலும் அஸ்தினபுரியின் முடிகொண்ட அரசனுக்குரியது என் வில். என் சொல் என் மைந்தன் திருதராஷ்டிரனுக்குரியது” என்றார் பீஷ்மர். அவர் அமரப்போவதை உடலசைவெழும் ஆயம் காட்ட விதுரர் முந்திய குரலில் “இத்தருணத்தில் அரசர் ஆற்றவேண்டியதென்ன என்பதை நீங்களே வழிகாட்டி உரைக்கவேண்டும், பிதாமகரே” என்றார். பீஷ்மர் நின்று அவரை எவர் என்பதுபோல சிலகணங்கள் நோக்கினார். அவருடைய ஒரு கண் சற்று கீழே இழுபட்டு பாதி மூடியது போலிருந்தது. இன்னொரு விழி நீர்கொண்டிருந்தது. உதடுகள் நடுங்கின. அவர் அதுவரை சொன்னவற்றை திரட்டிக்கொள்ள முயல்கிறார் என்பது தாரைக்கு தெரிந்தது.

“நான் சொல்வதென்ன? எது அனைவருக்கும் நன்மையோ அதையே இளைய யாதவர் சொல்வார். அவருடைய சொற்களை ஏற்கவேண்டும் என்பதே முதியவனாக நான் அரசருக்கு உரைக்கவேண்டியது” என்றார் பீஷ்மர். “எது நம் நாவுக்கு சுவையுடையதோ அது நம்மை வளர்க்கும். எது நம்மை வளர்ப்பதோ அது கட்டின்றிப் பெருகுவதாகவும் இருக்கும். பேணிப்பரவி ஓட்டப்பயிற்சி அளித்து புரவியை உருவாக்கும் நாமே கடிவாளமும் அணிவிக்கிறோம். இப்போது கடிவாளம் அணிவிக்கும் தருணம்.”

“அஸ்தினபுரிக்கு அரசர் தன் ஆற்றலை பாரதவர்ஷத்தில் ஐயமற நிறுவிவிட்டார். இன்று அவர் கொடிக்கீழேதான் பாரதவர்ஷத்தின் ஷத்ரியர்கள் அனைவரும் அணிதிரள்கிறார்கள். சத்ராஜித் என அமரவேண்டியவர் எவர்

என்பதில் எவருக்கும் ஐயமில்லை. இதற்கப்பால் சென்று போரில் அதை குருதியினால் நிறுவவேண்டியதில்லை” என்றார் பீஷ்மர். “ஏனென்றால் போரென்பது ஒருமுகப்பட்ட ஒற்றைத் திசைபெருக்கு அல்ல என்றுணர்க! போரைக் குறித்து நூறாயிரம் நூல்கள் இங்கே எழுதப்பட்டுள்ளன. ஆனால் நேரில் நாம் காணும்போது ஒவ்வொருமுறையும் ஒவ்வொன்றாகவே அது உள்ளது.”

“இந்தப் பேரவையில் போரை மிக நன்றாக அறிந்தவன் நான் என்று சொல்லி இதைச் சொல்ல முற்படுகிறேன். இளையோரே, போர் என்பது வாழ்க்கையின், வரலாற்றின் சிறு நாடக வடிவமேயாகும். வாழ்க்கையையும் வரலாற்றையும்போல அதுவும் எவ்வகையிலும் அதிலீடுபடும் எவர் கையிலும் இல்லை, அதை தெய்வங்களே ஆள்கின்றன. போர்முரசு கொட்டும் முதற்தருணம் வரைதான் மானுடனுக்கு தன் குடித்தெய்வங்களின் அருளும் வழிபடும் முதன்மைத்தெய்வங்களின் கனிவும் துணையிருக்கிறது. போர் தொடங்கிய பின்னர் அனைவரும் தங்களை போருக்குரிய தெய்வங்களுக்கு முற்றாக ஒப்படைக்கவேண்டியதுதான்.”

“தெய்வங்கள் ஈன்ற கட்டற்ற தெய்வக்குழவிகள் அப்போர்தெய்வங்கள். தெய்வங்களே தலையில் அறைந்துகொண்டும் பதறிக் கூச்சலிட்டுக்கொண்டும் கண்ணீர்விட்டு மன்றாடியும் இறுதியில் சினம்கொண்டு கோலெடுத்து எழுந்தும்தான் அவற்றை கையாள்கின்றன. துடுக்கர்கள், குறும்பர்கள், சழக்கர்கள், அளியிலிகள், நெறியிலிகள், நாணிலிகள்” என்று பீஷ்மர் சொன்னார். அவருடைய உள்ளம் அவையை விட்டு முற்றாகவே விலகிவிட்டதென்று தெரிந்தது. தனக்குத்தானே என, ஏதோ மலையுச்சியில் நின்று காற்றை

நோக்கி அரற்றுபவர் என உடைந்துடைந்து தெறித்த சொற்களில் பேசிக்கொண்டிருந்தார்.

முதுமையாலும் களைப்பாலும் குழறிய நாக்கும் பதறும் தொண்டையுமாக அவர் சொன்னார் "துடுக்கையும் குறும்பையுமே இப்போது பார்த்துக்கொண்டிருக்கிறோம். அவர்களின் மெய்முகத்தை பின்னர் நோக்குவோம். நான் நூல்களைப் பயின்றிருந்த அக்காலகட்டங்களில் எண்ணுவதுண்டு, போருக்கென ஏன் இத்தனை நெறிகளும் நோன்புகளும் வழிகாட்டுதல்களும் என. போர் தொடங்கிய ஓரிரு நாழிகைக்குள்ளாகவே அனைத்தும் சிதறிப்பறந்து மறையும். அங்கிருப்பவை தெய்வமேறிய உள்ளங்கள். விலங்குகளின் உணர்வுகள். ஆகவே பின்னர் நூல்களை முற்றாக கைவிட்டேன். அவை மானுடனின் ஏக்கங்கள், விழைவுகள் மட்டுமே. நெறிநின்று இயற்றப்படும் போர் என ஏதுமில்லை."

"போரை வேள்வியென்றும் கலையென்றும் சொல்பவர்களை நான் படித்தறிந்துள்ளேன், அவர்கள் வெற்றிகொண்டவர்களை அண்டிவாழும் சூதர்களும் கவிஞர்களுமே. போர் முற்றிலும் பிறிதொன்று. அறிக, போர் என ஒன்று எழுமென்றால் நாம் ஆடைகளை என நாம் பெற்றும் கற்றும் உற்ற அனைத்தையும் கிழித்துவீசிவிட்டுத்தான் முன்செல்வோம். தந்தையர் நெஞ்சில் உதைப்போம். ஆசிரியர்களின் முகத்தில் உமிழ்வோம். உடன்பிறந்தார் தலைகளை கொய்வோம். இளமைந்தர் குருதியில் குளித்து களியாடுவோம்."

"போரில் நாம் தோற்றால் உண்மையில் பெரும்பழியிலிருந்து காக்கப்படுகிறோம். வென்றால் காட்டெரியென மக்கள்மேல் எழுந்து பரவுவோம். கொன்று சூறையாடுவோம்.

களஞ்சியங்களை கொள்ளையடிப்போம். வயல்களை உழக்கி அழிப்போம். ஊருணிகளில் நஞ்சிடுவோம். ஊர்களை எரியூட்டுவோம். தாமரைச்சுனையில் இறங்கிய எருமைகள்போல கன்னியரை வலுப்புணர்வோம். பெற்ற அன்னையரும் பெண்டிரென்றே தெரியும் கீழ்மையில் திளைப்போம். போருக்கெழுந்தவர் எவரும் இவற்றை ஆற்றாமல் திரும்ப பாடிவீடு மீண்டதில்லை.”

“போர்களால் களஞ்சியங்கள் அழிகின்றன. மகளிர் கற்பு சிதைகிறது. அவையோரே, போருக்குப் பின் முற்றழிவது நெறி நம்பிக்கை. மூத்தோர் சொல்லும் நவில்நூலும் உரைத்த நெறிகளெல்லாம் மெய்யல்ல என்று கண்கூடாக அறிந்த மக்கள் பின்னர் நிலைமீள நெடுநாளாகும். அரசித்தேனீ கொல்லப்பட்ட தேனீக்களைப்போல அவர்கள் வஞ்சக்கொடுக்குடன் அலைவார்கள். தங்களுக்குள்ளேயே கொட்டி நஞ்சூட்டி அழிவார்கள். பிறிதொரு அரசித்தேனீ பிறந்தெழுந்து அவர்களை மீண்டும் தொகுக்கவேண்டும்.”

பீஷ்மர் பெருமூச்சுவிட்டார். சொல்லிச்சொல்லி அவர் எங்கோ சென்றுவிட்டார் என்று உணர்ந்து சொன்னவற்றை திரட்டிக்கொள்ள முயன்றார். நினைவுகள் குவியாமையால் தத்தளித்து அருகே நின்ற யுயுத்ஸுவை நோக்கி “என்ன?” என்றார். யுயுத்ஸு “மீண்டும் குடிகள் உருவாகி வரவேண்டியிருக்கும்” என்றான். “ஆம், போர் என்பது கோபுரத்தின் அடித்தளத்தை விரிசலிடச் செய்யும் அடி. மேல்கட்டுகள் இடிந்து சரியும். முற்றாக அள்ளி அகற்றி அடித்தளத்தை மீட்டமைக்காமல் மீண்டுமொரு கோபுரம் அங்கு எழமுடியாது.”

அவர் களைப்புடன் இரு கைகளையும் கோத்து மார்பில் வைத்தபடி நின்றார். “ஆகவே எந்நிலையிலும் போரை ஒழிக! நான் சொல்லவருவது அதுவே. குடிகள்மேல் அன்புகொண்டிருக்கும் அரசன் எவனும் அவர்களுக்கு போர்த்துயரை அளிக்கமாட்டான்.” மேலும் எதையோ சொல்ல வாயெடுத்து குழம்பி யுயுத்ஸுவிடம் “வேறென்ன?” என்றார். “அரசர் செய்யவேண்டியதென்ன என ஆணையிடுக, பிதாமகரே!” என்றான் யுயுத்ஸு. “அரசனுக்கு எவரும் ஆணையிடக்கூடாது. அவன் தந்தையும் ஆசிரியனும் முதன்மை வைதிகனும்கூட” என்றார் பீஷ்மர். “தங்கள் சொற்களைக் கூறுக!” என்றான் யுயுத்ஸு.

“இளைய யாதவர் சொல்வதென்ன?” என்றார் பீஷ்மர். “தன் இளமைத் தோழனாகிய துரியோதனனுக்கும் அவன் உடன்பிறந்தாருக்கும் அவர் உரைப்பவை என்ன?” இரு கைகளையும் நீட்டி “களமாடல் ஒழிந்து அவர் நேரடியாகவே சொல்லட்டும்” என்று உரக்க கேட்டார். தங்கள் குரல் மிகத் தாழ்ந்தொலிக்கிறதோ என எண்ணும் முதியவர்கள் தேவைக்குமேல் எழுப்பும் ஒலி கொண்டிருந்தது அது. யுயுத்ஸு “தங்கள் தரப்பை சொல்லலாம், யாதவரே” என்றான்.

இளைய யாதவர் எழுந்து “நான் சொல்வது ஒன்றையே. பாண்டவர்களுக்குரிய மேற்குநிலம், பாதி கருவூலம், இந்திரப்பிரஸ்தம் ஆகியவை உடனடியாக அளிக்கப்படவேண்டும். அவை கொடையென்றல்ல உரிமையென்று ஏற்று கையளிக்கப்படவேண்டும்” என்றார். “இதுவே அதற்கான தருணம் என நானும் உணர்கிறேன். இன்று அவற்றை அளித்தால் போருக்கஞ்சுவதாகவோ பேரத்தில் தோற்றதாகவோ பொருள் உருவாகாது. அரசர் தன்

பெருந்தோள்களை விரித்து உடன்பிறந்தாரை தழுவிக்கொள்வாரென்றால் அத்தருணத்தை பாரதவர்ஷம் ஆயிரமாண்டுகள் விழவெனக் கொண்டாடும்.”

“ஆம், நானும் பிறிதொன்றும் சொல்வதற்கில்லை. இத்தருணத்தை பற்றிக்கொள்க!” என்றார் பீஷ்மர். கைவணங்கி “அவைக்கும் நான் உரைப்பது அதுவே. வஞ்சத்தின் உச்சம் கண்டுவிட்டோம். இனி மலையின் மறுசரிவில் இறங்குவோம்” என்றபடி அமர்ந்தார். இளைய யாதவர் “மூத்தவர்கள் எவ்வகையில் சொன்னாலும் அது ஆணையே” என்றபின் தானும் அமர்ந்தார். யுயுத்ஸு துரோணரிடம் “ஆசிரியரே, தங்கள் சொற்களை அவை எதிர்நோக்குகிறது” என்றான். துரோணர் மெல்ல எழுந்து “பிதாமகர் சொன்னதற்கு அப்பால் நான் எதுவும் சொல்வதற்கில்லை. ஆசிரியனாக ஒன்றை மட்டும் சொல்ல விழைகிறேன். வில்திறனில் இங்குளோரும் அங்குளோரும் நிகரானவர்கள். வேறுபாடென்பது மிகமிகச் சிறியது. ஆகவே எவர் வெல்வார் என்பதை இக்கணம் தெய்வங்களும் சொல்லமுடியாது” என்றார்.

“எவரேனும் வெல்வார்களா என்று சொல்வதும் அரிது” என்று துரோணர் தொடர்ந்தார். “ஆகவேதான் முற்றிலும் இணையான வீரர்கள் தங்களுக்குள் போர்புரிய குடித்தலைவர்களும் அரசர்களும் ஒப்புகை அளிக்கக்கூடாதென்று சொல்லப்பட்டிருக்கிறது. அவையோரே, அது அக்குடியும் நாடும் இருவரையும் இழப்பதாகவே சென்று முடியும். நாம் முற்றழிவதற்கு நம் திறன்களே வழிவகுக்கும் என்று உணர்க! எண்ணியே இச்சொல் எடுக்கிறேன். போர் நிகழுமென்றால் இரு தரப்பையும் முற்றழித்த பழி என்னை வந்துசேரும். எனக்கு வில்லளித்த ஆசிரியர்களுக்கும் அது சென்றடையும்.”

யுயுத்ஸு கிருபரை நோக்க அவர் எழுந்து "நான் கூறுவதுவும் அதுவே. படைக்கலங்களாலோ போராலோ எப்போதும் எதுவும் முடிவுசெய்யப்படுவதில்லை என்றே நூல்கள் கூறுகின்றன. அறமே இறுதியில் கொடியுடன் நின்றிருக்கிறது" என்றார். "அறத்தின் வழியென்றாகும்போதே போரும் நெறியென்று கொள்ளப்படுகிறது. அறத்தின் முதல் மைந்தன் சொல் என்கின்றன நூல்கள். சொல்லால் வெல்லப்படுவதே என்றும் வாழும் அறம்."

யுயுத்ஸு கைகூப்பி "அவையீரே, இங்கு அனைத்தும் சொல்லப்பட்டுவிட்டன. இனி எழவேண்டிய குரல்களெனெ எவையேனும் உள்ளனவா?" என்றான். அவையிலிருந்து கலைவோசை எழுந்துகொண்டிருந்தது. விழிகள் அனைத்திலும் சொல் திகழ்ந்தது. ஆனால் எவரும் எழவில்லை. "மேலும் குரல்களில்லை என்றால் அவை தன் எண்ணத்தை அரசருக்கு கோல்தூக்கி அறிவிக்கலாம். அஸ்தினபுரியின் குடிப்பேரவைக்கு அரசரையும் கட்டிநிறுத்தும் ஆற்றலுண்டு என வகுக்கப்பட்டுள்ளது. குடியவை எண்ணித் துணியட்டும், நம் குலம்வாழும் முடிவு இங்கே எழுக!" என்றான்.

விதுரர் எழுந்து "மாற்றுச் சொல்லில்லை என்றால் அவையை சிற்றுணவும் இன்னீரும் வாய்மணமும் கொள்ளும்பொருட்டு ஒருநாழிகைப் பொழுது கலைக்கலாம். மூத்தோர் சற்று ஓய்வெடுக்கட்டும். அவையோர் தங்களுக்குள் பேசிக்கலந்து சொல்லொருமை கொள்ளட்டும்" என்றார். நிமித்திகர் அவை கலைவதை அறிவிக்கும்பொருட்டு வெள்ளிக்கோலுடன் அவைமேடை நோக்கி செல்ல கணிகர் கைதூக்கி "ஒன்றுமட்டும் வினவிக்கொள்கிறேன், அமைச்சரே. இது

ஆற்றுப்படுத்தலோ அறிவுரையோ அல்ல. அவையோனின் எளிய ஐயம் மட்டுமே" என்றார்.

அசலை "மிகச் சரியான இடம்... இதையே அவரிடம் எதிர்பார்த்தேன்" என்றாள். "என்ன?" என்றாள் தாரை. "என்ன புரிந்துகொள்கிறாய் நீ? இதோ அவையினர் எழுந்து சொல்லுசாவச் செல்லவிருக்கிறார்கள். இப்போது சொல்லப்படும் இறுதிச் சொற்றொடரைப்பற்றி மட்டுமே அவர்கள் பேசிக்கொள்வார்கள். திருதராஷ்டிர மாமன்னர் அவையில் வீழ்த்திய விழிநீர் முற்றாகவே மறக்கப்பட்டுவிடும்" என்றாள். "ஆம், அனைவர் முகத்திலும் கணிகர் சொல்லைக்குறித்த கிளர்ச்சியே தெரிகிறது" என்றாள் தாரை.

விதுரர் இறுகிய முகத்துடன் "அவையில் எக்குரலும் எழலாம், அந்தணரே" என்றார். "இப்போது இளைய யாதவர் வழிநடத்த ஆசிரியர்களும் மூத்தோரும் கூறிய வழிகளை கேட்டேன். நன்று, அமைதி எவருக்கும் நலம்பயப்பதே. அளியும் கனிவுமே ஆன்றோரை நிறைவுசெய்பவை" என்றார் கணிகர். "ஆனால் இப்போது இருசாராரும் தோள்தழுவிச் செய்யும் அமைதியேற்பு என்பது அவர்களை எத்தனை காலம் கட்டுப்படுத்தும்?" விதுரர் "புரியவில்லை, அந்தணரே" என்றார். "மேலும் தெளிவாகக் கேட்கிறேன். இந்தச் சொல்லுறுதியை இவர்கள் மட்டும் தங்கள் வாழ்நாளெல்லாம் காக்கவேண்டுமா? அல்லது கொடிவழியினருமா?"

விதுரர் திகைப்புடன் துரியோதனனை நோக்கிவிட்டு "அதை இப்போது முடிவுசெய்ய வேண்டியதில்லை. நாம் பேசிக்கொண்டிருப்பது நம் தலைக்குமேல் உருண்டு நிற்கும் மலைப்பாறையைக் குறித்து மட்டுமே" என்றார். "தோள்தழுவி விழிநீர் வீழ்த்துவதுடன் அமைதியேற்பு முடிந்துவிடுமா? அன்றி

ஏதேனும் ஓலை எழுதப்படுமா?” என்றார் கணிகர். “ஏனென்றால் முன்பு சூதுக்களத்தில் அளிக்கப்பட்ட வெறுஞ்சொல் பேணப்படவில்லை என்னும் ஐயம் பாண்டவர்களுக்கிருப்பதனால் அவர்கள் ஓலைப்பதிவை நாடக்கூடும்.” விதுரர் “ஆம், ஓலைப்பதிவு தேவையே” என்றதுமே தான் சிக்கிக்கொண்டதை உணர்ந்தார்.

“ஓலைகள் பலவகையான முடிப்புரைகளுடன் எழுதப்படும், அமைச்சரே. முடிப்புரைகளைக்கொண்டே ஓலைகள் மதிப்பிடவும்படுகின்றன. சூரியசந்திரர் உள்ளவரை, என் குருதி இங்கு திகழும் வரை என்பது அரசர்களின் அறிவிக்கைகளில் திகழும் பொதுவான முடிப்பு. அச்சொல்லை மாறா ஆணையென்றாக்கி தெய்வங்களுக்கு முன் படைப்பது அவ்வரியே. எளிய வணிக அறிவிக்கைகளில் அவ்வாறிருப்பதில்லை. இத்தனை காலத்திற்கென்று வகுப்பதுண்டு. ஒரு வியாழவட்டம். அல்லது அதன் மடங்குகளில் கூறுவது மரபு. ஆணையிடும் அரசனின் கோல்நிற்கும்வரை என்று அரிதாகச் சொல்வதுமுண்டு. இந்த ஓலையில் எவ்வரி இடம்பெறும்?”

விதுரர் “இது தெய்வங்கள்முன் உறுதி ஏற்பதே” என்றார். கணிகர் “நன்று, அவ்வாறே ஆகவேண்டும். ஏனென்றால் இது குருதிப்பூசல். கொடிவழிகள்தோறும் நீளக்கூடியது. நானும் அதையே வழிமொழிவேன்” என்றார். “ஆனால் வானும் மண்ணும் என ஆணையுரைத்தால் இன்று இந்த அவையில் செய்யப்போகும் முடிவென்பது எண்ணியிராக் காலம்வரை நம் கொடிவழிகளனைவரையும் கட்டுப்படுத்தும் என்கிறோம். நம் மைந்தருக்கும் மைந்தர்மைந்தருக்கும் மீறமுடியாத ஆணையொன்றை விடுக்கிறோம் என்றே அதன் பொருள்.”

“ஆம்” என்றார் விதுரர். தளர்ந்த குரலில் “நன்று, அமைச்சரே. நான் வினவுவது இதை மட்டுமே” என்றார் கணிகர். விதுரர் கைகாட்ட நிமித்திகன் அவைமேடைமேல் ஏறிநின்று அவை கலைவதை அறிவித்தான். அவையினர் பாவைகள் என எழுந்து மெல்ல கலையத் தலைப்பட்டனர்.

சேடி வந்து வணங்கி “தாங்கள் சற்று இளைப்பாறலாமே, அரசி” என்றாள். அசலை எழுந்ததும் தாரையும் உடனெழ அவர்கள் அடுத்த அறைக்கு சென்றனர். பிற அரசியருக்கு அவையில் என்ன நிகழ்ந்தது என்று புரிந்திருக்கவில்லை. அவர்கள் தாழ்ந்த குரலில் தங்கள் தனிப்பட்ட உரையாடலை நிகழ்த்தியபடி நடக்க சிலர் மெல்ல சிரித்தனர். அணிகளும் ஆடைகளும் ஓசையிட்டன. அசலை அவர்களை நோக்கியபின் “மெய்யாக சொல்லப்போனால் அணியாடையே பெண்களை பெரும்பாலும் நிறைவுசெய்துவிடுகிறது. அவர்களை அது தனக்கு உகந்த முறையில் நடிக்கச் செய்கிறது. மிஞ்சியெழும் குரல்கள் அரிதே” என்றாள்.

தாரை அவர்களை வெறுதே நோக்கிவிட்டு “என்ன நிகழும், அக்கையே?” என்றாள். அசலை “அவையினர் உள்ளத்தில் பேரச்சம் ஒன்றை செலுத்திவிட்டார். தாங்கள் முடிவெடுக்கவிருப்பது தங்களை மீறிய ஒன்று என்ற எண்ணம் எழுந்தாலே எளியோர் எம்முடிவையும் எடுக்கமாட்டார்கள். பொறுப்பேற்க மறுத்தலாலே அவர்கள் எளியோர் என எஞ்சுகிறார்கள். அவர்கள் பலபேசி ஊடிமுயங்கிச் சிலம்புவார்கள். அது அப்பேச்சு நிலைக்கும்பொருட்டுதான். பேச்சு நின்றதும் வெற்றுள்ளத்துடன் திரும்புவார்கள்.

அனைத்தையும் அப்படியே மீண்டும் பிதாமகருக்கும் அரசருக்கும் அளித்துவிட்டு அவையமர்வார்கள்” என்றாள்.

தாரை “எளியோர் என்ற சொல் துயரளிக்கிறது” என்றாள். “ஏனென்றால் காலமெல்லாம் எளியோரை வைத்து ஆடியே வலியோர் வாழ்கிறார்கள்.” அசலை ஒன்றும் சொல்லாமல் புன்னகைத்தாள். “எளியோர் பெருந்திரளென எழுந்தால் விராடவடிவுகொண்ட ஊழுருவே என்பார்கள்” என்றாள் தாரை மீண்டும். “ஆம், அது நிகழ்கிறது. ஆனால் இன்றுவரை முகப்பில் ஒரு வலியோனைச் சூடாது, அவனுக்குத் தாள்பணியாது எளியோர் திரண்டதோ எழுந்ததோ உண்டா? வென்றபின் அவனுக்கே அனைத்தையும் அடியுறை வைத்து அடிமைநில்லாது அவர்கள் அமைந்ததுண்டா?” என்றாள் அசலை.

தாரை மேலும் சொல்லெடுக்காமல் நடந்தாள். அவர்கள் சிற்றறைக்குச் சென்று அமர்ந்தனர். சேடி இன்னீர் கொண்டுவந்தாள். அசலை அக்கார அப்பத்தை வேண்டாம் என விலக்கினாள். அதை எடுக்க கைநீட்டிய தாரை ஓரக்கண்ணால் அசலையை நோக்கி சற்றுத் தயங்கிய பின்னர் அதில் இரண்டை எடுத்துக்கொண்டாள். “உண்க!” என்றாள் அசலை. தாரை “அக்கார அப்பம் எனக்கு இனியது. எங்களூரில் கோடையில் மட்டுமே வணிகப்படகுகள் வரும். அவர்கள்தான் அக்காரம் கொண்டுவருவார்கள். கோடையின் உணவு இது…” என்றாள்.

“கோடையில் மச்சர்நாட்டில் ஏழு விழவுகள் உண்டு. புதுச்சேறெழுதல், முதல் மீனெழுகை, கொன்றை பொலி, மூத்தோர் கொடை, அன்னையர் கொடை, முதல் கோடைமழை, கூட்டோலை” என்றாள். அசலை “கூட்டோலை என்றால்?”

என்றாள். “அனைவரின் இல்லங்களையும் அனைவரும் ஒன்றாகச் சேர்ந்து ஓலை வேய்வது... இல்லங்களை மழைக்கு முன்னதாகவே சீரமைத்துவிடுவோம்.” அசலை “அதற்குரிய தெய்வம் எது?” என்றாள். “கூர்மை என்னும் அன்னை. ஆமைவடிவிலிருப்பவள்.” அசலை சிரித்து “ஆம், இல்லத்தைச் சுமக்கும் குடித்தலைவி” என்றாள்.

சேடி உள்ளே வந்து சிற்றடி வைத்து அணுகி மெல்லிய குரலில் “அரசி, அரசர்களின் சிற்றவைக்கு வருக! அங்கே இளையவர்கள் அரசருடன் பூசலிடுகிறார்கள். பெருங்குரலெழுகிறது” என்றாள். அசலை ஒன்றும் சொல்லாமல் எழுந்து அவளுடன் விரைய தாரை உடன்சென்றாள். “இளையோர் சினம்கொண்டு கூச்சலிடுகிறார்கள்” என்றாள் சேடி. அவர்கள் பேரவையின் இடைநாழியை வளைத்து மறுபக்கம் சென்றனர். அரசர்களுக்குரிய கூடத்தின் வாயிலில் நின்றிருந்த காவலனை பொருட்படுத்தாமல் அசலை உள்ளே நுழைந்தாள்.

உள்ளே பேசிக்கொண்டிருந்த துர்மதன் திரும்பி நோக்கி அசலையை உணர்ந்தபின் மேலும் உரத்த குரலில் தொடர்ந்தான். “நாம் போர்முகம் கொண்டுவிட்டோம். போர்வெற்றி பிறருக்கு அமையும் என்று நம் படைப்பெருக்கை ஒருமுறை நோக்கிய எவரும் கூறமுடியாது. பாரதவர்ஷமே ஒருங்கிணைந்து நிற்கிறது. எவர் நம்மை வெல்வது? நிஷாதர்களும் கிராதர்களுமா? நாம் எவருக்கு அஞ்சுகிறோம்?” என்றான்.

துச்சலன் “நான் அஞ்சுவதைப்பற்றி சொல்லவில்லை. ஆனால் நம்மைப் பயிற்றுவித்த ஆசிரியர்கள் அவையிலெழுந்து சொன்னதை மறுக்கவேண்டியதில்லை என்கிறேன்... இருசாராரும் அழிவோம் என்றால்...” என்று சொல்ல துர்முகன்

கைநீட்டி “அச்சொல்லை நான் ஐயுறவில்லை. ஆனால் நாம் எண்ணித்துணிகிறோமா என்று மீண்டுமொருமுறை ஆராய இதை ஒரு தருணமாக ஏன் கொள்ளலாகாது?” என்றான். துச்சகன் “ஆம், ஏற்கெனவே நாம் பெருவிழைவும் வஞ்சமும் கொண்டவர்கள் என சூதர் நம் குடிகளிடம் பேசிக்கொண்டிருக்கிறார்கள். இது யுதிஷ்டிரனை அறத்தோன் என்றும் நம்மை மறம்நின்றிருப்போர் என்றும் காட்டுவதற்கான சூழ்ச்சி” என்றான்.

சுபாகு “பெருஞ்செயல்களுக்கு முன்னால் தெய்வங்களின் எதிர்ப்புகள் எழும் என கேட்டதை இப்போது நம்புகிறேன். இயலுமா, பயனுண்டா, இழப்பவை என்னவென்று அறிவாயா, மீள இயலாதென்று எண்ணுக, இதைவிடவும் சிறந்த வழி பிறிதுள்ளது, இயல்வதை ஏற்று அமைவதே சிறப்பு, இன்னும் சற்று பொறுத்தமைக, விளைவுகள் எவையென்று இப்போது உரைக்கமுடியாது, ஊழுடன் பொருதுகிறாயா, மூத்தோர் சொல் கேள், வெற்றாணவம் இது, பெருவிழைவன்றி மற்றல்ல என்னும் பன்னிரு தடைச்சொற்கள் எழும் என்று நூல்கள் சொல்கின்றன. இங்கு அவையிலெழுபவை அவையே” என்றான்.

அசலை “நாம் பூசலிடவேண்டியதில்லை. அவையில் பேசிக்கொண்டவற்றுக்கு அப்பால் இங்கு நீங்கள் பேசப்போவதில்லை. அவையில் நம் குடித்தலைவரின் விழிநீர் விழுந்தது. அதுவன்றி அனைத்தும் வெற்றுச் சொற்களே” என்றாள். கௌரவ இளையோர் திகைத்தவர்களைப்போல அவளை நோக்கினர். “அரசர் சென்று தன் தந்தையை நோக்கி மீளட்டும். அவர் எந்நிலையில் அவையிலிருந்து நீங்கினார் என கண்டோம். எப்படி இருக்கிறார் என அறியோம்” என்றாள்.

துச்சாதனன் “இன்று அவையில் நிகழ்ந்ததில் நான் காண்பது பிறிதொன்று” என்றான். “ஒரே தருணத்தில் பிதாமகரும் ஆசிரியர் இருவரும் இளைய யாதவருடன் இணைந்துகொண்டுவிட்டார்கள். நம் படைவல்லமை என நாம் நம்புவது அவர்களின் வில்திறனையே” என்றான். “பிதாமகர் ஆணையிட்டால் அஸ்தினபுரியின் படைகளில் பெரும்பகுதி அவருடன் நிலைகொள்ளும். ஆசிரியர்கள் அறைகூவினால் வில்தேர்ந்த இளமைந்தர்களும் மீறமுடியாது. மூத்தவரே, நம் ஆற்றல் அனைத்தும் இன்று அயலாகிவிட்டன.”

துச்சலன் “நம்முடன் அங்கர் இருக்கிறார்” என்றான். துச்சாதனன் சீற்றத்துடன் “வாயை மூடு, மூடா. அங்கர் மாவீரர். ஆனால் பிதாமகரும் ஆசிரியர்களும் எண்ணினால் அங்கரையும் என்னையும் உன்னையும் அரசரையும் வென்று கைகால் பிணைத்து கொண்டுசென்று பாண்டவர் காலடியில் வீசமுடியும்” என்றான். அச்சொல் முடிவதற்குள் அவன் கன்னத்தில் துரியோதனன் ஓங்கியறைந்தான். கைகளால் கன்னத்தை பொத்திக்கொண்டு துச்சாதனன் பின்னடைந்து கால்மடித்து விழப்போனான். அசலை அவனை ஓடிச்சென்று தாங்கிக்கொள்ள அவன் அவளை உதறிவிட்டு எழுந்து கலங்கிய இடக்கண்ணுடன் உதடுகளை இறுக்கியபடி நின்றான். அவன் தாடை இறுகி அசைந்தது.

“என்மேல் போர்தொடுக்கின்றன தெய்வங்கள். காட்டு உன் ஆண்மையை என்கின்றன. காட்டுகிறேன்…” என்று துரியோதனன் சொன்னான். மேலுமேதோ சொல்பவன் என விம்மி பின் இரு கைகளையும் ஓங்கி அறைந்து பேரோசை எழுப்பினான். திரும்பி அறையைவிட்டு வெளியேறினான். அவனைத் தொடர்ந்து துச்சலனும் துர்மதனும் ஓடினர். சுபாகு

“மீண்டும் அவைக்கே செல்கிறார்” என்றான். பின்னர் அவனும் ஓடினான். அசலை துச்சாதனனின் கைகளை மீண்டும் பற்ற அவளை வன்மையாக உதறியபின் அவனும் அறையைவிட்டு வெளியேறினான்.

# குருதிச்சாரல் - 31

**பகுதி நான்கு : ஒளிர்பரல் – 6**

அசலையும் தாரையும் அவைக்குள் நுழைந்தபோது மீண்டும் அவை கூடத்தொடங்கியிருந்தது. பெண்டிரவையில் அவர்கள் இருவர் மட்டுமே சென்றனர். அனைத்துப் பீடங்களும் ஒழிந்து கிடந்தன. அசலை அவற்றை நோக்கிவிட்டு “இந்த அவைக்கு சொல்லப்பட்ட மிக ஆழ்ந்த மறுதலிப்பு இது என எண்ணுகிறேன், இளையவளே. எவராவது இதை கேட்பாராயின் நன்று” என்றாள். தாரை எதுவும் சொல்லாமலிருக்கவே திரும்பி நோக்கி “என்ன செய்கிறாய்?” என்றாள். அவள் கையை ஆடைக்குள் ஒளிக்க “என்ன அது?” என்றாள். “அக்கார அப்பம்” என்றாள் தாரை.

சீற்றத்துடன் “அறிவிலியா நீ? அதை எடுத்துக்கொண்டு வந்தாயா? அப்பால் வீசு” என்றாள் அசலை. அதை தாரை அடுத்திருந்த படிக்கத்திற்குள் போட்டாள். “அதை கையில் எடுத்துக்கொண்டா அரசரவைக்குள் நுழைந்தாய்?” தாரை தலையாட்டினாள். அசலை மேலும் நினைவுகூர்ந்து “அங்கே பூசல் நிகழ்ந்தபோது எதையோ வாயருகே கொண்டுசென்றாயே, அது இதுதானா?” என்றாள். தாரை “ஆம்” என்றாள். அசலை

நம்பமுடியாமல் சில கணங்கள் நோக்கிவிட்டு தலையை மெல்ல தட்டினாள்.

“என்னை எவரும் பார்க்கவில்லை” என மெல்லிய குரலில் தாரை சொன்னாள். “சரி” என்றாள் அசலை திரும்பாமல். “நான் ஆடைக்குள்ளும் கைக்குள்ளும்தான் வைத்திருந்தேன்…” அசலை சீற்றத்துடன் “சரியடி” என்றாள். தாரை “நான் திரும்பச்செல்கிறேன்” என்றாள். “ஏன்?” என்றாள் அசலை. “நீங்கள் என்னை வசைபாடுகிறீர்கள்.” அசலை புன்னகைத்து “சரி இல்லை, இங்கேயே இரு” என்றாள்.

தாரை சிரித்து அசலையின் தோளில் கைவைத்து “நான் அந்தப் பூசலை விரும்பினேன். உங்கள் துணைவர் அப்படியொரு சொல்லை அவரிடம் சொல்ல முடிந்ததே” என்றாள். அசலை “அது வீண்மொழி, வெறும் அச்சம்” என்றாள். “ஆனால் அவர் அரசரின் ஆடிப்பாவை. அவர் உரைத்தது அரசரின் அகத்தையே” என்றாள் தாரை. “ஆகவேதான் அவர் சினந்தோடிச் சென்றார்.” அசலை திரும்பி நோக்கி “மெய்” என்றாள். “அவையில் அவ்வச்சத்துக்கே அவர் எதிர்வினையாற்றுவார்…” என்றாள் தாரை. “எவ்வகையில்?” என்று அசலை கேட்டாள். “அதை சொல்லமுடியவில்லை” என்றாள் தாரை. “ஆம், மானுட இயல்பை அது வெளிப்பாடு கொள்ளும்வரை எவராலும் உணரமுடியாது” என்றாள் அசலை.

அவைக்குள் முக்கால்பங்கு குடிகள் வந்து அமர்வதற்குள்ளாகவே அரசர் அவைபுகுவதை நிமித்திகன் வந்து அறிவித்தான். சகுனி தன் ஏவலனுடன் புண்பட்ட காலை மெல்ல தூக்கி வைத்து அசைந்து நடந்துவந்தார். பீஷ்மர் தன் மாணவர் விஸ்வசேனரின் தோள்பற்றி நடந்து வந்து அவ்வறிவிப்பைக் கேட்டு புருவம் சுளித்து நோக்கினார்.

அவருக்குப் பின்னால் விரைந்து வந்த துரோணரும் கிருபரும் அவரைப் பணிந்து ஏதோ சொல்ல அவர் தலையசைத்தபடி தன் பீடத்தில் சென்றமர்ந்தார். விஸ்வசேனர் பீஷ்மரிடம் ஓரிரு சொற்கள் உரைத்தபின் பின்னால் சென்றமைந்தார்.

இளைய யாதவர் விகர்ணனுடன் இன்சொல்லாடியபடி அவைக்குள் நுழைந்து தன் இருக்கையில் அமர்ந்தார். விகர்ணன் அவரிடம் ஓரிரு சொற்கள் பேசியபின் யுயுத்ஸுவை அணுகி ஏதோ சொல்லிவிட்டு கௌரவர் நிரைக்கு சென்றான். அங்கு சிலரே இருந்தனர். அவர்கள் அவனை நோக்காமல் இறுகிய கழுத்துடன் அமர்ந்திருந்தார்கள். கணிகர் தன் இருக்கையில் கண்களை மூடி சீரான மூச்சுடன் துயின்றுகொண்டிருந்தார். அவரைச் சூழ்ந்து காலடிகளும் உலோக ஓசைகளும் எழுந்துகொண்டிருந்ததை அவர் அறியவேயில்லை.

கௌரவர்கள் சிறிய குழுக்களாக வந்து அமர்ந்துகொண்டிருக்கையிலேயே நிமித்திகன் சங்கூதியபடி அவைக்குள் நுழைந்து "அஸ்தினபுரியின் அரசர், குருகுலத்தோன்றல் துரியோதனர் அவைபுகுகிறார்!" என்று அறிவித்தான். அதைத் தொடர்ந்து துரியோதனன் கைகூப்பியபடி அவைக்குள் நுழைந்து அரியணை நோக்கி சென்றான். அனைத்து வாயில்களினூடாகவும் குடித்தலைவர்கள் முண்டியடித்து உள்ளே நுழைந்தார்கள். வாள்களும் பித்தளைக் குறடுகளும் முட்டிக்கொள்ளும் ஒலிகள் கேட்டன. ஒருவரை ஒருவர் அருகழைப்பதும் அமர்ந்து பெருமூச்சுவிடுவதுமாக அவர்களின் ஒலியால் அவை முழக்கம்கொண்டது.

மேலிருந்து துளி சொட்டிப் பரவி நிறைவதுபோல அவைப்பீடங்கள் வண்ணம் மாறிக்கொண்டே இருந்தன. விதுரர்

கைகாட்ட நிமித்திகர் அவைமேடையில் எழுந்து “அவையீரே, இந்தப் பேரவை சிற்றிடைநேரத்திற்குப் பின் இதோ மீண்டும் கூடியிருக்கிறது. இங்கு உசாவப்பட்டவற்றை அனைவரும் எண்ணித்தேர்ந்திருப்பீர்கள் என எண்ணுகிறோம். மீண்டும் சொல்சூழட்டுமென கோருகிறோம். நன்று சூழ்க!” என வாழ்த்தி தலைவணங்கி பின்னகர்ந்தார்.

அவை மெல்ல மெல்ல அமைதியடைந்தது. சற்று ஓசையுடன் பேசிய பின்நிரையினரை மூத்தவர்கள் அடக்கினர். அனைவரும் துரியோதனன் ஏதோ சொல்லப்போகிறான் என எதிர்பார்த்தனர் என்று தோன்றியது. அசலை கூறியதை தாரை எண்ணிக்கொண்டாள், அவர்கள் பொறுப்பை பிறர்மேல் சுமத்த விழைந்தவர்களாகவே தென்பட்டனர். சென்றபோதிருந்த கிளர்ச்சிக்கு மாறாக அவர்களின் முகங்களில் குழப்பமும் சூழ்ச்சியும் தெரிவனவாக இருந்தன. எதையோ கரந்து வைத்திருக்கும் கண்கள். விலகிச்சென்றுவிட்டது போன்ற உடலசைவுகள்.

“அவையினரின் சொற்களை அரசர் எதிர்நோக்குகிறார்” என்று யுயுத்ஸு கூறினான். அவை மேலும் மேலும் அமைதிகொண்டபடியே சென்று வெறும் விழிநிரை என ஆகியது. துரியோதனன் கைகளைக் கட்டியபடி அவையை உறுத்துநோக்கிய விழிகளுடன் அமர்ந்திருந்தான். அவை அவனை நோக்கியபடி இன்மையென்றாகி இருந்தது. தாரை இளைய யாதவரை நோக்கினாள். அவர் புன்னகையுடன் வழக்கம்போல வேறெங்கோ நோக்கிக்கொண்டிருந்தார். அந்தப் புன்னகையும் விலக்கியநோக்கும் அப்போது அவளுக்கு சினமெழுப்பின. நோக்கை விலக்கியபோது தன் உடல் சற்று பதறிக்கொண்டிருப்பதை உணர்ந்தாள்.

அவையின் அமைதி மெல்ல மெல்ல இறுகி தாளமுடியாததாக ஆகியது. அசலை "இவர்கள் ஒரு சொல்லும் உரைக்கப்போவதில்லை" என்றாள். யுயுத்ஸு "அவையின் எண்ணத்தை அரசர் அறியட்டும். அவைத்தலைவர்கள் தங்கள் கருத்துக்களை சொல்லலாம்" என்றான். அதன் பின்னரும் எவரும் எழவில்லை. ஓரிருவர் திரும்பி பிறரை நோக்கினர். நோக்கப்பட்ட சிலர் அசைவில்லாது அமர்ந்திருந்தனர். "இங்கு ஆசிரியர்களும் பிதாமகரும் காட்டிய நெறியை அவை ஏற்கின்றதா?" என்றார் விதுரர். அவையிலிருந்து எக்குரலும் எழவில்லை.

விதுரர் கனகரை நோக்க கனகர் "மாற்றுச்சொல் உள்ளவர்கள் எழுந்து அதை உரைக்கலாம்" என்றார். அவையின் அமைதியைக் கண்டபின் விதுரர் "மாற்றுச்சொல் இன்மை உடம்பாட்டை காட்டுகிறது. அரசருக்கு அவையின் செய்தி அதுவென்றால்..." என்று தொடங்க சகுனி "அமைச்சரே, ஒரு சொல்" என்றார். விதுரர் பெருமூச்சுடன் "ஆம், கூறுக!" என்றார். "இங்கு கணிகர் சொன்னதைப்பற்றியே நான் எண்ணிக்கொண்டிருந்தேன். பாதிநாடும் கருவூலச்செல்வப் பகிர்வும் நம்மையும் அவர்களையும் நிகரென்றாக்கும். இந்திரப்பிரஸ்தம் நம்மைவிட மேலானவர்களாக அவர்களை நிறுத்தும். இதை வணிகமும் அரசியலும் அறிந்தவர் எவரும் உணரமுடியும்" என்றார்.

விதுரர் தலையசைத்தார். "ஆனால் இங்கு நாம் அளிக்கும் வாக்குறுதி அவர்களுடன் ஒருபோதும் படைமுகம் கொள்ளமாட்டோம் என்று. அவர்கள் வளர்வதை நாம் நோக்கியிருப்பதாகவே அதற்கு பொருள். எப்போதும் எந்நிலையிலும் அவர்களை நாம் வெல்ல முயலமாட்டோம்

என்பதற்குப் பொருள் அவையமர்ந்துள்ள அரசரோ அவருடைய கொடிவழியினரோ ஒருபோதும் பாரதவர்ஷத்தின் சத்ராஜித் என மும்முடி சூடி அமரமுடியாதென்பதே. அவ்வுரிமையை முற்றாகக் கைவிட அரசருக்கு உரிமை உள்ளது. ஆனால் அதை தன் கொடிவழியினர்மேல் சுமத்த அவருக்கு உரிமை உண்டா?”

சகுனி அவையை நோக்கி மேலும் உரத்த குரலில் “இன்று நாமிருக்கும் நிலை என்னவென்று அறிவோம். நம் அரசரைச் சூழ்ந்துள்ளனர் பாரதவர்ஷத்தின் பெருவீரர்கள். பீஷ்மர், துரோணர், கிருபர், சல்யர், கர்ணன், அஸ்வத்தாமன், ஜயத்ரதன், கிருதவர்மன், ருக்மி என ஒரு பெருநிரை. அத்தனை ஷத்ரிய மன்னர்களும் ஒருகுடைக்கீழ் திரண்டுள்ளனர். பாரதவர்ஷத்தின் நீண்ட வரலாற்றில் ஒரு தருணத்திலும் இத்தகைய ஒரு நிலை ஒருங்குகூடியதில்லை. அதை கைவிடும்படி நம்மிடம் சொல்கிறார்கள். இப்போதைக்கல்ல எப்போதைக்குமாக. நூறுநூறு தலைமுறைவரைக்கும்” என்றார்.

“எதன்பொருட்டு? போரில் அழிவு வரும் என்னும் ஐயத்திற்காக. களம்காணமுடியாத தந்தை ஒருவரின் கண்ணீரின்பொருட்டு. நாளை நம்மை எண்ணி நம் மைந்தர் கசப்புடன், இழிவுடன் சிரிக்கும் வழியை சொல்கிறார்கள்” என்று சகுனி தொடர்ந்தார். “ஆம், இது அஸ்தினபுரியின் வழி. இதில் நான் சொல்வதற்கேதுமில்லை. ஆனால் நாங்கள் பாலைக் காந்தாரர்கள். பசித்த ஓநாயின் வழிவந்தவர்கள், வைத்த இலக்கைவிட்டு விழிவிலக்குவதில்லை. செத்துக் கிடக்கும் ஓநாயின் விழிகளை நீங்கள் கண்டிருக்கமாட்டீர்கள். அருகமர்ந்து அதன் இறுதி நோக்கின் கோணத்தில் உங்கள்

விழிகளை வைத்து நோக்கினால் அது செல்லவிருந்த திசையும் எண்ணியிருந்த இரையும் உங்களுக்கும் தெரியும்.”

“சென்றுகொண்டிருக்கையிலேயே மடிபவன் என்றோ சென்றடைவான். நின்றுவிட்டவனுக்கு நின்றுவிட்டவைகளினாலான இருளுலகம் காத்திருக்கிறது. இருளென்பது என்ன? அவையமர்ந்த இளையோரே, இன்மையும் நிலைகொள்ளலுமே இருள். ஒளியென்பது அசைவும் விரைவுமென்று அறிக! நாம் எழுந்துவிட்டோம், பாரதவர்ஷத்தின்மேல் நம் வாள் ஓங்கப்பட்டுவிட்டது. அச்சத்தால், ஐயத்தால், மெல்லுணர்வுகளால் நாம் நின்றுவிடவேண்டுமென்று மூத்தோரும் ஆசிரியர்களும் தந்தையரும் சொல்வார்கள் என்றால் அதை கொள்க! பாலைநிலத்து ஓநாய் ஒருபோதும் பின்னடி வைக்காது.” சகுனி தலைவணங்கி அமர்ந்துகொண்டார்.

விதுரர் “உய்த்துச்சொல்லல்களுக்கு இங்கு பொருளில்லை. நாம் கொடிவழியினரை கட்டுப்படுத்தும் சொல் எதையும் இங்கு அளிக்கவில்லை” என்றார். “சரி, அப்படியென்றால் எதுவரை இந்த ஒப்புகை நிலைகொள்ளும் என்று சொல்க! நம் மைந்தர் போரிட்டுக்கொள்ளலாமா? வழிமைந்தர்?” என்றார் சகுனி. “அன்று இந்நகர் மேலும் பெரிதாகிவிட்டிருக்கும். நம் குடி பன்மடங்காகியிருக்கும். இப்பூசலை இன்றே அழிக்காமல் வளர்த்து கொடிவழியினருக்கு அளித்துச்செல்லலாம் என எண்ணுகிறீர்களா?”

விதுரர் தத்தளிப்புடன் இளைய யாதவரை நோக்கினார். அது பயனற்றது என உணர்ந்து விகர்ணனை நோக்கினார். விகர்ணன் எழுந்து “இது எங்கள் குடிப்போர், மாதுலரே. நீங்கள் உங்கள் வஞ்சத்திற்குக் களமென இதை காணவேண்டியதில்லை”

என்றான். “நான் எவரையும் போருக்கு அறைகூவவில்லை... நான் இங்கிருப்பது என் அக்கையும் அரசரும் அளிக்கும் சொல்லின்படி. அவர்கள் சொன்னால் நாளையே என் படைகள் காந்தாரத்திற்கு கிளம்பும்” என்றார்.

“கிளம்புக, உங்களிடமிருந்து எழுந்தது இந்நகரை முழுக்காட்டியிருக்கும் நஞ்சு” என்றான் விகர்ணன். துச்சாதனன் எழுந்து “மூடா, அமர்க!” என்றான். “நான் சொல்வது...” என விகர்ணன் சொல்ல “இனி ஒரு சொல் எழுந்தால் உன் தலையை உடைப்பேன்” என்றான் துச்சாதனன். விகர்ணன் அமர்ந்து தலையை மறுப்பென ஆட்டினான். துச்சாதனன் “இந்த அவை அறிக! எங்கள் குலம் மாதுலருக்கு ஆட்பட்டது. அவர் குருதியே நாங்கள்” என்றான். மீண்டும் அவையில் அமைதி உருவானது.

அசலை “மீள மீள இந்த ஒற்றை வினாவிலேயே நிறுத்தியிருப்பார்கள். வேறெந்த வினாவும் எழவிடாது அடிப்பார்கள்” என்றாள். விதுரர் “அவை எடுக்கும் முடிவென்ன?” என்றார். அவையை நோக்கியபின் “ஒன்று செய்யலாம், இப்போது அவையை முறிப்போம். மீண்டும் நாளைமறுநாள் இந்த அவை கூடட்டும். அப்போது இளைய யாதவருக்குரிய மறுமொழியை அவையிலிருந்து எடுத்து அரசர் அளிக்கட்டும்” என்றார். யுயுத்ஸு “ஆம், அதுவே நன்று” என்றான். விதுரர் “அரசருக்கு மறுசொல் இல்லையென்றால் அவ்வாறே அறிவிப்போம்” என்றார். அவையினர் அனைவருமே அச்சொற்களால் ஆறுதல்கொண்டவர்களாக தெரிந்தனர். பறவைகள் எழுந்தபின் கிளை என இயல்பான உடலசைவுகளுடன் அவர்கள் எளிதானமை உள்ளங்கள் கிளம்பிவிட்டன என்று காட்டியது.

துரியோதனன் கைகளைத் தூக்கியபோது தாரை அதைத்தான் அவள் எதிர்பார்த்திருந்ததாக உணர்ந்தாள். அவை ஆழ்ந்த உளக்கிளர்ச்சியால் ஒளிகொண்ட விழிகளுடன் அண்ணாந்து நோக்கியது. அக்கணம் போருக்கு அவர் அறைகூவினால் படைக்கலங்களை உருவி வெற்றிவேல் வீரவேல் என்று கூவி எழுவார்கள் என தாரை எண்ணிக்கொண்டாள். துரியோதனன் "கணிகரே, நான் தங்களிடம் கேட்பது ஒரு வினாவே. நான் திருதராஷ்டிரரின் ஆணையை மீறும் வகை என்ன?" என்றான். கணிகர் திகைத்தவர்போல சகுனியை நோக்கிவிட்டு மெல்ல புன்னகைத்து "பல்லாண்டுகளுக்கு முன்னரே அதை சொன்னேன், சென்று உங்கள் தந்தைக்கு முன் நின்று நெஞ்சிலறைந்து அறைகூவுக. அவரை தனிப்போருக்கு அழைத்து கொன்று குருதி சூடுக! மணிமுடியும் குலமூப்பும் உங்களுக்குரியவையென்றாகும். லஹிமாதேவியின் நெறிநூல் காட்டும் வழி இது. மண்ணிலுள்ள அனைத்து நெறிகளிலும் தொன்மையானது. விலங்குகளையும் ஆள்வது" என்றார்.

துரியோதனன் "அது நடவாது. இன்றும் நான் அவருடன் அரைநாழிகைகூட களம்நிற்க முடியாது" என்றான். "ஆனால் அன்று அன்னை என எனக்கு ஆணையிட்டவர் இன்று வெறும் துணைவி என்று தன்னை வரையறுத்துரைத்து அவைநீங்கிவிட்டிருக்கிறார். இனி என்னை எதுவும் கட்டுப்படுத்தாது." அவன் கைகள் அரியணையின் கைப்பிடியைப் பற்றி உருட்டியபோது தோள்தசைகள் எழுந்தமைந்தன. "நான் சாவதற்காக கோரவில்லை, வெல்வதற்காக உன்னுகிறேன். அதற்கு ஷத்ரியர் அவையை நிறைவுசெய்தாகவும் வேண்டும். பறைக, வேதம் வகுத்த நெறிப்படி நான் திருதராஷ்டிரரை தந்தையல்ல என்று உதற வழியேதுமுள்ளதா?"

கணிகர் மெல்ல எழுந்து அமர்ந்து வாயை இருமுறை சப்புகொட்டி "வேதம் ஊருணி. ஆகவே அணுகுவதும் அகல்வதுமான ஓராயிரம் பாதைகளின் நடுப்புள்ளி அது. ஆனால் அந்நெறிகளை தாங்கள் கடைப்பிடிக்க வேண்டாமென்றே சொல்வேன்" என்றார். "சொல்க, என்ன வழி?" என்றான் துரியோதனன். "அவ்வழியை நான் பரிந்துரைக்கமாட்டேன். துறப்பதை மானுடர் செய்யலாகாது. ஏனென்றால் துறக்கவே வேதநெறி வழியுரைக்கிறது. அந்நெறிப்படி துறந்தபின் உளம் மாறி ஏற்க அது வழிகாட்டவில்லை" என்றார். கணிகர் துயின்று எழுந்தமையால் அவர் கண்களின் விளிம்புகளில் வெண்கோழைத் துளி அமைந்திருந்தது. அவர் அகிபீனா நுகர்ந்திருக்கலாமென்று தாரை எண்ணினாள்.

துரியோதனன் "முடிவை நான் எடுக்கிறேன், வழிகளை மட்டும் கூறுக!" என்றான். அவன் உன்னுவதை உணர்ந்துகொண்ட விதுரர் கைநீட்டி பதறிய குரலில் "அரசே, வேண்டாம். இது தீராப் பழி சேர்ப்பது. தெய்வங்களுக்கும் மூதாதையருக்கும் ஒவ்வாதது" என்றார். விகர்ணன் "என்ன வினவுகிறீர்கள், மூத்தவரே? எண்ணித்தான் பேசுகிறீர்களா?" என்றான். துச்சாதனன் "அவையில் அரசரை மறித்துப்பேச எவருக்கும் இடமில்லை. அமர்க!" என்றான். விதுரர் "பிதாமகரே…" என்றார். பீஷ்மர் வெறுமனே நோக்கி அமர்ந்திருக்க துரோணர் "அவர் தன் வினாவை முன்னெடுக்கட்டும். அவரை தடுக்கவேண்டியதில்லை" என்றார். விதுரர் "தந்தை மட்டுமல்ல அவர். இந்நகரின் நல்லறத்தெய்வங்களின் மானுட வடிவம். ஆயிரமாண்டுகளுக்கொருமுறையே அத்தகைய பிரஜாபதிகள் மண்ணிலெழுகிறார்கள்" என்றார்.

கிருபர் "அவர் வினாவை நாம் தடுக்கவேண்டியதில்லை, விதுரரே" என்றார். சகுனி "நீங்கள் எதை அஞ்சுகிறீர்கள், விதுரரே? அல்லது எவருக்காக பணிபுரிகிறீர்கள்?" என்றார். துரியோதனன் அச்சொற்கள் எதையும் கேட்காதவன்போல "சொல்லுங்கள் கணிகரே, எப்போது ஒருவன் தன் தந்தையை துறக்க வேதம் வழிகாட்டுகிறது?" என்றான். கணிகர் வாயின் மூலைகளை மேலாடையால் துடைத்தபடி "அரசே, ஐம்பெரும்பழிகளுமே மானுடரை குலநீக்கமும் குடிவிலக்கும் செய்ய போதுமானவை. ஆனால் தொல்நெறிகள் ஐம்பெரும்பழிகளுமே அரசருக்குப் பழியல்ல என்று கூறுகின்றன" என்றார்.

"தங்கள் தந்தை அரசகுடியினர், பேரரசர் என இன்றும் அவைமுதன்மை கொண்டவர். அரசனை ஒறுக்கவும் அகற்றவும் வேறு ஐந்து குற்றங்களே கூறப்படுகின்றன. தெய்வப்பழி கொள்ளல், வேதப்பழி கொள்ளல், குலவஞ்சம் இழைத்தல், குடிகளை அழித்தல், மைந்தரை ஒறுத்தல். ஐந்தில் எவற்றை இழைத்திருந்தாலும் அவரை அக்குலம் விலக்கலாம். குடிமூத்தோர் அகற்றலாம். குடியும் குலமும் ஒருவரை விலக்கியதென்றால் துணைவியும் மைந்தரும் அவரை விலக்குவது ஏற்கப்படுவதே."

"இவ்வைந்தில் எப்பிழையும் ஆற்றாத தந்தையை மைந்தன் துறக்கலாகுமா?" என்றான் துரியோதனன். "ஆம், அதற்கும் நெறியுள்ளது. ஐந்து நிலைகளில் ஒருவன் தந்தையை துறக்கலாம். துறவுபூண்டு கானேகும்போது, ஒற்றைப்பெருந்தெய்வத்திற்கு தன்னை முழுதளித்து பெருநோன்பு கொள்கையில், பிறிதொரு குடிக்கு தன்னை மைந்தன் என அளிக்கையில், குலத்தின்பொருட்டு

தற்பலியளித்து மாள்கையில், அரக்கரிடமோ நிஷாதரிடமோ சிக்கி மாண்பிலா இறப்புக்குச் செல்கையில் என அவை வகுக்கப்பட்டுள்ளன” என்றார் கணிகர்.

“அரசே, தந்தைக்கு நீத்தார்கடன் செய்யும் பொறுப்பைத் துறப்பதற்கும், தந்தையின் ஆணையால் நோன்பு குறைவுபடாமலிருக்கவும், தன்னை ஏற்ற குடியிலிருந்து பிறழ்வு நிகழாதிருக்கும்பொருட்டும், தந்தை தனக்கு நீர்க்கடன் செய்யாதொழியும்பொருட்டும், தந்தைக்கு பழிவந்து சூழாமலிருக்கும்பொருட்டும் அவன் அதை செய்யலாம்” என்று கணிகர் தொடர்ந்தார். “அதர்வவேத நெறிகளின்படி அழியாச் சொல் ஒலிக்க அனலுக்கு அவியிட்டு அதை இயற்றுவது ஒரு வழி. புல்லாழி கையிலணிந்து நீராலோ குருதியாலோ மும்முறை விரலுதறி அகல்க அகல்க அகல்க என்று கூறி முற்றறுத்துச் செல்வது பிறிதொரு வழி. இவை ஒவ்வொன்றையும் இயற்றியவர் இப்புவியில் பலர் உண்டு. எல்லா வழிகளும் வேதம் நோக்கியவையே என்று அறிக!” என்று கணிகர் சொன்னார்.

துரியோதனன் தன் கைகளால் இருக்கையின் பிடியை இறுகப்பற்றியபடி நெற்றிநரம்புகள் புடைத்து எழ பற்கள் கிட்டித்ததுபோன்ற குரலில் “இவற்றில் இரண்டாவது வழியை விளக்குக!” என்றான். கணிகர் வெண்பற்கள் தெரிய சிரித்து “அரசே, தன்னையன்றி பிறிதை தன் அடியான் ஏற்க ஒப்பாத கொடுந்தெய்வங்கள் பல உள்ளன. முற்றொப்புதலன்றி அவற்றை அணுக பிறிதொரு வழியில்லை. சிம்மர், ருத்ரர், பைரவர், பத்ரர், யமன், கங்காளி, மூத்தாள், வராகி, அறுதலையாள், சாமுண்டி, சண்டி, கலி என்னும் பன்னிரு தெய்வங்களும் பிற எண்ணம் எழுவதை விரும்பாதவர்கள் என்பது மரபு.

தலையறுத்துத் தரக் கோரும் தெய்வங்கள் உண்டு. தந்தையையும் மைந்தரையும் குருதிப்பலி கொடுக்க ஆணையிடும் தெய்வங்களும் உண்டு” என்றார்.

“அத்தெய்வங்களை அடைய எண்ணுபவன் தன் பிற பற்றுகள், உணர்வுகள், விருப்புகள் அனைத்தையும் முற்றறுக்கவேண்டும். வஞ்சங்கள், எண்ணங்கள், வெறுப்புகள் அனைத்தையும் அகற்றிவிடவேண்டும். இப்புவியில் உறவென்றும் கடன் என்றும் அறமென்றும் நன்மை என்றும் புகழென்றும் ஆகி கவர்ந்திழுக்கும் எதற்கும் அவன் ஆட்படலாகாது. இழிவென்றும் பழியென்றும் துயரென்றும் அழிவென்றும் ஆகி அச்சுறுத்தும் எதற்கும் உளம் கொடுக்கலாகாது” என்றார் கணிகர்.

“ஆகவே அவர்கள் மலத்தை உண்பதுண்டு. பிணத்தைப் புணர்வதுண்டு. எரியில் அமர்வதுண்டு. ஊன்மட்கும்வரை உண்ணாமல் அமைவதுண்டு. கொடுநோன்புகள் ஒவ்வொன்றும் அத்தெய்வங்களுக்குமுன் தன்னை காட்டுவதேயாகும். அகன்றிருந்து விழியொளிர அவை நோக்கிக்கொண்டிருக்கின்றன. நோன்பு முழுத்தவன் அத்தெய்வத்திற்கு நிகரானவன் ஆகிறான். எழுந்து வந்து அவை அவனை அள்ளி நெஞ்சோடணைத்துக்கொள்கின்றன. விழைவதை அருள்கின்றன.”

நடுங்கியமைந்திருந்த அவையை புன்னகையுடன் விழியோட்டி நோக்கி கணிகர் தொடர்ந்தார் “அந்நோன்பு கொண்டவர்கள் தங்கள் முதற்தெய்வத்தின் முன்னிலையில் நீராலோ குருதியாலோ உறுதிபூண்டு உறவுகளை உதறிச்செல்வார்கள். ஒவ்வொரு தெய்வத்திற்கும் அதற்குரிய சடங்குகள் உள்ளன. அவ்வாறு தன்னை அளித்தவன் அணுவிடை நோன்பு

தவறினாலும் அத்தெய்வம் அவனை அறைந்து சிதறடிக்கும். மறுகரை இல்லா இருளுலகுக்கு இட்டுச்செல்லும்.”

“அரசே, மீட்பின்மை என்னும் பெருந்துயரில் புழுக்களெனத் துழாவி உழலும் பலகோடி ஆத்மாக்களால் ஆனது அப்பெருநரகு என்பார்கள். அதை மகாதாமஸம் என்று நூல்கள் வகுக்கின்றன. தான் என்று தருக்கி தன்னால் விழைவு பெருக்கி இயலுமென்று மயங்கி ஊழின் ஒருகணத்தில் எழுந்து அந்நோன்பை கொள்கிறார்கள் மானுடர். வென்றவர்கள் உண்டு, அவர்கள் அத்தெய்வங்களால் இப்புவியை முழுதாளவும் விண்ணில் அழிவிலாது திகழவும் செலுத்தப்படுகிறார்கள். அவர்கள் மிகச் சிலரே. உதிர்பவர்களே பெரும்பாலானவர்கள்.”

“அவர்களின் கதைகளை அறியாதவர்கள் இங்கில்லை. ஆயினும் அத்தெய்வங்களை நோக்கி சென்றுகொண்டே இருக்கிறார்கள். ஆழம் பெருங்கவர்ச்சி கொண்டது. அடியிலி முடிவிலாது ஈர்ப்பது. அக்கொடுந்தெய்வங்கள் கணந்தோறும் நிழல்பெருக்கும் ஆற்றல் கொண்டவை. அந்நிழல்கள் ஒவ்வொன்றும் அத்தெய்வங்களின் படைக்கணங்கள். ஒவ்வொருவரிலும் எழுந்து என்னால் இயலும் ஏனென்றால் நான் பிறிதொருவன் என்று நம்பவைக்கின்றன அவை. அவ்வாணவத்தால் தூண்டிலிட்டு அவனை இழுத்துச்சென்று தங்கள் தலைத்தெய்வத்தின் காலடியில் வீழ்த்துகின்றன.”

“அரசே, அறிக! ஆகவேதான் நிழல் நோக்காதே என்று மைந்தரிடம் சொல்லி வளர்க்கிறார்கள் நம் அன்னையர். நிழல் கண்டவன் தன் மெய்யுருவுக்கு மீளவியலாது” என்று சொல்லி கைகூப்பி மெல்ல அமைந்தார் கணிகர். இரு விழிகளும் சரிந்து, இடக்கை மீசையை நீவிக்கொண்டிருக்க துரியோதனன் தன்னுள் அமைந்து அசைவிழந்திருந்தான். அவனை

நோக்கியபடி அவை உறைந்திருந்தது. விழிநீர் வழிந்து பளபளத்த கன்னங்களுடன் விதுரர் அறியாது நெஞ்சில் கூப்பியமைந்த கைகளுடன் அமர்ந்திருந்தார்.

தாரை இளைய யாதவரை நோக்க அஞ்சினாள். அறியாத கொடுந்தெய்வமொன்று அங்கே அமர்ந்திருக்கக்கூடும் என்று தோன்றியது. அவள் விழிதிருப்பியபோது துரியோதனனுக்குப் பின்னால் எழுந்த பெருநிழலை கண்டாள். மூச்சொலியுடன் அசலையின் கைகளை பற்றிக்கொண்டாள். "என்னடி?" என்று சலிப்போசையுடன் அசலை கேட்டாள். "அங்கே" என்றாள் தாரை. "என்ன?" என்றாள் அசலை. தாரை கண்களை மூடிக்கொண்டாள்.

விதுரர் எழுந்து நடுங்கும் குரலில் "ஆனால் இந்த நிலத்தின் அரசர் இன்னும்கூட திருதராஷ்டிரரே, தந்தையை துறப்போர் தன் முடியையும் துறக்கவேண்டியிருக்கும்" என்றார். சகுனி "அல்ல, அவருக்கும் அவர் தந்தைக்கும் முடியளிப்பது இக்குடியவை. அன்று முடிகொண்டிருந்தவர் திருதராஷ்டிரர், அவர் மைந்தர் என்று கோலேந்தியிருந்தார் துரியோதனர். இன்று அவர் அஸ்தினபுரியின் முடிசூடி அமர்ந்திருக்கிறார். அவரை வென்று முடிகோருபவர்கள் களம் வந்து நிற்கவேண்டும். இக்குடியவையை வென்றமையவேண்டும்" என்றார். விதுரரின் கைகள் நெஞ்சில் இணைந்து அமைந்து நடுங்கின. கால் தளர்ந்து அவர் இருக்கையிலமர்ந்தார்.

துரியோதனன் எழுந்து ஓங்கி அவைநிறைத்த குரலில் "அவையோர் அறிக! மூத்தோரும் ஆசிரியரும் அறிக! இதோ அறிவிக்கிறேன், என்னை என் தெய்வத்திற்கு முற்றளிக்கவிருக்கிறேன். இனி நான் கலிதேவனுக்கு மட்டுமே ஆட்பட்டவன். எந்தையை என் தெய்வத்தின்பொருட்டு

விலக்குகிறேன். ஆகவே அவருடைய ஆணையோ கண்ணீரோ என்னை இனி ஆள இயலாது" என்றான். இரு கைகளையும் இரப்பவர்போல நீட்டி விதுரர் கண்ணீர்விட்டார். விகர்ணன் திகைத்து எழுந்து நின்றான். ஆனால் அவையினர் விழியசையாமல் அமர்ந்திருந்தனர்.

"அரசன் என்று இனி இங்கிருந்து நான் ஆள்வது என் தெய்வத்தின்பொருட்டே. இந்நாடும் குலமும் என் தெய்வத்திற்குரியவை என்று அறிவிக்கிறேன். இந்த அவை அதை ஏற்குமெனில் இக்கோலையும் முடியையும் ஏந்துகிறேன். என் இளையோர் உடனிருப்பார் என்றால் அவர்களையும் என் தெய்வத்திற்கே ஆட்படுத்துகிறேன். அவையும் உடன்பிறந்தாரும் என்னை மறுதலிப்பார்களேயானால் இங்கிருந்தே இறங்கி நடந்து என் தெய்வத்திடம் சென்று சேர்கிறேன். ஆணை!" என்றான்.

அவையிலிருந்த முதிய குடித்தலைவர் ஒருவர் வெறியாட்டு கொண்டவர்போல் எழுந்து இரு கைகளையும் விரித்து உரத்த குரலில் "எங்கள் குடித்தெய்வம் நீங்களே. உங்கள் சொற்களே எங்களுக்கு வேதம். எந்தையே! அரசே!" என்று கூவினார். அவையிலிருந்தவர்கள் அனைவரும் அலைசுருள்வதுபோல எழுந்து கைகளையும் கோல்களையும் தூக்கி ஆட்டி "துரியோதனர் வெல்க! கலிமைந்தர் வெல்க! அஸ்தினபுரி வெல்க!" என்று கூவினர். "வெல்க கலி! வெல்க கரிவடிவோன்! வெல்க இருளுருவன்!" என்று ஒருவர் ஆர்ப்பரிக்க அனைவரும் இணைந்து முழங்கினர். வெறிகொண்ட முகங்கள். சீறுவனபோல திறந்த வாய்கள். நோக்கிழந்து வெறிப்புகொண்ட விழிகள்.

தாரை நடுங்கிக்கொண்டிருந்தாள். அசலையின் தோளுடன் நன்றாக ஒட்டிக்கொண்டாள். துரியோதனன் கையசைக்க ஓசைகள் அணைந்தன. "கேளுங்கள் இளைய யாதவரே, கலியமர்ந்த தலையுடன் இவ்வரியணையில் இருந்து இதோ சொல்கிறேன். இந்த அஸ்தினபுரி எனக்குரியது. இதன் ஒவ்வொரு பருமணலும், ஒவ்வொரு துளிநீரும், ஒவ்வொரு உயிரும் என் தலைவனின் உடைமை. இதில் எவருக்கும் பங்களிக்க இயலாது. இங்கிருந்து எழும் பெருங்காகத்தின் சிறகுகள். இந்த பாரதவர்ஷமே என்னுடையது. இவ்விரிநிலத்தில் ஒவ்வொன்றும் என் தலைவனுக்குரியது. ஆம், இதுவே என் ஆணை!"

மீண்டும் வெறிகொண்டு கூவத் தொடங்கியது அவை. தலைப்பாகைகளை எடுத்து வீசி கோல்களை வீசிப்பற்றி கைவீசி எம்பிக்குதித்து கூச்சலிட்டனர். தாரையின் தலைக்குள் வீணைக்குடம் என ரீங்காரம் நிரம்பியது. இடமும் காலமும் மறைந்தன. அவள் தோளைப்பற்றி "எழுக... செல்வோம்!" என்றாள் அசலை. அவள் அசலையின் வலுவான கைகளால் தூக்கப்பட்டு அவள் உடலுடன் இணைந்து மெல்ல நடந்தாள். மறுதோளை சேடி பற்றிக்கொண்டாள். குரல்கள் உடலைத் தொடமுடியுமென்று உணர்ந்தாள். மெல்லிய இறகுத் தொடுகை. கருமையின் தொடுகை, காகச்சிறகுகள்.

# குருதிச்சாரல் - 32

## பகுதி ஐந்து : நிலநஞ்சு – 1

சேதிநாட்டு அரசியர் பிந்துமதியும் கரேணுமதியும் இந்திரப்பிரஸ்தத்திலிருந்து உபப்பிலாவ்யத்திற்கு வந்துசேர்ந்தபோது முன்மதியம் எழுந்து நகர்மேல் வெண்ணிற வெயில் அலைகொண்டு நின்றிருந்தது. தேர் நகரத்தின் சிறிய தெருக்களினூடாக எதிரே வந்த தேர்களுக்கும் பல்லக்குகளுக்கும் வழிவிட்டு ஒதுங்கியும் இருபுறமும் முட்டி மோதிய மக்கள் திரளை ஊடறுத்தும் அரண்மனையை சென்று சேர இரண்டு நாழிகைக்குமேல் பொழுதாகியது. தேரின் கூரைக் கும்மட்டம் வெயிலில் வெந்து உள்ளே அனலை இறக்கியது. காற்றிலாமல் திரைச்சீலைகள் அசைவிழந்து சகட அசைவுக்கேற்ப மெல்ல நலுங்கின.

கரேணுமதி மயிலிறகு விசிறியால் வீசிக்கொண்டு வாயைக் குவித்து காற்றை ஊதினாள். வியர்வை வழிய அமர்ந்திருந்த பிந்துமதி திரைச்சீலையை சற்றே விலக்கி சாலையில் நிறைந்த மக்களை பார்த்தாள். “ஏன் இத்தனை நெரிசல்?” என்று அவள் திரும்பாமலேயே கேட்டாள். கரேணுமதி மறுமொழி கூறவில்லை. “மிகச் சிறிய நகர். அதற்குப் பொருந்தாத பலர் நகருக்குள் புதிதாக வந்து நிறைந்திருக்கிறார்கள் போலும்” என்றாள் பிந்துமதி. கரேணுமதி “தெற்கிறங்கும்தோறும் வெம்மை மிகுகிறது. இந்திரப்பிரஸ்தத்தில் இருந்து நாம் பெரிய தேர்களில் கிளம்பியிருக்கவேண்டும், இந்தச் சிறுதேரே விரைவு மிக்கது என்று சொன்னதை நம்பிவிட்டோம்” என்றாள்.

பிந்துமதி சாளரம் வழியாக நோக்கி “இங்கே முகங்களில் ஒருமையே இல்லை” என்றாள். கரேணுமதி “ஆம், படைப்பிரிவுகளை விராடபுரிக்குள்ளும் எந்நாட்டுக்கும்

உரித்தல்லாத பொதுக்காட்டுநிலங்களிலும்தான் திரட்டிக்கொண்டிருக்கிறார்கள். ஆயினும் இந்நகருக்குள் படைத்தலைவர்களும் ஒற்றர்களும் படைச்சிற்பிகளும் பிறரும் வருவதை தடுக்க இயலாது. அவர்களுக்கு உரியவற்றை அளிக்கும் வணிகரும் அவர்கள் புகழ்பாடும் பாணரும் வந்துகொண்டேதான் இருப்பார்கள்" என்றாள். பிந்துமதி திரைச்சீலையை மூடியபின் களைப்புடன் இருக்கையில் சாய்ந்து "நெடும்பொழுது" என்றாள்.

"ஆம், அங்கிருந்து கிளம்பும்போது தொலைவு தெரியவில்லை. நகரை பார்த்த பின்னர் அரண்மனைவரை செல்வதற்கு இத்தனை பொழுதென்றால் சலிப்பு மிகுகிறது" என்றாள் கரேணுமதி. சகடம் ஒரு குழியில் விழுந்து அதிர தேருக்குள் மூலையில் உடல் ஒடுக்கி துயின்றுகொண்டிருந்த முதிய சேடி மாலதி எழுந்து வாயை துடைத்தபின் மலங்க விழித்தாள். பிந்துமதி காலால் அவளை உதைத்து "எழுந்திரடி, அரண்மனை நெருங்கிக்கொண்டிருக்கிறது" என்றாள். மாலதி தன் புன்குழலை கையால் சுழற்றி கொண்டையிட்டு மேலாடையை திருத்தியபின் எழுந்து ஆடும் தேர்த்தூணைப் பற்றியபடி நின்றாள். திரையை விலக்கி வெளியே பார்த்து "அரண்மனை உட்கோட்டை தெரியவில்லை, அரசி" என்றாள். பிந்துமதி "நீ கீழிறங்கிச் சென்று தெருவில் மறித்துக் கூத்தாடும் இக்கீழ்மக்களை விரட்டு. எவ்வளவு பொழுதுதான் சாலையில் முட்டி மோதுவது?" என்றாள். கரேணுமதி இகழ்ச்சியுடன் புன்னகைத்து "இவள் சென்றால் இக்கூட்டம் அதை செவிகொள்ளுமா என்ன? அத்தனை பேரும் திரண்டெழுந்து போருக்குச் சென்று தலையுடைந்து களத்தில் விழும்பொருட்டு துடித்துக்கொண்டிருக்கிறார்கள்" என்றாள்.

பிந்துமதி சிரித்து “ஆம், அதை நானும் உணர்ந்தேன். போர் அணுகிவிட்டது எனும்போதே இம்மக்கள் களிவெறி கொள்கிறார்கள். இறப்பு அத்தனை உவகையுடையதென்று இக்கீழ்மக்களின் முகத்தைப் பார்த்தாலொழிய எண்ணமாட்டோம்” என்றாள். கரேணுமதி “போர் எத்தனை பொறுப்புகளிலிருந்து விடுவிக்கிறது! மைந்தருக்காக உடைமைகள் சேர்க்கவேண்டியதில்லை. நாளை என எண்ணி கவலைகொள்ள வேண்டியதில்லை. இன்று மட்டுமே உள்ளது எனும்போது எழும் விடுதலை அவர்களை இயக்குகிறது” என்றாள்.

எண்ணியிராக் கணத்தில் சினம்கொண்டு பிந்துமதி கையை ஓங்கி “என்னடி சொல்லிக்கொண்டே இருக்கிறேன், வீணே நின்றுகொண்டிருக்கிறாய்?” என்றாள். மாலதி அச்சினத்தை பலமுறை கண்டவள் என்பதால் கைகளைக் குவித்து தோள்களை ஒடுக்கி நின்றாள். “இறங்கிச் சென்று சொல் தேரோட்டியிடம், இன்னும் சற்று நேரத்தில் அரண்மனைக்கு தேர் சென்றுசேரவில்லையென்றால் நானே இறங்கிச்சென்று அவனை சவுக்கால் அடிப்பேன் என்று” என்றாள் பிந்துமதி.

மாலதி மெல்ல “வெளியே இக்கூட்டத்தை ஒதுக்கி நமக்கு வழி உருவாக்க துணைக்கும் படைவீரர்கள் எவருமில்லை, அரசி” என்றாள். “இங்கு செல்லும் வீரர்கள் எவரையாவது அழை. அதையும் நான் உனக்கு சொல்லவேண்டுமா?” என்று பிந்துமதி பற்களைக் கடித்தபடி சொன்னாள். மாலதி திரையை விலக்கி தலையை வெளியே நீட்டி எட்டிப்பார்த்தாள். அங்கு வேலுடன் சென்று கொண்டிருந்த நான்கு வீரர்களில் ஒருவனை கைதட்டி அழைத்து “ஒரு சொல் கேளும் வீரரே, பாண்டவர்களின் அரசியர் உள்ளே இருக்கிறார்கள். அவர்கள் அரண்மனைக்கு

செல்லவேண்டும். இத்திரளை விலக்கி வழி அமைத்துக்கொடுங்கள்” என்றாள்.

அவன் முகம்சுருங்க “எந்த நாட்டரசி?” என்றான். “சேதி நாட்டரசியர் கரேணுமதியும் பிந்துமதியும்” என்றாள் மாலதி. அவன் தன் அருகே நின்ற பிற வீரனை பார்த்துவிட்டு “நாங்கள் அவர்களை கேள்விப்பட்டதே இல்லை. இலச்சினை என ஏதுமுள்ளதா?” என்றான். சேடி திரும்பி பிந்துமதியை பார்க்க பிந்துமதி திரையை விலக்கி அவனை நோக்கி “மூடா, இச்சொற்களுக்காக உன்னை அரண்மனைக்குச் சென்றதுமே கழுவேற்றுவேன். அறிவிலி, உன்னிடம் நான் யாரென்று நிறுவ வேண்டுமா?” என்றாள்.

அவள் கொண்ட சினம் வீரர்களை குழம்பச் செய்தது. “தாங்கள் அரசி என்பதை இந்தச் சொற்களிலிருந்து புரிந்துகொள்கிறோம். எளிய மக்கள் இப்படி சொல்லமாட்டார்கள். இதோ வழி உருவாக்குகிறோம்” என்று சொன்ன முதிய வீரன் பிறிதொருவனின் தோளைத் தட்டியபடி முன்னால் சென்றான். “அறிவிலி… அவனுக்கு நற்சொல் புரியவில்லை. சவுக்குகளால் மட்டுமே ஏவப்படும் விலங்கு” என்றபடி பிந்துமதி சாய்ந்தமர்ந்தாள்.

கரேணுமதி “அவன் உன்னை ஏளனம் செய்துவிட்டுப் போகிறான்” என்றாள். “யார்?” என்றாள் அவள். “அவன் என்ன சொன்னான் என நீ செவிகொள்ளவில்லையா?” என்றாள் கரேணுமதி. “கேட்டேனே, நான் அரசி என்று தெரிகிறது என்றல்லவா சொன்னான்?” என்றாள் பிந்துமதி. கரேணுமதி புன்னகைத்து வெறுமனே அமர்ந்திருந்தாள். பிந்துமதி “இவர்கள் விராடபுரியின் வீரர்கள் என்று எண்ணுகின்றேன். நம்மை முன்னர் அறிந்திருக்கவில்லை” என்றாள். கரேணுமதி

மறுமொழி சொல்லாததை உணர்ந்து “விராடர்கள் நிஷாத குலத்திலிருந்து எழுந்தவர்கள். முறைமையும் நெறிகளும் இன்னும் முழுதுருவாகாத நாடு அது” என்றாள் பிந்துமதி.

கரேணுமதி “அக்குடியில் பிறந்த அரசமகளே இந்திரப்பிரஸ்தத்தின் அரியணையில் நாளை அமரப்போகும் மைந்தனை பெறவிருக்கிறாள்” என்றாள். பிந்துமதி இதழ் சுளித்து “உகந்ததே. இங்கிருந்து மைந்தனென எழுந்து அவளை மணந்த இளவரசன் நற்குருதியினனா என்ன? யாதவர்கள் என்றைக்கு ஷத்ரியர்களாக ஆனார்கள்?” என்றாள். இருவரும் ஒருவரை ஒருவர் விழிதொட்டு விலக்கிக்கொண்டனர். அசைவுகளால் ஒருவர் சினத்தை பிறிதொருவர் தூண்டுவது அவர்களின் வழி என்பதனால் ஒவ்வொருவரும் பிறரை அதன்பொருட்டே விழிநாடினர்.

“ஆனால் அவனை நம் குடியில் நிகரற்ற வீரன் என்று சொல்கிறார்கள்” என்றாள். பிந்துமதி “களத்தில் வென்று எதிரியின் தலைகொண்டு வந்தவனல்லவா? நன்று” என்றாள். “அவன் களம்வென்றிருக்கிறான்” என்றாள் கரேணுமதி. பிந்துமதி “ஐம்படைத்தாலியுடன் சென்று வென்றுவந்த கதைகளா? அவற்றை சூதர் நம்மிடம் சொல்லமாட்டார்கள். ஐந்துமடங்கு படைகளுடன் கூண்டுத்தேரில் குழந்தையை வைத்து அனுப்பி கைதேரா சிறுவேந்தரை களத்தில் வென்று கதைகளை உருவாக்கினார்கள்…” என்றாள். “ஆற்றலிருந்தால் விதர்ப்பத்திற்கு அனுப்பி ருக்மியை வென்றுவரச் சொல்லலாமே? மைந்தன் புகழில் எவருக்கும் ஐயமிருந்திருக்காதே.”

“அவன் பாணாசுரனை வென்றான்” என்றாள் கரேணுமதி. “ஆம், துணைக்கு இளைய யாதவரும் சாத்யகியும் பிரத்யும்னனும்

இருந்தனர்” என்றாள் பிந்துமதி. “தந்தை அம்பெடுத்துக் கொடுத்து வில்லையும் தாங்கினால் அவன் இந்திரனையும் வெல்வான்.” கரேணுமதி சிரிப்பை வாய்க்குள் அடக்கியபடி “பயிற்சிக்களத்தில் அவன் இலக்குகள் பிழைபட்டதே இல்லை என்கிறார்கள்” என்றாள். “யார் சொல்கிறார்கள்?” என்றாள் பிந்துமதி. “அவனுக்கு பயிற்சியளித்தவர்கள்” என்றாள் கரேணுமதி. “மக்கள் சொல்கிறார்களா?” என்றாள் பிந்துமதி. “அரசன் என்பவன் படைக்கலங்களுடன் சென்று எதிரியை வென்று மீள்பவன். களிக்களத்தில் நின்று வானில் செல்லும் பறவைகளின் இறகுகளை வீழ்த்தி மகிழும் சிறுவனல்ல.”

“அவ்வாறல்ல, அவன் கூர்திறன் கொண்டவனே” என்றாள் கரேணுமதி. “யாதவர்களுக்கு இலக்குதேர் திறன் மிகுதி. வளைதடியை வீசி பழங்களை உதிர்த்துப் பழகிய கைகள். உணவுக்கென பறவைகளை வீழ்த்தித் தேர்ந்த கண்கள்.” பிந்துமதி “போரென்பது பிறிதொன்று. எதிரி முன் நிலைதடுமாறாத உள்ளமும் பயிற்சி மறவாத உடலும் கொண்டிருத்தல் அது. அதற்கு தூய குருதி வேண்டும்” என்றாள். “இவற்றை எல்லாம் நாம் எந்த அவையில் சொல்லப்போகிறோம், இந்தத் தேர் சதுரத்துக்குள் அல்லாமல்?” என்றாள் கரேணுமதி. “சொல்லும் தருணம் வாய்க்கும். அப்போது சொல்வோம்” என்று பிந்துமதி சொன்னாள்.

இருவரும் வெறுப்பில் உறைந்த முகத்துடன் அமைதியாக இருந்தனர். பின்னர் பிந்துமதி இகழ்ச்சியுடன் இதழ் வளைத்து “அவன் என்ன தன் அரசியுடன் ஆறாண்டு காலம் கொஞ்சி மகிழ்ந்துவிட்டா துவாரகைக்கு சென்றான்? பற்றவைத்துச் செல்வதற்கு அவனிடம் இருப்பதென்ன கொள்ளிக்கட்டையா?” என்றாள். “இது நாம் பேசவேண்டியதல்ல” என்று சொன்னாள்

கரேணுமதி. ஆனால் அவள் முகத்தில் ஒரு வஞ்சப் புன்னகை இருந்தது. “நாம் பேசாவிட்டால் நம் எதிரிகள் பேசுவார்கள். நாளை இந்திரப்பிரஸ்தத்தின் அரியணையில் அவள் பெறும் மைந்தன் அமர்வான் என்றால் அவன் குருதியின் மெய்யென்ன என்ற வினாவே முதன்மையாக எழும். சூதர் கண் தொடாத இடமேதும் மண்ணிலில்லை.”

கரேணுமதி “இதை இப்போது நாம் பேசினால் காழ்ப்பென்றே எண்ணுவார்கள்” என்றாள். “காழ்ப்பேதான். அரசகுடியினருக்கு அல்லாதவரை காணுகையில் எழும் ஒவ்வாமை இது. ஏனெனில் இந்த நிலம் ஷத்ரியர்களால் உருவாக்கப்பட்டது. வேலியிட்டுக் காத்து பயிர் மேலெழும்போது அறுவடைக்கு ஷத்ரிய மாற்றுருக்கொண்டு வந்தவர்கள் இந்த யாதவரும் நிஷாதரும் கிராதரும் பிறரும். அவர்களை வென்றழிப்பதே ஷத்ரிய அறம். அதை நூல்கள் தெளிவாகவே சொல்கின்றன.” பிந்துமதி “அதற்கு நம் மைந்தர் தங்களை ஷத்ரியர் என்று உணரவேண்டும் அல்லவா?” என்றாள்.

“அவர்களும் வழித்தூய்மை கொண்டவர்கள் அல்ல” என்று கரேணுமதி ஓங்கிய குரலில் சொன்னாள். “எப்போது இவர்களுக்கு நாம் அரசியரானோமோ அப்போதே திரிந்த குருதியை ஏந்தும் கலங்களாகிவிட்டோம். குருதித் தூய்மைகொண்ட ஒருவன் நம் மைந்தரில் இருந்தானெனில் யாதவப் பெண்ணின் மைந்தன் நிஷாதப் பெண்ணை மணந்து பெறவிருக்கும் குழந்தை அரியணை ஏறுவதை ஏற்று இவ்வண்ணம் அமைந்திருக்க மாட்டான்.” பிந்துமதி தலையசைத்தாள். கரேணுமதி பற்களைக் கடித்து “நன்று, அவர்கள் உடலுக்குள் எங்கோ தாய்வழி மூதாதையர் உறங்கக்கூடும். அவரில் ஒருவர் விழி திறந்தால்கூட ஷத்ரியக்

குருதியின் ஆற்றலென்ன என்று இக்கீழ்மக்களுக்கு காட்டவும் இயலும்” என்றாள்.

வெளியே எட்டிப்பார்த்த மாலதி “அரண்மனை அணுகுகிறது, அரசி” என்றாள். “ஆம், அதை நீ சொல்லித்தான் எங்களுக்கு தெரியவேண்டும். வெளியே எங்கள் வருகையை அறிவிக்கும் முரசோசையும் சங்கோசையும் கேட்கிறது” என்றாள் பிந்துமதி. பிறகு மீண்டும் சினமெழ “உள்ளேயே பார்த்து நிற்காதே, இழிமகளே. எங்களை எதிர்கொள்ள முறைமைப்படி தாலங்கள் ஏந்திய சேடியரும் இசைச்சூதரும் அந்தணரும் அமைச்சரைச் சேர்ந்த ஒருவரும் முற்றத்தில் நிற்கிறார்களா என்று நோக்கிக் கூறு” என்றாள்.

மாலதி வெளியே பார்த்து “ஆம் அரசி, அமைச்சர் சுரேசர் நின்றிருக்கிறார்” என்றாள். “அவனா? சொல் திருந்தா இளைஞனாக வந்து அவையில் நின்றிருந்தவன். அக்கையே, அவன் முகத்தை நினைவுறுகிறாயா? வெண்ணிற எலி போலிருப்பான்” என்றாள் பிந்துமதி. “ஆம், ஆனால் இச்சிற்றூருக்கு அவனே அமைச்சன். சிறுசுனைக்கு அயிரை சுறா என்பதுபோல” என்றாள் கரேணுமதி. பிந்துமதி இதழ்கள் வளைத்து புன்னகைத்தாள்.

பிந்துமதியும் கரேணுமதியும் தங்கள் அறைகளில் இருந்து கிளம்பி இடைநாழிக்கு வந்தபோது அவர்களை எதிர்கொள்வதுபோல தேவிகையும் விஜயையும் வந்தனர். பிந்துமதி கரேணுமதியின் தோளைத்தொட்டு “பதினான்கு ஆண்டுகளில் இவர்கள் கற்றுக்கொண்டது அரசியர்போல் உடையணிவதற்கு” என்றாள். கரேணுமதி “செவியறியப்போகிறது, மெல்ல பேசு” என்றாள். “செவி

உணரட்டும் என்றுதான் சொல்கிறேன். தொலைவிலேயே நம் இதழ்களை உற்று நோக்கிக்கொண்டுதான் வருவார்கள். நாம் என்ன சொல்கிறோம் என்பதை உய்த்து அறியவும் செய்வார்கள்" என்றாள்.

தேவிகை அருகணைந்து "அரசியருக்கு வணக்கம். அன்னை தங்களை காத்திருக்கிறார்கள்" என்றாள். கரேணுமதி அவள் விழிகளை நோக்காமல் முகவாயைத் தூக்கி அப்பால் நோக்கியபடி தாழ்ந்த குரலில் "பேரரசி உடல்நலமின்றி இருக்கிறார்கள் என்று சொன்னார்கள். ஆகவே முதலில் அவர்களைப் பார்த்தபின் அவையமரலாம் என்று முடிவு செய்தோம்" என்றாள். தேவிகை "ஆம், அதை சுரேசர் சொன்னார். அன்னையிடம் முறைப்படி அறிவித்தோம்" என்றாள். கரேணுமதி "செல்வோம்" என்று பிந்துமதிக்கு கைகாட்டிவிட்டு நடந்தாள்.

அவர்கள் இருவரும் மறுமுகமன் உரைக்காததை விஜயை உணரவில்லை. ஆனால் தேவிகையின் விழிகள் மாறுபட்டன. அதை பிந்துமதி கண்டாள். முன்னால் நிமித்தச் சேடி கொம்பூதி சேதிநாட்டரசியின் வருகையை அறிவித்தாள். அவளுக்குப் பின் மங்கலத்தாலமேந்திய சேடி ஒருத்தி தொடர்ந்து சென்றாள். கரேணுமதி சீர்நடையில் மெல்ல ஒழுகிச்சென்றபடி "முன்னரே இங்கு வந்துவிட்டீர்கள் போலுள்ளது" என்றாள். "ஆம், இங்கு இருப்பதே முறை என்று தோன்றியது" என்றாள் விஜயை. பிந்துமதி "நானும் அதை எண்ணினேன். அங்கு எவ்வாறு இருக்க இயலும்? உங்கள் தந்தையும் மூத்தவர்களும் அஸ்தினபுரியுடன் படைக்கூட்டு அமைத்ததாக சொன்னார்கள்" என்றாள். கரேணுமதி "அது நன்றென்று எனக்கும் தோன்றியது. குருதித் தூய்மையும் குடிப்பெருமையும் இல்லாத அரசுகள்

அவை உள்ள ஷத்ரிய அரசுகளுடன் இணைந்தே காலப்போக்கில் அதை பெறமுடியும். வைரத்தினருகே பளிங்குக் கல் என அமைவதே அறிவு” என்றாள்.

விஜயை ஏதோ சொல்லத்திரும்ப தேவிகை அவள் தோளில் கைவைத்து அடக்கியபின் “சேதிநாடும் அஸ்தினபுரியுடன் படைக்கூட்டு கொண்டுள்ளது என்று அறிந்தேன்” என்றாள். “ஆம், தூய குருதி கொண்ட ஷத்ரியர் அனைவரும் அங்கே ஒருங்கு திரள்கிறார்கள். எனவே சேதி நாடு அங்கே முதன்மை பெற்றே ஆகவேண்டும் அல்லவா?” என்றாள் கரேணுமதி. “நாங்கள் உபரிசிரவசுவின் குருதியிலெழுந்த விண்நின்ற மன்னர் சிசுபாலரின் தங்கையர். எந்நிலையிலும் சேதிநாடு எங்களுக்கும் உரியதே. ஆனால் சேதி அஸ்தினபுரியுடன் படைக்கூட்டை அறிவித்த நாளில் கிளம்பி இந்திரப்பிரஸ்தம் வந்தோம்.”

“இன்னும் சில நாட்களில் அஸ்தினபுரியில் ஷத்ரியப் பேரவை கூடவிருக்கிறது. பாலையன்னையரின் குருதிவழி வந்த துரியோதனர் ஷத்ரியப் பேரவையின் முதன்மை இடம் கொள்வதை மகதம், கோசலம், அயோத்தி போன்ற நற்குருதி கொண்ட ஷத்ரியர்கள் ஏற்கமாட்டார்கள் என்று பேசிகொண்டார்கள். ஆனால் துரியோதனரின் தலைமையை ஏற்று அவர் அடிசூடி படைத்துணை கொள்ள சேதி முடிவெடுத்திருப்பதாக அறிந்தேன்” என்றாள் தேவிகை. பிந்துமதி முகம் சிவந்து சொல்லெடுப்பதற்குள் தேவிகை “ஏனென்றால் சேதிநாட்டு தமகோஷர் மணந்த அன்னை சுருதகீர்த்தி யாதவக்குடியினர் அல்லவா?” என்றாள். விஜயை அவள் சொல்வதேதும் புரியாமல் தலையசைத்தாள்.

கரேணுமதியும் பிந்துமதியும் சீற்றத்துடன் மூச்சிரைத்தனர். பிந்துமதி சினத்துடன் ஏதோ சொல்லமுயல கரேணுமதி அவள்

கைகளைப்பற்றி அழுத்தி நிறுத்தியபின் விழி ஒளிராத இனிய புன்னகையுடன் “போர் நிகழ்கையில் படைக்கூட்டுகள் அத்தருணத்திற்கேற்பவே அமையும். வேட்டையை நோக்கினால் எது சிம்மக்களிறு என அறியமுடியாது. முடிவில் இரையின் நெஞ்சை எது உண்கிறதோ அதுவே அரசன்” என்றாள். விஜயை பேச்சை மாற்றும்பொருட்டு “அன்னை நோயுற்றிருக்கிறார்” என்றாள். தேவிகை “ஆம், மேலும் சினங்கொண்டவர்களாக மாறிவிட்டிருக்கிறார்கள். அவர்களிடம் பேசுகையில் அனைத்து முறைமைகளையும் கடைப்பிடிக்க வேண்டுமென்று சௌனகர் எங்களிடம் சொன்னார். வணக்கத்திற்கு மறுவணக்கமும் இன்சொல்லுக்கு மறுசொல்லும் எடுப்பது நற்குடி வழக்கம்” என்றாள்.

பிந்துமதி உரத்த குரலில் “ஆம், முறைமை என்பது அதுவே. இணையானவர்களுக்கு இடையே முறையான சொல் என்பார்கள்” என்றாள். விஜயை சலிப்புடன் சற்று முன்னால் சென்று அவர்கள் வருவதற்காக காத்துநின்றாள். குந்தியின் அறைவாயிலை அவர்கள் அடைந்தபோது அங்கு நின்றிருந்த சேடி தலைவணங்கி “அரசியரே, வணங்குகிறேன். அன்னை இப்போதுதான் உணவருந்தி அமர்ந்திருக்கிறார்கள்” என்றாள். அவர்கள் காத்து நிற்க அவள் உள்ளே சென்று அரசியரின் வருகையை அறிவித்துவிட்டு திரும்பி வந்தாள். “வருக!” என்றாள்.

பிந்துமதியும் கரேணுமதியும் ஒருவரையொருவர் பார்த்தபடி விழிகளால் எதையோ உரைத்தனர். விஜயை தேவிகையின் விழிகளைச் சந்தித்து அது என்ன என்று வினவினாள். தேவிகை எதுவானால் என்ன என்று தோளசைவு காட்டினாள். அவர்கள் இருவரும் முதலில் சிற்றறைக்குள் நுழைந்து

கைகூப்பியபடி குந்தியை நோக்கி சென்றனர். மஞ்சத்தில் தலையணைகளின் மீது சாய்ந்தவளாக மெல்லிய வெண்ணிறக் கால்களை நீட்டி அமர்ந்திருந்த குந்தி முகம் வெளுத்து தளர்ந்திருந்தாள். உதடுகள் உலர்ந்து ஒட்டியிருக்க கைகள் சேக்கையில் உயிரற்றவை என கிடந்தன.

இருவரும் அருகணைந்து அவள் கால்களைத்தொட்டு வணங்கினார்கள். கரேணுமதி "பேரரசியை வணங்குகிறேன். மீண்டும் தங்களைக் கண்டு நற்சொல் உரைக்கும் பேறுபெற்றமைக்கு மகிழ்கிறேன்" என்றாள். பிந்துமதி "இந்நாள் தங்கள் வாழ்த்துக்களை நாங்கள் அடையும் நற்பொழுது கொண்டது. இது என்றும் நினைவுகூரப்படும்" என்றாள். அந்த வெற்றுமுறைமைச் சொற்கள் குந்தியை எரிச்சலடையச் செய்வது தெரிந்தது. சலிப்பு கொண்டவள்போல் இருவரையும் விழிமணி அசைய மாறி மாறி நோக்கி "நலம் சூழ்க!" என்று வலக்கை தூக்கி பொதுவாக வாழ்த்தி அமரும்படி கைகாட்டினாள்.

விஜயையும் தேவிகையும் வந்து குந்தியின் கால்தொட்டு வணங்கி அப்பால் சுவர் சாய்ந்து கைகட்டி நின்றனர். என்ன பேசுவது என்று தெரியாமல் கரேணுமதியும் பிந்துமதியும் தயங்கினர். பிந்துமதி "போர்சூழ்கை அகன்றுவிட்டது என்று நாங்கள் கிளம்பும்போதே அறிந்தோம். ஆகவே இங்கு வந்து தங்களை சந்திக்கவேண்டுமென்று விழைந்தோம்" என்றாள். கரேணுமதி "எதன்பொருட்டு போர்சூழ்கை அகன்றிருந்தாலும் நமக்கே இழப்பு. நம் இளமைந்தர் நிகரற்ற ஆற்றல் கொண்டவர்கள் என்பது அனைவரும் அறிந்ததே. போர் நிகழுமெனில் அஸ்தினபுரியும் இந்திரப்பிரஸ்தமும் நம்

கொடிவழியினருக்கு உரிமையாகும். அதை இழந்துகொண்டிருக்கிறோம்” என்றாள்.

குந்தி மறுமொழி எதையும் சொல்லவில்லை. கரேணுமதி “அவ்வகையாயினும் நன்று. இப்போது போர் தவிர்க்கப்படுவதனால் நம் மைந்தர் மேலும் ஆற்றல்கொண்டவராக தோள்பெருக வாய்ப்பு அமைகிறது. பிறிதொருமுறை இப்போர் இம்மண்ணில் நிகழட்டும்” என்றாள். குந்தி விழிகளை விலக்கி அப்பாலிருந்த நீர்க்குவளையை நோக்கிக்கொண்டிருந்தாள். தங்கள் சொற்கள் அவளை உவகையில் ஆழ்த்தவில்லையென்பதை கரேணுமதி புரிந்துகொண்டாள். அவள் விழிகள் பிந்துமதியை வந்து தொட்டுச்சென்றன. தேவிகையையும் விஜயையையும் நோக்கக்கூடாதென கழுத்தை இறுக்கியிருந்தாள்.

“தாங்கள் நோயுற்றிருப்பது எங்களை உளம்குலைய வைத்தது, அன்னையே. இக்குடியின் முதன்மை ஆற்றல் என்பது தாங்களே. அன்னை பிடியானையைப்போல எங்கள் கொழுநரையும் மைந்தரையும் நடத்திச் செல்கிறீர்கள்” என்றாள் கரேணுமதி. பிந்துமதி “ஆம், நம் மைந்தர் பாரதவர்ஷத்தின் அரியணைகளில் அமர்ந்து உறுதிகொள்வதுவரை தாங்கள் இங்கிருந்தாக வேண்டும்” என்றாள். அவள் பிழை உரைத்துவிட்டதை அக்கணமே உணர்ந்த கரேணுமதி திரும்பி தேவிகையை பார்த்தாள். தேவிகை மெல்லிய புன்னகையுடன் அவளை நோக்கிவிட்டு விழிதிருப்பிக்கொண்டாள்.

நிகர்செய்யும்பொருட்டு கரேணுமதி “தாங்கள் நூறாண்டு வாழ்வீர்கள் என்று சூதர்கள் சொல்கிறார்கள். தங்கள் பெயர் மைந்தர் பெற்ற மைந்தரும் முடிசூடி பாரதவர்ஷத்தை ஆள்வதைக் காணும் பேறு தங்களுக்குண்டு என்கிறார்கள்.

இன்று அதையே முதன்மை நம்பிக்கையாகக் கொண்டுள்ளோம்” என்றாள். ஆனால் அச்சொற்கள் பிந்துமதியின் பிறழ்சொற்களை மேலும் விளக்கவே செய்தன. அவர்களின் தடுமாற்றம் குந்தியின் முகத்தில் ஓர் இகழ்ச்சிப் புன்னகையை உருவாக்கியது. “நன்று. நீங்கள் இங்கு இருப்பதாக எண்ணமா?” என்றாள். “ஆம், இந்திரப்பிரஸ்தத்திற்கு சென்ற வாரம் வந்தோம். அங்கே இருந்து என்ன செய்யப்போகிறோம்? இங்கிருந்தால் உங்களுக்குத் துணையாக அவையில் அமரும் வாய்ப்பும் அமையுமல்லவா?” என்றாள் கரேணுமதி.

“அது தேவை என்று நான் எண்ணவில்லை” என்றாள் குந்தி. “பலந்தரை எப்போது வருகிறாள்?” என்றாள். அச்சொல்லால் இருவரும் முகம் சிவந்தனர். ஒருகணம் கழிந்து கரேணுமதி “நாளை கிளம்புகிறார்கள் என்று அறிந்தேன்” என்றாள். “நன்று. நீங்கள் இங்கு ஓய்வெடுக்கலாம்” என்ற குந்தி அவர்கள் செல்லும்படி கைகாட்டினாள். கரேணுமதி அக்கையசைவைக் கண்டு சினம்கொண்டு பற்களைக் கடித்தபின் மெல்ல தன்னை தளர்த்தி எழுந்துகொண்டாள்.

குந்தி அவர்களை நோக்காமல் “ஒன்று நினைவு கொள்க!பாண்டவர் எங்கும் பெண்கொடை கொள்ளவில்லை. பெண்வென்று கொணர்ந்திருக்கிறார்கள். எனவே பெண்கள் பாண்டவர்களின் துணைவியர் மட்டுமல்ல, அடிமைகளும் கூடத்தான். அடிமைகளுக்குள் பூசல் என எதுவும் எப்போதும் எழலாகாது” என்றாள். பிந்துமதி அறியாது கரேணுமதியின் கைகளைப்பற்றி இறுக்கினாள். கரேணுமதி புன்னகையை முகத்தில் விரித்து “ஆம் பேரரசி, அரசமுறைமைகள் அனைத்தையும் நாங்கள் முன்னரே கற்றிருக்கிறோம். எங்கள்

குடிகளில் முதிரா இளமையிலேயே அக்கல்வியை தொடங்கிவிடுவார்கள்” என்றாள். “கற்பது மட்டும் போதாது, உரிய தருணத்தில் அதை நினைவுகூரவும் வேண்டும்” என்றாள் குந்தி அவர்களை நேர்நோக்கி.

பிந்துமதியும் கரேணுமதியும் குந்தியின் கால்களைத்தொட்டு வணங்கி “விடைகொள்கிறோம், பேரரசி” என்றனர். குந்தி அவர்கள் தலைதொட்டு வாழ்த்தினாள். தேவிகையையும் விஜயையையும் நோக்காமல் அவர்கள் வெளியே சென்றார்கள். விஜயை தேவிகையை பார்க்க தேவிகை புன்னகைத்து “செல்வோம்” என்று வாயால் செய்கை காட்டினாள். அவர்கள் இருவரும் பிந்துமதியையும் கரேணுமதியையும் தொடர்ந்து வெளியே சென்றனர்.

# குருதிச்சாரல் - 33

**பகுதி ஐந்து : நிலநஞ்சு – 2**

விஜயை தேவிகையின் கைகளைப் பற்றியபடி “எவரை எப்படி நடத்தவேண்டுமென அன்னைக்கு நன்கு தெரிந்திருக்கிறது” என்றாள். தேவிகை புன்னகைத்து “ஆம், அவர்கள் இயல்பாகவே பேரரசி. இவர்கள் நடிக்கிறார்கள். மெய்யுருவுக்கு முன் பூணுரு வண்ணம் கலைந்துவிடுகிறது” என்றாள். உதடுகள் அசையாமல் முனகலாகவே அதை சொன்னாள். முகம் இறுக்கமாக இருந்தது. வெளியே இடைநாழியில் அவர்களைக் காத்து நின்றிருந்த பிந்துமதியும் கரேணுமதியும் அவர்கள் அருகணைந்ததும் பற்களைக்

கடித்தபடி விழியீரத்துடன் முன்னால் வந்தனர். “நம்மை இலக்காக்குகிறார்கள்” என்றாள் தேவிகை.

சீறும் குரலில் “இத்தருணத்தை நாங்கள் முறைமைப்படி முழுமையாக்க எண்ணினோம். சிறுமைப்படுத்திவிட்டார்கள்” என்றாள் பிந்துமதி. “அவர்களிடம் அதை எதிர்பார்த்தது எங்கள் பிழை. குடிப்பிறப்பு பயின்றமையுமா என்ன?” “முதுமகள் என்பதனால் மறுசொல்லின்றி கிளம்பினோம். முதுமையும் நோயும் எத்தனை உளச்சிறுமை கொள்ளச்செய்யும் என்பதற்கு இவர்களே சான்று” என்றாள் கரேணுமதி. “நாங்கள் அதேபோல நச்சுமிழ்ந்திருக்க முடியும், அதைத் தாள இவர்களால் இயலுமா என்ன?”

தேவிகையின் முகத்தின் முன் கரேணுமதியின் நீட்டிய கை நின்றது. அவள் அதிலிருந்து முகம் விலக்கிக்கொண்டு “அரசியைப் பற்றி அந்தச் சொற்களை எங்களிடம் சொல்லவேண்டியதில்லை. அதை நாங்கள் கேட்டு வாளாவிருக்கவும் இயலாது” என்றாள். “என்ன செய்வீர்கள்? உங்கள் கொழுநரிடம் சென்று குறைஉரைப்பீர்களா? அதை உரையுங்கள். நாங்கள் எவருக்கும் அடிமைப்பட்டவர்களோ ஆட்பட்டவர்களோ அல்ல” என்றாள் பிந்துமதி. தேவிகை சிவந்த முகமும் ஏறியமையும் முலைகளுமாக அவளை நோக்கி நின்றாள். “அவர் எவரென்பதை நகர்மக்கள் சொல்லாத நாளில்லை. சந்தைமுகப்பில் நீட்டிவைத்த இரவலனின் ஓடு அவர் கருப்பை” என்றாள். தேவிகை “வாயை மூடு!” என்றாள். பிந்துமதி இகழ்ச்சியாக உதடுகளை வளைத்தாள்.

கரேணுமதி “நாங்கள் இங்கு வந்தது இம்முதியவளைப் பார்க்கவோ இங்கே உங்களைப்போன்ற சிறுகுடி அரசியர் ஆடும் புன்நாடகங்களில் பங்குபெறவோ அல்ல. இளைய யாதவர்

சென்ற தூது தோற்றுவிட்டதென்று அங்கே உளவுச்செய்தி வந்தது. பாண்டவர்களுக்கு பாதி நாடும் இந்திரப்பிரஸ்தமும் கருவூலப் பகுப்பும் அளிப்பது இயலாதென்று துரியோதனர் அப்பேரவையில் அறிவித்திருக்கிறார். அதற்குமேல் என்ன பேச்சு வேண்டியுள்ளது? இளைய யாதவரோ பாண்டவரை வந்து சந்தித்துவிட்டு மீண்டும் வருகிறேன் என்று கிளம்பியிருக்கிறார். அதையறிந்தே வந்தோம்" என்றாள். "இங்கு என்ன நிகழுமென்று அறிவேன். அறிவிலிபோல் அவையில் எழுந்து எந்நிலையிலும் போரை முழுவதுமாக தவிர்ப்பதாக அறிவித்திருக்கிறார் உங்கள் அரசின் தலைவர். ஷத்ரியர் வாள் கொண்டமர வேண்டிய அவையில் நூல்கொண்டு அமர்ந்த சூதன்மகன்..."

தேவிகை நிலைமறந்து "வாயை மூடு இழிமகளே... பிறிதொரு சொல்லெடுத்தால் என் கைவாளை உன் கழுத்தில் பாய்ச்ச தயங்கமாட்டேன்" என்றாள். கரேணுமதி "செய், பார்ப்போம். நற்குடிப் பிறந்தவள் என்றால் உன் கையில் குறுவாள் எழட்டும்" என்றபடி ஓர் அடி முன்னால் வைத்தாள். தேவிகை தன் இடையிலிருந்து குறுவாளை உருவப்போக அக்கையை அள்ளிப்பிடித்து விஜயை "வேண்டியதில்லை அக்கையே, வேண்டியதில்லை" என்றாள். "நம்மை அன்னையின் ஆணை கட்டுப்படுத்துகிறது. அதை எண்ணுங்கள்" என்றாள். தேவிகையின் தொடைகள் நடுங்கின. தோள் அதிர்ந்தது. அவள் கை நழுவ வளையல்கள் ஓசையிட்டன.

பிந்துமதி இகழ்ச்சியான புன்னகையுடன் இரு கைகளையும் இடையில் வைத்து அவர்களை நோக்கி நின்றாள். கரேணுமதி "உன் கை எழாது, இழிகுலத்தோளே. பாரதவர்ஷத்தில் எந்தப் போரிலும் இன்றுவரை இழிகுலத்தோர் ஷத்ரியர்களை கொல்ல முடிந்ததில்லை. படைக்கலங்களால் ஆனதல்ல போர்,

உள்ளத்தால் ஆனது. மானுட உள்ளம் என்பது மண்ணில் உருவாக்கப்படுவதல்ல, தெய்வங்களால் பிறப்பிக்கப்படுவது” என்றாள். தேவிகை பற்களை இறுகக் கடித்து கைகளை நகம் பதிய முறுக்கிக்கொண்டாள். பிந்துமதி “சிறுமகளிடம் என்ன வீண் சொல்? நாம் இதன்பொருட்டு இங்கு வரவில்லை” என்றாள்.

கரேணுமதி “நாங்கள் வந்தது ஒன்றின் பொருட்டே. அதை ஐயமின்றி இங்குரைத்து மீளவே விரும்புகிறோம். நீ உன் கணவரிடம் சென்று சொல், இளைய யாதவர் இங்கு மீண்டு வந்து பேசப்போவதென்ன? நாட்டுரிமையும் பொருளுரிமையும் குடியுரிமையும் இல்லையென்றால் பின் எதைக் கேட்டு பெறப்போகிறார்? மீண்டும் சென்று இன்னும் சற்று குறைத்து கொடுங்கள் என கோருவாரா? தாங்கள் அளிகொண்டு அளிக்கும் எதையும் ஏற்றுக்கொள்ள சித்தமாக இருக்கிறோம் என்று சொல்லப்போகிறாரா? அத்தை இரந்து பெற்ற மைந்தருக்கு மண்ணையும் இரந்துபெறப்போகிறாரா என்ன?” என்றாள்.

பிந்துமதி “உங்கள் அரசர் அவையில் துறந்தது எங்கள் மைந்தர்களின் மண்ணை. யாதவக்குடி பிறந்த அவர் அந்த அவையில் அடியமைவு வைத்து மீண்டது எங்கள் கொடிவழியினரின் உரிமையை. அதை நாங்கள் ஏற்க இயலாது. எங்கள் மைந்தர் ஷத்ரியர். ஷத்ரியர்களாக இப்புவியில் வாழ்வார்கள்” என்றாள். “மண்ணில்லாத ஷத்ரியன் மறுகணமே அடிமையாவான் என்று நூல்கள் சொல்கின்றன. இங்கு உங்கள் அரசர் சொன்னதாக கேள்விப்பட்டேன், முடி துறந்து குடிகளைத் துறந்து காடேகப் போகிறாராம். புதுநிலம் கண்டு அங்கு வேட்டையாடியும் உழுதுண்டும் வாழப்போகிறாராம். அவரிடம்

சென்று சொல், சிம்மங்களை ஏரில் பூட்டுவதில்லை, வேங்கைகளை மந்தையென மேய்ப்பதுமில்லை என.”

தேவிகை நிலைமீண்டு இகழ்ச்சிப்புன்னகை பூண்டு “அதை நீங்கள் அவையில் சொல்லலாம்” என்றாள். “ஆம், அதை அவையில் சொல்லும்பொருட்டே இங்கு வந்தோம். இளைய யாதவர் மீண்டு வந்து இங்கு ஒரு அவை கூடுமல்லவா? அதில் எழுந்து நான் உரைப்பேன், யாதவரும் நிஷாதரும் கிராதரும் பிறரும் தங்கள் நிலத்தைத் துறப்பதில் எங்களுக்கு மாற்றுச் சொல்லில்லை. ஷத்ரியர் நிலத்தின் பொருட்டே வாழ்வார்கள், நிலத்தின் பொருட்டே கொல்லவும் இறக்கவும் துணிவார்கள். நிலமிலாது ஒருபொழுதும் வாழமாட்டார்கள். எங்கள் ஷத்ரியக்குருதி அவர் கொண்டுவரும் இழிவை ஏற்காது” என்றாள்.

“அதை உங்கள் மைந்தரும் சொல்லவேண்டும்” என்றாள் விஜயை. “சொல்வார்கள். அவ்வாறு சொல்லவில்லையென்றால் இந்த அவையில் உங்கள் பேரரசி சொன்னதை நாங்களும் சொல்வோம், அவர்களின் தந்தையர் பாண்டவர்கள் அல்ல என்று உரைப்போம். ஷத்ரியர்களாக வாழத் தயங்குவார்கள் என்றால் தந்தையற்றவர்களாக அவர்கள் வாழட்டும். எவர் அடிமை கொண்டாலும் எவ்வகையில் சிறைப்படுத்தினாலும் பெண்ணிடமிருந்து ஆண் பிடுங்கிவிடமுடியாத உரிமை இது. இந்தக் கொலைவாள் போதும் எங்களுக்கு” என்றபின் கரேணுமதி “வாடி” என்று பிந்துமதியைத் தொட்டு அழைத்துக்கொண்டு திரும்பிச் சென்றாள்.

பிந்துமதியும் கரேணுமதியும் அரசப்பேரவையை சென்றடைந்தபோது முன்னரே அவை முழுமை பெற்றுவிட்டிருந்தது. தங்கள் அறையிலிருந்து கிளம்பும்போதே வெகுவாக பிந்திவிட்டோம் என்பதை பிந்துமதி உணர்ந்திருந்தாள். ஆகவே வழியெங்கும் மெல்லிய பதற்றம் அவளிடமிருந்தது. ஆனால் கரேணுமதி “நாம் எவருக்காகவும் அஞ்சவேண்டியதில்லை. இந்தச் சிறுமாளிகையில் அரசியர் அணிகொண்டெழ எந்த ஒருக்கமும் இல்லை. எனவே பொழுதாகும் என்று அவர்கள் உணரட்டும்” என்றாள். மிக மெல்ல நடந்தபடி “நம் நடையை எவருக்காகவும் மாற்றிக்கொள்ள வேண்டியதில்லை” என்றாள்.

பிந்துமதி முந்தையநாள் இரவெல்லாம் மஞ்சத்தில் துயிலின்றி புரண்டுகொண்டிருந்தாள். பகலில் இருக்கும் அத்தனை உணர்வுகளும் இரவில் முற்றாக வடிந்துஅகல பிறிதொருவராக எப்படி உருக்கொள்கிறோம் என்று அவள் எப்போதும் எண்ணி வியப்பதுண்டு. பகலில் பெரும்பாலும் கரேணுமதி உடனிருப்பாள். இரவில் ஒருமுறைகூட அவள் கரேணுமதியின் அருகமைவை உணர்ந்ததில்லை. அரிதாக ஒரே அறையில் அவளுடன் துயில்வதுண்டு, அப்போதுகூட. இரவுகளில் அவள் முற்றிலும் தனிமையாக இருந்தாள். வேறெங்கோ இருந்தாள். சேதிநாட்டில்கூட அல்ல.

தமகோஷரின் அரசி சுருதகீர்த்தியின் மைந்தன் சிசுபாலன். அவர் கலிங்கநாட்டிலிருந்து கவர்ந்து வந்த இரு அரசியரில் மூத்தவள் சுனிதையின் மகள் அவள். இளையவள் சுனந்தையின் மகள் கரேணுமதி. கரேணுமதிக்கு இரண்டாண்டு அவள் இளையவள். இணையள் கருவுற்று மகவீன்று

முலைகொடுப்பதையும் தமகோஷர் வந்து அவளைக் கொஞ்சுவதையும் கண்டு நிலையழிந்தாள் சுனிதை. அவளை தமகோஷர் மறந்தார். எப்பொழுதும் இளையவளுடனும் குழவியுடனும் இருந்தார். சுனிதை நாளும் இரவும் தன் அகத்தறை வாயிலில் அணியாடை பூண்டு நிற்கலானாள்.

அவள் கைகள் பதறிக்கொண்டே இருந்தன. விழிகள் எந்நேரமும் நீர்மைகொண்டு அலைபாய்ந்தன. உதடுகளில் ஒலியற்ற சொல் ஒன்று இலைகளில் காற்றுத்துடிப்பென ஓடிக்கொண்டிருந்தது. அவள் தன் ஆடையின் நூலை பிரிக்கத் தொடங்கினாள். முதலில் குனிந்து நின்று கூர்ந்து ஆடையை நூல்களாக்கி கீழே போட்டாள். பின்னர் அவள் கைகளில் இருளுலகத்துத் தெய்வம் ஒன்று வந்தமைந்தது. அவள் எங்கு நோக்கினாலும் எதில் இருந்தாலும் கைகள் ஆடையை பிரித்துக்கொண்டிருந்தன. அதிலிருந்த விரைவையும் நுட்பத்தையும் நோக்குபவர்கள் அந்தத் தெய்வத்தைக் கண்டு அஞ்சி பின்னடைந்தனர்.

எந்தப் பட்டாடையையும் அணிந்த சில நாழிகைக்குள்ளாகவே அவள் நூல்குவியலாக ஆக்கினாள். மேலாடைகளும் தலையாடைகளும் முதலில் பிரிந்து மறைந்தன. பின்னர் இடையாடையே மறையத்தொடங்கியது. சேடியர் அவளுக்கு நாளுக்கு நாலைந்துமுறை ஆடையணிவித்தனர். ஒவ்வொரு கணமும் அவள் ஆடைகுறித்து விழிப்புடனிருந்தனர். அப்படியும் இரவுகளில் எழுந்து தன் ஆடைகளை நூல்களாக்கிவிட்டு வெற்றுடலுடன் அவள் அமர்ந்திருந்தாள். பின்னர் எப்போதோ அவள் கருவுற்றாள். குழந்தை பிறந்த பின்னரும் அவள் அப்படியேதான் இருந்தாள். பிந்துமதியின் கண்களுக்குள்

அன்னையென எப்போதுமிருந்தது வலைபின்னும் சிலந்திபோல அசைந்துகொண்டே இருக்கும் அன்னையின் விரல்களே.

அவள் இளைய அன்னை சுனந்தையுடன் எப்போதுமிருந்தாள். அன்னை கலிங்கநாட்டிலிருந்து சேதிக்கு இறுதிவரை வந்துசேரவில்லை. தன் அறையையும் அகத்தளத்தையும் கலிங்கநாட்டுப் பொருட்களால் நிறைத்திருந்தாள். சேடியர் அனைவரும் கலிங்கநாட்டவர். கலிங்கமொழியன்றி ஒரு சொல்லும் அங்கே ஒலிக்கவில்லை. கலிங்கநிலத்தையும் மக்களையும் வரலாற்றையும் பற்றி குழந்தைகளிடம் பேசிப்பேசி அவர்களை அவள் வளர்த்தாள். சேதிநாட்டின் தோட்டங்களிலும் ஆற்றங்கரைகளிலும் அவர்கள் வளர்ந்தாலும் ஆழத்தில் கலிங்கம் திரண்டுருக்கொண்டபடியே இருந்தது. அவர்களின் நினைவுகளில் சேதியும் கனவுகளில் கலிங்கமும் இருந்தன.

இந்திரப்பிரஸ்தத்தில் கரேணுமதியும் பிந்துமதியும் எப்போதும் தனித்திருந்தனர். தங்கள் அகத்தளத்தை அவர்கள் சேதிநாட்டுப் பொருட்களால் நிரப்பினர். சேதிநாட்டுச் சேடியரை கொண்டுவந்தனர். சேதிநாட்டு மொழியை பேசினர். கலிங்கத்தை உதறவே அவர்கள் ஆவதனைத்தையும் செய்தனர். உதறும்தோறும் கலிங்கம் பேருருக்கொண்டு கனவுகளை நிறைத்தது. ஒருமுறைகூட அவர்கள் செல்லாத அக்கடலோர நிலத்தின் செடிகளும் மரங்களும் மண்ணும் மானுடரும் அணுக்கூருடன் அவர்களுக்குள் எழுந்தன. “கலிங்கநாட்டுத் தெய்வங்கள் நம்முள் வாழ்கின்றன. அவை நம் மூதன்னையரால் வழிபடப்பட்டவை” என்றாள் கரேணுமதி.

சேதிநாட்டை விட்டுவந்து இந்திரப்பிரஸ்தத்தின் நெடுந்தனிமையில் மீளமீள அந்நாட்களை எண்ணிக் கடந்த

பொழுதுகளின்போதுதான் பிந்துமதி ஒன்றை உணர்ந்தாள், அன்னை சுனிதையைப்பற்றி சுனந்தை ஒருபோதும் ஒருசொல்லும் பேசியதில்லை. மூத்தோள் இருக்கிறாள் என்பதையே அறியாதவள் போலிருந்தாள். அவள் பேச்சில் அன்னையைப்பற்றிய குறிப்புகள் வரும்போதுகூட ஒரு சிறு விழிமின் கூட அவளில் எழுவதில்லை. ஒருமுறை சுனிதை புலரியில் ஆடையேதுமில்லாமல் இடைநாழியில் நின்றிருந்ததைக் கண்டு அரண்மனையே பதறியது. சேடியர் சால்வையுடன் ஓடிச்சென்று அவளை போர்த்தித் தழுவி அழைத்துச்சென்றனர். அவளுடைய அணுக்கிகளை அன்று மூத்தவர் சிசுபாலர் அழைத்து அச்சுறுத்தினார் என்று அரண்மனையே பரபரப்படைந்தது. எச்செய்தியும் சுனந்தையை சென்றடையவில்லை.

ஆனால் அவர்கள் கலிங்கத்தில் எப்போதும் இணைபிரியாதவர்களாகவே இருந்தனர் என்று சேடியர் சொன்னார்கள். "இரட்டையர் என்றே அவர்களை சொல்வதுண்டு. உடல்தழுவா நிலையில் இருவரையும் காண்பதும் அரிது" என்றாள் முதுசேடி சாம்யை. "ஆகவேதான் இருவரையும் சேர்த்தே பெண்கொள்ள வேண்டுமென்று சேதியின் அரசர் விழைந்தார். அவர்களும் ஒருவருக்கே அரசியாவோம் என்று உளம்கொண்டிருந்தனர். இந்நகருக்குள் நுழைகையில் இருவரும் ஒருவரை ஒருவர் தழுவிக்கொண்டு விழிநீர் உகுத்தபோது நான் அருகே அமர்ந்திருந்தேன்." நெடுநாட்களுக்குப் பின் நினைவுகூர்ந்தபோதுதான் பிந்துமதி மெய்ப்புகொள்ளச் செய்யும் அச்சத்துடன் ஒன்றை உணர்ந்தாள், சுனந்தையில் எழும் கலிங்கநாட்டு மூதன்னையர் எப்போதும் இருவராகவே இருந்தனர்.

குந்தியை கண்டுவிட்டு அவர்கள் தனியறைக்குச் சென்றபோதே சோர்ந்திருந்தார்கள். சொல்லின்றி மஞ்சத்திலும் பீடத்திலுமாக அமர்ந்திருந்தார்கள். பிந்துமதி வெளியே நோக்கிக்கொண்டிருந்தாள். கரேணுமதி "இங்கு நாம் தங்கவியலாது. இது அறையல்ல, சிறுபெட்டி" என்றாள். "ஆம், தேர்க்கூண்டில் அமர்ந்து எங்கோ சென்றுகொண்டிருப்பது போலவே உணரச்செய்கிறது" என்றாள் பிந்துமதி. கரேணுமதி நிலையழிந்தவளாக அசைந்து அசைந்து அமர்ந்தாள். "அவள் என்ன சொன்னாள் பார்த்தாயா?" என்றாள். "என் நெஞ்சில் குறுவாளை இறக்கிவிடுவாளாம். பாலைமகள். சழக்கி" என்றாள். "அவள் தன் ஒப்பளிப்பை நமக்கு காட்ட விழைகிறாள்" என்றாள் பிந்துமதி.

"அந்தத் தோள்தொய்ந்த முதியவரை அவள் கணவர் என மெய்யாகவே எண்ணுகிறாள் என நினைக்கிறாயா?" என்றாள் கரேணுமதி. பிந்துமதி மறுமொழி சொல்லவில்லை. ஆனால் அவள் உள்ளம் திடுக்கிட்டது. அத்திடுக்கிடல் ஏன் என்று சற்று பிந்தி கண்டுகொண்டது. "என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்?" என்றாள். "என்ன?" என்றாள் கரேணுமதி. "உங்கள் கைகள்" என்றாள் பிந்துமதி அச்சத்துடன். கரேணுமதி அவள் நூல்பிரித்துக்கொண்டிருந்த ஆடையை உதறி "ஒன்றுமில்லை... நான் வருகிறேன். ஓய்வெடுக்கவேண்டும். நீண்ட பயணம்" என எழுந்து சென்றாள். தரையில் கிடந்த நூல்களை பிந்துமதி படபடப்புடன் நோக்கினாள். பின்னர் அவற்றை அள்ளி வெளியே போட்டுவிட்டு மஞ்சத்தில் விழிமூடி படுத்துக்கொண்டாள்.

மாலதி வந்து அழைத்தபோதுதான் துயில்கொண்டிருப்பதை உணர்ந்தாள். அந்தியாகிவிட்டிருந்தது. எழுந்தமர்ந்தபோது கன்னங்களில் நீருலர்வுத் தடத்தை உணர்ந்தாள். அழுதது

அவளுக்கு நினைவிலெழவில்லை. கனவுகளில் அழுதிருப்போமோ? சுனந்தையன்னையில் கலிங்க மூதன்னையர் அவ்வப்போது எழுவதுண்டு. அப்போது கலிங்க முதுமகள்களைப்போல முகத்தின்மேல் ஆடையை இழுத்துவிட்டுக்கொண்டு அறைமூலைகளில் அமர்ந்து ஓசையின்றி விம்மி அழுதுகொண்டிருப்பாள். சேடியர் அவளருகே செல்லவேண்டாம் என்பார்கள். அவள் எவரையும் நோக்குவதில்லை. அரிதாக தலைதூக்கினால் தொல்கலிங்க மொழியில் "அர்க்கா, மைந்தர்களே, சூரியதேவா, அருணவர்மா" என்று அழைப்பாள். அவை மண்மறைந்த கலிங்கப் பெருமன்னர்களின் பெயர்கள் என முதுசேடி சொல்வாள். அவர்களை பெற்றெடுத்த மூதன்னையர் வந்தமைந்திருக்கிறார்கள். "ஏன் அன்னையின் உடலில் அவர்கள் எழவேண்டும்?" என்றாள் பிந்துமதி. "உடலென்பது என்ன? அது மூதாதையர் வெளிப்படும் கிணற்றுத்துளை அல்லவா?" என்றாள் முதியசேடி.

அவள் நீராடிக்கொண்டிருக்கையிலேயே மாலதி "பொழுதணைகிறது, அரசி. இன்று காலையிலேயே பேரவை கூடிவிடும் என சுரேசர் நான்குமுறை வந்து சொன்னார்" என்றாள். அவளுக்கு பேரவை ஒரு பொருட்டாகவே தோன்றவில்லை. அங்கு என்ன நிகழ்ந்தாலும் பொருட்டல்ல என்றே எண்ணினாள். ஆனால் கரேணுமதி அதைக் குறித்து சொல்லிக்கொண்டே இருந்தாள். "நாம் அவையிலெழவேண்டும். சேதிநாட்டின் குரல் அந்தக் கரிய சிறுக்கனை அடையவேண்டும்" என்றாள். பிந்துமதி "நம் குரலை வெல்ல அவரால் இயலாதா?" என்றாள். "நம் குரலை அவர் வெல்வார். அவர் தலைக்குமேல் இருந்து எதிர்வினையாற்றும் நம் தமையனை என்ன செய்வார்?" என்றாள் கரேணுமதி.

அவள் சென்றபோது கரேணுமதி ஆடைபுனைந்து முடிக்கவில்லை. அவளைக் கண்டதும் அமைதியாக புன்னகைத்து “ஒருங்கிவிட்டாயா? இதோ, நானும் எழுகிறேன்... பொறு” என்றாள். பிந்துமதி “அவைகூடும் பொழுது கடந்துவிட்டது, மூத்தவளே” என்று கரேணுமதியிடம் சொன்னாள். “ஆம், அவைமுறைமைகள் சற்று நிகழட்டும். அதன் பின்பு நாம் சென்று அமர்வோம்” என்று தன் காதணியின் திருகை பொருத்தியபடி கரேணுமதி சொன்னாள். அவள் வெண்பட்டாடை அணிந்திருந்தாள். கலிங்க மரபுப்படி சூரியக்கதிர் வடிவில் பொன்னூல் கரை வைத்து பின்னப்பட்டிருந்தது. அதை தானும் அணிந்திருக்கலாமோ என பிந்துமதி எண்ணினாள்.

தன் ஆடை மடிப்புகளை குனிந்து சற்று அழுத்தியபடி பிந்துமதி “இந்தச் சிற்றவையில் அத்தனை முறைமைகள் இருக்குமா என்ன?” என்றாள். கரேணுமதி மறுகாதில் இன்னொரு குழையை வைத்து அதன் திருகாணியை வலக்கையால் துழாவியபடி “எந்த அவையானாலும் முறைமைகள்தான் அரசரை உருவாக்குகின்றன. அறிந்திருக்கமாட்டாய், முறைமையில்லா அரசவை என்பது பெண்ணில்லாத மஞ்சம் என்பார்கள்” என்றாள். “அதற்காக குடியிலாத இடத்தில் குடிமுறைமைகளும் கருவூலமில்லாத இடத்தில் கொடைமங்கலங்களும் நிகழ்த்த முடியுமா?” என்றாள் பிந்துமதி.

கரேணுமதி திருகாணியை எடுத்து பொருத்தியபடி புன்னகைத்து “ஏன், கூத்தர் அரங்கில் அரசரென நடிப்பதை நீ பார்த்ததில்லையா?” என்றாள். பிந்துமதி சிரித்துவிட்டாள். “மெய்தான், அதுவே இங்கு நிகழும் என்று எதிர்பார்க்கிறேன்” என்றாள். “நம் முகத்தில் ஒவ்வாமை தெரியலாகாது” என்றாள்

கரேணுமதி. “நேற்று அதுதான் முதுமகளை சினம்கொள்ளச் செய்தது.” பிந்துமதி “நாம் ஒவ்வாமை கொண்டிருக்கிறோம் என்பது நம் கால்நகங்களில்கூடத் தெரியும்” என்றாள்.

அவைச்சேடி மூர்த்தை வெளியே வந்து நின்று “அவை நிறைந்துவிட்டது. பேரரசியும் அவையமர்ந்துவிட்டார், அரசியரே” என்றாள். “கிளம்புவோம்” என்று சொல்லி கரேணுமதி “சங்கு அறைக!” என்றாள். மூர்த்தை “பேரவை நுழைவிற்கு அறிவிப்புச் சங்கு இங்கு வழக்கமில்லை” என்றாள். “இங்குள்ள வழக்கத்தை நான் சொல்லவில்லை. ஷத்ரிய வழக்கத்தை சொன்னேன்” என்றாள் கரேணுமதி. “சங்கும் மங்கலங்களும் இன்றி நாங்கள் எங்கும் சென்ற வழக்கமில்லை.” மூர்த்தை குழப்பத்துடன் விழிகள் அலைய “நான் சிற்றமைச்சரிடம் சொல்லி…” என தத்தளித்தாள். “விரைந்து செல்க… மங்கலம் ஒருங்கிய பின் எங்களிடம் தெரிவி” என்றாள் கரேணுமதி.

மூர்த்தை விரைந்த அடிகளுடன் அகன்றபின் கரேணுமதி பிந்துமதியிடம் “ஒவ்வொரு கணமும் இதில் நாம் விழிப்புடன் இருக்கவேண்டியிருக்கிறது. நம்மைச் சூழ்ந்துள்ள அனைவரும் தங்களைப்போல் நம்மை ஆக்க முயன்றுகொண்டிருக்கிறார்கள். இங்குள்ள பெண்டிருக்கு எதுவும் பொருட்டல்ல. நாம் அரசியராகவே வாழ்ந்தாகவேண்டும்” என்றாள். பிந்துமதி “தேவிகையும் விஜயையும் அரசகுடிப் பிறந்தவர்கள், சுபத்திரையைப்போல கன்றோட்டும் குடியினர் அல்ல. ஆனாலும் தாங்கள் எவரென்ற எண்ணமோ நிமிர்வோ அவர்களிடம் இல்லை” என்றாள்.

கரேணுமதி “யார், அவர்களா? அவர்கள் எப்போது ஷத்ரியர்கள் என்று அறியப்பட்டார்கள்? சிபிநாடு எளிய பாலைநிலம். அங்கே மழைபெய்யும்போது எழும் ஈசல்களை வலையிட்டுப் பிடித்து

உலர்த்தி பெரிய கலங்களில் சேர்த்து வைத்து ஆண்டு முழுக்க உண்கிறார்கள். மத்ரர்களோ இமயமலைச்சாரலின் வேடர்குலம். வளைக்குள் வாழும் குழியணில்களை கிட்டி வைத்து பிடித்துண்ணும் குடியினர். அரசு என்றால் அது ஆயிரம் ஆண்டு தொன்மை கொண்டது. முதற்பிரஜாபதி ஒருவரின் குருதிவழி கொண்டது. குலதெய்வங்களாலும் குடிநீத்தோராலும் சூழ்ந்து காக்கப்படுவது" என்றாள்.

மூர்த்தை அருகணைந்து "மங்கலங்களும் சங்கும் அமைந்துவிட்டன, அரசி" என்றாள். கரேணுமதி பிந்துமதியிடம் கண் காட்டிவிட்டு அறைவிட்டு வெளியே வந்தாள். அங்கு ஒரு விறலி முழவுடனும் அணிப்பரத்தை ஒருத்தி தாலத்தில் மங்கலப்பொருட்களுடனும் நின்றுகொண்டிருந்தார்கள். "இருவரா?" என்றாள் கரேணுமதி. "இருவர்தான் அமைந்தனர், அரசி. இங்கு பணிப்பெண்களே குறைவு" என்றாள் மூர்த்தை. "இருவராக செல்வது மங்கலம் அல்ல என்று அறியமாட்டாயா?" என்று பிந்துமதி சினத்துடன் கேட்க "நானும் இருக்கிறேன், அரசி. சங்கை நான் ஊதவிருக்கிறேன். எனவே மூவர் இருக்கிறோம்" என்று மூர்த்தை சொன்னாள். கரேணுமதி பொறுமைகூட்டுவதுபோல முகம் தளர்த்தி பெருமூச்சுவிட்டு "சரி, கிளம்புக!" என்றாள்.

மூர்த்தை பூசெய்கை அறையிலிருந்து எடுத்து வரப்பட்ட அடைக்காய் அளவு சிறிய வலம்புரிச்சங்கை கன்று கீறலோசை எழுப்புவதுபோல முழக்கி "சேதிநாட்டு அரசியர் கரேணுமதியும் பிந்துமதியும் எழுந்தருள்கிறார்கள்" என்று அறிவித்து முன்னால் சென்றாள். முழவை முழக்கியபடி விறலியும் அவளுக்குப் பின்னால் மங்கலத்தாலத்துடன் அணிப்பரத்தையும் நடந்தனர். கரேணுமதி "நமக்கு மங்கலங்கள் வேண்டாம் என்று எவரேனும்

ஆணையிட்டதுண்டா என்று பின்னர் இச்சேடியிடம் விசாரித்து தெரிந்துகொள். அவ்வாறு ஆணையிட்டவர் எவரென்றாலும் நாம் எவர் என்று அவருக்கு சொல்ல வேண்டியுள்ளது” என்றாள். பிந்துமதி “ஆம், நானும் அதையே எண்ணினேன்” என்றாள்.

பேரவையின் வாயிலை அடைந்ததும் மூர்த்தை சங்கொலி எழுப்பியபடி இளவரசியின் வருகையை அறிவிக்க அங்கிருந்த சுரேசர் திகைப்புடன் நோக்கி மறுகணமே தன்னை ஒருக்கூட்டிக்கொண்டு தலைவணங்கி “அவைமங்கலம் அமைந்துவிட்டது, அரசியரே. இவ்வழியாக தாங்கள் இருக்கைக்கு செல்லலாம்” என்றார். மூர்த்தை சங்கொலி எழுப்பியபடி அவைக்குள் நுழைவதா என்று தயங்க சுரேசர் வலப்பக்கமாக திரும்பி அகலும்படி அவளிடம் கைகாட்டினார். கரேணுமதி “எங்கு செல்கிறாய்? அவை நுழைந்து எங்கள் வரவை அறிவி” என்றாள்.

சுரேசர் விழிகளில் சினம் எழ “அவ்வழக்கம் இங்கில்லை அரசி, இந்திரப்பிரஸ்தத்திலேயே அது கடைப்பிடிக்கப்பட்டதில்லை” என்றார். “எங்கள் வரவை அவை அறியவேண்டும். எங்கள் குடிவழக்கத்தை நாங்கள் கைவிட இயலாது” என்றாள் கரேணுமதி. “அனைத்து அரசியரும் இவ்வாறு அறிவிக்கப்பட்டு வந்தமைந்தால் அவைநிகழ்வில் பெரும்பகுதி அதற்கே ஆகும்” என்றார் சுரேசர். கரேணுமதி இதழ்வளைய புன்னகைத்து “ஷத்ரிய குடிப்பிறந்த அரசியருக்கு மட்டும் உரிய முறைமை இது” என்று உரைத்து மூர்த்தையிடம் உள்ளே செல்லும்படி கைகாட்டினாள்.

மூர்த்தை உள்ளே நுழைந்து சங்கொலி எழுப்பி இளவரசியரின் வருகையை அறிவித்தாள். மங்கல இசையுடன் விறலியும்

தாலத்துடன் அணிப்பரத்தையும் உள்ளே நுழைந்து இரு பக்கங்களிலாக விலகினர். நிமிர்ந்த தலையுடன் கரேணுமதி தன் மேலாடையை வலக்கையால் பற்றி இடக்கையால் கூந்தல் அலைகளை சீர்படுத்தியபடி மகளிர் அறைக்குள் நுழைந்தாள். அவளுக்குப் பின்னால் பிந்துமதி இருபுறமும் கூர்ந்து நோக்கியபடி வந்தாள். அவைக்கூடமே மிகச் சிறிதாக இருந்ததை வெண்பட்டுக்கு அப்பால் காணமுடிந்தது. நூறுபேர் சிறுபீடங்களில் தோள்முட்ட கைகள் முட்ட அமர்ந்திருந்தார்கள். தலைக்குமேல் கொத்துவிளக்கு சுடரின்றி தொங்கியது.

மகளிர் அவையில் குந்தி வெண்பட்டு விரிக்கப்பட்ட பீடத்தில் அமர்ந்திருந்தாள். அவளருகே தேவிகையும் விஜயையும் அமர்ந்திருக்க இரு சேடியர் பின்னால் நின்றிருந்தனர். கரேணுமதி அங்கிருந்த சேடியிடம் தங்கள் பீடங்களில் பட்டு விரிக்கும்படி மெல்லிய குரலில் சொன்னாள். சேடி அங்குமிங்கும் நோக்கியபின் அருகிருந்த கூடையிலிருந்து இரு பட்டுகளை எடுத்து அப்பீடத்தில் விரித்து அமரும்படி பணிவுடன் கைகாட்டினாள். கரேணுமதி அமர்ந்ததும் அவளருகே பிந்துமதி அமர்ந்தாள். கரேணுமதி தன் ஆடைகளை சீர்ப்படுத்த மூர்த்தையிடம் கண்காட்ட அவள் இடைப்பட்டின் மடிப்புகளை அடுக்கியமைத்தாள். கூந்தல் பின்னலை எடுத்து வியர்வை ஒற்றினாள்.

பிந்துமதி நீள்மூச்சுவிட்டு உடலை எளிதாக்கி அமர்ந்தாள். சேடி அவள் ஆடைகளை சீர்ப்படுத்தியபோது ஏதோ உள்ளுணர்வு எழ திரும்பி கரேணுமதியின் கைகளை நோக்கினாள். அவை ஆடையின் முனையைப் பற்றி கசக்கிக்கொண்டிருந்தன. நூல்களை பிரிக்கின்றனவா என அவள் கூர்ந்து நோக்கினாள்.

இல்லையென்று உணர்ந்ததும் நேற்றிரவு கண்டதும் விழிமயக்கோ என தோன்றியது.

# குருதிச்சாரல் - 34

**பகுதி ஐந்து : நிலநஞ்சு – 3**

அவை முன்னரே நடந்துகொண்டிருந்தமையால் அவர்கள் உள்ளே நுழைந்த அறிவிப்பு காற்றில் சருகென சிறிய சலசலப்பை உருவாக்கி அலையமைந்தது. அனைவரும் பிறிதொன்றுக்காக காத்திருந்தனர். அவர்களை எவரும் பொருட்படுத்தவில்லை என்று உணர்ந்த கரேணுமதி நீள்மூச்செறிந்து "காற்றோட்டம் இல்லாத இடுங்கலான இடத்தில் இந்த பீடங்களைப் போட முடிவெடுத்தவன் எவன்?" என்றாள். பிந்துமதி குந்தியை நோக்கினாள். அவைக்கு விழியளித்திருந்த குந்தி அவர்களை திரும்பிப் பார்க்கவில்லை. தேவிகையும் விஜயையும் மட்டும் திரும்பிப்பார்த்து தலைவணங்கினர். கரேணுமதி அவ்வணக்கத்தை ஏற்றதாக தலையசைத்த பின் நோக்கை திருப்பிக்கொண்டாள்.

பிந்துமதி "அவை நிகழ்வுகள் சிறந்த முறையில் நடிக்கப்படுகின்றன என்று தோன்றுகிறது, மூத்தவளே" என்றாள். கரேணுமதி புன்னகைத்து "என்ன?" என்றாள். "அரசர் அந்தணருக்கும் பாவலருக்கும் சூதருக்கும் கொடைகள் அளிக்கிறார்" என்றாள். கரேணுமதி அவை மேடையை நோக்க மூவர் மூவராக மேடையேறி சூதர்கள் யுதிஷ்டிரரிடமிருந்து பொன், வெள்ளி நாணயங்களை பரிசெனப் பெற்று தலைவணங்கி புறம்காட்டாது இறங்கினர். "அந்த

நாணயங்களைக்கொண்டு அவர்கள் மொந்தைக் கள் வாங்கி அருந்தலாம். இந்நகரில் அதுவே நன்றல்லவா?” என்றாள் கரேணுமதி.

பிந்துமதி அவையை விழிதுழாவியபின் “இளைய யாதவர் அவையமர்ந்திருக்கிறார். பார்த்தீர்களல்லவா?” என்றாள். கரேணுமதி விழி அலைய தேடி இளைய யாதவரை நோக்கு தொட்டு “ஆம், ஏன் அங்கே அமர்ந்திருக்கிறார்?” என்றாள். “அவர் அரசர் அல்ல என்பதனால்” என்றாள் பிந்துமதி. மீண்டும் நோக்கிவிட்டு “அருகே சாத்யகியும் இல்லை” என்றாள் கரேணுமதி. “அவர் தன்னை இளையவரின் அணுக்கக்காவலர் என்றே அமைத்துக்கொண்டிருக்கிறார். ஆகவே அவையமர்வதில்லை போலும்” என்றாள் பிந்துமதி. கரேணுமதி “நன்று, முடியிலா யாதவரின் முதற்காவலர் பணியின்பொருட்டு சத்யகரின் மைந்தர் என்னும் நிலையை துறந்துவிட்டாரா?” என்றாள்.

“அவ்வாறுதான் சொன்னார்கள். யாதவபுரியின் இளவரசுப் பட்டத்தை அவர் துறந்தபோது தன் குடிமூத்தாரிடம் தான் சூடிய அனைத்தையும் தன் உடலிலிருந்து விலக்க முடியும் என்றும் தோளிலும் நெஞ்சிலும் பொறிக்கப்பட்ட ஐந்து அடிமை முத்திரைகளை தன் உடலிலிருந்து சிதையன்று மட்டுமே அகற்ற முடியும் என்றும் சொன்னாராம்.” கரேணுமதி புன்னகைத்து “எங்கிருந்தாலும் தங்கள் இடமென்னவென்று உள்ளிருந்தெழும் ஆணையால் மானுடர் முடிவெடுக்கிறார்கள். முன்பொருமுறை அந்தணர் அவையில் மாற்றுருக்கொண்டு சூத்திரன் ஒருவன் அமர்ந்தான். அன்னமிட்டு நெய்யூற்றுகையிலேயே அவன் தன்னை காட்டிவிட்டான். நெய்நிறை ஏனத்தின் அடியில் கைவைத்து தள்ளி மொத்த

நெய்யையும் தன் இலையில் கவிழ்த்துக்கொண்டான். அக்கணமே அவன் தோளைப்பற்றி காவலர் உசாவியபோது உண்மை தெரிந்தது” என்றாள்.

குந்தி திரும்பி தேவிகையிடம் ஏதோ சொல்ல தேவிகை அதை விஜயையிடம் சொன்னாள். விஜயை கரேணுமதியிடம் சற்று சரிந்து “மகளிர் அவையில் இருக்கையில் தனியுரையாடல் தேவையில்லையென்று பேரரசி ஆணையிடுகிறார்” என்றாள். கரேணுமதி முகம் சிறுத்து “நன்று” என்று பற்களைக் கடித்தபடி சொன்னாள். விஜயை மறுபக்கம் திரும்பியதும் கரேணுமதி திரும்பி பிந்துமதியின் விழிகளை பார்த்தாள். பிந்துமதி மெல்ல தலையசைத்தாள். கரேணுமதி மெல்லிய சீறலாக “இதை ஓர் அரசவையென்று எண்ணுகிறாள் முதுமகள், நன்று” என்றாள். பிந்துமதி அவள் கையை பார்த்தாள். நெஞ்சு அதிர நோக்கை விலக்கிக்கொண்டாள். அவள் விரல்கள் ஆடையின் விளிம்பிலிருந்த பொன்னூலை பிரித்து எடுத்துக்கொண்டிருந்தன.

அரசமுறைமைகள் அனைத்தும் முடிவடைந்ததும் சௌனகர் கைகாட்ட நிமித்திகன் வெள்ளிக்கோலைத் தூக்கி மும்முறை சுழற்றியபடி அவை மேடையிலேறி தலைக்கு மேல் கோலைத் தூக்கிக் காட்டினான். அவை கலைவடங்கி அமைதியடைந்தது வந்தமைந்த பறவை சிறகுகளை கலைத்தடுக்கி வெண்சங்கென்றாவதுபோல என பிந்துமதி நினைத்தாள். ஏன் அந்த ஒப்புமை உள்ளத்திலெழுந்தது என வியந்துகொண்டாள். யுதிஷ்டிரர் தாடியை நீவியபடி தொய்ந்த தோள்களுடன் அமர்ந்திருந்தார். பீமன் கைகளை மார்பில் கட்டியபடி நிமிர்ந்து அமர்ந்து தன் காலடிகளை நோக்கி விழிதாழ்த்திருந்தான். அவனருகே மேலிருந்து உதிர்ந்தவன்போல அர்ஜுனன்.

நிமித்திகன் உரத்த குரலில் "அவையீரே, சான்றோரே, குடிமூத்தோரே, அரசரின் குரல் என்று இந்த அவை நின்று இதை அறிவிக்கிறேன். நம் அவையின் சொல்கொண்டு அஸ்தினபுரிக்குச் சென்று தூதுரைத்து அவர்களின் செய்தியுடன் மீண்டுவந்த இளைய யாதவர் இங்கு அவையமர்ந்திருக்கிறார். அங்கு நிகழ்ந்தவற்றையும் இனி இங்கு ஆவனவற்றையும் குறித்து அவர் உரைப்பார். அவையினரின் எண்ணம் உசாவி மூத்தோர் விழைவறிந்து நீத்தோருக்கும் தெய்வங்களுக்கும் உகக்கும் முடிவை அரசர் இந்த அவையில் அறிவிப்பார். ஆம், அவ்வாறே ஆகுக!" என்றபின் மீண்டும் வெள்ளிக்கோலை மும்முறை சுழற்றி தலைவணங்கி அகன்றான்.

இளைய யாதவர் தன் மீது அனைத்து நோட்டங்களும் அமைந்திருப்பதை உணர்ந்தவராக புன்னகையுடன் எழுந்தார். மூச்சொலியாக "கொலைப் புன்னகை!" என்றாள் கரேணுமதி. ஆனால் அத்தருணம் பிந்துமதி அச்சொல்லை வெறுத்தாள். மறுகணம் அப்போது தானும் ஒரு வசைச்சொல்லையே கூறியிருப்போமோ என்னும் எண்ணம் எழுந்தது. இளைய யாதவர் யுதிஷ்டிரரை நோக்கி தலைவணங்கிவிட்டு "அவை வெல்க! அமர்ந்த மூத்தோர் வாழ்க! அரசரின் முடி பொலிக! அவையோரே, நான் அரசரின் ஆணைபெற்று அஸ்தினபுரிக்கு கிளம்பினேன். அங்கு சென்று தூதுரைத்து மீண்டதையும் அதன் விளைவென திரண்டதையும் சொல்லும்படி பணிக்கப்பட்டிருக்கிறேன்" என்றார்.

"அவையீரே, உபப்பிலாவ்யத்திலிருந்து கிளம்பி அஸ்தினபுரிநாட்டின் எல்லையை நான் கடந்ததுமே கௌரவர்களின் அமைச்சர்களும் ஒற்றர் தலைவர்களும் என்னை அணுகி அரச விருந்தினராக அமையும்படி கோரினர்.

தங்கள் காவல்மாளிகையில் தங்கி இளைப்பாறி அவர்கள் அளித்த பெருந்தேரில் நகர்நுழையும்படி வற்புறுத்தினர். அரசரின் ஆணையென்றும், பின்னர் பேரரசரின் மன்றாட்டென்றும் அது முன்வைக்கப்பட்டது. நான் முடிகொண்ட அரசன் அல்ல என்பதனால் எளிய யாதவனாக அந்நகர் புகவிருப்பதாகச் சொல்லி அதை முற்றிலும் மறுத்தேன். மரத்தடிகளில் பகல் தங்கியும் சாவடிகளில் இரவுறங்கியும் அஸ்தினபுரிக்குச் சென்றேன்.”

அவர் ஏன் அத்தனை விரிவாகச் சொல்கிறார் என பிந்துமதி எண்ணினாள். “நகர் வாயிலில் எனக்காக விகர்ணனும் யுயுத்ஸுவும் காத்து நின்றிருந்தனர். நகரினூடாக நான் சென்றபோது அஸ்தினபுரியின் குடிகள் என்னை அயலவன்போல பகைவிழிகொண்டு நோக்கினர். என் அகல்வுக்குப் பின் என் வருகைநோக்கம் குறித்து அலர் எழுவதை கேட்டுக்கொண்டே சென்றேன். அவையோரே, அஸ்தினபுரியின் யாதவரும் என்னை விலக்கிநோக்குவதையே உணர்ந்தேன். அவர்கள் விலக்குவதோடு விலக்குவதை பிறருக்குக் காட்டவும் வேண்டும் என்னும் நிலையில் இருப்பவர்கள்.”

“அரண்மனை முகப்பில் என்னை விதுரர் வரவேற்றார். யாதவருக்குரிய எளிய முகமனை சொன்னார். என்னை அரச விருந்தினருக்குரிய மாளிகைக்கு அழைத்துச்செல்ல யுயுத்ஸு முற்பட்டபோது அதை மறுத்து அரசதூதருக்குரிய எளிய தங்குமிடத்தை கோரிப் பெற்றேன். என் சொற்கள் மீது எந்தத் திரையும் விழ ஒப்பமாட்டேன் என்பதை அதனூடாக தெளிவுபடுத்தினேன். அன்று உச்சிப்பொழுதில் விதுரரின் இல்லத்திற்குச் சென்று உணவருந்தினேன். அங்கே நாங்கள்

ஒரு சொல்லேனும் அரசுசூழ்தல் சார்ந்து பேசிக்கொள்ளவில்லை. விதுரர் சோர்ந்திருந்தார். சொல்லில் நம்பிக்கை இழந்திருந்தார். நீர்நிலைகள்மேல் இரவு என முதுமை விரைந்து அவர்மேல் படர்ந்துகொண்டிருப்பதைக் கண்டேன்.”

“மாலை என்னை சந்திக்க விகர்ணனும் அவன் துணைவியும் வந்தனர். அறத்தில் நிற்போம் என்றும் எந்த அவையிலும் அதையே உரைப்போம் என்றும் அவர்கள் எனக்கு சொல்லளித்தனர்” என்று இளைய யாதவர் தொடர்ந்தார். அவர் அவர்களுடனான சந்திப்பை விரித்துரைத்தார். மச்சகுலத்தவளான தாரையின் எளிமையான அழகை விரித்துரைத்தார். விகர்ணன் அறம்நிற்பதன்பொருட்டு கொண்டிருக்கும் துயரைக் குறித்து சொன்னார். வேண்டுமென்றே அவையின் உளக்குவிப்பை தளரச்செய்கிறார் என பிந்துமதி புரிந்துகொண்டாள். அவர்கள் அவர் சொல்வனவற்றின்மேல் சொல்லாடல் நிகழ்த்தும் எண்ணத்திலிருந்தனர். மெல்ல மெல்ல அவர்களின் உடல்கள் தளர்வுற்றன. அவர்கள் கூர்ந்து செவிகொள்ளாதவர்களானதை விழிகள் காட்டின.

“மறுநாள் பேரவையில் அமர்ந்து அங்கு நிகழ்வதை கூர்ந்து நோக்கினேன். பீஷ்மரும் துரோணரும் கிருபரும் அறுதிநிலை கொண்டுவிட்டனர் என்பதை அவர்களின் உடல்களிலிருந்து அறிந்தேன். முற்றிலும் இறுகி பிறிதொன்றிலா நிலையில் துரியோதனர் இருப்பதை கண்டேன். அவர் இளையோர் அவரது விரிந்த உடலென்றே தெரிந்தனர். ஒருபோதும் ஒன்றும் பிழைபடப் போவதில்லை என்றுணர்ந்த நிறைவமைதியுடனிருந்தனர் சகுனியும் கணிகரும்” என்று

இளைய யாதவர் தொடர்ந்தார். அவையின் உளநிலையில் இருந்த பதற்றத்தை, அவர்களின் உடல்களில் குடிகொண்டு விம்மிய குருதிவிடாய்கொண்ட போர்த்தெய்வங்களைப்பற்றி கூறினார்.

“அவையோரே, நான் அஸ்தினபுரியின் அவையில் எழுந்து சஞ்சயன் இங்கு வந்து உரைத்ததை கூறினேன்” என்று அவர் தொடர்ந்தபோது அவையில் ஆர்வம் மிகவில்லை. விழிகள் வெறுமனே மலைத்துத் திறந்து இலைகளிலமர்ந்த மின்மினிகள்போல போதிய ஒளியில்லாத சிற்றவையின் வெளியை நிறைத்திருந்தன. “பாண்டவராகிய யுதிஷ்டிரர் தந்தையின் ஆணையை தலைமேற்கொண்டு பிறிதொன்றும் கோராது போர்ஒழிந்ததை அவர்களுக்கு உரைத்தேன். இனி பாண்டவர்கள் அறியா நிலம் சென்று குலமிலிகளாக வாழ்வார்கள் என்றும், தங்கள் கொடிவழியினருக்கு தங்கள் தோளாலும் அம்பாலும் ஈட்டும் நிலத்தையும் செல்வத்தையுமே விட்டுச்செல்வார்கள் என்றும் கூறினேன். வேடர்களாகவும் மச்சர்களாகவும் பாண்டுவின் குருதி பரவும் என்றும் அதுவே தந்தையின் ஆணையென்றால் அவ்வாறே ஆகுக என்றும் யுதிஷ்டிரர் கூறியதாக சொன்னேன்.”

“அப்போதுதான் விகர்ணன் எழுந்து உரத்த குரலில் திருதராஷ்டிரர் தன் மைந்தர்களான கௌரவருக்கு ஆணையிடாது இளையோர் மைந்தருக்கு ஆணையிட்டது ஏன் என்றான். தன் குருதியை நம்பினால் முதற்சொல்லை நேர்மைந்தருக்கு அல்லவா அளித்திருப்பார் என்றான். என் அன்னையின் கற்பை அவர் அவையில் மறுக்கிறார் என்றே பொருள் என்றான்.” மிக இயல்பான ஒழுக்கில் அவர் அதை சொல்லிச்சென்றமையால் அவையில் உணர்வெதிரொலிகள்

ஏதும் எழவில்லை. அவர்கள் அந்நிகழ்வை புரிந்துகொள்ளவேயில்லை என்று பிந்துமதிக்கு தோன்றியது. அவருடைய எண்ணமும் அதுதானா என்று ஐயமெழுந்தது.

"அன்னை காந்தாரி ஆண்களின் அவையில் கற்பை நிறுவும் பொறுப்பு காந்தாரப் பெண்டிருக்கில்லை என்று சொல்லிவிட்டார். அச்சொல் திருதராஷ்டிரரை கிளர்த்தியது. அவையெழுந்து இரு கைகளையும் நீட்டி விழிநீர் மார்பில் வழிய தன் மைந்தர்களிடம் மன்றாடினார். குலநெறி பேணவேண்டும் என்றும் அறத்தில் நிற்க வேண்டுமென்றும் கூறினார். பாதி நாட்டையும் கருவூலத்தில் உகந்ததையும் இந்திரப்பிரஸ்தத்தையும் தன் இளையோன் மைந்தர்களுக்கு அளிக்க வேண்டுமென்றும் சொன்னார். தந்தையென்றும், துயர்கொண்ட முதியோன் என்றும் நின்று கோருவதாகச் சொல்லி விம்மியழுதார்."

"அவருடைய சொற்களை ஏற்று யுதிஷ்டிரரின் அனைத்துரிமைகளையும் அளித்து உடன்குருதியினர் என தோள்தழுவி ஒற்றுமை கொள்வதே கௌரவருக்கு உகந்தது என்றார் பீஷ்மர். துரோணரும் கிருபரும் அவ்வாறே உரைத்தனர்" என்றார் இளைய யாதவர். அதே ஒழுக்கில் இயல்பான சொற்களில் "ஆனால் துரியோதனர் அவையிலெழுந்து ஒரு பிடி மண்ணும் ஒரு துளிப் பொன்னும் பாண்டவருக்கு அளிக்கப்பட முடியாதென்றும் அதன்பொருட்டு தந்தையைத் துறப்பதற்கு ஒருக்கமென்றும் அறிவித்தார்" என்றார்.

"அவை அதற்கு என்ன மறுமொழி சொல்கிறதென்று நான் நோக்கினேன். துரியோதனரே அஸ்தினபுரியின் குடிகளுக்கு அவ்வுரிமையை அளித்தார். அவ்வவை விரும்பினால் தன்னை

முடிநீக்கம் செய்யலாம் என்றும் விழைபவர்கள் எழுந்து கோல்தூக்குமாறும் அறைகூவினார். அவை அவரைப் போற்றி பேரொலி எழுப்பியது. அங்கிருந்த குடித்தலைவர்கள் அனைவரும் துரியோதனரின் கூற்றை முழுதேற்றுக்கொண்டனர். அம்முடிவுக்கு முழுதும் கட்டுப்படுவதாக பீஷ்மர் முன்னரே அறிவித்திருந்தமையால் அவரும் அதை ஏற்றார். பீஷ்மரின் வழிநிற்பவர்களாகிய கிருபரும் துரோணரும் அதை ஏற்றனர்.”

“மறுநாள் அவையின் இறுதி முடிவு விதுரரால் அவையில் என்னிடம் அறிவிக்கப்பட்டது” என்றார் இளைய யாதவர். “அவர்கள் நம்மிடம் எந்த பேச்சுக்கும் சித்தமாக இல்லை. நிலமோ செல்வமோ நமக்கு அளிக்கமாட்டோம் என்பதே அஸ்தினபுரியின் அரசர் உபப்பிலாவ்யம் அமர்ந்த யுதிஷ்டிரருக்கு அளிக்கும் செய்தி.” அவை குழப்பத்திலாழ்ந்ததுபோல அமர்ந்திருந்தது. யுதிஷ்டிரர் தன் கைநகங்களை நோக்கிக்கொண்டிருந்தார். அவர் அருகே திரௌபதி சிலையென்று அமர்ந்திருந்தாள். சௌனகர் மட்டும் அவையில் அமர்ந்திருந்தவர்களை மாறிமாறி முகம்நோக்கிக்கொண்டிருந்தார்.

“இந்த அவை என்ன முடிவு எடுக்கப்போகிறது?” என்று பீமன் அமர்ந்தபடியே கேட்டான். சௌனகர் “அவை கூட்டாக முடிவெடுத்து…” என்று சொல்லத்தொடங்க “அனைத்தையும் கைவிட்டு நினைத்த திசை நோக்கி செல்வதற்கு எதற்கு அவைசூழ்தல்? விலங்குகளும் அதைத்தான் செய்கின்றன” என்றான் பீமன். இளைய யாதவர் “அவ்வாறு நாம் நிலமொழிந்து சென்றாலும் நம்மை படைமுகத்தில் வென்று அழித்தாகவேண்டும் என்று சகுனி துரியோதனரிடம்

சொல்லியிருப்பதாக விதுரர் சொன்னார்” என்றார். யுதிஷ்டிரர் “அது என்ன முறை?” என்றார்.

“அரசே, நானாக இருப்பினும் அதையே செய்வேன். ஏனென்றால் நாம் படைதிரட்டிவிட்டோம். நேற்றுவரை பாரதவர்ஷத்தில் இல்லாதிருந்த படை இது. நிஷாதர்களும் கிராதர்களும் அரக்கர்களும் அசுரர்களும் கொண்டது. நாம் ஒழிந்தாலும் இந்தப் படை இங்கே இருக்கும். இப்போது இதை கலைத்தாலும் பாலில் நெய் என நுண்வடிவில் இந்நிலத்தில் இருந்துகொண்டிருக்கும். இதை முற்றாக வென்று அடக்காமல் இங்கே இனி ஷத்ரியர் கோல் நிலைகொள்ளாது” என்றார் இளைய யாதவர்.

யுதிஷ்டிரர் துயருடன் தலையை அசைத்தபடி “பிறிதொன்றை நான் துரியோதனனிடமிருந்து எதிர்பார்க்கவும் இல்லை, யாதவனே” என்றார். பீமன் “பிறகென்ன? தூது முடிந்துவிட்டது. நன்று. இனி ஆவதை பார்ப்போம். என்ன செய்யப்போகிறோம்? உபப்பிலாவ்யத்தைத் துறந்து நம்முடன் வரத்துணியும் குடிகளையும் மைந்தரையும் மனைவியரையும் அழைத்துக்கொண்டு எத்திசைக்கு ஏகப்போகிறோம்? தக்கணமா, காமரூபமா, அன்றி வடக்கே கின்னர நாடுகளா?” என்றான். யுதிஷ்டிரர் முகம்சுளித்து “பொறு, மந்தா” என்றபின் “யாதவனே, நீ அங்கு எதை உரைத்து மீண்டாய்? இந்த அவையில் மீண்டும் என்ன கூற விழைகிறாய்?” என்றார்.

“நான் அவையிலெழுந்து அங்கு நிகழ்ந்தவற்றை தங்களிடம் வந்து சொல்லி மீள்கிறேன்” என்றேன். “மீள்கிறேன் என்றா?” என்றார் யுதிஷ்டிரர். “நாடோ செல்வமோ அளிக்கஇயலாதென்று அவன் கூறிவிட்ட பிறகென்ன?” என்று பீமன் கேட்டான். “அஸ்தினபுரியின் ஊட்டுபுரையில் உணவுண்ணும் உரிமையை

பெற்றுவரப்போகிறோமா?” யுதிஷ்டிரர் “பொறு மந்தா, சினம் பரிமாறுவதற்குரியதல்ல அவை” என்றார். இளைய யாதவரிடம் “நீ எண்ணுவதென்ன யாதவனே?” என்று கேட்டார்.

இளைய யாதவர் “மீண்டுமொரு தூதுடன் செல்லலாம் என்று நினைக்கிறேன். அன்றிரவு விதுரரின் தனியறையில் சென்று அமர்ந்து அதை பேசி முடிவுசெய்துவிட்டே அங்கிருந்து கிளம்பினேன்” என்றார். யுதிஷ்டிரர் “கூறுக, எதுவாயினும் உன் ஆணை” என்றார். “இன்னும் சில நாட்களில் அஸ்தினபுரியில் ஷத்ரியப்பேரவை கூடப்போகிறது. ஜயத்ரதன், அஸ்வத்தாமன், சல்யர், ஷத்ரிய மன்னர்கள் அனைவரும் அங்கு அவையமர்ந்திருப்பார்கள். அங்கு சென்று மீண்டும் ஒரு தூது உரைப்பேன். தந்தையின் ஆணையை தான் மீறிவிட்டதை அந்த அவையில் எப்படி துரியோதனர் நிறுவுகிறார் என்று பார்க்கிறேன். அத்துடன் நமது கோரிக்கையை இன்னும் ஒரு படி கீழிறக்க சித்தமாகிறேன்” என்றார்.

“என்ன கோரப்போகிறோம்?” என்று பீமன் கேட்டான். அவனை பொறுத்திருக்கும்படி கைகாட்டிய பின் யுதிஷ்டிரர் “நீயே கூறுக, யாதவனே. நாங்கள் இனி எதை கோரமுடியும்?” என்றார். இளைய யாதவர் “இன்றைய அஸ்தினபுரி நாட்டின் வடகிழக்கெல்லைக் காட்டின் அருகே ஐந்து ஊர்களை கோரிப்பெறுகிறேன்” என்றார். “ஐந்து ஊர்களா? எவருக்கு? எனக்கு எவரும் ஊரளிக்க வேண்டியதில்லை” என்று பீமன் சொன்னான். “பொறு, மந்தா” என்று சீற்றத்துடன் யுதிஷ்டிரர் சொன்னார். “யாதவனே, ஐந்து ஊர்கள் நமக்கு எதற்கு? அதைக்கொண்டு நாம் இயற்றுவதென்ன?”

“ஐந்து ஊர்கள் அமைந்தால் நம் குடியினரை அங்கு வரவழைக்க முடியும். வடகிழக்கென்பது பெருங்காடுகளின்

விளிம்பு. குடி பெருக நம் நிலம் பெருகும்” என்றார் இளைய யாதவர். “இங்கிருந்து அறியா நிலம் ஒன்றுக்குச் சென்று அங்கொரு அரசு அமைத்தல் எளிதல்ல. நாம் நிலம் வெல்லலாம், குடியமைய நெடுங்காலமாகும். தொல்குடிகள் பிறரை அரசரென ஏற்பதில்லை என்று அறிவீர்கள். மூத்த குடிகள் தொல்மூதாதையர் வகுத்த நீரெல்லைகளைக் கடந்து செல்வதுமில்லை. அஸ்தினபுரியின் எல்லைக்குள் என்றால் நம் மக்கள் நம்முடன் வருவார்கள்.” பீமன் “நாம் நமக்குரிய அனைத்தையும் புதிதாக ஈட்டுவோம்... பாரதவர்ஷத்தில் அரிய நிலங்கள் பல உள்ளன. நம் வில்லும் வேலும் காவலென அமையுமென்றால் நமக்கு அரசுரிமை அளிக்கும் குலங்களும் உள்ளன, நான் அறிவேன்” என்றான்.

“அது எளிதல்ல, இளையவரே” என்றார் இளைய யாதவர். “உங்கள் தோளாற்றலும் அர்ஜுனனின் வில்லாற்றலும் உங்களுக்கு நலம் பயப்பதே. கூடவே தீங்கும் பயப்பவை. நீங்கள் எங்கு குடியேறினாலும் அங்கு ஒரு புது அரசு நாளடைவில் எழுமென்பதை சூழ இருக்கும் பிற அரசர் உடனே உணர்வார்கள். உங்களை முளையிலேயே அழிக்கவே அவர்கள் முனைவார்கள். அது உங்களுக்கு இடர், உங்களை ஏற்றவர்களுக்கு அழிவு.” பீமன் ஒவ்வாமையுடன் தலையசைத்தான். ”காலூன்றுவதற்கு ஒரு கைப்பிடி மண் கிடைத்தால் அங்கிருந்து பாண்டவக் கொடிவழியினர் கிளைத்தெழ முடியும். ஐந்து ஊர்கள் ஐந்து நகர்களாகும். ஐந்து முகம்கொண்ட அரசாகும்” என்றார் இளைய யாதவர்.

“அதற்கு அவர்கள் ஒப்புவார்களா?” என்று சகதேவன் கேட்டான். “ஒப்பக்கூடும். ஏனெனில் ஐந்து ஊர்களில் நாம் அமைய ஒப்புக்கொண்டால் இப்போது நம்முடனிருக்கும் பெரும்படை

கலைக்கப்படும். ஷத்ரிய வீரர்களால் தலைமைதாங்கப்படாத நிஷாதர்களையும் கிராதர்களையும் சிதறடித்து அழிக்கலாமென்று சகுனி எண்ணக்கூடும். நாம் அந்த ஐந்து ஊர்களில் இருந்து கிளம்பி அரசொன்றை அமைத்து அஸ்தினபுரிக்கு எதிர்நிற்பதென்றால்கூட இரண்டு தலைமுறைகளாவது ஆகும். அதற்குள் அஸ்தினபுரி பேரரசு என எழமுடியும். அவர்கள் நமக்கு பாதி நிலம் மறுப்பதே துரியோதனர் சத்ராஜித் என அமரமுடியாதென்பதனால்தான். ஐந்து ஊர்களைப் பெற்றால் நாம் அரசர்கள் அல்ல. அஸ்தினபுரியின் அரசர் மும்முடிசூடி அமர எந்தத் தடையும் இல்லை.”

“இது மிகச் சிறந்த சொல்லொப்பு என்றே நானும் எண்ணுகிறேன், மூத்தவரே” என்றான் சகதேவன். “நமக்கு அளித்ததுமாகும், நம்மை ஒருபோதும் எழ முடியாதவர்களாக ஆக்கி அரசுகளிடமிருந்து விலக்கியதுமாகும். சற்றேனும் அரசுசூழ்தல் அறிந்த எவர் இருந்தாலும் இதை ஒப்புக்கொள்வார்கள். அவர்கள் ஐந்து ஊர்களையே நமக்கு அளித்தார்கள் என்று சூதர் பாடினால் அது அவர்களுக்கு இழிவு. ஐந்து ஊர்களை நாம் கோரினோம் என்னும்போது அவ்விழிவு மறைகிறது. நாட்டையும் கருவூலத்தையும் நகரையும் அளிப்பதென்பது தங்களுக்கு ஆற்றல் மிக்க எதிரியை எஞ்சவிடுவது. ஐந்து ஊர்களே என்றால் நூறாண்டுகளுக்கு பற்றிக்கொள்ளாத எரித்துளி என நம்மை எஞ்சவிடுவது. பழியின்றி வெல்வதுதான் அது.”

“அனைத்துக்கும் மேலாக ஒவ்வொரு அவையிலும் நம்மை சிறுமைப்படுத்தி மகிழவும் கௌரவர்களுக்கு அது வாய்ப்பளிக்கிறது. ஆகவே அதை விடமாட்டார்கள் என்று

எண்ணுகின்றேன்" என்றான் நகுலன். பீமன் உரத்த குரலில் "மூத்தவரே, இவ்வாறு கிள்ளி வீசப்படும் இத்துளி நிலத்தைக்கொண்டு நாம் அடையபோவதென்ன, இரந்து நின்றோம் எனும் இழிவையன்றி? இவ்வைந்து ஊர்களையும் எங்கள் தோள்வல்லமையால் வெல்ல முடியாதென்று மெய்யாகவே எண்ணுகிறீர்களா?" என்றான்.

"இல்லை, இளையோனே. மிக விரைவிலேயே ஐந்து மடங்கு நிலத்தை வெல்லும் ஆற்றல் உங்களுக்குண்டு. ஆனால் குடித்தலைவர்கள் என்றே நாம் கொள்ளப்படுவோம். எந்த அரசவையிலும் நம்மை அமர்த்தமாட்டார்கள். அஸ்தினபுரியின் எல்லைக்குள் பாண்டுவின் வழியென்று கைப்பிடி நிலமேனும் நமக்கின்றி நாம் பாண்டவர்கள் அல்ல. நாம் பாண்டவர்கள் என்று சொல்லிக்கொள்வோம், நாமன்றி பிறர் அவ்வாறு கொள்ளமாட்டார்கள். நம்மை சூதர் பாடமாட்டார்கள். புலவர் அப்பெயர் சொல்லி வழுத்தமாட்டார்கள்" என்றார் யுதிஷ்டிரர்.

"அதன் பின்னர் நீங்கள் பாண்டவர் என்று சொல்லி ஷத்ரியப் படைகளை எங்கும் திரட்டவும் இயலாது. குலமும் குடியும் குறிப்பிட்ட சூழலில் மட்டுமே செல்லுபடியாகும் நாணயங்கள். இவற்றை உதறி அறியா நிலங்களுக்குச் சென்றால் நிஷாதரென்றும் அரக்கரென்றும் அசுரரென்றுமே அறியப்படுவீர்கள். நிஷாதர் அரசராக முடியுமெனில் அரசர் நிஷாதருமாகக்கூடும் என்று உணர்க! அஸ்தினபுரியின் எல்லைக்குள் ஐந்து சிற்றூர்கள் இருப்பினும்கூட அவை உங்களை இத்தலைமுறையில் பாண்டவர்கள் என்று நிறுத்தும்" என்றார் இளைய யாதவர். "ஷத்ரிய அவையில் நமக்கு ஆதரவாக ஆற்றலுள்ள சில குரல்கள் எழாமலிருக்காது. அங்கு அஸ்வத்தாமர் வருகிறார். அறம் அறிந்த உள்ளம்கொண்டவர்.

அங்கரைக்கூட அதன் பொருட்டு நாம் எதிர்பார்க்கலாம். ஒரு வலுவான குரல் எழுந்தாலும்கூட துரியோதனர் செவி சாய்க்காமல் இருக்க இயலாது.”

பீமன் “அன்னை என்ன சொல்கிறார்? இப்போது அதுவே முதன்மை” என்றான். “பாண்டுவின் நிலத்தையும் முடியையும் கைக்கொள்ளாமல் ஒருபோதும் அமையமாட்டேன் என்று இந்த அவையில் வஞ்சினம் உரைத்தவர் அவரே.” கரேணுமதி “ஆம், பாண்டுவின் துணைவியென்ற முத்திரைக் கணையாழி இல்லையேல் காடுசென்று கன்றோட்ட வேண்டுமல்லவா?” என்றாள். குந்தியின் அருகே குனிந்த சேடி அவள் தன் மெலிந்த உதடுகளால் நடுங்கும் தலையுடன் சொன்ன சொற்களைக் கேட்டு தலையசைத்து அவைமேடைக்குச் சென்று வணங்கினாள். பேசுமாறு யுதிஷ்டிரர் கைகாட்டினார்.

“பேரரசி குந்தியின் செய்தியை இந்த அவைக்கு சொல்ல விரும்புகிறேன். அரசி விழைவது பாண்டுவின் மண்ணையே. சிறிதோ பெரிதோ அது தன் மைந்தரின் குருதி உரிமை என்பது மட்டுமே அன்னைக்கு ஒரு பொருட்டென தெரிகிறது. ஐந்து ஊர்கள், கருவூலத்திலிருந்து ஐந்து கலம் பொன், அது போதும். தன் மைந்தரை அன்னை நம்புகிறார். என்றேனும் பாண்டுவின் கொடிவழி மைந்தர் எழுந்து மும்முடிசூடுவார்கள் என்று எதிர்பார்க்கிறார்” என்றாள் சேடி.

சௌனகர் “பாஞ்சாலத்தரசியின் கருத்தையும் அவை அறியட்டும்” என்றார். திரௌபதி விழித்துக்கொள்பவள்போல் உடலசைவுகொண்டு எழுந்து கைகூப்பி “அவையினர் விழைவது எதுவாயினும் எனக்கு ஒப்புதலே” என்றாள். யுதிஷ்டிரர் முகம் மலர்ந்து “பிறகென்ன? யாதவனே, இம்முறை இவையனைத்தும் நன்றே முடியும் என்று எண்ணுகிறேன்”

என்றார். இளைய யாதவர் “இது அவையின் ஆணை என்றால் இதை மீண்டும் ஒருமுறை சென்று ஷத்ரியப் பேரவையில் உரைக்கிறேன்” என்றார்.

எவரும் எதிர்பாராதபடி பிந்துமதி எழுந்து வெண்பட்டுத் திரையை விலக்கி அப்பால் சென்றாள். சுரேசர் திகைத்து “அரசி” என்றார். “வெண்பட்டுத் திரைக்குப் பின்னாலிருந்து அவையை நோக்கும் வழக்கம் சேதி நாட்டில் இல்லை” என்று உரத்த குரலில் பிந்துமதி சொன்னாள். “இரந்து பெறும் நிலத்துடன் அமைதல் அரசருக்கும் இளையோருக்கும் உகக்கலாம், எங்கள் குடி ஷத்ரியக் குருதி கொண்டது. என் மைந்தர் எங்கு பிறந்தாலும் ஷத்ரியர்கள். இரந்த நிலத்தில் அவர்கள் வாழமாட்டார்கள். ஒரு பிடி மண்ணென்றாலும் குருதி சிந்தி வென்று ஆள்வதையே அவர்கள் விரும்புவார்கள்” என்றாள்.

கரேணுமதி அதற்குள் தானும் வெளிவந்து அவள் அருகே நின்று “நிலம் துறக்கும் உரிமை அரசருக்கு உண்டு. அவர் அன்னைக்கும் உண்டு. ஆனால் அவை அறிக! இது பாண்டு வென்று ஈட்டிய நிலமல்ல. ஹஸ்தியும் குருவும் ஈட்டி கையளித்த நிலம். ஆகவே எங்கள் மைந்தருக்கும் முற்றுரிமை கொண்டது. எங்கள் மைந்தரின் நிலத்தைத் துறக்க இங்கு எவருக்கும் உரிமை அளிக்கப்படவில்லை. நாங்கள் இதற்கு ஒப்பமாட்டோம்” என்றாள். யுதிஷ்டிரர் முகம் சுளித்தபடி “இதென்ன பேச்சு? இவர்களின் குரலுக்கென்ன இடம் இங்கே?” என்றார். நகுலன் “உன் கருத்தை உரைத்துவிட்டாய் அல்லவா? உள்ளே செல்” என்றான். கரேணுமதி “என் சொற்களை இங்கு நாட்டும்படியே வந்தேன். வேண்டுமென்றால் எங்களை வெட்டி வீழ்த்துக… இங்கிருந்து அகலப்போவதில்லை” என்றாள்.

இளைய யாதவர் புன்னகை மாறா முகத்துடன் “அரசி, இந்த அவை கூடி ஒருங்கிணைந்து எடுத்த முடிவுக்கு தாங்களும் கட்டுப்பட்டவர்களே” என்றார். சகதேவன் பெண்களை நோக்காமல் பீமனை நோக்கி “போதும், இனி சொல்பொறுப்பதில்லை” என்றான். பிந்துமதி அவனை நோக்கி “என்ன செய்வீர்கள்? தலையரிவீர்களா? இல்லை உங்கள் குடிமூத்தவர்களைப்போல ஆடையுரிவீர்களா?” என்றாள். கரேணுமதி “நாங்கள் வந்தது இதை சொல்லவே. இதோ, அவையமர்ந்து சூதர்களுக்கும் அந்தணர்களுக்கும் கொடையளித்தார் இவர்களின் மூத்தவர். நாளை இவர்களின் தூதராக யாதவர் ஒருவர் சென்று அஸ்தினபுரியில் நிரைநின்று கொடை பெறப்போகிறார். ஷத்ரியர் கொடுப்பவர்களன்றி கொள்பவர்கள் அல்ல” என்றாள்.

அவர்களின் கொந்தளிப்பு அவையை சலிப்புடன் அமைதிகொள்ளச் செய்தது. கரேணுமதி “இந்திரப்பிரஸ்தம், அஸ்தினபுரியின் கருவூலத்தில் பாதி, குருநிலத்தில் மேற்கு என பாண்டவர் உரிமையில் பத்தில் ஒன்றுக்கு உரிமை கொண்டவர்கள் நாங்கள். அதை உதற எவரும் எங்களிடம் சொல்லவேண்டியதில்லை” என்றாள். யுதிஷ்டிரர் சலிப்புடன் தலையை அசைக்க நகுலன் சினம் மீறி இடைவாளில் கைவைத்தபடி முன்னால் வந்தான். அவனை சகதேவன் தோள்தொட்டு தடுத்தான். “நாங்கள் சேதிநாட்டிலிருந்து ஷத்ரியர்களால் கவரப்பட்டோம். ஆகவேதான் அவர்களின் மணமாலையை ஏற்றோம். பரிசில் வாங்கி வாழும் சூதர்கள் எனத் தெரிந்திருந்தால் அன்றே சங்கறுத்து விழுந்திருப்போம்” என்றாள் கரேணுமதி.

“நன்றுரைத்தீர்கள் அரசி, இந்த அவையில் உங்கள் குரல் ஒலித்தது நிறைவளிக்கிறது” என்று இளைய யாதவர் சொன்னார். “ஆனால் உங்கள் மைந்தர் பதினாறாண்டு அகவை முதிராதவர்களாக இருக்கையில் மட்டுமே உங்கள் சொற்கள் அவையில் ஒலிக்கவேண்டும். அன்றேல் உங்கள் சொல்லை உங்கள் மைந்தர் முழுதேற்றுக்கொண்டார்கள் என்று இந்த அவையில் நீங்கள் உறுதிசெய்ய வேண்டும். உங்கள் மைந்தர் அவையில் எழுக! அவர்கள் உரைக்கட்டும் அவர்கள் விழைவதென்ன என்று” என்றார்.

பிந்துமதி திகைத்து “நாங்கள் அவர்களின் அன்னையர்” என்றாள். “அன்னையர் சொல் தங்களுடையதே என மைந்தர் வந்து அவையில் உரைக்கவேண்டும்” என்றார் இளைய யாதவர். இருவரும் திகைத்து ஒருவரை ஒருவர் நோக்கினர். இளைய யாதவர் மெல்ல விழிமாறுபட்டு “அமருங்கள்” என்றார். பிந்துமதி “எங்களுக்குரியதை பெறாமல் அமரப்போவதில்லை” என்றாள். இளைய யாதவர் “அமர்க!” என தாழ்ந்த குரலில் சொன்னார். கரேணுமதி நடுங்கத்தொடங்குவதை பிந்துமதி உணர்ந்தாள். “அமர்க!” என்றார் இளைய யாதவர். கரேணுமதி மெல்லிய ஏக்க ஒலியுடன் தளர்ந்து பிந்துமதியின் தோளில் சரிந்து நிலத்தில் விழுந்தாள்.

# குருதிச்சாரல் - 35

**பகுதி ஐந்து : நிலநஞ்சு – 4**

கரேணுமதியின் அருகே மஞ்சத்தில் அமர்ந்திருந்த பிந்துமதி காலடியோசை கேட்டு எழுந்தாள். அவளுக்கு நன்கு

தெரிந்த இரட்டைக்காலடியோசை. மாலதி உள்ளே வந்து "அரசர்கள் வந்திருக்கிறார்கள், அரசி" என்றாள். அவள் ஒன்றும் சொல்லாமல் தலையசைத்தாள். நகுலனும் சகதேவனும் உள்ளே வந்ததும் பொதுவாக தலைவணங்கி சுவர் ஓரமாக விலகி நின்றாள். நகுலன் கரேணுமதியின் அருகே குறுபீடத்தில் அமர்ந்து அவள் கைகளை தன் கைகளுக்குள் எடுத்துக்கொண்டான். சகதேவன் பிந்துமதியிடம் "எப்படி இருக்கிறார்கள்?" என்றான். "துயில்கிறார்கள். உளக்கொந்தளிப்பு என்று மருத்துவச்சி சொன்னாள். அகிபீனா அளிக்கப்பட்டிருக்கிறது" என்றாள் பிந்துமதி.

சகதேவன் தலையசைத்த பின் வெளியே செல்ல பிந்துமதி அவனைத் தொடர்ந்து வெளியே நடந்தாள். அங்கே நின்றிருந்த பீமனைக் கண்டு கால் தளர்ந்து சுவர் சாய்ந்து நின்றாள். சகதேவன் விலகிச்சென்று நிற்க பீமன் அவளை நோக்காமல் தாழ்ந்த குரலில் "என்ன ஆயிற்று அவர்களுக்கு?" என்றான். பிந்துமதி "எனக்கெப்படி தெரியும்?" என்றாள். அவளுடைய அந்த எரிச்சல் அவனிடமும் உடனே எரிச்சலை உருவாக்கியது. திரும்பி தன் சிறிய கண்களால் அவளை நோக்கி "அவையிலெழுந்து அவர்கள் பேசியவை எந்த அரசியும் பேசாதவை. தான் வந்த குலத்தை இழித்துரைப்பதில்லை குலமகள்கள்" என்றான்.

"ஆம், மலையில் எலி பிடித்துண்ணும் குலமகள்கள் நாவடங்கிக் கிடப்பார்கள்" என்றாள் பிந்துமதி. அவளிடம் என்ன பேசுவது என்னும் திகைப்பு பீமன் முகத்திலெழுந்தது. எதிர்ச்சொல் எடுக்கையில் மட்டுமே தன் உள்ளம் கூர்மைகொள்வதை அவள் உணர்வாள். அவன் சொல்லப்போவதை நோக்கி அவள் செவிகொடுத்து விழிசரித்து உதடுகளைச் சுழித்தபடி நின்றாள்.

“நான் மேலும் எதுவும் சொல்ல விழையவில்லை... சேதிநாட்டு அரசியின் உளக்கொதிப்பு எதுவானாலும் அன்னையிடமோ பிறரிடமோ உரைக்கட்டும். அவர்களுக்கு உகந்த எதையும் ஆற்றவே இங்கே நாங்கள் உள்ளோம்” என்றான்.

“சிறைப்பட்டிருப்பவர்களுக்கு நல்லுணவும் ஆடையும் கவரியும் மஞ்சமும் எதற்கு?” என்றாள் பிந்துமதி. “சிறைப்பட்டிருக்கிறோம் என்பதைத்தான் அவை நாளும்பொழுதும் நினைவூட்டும்.” பீமன் “சிறைப்பட்டிருக்கிறீர்களா? அப்படியென்றால் உங்கள் விடுதலை என்ன என்று கூறுக, நான் அதை அளிக்கும்படி சொல்கிறேன்” என்றான். அவள் தலைதிருப்பிக்கொண்டாள். “என்ன வேண்டும் உங்களுக்கு? சேதிநாட்டுக்கு திரும்பிச்செல்ல விழைகிறீர்களா?” என்றான் பீமன் மீண்டும். “அங்கே எங்களுக்கு முடியுரிமை இல்லை” என்றாள் பிந்துமதி.

அவன் பற்களைக் கடித்தபடி “சரி, முடிகொண்ட மன்னர் எவரையேனும் மணக்க விருப்பம் என்றால் அதையும் அறிவிக்கலாம். சேதிநாட்டில் அது இயல்வதுதான்” என்றான். அவள் சினத்துடன் ஏறிட்டுநோக்கி உதடுகள் வஞ்சத்துடன் சுருங்க “நாங்கள் இன்று பொருளற்ற உடல்கொண்டவர்களாகிவிட்டோம். அதை உங்கள் விழி சுட்டிக்காட்டுகிறது” என்றாள். “நாடுநர் உண்டு நலமழிந்த மலர்கள் பாதையில் மிதிபடும் என்பார்கள் சூதர்.”

பீமன் தன்னை அடக்கி “நீ வீணே சொல்பெருக்கிக் கொள்கிறாய்” என்றான். “ஆம், இந்த உள்ளத்தை வைத்துக்கொண்டு என்னதான் செய்வது?” என்றாள். அவன் அவள் முகத்தை நோக்க அவள் விழிதிருப்பிக்கொண்டாள். அவனை புண்படுத்தவேண்டும் என்று அவள் உள்ளம் மேலும் எழுந்தது. பீமன் மிகைசினம் கொள்ளாமல் மெல்லிய ஏளனம்

கலந்த குரலில் “இது உளச்சீர்குலைவு கொண்டவர்களின் வழக்கம். எத்தனை சுழற்றினாலும் இந்த திசைநோக்கியின் முள் வடக்கேதான் சென்று நிற்கும். பேசிப்பயனில்லை, நீயும் முதுமருத்துவச்சியரிடம் பேசிப்பார்” என்றான் பீமன்.

“ஆக, எங்களை உளம்சிதைந்தவர்கள் என்று சிறையிலடைக்க எண்ணுகிறீர்கள்!” என்றாள் பிந்துமதி. “அங்கே அஸ்தினபுரியின் புகழ்மிக்க சாளரம் உள்ளதே, இந்திரப்பிரஸ்தத்திலும் அப்படி சில சாளரங்களை உருவாக்குக!” சொன்னது போதவில்லை என்று உளம் விம்ம “சாளரங்களில் அமர்ந்தவர்கள் பேறுபெற்றோர். நேராக சிதைமேடை. பிற துயர்களேதுமில்லை அவர்களுக்கு” என்றபோது அவள் குரல் உடைந்தது. மெல்லிய விம்மலோசை எழுந்தது.

பீமன் தணிந்து “இதோ பார், உன்னை எவ்வகையிலும் துன்புறுத்த நான் இங்கு வரவில்லை. உங்கள் அவைக்குரல்களால் சினம்கொண்டேன், ஆனால் அவை கலைந்ததுமே அந்த உணர்வுகளை புரிந்துகொண்டேன். எங்கள்மேல் பிழைகள் உண்டு, எங்களுக்குக் கற்பிக்கப்பட்டவற்றை செய்தமையால் எழுந்த பிழைகள். ஆண் என்றும் அரசகுடி என்றும் நாங்கள் கொண்ட ஆணவத்தால் ஆற்றப்பட்ட பிழைகள். அறியாப் பிழைகள். அவையனைத்துக்கும் உன்னிடம் பொறுத்தருள்கையை கோரவேண்டுமென்றே வந்தேன்” என்றான்.

அவளை நோக்கி தன் பெரிய கைகளை நீட்டி தலைக்குமேல் குனிந்து “நான் உன் முன் பணிந்து இதை கோருவதாகக் கொள். எவரும் கடந்தகாலத்தை திருத்திக்கொள்ள இயலாது. சூழ நிகழ்வனவற்றின்மேல் எவருக்கும் எக்கட்டுப்பாடும் இல்லை. இயன்றவரை உனக்கு உண்மையுடன் இருக்கவும்

உன்மேல் அன்புகொண்டிருக்கவுமே முயன்றேன். அதிலமைந்த குறைகள் அனைத்திற்கும் பெண் என்றும் அன்னையென்றும் நின்று கனிக!" என்றான்.

அவளுக்குள் ஒரு நெகிழ்வு ஏற்பட்டது. அதை சொல்லி அக்கணத்தில் அதுவரை அறிந்திருக்காத புதிய ஓர் உலகுக்குச் செல்லமுடியும் என்று அவள் அகம் அறிந்திருந்தது. ஆனால் அதை எப்படி சொல்வடிவாக்குவதென அவள் அறிந்திருக்கவில்லை. அவள் முகத்தசைகள் பயின்றிருந்த நிறைவின்மையும் கசப்பும் காட்டும் தோற்றத்தை மாற்றிக்கொள்ளவும் இயலவில்லை. அவள் எண்ணியிராமலேயே பிந்துமதி உதட்டை மட்டும் மெல்ல சுழித்தாள்.

அந்தச் சிறுசெயல் அவன் கொண்ட அனைத்து நெகிழ்வுகளையும் அழித்தது. அவனுள் அனல் பற்றி எரியச் செய்தது. தன்னுள் எழுந்த புதிய உணர்வுநிலையை விந்தையுடன் நோக்கிக்கொண்டிருந்தமையால் அவள் அதை அறியவில்லை. அத்தருணம் மிகத் தெளிவாக அவளுக்குத் தெரிந்தது. செய்யவேண்டியதெல்லாம் ஒரு கனிவுச்சொல் எடுத்தல். அல்லது ஒரு மென்தொடுகை. அல்லது ஒரு விழிநீர்த்துளி. ஆனால் அவளுள் இருந்த ஒன்று மேலும் ஒரு அடி முன்னகர ஏங்கியது. அவனிடமிருந்து இன்னொருமொரு துளி கண்ணீரை நாடியது.

"அடிமைகளுக்கு அன்பு காட்டும் உரிமை அளிக்கப்படுவதுண்டா என்ன?" என்றாள். விழிதூக்கியபோது அவன் விழிகளில் தெரிந்த துணுக்குறலையும் சீற்றத்தையும் கண்டபோது அது ஏன் என்று அவளுக்குப் புரியவில்லை. ஆனால் உள்ளம் எச்சரிக்கை கொண்டது. அதை மீறி அவள் நா அடுத்த சொற்றொடரை

உரைத்தது. “ஆணையிட்டால் கனிவையும் காட்டுகிறோம். பிறகென்ன?”

பீமன் பேரொலியுடன் தன் கைகளை ஓங்கி அறைந்துகொண்டான். அவள் அவ்வோசையில் திடுக்கிட்டாள். இறுகக் கிட்டித்த தாடையுடன் “சில மானுட உள்ளங்கள் அடிப்படையில் இருள்நிறைந்தவை. நன்மையும் அன்பும் அறமும் அவற்றுக்கு மெய்யாகவே புரிவதில்லை. ஆம், நூல்கள் திரும்பத் திரும்ப அதை சொல்கின்றன. வாழ்வறிதல் அதன்மேல் மீளமீள முட்டிக்கொள்ளச் செய்கிறது. ஆயினும் அகம் நம்ப மறுக்கிறது” என்றான். வெறுப்புடன் பற்களை நெரித்து “உன்னை சந்தித்த முதல் நாளே நான் உணர்ந்தது அது. நீ பிறப்பிலேயே மானுடனின் நல்லியல்பை புரிந்துகொள்ள இயலாத உள அமைப்பு கொண்டவள்” என்றான்.

“பிறப்பைப் பற்றி நீங்கள் பேசுவது முறை. ஷத்ரியர் என்பீர்கள். யாதவர் என பிறர் சொல்வார்கள். பெற்ற அன்னைக்கு அதுவும் உறுதியாகத் தெரியாது” என்றாள். மிகப் பெரிய படைக்கலத்தை எடுத்துவிட்டோம் என்று அவளுக்கே தோன்றியது. ஆனால் அந்தக் கணத்தில் அவனை நொறுக்கி மிகவும் முன்னே செல்லாவிட்டால் அவன் தன்னை நொறுக்கிவிடுவான் என அவள் அறிந்தாள். அவன் முகத்தில் இகழ்ச்சிப்புன்னகை எழுந்ததும் அவள் மேலும் சினம்கொண்டாள். “நாங்கள் பிறந்த குடியில் குருதியென குருதியையே சொல்கிறோம். உமிழ்நீரையும் சிறுநீரையும் சேர்த்தல்ல” என்றாள். கடுமையான சொல் ஒன்றை எடுத்ததுமே அவள் உள்ளம் மேலும் மேலுமெனத் தாவியது. “அங்கநாட்டரசரை வீரர் அவையில் குலம்சொல்லி எள்ளியவர் நீங்கள் என்று அறிவேன். எது உன்

குலம் என அவர் கேட்கமாட்டார் என்று நம்பி எடுத்த சொல் அது. நான் கேட்கிறேன், என்ன குலம் நீங்கள்?”

ஆனால் அவன் மேலும் நிலைமீண்டு விரிந்த சிரிப்புடன் “அதற்கு முன் நீ கூறு. நீ என்ன குலம்? ஷத்ரியர்களா நீங்கள்?” என்றான். அவள் “ஏன், ஐயமா?” என்றாள். “எவ்வகையில்?” என்று அவன் கேட்டான். அவள் அவன் செல்லவிருக்கும் திசையை உய்த்துக்கொள்ளாமல் “உபரிசிரவசுவின் குடியில் பிறந்த எங்கள் தந்தை யாதவ அரசியை பட்டத்திலமர்த்தியிருக்கலாம், எங்கள் அன்னையர் கலிங்கத்தின் தூய ஷத்ரியர்கள்” என்றாள். அவன் என்ன எண்ணுகிறான் என அவள் உள்ளம் ஐயம்கொள்ள அவன் முகம் நோக்கி அவள் விழிகள் உருண்டன. “உன் அன்னையரின் அன்னையர் எவர்? எக்குடி?” என்றான் பீமன்.

“ஏன்?” என்று கேட்டபோது அவள் குரல் தழைந்திருந்தது. “உத்தரகலிங்கத்தின் மன்னர் அருணதேவர் மகாநிஷாதகுடியிலிருந்து கொண்ட சிற்றரசிக்குப் பிறந்தவர் உங்கள் மூதன்னை” என்றான் பீமன். இளிவரலுடன் முகம் விரிய “நிஷாதகுடியின் அடங்காமை உங்கள் இருவரில் வெளிப்படுவது அதனால்தான்” எனத் தொடர்ந்தான். அவள் “இல்லை!” என்று வீறிட்டாள். “சிறுமைசெய்ய எதையும் சொல்லலாம்…” அவன் “நீ சொன்னாயே அங்கனை அவையில் நிறுத்தி உசாவியவன் நான் என, அதே நாவுதான் இது” என்றபின் அப்பால் நின்றிருந்த சகதேவனை நோக்கி கைதட்டி அழைத்து “இளையோனே, கலிங்கத்தின் குலக்கதையைச் சொல்லும் நூல் எது?” என்றான்.

சகதேவன் அருகே வந்து “எதற்காக?” என்றான். “சொல்க!” என்றான் பீமன். “அர்க்ககுலவைபவம்” என்றான் சகதேவன். பிந்துமதி “இல்லை, இல்லை” என சொன்னபடி மீண்டும்

அறைக்குள் செல்ல முயன்றாள். "நில், துணிவிருந்தால் நின்று கேட்டுவிட்டுச் செல்" என்றான் பீமன். "நான் எதையும் அஞ்சவில்லை" என்றாள் பிந்துமதி. "அவ்வாறென்றால் நில், கேட்டுவிட்டுச் செல்" என்றான். சகதேவனிடம் "அங்கே விறலி என எவளேனும் இருக்கிறாளா பார். இருந்தால் அழைத்து வா" என்றான். பிந்துமதி வஞ்சம் தெரிந்த முகத்துடன் "குலமிலிகள் குலத்தையே உள்ளூர தவம் செய்கிறார்கள்" என்றாள். "ஆம், நான் சொல்வதும் அதையே... பொறு" என்றான் பீமன்.

சகதேவன் சென்று ஓர் ஏவலனுடன் விறலியை அனுப்பினான். பின்னால் ஆடையை முதுகில் முடிச்சிட்டுக் கட்டிய விறலி வந்து வணங்கினாள். ஏவலன் "அரண்மனையில் இன்று கொற்றவைப் பூசனை. அதற்கு பாடவந்திருக்கிறாள். இவள் பெயர் கராளி" என்றான் ஏவலன். கராளி தலைவணங்கி நின்றாள். "உனக்கு அர்க்ககுலவைபவம் உளப்பதிவாகத் தெரியுமா?" என்றான் பீமன். "ஆம். அதை அறியாத விறலியர் அரிது. கலிங்கச்சிற்பிகள் கேட்க விழைவதும் பொருள் அருள்வதும் அதற்கே" என்றாள் கராளி. "அதில் இறுதியாக உத்தரகலிங்கத்தின் அருணதேவர் குறித்த சர்க்கத்தை நினைவுகூர்கிறாயா?" விறலி "ஆம் அரசே, அரசர் அருணதேவர் கொண்ட மகாநிஷாத குடியின் அரசியைப்பற்றி அதில் சொல்லப்பட்டிருக்கும்" என்றாள். "அதுவே இறுதிப்பகுதி. அதைமட்டும் பாடிக்கேட்பவர்களுண்டு."

பீமன் புன்னகைத்து "சொல்க, அந்த அரசி யார்?" என்றான். "மகாநிஷாதகுடியின் அரசர் காரகரின் மகளாகிய அவருடைய இயற்பெயர் மராளிகை. மகாநிஷாதம் கலிங்கத்தின் சார்புநாடென்று முத்திரையிட்டு முரசறைந்த நாளில் அரசருக்கு தன் மகளை கொடையளித்தார் மகாநிஷாதர். அவளை தன்

எட்டு அரசியரில் ஒருத்தியாக்கி அருணை என்று பெயரிட்டு அரண்மனை சேர்த்தார் அருணதேவர்” என்றாள் விறலி. “அவர்களுக்கு இரு மகள்கள். மூத்தவர் சுனிதை, இரண்டாமவர் சுனந்தை. அவர்களையே சேதிநாட்டரசர் தமகோஷர் மணம்கொண்டார்.”

பிந்துமதி கைகள் நடுங்க நெஞ்சில் அவற்றை வைத்து அழுத்திக்கொண்டாள். பீமன் புன்னகைத்து தன் இடையிலிருந்து பொன்நாணயத்தை எடுத்தான். அவள் அதைக் கண்டதுமே முகம் மலர்ந்து “காவியத்தில் இல்லாத செய்தியொன்றுண்டு அரசே, அது செவிவழிப் பாடல். அருணதேவரின் அரசி அருணையுடன் அவர் குலத்து தெய்வமாகிய நக்னை உடன் வந்துவிட்டது. கலிங்கத்தின் அரண்மனைக்குள் முதற்கால் வைத்து நுழைந்ததுமே நக்னை அவரை பிடரியில் அறைந்து குப்புற வீழ்த்தியது. வலிப்பு வந்து மருத்துவநிலைக்கு கொண்டுசெல்லப்பட்ட அரசி எட்டு நாட்களுக்குப் பின்னரே நிலைமீண்டார்” என்றாள்.

“அதன் பின்னர் அன்னை நக்னை எப்போதும் அரசியுடன் இருந்தாள். நக்னை அடர்காடுகளில் ஆடையின்றி அலையும் கரிய உடலும் நீள்குழலும் அனல்விழிகளும் கொண்ட தெய்வம். அவளுக்கு அரசி அணிந்த அணியாடைகள் உகக்கவில்லை. அருணை அணிந்திருக்கும் ஆடைகளையும் பூண்களையும் அவைநிகழ்வுகள் முடிந்த மறுகணமே கழற்றி வீசவிரும்புவார். எளிய மரவுரியையே அவர் அணிந்திருந்தார். மெல்ல மெல்ல நக்னை அவரை முழுதாட்கொண்டாள். அரசியின் விரல்களை அவள் எடுத்துக்கொண்டாள். நூல்பயில்கையிலும் உரையாடுகையிலும் ஆழ்ந்துறங்குகையிலும்கூட அரசியின் கைகள் மிகுவிரைவில்

இயங்கிக்கொண்டிருக்கும். அவை அவர் அணிந்திருக்கும் ஆடையை நூல்நூலாகப் பிரித்து உதிர்க்கும்.”

“ஒரு நாழிகைக்குள் ஒரு பட்டாடை நூல்குவியலாக கீழே கிடக்கும். ஆடையற்று நின்றிருக்கும் அரசி அதை அறிவதுமில்லை. சேடியர் அவருக்கு ஆடைகளை மாற்றி மாற்றி அணிவிப்பார்கள். பின்னர் அவ்வண்ணமே விட்டுவிட்டார்கள். ஆடையில்லாது அலைந்த அவர் ஒருநாள் எவரும் காணாமல் மறைந்தார். கலிங்கத்தின் காடுகளுக்குள் வேட்டையாடச் சென்றவர்கள் அவர் ஆடையில்லாமல் கானிருளில் உலவுவதை கண்டனர். காட்டுக்குள் சிற்றாலயம் ஒன்று அமைத்து அங்கே ஆடையிலா கரிய சிலை வடிவில் அவரை நிறுவினர். அங்கே அவருக்கு ஆண்டுக்கொருமுறை கரும்பன்றியை பலிகொடுத்து வணங்குகிறார்கள்.”

அவள் தலைவணங்க பீமன் பரிசிலை அளித்து அவளை அனுப்பிவிட்டு பிந்துமதியை நோக்கி திரும்பினான். முகம்வெளுத்து உடல்நடுங்க சுவரில் சாய்ந்து அவள் நின்றாள். அவன் அவள் நிலையைக் கண்டதுமே சினம் அழிந்து மீண்டும் உளம் கனிந்தான். “என்ன செய்கிறது உனக்கு? நோய்கொண்டிருக்கிறாயா?” என்றான். அவள் ஒரு கையும் காலும் மெல்ல விதிர்த்தன. “இதோ பார், நான் உன் ஆணவப்பேச்சுக்கு மறுமொழி சொன்னேன். குலம் குறித்த எந்தச் சொல்லும் என் அன்னையை நோக்கி எழுவது. அதை மட்டும் என்னால் தாளமுடிவதில்லை” என்றான். அவள் பற்கள் கிட்டித்திருக்க தலையை அசைத்தாள். தாளவியலா வலிகொண்டது போலிருந்தது அவள் முகம்.

“இளமையில் கௌரவரின் குலத்தூய்மை எங்களுக்கில்லை என்ற பேச்சே என்னைச் சூழ்ந்திருந்தது. ஆகவே குலம்

குறித்தே எண்ணிக்கொண்டிருந்தேன். அதைப் பற்றியே கேட்டறிந்தேன். ஆனால் பதினான்காண்டு கானேகலில் நான் கண்டது ஒன்றே. பாரதவர்ஷத்தில் எக்குலமும் தூயதல்ல. அதை புரிந்துகொண்ட பின்னரே நான் உளம் விலகினேன்" என்றான் பீமன். "இது எளிய வஞ்சவிளையாட்டு. நீ உமிழ்ந்ததும் நஞ்சு. நான் உமிழ்ந்ததும் அதுவே. அதற்கு அடியில் உன்மேல் அன்புகொண்டிருக்கிறேன். அதை ஐயமறச் சொல்வேன்."

அவள் விழிகள் அவனை அறியவே இல்லை என்று தோன்றியது. "இதை மறந்துவிடு... நான் சொன்னவை மறைக! நான் அவற்றின்பொருட்டு உன்னிடம் பொறுத்தருளக் கோருகிறேன்" என்றான் பீமன். "இது ஆண்களின் சிறுமை. அதைக் கடப்பது பெண்களின் இயல்பு... பெரிதாக எண்ணாதே" என அவன் அவள் தோளை தொடவந்தான். அவன் கைபடுவதற்குள்ளாகவே அவள் தோள் புரவித்தோல் என விதிர்த்தது. அவன் கைகளை விலக்கிக்கொண்டான். சில கணங்கள் அவளை கூர்ந்து நோக்கிவிட்டு பெருமூச்சுடன் விலகி வேறெங்கோ நோக்கி நின்றான். அவள் சுவரில் ஓவியமெனப் பதிந்து அசைவற்று நின்றாள்.

நகுலன் கதவைத் திறந்து வெளிவந்தான். "செல்வோம்" என்றான். "எப்படி இருக்கிறார்கள்?" என்றான் பீமன். "உடல்நிலை சீரடைந்துவிட்டது. ஆனால் உளம் எங்கோ இருக்கிறது... என்ன பேசிக்கொண்டிருக்கிறாள் என்று புரியவில்லை. ஏதோ அறியா மொழி" என்றான். அருகணைந்து "சேதிநாட்டு மொழியா?" என்றான் சகதேவன். "அல்ல, கலிங்க மொழியும் அல்ல" என்றான் நகுலன். "ஓய்வெடுக்கட்டும்... வா" என்று சகதேவனின் தோளை தொட்டான். பிந்துமதியிடம் "நோக்குக, அரசி.

எதுவென்றாலும் எங்களுக்கு தெரிவியுங்கள்" என்றபின் நடந்தான். பீமன் அவளை திரும்பி நோக்காமல் கைகளை வீசியபடி பின்னால் நடந்துசென்றான்.

பிந்துமதி அவர்கள் செல்வதை நோக்கியபடி நின்றாள். அவள் உள்ளம் அடங்கி சொல்லின்றி இருந்தது. ஆனால் உடல் துள்ளிக்கொண்டிருந்தது. இடைக்குக் கீழே கால்கள் குளிர்ந்து உயிரிழந்தவை போலிருந்தன. தன்னை நூறுமுறை உந்தியும் உடல் கிளம்பவில்லை. பின்னர் அவள் விழப்போனாள். சுவரைப் பற்றிக்கொண்டதும் உடல் உள்ளத்துடன் தொடர்பை மீட்டுக்கொண்டது. சுவரையும் நிலையையும் பற்றியபடி மெல்ல உள்ளே சென்றாள்.

அங்கே மஞ்சத்தில் வெளிறி சற்றே உலர்ந்ததுபோலிருந்த முகத்துடன் ஒட்டிய உதடுகளுடன் கைகள் தளர்ந்து படுத்திருந்த கரேணுமதியின் கைவிரல்களையே நோக்கிக் கொண்டிருந்தாள். அவை அசைவற்றிருந்தன என்பது அவளுக்கு ஏமாற்றம் அளித்தது. அவை அசையவேண்டும் என்றும் ஆடையின் நூல்களை பிரிக்கவேண்டும் என்றும் அவள் விழைந்தாள். "எழுக! எழுக!" என அவ்விரல்களிடம் சொன்னாள். அவை மெழுகாலானவைபோலத் தெரிந்தன.

நீள்மூச்சுடன் அவள் விழிதிருப்பியபோது அச்சொல்லை கேட்டாள். அதை முன்னரும் பலமுறை கேட்டிருந்தாள். திடுக்கிட்டு கரேணுமதியின் வாயை பார்த்தாள். அதில் சொல்லெழுந்திருப்பது மெல்லிய அசைவு எஞ்சியிருப்பதிலிருந்து தெரிந்தது. அந்த வாயையே நோக்கிக்கொண்டிருந்தாள். அவள் உடல் உலுக்கி அசைய உதடுகள் குவிந்து இன்னொரு சொல்லை சொல்லின. அதையும் அவள் பலமுறை கேட்டிருந்தாள். அது ஒரு சொல்

என்று தோன்றியதே இல்லை. அன்னை சொல்லியிருக்கிறாளா அதை? சிற்றன்னையா? அவள் பெருமூச்சுடன் விழிதிருப்பவிருக்கையில் அவ்விரல்கள் அசைவுகொள்வதை கண்டாள். அப்போது அது அவளை மிகவும் ஆறுதல்படுத்துவதாக இருந்தது.

கரேணுமதியுடன் பிந்துமதி தேரிலேறிக்கொண்டபோது அரண்மனை முற்றத்தில் தேவிகையும் விஜயையும் வந்திருந்தார்கள். அவர்கள் வருவார்கள் என பிந்துமதி எதிர்பார்க்கவில்லை. அவர்கள் சேதிநாட்டுக்கே திரும்பிச்செல்லவிருப்பதை மாலதியின் வழியாக குந்திக்கு மட்டும் சொல்லி அனுப்பியிருந்தாள். குந்தி "அங்கிருப்பதும் நன்றே. அரசுசூழ்தல்களில் கலந்துகொள்ள வேண்டியதில்லை" என்று சொல்லி அனுப்பியிருந்தாள். சுரேசர் தேரையும் காவல்படைகளையும் ஒருங்கமைத்து செய்தி சொல்லியிருந்தார்.

புலரிக்கு முன் கருக்கிருளிலேயே கிளம்பிவிடலாம் என்று பிந்துமதி எண்ணியிருந்தாள். ஆனால் கரேணுமதியை ஒருக்கி இறக்குவதற்கு நெடுநேரமாகியது. அவள் காலையில் வெற்றுடலுடன் மஞ்சத்தில் கிடந்தாள். நாவில் அந்த அறியாச் சொற்கள் ஒலித்துக்கொண்டிருந்தன. அவளை நீராட்டறைக்கு கொண்டுசென்றபின் பிரிக்கமுடியாத கெட்டியான கரையுள்ள ஆடைகளை கொண்டுவரச்சொல்லி அணிவித்தாள். மேலும் இருபது ஆடைகளை எடுத்துக் கொண்டுசென்று தேரில் வைக்கச் சொன்னாள். கரேணுமதி அவளிடம் சொல்லப்பட்ட அனைத்தையும் பாவை எனச் செய்தாள். ஆனால் அவள் நாவில் அச்சொற்கள் அவ்வப்போது எழுந்தன. பதற்றத்துடனும்

கிளர்ச்சியுடனும் அச்சொற்களைச் சொல்லி உடனே தளர்ந்து அமைதிகொண்டாள்.

தேர் வந்து நின்றபோது “வருக, அக்கையே!” என்று பிந்துமதி சொன்னாள். கரேணுமதி அவளுடன் நடந்தாள். மரப்படிகள் ஒவ்வொன்றிலும் நின்று நின்று இறங்கி அவர்கள் முற்றத்திற்கு வந்தபோது அங்கே தேவிகையும் விஜயையும் வந்திருந்தார்கள். முதல் நோக்கில் அவர்கள் பிந்துமதியிடம் கடும்வஞ்சத்தை எழுப்பினர். பின்னர் அவள் தன்னை மெல்ல தணிவித்துக்கொண்டாள். கரேணுமதியின் நிலை அவர்களில் உவகையை உருவாக்குகிறதா என அவள் விழிமுனை அவர்களின் விழிகளை தொட்டுத் தேடியது. ஆனால் அவர்கள் இருவரும் துயர்கொண்டவர்கள் போலிருந்தார்கள். உவகையை திறம்பட மறைக்கிறார்கள் என அவள் எண்ணிக்கொண்டாள்.

தேவிகை அருகே வந்து முகமன் உரைத்து “அன்னை சொன்னார்கள், நீங்கள் கிளம்பவிருப்பதாக. அங்கே அனைத்தும் மேலும் நன்றாக அமையுமென்றால் அதுவே நன்று” என்றாள். “ஆம், அங்கே மருத்துவர்கள் உண்டு. பெருநகரம், ஷத்ரியர்களின் தொல்நிலம் என்பதனால் அனைத்தும் அங்கே முதிர்வுகொண்டுள்ளன” என்றாள் பிந்துமதி. விஜயை “ஆம், அவ்வாறுதான் கேட்டோம்” என்றாள். பிந்துமதி “எங்கள் மைந்தன் வந்தானென்றால் மட்டும் செய்தி சொல்க! அவனை ஒருமுறை நோக்க நாங்கள் விரும்புகிறோம். அவன் போருக்குச் செல்வான் என்றால் அதற்கு முன் எங்களிடம் வந்து வாழ்த்துபெற்றுச் செல்லவேண்டும்” என்றாள். “அவ்வாறே” என்றாள் தேவிகை.

அவள் கரேணுமதியிடம் தேரிலேறும்படி சொல்ல அவள் அச்சொல்லை உரைத்தபடி மேலேறி அமர்ந்தாள். பிந்துமதி

விஜயையிடமும் தேவிகையிடமும் விடைபெற்றுக்கொள்ளாமல் விழிவிலக்கிக்கொண்டு தேரின் படி ஏறி உள்ளே அமர்ந்து “செல்க!” என்றாள். மூங்கில் கூடையுடன் மாலதி பாய்ந்து ஏறிக்கொண்டாள். “என்ன செய்கிறாய், இழிமகளே? தேரைக் கவிழ்க்கப் பார்க்கிறாயா?” என்றாள் பிந்துமதி. அவள் மூலையில் அமர்ந்தபடி “சிற்றாடைகள்” என்றாள். “பிணம், உன்னை சிதையேற்றும் நாள் அணுகுகிறது” என்றாள்.

தேர் சீர்ச்செலவு கொண்டதும் பெருமூச்சுவிட்டு கைகளை விரித்து அமர்ந்தபடி “சேதிநாட்டு எல்லைக்குச் செல்ல எத்தனை நாளாகும்?” என்று பிந்துமதி கேட்டாள். “எட்டு நாட்கள் என்றனர், அரசி” என்றாள் மாலதி. அவள் பெருமூச்சுவிட்டு பின்னால் சென்றுமறைந்த அரண்மனையை நோக்கினாள். “அவரிடம் செய்தி சொன்னாயா?” என்றாள். மாலதி “இல்லையே, என்னிடம் அவ்வாறு பணிக்கப்படவில்லை” என்றாள். “அறிவிலி, நான் அன்னையிடம் சொல்லச் சொன்னேன். அவர் சொல்லியிருப்பார்” என்றாள். மாலதி “ஆம்” என்றாள். அவள் மாலதியை சினத்துடன் நோக்கிவிட்டு விழிகளை விலக்கிக் கொண்டாள்.

பீமன் முற்றத்திற்கு வர வாய்ப்பில்லை என்று அறிந்திருந்தாலும் சகதேவனும் நகுலனும் முற்றத்திற்கு வருவார்கள் என அவள் எதிர்பார்த்தாள். ஒருவேளை பீமனே கூட வரக்கூடும். வருபவன்தான் அவன். அவனுள் எளிதில் கனியும் பெண்ணுள்ளம் இருப்பதை அவள் உள்ளறிந்திருந்தாள். அவன் ஓரிரு நற்சொற்கள் சொன்னால்கூட உளம்குழைந்து அங்கேயே அழுதுவிட்டிருக்கக்கூடும். அவன் நெஞ்சில் முகம்பதித்து விம்மியழுதிருக்கக்கூடும். ஆனால் அதுவும்

ஐயமாகவே இருந்தது. அந்த நாடகம் உள்ளத்தில் ஓடிக்கொண்டிருக்க வஞ்சமும் ஆணவமும் நிறைந்த சொற்களை அவள் நா உரைத்திருக்கும். இன்னுமொரு வெறுப்புரையின் தருணம்தான் நடிக்கப்பட்டிருக்கும்.

ஆனால் ஒருவேளை அவனை மீளமுடியாதபடி நெஞ்சில் தாக்கிவிட்டு அவள் கிளம்பியிருக்க இயலும். அது எஞ்சிய வாழ்நாளெல்லாம் அவள் எண்ணி மகிழும் ஓர் இனிமையாக உடன்வந்திருக்கக்கூடும். எஞ்சிய வாழ்நாளா? அப்படியென்றால் இனி வரப்போவதே இல்லையா? இல்லை என அவள் உள்ளம் நன்கறிந்திருந்தது. அம்முடிவை எண்ணி எடுக்கவில்லை, அம்முடிவு அவளுள் எப்போதும் இருந்தது என்பதை கண்டடைந்தாள்.

அவர்கள் புரவியில் தொடர்ந்து வருவார்கள் என்ற எண்ணத்துடன் அவள் ஒழுகிமறையும் சாலையை நோக்கிக் கொண்டிருந்தாள். காலையொளி எழத்தொடங்கியிருந்தது. வணிகர்கள் கடைகளை திறந்துகொண்டிருந்தனர். ஆலயம் சென்று மீளும் பெண்கள் சாலையெங்கும் நடந்துகொண்டிருந்தனர். காலையா மழையிருளா என ஐயம் வந்தது. ஒரு யானை குளித்த கருமையுடன் எதிரே வந்தது. அந்தணர்குழு ஒன்று வெண்ணிற ஆடையுடன் கடந்துசென்றது.

கோட்டையைக் கடந்து பெருஞ்சாலையை அடைந்து இரண்டு காவல்கோட்டங்களை தாண்டுவது வரை அவள் சாலையையே நோக்கிக்கொண்டிருந்தாள். பின்னர் நீள்மூச்சுடன் தளர்ந்து அமர்ந்து கண்களை மூடிக்கொண்டாள். எரிச்சல் ஊறத்தொடங்கியது. அவள் தேரில் அமர்ந்து விழியோட்டித் தேடுவாள் என்று அவனுக்குத் தெரியும். தெரிந்தமையால்தான் வராதிருந்தான். அவன் அவளிடம் சொல்கிறான், அவள்

அவனுக்கொரு பொருட்டு அல்ல என்று. அவள் வந்தநாள் முதல் அவன் சொன்னதெல்லாம் அதுவே. அவள் அவனிடம் அதற்கான மறுமொழியைத்தான் சொல்லிக்கொண்டிருந்தாள்.

திரும்பிச்செல்ல ஆணையிடவேண்டும் என ஒருகணம் உளமெழுந்தது. அவனை நேரில்கண்டு அம்முகத்தில் உமிழ்ந்தபின் திரும்பி தேரிலேறவேண்டும். அல்லது அவன் முன் சங்கறுத்துச் செத்துவிழவேண்டும். கூரிய சொல்கூட எடுக்காமல் இப்படி கிளம்பியது அறிவின்மை. இது ஒளிந்தோடுதல். அதைக் காணவே அந்த இழிகுலத்துப் பெண்கள் முற்றத்திற்கு வந்தனர். இந்நேரம் அவர்கள் அந்நிகழ்வை தங்கள் கொழுநர்களிடம் சொல்லி சிரித்துக்கொண்டிருப்பார்கள்.

அவள் திரும்பிநோக்கியபோது கரேணுமதி கீழாடை இல்லாமல் அமர்ந்திருந்தாள். “என்னடி செய்கிறாய்? உன்னைத்தான்” என்று கூவியபடி அவள் மாலதியை எட்டி உதைத்தாள். மாலதி வெளியே நோக்கிக்கொண்டிருந்த விழிகளைத் திருப்பி கரேணுமதியை நோக்கியபின் எழுந்து கூடையிலிருந்து ஆடையை எடுத்து கரேணுமதிக்கு அணிவித்தாள். பிந்துமதி தன் காலில் நூல்கள் இடறுவதை உணர்ந்து கீழே நோக்கினாள். வெண்புழுக்கள். அவை எங்கிருந்து எழுகின்றன. இவள் உடலுக்குள் இருந்தா?

“விரைவில்” என்று மாலதியை சினந்தாள். “ஆணை” என்று சொல்லி மாலதி புன்னகைத்தாள். அப்புன்னகை பிந்துமதியை நடுக்குற வைத்தது. ஏதோ சொல்ல வாயெடுத்தாள். சொல் திரளாமல் மெல்ல உளம் ஓய்ந்து விழிகளை மூடிக்கொண்டாள்.

# குருதிச்சாரல் - 36

**பகுதி ஆறு : பொற்பன்றி – 1**

மாலைவெயில் மஞ்சள் கொள்ளத்தொடங்கியபோது அணிப்படகில் சிந்துநாட்டிலிருந்து துச்சளை அஸ்தினபுரியின் எல்லைக்காவலரணான ஹம்ஸதீர்த்தத்திற்கு வந்தாள். அவளுக்குப் பின்னால் சற்று தொலைவில் ஜயத்ரதனின் அரசப்படகு வந்து ஒருநாழிகைக்குப் பின் கரையணைந்தது. சிந்துநாட்டின் காவல்படையும் ஏழு அகம்படியர் குழுக்களும் அவர்களுடன் வந்தன. அவர்கள் சிந்துவழியாக வடக்கே சென்று அங்கிருந்து தேர்களில் வாரணவதம் வந்து பெரும்படகுகளில் கங்கைப்பெருக்கினூடாக ஹம்சதீர்த்தத்திற்கு வந்தனர்.

ஹம்சதீர்த்தத்தில் அரசகுடியினருக்கு மட்டும் உரிய படித்துறையில் அவர்களை எதிரேற்க அஸ்தினபுரியின் அமைச்சர் மனோதரர் சிறிய காவல்படையினருடன் வந்திருந்தார். அவருடன் வந்திருந்த அணிச்சேடியர் எழுவர் ஐந்து நிலமங்கலங்கள் அமைந்த தாலங்களுடன் அவளை எதிர்கொண்டனர். இசைச்சூதர் மங்கலம் முழங்கினர். வாழ்த்தொலிகளும் குரவையோசையும் எழுந்தன.

சிந்துநாட்டுக்குரிய கரடிக்கொடி பறந்த பெரும்படகிலிருந்து கையில் நெல்மணிகள் நிறைந்த சிறுநாழியுடன் இறங்கி வந்த துச்சளையை வணங்கி “தங்கள் நிலத்திற்கு மீண்டும் வந்துள்ளீர்கள் அரசி, இந்நாளை திருமகள் வாழ்த்துக!” என்றார் மனோதரர். மறைந்த அமைச்சர் லிகிதரின் மைந்தராகிய

அவரை இளமையிலேயே துச்சளை அறிந்திருந்தாள். அவளுடைய களித்தோழரும்கூட. புன்னகைத்து “அம்பையும் மைந்தரும் நலம் அல்லவா, மானு?” என்றாள். அந்த முறைமைமீறிய சொல்லால் சற்று திகைத்து உடனே மலர்ந்து “ஆம் அரசி, நன்றாக இருக்கிறார்கள். இங்கு வரப்போவதை சொன்னபோது மகிழ்ந்தனர்” என்றார்.

“இளையவள் சமுத்ரைக்கு இப்போது பதினான்கு அகவை அல்லவா? ஏதாவது பார்க்கிறீர்களா?” என்று மெல்ல நடந்தபடி துச்சளை கேட்டாள். “நிமித்திகர் அவளுக்கு இன்னும் இரண்டு அகவை கடந்தபின்னரே மங்கலநாண் ஏறும் என்றனர். ஆகவே பொறுத்திருக்கிறோம்” என்ற மனோதரர் “சாம்யகன் சென்ற ஆண்டே குருநிலையிலிருந்து வந்துவிட்டான். அரண்மனையில் அமைச்சுத்தொழில் பழகும்பொருட்டு அமைச்சர் கனகரின் கீழே சேர்த்துவிட்டிருக்கிறேன்” என்றார். “நன்று, கனகர் என்றால் விதுரரின் நிழல்” என்றபடி துச்சளை தன் பெரிய உடலை மெல்ல அசைத்து நடந்தாள்.

அவள் கைகள் இரு கரிய குழந்தைகள்போல தோளுக்குக் கீழே தெரிந்தன. கழுத்து இடுங்க தலை நெஞ்சின்மேல் அமர்ந்திருந்தது. கழுத்துக்களின் மடிப்பில் தோல் உரசி வடுக்கொண்டு பாறைவெடிப்புபோல தோன்றியது. உடலுக்கு ஒவ்வாமல் அவள் முகம் கைக்குழந்தைகளுக்குரிய செழுமையும் மலர்வும் கொண்டிருந்தது. சிரிப்பொழியா விழிகளும் சிறிய பற்கள்கொண்ட வாயும் குவிந்த முகவாயும் அவளை நோக்கியவர்களின் முகங்களை அக்கணமே மலரச்செய்தன. அவளை வரவேற்க வந்திருந்த அணிச்சேடியரும் சூதரும் அவள் முகத்தையே நோக்கியபடி நின்றிருந்தனர். அப்பால் படகின் வடங்களை இழுத்த

குகர்களும் துலாமேடைகளில் நின்றிருந்த ஏவலரும் அவள் முகத்திலிருந்து விழியகற்றவில்லை.

நடைபலகையை கடந்து வந்து அஸ்தினபுரியின் மண்ணில் கால் வைத்ததும் நிறைநாழியை அருகே நின்றிருந்த சேடியிடம் அளித்துவிட்டு குனிந்து அஸ்தினபுரியின் மண்ணைத் தொட்டு நெற்றியிலும் வகிட்டிலும் இட்டாள். "அன்னையே, தெய்வங்களே" என வணங்கிய பின் "தேர் வந்துள்ளதல்லவா?" என்றாள். "ஆம், முடிந்தவரை படித்துறையின் அருகிலேயே வரவேண்டும் என்று ஆணையிட்டேன்" என்றார் மனோதரர். "அரசி நெடுந்தொலைவு நடக்கவியலாது என்றேன்" என்று சொல்லி உதடுகளுக்குள் புன்னகைத்தார்.

துச்சளை வாய்விட்டு நகைத்து "நான் இதே நிலத்தில் பலமுறை அங்குமிங்கும் ஓடியவள்தான்... அங்கே சிந்துநாட்டில் வெளியே செல்வதே இல்லை. எப்போதும் அரசமர்தல். அரசருக்கு வேட்டையிலும் நதியில் விரைவுப்படகோட்டுவதிலும் மட்டுமே ஈடுபாடு. உடல் பருக்காமல் என்ன செய்யும்?" என்றாள். "மேலும் என் தந்தையும் தாயும் பேருடலர்கள்." மனோதரர் "ஆம், அதைத்தானே நானும் சொன்னேன்" என்றார். "நீர் எதை எண்ணிச் சொல்வீர் என எனக்கு நன்றாகவே தெரியும், மானு" என்றாள் துச்சளை. "மெய்யாகவே நடக்கமுடியவில்லை... களைப்புற்றுவிட்டேன். எத்தனை நீண்ட பயணம். இங்கு வரவேண்டுமென நினைப்பேன், இந்தத் தொலைவை எண்ணியதுமே கைவிடுவேன். எட்டாண்டுகள் அப்படியே ஓடிச்சென்றன... தந்தை எப்படி இருக்கிறார்?"

மனோதரர் “அரசர் சற்று உடல்நலம் குன்றித்தான் இருக்கிறார். மைந்தர்களின் சொல்கேளாமை அவரை துயருறச் செய்துள்ளது” என்றார். துச்சளை “ஆம், அது இயல்பே” என்றபின் “அன்னை?” என்றாள். “அவர்கள் எப்போதுமே நிலைபெயர்வதில்லை” என்றார் மனோதரர். “ஆம், தன்னந்தனியாக நிற்கும் கலையறிந்தது தாலிப்பனை” என்றாள் துச்சளை. மூச்சிரைக்க நின்று திரும்பிநோக்க அருகே நின்ற சேடி ஒரு மென்துகிலை அளித்தாள். அதை வாங்கி தன் நெற்றியையும் கழுத்தையும் துடைத்துக்கொண்டாள். “மெய்யாகக் கேட்கிறேன் மானு, மிகையாக பருத்திருக்கிறேனா?”

மனோதரர் “மிகையாக எல்லாம் இல்லை...” என்றார். “உண்மையை சொல்க!” என்றாள் துச்சளை. “உண்மையை சொல்வதானால் ஆம்” என்றார் மனோதரர். “பின் நீர் முன்னால் சொன்னது என்ன?” என்றாள் துச்சளை சிறுசினத்துடன். “அதை நாங்கள் அவையுண்மை என்போம்” என்றார் மனோதரர் புன்னகைத்தபடி. துச்சளை சிரித்து “அந்தணர் நாவுகள் மீன்செவிள்கள்போல. அவர்களை ஏந்திச்செல்பவை அவை” என்றாள். தேரை அணுகியதும் நின்று “என்ன வெயில்... உச்சிப்பொழுதுபோல் காய்கிறது” என்றாள். “தேர் ஓடத்தொடங்கினால் காட்டுத்தென்றல் குளிராக இருக்கும், அரசி” என்றார் மனோதரர்.

தேரிலேறிக்கொண்டதும் உடலை மெல்ல எளிதாக்கி சாய்ந்துகொண்ட துச்சளை அருகே அமர்ந்த சேடியிடம் “நான் சற்று ஓய்வெடுக்கிறேன், சாரிகை” என்றாள். “மாளிகை மிக அருகில்தான் என்றார்கள், அரசி. கங்கைக்கரையில் நின்றாலே தெரியும் என்று காவலன் சொன்னான்” என்றாள். “சரி, எனக்கு

களைப்பாக இருக்கிறது" என்றாள் துச்சளை. அவள் உடனே துயின்று மெல்லிய குறட்டையோசை எழுப்பத் தொடங்கினாள். எங்கு எப்போது அமர்ந்தாலும் துயிலும் வழக்கம் அவளுக்குண்டு என்பதை சாரிகை அறிந்திருந்தாள். துச்சளை இரவில் முழுமையாக துயில்வதில்லை. படுக்கையில் புரண்டும் அவ்வப்போது எழுந்து அமர்ந்தும் நீர் அருந்தியும் இரவை கழிப்பாள். துயில்கையில் அவளுடைய நீள்குறட்டை அறியாத விலங்கொன்றின் குரல் என ஒலிக்கும்.

அவள் காலடியில் சிறுமஞ்சத்தில் சாரிகை இரவுறங்குவாள். இரவெல்லாம் எழுந்து எழுந்து அவளுக்கு பணிவிடை செய்யவேண்டியிருக்கும். ஆகவே பிற்பகலில் இன்னொரு சேடி ஏவல் செய்ய அவள் சென்று அடுமனை அருகே உள்ள சிற்றறையின் இருளில் துயின்று மாலையில்தான் எழுந்து வருவாள். துச்சளை "நல்லுறக்கமா?" என்பாள். "நீங்கள் ஏன் ஆழ்ந்துறங்குவதில்லை, அரசி?" என்று சாரிகை ஒருமுறை கேட்டாள். "தெரியவில்லை. உள்ளம் ஓய்ந்து துயிலெழுந்ததுமே நெஞ்சின்மேல் ஒரு யானை மிதித்து அழுத்துவதுபோல் உணர்வேன்" என்றாள் துச்சளை. "இச்சிக்கல் என் அன்னைக்கும் உள்ளது. அவர்களும் ஆழ்ந்துறங்குவதில்லை. பகலெல்லாம் சிறுதுயில்களில் ஆழ்ந்து பொழுதுநீக்குவார்."

மாளிகை முகப்பை அடைந்ததும் சாரிகை எழுப்புவதற்குள்ளாகவே துச்சளை விழித்துக்கொண்டாள். "மாளிகையா?" என்றபின் "என் பேழையை கையிலேயே எடுத்துக்கொள்ளடி" என்றபடி இருக்கையில் கையூன்றி உடலை உந்தி எழுந்தாள். தேர்த்தூணைப் பற்றியபடி நின்று ஆடையை இடையில் செருகிக்கொண்டு பெருமூச்சுவிட்டாள். "சென்றுகொண்டே இருப்பதுபோலிருக்கிறது… எவ்வளவு

தொலைவு வந்துவிட்டோம்” என்றாள். “நாளை நாம் அரண்மனைக்குச் சென்றுவிடுவோம்” என்றாள் சாரிகை.

“ஆம், அங்கே முறையான அரசவரவேற்பு இல்லாமல் சைந்தவர் நகர்புகமாட்டார் என்றார்” என்றாள் துச்சளை. “ஏனென்றால் இப்போது இவர்கள் அளிக்கும் வரவேற்பைக் காண அங்கே ஏராளமான ஷத்ரிய அரசர்கள் வந்திருக்கிறார்கள். அவர்கள் அறியவேண்டும், அஸ்தினபுரிக்கு சைந்தவர் எவர் என. அதையொட்டியே நாளை நிகழும் போரில் படைமுதன்மையும் போருக்குப் பின் அவைமுதன்மையும் அமையும்” என்ற துச்சளை “பெண்களின் ஆணவம் சிறுமதியால் எழுவது. ஆண்களின் ஆணவம் பெரும்போக்கால் எழுவது. முந்தையதை விட பிந்தையது மேலும் கெடுமணம் கொண்டது” என்றாள்.

சாரிகை புன்னகைத்து “மெல்ல, அரசி” என்றாள். தேருக்குக் கீழே மரத்தாலான படி அமைக்கப்பட்டது. துச்சளை அதில் மெல்ல காலெடுத்து வைத்து இறங்கிநின்று மாளிகையை நோக்கினாள். காவலர்தலைவன் “ஹம்சதீர்த்தத்தின் காவல்மாளிகைக்கு நல்வரவு, அரசி” என்றான். “இது புதியதா என்ன?” என்றாள். காவலர்தலைவன் தலைவணங்கி “ஆம், அரசி. இதை அமைத்து ஏழு ஆண்டுகளே ஆகின்றன. இந்த காவலரண் அதற்கு ஓராண்டுக்கு முன் அமைக்கப்பட்டது. இதேபோன்று எல்லை முழுக்க நாநூறு காவலரண்களும் மாளிகைகளும் உள்ளன” என்றான்.

மாளிகைக்குள் இருந்து மூன்று அணிச்சேடியர் மங்கலத்தாலங்களுடன் வந்து அரசியை எதிரேற்றனர். அவள் தாலச்சுடரை தொட்டு விழியொற்றி வணங்கி “இங்கே சேடியர் உள்ளனரா?” என்றாள். “தங்கள் வருகைக்காக அமர்த்தப்பட்டவர்கள், அரசி” என்றான் காவலர்தலைவன். “உன்

பெயர் என்ன?” என்றபடி துச்சளை கல்படிகளில் ஏறினாள். “வக்த்ரன், அரசி” என்றான் அவன். “இப்போதுதான் நூற்றுவர்தலைவனாக ஆனாயோ?” என்றாள். “ஆம் அரசி, எட்டுமாதமே ஆகிறது.” துச்சளை “உன் துணைவி பெயர் என்ன? மைந்தர்கள் உள்ளனரா?” என்றாள். அவன் முகம்மலர்ந்து “சாந்தை என்று பெயர். நான் கிருஷ்ணை என அழைப்பது. ஒரு மைந்தன், ஓராண்டு அகவையன். சுதன் என்று அழைக்கிறேன்” என்றான்.

அவள் கைநீட்ட சாரிகை ஒரு பேழையிலிருந்து ஒரு பொன்நாணயத்தை எடுத்து அளித்தாள். அவள் அதை வக்த்ரனிடம் அளித்து “இதைக்கொண்டு அவனுக்கொரு சிறு கணையாழி செய்துகொள்க... நான் வாழ்த்தியதாக அவன் அன்னையிடம் கூறுக!” என்றாள். வக்த்ரன் அதை வாங்கி கண்களிலும் தலையிலும் வைத்துக்கொண்டு “என் மைந்தன் நற்பேறு கொண்டவன் என்று நிமித்திகர் சொன்னார்கள். இப்போது அறிகிறேன், அரசி” என்றான். “நலம் சூழ்க!” என வாழ்த்திவிட்டு பெருமூச்சுடன் கூடத்தில் நின்று இடையில் கைவைத்து “பெரிய கூடம்... மறு எல்லையை அடையவே நீள்தொலைவு செல்லவேண்டும் போலுள்ளது” என்றாள்.

“வருக, அரசி” என்று சேடி ஒருத்தி வணங்கி அவளை உள்ளே அழைத்துச்சென்றாள். அவள் திரும்பி வக்த்ரனிடம் “சைந்தவர் கரையிறங்கி இந்த மாளிகைக்குத்தான் வருவாரா?” என்றாள். “இல்லை அரசி, அவர் இந்த மாளிகைக்கு அப்பாலிருக்கும் சற்றுபெரிய மாளிகைக்கு செல்வார். காலையில் கிளம்புகையில்தான் அனைவரும் ஒன்றாக நகர்புகவிருக்கிறீர்கள்” என்றான். “நன்று, அவர் அரண்மனை

அமைந்ததும் மனோதரரை நான் காணவிழைவதாக அவரிடம் சொல்” என்றாள்.

உடலை அசைத்தபடி நடந்து கூடத்தின் மறு எல்லையை அடைந்து இடையில் கையூன்றி நின்று “என்னடி இது, நடக்க நடக்க வந்துகொண்டே இருக்கிறது!” என்றாள். “இன்னும் சற்றுதொலைவுதான், இந்த அறை மட்டுமே பெரிது, அரசி” என்றாள் சேடி. மேலும் நடந்து மூச்சுவாங்க சுவர் மடிப்பை பற்றிக்கொண்டு நின்றாள். “நான் நீராடவேண்டுமடி... வியர்வையில் நனைந்துள்ளது உடல்” என்றாள். சாரிகை “இங்கே சிறிய நீராட்டறை உள்ளது, அரசி” என்றாள்.

நீராடி தூக்குகட்டிலில் போடப்பட்ட மெத்தைமேல் பெரிய தலையணைகளில் உடல்சாய்த்து துச்சளை படுத்திருந்தாள். சாரிகை துயில்கொள்ளப்போயிருந்தாள். இன்னொரு சேடியான சூர்யை அவளை மெல்ல ஆட்டிக்கொண்டிருந்தாள். துச்சளையின் குறட்டை ஓங்கிச்சென்று முட்டி நின்றது. அவள் உடல் ஒருமுறை உலுக்கிக்கொண்டது. விழித்து எழுந்து சிவந்த விழிகளால் நோக்கி “என்னடி?” என்றாள். “ஒன்றுமில்லை, அரசி” என்றாள் சூர்யை. மீண்டும் துச்சளையின் விழிகள் மூடிக்கொண்டன. குறட்டை ஓசை எழத்தொடங்கியது. காவலன் வந்து அமைச்சரின் வருகையை அறிவித்தான். சூர்யை “அரசி” என்றாள். சிறு ஒலிக்கும் துச்சளை எழுந்துவிடுவாள். “என்னடி?” என்றாள். “அமைச்சர் வருகிறார், அரசி” என்றாள். “நன்று” என்று சொல்லி காவலனிடம் “அவரை வரச்சொல்க!” என்று சொல்லி புன்னகைத்தபின் சூர்யையிடம் கைநீட்டினாள். அவள் நீட்டிய மர யானத்தில் இருந்த நீரில் முகத்தைக் கழுவி மரவுரியில் துடைத்துக்கொண்டாள்.

மனோதரர் விரைந்த காலடிகளுடன் வந்து வணங்கி “சற்று பிந்திவிட்டேன், அரசி” என்றார். “அமர்க, அமைச்சரே!” என்றாள் துச்சளை.

மனோதரர் அமர்ந்துகொண்டு “அரசருக்குரிய அனைத்தையும் இயற்றிவிட்டு கிளம்பினேன். நாளை முதலிருளிலேயே இங்கிருந்து கிளம்புகிறோம். புலரியில் நகர்நுழைவு. அங்கே கோட்டைமுகப்பிலேயே துச்சாதனர் உடன்பிறந்தாருடன் வந்து வரவேற்பார். பட்டத்து யானையும் புரவியும் வரவேண்டுமென்று ஆணையிடப்பட்டுள்ளது” என்றார். துச்சளை “நன்று, அங்கே என்ன நிகழ்கிறது? நான் ஒற்றர்களிடமிருந்து அறிந்திருக்கிறேன். உங்கள் மதிப்பீட்டை கேட்க விழைகிறேன்” என்றாள்.

“அரசி, இன்னும் நான்கு நாட்களில் அஸ்தினபுரியில் ஷத்ரியர் பேரவை கூடவிருக்கிறது. பெரும்பாலான அரசர்கள் முன்னரே நகருக்குள் வந்துவிட்டனர். முறையான அவை கூடவில்லை என்றாலும் ஒவ்வொருநாளும் ஒவ்வொரு அரசர் அவைகளில் கூடிப் பேசிக்கொண்டே இருக்கிறார்கள். ஷத்ரியப் பேரவையில் போர் அறிவிப்பு எழும் என்று சொல்லப்படுகிறது. அதில் முழுப் படைத்தலைமை கொள்ளவேண்டியவர்களின் பெயர்கள் அறிவிக்கப்படும். பீஷ்மபிதாமகர், துரோணர், கிருபர், சல்யர், சைந்தவர், அஸ்வத்தாமர் ஆகியோர் முன்னிறுத்தப்படுவார்கள் என்கிறார்கள்.”

“அங்கர்?” என்றாள் துச்சளை. “அவரை இப்போது முன்னிறுத்த இயலாது. அதை பீஷ்மர் விரும்பவில்லை. அத்துடன் அவருக்குக் கீழே அணிதிரள ஷத்ரியர் ஒப்பமாட்டார்கள்” என்றார் மனோதரர். “அத்துடன் அவருடைய உடல்நிலையும் உளநிலையும் உகந்ததாகவுமில்லை. சென்ற

பதினான்காண்டுகளாக அவர் மதுவிலேயே வாழ்கிறார். வில்லை கைதொட்டே நெடுநாட்களாகின்றன என்கிறார்கள். விராடபுரியை வெல்லும்பொருட்டு படைகொண்டு சென்றபோது அவருடைய அம்புகளில் பல குறிதவறியதை படைவீரர்கள் இளிவரலுடன் பேசிக்கொண்டிருக்கிறார்கள்."

"ஆம், அறிந்தேன்" என்று துச்சளை பெருமூச்சுடன் சொன்னாள். "ஒவ்வொரு அரசரும் போருக்குக் கொண்டுவரும் படைகளின் அளவும் ஆற்றலும் எண்ணி வகுக்கப்படும். அவை குறிக்கப்பட்ட பொதுநீட்டு அனைவருக்கும் எழுதியளிக்கப்பட்டு முத்திரைச்சாத்து பெறப்படும். ஏனென்றால் போருக்குப்பின் அதனடிப்படையிலேயே நிலமும் கப்பமும் பகிர்ந்துகொள்ளப்படவேண்டும்" என்றார் மனோதரர். "அவையில் போருக்குரிய அனைத்து அடிப்படைகளும் பேசி முடிக்கப்படும். போர் முறையாக அறிவிக்கப்பட்டு செம்முரசு கொட்டப்பட்டுவிட்டதென்றால் போர் தொடங்கிவிட்டதென்றே பொருள். வெற்றியோ தோல்வியோ உடம்பாடோ இல்லாமல் பின்னர் அதை நிறுத்தமுடியாது."

"ஆம், ஆகவேதான் உடனே போரை அறிவித்தாகவேண்டும் என சைந்தவர் துடிக்கிறார். சிந்துநாடு நிலமில்லாமல் சேற்றுக்குள் சிக்கிய யானைபோலிருக்கிறது என எண்ணுகிறார். சைந்தவப் படைகளை நன்கு பழக்கிவிட்டார் என நம்புகிறார். கூர்தீட்டப்பட்ட பின் வாள் நெடுங்காலம் காத்திருக்கவியலாது என்று அடிக்கடி சொல்கிறார்" என்றாள் துச்சளை. "அவ்வாறு ஒவ்வொருவருக்கும் கணக்குகள் உள்ளன. கூர்ஜரரும் மாளவரும் சைந்தவரும் யாதவர்களின் நிலங்களில் பெரும்பகுதியை தாங்கள் கொள்ளவேண்டுமென கணக்கிடுகிறார்கள்."

“கணக்குகள் இல்லாதவர்களே இல்லை, அரசி” என மனோதரர் சொன்னார். “சேதிநாடு மச்சர்நிலங்களை நோக்குகிறது. பால்ஹிகர்கள் பாணாசுரரின் ஆசுரம் முழுக்கவே தங்களுக்கென எண்ணுகிறார்கள். திரிகர்த்தர்கள் பாஞ்சாலத்தை எண்ணமிட அஸ்வத்தாமர் பாஞ்சாலத்தின் ஒருங்கிணைந்த அரசராக ஆவதே துரோணரின் இலக்காக உள்ளது… போருக்குப் பின் மீண்டுமொரு போர் நிகழ்ந்தாலும் வியப்பதற்கில்லை.” துச்சளை புன்னகைத்து “போருக்குப் பின் போரிட இவர்கள் எவரும் இருக்கப்போவதில்லை” என்றாள்.

மனோதரர் “அரசி, சூதர்களின் சொல்லை நம்பவேண்டியதில்லை. இன்றிருக்கும் படைக்கூட்டுபோல ஒன்று இதற்கு முன் பாரதவர்ஷத்தில் அமைந்ததே இல்லை. இதை வெல்ல எவராலும் இயலாது. உண்மையில் இன்றைய இடர்பாடே அத்தனை அரசர்களும் இப்பக்கம் வந்துவிட்டனர் என்பதும் வென்றபின் அவர்கள் பங்கிட்டுக்கொள்ள போதிய நிலம் இல்லை என்பதும்தான்” என்றார். துச்சளை “இதற்கு முன் இளைய யாதவரைப்போன்ற ஒருவர் எழுந்ததில்லை” என்றாள்.

மனோதரர் “நான் இதை விந்தையுடன் பார்க்கிறேன். எந்தப் பெண்ணும் இளைய யாதவரை வெல்லமுடியுமென்பதை நம்புவதில்லை” என்றார். “ஏனென்றால் அவர்கள் அவரை அணுகியறிவார்கள்…” என்றாள் துச்சளை. “அவர் இங்கு வருகிறார் என்றார்கள்.” மனோதரர் “ஆம், சென்றமுறை வந்தபோதே இங்கு பேரவையில் அரசர் முற்றறிவித்துவிட்டார். ஒரு பிடிமண்ணோ ஒரு கழஞ்சுப்பொன்னோ அளிக்கப்படமாட்டாது என. அவர் மீண்டும் ஒரு கோரிக்கையுடன் வருவதாகத் தெரிகிறது. சற்று குறைவாக

அளிக்கவியலுமா என்று கோரவிருக்கிறார் என்கிறார்கள். அரசர் அளிக்க வாய்ப்பே இல்லை… ” என்றார்.

“ஆனால் அவருக்கான கணக்குகள் உள்ளன. வேதநெறியை பேணுபவர்கள் என படைக்கலம் தூக்கியிருக்கும் ஷத்ரியர் குலநெறியையும் சொல்நெறியையும் மீறிய ஒருவரை எப்படி தலைமையென ஏற்கிறார்கள் என ஷத்ரிய அவையிலெழுந்து கேட்கும்பொருட்டே வருகிறார். அவர்களை அது இக்கட்டுக்குள்ளாக்கும் என்றும் அதை அஞ்சி அரசர் நிலமும் செல்வமும் அளிக்க ஒப்பக்கூடும் என்றும் அவர் கணக்கிடுகிறார்.” துச்சளை இயல்பான முகத்துடன் “ஏன் அதற்கு வாய்ப்பில்லையா?” என்றாள்.

“அரசி, இங்கே அரசர்கள் கூடியிருப்பது வேதம் காப்பதற்கா என்ன? வேதத்தில் எவருக்கு அக்கறை? வேதமென்றால் என்னவென்று எவருக்குத் தெரியும்? வேதநெறியோ ஆயிரம் கிளைகளும் விழுதுகளும் கொண்ட பேராலமரம். ஒவ்வொருவரும் ஒவ்வொரு நெறியை சொல்வார்கள். இவர்கள் இணைவது மண்ணுக்காக. இங்கே ஒவ்வொரு ஷத்ரியநாடும் கலத்திற்குள் வளர்ந்த பூசணிபோல பிதுங்கிக்கொண்டிருக்கின்றது. பிற நிலங்களில் காலும்கையும் நீட்டி பூசலிடுகின்றது. போர் நிகழவிருப்பது அதற்கே. இது போரே அல்ல, ஒரு மாபெரும் கூட்டுவேட்டை” என்றார் மனோதரர்.

“இன்று ஷத்ரியர்கள் வென்று விரியவேண்டிய நிலத்தின் மக்களான அசுரரும் நிஷாதரும் கிராதரும் முன்புபோல படை கண்டாலே அஞ்சி ஓடுபவர்கள் அல்ல. அவர்களும் மெல்ல மெல்ல நாடுகளாக திரண்டிருக்கிறார்கள். நீர்வழியும் நிலவழியுமான வணிகப் பாதைகள் அவர்கள் அனைவரையும்

இணைக்கின்றன. அடர்காடுகளுக்குக்கூட பொன் சென்றுசேர்கிறது. இரும்பின் காலம் முடிந்துவிட்டது, பொன்னின் யுகம் எழுந்துவிட்டது என்கிறார்கள். சிற்றரசுகள்கூட இன்று சுங்கம் கொண்டு கருவூலம் நிறைக்கின்றன. யவன, பீதர்நாட்டுப் படைக்கலங்களை வாங்கி கைகள் பெருக்குகின்றன.”

“எந்த ஷத்ரிய அரசும் தனித்து அவர்களை வெல்லும் ஆற்றல்கொண்டது அல்ல. அனைத்தையும்விட சென்ற ஐம்பதாண்டுகளில் யாதவர்கொண்ட எழுச்சி அத்தனை ஷத்ரியர்களையும் அச்சுறுத்துகிறது. அவர்கள் பேரரசென திரண்டுவிட்டனர். பாண்டவர் மும்முடி சூடி அரியணை அமர்ந்ததென்பது நாளை இளைய யாதவரோ அவர் மைந்தரோ மும்முடி சூடுவதற்கான முற்பாதையேதான். யாதவர் நிலைகொண்டால் பின்னர் கிராதரும் நிஷாதரும் அசுரரும் பேரரசுகளை அமைப்பார்கள். இப்போதே அதற்கான தொடக்கங்கள் உள்ளன. விராடமே அச்சுறுத்தும் முற்காட்சிதான்.”

“கடல்வணிகம் நிகழும் நாடுகள் அனைத்தும் இன்றுவரை ஷத்ரியர்களால் ஆளப்படுகின்றன. வங்கமும் கலிங்கமும் மாளவமும் கூர்ஜரமும். ஒன்றுமட்டும் விதிவிலக்கு, துவாரகை. அதைப்போல மேலுமிரு நாடுகள் எழுமென்றால் அதன்பின் இங்கே ஷத்ரியர் ஆட்சியே இல்லை. அதையறிந்தே குடிப்பெருமையும் குலமேன்மையும் சொல்லி ஆயிரமாண்டுகள் பூசலிட்ட ஷத்ரியர்கள் இன்று ஒருகுடைக்கீழ் திரள்கிறார்கள். அவர்கள் திரள்வது நிலத்துக்காகவே என அவர்களிடமிருந்தே மறைக்கவே வேதநெறி என்று பேசுகிறார்கள்” என்றார் மனோதரர்.

துச்சளை புன்னகைத்து "ஒருவேளை அதை அவர்களுக்கே தெளிவுறக் காட்டும் பொருட்டுதான் வருகிறாரா என்ன?" என்றாள். "அரசி, வேதம் அவர்களுக்கு ஒரு பொருட்டல்ல என்று ஏன் சொல்கிறேன் என்றால் சின்னாட்களுக்கு முன் நம் அரசர் தன்னை தன் தெய்வமாகிய கலிதேவனுக்கு முற்றளிப்பதாக அவையில் அறிவித்தார். கலிதேவன் வேதமறுப்பு மரபிலிருந்து எழுந்த தெய்வமென்று அறியாத எவருமில்லை. அன்று அவைமுடிந்து எழுந்தபோது அமைச்சர் அனைவரும் கூடி அதைக் குறித்தே பேசிக்கொண்டார்கள்."

"வேதமுதல்கொண்ட ஷத்ரியர் நம் அரசரை தலைவரென ஏற்கமாட்டார்கள் என்று கனகர் சொன்னார். நான் அவ்வாறு எண்ணவில்லை, ஷத்ரியர்களுக்கு வேறுவழியில்லை என்றேன். பீஷ்மரும் கிருபரும் துரோணரும் நம் பக்கமிருக்கையில் நம்மை முன்னிறுத்தியே அவர்கள் படைதிரளமுடியும், அசுரர்களையும் நிஷாதர்களையும் கிராதர்களையும் வெல்ல முடியும் என்றேன். கனகர் அவர்கள் ஏற்பார்கள் என எப்படி சொல்கிறாய் என என்னை நோக்கி எகிறினார். பிதாமகர் பீஷ்மர் ஏற்றாரல்லவா அதனால் என்றேன். அப்போதுதான் அச்சொல்லை எண்ணி அவர்கள் திகைத்தனர். ஆம், துரோணரும் மாற்றுரைக்கவில்லை என்றார் கனகர்."

"அவ்வாறே ஷத்ரியர் எவரும் மறுப்புரைக்கவில்லை. அதை அறியாதவர் போலிருக்கிறார்கள்" என்று மனோதரர் சொன்னார். துச்சளை "மூத்தவர் அதை செய்துவிட்டாரா?" என்றாள். மனோதரர் "இல்லை அரசி, அவர் நாளை மறுநாள் கலிங்கப்பூசகர் நெறிகாட்ட மேற்குக்காட்டில் கலியின் ஆலயத்தில் முற்றளிப்புச் சடங்கு செய்யப்போவதாக சொல்கிறார்கள். ஆனால் அது அரண்மனையில் அமைச்சர்

நடுவே மந்தணச்சொல்லாகவே புழங்குகிறது. கலிங்கப்பூசகர் வந்துள்ளது உண்மை. முறையான அறிவிப்பேதும் இல்லை. அச்சடங்கு நிகழ்ந்த பின்னரே அது வெளியிடப்படுமென எண்ணுகிறேன்” என்றார்.

துச்சளை பெருமூச்சுவிட்டு “தந்தையால் அதை ஒப்பமுடியாது” என்றாள். “ஆம், அவர் நோயுற்றிருப்பதே அதனால்தான் என்கிறார்கள்” என்றார் மனோதரர். “அனைவரும் சொல்லி அறிந்த கதை. தன் மைந்தர் பிறந்தபோதே அது கலியின் குழவி என அவருக்கு சொல்லப்பட்டது. தொப்புள்சரடை வெட்டியதுமே கொண்டுசென்று ஓநாய்களுக்கு உணவாக காட்டில் வீசிவிடும்படி நிமித்திகர் சொன்னார்கள். பேரரசர் குழவியை அள்ளி தன் தலைமேல் வைத்து கண்ணீருடன் தன்னைப்போலவே வெறுக்கப்பட்டது அக்குழவி, ஆகவே தானிருக்கும்வரை அக்குழவி தன் தலைமேல்தான் இருக்கும் என அறிவித்தார். இத்தனை ஆண்டுகள் தன் மைந்தர் கலிதேவனுக்குரியவர் அல்ல என்று நம்பவும் நிறுவவுமே அவர் முயன்றார். தன் மைந்தர் தன்னைப்போன்றவர் என்று எண்ணி எண்ணி தன்னுள்ளத்தில் நிறுவிக்கொண்டார். இன்று இதோ, அவர் காண மைந்தர் தந்தையை முற்றுதறி கலியை சென்றடைகிறார்” என்றார்.

“ஆம், அது ஊழென்றால் எவரால் தடுக்கமுடியும்? மானுடர் தெய்வங்களின் களிப்பாவைகள்” என்றாள் துச்சளை. மெல்ல எழுந்தபடி “நன்று மானு, நான் ஓய்வெடுக்கிறேன். நாளை சென்றதுமே தந்தையைத்தான் காணவிழைகிறேன்” என்றாள். “நலம் சூழ்க, அரசி!” என எழுந்து மனோதரர் தலைவணங்கினார்.

# குருதிச்சாரல் - 37

**பகுதி ஆறு : பொற்பன்றி – 2**

நகர்நுழைவின் களைப்பு அகல்வதற்குள்ளாகவே துச்சளை திருதராஷ்டிரரை சந்திக்கவேண்டும் என்றாள். அரண்மனையை அடைவதற்குள்ளாகவே அவள் முற்றிலும் உடல் ஓய்ந்திருந்தாள். தேரிலிருந்து காலெடுத்து படிகளில் வைக்கவே அவளால் இயலவில்லை. தேர் நின்றதும் அரைத்துயிலில் என அமர்ந்திருந்தவளிடம் சாரிகை “அரசி, அரண்மனை” என்றாள். அவள் சூழ்ந்தொலித்த ஓசைகளில் முற்றிலும் மூழ்கி வேறெங்கோ இருந்தாள். வாயை துடைத்துக்கொண்டு எழுந்தபோது தேர் ஓடிக்கொண்டிருப்பதாக எண்ணிய உடல் அலைபாய பின்னால் சரிந்து பீடத்தில் ஓசையுடன் விழுந்தாள். அவள் எடையால் பீடம் விரிசலிட்டு உடைந்த ஓசை எழுந்தது.

சாரிகை எழுந்து அவளை பிடித்தாள். “வருக... உதவி!” என அவள் கூச்சலிட வெளியே அவர்களுக்காகக் காத்திருந்த அரசியருக்கு அருகே நின்றிருந்த சேடிப்பெண்கள் இருவர் தேருக்குள் ஏறினர். அவர்கள் மூவரும் சேர்ந்து கைபற்றித் தூக்கி அவளை மெல்ல எழுப்பினர். அவள் நின்று மூச்சிரைத்து “விழுந்துவிட்டேன்” என்று புன்னகைத்தாள். பானுமதியும் அசலையும் தாரையும் வெளியே நின்று எட்டிப்பார்த்து “என்ன ஆயிற்று?” என்றனர். “ஒன்றுமில்லை... நிலைதவறிவிட்டேன்” என்றபடி சேடியர் தோள்பற்றி மெல்ல இறங்கினாள்.

மூச்சிரைக்க சேடியர் தோளைப்பற்றியபடி நின்று அண்ணாந்து அந்த மாளிகையை நோக்கினாள். “ஒவ்வொருமுறை வரும்போதும் இது சிறிதாகிக்கொண்டே செல்கிறதே!” என்றாள். பானுமதி புன்னகைத்து சேடியரிடம் கைகாட்ட மங்கல இசையும் குரவையொலிகளும் எழுந்தன. ஏழு அணிச்சேடியர்

மங்கலத்தாலங்களை கொண்டுவந்து அவள்முன் உழிந்து விலகினர். ஒரு சேடி அளித்த சிறிய அகல்விளக்கை கையில் ஏந்தியபடி துச்சளை அரண்மனைக்குள் புகுந்தாள். அவளைத் தொடர்ந்து அரசியர் நடக்க தாரை அவள் தோளை ஒட்டியபடி நடந்தாள்.

“என்னடி புன்னகைக்கிறாய்?” என்று தன் பெரிய கைகளால் தாரையின் காதைப்பற்றி முறுக்கினாள். தாரை சிரித்து “யானை சேற்றில் சிக்குண்டுவிட்டது போலிருந்தது, அக்கை” என்றாள். பானுமதி தாரையை நோக்கி சினத்துடன் திரும்ப “மெய்யாகவே நானும் அப்படித்தானடி எண்ணினேன்” என்று துச்சளை வெடித்துச் சிரித்தாள். “வலி இருந்திருந்தால் பிளிறிக்கூட இருப்பேன்.” பானுமதி பொறுமையை மீட்டுக்கொண்டு “செல்வோம்” என்றாள். அசலை “எப்படி இருக்கிறீர்கள், அக்கையே?” என்றாள். “பார்க்கிறாயே? வளர்ந்துகொண்டிருக்கிறேன். ஆகவேதான் அரண்மனைகள் சிறிதாகின்றன” என்றாள் துச்சளை.

“ஆனால் அழகாக ஆகிவிட்டிருக்கிறீர்கள்...” என்று தாரை சொன்னாள். துச்சளை அவளை நோக்கி திரும்பி உதட்டைச் சுழிக்க “மெய்யாகவே, அக்கையே. எப்படியோ பேரழகி ஆகிவிட்டிருக்கிறீர்கள். உங்கள் முகத்திலிருந்து எவராலும் விழியகற்ற இயலாது” என்றாள். துச்சளை அவள் தலையைத் தட்டி “என்னடி உளறுகிறாய்?” என்று சொல்லி இழுத்து தோளுடன் சேர்த்துக்கொண்டாள். பானுமதி “பேரரசி காலையிலிருந்து பத்துமுறை சேடியை அனுப்பி வினவிவிட்டார். அறைக்குச் சென்று சற்று ஓய்வெடுத்து உடைமாற்றுங்கள். அன்னையை சென்று பார்ப்போம்” என்றாள்.

“ஆம், அதற்கு முன் நான் தந்தையையும் பார்க்கவேண்டும்” என்றாள் துச்சளை. “அவரும் நோயுற்றிருக்கிறார்” என்றாள் அசலை. “அன்னை?” என்றாள் துச்சளை. “அன்னையின் நோய் வெளியே தெரிவதில்லை” என்றாள். துச்சளை தலையசைத்து “ஆம்” என்றாள். கூடத்தினூடாக அவர்கள் நடந்தனர். முன்னால் சென்ற நிமித்தச்சேடி சங்கொலி எழுப்பி “அஸ்தினபுரியின் இளவரசி, குருகுலத்தோன்றல், காந்தாரத்து தொல்லன்னையரின் வழிவந்தவர், சைந்தவி துச்சளை வருகை!” என அறிவித்தாள். “எவரிடம் சொல்கிறாள்?” என்றாள் துச்சளை. “நம்மிடம்தான், நாம் அடிக்கடி இதை நினைவுபடுத்திக்கொள்ளவேண்டியிருக்கிறதே?” என்றாள் தாரை.

“இவள் முன்னர் எலிக்குஞ்சு போலிருந்தாள். நாவெழுவதே இல்லை. இப்போது நன்றாகச் சிலம்பும் மணிபோலாகிவிட்டாளே?” என்றாள் துச்சளை. அசலை “ஆம், அவைகளில் உண்மையில் ஒலிப்பது இவள் குரலே” என்றாள். பானுமதி தாரையிடம் “அரசியை அவர் அறைக்கு கொண்டுசெல்க! அனைத்தும் ஒருங்கமைந்துள்ளதா என்று நோக்குக!” என்றபின் “ஓய்வெடுத்து மீள்க, அரசி! அதன்பின் நாம் சந்திப்போம்… நான் உடனே அரசவைக்கு செல்லவேண்டியிருக்கிறது. காமரூபத்து அரசர் அவைபுகுகிறார். அவைமுறைமைகள் உள்ளன” என்றாள். “ஆம், உனக்கு இனி விடிந்திருளும்வரை இதுவே பணி என்றிருக்கும்” என்றாள் துச்சளை.

அரசியர் அனைவரும் துச்சளையுடனேயே நடந்தனர். சிம்ஹிகி, புஷ்டி, அனங்கை ஆகியோர் தாரையுடன் இணைந்து முண்டியடிப்பதுபோல் நடந்தனர். “இவர்களெல்லாம் உன் குலம் அல்லவா?” என்றாள் துச்சளை. “இவள் பெயர் சிம்ஹிகி

அல்லவா?” சிம்ஹிகி “ஆம், அரசி” என்று அருகே வந்து அவள் கைகளை தொட்டாள். “அத்தனைபேரும் உங்களை சந்திக்க வர விழைந்தனர், அரசி. ஆனால் நகர்நுழையும் அரசர்களின் அரசியரையும் பிறரையும் நேரில்சென்று முறைமைசெய்ய அவர்களுக்கு பொறுப்பளிக்கப்பட்டிருக்கிறது. இன்றும் நாளையும் உங்களைப் பார்க்க வந்துகொண்டே இருப்பார்கள்” என்றாள் அசலை. “ஆம், மச்சர்குலத்து அரசியர் உங்களைப்பற்றி மட்டும்தான் நேற்றெல்லாம் பேசிக்கொண்டிருந்தோம்” என்றாள் தாரை.

துச்சளை அவளுக்குரிய அறையை அடைந்ததும் இடையில் கையூன்றி நின்று “இத்தனை படிகளை ஏன் வைத்தார்கள் என்று தெரியவில்லை. ஏன் மஞ்சத்தறைகள் அனைத்தும் மாடியிலேயே உள்ளன?” என்றாள். “அடித்தளம் முழுக்க ஏவலருக்கு என்பதுதான் எங்குமுள்ளது” என்றாள் அசலை. “அது ஏன் என்கிறேன்” என்றாள் துச்சளை. “நான் சொல்கிறேன். எங்கள் மச்சர்நிலத்தில் மூங்கில்கால்களில்தான் இல்லங்கள் நின்றிருக்கும். அவற்றின் அடிப்பக்கம் விலங்குகளுக்கு உரியது. எருமைகள் அங்கே நிற்கும். பின்னர் அரண்மனைகளாக அவ்வில்லங்கள் வளர்ந்தபோது அங்கே காவல்வீரர்களை தங்கவைக்கத் தொடங்கியிருக்கிறார்கள்” என்றாள்.

“சரியாகத்தான் சொல்கிறாள்” என்றாள் துச்சளை. அசலையின் அருகே நின்றிருந்த தேவகாந்தி “சுற்றிலும் கோட்டை இருப்பதனால் கீழ்த்தளங்களில் காற்றொழுக்கு இருக்காது. அங்கே புரவிகளும் யானைகளும் இருப்பதனால் கொசுக்களும் ஈக்களும் மிகுதி. ஆகவேதான் மேல்தளங்களில் மட்டும் அரசகுடியினர் தங்குகிறார்கள் என என்னிடம் என் அன்னை சொன்னாள்” என்றாள். “அதுவும் சரியாகத்தான் தெரிகிறது”

என்ற துச்சளை அசலையிடம் “பொதுவாக என்னைவிட எல்லாருமே நன்றாகவே எண்ணிப்பார்க்கிறார்கள் போலிருக்கிறதடி” என்றாள்.

அசலை “ஓய்வெடுங்கள், அரசி” என்றாள். “ஓய்வெடுக்கவா? நான் உடனே தந்தையை பார்க்கவேண்டும். ஒவ்வொரு படி ஏறுகையிலும் அவரை எண்ணி என் உள்ளம் எடைமிகுந்தபடியே வந்தது” என்றாள். “சற்று ஓய்வெடுத்து நீராடுக… நான் உடனே வருகிறேன்” என்று அசலை பிற அரசியருடன் திரும்பிச்சென்றாள். ஒவ்வொருவரும் துச்சளையிடம் வந்து விடைபெற்றனர். “சென்று வருகிறேன், அரசி. இரவு வருகிறேன். உங்களிடம் பேசவேண்டுமென்று எண்ணி எண்ணி பெருக்கிக்கொண்டிருக்கிறேன்” என்றாள் தேவமித்ரை.

அறைக்குள் சேடியர் பேழைகளை கொண்டு வைத்தனர். துச்சளை அறை நடுவே நிற்க சேடியர் அவள் ஆடைகளைக் களைந்து மாற்றாடை அணிவித்தனர். தாரை நோக்குவதைக் கண்ட துச்சளை “பெண்ணுடல் எத்தனை விரைவாக அழகிழந்துவிடுகிறது இல்லையா? ஆண்கள் இப்படி அழகிழப்பதில்லை” என்றாள். “அல்ல, அரசி. எனக்கு உங்கள் உடல் அன்னையுரு என்று தோன்றுகிறது. எங்கள் நாட்டில் களிமண்ணில் பேரன்னை உருவுகளை அமைத்து நெய்தல்பூசெய்கை நிகழ்த்துவோம். உங்களைப்போலவே இருக்கும் அவ்வுருக்கள்” என்றாள்.

ஆடை மாற்றிக்கொண்டபின் மெல்ல பீடத்தில் அமர்ந்த துச்சளை “எவ்வளவு சடங்குகள்! புலரியில் கோட்டைமுகப்பைக் கண்டதும் ஒரு நாழிகைக்குள் அரண்மனைக்குள் சென்றுவிடுவோம் என எண்ணினேன். இதோ

வந்துசேர நான்கு நாழிகை கடந்துள்ளது” என்றாள். “நெடுநாட்களுக்குப் பின் அஸ்தினபுரிக்கு திரும்புகிறீர்கள். நூற்றுவருக்கு ஒரே தங்கை நீங்கள்.” துச்சளை தலைகுனிந்து விழிசரிய அமர்ந்திருந்தாள். “மக்கள் உங்களைக் காண கோட்டைமுகப்பில் நேற்றிரவே கூடி முகக்களத்தை நிறைந்துவிட்டனர் என்று அறிந்தேன்” என்றாள் தாரை.

‘ஆம், என்னைக் கண்டதும் களிவெறிகொண்டார்கள். கூச்சலும் நடனமும் என காடு புயல்கொண்டதுபோலத் தோன்றியது. கோட்டைமுகப்புக்கு விதுரர் வருவார் என நான் நினைக்கவேயில்லை. அவர் வந்ததைக் கண்டதும் விழிநீர் சிந்திவிட்டேன். தந்தையைப்பற்றியே எண்ணிக்கொண்டிருந்தேன். தந்தைக்கு விதுரர் இருக்கிறார் என்ற எண்ணம் வந்தது…” என்றாள் துச்சளை. “நகரமே உங்களுக்காக விழா கொண்டாடியது, அரசி. காலையில் ஆலயம் செல்லும்போது பார்த்தேன். தோரணங்கள் இல்லாத இடமே இல்லை” என்று தாரை சொன்னாள்.

“அதை தனக்கான வரவேற்பாக நினைத்துக்கொள்கிறார் சைந்தவர்” என்று துச்சளை புன்னகைத்தாள். “நான் ஒன்று நோக்கினேன், அரசி. நீங்களோ அரசியரோ ஒருசொல்கூட கொழுநர்களைப்பற்றி பேசிக்கொள்ளவில்லை” என்றாள் தாரை. “நாங்கள் எப்போதுமே பேசுவதில்லை” என்றாள் துச்சளை. “ஏன்?” என்று தாரை கேட்டாள். “பேசுவதில்லை. ஏன் என்று கேட்டால் ஒருவேளை எங்களுக்கு அவர்கள் அத்தனை முதன்மையானவர்களல்ல என்று தோன்றுகிறது” என்றபின் “மெய்யாகவே எனக்கு சைந்தவர் எவ்வகையிலும் பொருட்டல்ல” என்றாள்.

“என்னால் அதை புரிந்துகொள்ள முடியவில்லை” என்றாள் தாரை. “நல்ல கணவர்களைப் பெற்ற பெண்களால் அதை புரிந்துகொள்ள இயலாது” என்றாள் துச்சளை. “நீங்கள் இருவரும் சேர்ந்தமர்ந்து தேரில் வருவீர்கள் என எண்ணினேன்” என்றாள் தாரை. “ஆம், அதுவே வழக்கம். மக்கள் அப்படித்தான் காணவிழைவார்கள். என்னிடம் அமைச்சர் சொன்னபோது தேவையில்லை என்று மறுத்துவிட்டேன்.” “ஏன்?” என்று தாரை கேட்டாள். “நானும் அவரும் ஆண்டுக்கொருமுறை இந்திரவிழாவின்போது அரசவையில் அருகருகே அமர்ந்திருப்போம். மற்றபடி சந்தித்துக்கொள்வதுகூட இல்லை” என்றாள் துச்சளை. “மெய்யாகவா?” என்று தாரை கேட்டாள்.

“ஆம், அவருக்குத் தேவையான பெண்கள் அவரை சூழ்ந்திருக்கிறார்கள்” என்று துச்சளை சொன்னாள். “என் உடல் இப்படியாவது வரை என்மேல் மெல்லிய ஈடுபாடு அவருக்கிருந்தது. அது அகன்று பதினைந்தாண்டுகள் கடந்துவிட்டன.” தாரை கனிந்த விழிகளுடன் நோக்க “அப்படி நோக்கி துயர்கொள்ள வேண்டியதில்லை. அது மிகப் பெரிய விடுதலை. என் உள்ளம் அதன்பின்னரே கனியத் தொடங்கியது. எனக்கு அது எப்போதுமே பெரிய துயராகவே இருந்திருக்கிறது” என்று துச்சளை சொன்னாள். “நானே எண்ணிக்கொள்வதுண்டு, என் உடல் மல்லர்களுக்குரியதா என. இது கொஞ்சப்படுவதை மறுக்கிறது.”

மாறாத மென்புன்னகையுடன் எளியதொன்றை சொல்வதைப்போல “என் உடலை அவர் ஆள்கையில் உள்ளூர சிறுமதிப்பு செய்யப்படுவதாக உணர்வேன். அதைவிட நானே என் உடலால் அதன்பொருட்டு செலுத்தப்படுகையில் மேலும்

சிறுமைகொள்வேன். ஒவ்வொருமுறையும் என்னை எண்ணிக் கூசியபடியே அதிலிருந்து விலகுவேன். என்றோ ஒருநாள் இனியில்லை என்னும் எண்ணம் எழுந்தபோது மெய்ப்புகொண்டுவிட்டேன். கண்ணீர் வழியத்தொடங்கியது. அன்றெல்லாம் அழுதுகொண்டிருந்தேன். என் உள்ளம் அன்று உணர்ந்த எழுச்சி அறுபடாது இன்றுவரை நீடிக்கிறது" என்றாள்.

தாரை அவளை விந்தையாக நோக்கிக்கொண்டிருந்தாள். "உனக்குப் புரியாது" என்றாள் துச்சளை. "இழப்பு எப்படி விடுதலை ஆகும்?" என்றாள் தாரை. "மெய்யாகவே நான் உணர்வது இதுதானடி. எதையுமே விட்டுவிட மானுடனால் இயலாது, இழப்பதே விடுதலைக்கான ஒரே வழி. இழந்தவை எத்தனை விரைவாக நம்மைவிட்டு அகல்கின்றன என்பது விந்தையிலும் விந்தை. ஏனென்றால் நம்மைச் சூழ்ந்துள்ள ஒவ்வொன்றும் இங்கு இப்போது மட்டுமே நீ என்று சொல்லிக்கொண்டிருக்கின்றன. எதிர்காலம் நில்லாதே வா என இழுத்துக்கொண்டிருக்கிறது."

துச்சளை கன்னங்களில் நீள்குழிகள் எழ சிரித்து "காமம் துறக்க தவம்செய்வோர் கொள்ளும் அல்லல்களை நூல்களில் படிக்கையில் ஆழ்ந்த இரக்கமே ஏற்படுகிறது. வெட்டி வீசினால் அது மிக எளிது என அறியாதவர்கள்" என்றாள். தாரை கையால் வாய் பொத்தி சிரித்தாள். சாரிகை இன்னீர் கொண்டுவர அதை வாங்கி அருந்தியபடி "நீராடவேண்டும்" என்றாள் துச்சளை. "நீராட்டறை ஒருங்கியிருக்கிறது, அரசி" என்றாள் சாரிகை. தாரை "நீங்கள் உங்கள் உடன்பிறந்தாரை சந்திப்பதைப்பற்றி சொல்லவேயில்லை" என்றாள். "ஆம், சந்திக்கவேண்டும்" என்றபின் "அவர்கள் இப்போது இவ்வுலகில் எதனுடனும் இல்லை என எண்ணுகிறேன்" என்றாள் துச்சளை.

திருதராஷ்டிரரின் அறைவாயிலில் நின்றிருந்த சங்குலனைக் கண்டதும் துச்சளை திகைப்புடன் “அய்யோ, இவர் விப்ரர் அல்லவா?” என்றாள். அவன் புன்னகைத்து “நான் அவர் மைந்தன், அரசி” என்றான். “இவனை நான் முன்னரே அறிவேன்… ஒருமுறை நான் கொற்றவை ஆலயத்திற்குச் செல்லும்போது இவனை பார்த்தேன். ஏனோ அன்று இவனை எனக்கு மிகவும் பிடித்திருந்தது. தூக்கி கொஞ்சிவிட்டு ஒரு முத்தாரத்தை இவன் அன்னையிடம் அளித்தேன்” என்றாள். சங்குலன் “ஆம், அரசி. அந்த முத்தாரம் இப்போதும் இருக்கிறது” என்றான்.

தாரையிடம் திரும்பி “இயல்பாக கைநீட்டி தூக்கமுயன்றேன். என்ன எடை தெரியுமா? அப்படியே குனிந்துவிட்டேன். என்ன அகவை, இரண்டா என இவன் அன்னையிடம் கேட்டேன். இல்லை இளவரசி, ஏழு மாதம்தான் என்றாள். திகைத்துவிட்டேன்” என்றாள். அவன் தோள்களைத் தொட்டு “பெருந்தோளன்… நீ மற்போர் பயின்றாயா?” என்றாள். “ஆம், தந்தையிடமிருந்து” என்றான். “விப்ரர் மாமல்லர், தெரியுமல்லவா?” என்றாள் துச்சளை. தாரை “ஆம்” என்றாள்.

“இளமையில் தந்தை பீஷ்மரிடம் மற்போர் பயின்ற காலத்தில் ஒருமுறை அவரும் இளையவர் பாண்டுவும் கங்கைவழியாக படகில் செல்கையில் வாரணவதம் அருகே சிம்ஹபதம் என்னும் ஊரில் ஓர் இளைஞர் படகு ஒன்றை தனியாகத் தூக்கி நீரிலிறக்குவதை இளையவர் கண்டு தந்தையிடம் சொன்னார். அவரை அருகழைத்து தன்னுடன் மற்போரிடும்படி தந்தை கோரினார். கரைச்சேற்றில் அவர்கள் போரிட்டனர். அவர் இறுதியில் தந்தையை வென்றார். சேற்றுடன் தந்தையை

அழுத்திப்பிடித்துக்கொண்டு பொறுத்தருள்க அரசே என்று சொன்னார். தோல்வியை ஏற்றுக்கொண்டு எழுந்த தந்தை எப்படி என்னை உனக்குத் தெரியும் என்று கேட்டார். கதைகளினூடாக உங்களை ஒவ்வொருநாளும் பார்த்துக்கொண்டிருக்கிறேன் என்றார். அவ்விளைஞர்தான் விப்ரர்" என்றாள் துச்சளை.

"அவரை உடனே தன்னுடன் அழைத்துக்கொண்டுவந்து அணுக்கராக வைத்துக்கொண்டார் தந்தை. அது ஒரு அரசசூழ்ச்சியாகவே செய்யப்பட்டது, அவர் எங்கும் சென்றுவிடக்கூடாதென்று. பின்னர் அவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் நன்கறிந்தவர்களானார்கள். பயிற்சிக்களத்தில் ஒவ்வொருநாளும் தோள்கோத்து அடைந்த அணுக்கம் அது." துச்சளை அவனிடம் "தந்தையிடம் இப்போது நீதான் போரிடுகிறாயா?" என்றாள். "ஆம் அரசி, சென்ற பதினைந்து நாட்களுக்கு முன்புவரை" என்றான் சங்குலன். துச்சளை முகம் மாறி "எப்படி இருக்கிறார்?" என்றாள். "நலம்பெறுவார் என நம்புகிறேன்" என்றான் சங்குலன். அந்த மறுமொழியிலிருந்த நுட்பத்தை உணர்ந்து துச்சளை புன்னகைத்து "செல்வோம்" என்றாள். தாரை தயங்கி நிற்க "நீயும் வாடி" என தோளைத் தொட்டு அழைத்துக்கொண்டு உள்ளே சென்றாள்.

திருதராஷ்டிரரின் மஞ்சத்தறை பெரிய அவைக்கூடம்போல் எட்டு சாளரங்களும் மேலெழுந்து குவிந்த கூரையும் நான்கு வாயில்களுமாக விரிந்திருந்தது. அவருடைய மஞ்சமும் முரசுக்கட்டில்போல அகன்றிருந்தது. அதன்மேல் வெண்பட்டு விரிக்கப்பட்ட இறகுச்சேக்கையில் வெண்ணிறப் பட்டு உறையிட்ட தலையணைகளில் தலைவைத்து அவர் படுத்திருந்தார். நீண்ட நரைகுழல்சுருள்கள் தலையணைமேல்

பரவியிருந்தன. பெரிய கருந்தோள்கள் வெண்பட்டின் பகைப்புலத்தில் துலங்கித்தெரிந்தன. துச்சளை அவரைக் கண்டதும் கைகூப்பியபடி கண்ணீர் வழிய அசையாமல் நின்றுவிட்டாள். சங்குலன் மெல்ல பின்னகர்ந்து வாயிலை சாத்தினான். தாரை அவ்வோசையில் சற்று அதிர்ந்தாள்.

திருதராஷ்டிரரின் கண்கள் சுருங்கி அதிர்ந்தன. இமை திறந்து செந்நிறத் தசைக்குமிழிகள் துள்ளின. “துச்சளையா? துச்சளையா?” என்றார். அவருடைய குரல்வளை எழுந்து ஆடியது. கைகள் இரண்டும் காற்றில் நீண்டு துழாவின. “துச்சளை! வந்துவிட்டாயா?” என்றார். தாரை “அரசி, அருகே செல்க!” என்றாள். அவருடைய கைகள் துழாவிக்கொண்டே இருந்தன, பசித்த யானையின் துதிக்கைகள் என. “துச்சளை, அருகில் வா… துச்சளைதானே?” தாரை துச்சளையைத் தொட்டு “அருகில் செல்க, அரசி” என்றாள். துச்சளையால் நடக்கமுடியவில்லை. நெஞ்சில் கைவைத்து அழுத்தியபடி ஒவ்வொரு அடியாக எடுத்துவைத்தாள். “துச்சளை!” என்றபடி திருதராஷ்டிரர் எழுந்து அமர்ந்தார். “நான் உன்னை தேடினேன்… நீ வருவாய் என்று…” என்றபின் இருமி உடல் அதிர்ந்தார்.

அருகே சென்ற துச்சளை அவர் கைதொடும் தொலைவில் நின்றாள். அவள் உடல் மெய்ப்புகொண்டு சிலிர்த்திருப்பது தெரிந்தது. அத்தனை பெரிய உடல் மெல்லிய இறகுபோல அதிர்வது தாரைக்கு விந்தையாகத் தோன்றியது. துழாவிய திருதராஷ்டிரரின் கைகள் துச்சளையை தொட்டன. திடுக்கிட்டு அசைவிழந்தன. பின்னர் உறுமலோசையுடன் அவளை அள்ளி இழுத்து தன் மார்பின்மேல் போட்டுக்கொண்டார். அச்சுறுத்தும் முனகலோசையும் உறுமலோசையும் எழ தன் பெரிய

கைகளால் அவளைத் தழுவி நெஞ்சோடு இறுக்கினார். அவள் உடல் அவர் பிடிக்குள் பிதுங்கி நெரிந்தது.

அவள் மூச்சுத்திணறி இறந்துவிடக்கூடும் என்று தாரை அஞ்சினாள். ஆனால் அவள் முகம் சிறுகுழவியினுடையதுபோல அழுகையில் துடித்து நின்றது. கண்ணீர் கன்னங்களில் வழிந்து தாடையில் துளித்து சொட்டிக்கொண்டிருந்தது. திருதராஷ்டிரர் அவளை முத்தமிட்டார். கன்னங்களிலும் தோள்களிலும் நெற்றியிலுமாக. அவர் கைகள் அவள் தலையையும் கன்னங்களையும் கழுத்தையும் பருத்த தோள்களையும் உருண்ட பெரிய கைகளையும் தொட்டுத்துழாவின. அவளுடைய முலைகளைப் பற்றிநோக்கி கீழிறங்கின. வயிற்றைத் தொட்டு இடையை வருடி தொடைகளில் நடந்தன. அத்தொடுகையை தாரை தானும் உணர்ந்தாள்.

துழாவித் துழாவிச் சலித்த திருதராஷ்டிரரின் கைகள் மெல்ல ஓய்ந்தன. “நீ வந்துவிட்டாய்… நான் உன்னை தொடாமல் இறந்துவிடுவேன் என எண்ணினேன்… நீ வந்துவிட்டாய்” என்றார். துச்சளை ஒன்றும் சொல்லவில்லை. “உன்னையே நினைத்துக்கொண்டிருந்தேன்… உன் உடல் என் கைகளில் இருக்கிறது. சில தருணங்களில் முற்றிலும் அகன்றும்விடுகிறது. உன்னைத் தொட்டு எத்தனையோ ஆண்டுகளாகின்றன. உன்னை நான் தொட்டு… விதுரா… அடேய்… விதுரா, மூடா!”

துச்சளை “அவர் இங்கில்லை” என்றாள். “ஆம், அவன் இங்கு வந்துவிட்டு இப்போதுதான் சென்றான். உன் அரசனை வரவேற்கச் சென்றான்… அவனிடம் நான் சொன்னேன், நீ பருத்திருப்பாய் என்று. உன் கைகள் பெரிதாக இருக்கும் என்று.

அவ்வாறெல்லாம் இருக்காது என்றான். மூடன்! என் மகள் எப்படி வளர்வாள் என எனக்குத் தெரியாதா? நான் உன்னை நாள்தோறும் வருடிக்கொண்டிருக்கிறேன். உன்னை வருடாமல் ஒருநாள் கடந்துசென்றதில்லை... தெரியுமா? உன்னை என் கை அறிந்ததுபோல அவர்கள் அறியமாட்டார்கள்... எப்போது வந்தாய்? உணவருந்தினாயா? ஓய்வெடுக்காமல் இங்கேயே வந்துவிட்டாயா? சஞ்சயா, அறிவிலி..."

துச்சளை "அவரும் இங்கில்லை, தந்தையே" என்றாள். "அவன் உன்னை பார்க்கவேண்டும். அவன் முன் நீ ஒருநாள் முழுக்க அமர்ந்திரு. உன்னைப் பார்த்து அவன் எனக்கு ஒருநாள் முழுக்க சொல்லிக்கொண்டே இருக்கவேண்டும். நடுவே வேறு எவரும் வரக்கூடாது. ஒரு சொல்கூட நாம் பேசிக்கொள்ளக்கூடாது. உன்னைப்பற்றி அவன் சொல்வது மட்டும் என் காதில் விழவேண்டும்" என்றார் திருதராஷ்டிரர். அவர் குரல் உடைந்தது. "நான் இசை கேட்டு நெடுநாட்களாகின்றன. என் உள்ளத்திலும் இசையே இல்லை. நேற்று ஒரு பண்ணைப்பற்றி நினைவுகூர்ந்தேன். அது சொல்லாகவே என்னுள் எழுந்தது..."

"மீண்டும் இசை கேட்கலாம், தந்தையே" என்றாள் துச்சளை. நெடுநேரமாக பேசாமலிருந்தமையால் அவள் குரல் அடைத்திருந்தது. கனைத்து தொண்டையை தீட்டிக்கொண்டு "நானும் தங்களுடன் அமர்ந்து இசை கேட்கிறேன்" என்றாள். "இனிமேல் என்னால் இசை கேட்கமுடியுமென்று தோன்றவில்லை. மெய்யாகவே இனி என்னால் இயலாது... நான் அதை அத்தனை உறுதியாக உணர்கிறேன். கற்பாறையைத் தொட்டு அறிவதுபோல" என்றார் திருதராஷ்டிரர். தலையை ஆட்டியபடி அவர் விழிநீர் வடித்தார்.

“நீ அறியமாட்டாய், இசை என்றால் எனக்கு என்ன என்று. புறவுலகு பொருள்வயமானது. ஒவ்வொரு பொருளும் ஒவ்வொரு வகையில் தனித்தது. ஒன்றுக்கும் பிறவற்றுக்குமான உறவை பிரம்மம் எப்படி வகுத்துள்ளது என நாம் அறியவே இயலாது. நாம் அவற்றுக்கு அளிக்கும் உறவைக்கொண்டுதான் நம் உலகு உருவாகிறது. நீங்கள் விழிகளால் அவற்றை ஒன்றாக்கிக் கொள்கிறீர்கள். உங்கள் உலகம் ஒளியாலானது. என் ஒளி இசையே. நான் தொட்டறியும் அத்தனை தனிப்பொருட்களும் என்னுள் குவிந்து மலைப்பை அளித்தபோதுதான் இசையை கண்டடைந்தேன். இசை அவற்றை இணக்கி இயையச் செய்து தொடுத்து விரித்து என் உலகை அமைத்தது, நான் அதில் வாழ்ந்தேன்.”

“இப்போது என் அகம் மீண்டும் பொருளற்ற பருக்களின் பெருங்குவியலாக கிடக்கிறது. சிலசமயம் துணுக்குறலுடன் நான் இறந்துவிட்டேனா என உணர்கிறேன். என் கைகளால் என் தோள்களையும் மார்பையும் தொட்டுத் தொட்டு நான் உயிருடன்தான் இருக்கிறேன் என நிறுவிக்கொள்கிறேன்.” அச்சொற்களை அவர் உள்ளூர பலமுறை பேசிக்கொண்டிருக்கவேண்டும். அவற்றை சீராகச் சொன்னதுமே அவர் எளிதானார். பெருமூச்சுடன் மெல்ல அமைந்து “உன்னை மீண்டும் தொடும்போது நான் மீண்டுவருவேன் என்று உணர்ந்தேன். மீண்டும் என்னால் இசை கேட்கமுடியும் என்று எண்ணிக்கொண்டிருந்தேன்” என்றார். “மெய்யாகவே முடியும், தந்தையே. இன்று இசை கேளுங்கள்…” என்றாள் துச்சளை.

அவர் பெருமூச்சுவிட்டு “ஆனால் இந்த ஆறுதல் பொய் என முதல் உள எழுச்சி அமைந்ததுமே தெரியத்தொடங்குகிறது… சுனைக்குள் இந்தக் கரும்பாறை எந்த அலையாலும்

கரைக்கமுடியாதபடி அமைந்துள்ளது” என்றார். “நீ அறிந்திருப்பாய், என் மைந்தன் எனக்கு இறுதிச்சடங்குகள் செய்யப்போகிறான்.” துச்சளை ஒன்றும் சொல்லவில்லை. “அவன் என்னை முற்றிலும் துறக்கப்போகிறான். அச்சடங்கு நிகழ்ந்தால் நான் உயிருடனில்லை என்றுதான் என் முன்னோர் பொருள்கொள்வார்கள். நானே அவ்வாறுதான் கொள்வேன். என் கைகளும் கால்களும் அசைவிழக்கும். செத்த உடலாக இங்கே நான் கிடப்பேன். ஒவ்வொருநாளுமென அழுகிக்கொண்டிருப்பேன்.”

மீண்டும் அவர் குரல் நெகிழத்தொடங்கியது. “அவனிடம் சொல்… அவன் கால்களை பற்றிக்கொண்டு நான் கெஞ்சுகிறேன் என்று சொல். அவன் என்னை விட்டுவிடலாகாது. அவனால்தான் நான் பெருந்தந்தை. அவன் என்னை உதறினால் என் நூறு மைந்தரும் ஆயிரம் பெயர்மைந்தரும் என்னிடமிருந்து அகல்வார்கள். பின்னர் நான் வெறும் தசைக்கூண்டு… என் செல்வமே, அவனிடம் செல். உன் சொற்களால் எப்படியாவது அவனை மீட்டுக்கொண்டு வா… அவன் என்னை உதறினால் எனக்கு பின்னர் வாழ்வில்லை… அவனிடம் சொல். அவனிடம் சொல். அவனிடம் சொல், கண்ணே!”

அவர் விசும்பி அழத்தொடங்கினார். பெரிய கருந்தோள்கள் குலுங்க வேழமருப்பென விரிந்த மார்பு எழுந்தமைய கண்ணீர் உதிர அவர் அழுதுகொண்டிருப்பதை நீர்விழிகளுடன் துச்சளை நோக்கிக்கொண்டிருந்தாள். “அவனைத் தூக்கி காட்டில் வீசிவிடும்படி நிமித்திகர் சொன்னார்கள். விதுரனே அவ்வாறுதான் எண்ணினான். அவன் அன்னையும்கூட அன்றிருந்த நிலையில் அதை ஏற்றிருப்பாள். நான் அவனை

நெஞ்சோடணைத்துக்கொண்டேன். நானே அவனென்று உணர்ந்தேன்... அவன் என் மைந்தன் மட்டுமல்ல. எல்லா தந்தையருக்கும் மைந்தர்கள் மூதாதை வடிவங்கள். மண்ணிழிந்த தெய்வங்கள்... அவனிடம் சொல். அவன் அடிபணிகிறேன் என்று சொல். அவன் என் தலையை உதைக்கட்டும்... அவனுக்கு நான் எந்த ஆணையையும் விடுக்கவில்லை. அவன் தன் உடன்குருதியினரை கொல்லட்டும். பாரதவர்ஷத்து நிலம் அனைத்தையும் ஆளட்டும். மண்ணில் அனைத்துப் பழிகளையும் சூடட்டும். நான் அவன் தந்தை என்றே நின்றிருப்பேன். அவன் என்னை உதறக்கூடாது. அதைமட்டும் அவன் செய்யக்கூடாது.”

அவர் அவள் கைகளைப்பிடித்து நெரித்து இறுக்கினார். அவற்றை உலுக்கியபடி மீண்டும் மீண்டும் “அவனிடம் சொல்... அவனிடம் சென்று சொல்” என்றார். ஒருகணத்தில் வெடித்தெழுவதுபோன்ற குரலில் “நான் கணிகரிடம் செல்கிறேன். அவர் காலடியில் தலைவைக்கிறேன். அவர் உமிழ முகம் கொடுக்கிறேன். அவர் இழைக்கும் திரிபு இது. அவரால் இதை மீட்கவும் இயலும்... அவர் என்னை காக்கமுடியும்... அவரிடம் செல்க! நான் அவரை சந்திக்கவருகிறேன் என்று சொல்க... அவர் சகுனியிடம் சொல்லட்டும்” என்றார்.

“நான் அவர்களிடம் பேசுகிறேன், தந்தையே” என்றாள் துச்சளை. “அவர்கள் ஒவ்வொருவரிடமும் சொல்க! நான் எளியவன், விழியற்ற பெரும்புழு. மானுடனாக அமையாத குறையுடையவன். என் துயர் என் உள்ளிருந்து வெளியே வழிய வாயிலே இல்லை. அவனிடம் சொல்... அவன் என்னை உதறக்கூடாது. அவனிடம் சொல், என் தெய்வமே!” அவர்

மீண்டும் மீண்டும் அதையே சொல்லிக்கொண்டிருந்தார். சொல்லச் சொல்ல வெறியேறி பித்தர்போல, இறையேற்றம் பெற்றவர்போல அதை திரும்பத் திரும்ப சொன்னார். ஊழ்நுண்சொல் என "அவனிடம் சொல்! அவனிடம் சொல்!" என்றார். அவள் கைகளைப்பிடித்து உலுக்கினார்.

அவருடைய வெறி ஏறி ஏறி வந்தது. தாரை அச்சத்துடன் பின்னடைந்தாள். ஐம்புலன்களும் கொண்டவர்களிடம் எழும் வெறியல்ல அது என்று தோன்றியது. அது தெய்வங்களுக்கு எதிரான வஞ்சம். சூழ்ந்திருக்கும் முழு உலகுக்கும் எதிரான சினம். சங்குலன் உள்ளே வந்து எழுந்துகொள்ளும்படி விழிகாட்டினான். திருதராஷ்டிரரின் கைகள் வலிப்பு வந்தவைபோல அசைய துச்சளை எளிதாக கைகளை உருவிக்கொண்டாள். அவள் பின்னடைந்ததும் அதை உணர்ந்த திருதராஷ்டிரர் "எங்கே செல்கிறாய்? எங்கே செல்கிறாய்? அவனிடம் சொல்!" என்று கூவினார். ஓங்கி தன் நெஞ்சிலும் தலையிலும் அறைந்துகொண்டார். தன் உடலில் இரு கைகளாலும் அறைந்தபடி நெருப்புபட்ட களிறுபோல பிளிறினார்.

சங்குலன் அவருடைய இரு கைகளையும் பற்றி அவரை படுக்கையோடு சேர்த்து பற்றிக்கொண்டான். "துயில்க, துயில்க!" என்றான். கைநீட்டி அருகே இருந்த பீதர்நாட்டு வெண்களிமண்ணாலான மூக்குக்குவளையை எடுத்து அதை வாயால் ஊதி பொறி எழுப்பி அதன் புகையை அவருக்கு அளித்தான். செல்க என துச்சளையிடம் விழிகாட்டினான். துச்சளை பின்னடி எடுத்துவைத்து வெளியே செல்ல தாரை உடன்சென்றாள்.

# குருதிச்சாரல் - 38

**பகுதி ஆறு : பொற்பன்றி – 3**

இடைநாழியில் நடந்துகொண்டிருக்கையில் துச்சளை முற்றிலும் தனிமைகொண்டிருந்தாள். அருகே வந்துகொண்டிருந்த தாரை அந்தத் தனிமையை உணர்ந்தவள்போல ஒரு சொல்லும் எடுக்கவில்லை. நின்று நின்று இளைப்பாறி நடுவே ஓர் இடத்தில் சிறுதிண்ணையில் அமர்ந்து ஓய்வெடுத்து அவள் தன் அறையை வந்தடைந்தாள். பீடத்திலமர்ந்து விழிமூடிக்கொண்டாள். அவள் நெற்றிநரம்புகள் புடைத்திருப்பதை தாரை கண்டாள். கிளம்பிவிடலாம் என எண்ணி அவள் உடலில் மெல்லசைவு எழுந்ததுமே துச்சளை விழிதிறந்து “தந்தையின் கைகள்” என்று சொல்லி புன்னகைத்தாள்.

அவள் விழிகள் சிவந்திருந்தன. “தந்தையின் கைகளுக்கு தயக்கமே இல்லை. விழியுடையோர் எவருக்கும் அத்தகைய தயக்கமின்மை கைகூடுவதில்லை” என்றாள். “இளமையில் நான் விரும்பியது அவருடைய கைகளைத்தான். என்னை அவர் தொட்டுத் தொட்டு வரைந்துகொள்கிறார் என்று எண்ணினேன். அவரால் வரையப்பட்டவள்தான் நான் என பின்னர் தெளிந்தேன்.” தாரை “ஆம், அவர் என்னை ஒருமுறை தொடமாட்டாரா என ஏங்கினேன்” என்றாள். “என் தந்தை அகவைமுதிர்வுக்கு முன்புதான் என்னை தொட்டிருக்கிறார். அதன்பின் அவர் என் நெற்றியை மட்டுமே வாழ்த்தும்பொருட்டு தொட்டார்.”

“ஆம், பெரும்பாலும் தந்தையர் மகளிரை தொடுவதில்லை” என்றாள் துச்சளை. “அவ்வகையில் நான் நல்லூழ் கொண்டவள்.” ஆனால் அவள் முகத்தில் இருந்த தவிப்பு மாறவில்லை. “அவர் இன்றிருக்கும் கெடுநரகு… நரகம் முடிவிலா இருளாலானது என ஏன் சொல்கிறார்கள் என்று இன்று உணர்ந்தேன்.” தாரை “அவர் இருக்கும் நிலையை நீங்கள் அரசரிடம் சொல்ல இயலும், அரசி” என்றாள். “நான் எப்படி சொல்வது? அவர் இருக்கும் நிலை…” என்றாள் துச்சளை. “அவரிடம் இன்று நீங்களோ பேரரசியோ மட்டுமே பேசமுடியும். அவரிடம் இப்போது அணுக்கமாக பெண்டிர் எவருமில்லை” என்றாள் தாரை.

அவள் சொல்வதை புரிந்துகொண்ட துச்சளை “நான் அரசியைப் பார்த்ததுமே அதை எண்ணினேன்” என்றாள். “அறுபடல்” என்றாள் தாரை. “ஆம், குருதி வடிவது இன்னமும் நிற்கவில்லை. அவள் அவர் மீது பெருங்காதல் கொண்டவள். அக்காதல் துளி குன்றாது அவ்வண்ணமே நீடிக்கிறது இப்போதும். அவள் மறையும் கணம்வரை அவ்வாறே நீடிக்கும். ஏனென்றால் அவர் அப்படிப்பட்டவர். சில ஆண்களை அவர்களின் பெண்கள் ஒருகணமும் அகல இயலாது” என்றாள். “ஆம்” என்றாள் தாரை விழிகளைத் தாழ்த்தி.

அவளை ஒருகணம் நோக்கிய பின் துச்சளை “முன்பொருமுறை சந்திரர் என்னும் நிமித்திகர் மூத்தவரின் பிறவிநூலை நோக்கும்பொருட்டு இங்கே வந்தார். அரசி ஆர்வத்துடன் அமர்ந்து அதை கேட்டாள். இப்புவி உயிரின் பெருங்கடல் என்று அவர் சொன்னார். துகள்கள், குமிழிகள், அலைகள். சில உயிர்கள் அவற்றில் பெருஞ்சுழிகள். சில பேரலைகள். சில ஆலமரங்களைக் காண்கையில் பிரம்மத்தைக்

காண்பதுபோல் உள்ளம் எழுகிறது. ஆழியில் பேருருவத் திமிங்கலத்தைக் கண்டு மீண்ட சிலர் மெய்மையை சென்றடைந்தவர்களானதுண்டு என்றார்" என்றாள்.

"எங்கள் முகங்களை நோக்கியபின் நல்லோர் என்றோ தீயோர் என்றோ பகுப்பது நம் நலன் எனும் அளவுகோலைக்கொண்டே என்றார் அவர். பிரம்மம் ஆடும் நாற்களத்தில் சில காய்கள் கருமை, சில வெண்மை. இது ஒரு பேருயிர். பெருநதி சிறுநதிகளை தன்னுடன் இழுத்து இணைத்துக்கொள்ளும் ஆற்றல்கொண்டது. தன் விசையாலேயே தன் வழிகளை அமைத்துக்கொள்வது. அதை உங்கள் கைகளால் முழம்போட்டு அளக்கவேண்டாம், அதற்குமேல் ஒன்றும் சொல்வதற்கில்லை என்று சொல்லி சுருட்டி குழாயிலிட்டு திருப்பியளித்துவிட்டார்" என்றாள் துச்சளை.

"அரசி விழிதாழ்த்தி அமர்ந்திருந்தாள். ஒரு சொல்லும் எழவில்லை. நான் அவள் முகத்தை நோக்கிக்கொண்டிருந்தேன். மூத்தவரைப் பற்றிய அச்சொற்கள் எனக்கு அச்சமூட்டின. ஆனால் அவள் முகம் பெருங்காதலால் மலர்ந்து விழிகள் நீர்மைகொண்டு ஒளிவிட்டதை கண்டேன். அப்போது உணர்ந்தேன், அப்பெருஞ்சிலந்தியிடமிருந்து அவளுக்கு மீட்பே இல்லை என. அதன் நஞ்சை ஏற்று உடலளித்து ஓடாவதற்காக வலையை நாடி பறந்துவந்து சிறகுகளை அளித்தவள் அவள்" என்றாள் துச்சளை. தாரை "ஆம், நானும் அதை உணர்ந்திருக்கிறேன்" என்றாள்.

"ஆனால் அவருக்கு ஒரு பெண்தான்" என்றாள் துச்சளை. "தன்னுள் ஆழ்ந்த குறையுடையவன் மட்டுமே பெண்களை அள்ளி அள்ளி நிறைத்துக்கொள்கிறான். அவனுக்கு எப்போதுமே நிறைவதில்லை. அவருடைய உடலுக்கு மட்டுமே பெண்

தேவை. அதற்கு ஒருத்தியே போதும்.” தாரை “ஆம், அக்கையே” என்றாள். “சென்று ஓய்வெடுத்து வா. நான் சற்றேனும் துயின்றாகவேண்டும். இன்றே தமையனை பார்க்கவேண்டும். அதற்கு முன்னர் அன்னையை பார்ப்பேன். இங்கே என்னால் ஏதேனும் நிகழ வாய்ப்பிருப்பின் நிகழ்க. அதன்பொருட்டு முழுமையாக முயலவேண்டியது என் கடன்” என்றாள் துச்சளை. “ஆம், நான் அந்தியில் உங்களை பார்க்கிறேன்” என்றாள் தாரை.

அவள் சோர்ந்து நடப்பதைக் கண்ட துச்சளை “என்னடி?” என்றாள். “ஒன்றுமில்லை, அரசி” என்றாள் தாரை. “நன்று… விகர்ணனையும் நான் பார்க்கவேண்டும். இளமையில் அவன் மீது எனக்கு இளக்காரம் கலந்த அன்பு இருந்தது. அவனும் குண்டாசியும் என்னுடைய களிப்பாவைகள் என்பார்கள்” என்றாள் துச்சளை. “அவரை அழைத்துவருகிறேன், அக்கையே” என்றாள் தாரை. “குண்டாசியையும் பார்க்கவேண்டும்” என்றாள் துச்சளை. தாரை “அமைச்சரிடம் சொல்கிறேன்” என்றபின் வெளியே சென்றாள்.

துச்சளை தன் அறையிலிருந்து கிளம்பியபோதுதான் தாரை அப்பாலிருந்து ஓடிவருவதை கண்டாள். “என்னடி ஓடிவருகிறாய்? நில்” என்றாள் துச்சளை. “நான் சற்று துயின்றுவிட்டேன், அக்கை. அதற்குள் அரசப்பணி என்று சுரேசர் செய்தியனுப்பியிருந்தார். மச்சர்நாட்டு அரசர்கள் இருவர் நகர்புகுந்திருக்கிறார்கள். அவர்களை சந்தித்துவிட்டு ஓடிவந்தேன்” என்றாள். “விரைந்து வா… அதற்காக ஓடிவரவேண்டுமா என்ன?” என்றாள் துச்சளை. “இங்கே அரசியர் எவரும் ஓடமாட்டார்களடி.” தாரை “ஆம், என்னிடம்

சொல்லிக்கொண்டே இருக்கிறார்கள். ஆனால் என்னால் ஓடாமலும் இருக்கமுடியாது” என்றபின் “ஓடும்போது மட்டும்தான் அக்கை, நான் மச்சநாட்டவள்” என்றாள்.

துச்சளை முகம்மலர்ந்து அவள் தோளில் கைவைத்து “ஓடு... உன்னை எவர் சொல்வது? எனக்குக்கூடத்தான் ஓடவேண்டுமென்று விருப்பம். கால்கள் அசைந்தால்தானே?” என்றாள். அவளுடன் வந்த சாரிகை “அரசி பேரரசியை சந்திக்கச் செல்கிறார்கள்” என்றாள். “நன்று, நானும் உடன் வரலாமல்லவா?” என்றாள் தாரை. “உன்னை அதற்குத்தானே வரச்சொன்னேன்” என்றாள் துச்சளை. “எனக்கும் அன்னைக்குமான உறவு எப்போதுமே பாறைவெடிப்புக்குள் நீர் புகுந்ததுபோல, எங்கு செல்கிறது எப்படி வெளிப்படுகிறது என எவராலும் சொல்லமுடியாது” என்றாள்.

“நல்ல ஒப்புமை” என்றாள் தாரை. துச்சளை “யாரோ விறலி பாடியது... விறலியர் சொல்லாத எதையேனும் சொல்லும் வழக்கமே அரசகுடியினருக்கு உண்டா என ஐயமாக உள்ளது” என்றாள். “பேரரசி சோர்வுற்றிருக்கிறார். ஆனால் எதையும் எங்களிடம் காட்டிக்கொள்வதில்லை. தங்கையர் அவருக்கு பெரிய அரண்போல. நாம் அவரை அணுகுவதையும் அவர் நம்மை அணுகுவதையும் முற்றாக கட்டுப்படுத்துகிறார்கள்.” துச்சளை “அது நன்று, எந்நிலையிலும் உடனிருக்கும் உறவு என்பது பெரிய கொடை” என்றாள். “நானேகூட சிற்றன்னையரைக் கடந்து அன்னையை சென்றடைய முடிந்ததில்லை.”

தாரை தரையை நோக்கிக்கொண்டே நடந்தாள். அவள் துச்சளையிடம் அணுகிப்பேச அஞ்சினாள். துச்சளையிடம் ஒரு தயக்கமில்லாமை இருந்தது. எங்கும் நுழைபவள்.

விழியில்லாதவர்களுக்குரிய இங்கிதமின்மையா அது? அவள் பெருமூச்சுவிட்டாள். துச்சளை அவளை நோக்கி “என்ன எண்ணுகிறாய்?” என்றாள். “ஒன்றுமில்லை” என்றாள் தாரை. “சலிப்புறுகிறாயா?” என்றாள். “இல்லை” என்றாள் தாரை. “அன்றி எதையேனும் அஞ்சுகிறாயா?” என்றாள். “இல்லை” என்றாள் தாரை. துச்சளை “எதையும் அஞ்சாதே” என்றாள். “எதையுமா, அக்கையே?” என்றாள் தாரை. “ஆம், எதையும்…” என்றாள் துச்சளை.

தாரை சில கணங்களுக்குப் பின் “அவ்வாறு எவரேனும் இருக்கமுடியுமா?” என்றாள். “இயலாது. ஆனால் அவ்வாறு முயலாமல் நாம் அன்றாடம் எதிர்கொள்ளும் ஆயிரம் தடைகளை கடக்கவியலாது” என்றாள் துச்சளை. தாரை மேலும் பெருமூச்சுவிட்டாள். துச்சளை மெல்லிய குரலில் ஏதோ முனகியபடி நடந்தாள். “பாடுவீர்களா?” என்றாள் தாரை. “பாடுவேன், ஆனால் அரசியர் பிறர் கேட்க பாடவும் ஆடவும் கூடாது என்பதனால் என்னுள் மட்டுமே வைத்துக்கொண்டேன்” என்றாள். “ஏன் பாடக்கூடாது?” என்றாள் தாரை. “அது பிறரை மகிழ்விப்பது அல்லவா? அதை செய்யக்கூடாது” என்றாள் துச்சளை.

சிலகணங்களுக்குப் பின் தாரை “அவ்வாறல்ல” என்று சொன்னாள். “பாடினாலோ ஆடினாலோ அரசியரும் அரசரும் இழப்பது பிறர்மேல் கொண்டுள்ள மேலெழுகையை… அவர்கள் அப்போது அரசியரும் அரசரும் அல்ல.” துச்சளை “மெய்தான்” என்றாள். “அரசர்கள் அவர்களின் உடல்களே. ஆடையணிகள், மணிமுடி, செங்கோல். பாடும்போதும் ஆடும்போதும் அவையனைத்தும் மறைந்து அவர்கள்

பிறிதொருவராகிவிடுகிறார்கள்" என்ற துச்சளை மெல்லிய மூச்சொலி ஒன்றை எழுப்பினாள். "என்ன?" என்றாள் தாரை.

துச்சளை நின்றுவிட்டதை உணர்ந்து நோக்கியபின்பு விழிவிலக்கியபோதுதான் தாரை அப்பால் நின்றிருந்த பூரிசிரவஸை பார்த்தாள். அவனும் அவளை பார்த்துவிட்டு நின்றிருக்கிறான் என்று உணர்ந்தாள். அவள் உள்ளம் படபடக்கத் தொடங்கியது. பின்னர் வலக்கால் ஊன்றமுடியாதபடி துள்ளுவதை உணர்ந்தாள். துச்சளை நீண்டமூச்சுடன் தன்னை திரட்டிக்கொண்டு மெல்ல நடந்தாள். அவள் நடக்கத் தொடங்கியதும் பூரிசிரவஸும் நடக்கலானான். இருவரும் அருகருகே வந்தனர். அதுவரைக்கும் துச்சளை நிலத்தை நோக்கியிருக்க பூரிசிரவஸ் தூண்களையும் சாளரங்களையும் பார்த்தான். அருகே வந்ததும் இருவரும் விரைவழிந்தனர். பூரிசிரவஸ் தாழ்ந்த குரலில் "வணங்குகிறேன், அரசி" என்றான்.

துச்சளை "நலம் சூழ்க!" என்றாள். அவள் குரலும் மிகத் தாழ்ந்திருந்தது. "நலமா?" என்றாள். "ஆம், நலமே" என்று அவன் சொன்னான். "இன்றுதான் வந்தீர்களா?" என்றாள். "இல்லை, நான் சென்ற ஒரு வாரமாகவே இங்குதான் இருக்கிறேன். இங்கு வரும் அரசர்களை ஒருங்கிணைத்து ஷத்ரியக் குடியவையை முழுமைப்படுத்தும் பொறுப்பை என்னிடம்தான் அரசர் ஒப்படைத்திருக்கிறார்" என்றான். சொற்களால் உள்ளம் எளிதாக "நான் இப்போதுதான் வந்தேன். இன்று அஸ்வத்தாமர் நகர்புகுகிறார். அவரை வரவேற்று மாளிகைக்கு கொண்டுசென்றேன். பேரரசியை சந்திக்கும்படி ஆணை வந்தது. சந்தித்துவிட்டு மீள்கிறேன்" என்றான்.

இருவருக்கும் பேசுவதற்கான பொருள் கிடைத்துவிட்டதென அவர்களின் முகங்கள் எழுந்து விழிகள் சந்தித்துக்கொண்டமை காட்டியது. “அன்னை ஏதேனும் மந்தணம் சொன்னாரா?” என்றாள் துச்சளை. “இல்லை அரசி, தாங்கள் அறியக்கூடாததென ஏதுமில்லை” என்றான். அவர்களின் நோக்குகளை அப்பால் நின்று பார்த்தபோது அச்சொற்கள் அங்கே ஒலிப்பது செவிமயக்கு என்று தோன்றியது.

பூரிசிரவஸ் “மூத்தவரைப்பற்றித்தான் பேசினார். நாளைமறுநாள் அவர் கலிபூசனைக்கு நாள் குறித்திருக்கிறார். அது மெய்யா என்று கேட்டார். ஆம், உண்மையே என்று சொன்னேன். நான் கேள்விப்பட்டவை அச்சுறுத்துகின்றன என்றார். ஆம், அவை அச்சமும் கவலையும் அளிப்பவையே என்றேன். அவர் கவலைகொண்டிருக்கிறார்” என்றான். “ஆம், சொன்னார்கள்” என்றாள் துச்சளை. அவள் விழிகள் பூரிசிரவஸின் முகத்தை நோக்கியபடி அலைபாய்ந்தன. வலக்கை ஆடைநுனியைப்பிடித்து முறுக்கிக் கசக்கித் தவித்தது. தாரை மெல்ல அகன்றுசெல்ல காலடி வைக்க அவள் கையைப்பற்றி அதை தடுத்தாள் துச்சளை.

பூரிசிரவஸ் “ஏதேனும் செய்யமுடியுமா என்று பேரரசி கேட்டார்கள். எவரேனும் ஏதேனும் செய்யமுடியும் என்றால் அது உங்களால் மட்டுமே என்றேன். நான் இனி ஒன்றும் செய்வதற்கில்லை, நீங்களோ அஸ்வத்தாமரோ செய்யமுடியும் என்றார். அல்ல அரசி, நாங்கள் ஏதும் செய்யமுடியாது என்றேன். அங்கன் என்ன செய்யமுடியும் என்றார். அங்கரால் மட்டுமே இனி ஏதேனும் செய்யமுடியும் என்றேன். ஆனால் அவர் மதுவில் மறந்திருக்கிறார். அவரிடம் சொல்லெடுக்கவே இயலாது என்றேன். நான் முயல்கிறேன், அவனே என் முதல்

மைந்தன். இக்குடியின்மேல் பேரரசருக்குப் பின் பொறுப்பு உடையவன் அவனே என்றார். ஆம், அறிவேன் என்றேன். அதன்பின் இருவரும் பேசிக்கொள்ளவில்லை. நான் தலைவணங்கி வெளியேறினேன்” என்று பூரிசிரவஸ் சொன்னான்.

“நான் அன்னையைத்தான் பார்க்க சென்றுகொண்டிருக்கிறேன்” என்றாள் துச்சளை. “ஆம், அரசி சத்யவிரதை சொன்னார்கள், நீங்கள் வரப்போவதாக. இவ்வழி வருவீர்கள் என எதிர்பார்க்கவில்லை.” அவள் கழுத்தில் நரம்பு ஒன்று அதிர்வதை தாரை கண்டாள். கைகள் ஆடைநுனியை முறுக்க “ஆகவேதான் இவ்வழி வந்தீர்களா?” என்றாள். “இல்லை அரசி, நான் தாங்கள் வருவீர்கள் என்று…” என்றான் பூரிசிரவஸ். “வருவேன் என எண்ணினீர்களா?” என்று அவள் அவன்மேல் விழிநிறுத்தி கேட்டாள்.

அவன் பதறி தாரையை நோக்கிவிட்டு “அல்ல, நான்… வேறுவழியேதும் இங்கில்லை என்பதனால்…” என்று குழறினான். “என்னை சந்திக்க விரும்பினீர்களா இல்லையா?” என்றாள் துச்சளை. “அது முறையல்ல அல்லவா?” என்றான். “எது?” என்றாள். “சந்திக்க விழைவது…” என்றான். “முறையா என கணித்த பின்னரா விழைவு எழுகிறது?” அவன் “ஆம்” என்றான். “சொல்க!” என்றாள். “என்ன?” என்றபோது அவன் விழி வந்து தாரையின் விழியை தொட்டுச்சென்றது. அவள் அப்போதுதான் அவன் முகத்தை தானும் உற்றுநோக்கிக்கொண்டிருப்பதை உணர்ந்து விழிவிலக்கிக்கொண்டாள்.

“என்னை சந்திப்பதை விரும்பினீர்களா? அஞ்சி விலக எண்ணினீர்களா?” என்றாள் துச்சளை. அத்தனை துணிவாக

அவளால் எப்படி கேட்கமுடிகிறது என தாரை வியந்தாள். பூரிசிரவஸ் தன்னை திரட்டிக்கொண்டு “சந்திக்க விழைந்தேன். சந்திக்கக்கூடும் என எண்ணியதுமே என் நெஞ்சு அதிரத் தொடங்கியது. ஆனால் அஞ்சவும் செய்தேன். ஆகவே வேறு வழி உள்ளதா என பார்த்தேன். இல்லை என்று தெரிந்தது. அஞ்சியபடின் நடந்துவந்தேன்” என்றான். துச்சளை “எவர்மேல் அச்சம்?” என்றாள். “என் மேல்தான்… நான் ஆற்றல்கொண்டவன் அல்ல” என்றான் பூரிசிரவஸ்.

துச்சளை புன்னகைத்தபோது அவள் முகம் பேரழகுடன் இருப்பதாக தாரை எண்ணினாள். கனவுகண்டு சிரிக்கும் பால்மகவின் முகம் அது. “எவர்தான் ஆற்றல் கொண்டவர்கள்?” என்றபின் “உங்கள் அரசி எப்படி இருக்கிறார்கள்?” என்றாள். பூரிசிரவஸ் “அவள் எளிய மலைமகள்” என்றான். “உங்கள் இயல்புக்கு ஏற்றவள்” என்றாள் துச்சளை. “ஆம், என் இயல்புகளில் ஒன்றுக்கு மட்டும்…” என்ற பூரிசிரவஸ் புன்னகைத்து “ஒவ்வொரு நீர்த்துளியின் அளவையும் துலாவிலிட்டு முடிவெடுத்த பின்னரே தெய்வங்கள் மண்ணுக்கு அனுப்புகின்றன என்பார்கள்” என்றான். துச்சளை சிரித்து “மெய்தான்…” என்றாள்.

பூரிசிரவஸ் “நன்று அரசி, இடைநாழியில் நின்று பேசுவது முறையல்ல. பிறிதொருமுறை அரசமரபின்படி நான் தங்களை சந்திக்கிறேன்” என்றான். “நான் தங்களை சந்திக்க விழைந்தேன்” என்றாள் துச்சளை. “என்னையா? எதற்கு?” என்றான் பூரிசிரவஸ். “நான் கேட்கவிழைந்த ஒரு வினா நெஞ்சிலேயே நின்றிருக்கிறது, நெடுநாட்களாக.” அவன் தாரையை பார்க்க அவள் விலகிச்செல்ல மீண்டும் அசைந்தாள். துச்சளை அவள் கையைப்பற்றி தடுத்தாள். “சொல்க!” என்றான் பூரிசிரவஸ்.

“நீங்கள் என்பொருட்டு அவர்களை கைவிட்டீர்களா?” என்றாள். “என்ன?” என்றான் அதிர்ச்சியுடன். “நான் சொல்வது உங்களுக்கு புரியும்.”

அவன் நோக்கை விலக்கி சாளரத்தை பார்த்தான். அவன் இமைகள் ஈரமாக இருக்கின்றனவா என தாரை ஐயம்கொண்டாள். அவ்வாறு நோக்கலாகாது என விலகிக்கொண்டாள். “சொல்க!” என்றாள் துச்சளை. அவன் நடுங்கிக்கொண்டிருப்பது தெரிந்தது. அவன் இடக்கால் ஆடியது. “சொல்க!” என்று துச்சளை மீண்டும் கேட்டாள். அவன் “ஆம்” என்றான். திடுக்கிட்டவள்போல தாரை துச்சளையின் முகத்தை பார்த்தாள். அதில் நிறைவு தெரியும் புன்னகை எழுவதைக் கண்டு திகைப்புடன் அவனை பார்த்தாள்.

“அவர்களை நான் எவ்வகையிலும் கைவிடவில்லை. என்னைவிட்டு அவர்கள் நீங்கியது முற்றிலும் என்னை மீறிய நிகழ்வுகளால். நான் எளிய மலைமகன். அரசர்களின் கணிப்புகளை என்னால் முன்னரே உய்த்துணர முடியவில்லை. ஆனால் அத்தருணங்களுக்குப் பின் நான் அவர்களை உடனுக்குடன் உள்ளத்தால் கைவிட்டேன், அது உங்கள்பொருட்டே.” துச்சளை பெருமூச்சுடன் “நான் எண்ணினேன்” என்றாள். “ஆனால் நான் மெய்யாகவே சொல்வதை நீங்கள் நம்பியாகவேண்டும். அது உங்கள் அரசின் தகுதிக்காக அல்ல. எந்த அரசியல் கணிப்பும் அப்போது என்னுள் ஓங்கியிருக்கவில்லை. அரசியல் கணிப்புகள் அற்றவன் என நான் என்னை சொல்லமாட்டேன். ஆனால் அன்று அவை இல்லை. அன்று ஓங்கியிருந்தது…” என்றான் பூரிசிரவஸ்.

அவள் அவனை எதிர்பார்ப்புடன் நோக்கிக்கொண்டு நின்றிருந்தாள். அந்த விழிகளை நோக்கியபோது ஆழ்ந்த பொறாமைப்பொங்குதலை தாரை தன்னுள் உணர்ந்தாள். மறுகணமே துயரம் எழ விழிதழைத்தாள். “ம்?” என்றாள் துச்சளை. “நான் முதன்மையாகக் கருதியது அஸ்தினபுரியின் அரசரை. அவர் தன் பெருங்கரங்களால் என் தோள்களைத் தழுவிய கணம் மீண்டும் பிறந்தெழுந்தவன் நான். அவருக்காக களத்தில் மடியவிருப்பவன். அன்று அவர் தங்கையை நான் கைகொள்ளக்கூடும் என்ற எண்ணமே என்னை கிளரச் செய்தது. விண்ணகநிலைக்கு நிகர் அது. அதுவே மெய்.”

“அதன்பின் அஸ்தினபுரியின் பேரரசர். அவர் என்னை தழுவியிருக்கிறார். விண்முட்ட எழுந்து நிற்கும் இமயக் கொடுமுடிகளில் ஒன்று என்னை கைநீட்டி அணைத்துக்கொள்வது போன்றது அது. அவர்களின் குலத்தில் ஒருவனாதல் என்பதே என்னை எக்களிக்கச் செய்தது.” தாரை துச்சளையின் முகத்தை நோக்கினாள். அவள் விழிகள் நனைந்த பீலிகளுடன் உணர்வெழுச்சியால் சுருங்கியிருந்தன. வாயை உள்நோக்கி மடித்து தன்னை அடக்கிக் கொண்டிருந்தாள். “அதன் பின்னரே நீங்கள். உங்கள் கண்களைப்போல அன்றும் இன்றும் என்னை கவர்பவை பிறிதில்லை. அனைத்தையும்விட என் ஆணவம். ஆம், இதற்கெல்லாம் நான் தகுதியுடையவன் என்னும் பெருமிதம். என் தகுதியை நானே அறிந்த தருணம் அது” என்றான் பூரிசிரவஸ்.

“அது அல்லவென்றானபோது என் உள்ளம் சோர்ந்தது. என்னை தூக்கி வீசிவிட்டது ஊழ் என உணர்ந்தேன். ஆனால் இங்கிருந்து பால்ஹிகநாட்டுக்குச் செல்லும்போது ஒரு தருணத்தில் உங்கள்

விழிகளை என் உளவிழிகளால் மிக அண்மையிலெனக் கண்டேன். அங்கு நான் கண்டது பேரன்பை. அது எது என நான் பகுத்தாயவில்லை. நான் புறக்கணிக்கப்படவில்லை என அப்போது உறுதிகொண்டேன். என் ஆணவம் கொண்டிருந்த வலி அழிந்தது. நெஞ்சு எளிதாக தென்றலில் என பால்ஹிகநாட்டுக்குச் சென்றேன். எதை இழந்தாலும் நான் முதன்மையான பலவற்றையும் பெற்றிருக்கிறேன், தெய்வங்கள் எனக்கு கனிந்தருளியவை அவை என உணர்ந்தேன். அவ்வுணர்வு இத்தருணத்திலும் நீடிக்கிறது.”

துச்சளை “நன்று, பால்ஹிகரே” என்றபின் திரும்பி நோக்காமல் நடந்தாள். அந்த விரைவு தாரையை வியப்பூட்டியது. அவள் உடன் தொடர்ந்து நடந்தாள். பின்னால் பூரிசிரவஸின் நோக்கை உணரமுடிந்தது. பின்னர் திரும்பி நோக்கியபோது அவன் நெடுந்தொலைவிலென சென்றுகொண்டிருந்தான். துச்சளை திரும்பி நோக்கவில்லை. அவள் உடல் முழுவிசையுடன் உள்ளத்தால் உந்தப்பட்டதுபோல சென்றது. திசைவெளியில் விழுந்துகொண்டிருப்பதுபோல.

துச்சளை நின்று மூச்சிரைத்தாள். மேலாடையால் முகத்தை துடைத்துக்கொண்டாள். மீண்டும் பெருமூச்சுகள்விட்ட பின் “செல்வோம், பிந்திவிட்டது” என்றாள். “நான் உடன் நின்றிருக்கலாகாது, அரசி” என்றாள் தாரை. “நீ நின்றிருக்கவேண்டும்” என்றாள் துச்சளை. “தனியாகப் பேச நான் அஞ்சினேன்.” தாரை “ஏன்?” என்றாள். “நீ நின்றிருக்கையில்தான் இந்த இடைநாழி ஒரு பொது இடம்” என்றாள் துச்சளை. “அது எவ்வாறு?” என்றாள் தாரை. துச்சளை புன்னகைத்தாள். “அதனாலென்ன?” என்றாள் தாரை.

“நீ காதலித்திருக்கிறாயா?” என்றாள் துச்சளை. “இல்லை” என்றாள் தாரை. “அப்படியென்றால் நீ நான் சொல்வதை புரிந்துகொள்ளவியலாது” என்றாள் துச்சளை. “ஆம்” என்ற தாரை பெருமூச்சுவிட்டாள். “ஒருகணம் உங்கள்மேல் பெரும்கசப்பு ஒன்று எழுந்தது, அரசி.” “ஏன்?” என்றாள் துச்சளை. “நீங்கள் இப்புவியின் இனிமை அனைத்தையும் துளி எஞ்சாமல் அடைந்துவிட்டீர்கள்.” துச்சளை “ஆம்” என்று புன்னகை புரிந்தாள். தாரை “அது பெருந்துயரும்கூட அல்லவா?” என்றாள். “நம்மை வளர்க்கும் இனிமைகள் சில உள்ளன. ஆழமான இனிமைகள் நம்மை அழிப்பவை. முற்றழிப்பதே இனிமைகளில் தலையாயது” என்றாள் துச்சளை. தாரை பெருமூச்சுவிட்டு பின் புன்னகைத்தாள்.

“நீ என்ன எண்ணுகிறாய்?” என்று துச்சளை கேட்டாள். “என் உடல் அத்தனை அழகற்றா இருந்தது?” தாரை “உடலின் அழகின்மையினூடாக நீங்கள் விடுதலையை அடைந்துவிட்டீர்கள் அல்லவா?” என்றாள். “கேள், நீ கேலிபேசுவதற்கான தருணம் இது. ஆனால் நெஞ்சில் அன்புள்ள பெண்களுக்கு அது இயல்வதே அல்ல என்று இப்போது உணர்ந்தேன்” என்றாள் துச்சளை. தாரை “நீங்கள் எப்படி இருந்தாலென்ன அக்கை, உங்கள் முகத்திலிருந்து அவர் விழி விலகவில்லை. அவர் முகத்திலிருந்தது கந்தர்வர்களுக்குரிய பேருவகை” என்றாள்.

“மெய்யாகவா?” என்றாள் துச்சளை. “மெய்யாகவா சொல்கிறாய்? என்னை மகிழ்விக்க நினைக்கிறாயா?” தாரை “இல்லை அக்கையே, மெய்யாகவேதான்” என்றாள். “அதெல்லாம் உடனே தோன்றுவது, ஆண்களின் விழிகளுக்குச் சிக்குவது உடலே. இன்னொருமுறை என்னை நோக்குகையில் பிறிதொன்றே

தோன்றும்” என்றாள் துச்சளை. “அந்த அகவையை அவர் கடந்துவிட்டார்” என்றாள் தாரை. “ஆம்” என்ற துச்சளை “ஆனால் அவரிடம் அகவை தெரியவில்லை. அன்று கண்ட அதே இளமையுடன் இருக்கிறார்” என்றாள். தாரை புன்னகைத்தாள். “அது ஏன் அவர் மட்டும் அப்படியே நீடிக்கவேண்டும்? தெய்வங்கள் காட்டும் ஓரவஞ்சனை” என்று துச்சளை சொன்னாள்.

“அது உங்களுக்கு துயரளிக்கிறதா?” என்றாள் தாரை. “உண்மையை சொல்லப்போனால் ஆம், நான் விரைந்து முதுமைகொண்டுவிட்டேன்” என்று துச்சளை சொன்னாள். “அது எப்போதுமே அப்படித்தான் அரசி, பெண்களுக்கே முதுமை விரைந்து அணுகுகிறது.” துச்சளை “நாம் கொடுத்துக்கொண்டே இருக்கிறோம், அதனாலாக இருக்குமோ?” என்றாள். “இருக்கலாம்” என்று தாரை சிரித்தாள். “ஆனால் இதுவும் நன்றே. இதை எண்ணிக்கொள்க, மீண்டும் சந்திக்கையில் இயல்பாக நீங்கள் ஓர் இனிய பொதுநடிப்புக்கு செல்வீர்கள். அவர் மைந்தராகவும் நீங்கள் அன்னைபோலவும் ஆவீர்கள்” என்றாள் தாரை.

துச்சளை “நான் மீண்டும் அவரை சந்திக்கமாட்டேன்” என்றாள். “ஏன்?” என்றாள் தாரை. “அது பிழை” என்றாள் துச்சளை. “அரசி, அதிலென்ன பிழை?” என்றாள் தாரை. “அதிலென்ன பிழை என நமக்குத் தெரியுமே, அதுதான்” என்று துச்சளை சொன்னாள். அவர்கள் மொழியழிந்து நடந்தனர். காந்தாரியின் மாளிகை முகப்பை அடைந்தபோது தாரை “மீண்டும் சந்திக்கவே மாட்டீர்களா?” என்றாள். “அவ்வாறு எண்ணுகிறேன். தெய்வங்கள் விழைவதே நிகழும்” என்றாள் துச்சளை.

# குருதிச்சாரல் - 39

**பகுதி ஆறு : பொற்பன்றி – 4**

காந்தாரியின் அறைமுன்னால் வெளியேவந்து துச்சளையை கைபற்றி அழைத்துச்சென்ற சுதேஷ்ணை "என்னடி களைத்துப்போயிருக்கிறாய்?" என்றாள். துச்சளை "நானா? நன்றாகத்தானே இருக்கிறேன்" என்றாள். "கண்கள் கலங்கியவை போலிருக்கின்றன" என்றாள் சுதேஷ்ணை. "இங்கே நிகழ்வனவற்றை கேட்டால் சிரிப்பா வரும்? வாடி" என்று தேஸ்ரவை அவள் இன்னொரு கையை பற்றினாள். தசார்ணை தாரையிடம் "எங்கிருந்து வருகிறீர்கள்?" என்றாள். "பேரரசரை பார்க்கச் சென்றோம்" என்றாள் தாரை. எப்படி இருக்கிறார் என அவள் கேட்பாளென தாரை எண்ணினாள். ஆனால் "வா" என்று மட்டும் தசார்ணை சொன்னாள்.

காந்தாரியின் அறைக்குள் சத்யசேனையும் சத்யவிரதையும் இருந்தார்கள். சத்யசேனை "வாடி..." என்றாள். துச்சளை அருகே சென்று காந்தாரியின் கால்களை தொட்டாள். காந்தாரியின் கைகள் நீண்டுவந்து அவள் தலையை தொட்டன. பின்னர் மெல்ல சரிந்து மெத்தைமேல் அமைந்தன. துச்சளை "தந்தையை பார்க்கச் சென்றேன், அன்னையே" என்றாள். "என்ன சொல்கிறார்?" என்றாள் காந்தாரி. "அழுதார்" என்றாள் துச்சளை. "ஆம், எப்போதும் அழுகிறார். எவரை நோக்கினாலும் மைந்தனிடம் சென்று பேசும்படி கோருகிறார்" என்றாள் காந்தாரி. துச்சளை "என்னிடமும் சொன்னார்" என்றாள்.

“நாம் என்ன செய்ய முடியும்?” என்று சொல்லி காந்தாரி பெருமூச்சுவிட்டாள். துச்சளை சத்யசேனையை நோக்க அவள் மெல்ல அப்பேச்சை ஒழியும்படி வாயசைத்தாள். “ஊழ் என்பார்கள். ஆனால் கண்ணெதிரே தெரிவது ஒவ்வொருவரும் தங்களால் முடிந்தவரை அதை நோக்கி ஓடிக்கொண்டிருப்பதுதான், அங்குதான் மீட்பும் இறைவனும் இருப்பதைப்போல” என்ற காந்தாரி கையசைத்து “அதை விடுக… சைந்தவர் எங்கிருக்கிறார்?” என்றாள். துச்சளை அதற்கு மறுமொழி சொல்லவில்லை. சில கணங்கள் பொறுத்துவிட்டு காந்தாரி அதை அப்படியே கடந்து “ஓய்வெடுத்தாயா? அப்படியே வந்துவிட்டவள் போலிருக்கிறாய்” என்றாள்.

துச்சளை “ஓய்வெடுக்கவேண்டும்… பொழுதிருக்கிறதே” என்றாள். காந்தாரி “நாளை காலை பிரகதியையும் பார்த்துவிடு” என்றாள். துச்சளை வியப்புடன் சத்யசேனையை பார்க்க அவள் புன்னகை செய்தாள். காந்தாரி “அவள்தான் இதற்காக முயற்சி செய்தாள். நான் சென்று அதன்பொருட்டு அவளிடம் பேசினேன்” என்றாள். துச்சளை பெருமூச்சுடன் “ஆம், அனைவரும் முயற்சி செய்யவேண்டியதுதானே” என்றாள். அத்துடன் அனைத்துச் சொற்களும் முடிந்துவிட அவர்கள் வெறுமனே அமர்ந்திருந்தார்கள்.

கலைந்தவள்போல துச்சளை “நான் கிளம்புகிறேன், அன்னையே. மூத்தவரை நாளை துயிலுக்குப் பின் நல்லுள்ளத்துடன் பார்க்கலாமென எண்ணுகிறேன்” என்றாள். “ஆம், களைத்திருப்பாய்” என்றாள் காந்தாரி. துச்சளை மீண்டும் அன்னையின் காலடிகளை வணங்கிவிட்டு எழுந்துகொண்டாள். தாரை ஏமாற்றமாக உணர்ந்தாள், ஆனால் அவ்வாறுதான் அது நிகழுமென்பதையும் முன்னரே அவள் உணர்ந்திருந்தாள்.

துச்சளை அன்னையரை தனித்தனியாக வணங்கி விடைபெற்றுக்கொண்டாள்.

அறையை விட்டு அவர்கள் வெளியே வந்தபோதுதான் அப்பால் சம்ஹிதையும் சுஸ்ரவையும் நிகுதியும் சுபையும் ஓடிவருவதை கண்டார்கள். சுஸ்ரவை அருகே வந்து அவள் கைகளை பற்றிக்கொண்டு "அரசப்பணிக்காக மூத்தவர் அழைத்திருந்தாரடி. இப்போதுதான் வரமுடிந்தது" என்றாள். நிகுதி "என்னடி உடனே கிளம்பிவிட்டாய்?" என்றாள். "நான் களைத்திருக்கிறேன். சற்று ஓய்வெடுக்கலாம் என்று…" என்றாள் துச்சளை. "ஆம், களைத்திருப்பாய்… நீண்ட பயணம். செல்க!" என்றாள் சம்ஹிதை. அவர்களிடம் ஓரிரு சொற்கள் பேசிவிட்டு துச்சளை நடந்தாள்.

தாரை உடன் சென்றாள். "மெய்யாகவே களைப்பாக இருக்கிறதடி" என்றாள் துச்சளை. "ஆம், அரசி. ஒருநாளில் ஏராளமான சந்திப்புகள், பற்பல உணர்வுநிலைகள்" என்றாள் தாரை. "அதல்ல…" என்று சற்று தயங்கிய துச்சளை "நான் அங்கிருக்கையில் எல்லாம் அன்னையைப்பற்றியே எண்ணிக்கொண்டிருப்பேன். இங்கே இருக்கையில் எப்படி மகிழ்ந்திருப்பேன் என உளம்விரிப்பேன். ஆனால் ஒவ்வொருமுறையும் இங்கே நுழையும் கணம் வரை உளப்பெருக்கையும் சந்திப்புகளின்போது உறைதலையும்தான் உணர்கிறேன்" என்றாள். தாரை "எனக்கும் அவ்வாறுதான். மச்சநாட்டில் இருப்பதைப்போல கனவு வராத நாளே இல்லை. ஆனால் அங்குசென்றால் மறுநாளே கிளம்பிவிடத் தோன்றும்" என்றாள்.

"நமக்கு பிறந்தவீட்டில் இடமில்லை, நம்மை வெளித்தள்ளி அவர்கள் வேறொரு உலகை உருவாக்கிக் கொண்டிருக்கிறார்கள். அதற்குள் நமக்கு நுழைவொப்புதல்

இல்லை. நாம் நுழைந்தால் அவர்கள் திகைக்கிறார்கள். அயலவர் என முறைமைச்சொல் உரைக்கிறார்கள். விழிகள் நீ ஏன் இங்கு வந்தாய் என கேட்டுக்கொண்டே இருக்கின்றன” என்றாள் துச்சளை. “நாம் திரும்ப நினைப்பது உண்மையில் நம் இளமைக்கு. அதை இங்கே விட்டுவந்துள்ளோம் என எண்ணிக்கொள்கிறோம். அது இங்கில்லை, சென்றவை அனைத்தும் கரைந்துமறையும் தொடுவானில் உள்ளது. எதுவும் மீளமுடியாத முடிவிலி அது” என்றபின் துச்சளை பெருமூச்சுவிட்டு “சற்று துயில்கொள்ளவேண்டும்… நீ சென்று ஓய்வெடு” என்றாள்.

துச்சளையின் அறைவாயிலில் சாரிகை காத்து நின்றிருந்தாள். “மஞ்சம் ஒருக்கிவிட்டேன், அரசி. இரவுணவும் காத்துள்ளது” என்றாள். “வேண்டியதில்லை… நான் நேராகவே துயில்கொள்ளவிருக்கிறேன்” என்றாள் துச்சளை. “அக்கையே, நீங்கள் இன்றிரவு எதை கனவுகாண்பீர்கள் என எனக்குத் தெரியும்…” என்றாள் தாரை. துச்சளை “நீ என்ன எண்ணுகிறாய் என புரிகிறது. ஆனால் மெய்யாகவே எனக்கு அது உள்ளத்தின் ஆழத்திற்குள் சென்று மறைந்துவிட்டது. அது ஓர் அலைக்கழிப்பாக இருக்கும்வரைதான் இருப்புகொண்டிருந்தது. விடைபெற்றதுமே ஏதுமில்லை என்றாகிவிட்டது” என்றாள்.

“ஏதுமில்லை என்றா?” என்றாள் தாரை. “அவ்வாறல்ல, அது ஒரு நிறைவு. ஒரு நல்ல நினைவு. அதற்கப்பால் இன்று ஒன்றுமில்லை” என்றாள் துச்சளை. “என்ன நிறைவு? நீங்கள் எவருக்கும் பிழையிழைக்கவில்லை என்பதா?” என்றாள் தாரை. “அல்ல, அப்படி நான் எண்ணியிருந்தேன், அதுவல்ல. என்மேல் இன்னமும் அது அங்கே உள்ளதா என்ற நிலைக்கழிவுதான். அது நிறைவுற்றுவிட்டது” என்ற துச்சளை புன்னகையுடன்

அவள் தோளில் கைவைத்து “அது அமைந்ததுமே இது மேலெழுந்துவிட்டதடி... இன்றிரவு நான் தந்தையை எண்ணி துயில்நீப்பேன் என நினைக்கிறேன்” என்றாள்.

“அன்னை ஏன் தந்தையைக் குறித்து அத்தனை விலகல் கொண்டிருக்கிறார்?” என்றாள் தாரை. “அவர்கள் எப்போதுமே அப்படித்தான். அவர்கள் அறிந்த அந்த முதல் திருதராஷ்டிரரை தன் விழிகளுக்குள் நிறுத்தி மேலே இறுக்கமாக கட்டுபோட்டுக் கொண்டார்கள். அதன்பின் அவர்கள் தந்தையை நோக்கியதே இல்லை. அந்த பாவையை கணவனென எண்ணி அதில் வாழ்கிறார்கள். அவர்களுக்கு தந்தையை மெய்யாகவே தெரியாது” என்றாள் துச்சளை. “ஆம், நானும் அவ்வாறே எண்ணினேன். அவர்கள் பதின்மரும் ஒரு குழுவாக இருப்பதனாலேயே பிறரில்லா உலகொன்று அமைந்துவிட்டது” என்றபின் “வருகிறேன், அக்கையே” என்று சொல்லி தாள்தொட்டுவிட்டுச் சென்றாள் தாரை.

துச்சளை அறைக்குள் நுழைந்து மஞ்சத்தில் அமர்ந்தாள். சாரிகை அவளுடைய கடகங்களையும் சிலம்புகளையும் குழைகளையும் பதக்கமாலையையும் சரப்பொளி மாலையையும் கழற்றி ஆமையோட்டுச் செப்பில் இட்டு அப்பால் வைத்தாள். ஒரு மரச்சீப்பைக்கொண்டு அவள் உள்ளங்கால்களையும் முழங்கால்களையும் அழுத்தமாக வாரிவிட்டாள். கண்களை மூடி அவள் அந்த மெல்லிய வலியின் இனிமையை அறிந்தாள். உடலெங்கும் முடிச்சிட்டுக்கொண்ட நரம்புகள் மெல்ல பிரிந்து தளர்வதை உணர்ந்தாள். மனம் எண்ணைப்பரப்பில் என வழுக்கி வழுக்கி எதிலோ ஏற முயன்றது.

செல்லும்போது தான் சொன்னது அல்ல மெய், எஞ்சிய ஏதோ ஒன்றுதான் என தாரை உணர்வாள் என்று தோன்றியது. தான் சொன்னதுமல்ல என இன்னொரு எண்ணம் அவளுக்குள் வந்தது. உள்ளத்தை நுணுகி ஆராய்வதெல்லாம் எவையெவை பொய் என்றும் பொருத்தமில்லாதவை என்றும் வகுத்துக்கொள்ளவே. உள்ளத்தை மொழிகொண்டு அள்ளவே இயலாது. எது அப்பாலிருக்கிறதோ அதுவே அனைத்தையும் ஆளும் உண்மை.

அதைத்தான் பிரம்மத்தைக் குறித்தும் சொல்கிறார்கள் என்று எண்ணியதும் அவளுக்கு புன்னகை வந்தது. “அரசி?” என்று சாரிகை கேட்டாள். “ஒன்றுமில்லையடி… ஏதோ எண்ணம்” என்றபின் அவள் தலையைத் தொட்டு “நீ படுத்துக்கொள்… உணவருந்தினாயா?” என்றாள். “இல்லை” என்றாள் சாரிகை. “சென்று உணவருந்தி மீள்க… நான் துயில்கிறேன்” என்றபின் அவள் மெல்ல கையூன்றி படுத்தாள். எப்போதுமே மல்லாந்து படுக்கையில் உணரும் எடையின்மை. முதுகெலும்பு சுமை ஒழிந்து விடுதலை கொள்கிறது. அவ்வுணர்வு உடலெங்கும் பரவும். உள்ளமும் ஓய்வுகொள்ளும்.

கைகால்கள் தளரத் தொடங்கின. எண்ணங்கள் எங்கெங்கோ சிக்கி நின்றன, முள்வெளியில் பரவிய பஞ்சுத்துகள்கள். மெல்லிய தென்றல் ஒன்றை அவள் உணர்ந்தாள். புன்னகையுடன் தன் முகம் விரிந்திருப்பதை உள்ளிருந்து அறிந்தாள். மூச்சுஅடைத்து உடல் உலுக்கிக்கொண்டபோது சற்று புரண்டு ஒருக்களித்துப் படுத்தாள். துயிலில் அவள் புன்னகைப்பதை சாரிகை நோக்கி நின்றாள். பின்னர் அவள் ஆழ்துயிலில் மூழ்கியதை ஓங்கிஎழுந்த குறட்டை காட்டியது.

பின்னிரவில் தன்னை சாரிகை தட்டி எழுப்பியதைக்கேட்டு துச்சளை எழுந்து அமர்ந்தாள். சிந்துநாட்டில் இருப்பதாக எண்ணிக்கொண்டு “என்ன ஆயிற்று? என்ன?” என்றாள். “அரசி, இளைய அரசி தாரை வந்துள்ளார்” என்றாள். “இப்போது பொழுதென்ன?” என்றாள் துச்சளை. “பின்னிரவு அரசி… முதற்சாமம்.” துச்சளை “வரச்சொல்” என்றபடி எழுந்து நின்று கூந்தலைச் சுழற்றிக் கட்டினாள். அவளுடைய அணிகளை சாரிகை எடுத்து அளிக்க ஒவ்வொன்றாக அணிந்துகொண்டிருக்கையில் தாரை உள்ளே வந்து வணங்கினாள்.

“அரசி, அரசர் இன்று காலைதான் கலிதேவனுக்கான தலைக்கோள் சடங்கை செய்கிறார்.” துச்சளை “யார் சொன்னது?” என்றாள். “சற்றுமுன் என் தலைவர் வந்தார். பதற்றம் கொண்டிருந்தார். அவரை வடக்குக்கோட்டைக் காவலுக்கு அனுப்பியிருக்கிறார்கள். அங்கே புராணகங்கையில் இருந்து சில பூசெய்கைப் பொருட்களை ஓர் அந்தணர் குழு கொண்டுசென்றது. அவர்களனைவரும் கருநிறப் பட்டை கச்சையாகக் கட்டியிருப்பதைக் கண்டு ஐயுற்று அங்கே அவர்களுக்கு உதவிசெய்த முதியவரிடம் கேட்டிருக்கிறார். புலர்காலையில் நிகழும் ஓர் அரண்மனைப் பூசெய்கைக்காக கொண்டுசெல்வதாக சொல்லியிருக்கிறார்கள். பன்னிரு கருநாகங்கள் அவை…”

துச்சளை “அவை எதற்கு?” என்றாள். “அவை கலிதேவனுக்குரியவை. பூசெய்கைக்கெனவே கொண்டுசெல்லப்படுகின்றன. ஐயமே இல்லை” என்று தாரை சொன்னாள். “நான் உடனே நூல்களை ஆராய்ந்தேன்.

கலிதேவனுக்குரிய கராளகம் என்னும் பூசெய்கைக்குரிய பொருட்கள் அவை… கலிங்கப்பூசகர் எங்கே இருக்கிறார்கள் என்று என் கொழுநர் உடனே ஆராயச் சொல்லியிருக்கிறார். அவர்கள் அந்தியிலேயே மேற்குக்காட்டுக்கு சென்றுவிட்டதாக சொன்னார்களாம். உறுதிசெய்துகொண்டு இங்கே ஓடிவந்தார்.”

“என்னடி செய்வது?” என்று துச்சளை கேட்டாள். “நாம் இறுதி முயற்சி ஒன்றை செய்யலாம், அரசி. பேரரசர் கோரிய பின்னர் நாம் அதை செய்யவில்லையே என்னும் உளக்குறை நமக்கு உருவாகாது. அதன்பின்னர் இறைவழி” என்றாள் தாரை. “ஆனால்…” என துச்சளை தயங்க “அங்கே பூசெய்கை நிகழுமென்றால் செல்லும் வழி முழுமையாகவே காக்கப்பட்டிருக்கும். இப்போதே நாம் கிளம்பினால் அரண்மனையிலிருந்து மேற்குக்காட்டுக்குள் செல்லும் சுரங்கப்பாதை வழியாக அங்கே செல்லலாம். சற்று சுற்றிச்செல்வதாக இருந்தாலும் அங்கே சென்றடைந்துவிட முடியும். என் தலைவருக்கு அப்பாதை தெரியும்… அது கோட்டைச்சுவருக்கு அடியிலேயே செல்கிறது” என்றாள் தாரை.

உடலில் குடியேறிய பரபரப்புடன் துச்சளை “செல்வோமடி” என்று கிளம்பினாள். உடனே திரும்பி “என் முத்திரைக்கணையாழியை எடு” என்றாள். சாரிகை “நானும் வரமுடியாதல்லவா, அரசி?” என்றாள். “அரசகுடியினரன்றி பிறர் அந்தப் பாதையை அறியலாகாது” என்று தாரை சொன்னாள். “அவ்வாறென்றால் உடல்கொதிப்பு ஆற்றும் சூர்ணங்களை எடுத்துக்கொள்ளுங்கள், அரசி. நெடுந்தொலைவு நடக்கவேண்டியிருக்கும்” என்று சாரிகை சொன்னாள். “விரைந்து எடு… உடனே” என்றாள் துச்சளை.

சாரிகை உள்ளே ஓட “நம்மால் என்னடி செய்யமுடியும்?” என்றாள் துச்சளை. “நாம் காலில் விழுவோம். முடிந்தால் அந்தப் பூசெய்கையை மங்கலக்குறை செய்து நிறுத்துவோம். இன்று நான் செல்லும் எந்தப் பூசெய்கையும் அவ்வாறாகும். மாதக்குருதிநாள் இன்று” என்றாள் தாரை. துச்சளை புரிந்துகொள்ளாமல் விழித்து நோக்கினாள். “செல்வோம் அரசி, நமக்கு பொழுதில்லை” என்று தாரை கிளம்பினாள். “ஆம்” என்று துச்சளை உடன் கிளம்ப கையில் மருத்துவத்தூள் கொண்ட தந்தச்சிமிழுடன் சாரிகை பின்னால் ஓடிவந்து “பெற்றுக்கொள்க, அரசி” என்றாள்.

அதை வாங்கி இடையில் செருகிக்கொண்டு துச்சளை உடலை உந்தி உந்தி நடந்தாள். “நாம் அகத்தறைக்குச் செல்லவேண்டும். கருவூலம் செல்லும் பாதையில் நம்மிடம் நிற்கச் சொன்னார். அங்கிருந்து மேலும் கீழிறங்கிச்சென்று அடித்தளத்து அறையிலிருந்தே சுரங்கத்திற்குள் செல்லவேண்டுமென எண்ணுகிறேன்” என்றாள் தாரை. “எப்படி எண்ணினாய் அதை?” என்றாள் துச்சளை. “நான் முன்னரே அதை ஒருவாறாக கணித்திருந்தேன். ஏனென்றால் இங்கு வந்தநாள் முதல் இந்த அரண்மனையை கலிங்கச் சிற்பநூல்களைக் கொண்டு புரிந்துகொள்ள முயன்றுகொண்டிருந்தேன்.” துச்சளை புன்னகைத்து “உனக்கு எதிலெல்லாம் ஆர்வம்?” என்றாள். “அனைத்திலும்... ஏனென்றால் நான் இங்கே ஆற்ற பணி என ஏதுமில்லை” என்றாள் தாரை.

அவர்கள் நாலைந்து இடங்களில் நின்று மூச்சுவாங்கித்தான் கருவூலத்திற்கு செல்லவேண்டியிருந்தது. இரவுக் காவலர்களின் விழிகளில் வியப்பு தெரிந்தது. “நாம் செல்வது சற்றுபொழுதுக்குள் விதுரருக்குத் தெரிந்துவிடும்.

கிளம்பும்போதே கணிகர் அறிந்திருப்பார்” என்றாள் தாரை. “நம்மை அவர்கள் செல்ல ஒப்புவார்களா?” என்று துச்சளை கேட்டாள். “அவர்கள் உய்த்தறியாதது ஒன்றே, என்னால் அரண்மனையின் சுரங்கப்பாதையை அறிந்துகொள்ளமுடியும் என்று… கணிகருக்கும் விதுரருக்கும்கூட அந்தப் பாதை தெரிந்திருக்க வாய்ப்பில்லை…” துச்சளை “மெய்யாகவா, நீயே கண்டுபிடித்தாயா? உன் கொழுநருக்குத் தெரியும் என்றாய்?” என்றாள். “அவருக்கு நான் சொன்னேன்” என்றாள் தாரை. துச்சளை புன்னகைத்து “நீ ஒரு அரசுமதியாளராக மலரவிருக்கிறாய்” என்று சொல்லி அவள் தோளை பற்றினாள்.

நெய்ப்பந்தங்கள் எரிந்த சிறிய இடைநாழியினூடாக அவர்கள் சென்றனர். வழி மறித்த வீரர்கள் துச்சளையைக் கண்டதும் தலைவணங்கினர். கருவூலத்திற்கு அருகே விகர்ணன் நின்றிருந்தான். அவர்களைக் கண்டதும் அருகே வந்து துச்சளையிடம் தலைவணங்கி “நீ சொன்ன குறிகளைக்கொண்டு சுரங்கப்பாதையின் தொடக்கத்தை கண்டறிந்துவிட்டேன்… அது ஒரு கற்சுவர். அதனருகே மூன்றுமுகச் சிம்மமும் அதன் காலடியில் புறாக்களும் இருந்தன” என்றான். “ஆம், அதுவேதான்” என்றாள் தாரை. “வருக, இங்கிருந்து இரண்டு நிலை கீழிறங்கவேண்டும்… மிகக் குறுகலான படிகள்” என்றான்.

“பிடித்துக்கொள்ளடி” என்று துச்சளை சொன்னாள். தாரை துச்சளையை தாங்கிக்கொண்டு ஒருவர் மட்டுமே செல்லுமளவுக்கு சிறிய கற்படிகளில் இறங்கினாள். “ஈரமாக உள்ளதா?” என்றாள் துச்சளை. “இல்லை அரசி, ஆழம் என்பதனால் ஊற்றுக்குளுமை கொண்டுள்ளது” என்று விகர்ணன் சொன்னான். “சுரங்கம் நான் செல்லுமளவுக்கு பெரிதாக இருக்குமல்லவா?” என்று துச்சளை கேட்டாள். “மாமன்னர்

ஹஸ்தி சென்றிருக்கிறார் என்றால் எவரும் செல்லலாம்” என்று தாரை சொன்னாள். “ஆம்” என்று துச்சளை புன்னகைத்தாள். “எங்களுக்கு இத்தனை எடையை அவர்தான் விட்டுச்சென்றிருக்கிறார்.”

அந்தச் சுவர் அருகே வந்ததும் சுற்றுமுற்றும் நோக்கிய விகர்ணன் “என்ன செய்யவேண்டும், தாரை?” என்றான். “பொறுங்கள்” என்று முன்னால் சென்ற தாரை அந்தப் புறாக்களை எண்ணி அதன் பின் விரல்விட்டுக் கணித்து ஓர் எண்ணை அடைந்து சிம்மங்களைப்பற்றி ஒன்பதுமுறை அழுத்தினாள். மெல்லிய ஓசையுடன் பித்தளை உருளைகள்மேல் அமைந்த கற்பாளம் விலகி சுரங்கப்பாதையை காட்டியது. “உள்ளே இருளாக உள்ளதே, ஒளி வேண்டாமா?” என்றாள் துச்சளை. “விளக்கு தேவை, அது அங்கே கெடுகாற்றுகள் உள்ளனவா என்று அறிவதற்கும்தான்… சிறிய சுடர்கொண்ட நெய்விளக்கு மட்டுமே உள்ளே புகைவிடாதிருக்கும்” என்றாள் தாரை. விகர்ணன் “நான் கொண்டுவந்துள்ளேன்” என தன் தோல்பையை திறந்து உள்ளிருந்து பீதர்நாட்டு சிற்றகலை எடுத்தான். அதன் நெய்த்திரியை சுடர்பொருத்தி கையிலேந்திக்கொண்டு முன்னால் இறங்கி உள்ளே சென்றான். “மிகச் சிறிய படிகள், அரசி” என்றான்.

படிகளினினூடாக இறங்கும்போது “அறியாத இருளுலகு ஒன்றுக்கு செல்வதுபோல் உணர்கிறேன்” என்றாள் துச்சளை. தாரை “இந்தப் பாதையின் பெயரே காளநாகம் என்பதுதான். நாகத்தின் வாய்க்குள் நுழைந்துள்ளோம்” என்று சொன்னாள். விகர்ணன் மேலும் சென்றபின் “இதனூடாகச் செல்லவியலாது அரசி… மிகக் குறுகிய பாதை. படுத்துத் தவழ்ந்தாலொழிய

எவரும் கடக்கமுடியாது” என்றான். தாரை அருகே சென்று குனிந்து நோக்கினாள். துச்சளை “ஆம், இது எனக்கான பாதை அல்ல” என்றாள். “தவழலாம், ஆனால் எத்தனை தொலைவு அப்படிச் செல்லமுடியும்?” என்று விகர்ணன் சொன்னான்.

“பொறுங்கள்” என்று தாரை சொல்லி “விளக்கை சுவர்களில் காட்டுக!” என்றாள். விகர்ணன் விளக்கொளியை சுவர்களில் பாய்ச்ச அவள் அங்கிருந்த சிறிய படங்களை நோக்கினாள். நாகங்கள், பலவகையான பறவைகள், ஆமைகள். விரல்தொட்டுச் சென்று ஒரு புள்ளியை அடைந்து அங்கிருந்த நீட்டுகல்லை மும்முறை அழுத்தினாள். அங்கே ஒரு கற்பாளம் கீழிறங்கியது. “அதற்குள் என்ன இருக்கிறது என்று நோக்குக!” என்றாள். விகர்ணன் உள்ளே நோக்கி “படைக்கலங்கள்... அல்ல, பித்தளை அடுமனைப்பொருட்கள்” என்றான். “அல்ல, அவை வெண்கலச் சகடங்கள்கொண்ட சிறிய மென்மர வண்டிகள். அதை வெளியே எடுங்கள்” என்றாள் தாரை.

அவன் அதற்குள் இருந்து வெண்கலத்தாலான பூண்களும் சகடங்களும் கொண்ட அமரும் மணை போன்ற நான்கு வண்டிகளை எடுத்து வெளியே போட்டான். “மூன்று போதும்” என்று தாரை சொல்ல ஒன்றை திரும்ப உள்ளே வைத்தான். தாரை மீண்டும் அந்தக் கல்லை அழுத்தி வாயிலை மூடினாள். “மிகச் சிறிய சகடங்கள். ஆனால் ஆற்றல் மிக்கவை” என்று விகர்ணன் சொன்னான். “சகடங்களும் ஆரங்களும் வெண்கலம் என்பதனால் மெழுகென உருளும்தன்மையும் கொண்டவை.” தாரை “இவற்றின்மேல் நெஞ்சையும் வயிற்றையும் அழுத்திக்கொண்டு கால்களை நீட்டி கைகளால் நீந்துவதுபோல உந்தி இப்பாதையில் செல்லவேண்டும். நன்று, அக்கை

நடக்கவேண்டியதில்லை. மிக விரைவாக மறுபுறம் சென்றுவிடலாம்” என்றாள்.

துச்சளை “இப்பாதையில் சேறு இருந்தால் நாம் சிக்கிக்கொள்வோம்” என்றாள். “சேறு இருக்காது, அரசி. நன்கு தீட்டப்பட்ட கற்பாதையாகவே இருக்கும். இது செல்வதற்கான பாதை. வருவதற்கு வேறு பாதை உண்டு என எண்ணுகிறேன்” என்றாள் தாரை. “முதலில் நான் செல்கிறேன்” என்ற விகர்ணன் அந்தச் சிறிய வண்டியை எடுத்துப்போட்டு அதன்மேல் படுத்துக்கொண்டு மெல்ல கைகளால் உந்தினான். அது விரைந்து உருண்டு விசைகொண்டு இருளுக்குள் மறைந்தது. “அரசி, தாங்கள்” என்றாள் தாரை. “இறுதியாக நான் வருகிறேன்.”

எடைகுறித்து எப்போதும் கால்களில் இருக்கும் அச்சத்துடன் துச்சளை நடுங்கினாள். “அமர்ந்து உடலை மெல்ல அதன்மேல் அமைத்துக்கொள்க!” என்றாள் தாரை. “ஆம்” என்றபின் அவள் தாரையின் தோள்களை பற்றிக்கொண்டு மெல்ல அமர்ந்தாள். உடலை ஒருக்களித்து அந்த வண்டியின்மேல் படுத்தாள். பின் நெஞ்சை அழுத்தி குப்புறப்படுத்தாள். “கைகளை உடலுடன் சேர்த்துக்கொள்க! ஆடையை நன்கு அமைத்துக்கொள்க!” என்றாள் தாரை. “ஆம்” என்றாள் துச்சளை. வண்டியை மெல்ல உந்திச் செலுத்தினாள் தாரை. அது ஓசையே இல்லாமல் நழுவி இருளுக்குள் சென்றது. நெய்விளக்கை அணைத்துவிட்டு அவளும் வண்டியில் ஏறி தொடர்ந்து சென்றாள்.

வண்டிகள் மிக விரைவாகவே அகன்று சென்றுவிட்டிருந்தமையால் தாரை தனியாகவே இருளுக்குள் மூழ்கி அமிழ்ந்தாள். இருபுறமும் மென்மையாக்கப்பட்ட வளைந்த கற்சுவர் இருளுக்குள் இருண்ட மின்னாக சென்று மறைவதை, காதில் காற்றின் தீற்றலை உணர்ந்தாள்.

ஓரிடத்தில் நீர்த்துளிகள் அவள்மேல் விழுந்து தெறித்தன. மேலே மேற்குப்பகுதியின் ஏரி இருக்கக்கூடும் என எண்ணிக்கொண்டாள். சகடம் ஓசையிடவேயில்லை. கற்பாளங்களை அத்தனை இசைவாகப் பொருத்தி ஒற்றைக்கல் என ஆக்கியிருந்தனர். வண்டி விரைவழிந்து மெல்ல நின்றது. சுரங்கத்தின் மறு எல்லையில் வெளியுலகின் மெல்லிய ஒளி தெரிந்தது. விகர்ணன் துச்சளையை கைபற்றி மேலே இழுக்க அவள் மூச்சுவாங்கியபடி எழுந்து படிகளில் ஏறி அப்பால் சென்றாள்.

தாரை மேலேறியதுமே தன் ஆடைகளை சீரமைத்துக்கொண்டு அங்கிருந்த சிற்றறைக்குள் அந்த வண்டிகளை எடுத்துவைக்கும்படி சொன்னாள். அவன் தூக்கி வைத்ததுமே அவை உள்ளே ஒரு பாதையில் உருண்டு செல்லத் தொடங்குவதை கேட்க முடிந்தது. "அங்கு சென்று காத்திருக்கும் போலும்" என விந்தையுடன் துச்சளை சொன்னாள். "ஆம், இது இறங்குபாதை. ஆகவேதான் நாம் மிக விரைவாக வந்தோம்… நடந்து வந்திருந்தால் இத்தொலைவுக்கு நான்கு நாழிகை ஆகியிருக்கும்" என்றாள் தாரை.

அவர்கள் அந்தச் சிற்றறையின் மேலே வந்தபோதுதான் அது ஒரு சிறிய ஆலயத்தின் கருவறை என உணர்ந்தனர். ஏகன், த்விதியன், திரையம்பகன் என்னும் மூன்று காவல்தெய்வங்களின் மண்ணாலான பெருஞ்சிலைகள் வரிசையாக இருந்தன. அவர்கள் எழுந்த பாதை அதற்கு நேர்பின்னாலிருந்தது. வெளிவந்ததும் இன்னொரு கல்லை இழுத்து தாரை அதை மூடினாள். கருவறைக்கு வெளியே முற்றத்தில் பொழிந்திருந்த வானொளியில் இலைகளின் மின் விழிக்கு துலங்கியது.

விகர்ணன் தன் மூட்டையை எடுக்க “என்ன செய்கிறீர்கள்?” என்றாள் தாரை. “விளக்கு பொருத்துகிறேன். இது அடர்காடு. நாம் சற்றுதொலைவு செல்லவேண்டும்” என்று விகர்ணன் சொன்னான். “காட்டில் விளக்கொளியால் பயனில்லை... நாம் இருப்பதை அது பிறருக்கு காட்டும். நமக்கு எதையும் காட்டாது” என்றாள் தாரை. “விழிபழகினால் நம்மால் அனைத்தையும் பார்க்கமுடியும். வானத்தை மட்டும் பார்க்கவேண்டியதில்லை.” விகர்ணன் “நான் காட்டில் இதுவரை நடந்ததில்லை” என்றான்.

தாரையே அவர்களை வழிநடத்தி அழைத்துச்சென்றாள். துச்சளை சற்று நடந்தபின் “மெய்யாகவே விழிதுலங்கிவிட்டதடி... வேர்கள் நன்கு தெரிகின்றன” என்றாள். “எவ்விருளிலும் விழி நோக்கும், அக இருளில் அன்றி என்று எங்கள் குலப்பாடல் சொல்கிறது” என்றாள் தாரை. மிக இயல்பாக அவள் அவர்களை இட்டுச்சென்றாள். “தொலைவில் ஓநாயின் முனகல் கேட்கிறது. அங்கே மானுடர் வந்திருக்கிறார்கள்” என்றாள். “இங்கிருந்து தென்கிழக்காகச் சென்றால் நாம் அந்த இடத்தை அடைய முடியும். அங்குதான் கலிதெய்வத்தின் ஆலயம்.”

“நீ வந்திருக்கிறாயா?” என்றாள் துச்சளை. “இல்லை. ஆனால் இச்செய்தியை அறிந்ததுமே இவரிடம் ஒருமுறை பார்த்துவரச் சொன்னேன். இவர் சொன்னதைக்கொண்டு என் உள்ளத்தில் இந்த இடத்தை அடையாளப்படுத்திக்கொண்டேன்” என்றாள் தாரை. அவர்கள் காட்டுப்புதர்களினூடாக நடந்தனர். “கட்டுவிரியன் மணக்கிறது. சருகுகள்மேல் கால்வைக்க வேண்டாம். நான் வைக்கும் கால்தடங்களில் மட்டுமே உங்கள் கால்கள் பதிக!” என்றாள் தாரை. “உன்னுள் இருந்து மச்சர்குலக்

கன்னி எழுந்துவிட்டாளடி” என்றாள் துச்சளை. “ஆம், மெய்யாகவே இப்போதுதான் விடுதலையையும் உவகையையும் அடைகிறேன். இனி இங்கே அடிக்கடி வருவேன்” என்றாள் தாரை.

காட்டுக்குள் செல்வது துச்சளைக்கும் உவகை அளித்தது. அவளுக்குள் இருந்த அலைக்கழிப்புகள் அனைத்தும் அகன்று உள்ளம் கூர்மைகொண்டிருந்தது. முழு விழிப்பிலிருந்த ஐம்புலன்களையும் தன்னை ஐந்தாகப் பகுத்துக்கொண்டு அது பின்தொடர்ந்தது. சிற்றொலிக்கே உடல் விதிர்த்தது. இலைகள் ஒவ்வொன்றும் வெவ்வேறு மணம் கொண்டிருப்பதை மூக்கு உணர்ந்தது. ஒரு கூழாங்கல்லின் வளைவின் ஒளி சுடரென தெரிந்தது. “காட்டில் இருந்திருக்கவேண்டுமோ? நகர்களை அமைத்துக்கொண்டதுதான் அனைத்துத் துயர்களுக்கும் தொடக்கமோ?” என்றாள்.

“ஆம், அதையே நானும் உணர்ந்தேன்” என்றான் விகர்ணன். “துயரில்லாமல் மகிழ்ச்சியை தனித்துணரமுடியாது அரசி, ஆகவே எங்கும் மானுட உள்ளம் துயரை சமைத்துக்கொள்ளும்” என்று தாரை சொன்னாள். “நோக்குக, ஒரு மலைப்பாம்பு காத்திருக்கிறது.” துச்சளை அந்த மலைப்பாம்பின் விழிகளையே நோக்கிவிட்டாள். இரு பொருளற்ற நோக்குகள். இரு மணியொளித் துளிகள். அது காத்திருந்தது, தன் வாய்க்குரிய அளவுடன் தன்னை அணுகிவரும் இரைக்காக. “தொலைவில் உடுக்கொலி” என்றாள் தாரை. அவள் சொன்ன பின்னர்தான் மிக மெல்ல செவிப்பறையில் ஊசிமுனையால் தொடுவதுபோல அவ்வோசையை துச்சளை கேட்டாள்.

“ஒரு நாழிகையில் சென்றுவிடலாம்” என்றாள் தாரை. அவளைத் தொடர்ந்து செல்கையில் காலடியிலிருந்து பெரிய

சாம்பல்முயல் ஒன்று துள்ளி விலகியது. வேர்ப்புடைப்பின்மேல் ஏறி செவி விடைத்து நோக்கி உடலதிர்ந்தது. உடலை நாண் என இழுப்பதுபோல குறுகி பாய்ந்து சென்றது. “இனி நாம் பேசவேண்டியதில்லை. பறவைகள் நம் அணுகலை அவர்களுக்கும் அறிவிக்கும்” என்றாள் தாரை. துச்சளை ஓர் அதிர்வை, பின்னர் உடலெங்கும் பரவிய மெய்க்கூச்செறிதலை உணர்ந்தாள். அவள் இரையையும் பார்த்துவிட்டிருந்தாள்.

# குருதிச்சாரல் - 40

**பகுதி ஆறு : பொற்பன்றி – 5**

கரிய புரவியின் உடலில் செங்குருதியுமிழும் சிறு புண் என தொலைவில் காட்டின் நிழல்அலைகளுக்குள் சிவந்த சிறிய வெளிச்சம் தெரிந்தது. தாரை “அடிகளை அளந்து வைக்கவும். நாம் நடந்துவருவதை பறவைகளும் குரங்குகளும் நோக்கிவிட்டன. அவை நாம் சீராக சென்றுகொண்டிருப்பதுவரை மெல்லிய ஒலியே எழுப்பும். நம்மில் எவரேனும் அடிசறுக்கி மிகையசைவு அளித்தால் அஞ்சி ஓலமிடத் தொடங்கிவிடும்” என்றாள். “உலர்ந்த சுள்ளிகள், சருகுக் குழிகள், பெரிய கூழாங்கற்கள் ஆகியவற்றின்மேல் கால் ஊன்றவேண்டாம்… நான் கால்வைக்கும் இடத்தில் மட்டும் உங்கள் அடிகள் பதிக!”

துச்சளை “இந்தக் கானறிதல்களை எப்படி நினைவுகூர்கிறாய்?” என்றாள். “நான் நினைவுகூரவில்லை அரசி, என் கால்களில் உள்ளன அவை. கால்களிலிருந்து உள்ளத்திற்கு செல்கின்றன” என்றபடி முன்னால் சென்றாள். காற்றில் நீராவிமணம்

இருந்தது. துயிலும் குழந்தையின் போர்வையை விலக்கும்போது எழும் வெம்மைமணம் என துச்சளை எண்ணினாள். பகலில் மரங்களென்றும் செடிகளென்றும் பெருகிக்கிடக்கும் காடு இருளில் ஒன்றென்றாகி ஒரு மாபெரும் விலங்கென ஆகிவிட்டிருந்தது. சீரான துயில்மூச்சு கொண்டிருந்தது. குறட்டை ஒலி என பல்வேறு விலங்கோசைகள்.

துச்சளை மூச்சுவாங்க நின்று “ஒளி மிக அருகில் எனத் தெரிந்தது... ஆனால் காட்டில் நாம் தொலைவை கணிக்கமுடிவதில்லை” என்றாள். “எங்குமே உள்ளத்தால்தான் அனைத்தையும் கணிக்கிறோம். உள்ளத்தை கணிக்கமுடியாதபோது எல்லாமே அகன்றுவிடுகின்றன” என்றான் விகர்ணன். துச்சளை புன்னகைத்து “ஆழ்ந்த நுண்நோக்கு” என்றாள். அவள் தன்னை பாராட்டுகிறாள் என எண்ணி விகர்ணன் திரும்பி தலைவணங்கினான். தாரை இருளிலேயே புன்னகைக்கும் பல்மின்னொளி தெரிந்தது. விகர்ணன் “காடு நமக்குத் தெரியாதது, ஆகவே நாம் தொலைவுகளை தவறாக கணிக்கிறோம்” என்றான். தாரை மீண்டும் புன்னகைத்து “ஆம்” என்றாள். அவள் விழிகளில் இருளிலேயே புன்னகை தெரிவதை கண்டு துச்சளை வியந்தாள்.

உடுக்கோசை கேட்கத்தொடங்கியது. இருளின் பரப்பிலேயே அவ்வோசை எதிரொலித்து மரவுரியால் போர்த்தப்பட்ட ஒலி என கேட்டது. விகர்ணன் “தொடங்கிவிட்டார்கள்” என்றான். துச்சளையின் நெஞ்சு படபடக்கத் தொடங்கியது. தாரை நின்று “அங்கே நிறையபேர் இருக்கிறார்கள்...” என்றாள். “வீரர்களால் அப்பகுதி சூழப்பட்டிருக்கும். அவர்களை மீறி நாம்

அணுகமுடியும் என தோன்றவில்லை.” துச்சளை “நான் முதலில் செல்கிறேன். என்னை அவர்கள் தடுக்கமுடியாது. அவரிடம் என்னை அழைத்துச்சென்றே ஆகவேண்டும்” என்றாள். விகர்ணன் “நாம் நுழைய முயன்றாலே இச்சிறிய பகுதிக்குள் அவர் செவிவரை ஓசை சென்றுவிடும்” என்றான்.

அவர்கள் இருவருக்குமே என்ன செய்வதென்று தெரியவில்லை என்று துச்சளை எண்ணிக்கொண்டாள். எண்ணம் திகைக்கும்போதுதான் பொருளற்ற சொற்கள் எழுகின்றன. பல தருணங்களில் அச்சொற்களிலிருந்து புதிய எண்ணத்திறப்புகள் எழக்கூடும் என்பதை அவள் அறிந்திருந்தாள். நா நெஞ்சறியாத சிலவற்றை அறிந்தது. அதையாளும் தெய்வங்கள் வேறு. அவளுக்கும் என்ன செய்வதென்று தெரியவில்லை. எந்த நம்பிக்கையில் கிளம்பிவந்தோம் என வியந்தாள். மெய்யாகவே துரியோதனனை வெல்லும் எண்ணம் அவளுக்கு உள்ளதா? அல்லது அங்கு விந்தையாக ஏதோ நிகழவிருக்கிறது, ஆகவே அப்போது உடனிருந்தாகவேண்டும் என்னும் முதிரா உள்ளத்து ஆர்வமா? அவளால் கணிக்கமுடியவில்லை.

பெருமூச்சுடன் நின்று “என் நெஞ்சு உடைந்துவிடும்போலிருக்கிறது... நெடுந்தொலைவு” என்றாள். அவர்களும் மூச்சுவாங்க நின்றார்கள். “ஆம், காட்டுக்குள் இரவில் கானகத்தேவர்களுக்குரிய காற்று நிறைகிறது. அது மானுடரை மூச்சுத்திணறச் செய்யும் என்பார்கள்” என்றாள் தாரை. மீண்டும் நடக்கையில் துச்சளை தெளிவுகொண்டுவிட்டிருந்தாள். எப்போதுமே உள்ளத்தில் தயக்கமும் வினாவுமாக அலைக்கழிந்து எந்த அடிப்படையுமில்லாமல் எங்கிருந்தோ எழும் ஒரு விடையை சென்றடைவது அவளுடைய வழக்கம். அது பெரும்பாலும்

சரியாகவே இருக்கும். அதைப்பற்றி ஒருமுறை நிமித்திகப்பெண்டு ஒருவரிடம் கேட்டபோது மூதன்னையரின் ஆணை அது என்றாள். அதன் பின் அதில் ஐயம்கொள்வதை அவள் விட்டுவிட்டாள்.

“நீங்கள் நின்றுகொள்ளுங்கள். நான் நேராகச் சென்று வீரர்களிடம் என்னை மூத்தவர் அங்கே வரச்சொன்னார் என்கிறேன். நான் தனியாகச் சென்றாலே அவர்கள் குழப்பம் அடைந்துவிடுவார்கள்” என்றாள் துச்சளை. விகர்ணன் ஏதோ சொல்ல வாயெடுக்க “ஆம், அதுவே உகந்த வழி” என்று தாரை சொன்னாள். விகர்ணன் “ஆனால்…” என்றான். “அங்கே செல்வதற்கு ஐயமின்றி ஆணையிடும் குரல் எழவேண்டும். அரசி தமையனுடன் பேசும்போது அயலவரான நாம் உடனிருக்கலாகாது” என்றாள் தாரை. விகர்ணன் “மெய்தான்” என்றான்.

அவர்கள் நின்றுவிட அவள் மட்டும் ஒளிதெரிந்த இடத்தை நோக்கி சென்றாள். குருதித்துளி சொட்டி நின்றிருக்கும் வேல்முனைகள், வாள்விளிம்புகள் என இலைகள் செவ்வொளி சூடியிருந்தன. மரங்களின் வளைவுகள் பொன்னிறம் பூசிக்கொண்டிருந்தன. நிழல்கள் எழுந்து வானில் விரிய நின்றன மரங்கள். இலைத்தழைப்புகளுக்குள் இருந்து புலரிக்கதிர் கருமுகில்களுக்கு நடுவே எழுவதுபோல நெய்ப்பந்தங்களின் ஒளி எழுந்து பரவியிருந்தது. அங்கிருந்த பறவைகள் ஒளியை உணர்ந்து எழுப்பிய ஒலி காட்டின் ஒலிப்பொதுமையிலிருந்து வேறென கேட்டது.

அவளுடைய காலடியோசைகளை வீரர்கள் கேட்டுவிட்டதை உணர்ந்தாள். முள்ளம்பன்றி சிலிர்த்துக்கொள்வதைப்போல இருளில் அம்புகள் தன்னை நோக்கி திரும்புவதை

உடல்கொண்ட நுண்புலன் கூறியது. “என்ன அது?” என்றான் ஒரு வீரன். அவன் குரல் துயிலில் பேசும் குழந்தையுடையது போலிருந்தது. “அது விலங்கல்ல… நான்குகால் ஓசை அல்ல” என்றான் இன்னொருவன். மரத்திற்கு அப்பால் நின்றபடி “யார்?” என்று மற்றொருவன் கேட்டான். “நச்சு அம்பு நோக்குகிறது. நில்!”

“நான் துச்சளை, அஸ்தினபுரியின் இளவரசி” என்றாள் துச்சளை. வெளிச்சம் தன் முகத்தில் விழும்படி சென்று நின்றாள். “அரசி, தாங்களா?” என்றான் மரத்திற்குப் பின்னால் நின்றிருந்த தலைமை வீரன். இன்னொருவன் அவனுக்குப் பின்னால் வந்து நின்றான். “தாங்கள் இங்கு வருவதாக ஆணையில்லை.” துச்சளை “நான் அன்னையின் ஆணையுடன் வந்தேன்… என்னை அரசரிடம் அழைத்துச்செல்க!” என்று சொன்னாள். அவர்கள் ஒருவரை ஒருவர் நோக்கிக்கொண்டார்கள். தலைவன் முடிவெடுத்து விழிகாட்ட இன்னொருவன் “ஆணை, அரசி… வருக!” என அழைத்துச்சென்றான்.

“என் காலடிகள் விழும் இடங்களில் மட்டும் காலை வைத்து வருக, அரசி… இங்கே நாகங்கள் மிகுதி.” துச்சளை “ஆம், அறிவேன்” என்றாள். அவன் வில்போன்ற காலடிகளுடன் நடந்தபடி “ஆணை என்ன என்று அறியேன். பூசெய்கை தொடங்கியபின் என்றால் எவருக்கும் ஒப்புதல் இல்லை” என்றான். அவர்கள் மேலும் ஒரு காவலர் வளையத்தைக் கடந்து சென்றனர். அங்கிருந்த முதிய வீரனிடம் சொல்லி ஒப்புதல் பெற்று அவன் அழைத்துச்சென்றான். துச்சளை நின்று மூச்சுவாங்கினாள். அவர்கள் பெரும்பாலும் கையசைவுகளாலும் முகக்குறிகளாலும் பேசிக்கொண்டார்கள். கேளா ஆணைகளினூடாக ஒவ்வொருவரும் ஒன்றெென

கட்டப்பட்டிருந்தார்கள். ஒரே வலையில் அமர்ந்த சிலந்திகள்போல அசைந்தன அவர்களின் கைகள்.

அப்பால் ஒரு மரத்தடியில் போடப்பட்ட மூங்கில்கூடைப் பீடம் மீது துரியோதனன் அமர்ந்திருந்தான். அவனருகே துச்சாதனன் கைகட்டி இருளை நோக்கிக்கொண்டு நின்றிருக்க அவர்களுக்குப் பின்னால் சூதர்கள் சிலர் பூசெய்கைக்கான பொருட்களை ஒருங்குசெய்துகொண்டிருந்தார்கள். இசைச்சூதர் முழவுகளும் கொம்புகளும் சிறுபறைகளுமாக அமர்ந்திருந்த காட்சி பந்தங்களின் ஒளியில் அலையடித்துக்கொண்டிருந்தது. தொலைவில் கலிதேவனின் சிற்றாலயத்தின் முகப்பில் பூசகர்கள் பதற்றத்துடன் ஓடிய நிழலாட்டம் பாவைக்கூத்து என இருளின் பெருந்திரையிலாடியது.

முன்னால் சென்ற வீரன் துரியோதனன் அருகே சென்று பணிந்து துச்சளையின் வருகையை சொன்னதும் துச்சாதனன் திகைப்பும் சீற்றமுமாக திரும்பி அவளை நோக்கினான். துரியோதனன் முகத்திலோ உடலிலோ அச்சொற்கள் சென்று தொட்டதாகவே தெரியவில்லை. துச்சாதனன் "யார்?" என்றான். பின்னர் காலடியில் சுள்ளிகள் முறியும் ஓசையுடன் அவளை நோக்கி வந்தான். மீன்நெய் எரிந்து தழல் தெறித்துக்கொண்டிருந்த பந்தத்தின் ஒளி அவனுக்குப் பின்புலமாக விரிய பெருநிழல்பூதமென கைகள் கிளைவிரித்து காட்டின்மேல் பரவி அசைய தலை வான் நோக்கி விரிந்தெழ அணுகினான்.

துச்சளை அவனைக் கண்டு நிற்கவில்லை. அவன் அவளை அணுகி செவியருகே குனிந்து தாழ்ந்த குரலில் "ஏன் இங்கு வந்தாய்? எவ்வண்ணம் வந்தாய்?" என்றான். "நான் மூத்தவரை பார்க்க வந்தேன்" என்றாள் துச்சளை. "அவர் எவரையும்

பார்க்கும் நிலையில் இல்லை” என்றான் துச்சாதனன். “அவரை அன்றி எவரையும் நான் பார்க்க விழையவில்லை. அவரை பார்க்காது திரும்பிச்செல்லவும் போவதில்லை” என்றாள் துச்சளை. “அவரைப் பார்க்க ஒப்புதல் இல்லை. திரும்பிச்செல்க…” என்றான் துச்சாதனன். அருகே நின்ற வீரனை கைசுட்டி அழைத்து “அரசியை கொண்டுசெல்க!” என்றான்.

அவள் அவ்வீரனை கைச்செய்கையால் விலக்கி “வீரர்களைக் கொண்டு என்னை வெட்டி வீழ்த்துக! அல்லது சிறையிடுக… நான் சென்றே தீர்வேன்” என்றபடி துரியோதனனை நோக்கி நடந்தாள். சீற்றத்துடன் அவளைப் பிடித்து நிறுத்த கைதூக்கிய துச்சாதனன் உள்ளிருந்து எழுந்த தடையால் தயங்கி “வேண்டாம், இளவரசி… நில்” என்றான். “என்னை நிறுத்த முடியும் என்றால் நிறுத்துக!” என்றபடி அவள் சென்றாள். அவன் அவள் பின்னால் “நில்… சொல்வதை கேள்” என உறுமியபடி வந்தான். அவனால் கைநீட்டி அவளை பிடித்து நிறுத்த முடியவில்லை. அவன் கை அதன் பொருட்டு நீண்டு தயங்கி நாகத்தலை என காற்றில் தவித்தது. அவள் மூச்சுவாங்க பெரிய உடல் அசைய முன்னால் சென்றுகொண்டிருந்தாள்.

முழு விசையையும் திரட்டி அவள்முன் வந்துநின்று இரு கைகளையும் விரித்து “நில்… நீ செல்ல விடமாட்டேன்” என்றான் துச்சாதனன். பேரெடையை தூக்கியதுபோல அவன் மூச்சிரைக்க அகன்ற நெஞ்சு ஏறியிறங்கியது. துச்சளை அவன் விழிகளை நேருக்கு நேர் நோக்கி கசப்பால் சுழித்த சிறிய உதடுகளும் நீர்மையில் தழல்செம்மை மின்னிய விழிகளுமாக “விலகு இழிமகனே, உன் கை என் மேல் பட்டால் இங்கு சங்கரிந்து விழுந்து இறப்பேன்” என்றாள். வெறுப்புடன் நிலத்தில் உமிழ்ந்து “ஐவர் இருந்தும் ஆணின்றி நின்றவள் போன்று வலியிலி

அல்ல நான். என் குருதிப்பழிக்கு உன் குலத்தை ஏழு தலைமுறை அழிப்பார் என் அரசர்... விலகு!” என்றாள்.

துச்சாதனனின் இடக்கை அசையாமலிருக்க வலக்கை வலிப்பு வந்ததுபோல இருமுறை இழுத்துக்கொண்டது. பின் உயிரிழந்த பெரும்பாம்புபோல விலாவில் அறைந்தபடி விழுந்தது. அவள் அவனைக் கடந்து செல்ல அவன் கால்கள் தளர விழப்போனான். பின்னர் மெல்ல அருகே நின்ற மரத்தை பற்றிக்கொண்டு நிலைகொண்டு கால்மடிந்து வெறுந்தரையில் அமர்ந்தான். உதடுகளை இறுக்கி கண்களை மூடி தலைகுனிந்தான். அவனைமீறி எழுந்த விம்மலில் தோள்கள் ஒருமுறை அதிர்ந்தன. கன்னங்களினூடாக வழிந்த கண்ணீர் நிலத்தில் சொட்டியது. மீண்டுமொரு விம்மலில் அவன் தன்னை முற்றடக்கிக்கொண்டான்.

அப்பால் வந்து அவனை நோக்கிய துர்மதன் அருகணைந்து குனிந்து அவன் பெருந்தோள்கள்மேல் கைவைத்தான். கொப்பளிக்கும் கொதிகலத்திற்கு வெளியே தொட்டு நோக்கியதுபோல் உணர்ந்தான். சொல் அவன் நாவிலெழுவதற்குள் துச்சாதனன் எழுந்து அவனை நோக்காமல் இருளுக்குள் நடந்து மறைந்தான். அவனுடைய ஆடைவண்ணம் இறுதியாக அமிழ்ந்தது.

துச்சளை திரும்பிநோக்காமல் சென்று துரியோதனன் முன் நின்றாள். அவள் வருகையோசை கேட்டு அவன் விழிகள் மட்டும் அசைந்து அவளை நோக்கின. எந்த முகமனும் இல்லாமல் துச்சளை “தார்த்தராஷ்டிரரே, முற்பிறப்பில் செய்த பெரும்பழியால் இப்பிறப்பில் விழியிலாதவர் ஆனார் எந்தை. மீதுற்ற பிறிதொரு பழியால் விழைந்த எதையும் அணுக

முடியாதவரானார். ஏழு பிறவியில் இயற்றிய விடப்பெரும் பழியால் உங்களை மைந்தரெனப் பெற்றார். அதோ, சிறுமையும் துயரும் கொண்டு அங்கே அரண்மனையில் அமர்ந்திருக்கிறார்” என்றாள்.

அவளைக் கண்டு துச்சகனும் அப்பால் சூதர்களுக்கு ஆணையிட்டுக்கொண்டிருந்த துச்சலனும் சுபாகுவும் ஓசையற்ற காலடிகளுடன் அருகே வந்தனர். துர்மதன் பின்னால் வந்து நின்றான். அவள் மேலும் உரத்த குரலில் “அறமென்ன என்று தெளிந்து அதிலமரமுடியாதவனாக ஆவதே சிறுமையின் உச்சம். ஒருவர் தன்னை எண்ணியே உளம் நாணும் நிலை அது. இத்தனை ஆண்டுகள் அதில் உழலவிட்டீர்கள் எந்தையை. இன்று அவர் அவ்விருளில் தொட்டு அறிந்து நெஞ்சோடணைத்த அனைத்தையும் அவரிடமிருந்து அகற்றுகிறீர்கள். இம்மண்ணில் ஆற்றப்பட்ட பெரும்பழிகளில் ஒன்றை இயற்றவிருக்கிறீர்கள்…” என்றாள்.

அவள் குரல் கூர்மையும் ஓலிச்சீரும் கொண்டு அவளில் வந்தமைந்த பிறிதொரு தெய்வத்திற்குரியதென ஒலித்தது. “அரசே, நீங்கள் இதுவரை இழைத்த அறக்கொலைகள் பல. மூத்தவர் பீமசேனனை கால்கைகளைக் கட்டி கங்கையில் இட்டது முதல்பெரும் பழி. பாண்டவர்களையும் அன்னையையும் வாரணவதத்தில் மாளிகையுடன் எரித்தழிக்க முயன்றது இரண்டாவது பெரும்பழி. பாரதவர்ஷம் இதுவரை கண்ட பழிகளில் முதன்மையானது பொற்பரசியை அவைநடுவே ஆடைபற்றி இழுக்கச்செய்தது.”

கரிய படம்எடுத்து நின்றிருக்கும் பெருநாகமென அவள் தோன்றினாள். “அதன்பொருட்டு உங்கள் நெஞ்சு பிளந்து புழுதியில் கிடக்குமென்றால், உங்கள் உடன்பிறந்தார்

அனைவரும் தலையுடைந்து களம்படுவார்கள் என்றால் உங்கள் குருதிவழியில் ஒருவர்கூட எஞ்சாமல் பெயர்மட்டுமே எஞ்சுமென்றால் அதுகூட அப்பழியை நிகர் செய்யாது. அதை கழுவ பாரதவர்ஷம் மும்முறை குருதியாடியாகவேண்டும். குண்டலம் கொண்ட தலைகள் மணற்பருக்கள் என விழுந்துருண்டாகவேண்டும். அது அவள் வஞ்சம் அல்ல. எங்கள் வஞ்சம். உங்கள் அகத்தளத்து மாந்தரும் உங்கள் குருதியிலெழுந்த மகளும் உங்கள் குடிகள்தோறும் அமைந்த அத்தனை மகளிரும் கொண்டிருக்கும் பெருவஞ்சம் அது.”

“அவள் அனைத்தையும் கடக்கக்கூடும். இங்குளச் சிறுமாந்தர் தலைக்குமேல் மலைமுடியென சொல்லின்மை சூடி அவள் எழக்கூடும். அங்கிருந்து குனிந்துநோக்கி அன்னையென உங்கள் அனைவரையும் அவள் பொறுத்தருளவும்கூடும். கொற்றவையும் அம்பிகையும் ஒருவரே என்று கற்ற எவருக்கும் அது வியப்பளிக்காது. ஆனால் நான் வெறும் பெண். கருவுற்று மடிநிறைத்து முலையூட்டியவள். என்னால் ஒரு கணமும் ஒரு நிலையிலும் உங்கள்மேல் கனிவு கொள்ளமுடியாது. நீங்கள் களம்பட்டுச் சிதைந்து கிடந்தால் அவள் அள்ளிக் குழல்புரட்டிய வெங்குருதியின் எச்சத்தில் ஒரு துளி தொட்டு என் நெற்றியில் அணியவும் தயங்கமாட்டேன்” என்றாள் துச்சளை.

“இங்கு நான் வந்தது உங்களுக்காக அல்ல. உங்களை இனி என் நா மூத்தவரே என அழைக்காது. அழைக்கவேண்டும் என எண்ணி முடிவெடுத்தே இந்நகர் புகுந்தேன். ஆயிரம்முறை என் நாவுக்கு ஆணையிட்டேன். என்னால் இயலவில்லை.” அவள் குரல் இடறியது. இதழ்களை மடித்து தன்னை கட்டுப்படுத்திக்கொண்டாள். நெஞ்சை வலக்கையால்

அழுத்தியபடி "நான் வந்தது முதன்மையாக என் தந்தைக்காக. அவர் அங்கிருக்கும் நிலை என்னை பிச்சியாக்குகிறது. அது இறப்புக்கு முந்தைய உயிர்த்துடிப்பு போலிருக்கிறது. அந்தப் பெருவலியை ஒரு மானுட உயிருக்கல்ல, எவ்வுயிருக்கும் எந்நிலையிலும் எவரும் அளிக்கலாகாது" என்றாள்.

"ஆம், இப்புவி அறத்தால் ஆளப்படவில்லை என நான் அறிவேன். இங்கே ஆற்றொணாக் கண்ணீர் சொட்டாத நாளே இல்லை என்றும் அறிவேன். ஆயினும் இதை தெய்வங்கள் சூழ்ந்துள்ளன என்றே நான் எண்ணுகிறேன். எவற்றுக்கும் இறுதிஎல்லை என ஒன்றுண்டு, அரசே. அவ்வெல்லையை கடக்கிறீர்கள். இப்புவியில் மட்டுமல்ல அங்கு மேலுலகிலும் நிகர்செய்யவியலாத பெரும்பழியை அடையவிருக்கிறீர்கள். வேண்டாம்... உங்களிடம் மன்றாட வரவில்லை. உங்களுக்கும் எனக்கும் உறவென ஒன்றுமில்லை. உங்கள் அன்னையின் வடிவாக இங்கு வந்துள்ளேன். இது அவர் குரல் என அறிக!"

"நீங்கள் பெறவிருப்பது தந்தையின் தீச்சொல் அல்ல... உங்கள் இருண்ட உள்ளத்தில் இக்குரல் வந்தடையுமென்றால் உணர்க, உங்கள் தந்தை எந்நிலையிலும் உங்கள்மேல் வஞ்சம் கொள்ளமாட்டார். ஒருபோதும் உங்களைப் பழித்தொரு சொல் உரைக்கமாட்டார். ஆனால் அவர் வாழும் உள்ளம் என் அன்னையுடையது. தன் இறுதிப்பொறையையும் திரட்டி கட்டுப்படுத்தி அமர்ந்திருக்கிறார் அவர். அவர் ஒரு சொல் உரைத்தால் அது உங்கள் குலமழிக்கும். கொடிவழிகளின் இறுதித்துளிவரை நின்று கொல்லும் நஞ்சாகும். அதை ஏற்காதொழிக! அதைமட்டுமே சொல்லவந்தேன்."

ஓங்கிய அவள் குரல் மீண்டும் தளர்ந்தது. இருமுறை செருமி மூச்சிளைத்து பின் சொல்லெடுத்தபோது அது துயர்நனைந்து

குழைந்திருந்தது. “ஏனென்றால் நான் இடையில் தூக்கி வளர்த்த மைந்தர்கள் அவர்கள். ஆயிரம் கருமணிகள். என் மூதாதையரின் ஆயிரம் கருவிழிகள். அவர்கள் ஏதுமறியாதவர்கள். நீங்கள் ஆடும் இந்தப் பழியில் ஒருதுளியைக்கூட அவர்கள் இன்னும் தொட்டிருக்கவில்லை. அன்புகாட்ட மட்டுமே அறிந்த வேழக்குழவிகள். அவர்கள் ஒவ்வொருவரிலும் மலரும் சிரிப்பை மட்டுமே இப்போது விழிமுன் காண்கிறேன். ஆயிரம் வெண்பல்நிரைகள். ஆயிரம் வெண்மலர்கள்போல என சூதர்கள் பாடுவதுண்டு அவற்றை…”

“ஆனால் தெய்வங்களுக்கு மானுட நெறிகள் இல்லை. அவர்கள் இடியென மின் என புயல் என இரக்கமற்ற நெறிகளால் ஆளப்படுபவர்கள். உங்கள் பழிக்கு அவர்களையும் சேர்த்து அழிப்பார்கள். சொல்லன்றி ஏதும் எஞ்சாமல் செய்வார்கள்… உங்களை தலைமேற்கொண்டமைக்காக உங்கள் குடிகளும் நகரும் முற்றழிவர்… அரசே, உங்கள் மைந்தருக்காக, குடியினருக்காக இங்கு வந்து நின்றிருக்கிறேன். இது இறுதிக்கணம். உங்கள் தந்தையைத் துறந்தால் நீங்கள் துறப்பது அனைத்தையும்தான்.”

அவள் சொல்லறுந்து நின்று, சொற்கள் அளித்த விசை முற்றழிய விழப்போகிறவள் என மெல்ல ஆடினாள். கண்களை மூடி விரல்களால் இமைகளை அழுத்திக்கொண்டாள். மூச்சில் நெஞ்சு எழுந்தமைந்தது. இளையோர் அனைவர் விழிகளும் துரியோதனனிலேயே ஊன்றியிருந்தன. அவன் விழிகள் அவளை நோக்கிக்கொண்டிருந்தன, ஆனால் செவி ஒலியேற்கிறதா என்று ஐயமெழுந்தது. அப்பால் சூதர்கள் எழுந்து அசைவிலாது நின்றனர். அனைவரும் அவள் சொற்களை கேட்டுவிட்டிருந்தனர்.

துரியோதனன் தொண்டையை இருமுறை கனைத்தான். பின்னர் தாழ்ந்த குரலில் “நன்று. உன் குரல் எனக்கு புதிதல்ல, சைந்தவி” என்றான். “என்னுள் எப்போதுமே அறச்சொற்கள் உன் குரலில்தான் எழுகின்றன என நீ அறியமாட்டாய். ஏனென்றால் அறமென்று இங்குள்ள அனைத்தையும் இளமையில் உன் நாவிலிருந்தே நான் கற்றிருக்கிறேன்” என்றான். அவன் சிறுபுன்னகை செய்தான். விழிகளில் அப்புன்னகை இல்லாமல் அவை இருளை வெறித்திருந்தன. “இதைவிட நூறுமடங்கு தெளிவுடனும் உணர்வுடனும் நீ என்னுள் இருந்து பேசிக்கொண்டே இருந்தாய். உன்னைக் கடந்துசென்றே இம்முடிவை நான் எடுத்தேன்.”

“ஏனென்றால் என் திசை இது. என் நினைவறிந்த நாள் முதலே கண்முன் கண்ட ஊழ் இது. என்னை அள்ளிச்செல்லும் பேராற்றுப்பெருக்கு. இதைத் தவிர்க்கவும் உன்னருகே வந்தமையவுமே வாழ்நாளெல்லாம் முயன்றேன். இப்போது அறிகிறேன், வேறுவழி இல்லை. தெய்வங்களுக்கு மானுடன் தலைகொடுத்தே ஆகவேண்டும். போரிடுவதனால் அவன் தன் அகத்தை சிதைத்துக்கொள்வதன்றி எப்பயனும் இல்லை. முற்றளிக்கவேண்டும், மிச்சமின்றி ஆகவேண்டும். அதுவே நிறைவு. அது அழிவென்றாலும் பெரும்பழி என்றாலும் மற்றுலகின் மீளா இருளென்றாலும் மாற்றுச்செலவென ஏதுமில்லை. ஆகவே இதை தேர்ந்தேன்.”

“இதை வகுத்த தெய்வங்கள் விழைவனவற்றை இயற்றுக! அவர்கள் இப்புவியை ஆள்பவர்கள். இங்குள்ள அனைத்தையும் இயற்றுபவர்கள். கிளிக்குஞ்சை கிழித்துண்ணும் கூருகிர் கழுகில் குடிகொள்பவர்கள். மலைகளைப் பிளந்து சரிக்கும் பேராற்றல்கள். காட்டெரியில் சுழல்புயலில் குடிகொள்பவர்கள்.

அவர்கள் வெல்க!” என்றபடி துரியோதனன் எழுந்தான். “கருவுக்குள் புகுந்து என் மூடிய விழிக்குள் நோக்கி ஆட்கொண்டது என் தெய்வம். அன்னையும் தந்தையும் சுற்றமும்கூட அதற்குப் பின்னரே என்னை வந்தடைந்தனர். நான் அவனுக்குரியவன். அதில் மாற்றெண்ணமே இல்லை.”

“நான் உன் சொற்களனைத்தையும் முற்றிலும் உணர்ந்து என் முடிவை மீண்டும் உறுதிசெய்கிறேன், சைந்தவி” என்று அமைதியான குரலில் துரியோதனன் சொன்னான். மீண்டும் புன்னகைத்து “நான் இன்னும் சற்றுநேரத்தில் தலைகொடுக்கவிருக்கிறேன். என் தெய்வத்திடம் இனி உரையாடுக இவ்வுலகம்” என்றான். அவன் புன்னகை எத்தனை பேரழகு கொண்டிருக்கிறது என ஓர் எண்ணம் அவளுள் எழுந்ததும் மெய்ப்பு கொண்டாள்.

துரியோதனன் “இளையோனே...” என்றான். “மூத்தவரே” என்றான் துர்மதன். “ஆவன நிகழ்க!” என்றான் துரியோதனன். “ஆணை” என துர்மதன் தலைவணங்கி கைவீச கைமுழவுகளும் உடுக்குகளும் மீண்டும் ஒலிக்கலாயின. சூதர்களும் பூசகர்களும் தங்கள் பணிகளை தொடர்ந்தனர். துச்சலன் “தாங்கள் ஒருங்கவேண்டும், மூத்தவரே” என்றான். “ஆம்” என்று துரியோதனன் அவனுடன் சென்றான்.

துச்சளை பெருமூச்சுடன் உடல்தளர்ந்தாள். அதுவரை இருந்த பதற்றம் முற்றாக விலக உடலில் அனைத்து தசைகளும் தளர்ந்தன. எங்காவது அமர்ந்து உடல்நீட்டினால் அப்படியே துயின்றுவிட முடியும் என்று தோன்றியது. அருகே நின்ற காவலனை கைசுட்டி அழைத்தாள். அவன் வந்து பணிந்ததும் “காட்டுக்குள் விகர்ணரும் அவர் அரசியும் நின்றிருக்கிறார்கள், அழைத்து வருக!” என ஆணையிட்டபின் மெல்ல நடந்து

அங்கே நின்ற மரத்தை பற்றிக்கொண்டு உடல் தாழ்த்தி கையூன்றி அமர்ந்து கால்களை நீட்டிக்கொண்டாள்.

# குருதிச்சாரல் - 41

**பகுதி ஆறு : பொற்பன்றி – 6**

கலிதேவனின் சிற்றாலயத்தின் முகப்பில் நின்றிருந்த கலிங்கப்பூசகர் ஊர்வர் கைதூக்க அனைத்து இசைக்கலங்களும் ஒலியவிந்தன. அவர் உரத்த குரலில் “இருள்முகத்தோன் வெல்க! எதிரிலான் வெல்க! விழிவலியன் வெல்க!” என்று கூவினார். “வெல்க! வெல்க!” என குரல்கள் இணைந்தொலித்தன. ஊர்வரின் உடல் மழைபட்ட கரும்பாறையென இறுகித்திரண்டிருந்தது. பெரிய குடவயிற்றின்மேல் வெள்ளெலும்பில் செதுக்கிய மணிகளாலான மாலை துவண்டது. எலும்புமணிக் கங்கணம் அணிந்த வலக்கையின் சுட்டுவிரலில் நீலமணியாழி அணிந்திருந்தார். அவருக்கு வலப்பக்கமும் இடப்பக்கமும் அவரைப்போலவே தோன்றிய துணைப்பூசகர் நின்றிருந்தனர்.

“அரசர் வருக!” என்றார் ஊர்வர். துர்மதன் திரும்பி கைகாட்ட சுபாகுவும் துச்சலனும் இருபக்கமும் வர துரியோதனன் சீர்நடையுடன் வந்தான். அவனுக்குப் பின்னால் துச்சகன் உடைவாள் ஏந்தி வந்தான். துச்சளை இருளுக்குள் கூர்ந்து அப்பால் துச்சாதனன் வருகிறானா என்று பார்த்தாள். துரியோதனன் நீலப்பட்டாடை அணிந்து கரிய கச்சையை இடையில் முறுக்கியிருந்தான். கைகூப்பியபடி வந்து ஊர்வர் முன் நின்றான். நீராடிய குழலில் இருந்து துளிகள் சொட்டி முதுகில் வழிந்தன. தாடியில் நீர்மணிகள் செவ்வொளியில் குருதியோ என மின்னின. இடையிலணிந்திருந்த சுரிகை குருதிச்செம்மை பூசியிருந்தது.

துச்சளையின் கையை தாரை மெல்ல தொட்டாள். துச்சளை திரும்பி நோக்க "நாம் சென்றுவிடுவோம், அரசி" என்றாள். "ஒருவேளை நாம் இதை பார்க்கவே வந்தோம் போலும். பார்த்தால் நம் அழல் அவியும். இல்லையென்றால் இதையே எண்ணி உழல்வோம்" என்றாள் துச்சளை. விகர்ணன் "ஆம், அதுவே மெய். இங்கேயே அனைத்தையும் கழற்றி வீசிவிட்டுத் திரும்பலாம். சாவுக்குப்பின் வரும் அமைதி… மானுடருக்கு தெய்வங்கள் அருளும் நற்கொடை அது என்பார்கள்" என்றான். அருகே நின்றிருந்த சூதமுதியவர் "ஓசையின்மை, இளவரசே" என்றார். விகர்ணன் தலையசைத்தான்.

செதுக்காத மலைக்கற்களை அடுக்கிக் கட்டப்பட்ட ஆலயத்திற்குள் கரிய நீளுருளைக் கல்லில் இரு கண்கள் மட்டும் பொறிக்கப்பட்ட கலியின் உருவம் அமர்ந்திருந்தது. அக்கண்கள்மேல் அரக்கு பொருத்தப்பட்டு நீலப்பட்டுத் துணியால் கட்டப்பட்டிருந்தது. கரும்பட்டும், எதிரெதிர் சிற்றாடிகளும், தோல்சவுக்கும், குறைகுடமும், கருமயிர்ச்சுருள்களும், இடம்புரிச்சங்கும் அதன் முன் படைக்கப்பட்டிருந்தன. இரட்டைத்திரி விளக்குகள் தளர்ந்து எரிந்தன. நீலமலர்தார்கள் சூட்டப்பட்டு இருபக்கமும் நெய்ப்பந்தங்கள் எரிய அமர்ந்திருந்த உருவிலாவடிவை நோக்கிக்கொண்டிருந்தபோது அது உடல்கொண்டு கைகால்கள் நீண்டு எழுந்துவிடுமெனத் தோன்றியது. காகத்தின் இறகுகளாலான விசிறிகள் அதன் காலடியில் விரிக்கப்பட்டிருந்தன. வலமும் இடமும் இரு உயிருள்ள நாகங்கள் புகையில் மயங்கியவை என கிடந்தன.

ஊர்வர் "அரசே, முழுதளித்தல் என்றால் என்ன என்று உங்களுக்கு சொல்லியிருப்பார்கள்…" என்றார். துரியோதனன்

“ஆம்” என்றான். “ஐந்து நிலைகளினாலானது இந்தத் தன்னளிப்பு. எச்சமின்றி அளித்தல், ஐயமின்றி பணிதல், பிறிதின்றி ஒழுகுதல், ஒரு போதும் திரும்பி நோக்காதொழிதல், துயரின்றி ஏற்றல். ஐவகை நோன்பில் ஒன்றில் ஒரு கடுகுமணியிடை குறைவென்றாலும் கனியும் தெய்வம் கடுஞ்சினம் கொள்ளும். அறிக, கலியின் நோக்கு கனல்விழியனையே துயருற்றலையச் செய்துள்ளது. அவன் முன் ஊழும் சுருங்கி வளையும்.”

துரியோதனன் “ஆம், அறிவேன்” என்றான். “இது மீளவழியில்லா பாதை…” என்றார் ஊர்வர். “ஆம், அறிவேன்” என்றான் துரியோதனன். ஊர்வர் புன்னகைத்து “ஆனால் இப்புவியில் அனைத்துப் பாதைகளும் மீளமுடியாதனவே” என்றார். “இது இறப்பு என்று உணர்க!” துரியோதனன் “ஆம், அறிவேன்” என்றான். “இறந்து பிறக்காதவர் எதையும் அடைவதில்லை” என்றார் ஊர்வர். “இந்த காகச்சிறைத் தடுக்கில் அமர்க!” என்றார். துரியோதனன் மழித்திட்ட தலைமயிராலானதுபோன்ற காகச்சிறகுத் தடுக்கில் அமர்ந்தான். “கைகளை மடியில் பூட்டுக! இங்கு வேறு எவரும் இல்லை என்றே கொள்க! ஒருநாழிகைப்பொழுது உங்கள் தெய்வத்தின் காலடியை நோக்கி அமர்ந்திருக்கவேண்டும்.”

“ஆம்” என்றான் துரியோதனன். “இது இறுதி வாய்ப்பு. இப்பூசனை முடிவதுவரை உங்களுக்கு பொழுதிருக்கிறது. இறுதிக்கணத்தில்கூட நீங்கள் இதிலிருந்து ஒழிவதாக அறிவித்து திரும்பிச்செல்ல முடியும்…” என்றார் ஊர்வர். துரியோதனன் “ஆம்” என்றபின் கலியின் சிலையை நோக்கியபடி நிமிர்ந்த தலையும் நிகர்த்துலாவென அமைந்த பெருந்தோள்களுமாக அமர்ந்திருந்தான். ஊர்வர் துர்மதனை நோக்கி “பூசெய்கைப் பொருட்களனைத்தும் வரட்டும். அவற்றை

எண்ணி நோக்கிய பின்னரே நான் வேள்விக்கு எழமுடியும்” என்றார். துர்மதன் கைகாட்ட சூதர்கள் ஒவ்வொரு பொருளாக கொண்டுவந்தனர்.

முதலில் ஏழு குடங்களில் நீர். பின் ஏழு குடலைகளில் தாமரை, குவளை, செண்பகம், நொச்சி, ஊமத்தை, வள்ளை, சங்குமலர் என ஏழுவகை நீலமலர்கள் கொண்டுவந்து வைக்கப்பட்டன. வாழையிலையில் பொதிந்து ஆவியில் வேகவைக்கப்பட்ட அப்பங்கள் அடுப்பிலிருந்து இறக்கப்பட்டு ஏழு கூடைகளில் கொண்டுவந்து வைக்கப்பட்டன. ஏழு குடங்களில் நுரையெழும் கள். சூதர்கள் கொண்டுவந்த கூடைகளில் இருந்து ஏழு கருங்கழுத்துக் காகங்கள், ஏழு கருநாகங்கள், ஏழு கரிய அட்டைப்பூச்சிகள், ஏழு கூகைகள், ஏழு கருங்குரங்குகள், ஏழு கரிய மீன்கள், ஏழு ஆமைகள் கொண்டுவந்து ஊர்வருக்கு காட்டப்பட்டன.

அவர் “பலிவிலங்குகள் ஒருங்கியுள்ளனவா?” என்றார். “ஆம், சுனையருகே நின்றுள்ளன” என்றான் துர்மதன். அவர் நிறைவுடன் தலையசைத்தபின் கருவறைக்குள் நுழைந்தார். துணைப்பூசகர்கள் அப்பகுதியைச் சுற்றி நெய்ப்பந்தங்களை ஏற்ற காட்டெரி என அனல் சூழ்ந்தது. நாகங்கள் வெருண்டு கூடைக்குள் எழுந்து படமெடுத்தன. அவர் கருவறைக்குள் மேலும் பந்தங்களை கொளுத்தினார். ஊர்வர் நீலக்குவளையால் அள்ளி இடக்கை சரித்து ஊற்றி ஏழுமுறை கலியை நீர்முழுக்காட்டினார். பின்னர் மணையில் கால்மடித்து அமர்ந்து ஓசையென்று ஒருபோதும் எழுந்திராத நுண்சொற்களை உதடுகளின் அசைவாக சொன்னபடி கைகளில் எழுந்த நுண்செய்கைகளினூடாக கலிதேவனுடன் உரையாடலானார்.

தாரை மெல்ல “நாம் சென்றுவிடுவோம்” என்றாள். துச்சளை மறுமொழி சொல்லாமல் விழியூன்றி நின்றாள். நீலமலர்களை அள்ளி கலிதேவன்மேல் இறைத்தபடி வாழ்த்துச்சொற்களை சொன்னார். தொன்மையான குடிமொழி எதிலோ அமைந்த அச்சொற்கள் வண்டு முரள்வதுபோலவும் புறா குறுகுவதுபோலவும் கிளி மிழற்றுவதுபோலவும் கூகை குழறுவதுபோலவும் புலி உறுமுவதுபோலவும் மாறிமாறி செவியுடனாடின. ஒருகணத்தில் முழவின் தோற்பரப்பில் கையால் வருடும் ஒலியென்றாயின. பின் குறுவில்லின் நாணொலி என உருமாறின.

துணைப்பூசகர் ஏழு இலைகளில் அப்பத்தை எடுத்து அளிக்க கலிதேவனின் முன் அவற்றை படைத்தார். பலியேற்கும்படி கையசைவு காட்டி தொழுதபின் மலர்களை அவற்றின்மேல் தெளித்தார். அவற்றில் ஓர் இலையை எடுத்துக்கொண்டு சென்று அப்பாலிருந்த காஞ்சிரமரத்தின் அடியில் வைத்துவிட்டு திரும்பி வந்தார். இன்னொரு இலையை எடுத்து மும்முறை சுழற்றி காற்றில் தென்திசை நோக்கி வீசினார். கைகூப்பி ஏழுமுறை வணங்கியபின் வெளிவந்து நின்று நான்கு திசையிலும் சூழ்ந்திருந்த இருளை வணங்கினார்.

பின்னர் துரியோதனனிடம் “சொல்க, இது தருணம்” என்றார். “ஆம், மாற்றமில்லை. என் முடிவு அதுவே” என்றான். “எழுந்து நில்லுங்கள், அரசே” என்றார் ஊர்வர். “கலிதேவனின் ஆலயப்படியை தொட்டு மூன்றுமுறை ஆணையிடுக, அதுவே உங்கள் தன்னளிப்பாகும்.” துரியோதனன் முன்னால் சென்று கல்படியில் வலக்கையால் மும்முறை அறைந்து “ஆணை! ஆணை! ஆணை!” என்றான். “இந்தச் சொற்கோள் இனி உங்களை ஆளும்!” என்றார் ஊர்வர். “இது உங்கள் கால்தாங்கும்

மண்ணும் தலைகவித்த வானும் சூழ்காற்றும் பெய்யொளியும் அனலும் ஆகி உடனிருக்கும்.” துரியோதனன் “ஆம், பேறுகொண்டேன்” என்றான்.

“அரசே, நான்கு சடங்குகளால் நீங்கள் இவ்வெல்லையை கடக்கவிருக்கிறீர்கள். முதல் சடங்கு உலகளித்தல். உங்கள் பதக்கத்தை இரண்டாக உடைத்து கலிதேவனுக்குப் படைக்கும்போது உங்கள் மூதாதையருடன், குருதியுடன், குலத்துடன், நட்புடன், கடமையுடன் கொண்டுள்ள அத்தனை உறவுகளையும் அறுக்கிறீர்கள்” என்றார் ஊர்வர். துச்சலன் உதவ துரியோதனன் தன் கழுத்திலணிந்திருந்த மாலையில் தொங்கிய அரசப்பதக்கத்தை பிரித்தெடுத்தான். ஊர்வர் கைகாட்ட அதை பலிபீடத்தின்மேல் வைத்தான். துணைப்பூசகர் அளித்த வாளால் அதை ஓங்கிவெட்டி இரு துண்டுகளாக தெறிக்க வைத்தான். அதை அவர்கள் எடுத்தளிக்க மும்முறை தலையைச் சுற்றிவிட்டு கலிதேவனின் காலடியில் வைத்து வணங்கினான்.

“இரண்டாவது சடங்கு உடல் அளித்தல்” என்றார் ஊர்வர். அவன் இடப்பக்கமாக விலகி அமர முதியவரான அரசநாவிதர் தன் கருவிப்பெட்டியுடன் அருகே வந்தமர்ந்தார். அவன் தலைகுனிய அவர் தன் கத்தியை எடுத்து வெண்கல்லில் மும்முறை தீட்டிவிட்டு அவன் குழல்கற்றைகளை மழித்தார். காக்கைச்சிறகுகள் என அவை அவன் முன் விரிக்கப்பட்ட வெண்ணிறத் துணியில் விழுந்தன. தாடியையும் மழித்து முடித்தபோது அவன் முகம் புதுக்கலம் என தெரிந்தது. அவன் உடலெங்குமிருந்த மயிர்ப்பரவலை முற்றாக மழித்து வீழ்த்தினார். அந்த மயிர்க்கற்றைகளை துணியுடன் கொண்டுவந்து கலிமுன் பரப்பினர். அவன் தன் சுரிகையை

எடுத்து இடக்கையின் தசைப்பரப்பை கிழித்தான். ஏழு சொட்டு குருதியை மயிர்மேல் உதிர்த்துவிட்டு அதை சுருட்டி எடுத்து மும்முறை தலையைச் சுழற்றி வலப்பக்கமாக எறிந்தான்.

“மூன்றாம் சடங்கு உள்ளம் அளித்தல். இதை கலம்முற்றொழிதல் என்பர்” என்றார் ஊர்வர். அவர் கைகாட்ட துடிகளும் முழவுகளும் கொம்புகளும் மீண்டும் முழங்கத் தொடங்கின. ஆலயத்திற்கு தென்புறமாக செங்கல் அடுக்கி அமைக்கப்பட்டிருந்த பெரிய வேள்விக்குளத்தில் ஏழு பூசகர்கள் விறகுகளை அடுக்கினர். கலிதேவனின் கருவறையில் இடப்பக்கம் எரிந்த பந்தத்திலிருந்து சுடர்பொருத்தி எடுத்துச்சென்று அந்த விறகுக்குவையை பற்றவைத்தார். தழல் எரிந்து எழத்தொடங்கியதும் முழவுகளும் துடிகளும் கொம்புகளும் அவிந்தன. துரியோதனனை ஊர்வர் அழைத்துச்சென்று தெற்குநோக்கி போடப்பட்டிருந்த தர்ப்பைப்புல் பாயில் அமரச்செய்தார். அவனுக்குப் பின்னால் தம்பியர் அமர்ந்தனர். அனலைச் சூழ்ந்து அமர்ந்திருந்த பூசகர் வேதச்சொல்லை ஓதத் தொடங்கினர்.

சற்றுநேரம் கழித்தே அச்சொற்களின் ஒலிமாறுபாட்டை துச்சளை உணர்ந்தாள். அவள் வியப்புறுவதை அவள் கையை தொட்டுக்கொண்டு நின்றிருந்த தாரை அறிந்து “அது அசுரவேதம். எங்கள் குடிகளில் மழையெழ வேண்டி நிகழும் வான்தொழு வேள்விகளில் அச்சொற்களை கேட்டிருக்கிறேன்” என்றாள். “காடுகளுக்குள் இருந்து அசுரகுடிப் பூசகரை முறைச்சொற்கள் கூறி அன்னமும் ஆடையும் பொன்னும் பரிசில்களாக அளித்து வரவழைத்து அதை இயற்றுவோம். ஆண்டுபிறழாமல் வான்கனியச் செய்வது அவர்களின் சொல்லே.”

துச்சளை “ஆனால் நான் இதை முன்பு கேட்டது போலுள்ளது” என்றாள். “நான் கேட்ட அசுரவேதம் தவளைகளை வழுத்திப் பாடுவது. தவளைக்குரல் எனவே ஒலிப்பது” என்றாள் தாரை. “ஆம், இந்தச் சொல்லொழுக்கு அதர்வ வேதத்தைப்போல் உள்ளது” என்றான் விகர்ணன். துச்சளை “தவளைப்பாடல் வேதம் என கேட்டிருக்கிறேன்” என்றாள். “மாண்டூக்யம் அதர்வ வேதத்தைச் சார்ந்த மரபு” என்றான் விகர்ணன். அனலெழுந்து கூத்தாடத் தொடங்கியது. அதில் அவர்கள் மரக்கரண்டியால் நெய்யை ஊற்றிக்கொண்டே இருந்தனர். நடமிடும் தழலுடன் வேதச்சொல் இசையும் விந்தையை துச்சளை பலமுறை கண்டிருந்தாள். காட்டிலெழும் தழலுடன் மேலும் பிழையின்றி இணைந்தாடியது அசுரவேதம்.

தழலாட்டத்திற்கு தாளச்சொற்கட்டுபோல. தழலை செவியால் அறிவதுபோல. அறியாது விழிதிருப்பியபோது பெருநிழல்களாக எழுந்த காடு அவ்வோசையில் தாண்டவமாடுவதை துச்சளை கண்டாள். முதல்முறையாக அச்சம் அவள் நெஞ்சை கவ்வியது. அவள் கொண்ட அச்சத்தை உணர்ந்தவளாக தாரை “செல்வோம், அரசி” என்றாள். “ஆம்” என்றாள். ஆனால் அங்கிருந்து அசையமுடியுமென தோன்றவில்லை. விழிகளை காட்சியால் அவ்வாறு பிணைத்துவிடமுடியும் என அப்போது அறிந்தாள். பெருமூச்சுவிட்டபடி கால்மாற்றி நின்றாள்.

வேள்வித்தீயில் நீலமலர்கள் பொழியப்பட்டன. அவை பொசுங்குகையில் முதற்கணம் தசைவேகும் கெடுமணமெழுந்து குமட்டச்செய்தது. பின்னர் அப்பங்கள். கருகும் அன்னம் எங்கோ அறிந்த மணம் கொண்டிருந்தது. பின்னர் கனிகளும் காய்களும் அவியாக்கப்பட்டன. இறுதியாக கள்குடங்கள் அனலில் பெய்யப்பட்டன. கருகியணைந்த அனல்மேல் நெய் ஊற்றப்பட்டு

தழல் மூட்டப்பட்டது. வேதக்குரல் காட்டு ஓடையின் ஓசைகொண்டு எழுந்து சூழ்ந்தது. முதலில் தேரட்டைகள் அனலுக்கு ஊட்டப்பட்டன. அவை மெழுகென உருகி எரியாயின. பின்னர் காகங்கள். அனலில் போடப்பட்டபோது அவை சிறகடித்து எழமுயன்று பொசுங்கி விழுந்து துள்ளித்துள்ளி விழுந்து அனல்கொண்டன.

தாரை குமட்டலோசையுடன் குனிந்தாள். “ம்” என விகர்ணன் அதட்ட அவள் கால்மடித்து அமர்ந்து தலையை முழங்கால்மேல் வைத்துக்கொண்டாள். குனிந்து அவளை நோக்கினால் தானும் வாயுமிழ்ந்துவிடுவோம் என துச்சளை அஞ்சினாள். கூகைகள் பின்னர் அவியாயின. அனலில் விழுந்ததுமே அவை அச்சமூட்டும் ஓசையுடன் இருமுறை துள்ளி அமைந்தன. கரிய மீன்கள் அனலை அடைந்ததுமே செந்தழலால் வாய் திறந்து கவ்வப்பட்டன. இன்னும் இன்னும் என அனல் எழுந்து கிளை விரித்தது. நாவாக, மலராக, வான்குருதியாக. அனலில் இருந்து விழிவிலக்க அவளுக்குள் சித்தம் திமிறித்துடித்தது. விழி முதலில் அனலுக்கே கட்டுப்பட்டது என அவள் எண்ணினாள்.

ஒன்றன்பின் ஒன்றாக ஏழு கருங்குரங்குகள் அனலில் இடப்பட்டன. கைகள் கட்டப்பட்டிருந்த அவற்றின் வால்கள் சொடுக்கி அதிர்ந்து நீண்டு பொசுங்கி எரிய உடல் உருகி கண் நோக்கியிருக்கவே விலாவெலும்புகள் தோல்மீறி எழுந்து வந்தன. ஒரு குரங்கின் எலும்புமுகம் தசைப்பரப்பு சேறு என வழிந்தகல உந்தி மேலெழுந்தது. அதன் விழிக்குழிகளிலும் பல்நிறைந்த வாயிலும் செவ்வழல் ஊடுருவி எழுந்தது. ஏழாவது குரங்கு முன்னர் எரிந்த குரங்குகளை தன் சிறுவிழிகளில் மின்னும் அனலுடன் வேறெங்கிருந்தோ என

நோக்கிக்கொண்டிருந்தது. அதன் சேர்த்துக் கட்டப்பட்ட கைகள் கூப்பியவை போலிருந்தன. அதை பூசகர் தூக்கியபோது உளிதீட்டும் ஓசை எழ ஒருமுறை விதிர்த்து திரும்பி அவருடைய கைகளை பற்றிக்கொண்டது. அனலில் அதை அவர் வீசியதும் அஞ்சி எரியும் விறகனலைப் பற்றி அந்த அணைப்பிலேயே முடிபொசுங்கி அரக்குடன் சேர்ந்து எரிந்தது.

நாகங்களை ஒவ்வொன்றாக மண்ணில் விட்டார்கள். வேதம் ஓதியபடியே அதன் வளைந்த உடலினூடாக கைகளால் வருடினார் பூசகர். மெல்ல அது உடல்முறுக்கி ஈரமென ஒளி படர்ந்த சுருள்களுக்குமேல் படமெடுத்தது. அதன் வாலில் ஒருவர் தட்ட திடுக்கிட்டு திரும்பி மண்ணில் கொத்தியது. அக்கணமே அதை கழுத்தைப் பற்றி தூக்கினார். அவருடைய கையில் சுற்றி வால்துடித்தது. வால்முனையை இடக்கையால் பற்றி சுருளவிழ்த்து அனல்நோக்கி வீசினார். தழலுக்குள் கருந்தழல் என அதன் வால் நெளிந்து மறைந்தது.

ஏழு நாகங்களையும் அவியாக்கிய பின்னர் பூசகர் ஆமைகளை எடுத்தனர். அதை அனலில் இட்டபோது துள்ளி மல்லாந்தது. அதன் அடிவயிற்றின் தசை உருகி பற்றிக்கொண்டது. ஓடு வெடித்தபோது எழுந்துவிடுவதுபோல தீயுடன் துள்ளியது. ஏழாவது ஆமையை எடுத்து தலைக்குமேல் தூக்கி வேதச்சொல்லை உரக்கக் கூவியபின் நெருப்பிலிட்டார். பூசகர்கள் எழுவரும் இரு கைகளையும் வான்நோக்கித் தூக்கி வேதப்பேரொலி எழுப்பினர். முழவுகளும் கொம்புகளும் துடிகளும் இணைந்துகொள்ள அலையலையாக அப்பேரோசை எழுந்து இருண்ட வானை மோதியது.

ஊர்வர் "அரசே, இவ்வேள்வியில் அச்சம் எனும் அட்டையை அவியாக்கினீர்கள். விழைவெனும் காகங்கள், காமம் எனும்

குரங்குகள், ஆணவமெனும் கூகைகள், சோர்வெனும் ஆமைகள் அவியாக்கப்பட்டன. மந்தணம் எனும் மீன்கள் அனலூட்டப்பட்டன. இறுதியாக நாக வடிவுகொண்ட வஞ்சங்கள். அறிக, இனி உங்களுக்கு இப்புவியில் அஞ்சவும் விழையவும் வெல்லவும் இணையவும் மகிழவும் ஏதுமில்லை. பொன்னோ மண்ணோ பெண்ணோ ஒரு பொருட்டல்ல. புகழும் விண்ணுலகும் எவ்வகையிலும் இனி உங்களுக்கு பொருள்படுவன அல்ல. அரசே, இனி உங்களுக்கு இப்புவியில் எவருடனும் வஞ்சம் என ஏதுமில்லை" என்றார் ஊர்வர். "ஆம்" என துரியோதனன் கைகூப்பினான். "இனி ஆத்மாவை அளித்தல் எனும் சடங்குமுழுமை. அது இறந்துபிறந்தெழல் என்று சொல்லப்படும்" என்றார் ஊர்வர். "ஆம்" என்றான் துரியோதனன்.

நீலக் கச்சை அணிந்த பூசகர் எரியும் பந்தத்துடன் முன்னால் நடக்க அவருக்குப் பின்னால் முழவுகளையும் கொம்புகளையும் துடிகளையும் முழக்கியபடி செவ்வாடை அணிந்த சூதர் சென்றனர். தொடர்ந்து கையில் நீர்க்குடத்துடன் ஊர்வர் நடந்தார். அவரைத் தொடர்ந்து துரியோதனன் நடக்க தம்பியர் உடன்சென்றனர். "செல்வோமா?" என்றாள் துச்சளை. தாரை தரையில் சோர்ந்து சுருண்டு படுத்துவிட்டிருந்தாள். விகர்ணன் "வேண்டாம் அரசி, இதற்குமேல் என்னாலும் இயலாது" என்றான். "ஊன் எரியும் கெடுமணம் அல்ல இது. நாமறியா பெருங்கீழ்மைகளின் நாற்றம்."

ஒருகணம் அடிவயிறு பொங்கி நெஞ்சிலறைய துச்சளை குமட்டினாள். பின்னர் அதை உள்ளே செலுத்தி உடலை அடக்கி "நான் சென்று பார்க்கவிருக்கிறேன்" என்றாள். விகர்ணன் "வேண்டாம், இதிலிருந்து நாம் மீளவே முடியாது" என்றான்.

“இது என்னில் எதை நிறைக்கிறதென்று பார்க்கிறேன்” என்றாள் துச்சளை. “இதை பார்க்காதொழிந்தால் இதுவே என் நெஞ்சில் நின்று பெருகும். இத்துடன் நானும் இங்கே இறந்து பிறந்தால் அது நன்றே.” விகர்ணன் பெருமூச்சுவிட்டான். அவள் திரும்பி அவர்கள் சென்ற திசை நோக்கி சிற்றடி வைத்து நடந்தாள். கூழாங்கற்கள் நிறைந்த பாதையில் அவளால் சீராக நடக்கமுடியவில்லை. இடறி நின்றும் மூச்சிளைக்க ஓய்வெடுத்தும் தொடர்ந்துசென்றாள்.

ஒரு மருதமரத்தடியை அடைந்ததும் கால் தயங்கி நின்றாள். அதன் முதலைத்தோல் பட்டைப்பரப்பில் கையூன்றி எழுந்த வேர்புடைப்பில் மெல்ல அமர்ந்தாள். சரிந்துசென்ற பாதையின் இறுதியில் ஊர்வரும் துணைப்பூசகரும் கூடி நின்றிருந்தனர். நடுவே ஓடையிலிருந்து சால் திருத்தி கொண்டுவந்து சேர்த்த சுனை நீர்ச்சுழிமேல் அனல் அலைய இருளில் ஒரு பெருநாகவிழி எனத் தெரிந்தது. சுனையின் மென்சேற்றுக்கதுப்பு அலைவடிவுகள் நுரைக்கோடுகளெனப் பதிந்து சூழ அதில் இறங்குவதற்காக மரத்தாலான படிகள் இடப்பட்டிருந்தன. ஊர்வர் அதனருகே சென்று நிற்க துரியோதனன் அவர் அருகே சென்று வணங்கி நின்றான். ஊர்வர் கைகாட்ட ஓசைகள் ஓய்ந்தன.

ஊர்வர் “அரசே, இது இறுதிக்கணம். இனி பிறிதொரு எண்ணத்திற்கு இடமில்லை. இப்போதுகூட பின்னடி வைக்கமுடியும். உங்கள் உள்ளம் சிதைவுறும், உடல் நோயுற்று அழியும். ஆனால் எழும்பிறவிகளில் மீட்புண்டு, மண்ணிலிருந்து வரும் எள்ளும் நீரும் வந்துசேர பாதையும் எஞ்சும். இவ்வெல்லையைக் கடந்தால் உங்கள் ஆத்மா முடிவின்மையை நோக்கி வீசப்படுகிறது. முடிவற்றவை இருள்,

தனிமை, வெறுமை மூன்றுமே என்று அறிக” என்றார். துரியோதனன் “என் முடிவில் மாற்றமில்லை. என் தெய்வம் என்னை அணிந்துகொள்க!” என்றான்.

“அவ்வாறே ஆகுக!” என்ற ஊர்வர் துர்மதனிடம் கையசைக்க அவன் திரும்பி ஓடிச்சென்று கைவீசி பலிவிலங்குகளை கொண்டுவரச் சொன்னான். சூதர்கள் காட்டில் கட்டப்பட்டிருந்த பலிவிலங்குகளை கயிற்றைக் கட்டி இழுத்துக்கொண்டுவந்தனர். ஏழு எருமைகள் தளர்ந்த நடையுடன் உருளைக் கருவிழிகளில் பந்தவெளிச்சங்கள் துளிகொள்ள பெருமுரசுக்கோல்முழை என குளம்புகளை தூக்கிவைத்து நடந்து வந்தன. ஓசைகளுக்கேற்ப அவற்றின் செவிகள் அசைந்தன. துயிலில் என ஏழு கழுதைகள் வந்தன. தலைதாழ்த்தி ஒற்றைக்கால் தூக்கி கழுதைகள் துயின்று நிற்க எருமைகள் குனிந்து தரையிலிருந்து புல்சரடுகளை கடித்து மென்றன. ஏழு பன்றிகளை கால்கள் சேர்த்துக் கட்டி நடுவே மூங்கில் செலுத்தி தூக்கிக்கொண்டுவந்து போட்டனர். அவை கரிய தோல்நீர்ப்பை என வயிறுகள் துள்ள எம்பி எம்பி முழவொலியெழுப்பி உறுமின.

பேருடல்கொண்ட இரு துணைப்பூசகர்கள் இடையளவு உயரம் கொண்ட பெரிய பள்ளிவாட்களுடன் வந்து நின்றனர். சுனைக்கரையில் இருந்த பெரிய மரவட்டம் பலிபீடம் என்பதை துச்சளை அப்போதுதான் உணர்ந்தாள். அந்த அதிர்ச்சி அவளை அறியாமல் எழுந்து நிற்கச்செய்தது. பள்ளிவாளை ஒரு பூசகர் அசைத்தபோது அதிலமைந்திருந்த வெண்கலச் செண்டுமணிகள் சிலம்பின. முதல் எருமையை இரு பூசகர் அழைத்துவந்து பலிபீடத்தருகே நிறுத்தினர். தலையில் நீர் தெளிக்கப்பட்டதும் அது கழுத்தை நீட்டியது. எடைமிக்க வாள் மின் என இறங்கி

பீடத்தில் பதிந்து நடுங்க எருமைத்தலை எடையுணர்த்தும் ஓசையுடன் அப்பால் விழுந்து சேற்றில் உருண்டு சுனைநீருக்குள் விழுந்தது.

குளம்புகள் இழுபட சேற்றில் கிடந்து துடித்த எருமையின் வெட்டுண்ட கழுத்துவழியாக குருதி கொப்புளங்களுடன் பெருகி வழிந்து சுனைநீரை அடைந்தது. அதன் பெரிய வயிறு காற்றொழியும் தோல்கலம் என அதிர்ந்து சுருங்க விலாவெலும்புகள் உள்ளே அசைந்தன. வால் சுழன்று பூழியை அளைந்தது. துணைப்பூசகன் பீடத்தை இழுத்து இடமாற்றம் செய்தான். இரண்டாவது எருமை அங்கே கொண்டுவரப்பட்டது. அதன் குருதி சிற்றோடையாக வழிந்து சுனையில் கலந்தது. குருதி கருநிறம் கொண்டிருப்பதாக துச்சளை எண்ணினாள். ஆனால் செம்மையை நினைத்ததுமே அது செந்நிறம் கொண்டது.

பலிபீடத்தை இழுத்து அகற்றி சுனையைச் சுற்றி அமைத்து ஏழு எருமைகளையும் வெட்டி குருதிபெருகச் செய்ததும் கழுதைகள் கொண்டுவரப்பட்டன. குருதி மணம் பெற்று அவை மயிர்சிலிர்த்து செவிகோட்டி மூச்சொலி எழுப்பின. இருவர் பின்னின்று தள்ள தயங்கி பிடரி அதிர நின்று பின் மெல்ல பலிபீடத்தை அணுகின. முதல் கழுதையின் வெட்டுண்ட தலை சேற்றிலேயே செவியசைத்தபடி கிடந்தது. அதை கைக்கோலால் தள்ளி நீரிலிட்டனர். தரையில் ஒருக்களித்து விழுந்து ஓட முயல்வதுபோல காலசைத்தது. இரண்டாவது கழுதை வெட்டப்பட்டபோது பின்னால் நின்ற கழுதை மெல்ல கனைத்தது. அதன் தலை நீரில் விழுந்த பின்னரும் காதுகள் அசைந்து அங்கே மீன் கொப்பளிப்பதுபோல தோன்றியது.

பன்றிகளை பீடங்களின்மேல் வைத்து அடிக்கழுத்தை கிழித்து குருதி பீறிடச்செய்து தலையுடன் சேற்றில் கிடத்தினர்.

சுனையைச் சூழ்ந்து பலியுடல்கள் இறுதித்துடிப்பில் அதிர்ந்துகொண்டிருக்க சேற்றில் ஊறி வழிந்த குருதியால் சுனை பெரும்புண் என மாறியது. குருதியின் சுழிப்பு. நோக்கிழந்த ஊன்விழி. ஊர்வர் துரியோதனனிடம் "அரசே, அணி களைக! இப்புவி அளிக்கும் ஒரு துளிகூட உடலில் இருக்கலாகாது. கருவறை விட்டுவந்த அதே தோற்றம் கொள்க!" என்றார். துச்சலன் துரியோதனனின் கைகளில் இருந்த அரசக் கணையாழியை கழற்றினான். இடையில் இருந்த மங்கலச்சரடை சுரிகையால் அறுத்து எடுத்தான். துர்முகன் அவன் இடையிலிருந்த ஆடையை கழற்றினான். உள்ளே கட்டியிருந்த தற்றாடையை அதன் முடிச்சுகளை அறுத்து அகற்றினான். சுபாகு அவன் தலையில் மலரிதழ்கள் எஞ்சியிருக்கின்றனவா என நோக்கினான்.

முழுதுடலுடன் நின்ற துரியோதனனை ஊர்வர் சுற்றி வந்து நோக்கினார். உடலில் ஒட்டியிருந்த புல்சரடு ஒன்றை எடுத்து வீசினார். துணைப்பூசகரும் அவனை மும்முறை சுற்றி வந்து நோக்கினர். துச்சளை அவன் உடலையே நோக்கிக்கொண்டிருந்தாள். முன்பு பலமுறை நோக்கிய உடலென்று தோன்றியது ஏன் என அவள் அகம் குழம்பியது. மானுட உடல் அல்ல அது. கல்லில் மட்டுமே அம்முழுமை இயல்வது. மயிரற்ற உடல் உலோகப் பளபளப்பு கொண்டிருந்தது. எங்கோ என்றுமென இருக்கும் அச்சு ஒன்றில் வார்த்தெடுக்கப்பட்டது. தெய்வங்கள் மானுடக் கைகளை எடுத்துக்கொண்டு நுண்சீர் செய்தது. இனியில்லை என முழுமையைச் சென்றடைந்த தசைகள், நரம்புகள். கால்நகங்கள்

சிறுத்தைக் குருளைகளின் விழிகள் என வெண்ணிற ஒளி கொண்டிருந்தன.

ஊர்வர் துரியோதனனின் கைகளைப் பற்றியபடி அழைத்துச்சென்று நீர் விளிம்பருகே நிறுத்தி “இறங்கி நீராடுக, அரசே!” என்றார். அவன் குனிந்து நீரையே நோக்கிக்கொண்டிருந்தான். “நீராடுக!” என்றார் ஊர்வர். துரியோதனன் திடுக்கிட்டவன்போல திரும்பி அவரை நோக்கினான். “செல்க, இது உங்கள் அன்னையின் கருக்குழி” என்றார் ஊர்வர். அவன் மெல்ல காலடி எடுத்துவைத்து சேற்றிலிறங்கினான். அவன் கால்கள் நடுங்கிக்கொண்டிருந்தன. “கைகளை கூப்புக!” என்றார் ஊர்வர். அவன் குழந்தைபோல் அதை செய்தான். பிறிதெவரையோ என அவரை நோக்கிக்கொண்டிருந்தான். அறியாமல் நடந்து அக்குழுவருகே வந்துவிட்டிருந்த துச்சளை அவ்விழிகளை அண்மையில் நோக்கினாள். அறியாமையின் பேரழகுகொண்ட இளமைந்தருக்குரிய விழிகள் அவை. மறுகணம் வாய்திறந்து மழலைச்சொல் எடுக்கக்கூடுமென தோன்றச்செய்தவை.

சுனையில் நீர் அலைகொப்பளிக்கத் தொடங்கியது. அதற்குள் பல்லாயிரம் கருநாகங்கள் நெளிவதுபோலத் தோன்றியது. “இறங்கி மூழ்குக!” என்றார் ஊர்வர். “இது கருபுகுதல். அங்கு நீருள் நூற்றெட்டு நொடி அமர்ந்திருக்கவேண்டும். முதல் முழுக்கில் உங்கள் பழைய நினைவுகள் அழியும். இரண்டாம் முழுக்கில் மூதாதையரை காண்பீர்கள். மூன்றாம் முழுக்கில் அவர்களை உதைத்து உதறி தலைகீழாக மண்ணில் விழுவீர்கள்.” துரியோதனன் பால்பற்கள் கொண்ட குழவியரின் வாய்களில் மட்டுமே எழும் இனிய புன்னகையுடன் அவரை

நோக்கி தலையசைத்தான். அறியா உணர்வெழுச்சியால் துச்சளை விழிநீர் மல்கினாள்.

துரியோதனன் மெல்ல படிகளில் இறங்கி இடைவரை குருதியில் நின்றான். “மூழ்குக!” என்றார் ஊர்வர். அவன் கண்மூடி நீரில் மூழ்க அவர் நூற்றெட்டு வரை விரல்விட்டு எண்ணினார். அவன் நீர் பிளந்து எழுந்தான். மழிக்கப்பட்ட தலையிலிருந்து குருதி சொட்டி வடிய வயிறுகிழித்து எழும் மகவென்றே தோன்றினான். “பிறிதொருமுறை! பிறிதொருமுறை!” என்றார் ஊர்வர். அவன் நீரில் மூழ்கியபின் அவர் எண்ணத்தொடங்கியபோது நீர் பிளந்து எழுந்த காகம் ஒன்று “கா!” என்னும் கூச்சலுடன் துளிசொட்டச் சிறகடித்து இருளில் மிதந்து சுழன்றது. மீண்டும் ஒரு காகம் எழுந்து அதனுடன் இணைந்தது. கைகூப்பியபடி எழுந்த துரியோதனன் திகைத்து நோக்க “மூழ்குங்கள்” என்றார் ஊர்வர். அவன் மீண்டும் மூழ்கியபோதும் கூச்சலிட்டபடி மேலும் காகங்கள் எழுந்து நீரைச் சிதறடித்து இருளில் சுழன்றன.

மூன்றாம் முறை துரியோதனன் நீரிலிருந்து எழுந்து கைகூப்பியபடி கரையை அணைந்தபோது தலைக்குமேல் இருளின் சுழி என நூற்றுக்கும் மேற்பட்ட காகங்கள் சுழன்று பறந்தன. அவற்றின் குரல்கள் இணைந்து எழுந்த ஓசையை அவள் முன்பு கேட்டிருந்தாள். ஊர்வர் “நேராகச் சென்று உங்கள் தெய்வத்தின் படியில் தலைவையுங்கள், அரசே” என்றார். அவன் கூப்பிய கைகளை விலக்காமல் நடந்துசெல்ல அவன் பின்னால் ஊர்வரும் துச்சாதனனும் துர்மதனும் துச்சலனும் துச்சகனும் சென்றனர். துணைப்பூசகர் தொடர்ந்தனர்.

சுனையருகே நின்றபடி துச்சளை நெஞ்சில் கைவைத்து நோக்கிக்கொண்டிருந்தாள். உள்ளிருந்து அலையலையென

காகங்கள் எழுந்து இருளில் கருங்குமிழிகள் என சுழன்றுகொண்டிருந்தன. காலடியில் அசைவை உணர்ந்து அவள் திடுக்கிட்டு மேலே சென்று குனிந்து நோக்கினாள். நீருக்குள் இருந்து ஓசையிலா வழிவாக நாகங்கள் கிளம்பி அம்புகள் என இருள்செறிந்த காட்டுக்குள் சென்று புதைந்துகொண்டிருந்தன. துள்ளி ஓடி மேலேறி மருதமரத்தடியில் சென்று நின்றாள். உடல் மெய்ப்புகொண்டு தசைகள் இறுகி அதிர்ந்தன. பற்கள் கிட்டித்து கழுத்துத் தசைகள் இழுபட்டிருந்தன. அங்கும் தரையெங்கும் நிழல்களுடன் நாகங்களும் நெளிவதை கண்டாள்.

மீண்டும் ஓடி மேலே கலிதேவனின் ஆலயமுகப்பிற்கு சென்றாள். அங்கே துரியோதனன் ஆலயத்தின் படிக்கட்டில் நெற்றியை மும்முறை முட்டி வணங்கினான். திரும்பி நோக்க ஊர்வர் அவனுக்கு அவனுடைய சுரிகையை இரு கைகளாலும் எடுத்தளித்தார். அதை வாங்கி கண்களில் ஒற்றிக்கொண்டான். துர்மதன் அவன் ஆடைகளை எடுத்து அணிவிக்கத் தொடங்கினான்.

# குருதிச்சாரல் - 42

**பகுதி ஆறு : பொற்பன்றி – 7**

துச்சளை அணிகொண்டு இடைநாழிக்கு வந்தபோது தாரையும் அசலையும் அவளுக்காகக் காத்து நின்றிருந்தனர். தாரை அவளை அணுகி வணங்கி "சற்று முன்னர்தான் தாங்கள் கிளம்பிச்செல்லும் செய்தியை அறிந்தேன், அரசி. பட்டத்தரசிக்கு அறிவித்துவிட்டு ஓடிவந்தேன்" என்றாள். துச்சளை "நான்

விதுரருக்கும் அன்னைக்கும் அறிவித்துவிட்டேன். பிறருக்கு முறைப்படி தெரிவிக்கப்படட்டும்” என்றாள். தாரை “சைந்தவர் இங்கிருக்கிறார். உடனிருப்பீர்கள் என்று எண்ணினேன்” என்றாள். “ஆம், அதன்பொருட்டே வந்தேன். இனி என்னால் இங்கிருக்க இயலாது. இருந்து ஆவதும் ஒன்றுமில்லை” என்றாள்.

அசலை ஒன்றும் சொல்லாமல் நின்றிருந்தாள். துச்சளை அவள் கைகளைத் தொட்டு புன்னகை செய்தாள். தாரை விசும்பும் ஒலி கேட்டு துச்சளை திரும்பி நோக்கினாள். அவள் கண்ணீர் வழிய முகம் குனித்திருப்பதைக் கண்டும் ஒன்றும் சொல்லவில்லை. அவளுடைய அணுக்கச்சேடி சாரிகை அருகே வந்து “தேர்கள் ஒருங்கிவிட்டன, அரசி. அகம்படியர் நிரைகொண்டுவிட்டனர்” என்றாள். துச்சளை “நான் கிளம்புவதற்கான ஆணையை விதுரர் அளித்துள்ளாரா?” என்றாள். சாரிகை தயங்கி “அதை நான் அறியேன்... சூர்யை அறிந்திருக்கக் கூடும்” என்றாள். “எவ்வண்ணமாயினும் நாம் கிளம்புவோம். அரச ஒப்புதல் இல்லையேல் கோட்டைவாயிலை அடைவதற்குள் நமக்கு சொல்லப்படவேண்டும்” என்றபின் மீண்டும் அசலையின் தோளைத் தொட்டபின் நடந்தாள்.

தாரையும் அசலையும் அவளுக்குப் பின்னால் ஒன்றும் சொல்லாமல் நடந்தனர். ஈரம் நிறைந்த காற்று வந்து சாளரக்கதவுகளை அறைந்து சுழன்றது. குளிரில் உடல் மெய்ப்புகொள்ள தாரை தோள்களை ஒடுக்கி கைகளை மார்பின்மேல் கட்டிக்கொண்டாள். படிகளில் மெல்ல காலெடுத்து வைத்து இறங்கி முகப்புக்கூடத்திற்கு வந்த துச்சளை நின்று இளைப்பாறி மேலே நோக்கினாள். அங்கே விழியறியா எவரோ நிற்பதைப்போல முகம் சுருங்கி

உயிர்த்தபின் செல்லலாம் என சாரிகையிடம் கைகாட்டிவிட்டு முற்றம் நோக்கி சென்றாள். அங்கே காவல்நின்ற வீரர்கள் தலைவணங்கினர்.

முற்றத்தில் இளஞ்சாரல் திரைபோல காற்றிலாடியபடி நின்றிருந்தது. நனைந்து ஒளிகொண்டிருந்த மென்மயிர் உடல்களுடன் கரிய புரவிகள் தேர்நுகத்தில் நின்றிருந்தன. வெள்விழி கொண்டிருந்த வலக்குதிரை அவள் அணுகுவதை கண்ணுருட்டி நோக்கி பெருமூச்சுவிட்டு முன்கால் வைத்து தேரை மெல்ல அசைத்தது. தேர்த்தட்டிலிருந்த பாகன் அதன் முதுகில் கோலை வைத்து வருடி ஆறுதல்படுத்தினான். இடக்குதிரை பிடரியும் புட்டமும் சிலிர்க்க வால்சுழற்றியது. மழைத்திரைக்கு அப்பால் தோல்கவசமும் வேல்முனைகளும் நனைந்து மின்ன புரவிகளில் அமர்ந்தபடி அகம்படிப்படைவீரர் மூன்று நிரைகளாக அணிகொண்டிருந்தனர். அவர்களின் தலைவன் சிந்துநாட்டின் கரடிக்கொடியுடன் நின்றிருந்தான். அவனுக்குப் பின்னால் இரு அறிவிப்பாளர்கள் கொம்பும் எரியம்பு செலுத்தும் வில்லுமாக நின்றனர்.

பின்காலை ஆகியும் வெயிலெழவில்லை. நீர்த்தாரைகளினூடாக வானிலிருந்து வழிந்திறங்கிய ஊமைவெளிச்சம் நகர்மேல் படிந்திருந்தது. நனைந்த அரண்மனைக்கோட்டை கருமைகொண்டிருந்தது. காவல்மாடங்களின் குவைமுகடுகளும் கரிபடிந்திருந்தன. தேரின் பித்தளைமுகடு மட்டும் வானின் ஒளியில் மின்னியது. சூர்யை அருகணைந்து “அனைத்துப் பொருட்களையும் எடுத்து வைத்துவிட்டேன், அரசி” என்றாள். துச்சளை தலையசைத்தாள். தலைமைக்காவலன் அவளுடைய ஆணைக்காக காத்திருந்தான். அவள் மீண்டும் அசலையையும் தாரையையும்

நோக்கி “சென்றுவருகிறேனடி... ஊழை தெய்வங்களே ஆள்கின்றன என்று மட்டும் நம்புக! நாம் செய்வதற்கு பிறிதொன்றுமில்லை” என்றாள்.

அசலைக்குப் பின்னால் பாதியுடல் மறைய நின்றிருந்த தாரை தலைகுனிந்து அழுதுகொண்டிருந்தாள். அவள் தலைமேல் கைவைத்து மெல்ல அழுத்தி புன்னகைத்த பின் துச்சளை தேர் கிளம்பலாம் என தலைமைவீரனுக்கு கைகாட்டினாள். அவன் கைதூக்க கொம்பூதி மும்முறை பிளிறலோசை எழுப்பினான். அகம்படிக் குதிரைகளில் சில காலெடுத்துவைத்து அசைவெழுப்பின. அவன் உரத்த குரலில் “அஸ்தினபுரியின் இளவரசி, காந்தாரக்குடித்தோன்றல், சைந்தவி, துச்சளை எழுந்தருள்கை!” என அறிவித்தான். துச்சளை மேலும் சில கணங்கள் தயங்கினாள். அவள் விழியோட்டுவதைக் கண்ட அசலை “என்ன தேடுகிறீர்கள், அரசி?” என்றாள். இல்லை என அவள் தலையாட்டினாள். பானுமதியின் அணுக்கச்சேடி சத்யை அப்பால் விரைந்து அணுகுவதைக் கண்டதும்தான் துச்சளை அவளுக்காகவே காத்திருக்கிறாள் என்று உணர்ந்தாள். சத்யை அருகணைந்து தலைவணங்கி மூச்சிரைக்க “அரசியின் செய்தியுடன் வந்தேன், அரசி” என்றாள். “சொல்க!” என்றாள் துச்சளை.

“விரைவில் அஸ்தினபுரியின் இளவரசர்களுக்கான மணநிகழ்வு இங்கு ஒருங்கும். அனைத்தும் இன்னும் இரு நாட்களில் முடிவுசெய்யப்படும். அப்போது மைந்தரின் அத்தை உடனிருக்கவேண்டும் என்பது முறைமை என்றார்கள், அரசி” என்றாள் சத்யை. மேலும் சொல்லப்படுவதற்காக விழியிமைக்காமல் துச்சளை காத்திருந்தாள். “ஆனால் அவை வாள்மாலை சடங்காக நிகழுமென்றால் அத்தையின் வாழ்த்து

வாளினூடாகவே அளிக்கப்படலாம் என்றார்” என்றாள் சத்யை. துச்சளை பெருமூச்சுவிட்டு “நன்று, நான் அரசியை வணங்கி விடைகொண்டேன் என்று அவர்களிடம் சொல்க! என் கைகள் இங்கு தேவையாக இருக்கும்போது வருவேன் என்று கூறுக!” என்றபின் அசலையையும் தாரையையும் நோக்காமல் தேர்நோக்கி சென்றாள்.

சூதன் படிப்பலகையை வைக்க சாரிகையையும் சூர்யையையும் இரு கைகளாலும் பற்றிக்கொண்டு மெல்ல ஏறி அவர்களின் தோள்களிலிருந்து கைதூக்கி தேரின் தூணை பற்றிக்கொண்டு உடலை உந்தி மேலெழுந்து உள்ளே சென்று பீடத்தில் அமர்ந்தாள். அதற்குள் அவள் உடல் சற்று நனைந்துவிட்டிருந்தது. அந்தச் சிறுமுயற்சியிலேயே அவளுக்கு மூச்சிரைத்தது. சூர்யையும் சாரிகையும் உடன் ஏறிக்கொள்ள பாகன் தேர்ப்புரவிகளைத் தட்டி சகடம் கிளம்பச்செய்தான். கொடிவீரனும் அறிவிப்பாளர்களும் முதலில் செல்ல பன்னிரு புரவிவீரர் தொடர்ந்து சென்றனர். அதன்பின் அவளுடைய தேர் சென்றது. தொடர்ந்து பிற அகம்படிப்புரவியர் சென்றனர்.

காவலரணைக் கடந்து செல்லும்போதுதான் அவள் கோட்டைமேல் படிந்திருந்த கரிய படலத்தை கண்டாள். “என்னடி அது?” என்றாள். சாரிகை “அரசி, இரண்டுநாட்களுக்குள் நகரெங்கும் இந்தக் கரும்பாசிப்பரப்பு படர்ந்துவிட்டது. இது முன்னரும் இங்கிருந்திருக்கிறது என்கிறார்கள். இதன் விதை இந்த மண்ணில் மறைந்துள்ளது, இந்த மழை அதை முளைக்கச் செய்துவிட்டது என்று விறலி சொன்னாள்” என்றாள். “இதன் பெயர் மகாகலியம் என்று ஒரு முதுசெவிலி சொன்னாள்” என்றாள் சூர்யை.

துச்சளை பதற்றத்துடன் திரைவிலக்கி நகரை நோக்கிக்கொண்டு அமர்ந்திருந்தாள். "அத்தனை சுவர்களிலும் படர்ந்திருக்கிறது..." என்றாள். "ஆம் அரசி, அந்தி கவிழ்வதுபோல வந்தமைந்துவிட்டது என்கிறார்கள்" என்றாள் சூர்யை. சாரிகை "நகரெங்கும் எலிகள் பெருகிவிட்டிருக்கின்றன. எங்கிருந்து கிளம்பிவந்தன என்று தெரியவில்லை. மண்ணுக்கு அடியிலிருந்து கரிய நீரூற்றுக்கள்போல வந்துகொண்டே இருக்கின்றன. இல்லங்களில் சுவர்களின் ஓரமாக கட்டெறும்பு நிரைகள்போல செல்கின்றன என்கிறார்கள்" என்றாள். சூர்யை "அவற்றைப் பிடிக்க நாகங்கள் வந்து சேர்கின்றன. அரண்மனையின் கீழ்த்தளம் முழுக்க நாகங்கள் என்றனர் சேடியர். நேற்று அடுகலங்களின் அறையைத் திறந்தபோது வைக்கோல்சுருட்கள் போல நாகக்குழவிகளை கோலால் அள்ளி அள்ளி வெளியே போட்டார்கள்" என்றாள்.

துச்சளை சாலையை நோக்கிக்கொண்டே வந்தாள். அத்தனை சுவர் விளிம்புகளிலும் கரிய கோடென நனைந்த காகங்கள் செறிந்து அமர்ந்திருந்தன. மரக்கிளைகள் காகங்களால் கருமைகொண்டிருந்தன. "அதோ..." என்றாள் சாரிகை. சாலையோரத்தில் இரு நாகங்கள் வால்சொடுக்கி சிறு சுவரிடுக்கு ஒன்றுக்குள் நுழைந்தன. "ஆனால் எவரும் அஞ்சுவதுபோல் தெரியவில்லை" என்றாள் துச்சளை. "ஆம் அரசி, நகர்மக்கள் நாகங்களை கொண்டாடுகிறார்கள். இந்திரவிழா எழுந்ததுபோல் அனைவரும் களிவெறி கொண்டிருக்கிறார்கள்" என்றாள் சாரிகை.

துச்சளை சாலைகளில் சென்றவர்களை நோக்கிக்கொண்டு அமர்ந்திருந்தாள். மழையில் நனைந்த ஆடைகள் உடலோடு ஒட்டியிருக்க தலைமயிரிலும் மீசையிலும் தாடியிலும்

நீர்த்துளிகள் மின்ன அவர்கள் உள்ளிருந்து எழுந்த உவகையில் சிரித்துக்கொண்டிருந்தனர். நடைகளில் துள்ளலும் கைவீச்சுகளில் விசையும் தெரிந்தது. பெண்டிரும் சிறியோரும் களிகொண்டு உரக்க கையசைத்துப் பேசினர். ஒருவரை ஒருவர் நோக்கி கூச்சலிட்டனர். நகரின் நடுவே அவர்களின் தேர் சென்றதை எவரும் ஒரு பொருட்டென கருதவில்லை. நடைததும்ப தெருவின்மேல் எழுந்து வழிமறித்தவர்களை முன்னால் சென்ற வீரர்கள் அதட்டியும் வேலால் உந்தியும் விலக்கினார்கள். "நாகங்களைக் கண்டு விழிபழகியபின் அவை மட்டுமே தெரிகின்றன. அத்தனை இடுக்குகளிலும் நிழல்களே நாகங்களாகிவிட்டிருக்கின்றன" என்றாள் சாரிகை. "நம் சித்தம்தான் மயங்கிவிட்டதா? இவை நம் உளமயக்குகளா?" என்றாள் சூர்யை.

துச்சளை அதை ஒரு கொடுங்கனவென்றே உணர்ந்தாள். மேற்குக்காட்டிலிருந்து கிளம்பி திரும்பி வரும்போதே அவள் கால்தளர்ந்து மயங்கி விழுந்தாள். கரிய நதிப்பெருக்கு ஒன்றில் மிதந்துசெல்வதாக கனவுகண்டாள். வழுப்புடல் கொண்ட மீன்களும் நெளியும் தேரட்டைகளும் உடலை தொட்டுச்சென்றன. குமிழிகளெல்லாம் புழுக்கள் என்று உணர்ந்தாள். பெரிய குமிழிகள் எருமை விழிகள், கழுதைகளின் விழிகள், பன்றிகளின் விழிகள். செவ்வொளி கொண்டிருந்தன. அது கெட்டு நிறம் மாறிய குருதியின் பெருக்கு. இழிமணம் கொண்ட சீழ். துயிலிலேயே உடல் உலுக்க வாயுமிழ்ந்தாள். மீண்டும் மீண்டும் கழுத்திறுகிய விலங்கென ஒலியெழ குமட்டிக்கொண்டிருந்தாள்.

தன் அறையில் மஞ்சத்தில் விழிப்புகொண்டபோது மூச்சுத்திணற நதியின் அடிச்சேற்றில் காலுதைத்து குளிர்ந்த

நீர்ப்பரப்பை பிளந்து எழுவதுபோல் உணர்ந்தாள். உடல் நனைந்து ஆடைகள் ஒட்டியிருந்தன. இடமுணர்ந்ததும் “விடாய்! விடாய்!” என்றாள். சாரிகை கொண்டுவந்த குளிர்நீரை நான்குமிடறு உண்டதும் குமட்டி ஓசையுடன் வாயுமிழ்ந்தாள். உடல் நடுங்க கண்களில் நீர் வழிய மீண்டும் மஞ்சத்தில் படுத்திருந்தாள். அன்று முழுக்க காயும் உடலுடன் கனவிலும் நனவிலுமாக ஊசலாடிய சித்தத்துடன் மஞ்சத்தில் கிடந்தாள். முழு விழிப்பு எழுந்ததுமே கையூன்றி எழுந்தமர்ந்து “சாரிகை! சாரிகை!” என்றாள். ஓடிவந்த சாரிகையிடம் “நாம் கிளம்புகிறோம்!” என்றாள். “அரசி!” என அவள் வியக்க “இப்போதே, உடனே” என்றாள் துச்சளை.

கோட்டைமுகப்பை தேர்கள் சென்றடைந்தபோது அங்கே மனோதரர் புரவியில் அவர்களுக்காகக் காத்து நின்றிருந்தார். நனைந்த மண்ணில் புரவிக்குளம்புகள் எழுத்தாணி பொறிக்கும் எழுத்துக்கள் என பதிய ஓசையிலாது அருகணைந்து தலைவணங்கி “தங்களுக்கு விதுரரின் செய்தி உள்ளது, அரசி” என்றாள். “சொல்க!” என அவள் உணர்ச்சியேதுமின்றி சொன்னாள். “தாங்கள் நகர்நீங்குவதை அமைச்சர் விதுரர் ஏற்கிறார். சிந்துவில் நலமுடனிருக்கும்படி வாழ்த்துகிறார். தங்களுடன் வந்து கங்கையில் படகிலேற்றி அனுப்பும்படி எனக்கு ஆணை” என்றார் மனோதரர். துச்சளை “நன்று, தங்கள் துணை எனக்கு உதவும்” என முகமன் உரைத்தாள்.

மனோதரர் தலைவணங்கி விலக பின்னிருந்து துச்சளை “மானு, என்ன நிகழ்கிறது இங்கே?” என்றாள். அவர் ஒருகணம் நின்றபின் அவள் முகத்தை ஏறிட்டு நோக்கி “இது முன்பும் இங்கு நிகழ்ந்துள்ளது அரசி, இம்முறை இது நீங்கா கொடுநோய் எனத் தோன்றுகிறது” என்றார். “நகரை நஞ்சு மூடியிருக்கிறது”

என்றாள் துச்சளை. “ஆம், இங்கு என்றுமிருந்ததுதான் அது. இன்னும் சில நாட்களில் இங்கு எவரும் எஞ்சப்போவதில்லை” என்றார் மனோதரர். துச்சளை பெருமூச்சுவிட்டு நிலத்தை நோக்கிக்கொண்டிருந்தாள். ஈரமண்ணிலிருந்த வளைந்த கோடுகள் நாகம் வழிந்துசென்ற தடங்கள் என உணர்ந்ததும் அவள் உடல் மெய்ப்புகொண்டது. அதை உணர்ந்த மனோதரர் “அவை இந்நகரை எடுத்துக்கொண்டுவிட்டன, அரசி” என்றாள்.

“விதுரர் எங்கே?” என்று துச்சளை கேட்டாள். “இந்நகரின் முதிய வைதிகரான தீப்தர் நேற்றுமுன்னாள் மறைந்தார். அவருடைய இல்லத்திற்கு அரசமுறைமையாக பட்டும் வரிசையும் கொண்டுசென்றிருக்கிறார்” என்றார் மனோதரர். “கர்க்க முனிவரின் குருமரபில் வந்தவர் தீப்தர் என்று அறிந்திருப்பீர்கள், அரசி. முன்பொருமுறை இந்நகர் காகவஞ்சத்தால் சூழப்பட்டபோது இமயமலையில் இருக்கும் காகதீர்த்தத்தில் இருந்து நீர் கொண்டுவந்து அரசரை நீராட்டி இதை விடுவித்தவர் அவர். அன்றுமுதல் இந்நகரில்தான் தங்கியிருந்தார். அவருக்கு வைதிகர் அவையில் முதன்மையிடம் இருந்தது.”

துச்சளை உளநடுக்குடன் “அவர் எப்போது மறைந்தார்?” என்றாள். “அரசர் கலிச்சுனை ஆடிய அதே பொழுதில்... அவர் இல்லத்தை காகங்கள் சூழ்ந்துகொண்டு பெருங்குரலெழுப்பின. ஓசைகேட்டு அவர் மைந்தர் எழுந்துவந்து நோக்கியபோது இல்லம் கரும்புகை என காகங்களால் மூடப்பட்டிருந்தது. முனகலோசை கேட்டு அவர் சென்று நோக்கியபோது தீப்தர் உயிர்துறந்திருந்தார்.” துச்சளை பெருமூச்சுடன் செல்வோம் என கைகாட்டினாள். மனோதரர் தலைவணங்கி கைகாட்ட தேர் முனகலோசையுடன் கிளம்பியது.

தேர் செல்லத் தொடங்கியதும் துச்சளை "கர்க்கரின் கதை என்னடி?" என்றாள். சூர்யை அக்கதையை சொல்லத் தொடங்கினாள். "கலாவதி கேட்ட அச்சொல் மறைந்த ஆசுரமொழிகளில் ஒன்றில் அமைந்தது. அதை சொல்லித்திரிவன இக்கரிய பறவைகள் என்பதனால் அவை அப்பெயரையே சூடிக்கொண்டன" என்றாள். சாரிகை "தாசார்கனின் ஒவ்வொரு கசப்பும் காழ்ப்பும் வஞ்சமும் தனிமையும் வெறுமையும் காகங்களாக எழுந்து விண்ணில் நிறைந்தன என்கிறது பராசரரின் புராணமாலிகை. அவை மானுடரை ஐயத்துடன், நட்புடன் எப்போதும் நோக்கிக்கொண்டிருக்கின்றன" என்றாள்.

துச்சளை "அது எவ்வண்ணம் கலியின் கொடியென்றாகியது?" என்றாள். சாரிகை சூர்யையை நோக்கிவிட்டு "அறியோம்" என்றாள். சில கணங்களுக்குப்பின் துச்சளை "அறியமுடியாமை ஒன்றால்தான் அவ்வண்ணம் அமையமுடியும்" என்றாள். எழுந்து அமைந்த காகம் ஒன்று "ஏன்?" என வினவியது. அவள் அதை நோக்கிவிட்டு விழிவிலக்கிக்கொண்டாள்.

கலிவனத்தின் தலைமைநரியான அகாபிலன் மூன்று நாட்களாக காட்டுக்குள் குவிக்கப்பட்டிருந்த பலிவிலங்குகளின் ஊனை இளையோரான கிகிகன், லோமசன், கிருங்கன், சிருகாலிகன் ஆகியோருடன் இணைந்து தின்றுகொண்டிருந்தான். அவனைச் சூழ்ந்து அக்காட்டிலிருந்த அத்தனை நரிகளும் ஓநாய்களும் கழுதைப்புலிகளும் செந்நாய்களும் கழுகுகளும் கூடி ஊனுண்டன. அவையனைத்துக்கும் பல நாட்கள் உண்பதற்கான ஊனிருந்தமையால் பூசல்கள் குறைவாகவே நிகழ்ந்தன. அவை

கூடியுண்ணும் ஒலி காட்டின் உறுமலென இரவும் பகலும் ஒலித்துக்கொண்டிருந்தது.

தொடக்கத்தில் காட்டுக்குள் இருந்து மெல்லிய காலடிகளும் ஒளிரும் விழிகளுமாக வந்த புலிகளும் புதர்களுக்குள் வாலசைவாகத் தோன்றி முழவோசையுடன் தலைதூக்கிய சிறுத்தைகளும் தங்களுக்கு உகந்த விலங்குகளைக் கவ்வி இழுத்துக்கொண்டு புதர்களுக்குள் சென்று மறைந்தன. அவை செல்வதற்காகக் காத்திருந்த கழுதைப்புலிகள் எக்காளமிட்டன. மரக்கிளைகளிலும் புதர்களின் மேலும் அமர்ந்திருந்த கழுகுகள் புதைந்திருந்த வெண்தலை நாகமென மேலெழ சிறகடித்து எழுந்து சுழன்றன. அகாபிலன் "என் குடியினரே, பிரிந்துசெல்லாதீர். ஒன்றாக இணைந்து ஒற்றை ஊன்குவையை அணுகுக! பிறரை அருகணைய விடாதீர்கள்" என்றான். அவன் இளையவனாகிய கிகிகன் "இந்த எருமை சுவையானது" என்றான். "ஆம், சில நாட்களில் சற்றே அழுகி மென்மையாகும். அப்போது மேலும் இனியது" என்றான் அகாபிலன்.

அவர்கள் உறுமியபடி கால்களை விரித்து ஊன்றி ஊனைக் கடித்து இழுத்து உண்டனர். நீண்ட குடல்களைக் கவ்வியபடி ஓடிய கிருங்கன் "இத்தனை நீளம்... இது முழுமையும் எனக்கு!" என மகிழ்ந்து வால்சுழற்றி குதித்தான். "ஊன்மலை! ஊன்மலை!" என தன்னைத்தானே சுற்றிவந்தபின் பெரிய துண்டுகளாக கவ்வி உண்ட லோமசன் தொண்டையில் ஊன் சிக்க விக்கலோசை எழுப்பி கக்கி மீண்டும் உண்டான். கிகிகன் இரு முன்னங்கால்களாலும் தொடை ஒன்றைப் பற்றியபடி நெஞ்சு மண்ணில் பதிய படுத்து கண்களை மூடியபடி மென்று விழுங்கிக்கொண்டிருந்தான்.

உண்டு நிறைந்ததும் அவர்கள் சற்றே விலகி அமர்ந்தனர். உண்டவற்றை கக்கி சிறிதாக அள்ளி மீண்டும் மென்று விழுங்கினர். அப்படியே விழிசொக்க விழுந்து கால்பரப்பி துயின்றனர். அவர்களின் கண்ணிமைகளும் காதுகளும் அசைந்துகொண்டிருந்தன. அவ்வப்போது வால் சுழன்றமைந்தது. ஏதோ அகவிளி பெற்ற லோமசன் எழுந்து அமர்ந்து முகத்தை வானோக்கித் தூக்கி உரக்க கூவினான். மேலும் இரு நரிகள் எழுந்து ஊளையிட்டன. படுத்திருந்தவை தலைதூக்காமலேயே ஊளையிட்டு மெல்ல ஓய்ந்து வாய் சப்பிக்கொண்டு மீண்டும் துயின்றன. கனவில் மேலும் பெரிய ஊன்மலைகளைக் கண்டு வாய் விளிம்பு ஊறி வழிய விழித்தெழுந்து உடலில் மொய்த்த ஈக்களை கடித்துத் துரத்தின. சற்றே வயிறு ஓய்ந்ததும் மெல்ல எழுந்து தவழ்ந்து சென்று மீண்டும் ஊன்குவையில் ஏறி உண்ணத் தொடங்கின.

சிருகாலிகன் மிக இளையோன். ஊனைவிட குருதிகலந்த சுனைநீரை நக்கி உண்பதில் அவன் ஆர்வம் கொண்டிருந்தான். அவனை நோக்கி அகாபிலன் “மூடா, அங்கே என்ன செய்கிறாய்? உன் வயிறு நிறைந்தால் ஊனை எப்படி உண்பாய்?” என்றான். சிருகாலிகன் துள்ளிக் குதித்து வாலைச் சுழற்றி “சுவையானது!” என்றான். “மூடன், அவனை இழுத்து வாருங்கள்” என்றான் அகாபிலன். இரு நரிகள் சென்று அவனை கவ்வி தூக்கி இழுத்து வந்தன. “உண்க, நீ வளர்வாய்!” என்று மூத்தவன் இளையவனை வாழ்த்தினான். “நான் குருதியை அருந்துவேன்” என்றான் சிருகாலிகன். “அறிவிலி, அது குருதி அல்ல, வெறும்நீர்” என்றான் அகாபிலன். “இதோ, இந்தக் கரிய பசையே குருதி. ஆற்றல் அளிக்கும் அமுது. இதை உண்க!” சிருகாலிகன் மூத்தவன் அளித்த குருதிக்குழம்பை நக்கி உண்டான். அவர்கள்

மீண்டும் உண்ணத் தொடங்கியபோது திரும்பி சேற்றிலிறங்கி சுனைநீரை குடிக்கலானான்.

அவர்கள் உண்ண உண்ண ஊன் மிகுந்துகொண்டே இருப்பதுபோலிருந்தது. எரி என கொள்ளும்தோறும் விழைவுகொண்டது வயிறு. வானிலிருந்து மேலும் மேலும் கழுகுகள் வந்திறங்கின. புதிய செந்நாய்க்கூட்டங்கள் பசியோலத்துடன் வந்து ஊன்மேல் பாய்ந்தன. மெல்ல ஊன்குவை மறைந்தது. வெண்ணிற எலும்புகளும் மட்கிய தோல்களும் வால்மயிர்களுமாக அப்பகுதி எஞ்சியது. எலும்புகளை நாவால் நக்கியும் கடித்து உடைத்து மென்றும் கழுதைப்புலிகள் அங்கேயே கிடந்தன. அகாபிலன் “நாம் உண்பதற்கு இனி இங்கே ஏதுமில்லை. வருக!” என்றான்.

அவர்கள் அவனைத் தொடர்ந்து சென்றனர். செல்லும் வழியெங்கும் மோப்பம் பிடித்தபடியே நடந்த அகாபிலன் “அயலார்... கெடுமணம் கொண்டவர்கள்” என்றான். சர்ப்பன் என்னும் நரி “இங்கு எரியூட்டப்பட்டுள்ளது” என்றான். “நோக்குக, சாம்பலுக்குள் அனல் இருக்கலாம்” என்றான் அகாபிலன். அவன் தயங்கி முகர்ந்து “இல்லை முற்றணைந்துவிட்டது” என்றான். சிருகாலிகன் ஊளையிட்டபடி ஓடி வந்து வால்சுழற்றியபடி தன்னைத்தானே சுற்றினான். “என்ன அது?” என்றான் அகாபிலன். “அது மயிர்... அறிவிலி... துப்பு அதை...” சிருகாலிகன் அவனைத் தவிர்த்து அப்பால் ஓடி வாயில் முடியுடன் நின்றான். “அதை உண்ணமுடியாது, மூடா” என்றான் அகாபிலன்.

கிருங்கன் கலியின் ஆலய முகப்பில் சென்று நின்று “காகத்தின் இறகு. மட்கிவிட்டிருக்கிறது” என்றான். கிகிகன் அங்கே இருந்த நெய்விளக்குகளில் எஞ்சியிருந்த துளிகளை நக்கி பெருமூச்சுவிட்டான். அணைந்த பந்தங்களுக்குக் கீழே

சொட்டியிருந்த மீன்நெய்யை லோமசன் முகர்ந்து நக்கிப்பார்த்தான். தன்னை எவரும் நோக்கவில்லை என உணர்ந்ததும் சிருகாலிகன் அருகணைந்து "உண்பதற்குரியதா?" என்றான். கிருங்கன் "நெய்..." என்றான். சிருகாலிகன் அதை நக்கி உண்ண "அவனைத் தடு... மண்ணை உண்ணப்போகிறான்" என்றான் அகாபிலன். லோமசன் "துப்பு" என்றான். சிருகாலிகன் துப்பிவிட்டு "இங்கே ஊன் மணம் வீசுகிறது" என்றான்.

கிருங்கன் ஓசைகேட்டு திரும்பி நோக்க இரு கழுதைப்புலிகள் சுனைக்குள் இருந்து அழுகிய எருமைத்தலை ஒன்றைக் கவ்வி இழுத்து சேற்றினூடாக மேலே கொண்டுசெல்வதை கண்டான். அகாபிலன் "அவர்களுடன் நாம் பூசலிட முடியாது. மேலும் நீருக்குள் அழுகியதை நாம் உண்பதில்லை" என்றான். சிருகாலிகன் "ஆகவேதான் அந்நீர் சுவையுடன் இருந்தது" என்றான். சிறிய பறவைகள் மரக்கிளைகளிலிருந்து இறங்கி ஊன்கிடந்த மண்ணைக் கிளறியும் கொத்தியும் உண்ணத் தொடங்கின. பெரிய பறவைகள் சிறகடித்ததும் அவை ஒரே அலையென எழுந்து காற்றில் சுழன்று மீண்டும் அமைந்தன.

சிருகாலிகன் "நான் சென்று அவற்றுடன் விளையாட விரும்புகிறேன், மூத்தவரே" என ஆர்வத்துடன் சொன்னான். "அவற்றை நம்மால் பிடிக்க முடியாது" என்றான் அகாபிலன். "ஆம், ஆனால் நாம் அவற்றுடன் விளையாடலாம்" என்றான் சிருகாலிகன். இரு கழுதைப்புலிகள் சுனைக்குள் இறங்கி மேலும் ஒரு எருமைத்தலையை கவ்வி கொண்டுசென்றன. கரையில் நின்றிருந்தவை இளித்தபடி குரலெழுப்பின. "அவற்றுக்கு ஒன்றும் ஆவதில்லை. அவற்றின் வயிற்றுக்குள் காட்டெரியை ஆளும் அனலை குடிகொள்கிறாள்" என்றான் லோமசன்.

எரிச்சலுடன் தன் உடலில் மொய்த்த ஈக்களை விரட்டியபின் “நம் இடத்துக்கு ஏன் இந்த மானுடர் வருகிறார்கள்?” என்றான் கிருங்கன். “அவர்கள் வந்தமையால் அல்லவா இந்த உணவு?” என்றான் லோமசன். அகாபிலன் “நாம் எவரையும் நம்பி இல்லை. நமக்கு இங்கு ஒருபோதும் உணவு குறைந்ததில்லை” என்றான். சிருகாலிகன் மெல்ல அருகணைந்து சிறுபறவைகளை வால்சுழற்றி துள்ளி பிடிக்கமுயல அவை எழுந்து பறந்தன. சிறிய உவகை ஓசை எழுப்பியபடி சிருகாலிகன் துள்ளித்துள்ளிச் சுழன்றான். மகிழ்ச்சியுடன் அவனை நோக்கிய அகாபிலன் “அழகன். நம் அன்னை அவனில் மகிழ்ந்திருந்தாள்” என்றான்.

நெய்யை முகர்ந்துகொண்டிருந்த லோமசன் “அன்னை இப்போது எங்கிருப்பாள்?” என்றான். “வேறெங்கோ அதே பெயரில் அதே வடிவில் இருப்பாள்” என்றான் அகாபிலன். “நாம் இறந்து மீண்டும் அவ்வண்ணமே பிறக்கிறோம். இதோ, இந்தப் பறவைகள், கழுதைப்புலிகள், செந்நாய்கள், கழுகுகள் அனைத்தும் அவ்வடிவில் அப்பெயரில் மீண்டும் நிகழ்கின்றன. உதிர்ந்த இலைகள் மீண்டு வருகின்றன. அலைகள் சென்று மடிந்தெழுகின்றன.” லோமசன் செவிகளை சொடுக்கியபடி கூர்ந்து நோக்கிவிட்டு திரும்பி கிருங்கனை நோக்கினான். “என்றுமிருப்போம் என்று உணர்ந்திருப்பதனால் நமக்கு இறப்பு அச்சமூட்டுவதில்லை. தெய்வங்களை நாம் வழிபடுவதுமில்லை” என்றான் அகாபிலன்.

கிகிகன் “உள்ளே எவரோ இருக்கிறார்கள்” என்றான். லோமசன் “எவர்?” என திரும்பினான். அவன் மூச்சிழுத்து பிடரி சிலிர்த்து நிற்பதைக் கண்டு “இந்த இடம் நம்முடையது அல்லவா?” என்று சொன்ன கிருங்கனும் மெய்ப்பு கொண்டு தலைதாழ்த்தினான்.

அப்பால் இளையவனை நோக்கி மகிழ்ந்திருந்த அகாபிலன் “என்ன செய்கிறீர்கள்?” என்றபடி திரும்பி நோக்கினான். உடன்பிறந்தார் மூவரும் நோக்கி நின்றிருப்பதைக் கண்டு “யார்?” என்றான். எதிரிகளின் மணம் எழவில்லையே என எண்ணியபோதே அவனும் கண்டுவிட்டிருந்தான். மூச்சிழுத்துவிட்டு மெல்ல காலடி வைத்து அவன் கருவறையை அணுகினான். கலிதேவன் என அமைந்த கல்லுருளையின் விழிகள் உயிரொளியுடன் திறந்திருப்பதை அவன் கண்டான்.

# குருதிச்சாரல் - 43

**பகுதி ஏழு : அலைகளில் திரள்வது – 1**

தன் அணியறைக்குள் பானுமதி பீதர்நாட்டு மூங்கில் பீடத்தில் கைகளை தளர அமைத்து, கால் நீட்டி, தலையை பின்னால் சாய்த்து, விழிமூடி தளர்ந்து அமர்ந்திருக்க சேடியர் அவள் உடலிலிருந்து அணிகளை ஒவ்வொன்றாக அகற்றிக்கொண்டிருந்தனர். அவர்களின் கைகள் அவள் உடல்மேல் சிறு குருவிகள் என பறந்தெழுந்து அமைந்தன. சேடியர் கைகளின் தரிவளைகளின் குலுங்கலோசை மட்டும் கேட்டுக்கொண்டிருந்தது. ஆடியில் அணுக்கச்சேடி லதை தோன்றியபோது அணிச்சேடி பானுமதியிடம் குனிந்து “அரசி, தங்கள் அணுக்கச்சேடி லதை” என்றாள். பானுமதி சில கணங்களுக்குப்பின் களைத்த இமைகளை மெல்ல தூக்கி சிவந்த விழிகளால் லதையை நோக்கி மெல்ல தலையசைத்தாள்.

லதை அருகே வந்து தலைவணங்கி “அரசரின் முதன்மைச் சேடி வல்லபை தங்களுக்கான செய்தியுடன் வந்திருக்கிறார், அரசி. முதன்மைச் செய்தி என்று அறிவிக்கும்படி என்னிடம் சொன்னார்” என்றாள். பானுமதியின் புருவங்கள் சுழித்தன. உதடுகள் ஏதோ சொல்ல என அசைந்து பின் நிற்க “வரச்சொல்க!” என்றாள். லதை “இங்கேயேவா?” என்றாள். பானுமதி “ஆம்” என்று சொல்லி அவளை அனுப்பிவிட்டு அணிச்சேடியரை விலகிச் செல்லும்படி கைகாட்டினாள். அவர்கள் அதுவரைக்கும் கழற்றிய பூண்களை அவற்றுக்குரிய சிறு பேழைகளில் இட்டு அணிமேடையில் வைத்தபின் விழிகளால் ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு ஓசையின்றி பின்னால் சென்று சிறுகதவுகளினூடாக வெளியேறினர்.

அக்கதவுகள் மூடப்பட்டதும் பானுமதி தனிமையை உணர்ந்தாள். அது அவளுக்கு உளவிடுதலையை அளித்தது. நிமிர்ந்தமர்ந்து இரு கைகளையும் மேலே தூக்கி சோம்பல் முறித்தாள். கலைந்து தோளில் கிடந்த குழலை அள்ளிமுடிந்து முதுகிலிட்டபின் ஆடையை சீர்திருத்தி அமர்ந்தாள். லதை உள்ளே வந்து “வருகிறார்” என்றாள். “அவரைத்தான் அன்னையிடமும் தூதனுப்பியிருக்கிறர் அரசர்” என்று தாழ்ந்த குரலில் மேலும் சொன்னாள். பானுமதி கைகாட்ட அவள் பணிந்து விலகி வெளியே சென்றாள். வல்லபை மெலிந்த கூன்கொண்ட முதுமகள்களுக்குரிய பறவைபோன்ற சிற்றடி வைப்புடன் உள்ளே வந்து முறைப்படி வணங்கினாள்.

“அஸ்தினபுரியின் முடிகொண்டு அமைந்த காசிநாட்டு அரசியை வணங்குகிறேன். இத்தருணம் எனது மூதன்னையர் பெருமை கொள்ளும்படி அமைவதாக” என்றாள் வல்லபை. அவள் குரல் காளையின் கழுத்துத் தசைபோல தொங்கி ஆடுவதாக ஓர்

உளவுருவகம் அவளுக்குள் எழ அவள் மெல்லிய புன்னகையை அடைந்தாள். அப்புன்னகை வல்லபையை குழப்பியது. ஆனால் முகத்திலும் பழுத்த விழிகளிலும் ஏதும் வெளிப்படாமல் “அரசரிடமிருந்து அவைச்செய்தி ஒன்று கொண்டுவந்துள்ளேன்” என்றாள். அவளிடம் அமரும்படி பானுமதி கைகாட்டினாள். சிறுபீடத்தில் கால்மடித்து அமர்ந்த வல்லபை தன் வற்றிய கைகளை மடியில் சேர்த்து வைத்துக்கொண்டாள். அவற்றில் பற்றுகொடிகள் என பரவிச்சென்ற நரம்புகளை விழிதாழ்த்தி நோக்கியபடி பானுமதி அமர்ந்திருந்தாள்.

வல்லபை சொல் சுருக்கமும் கூர்மதியும் கொண்டவள் என்பதை பலரும் அவளுக்குச் சொல்லியிருந்தாலும் மிகக் குறைவாகவே அவள் வல்லபையிடம் உரையாடியிருந்தாள். அவளூடாக எச்செய்தியையும் துரியோதனன் அவளுக்கு அனுப்பியதில்லை. பிற அரசருக்கு அவர்களின் அகத்தளம் வரை சென்று சொல்லத்தக்க செய்திகளை கொண்டு செல்பவளாகவே வல்லபை அறியப்பட்டாள். அவளை விதுரர் வெறுத்தார். அரசவையில் வல்லபை எழுகிறாள் என்றால் விதுரர் பின்வாங்கிவிட்டார் என்பதே பொருள். “அரசர்கள் நன்றுக்கும் தீதுக்கும் அன்புக்கும் வஞ்சத்திற்கும் வெவ்வேறு தூதர்களை கொண்டிருக்கவேண்டும். ஒருகையில் நெருப்பும் மறுகையில் நீரும் இருப்பவனே ஆட்சியாளன்” என்ற வரியை அவள் நெஞ்சம் தொட்டு எடுத்தது.

“அரசர் தங்களுக்கு தன் வாழ்த்துகளை தெரிவிக்கும்படி ஆணையிட்டிருக்கிறார், அரசி” என்றாள் வல்லபை. அந்த வரி எந்நூலில் உள்ளது? தேவசேனரின் ராஜநீதிசம்கிரகமா? சுபாஷிதரின் உக்ரபிரகாசிகையா? “நாளை காலை உபப்பிலாவ்யத்திலிருந்து இந்திரப்பிரஸ்தத்தின் முன்னாள்

அரசர் யுதிஷ்டிரரின் செய்தியுடன் துவாரகையின் முன்னாள் அரசர் யாதவர் அஸ்தினபுரிக்குள் நுழைவதாக செய்தி வந்துள்ளது. அவரை தாங்களே சென்று கோட்டை முகப்பில் அரசமுறைப்படி வரவேற்று அரண்மனையில் கொண்டுசென்று அமர்த்த வேண்டுமென்றும் அரசணிக்கோலத்தில் முறைப்படி தங்கள் செலவு அமையவேண்டுமென்றும் அரசர் விழைகிறார்” என்றாள் வல்லபை.

பானுமதி எழுந்து அமர்ந்தபோது அணிகள் ஓசையிட்டன. “அவ்வாறு அரசியர் செல்லும் வழக்கமில்லையல்லவா? அதிலும் அவர் முடிகொண்டு அமர்ந்த அரசர் அல்ல எனும்போது…” என்றாள். “ஆம், அவ்வாறு முன்முறைமை இல்லை. ஆனால் அவ்வாறு செய்வதற்கு தடையுமில்லை. வருபவர் நம் அரசரால் அரசகுடியினரென்றும் மதிக்கத்தக்கவரென்றும் ஏற்றுக்கொள்ளப்பட்டவரெனில் அது அவையாலும் ஆன்றோராலும் ஒப்பப்படுவதே ஆகும்” என்றாள் வல்லபை. அவ்வரி கிருபாகரரின் மௌலிவிலாசம் என்னும் குறுங்காவியத்தில் வருவது. பானுமதி பெருமூச்சுவிட்டாள். “அவர் வருவது நாளை மறுநாள் அஸ்தினபுரியில் கூடவிருக்கும் ஷத்ரியப்பேரவையில் பங்குகொள்வதற்காக. அவர் அரசரல்ல எனில் அங்கே அவர் அவையமரவியலாது. அதன்பொருட்டே இந்த முடிவை அரசர் எடுத்திருக்கக்கூடும்” என்றாள் வல்லபை.

பானுமதி தன் உள்ளத்துள் உழன்றபடி தலையை மெல்ல அசைத்தாள். இப்போது ஏன் என் உள்ளம் இரண்டாகப் பிரிகிறது? இத்தருணத்தை கூர்கொண்டு எதிரேற்கவேண்டியவள் நான். ஆனால் எப்போதும் இப்படித்தான் இருந்திருக்கிறேன். ஒவ்வொருமுறையும் உள்ளூர பிளந்துகொள்வதனூடாகவே

நிகர்நிலையை அடைகிறேன். இங்கிருக்கையில் காசியிலும் இருக்கிறேன். அவையமர்கையில் சிறுமியாகவும் ஆகிறேன். நடைமுறைச் சிக்கல்களின்போது நூலாய்கிறேன். அவள் விழிமங்கி உணர்விலாதிருந்தமை வல்லபையை குழப்பியது. பற்றுக்கோடுக்காக அவள் உள்ளம் தவிப்பதை பானுமதியால் காணமுடிந்தது. அதையுணர்ந்ததும் அவள் மீண்டும் புன்னகைத்தாள்.

வல்லபை சற்றே முகம் அண்ணாந்து அவள் முகத்தை கூர்ந்து பார்த்தபடி “இது அரசாணை என்பதனால் இங்கு ஐயமோ மாற்றுச் சொல்லோ எழாதென்பது அனைவரும் அறிந்ததே” என்றாள். அவள் தன்னை முள்முனையால் குத்திச்சீண்டுகிறாள் என பானுமதி உணர்ந்தாள். ஆனால் அவள் முகம் புன்னகையுடன் மாறாதிருந்தது. அதைக் கண்டு வல்லபையின் குரல் மீண்டும் இயல்பாக ஆகியது. “இளைய யாதவர் இங்கு வரும் செய்தி நேற்று காலையே ஒற்றர்களினூடாக அவையடைந்துவிட்டது. அவருக்கு முறையான வரவேற்பு அளிக்கப்படவேண்டுமென்பது அரசரின் எண்ணம்” என்றாள்.

பானுமதி அகக்குழப்பம் விலகாமலேயே விழிதூக்கி வல்லபையின் கண்களை பார்த்தாள். நரைத்த தலைமுடி வெண்களிமண் தீற்றல்கள் என இரு பக்கங்களிலுமாக வழிந்து தலைக்குப்பின் கொண்டையிடப்பட்டிருந்தது. வாடிய கமுகுப்பாளைபோல நுண்சுருக்கங்கள் செறிந்த வெண்முகம். இருபுறமும் வற்றிய கன்னத்தசைகளால் இழுக்கப்பட்டு அமுங்கியது போன்ற மூக்கு. உள்மடிந்து சிறிய கோடென்றான வாய். கழுத்துக்கு கீழே இரு திரைத்தொங்கல்கள்போல மென்தசை தொங்கி நின்றிருந்தது. வடித்த காது குழைகளுடன் தோள்மேல் அமர்ந்திருந்தது.

எத்தனை உள்ளங்களை இவள் உள்ளம் தொட்டுச் சென்றிருக்கும் என்ற எண்ணம் பானுமதிக்கு ஏற்பட்டது. இத்தகைய ஆயிரம் உள்ளங்களுடன் விளையாடி ஒவ்வொரு பொழுதையும் கடந்து இரவு மஞ்சத்திற்கு மீளகிறோம். நச்சு நாகங்கள் நடுவே நெளிந்தும் வளைந்தும் வரும் எலி என. அரசி எனும் இந்த அடையாளமும், அதற்குரியவை என பயின்று சூடிக்கொண்ட பாவனைகளுமின்றேல் இதை இயற்றமுடியுமா என்ன? இந்தத் தோற்றமும் நிமிர்வும் என் கவசங்கள். உள்ளே அஞ்சியும் சலித்தும் விலகித் திகைத்து அமர்ந்திருக்கும் சிறுமியை இவள் அறிந்தால் நச்சுப்பல் கூர்மின்னி எழுமா என்ன?

பானுமதி "ஆனால் இங்கு இதுவரைக்கும் ஒரு முறைமையே கடைபிடிக்கப்பட்டது. பாரதவர்ஷத்தின் தொல்குடி ஷத்ரிய அரசர்கள் மட்டுமே அரசராலோ பட்டத்து அரசியாலோ கோட்டைமுகப்பில் எதிர்கொள்ளப்பட்டார்கள். இன்று முடிசூடாத இரண்டாம் குலத்தார் ஒருவரை அவ்வாறு கோட்டைமுகப்பிற்குச் சென்று வரவேற்பதை ஷத்ரிய அரசர்கள் எவ்வாறு எடுத்துக்கொள்வார்கள் என்று எண்ணவேண்டியுள்ளது" என்றாள். "அவையனைத்தும் முன்னரே அரசரின் அவையில் இளையவர்களால் கூறப்பட்டு அரசரின் ஆணைக்கு சொல்லடங்கி ஏற்கப்பட்டது" என்றாள் வல்லபை. "இளைய யாதவர் முடிதுறந்தாலும் அத்துறப்பை அவர் மைந்தர் ஏற்கவில்லை என்று செய்தி உள்ளது. ஆகவே அவர் பேரரசர் என்றே கொள்ளப்படுவார்."

"நன்று, அரசரின் ஆணை இது என்றால் தலைக்கொள்கிறேன்" என்றாள் பானுமதி. வல்லபை எழுந்து தலைவணங்கி "அரசி, நாளை மாலையில் ஷத்ரிய அரசர்களின் பேரவை நம் தெற்குக்

கோட்டையருகே இந்திரமுற்றத்தில் அமைந்துள்ள புதிய அவைக்கூடத்தில் கூடுகிறது. அதில் எடுக்கப்பட்ட முடிவுகளை மறுநாள் காலை கூடும் அஸ்தினபுரியின் அரசப்பேரவையில் அறிவிக்கவிருக்கிறார்கள். அதன் பின்னர் நம் அரசர் பாரதவர்ஷத்தில் திரண்டவற்றிலேயே மிகப் பெரிய படையின் முதன்மைத் தலைவர் என அரியணை அமர்வார். இவ்விரிநிலத்தில் விரைவிலேயே சத்ராஜித் என முடிசூடி அவர் அமர்வார் என்பதற்கான தொடக்கம் அது. அவ்வரியணையின் அருகே மும்முடி சூடி அமரவிருப்பவர் தாங்கள். இந்தத் தருணம் அதை தங்களுக்கு நினைவூட்டும் தன்மை கொண்டதாக அமைக!" என்றாள்.

"ஆம், அவ்வாறே ஆகுக!" என்று பானுமதி தலைவணங்கினாள். அதன் பின்னரே வல்லபை சொன்னவற்றின் முழுப்பொருளும் அவளுக்கு புரிந்தது. கைகூப்பி மும்முறை தாழ்ந்து வணங்கியபின் வல்லபை "விடை கொள்கிறேன், அரசி" என்று சொல்லி பின்காலடி எடுத்து வைத்து கதவை அடைந்து அதை மெல்ல தட்டினாள். வெளியிலிருந்து லதை கதவை திறக்க மீண்டுமொருமுறை தலைவணங்கி வெளியே சென்று மறைந்தாள். ஆணையை எதிர்பார்க்கும் விழிகளுடன் லதை நிற்க அவளை வெற்றுவிழிகளால் சற்றுநேரம் நோக்கியபின் "அசலையை வரச்சொல்" என்றாள் பானுமதி. லதை தலைவணங்கி வெளியே சென்றாள்.

பானுமதி திரும்பி அருகிருந்த வெண்கல மணியை மும்முறை அடிக்க பின்பக்கக் கதவுகள் திறந்து அணிச்சேடியர் உள்ளே வந்தனர். பானுமதி கைகாட்டியதும் அவள் உடலிலிருந்து நகைகளை கழற்றத் தொடங்கினர். கால்

மெட்டிகளையும் தண்டைகளையும் முன்னரே கழற்றிவிட்டிருந்தனர். கைவிரலிலிருந்த ஆழிகளையும் மலர்ப்பூட்டுகளையும் திருகாணி இறுக்கப்பட்ட கங்கணங்களையும் காதுமடல்களில் பொருத்தப்பட்டிருந்த மணிமலர்களையும் அவர்கள் கழற்றினர். அவ்விரல்கள் ஈக்களின் முன்கால்கள்போல விரைவு கொண்டிருப்பதை அவள் கண்டாள். கூடுகட்ட நார் கொண்டுசெல்லும் சிறு செந்நிறக் குருவிகள் என அவர்களின் கைகள் பறந்து எழுந்து சிமிழ்களில் நகைகளை போட்டன.

நகைகள் முழுமையாக அகற்றப்பட்டதும் அவள் எழுந்து நிற்க இருவர் ஆடைகளை கழற்றத் தொடங்கினர். திறன்கொண்ட கைகளுடன் அவர்கள் முடிச்சுகளையும் மடிப்புகளையும் செருகல்களையும் பின்னல்களையும் அகற்றி ஆடைகளைக் கழற்றி மடித்து அப்பாலிருந்த மூங்கில் பேழைகளில் இட்டனர். முற்றிலும் ஆடை விலகியதும் உடல் காற்றை உணர்ந்து மெல்லிய மெய்ப்பு கொண்டது. அவள் எழுந்து முதுகை நிமிர்த்து நின்றாள். இளமையில் கனியும் மலரும் உதிர்ந்து விடுதலைகொண்டு மேலெழும் கிளை என ஒரு சேடி சொன்ன ஒப்புமை எப்போதும் அவள் உள்ளத்தில் எழுவதுண்டு. அருகே ஆடியில் பிறிதொரு இருப்பை உணர்ந்தாள். திரும்பியபோது நோக்கை சந்தித்தாள்.

ஒவ்வொரு முறையும் ஆடையின்றி நிற்கையில் ஆடிநோக்கி விழி எழுவதை அவளால் தவிர்க்க முடிந்ததில்லை. தெரியும் அவ்வுடல் எப்போதுமே பிறிதெவருடையதோ என துணுக்குறச் செய்யும். அவள் உள்ளம் தயங்கித் தயங்கி ஒவ்வொரு தருணத்திலும் மரக்கிளைகளை, வேர்களை, கற்களை பற்றிக்கொண்டு நின்று இழுபட்டு ஒழுகிச் செல்ல பெருகி

விசைகொண்டு நெடுந்தொலைவில் முன்னால் சென்றுகொண்டிருந்தது உடல். அதன் இலக்கும் விழைவும் முதுமையே என்பதுபோல. உருக்கொண்டு எழுந்ததே சிதைவுற்று அழிவதற்காகத்தான் என. மடிந்தும் தளர்ந்தும் என் உடலென்றான இந்தத் தசைத்திரள்கள், இத்தொய்வுகள், இந்நிறமாற்றங்கள் நானா? கன்னங்கள் மேலும் மடிந்திருந்தன. கண்கீழ்த்தசை கருமைகொண்டு இழுபட்டு வளைந்திருந்தது. உதடுகள் தொங்கியிருக்கின்றனவா? முகவாயின் தொய்வும் கழுத்தின் மடிப்பும் மிகுந்துள்ளனவா? தோளிலும் மார்பிலும் அமைந்த தோல்வரிகள், தோள்களின், விலாக்களின் எலும்புப் புடைப்புகள். கழுத்தில் இந்த நரம்புவரி முன்பு இத்தனை மேலெழுந்திருந்ததில்லை.

முலைகளை அவள் ஒரு கணத்திற்குமேல் நோக்குவதேயில்லை. அவை ஒவ்வொருநாளுமென அவள் உடலில் இருந்து தங்களை விடுவித்துக்கொண்டிருந்தன. காமம் முகிழ்ப்பதென முளைவிட்டவை. முழுத்துத் துடித்தவை, கனிந்து ஊறியவை. கனல்கொண்டவை. மறைக்கப்பட்ட கூர்நோக்கு கொண்டவை. மண்நோக்கி தழைந்தன அவற்றின் கருவிழிகள். இவ்வுடல் என்னுடையதல்ல என்றே அவளுக்குள் இருந்த சிறுமி திமிறி பின்னடி வைத்தாள். ஆடிக்குள்ளிருந்து திகைத்து தன்னை நோக்குபவள் பிறிதேதோ காலத்தில் வாழும் ஒரு மூதன்னை.

அவள் தன் அத்தை சியாமளையைப் போன்ற தோற்றம் கொண்டவள் என்பது இளமையிலேயே அனைவரும் சொல்லி நிறுவிவிட்ட ஒன்று. அனுபநாட்டு அரசன் கர்மஜித்துக்கு அரசியாகச் சென்ற அத்தை சியாமளை அவள் அன்னைக்கு உகந்தவளல்ல. பருத்த வெண்ணிற உடலும், நுரைச்சுருள்

குழலும், வட்டமுகத்தில் சிரிக்கும் சிறிய கண்களும், சிற்றிதழ்வாய்க்குள் அரிநிரை என சிறிய பற்களும் கொண்டிருந்த அத்தையை அவள் எப்போதும் விழிவாங்காமல் நோக்கிக்கொண்டிருப்பாள். அத்தையின் ஆடைமுனையை பற்றிக்கொண்டு அருகிருப்பதையே அவள் விழைந்தாள். அத்தை நூலாய்கையில் இசைகேட்கையில் நாற்களமாடுகையில் அவளை நோக்கியபடி அப்பால் அமர்ந்திருப்பாள்.

“என் வெண்புறாவே” என்று அத்தை அவளை அழைப்பாள். இடைபற்றி தூக்கிச் சுழற்றி இடுப்பில் வைத்துக்கொள்வாள். அத்தையின் வெண்ணிற முகத்தில் எழுந்த சிவந்த முகமுத்துக்களை அவள் சுட்டுவிரலால் தொட்டு விளையாடுவாள். அத்தை அவையமர அணிகொள்கையில் அவள் உடலில் ஒவ்வொரு அணியும் அதற்கென்றான இடத்திலெனச் சென்றமரும் விந்தையை நோக்கிக்கொண்டிருப்பாள். கழுத்திலணியும் சரப்பொளி பளிங்கில் பொன்வழிவென பதிந்தமைந்திருக்கும். கைமணிகள் வளையல்களைப்போலவே உருண்டவை. பருத்த தோள்களிலிருந்து பாலோடை என வழிந்தமைந்த கைகள் காந்தள் இதழ்களென சிவந்த சிறிய விரல்குவையில் வந்து முடியும். அத்தை மலர்தொடுக்கும்போது அவள் விரல்களும் மலர்களுடன் இணைந்துகொள்வன போலிருக்கும்.

அவள் நோக்குவதைக் கண்டு அவள்மேல் ஒரு மலரை வீசி எறிந்து “என்னடி நோக்கு?” என்று அவள் சிரிப்பாள். “நான் உங்களைப்போலவா, அத்தை?” என்று அவள் கேட்பதுண்டு. “ஆம், நீ நானேதான்” என்பாள் அத்தை. “நான் எப்போது நீங்களாக ஆவேன்?” அத்தை சிரித்து அவளை கைபற்றி

அருகணைத்து செவியில் “நீ காதல்கொள்கையில்” என்றாள். அவள் குழம்பி அத்தையின் உடலை உந்தி விலகி முகம் நோக்கி “காதலென்றால் என்ன?” என்றாள். “அதை தெய்வங்கள் உனக்கு கற்பிக்கும்” என்றாள் அத்தை. அவள் “எந்த தெய்வம்?” என்றாள். “மலர்களை விரியவைக்கும் தெய்வங்கள்” என்றாள் அத்தை.

அதன்பின் அவள் மலர்களை கூர்ந்து நோக்காமல் கடந்துசென்றதில்லை. அவற்றிலமர்ந்திருக்கின்றன தெய்வங்கள். வண்ண மாறுபாடுகளின், வடிவ முடிவின்மைகளின், நறுமணங்களின் தலைவர்கள். மலர்கள் கந்தர்வர்களின் பீடங்கள். கின்னரர்களின் இசைக்கலங்கள். கிம்புருடர்களின் மாளிகைகள். வித்யாதரர்களின் ஏடுகள். மலர்களை நோக்கி கனவிலாழ்ந்து உடல்மறந்து விழிமயங்கி அவள் அமர்ந்திருப்பதுண்டு. “இப்போதே தொடங்கிவிட்டாள் கனவுகாண” என்று சேடியர் நகைப்பார்கள். ஆடிமுன் நின்று அத்தை அணிசெய்துகொள்கையில் அவள் ஆடைக்குள் உடல்மறைத்து நின்று நோக்குவது அவளுக்கு உகந்த விளையாட்டு. ஆடியில் தெரியும் அத்தையின் உருவம் தானே என எண்ணி உடல்விம்முவாள். தன்னுள் மொட்டுகளை மலர்களென்றாக்கும் ஒன்று எழுந்துவந்து நிறைந்து அதைப்போல உடல்பெருகி எழச்செய்யும் என எண்ணிக்கொள்வாள்.

காசி நாட்டு அரசர் விஜயரின் மகளாக, அரசமைந்தர் விருஷதர்பரின் இளையவளாக சியாமளை பிறந்தபோது அரண்மனையின் முகப்பிலிருந்த சுநாதம் என்னும் பெரிய மணி மும்முறை தானாகவே ஒலித்தது என்று சூதர்பாடல்கள் கூறின. தொல்குடி ஷத்ரிய மன்னர் ஒருவருக்கு அவையமர்ந்து

பெரும்புகழ்கொண்ட மைந்தர்களை அவள் பெற்றெடுப்பாள் என்று நிமித்திகர் கூற்று இருந்தது. பானுமதியின் அன்னை "மூன்று கழஞ்சு பொன்னுக்கு எந்தக் கதையையும் சொல்லும் சூதர்கள் இங்கிருக்கையில் அரண்மனை முகப்பு மணியென்ன இந்திரவில்லே வந்து வானில் வளைந்து நிற்காதா?" என்று உதட்டை சுழிப்பாள். ஆனால் அவள் அத்தை சிறுசொல் செவிகொள்ளா நிமிர்வு கொண்டிருந்தாள். ஆணையிடும் விழிகளும் எங்கும் வணங்காத தலையும் நேர்நடையும் கொண்டு அரண்மனையில் நிறைந்திருந்தாள்.

ஒவ்வொரு செயலாலும் சொல்லாலும் எண்ணத்தாலும் அவள் அத்தையாகவே தன்னை ஆக்கிக்கொண்டாள். அவளுடலில் அத்தை எழுந்தோறும் அன்னை விலக்கம் கொண்டாள். "நீ அந்த ஆணவக்காரியை நடிக்கிறாய். ஆணவம் கொண்ட அனைவரையும் தெய்வங்கள் இறுதியாக ஒடித்து வீசும் என்றுணர்க! ஒருநாள் நீ சூடிக்கொண்ட இந்த நிமிர்வுக்காக துயர்படுவாய். நான் நானென தருக்கிய உனது உள்ளம் ஏன் ஏன் என விம்மி அழும்" என்று வெறுப்பில் சுளித்த முகத்துடன் அவளை நோக்கி அன்னை சொன்னாள். சீற்றத்துடன் அவளை நோக்கி நின்ற பானுமதி பின்னர் இதழ்வளைய சிரித்து "நான் அவ்வாறுதான் இருப்பேன். அதை விரும்பவும் சில தெய்வங்கள் இருக்கக்கூடும்" என்றபின் திரும்பி நடந்தாள்.

ஒருபோதும் அன்னைக்கும் அவளுக்கும் நல்லுறவு அமைந்ததில்லை. "காசி ஒன்றும் பெருநகரல்ல, உணர்ந்துகொள். இது கையளவே ஆன சிறுநாடு. இங்கு உலகாள்வோன் விரிவிழி அன்னையுடன் அமர்ந்திருப்பதனால் மட்டுமே இதை பிற ஷத்ரியர் வெல்லாமல் இருக்கிறார்கள். ஷத்ரியர்களுக்கு பெண்பெற்றுக் கொடுக்கும் சிறு ஈற்றறை இது என்று சூதர்கள்

இளிவரல் உரைத்ததுண்டு. உன்னை கொள்ளவருபவன் தன் வாளால் வென்று அடைந்த பெருமை மட்டுமே உனக்குரியது. இங்கிருந்து கொண்டு சென்று நீ அங்கு நிறுத்தும் பெருமையென ஏதுமில்லை” என்று அன்னை அவளிடம் சொன்னாள்.

அப்போது அவள் கன்னியென்றாகி மணவிழைவு ஓலைகள் வரத்தொடங்கியிருந்தன. “வந்துகொண்டிருப்பவை அனைத்தும் வெவ்வேறு ஷத்ரிய அரசர்களுக்குரியவை. ஒருவருக்கு பெண் கொடுத்தால் பிறரை எதிரிகளாக்குவோம். எவரேனும் தன் தோள்வலியால் உன்னை கவர்ந்து சென்றால் அதுவே எனக்கு விடுதலை” என்று தந்தை கசப்பும் சினமும் தெரிந்த முகத்துடன் அவளை நோக்காமல் அருகிலிருந்த தூண்மேல் விழியூன்றி சொன்னார். “அவ்வாறெனில் அதுவே ஆகுக! அதற்கும் முன்மரபுகள் உண்டு” என்று அவள் சொன்னாள்.

இளையவள்களாகிய அசலையும் பலந்தரையும் தங்கள் தனியுலகில் வாழ்ந்தனர். அசலை காவியம் நவிலும் சுவைகொண்டிருந்தமையால் அவளை சம்பவரின் குருநிலைக்கு அனுப்பினார்கள். பலந்தரையே அன்னைக்கு அணுக்கமானவள். அன்னையின் மாற்றுருவாக அவள் தன்னை வடித்துக்கொண்டாள். அரசவைகளில் அன்னையுடன் சென்று அமர்ந்து முறைமையும் நெறியும் பயின்றாள். தேர்ந்து சொல்லடுக்கவும் பிறர் விழிகளுக்குள் சென்று உளம்நோக்கவும் தேர்ந்தாள். ஒவ்வொரு நிலையிலும் அவள் தன்னை வெல்ல முயன்றுகொண்டிருப்பதை பானுமதி உணர்ந்திருந்தாள். இயல்பாக பேச்சினூடாக அரசியல் சிக்கலொன்றைச் சொல்லி அவள் அதை எப்படி புரிந்துகொள்கிறாள் என்று நோக்குவாள். அவள் அதைக் குறித்து எதை சொன்னாலும் இரங்கும்

புன்னகையுடன் “நன்று, நீங்கள் இன்னமும்கூட கூர்ந்து நோக்கலாம், மூத்தவளே” என்று தொடங்குவாள்.

அப்போது அன்னை அருகிலெங்கேனும் இருப்பாள். சொல்பதியா செவிகொண்டவள்போல செயல்களில் ஈடுபட்டிருப்பாள். ஒரு தருணத்தில் இளிவரல் புன்னகையுடன் திரும்பி “மலர்த்தோட்டங்களில் வாழ்வதல்ல அரசியரின் பணி. அவையே அவர்களின் இடம். அவளை உன்னருகிலேயே வைத்துக்கொண்டாயென்றால் நீ இழிவடையாமலிருப்பாய்” என்பாள். பலந்தரை “அக்கை எளிதாக கற்றுக்கொள்ளும் ஆற்றல் கொண்டவர், அன்னையே. அவருக்கு உளம்நிலைக்கவில்லை” என்றாள்.

அன்னை சீற்றத்துடன் “உளம்நிலைக்காதவர்களையே நான்காம்குலத்தோர் என்கிறார்கள். சொல்லில் நிலைத்தோர் அந்தணர். படைக்கலத்தில் நிலைத்தோர் ஷத்ரியர். பொன்னில் நிலைத்தவர் வைசியர் என்கின்றன நூல்கள்” என்றாள். பானுமதி புன்னகை செய்தாள். அன்னை அப்புன்னகையால் சீண்டப்பட்டு “நூல் எனும்போதே என்ன நச்சுப்புன்னகை உன் உதடுகளில்? நூல்நவில எங்களுக்கும் தெரியும். நாங்களும் அரசகுடிப் பிறந்தவர்களே” என்றாள். பானுமதி “ஆம், அதை அறிவேன்” என்றபின் எழுந்துசென்றாள்.

அத்தை நகர்நீங்கி அனுபநாட்டுக்குச் சென்றபின்னர் அவள் அரண்மனையில் தனியளானாள். உளமறிந்து சொல்லாட எவருமில்லை. முற்றிலும் அகன்று அவ்வகல்வு காட்டும் விழிகளை வெல்ல நிமிர்வு கொண்டு அங்கிருந்தாள். அசலையுடன் மட்டுமே அவள் சற்றேனும் உளமளித்து உரையாட இயன்றது. ஆனால் அவள் சொற்சுவை மட்டுமே திகழும் பிறிதொரு உலகில் இருந்தாள். சொல்லை அருமணி

என திருப்பித் திருப்பி அழகறிவதன்றி எதிலும் அவள் உள்ளம் செல்லவில்லை. அடித்தட்டில் கால்தொடாது மூச்சு பதறி மூழ்குகையில் மட்டும் எட்டிப் பற்றிக்கொள்ளும் கரையோரத்து வேர் போலிருந்தாள் அசலை.

நான்காவது பேற்றில் அத்தை மறைந்த செய்தி வந்தபோது அரண்மனை அமங்கலம் கொண்டது. பதினெட்டுநாள் துயர்காத்தலும் நீத்தார் கடனளித்தலும் முடிந்து அனைவரும் நிலையமைந்த பின்னரும் அவள் மீளவில்லை. வெறித்த விழிகளும் சொல்லற்ற உதடுகளுமாக முழுத் தனிமையில் இருந்தாள். மன்றமைந்த பொழுதில் அன்னை அவளிடம் "நன்று, இனியேனும் அவளிடமிருந்து நீ விடுதலை கொள். ஒருவர் மேல் கவியும் இன்னொருவரின் அடையாளம்போல் சிறை வேறில்லை" என்றாள். அவள் அருகே அமர்ந்திருந்த பலந்தரை "அத்தையின் மைந்தர்கள் அங்கே அரசேறுவார்கள். அவர்களின் மூதன்னை நிரையில் அவர் அமைவார். அவர் இங்கு மண்நிகழ்ந்த நோக்கம் நிறைவுகொண்டது. இனி உங்களில் இருந்தும் அவர் உதிர்வதே முறை, அக்கையே" என்றாள்.

பானுமதி வெற்று விழிகளுடன் தலையசைத்து அப்பால் சென்றாள். "அவர் மீள விழையவில்லை, அன்னையே. துயரத்தின் வல்லமைகளில் ஒன்று அதற்கிருக்கும் ஈர்ப்புவிசை. தன்னை மீட்டுக்கொள்ள துயருறுவோர் விழைவதில்லை என்கின்றன நூல்கள்" என்றாள் பலந்தரை. பானுமதி தன்னை ஆடியில் நோக்கும்போதெல்லாம் அத்தையையே கண்டாள். ஒவ்வொரு முறையும் முதற்கணம் உளம் திடுக்கிட்டு பின் அதுவே தான் என உணர்ந்து அணுகினாள். மெல்ல மெல்ல

அதுவே என்றானாள். அத்தையென்றும் தான் என்றும் ஒவ்வொரு தருணத்திலும் இரண்டென்றிருந்தாள்.

அப்போதுதான் இளைய யாதவர் காசிக்கு வந்தார். அவள் அவரைப்பற்றி சூதர்கதைகளில் கேட்டிருந்தாள். சூதர்கதைகள் அனைத்துமே நேற்றோ இன்றோ நாளையோ இன்றி எங்கோ இருக்கும் ஓர் உலகில் நிகழ்வன என அவள் உள்ளம் மயங்குவதுண்டு. அங்கே தெய்வங்களே இயல்பானவர்கள். உடல் களைந்து ஒளியென்றான மானுடரே அங்கு செல்லமுடியும். அசலைதான் இளைய யாதவர் வருவதை அவளிடம் சொன்னாள். அவள் “அவர் மானுடர்தானா?” என்று கேட்டாள். அசலை உள்ளக்கிளர்ச்சியுடன் “ஆம் அக்கையே, மானுடர் செல்லத்தக்க உச்சத்தை அடைந்தவர். ஆகவே தெய்வமும் ஆனவர்” என்றாள். “எங்கள் நூல்நவிலலில் ஒருநாளேனும் அவர் வந்துசெல்லாதிருந்ததில்லை. பாரதவர்ஷத்தில் வேதமோ அதன் முடிபோ உசாவும் எவரும் அவருக்கு மாணவர்களென்றானவர்களே.”

பானுமதி அவள் முகத்தில் எழுந்த ஒளியை வியப்புடன் நோக்கி “நீ அவரை நன்கறிந்திருக்கிறாய் போலும்” என்றாள். “அவரை நன்கறிந்திருக்கிறோம் என்று உணர்பவர்களே இங்கு மிகுதி. அறிந்த முதற்கணமே அவ்வெண்ணம் உருவாகிவிடும். பின்னர் அறியுந்தோறும் அவர் அகன்றகன்று செல்வார். அறியவொண்ணாதவர் என அவரை அறிந்தவர்களே அவரை அணுகியவர்கள்” என்றாள். “சொல்லடுக்க கற்றுக்கொண்டிருக்கிறாய்” என்றாள் பானுமதி சிரித்தபடி. “நூல்நவில்தலின் கொடை அது, சொல்லுரைக்க கற்போம். சொல்லவிருப்பதை வாழ்விலிருந்து கற்கவேண்டும்” என்றாள் அசலை.

“இந்திரமாயம் செய்யும் பீதர்நாட்டவன் வெறுங்கையில் விரித்துக்காட்டும் வண்ணப்பட்டோவியம்போல அவர் தென்மேற்குக் கடலோரம் ஒரு நகரை உருவாக்கியிருக்கிறார் என்கிறார்கள். அதற்கு கங்கைநீர் கொண்டுசெல்லவே வருகிறார்” என்று அசலை சொன்னாள். “இப்புவியில் நான் பிறிதெவரையும் கற்று அணுக விழையவில்லை, அக்கையே. சாந்தீபனி குருநிலையின் முதன்மையாசிரியர் இன்று அவரே.” பானுமதி “தத்துவம் பயின்றவரா?” என்றாள்.

“அக்கையே, அவர் அடைந்தது பயிற்சியல்ல, யோகம். பயில்வது எதுவும் நம்மை ஒரு பகுதியில் வளர்ந்தோங்கச் செய்கிறது. ஆகவே நம் நிகரமைவை இழக்கிறோம். கலையோ இசையோ நூலோ படைக்கலமோ எதை கற்றவராயினும் நிலையழிந்தவராகவே இருப்பது அதனால்தான். ஒன்று பிறிதொன்றால் முற்றிலும் நிகர்செய்யப்படுவதே யோகம். ஒன்றில் விடுபடுவதை பிறிதொன்றால் முழுமையாக நிரப்பிக்கொள்ளும் தவம் அது. தத்துவம் அளிக்கும் சொற்பெருக்கை குழலிசையால் முழுமையாக்கிக் கொண்டவர். படையாழியின் கூரொளியை குழல்சூடிய நீலப்பீலியால் நிகர்செய்தவர். அரசமைந்தவர் எனினும் முதிராச் சிறுவனென்றானவர். ஆழத்துச் சங்கும் முளைத்து மேலெழும் தாமரையும் ஆனது அவர் அகம். முழுமைகொண்ட யோகத்தில் அமைந்தமையால் யோகேஸ்வரர் எனப்படுகிறார்.” ஏதோ ஒரு கணத்தில் நெஞ்சு விம்ம பானுமதி விழிநனைந்தாள்.

எழுந்து குழலைச் சுருட்டி கொண்டையாகக் கட்டியபடி சிறுவாயிலைத் திறந்து அப்பாலிருந்த மஞ்சத்தறைக்குச் சென்று தன் அரையிலிருந்த சிறுதாழ் எடுத்து மஞ்சத்தின் அடியிலிருந்து இழுத்தெடுத்த ஆமாடப்பெட்டியை திறந்தாள்.

அதனுள் அவளுக்கு தந்தை அளித்த காசிநாட்டுச் செம்பட்டும் உலகுபுரப்போன் அகல்விழியுடன் அமர்ந்த சிறுசெம்புச் சிலையும் சந்தனத்தில் செதுக்கப்பட்ட காசிநாட்டு குடிமுத்திரையும் இருந்தன. அவள் ஆடைகளை விலக்கி உள்ளிருந்து சிறிய தந்தப் பேழையை எடுத்தாள். சிறுதுளைகளாலான மூடிகொண்ட அப்பேழைக்குள் வெண்பட்டுப்பரப்பில் பதிந்ததுபோல் இருந்த பீலியை எடுத்து நோக்கினாள்.

# குருதிச்சாரல் - 44

**பகுதி ஏழு : அலைகளில் திரள்வது – 2**

அசலை வந்திருப்பதை அறிவிக்க லதை வந்து வாயிலில் நின்றாள். கையிலிருந்த பீலியை பேழைக்குள் வைத்தபடி உள்ளே அனுப்பும்படி பானுமதி தலையசைத்தாள். அவள் பீடத்தில் அமர்ந்தபோது அசலை உள்ளே வந்தாள். அமரும்படி பானுமதி கைகாட்ட அசலை அமர்ந்து ஆடையை கால்கள் நடுவே அமைத்தாள். பானுமதி “அரசரின் சேடி வந்திருந்தாள்” என்றாள். “வல்லபையா? அவள் வந்தால் அது அரசரின் செய்தி அல்ல, கணிகர் அனுப்பியது” என்றாள் அசலை. “ஆம், அறிவேன்” என்றாள் பானுமதி. “நாம் கோட்டைமுகப்புக்குச் சென்று இளைய யாதவர் நகர்புகுகையில் வரவேற்கவேண்டும்.”

அசலை சில கணங்கள் நோக்கிக்கொண்டிருந்தாள். “நான் அரசமுறைப்படி அது வழக்கமில்லையே என்றேன். அரசரின் ஆணை அது என்றும் அதற்குரிய முன்முறைமை உள்ளது என்றும் சொன்னாள்.” அசலை “எளிதில் தோன்றுவது ஒன்றே.

ஏற்கெனவே இளைய யாதவர்மேல் ஷத்ரியர்களுக்கு சினம் உள்ளது. நான்காம் குலத்தவர் நிலம்வென்று அரசமர்ந்ததில் தொடங்குகிறது. சில அவைமுறைமைகளை கோரிபெற்றதில் வளர்வது. சிசுபாலரின் குரல் ஷத்ரியர் அனைவருக்கும் உரியது. இங்கே அவரை அரசரென நாம் வரவேற்பதை அவர்களால் தாளவியலாது. அவர்மேல் சினம் பெருகுவது அவர் கொண்டுவரும் தூதை அழிக்கக்கூடும்" என்றாள்.

"ஆனால் அச்சினம் நம்மீதும் எழும் அல்லவா? ஷத்ரியத்தலைமை கோரும் நாம் எப்படி அவரை அரசரென வரவேற்றோம் என?" என்றாள் பானுமதி. "ஆம், அதுதான் என்னை குழப்புகிறது. ஒருவேளை அந்த எதிர்ப்பை ஏதேனும் வழியில் கணிகர் சீரமைக்கக்கூடும். அல்லது இளைய யாதவர் இங்கே அரசமுறைப்படி மட்டுமே பேசமுடியும், இறங்கிக்கோர முடியாது என அவருக்கு உணர்த்தும் நோக்கம் இருக்கலாம். அல்லது அவரை வெறுமனே உளம்குழம்ப வைப்பதற்காக இருக்கலாம். பாண்டவர் உள்ளத்தில் நம்பிக்கையின்மையை உருவாக்கும் திட்டமிருக்கலாம்... ஆனால் எதை எண்ணினாலும் எங்கோ அது பொருந்தவில்லை" என்று அசலை சொன்னாள்.

"ஏன் நம்மை நோக்குவதற்காக இருக்கலாம் அல்லவா?" என்றாள் பானுமதி. அசலை திடுக்கிட்டு "ஏன்?" என்றாள். "நம் உள்ளம் எங்கிருக்கிறது என" என்றாள் பானுமதி. "அது மாறுமா என்ன?" என்றாள் அசலை. "இல்லை, நாம் வாழும் உலகு வேறு" என்றாள் பானுமதி. "ஆனால் இன்றிருக்கும் நிலையில் நாம் எதையாவது பிழையாக பேசக்கூடும். எங்கோ சில முடிச்சுகள் விழக்கூடும். அவர்கள் எண்ணுவது எதுவென அறியா நிலையில் நம் ஒவ்வொரு சொல்லும் செயற்கையாகவே ஒலிக்கும்." அசலை தாழ்ந்த குரலில் "அக்கை, நம் அனைவர்

குரலும் செயற்கையாகவே ஒலிப்பவை” என்றாள். சில கணங்களுக்குப்பின் பானுமதி “ஆம்” என்றாள்.

அசலை “நாம் அஞ்சவேண்டியதில்லை. அஞ்சுவதற்குரிய எதையும் நாம் ஆற்றவும்போவதில்லை” என்றாள். “நாம் நம்மியல்புப்படி இருப்போம். அவரை எதிர்கொண்டழைப்பதும் அரண்மனை அமர்த்துவதும் நமக்கமையும் நல்வாய்ப்பென்றே கருதுவோம்.” பானுமதி “நானும் இறுதியில் அதையே எண்ணினேன்” என்றாள். “நான் சற்றுமுன் அத்தையை எண்ணிக்கொண்டிருந்தேன்.” அசலை முகம் மலர்ந்து “ஆம், எவ்வகையிலோ அத்தை இவையனைத்துடனும் தொடர்புகொண்டிருக்கிறார்” என்றாள். “எப்படி?” என்றாள் பானுமதி. “தெரியவில்லை, அப்படி சொல்லத் தோன்றியது” என்றாள் அசலை. அவர்கள் தங்கள் நெஞ்சு சென்றடைந்த அப்பொருளின்மையில் திளைத்தபடி விழிசரித்து அசைவற்று அமர்ந்திருந்தார்கள்.

பானுமதி பெருமூச்சுடன் விழித்துக்கொண்டு “இளைய யாதவர் காசிக்கு வந்ததை நினைவுறுகிறாயா?” என்றாள். “ஆம், அப்போது சிறுமிபோல் உளம் கொண்டிருந்தேன். ஆனால் அவர் இருந்த ஏழு நாட்களின் ஒவ்வொரு கணமும் என் நெஞ்சில் உள்ளது” என்றாள். “அவர் சொன்னவையும் செய்தவையும் பொருள்பெருகிச் செல்கின்றன, அக்கையே. ஆனால் மிக எளிய ஒன்று நாளுக்கொருமுறையேனும் எண்ணத்தில் எழுகிறது. மரமல்லி மலரை இரு விரலால் சுழற்றி காற்றில் பறக்கவிடுவார். அது அவர் உயிரின் நீட்சியை பெற்றுக்கொண்டதுபோல சிறகுகொண்டு காற்றில் மிதந்து சென்று மீண்டுவரும். அவருடைய நீட்டிய சுட்டுவிரல்மேல் வந்து அமையும்.”

முகம் மலர அந்நிகழ்வை நோக்குபவள்போல அசலை அமர்ந்திருந்தாள். அவளை பானுமதி சில கணங்கள் நோக்கியபின் “அவர் என்னிடம் வேழம் எனை மணம்கொள்ளும் என்று உரைத்தபோது இவையனைத்தையும் அறிந்திருப்பாரா?” என்றாள். அசலை முதலில் அதை செவிகொள்ளவில்லை. பின்னர் உணர்ந்து திரும்பி நோக்கி “உணராமலிருக்க வாய்ப்பில்லை…” என்றாள். பானுமதி ஒன்றும் சொல்லவில்லை. அசலை “வேழமே அல்லவா?” என மீண்டும் சொன்னாள். “ஆம்” என்று பானுமதி பெருமூச்சுவிட்டாள். அசலை அவள் பேசப்போவதென்ன என்பதுபோல நோக்கி அமர்ந்திருந்தாள். பானுமதி ஒன்றும் சொல்லாமல் கைகள் ஒன்றையொன்று துழாவ அமர்ந்திருந்தாள். அசலை அவ்விரல்களை நோக்கினாள். அவை தேடித் தவிப்பது எதை?

பானுமதி பெருமூச்சுடன் “நன்று, பொழுதாகிறது” என எழுந்தாள். “உன்னிடம் நான் கேட்க விழைந்தது இதைத்தானடி. நான் இப்போதுகூட இதை ஒழிய முடியும். உடல்நலமில்லை என்று படுத்தால் போதும்” என்றாள். “அதை செய்யலாகாது, அரசி. இது ஒரு நல்வாய்ப்பென்றே நாம் எண்ணவேண்டும். நாம் அவரிடம் சொல்ல ஒன்றுமில்லை. ஒருவேளை அவர் நம்மிடம் சொல்ல ஏதேனுமிருக்கலாம்.” பானுமதி திகைப்பு தெரியும் விழிகளுடன் “எதை?” என்றாள். “ஏதேனும்…” என்றாள் அசலை. “அவர் சொல்லப்போவதை நாம் அறியமுடியுமா என்ன?” பானுமதி “நீ என்ன கேட்டாய்?” என்றாள். “என்ன?” என்றாள் அசலை. “வேழமே அல்லவா என்றாய்” என்றாள் பானுமதி. அசலை “ஆம்” என்றாள். “ஆம், வேழம்தான். வேழத்தை எவரும் எந்நிலையிலும் வெறுக்கவியலாது” என்றாள் பானுமதி. அசலை புரியா விழிகளுடன் நோக்கி பின் மெல்ல நகைப்பு ஒளிரப்பெற்றாள்.

ஆனால் பானுமதி பதைப்புடன் "ஆமடி. இந்தப் பெருஞ்சுழியிலிருந்து எனக்கு இப்பிறவியில் மீட்பில்லை. வெறுக்க விழைந்ததுண்டு. மெய்யாகவே விரும்புகிறேனா என மீள மீள கேட்டுக்கொண்டதுண்டு. வடக்குநோக்கிப்பொறிபோல எத்தனை அலையினும் அங்கு சென்றே நிலைகொள்கிறது உள்ளம். என்னால் இவரை வெறுக்கவியலாது. ஆம், நானும் அவரே என்று கூவி எழுந்து ஓடிச்சென்று உடன் நிற்கவே அகம் எழுகிறது. அவர் உண்ட அந்நஞ்சின் பாதியே எனக்கு அமுதாகுமென சற்றுமுன் எண்ணினேன்" என்றாள். அவள் இமைகளில் நீர்த்துளிகள் நின்றன. "காதல்கொண்ட பெண்ணென்று பேதையாகி நிற்பதில் உள்ள உவகையும் நிறைவும் வேறெதிலும் எனக்கு கூடவில்லையடி."

"நீயும் தாரையும் பேரரசியும் துச்சளையும் போர் தவிர்க்கும்பொருட்டு கொண்ட அத்தனை முயற்சிகளையும் என் சித்தம் ஆம் அதுவே வழி என ஏற்றுக்கொண்டது. ஆழம் அவருக்கு எதிரானவை என வெருண்டு விலகிக்கொண்டது. இரு நிலையே என் இயல்பென்று எப்போதும் இருந்துள்ளேன். இப்போதும் அவ்வண்ணமே உணர்கிறேன்" என்றாள் பானுமதி. "இரு நிலை இதில் எங்கிருந்து வருகிறது, அக்கையே? நீங்கள் அவரிடம்தான் இருந்துகொண்டிருக்கிறீர்கள்" என்றாள் அசலை. "ஆம், ஒருகணமும் என் ஆழம் விலகியதில்லை என இன்று அறிந்தேன். சற்று முன்னர்... வல்லபை வந்து தூதுரைத்தபோது."

"ஏன்?" என்றாள் அசலை. "அது எனக்கு அளிக்கப்பட்ட தேர்வு" என்றாள் பானுமதி. "நான் என் கரவறையில் வைத்திருக்கும் பீலியைத் துறக்காமல் அவரை இனி அணுகவியலாது. இரண்டிலொன்று தேர்க என்று எனக்கு உரைக்கப்படுகிறது." அசலை முகம் சுளித்து "எவர் கூறுவது?" என்றாள். "அவரல்ல.

வேழம் சிறுமையறியாதது. அது இங்குள்ள அனைவரின் சிறுமையுமென்றாகி நின்றிருக்கும் கணிகரின் செய்தி.” அசலை “ஆம்” என்றாள். “அனைத்தையும் உதறிச்சென்று அவருக்கு இடம் அமரவே நான் விழைகிறேன். நேற்றுவரை என்னை சற்றேனும் தடுத்தது மைந்தருக்கு அன்னை எனும் நிலை. இப்போது அதுவும் சுருங்கி அப்பால் சென்றுவிட்டது” என்றாள் பானுமதி.

குரல் இடற சற்று பொறுத்து உளம் எழ குரல் ஓங்கி “இம்மாமதத்தோனை அடைந்தமையால் என்னுள் நின்று தருக்கிய ஒரு பெண் இன்றும் அவ்வண்ணமே இருந்துகொண்டிருக்கிறாள். பிறிதொன்று என இங்கே நான் எதையும் உணரவில்லை. இவையனைத்திற்கும் அப்பால் என ஏங்கும் ஆழமொன்றின் துளி அப்பீலி. வானோக்கிய விழி அது. அதைத் துறந்தால் மட்டுமே இது எனக்கு கைகூடுமென்றால் அவ்வாறே ஆகுக!” என்றாள். அவள் கைவிரல்கள் குளிர்நீரில் அளைவனபோல நடுநடுங்கின. உதடுகள் துடித்தன. நெஞ்சு எழுந்தமைய தலைகுனிந்து அமர்ந்திருந்தாள். அசலை அவள் கைகளை பற்றினாள். அவை சிறுபரல்மீன்கள் என ஈரமும் தண்மையுமாக துடித்தன.

“அக்கை, நெஞ்சு சொல்லும் வழி அதுவே எனில் அதையே தேர்க! அஞ்சியோ தயங்கியோ அகம்நிறையும் அன்பை தவிர்த்தால் பிழை செய்தவர்களாவோம்” என்றாள். “அவ்வண்ணமென்றால் நான் இளைய யாதவரை எதிரேற்கவேண்டுமா என்ன?” என்றாள் பானுமதி. “ஆம், அவ்வண்ணமென்றால்தான் எதிரேற்கவேண்டும். முற்றிலும் அரசி என. பிறிதொரு துளியும் அல்ல என. உங்கள் விழிநோக்கி அவர் அதை அறியட்டும்.” பானுமதி

தலையசைத்தாள். “இத்தருணத்தை கணிகர் அமைத்தளித்தது அதன்பொருட்டே போலும். அறுத்து எழுக!” என்றாள் அசலை. “ஆம்” என பானுமதி தலையசைத்தாள். பின்னர் பெருமூச்சுவிட்டாள். அசலையும் பெருமூச்சுவிட்டு அமைந்தாள்.

சற்றுநேரம் கழித்து பானுமதி புன்னகையுடன் “நீ சொன்ன காட்சியே என்னில் எழுந்தது, இளையோளே. ஆழியெனச் சுழலும் சிறுவெண்மலர். நான் கலிநஞ்சு உண்டு கருமையடைந்தால் எனை நோக்கி எழுவது அது அல்லவா?” என்றாள். அசலை சிரித்து “அப்போதும் அது மலர்தான், அக்கை” என்றாள்.

கதவை எவரும் திறக்கும் ஒலி கேட்கவில்லை, ஆனால் அவள் உள்ளே வந்துவிட்டிருந்தாள். பானுமதி எழுந்து “அத்தை!” என்றாள். அத்தை அவளை முற்றிலும் புதியவளை பார்ப்பதுபோல விழிசெலுத்தினாள். அவ்விழிகளை சந்தித்ததுமே அவள் அறிந்தாள், அது அத்தை அல்ல என. “யார் நீங்கள்? எவ்வாறு உள்ளே வந்தீர்கள்?” என்றாள். கதவு மூடப்பட்டிருப்பதை அப்போதுதான் அவள் நோக்கினாள். அது ஏதேனும் தெய்வமா? தேவமகளா? விண்ணேறாத மூச்சுடலா? இல்லை, இது கனவு. நான் என் மஞ்சத்தில் படுத்து கனவு கண்டுகொண்டிருக்கிறேன்.

“யார்?” என்று அவள் உரக்க கேட்டாள். “நான் உன்னைப் பார்க்க வந்தேன்” என்றாள் அவள். “ஏன்?” என்று பானுமதி கேட்டாள். அச்சம் எழுந்து நெஞ்சை பற்றியது. அறையிலிருந்து வெளியே ஓட வழியுண்டா என சித்தம் பதறியது. “நான் உன்னை வந்தடைந்தேன்” என்றாள் அவள். “நீங்கள் யார்?” என்றாள்

பானுமதி. “நான் நீ வரும்வரை காத்திருந்தேன்” என்று அவள் சொன்னாள். அவளிடம் சொன்னதுபோல் அச்சொற்கள் எழவில்லை. தன்முன் பானுமதி நின்றிருப்பதையே அறியாமல் வேறேதோ வெளியில் நின்று சொல்லிக்கொண்டிருந்தாள். “நான் காத்திருந்தேன்… அது நீ என அறிந்தேன்.” பானுமதி “அத்தை!” என்றாள். “அத்தை, நீங்களா இது?” அவள் புன்னகைத்தாள். வாயின் இரு மூலையிலும் கோரைப்பற்கள் வளைந்திருந்தன. அப்போதுதான் அவள் கூந்தலை பானுமதி கண்டாள். அது அலையலையாக இறங்கி நிலத்தில் விழுந்து கதவை அடைந்து வெளியே சென்றிருந்தது. “வானின் தனிமையில்” என்றாள் அவள். “அத்தை… என்ன சொல்கிறீர்கள்?”

அச்சொல்லை அவளே கேட்டு அவள் விழித்துக்கொண்டாள். மேற்கூரையின் பலகையடுக்குகளை நோக்கியபடி உடல்ஓய்ந்து படுத்திருந்தாள். எங்கோ இரவு ரீங்கரித்துக்கொண்டிருந்தது. ஒரு பறவையின் ஒலியில் அவள் உடல் விதிர்த்தது. விடாயை உணர்ந்து எழ முயன்றாள். எழுந்து சென்று நீர் அருந்த விழைந்தாலும் உடலை இயக்க இயலவில்லை. உள்ளத்தைக் குவித்து கையை மட்டும் உடலில் இருந்து மீட்டு சேக்கைமேல் அறைந்தாள். மீண்டும் மீண்டும் அறைந்தபோது லதை வந்து வணங்கி நின்றாள். “நீர்” என்றாள். அவள் புரிந்துகொண்டு குவளையில் நீர் கொண்டுவந்து தந்தாள். கையூன்றி எழுந்து அமர்ந்து நீரை அருந்தினாள்.

நீரின் குளிர்ந்த தொடுகை உடலுக்குள் பரவியிருந்த பல்லாயிரம் இலைநுனித் துடிப்புகளை அடங்கச் செய்தது. பெருமூச்சுடன் கண்களை மூடிக்கொண்டு லதையிடம் செல்லலாம் என கைகாட்டினாள். உடலுக்குள் குருதிநுரைக் குமிழிகள் விசையழிந்தன. கண்களுக்குள் சுழன்று சுழன்று

இறுதிக் குமிழியும் மறைந்தபோது விழித்துக்கொண்டு அறைக்குள் சிறுசுடர் அகல் விரித்திருந்த நிழல்களை நோக்கிக்கொண்டிருந்தாள். பின்னர் மீண்டும் கண்களை மூடிக்கொண்டு அக்கனவை ஆழத்திலிருந்து இழுத்து மேலே எடுத்தாள்.

அதற்குள் அதன் பெரும்பகுதி கரைந்து உருமாறிவிட்டிருந்தது. தெளிவற்ற ஓவியமாக அத்தையின் முகம் தெரிந்தது. அவள் அந்த முகத்தை வெவ்வேறு கோணங்களில் சென்று நோக்கிக்கொண்டிருந்தாள். ஒரு கணத்தில் அக்கண்களை அருகே என கண்டாள். பிறிதெவரோ அல்ல. அத்தைதான். அக்கண்களை அவள் முன்னர் கண்டிருந்தாள். முதிரா இளமையில் ஒரு பலிச்சடங்கில். குருதியை நோக்கி நின்றிருந்த முகம் அது. ஒரு நுண்ணிய உளச்சொடுக்கலுடன் அவள் அனைத்தையும் தெளிவுற உணர்ந்தாள்.

காசியை ஆண்ட அரசர் பீமதேவரின் மகள் அம்பையையும் இளையவர்கள் அம்பிகையையும் அம்பாலிகையையும் அஸ்தினபுரியின் மூத்தவராகிய பீஷ்மர் கவர்ந்து சென்றதும் அவ்விளவரசியர் மூவருமே அந்நகரில் துயருற்று இறந்ததும் சூதர் கதைகளாக எப்போதும் உலவின. இல்லங்கள்தோறும் பெண்கள் அம்பையின் கதையைப் பாடி விழிநீர் சிந்தினர். காசித் துறைமேடையின் அருகே கங்கையின் வாய் எனப்பட்ட ஊர்த்வபிந்து எனப்படும் பெருஞ்சுழிக்கு அருகே அம்பையன்னைக்கு சிறு ஆலயம் ஒன்று அமைந்திருந்தது. பொன்னிறமான சுவர்ணை, செந்நிறமான சோபை, பச்சைநிறமான விருஷ்டி என்னும் மூன்று தேவியர் சூழ அங்கு அன்னை அமர்ந்திருந்தாள்.

இளவேனில், வேனில், மழைக்காலம் என மூன்று காலங்களிலாக மூன்று பூசனைகள் அங்கே நிகழ்ந்தன. இளவேனிலுக்குரிய அன்னையாகிய சுவர்ணைக்கு கொன்றைமலர்களும் கோடையின் பெருந்தேவியாகிய சோபைக்கு செங்காந்தளும் விருஷ்டியன்னைக்கு மழைக்குப்பின் எழும் புது அருகம்புல் மாலையும் சூட்டப்பட்டு வணங்கப்பட்டனர். குளிர்காலத்தின் இறுதியில் கருநிலவுநாளில் அம்பையன்னைக்கு நீலமலர்களால் பூசெய்கை இயற்றி குருதிபலி அளிப்பார்கள். துறைமேடைக்கு படகிலேறச் செல்லும் ஒவ்வொருமுறையும் அம்பையன்னையை நோக்குவது அவள் விழிப்பழக்கம். கருங்கல்லில் வடித்த அச்சிலை வலக்கையில் தாமரையும் இடக்கையில் அனலும் கொண்டிருந்தது.

அவள் தன் அத்தையின் சுட்டுவிரல் பற்றி அவ்வாலயத்திற்கு முதல்முறையாக சென்றபோது அத்தையை அனுபநாட்டு அரசர் மணந்திருக்கவில்லை. ஷத்ரிய நாடுகளிலிருந்து அவளுக்கான மணத்தூதுகள் அன்று வந்துகொண்டிருந்தன. ஆலயத்தில் நின்றிருந்த அம்பை அன்னையின் முன் கைகூப்பி விழிமூடி நின்ற அத்தையை ஒருமுறை அண்ணாந்து பார்த்தபின் அவள் கருவறைக்குள் இருந்த சிறிய சிலையை அருகிலென கண்டாள். இரண்டுமுழ உயரமுள்ள கற்சிலையின் முகத்தில் இரு வெள்ளிக் கண்கள் பொருத்தப்பட்டிருந்தன. முதலில் கருவறை இருளுக்குள் இருண்ட நீரில் இரு வெள்ளிப்பரல்மீன்கள்போல் அவை மட்டும் தோன்றின. பின்னர் நிழலுருவாக முகம் அவற்றுக்குப் பின்னால் எழுந்து வந்தது. பரல்கள் விழிகளென்றானபோது நோக்கு கூர்கொண்டது. சில கணங்களுக்குள் மிக அருகிலென எழுந்து வந்து உறுத்தியது.

அவள் அஞ்சி அத்தையின் ஆடையை பற்றிக்கொண்டாள். அவள் முழங்காலில் முகம் புதைத்து அந்நோக்கை தவிர்த்தாள். மீண்டும் விழிதிருப்பியபோது கன்னங்கரிய கல்லுடலுடன், மீன்செதிலென ஒளிரும் விழிகளுடன் அவளுக்கு மிக அருகே அம்பையன்னை நின்றிருந்தாள். அலறியபடி அத்தையின் கால்களை பற்றிக்கொண்டு அவள் உடல் நடுங்கினாள். குனிந்து அவளை இடையில் தூக்கி வைத்து “என்னடி?” என்றாள் அத்தை. “அங்கே…” என்று அவள் கைசுட்டினாள். “அது அன்னை. நம் குடியின் மூதன்னை அவள்” என்றாள் அத்தை.

“வேண்டாம்! வேண்டாம்! போய்விடுவோம்!” என்று அவள் கைகால்களை உதறி அத்தையின் உடலில் படிந்து துடித்தாள். “இருடி, பூசனை முடிந்தபின் செல்வோம்” என்றாள் அத்தை. “வேண்டாம்! வேண்டாம்!” என்று அவள் பதறி கீழிறங்க முயன்றாள். அத்தை திரும்பி செவிலியிடம் “அஞ்சிவிட்டாள், ஏனென்று தெரியவில்லை. தேருக்கு கொண்டு செல்க!” என்று அவளை அளித்தாள். செவிலி அவளைத் தூக்கி மூடுதிரையிட்ட தேரில் கொண்டுவந்து அமர்த்தி அருகமர்ந்து அவள் தலையைப்பற்றி தன் உடலுடன் சேர்த்துக்கொண்டு ”அஞ்சவேண்டாம், இளவரசி… நான் அருகிருக்கிறேன்” என்றாள். அவள் செவிலியின் மடியில் ஒண்டிக்கொண்டாள்.

அவள் குழல் வருடி “என்ன ஆயிற்று?” என்றாள் செவிலி. “அங்கே… அங்கே கண்கள்” என்றாள் அவள். “அது தங்கள் மூதன்னை. உலகு புரக்கும் அன்னைநிரையில் ஒருத்தி” என்றாள் செவிலி. “அஞ்சவேண்டாம், இளவரசி. அவளிடம் வேண்டிக்கொள்க!” என்று அவள் குழலைத் தடவி ஆற்றுப்படுத்தினாள். அவள் விசும்பியபடி மெல்ல துயின்றாள். ஆலயமுகப்பில் உடுக்கும் முழவும் ஒலிக்கத்தொடங்கின.

கொம்புகள் பிளிறின. அவள் தன் கனவுக்குள் எழுந்த பெருவேழம் ஒன்றை கண்டாள். வெண்தந்தங்கள் இரு பிறைகள் என எழுந்த கருங்குவை.

அவள் குறட்டையோசையை கேட்டபின் ஓசையின்றி செவிலி கீழிறங்கிச் சென்றாள். அவள் வேழத்தின் இருளுடல் அருகே திரைச்சீலையென அசைவதை கண்டாள். அப்பரப்பில் ஒரு கருவண்டின் ஒளி. அது நீர்த்துளி. அல்ல, விழி என உணர்ந்ததும் அலறியபடி விழித்துக்கொண்டாள். யானைகள் பிளிறுவது போலவும் ஓநாய்கள் குரைப்பது போலவும் நடுவே புலி உறுமுவது போலவும் தாளக்கருவிகளின் ஓசைகள் கேட்டுக்கொண்டிருந்தன. கொலை விலங்குகள் செறிந்த பெருங்காடெனத் தோன்றியது அந்த இருள்சூழ்கை. தேரின் திரைகளுக்குள் அமர்ந்திருப்பது காப்பென்று தோன்றியது. முழங்காலில் முகம் புதைத்து கண்களை மூடி அமர்ந்தாள்.

ஆனால் சற்று நேரத்திலேயே சலிப்புற்றாள். எழுந்து திரைவிலக்கி வெளியே பார்த்தபோது மூன்று ஆடுகளை சூதர்கள் இழுத்துச் செல்வதை கண்டாள். முன்னால் காட்டப்பட்ட பச்சை இலைகளை நோக்கி வாய் நீட்டியபடி அவை அவற்றின் பின்னால் சென்றன. இடையில் செம்பட்டுக் கச்சை இறுக்கி, செவ்வரளி மாலை அணிந்து, குடுமியில் காந்தள் அணிந்த சூதர்கள். அறியாமல் படிகளினூடாக இறங்கி அவள் அவற்றை தொடர்ந்தாள்.

அவர்கள் அம்பையன்னையின் ஆலயத்தின் முன் அந்த ஆடுகளை கொண்டுசென்றனர். அவள் கால் தயங்கி அங்கிருந்த மரத்தினருகே நின்றாள். அனைத்து விழிகளும் ஆடுகளை நோக்கிக்கொண்டிருந்தமையால் எவரும் அவளை நோக்கவில்லை. அவள் தன்னை நன்றாக அந்த மரத்தின்

வேர்ப்புடைப்புக்குள் ஒடுக்கிக்கொண்டாள். முகத்தை மட்டும் நீக்கி அங்கு நிகழ்வனவற்றை நோக்கிக்கொண்டிருந்தாள்.

ஆடுகளை இழுத்துச் சென்றவர்கள் ஆலயத்தின் முன் அவற்றை ஒன்றன்பின் ஒன்றென நிறுத்தினார்கள். உடுக்கோசையும் கொம்போசையும் முழவோசையும் நிறைந்த பேரொலி ஆடுகளை நீர்த்துளியென ததும்பி நடுங்கவைப்பதாகத் தோன்றியது. தழை முன்னால் நீட்டப்பட்டபோது அவற்றில் ஒன்று முன்னால் சென்று பலிபீடத்திற்குக் குறுக்காக கழுத்தை நீட்டியது. மேலிருந்து விழுந்ததுபோல் எடை மிக்க வாளொன்று சரிந்து அதன் தலையை துண்டித்து அப்பால் இட்டது. திறந்த குடத்திலிருந்தென குருதி பீறிட்டுக் கசிய நான்கு கால்களும் உதைத்து விசைகொள்ள ஆடு தலையின்றி துள்ளி எழுந்து அப்பால் சென்று அம்பை அன்னையின் ஆலய முகப்பில் விழுந்து புரண்டு குளம்புகளை காற்றில் உதைத்தது.

அவள் அதன் பின்னரே குருதி தெறித்த உடலுடன் கையில் பள்ளிவாளேந்தி நின்ற பூசகரை பார்த்தாள். அம்பையின் அதே வெள்ளிவிழிகளை அவரது கரிய முகத்திலும் கண்டாள். நரைத்த குழல்திரிகள் தோளில் விழுந்து கிடந்தன. ஆட்டின் வால் என பருத்த நரைமீசைக்குக் கீழே தடித்த உதடுகளுக்குமேல் நான்கு பற்கள் நீண்டு பதிந்திருந்தன. பள்ளிவாளை மூன்று முறை சுழற்றி “அம்பையே, வெல்க! அன்னையே, பேரரசியே, வெல்க! விண்ணரசியே, வெல்க! பெருவஞ்சத்தோளே, வெல்க! அணையா எரியே, வெல்க!” என்று அவர் கூவ கூடி நின்றவர்கள் ஏற்று முழக்கமிட்டனர்.

கனவிலென இரண்டாவது ஆடு சென்று பீடத்திற்குக் குறுக்கே கழுத்தை நீட்டியது. வாள் அதை வெட்டி அமைந்தபோது தயங்கி பின்னால் விழுந்து மேலும் ஒரு காலெடுத்து வைத்து

பின்னால் வந்து தப்பி ஓட முயல்வதுபோல கைகூப்பி நின்றிருந்த கூட்டத்திற்கு இடையே புகுந்து பக்கவாட்டில் சரிந்து விழுந்து உதைத்துக்கொண்டது. அவள் திரும்பி ஓடி தேரை அடைந்தாள். அவள் விழிகளுக்குள் ஆட்டின் துள்ளல் அப்போதும் எஞ்சியிருந்தது. “இளவரசி, இளவரசி” என்று அழைத்தபடி இரு சேடியர் அவளுக்குப் பின்னால் வந்தனர். வீறிட்டு அலறியபடி உதறிக்கொண்ட கால்களுடன் தேருக்குள் நுழைந்து பீடத்தில் விழுந்தாள். முழங்கால்களில் முகம் புதைத்து உடலை இறுக்கிக்கொண்டாள். பிறிதொரு ஓசை எழுந்தபோது அடுத்த ஆடு வெட்டப்பட்டதை அவள் உளக்கண்ணில் கண்டாள்.

திரும்பி வருகையில் தேர்த்தட்டில் உதடுகள் உலர்ந்து விழிகள் வெறித்திருக்க, கைகள் இறுகி நகங்கள் உள்ளங்கையில் பதிய, கால்விரல்கள் நீண்டு நாண்கொண்ட வில்லென நின்றிருக்க படுத்திருந்தபோதே உடல் வெம்மைகொள்ளத் தொடங்கியிருந்தது. “குருதி! குருதி!” என்று அவள் புலம்பிக்கொண்டிருந்தாள். அவள் தலையை மடியில் எடுத்து வைத்து நெற்றிக்குழலை வருடியபடி அத்தை ஒரு சொல்லும் எழாது அமர்ந்திருந்தாள். அரண்மனையை அடைந்து அவளை சேடியர் உள்ளே தூக்கிச்சென்றபோது அன்னை ஓடிவந்து “என்ன ஆயிற்று? என்ன ஆயிற்று?” என்றாள். “சற்று அஞ்சிவிட்டாள்” என்றாள் அத்தை.

அன்னை முன்னரே எச்சரித்திருந்தாள். “முதிராச் சிறுமி. அவளை எதற்கு இக்கொடுவிழவுக்கு அழைத்துச் சென்றாய்? மூத்தோர் சொல்லுக்கு இங்கு எந்த மதிப்பும் இல்லையா?” என்றாள் உரத்த குரலில். “அரசியாகப் போகிறவள். அவள் குருதி கண்டு வளரட்டும். குருதிமேல் நடக்கும் கால்கள்

கொண்டவர்கள்தான் மணிமுடி சூடும் தகுதி அடைகிறார்கள்” என்று அத்தை சொன்னாள். அன்னை சொல்லடங்கி வெறுமனே நின்றிருக்க “இந்த அழலில் அவள் வென்று மீண்டுவந்தால் அவள் சொல்லில் வாழும் அரசி. இல்லையேல் அவளும் தன் அன்னையை போலத்தான். பிறகு எனக்கும் அவளுக்கும் சொல்லில்லை” என்றபின் அத்தை தன் தனியறைக்கு சென்றாள்.

ஏழு நாட்கள் அவள் காய்ச்சலில் நடுங்கிக்கொண்டிருந்தபோது ஒருமுறையேனும் அத்தை வந்து பார்க்கவில்லை. ஏழாவது நாள் வாய்க் கசப்புடன், உடல் ஓய்ச்சலுடன், மெலிந்து ஒடுங்கிய விலாவுடன் அவள் மஞ்சத்தில் படுத்திருந்தபோது அத்தை அவள் அருகே வந்தமர்ந்தாள். புன்னகையுடன் அவள் கைகளை பற்றிக்கொண்டு “எப்படி இருக்கிறாய்?” என்றாள். ஒளியற்ற புன்னகை காட்டி அவள் உதடுகளை நாவால் ஈரப்படுத்திக்கொண்டாள். “கனவுகள் கண்டாயா?” என்று அத்தை கேட்டாள். “ஆம்” என்றாள். “என்ன கனவு?” என்றாள். “குருதி” என்று அவள் சொன்னாள். “யாருடைய குருதி?” என்று கேட்டாள். “மனிதர்கள்... அறியா முகங்கள்...”

அவள் முகத்தை கூர்ந்து நோக்கியபின் “நீ என்ன செய்தாய்?” என்றாள் அத்தை. “நான் அதில் கால் அளைந்து நடந்தேன்... இளவெம்மை கொண்டிருந்தது. மென்சேற்றுக் கதுப்பென மிதிபட்டது. அதில் குமிழிகள் என விழிகள். மீன்களென வெட்டுண்ட காதுகளும் விரல்களும்...” என்றாள். அத்தை புன்னகையுடன் அவள் கையைப் பற்றி ஒரு மயிற்பீலியை வைத்தாள். அவள் கைவிரித்துநோக்கி “இது என்ன?” என்றாள். “மென்பீலி... இதை வைத்துக்கொள்.” அவள் அதை திருப்பி அது எருமைவிழி என நிறம் மாறுவதை நோக்கினாள். “அடுக்கு

குலையாத ஒரு மயிற்பீலி நம் கையில் இருந்தாகவேண்டும்” என்றாள் அத்தை. “அம்பைஅன்னையும் ஒரு பீலியை வைத்திருந்தாள் என்கின்றன நூல்கள்.”

# குருதிச்சாரல் - 45

**பகுதி ஏழு : அலைகளில் திரள்வது – 3**

அஸ்தினபுரியின் கிழக்குக் கோட்டைவாயிலின் பெருமுற்றத்தின் கீழ்எல்லையில் அமைக்கப்பட்டிருந்த மரப்பட்டைக் கூரைக்குக் கீழே பானுமதி அரசணிக்கோலத்தில் நின்றிருந்தாள். அவளுக்கு வலப்பக்கம் அசலையும் அவளருகே தாரையும் நின்றிருக்க இடப்பக்கம் அணுக்கச்சேடி லதையும் செவிலியரும் நின்றனர். பின்புறம் அகம்படிப் பெண்டிர் பேழைகளும் கூடைகளுமாக நிரைகொண்டிருந்தனர். விண்மூடியிருந்த கருமுகில்களிலிருந்து ஒளித்திவலைகளென பெய்திறங்கிய சாரலில் நனைந்த முற்றம் ஓடிநின்ற புரவியின் உடற்பரப்பு என மெல்ல சிலிர்த்துக்கொண்டிருந்தது. அவர்களுக்கு வலப்பக்கம் அஸ்தினபுரியின் கைவிடுபடைகளின் ஏந்திக் கூர்ந்த அம்புகளின் முனைகளில் இருந்து நீர்த்துளிகள் சொட்டின.

மறு எல்லையில் கோட்டைவாயிலின் வலப்பக்கமாக ஏழு வைதிகர்கள் ஓலைக்குடைகளுக்கு அடியில் கங்கைநீர்க் கலங்களுடன் நின்றிருந்தனர். அவர்களைத் தொடர்ந்து மங்கலத் தாலமேந்திய சேடியர் பன்னிருவரும் இசைக்கலங்களுடன் சூதர்கள் பதினெண்மரும் நிரைகொண்டிருந்தனர். இடப்பக்கமாக நீரொளியில் மின்னிய

இரும்புக்கவசங்களும், கன்றுவிழிகள் என ஒளிகொண்டிருந்த வேல்முனைகளும், நாகத்தோல்போல் மிளிர்ந்த வாளுறைச்செதுக்குகளுமாக அஸ்தினபுரியின் அணிக்காவல் படை நின்றிருந்தது. அவர்களுக்குமேல் பட்டுத்திரையென உலைந்தும், பீலியென வருடிச்சுழன்றும் மலை நின்றது.

முற்றத்திலிருந்து ஊறி, சிற்றோடையாக ஆகி, நாகமென உடல் வளைத்து வந்த நீர்வழிவு பந்தலுக்குள் புகுந்து பானுமதியின் கால்களை நனைத்து வளைந்து அப்பால் சென்றது. குளிரில் நீலநரம்புகள் புடைத்து வீக்கம் கொண்டன அவள் பாதங்கள். அவள் கால்மாற்றி நின்றபடி அசலையிடம் “எங்கு வந்திருக்கிறார்கள் என்பதை உசாவிச் சொல்” என்றாள். அசலை திரும்புவதற்குள் தாரை “அணுகிவிட்டார்கள். நான்காவது காவல்நிரையின் முரசொலி எழுகிறது” என்றாள். பானுமதி புன்னகைத்து “இவளுக்கு முயலின் செவிமடல்கள் ஏன் இன்னும் உருவாகவில்லை என்று ஐயுறாத நாளே இல்லை” என்றாள். அசலை புன்னகைத்தாள்.

மறுகணமே கோட்டையின் முகப்பில் பெருமுரசு முழங்கத்தொடங்கியது. அதைக் கேட்டு மேலும் இரு முரசுகள் அதிர்ந்தன. முகில்குவைகளுக்குக் கீழிருந்து அவ்வொலி மழுங்கிய இடியோசையென கேட்டது. மூன்று எரியம்புகள் மழைப் பிசிறுகளைக் கிழித்தபடி மேலெழுந்து சென்று வெடித்து அனல்சிதறி வளைந்து அப்பால் இறங்கின. மழையில் அவற்றின் ஒளி வண்ணத்தீற்றலாகப் பரவி அணைந்த பின்னரும் விழியெச்சமாக நீடித்தது. அவற்றின் ஒலி வேறெங்கிருந்தோ நீரில் கல்விழும் ஓசையென கேட்டது.

கோட்டையின் வாயில்முகப்பில் நின்றிருந்த தலைக்காவலன் தன் கைகளை விரித்து அசைக்க சேடியரும் சூதரும்

படைவீரர்களும் நேர்நிலை கொண்டனர். கோட்டைக்குமேல் யாதவர் குலத்தின் பச்சைக்கொடி வளைந்து மேலேறுவதை பானுமதி கண்டாள். அது மேலேறிய பின்னரே காற்று அதை பறக்கச்செய்தது. அதிலிருந்த கன்றுமுத்திரை தெரிந்தது. பானுமதி திரும்பி “துவாரகையின் கருடக்கொடி அல்லவா மேலேறவேண்டும்?” என்றாள். அசலை “முறைப்படி அவர் இப்போது யாதவ குலத்தின் பேரரசரல்ல. அவருக்கென தனிக் கொடி இல்லையென்பதனால் குலக்கொடி ஏறவேண்டுமென்று அரசாணை” என்றாள்.

“இங்கு இப்போது ஓர் அரசமுறை வரவேற்பு அவருக்கு இருப்பதை அறிந்திருக்க மாட்டார். நம்மை அவர் புறக்கணித்து முன்செல்லவும் வாய்ப்புள்ளது” என்றாள் பானுமதி. அசலை “அது அவரது இயல்பல்ல. இவை அனைத்தையும் முன்னரே எதிர்நோக்கியிருப்பது போன்ற புன்னகையன்றி பிறிதெதையும் அவர் இதழ்களில் காணமுடியாது” என்றாள். பானுமதி “அன்று முதலே இப்படித்தான், அவர் செய்யவிருப்பதை சொல்பவள் இவள்” என்றாள். தாரை புன்னகைத்து “நாம் விழைவதை அவர் செய்கிறார். தன்னைச் சூழ்பவர் அனைவரும் விழைவதை ஒருவர் எப்படி ஆற்றமுடியுமென நானும் வியந்திருக்கிறேன்” என்றாள்.

மீண்டுமொரு எரியம்பு எழுந்து விண்ணில் வளைந்தது. அது முதற்காவல் நிலையிலிருந்து கிளம்பியதென்பதை பானுமதி உணர்ந்தாள். அவள் நெஞ்சு ஓசையிடத் தொடங்கியது. அசலை அவளைப் பார்த்து “அஞ்சுகிறீர்களா, அக்கை?” என்றாள். “எப்போதும் அவருக்கு அணுக்கமானவள் என்றே உணர்ந்திருக்கிறேன். என் குலத்தார் என்றன்றி அவரை எப்போதும் எண்ணியதில்லை. இன்று முதன்முறையாக மிகத்

தொலைவில் இருக்கிறேன் என அறிகிறேன். அதுவே என்னை பதற்றமடைய செய்கிறது” என்றாள். அசலை “அவரிடமிருந்து எவரும் அகலவியலாது. அகன்று சுழன்று அருகணைவோம்” என்றாள்.

வெளியே முழவோசைகளும் கொம்புப் பிளிறல்களும் எழுந்தன. பெருமுரசுகளின் ஓசையுடன் இணைந்து அணுகி பெருகி வந்தன. கோட்டைவாயிலைக் கடந்து சாத்யகியின் பெரிய கரும்புரவி வருவதை பானுமதி கண்டாள். அசலையிடம் “கொடிவீரன் கூட இன்றி வருகிறார்” என்றாள். “கொடிவீரனை முன்னனுப்புவது அரசர்களுக்குரிய முறைமை” என்றாள் அசலை. தொடர்ந்து இளைய யாதவர் வெண்புரவி ஒன்றில் நனைந்த கரியதோள்களும், ஈரத்தில் படிந்து முதுகில் ஒட்டிய நீள்குழல்சுருள்களும், காதோரம் சூடிய மயிற்பீலியும் இடையில் செந்நிறக் கச்சையுமாக வந்து கடிவாளத்தை இழுத்து புரவியை விரைவழியச் செய்தார்.

தலைக்காவலன் கைவீச மங்கலஇசை எழுந்தது. வைதிகர் கங்கை நீர் தெளித்து வேதமோதி எதிர்கொண்டனர். அணிச்சேடியர் மூன்று நிரைகளாக மங்கலத்தாலங்களுடன் சென்று அவர் முன் நின்று முறைப்படி இடவலமும் வலஇடமும் உழிந்து குரவையிட்டு வரவேற்றனர். இளைய யாதவர் புரவியை மெல்ல தட்டி சீர்நடையில் முன்னால் வர அணிப்படையினர் தங்கள் படைக்கலங்களை மேலே தூக்கிச் சுழற்றி நிலம் நோக்கி தாழ்த்தி அவருக்கு அரச வரவேற்பளித்தனர். வாளொளிகளின் அலை சிறு மின்னல் என நீர்த்தாரைகளுக்கு அப்பால் எழுந்தமைந்தது.

பானுமதி திரும்பி தன் அகம்படியரை பார்த்தபின் முன்னால் நடக்க அவளுக்கு மேல் ஓலைக்குடை ஏந்தியபடி சேடியர்

தொடர்ந்தனர். அசலை குடை வட்டத்திலிருந்து விலகி மழைச்சாரல் தன்மேல் விழ நடந்தாள். இளைய யாதவரை எதிர்கொண்ட பானுமதி கைகூப்பியபடி நிற்க அவர் புரவியிலிருந்து கால்சுழற்றி இறங்கி கைகூப்பியபடி அணுகி வந்தார். அவருக்குப் பின்னால் சாத்யகி கைகூப்பியபடி வந்து சற்று அப்பால் நின்றான். பானுமதி "அஸ்தினபுரிக்கு யாதவகுலத் தலைவரை அரசமுறைப்படி வரவேற்கிறேன். இக்குடிகளும் அரசும் வளம்பெறவும், கொடிவழிகள் செழிக்கவும், மூதாதையர் மகிழவும் தங்கள் வருகை வழிகோல வேண்டுமென்று கோருகிறேன்" என்றாள்.

இளைய யாதவர் தலைவணங்கி "அஸ்தினபுரியின் அரசியின் சொல் ஆணையென தலைக்கொள்ளப்படுகிறது. அடியேன் இன்று அரசனல்ல, எனினும் இந்த முறைமைகளும் நற்சொல்லும் என்னை அவ்வாறு ஆக்குகின்றன. மும்முடி சூடி பாரதவர்ஷத்தின் மேலமர்ந்த பேரரசனென்று இத்தருணம் உணர்கிறேன். இதன்பொருட்டு என் மூதாதையர் இந்நாளை வாழ்த்துக!" என்றார். அசலையும் தாரையும் வணங்கி முகமன் உரைத்தனர். அவர் அவர்களை நோக்கி சிரித்து "கலைமகளும் திருமகளும் மலைமகளும் வந்து வரவேற்க நற்பேறு கொண்டேன்" என்றார். புன்னகைக்கையில் சிறுமைந்தரென ஆகிவிடும் அவர் முகத்திலிருந்து பானுமதி உடனே விழிவிலக்கிக்கொண்டாள். அசலை "இந்நாள் எங்களுக்கு நல்லூழ் அமைத்தது" என்றாள்.

"வருக அரசே, தங்களுக்கான வெள்ளித்தேர் ஒருங்கி நின்றுள்ளது" என்றாள் பானுமதி. இளைய யாதவர் புன்னகையுடன் அசலையை நோக்கி "நான் இதை எவ்வாறு எதிர்கொள்வேன் என்று இளைய அரசி அறிவார்" என்றார்.

அசலை “ஆம், எண்ணியவாறே எதிர்கொள்கிறீர்கள்” என்றாள். இளைய யாதவர் “வெள்ளித்தேர் நன்று. இவ்விருண்ட நகரில் அது துலங்கித் தெரியும்” என்றார். அசலை சிரித்தாள். தாரை சிறுமியருக்குரிய ஊக்கத்துடன் “ஆம், கரிய நீரில் பரல் என” என்றாள். இளைய யாதவர் புன்னகைத்து அவளை நோக்கி “பரலா?” என்றார். “பரல்மீனே ஆற்றல்கொண்டது…” என்றாள் தாரை.

அவர் சிரித்துக்கொண்டு தேர்நோக்கி சென்றார். பெரியவர்களின் சிரிப்பில் கண்கள் முழுமையாக இணைந்துகொள்வதேயில்லை, மைந்தரைப்போல் முற்றிலும் சிரிக்கும் விழிகள் கொண்டிருப்பதனால்தான் இவர் அப்படித் தோன்றுகிறார் என பானுமதி எண்ணிக்கொண்டாள். முதிர்ந்தோர் விழிகள் துயர்களும் ஐயங்களும் தயக்கங்களும் வஞ்சங்களும் தனிமையும் கொண்டவையாகவே நீடிக்கின்றன. இவருக்கு அவை இல்லையா என்ன? இளைய யாதவர் அவரை அணுகிய தேர்ப்பாகனிடம் நட்புடன் ஏதோ சொல்ல அவன் சிரித்தான். ஏவலனிடம் பிறிதொன்றைச் சொல்ல இருவரும் சிரிப்பது வெண்ணிறப் பல்லொளிகளாகத் தெரிந்தது.

ஏவலர் தேரிலேறுவதற்கான படிகளை அமைக்க அவர் ஏறி அதில் அமர்ந்தார். திரைகள் தாழ்ந்தன. சாத்யகி மீண்டும் தன் புரவியிலேறி தேருக்குப் பின்னால் சென்றான். பாகன் பானுமதியிடம் “நாம் உடன்செல்லவேண்டும், அரசி…” என்றான். “ஆம், செல்வோம்” என அவள் சொன்னாள். அசலை “குன்றா இளமை கொண்டவர் என்று அவரை சொல்கிறார்கள். தேரில் சிறு பறவையென ஏறி அமர்வதைக் கண்டபோது வேறெப்படி சொல்லமுடியும் என்று எண்ணிக்கொண்டேன்” என்றாள். பானுமதி “நம்மைப்பற்றி என்ன எண்ணிக்கொண்டு செல்கிறார்?”

என்றாள். “அரசி, புரவிகளை பயிற்றுநர் முதலில் ஆள்கிறார்கள். உரிமைகொள்வோர் பிறகு ஆள்கிறார்கள். அணி ஊர்வலங்களில், பெருங்களங்களில், நெடுந்தொலைவுப்பாதைகளில் அது அவர்களை கொண்டு செல்கிறது. ஆனால் இருண்ட பசிய காடு எப்போதும் அதனுள்ளில் நிறைந்திருக்கிறது. ஒரு புல்லின் இலைகொண்டு அது தன் காட்டை உருவாக்கிக்கொள்கிறது என எண்ணுகிறார்” என்றாள்.

பானுமதி மெல்லிய சிரிப்புடன் “இதை எந்த நூலில் படித்தாய்?” என்றாள். “காவியம்!” என்றாள் அசலை. “சுஃப்ரரின் பிரதீகமஞ்சரி.” லதை “அரசி, தங்களுக்கான தேர்” என்றாள். தலையசைத்துவிட்டு பானுமதி சென்று தனது தேரில் ஏறிக்கொண்டாள். அவளைத் தொடர்ந்து அசலையும் தாரையும் அத்தேரில் ஏறினர். அகம்படியர் தொடர்ந்து வந்த தேரில் ஏற அவர்கள் கிளம்பி வெள்ளித்தேரின் தடம் மீது சென்றனர். அப்பால் வெள்ளித்தேர் நீரலைக்கு அடியில் கிடக்கும் நாணயம் என தெரிந்து தெரிந்து மறைந்தது.

தேர்நிரை அஸ்தினபுரியின் தெருவினூடாகச் சென்றது. பானுமதி சாளரத்தினூடாக வெளியே நோக்கியபடி “இந்த மழை எப்போது ஓயும்?” என்றாள். “நகரமே குளிர்ந்திருக்கிறது. உலோகப்பரப்புகள் இமயப்பனிக்கட்டியென குளிர்ந்திருக்கின்றன.” தாரை “இப்படியே சில நாட்கள் சென்றால் தழல்கூட குளிர்கொண்டுவிடும்” என்றாள். அசலை “அரிய வரிகள். அதைச் சொன்னவர் யார்?” என்றாள். பானுமதி அவளை திரும்பிப் பார்த்தபின் சலிப்புடன் தலையசைத்தாள்.

தாரை “ஆனால் இந்நகர் மக்கள் மழையில் மகிழ்கிறார்கள். அதற்கு எந்த அடிப்படையும் இப்போதில்லை. கால்நடைகள்

நோய்கொண்டுவிட்டன. இளமைந்தர் அனைவருக்கும் உடல் காய்கிறது. பெண்டிர் பலர் நாள்தோறும் குருதிப்போக்கு கொண்டிருக்கிறார்கள். முதியோர் ஒவ்வொருநாளும் இறந்து தென்திசை ஏகுகிறார்கள். அரண்மனையின் தென்முகப்பில் நின்று நோக்கினால் நீத்தோருக்கான காட்டிலிருந்து எழுந்த புகை விண்முகில்களுடன் சென்று இணைந்துவிட்டிருப்பதை பார்க்கமுடிகிறது. ஆனால் இப்பொழுதைப்போல எப்பொழுதுமே இந்நகர் உவகையில் இருந்ததில்லை" என்றாள்.

நகர் முழுக்க மக்கள் ஒருவருக்கொருவர் களிவெறியுடன் பேசியபடி, உடல் தழுவியபடி, ஒருவரையொருவர் முட்டித்தள்ளியபடி ததும்பிக்கொண்டிருந்தனர். "அவர்கள் அனைவரின் விழிகளும் சிவந்து அனல் போன்றிருக்கின்றன" என்று தாரை சொன்னாள். பானுமதி கூரைவிளிம்புகளிலும் கிளைகளிலும் அமர்ந்திருந்த காகங்களை பார்த்துக்கொண்டு வந்தாள். "இத்தனை பறவைகள் நகருக்குள் இருக்கின்றன. ஆனால் ஓசையே இல்லை" என்றாள். "ஓசையே இல்லாமல் விழிசுழற்சியில் எண்ணியிராது இவற்றைப் பார்க்கையில் உள்ளம் திடுக்கிடுகிறது. எவரோ சொன்ன தீச்சொல் ஒன்று நினைவிலெழுவதுபோல." அசலை "ஆம், இவை காகங்கள்தானா என்றே ஐயுறுகிறேன். கரிய நனைந்த கொடிகளென அசைவற்றமர்ந்திருக்கின்றன. சிறகடிப்பதே அரிது. எதை உண்கின்றன? இங்கு வந்து எதற்காக காத்திருக்கின்றன?" என்றாள்.

எதிரே சாலையின் வளைவு திரும்பி ஏழு புரவிகள் வருவதை தாரை கண்டாள். "எவர் அது?" என்றாள். அசலை எழுந்து சாளரத்தினூடாக நோக்கி "அது கணிகரல்லவா?" என்றாள். "கணிகரா? புரவியிலா?" என்றபடி பானுமதி சாளரத்தினூடாக

நோக்கினாள். சகுனியும் கணிகரும் இரு கரிய புரவிகளில் வர அவர்களுக்குப் பின்னால் சகுனியின் அணுக்கவீரர்கள் வந்தனர். கணிகர் இடக்கையில் புரவியின் கடிவாளத்தைப் பற்றியபடி தவளை எழுந்தமர்ந்ததுபோன்ற உடலுடன் அமர்ந்திருந்தார். “அவரது உடல்நோவு அகன்றுவிட்டதா?” என்றாள் பானுமதி.

“முன்பும் அவ்வாறே நிகழ்ந்தது. இந்நகர் நோயுறுகையில் கணிகர் நலம்பெறுகிறார்” என்றாள் அசலை. கணிகர் முன்னால் சென்ற வெள்ளித்தேரருகே புரவியின் கடிவாளத்தை இழுத்து நிறுத்தினார். சகுனியும் ஓரிரு அடிகள் முன்னால் வந்து திரும்பிச் சென்று அவரருகே நின்றார். தேர் தயங்கியது. திரை விலக்கி வெளியே நோக்கிய இளைய யாதவர் கணிகரிடம் முகமனுரைப்பதை தொலைவிலேயே காண முடிந்தது. கணிகர் மலர்ந்த முகத்துடன் மும்முறை தலைவணங்கி முறைப்படி சொல்லுரைத்து கைகூப்பினார். தேர் முன்னால் நகர்ந்தபோது புன்னகை நிறைந்த முகத்துடன் சகுனியும் கணிகரும் முன்னால் வந்தனர்.

பானுமதி அவர்களின் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தாள். “எண்ணியதை எய்திய புன்னகை அது” என்று அசலை சொன்னாள். “எய்திவிட்டார்களா?” என்று பானுமதி கேட்டாள். “அணுகிக்கொண்டிருக்கிறார்கள்” என்றாள் அசலை. “சில தருணங்களில் வருவன ஐயமின்றி நமக்கு துலங்கிவிடுகின்றன. மலைகளைப்போல மாறாப் பருவுருவென முன் நிற்கின்றன.” அவர்களின் தேர் அருகே வந்த கணிகர் கடிவாளத்தை இழுத்து புரவியை நிறுத்தினார். தாரை திரையை விலக்கி தலைவணங்கி “வணங்குகிறேன், ஆசிரியரே. அரசாணைப்படி இளைய யாதவரை முறைப்படி வரவேற்று அரண்மனைக்கு கொண்டுசெல்கிறோம்” என்றாள்.

கணிகர் “நன்று. இன்று அவர் ஓய்வெடுக்கட்டும். நாளை அவையில் தன் முழுஆற்றலுடன் அவர் வந்து அமரவேண்டும். இங்கு அனைவரும் சிக்கிக்கொண்டிருக்கும் இடரிலிருந்து அவரால் மீட்பு அமையுமெனில் அவ்வாறே நிகழ்க!” என்றார். அசலை “அவர் அதற்கான சொல்லுடன் வந்திருப்பார் என எண்ணுவோம், ஆசிரியரே” என்றாள். கணிகர் புன்னகைத்து “ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு அன்னம். அன்னம் மானுடனுக்கு நலம்புரிவதற்கென்றே உருவானது” என்றார். “மிகையும் குறைவும் பழையதும் முதிராததும் என அதை நஞ்சென்றாக்குவது மானுடரின் விழைவும் காழ்ப்புமே.”

பானுமதி திரைக்குப் பின்னால் தன் முகத்தை மறைத்துக்கொண்டு கணிகரை நோக்கிக்கொண்டிருந்தாள். அவர் உடலில் எப்போதும் இருக்கும் நிகரழிவு முற்றிலும் சீரமைந்திருந்தது. உடல் வளைந்து முதுகில் கூன் எழுந்து நின்றிருந்தாலும் வலி மறைந்திருப்பதை அவர் அமர்ந்திருந்த விதமே காட்டியது. அவரது புன்னகை எத்தனை அழகியதென்று ஒருகணம் எண்ணியதுமே அவளே திடுக்கிட்டாள். அவ்வெண்ணத்தால் என அக்கணமே தேர் நகர்ந்து அவள் உடலையும் அதிரச்செய்தது.

தேர் முன்னால் சென்றதும் அசலை “எத்தனை அழகிய புன்னகை!” என்றாள். அவள் என்ன சொல்கிறாள் என்பதை புரிந்துகொண்ட தாரை “அதையே நானும் எண்ணினேன். அப்புன்னகை இங்கு பிறிதொருவரிடம் மட்டுமே உள்ளது” என்றாள். அவள் தலையை ஓங்கித் தட்டி “என்ன சொல்கிறாய்? அறிவிலி!” என்றாள் பானுமதி. “என் உள்ளம் சொல்வதை” என்று தாரை வீம்புடன் தலையை அசைத்தாள். “இவ்வாறு எதை கீழிறக்க இயல்கிறாய்? இறக்கி நீ அடைவதென்ன?” என்றாள்

பானுமதி. “நான் புரிந்துகொள்ள முயல்கிறேன். மானுடஉள்ளம் அள்ள முடியாத ஏதோ ஒன்றின் நுனி வந்தென்னை தொட்டுச் சென்றதுபோல் உணர்கிறேன்” என்றாள் தாரை. “உளறாதே” என்றபின் பானுமதி இருக்கையில் சாய்ந்து கண்களை மூடிக்கொண்டாள்.

தாரை அவள் தொடைமேல் கைவைத்து “அக்கையே, இளஅகவையில் களிறொன்றின் பெருந்தந்தம் என்மேல் பட்டது. மிக மெதுவாக அது திரும்பியபோது புறந்திரும்பி நான் அருகே நின்றிருந்தேன். அந்த மென்தொடுகையிலேயே நான் அப்பால் தெறித்து விழுந்தேன். நெடுநாட்கள் அதை எண்ணி வியந்திருக்கிறேன். மெல்ல தொடுகையிலேயே தூக்கி வீசும் பேராற்றல் அத்தந்தத்துக்குப் பின்னால் பெருகியிருக்கும் கரிய உடலில் இருந்தது. பிறிதொரு முறை நிலவைப் பார்க்கையில் கரிய பேருருவென திரண்டிருக்கும் பெருவெளியாகிய வேழத்தின் சிறு தந்தம் அது என்று தோன்றியது. இங்கு ஒளிகொண்டு நம்மை அணுகுபவை அனைத்தும் பேருருக்கொண்ட இருளால் ஏந்தப்பட்டுள்ளன” என்றாள்.

பானுமதி அசலையிடம் “நீ நூல்கற்று அடைந்த அனைத்து உளக்குழப்பங்களையும் சொற்சிடுக்குகளையும் தன் அறையில் பாவைகளை வைத்து விளையாடி இவள் அடைந்திருக்கிறாள்” என்றாள். அசலை தாரையின் தலையைப் பிடித்து செல்லமாக அசைத்து “ஆம், அவ்வப்போது நானே எண்ணுவதுண்டு. இவளை அழைத்துச்சென்று எங்காவது அமரவைத்து உள்ளிருக்கும் சொற்களை எல்லாம் உலுக்கி எடுத்தால் நானே ஒரு காவியத்தை எழுதிவிடக்கூடுமென்று” என்றாள். பானுமதி சிரித்து “அது காவியமா என்றறியேன். ஆனால் நம்மால்

புரிந்துகொள்ள முடியாத சொற்கள் அவை என்பதில் ஐயமில்லை” என்றாள்.

அசலை “அக்கையே, நாம் அரண்மனை அகத்தளங்களில் பிறந்தோம். சாளரங்கள் அளந்து உள்ளே அனுப்பிய காற்றையே அறிந்திருக்கிறோம். இவள் சுழலிகளும் புயல்களும் பெருகிச்சூழ்ந்த நிலத்திலும் நீரிலும் வாழ்ந்தவள். அதை சொல்லாக்கும் கலையை இங்கு வந்து கற்றுக்கொண்டிருக்கிறாள். என்றேனும் தென்திசையில் சுகவனத்தில் தவம் செய்துகொண்டிருக்கும் இறப்பற்ற மூதாதையான கிருஷ்ண துவைபாயனர் இங்கு வருவாரென்றால் நம்மில் விழிதுழாவி அவர் நோக்கு வந்து நிற்கும் இடம் இவள் முகமாகவே இருக்கும். இவளை அருகணைத்து தன் காலடியில் அவர் அமரச்செய்வார்” என்றாள். “எதன்பொருட்டு இவளுக்குள் இச்சொற்களை நிரப்புகிறது ஊழென்று நாமறியோம். ஆனால் தெய்வங்கள் கணக்குகளின்றி எதையும் இயற்றுவதில்லை என்பார்கள்.”

இளைய யாதவருக்கு ஒதுக்கப்பட்டிருந்த தெற்கு அரண்மனையை அடைந்ததும் தேர் நின்றது. தாரை முதலில் இறங்கி கைகாட்ட பின்னால் வந்த தேரிலிருந்து அகம்படிச் சேடியர் இறங்கி அதன் முற்றத்தில் நிரைவகுத்தனர். அசலை இறங்கி தன் கைகளை நீட்டி பானுமதி இறங்க உதவினாள். அவள் இறங்கி பணிப்பெண் இட்ட மிதியடிமேல் கால்வைத்து நின்றபடி “இது முன்பு மாளவர் வந்தபோது தங்கிய அரண்மனை அல்லவா?” என்றாள். “ஆம், முதன்மை அரசர்களுக்குரியது. முற்றத்தில் கொடி நிறுத்தவும், சிறுபடை அணிநிரை கொள்ளவும் இடம் உள்ளது” என்றாள் அசலை.

சேடியர் குடை பிடிக்க அதற்குள் சென்று நின்று பானுமதி தன் ஆடையை திருத்திக்கொண்டாள். இரு சேடியர் அவள் குழலை சீர்படுத்தினர். தேர்கள் பின்னால் விலகி மெல்ல திரும்பி மறைய அரண்மனைமுகப்பில் நின்ற தலைமைக் காவலன் அருகணைந்து தலைவணங்கி முகமன் உரைத்து "யாதவ அரசர் உள்கூடத்தில் தங்களுக்காகக் காத்திருக்கிறார், அரசி" என்றான். பானுமதி கைகாட்ட மூன்று சேடியர் மங்கலத் தாலங்களுடன் முன்னால் சென்றனர். தொடர்ந்து அசலையும் தாரையும் பின்னால் வர அவள் குடையின் அடியில் நடந்து படிகளை அடைந்தாள்.

மேலேறி நின்று அசலையிடம் தாழ்ந்த குரலில் "அவரிடம் பேசுவதற்கென்ன உள்ளது நமக்கு?" என்றாள். "முறைமைச்சொற்கள். பிறிதொன்றையும் இத்தருணத்தில் நாம் உரைப்பதற்கில்லை" என்றாள் அசலை. பானுமதி புன்னகையுடன் "ஒரு கோணத்தில் நோக்கினால் இதுவரைக்கும் அவருடன் முறைமைச் சொற்களன்றி பிறிதெதையும் நாம் உரைத்ததில்லை என்று தோன்றுகிறது" என்றாள். அசலை "இப்பிறப்பில் இவ்வடிவில் நாம் இவற்றை மட்டுமே உரைக்கவிருக்கிறோம்" என்றாள். தாரை அருகே வந்து "அவர் ஏவலர் எவரையும் கொண்டுவரவில்லை அல்லவா?" என்றாள். "நான் அவருக்கு அடுமனையாட்டியாக இங்கேயே இருக்கலாமா என்று கேட்கவிருக்கிறேன்." பானுமதி அவளை நோக்கியபின் அசலையிடம் புன்னகைத்தாள்.

தலைமைக்காவலன் "வருக, அரசி" என்று உள்ளே அழைத்துச்சென்றான். முதன்மைக்கூடத்தில் இளைய யாதவர் பீடத்தில் அமர்ந்திருக்க அவருக்குப் பின்னால் சாத்யகி நின்றிருந்தான். அறைக்குள் நுழைந்ததும் இளைய யாதவர்

எழுந்து தலைவணங்கி “அஸ்தினபுரியின் அரசிக்கு வணக்கம்” என்று அமர்வதற்கு பீடத்தை காட்டினார். பானுமதி பீடத்தில் அமர்ந்ததும் தாரை அவள் ஆடை மடிப்புகளை சீரமைத்து குழலை நன்கமைத்தபின் இடப்பக்கமாக நின்றாள். அசலை பின்னால் சென்று சாளரத்தோரமாக மார்பில் கைகளைக் கட்டிக்கொண்டு நின்றாள்.

இளைய யாதவர் “நான் தங்களை முன்னரே சந்திக்கவேண்டுமென்று திட்டமிட்டிருந்தேன். எண்ணியவாறே அது அமைந்தது மகிழ்வளிக்கிறது” என்றார். பானுமதி அரைக்கணம் அசலையை நோக்கிவிட்டு “இங்கு என் சொல்லுக்கு எந்த மதிப்பும் இல்லையென்று அறிந்திருப்பீர்கள், யாதவரே” என்றாள். “ஆம், இது அதன் பொருட்டல்ல. இம்முறை நான் வந்திருப்பது ஷத்ரிய அவையில் பேசுவதற்காக. குடியவைகளில் இனி நான் இயற்றுவதற்கு ஏதுமில்லை” என்றார். “அரசி, தாங்கள் அவையில் அளித்த ஆடைக்காக பாண்டவர்களும் அவர்களின் கொடிவழியினரும் கடன்பட்டிருக்கிறார்கள். இந்திரப்பிரஸ்தத்தின் அரசி தன் நன்றியறிதல்களை தெரிவிக்கும்படி என்னிடம் உரைத்தார். இக்குடிமீதும் இதன் மைந்தரிடமும் அவருக்கு துளியளவும் வஞ்சமில்லை என்று கூறினார்.” பானுமதி “ஆம், அது முன்னரே அரசத்தூதர் வழியாகவும் சஞ்சயனூடாகவும் எனக்கு அறிவிக்கப்பட்டது. அவ்வாறன்றி அவள் எண்ண இயலாது” என்றாள்.

அந்த உரையாடல் அவர்களை எளிதாக்கியது. முகத்தசைகள் நெகிழ்வதை உணரமுடிந்தது. இளைய யாதவர் “இங்கு நகர்நுழைந்ததுமே இந்நகர் முற்றிலும் மாறிவிட்டிருப்பதை கண்டேன். இதன் மக்கள் தங்களை முற்றாக நஞ்சுக்கு

அளித்துவிட்டிருக்கிறார்கள். பேரழிவுகளுக்கு முன்பு நிகழ்வது அது. அழிவின் தெய்வங்கள் பேருருக்கொண்டு எழுகின்றன. அவற்றின் ஆற்றலைக் கண்டு வியக்கும் எளிய மக்கள் மறுஎண்ணமின்றி அடிபணிகிறார்கள். வேண்டி விழிநீர் உகுத்து நோன்பிருந்து தங்கள் நகர்நடுவே அமர்த்தி வழிபடுகிறார்கள். குருதியளிக்கிறார்கள்" என்றார்.

பானுமதி ஒன்றும் சொல்லாமல் அமர்ந்திருந்தாள். "கணிகரைக் கண்டேன். நோய் அகன்று வலு கொண்டிருக்கிறார். சகுனியும் புத்துடல்கொண்டு எழுந்தவர் போலிருக்கிறார்" என்றார். தாரை "அரசர் மேலும் ஒளிகொண்டிருக்கிறார், அரசே. இளங்கதிரோன் ஏழுபுரவித் தேரில் எழுந்தவர்போல் தோன்றுகிறார். அவரை நோக்கும் விழிகளும் ஒளிகொள்கின்றன" என்றாள். "ஆம், அவ்வாறே ஆகுமென அறிவேன்" என்றார் இளைய யாதவர். எவரும் எண்ணியிராவண்ணம் பானுமதி விம்மி அழத்தொடங்கினாள். தாரை திகைத்து அருகணைந்து அவள் தோளைத்தொட்டு "அரசி... அரசி" என்றாள். அவள் கைமேல் தன் கையை வைத்து விம்மலை அடக்க, அழுகையைக் கடக்க முயன்றாள் பானுமதி. அதை மீறி மீண்டும் அழுகை எழுந்து அவளை முழுமையாக ஆட்கொண்டது.

மழையில் சுழன்றாடும் தழைமரமென அவள் விம்மலும் சீறலுமாக அழுது மெல்ல ஓய்ந்தாள். சொட்டிச் சொட்டி அவள் ஓய்வது தெரிந்தது. இளைய யாதவர் ஒரு சொல்லும் உரைக்கவில்லை. அசலை அவரையே நோக்கிக்கொண்டிருந்தாள். பானுமதி எழுந்து வெளியே ஓடினாள். தாரை திகைத்தபின் அவளைத் தொடர்ந்து சென்றாள். அசலை மீண்டும் ஒருமுறை இளைய யாதவரை நோக்கிவிட்டு தானும் தொடர்ந்தாள்.

# குருதிச்சாரல் - 46

**பகுதி ஏழு : அலைகளில் திரள்வது – 4**

அஸ்தினபுரியின் தென்கிழக்கில் அமைந்திருந்த இந்திரமுற்றத்தில் மரப்பட்டைகளாலும், முடைந்த ஈச்சைஓலைகளாலும், மூங்கில்களாலும் நீள்வட்டமான மாபெரும் பொதுப்பேரவை அமைக்கப்பட்டிருந்தது. ஆயிரம் தூண்களின் அவை என்று அதை ஏவலர் சொன்னார்கள். செவ்வரக்கு பூசப்பட்ட ஆயிரத்தெட்டு பெருமரத்தடிகள் ஆழ நிலைநிறுத்தப்பட்டு அவற்றை கால்களாகக்கொண்டு அந்த அவைக்கூடம் எழுப்பப்பட்டிருந்தது. இரண்டு வாரை உயரத்தில் பன்னிரண்டு மரப்படிகளுக்குமேல் நிரந்த மரத்தாலான அடித்தளத் தரையின்மேல் மூன்றடுக்கு மரவுரி பரப்பப்பட்டு ஓசையழிவு செய்யப்பட்டிருந்தது. அவைக்குள் தூண்கள் ஏதும் இல்லாமலிருக்கும்பொருட்டு வட்டவிளிம்பில் நின்றிருந்த பெருந்தூண்களிலிருந்து கிளம்பி மையத்தில் குவிந்த மூங்கில் உத்தரங்களால் கூரை அமைக்கப்பட்டிருந்தது. கூரைமூங்கில்கள் ஒன்றுடன் ஒன்று பிணைக்கப்பட்டு இலைநரம்புகள் என பின்னிப்பரவியிருந்தன.

மரத்தாலான வளைவுச்சட்டமும் செம்பட்டுத்திரைச்சீலையும் கொண்ட நூற்றுஎட்டு வாயில்கள் கொண்டிருந்தது அவை. ஒவ்வொரு வாயிலும் ஒரு சிறு நுழைவுக்கூடத்தை நோக்கி திறந்தது. அக்கூடத்தின் இருமருங்கிலும் அரசர்கள் அமர்ந்து காத்திருப்பதற்காக பீடங்கள் போடப்பட்ட சிற்றறைகள் இருந்தன. கூடத்திலிருந்து படிகள் இறங்கி தேர்கள் அணையும் அரைவட்ட முற்றத்தை சென்றடைந்தன. நூற்றெட்டு

முற்றங்களில் இருந்தும் மண்மேல் பலகை பரப்பப்பட்ட நூற்றெட்டு தேர்ப்பாதைகள் கிளம்பி வளைந்து மையப்பெருஞ்சாலையை சென்றடைந்தன. வருவதற்கும் போவதற்கும் வெவ்வேறு பாதைகள். அவை வழிகாட்டும் கொடிகளாலும் தோரண வளைவுகளாலும் அணிசெய்யப்பட்டிருந்தன.

ஷத்ரிய அரசர்கள் நகருக்குள் அமைந்த அரண்மனைகளிலும் வடக்கே புராணகங்கைக்குள் அமைந்த காந்தாரநகரியின் புது மாளிகைகளிலும் தங்க வைக்கப்பட்டிருந்தனர். அவர்கள் அனைவரும் நகரின் கிழக்குக் கோட்டைமுகப்பு முற்றத்திற்கு வந்து அங்கிருந்து பெருஞ்சாலையினூடாக தேர்களில் வந்து அவர்களுக்குரிய தேர்முற்றங்களில் இறங்கினர். ஒவ்வொரு அரசரும் முற்றத்திற்கு வந்துசேர்வதற்கு முன்னரே அவர்களின் கொடி அங்கிருந்த மூங்கில் கொடிக்கம்பங்களில் ஏறியது. அவர்களை வரவேற்று முரசுகள் ஆர்த்தன. காவல்மாடங்களில் எழுந்த கொம்பூதிகள் வரவேற்பொலி எழுப்பினர்.

ஒவ்வொரு அரசரும் தங்கள் படைத்துணையுடனும் அவைத்துணையுடனும் அகம்படியினருடனும் குலக்கொடி பறக்கும் தேர்களில் வந்திறங்கினர். கொடிகள் பறப்பதை நோக்கி முன்னரே வந்துவிட்டிருந்த அரசர்கள் எவர் என அறிந்தனர். அவர்களின் குலமுறைகளை கிளத்தி வாழ்த்தொலி எழுப்பும்பொருட்டு முதுசூதர்களால் தலைமைதாங்கப்பட்ட சூதர்குழுக்கள் முற்றங்களில் நின்றிருந்தனர். உடன் மங்கலத்தாலங்கள் ஏந்திய சேடியரும் இசைக்கலங்களுடன் சூதர்களும் நின்றனர். வாழ்த்தொலியும் இசையும் எழ, கைதொழுதபடி இறங்கிய அரசர்கள் முற்றத்து முகப்பில் காத்துநின்ற கௌரவர்களாலும் அமைச்சர்களாலும்

படைத்தலைவர்களாலும் முறைப்படி வரவேற்கப்பட்டு சிற்றறைகளில் அமரச்செய்யப்பட்டனர்.

அவைக்குள் அவர்கள் தங்களுக்கான பீடங்களை நோக்கி செல்லும் வழியில் வேறு அரசர்கள் ஊடுசெல்லவில்லை என்று உறுதிசெய்தபின் அஸ்தினபுரியின் சிற்றமைச்சர்கள் அவர்களை வழிகாட்டி அழைத்துச்சென்றனர். ஒவ்வொரு அரசரும் முறைமைப்படி நிமித்திகர்களால் அவைநுழைவு அறிவிக்கப்பட்டு அவைக்குள் கொண்டுசென்று அமரவைக்கப்பட்டனர். இளஞ்சிவப்பு நிறமான பட்டுத்துணியால் மூடப்பட்டிருந்த பீடங்கள் சிறிய குழுக்களாக அமைந்திருந்தன. ஒவ்வொருவரின் வலப்பக்கம் அமைச்சர்களும் இடப்பக்கம் படைத்தலைவர்களும் நேர் பின்னால் அணுக்கச்சேவகர்களும் அமர்ந்திருக்கும்படி அமைக்கப்பட்டிருந்தது. அவர்களின் அரியணைக்குப்பின் அவர்களின் கொடி பறந்துகொண்டிருந்தது.

அரசர்கள் கூறுவதை பிறருக்கு ஏற்றுக் கூவுவதற்காக கேட்டுச்சொல்லிகள் நிற்பதற்கான பன்னிரண்டு சிறு மேடைகள் அவைக்குள் அமைக்கப்பட்டிருந்தன. ஏவலர்கள் நீருடனும் வாய்மணத்துடனும் அவர்களை அணுகும்பொருட்டு ஒவ்வொரு நிரைக்கு நடுவிலும் இடையளவு ஆழம் கொண்ட பாதைகள் அமைந்திருந்தன. அதனூடாக குனிந்த உடலுடன் எலிகளென ஏவலர்கள் அவைமுழுக்க உலவிக்கொண்டிருந்தனர். அரசர்கள் நுழையும் பெருவாயில்களுக்கு அடியிலேயே விழிக்கு எளிதில் தென்படாதபடி ஏவலர் நுழைந்து உள்ளே வந்து வெளியேறுவதற்கான சிறுவாயில்கள் அமைந்திருந்தன. அவை முற்றங்களுக்குச் செல்லாமல் அவையின் தரைக்கு அடியில் நுழைந்து மண்ணுக்குள் அமைந்திருந்த கரவுப்பாதையினூடாக

அடுமனைகளுக்கும் பொருளறைகளுக்கும் ஏவலர்கொட்டகைக்கும் சென்றன.

அரசர்களுக்கான ஒன்பது விருந்து மாளிகைகள் தனித்தனியாக அமைக்கப்பட்டிருந்தன. தொல்குடி ஷத்ரியர் பிறருடன் நிகராக உணவருந்துவதில்லை என்பதனால் அவர்களுக்கு மூன்று விருந்துமாளிகைகளும் அடுமனைகளும் தனியாக கிழக்குவாயிலினூடாகச் செல்லும் பாதையின் அருகே இருந்தன. யாதவருக்கும் பிறருக்கும் இரு விருந்துமாளிகைகள் தெற்கே அமைந்திருந்தன. சிறுகுடி ஷத்ரியர்களுக்கான நான்கு விருந்துமாளிகைகள் வடக்குச்சாலைகளின் அருகே அமைந்திருந்தன. அவற்றுக்கு பொருட்களை கொண்டுவரும் வண்டிகள் வந்துசெல்வதற்கான சாலைகள் தனியாக அமைக்கப்பட்டிருந்தன. அங்கே அடுமனைக்குரிய அன்னக்கொடிகள் பறந்தன.

அரசர்கள் ஒவ்வொருவரும் அங்கே நுழைந்த பின்னர்தான் அந்த அவை எத்தனை பெரியது என்று உணர்ந்தனர். அதில் ஒருவராக அமர்வது அவர்களை முதற்கணம் குன்றச்செய்தது. அணிகளும் ஆடைகளும் குலமுத்திரைகளும் பொருளற்றுப்போயின என உணர்ந்து அமைதியாக அமர்ந்தனர். நீரில் மூழ்கி மறைவதுபோல் மூச்சுத்திணறி வெற்றுச்சொல்லுரைத்து வெறுமனே நகைத்தனர். ஆனால் மெல்ல மெல்ல அவ்விரிவே தான் என உணர்ந்து எழுந்தமர்ந்தனர். விழியோட்டி தாங்கள் அறிந்த ஒவ்வொருவரையும் அடையாளம் கண்டு கையசைத்தும் தலையாட்டியும் வணங்கினர்.

அவை பெருகப்பெருக அரசர்கள் உவகை கொண்டு தங்களை இழக்கலாயினர். தாங்கள் மையமென்று அமர்ந்திருக்கும்

அவைகளில் எப்போதும் உடனிருக்கும் நோக்குவுணர்வால் அவர்கள் கட்டப்பட்டிருந்தனர். திரளில் ஒருவராவதென்பது அவர்கள் இளமைக்குப்பின் எப்போதும் அறிந்திராதது. அது பெருகுநீரிலிறங்கி நீந்தித்திளைப்பதுபோல் அவர்களுக்கு களிப்பூட்டியது. சொல்லெண்ணிப் பேசவேண்டியதில்லை. சீரான உடல்மொழி தேவையில்லை. ஆடையையும் அணியையும் திருத்திக்கொண்டே இருக்கவேண்டியதுமில்லை. பெருந்திரளில் ஒருவராயினும் அரசர்கள் அல்லாமலாவதில்லை. அவர்களிடம் வந்த மாற்றங்கள் அகம்படியரையும் அமைச்சர்களையும் குழப்பின. பின்னர் அவர்களும் தெளிந்து புன்னகைகொண்டனர்.

அவைக்கூடத்தின் இருநூற்றுப்பதினாறு சாளரங்களிலும் இளஞ்செந்நிற கலிங்கப்பட்டுத் திரைச்சீலைகள் காற்றில் துவண்டன. கூடையை கவிழ்த்ததுபோல் மூங்கில்கள் வளைந்து மேலேறி நடுவே இணைந்து அமைந்த கூரையிலிருந்து நூறு பட்டுப்பெருவிசிறிகள் தொங்கி வெளியே இருந்து சகடங்களினூடாக வந்த கயிறுகளால் இழுத்து அசைக்கப்பட்டன. மாபெரும் பட்டாம்பூச்சிச் சிறகுகள் என அவை கூடியிருந்தவர்களின்மேல் அசைந்துகொண்டிருந்தன.

அரசர்கள் வந்தமரும்தோறும் அவை வண்ணம் மாறிக்கொண்டே இருந்தது. மணிமுடிகளாலும் கவசங்களாலும் பொன்வண்டுகள் வந்து செறிந்த இலைபோல் மின்னத்தொடங்கியது. மன்னர்கள் அனைவரும் தங்கள் அரசணிக்கோலத்தில் வந்திருந்தனர். பொற்கவசம், பட்டுத்தலைப்பாகைகளில் அருமணிகள், சிலிர்த்தசைந்த வண்ண இறகுகள், ஒளிர்குண்டலங்கள், மணியாரங்கள், சரப்பொளிகள், தோள்செறிகள், வளைகள், கங்கணங்கள். பெருகி விழிநிறையும்தோறும் அவை நகைத்தன்மையை இழந்து

மீண்டும் வெறும் பொன்னென்று ஆகி அலைகொண்டன. படைத்தலைவர்கள் வெள்ளிக்கவசங்களும், தோள்காப்புகளும், அணிச்செதுக்கு உடைவாள்களும் கொண்டிருந்தனர். அமைச்சர்கள் வெண்ணிற தலைப்பாகையும் வெண்பட்டு மேலாடையும் அணிந்து முத்தாரமோ மணிமாலையோ கழுத்திலிட்டிருந்தனர். சொற்கள் இணைந்து இணைந்து முழக்கமென்றாகி மீட்டலென்று மருவி கார்வையென்று கூரைக்குவையில் நிறைந்தன.

ஒவ்வொரு அரசரும் எவர் அருகே அமரவேண்டும் எவரெவரை சந்திக்கவேண்டுமென்பது அவையின் அமைப்பிலேயே முடிவு செய்யப்பட்டிருந்தது. கணிகரும் சகுனியும் கனகருடனும் பதினெட்டு அமைச்சர்களுடனும் நூற்றியெட்டு சிற்றமைச்சர்களுடனும் அமர்ந்து ஷத்ரிய அரசர்களின் பட்டியலை அமைத்து அவர்களை வெவ்வேறு குழுக்களாகப் பிரித்து அந்த அரங்கை அமைத்த கலிங்கச் சிற்பி சந்தீபருக்கு அளித்தனர். அவர் அதை எண்பத்தெட்டு ஆண்டுகளுக்கு முன்னர் கலிங்க மன்னர் ஜோதிவர்மன் செய்த ராஜசூயத்திற்கு போடப்பட்ட பந்தலின் வடிவில் உரிய மாற்றங்களுடன் அமைத்தார்.

தொல்குடி ஷத்ரிய மன்னர்கள் கிழக்குமுகம் கொண்ட இருபத்துநான்கு வாயில்களினூடாக அவைநுழைந்தனர். சிறுகுடி ஷத்ரிய மன்னர்கள் வடக்கு நோக்கிய இருபத்துநான்கு வாயில்களில் வந்திறங்கினர். மலைநாட்டு ஷத்ரியர்களுக்கு தெற்குநோக்கிய இருபத்துநான்கு வாயில்கள் அளிக்கப்பட்டிருந்தன. பன்னிரு வாயில்கள் யாதவர் உள்ளிட்ட பிறருக்கு ஒதுக்கப்பட்டன. மேற்குநோக்கிய பன்னிரு வாயில்கள் அஸ்தினபுரியின் அரசகுடியினருக்கு

ஒருக்கப்பட்டிருந்தன. நான்கு தனிவாயில்களில் ஒன்று அரசருக்கும் பிறிதொன்று அரசிக்கும் என வகுக்கப்பட்டிருந்தது. இரண்டு தனிவாயில்கள் அந்தணர் அவைபுகும்பொருட்டு அளிக்கப்பட்டிருந்தன.

கிழக்கு முதல்முற்றத்தில் நின்றிருந்த துர்முகனும் சிற்றமைச்சர் மனோதரரும் தேர்களில் வந்திறங்கிய சாரஸ்வத நாட்டரசர் உலூகரை வரவேற்று அழைத்துச்சென்று அமரச்செய்தனர். தனக்கு முன்னரே வந்திருந்த அரசர்களின் கொடிகளில் சௌவீர நாட்டரசருடையதும் இருப்பதை அவர் இறங்கியதுமே நோக்கினார். முகமன் உரைத்து தலைவணங்கிய துர்முகனிடம் இயல்பான குரலில் “சௌவீரர் சத்ருஞ்சயர் இவ்வழியே சென்றார் என எண்ணுகிறேன்” என்றார். “ஆம் அரசே, சற்றுமுன் அவையமர்ந்தார்” என்றான் துர்முகன். “இந்த வழி தொல்குடி ஷத்ரியர்களுக்குரியது அல்லவா?” என்றார் உலூகர். “ஆம் அரசே, இங்குள்ள இருபத்துநான்கு வாயில்களும் முதன்மை ஷத்ரியர்கள் நுழைவதற்கானவை” என்றான் துர்முகன்.

உலூகரின் அமைச்சர் சதஹஸ்தர் “இளவரசே, தொன்மையான ஆரிய ஜனபதங்கள் பதினாறு என அறிந்திருப்பீர்கள். அங்கம், ஆஸ்மகம், சேதி, அவந்தி, காந்தாரம், காசி, காம்போஜம், கோசலம், குரு, மகதம், மல்லம், மச்சம், பாஞ்சாலம், சூரசேனம், விருஜம், வத்ஸம். இவற்றில் இருந்து எழுந்தவை ஐம்பத்தாறு ஷத்ரிய நாடுகள். முதல் பதினாறில் அமைந்த நாடுதான் ஐம்பத்தாறில் முதன்மை கொண்டது. அவற்றின் கொடிவழியில் எழுந்த நாடு இரண்டாம் இடம் பெறுகிறது. பிறநாடுகளுக்கு மூன்றாமிடமே என நூல்கள் நெறிவகுக்கின்றன” என்றார். துர்முகன் திகைக்க

மனோதரர் “ஆம் அமைச்சரே, அது சபாக்ரமசங்கிரகம் நூலில் உள்ளது” என்றார்.

“கௌடசாரஸ்வதம் என்னும் நூலின்படி தொல்குடியாகிய காந்தாரத்தின் கொடிவழியினர் சாரஸ்வதர்களாகிய நாங்கள். சைந்தவர்களும் சைப்யர்களும் கூர்ஜரர்களும் எங்கள் பங்காளிகள். இந்நிரையில் சௌவீரர் எங்கு வருகிறார்கள்?” என்றார் சதஹஸ்தர். “அவர்கள் தொல்குடிகள்” என்றார் மனோதரர். “ஆம், அதில் மறுப்பில்லை. ஆனால் ஷத்ரிய முதற்குடிகளா என்பதே வினா. அசுரகுடிகளும் நிஷாதகுடிகளும்கூடத்தான் தொல்குடிகள். வேதத்தில் குறிப்பிடப்படுதல், தவமுனிவராகிய பிரஜாபதியை கொண்டிருத்தல், அஸ்வமேதமும் ராஜசூயமும் இயற்றி மும்முடிசூடிய முன்னோரை கொண்டிருத்தல் என்னும் மூன்று தகுதிகளில் ஒன்றேனும் இல்லையேல் அவர்கள் முதற்குடி ஷத்ரியர் ஆவதெங்கனம்?” என்றார் சதஹஸ்தர்.

துர்முகன் அப்பொறுப்பை அப்படியே மனோதரரிடம் விட்டுவிட்டு பின்னால் சென்று நின்றான். உலூகர் “நன்று, உங்களுக்கு பால்ஹிகர்கள் இன்று உற்றவர்கள். மத்ரம் துணைவந்துவிட்டது. மலைக்குடிகளின் வில்திறன் போரில் தேவையாகிறது. ஆனால் அவையில் அவர்களின் இடத்தை மாற்றியமைக்க உங்களுக்கு உரிமையில்லை. அதை செய்ய வேதத்திற்கே ஆணையுள்ளது” என்றார். பின்னால் வந்து நின்ற ஜலகந்தன் துர்முகனிடம் “விதேகமன்னர் அணுகிக்கொண்டிருக்கிறார், மூத்தவரே” என்றான்.

அதை செவிகொண்டதுமே மனோதரர் “மாமன்னர் நிமியின் குருதிவழி வந்தவரும் அரசமுனிவர் ஜனகரின் வழித்தோன்றலுமாகிய நிமி அவைபுகவிருக்கிறார்.

சாரஸ்வதரே, தாங்களும் அவரும் இணைந்து அவைபுகுவது சிறப்பாக அமையும்” என்றார். உலூகர் முகம் மலர்ந்து “ஆம், தொல்புகழ்கொண்ட வைதேகருடன் அவைபுகுவதற்கு சாரஸ்வதமே தகுதியானது” என்றார். “சற்று பொறுங்கள். அவரை அழைத்துவருகிறேன்” என்று மனோதரர் வணங்கி வெளியேற துர்முகனும் ஜலகந்தனும் அவருடன் வெளியே விரைந்தனர்.

துர்முகன் “ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கணக்கு... வைதேகர் என்ன சொல்லப்போகிறார் என்று தெரியவில்லையே” என்றான். “அவருக்கு ஜானகியின் பெயரே எந்த அவையிலும் முதலிடத்தை அளிக்கும். ஆகவே அவர் எந்தக் கணக்கும் நோக்காதவராகவே இருப்பார்... வருக!” என்று கூறியபடி மனோதரர் முற்றம்நோக்கி சென்றார். செல்கையிலேயே “பிரமதர், அப்ரமாதி, தீர்க்கரோமர், சுவீரியவான் ஆகியோருக்கு செய்தி செல்க! அவர்கள் மணந்த விதேகநாட்டு இளவரசியரும் உடனே இங்கு வரவேண்டும்” என்றார். ஏவலன் ஒருவன் ஓடி சிறிய வாயிலினூடாக அவைமண்டபத்தின் அடிப்பக்கத்திற்குள் நுழைந்து அங்குள்ள குறுக்கு வழியினூடாக விரைந்தான்.

மேழிக்கொடி பறக்கும் விதேகநாட்டு தேர்கள் வந்து நிற்க அதிலிருந்து அரசர் நிமி இறங்கி கைகூப்பினார். வாழ்த்துரைகளும் இசைமங்கலமும் சூழ துர்முகனும் ஜலகந்தனும் மனோதரரும் அவரை வரவேற்றனர். அவர்கள் தாலமுழியப்பட்டு முகமனுரைக்கப்பட்டு கூடத்திற்குச் செல்வதற்குள் விதேகநாட்டு இளவரசியரான துஷ்டி, வபுஸ், சாந்தி, ஸித்தி ஆகியோர் தங்களை மணந்த கௌரவர்களான பிரமதன், அப்ரமாதி, தீர்க்கரோமன், சுவீரியவான் ஆகியோருடன்

வந்தனர். அவர்கள் குறுக்குவழியாக விரைந்து வந்தமையால் மூச்சிரைத்துக்கொண்டிருந்தனர். அரசியர் தந்தையின் கால்தொட்டு வணங்கினர். கௌரவர்களும் வணங்கி வாழ்த்துபெற்றனர்.

மனோதரர் சிற்றறைக்குள் புகுந்து சாரஸ்வதராகிய உலூகரிடம் "அரசே, தாங்களும் எழுந்து விதேகநாட்டரசருடன் இணைந்து அவைபுகவேண்டும்" என்றார். "ஆம், அதற்காகவே காத்திருந்தேன்" என்றபடி உலூகர் எழுந்து நிற்க ஏவலர் அவருடைய ஆடைகளை சீரமைத்தனர். அவர் கைகூப்பி வணங்கியபடி மெல்ல நடந்து வெளிவந்து கூடத்தில் மறுமைந்தரும் மகள்களும் சூழ இன்சொல் எடுத்து நின்றிருந்த நிமியை அணுகி கைகூப்பினார். அவரைக் கண்டதும் வைதேகர் இரு கைகளையும் விரித்து முகம்மலர கூவியபடி அருகணைந்து தழுவிக்கொண்டு "என்ன தவம் செய்தேன்! தொல்புகழ் சாரஸ்வதரை அணுகி சந்திக்கும் நல்லூழ் அமைந்ததே!" என்றார். முகம்மலர்ந்து அமைச்சரை திரும்பி நோக்கிய உலூகர் "ஆம், இது நன்னாள். சாரஸ்வதம் தன் இணைப்பெருமைகொண்ட விதேகத்தை தழுவிக்கொள்கிறது. மகிழ்க முன்னோர்!" என்றார்.

மனோதரர் "அவைபுகலாம், அரசே" என்றார். "ஆம், செல்வோம்" என்றார் நிமி. மனோதரர் பிரமதனிடம் திரும்பி அழைத்துச்செல்லும்படி கைகாட்டினார். அவர்கள் இரு அரசர்களையும் பெருவாயிலினூடாக அவைக்குள் கொண்டுசென்றனர். மனோதரர் பெருமூச்சுவிட்டு தளர்ந்து "ஒவ்வொன்றும் ஒரு போர்க்களம்" என்றார். துர்முகன் "உண்மையில் இந்தப் பதினாறு ஜனபதம் ஐம்பத்தாறு நாடுகள் என்பவை எல்லாம் நன்கு வகுக்கப்பட்டவையா?" என்றான்.

“அந்தப் பதினாறிலும் ஐம்பத்தாறிலும் அஸ்தினபுரி பெரும்பாலும் இருப்பதில்லை” என்றார் மனோதரர். “ஒவ்வொரு தொல்நூலும் ஒவ்வொருமுறையில் அதை வகுத்தளிக்கிறது. வேதம் வளர்ந்த காடுகள் ஒவ்வொன்றிலும் பிறநூலை சந்திக்காத நூல்கள் விளங்குகின்றன.”

“அப்படியென்றால் நமது மரபுவழி என்ன?” என்றான் ஜலகந்தன். “முதல் பதினாறில் ஒன்று குருநாடு. இன்று அது சிறுத்து ஒரு சிற்றூராக அஸ்தினபுரியின் வடமேற்கு எல்லையில் அமைந்துள்ளது. குருநாட்டை ஆண்ட யயாதியின் கொடிவழியினர் அஸ்தினபுரியின் அரசர்கள் என்பது பராசரரின் புராணமாலிகையினூடாக நிறுவப்பட்டது. அவ்வகையில் அஸ்தினபுரியே குருநாடு எனப்படுகிறது” என்றார் மனோதரர். “இங்கே கொடிவழிகளையும் குலமரபையும் குறித்து ஒரு பூசல் எழுமென்றால் இங்கிருந்தே பெரும்போர் ஒன்று எழுந்து ஷத்ரியக் குருதி பெருகத் தொடங்கும். ஷத்ரியர் அரக்குமுற்றி உலர்ந்து அனல்காத்துக் கிடக்கும் பெருங்காடு என்பார்கள்.”

தெற்கு அவைவாயிலில் சித்ரன், உபசித்திரன், சித்திராங்கன், சாருசித்ரன் நால்வரும் சிற்றமைச்சர்களுடன் நின்று யாதவ அரசர்களை வரவேற்றனர். போஜர்களும், குங்குரர்களும், அந்தகர்களும், விருஷ்ணிகளும் வந்திறங்கி முறைப்படி வரவேற்கப்பட்டனர். தங்களுக்கு தனி வாயில் என்பதும் அங்கே சிறுகுடி ஷத்ரியர்கள்கூட வரவில்லை என்பதும் சாலை திரும்பியதுமே அவர்களுக்கு தெரியவந்திருந்தது. ஆகவே சிறிய முகச்சுளிப்புடன்தான் அவர்கள் அவைமாளிகையின் முற்றத்தை அடைந்தனர். ஆனால் அவர்களின் குலக்கொடிகள் பட்டுத்துணியில் எழுந்தமையும், பெருமுரசுகள்

முழங்கியமையும், ஒளிரும் படைக்கலங்களுடன் வீரர்கள் வணங்கியமையும் அவர்களை முகம் மலரச் செய்தது.

அவர்கள் இறங்கியதுமே கௌரவர் சென்று வணங்கி வரவேற்று உள்ளே அழைத்துச்சென்றனர். அவர்கள் மிகையான உடல்நிமிர்வும் எதையும் பொருட்படுத்தவில்லை என்னும் நடிப்பும் கொண்டவர்களாக மெல்ல தங்களுக்குள் பேசியபடி நடந்தனர். சிற்றறையில் காத்திருக்கையில் அளிக்கப்பட்ட இன்னீரை சுட்டுவிரலசைத்து மறுத்தனர். முகத்தை சற்றே தூக்கி பாதிவிழிகளை மூடி கழுத்தை இறுக்கி நிமிர்வுறுதியை காட்டிக்கொண்டனர். ஆனால் முறைமைகள் குறித்த ஐயம் அவர்களுக்கிருந்தது. எனவே ஒருவரை ஒருவர் ஓரக்கண்ணால் அடிக்கடி நோக்கிக்கொண்டனர். அது அவர்களின் அகத் தயக்கத்தை வெளிக்காட்டி அனைத்தையும் பொருந்தா நடிப்பென்றாக்கியது.

போஜர்குடியின் கொம்புக்குறி பொறித்த தேரில் கிருதவர்மன் வந்து இறங்கினான். “போஜர் குடியின் தலைவர், ஹ்ருதீகரின் மைந்தர், உத்தர யாதவநிலத்தின் அரசர் கிருதவர்மர் வருகை” என்று நிமித்திகர் அறிவிக்க கௌரவர்களாகிய நந்தன் உபநந்தன் இருவரும் அவனை எதிரேற்று அழைத்துச்சென்றனர். அவனைக் கண்டதும் எழுந்து வணங்கவேண்டுமா என ஐயுற்ற பிற யாதவர்தலைவர்கள் ஒருவரை ஒருவர் அரைக்கண்ணால் நோக்கி அமர்ந்திருந்தனர். ஆனால் நந்தனும் உபநந்தனும் இருபக்கமும் தொடர அவன் அறைக்குள் நுழைந்ததுமே அறியாமல் எழுந்து நின்று தலைவணங்கினர். சித்ரன் ஆணையிட சிற்றமைச்சர் பர்வதர் யாதவர்களை அவர்களுக்கான அவையிருக்கைகளுக்கு அழைத்துச்சென்றார்.

அமைச்சர் பிரமோதர் கையில் நீட்டோலையுடன் உடல்குலுங்க கீழ்வழியினூடாக மேலெழுந்து மூச்சிளைத்தபடி “எங்கே மனோதரர்? மனோதரர் எங்கு சென்றார்?” என்றார். ஊர்ணநாபன் “கிழக்குமுற்றத்தில் நின்றிருக்கிறார், அமைச்சரே” என்றபின் அவைக்குள் சென்றான். பிரமோதர் கிழக்குமுற்றத்திற்குச் சென்றபோது வத்சநாட்டு அரசர் உதயணர் வந்திறங்கிக்கொண்டிருந்தார். மனோதரரும் துர்முகனும் அவரை வரவேற்று அவைக்கு கொண்டுசென்றனர். மனோதரர் பிரமோதரை பார்த்துவிட்டார். அவைக்குள் உதயணர் சென்றதும் திரும்பி பிரமோதரின் அருகே வந்தார்.

“இது நம் தரப்புக்கு வந்துள்ள அரசர்களின் பெயர்நிரை. இன்னமும் பலர் அணையக்கூடும். சிறுகுடி ஷத்ரிய அரசர்களில் சிலர் உளமுறுதி கொள்ளாதவர்களாகவே உள்ளனர் என்கிறார் கணிகர்” என்றார் பிரமோதர் பெயரை நீட்டியபடி. “இதிலுள்ளவர்களில் அனைவரும் வந்து அவை அமைந்துவிட்டனரா என்று உறுதிசெய்த பின்னர் கணிகரைச் சென்று சந்திக்கவேண்டும்.” மனோதரர் “இங்கு வருபவர்களை அழைத்து அமரச்செய்யவே எனக்கு பொழுதில்லை” என்றார். “அதை நான் அறியேன். என்னிடம் பிற வேலைகள் அளிக்கப்பட்டுள்ளன. எவரேனும் ஒற்றரிடம் பொறுப்பை அளியுங்கள்” என்றபின் பிரமோதர் திரும்பி ஓடினார்.

மனோதரர் பெயர்நிரையை படித்தார். அவந்தியர், கோசலர், காம்போஜர், திரிகர்த்தர், மாளவர், சால்வர், சைந்தவர், சௌவீரர் என பெரிய அரசுகளின் பெயர்கள் முதலில் விழியில் நின்றன. மீண்டுமொருமுறை படித்தபோதுதான் ஆந்திரர், ஆபிசாரர், அம்பஸ்தர், அஸ்வாடகர், அஜநேயர், ஆபிரர், அரட்டர், ஆரிவேகர், கர்ணப்பிரவர்ணர், கிதவர், குந்தலர், குலூதர், கசுத்ரகர்,

காசர், கோவாசனர், சிச்சிலர், சீனர், சுச்சுபர், துஷாரர், துண்டிகேரர், தார்விகர், தசமேயர், நாராயர், பஞ்சநதர், பல்லவர், பானிபத்ரகர், பாரதகர், புளிந்தர், பிரஸ்தலர், மாகிஷ்மதர், முண்டர், மேகலர், லலித்தர், வங்கர், வனாயர், வசாதியர், வடாதனர், விக்ரமர், விகுஞ்சர், வேனிகர், சூரர், சுரசேனர், சம்ஸ்தானர், சிங்களர், சுரஸ்திரர், ஹம்சமார்கர் போன்ற சிறுகுடி ஷத்ரியர்களின் பெயர்கள் விழியில் நின்றன.

அதை என்ன செய்வதென்று அவருக்கு தெரியவில்லை. தத்தளித்துக் கொண்டிருந்தபோது சித்ரகுண்டலன் ஓடிவந்து "துஷார மன்னர் வீரசேனர்" என்றான். "ஆம், முந்திச்சென்று வரவேற்கவேண்டும்..." என்றார் மனோதரர். "ஆனால்..." என்று சித்ரகுண்டலன் தயங்கினான். "சொல்க!" என்றார் மனோதரர். "அமைச்சரே, அவர் தன் நண்பர் காரூஷ நாட்டு அரசர் க்ஷேமதூர்த்தியையும் அழைத்து வருகிறார். அவர் சிறுகுடி ஷத்ரியர். அவருக்குரிய முற்றமோ வாயிலோ அல்ல இது." மனோதரர் அறியாமல் தலையில் கைவைத்தபின் "நன்று, ஒன்றுசெய்க! இங்கே நுழைவுக்கூடத்திலோ அறையிலோ இருக்கும் அரசர்கள் அனைவரையும் அவைக்கு கொண்டுசெல்க! அவர்களின் அகம்படியினரும் இங்கே இருக்கக்கூடாது" என்றார். "ஆம், அவ்வாறே" என்றான் சித்ரகுண்டலன்.

மனோதரர் முற்றம் நோக்கி ஓடியபடியே தன்னுடன் வந்த காவலர்தலைவனிடம் "வாழ்த்தில் காரூஷநாட்டரசரின் பெயர் முதல்முறை மட்டும் ஓங்கி ஒலிக்கட்டும், அவர் மண்ணில் கால்வைக்கும் கணத்தில். அவர் முகம்மலர்ந்த பின்னர் துஷாரரின் பெயர்சொல்லி மட்டும் வாழ்த்துரைத்தால்போதும்... எவர் செவியிலும் விழாமல் அவரை அவைக்கு கொண்டுசெல்க! செல்லும் வழியிலேயே இருவரையும்

இயல்பாக பிரித்துவிடலாம்…” என்றார். தன் கையிலிருந்த ஓலையை அப்போதுதான் உணர்ந்து அதை அருகே நின்றிருந்த காவலனிடம் நீட்டி “இது உன்னிடம் இருக்கட்டும்” என்றபடி முன்னால் சென்றார். கூடத்திலிருந்தவர்களுக்கு ஆணையிட்டுவிட்டு அவருடன் ஓடிவந்தபடி சித்ரகுண்டலன் “அவர்களை எப்படி பிரிப்பது?” என்றான். “காரூஷரின் தோழராகிய அரசர் ஒருவரைக்கொண்டு அவரை மகிழ்வுடன் அணைக்கச்செய்து அழைத்துச்சென்றுவிடலாம்… அனைத்துக்கும் வழி என ஒன்று எங்கோ இருக்கும்” என்றார் மனோதரர்.

அவைமுற்றத்தில் சென்று நின்றபோது அவர் உடல் களைத்திருந்தார். ஒருகணம் கண்ணுக்குள் இருள் நுழைவதைப்போல் தோன்றியது. உடல் வியர்த்து நெஞ்சு படபடத்தது. பின்னர் விழித்துக்கொண்டு அருகே நின்ற ஏவலனிடம் “சற்று நீர் கொணர்க!” என்றார். அவன் “ஆணை” என விலகி விரைய அதற்குள் துஷாரநாட்டு தேர்கள் முற்றத்தை வந்தடைந்தன. மனோதரர் சித்ரகுண்டலனும் துர்முகனும் இருபுறமும் நின்றிருக்க முகமன் உரைத்து வீரசேனரை வரவேற்றார். தொடர்ந்து வந்து நின்ற காரூஷநாட்டுத் தேரிலிருந்து இறங்கிய க்ஷேமதூர்த்தியை நோக்கி அவர்கள் செல்ல சற்று பிந்தியது. அவர் பெயர் ஒலிக்கும் வாழ்த்துரைகள் எழுந்தாலும் க்ஷேமதூர்த்தியின் முகம் சுருங்கியது.

சித்ரகுண்டலனுடன் வீரசேனரை அனுப்பிவிட்டு மனோதரர் க்ஷேமதூர்த்தியை அணுகி தலைவணங்கி முகமன் உரைத்தார். தொண்டையிலிருந்து ஓசையே எழவில்லை. உடல் நீர் நீர் என தவித்தது. அத்தருணத்தை கடக்கமுடியுமா என்றே உள்ளம் ஐயம்கொண்டது. க்ஷேமதூர்த்தி மறுமுகமன் உரைக்காமல்

“இது முதன்மை ஷத்ரிய அரசர்களுக்குரிய வாயில்தானே?” என்றார். “ஆம், அரசே” என்றார் மனோதரர். “அப்படியென்றால் இங்கே எப்படி சாரஸ்வதரின் கொடி பறக்கிறது?” என்றார் க்ஷேமதூர்த்தி.

மனோதரரின் உள்ளம் ஒருகணம் சொல்லின்றி நிலைத்தது. மறுகணம் அவரை அறியாமல் புன்னகை எழுந்தது. அதை அடக்கிக்கொண்டு முகமனை மீண்டும் ஒருமுறை உரைத்து “தங்களுக்காக தொல்குடி ஷத்ரியர் எழுவர் காத்திருக்கிறார்கள், அரசே. சற்றுமுன் விதேக அரசர் நிமி தங்களைப்பற்றி கேட்டார்” என்றார். முகம்மலர மீசையை நீவியபடி “ஆம், நாங்கள் பழைய நண்பர்கள். எங்களுக்கிடையே ஒருவகையில் குருதியுறவும் உண்டு” என்றபடி க்ஷேமதூர்த்தி முன்னால் நடந்தார்.

# குருதிச்சாரல் - 47

**பகுதி ஏழு : அலைகளில் திரள்வது – 5**

அவைக்கூடத்தின் மேற்குபக்கமாகத் திறந்த அரசப்பெருவாயிலின் முற்றத்தில் விதுரர் சிற்றமைச்சர் ஜலஜரும் ஏகசக்ரரும் துணைக்க காத்து நின்றிருந்தார். நிலைகொள்ளாதவராக மேற்கே அரண்மனையிலிருந்து கிளம்பி தெற்குவாயிலை ஒட்டிவந்த பாதையை நோக்கிக்கொண்டிருந்தார். ஜலஜர் “இளையோர் சித்ரபாணரும் சித்ரவர்மரும் அரசருடன் கிளம்பி வரப்போவதாக செய்தி, அமைச்சரே” என்றார். “ஆம், அவையில் அனைவரும்

அமர்ந்துவிட்டனரா?” என்றார் விதுரர். “பார்த்துவரச் சொல்கிறேன்” என்று ஜலஜர் சொன்னார்.

“அடுமனைப் பொறுப்புக்குரியவர் யார்?” என்றார் விதுரர். அவர் அதை ஏழாவது முறையாக கேட்கிறார் என எண்ணிக்கொண்டு “கைடபர்... நாம் அவருக்கு உரிய ஆணை பிறப்பித்துவிட்டோம், அமைச்சரே” என்றார் ஜலஜர். விதுரர் “ஆம்” என்றார். “எவரேனும் ஒருவர் சென்று பேரரசரின் உடல்நிலை எவ்வாறுள்ளது என்று கேட்டு எனக்குத் தெரிவியுங்கள்...” ஜலஜர் “தலைமைக்காவலர் சாரதரை அனுப்பியிருக்கிறோம். அதற்கு முன் வந்த ஏவலரும் பேரரசர் துயின்றுகொண்டுதான் இருக்கிறார் என்றனர்” என்றார். “சஞ்சயன் எப்போதும் அவர் அருகே இருக்கவேண்டும்...” என்றார் விதுரர்.

கனகர் பதைப்புடன் உடல்குலுங்க ஓடிவந்து மூச்சிரைக்க “அரசர்நிரைகள் நிறைந்துவிட்டன, அமைச்சரே. பிதாமகர் பீஷ்மர் ஆசிரியர்கள் துரோணருடனும் கிருபருடனும் வந்து அவையமர்ந்துவிட்டார். தாங்கள் எங்கே என்று கேட்டார்” என்றார். “நான் இங்கே அரசருக்காக நின்றிருக்கிறேன் என்று சொல்லவேண்டியதுதானே?” என்றார் விதுரர். “அவ்வாறு சொல்லலாகுமா என ஐயுற்றேன். நோக்கிவருகிறேன் என வந்தேன்” என்றார் கனகர். “அறிவின்மையை மட்டுமே பேசுங்கள்...” என பல்லைக் கடித்தார் விதுரர். “செல்க!” என கையை வீசினார். கனகர் அச்சினத்தை விந்தையாக நோக்கியபின் திரும்பிச்சென்றார்.

அவைக்குள் விசாலநாட்டு அரசர் சமுத்ரசேனர் வாழ்த்தொலிகளுடன் நுழைந்து தன் பீடத்தை சென்றடைந்தார். மறுஎல்லையில் நிமித்திகன் கௌசிகி நாட்டு அரசர் மஹௌஜசரின் குடிமரபைச் சொல்லி அவர் அவைபுகுவதை

அறிவித்தான். அவர் பீஷ்மரை அப்பால் நின்று நோக்கினார். அரசர்களில் சிலர் அவரை அணுகி வணங்கி வாழ்த்துபெற்று சென்றனர். சலிப்பு நிறைந்த முகத்துடன் எவரையும் அடையாளம் காணாத அயல்நோக்குடன் சொல்லின்றி வலக்கையால் அவர்களின் தலைதொட்டு அவர் வாழ்த்தினார். துரோணர் தாடியை உருவியபடி கிருபரிடம் மெல்லிய குரலில் பேசிக்கொண்டிருக்க துரோணரின் களரியில் பயின்றவனாகிய அனுபநாட்டு அரசன் கர்மஜித் வந்து அவர் காலடியைப் பணிந்து வாழ்த்துபெற்றான்.

வெளியே காந்தாரத்து அரசர் அணுகுவதை முரசொலியும் கொம்பொலியும் கூறின. கனகர் வெளிவாயில் நோக்கிச் சென்றபடி ஏவலனிடம் "காந்தாரத்து இளவரசியர் எவரையேனும் அவைமுகப்புக்கு வரச்சொல்க!" என்றார். அவன் பணிந்து அகல அவர் சிறுகரவுப்பாதைக்குள் புகுந்து மூச்சிரைக்க ஓடி மறுபக்கம் எழுந்தார். தன்னை ஒரு பெருச்சாளி என உணர்ந்தபடி ஆடையை சீரமைத்தார். காந்தார நாட்டு அரசர் சுபலர் தன் மைந்தர்கள் அசலனும் விருஷகனும் தொடர தேரில் வந்திறங்கினார். அங்கே நின்றிருந்த துர்விமோசனும் அயோபாகுவும் சிற்றமைச்சர் பர்வதரும் குமாரரும் இருபக்கமும் துணைவர அவர்களை எதிர்கொண்டு முகமன் உரைத்தனர்.

கனகர் அவர்களைக் கடந்துசென்று "அஸ்தினபுரியின் ஷத்ரியப்பேரவைக்கு மாமன்னர் யயாதியின் குருதிமரபில், துர்வசுவின் கொடிவழியில் எழுந்த காந்தாரத்தின் தொல்குடி அரசர் வருகை தந்திருப்பது முழுமையின் மங்கலத்தை அளிக்கிறது" என்றார். சுபலர் புன்னகையுடன் "கனகரே, பாலையில் அலைந்ததுபோல வியர்வையில்

உப்புகொண்டிருக்கிறீர்” என்றார். கனகர் புன்னகைத்து “அவைசென்றமைக, அரசே! தங்கள் அரசு இது” என்று வணங்கி பின்னால் நோக்கினார். ஏவலன் தொடர வந்த காந்தார இளவரசியர் ஸ்வாதாவும் துஷ்டியும் புஷ்டியும் மூச்சிரைக்க அருகணைந்து “வருக, தந்தையே. வருக, மூதாதையே” என வரவேற்றனர். “இது என்ன மூச்சிரைப்பு? ஓடிவந்தீர்களா? இந்நகரில் எங்களுக்கு ஏன் முறைமைச்சொல்?” என்றார் சுபலர். “முறைமை மீறப்படலாகாதல்லவா? இது குருவின் அரசு, ஹஸ்தியின் நகர்” என்றார் கனகர்.

இளவரசர்கள் சுபலரையும் இளவரசர்களையும் அவைக்குள் கொண்டுசெல்ல காசிநாட்டு விருஷதர்பரும் அவர் மைந்தனும் முடிகொண்ட அரசனுமாகிய சுபாகுவும் தேர்களில் வந்திறங்கினர். துர்விமோசன் “இவர்களை வரவேற்க முறைமைப்படி அரசியோ இளைய அரசி அசலையோ வரவேண்டுமல்லவா?” என்றான். கனகர் “முறைமையை நோக்கினால் நான் இங்கேயே நின்றிருக்கவேண்டியதுதான். நீங்கள் சென்று எதிர்கொள்க! நான் இங்கு நின்றிருந்ததை அவர்கள் அறியவேண்டியதில்லை” என்றபடி ஓடி சிறுபாதைக்குள் புகுந்து அவைக்கூடத்தின் அடியினூடாக மறுபக்கம் சென்று எழுந்தார்.

சிற்றமைச்சர் சுதாகரர் ஓடிவந்து பணிந்து “வடகலிங்கத்தின் அரசர் சுதாயுஸ் தன் இளையோன் தீர்க்காயுசுடன் வந்திருக்கிறார், அமைச்சரே. இருவருக்கும் நிகரான இருக்கை வேண்டுமென தீர்க்காயுஸ் சொல்கிறார். அது வழக்கமில்லை” என்றார். “அவர்களின் இருக்கையருகே இருப்பது எந்த அரசர்?” என்றார் கனகர். “திரிகர்த்த அரசர் சத்யரதர் ஒருபக்கம் மறுபக்கம் தசார்ணத்தின் அரசர் சித்ராங்கதர்” என்றார் சுதாகரர்.

கனகர் “இருவரும் ஒப்பமாட்டார்கள். இருக்கையை அமைப்பதாக சொல்லிக்கொண்டே இருங்கள். அவைகூடி நிகழ்வுகள் தொடங்கியதும் அவர் அமர்ந்துவிடவேண்டியதிருக்கும். வேறுவழியில்லை” என்றபின் முன்னால் சென்றார்.

தொலைவில் அஸ்தினபுரியின் அரண்மனையில் இருந்து துரியோதனன் கிளம்பிவிட்ட செய்தியை முரசொலிகள் அறிவித்தன. அதை அனைவருமே கேட்டுவிட்டனர் என்பதை அவையில் காற்றுதொட்ட இலைக்காடு என எழுந்த அசைவும் ஒலிமாறுபாடும் காட்டின. கனகர் மேற்குப்பெருவாயிலுக்கு சென்றார். விதுரர் “அரசர் வந்துகொண்டிருக்கிறார்” என்றார். “அவைக்குள் அனைத்தும் சித்தமாக இருக்கவேண்டும். அரசரே இறுதியாக அவைபுகவேண்டியவர். அவருக்குப்பின் எவருக்கும் வாழ்த்தொலியோ அவையறிவிப்போ எழலாகாது” என்றார். “ஆம், அதை பார்த்துக்கொள்கிறேன்” என்றார் கனகர்.

“அறிவிலியெனப் பேசலாகாது” என விதுரர் பற்கள் தெரிய சீறினார். “எந்த அரசரும் தவிர்க்கப்படலாகாது. தவிர்க்கப்படுபவர் நமக்கு எதிர்முகமைக்குச் செல்வார் என்பதை மறக்கவேண்டாம்.” கனகர் “ஆம், அதுவும் பார்த்துக்கொள்கிறேன்” என்றார். “உம்மைப்போன்றவர்களை நம்பி இங்கே அரசு நிகழ்கிறது… செல்க!” என்று விதுரர் கைவீசினார். கனகர் தலைவணங்கியபின் மீண்டும் சிறுகூடத்திற்கு வந்தார். அவைக்குள் நுழைந்து நோக்கியபோது சகுனி சுபலரின் அருகே நின்று பணிந்து சொல்லாடுவதை கண்டார். சோமதத்தரின் அருகே பூரிசிரவஸ் நின்றிருந்தான். அஸ்வத்தாமனின் அருகே அமைச்சருக்குரிய பீடத்தில் அமர்ந்து கிருதவர்மன்

பேசிக்கொண்டிருந்தான். விதர்ப்பநாட்டு அரசர் பீஷ்மகரும் அவர் மைந்தர் ருக்மியும் அவைபுகுந்த அறிவிப்பு எழுந்தது.

அந்தப் பேரவையை எப்படி கணக்கு வைத்துக்கொள்வது என அவருக்கு தெரியவில்லை. எப்படி எதை கணித்தாலும் ஏதேனும் பிழைநிகழாமலிருக்காது என்று அவர் உறுதிகொண்டிருந்தார். ஓரிரு கணங்கள் தன்னை நிலைகொள்ளச் செய்தபின் மேற்குப்பெருவாயிலுக்குச் சென்று வெளியே நோக்கினார். துரியோதனனை வரவேற்க அணிச்சேடியரும் இசைச்சூதரும் கவச உடையணிந்த காவலரும் நிரைகொண்டிருந்தனர். ஒரு கணத்தில் அவருக்கு அனைத்திலும் சலிப்பு ஏற்பட்டது. தன்னை தூண் ஒன்றுக்குப் பின்னால் மறைத்துக்கொண்டு வெறுமனே வெளியே நோக்கி நின்றார்.

துரியோதனன் துச்சாதனனும் துர்மதனும் சுபாகுவும் தொடர பொற்பூச்சுள்ள வெள்ளித்தேரில் அரண்மனையிலிருந்து கிளம்பி பேரவைக்கூடம் நோக்கி சென்றான். வழியெங்கும் அஸ்தினபுரியின் குடிகள் இருபுறமும் செறிந்து களிவெறி கொண்டு கூச்சலிட்டனர். தலைப்பாகைகளையும் மேலாடைகளையும் வானில் வீசி கைகளைத் தூக்கி குதித்தனர். வெறிகொண்டு ஆடி ஒருவர் மேல் ஏறி ஒருவர் விழுந்தனர். உப்பரிகைகளிலிருந்து முற்றங்களுக்கு குதித்தனர். ததும்பிய பெருங்கூட்டத்தின் விளிம்பு சாலையோரமாக வேலோடு வேல் இணைத்து வேலியென நின்றிருந்த படைவீரர்களை முட்டி அச்சரடை நெளிந்துலையச் செய்தது. துரியோதனன் அருகே அமர்ந்திருந்த சுபாகு அத்திரளசைவை கொப்பளிக்கும் புழுக்கூட்டங்களென்று ஒருகணம் உணர்ந்தான்.

தலையசைத்து அவ்வெண்ணத்தை விலக்கினான். இயல்பாக துர்மதனின் விழிகளை சந்தித்தபோது அவனும் அவ்வாறே எண்ணுகிறானோ என்ற ஐயத்தை அடைந்து திடுக்கிட்டு விலகிக்கொண்டான்.

சில இடங்களில் அணையுடைத்த மக்கள் பிதுங்கி தேர்ச்சகடங்களுக்கு நடுவே விழுந்தனர். நோக்கி விழிநட்டு ஓட்டிய தேர்ப்பாகன் சரடை இழுத்து தேரை நிறுத்தி மீண்டும் எடுத்தான். அப்படியும் ஓரிடத்தில் இருவர் புரவிக்காலடிகளில் விழுந்து மிதிபட்டு அலறினர். அஞ்சிய புரவி துள்ளி முன்னால் செல்ல தேர்ச்சகடம் அவர்களின் மேல் ஏறி எலும்புகளையும் உள்குடங்களையும் நொறுக்கி குருதிதெறிக்க உடலை உடைத்து எழுந்தமைந்து நின்றது. “செல்க!” என துர்மதன் கைகாட்டினான். துரியோதனன் தன்னைச் சூழ்ந்து ஒலித்த உணர்வொலிப்பெருக்கை அறியாதவனாக அசையாமல் தேர்பீடத்தில் அமர்ந்திருந்தான்.

அவைமுற்றத்தை அடைந்ததும் அங்கு நின்றிருந்த விதுரரும் சிற்றமைச்சர்களும் கைகூப்பியபடி அருகணைந்தனர். ஏவலரும் காவலர்நிரைகளும் வாழ்த்தொலி எழுப்பினர். பாதையின் இருபுறமும் இரும்புக் கவசங்களும், தீட்டப்பட்டு ஒளிவிட்ட வேல்வாள்களுமாக அணிவகுத்திருந்த அஸ்தினபுரியின் படைவீரர்கள் படைக்கலம் தாழ்த்தி வாழ்த்தொலி எழுப்பினர். மங்கலச் சேடியர் நூற்றெண்மர் ஏழு நிரைகளாகச் சென்று தாலமுழிந்து அரசரை வரவேற்றனர். மங்கல இசைச்சூதர் நூற்றெண்மர் இரு பிரிவுகளாக வாயிலருகே நின்று இசை முழங்கினர். கைகூப்பியபடி தேரிலிருந்து இறங்கி வாழ்த்தொலிகளை விழியசைவும் இன்றி ஏற்று துரியோதனன் அவைக்கூடம் நோக்கி நடந்தான். விதுரர் அருகே நடந்தார்.

துரியோதனன் மார்பில் பொற்கவசம் அணிந்திருந்தான். தோள்மலர்கள் கைவீச்சில் அலைந்தன. கங்கணங்கள் ஒளிசுழன்றன. இடையிலணிந்திருந்த பொற்கச்சைக்குக் கீழே தொடைவரை செறிந்த செறிவளைவுகள் பொன்னலையென எழுந்தமைந்தன. பொற்குறடுகளில் இளநீல வைரங்கள் ஒளிவிட்டன. சற்றே முளைக்கத் தொடங்கியிருந்த தலைமயிர் இளங்காற்றில் தளிர்புல்லென அசைந்தது. கூர்விழிமணிகளில் நிலைத்த நோக்கும் ஒவ்வொரு காலடியிலும் முற்றிலும் நிகர்கொண்ட நேர்நடையுமென அவன் வந்தபோது அவனையன்றி பிற எவரையும் அங்கிருந்தவர் நோக்கவில்லை.

கூடத்தில் நுழைந்ததும் விதுரர் “வருக அரசே, அவை ஒருங்கிக்கொண்டிருக்கிறது. சற்றுநேரம் காத்து அரியணை அமைந்ததும் அவைபுகலாம்” என சிற்றறையை காட்டினார். தலையசைத்து படிகளில் ஏறி கூடத்தை அடைய அங்கே நின்றிருந்த வைதிகர்கள் கங்கைநீர் தெளித்து வேதமோதி வாழ்த்தினர். விதுரர் சிற்றறைக்குள் அழைத்துச் சென்று பீடத்தில் அமரச் செய்தார். துச்சாதனனும் துர்மதனும் அவனுக்கு இருபக்கமும் நின்று கொள்ள சுபாகு அறைக்கு வெளியே வந்து அவனை நோக்கி ஓடிவந்து பணிந்த கனகரிடம் “அரசியரும் பிறரும் வந்துவிட்டார்களா?” என்றான். “மறுபக்க அறையில் அவர்கள் காத்திருக்கிறார்கள், இளைய அரசே” என்று கனகர் சொன்னார். “நோக்குக!” என்றபின் சுபாகு உள்ளே சென்றான்.

கனகர் கூடத்தைக் கடந்து மறுவாயிலினூடாக அரசியர் பக்கத்தை அடைந்து அங்கிருந்த சிற்றறைக்குள் நுழைந்து அவைச்சேடி சம்புகையிடம் “அரசியர் வந்துவிட்டார்களா?” என்றார். “காத்திருக்கிறார்கள். அவையில் அரசியர் மூவர்

மட்டுமே அமர ஒப்புதல். பிறர் எதிரேற்புச்சடங்குகளுக்கு மட்டுமே என அமைச்சர் சொன்னார்” என்றாள் சம்புகை. “ஆம், அவர்கள் ஒருங்கியிருக்கட்டும். நான் அவைநோக்கி வருகிறேன்” என்று சொல்லிவிட்டு கனகர் மீண்டும் அவைக்குள் நுழைந்தார். ஒவ்வொரு முறையும் அவை முற்றிலும் வேறெனத் தோன்றியது.

அவையின் நூற்றெட்டு வாயில்களினூடாகவும் அரசர்களின் ஏவலரும் அணுக்கர்களும் உள்ளே நுழைந்துகொண்டிருந்தனர். முகப்பில் அமைந்த அரசமேடையில் துரியோதனன் அமர்வதற்கான பெரிய பீடம் போடப்பட்டிருந்தது. மேடைக்கு வலப்பக்கமாக பீஷ்மரும் துரோணரும் கிருபரும் அமர்ந்திருந்தனர். இடப்பக்கம் அந்தணர்கள் பன்னிருவர் அமர்ந்திருந்தனர். நேர்முகப்பில் ஒன்றுக்குள் ஒன்றென அமைந்த பிறைவடிவ இருக்கை நிரைகளில் அரசர்கள் குலவரிசைப்படி அமர்ந்திருந்தனர். சல்யரும் ஜயத்ரதனும் அஸ்வத்தாமனும் ருக்மியும்... அறிந்த முகங்களை நோக்கியே விழி சென்றது. ஆனால் அறியா முகங்களில் இருந்துதான் இடர்கள் எழுந்துவரும், அவர்கள் அறியா முகமென்பதை அவர்கள் நன்கறிந்திருப்பதனால்.

சுஜாதன் தெற்குப்பக்க வாயிலில் இருந்து விரைந்து கனகரை அணுகி “அவை நிறைந்துவிட்டது. இன்னும் எவருக்காக காத்திருக்கிறோம்?” என்றான். “நிறைந்துள்ளதா என்று பலமுறை நோக்கவேண்டும். இங்கு வராதவர்கள் அங்கு சென்றுவிட்டார்கள் என்று பொருள்” என்றார் கனகர். “நான் சென்று அமைச்சரிடம் சொல்கிறேன், ஆனால் அதற்குமுன் இன்னொரு முறை எவரேனும் விடுபட்டிருக்கிறார்களா என்று பார்த்துக்கொள்ளவேண்டும்.” சுஜாதன் “எவருமில்லை. ஏட்டில்

பெயர்களை எழுதி ஒவ்வொருவரையாக அடையாளப்படுத்திக் கூறும்படி சர்க்கரிடம் சொன்னேன்” என்றான். “ஆம், அந்த ஓலையை நான்தான் அனுப்பினேன். ஆனால் அது வெறும் எழுத்துநிரை. இது முகப்பெருக்கு” என்றார் கனகர்.

சுஜாதன் பொறுமையிழந்து தலையசைத்தான். “எவரிடமும் சொல்வதில் பயனில்லை. நாமே ஒருமுறை அனைவரையும் எண்ணிப் பார்த்துவிடவேண்டும். ஒருவர் விடுபட்டால்கூட அது அவைச்சிறுமையாகும். ஷத்ரியர் அவைச்சிறுமையின் பொருட்டு ஆயிரமாண்டுகால நட்பை இழக்கத் துணிபவர்கள்” என்றார் கனகர். சுஜாதன் மேலும் ஏதோ சொல்ல நாவெடுப்பதற்குள் ஏவலன் வந்து விதுரர் அவரை அழைப்பதாகக் கூறினான். கனகர் சுஜாதனிடம் “சற்று பொறுங்கள், அரசே” என்றபடி மூச்சுவாங்க அரசர் அமர்ந்திருந்த முகப்பறைக்கு சென்றார். அறைக்குள் நுழைவதா என தயங்கி நின்றார்.

அவர் வரவை உள்ளிருந்தே கண்டு அறைக்குள்ளிருந்து வெளிவந்த விதுரர் “அரசர் அனைவரும் அவைபுகுந்துவிட்டார்களா?” என்றார். “ஆம் அமைச்சரே, பிறிதொரு முறை எண்ணிப்பார்க்கச் சொல்லியிருக்கிறேன்” என்றார் கனகர். விதுரர் “பீஷ்ம பிதாமகரிடம் சென்று அவைமங்கலம் நிறைந்துவிட்டது, அவை கூடலாமல்லவா என்று முறைமை ஒப்புதல் வாங்கி வருக! மூத்தார் சொல்லில் அவையெழவேண்டும் என்பது மரபு. எவர் சொல்லில் எழுந்த அவை என்பதே அவைக்குறிப்பின் முதல் வரி” என்றார்.

கனகர் மீண்டும் அவைக்கு அடியில் புகுந்து குறுக்காக ஓடிக்கடந்து மறுபக்கம் மேலெழுந்து பீஷ்மர் அருகே சென்றார். பீஷ்மரின் காலடியில் அமர்ந்து தாழ்ந்த குரலில் “பிதாமகரே”

என்றார். பீஷ்மர் சிறுதுயிலில் தலை அசைந்து இடம்சரிய அக்குரலில் திடுக்கிட்டு விழித்து “யார்?” என்ரார். “பிதாமகரே” என்றார் கனகர். பீஷ்மர் தாடியை வருடியபடி “என்ன?” என்றார். “அவைமங்கலம் நிறைந்துவிட்டது. தொடங்கலாமல்லவா?” என்றார்.

பீஷ்மர் புரியாதவர்போல செல்க என கைவீசினார். “மூத்தோர் ஆணைப்படி தொடங்கவேண்டும் என்பார்கள்” என்றார் கனகர். துயில்மாறா குரலில் “நான் எதற்கும் ஆணையிட விரும்பவில்லை. நான் என் சொற்களை சொல்லி முடித்துவிட்டேன்” என்று பீஷ்மர் சொன்னார். கனகர் திகைத்து துரோணரை நோக்க “இந்த அவையில் மூத்த ஷத்ரியர் சல்யர். அவர் ஆணைபெறுக!” என்றார் அவர். கனகர் “நன்று, தங்கள் ஆணை” என்றபின் “ஆசிரியர்களே, தங்கள் ஆணையும் கூட” என்றார். “நன்று! அஸ்தினபுரிக்கு நலம் சூழ்க!” என்றார் துரோணர்.

கனகர் மீண்டும் ஓடி அறையை அடைந்தபோது அங்கு விதுரர் இல்லை. விதுரரை தேடிச் சென்றபோது வெளிமுற்றத்தில் அவர் தனியாக நிற்பதை கண்டார். அருகணைந்து “சல்யரின் ஆணைப்படி தொடங்கலாமென்பது துரோணரின் ஆணை, அமைச்சரே” என்றார். “பிதாமகர் வேறு உளநிலையில் இருக்கிறார். எதுவும் இனி மிச்சமில்லை, அவை தொடங்கவேண்டியதுதான்.” விதுரர் “அறிவிலி, இளைய யாதவர் இன்னும் அவைபுகவில்லை” என்றார். கனகர் “ஆம், ஆனால் அவர் தூதராக அல்லவா வந்திருக்கிறார்?” என்றார்.

“அல்ல, அவருக்கு அரசமுறைமை செய்திருக்கிறோம். அவருக்கான இடம் அரசர்கள் நடுவேதான் போடப்பட்டிருக்கிறது” என்றார் விதுரர். “ஆம்” என்றார் கனகர்.

“நான் அதை எண்ணவில்லை.” விதுரர் சினமும் சலிப்புமாக “எண்ணிப்பார்க்கவேண்டும். அவைக்குள் எலிபோல குறுக்கும் நெடுக்குமாக ஓடுவதில் பொருளில்லை” என்றார். மேலும் எழுந்த சினத்தை அடக்கி “இங்கு நில்லுங்கள். இளைய யாதவர் அவைபுகுந்ததும் எனக்கு தெரிவியுங்கள்” என்றார். “ஆணை” என்றார் கனகர். விதுரர் அரசரின் அறைக்குள் நுழைந்தார். கனகர் பெருமூச்சுவிட்டார்.

கனகர் நிலையழிந்தவராக அவைமுற்றத்தில் காத்து நின்றார். அவரிடம் ஓடிவந்த சிற்றமைச்சர் பிரமோதர் “நிமித்திகரிடம் அவைநிரல் என்ன என்று முறைப்படி அறிவித்துவிட்டேன், அமைச்சரே” என்றார். கனகர் “ஆம், நிரல் அனைவருக்கும் கிடைத்ததா என்பதை மீண்டுமொரு முறை உறுதி செய்க!” என்றார். அவர் விலகிச்செல்ல கனகர் சாலையை நோக்கியபடி தன் ஆடையை சீரமைத்தார். அவையிலிருந்து சுஜாதன் ஓடிவந்து “இங்கு நிற்கிறீர்களா? நான் தேடிக்கொண்டிருந்தேன்” என்றான். மூச்சிரைக்க “அவையில் அனைவரும் அமர்ந்துவிட்டனர். இருமுறை உறுதி செய்துவிட்டேன்” என்றபடி அருகில் வந்து வியர்வை மணத்துடன் நின்றான்.

“நான் இளைய யாதவருக்காக காத்திருக்கிறேன்” என்றார் கனகர். “ஆம், அவர் இன்னும் வரவில்லை. ஆனால் அவைகூடி சடங்குகள் முடிந்த பின்னரே தூதர்களை அழைப்பது வழக்கம்” என்றான் சுஜாதன். “அவர் அரசராக வந்திருக்கிறார்” என்றார் கனகர். “ஆம், நான் அதை எண்ணவில்லை” என்றான் சுஜாதன். “எண்ணிப்பார்க்கவேண்டும், இல்லையேல் அரசகுடியினர் என்று சொல்லிக்கொள்வதில் பொருளில்லை” என்றார் கனகர். “மெய்தான்” என சுஜாதன் தணிந்தான். “ஏவலரையும் அமைச்சரையும் ஏவும்போது அப்பிழைகளுக்கு அப்பால்

நின்றிருக்கவேண்டும் அரசர்கள். இளைய யாதவர் அவைபுகாமல் அரசர் மேடையமர்ந்தால் அவர் அரசராக அவைபுக இயலாது. தூதராக வந்தவருக்கு அரசருக்குரிய இடம் ஏன் என்னும் வினா எழும்" என்றார் கனகர்.

சுஜாதன் தலைகுனிந்து நின்றான். சாலையின் மறு எல்லையில் யாதவர்களின் பசுக்கொடி தெரிந்தது . "வருகிறார்" என்றான் சுஜாதன். கனகர் "ஆம், பார்த்தேன்" என்றார். "தாங்கள் இங்கு நிற்க வேண்டும், அரசே. அரசகுடியினரில் ஒருவர் நின்று வரவேற்பது நன்று" என்றார். "அதற்கு எனக்கு ஆணையில்லை, நான் தெற்குவாயிலில் நிற்கவேண்டியவன்" என்றான் சுஜாதன். "இது விதுரரின் சொல்" என கனகர் சொன்னார். சுஜாதன் தயங்கியபடி நின்றான். கனகர் "முறைமைச்சொல் உரைத்து அவரை எதிர்கொள்க! அழைத்துச்சென்று அவையமரச் செய்க! அரசகுடியில் ஒருவர் அதைச் செய்கையிலேயே முறைமை முழுமைகொள்கிறது" என்றார்.

இளைய யாதவரின் தேர் வந்து முற்றத்தில் நின்றது. அதிலிருந்து சாத்யகி இறங்கி இடையிலிருந்த சிறிய கொம்பை எடுத்து ஊதி "விருஷ்ணிகுலத்து இளைய யாதவர் கிருஷ்ணர் வருகை" என்று அறிவித்தான். சுஜாதன் "தனியாக வருகிறார்" என்றான். கனகர் அருகே சென்று வணங்கி "யாதவக் குடிமூத்தவரை அஸ்தினபுரியின் ஷத்ரியப் பேரவைக்கு வரவேற்கிறோம்" என்றார். இளைய யாதவர் படிகளில் இறங்கி கனகரின் தோள்மேல் கைவைத்து "எப்படி இருக்கிறீர்கள், அமைச்சரே?" என்றார். கனகர் "நலம்" என்றார். சற்று தயங்கி நின்ற சுஜாதன் அருகே வந்து "அஸ்தினபுரியின் அவைக்கு நல்வரவு, மூத்தவரே" என்றான். அவனை அணுகி தோள்மேல் கைவைத்து பற்றி உடலுடன் அணைத்தபின் "உன் முகம்

முதலில் கண்ட அந்த இளந்தோற்றத்திலேயே இன்னும் நினைவில் படிந்திருக்கிறது, இளையோனே” என்றபின் கனகரிடம் “இவர்களுக்கு முதுமையே இல்லை போலும்” என்றார்.

கனகர் அச்சிரிப்பால் மெல்ல நெகிழ்வுகொண்டு “தங்களைப்பற்றித்தான் அவ்வாறு பேசிக்கொள்கிறார்கள், யாதவரே” என்றார். இளைய யாதவர் “நான் எதையும் அக்கணமே கடந்துசென்றுவிடுகிறேன். காலத்தின் வண்டலே அகவை என்கிறார்கள்” என்றார். சுஜாதனிடம் “நல்ல சொல்லாட்சி, நினைவில்கொள். பெண்டிரிடம் சொன்னால் மகிழ்வார்கள்” என்றார். சிரித்தபடி “அவை நுழையலாமே” என்று சுஜாதன் சொல்ல கனகர் “ஆம், அவையே தங்களுக்கென காத்திருக்கிறது” என்ரார்.

சுஜாதன் இளைய யாதவரை அவைக்குள் அழைத்துச் சென்றதை நோக்கிநின்றபின் கனகர் ஓசைகேட்ட எலி என உள்ளிருந்தே திடுக்கிட்டு இடைநாழிக்குள் புகுந்து வட்டமாக அவையைச் சுற்றி மேற்குமுனையை அடைந்து அங்கு நின்றிருந்த விதுரரிடம் “இளைய யாதவர் அவைபுகுந்துவிட்டார். நாம் தொடங்க வேண்டியதுதான்” என்றார். “அரசரிடம் சொல்கிறேன்” என்று அருகிலிருந்த சிற்றறைக்குள் விதுரர் நுழைந்தார். “நீங்கள் அவைமுழுமையை இன்னொரு முறை நோக்கிவிடுங்கள்” என்று சொல்லி கதவை மூடினார்.

கனகர் மீண்டும் அவைக்கு வந்தபோது சுஜாதன் அவரை நோக்கி ஓடிவந்து “அமைச்சரே, இப்போதுதான் நோக்கினேன், இந்த அவைக்கு அங்கர் வரவில்லையா?” என்றான். “இது ஷத்ரியப் பேரவை” என்றார் கனகர். “அவர் நாடாள்பவர்” என்று

சினத்துடன் சுஜாதன் சொன்னான். “ஆம், நமது பார்வையில் அவர் ஷத்ரியரே. ஆனால் இங்கு அமர்ந்திருப்பவர்களின் பார்வையில் அல்ல” என்று கனகர் சொன்னார். “நாம் அவரை ஷத்ரியர் என்று முன்னிறுத்தாவிடில் எவர் சொல்லப்போகிறார்கள்? பாரதத்தின் பெருவீரர் அமராத இந்த அவைக்கு என்ன பொருள்?” என்று சுஜாதன் உரக்க கேட்டான்.

“பொறுத்து குரல் எழுப்புக இளைய அரசே, எவரேனும் செவியுற்றால் அதுவே பேச்சென்றாகும்” என்றார் கனகர். “நான் மூத்தவரிடம் இதை கேட்காமல் இருக்கப்போவதில்லை. என்ன நிகழ்கிறது இங்கே? அங்கரில்லாமல் மூத்தோர் மட்டும் அமருவதென்றால் அதைவிட நமக்கு சிறுமை பிறிதென்ன?” என்றான். “இது கணிகரின் அவை. ஒவ்வொன்றும் அவர் விருப்பப்படியே அமைந்துள்ளது” என்று கனகர் சொன்னார். “இந்த அவையில் அங்கர் வந்தமர்ந்தால் ஷத்ரியர் இடையே ஒரு சிறு மறுகுரலேனும் எழாமல் இருக்காது. நமது எதிரிகளுக்கு அதுவே வாய்ப்பென்றாகும். கட்டுகையிலேயே விரிசலெழ வேண்டாம் என்று அவர் சொன்னபோது அரசர் அதை ஒப்புக்கொண்டார்.”

“இது சிறுமை… இது அவருக்கல்ல, நமக்கு சிறுமை” என்றான் சுஜாதன். “முதலில் ஷத்ரியக் கூட்டு நிகழட்டும். ஒற்றைக்குரல் என அனைவரும் நம் அரசரை தலைவர் என ஏற்கட்டும். அரசுமுறை அறிவிப்பு பாரதவர்ஷம் நோக்கி முன்வைக்கப்படட்டும். அங்கர் படைமுகம் நிற்பது எப்போது என்பதை அதன் பின்னர் முடிவு செய்வோம்” என்றார் கனகர். “இந்த அவையில் அங்கரை படைத்தலைவராக தேர்வு செய்வோமென்றால் நாம் வென்றோம் என்று பொருள். இல்லையேல் இது படையறிவிப்பே அல்ல, வெறும் பகடி

விளையாட்டு" என்றான் சுஜாதன். "இளைய அரசே, இதை நாம் முடிவு செய்யப்போவதில்லை. தாங்கள் விரும்பினால் தங்கள் மூத்தவரிடம் பேசுக!" என்று கனகர் சொன்னார். "ஆம், நான் சொல்லத்தான் போகிறேன். எனக்கு எங்கும் அச்சமில்லை" என்றபடி சுஜாதன் திரும்பிச் சென்றான். அவன் போவதை நோக்கிநின்றபின் கனகர் அவனுக்குப் பின்னால் சென்று அப்பால் மங்கல இசை எழுவதைக்கண்டு தயங்கி நின்றார். இசை ஆர்ப்பரிக்க, அணிச் சேடியர் தாலங்களுடன் நிரைவகுக்க, துரியோதனன் தம்பியர் தொடர கைகூப்பியபடி ஷத்ரிய பேரவை நோக்கி சென்றான்.

அந்நிரையில் சென்ற விதுரர் ஒதுங்கி நின்ற கனகரைக் கண்டு தயங்கி நின்றார். அதற்குள் அவரைச் சென்று அடைந்த சுஜாதன் உரத்த குரலில் "அமைச்சரே, இது என்ன? அங்கர் இன்றி பாரதவர்ஷத்தின் ஷத்ரியப் பேரவை எப்படி முழுமையடையும்?" என்றான். விதுரர் "இது நான் வகுத்ததல்ல, கணிகர் வகுத்தது. நீங்கள் அவரிடம் பேசலாம்" என்றபின் அவைக்குள் சென்றார். சுஜாதன் அறைக்குள் இருந்து வெளியே வந்த துச்சலனின் கைகளைப்பற்றி "என்ன நிகழ்கிறது, மூத்தவரே? இந்த அவையில் அங்கர் இருக்கவேண்டாமா?" என்றான்.

துச்சலன் "நீ அரண்மனைக்கு திரும்பிச்செல்" என்றான். "மூத்தவரே..." என்றான் சுஜாதன். துச்சலன் பெருஞ்சினத்துடன் கையை ஓங்கி "மறுசொல்லுரைத்தால் இங்கே உன்னை அறைந்து வீழ்த்துவேன். அரண்மனைக்குச் செல்லடா, அறிவிலி" என்று பற்களைக் கடித்து தாழ்ந்த குரலில் சொன்னான். சுஜாதன் கண்கலங்க உடல் நடுங்க நின்றான். "உம்" என அவனிடம் உறுமிவிட்டு துச்சலன் கனகரிடம் "அரசி

அவைபுகவேண்டும் அல்லவா?” என்றான். “ஆம், இளையவரே” என்றார் கனகர். “சென்று அறிவியுங்கள்” என்றான் துச்சலன். “ஆம்” என்றபின் கனகர் திரும்பி ஓடினார்.

கனகர் வாயிற்சேடியின் ஒப்புதல்பெற்று அரசியின் சிற்றறைக்குள் சென்று தலைவணங்கி “தாங்கள் எழுந்தருளலாம், அரசி” என்றார். அவருக்காகக் காத்திருந்த பானுமதியும் அசலையும் தாரையும் எழுந்தனர். அசலை “பேரரசி அவைக்கு வருகிறார்களா?” என்றாள். “இல்லை அரசி, மும்முறை அழைப்பு சென்றபோதும் மறுத்துவிட்டார்” என்றார் கனகர். “விதுரர்?” என்று அசலை கேட்டாள். கனகரின் முகத்தில் ஓர் உணர்வு மாற்றம் தோன்றியது “அவர் அஸ்தினபுரியின் அமைச்சர்” என்றார். பானுமதி திரும்பி சேடியரைப்பார்க்க அவர்கள் அவளுடைய ஆடை மடிப்புகளையும் கூந்தலையும் சீரமைத்தனர். தாரை அவள் மார்பிலும் கைகளிலும் இருந்த அணிகளை ஒழுங்கமைத்தாள்.

கனகர் திரும்பி கைகாட்ட மங்கலச் சேடியரும் இசைச்சூதரும் ஒழுங்கு கொண்டனர். நிமித்தச்சேடி கொம்பு ஊதி அரசியின் எழுந்தருள்கையை அறிவித்தாள். கனகர் “இனி தாங்கள் அவையமர்வது மட்டுமே எஞ்சியுள்ளது, அரசி. அரசர் மறுபுறம் அவைபுகுந்துவிட்டார்” என்றபின் தலைவணங்கி உடல் குலுங்க விரைந்தார். கொம்பூதி வரவறித்தபடி முன்னால் செல்ல இசைச்சூதரும் மங்கலச் சேடியரும் மூன்று நிரைகளாக தொடர்ந்து சென்றனர். பானுமதியின் இருபுறமும் அசலையும் தாரையும் செல்ல லதை அவர்களுக்குப் பின்னால் நடந்தாள். தாலங்களும் கூடைகளுமாக அகம்படியினர் பின்னால் சென்றனர்.

# குருதிச்சாரல் - 48

**பகுதி ஏழு : அலைகளில் திரள்வது – 6**



"பிரம்மா, அத்ரி, சந்திரன், புதன், புரூரவஸ், ஆயுஷ், அனேனஸ், பிரதிக்ஷத்ரர், சஞ்சயர், ஜயர், விஜயர், கிருதி, ஹரியஸ்வர், சகதேவர், நதீனர், ஜயசேனர், சம்கிருதி, க்ஷத்ரதர்மா, சுமஹோத்ரர், சலர், ஆர்ஷ்டிஷேணர், காசர், தீர்க்கதமஸ், தன்வந்திரி, கேதுமான், பீமரதர், திவோதாசர், ஜயசேனர், சஞ்சயர், சுருதசேனர், பீமகர், சஞ்சயர், பீமதேவர், ஜயர், விஜயர் என நீளும் காசிநாட்டுக் கொடிவழியில் பிறந்தவர் விருஷதர்பர். விருஷதர்பரின் மகளும் காசிநாட்டு இளவரசியும் அஸ்தினபுரியின் அரசியும் குருகுலத்து அரசர் தார்த்தராஷ்டிரர் துரியோதனரின் அரசியுமாகிய பானுமதி தேவி இந்த அவையை அணிசெய்கிறார். அவர் வெல்க!" என்று நிமித்திகன் அறிவிக்க பானுமதி வெண்பட்டுத்திரைக்குள் தன் பீடத்தில் எழுந்து கைகூப்பி தலைவணங்கி அமர்ந்தாள். அவைக்குள் வாழ்த்தொலிகள் எழுந்து அமைந்தன.

அவையில் அமர்ந்திருந்த ஒவ்வொரு அரசரையாக குலமுறை கிளத்தி வாழ்த்தி வந்த நிமித்திகன் அச்சடங்கை நிறைவுசெய்யும் முகமாக வெள்ளிக்கோலை மும்முறை சுழற்றி தலைவணங்கி பின்னடி எடுத்துவைத்து விலகிச்சென்றான். அசலை "அவையமர்ந்தவர்களில் பெண் என நீங்கள் மட்டுமே, அரசி" என்றாள். பானுமதி "ஆம், அத்துடன் இந்த அவையில் பெண்களுக்கு சொல்லுரிமை மட்டுமே

உள்ளது, முடிவுரைக்க உரிமை இல்லை” என்றாள். அசலை இளைய யாதவரை நோக்கி “அவர்தான் இந்த அவையையும் நடத்தப்போகிறார்” என்றாள். தாரை “அவரும் கணிகரும்… அதை மற்றவர்களும் அறிவர். அவர்கள் எதிர்நோக்கியிருக்கிறார்கள்” என்றாள்.

விதுரர் எழுந்து அவைமேடைக்கு வந்து தலைவணங்கினார். “பாரதவர்ஷத்தின் ஷத்ரியக்குடிகள் அமர்ந்திருக்கும் இந்த அவை இந்நிலத்தின் ஆயிரமாண்டு வரலாற்றை கண்முன் நோக்குவதற்கு இணையானது. மண்மறைந்த மூதாதையர் அனைவரின் முகங்களும் அணிநிரந்தது. இதன் பெருமையை தேவர்கள் உணர்க!” என்றார். அவை மெல்லிய சலிப்புடன் அந்த முறைமைச்சொற்களைக் கேட்டு அமர்ந்திருந்தது. ஜயத்ரதன் கைகளை மார்பில் கட்டியபடி நேர்நோக்குடன் அமர்ந்திருக்க கிருதவர்மன் அருகே அமர்ந்திருந்த அஸ்வத்தாமனிடம் மெல்லிய உதடசைவால் ஏதோ சொல்லிக்கொண்டிருந்தான்.

விதுரர் “இந்த அவையில் பாரதவர்ஷத்தின் பெரும்படைக்கூட்டு ஒன்றுக்கு நாம் கூடியிருக்கிறோம். இதன் இலக்கையும் அமைப்பையும் குறித்து நாம் இங்கு முடிவுசெய்யவேண்டும். இங்கு அமர்ந்துள்ள அரசர்கள் அனைவரும் தங்கள் எண்ணங்களை முன்வைத்து ஒருகுரலாக பாரதவர்ஷத்திற்கு அறைகூவல் ஒன்றை முன்வைக்கவேண்டும். அவ்வறிவிப்பு முறையாக ஓலையில் பொறிக்கப்பட்டு அரசர்களின் முத்திரைச் சாத்துடன் வெளியிடப்படும். நிகழும் எதுவும் அறம் நிலைகொள்ளவும் இங்கு வாழும் குடிகள் நலம்பெறவும் மூதாதையரும் தெய்வங்களும் உளம் மகிழவும் உகந்ததாக அமையட்டும். இதன் முறைமைகளை அமைச்சர் கனகர் அறிவிப்பார்” என்றார்.

அவரை கையமர்த்தியபடி துரியோதனன் எழுந்தான். அந்த மீறல் அவையெங்கும் அதிர்வொன்றை எழுப்பியதை கண்ணாலும் செவியாலும் அறியமுடிந்தது. கையை தூக்கியபடி அவைமேடையின் முகப்பில் வந்து நின்ற துரியோதனன் “அவையமர்ந்த பிதாமகருக்கும் ஆசிரியர்களுக்கும் அரசர்களுக்கும் சான்றோர்களுக்கும் தலைவணங்குகிறேன்” என்றான். அவன் குரல் அன்றுவரை பானுமதி கேட்டிருக்காததாக கார்வையும் தெளிவும் கொண்டிருந்தது. “தொல்காலத்தில் முதிய ரிஷியாகிய வசிட்டரிடம் மிதிலையின் அரசர் ஜனகர் கேட்டார், தவத்தோரே எது மண்ணை உயிருள்ளதாக்குகிறது என்று. வசிட்டர் நீர் என மறுமொழி சொன்னார்.”

“நீரே மண்ணை அன்னமாக ஆக்குகிறது. அன்னத்தை உண்டு புல் எழுகிறது. புல் காடாகிறது. காடு நுண்ணுயிர்களும் புழுக்களும் பூச்சிகளும் பறவைகளும் விலங்குகளும் மானுடரும் வாழும் தொன்மையான இல்லம். நீரே உயிர். ஆகவே அதுவே உள்ளம். அதுவே அறமும் ஆற்றலும் அறிவும். அதை வணங்குக என்றார் வசிட்டர்” என்றான் துரியோதனன். “வசிட்டரிடம் ஜனகர் கேட்ட அவ்வினா ஞானவாசிட்டம் என்னும் தொல்நூலில் உள்ளது. அதற்கு அடுத்த வினாவைவும் மறுமொழியையுமே இங்கு நான் சொல்லவிழைகிறேன்.”

“ஜனகர் கேட்டார், நுண்ணறிவரே சொல்க. எது நிலத்தை நாடென்று ஆக்குகிறது? சொல் என வசிட்டர் உரைத்தார். மானுடனை விலங்கல்லாமல் ஆக்குவது சொல். சொல் திரண்டு மொழியாகும்போதே திரள் பொருள்கொண்டு மக்கள் என்றாகிறது. மக்கள் வாழுமிடமே நாடு எனப்படும்.” அசலை “அவர் பேசுவதுதானா இது?” என்றாள். “ஆம், அவர் மொழியில்

ஒருபோதும் இத்தனை கல்வியும் தெளிவும் அமைந்ததில்லை” என்றாள் தாரை. பானுமதி உதடுகளை அழுத்தி நெஞ்சுமீறி எழுந்த அழுகையை அடக்கியபடி அமர்ந்திருந்தாள்.

“அவையோரே, அந்நூலில் இருந்து எழும் அடுத்த வினா ஒன்றுண்டு. மொழியை உருவாக்குவது எது? மொழியென்று உள்ளமைந்து எண்ணமும் கனவும் ஆகின்றன தெய்வங்கள். செவியில் வந்து கேட்கின்றன. நாவில் வந்து உரைக்கின்றன அவை. ஆனால் மொழிக்குப் பொருளென்றாவது எது?” துரியோதனன் கேட்டான். கூர்ந்த கண்களுடன் அங்கிருந்த ஒவ்வொருவரையும் விழிதொட்டு உளம்புகுந்து வினவுபவன்போல அவைமேடையில் நின்றான். “அறிக, மொழியின் அத்தனை சொற்களுக்கும் பொருள் என்றாவது நிலம். நிலத்தில் ஒரு துளியைச் சுட்டும் ஒலியையே சொல் என்கிறோம்.”

“குலம் என்றமைந்த நால்வரில் நிலத்திலிருந்து அன்னத்தை உருவாக்குபவர் நான்காமவர். அன்னத்தை அன்னத்துடன் நிகரிட்டு பகிர்ந்து செல்வமென்றாக்குபவர் மூன்றாமவர். நிலத்திலிருந்தும் செல்வத்திலிருந்தும் சொல்லெழுப்பி நிறுத்துபவர் முதலாமவர். அவையோரே, அந்நிலத்தைக் காப்பவர் நாம்!” ஷத்ரியர் அவை கைதூக்கி “ஆம்! ஆம்!” என்றது. அச்சொற்களின் செறிவிலும் கூரிலும் அவர்கள் முற்றாக ஆட்பட்டனர். விழிகள் ஒளிகொள்ள முகங்கள் அனல்பட்டவையென்றாக அவர்களனைவரும் அவனே என்றாயினர்.

“சொல்லால் அந்தணனும் கணக்கால் வைசியனும் உழைப்பால் சூத்திரனும் அடையாளம் பெறுகிறார்கள். அறிக, நிலத்தால் ஷத்ரியன் மண்ணில் நிறுத்தப்படுகிறான். நிலம் வெல்லுதலும்

நிலத்தை ஆளுதலும் அவன் கடன்கள் என வகுத்தது அழியா நால்வேதமரபு. அது வாழ்க!” அவையினர் கைகளைத் தூக்கி “வாழ்க! வாழ்க!” என்றனர். “ஆகவே பிற மூன்று குலத்தையும் தாங்குபவர் ஷத்ரியர். ஐந்தாம் குலத்தையும் அப்பாலுள்ள குலங்களையும் அவர்களே ஆள்கிறார்கள்” என துரியோதனன் தொடர்ந்தான்.

“மூன்று ஆற்றல்களால் நாம் ஷத்ரியர்கள் என நிலைநிறுத்தப்படுகிறோம். குலத்தால், வாளால், வேதத்தால். நமக்குரிய நிலத்தை வகுத்தளிக்கிறது குலம். நாம் எய்தவேண்டிய நிலம் வாளால் நாட்டப்படுகிறது. ஷத்ரியர்களே, நாம் பொறுப்பேற்கவேண்டிய நிலத்தை நமக்கு வேதமே ஆணையிடுகிறது என்றுணர்க!” அறைகூவல் என அவன் இரு கைகளையும் தூக்கினான். “நான் அடைந்தது மட்டுமல்ல நம் நிலம். நாம் வென்று கைக்கொள்வது மட்டுமல்ல இந்நிலம். வேதம் நம்மிடம் பாரதவர்ஷத்தை வெல்லும்படி ஆணையிடுகிறது. அவையோரே, இப்புவியை வெல்ல ஆணையிடுகிறது வேதம்!”

அவை பெருங்கூச்சலெழுப்பியது. பல ஷத்ரியர்கள் தங்களை அறியாமலே எழுந்துவிட்டனர். விதுரர் கையசைத்து அவர்களை அமைதிப்படுத்தினார். “நம் குடிகளுக்கு பிரஜாபதிகள் பலர் உண்டு. ஷத்ரியர்களாகிய நாம் அனைவருக்கும் முதன்மைப் பிரஜாபதியென்று அமைந்தவர் தொல்வேந்தர் வேனனின் பெயர்மைந்தராகிய பிருது. சினந்து இருளாழத்தில் ஓடியொளித்த புவியெனும் பசுவை முக்கண்ணன் கழுத்திலிருந்து எடுத்த பைநாகத்தை அஜகவம் என்னும் வில்லென்றாக்கி துரத்தித் தொடுத்து பற்றிக்கட்டி

இழுத்துக்கொண்டு வந்து இங்கு இவ்வண்ணம் அமைத்தவர் அவர் என்கின்றது வேதம்.”

“அப்பசுவை முதலில் இங்கு நின்றிருக்கும் மரங்கள் கறந்து அமுதுண்டன. மலர்த்தேனும் கனிச்சாறும் இலைநீரும் ஆக்கிக்கொண்டன. பின்னர் மலைகள் அதை கறந்தன. தூயநீர் ஒழுகும் அருவிகளை சூடிக்கொண்டன. தேவர்கள் பின்னர் கறந்தனர். மழையென்று அவ்வமுதை அவர்கள் கொண்டனர். அசுரர்கள் அப்பசுவை கறந்தனர். அவர்கள் அடைந்ததே மது. நாகர்கள் அவளைக் கறந்து நஞ்சை அடைந்தனர். மானுடர் அதைக் கறந்து அன்னத்தை அடைந்தனர். முலைகளில் பாலாகவும் பயிர்களில் மணியாகவும் அவர்களிடம் பெருகியது அவ்வமுது.”

“கந்தர்வர் நறுமணங்களையும் வித்யாதரர் இன்னிசையையும் கறந்தெடுத்தனர். யட்சர்கள் வண்ணங்களை கறந்தெடுத்தனர். குபேரன் தங்கத்தை கறந்தெடுத்தான். ஷத்ரியர்களே, தவம்கனிந்த முனிவர் எழுவர் அப்பசுவைக் கறந்து எடுத்த அமுதே வேதம் என்கின்றன நூல்கள்” என்றான் துரியோதனன். “சோமனை கன்றாக்கி அதன் முன் நிறுத்தினர். அனலோன் அதன் நாவென எழுந்து நக்கி கனிய சந்தலை கலமாக்கி நுரையெழ அமுதைக் கறந்தார் பிரகஸ்பதி. ஆம், வேதம் முதற்றாய அனைத்தும் ஷத்ரியருக்கு உரிமைகொண்டதே. அவர்கள் அமைத்தவையும் அவர்களால் காக்கப்படுவனவுமே இங்குள அனைத்தும்.”

“தொல்நூல்களை நோக்குக! மாமன்னர் பிருதுவின் நிலம் எல்லைகளால் பிரிக்கப்படவில்லை என்கின்றன அவை. அவர் சென்ற தேரின் கொடிமரத்தை மண்ணிலுள்ள எதுவும் தடுக்கவில்லை என்று கூறுகின்றன. மரங்களும் விலங்குகளும்

மலைகளும் தேவர்களும் அசுரர்களும் நாகர்களும் மானுடரும் முனிவரும் மூதாதையரும் அவரைப் பணிந்து நீயே எங்கள் பேரரசன், எங்கள் காவலன் நீ என்றனர். அவனருகே குழவியரென்றாகி நின்று எங்கள் தந்தை நீ என்றனர் என்கின்றது தொல்வேதம். ஷத்ரியர்களே, கொடியும் முடியும் கோலும் கொண்டு அரியணை அமர்ந்து ஆளும் நாம் அனைவருக்கும் காவலரும் தந்தையும் ஆவோம்.”

அவையினரிடமிருந்து மூச்சொலிகளே வெளிவந்தன. முகங்கள் அழுகைக்கு முந்தைய கணம் என முழுத்திருந்தன. பானுமதி தன் முகத்தை கைகளில் தாங்கி கன்னங்களில் உலர்ந்த விழிநீர்த்தடங்களுடன் அமர்ந்திருந்தாள். தாரை கண்ணீர் வடித்தபடி முகத்தை மூடி உடல்வளைத்து முழங்கால்மேல் படிந்திருந்தாள். அசலை பெருமூச்சுடன் தன் மேலாடையை முகத்தின்மேல் இழுத்து விட்டபடி அவையை நோக்கினாள்.

துரியோதனன் மெல்ல குரல்விசை குறைந்தான். அழுத்தமேறிய குரலில் அவர்கள் ஒவ்வொருவரிடமும் என சொன்னான். “எது ஷத்ரியனுக்கு வேதத்தால் ஆணையிடப்பட்டுள்ளதோ அதையே நான் செய்கிறேன். என் தந்தையிடமிருந்து எனக்கு உரிமையுள்ள நிலத்தை முழுமையாக பெற்றேன். அதை பிளவுபடாது ஆள்கிறேன். நிலம் செழிக்க, குடிபெருக, செல்வம் பொலிய, அறம் நிலைக்க கோல்நாட்டி ஆள்கிறேன். என் வாளால் இந்நிலத்தை நான்கு திசையிலும் பெருகவைக்க முயல்கிறேன். ஷத்ரியர்களே, பாரதவர்ஷத்தை வென்று மும்முடி சூடி அமரவிழைகிறேன். அது என் உரிமையும் கடமையுமாகும் என ஆணையிட்ட வேதம் வெல்க!”

“தெய்வங்களும் முன்னோரும் மானுடகுலமும் அறிக, ஒரு சொல்லும் ஐயமில்லை. ஒரு கணமும் தயக்கமில்லை. கடல்சூழ்ந்த இப்புவியையே முழுதாளும் வரை ஒரு கணமும் மண்விழைவை குன்றவிடலாகாது என எனக்கு அறிவுறுத்தும் வேதமெய்மையே என் நெறி. உங்கள் ஒவ்வொருவருக்கும் இதுவே வேதம் அளிக்கும் அறைகூவல். உங்கள் நெஞ்சங்களில் இவ்வனல் விளங்குக! உங்கள் மைந்தரில் பரவுக! கொடிவழிகளில் என்றும் அணையாது திகழ்க! ஆம், அவ்வாறே ஆகுக!” அவையினர் கைகளைத் தூக்கி ஒற்றை முழக்கமாக “ஆம், அவ்வாறே ஆகுக!” என்றனர். பெருமுரசின் குடத்திற்குள் என அவைக்குள் கார்வை நிறைந்தது.

துரியோதனன் கைகள் தாழ்த்தி அவையை நோக்கியபடி நின்றான். உருகும் உலோகத்தாலான சிலை எனத் தோன்றியது அவன் முகம். அங்கே அவனன்றி பிறர் இல்லை என்பதுபோல. “இன்று என்னிடம் கோரப்படுகிறது, என் நிலம் பகிரப்படவேண்டும் என. பிருதுவின் நிலம் பகிரப்படவில்லை என்பதே என் மறுமொழி. பிருதுவின் தேர் இப்புவியிலெங்கும் தடுக்கப்படவில்லை என்பதே என் விளக்கம். நான் சொல்ல பிறிதொன்றுமில்லை” என்று தணிந்த குரலில் அவன் சொன்னான். “ஆம், ஒரு பிடி மண்ணும் அளிக்கப்படலாகாது! ஆம்! அதுவே மறுமொழி” என்று ஷத்ரியர்கள் சிலர் கூச்சலிட்டனர்.

துரியோதனன் அவர்களை கையமர்த்தி மீண்டும் குரலெழுப்பினான் “ஷத்ரியர்களே, வேதநெறி நில்லாதவர்கள் திரண்டு படைகொண்டு அங்கே நின்றிருக்கிறார்கள். அவர்கள் அனைவருமே நிலத்தைத்தான் உரிமைகொண்டாடுகிறார்கள். அவர்கள் வாழும் நிலம் அவர்களுக்குரியது என்கிறார்கள்.

மண்ணுக்குள் வேர் என பரவியிருக்கும் தங்கள் மூதாதையரால் அளிக்கப்பட்ட பிறவியுரிமை அது என்கிறார்கள். பாண்டவர்களின் நிலவுரிமையை ஏற்போம் என்றால் அவர்கள் அனைவரின் உரிமையையும் ஏற்றாகவேண்டும். ஏற்பவர்கள் இங்கு எவர்?”

ஷத்ரியர்கள் அனைவரும் ஒரே குரலில் “இயலாது... எந்நிலையிலும் ஏற்கவியலாது! சிறுமை! வாளால் மறுமொழி சொல்வோம்! போர்!” என்று பலவாறாக கூவினர். வெவ்வேறு சொற்கள் இணைந்து சொல்லற்ற பெருமொழி ஒன்றின் முழக்கமாகவே அவையின் ஓசை எழுந்தது. ஆனால் அது தெளிவாகவே பொருள்கொண்டிருந்தது. அவை அடங்குவதற்காக துரியோதனன் காத்து நின்றிருந்தான். ஆனால் அலையலையாக அவை ஓசையிட்டுக்கொண்டே இருந்தது. அது மெல்ல அடங்கும் வரை அவன் அருவிவிழும் குளிர்பாறைபோல அசைவற்று நின்றான்.

பின்னர் மீண்டும் தொடங்கினான். “அரசர்களே, ஒவ்வொரு கணமும் கிளைவிரித்துக்கொண்டிருக்கின்றன மரங்கள். விரியத் தயங்கும் மரம் வீழத் தொடங்குகிறது. நம் முன்னோர் அளித்த நிலங்களுக்குள் நாம் இனிமேலும் அமைய இயலாது. அசுரநிலமும் நிஷாதநிலமும் நம்முடையதென்றாகவேண்டும். வடக்கே கின்னரநாடும் தெற்கே கடல்களுக்கு அப்பாலுள்ள தீவுகளும் மேற்கே யவனர்நிலங்களும் கிழக்கே மணிபூரகத்திற்கும் மேருவுக்கும் அப்பாலுள்ள மண்ணும் நமக்கு வேண்டும். நாம் விரியவேண்டும் என்றால் இன்று நம் முன் திரண்டு நின்றிருக்கும் இந்தக் குடியிலிகளை வென்றாகவேண்டும். நமக்கு வேறுவழியில்லை.”

ஷத்ரியர்கள் கைகளைத் தூக்கி மீண்டும் “ஆம்! ஆம்!” என ஆர்ப்பரித்தனர். “இன்று வரை நாம் தனித்தனியாக இவர்களுடன் போரிட்டோம். தனியர்கள் என்பதனால் அவ்வப்போது இவர்களிடம் தோற்றோம். இந்திரனே விருத்திரனிடம் தோற்றிருக்கிறான் என்ற கதை அறிந்தமையால் பெரும்பாலும் தயங்கினோம். இன்று நமக்கு ஒரு வாய்ப்பை ஊழ் வழங்கியுள்ளது. அவர்களனைவரும் ஒன்று திரண்டுள்ளனர். தம் நிலத்தை காப்பதற்காக மட்டும் அல்ல, நாம் கொண்டுள்ள நிலத்தை தாம் வெல்லும் பொருட்டும் படைக்கலம் தூக்கியிருக்கின்றனர். இனியும் நாம் வாளாவிருந்தால் நம் மூதாதையர் நம்மை பழிப்பார்கள். நம் கொடிவழியினர் எள்ளி நகைப்பார்கள். தீரா இழிவுகொண்டு நூல்களில் கறையாக படிந்திருப்போம்.”

அவையினரின் கொந்தளிப்பு அடங்கியதும் துரியோதனன் தொடர்ந்தான் “நாம் இன்று ஒருங்கிணைந்துள்ளோம். பாரதவர்ஷத்தில் இதைப்போல இதற்குமுன் அத்தனை ஷத்ரியர்களும் ஒரு வாளின்கீழ் திரண்டதில்லை. இப்போரில் நம்முடன் நம் குலதெய்வங்களும் மூதாதையரும் அணிவகுக்கின்றனர். அரசர்களே, நம் படைக்கலமாக வேதம் உள்ளது. வெல்லற்கரியது. விண்ணவரால் புரக்கப்படுவது. நாம் வெல்வோம்.” அவையினர் எழுந்து நின்று போர்க்குரலெழுப்பினர். சொல்லற்ற முழக்கத்தில் மரச்சுவர்கள் தோற்பரப்புகளென ஓசையிட்டன.

“எவர் தலைமைகொள்வது, எவர் படைமுதல் செல்வது என்று தனியாக முடிவெடுப்போம். எவரெவர் படைகள் பங்குகொள்கின்றன என்றும் எந்நிலங்களை எவ்வண்ணம் பகிர்ந்துகொள்வது என்றும் அதன்பின் கணக்கிடுவோம். இங்கு

சொல்தேர்ந்த அமைச்சர்கள் உள்ளனர். மாதுலர் சகுனி அவர்களை ஒருங்கிணைப்பார். ஒன்று சூழ்க, ஒவ்வொருவருக்கும் இதனால் நலனே நிகழும். புகழும் செல்வமும் நிலமும் பெருகும். ஐயம் வேண்டியதில்லை. மாமன்னர் ஹஸ்தியின் கோலை ஏந்தி இந்த அவையில் நின்று சூளுரைக்கிறேன், நம் கொடிகள் பாரதவர்ஷத்தில் மலைமுடிகளைப்போல் என்றுமென நின்றிருக்கும்."

ஷத்ரியர்கள் தங்கள் அரசநிலையை, அவைமுறைமையை, அகவையை, ஆடையணிகளை மறந்து வெறிகொண்டவர்களாக கூச்சலிட்டனர். கைக்கோல்களைத் தூக்கி ஆட்டினர். அசலை பெருமூச்சுடன் பின்னால் சாய்ந்து அமர்ந்தாள். தாரை "அரசர்கள் இப்படி ஆர்த்துக் கொந்தளிப்பார்கள் என்று எவர் எண்ணியிருக்கக்கூடும்! விந்தை!" என்றாள். "இந்நகரில் நாலைந்து நாட்களாக இருக்கிறார்கள். நகரைச் சூழ்ந்த நஞ்சு அவர்களுக்குள்ளும் புகுந்திருக்கும்" என்றாள் அசலை. "அவர்களின் விழிகளை நோக்கு. பலிகொள்ள அமர்ந்திருக்கும் கொலைத்தெய்வங்களுக்குரிய பார்வை கொண்டிருக்கின்றன." தாரை "ஆம், அவர்கள் நரம்புகள் நீலம்கொண்டிருக்கின்றன. முகங்கள் காய்ச்சல்கொண்டு சிவந்திருக்கின்றன" என்றாள்.

"ஆயிரம் நாகொண்ட அனந்தன் என நின்றிருக்கிறார் அரசர்" என்றாள் அசலை. "நஞ்சிருந்தால் மட்டுமே ஆயிரம் நாவும் அமையும். நஞ்சு நஞ்சை அறிகிறது." தாரை "அவர் கொண்ட ஒளியில் இளைய யாதவர் மறைந்துவிட்டார். அவர் அங்கிருப்பதையே நான் மறந்துவிட்டேன். கண்முன் அவர் இருக்கையில் நான் பிறிதொன்றை எண்ணுவது இதுவே முதல்முறை" என்றாள். அசலை திரும்பி பானுமதியை நோக்கினாள். கைகளை மார்பில் கோத்து விழிகளை

துரியோதனன் மேல் நிறுத்தி அவள் அமர்ந்திருந்தாள். அவள் நோக்குவதைக் கண்ட தாரையும் பானுமதியை நோக்கிவிட்டு விழிதாழ்த்திக்கொண்டாள்.

அவை மீண்டும் அமைந்தபோது துரியோதனன் கைகூப்பி "இத்தருணம் நிறைவுறுக! நாம் ஒத்த எண்ணம் கொண்டவர்களானோம். இணைந்தமர்ந்து பகிர்ந்துண்ணும்போதும் பெருநதியை கைகள் பற்றிக் கடக்கும்போதும் சொல்லொருமை கொண்டு நூலாய்கையிலும் தெய்வங்கள் உடனிருக்கின்றன என்பது வேதச்சொல். இங்கு வேதநீர் விளைக! தெய்வங்கள் கிளையும் இலையும் தளிரும் மலருமெனப் பெருகுக! ஆம், அவ்வாறே ஆகுக!" என்று சொல்லி தன் இருக்கையில் அமர்ந்தான். "ஆம்! ஆம்! ஆம்!" என அவை முழங்கியது.

அந்தக் கார்வை முடிவதற்குள் ஜயத்ரதன் எழுந்து "அரசர்களே, இந்த அவையிலேயே ஒன்று முடிவுசெய்வோம். இப்படைத்திரளின் முதன்மையரசர் குருகுலத் தோன்றலும் தார்த்தராஷ்டிரருமான துரியோதனரே" என்றான். அவையினர் அதை ஏற்று கைதூக்கி "வாழ்க! வாழ்க! வாழ்க!" என்றனர். ஜயத்ரதன் "நம் ஒருமையின் அறிவிப்பென கங்கையில் நீராட்டி இங்கிருக்கும் அத்தனை அரசர்களாலும் தொட்டு வாழ்த்தப்படும் வன்னிமரக்கிளையை மூதரசர் சல்யர் அரசர் துரியோதனருக்கு அளிக்கட்டும்" என்றான். அவை "ஆம்! அரசர் வெல்க! குருகுலத்தோன் வாழ்க!" என வாழ்த்துரைத்தது.

அரசர்களின் நிரையினூடாக ஏவலர் அரிமலர்த் தாலங்களுடன் சென்று ஒவ்வொருவருக்கும் அளித்தனர். இறுதி நிரையிலிருந்து கிளம்பிய இலையுடன்கூடிய வன்னிமரக்கிளை அரசர்களின் கைகளினூடாக வந்தது. நீரோடை ஒன்றில்

மிதந்து வருவதுபோலத் தோன்றியது. பால்ஹிகரான சோமதத்தர் அதை சல்யரிடம் அளிக்க அவர் அதை வாங்கி தன் தலைமேல் வைத்து வணங்கினார். வலப்பக்கம் சோமதத்தரும் இடப்பக்கம் காந்தார மன்னர் சுபலரும் துணைவர படிகளில் ஏறி துரியோதனனின் அருகே சென்று அதை அவனுக்கு அளித்தார். மேடையில் உடன் சென்று விதுரர் அவர்களை நடத்தினார்.

துரியோதனன் எழுந்து நின்று கைகூப்பி தலைவணங்கி அதை பெற்றுக்கொண்டான். கனகர் கைகாட்ட மங்கல இசைக்கலங்களும் அவைமுரசுகளும் கொம்புகளும் முழங்கின. அதைக் கேட்டு நகரமெங்கும் முரசுகள் முழங்கத் தொடங்கின. அவையினர் அரிமலர் தூவி வாழ்த்தொலி எழுப்பினர். அதன் நடுவே நின்று துரியோதனன் அந்தக் கோலை தலைக்குமேல் தூக்கி ஆட்டினான். அதை தன் பீடத்தின் அருகே வைத்துவிட்டு கைகூப்பி அமர்ந்தான்.

ஜயத்ரதன் கைகளை விரித்து அவையை அமைதிப்படுத்திவிட்டு “இந்த அவை இரண்டாவது முடிவையும் எடுக்கட்டும். நாம் கொண்டுள்ள இந்தப் படைக்கூட்டு இந்தப் போருக்கானது மட்டும் அல்ல. இது பெருகி முன்செல்லவேண்டும். பாண்டவர்களையும் உடன் எழுந்துவந்துள்ள கீழ்க்குடிகளையும் வெல்வது நம் படைக்கோளின் முதல்படி மட்டுமே. பாரதவர்ஷத்தை முற்றாக நம் கொடிக்குள் கொண்டு வந்தாகவேண்டும். இங்குள்ள குலங்கள் அனைத்தும் அடிபணிந்து நம்மை ஏற்கும்வரை, இந்நிலம் முழுக்க ஷத்ரியக்குடியினரால் ஆளப்படும் வரை இப்படை வாளேந்தியிருக்கவேண்டும். குருதிவிடாய் மிகுந்திருக்கவேண்டும்” என்றான். அவை “ஆம்! பாரதவர்ஷம்

முழுமையும்! நிலமனைத்தும்! ஒவ்வொரு பரு மண்ணும்!" என்று கூச்சலிட்டது. ஜயத்ரதன் கைகூப்பி அமர்ந்த பின்னரும் அவ்வோசை நீடித்தது.

விதுரர் அவைமேடையில் வந்து கைகூப்பியதும் மீண்டும் அவை அமைதிகொண்டது. "அரசர்களே, இந்த அவை தன் படைக்கூட்டின் தலைவராக அஸ்தினபுரியின் அரசரை தெரிவுசெய்து முதல் பெரும்முடிவை எடுத்துள்ளது. நிகழ்வுகள் தொடரவேண்டும். இங்கு எடுக்கப்பட்டுள்ள முடிவுகளில் அவையமர்ந்திருப்பவர்கள் எவருக்கேனும் மாற்றோ நீட்சியோ இருக்குமென்றால் உரைப்பதற்கான தருணம் இது" என்றார்.

கணிகர் எழுந்து நின்று அவையை வணங்கினார். "சொல்க, அந்தணரே!" என்றார் விதுரர். "ஆம், அவை நிகழ்வுகள் தொடரட்டும். ஆனால் அதற்கு முன் நம் படைகளை தலைமைகொண்டு நடத்துபவர்களின் பெயர்களை அவையில் அறிவித்துவிடலாமே" என்றார். "அது பின்னர் பேசி முடிவெடுக்கப்படவேண்டியது என்றார் அரசர்" என்றார் விதுரர். "ஆம், பின்னர் பேசலாம். ஆனால் எவரெவர் இங்கு அதற்குரியவர்களாக உள்ளனர் என்று சொல்லிவிடலாம். பிற பேச்சுகள் நிகழ்கையில் அவையினர் அதைக் குறித்தும் எண்ணி முடிவெடுக்க இயலும் அல்லவா?" என்றார் கணிகர்.

விதுரர் எழுந்த சினத்தை அடக்கி "இங்கே இளைய யாதவரின் தூது எழவுள்ளது" என்றார். "ஆம், அதன்பொருட்டே சொன்னேன்" என்று கணிகர் புன்னகை செய்தார். அவையினர் நகைக்கும் ஒலி மெல்லிய முழக்கமாக எழுந்தது. ஜயத்ரதன் "படைத்தலை நிற்பவர்களின் பெயர்களை சொல்வதற்கென்ன? அரசர் அறிவிக்கட்டும். அதன்மேல் மாற்று எண்ணம் உடையவர்கள் தங்கள் சொற்களை தொகுத்துக்கொண்டு ஆதரவுதிரட்டி பேச

வாய்ப்பமையும்” என்றான். விதுரர் பெருமூச்சுடன் “ஆம்” என்றார்.

துரியோதனன் “அவையினர் அறிந்த பெயர்கள் மட்டுமே. பிதாமகர் பீஷ்மரும், ஆசிரியர்களான துரோணரும் கிருபரும், மத்ரநாட்டரசர் சல்யரும் முதனிலை தலைவர்கள். சைந்தவராகிய ஜயத்ரதரும், உத்தர பாஞ்சாலரான அஸ்வத்தாமரும், யாதவராகிய கிருதவர்மரும், காந்தாரராகிய மாதுலர் சகுனியும் இரண்டாம் நிலையில். எப்போதும் நானும் இளையோரும் உடனிருப்போம்” என்றான் துரியோதனன்.

கணிகர் “அரசே, அவையோர் அறியவிரும்புவது அங்கநாட்டரசராகிய கர்ணன் படைத்தலைமை கொள்ளவிருக்கிறாரா இல்லையா என்றுதான்” என்றார். துரியோதனன் “அவர் படைத்தலைமை கொள்வதனால் நாம் இருமடங்கு ஆற்றல்கொண்டவராவோம். அது என் விருப்பம். ஆனால் அவை அதை முடிவுசெய்யட்டும்” என்றான். “ஆம், அவையோர் எண்ணிமுடிவெடுக்கட்டும்” என்று கணிகர் கைகூப்பி அமர்ந்தார். அதுவரை இருந்த ஒருமை முழுமையாக மறைய அவை கலைந்து தங்களுக்குள் பேசிக்கொள்ளத் தொடங்கியது. ஒவ்வொருவரும் மேலும் மேலுமென உளவிசை கொண்டு முகம் சிவந்து கைகளை வீசிப் பேச பூசலோசை வலுத்து இரைச்சலாகியது.

சகுனி “விதுரரே, இளைய யாதவர் தன் தரப்பை சொல்லலாமே” என்றார். விதுரர் கைவிரித்து “அமைதி! அமைதி!” என்றார். அவையின் ஓசை சற்று அமைந்து மீண்டும் எழுந்தது. விதுரர் இளைய யாதவரை நோக்கி “தங்கள் சொற்களை அவை நிறுத்தலாம், யாதவரே” என்றார். இளைய யாதவர் புன்னகையுடன் எழுந்து நின்றபோதும் அவை கலைந்து

பேசிக்கொண்டே இருந்தது. அலையடிக்கும் கைகளுக்கும் உடல்களுக்கும் நடுவே அவர் கைகூப்பியபடி மாறா மென்நகையுடன் நின்றார்.

# குருதிச்சாரல் - 49

**பகுதி ஏழு : அலைகளில் திரள்வது – 7**

இளைய யாதவர் அவையை நோக்கியபடி அசையாமல் நின்றிருந்தார், காற்றிலா இடத்தில் நின்றிருக்கும் சுடர் என. பானுமதி அசலையிடம் “மீண்டும் ஒருமுறை அறிவிக்க சொல்... அவர்கள் அவர் குரலை செவிமடுக்காமலிருக்கிறார்கள்” என்றாள். அசலை “அதைத்தான் கணிகர் விரும்பியிருக்கிறார். அவர்களுக்கு சூதன் கீழ் படைகொண்டு நிற்பதைப்பற்றி மட்டுமே இப்போது கவலை” என்றாள். பானுமதி “ஆனால் அவர் மேலும் முதன்மையான தூதுடன் வந்திருக்கலாம் அல்லவா?” என்றாள். அசலை புன்னகைத்தாள்.

இளைய யாதவர் அவைமேடையின் வலப்பக்கம் நின்றிருந்த அந்தணர்களின் தலைவரை நோக்கி “உத்தமரே, நீங்கள் உடனடியாக அவையிலிருந்து வெளியேறவேண்டும்” என்றார். அவர் திடுக்கிட்டு “என்ன சொல்கிறீர்கள்?” என்றார். “நீங்கள் வேதமறிந்த அந்தணர் என்றால் இனி இந்த அவையில் நின்றிருக்கலாகாது. வெளியேறுக... இக்கணமே வெளியேறுக!” என்றார் இளைய யாதவர். அவருடன் நின்றிருந்த முதிய அந்தணர் உரத்த குரலில் “நீ யார்? அந்தணரை வெளியே செல்ல ஆணையிட உனக்கென்ன உரிமை?” என்றார்.

இன்னொருவர் “சூத்திரரின் ஆணைப்படி அந்தணர் நின்றிருக்க வேண்டுமென எவர் சொன்னது உன்னிடம்?” என்றார்.

கலைந்து ஒலித்துக்கொண்டிருந்த ஷத்ரியப்பேரவை மெல்ல அமைதியடைந்தது. ஜயத்ரதன் எழுந்து “என்ன நிகழ்ந்தது? என்ன பேசிக்கொண்டிருக்கிறீர்கள்?” என்றான். சல்யர் “அவர்களிடம் ஆணையிட உங்களுக்கேது உரிமை, யாதவரே?” என்றார். அஸ்வத்தாமன் “இது அத்துமீறல்” என்றான். ஷத்ரியர் பலர் எழுந்து நின்றனர். அவந்தி நாட்டரசர் ஜயசேனரும் அவர் மைந்தர்கள் விந்தனும் அனுவிந்தனும் எழுந்து “அவனை வெளியேற்றுக, முதலில் அவன் வெளியேறட்டும்” என்று கூச்சலிட்டனர்.

ஜயசேனர் “முதலில் ஷத்ரிய அவையில் அரசனென்று அமர இவனை அழைத்ததே பிழை… அந்தப் பிழையே இப்போது மும்மடங்கென பெருகியிருக்கிறது” என்றார். “உங்கள் மகள் மித்ரவிந்தையின் கணவர் அவர், அவந்தியரே” என ஒரு குரல் எழ ஜயசேனர் திரும்பி “ஆம், நாம் ஒற்றுமை இன்றி ஆற்றலிழந்து முறைமை மறந்து குலம்துறந்து வாழ்வதனால் நம் மகளிரை அசுரரும் சூத்திரரும் நிஷாதரும் கிராதரும் கொள்கிறார்கள்…” என்றார். அபிசார மன்னர் சுபத்ரரும் அரேவாக மன்னர் சிம்மவக்த்ரரும் குந்தல மன்னர் காளகேசியும் எழுந்து “ஆம், வெளியேற்றுக… இக்கணமே வெளியேற்றுக!” என்று கூவினர்.

விதுரர் கைகாட்டி “அமைதி… அமைதி” என்றார். அவை மேலும் மேலும் கூச்சலிடவே துரோணர் எழுந்து “அமைதிகொள்க… நாம் அந்தணர் என்ன சொல்கிறார் என்று கேட்போம்” என்றார். அவை அமைதியடைந்தது. சில அரசர்கள் சினத்துடன் மூச்செறிந்தபடி நோக்கி நின்றனர். “அந்தணர்களே, உங்கள் எண்ணம் என்ன?”

என்றார் விதுரர். “அவரை வெளியேற்றுவதென்றால் அவ்வாறே ஆகுக! ஷத்ரியர் அவையில் அந்தணர் குரலே முதன்மையானதென்கின்றன நூல்கள்.”

அந்தணர்தலைவராகிய தவள கௌசிகர் “நாங்கள் சொல்வதற்கொன்றுமில்லை, அமைச்சரே. அவர் எங்களை ஏன் வெளியேறச் சொன்னார் என்பதை இந்த அவையில் வெளிப்படுத்தி அதில் பொருளில்லை என்று நிறுவாமல் நாங்களோ அவரோ வெளியேற முடியாது. அவ்வாறு வெளியேறினால் நாங்கள் நெறியழிந்து பழிகொண்டோம் என்றே அலர் உருவாகும். அதை அவரும் அறிவார் என்பதனால்தான் புன்னகையுடன் நின்றிருக்கிறார்” என்றார்.

அவையினர் திகைப்புடன் இளைய யாதவரை நோக்கினர். விந்தன் “அவன் சொல்வதை அவை கேட்கவேண்டும் என்பதற்காகவே இந்த நாடகத்தை ஆடியிருக்கிறான், மாயன், பழிகாரன், வீணன்” என்று கூவினான். “ஆம், அதற்காகவே. நீங்கள் விழையவில்லை என்றால் ஒரு சொல்லும் உரைக்காமல் அவை நீங்குகிறேன். எனக்கு மாற்று எண்ணமேதுமில்லை” என்றார் இளைய யாதவர்.

தவள கௌசிகர் “எங்களுக்கு மாற்று வழியில்லை, யாதவரே. சொல்க, ஏன் எங்களை வெளியேறச் சொன்னீர்கள்?” என்றார். “நான் உரைக்கலாமா? அவை செவிகொள்ளுமா?” என்றார் இளைய யாதவர். “சொல்க!” என்றான் ஜயத்ரதன். அவை கலைந்து ஓசையிட்டது. “நான் பேசும்போது அவையிலிருந்து ஒரு சொல் ஊடே எழுமென்றால் அங்கேயே பேச்சை நிறுத்திவிட்டு அவைநீங்குவேன். அந்தணர்மேல் நான் சொல்லவந்தது என்னவென்று இந்த அவைக்கு வெளியே

ஒருபோதும் சொல்லமாட்டேன். அது ஊரவர் உய்த்தலுக்கும் சூதர்களின் கற்பனைக்குமே விடப்படும்” என்றார்.

“இது சூழ்ச்சி. இது எண்ணவொண்ணா கீழ்மை” என்று அனுவிந்தன் கூவினான். “அரசே, அமர்க! அரசர்களே, அமர்க! பழி நீங்காது இந்த அவையிலிருந்து நாங்கள் விலகமாட்டோம். அவை முழுமை அடையவில்லை என்றால் இங்கேயே உண்ணாநோன்பிருந்து உயிர்விடுவோம்” என்றார் தவள கௌசிகர். அரசர்கள் மெல்ல ஆங்காங்கே அமர்ந்தனர். அவையில் ஆழ்ந்த அமைதி உருவாகியது. இருமல்களும் மூச்சொலிகளும் கங்கணமும் வாளுறையும் குலுங்கும் ஓசையும் மட்டும் எழுந்தன.

“சொல்க, யாதவரே!” என்றார் விதுரர். இளைய யாதவர் தவள கௌசிகரை நோக்கி “அந்தணரே, பிரம்மனுக்கு நிகராக பிறிதொரு உலகை உருவாக்கி நிறுத்திய மாமுனிவர் விஸ்வாமித்திரரின் கௌசிக குருமரபில் வந்த அந்தணர் நீங்கள் என்று நான் அறிவேன். உங்கள் நெறிமீறாமை மீதும் சொல்திறம்பாமை மீதும் இந்த அவையில் எவருக்கும் ஐயமில்லை. நானும் அந்த ஐயமின்மையுடனேயே இங்கே வந்தேன். உங்கள் வாழ்த்துக்களால்தான் இந்த அவையில் எழும் சொற்கள் தெய்வங்கள் செவிகொள்ளும் தகுதிகொள்கின்றன. உங்களை பழிக்கும்படி சொல்லெடுத்தமைக்கு பொறுத்தருள்க!” என்றார்.

தவள கௌசிகர் “தங்கள் குற்றச்சாட்டு என்ன என்று சொல்லுங்கள்” என அடக்கப்பட்ட சினத்துடன் சொன்னார். பானுமதி அசலையை நோக்க அவள் புன்னகைத்து “இந்த அவை வெறும் களம், அரசி. கணிகரும் யாதவரும் ஆடுகிறார்கள்” என்றாள். பானுமதி கணிகரை நோக்கினாள்.

அவர் கண்களை மூடி புன்னகையுடன் அமர்ந்திருந்தார். சகுனி முகத்தில் கசப்பும் சீற்றமுமாக தாடியை நீவிக்கொண்டிருந்தார். “அப்படியென்றால் அரசர்?” என்றாள் தாரை. “அவர் இந்த அவையிலேயே இல்லை. அப்பால் நின்று அனைத்தையும் மானுடச் சிறுவிளையாடல் என நோக்கிக்கொண்டிருக்கிறார்.” அவையில் கற்சிலையென அமர்ந்திருந்த துரியோதனனை நோக்கியபின் பானுமதி “ஆம்” என்றாள்.

“தவள கௌசிகரே, இந்த அவை கேட்கும்படி சொல்லுங்கள்! இந்தப் பெருங்கூடம் மரத்தாலும் துணியாலும் தோலாலும் ஆன ஒரு கட்டடம் மட்டுமே. இதை அவையென்றாக்குவது எது?” என்றார் இளைய யாதவர். தவள கௌசிகர் அவர் என்ன கேட்கிறார் என விளங்காதவர்போல நோக்கி அமர்ந்திருந்தார். “சொல்க, இங்கு அமர்ந்திருக்கும் அரசர்களா? அவர் சூடிய மணிமுடிகளும் செங்கோல்களுமா? அவர்களின் குலக்கொடிகளா? அவர்களால் இங்கு சொல்லப்படும் சொற்களா? எது?” அவையினரும் அவர் கேட்கவருவது என்ன என்று புரியாமல் நோக்கினர்.

தவள கௌசிகர் “எவையுமல்ல, இந்த அவையில் கங்கைநீர் தெளித்து ஓதப்பட்ட வேதச்சொல்” என்றார். “அந்தச் சொல் என்ன?” என்றார் இளைய யாதவர். “அனைத்து அவைகளையும் நிறுவும் சொல் அது. ஓம் வாங்மே மானசி பிரதிஷ்டிதா எனத் தொடங்கும் பாடல்.” இளைய யாதவர் “அந்தணரே, இங்கிருக்கும் மலைகள் தோன்றியபோது உடன்தோன்றிய பாடல் அது எனப்படுகிறது. அச்சொல்லை உரைத்தபடிதான் பிரம்மன் இப்புவியை படைத்தான் என்கின்றன நூல்கள். நால்வருக்குமேல் கூடி அமர்ந்து நெறியோ நூலோ ஆயும் இடங்களிலெல்லாம் நின்றிருக்கும் சொல் அது. இந்த

பாரதவர்ஷத்தில் நாவில் மொழிதிகழும் வரை இங்கிருக்கும். அந்தத் தூய நன்மொழியின் பொருளை இங்கு உரையுங்கள்” என்றார்.

தவள கௌசிகர் விழிகாட்ட அவர் அருகே நின்ற இளம்வைதிகர் கைகூப்பி அந்தப் பாடலின் பொருளை எழுமொழியில் பொருள்மாற்றி பாடினார். தீட்டப்பட்ட தொண்டையிலிருந்து சங்கொலி என எழுந்த பாடல் அவையில் தெய்வமெழுந்ததுபோல் ஒலித்தது.

ஓம்! என் சொற்கள் உள்ளத்தில் நிலைகொள்க!

என் உள்ளம் சொல்லில் அமைக!

தன்னை தான் விளங்கச்செய்யும் அது

என்னுள் வளர்க! ஆம் அது என்றும் வளர்க!

என் உள்ளமும் சொல்லும் வேதமெய்மையை விளங்கச்செய்க!

நான் கேட்பவை அனைத்தும் வெறுமையென்று ஆகாதொழிக!

நாளும் இரவும் நான் நவில்பவையே என்னுள் திகழ்க!

நான் நிகழும் உண்மையையே அறிவேனாகுக!

நான் அழியா மெய்மையையே உணர்வேனாகுக!

அது என்னை காத்தருள்க!

என் ஆசிரியர்களைக் காப்பது

என்னையும் காத்தருள்க!

என்னைக் காத்தருள்வது

என் ஆசிரியர்களையும் காத்தருள்க!

அமைதி! அமைதி! அமைதி!

இளைய யாதவர் "அந்தணர்களே, நாம் அச்சொல்லால் இங்கு அமைக்கப்பட்டிருக்கிறோம். அச்சொல்லை இங்கு அமைத்தவர்கள் நீங்கள். எளியோனாகிய நான் வேதமெய்மையைக் குறித்து ஒரு வினாவை இங்கு எழுப்பலாம் அல்லவா?" என்றார். தவள கௌசிகர் "தாங்கள் எளியவர் அல்ல என்பதும் சாந்தீபனி குருநிலையின் முதன்மையாசிரியர் தாங்களே என்பதும் வேதமறிந்தோர் எவரும் அறிந்ததே. நான் தங்களைப்போல வேதமெய்மை நோக்கி செல்பவன் அல்ல. வேதமோதும் எளிய அந்தணன். என் அறிவுக்குகந்ததை இங்கு உரைப்பேன்" என்றார்.

"எனக்கல்ல, இந்த அவைக்கு உரையுங்கள், வைதிகரே. அது என்னைக் காத்தருள்க, என் ஆசிரியர்களைக் காப்பது என்னையும் காத்தருள்க, என்னைக் காத்தருள்வது என் ஆசிரியர்களையும் காத்தருள்க என வேதம் இறைஞ்சுகிறது. அது என இங்கு சுட்டப்படுவது எது?" என்றார் இளைய யாதவர். "பிரம்மம். அச்சொல்லால் சுட்டப்படுவது எதுவோ அது" என்றார் தவள கௌசிகர். "ஆம், எங்கும் எப்படியும் சுட்டப்படுவன அனைத்தும் அதையே சுட்டுகின்றன. இங்கு இப்பாடலில் அது எவ்வடிவில் சுட்டப்படுகிறது?"

தவள கௌசிகர் தயங்கியபின் தன் மாணவர்களை பார்க்க அவர்களில் இளையவன் "யாதவரே, அதற்கான மறுமொழிதான் முந்தைய வரிகளில் உள்ளது. இது சொல்நவில்வதைக் குறித்த

பாடல். சொல்லே இங்கு பிரம்மத்தின் வெளிப்பாட்டு வடிவமென நின்றுள்ளது” என்றான். “நன்று, அந்தணரே. உங்கள் பெயர் சூக்ஷ்மர் என்று அறிவேன். சொல் உங்களில் நிலைகொள்க! உங்களில் எரிந்து உங்களை நிறைவடையச் செய்க!” என்றார் இளைய யாதவர். “இதற்கப்பால் ஒரு நற்சொல்லும் இப்புவியில் வேண்டேன், ஆசிரியரே” என்றான் சூக்ஷ்மன். இளைய யாதவர் “தவள கௌசிகரே, இங்கே நீங்கள் பிரம்மம் என நாட்டியது சொல். சொல்லே இதை அவையென்றாக்குகிறது” என்றார்.

“ஆம், இங்கு முழுமுதல் தெய்வம் சொல்லே” என்றார் தவள கௌசிகர். “ஆகவே இங்கு சொல்லப்படும் ஒரு சொல்லும் வீணென்றாகக் கூடாது. சொல்லுக்குப் பின்னால் உள்ளமும் உள்ளத்தை தன்னிலேந்திய ஆத்மனும் ஆத்மனின் அடையாளங்களாகிய அனைத்தும் ஆத்மன் சென்றடையும் முழுமையும் சேர்த்தே இங்கே சொல் எனப்படுகிறது” என்று இளைய யாதவர் சொன்னார். “ஆம், மெய்” என்றார் தவள கௌசிகர். “சொல்க அந்தணரே, இந்த அவையில் சொல் நின்றிருக்கிறதா? இங்கே ஒரு சொல் தன் பொருளை இழந்தால் இந்த அவை மறுதலிக்கப்படுகிறது. வேதம் மும்முறை மறுதலிக்கப்படுகிறது. பிரம்மம் முப்பத்துமூவாயிரம்கோடி முறை மறுதலிக்கப்படுகிறது.”

இளைய யாதவர் குரல் ஓங்கி எழுந்தது. “வேதியரே, அவையீரே, உங்கள் வேதம் சிறுமை செய்யப்பட்ட இந்த அவையில் பேசப்படும் சொற்களுக்குமேல் நீங்கள் தெளித்த கங்கை நீர் எங்கு செல்கிறது? சொல்க, உங்கள் கைகளால் அதை திரும்ப எடுத்துக்கொள்ள முடியுமா?” தவள கௌசிகர் திகைப்புடன் விதுரரையும் பிறரையும் நோக்கினார். “சொல்க, நீங்கள்

தெளித்த கங்கைநீரை மீட்டுக்கொள்ள வழியிருக்கிறதா?” தவள கௌசிகர் “அறியேன், அவ்வண்ணம் ஒன்றும் இதுவரை நிகழ்ந்ததில்லை” என்றார். அவர் குரல் இடறியது. “அதை நான் எண்ணியதே இல்லை. பாரதவர்ஷத்து ஷத்ரியர் அவையில் வேதம் மறுதலிக்கப்பட்டதை நான் கேட்டதும் இல்லை.”

“சொல்க சூக்ஷ்மரே, நீங்கள் அறிவீரா வழியை?” என்றார் இளைய யாதவர். “ஆம், இந்த அவையை வேதமறுப்பு உரைத்தது எனச் சொல்லி தீச்சொல்லிட்டு தர்ப்பையால் கங்கைநீரைத் தெளித்து பூர்ணமிதம் பூர்ணமதம் என்னும் நிறைவுச்சொல் உரைத்து பின்னடி எடுத்துவைத்து அவை நீங்கினால் போதும். ஆனால் அக்கணமே இங்குள்ள அத்தனை அரசர்களும் ஷத்ரியர் அல்லாதாவார்கள்” என்றான் சூக்ஷ்மன். அவையிலிருந்து திகைப்பொலி எழுந்தது. ஆங்காங்கே அரசர்கள் எழுந்து நின்றுவிட்டனர்.

தவள கௌசிகர் “ஆனால் அது எவ்வாறு?” என திகைக்க “எளிய வழியும் உள்ளது, ஆசிரியரே. நாம் வேதமுரைத்து வாழ்த்தியது இந்த அவையை அல்ல என்னும் பொருள்வரும்படி சொல்சேர்த்து மேலுமொரு வேதப்பாடலை ஓதி நிறைவுரைத்து வெளியேறலாம். ஆனால் அதன்பின் இந்த அவையிலெடுக்கப்படும் எச்சொல்லுக்கும் அந்தணர் ஆட்பட மாட்டார்கள். இம்முடிவை தலைமேற்கொண்ட எந்த அரசருக்கும் கங்கைநீர் தெளித்து வேதம் ஓதப்படமாட்டாது. அவர்கள் அரியணை அமர்ந்து முடிசூடவோ வேள்விக்காவலர் என அமரவோ முடியாது. வேதத்தின்பொருட்டு வாளேந்தும் உரிமையை அவர்கள் இழப்பார்கள்”என்றான் சூக்ஷ்மன்.

திகைத்தவர்களாக சொல் கைகளிலும் முகத்திலும் நிலைக்க ஷத்ரியர் நின்றும் அமர்ந்தும் அசைவிழந்திருந்தனர். தவள

கௌசிகர் “ஆனால் இன்னமும் இந்த அவை எங்கே சொல்பிழைத்தது என்று யாதவர் சொல்லவில்லை” என்றார். ஷத்ரியர் அந்தக் கூற்றில் உயிர்கொண்டு “ஆம்! அதை சொல்க! வெறும் மாயம்!” என்று கலவையாக குரலெழுப்பினர். கோசலமன்னன் “இது வெறும் வீணுரை… அவையை சிறுமைப்படுத்தும் வெற்றுச்சொல்” என்று கூவினான். விதுரர் “ஆம் யாதவரே, இந்த அவையில் எங்கே சொல் முறிந்தது என்று கூறி நிறுவும் பொறுப்பு உங்களுடையது” என்றார்.

“நான் சொல்லவிருப்பது எவரும் அறிந்ததே” என்றார் இளைய யாதவர். “தவள கௌசிகரே, பதின்மூன்றாண்டுகளுக்கு முன்பு பன்னிரு படைக்களம் நிகழ்ந்தபின் கூடிய அரசவையில் கங்கை நீர்தெளித்து வேதமோதி அஸ்தினபுரியின் அரசருக்கு அரியணை ஒருக்கியவர் நீங்கள் அல்லவா?” தவள கௌசிகர் “ஆம்” என்றார். “அன்று ஓதப்பட்ட வேதச்சொல்லும் இதுவே அல்லவா?” தவள கௌசிகர் குரல் தாழ “ஆம்” என்றார். “சொல்க, அன்று அந்த அவையில் சொல்லப்பட்டவை வேதத்தால் ஏற்கப்பட்டவை அல்லவா?” தவள கௌசிகர் “ஆம், வேதம் நிறுவப்பட்ட அவையில் அரசரால் உரைக்கப்பட்ட சொல் வேதச்சொல் என்றே கருதப்படும். அவராலோ பிறராலோ அது மறுதலிக்கப்படுமென்றால் வேதமறுப்பென்றே கொள்ளப்படும்” என்றார்.

“நான் பிறிதென்ன சொல்லவேண்டும், அந்தணரே?” என்றார் இளைய யாதவர். “நீங்களே அறிவீர்கள், அரியணையில் அஸ்தினபுரியின் முடிசூடி குருகுலத்தவராகிய தார்த்தராஷ்டிரர் துரியோதனர் அமர்ந்திருந்த அந்த அவையில் உரைக்கப்பட்ட சொல் என்ன என்று. பன்னிரண்டாண்டுகள் கானுறைவும் ஓராண்டு விழிமறைவும் இயற்றி மீண்டு வந்தால்

அஸ்தினபுரியின் பாண்டுவின் மைந்தர் நாடுநீங்குகையில் அவர்கள் விட்டுச்சென்றவை அவ்வண்ணமே திரும்ப அளிக்கப்படும் என்று கூறப்பட்டபோது அந்த அவையில் நீங்களும் இருந்தீர்கள். அந்த அவை அந்தணராலும் மூத்த குடித்தலைவராலும் கற்றறிந்த புலவராலும் நிறைந்திருந்தது. பேரரசரும் அரசரும் பிதாமகரும் ஆசிரியர்களும் பீடம்கொண்டிருந்தார்கள்.”

தவள கௌசிகர் “ஆம்” என்றார். “அந்தச் சொல் பேணப்பட்டதா? இனிமேலாவது பேணப்படுமா? இல்லை அச்சொல் முறிக்கப்படும் என்றால் அதை ஏற்கிறதா நீங்கள் அங்கும் இங்கும் ஓதிய வேதம்?” என்றார் இளைய யாதவர். “அதை நான் உசாவியதில்லை” என்றார் தவள கௌசிகர். “உங்கள் வேதத்தின்மேல் உங்களுக்கு பொறுப்புள்ளது என்றால் இப்போது உசாவுக! அச்சொல் பேணப்படாதென்றால் வேதம் மறுக்கப்பட்டதென்று அறிவித்துவிட்டு அவைநீங்குக!” என அவரை உறுத்துநோக்கி காலடி எடுத்துவைத்து அணுகியபடி இளைய யாதவர் சொன்னார். “அல்லது வேதம்பேணும் பொறுப்பை துறந்துவிட்டேன் என்று கூறி நீங்குக!”

தவள கௌசிகர் நடுங்கிக்கொண்டிருந்தார். “அந்தணரே, இந்த அவையில் நீங்கள் நெறிமீறிவிட்டீர்கள் என நான் உரைத்தது இதுவே. இவையிலொன்றை நீங்கள் செய்து உங்கள் நெறியை இங்கே நாட்டிவிட்டு என்னை புறம்செல்ல ஆணையிடுங்கள்” என்றார் இளைய யாதவர். அதே விசையில் அவைநோக்கி திரும்பி “அன்றேல் இந்த அவை கூறட்டும், இது அந்தணர் சொல்லால் அமையவில்லை, வேதத்தால் நிறுவப்படவில்லை என்று. குலத்திரளாலும் ஆணவங்களாலும் பெருவிழைவுகளாலும் ஆனதே இது என. சொல்லால் அல்ல

படைக்கலங்களாலேயே இதன் ஆற்றல் நிலைகொள்கிறது என” என்றார்.

“அதன் பின் எவரும் வேதம் காக்க எழுந்தோம் என்று சொல்லவேண்டியதில்லை. இது வேதங்களுக்கிடையேயான போர் என்று நம்பவேண்டியதுமில்லை. இது தசைநார்களுக்கும் தசைநார்களுக்கும் இரும்புக்கும் இரும்புக்கும் இடையேயான போர் மட்டுமே. அதை அறிவித்துவிட்டீர்கள் என்றால் வெறும் தசைகளாக இரும்புகளாக அவர்களும் வருவார்கள். குருதியின் அளவைக்கொண்டு அறத்தை முடிவுசெய்வோம்...” என்றார் இளைய யாதவர். அவை சொல்லடங்கி விழிகள் மட்டுமாக அமர்ந்திருந்தது. “சொல்க, தொல்குடி ஷத்ரியர்களின் பேரவையில் வேதச்சொல்லுக்கு என்ன மதிப்பென்று நானும் உணர்கிறேன்” என்றார் இளைய யாதவர்.

பெருமூச்சுடன் தவள கௌசிகர் மெல்ல அசைந்தார். “நான் தங்களுக்கு நன்றி உரைத்தாகவேண்டும், இளைய யாதவரே” என அவர் தாழ்ந்த குரலில் சொன்னது அவை முழுக்க கேட்டது. “என் பொறுப்பென்ன என்று எனக்கு காட்டினீர்கள். என் முதுதந்தையின் காலத்திலிருந்து அரசவையில் அவைமங்கலம் இயற்றும் எளிய அந்தணர்களாகவே எங்களை உணர்ந்துள்ளோம். உண்மையில் இதோ, மங்கலத்தாலமேந்தும் அணிச்சேடியருக்கும் நல்லிசை முழக்கும் சூதருக்கும் எங்களுக்கும் குலமன்றி தொழிலில் என்ன வேறுபாடு என்று உணர்ந்ததே இல்லை. மலைகள் திரண்டெழும் காலத்திற்கு முன்பிருந்து தொடர்ந்துவரும் அழியா மரபொன்றின் பேணுநர் நான் என்று எனக்கு உணர்த்தினீர்கள். இதன்பொருட்டு நானும் என் குடியும் உங்களுக்கு கடன்பட்டிருக்கிறோம். ஆசிரியர் என்றமைந்து எங்களை வாழ்த்துக!”

இளைய யாதவர் “அறிந்து உண்டாலும் அறியாமலுண்டாலும் மருந்து நோய் தீர்க்கும். நீங்கள் ஓதிய வேதம் மெய்மையென்றாகும். வாழ்க!” என்றார். கைகூப்பி வணங்கியபின் தவள கௌசிகர் சொன்னார் “இந்த அவையில் வேதச்சொல் வாழ்கிறதா என்று நோக்கும் பொறுப்பு எனக்குண்டு என உணர்ந்தேன். இதை அரசரிடம் உசாவுகிறேன். வேதத்தூய்மை செய்யப்பட்ட அவையில் உரைக்கப்பட்ட சொல் பேணப்படுகிறதா? ஆமென்றால் இந்த அவையில் இப்போதே ஆணை எழவேண்டும். மறுப்பார் என்றால் என் வேதச்சொல்லை மீட்டெடுத்து இந்த அவையை முற்றிலும் மறுதலித்து ஏழு பின்னடி எடுத்துவைத்து நான் அவைநீங்குவேன். என் மூதாதையர் அறிக! என் நாவிலெரியும் வேதம் அறிக! ஆம், அவ்வாறே ஆகுக!”

ஷத்ரியர் உறைந்தவர்களாக அமர்ந்திருந்தனர். முதியவராகிய சோமதத்தர் “பொறுங்கள், அந்தணரே. பெரிய முடிவை சொல்கிறீர்கள். எரியை காட்டில் வைப்பதற்கு நிகர் உங்கள் செயல். அதன் விளைவுகளை நீங்களோ நானோ கட்டுப்படுத்தவியலாது” என்றார். காம்போஜ நாட்டரசனாகிய சுதக்ஷிணன் “அவர் தன் சொல்லை முன்வைத்துவிட்டார். அவர் கடமை அது. அஸ்தினபுரியின் அரசர் தன் முடிவை சொல்லட்டும்” என்றான். ஜயத்ரதன் எழுந்து சினத்துடன் கைநீட்டி “எவரும் அரசரை ஆள்பவர்களாக தங்களை எண்ணிக்கொள்ள வேண்டியதில்லை. நாவடக்கி சொல்லெடுத்தல் நன்று” என்றான்.

சுதக்ஷிணன் “சைந்தவரே, எந்த நெறியின்படி நீங்கள் அங்கே அமர்ந்திருக்க இங்கே பின்னிரையில் நான் அமர்ந்திருக்கிறேன்? வேதம் வகுத்த மூப்பிளமை மரபு அது. யானைமேல் அமர்ந்து

யானையை மறுதலிக்கும் அறிவின்மையை நான் செய்வதில்லை. அரசர் சொல்லட்டும், அவர் அவையுரைத்த சொல்லுக்கு என்ன மதிப்பு என்று” என்றான். தார்விக நாட்டரசன் சசாங்கனும் திரிகர்த்த நாட்டரசன் ஷேமங்கரனும் எழுந்து “ஆம், அவர் சொல்லட்டும். அதுவே மெய்” என்று கூச்சலிட்டனர். சௌவீர நாட்டரசர் சுமித்ரர் “ஆம், அவர் சொல்வதே முறை. எது எங்களை இங்கு அமரச்செய்திருக்கிறதோ அது பேணப்பட்டாகவேண்டும். அதை முடிவு செய்தபின் அவைநீளுமென்றால் அதுவே நிகழ்க!” என்றார்.

சகுனி “ஒருபொழுது பொறுங்கள்... ஒரு சொல் மட்டும் கேளுங்கள். இளைய யாதவர் கோருவதை இப்போது அரசர் ஆணையென்று விடுப்பாரென்றால் இந்தப் படைக்கூட்டுக்கு பொருளில்லாதாகும். போருக்கும் வெற்றிக்கும் வாய்ப்பில்லை. நீங்கள் விழையும் நிலமும் செல்வமும் புகழும் அகன்று செல்லும். அதை எண்ணி சொல்லெடுங்கள்” என்றார். புளிந்த நாட்டு அரசன் சுகுமாரனும் அவன் இளையோன் சுமித்ரனும் எழுந்து ஒரே குரலில் “என்ன அறிவின்மை!” என்று சீறினர். சுகுமாரன் “ஆம். நாங்கள் மண்ணையும் செல்வத்தையும் புகழையும் விழைகிறோம். ஆனால் பசுவைக் கொன்று உண்டபின் அதன் நெய்கொண்டு வேள்வி செய்யும் அறிவிலிகள் அல்ல” என்றான். “வேதம் பிழைக்குமென்றால் பின்னர் நாங்கள் ஏந்தியுள்ள கோலுக்கும் பொருளில்லை.”

பூரிசிரவஸ் “நாம் இங்கே கூடிக் கூச்சலிடுவதில் பொருளில்லை. இந்த அவையின் மூத்தவர்கள் சொல்லுரைக்கட்டும். பிதாமகர் பீஷ்மரோ ஆசிரியர்கள் துரோணரோ கிருபரோ மறுமொழி கூறுக! இங்கு

நிகழவேண்டியது என்ன?” என்றான். அனைவரும் அவ்வாறு பொறுப்பை அகற்ற விழைந்தவர்கள்போல அமைதியானார்கள். பீஷ்மர் “நான் ஒன்றும் சொல்ல விழையவில்லை. என் சொற்கள் தீர்ந்துவிட்டன” என்றார். பூரிசிரவஸ் “ஆசிரியரே, நீங்கள் சொல்க! அவையில் எழவேண்டிய முடிவு என்ன?” என்றான்.

துரோணர் கைகூப்பி “வேதமே இந்த அவையை அமைக்கிறது. வேதச்சொல் முறியுமென்றால் இங்கு அவையே இல்லை. பிறகென்ன அவைமுடிவு? வேதம் நிலைகொள்ள வேண்டுமென்றால் அரசன் அதைத் தொட்டு உரைத்த சொல்லை காக்கவேண்டும். அதை அவர் மறுப்பாரென்றால் அந்தணர் முதல்வர் வேதத்தை மீட்டுக்கொண்டு வெளியேறலாம். அக்கணமே இங்குளோரெல்லாம் ஷத்ரியர் அல்லவென்றாகிறோம். பின்னர் அசுரரும் நிஷாதரும்போல நாமும் வெறுந்திரளே. அவ்வாறே சென்று நிலம் கொண்டு முடிசூடவும் மண்ணாளவும் செய்யலாம். முடிவெடுக்கவேண்டியவர் அரசரே” என்றார்.

மேகலநாட்டரசன் சுதர்மனும் விகுஞ்ச நாட்டரசன் ஸ்ரீமுகனும் எழுந்து கூச்சலிட்டனர். “அவ்வாறென்றால் அவ்வாறே” என்றான் சுதர்மன். “நாம் வெல்வோம். வெற்றியைத் தொடர்ந்து வேதம் வரும் என்பதே வரலாறு.” ஸ்ரீமுகன் “வென்றபின் அதற்கான வேதியரை தேடுவோம். அவர்கள் எந்த அடர்காட்டிலிருந்தாலும் கொண்டுவருவோம்” என்றான். சிறுகுடி ஷத்ரிய மன்னர்கள் பலர் “ஆம், அது நிகழ்க! அதுவே வழி!” என்று கூவினர். அஸ்வத்தாமன் எழுந்து “அமைதி… கூச்சலிட்டு நாம் இயற்றக்கூடுவது ஏதுமில்லை. அரசர் முடிவெடுக்கட்டும். அதுவரை பொறுப்போம்” என்றான்.

அசலை பானுமதியின் கைகளை பற்றியிருந்தாள். அது நடுங்கிக்கொண்டிருந்தது. பானுமதி அசலையின் கையின்மேல் தன் கையை வைத்தாள். தன் நெஞ்சத்துடிப்பை உடலெங்கும் கேட்டாள். உடலே உடைந்து திறந்துவிடுமென்று தோன்றியது. கண்களை மூடி உதடுகளைக் கடித்து தன்னை அடக்கிக்கொண்டாள். சகுனி எழுந்து “அரசர் முடிவெடுக்கும் முன் தன் உடன்பிறந்தாரிடம் சொல்தேரட்டும். அவர்களுக்கும் உரியது இந்நிலம்” என்றார். சுபலரும் சோமதத்தரும் “ஆம், அவையை ஒத்திவைப்போம். அரசருக்கு பொழுதளிப்போம்…” என்றனர்.

சகுனி “அந்தணரே, அரசர் தன் சொல்பேணுவார். அம்முடிவை அறிவிக்க அவருக்கு பொழுதளிக்க உளம் கனியுங்கள்” என்றார். தவள கௌசிகர் “அவர் எத்தனை பொழுதை வேண்டுமென்றாலும் கொள்க! நாங்கள் இந்த அவையில் இவ்வண்ணமே நின்றிருப்போம்” என்றார். சகுனி மேலும் சொல்ல நாவெடுப்பதற்குள் துரியோதனன் அவரை கைகாட்டி அமர்த்திவிட்டு எழுந்து அவைமுன் நின்றான். அவை உடனே அமைதியாகி அவன் முகத்தில் ஊன்றியது. இரு கைகளையும் விரித்து “அமைக! என் சொல் செவிகொள்க!” என்றான் துரியோதனன்.

# குருதிச்சாரல் - 50

**பகுதி ஏழு : அலைகளில் திரள்வது – 8**

எவரோ ஒருவர் கைசரித்தபோது கங்கணம் சரிந்த ஓசைகூட கேட்குமளவுக்கு அவையில் அமைதி நிலவியது.

துரியோதனன் இரு கைகளையும் மேலே தூக்கி அசைவில்லாது நின்றான். அசைவின்மையே அவன் இயல்பு என்றும் அசைவுகள் நிகழ்ந்து மறைவன என்றும் தோன்றியது. பின்னர் “அவையோரே, நான் என் சொல்லைக் காக்க ஒப்புகிறேன். ஆம், அச்சொல்லை நான் வேதம்நிறுவிய அவையில் வேதநீர் விழுந்த முடிசூடி அமர்ந்துதான் ஏற்றுரைத்தேன்” என்றான்.

“வேதத்தை மறுத்து ஒரு நிலையும் நான் எடுக்கப்போவதில்லை. இது வேதமே தன்னை காக்கும்பொருட்டு உருவாக்கிய ஷத்ரியர்களின் பேரவை. அந்தணர்களே, வேதத்திற்கு அந்தணர் மட்டும் பொறுப்பானவர்கள் அல்ல. அதை சொல்லென நிறுத்தவேண்டியவர் நீங்கள். அறமென நிறுத்தவேண்டியவர்கள் நாங்கள். வாழ்வென நிறுத்தவேண்டியவர் பிற இருநிலையினரும் என்றுணர்க!” என்று துரியோதனன் தொடர்ந்தான்.

“பதின்மூன்று ஆண்டுகாலம் அவர்களுக்கு நிலத்தையும் கருவூலத்தையும் திருப்பியளிக்கவேண்டும் என்றே எண்ணியிருந்தேன். ஆகவேதான் அந்நிலத்திற்கும் செல்வத்திற்கும் அவர்களின் குடிக்கும் மைந்தருக்கும் காவலன் என்று மட்டுமே என்னை நிறுத்தியிருந்தேன். ஐயமிருப்பின் இளைய யாதவர் கூறுக, பாண்டவர்களின் மைந்தர் பிறிதொன்றை உணர்ந்தார்களா என்று” என்றான்.

இளைய யாதவர் “இல்லை, அவர்கள் தங்கள் பெரியதந்தை என்றே தங்களை உணர்ந்தனர், அரசே. அதை நாடறியும்” என்றார். “நன்று… அவ்வண்ணமென்றால் பிறகெப்போது நான் அவ்வெண்ணத்திலிருந்து ஒழிந்தேன்? இந்த அவையில் அதை

முன்வைத்து என் குலத்து மகளிரையும் எந்தையையும் சிறுமைசெய்ய நான் விழையவில்லை. ஆனால் அதற்குரிய இக்கட்டுநிலையை இளைய யாதவர் உருவாக்கிவிட்டார். இனி நிகழ்வனவற்றுக்கு அவரே பொறுப்பென்று உணர்க!" என்றான் துரியோதனன்.

அசலை "என்ன சொல்கிறார்?" என்றாள். பானுமதி அவள் சொல்வதை செவிகொள்ளவில்லை. பித்தெழுந்த விழிகளுடன் துரியோதனனையே நோக்கிக்கொண்டிருந்தாள். அசலை பெருமூச்சுவிட்டு தாரையை நோக்க அவள் தன் ஆடையைச் சுழற்றியபடி முகம்சுளித்து அவையை நோக்கிக்கொண்டிருப்பதை கண்டாள். "என்னடி சொல்கிறார்?" என்றாள். தாரை "குந்தியன்னையை சிறுமைசெய்யப்போகிறார்" என்றாள். "அவரா, அவரிடம் என்றுமே அச்சிறுமை கிடையாது" என்றாள் அசலை. "இல்லை, இன்று வேழத்தின் மருப்பில் குரங்கு அமர்ந்திருக்கிறது" என்றாள் தாரை.

துரியோதனன் "அந்தணரே சொல்க, அரசை நான்காம் நிறத்தோருக்கு அளிக்க வேதம் வகுத்துள்ளதா?" என்று கேட்டான். "இல்லை, அவரவருக்குரிய தொழிலே அவர்களின் அறமும் மெய்மைக்கான வழியுமாகும் என்பதே வேதம் வகுத்தது" என்றார் தவள கௌசிகர். துரியோதனன் "அந்தணரே, ஷத்ரியர் எவர்? சொல்க!" என்றான். "ஷத்ரிய நிலை மூவகையில் அமைகிறது. ஷத்ரியக்குருதியில் பிறந்தோர் இயல்பாகவே ஷத்ரியர். ஷத்ரிய நிலை என்பது தந்தைவழியில் அமைவது. தந்தையால் மைந்தருக்கு உகந்து அளிக்கப்படுவது. எக்குடியில் பிறந்தவர் என்றாலும் தந்தையென்று ஷத்ரியர் ஒருவர் அமர்ந்து வேதச்சடங்குகளை முறைப்படி இயற்றினால்

அவர் ஷத்ரியரே. அது பிதுரார்ஜிதம் எனப்படுகிறது” என்றார் தவள கௌசிகர்.

“தன் வாள்வல்லமையால் நிலம்வென்று குலம்தொகுத்து வேதநெறியேற்று வேள்விக்காவலர் என அமைந்து ஷத்ரிய நிலையை எவரும் அடையலாம். அது சுயார்ஜிதம் எனப்படுகிறது. கார்த்தவீரியனை அவ்வண்ணமே ஷத்ரியர் என ஏற்றன நூல்கள்” என்று தவள கௌசிகர் தொடர்ந்தார். “வேதமுணர்ந்து மெய்மையறிந்து அமைந்த முனிவரால் நீரூற்றி நிறுவப்பட்டால் எவரும் ஷத்ரியர் என்றாகலாம். அது திவ்யதத்தம் எனப்படுகிறது. முதல் வகையினர் இயல்பிலேயே ஷத்ரியர். பிறர் ஹிரண்யகர்ப்பச் சடங்குகளை இயற்றி மீள்பிறப்பெடுத்து பூணூல் அணிந்து ஷத்ரியர்கள் என்றாகவேண்டும்.”

துரியோதனன் “ஆம், தெளிவுற உரைத்தீர்கள், உத்தமரே” என்றான். “பாண்டவர்கள் நகர்மீண்டு எனக்கு நிலம்கோரி தூதனுப்பியபோது நூலறிந்தோரிடம் உசாவினேன். ஷத்ரியர் அல்லாதோருக்கு மண்ணாளும் உரிமை இல்லை என்று உரைத்தனர். ஏனென்றால் ஷத்ரியர்களுக்கு வேதம் ஆணையிடும் கடமைகள் எவையும் அவர்களுக்கில்லை. அஸ்தினபுரியின் நிலம் ஷத்ரியனாகிய என்னால் வேதநெறிப்படி ஆளப்பட்டது. ஆகவே அதன் வயல்களிலும் பசுக்களிலும் அமுது விளைந்தது. கருவூலம் பொன்பொலிந்தது. அதை நெறியமையாதவர் ஆள விட்டுக்கொடுத்து அழிவை அளிப்பதற்கு எனக்கு உரிமை உண்டா? அந்தணரும் அவையோரும் கூறுக, என் சொல்லின் பொருட்டு வேதச்சொல் மறுக்கப்படவேண்டுமா?”

அவையோரை நோக்கி சில கணங்கள் விரித்த கைகளுடன் நின்றபின் துரியோதனன் தொடர்ந்தான் “ஆகவேதான் நான் என் சொல்லை ஒழிந்தேன். நான் சொல்வது இதுவே, பாண்டவர்கள் ஷத்ரியர்கள் அல்ல, அவர்கள் சூத்திரர்கள் மட்டுமே.” விதுரர் கைகள் பதற அமர்ந்திருந்தார். அச்சொல் எழுந்ததும் திடுக்கிட்டு அறியாமல் எழுந்துவிட்டார். அதை கண்ணுறாதவன் என துரியோதனன் தொடர்ந்தான். “அவர்கள் எவ்வாறு ஷத்ரியர் ஆக முடியும்? அவர்களின் அன்னை நான்காம் குலத்தவர். அவர்கள் பெயர்சூடியிருக்கும் என் தந்தையின் இளையோனாகிய பாண்டுவுக்கு அவர்கள் பிறக்கவில்லை. எவ்வகையில் அவர்கள் ஷத்ரியர்களாக முடியும்?”

எவரோ ஏதோ சொல்வதுபோல் அசைய அத்திசை நோக்கி திரும்பி உரத்த குரலில் துரியோதனன் சொன்னான். “ஆம், நியோக முறைப்படி ஐந்து மைந்தரும் பெறப்பட்டார்கள் என நமக்கு சொல்லப்பட்டது. ஐவருக்கும் அவ்வண்ணமே சதசிருங்கத்தில் வைதிகச் சடங்குகள் செய்யப்பட்டு அவர்கள் ஷத்ரியர் என அறிவிக்கப்பட்டனர். ஆனால் அதை நியோகம் என்பவர் யார்? எந்த அடிப்படையில்? யாதவகுலத்து முதியோள் அதை சொன்னால் போதுமா?”

விதுரர் எழுந்து கைகளை நீட்டினார். உடல் பதறியமையால் கை ஆடியது. அவர் குரல் மேலெழவில்லை. “சொல்க அமைச்சரே, அது எவ்வகையில் நியோகம்?” என்றான் துரியோதனன். அவர் மேலும் மூச்சுவாங்கி குரல் இடறி கனைத்து தன்னைத் திரட்டியபடி “அதை நியோகம் என ஏற்கவேண்டியவர் யாதவ அரசியின் கணவராகிய பாண்டு மட்டுமே. அவர் ஏற்றால் அதுவே வேதமுறைப்படி

ஏற்புடையதாகிவிடும்” என்றார். துரியோதனன் “அவர் ஏற்றார் என்பதற்கான சான்றுகள் எவை?” என்றான்.

விதுரர் “இது என்ன வினா? இத்தனை ஆண்டுகளுக்குப் பின் இதை அவையெழுப்ப நாம் ஒப்பலாமா?” என்றார். “நான் கேட்பது இதுவே, அதை என் இளைய தந்தை ஏற்றார் என்பதற்கு சான்று என்ன?” விதுரர் “எவருமறிந்ததே. கானகத்தில் அவர்களுக்கு நிகழ்ந்த பிறவிச்சடங்குகள் அகவைச்சடங்குகள் அனைத்திலும் அஸ்தினபுரியின் மன்னர் பாண்டு அமர்ந்திருக்கிறார். கையில் புல்லாழி அணிந்து வேதமோதி அவியிட்டு அனலோம்பியிருக்கிறார். நீரூற்றி மைந்தரை வாழ்த்தியிருக்கிறார். வேறென்ன சான்று வேண்டும்?” என்றார்.

குரல் நடுங்க, கைகள் பொருத்தமின்றி பதறி காற்றில் உலைய “வேண்டுமென்றால் அன்று அவ்வேள்விக்கு அமர்ந்த அந்தணரை இந்த அவைக்கு கொண்டுவருவோம். அவர்களில் சிலர் இறந்திருக்கலாம். அந்நிலையில் அவர்களின் குருமரபில் ஒருவரின் சான்றே போதுமானது. அந்தணரின் உண்மையை ஆராய ஷத்ரியருக்கோ பிறருக்கோ உரிமை இல்லை, அதை அந்தணர் முடிவெடுக்கட்டும்” என்றார் விதுரர். தவள கௌசிகர் “அந்தணர் அமர்ந்து வேள்வி செய்தார் எனும் செய்தியே போதுமானது, அமைச்சரே. அந்தணர்நெறியை ஐயப்படலாகாது” என்றார்.

அசலை “ஆம், அதற்கப்பால் என்ன சான்று தேவை?” என்றாள். “அரசர் உளறுகிறார். அவருக்கு நெறி புரியவில்லை.” தாரை “அல்ல அரசி, அவருக்குள் எழுந்த தெய்வம் மானுடரின் கீழ்மைகள் அனைத்தையும் அடிச்சேறுவரை சென்று அறிந்தது” என்றாள். துரியோதனன் “ஆம், அது சான்றே. ஆனால்

அச்சடங்குகள் செய்யப்பட்டபோது பாண்டு எவராக இருந்தார்? அவர் அஸ்தினபுரியின் அரசரா? முடிதுறந்து சென்றாரா?” என்றான். விதுரர் திகைத்தார். துரியோதனன் செல்லுமிடம் அவருக்கு புரிந்தது. “அஸ்தினபுரியின் முடிதுறந்து அவர் சென்றார் என்றால் அவர் காட்டில் இயற்றிய அச்சடங்குகளே போதுமானவை. ஆனால் அந்நிலையில் அவருடைய மைந்தருக்கு மண்ணுரிமை உண்டு என்னும் பேச்சே எழவில்லை. அரசு எந்தையிடமிருந்தது, இயல்பாக என்னிடம் அது வந்தாகவேண்டும்” என்றான் துரியோதனன். “அன்றி அஸ்தினபுரியின் அரசர் அவர் என்றால் அவர்கள் நியோக மைந்தர் என்பதை அவர் அஸ்தினபுரியின் குடியவையில் அறிவித்தாகவேண்டும். குடிமூத்தோர் ஒப்புதல் பெற்ற பின்னரே அவர்களை தன் மைந்தர் என்று ஏற்கமுடியும்.”

விதுரர் திகைத்து நின்றார். “நான் ஐயுறுகிறேன், இந்த அவையில் நான் என் ஐயத்தை அறிவிக்கிறேன். அவர்களின் பிறப்பு முறையற்றது. அரசர்களே, அந்தணப்பிறப்பும் அரசப்பிறப்பும் அனைவரும் அறியவேண்டியவை. அந்தணர் எனத் தன்னை அறிவிப்பவர் பன்னிரு தலைமுறைக்கால குருதிமரபை முன்வைத்தாகவேண்டும். அரசர் என்று அறிவிப்பவர் ஏழு தலைமுறைக்கால குருதிமரபை அறிக்கையிட்டாகவேண்டும். அந்தணர் பிறப்பை அவர் அமரும் வேள்வியை நிகழ்த்துவோர், அவ்வேள்வியால் பயன்பெறுவோர் அறியும் உரிமை கொண்டவர். அரசப்பிறப்பை அவர்கள் ஆளும் நிலத்தமைந்த குடிகள் அனைவரும் அறியும் உரிமைகொண்டிருக்கிறார்கள்.”

“ஏனென்றால் குலத்தளவே ஆகும் குணம் என்கின்றன நூல்கள். அறியாப் பிறப்பு ஏற்கப்படும் என்றால் அரக்கரோ அசுரரோ

பெற்ற மைந்தர் வந்து அரியணையமரக்கூடும். மூதாதையரையும் குலதெய்வங்களையும் வேள்வியால் பெருகும் தேவர்களையும் அந்நிலத்திலிருந்து அகற்றிவிடமுடியும். வறுதியும் நோயும் கொண்டு அந்நாட்டினரை முற்றழிக்க வகைசெய்ய முடியும். ஆகவேதான் அந்தக் காப்பு அமைக்கப்பட்டது" என்று துரியோதனன் சொன்னான்.

"யாதவ முதுமகள் சதசிருங்கத்தில் வாழ்ந்தநாளில் கருவுற்று பெறப்பட்ட இந்த ஐவரின் பிறப்பும் எவ்வண்ணம் நிகழ்ந்தன என்றுதான் குலப்பேரவையில் மூத்தோர் கேட்டிருப்பார்கள். அதற்கு மறுமொழி உரைத்து அவர்களை நிறைவுறச் செய்த பின்னரே நியோகத்தை அவர்கள் ஏற்கும்படி செய்ய முடியும்" என்று துரியோதனன் தொடர்ந்தான். "இன்றும் அவர்களுக்கு செல்வழி உள்ளது. யாதவ அன்னை அஸ்தினபுரியின் குடியவைக்கு முன் வந்து நிற்கட்டும். தன் கருவிலெழுந்த குருதி எவருடையதென்று சொல்லி நீர்தொட்டு அனல்நிறுத்தி ஆணையிடட்டும். அதை அவையோர் ஏற்கட்டும். அந்தணர் அந்த அவையில் எழுந்து இளைய தந்தை பாண்டு நிகழ்த்திய கருவேற்பு வேத ஒப்புதல் கொண்டதே என அறிவிக்கட்டும். அவ்விரண்டும் நிகழ்ந்தால் அவர்களை ஷத்ரியர் என்றும் இக்குடியில் பிறந்தவர்கள் என்றும் நான் ஏற்கிறேன். என் சொல் காக்கிறேன்."

துரியோதனன் குரல் சீராக ஒலித்தாலும் பெருஞ்சினம் கொண்டவன்போல் அவன் சிவந்திருந்தான். "இன்னொரு வழியையும் நானே அளிக்கிறேன். அவர் கருவுக்கு குருதியளித்தவர் ஷத்ரியராக இருந்தால், அவர் அம்மைந்தரை ஷத்ரியர் என இந்த அவையில் எழுந்து அறிவித்தாரென்றால்

அவர்கள் ஷத்ரியர் என ஏற்கிறேன். ஷத்ரியர்களுக்கு நிலமளிக்க ஒப்புகிறேன்.” சகுனி எழுந்து “அவ்வாறு அவ்வரசர் ஒப்பவில்லை என்றாலும்கூட அந்தணருக்கோ ஷத்ரியர்களுக்கோ பிறந்தவர்கள் அவர்கள் என யாதவ அன்னை அவைநின்று சொல்வார்கள் என்றால் அவர்களை சூதர் என ஏற்கமுடியும்” என்றார்.

விதுரர் கால்தளர்ந்து அமர்ந்தார். மீண்டும் பதறியவர்போல் எழுந்து பக்கவாட்டில் சரிந்து நிலத்தில் விழுந்தார். சிற்றமைச்சர்கள் பிரதீபரும் சம்விரதரும் அவரை தூக்கிக்கொண்டனர். கனகர் ஓடிவந்து “இவ்வழி இவ்வழி” என்றார். அவரை அவர்கள் அவையிலிருந்து வெளியே கொண்டுசெல்வதை ஷத்ரிய அரசர்கள் விழியிமைக்காமல் நோக்கி அமர்ந்திருந்தனர். எதுவும் நிகழாததுபோல துரியோதனன் தொடர்ந்தான். “ஆகவே அந்தணர்கள் வேதம் தொட்ட சொல் இங்கு மீறப்பட்டதென்று துயருற வேண்டியதில்லை. வேதச்சொல் காக்கப்படவே என் முடிவு எடுக்கப்பட்டது.”

தவள கௌசிகர் “ஆம், இதற்கப்பால் நான் சொல்வதற்கொன்றுமில்லை. அவையினர் முடிவெடுக்கட்டும்” என்று சொல்லி கைகூப்பி அமர்ந்தார். துரியோதனன் “கூறுக இளைய யாதவரே, நீங்கள் சென்று யாதவ அன்னையிடம் நான் உரைத்ததை சொல்ல முடியுமா? அவர் வந்து அஸ்தினபுரியின் அவையில் நின்றால் அனைத்தும் முடிவுற்றுவிடும்” என்றான். இளைய யாதவர் எழுந்து நின்றபோது முதல்முறையாக அவர் முகத்தில் கசப்பையும் துயரையும் அசலை கண்டாள். “இல்லை, அவர் எந்த அவைக்கும் வரமாட்டார். அச்சொல் ஒழிக!” என்றார். கைகூப்பிய பின்பு அமர்ந்தார்.

“நன்று, அவ்வண்ணமென்றால் இங்கே இச்சொல்லுசாவல் நிறைவுகொண்டது” என்று துரியோதனன் கைகூப்பி தன் பீடத்தில் அமர்ந்தான். அவையில் அமைதி நிலவியது. இளைய யாதவர் தன் கைகளை மடித்து அதன்மேல் தலைவைத்து கண்மூடி அமர்ந்திருந்தார். எவரோ இருமும் ஒலி கேட்டது. தவள கௌசிகர் தன் மாணவர்களிடம் மெல்லிய குரலில் பேசும் ஓசை அவையெங்கும் சென்றது. அனுபநாட்டு அரசன் கர்மஜித் எழுந்து “அஸ்தினபுரியின் அரசே, நான் வினவுவது ஒன்றே. உங்கள் கணிப்பின்படி அங்கநாட்டரசர் எவ்வண்ணம் ஷத்ரியர் ஆகிறார்? அன்றி அவரை சூதரென்றே எண்ணுகிறீர்களா?” என்றார்.

துரியோதனன் புன்னகைத்து “அவர் ஷத்ரியர், சுயார்ஜித நெறியின்படி” என்றான். “தன் நிலத்தை வென்று வில்வல்லமையால் நிலைநிறுத்தியவர் அவர். பாரதவர்ஷத்தின் பாதி நாடுகளை என்பொருட்டு படைகொண்டு சென்று வென்றிருக்கிறார். இதோ, என் அவையிலிருக்கும் அரசர்களில் பெரும்பாலானவர்கள் அவர் நடத்திய படைக்கு முன் பணிந்து எனக்கு கப்பம் கட்டியவர்களே. பதினெட்டு நாடுகளில் வேள்விப்புரவி செலுத்திச் சென்றும் ஈட்டிய செல்வத்தை அள்ளி அள்ளி ஈந்தும் வேள்விக்காவலனாக அமர்ந்தும் தன்னை ஷத்ரியர் என நிறுவியவர். அதை வேதம் ஏற்று ஓதியது. அவரை மறுப்பவர்கள் எழலாம், அவர் ஷத்ரியவீரம் என்றால் என்னவென்று அவர்களுக்கு காட்டுவார்.”

“அவையோரே, இதோ இளைய யாதவர் அவைநின்றிருக்கிறார். இவரும் யாதவக்குடியில் பிறந்தவரே. ஆனால் வாள்வல்லமையால் நிலம் வென்றார். அங்கு நிகரற்ற நகர் ஒன்றை நிறுவி அரசமைத்தார். தன் குடிகளை அங்கே திரட்டி

கோல்கொண்டு அமைந்தார். அஸ்தினபுரி அவரை அரசர் என்றே ஏற்றது. அவர் ஷத்ரியப் பெண்டிரை கவர்ந்து மணம் கொண்டபோதுகூட எங்கள் அரசு அவருக்கு துணையிருந்தது. இன்று அவர் அரசுதுறந்து வந்திருக்கிறார். ஆயினும் முதன்மை ஷத்ரியர்களுக்குரிய அவைமுறைமையை அஸ்தினபுரி அவருக்கு அளித்தது. இந்நகரியின் பட்டத்தரசியே சென்று அவரை எதிரேற்று அரண்மனையமர்த்தினார். அதை நீங்களனைவரும் அறிவீர்கள்."

"அவ்வண்ணமே பாண்டவர்களும் சென்று தங்களுக்குரிய நிலத்தை வென்று வாள்வல்லமையால் நிறுவி முடிசூடி அமரட்டும். வேள்வியமைத்து காவலமர்ந்து வேதச்சொல் பெறட்டும். அதன்பின் அவர்கள் வந்தால் அவர்களை நான் ஷத்ரியர் என ஏற்கிறேன். அதன்பின் அவர்களுக்கு நான் சொல்லளிப்பேன் என்றால் அது வேதமுறைமைப்படி என்னை முற்றிலும் கட்டுப்படுத்தும். அதுவரை நிலம்விழையும் முறையிலாச் சூதர்கள் அவர்கள். அதை அஸ்தினபுரியின் நெறிகள் ஏற்காதென்றே அறைகிறேன்." இரு கைகளையும் விரித்து "இனிமேலும் ஐயங்களிருந்தால் அவையிலெழுக அவை" என்றான்.

இளைய யாதவர் எழுந்து கைகூப்பி "அஸ்தினபுரியின் அரசே, நான் இறுதியாக ஒன்று மட்டும் கோரவிழைகிறேன். அவர்கள் ஷத்ரியர்கள் அல்லவென்றே இப்போது கொள்வோம். இந்நகரில் பிறந்தவர்கள், உங்கள் அரண்மனையில் உடன்பிறந்தாரென வளர்ந்தவர்கள். உங்கள் இளைய தந்தையின் பெயர் சூடியவர்கள். தங்கள் நிலத்தில் சிறிதை அவர்கள் பெறுவதற்கு அத்தகுதியே போதுமென எண்ணுகிறேன்" என்றார். அவர் குரல் இறைஞ்சும் முகமாக இறங்கியது. "அரசே, அரியணையமர்ந்து

முடிசூடி அமர்ந்த உங்களிடம் இரு கையேந்தி இரக்கிறேன். அவர்கள் வாழ ஐந்து ஊர்களை அளியுங்கள். உரிமையென்றல்ல, அளிக்கொடையென அருளுங்கள். வெறுங்கையுடன் என்னை மீண்டுசெல்ல விடாதீர்கள்.”

“ஆம், கொடையளிக்க எனக்கு உரிமை உண்டு” என்று துரியோதனன் சொன்னான். “ஆனால் ஊர்த்தலைவராகும் தகுதி அவர்களுக்கு உண்டா? அவர்கள் எக்குடியினர்? எந்தக் குடி அவர்களை தங்கள் ஊருக்கு முதலோர் என ஏற்றுக்கொள்ளும்? சென்று அவர்களிடமோ அன்னையிடமோ உசாவி வருக, அவர்களின் குடி என்ன என்று. அதுவரை நீங்கள் கோரிய அக்கொடையையும் நான் அளிக்கவியலாது.” இளைய யாதவர் “இப்படி சொல்லெடுத்தால் இதற்கு முடிவேயில்லை. தாங்களறிவீர்கள், அவர்கள் இனி மண்ணுழுதோ ஆபுரந்தோ வாழமுடியாது. பிறரிடம் ஏவல்செய்வதோ காவல்நிற்பதோ உங்கள் குடிக்கும் இழுக்கு” என்றபோது அவர் குரல் மேலும் இறங்கியது.

“ஐந்து ஊர்கள் அவர்களை இத்தலைமுறையில் இடரின்றி வாழச்செய்யும். அவர்களின் மைந்தர்களிடமிருந்து குலம்பெருகட்டும். தெய்வங்கள் விழையும் என்றால் அவர்களிடமிருந்து புதியன எழுந்து வரட்டும். இக்கொடையை நீங்கள் அளிப்பீர்கள் என்றால் பெரும்போர் தவிர்க்கப்படுகிறது. மண்ணிலோ பொருளிலோ நீங்கள் இழப்பதும் ஏதுமில்லை” என்றார் இளைய யாதவர். சகுனி அமர்ந்தவாறே “பரிபேணலும் அடுமனைப்பணியும் அரண்மனைஏவலும் அவர்களால் முன்னரே பழகிக்கொள்ளப்பட்டுள்ளன, யாதவரே” என்றார். இளைய யாதவர் அவரை வெறுமனே திரும்பி நோக்கிவிட்டு

“இந்தச் சிறு கொடையையும் மறுத்தால் நீங்கள் இழிவடைவீர்கள், அரசே” என்றார்.

“அல்ல, அதை அளித்தால்தான் நான் இழிவடைவேன்” என்றான் துரியோதனன். “ஐந்து ஊர்களை அளிக்க நெறியிருந்தால் அரைநாட்டை அளிக்கமட்டும் நெறியிராதோ என்ற வினாவே இக்கதை கூறப்படும் ஒவ்வொரு அவையிலும் எழும். அரையடி நிலம்கூட இல்லை என்று மறுக்கப்பட்டால் ஏன் மறுக்கப்பட்டது என்பது நாளடைவில் நாவிலிருந்து மறையும். மறுக்கப்பட்டமைக்கான புதிய அடிப்படைகளை சூதரும் செவிகொள்வோரும் உருவாக்கிக் கொள்வார்கள். காலம் செல்லச் செல்ல அதுவே வளரும்.” அவையில் மெல்லிய சிரிப்பொலி எழுந்தது. இளைய யாதவர் துயர்கொண்ட முகத்துடன், செயலற்ற கைகளுடன் அவையில் நின்றிருந்தார்.

துரியோதனன் அவரை நோக்கி புன்னகையுடன் மீசையை நீவி “ஒரு காலத்தில் பிடிமண்கூட அளிக்கப்படாமல் உறவாலும் அரசர்குடியாலும் துரத்தப்பட்டார்கள் என்பது அவர்கள்மீதான பழியாகவே நீடிக்கும். எப்போதும் அதுவே நிகழ்கிறது, ஐயமிருந்தால் பராசரரின் புராணமாலிகையை நவில்க!” என்றான். “இறுதியாக என்ன சொல்கிறீர்கள், அரசே? உங்கள் அளியைக் கோரி இந்த அவைமுன் நிற்கிறேன்” என்றார் இளைய யாதவர். “யாதவரே, நீங்களும் இன்று நாடற்றவர்தான். நீங்கள் கோருங்கள், உங்களுக்கு ஐந்து ஊர்களை அல்ல ஐந்து துணைநாடுகளையே அவைக்கொடையாக அளிக்கிறேன். அவர்கள் குடியற்றவர்கள், வீண்விழைவு கொண்டவர்கள். ஆகவே பழிசூடியவர்கள். அவர்களுக்கு எதுவும் அளிக்கவியலாது” என்று துரியோதனன் சொன்னான்.

"அவ்வண்ணமென்றால் நான் அவைநீங்குகிறேன். இரப்பதற்கென்று அவைமுன் நீட்டிய என் கை வெறுமையுடன் பின்வாங்குகிறது" என்றார் இளைய யாதவர். "யாதவரே, அக்கைகளில் இந்த மணிமுடியையே நான் வைப்பேன், அது உங்களுக்கு உதவும் என்றால்" என்றான் துரியோதனன். இளைய யாதவர் புன்னகைத்து "எனக்கு உகந்தது நிலமும் பொருளும் அல்ல, அரசே. அறமும் அளியும்தான். அவை இங்கு எழுமென்று எண்ணினேன். அவ்வெண்ணம் அவ்வண்ணமே எஞ்ச விடைகொள்கிறேன். அவையமர்ந்த பிதாமகரும் அறமறிந்த ஆசிரியர்களும் நெறிநிற்கும் அரசர்களும் என் வணக்கத்தை கொள்க! இந்த அவை மானுடருக்கு நலம் நிகழ்த்துக! ஆம், அவ்வாறே ஆகுக!" என்று சொல்லி தலைக்குமேல் கைகூப்பி சுழன்று வணங்கியபின் வெளியே நடந்தார்.

அவர் செல்வதை அவையினர் மெல்லிய கலைவோசையுடன் நோக்கி அமர்ந்திருந்தனர். துரியோதனன் கைகாட்ட கனகர் நிமித்திகனிடம் சென்று ஆணையிட்டார். நிமித்திகன் தன் வெள்ளிக்கோலுடன் அவைமேடைமேல் ஏறி "ஷத்ரியப் பெருங்குடியினரே, அஸ்தினபுரியின் இந்தப் பேரவையில் அடுத்த நிகழ்வுகள் தொடரும். அஸ்தினபுரியின் அரசர் துரியோதனரை படைமுதல்வரெனக் கொண்டு இங்கே வகுக்கப்பட்ட படைக்கூட்டை பாரதவர்ஷத்திற்கு அறிவிக்கும் சொற்கள் இங்கே யாக்கப்படட்டும். அதை நடைமுறைப்படுத்தும் நெறிகள் ஏற்கப்படட்டும்" என்றான்.

அசலை பெருமூச்சுடன் எழுந்தாள். "செல்கிறீர்களா, அரசி?" என்றாள் தாரை. "ஆம், இங்கு அமர்ந்திருந்தமையாலேயே இழிவுகொண்டோம். இப்போது நடந்தது இன்னொரு

துகிலுரிதல். மீண்டுமொரு குருதிப்பெரும்பழி” என்றாள் அசலை. திரும்பி பானுமதியிடம் “கிளம்புக, அக்கையே! இந்தக் கீழ்மையை நாம் நம் விழிநீரால் ஆற்றுவோம்” என்றாள். பானுமதி “நீ செல்க. நான் இங்கிருப்பேன்” என்றாள். “என்ன சொல்கிறீர்கள்?” என்றாள் அசலை. “நான் அவருக்குரியவள். அவருடன் இறுதிவரை இருந்தாக வேண்டியவள்” என்றாள் பானுமதி.

அசலை திகைப்புடன் “எண்ணித்தான் சொல்கிறீர்களா?” என்றாள். “ஆம், இப்பிறவியில் என் கடன் அதுவே” என்றாள் பானுமதி. “அக்கையே, இன்று இந்த அவையிலேயே அவர் மூதன்னையர் நூற்றெண்மரின் தீச்சொல்லை பெற்றுவிட்டார். இனி இன்னும் பிறக்காத நூறு தலைமுறை மைந்தரின் குருதிப்பழி கொள்வார். வேண்டாம், உங்கள் உளமயக்கு வெறும் அறியாமை” என்றாள் அசலை. “ஆம், அறியாமை என்றே இருக்கலாம். எனக்கு நூல்கள் நெஞ்சில் நிற்கவில்லை. அரசுசூழ்தல் மெய்ப்படவுமில்லை. முடிசூடியமர்ந்த எளிய பெண் நான்” என்றாள் பானுமதி. “ஆனால் என் மூதன்னையர் என்னை புரிந்துகொள்வார்கள்.”

அசலை உளமுடைந்த குரலில் “வேண்டாம், அக்கையே. நம் குடிக்கே பெரும்பழி சேர்க்கிறீர்கள். பெற்ற மைந்தரின்மேல் இருள் கவிக்கிறீர்கள்” என்றாள். அவளை ஏறிட்டு நோக்கிய பானுமதியின் கண்கள் தெளிந்திருந்தன . கைசுட்டி “நோக்குக, இந்த அவையிலுள்ள அத்தனை விழிகளும் அவர் உடல் கொண்ட ஒளியைக் கண்டு மயங்கி நின்றுள்ளன. அவரிலெழுந்த பேராண்மையைக் கண்டு பணிகின்றன. தெய்வங்களுக்குரிய உறுதியைக் கண்டு அஞ்சுகின்றன. ஆனால் அத்தனை உள்ளங்களிலும் ஆழத்தில்

ஊறிக்கொண்டிருப்பது வெறுப்பே. அவையமர்ந்த ஷத்ரியர்களில், அள்ளி மடியிலிட்டு வளர்த்த பிதாமகரில், கற்பித்த ஆசிரியர்களில், சூழ நின்றிருக்கும் ஏவலரில் வெறுப்பே விளங்கக் காண்கிறேன்” என்றாள்.

“பிறந்த நாள்முதல் உடனிருந்த இளையோர்கூட அவரை உள்ளூர விலக்கிவிட்டனர். ஐயமிருந்தால் நோக்குக, அதோ துச்சாதனரின் உடலை. ஏன் அது வலிகொண்டதுபோல் துவள்கிறது? ஏன் அவர் கைவிரல்கள் அல்லலுற்று பிணைகின்றன? ஏன் விழிதாழ்த்தி உதடுகளை இறுக்கி நின்றிருக்கிறார்? அவர்கள் அவருக்காக தலைகொடுப்பார்கள். ஆனால் அந்த இறுதிக்கணத்திலும் அவ்வெறுப்பு எஞ்சியிருக்கும். அவரை இதுநாள்வரை நெஞ்சில் வைத்திருந்த தந்தையும் தாயும்கூட இன்று துறந்துவிட்டனர்” என்றாள் பானுமதி. ஒருபோதும் பானுமதியின் குரல் அப்படி உறுதிகொண்டதில்லை என்று அசலை எண்ணிக்கொண்டாள்.

“ஒரு மானுடன் அவ்வண்ணம் முழுக்கத் துறக்கப்படலாகாது. அவருடன் அத்தனை பழிகளையும் ஏற்க, அவர் செல்லும் அவ்விருண்ட உலகங்களுக்குச் செல்ல, முடிவின்மைவரை அங்கு உழலவேண்டியவள் நான். பிறிதொரு சொல் இல்லை. செல்க!” என்று சொல்லி பானுமதி திரும்பிக்கொண்டாள். அசலை கண்ணீர் வழிய அசையாமல் அவளை நோக்கியபடி நின்றாள். தாரை அவள் கைகளை தொட்டாள். அசலையின் விம்மலோசை கேட்டு பானுமதி திரும்பி நோக்கினாள். “என்ன துயர்? நான் எத்துறப்பும் செய்யவில்லை. மாறாக பேருவகையை ஈட்டிக்கொண்டிருக்கிறேன். அவருடைய அந்த உடலொளியை நோக்கு. மண்ணிலெழுந்த தேவன். அவரை இப்படி நோக்கி அமர்ந்திருப்பதுபோல அமுதிலாடும் பெருநிலை

பிறிதில்லை. இது எனக்கு தெய்வங்கள் ஒருக்கிய விருந்து” என்றாள் பானுமதி.

அவள் முகத்தை நோக்கியபடி அசலை மேலும் சற்றுநேரம் நின்றாள். அவள் முகம் உள்ளூறிய புன்னகையிலென மலர்ந்திருப்பதை, நீர்மை படர்ந்த விழிகள் ஒளிகொண்டிருப்பதை கண்டாள். தாரை அவள் தோளைத் தொட்டபோது விழித்துக்கொண்டு நெடுமூச்சுடன் ஆடையை இழுத்து முகத்தின் மேலிட்டுக்கொண்டு வெளியே நடந்தாள்.

வெண்முரசு வாசிப்பு முறை – ராஜகோபாலன்

# குருதிச்சாரல் - 51

**பகுதி எட்டு : குருதிகொள் கரியோள் – 1**

காசிநாட்டு அரண்மனையின் அகத்தளத்தில் கிழக்குமுற்றம் நோக்கிய உப்பரிகையில் பாண்டவர்களின் இரண்டாம் அரசியாகிய பலந்தரை பொறுமையிழந்து நகத்தால் மரத்தூணில் பூசப்பட்ட வண்ண அரக்குப் பூச்சை சுரண்டியபடி, திரைச்சீலையைப் பற்றிச் சுழற்றியபடி, தனக்குள் ஓரிரு சொற்களை முனகியபடி, அவ்வப்போது கீழே விரிந்துகிடந்த முற்றத்தை எட்டி நோக்கியபடி காத்திருந்தாள். அரைவட்ட முற்றத்தில் நின்றிருந்த ஏழு புரவிகளும் காற்றில் திரை அசைந்த மூன்று பல்லக்குகளும் பொறுமையிழந்தவைபோல, ஏதோ காற்றில் மண்ணிலிருந்து எழுந்துவிடப்போகின்றவைபோலத் தோன்றின.

இருபத்திரண்டு தலைமுறைகளுக்கு முன்னால் காசிநாட்டரசர் நதீனரின் காலத்தில் அமைக்கப்பட்ட அந்தத் தொன்மையான மாளிகையின் சிறிய மரஉப்பரிகை நுண்ணிய சிற்பமலர்ச் செதுக்குகளுடன் யானை மேல் அமைக்கும் அம்பாரியின் வடிவில் இருந்தது. கீழே யானை இல்லாத அம்பாரி அது என்று அகவையிளமையில் அசலை கூறுவதுண்டு. "வெறுமையே யானை என்றாகி இதை தாங்கிச் செல்கிறது" என்பாள். அதன் மூன்று சாளரங்களின் திரைச்சீலைகளையும் மேலெழுப்பிக் கட்டியபின் கையில் ஒரு மலர்க்கோலை ஏந்தி, தலையில் மலர்மாலையை மணிமுடிபோல கட்டிக்கொண்டு "நான் மும்முடி சூடிய அரசி! பட்டத்து யானைமேல் செல்கிறேன்" என்று கூவுவாள். "அதோ, அங்கு என் நூறுநிலை கொண்ட பளிங்கு அரண்மனை!" என்பாள். "எங்கே?" என்று பலந்தரை கேட்கையில் "இந்த யானைபோல் அதுவும் என் கண்ணுக்கு மட்டுமே தெரியும்!" என்பாள்.

சலிப்புடன் பலந்தரை திரும்பி இடைநாழியை பார்த்தாள். அங்கே எவருமில்லை. அது மிகச்சிறிய சந்துபோலத் தோன்றியது. இளமையில் அதை ஒரு தேர்வீதியளவே பெரியதென்று எண்ணியிருந்தாள். அவள் ஓடிவிளையாடியது பெரும்பாலும் அந்த இடைநாழிகளில்தான். காம்பில்யத்தின் அரண்மனைதான் அவள் முதலில் பார்த்த பெருமாளிகை. அதை விழிமுன் வெளியென்று விரித்தது அவள் கைகால்களில் எஞ்சியிருந்த காசிநாட்டு மாளிகைதான். அஸ்தினபுரியின் அரண்மனை மேலும் அதை சிறிதாக்கியது. இந்திரப்பிரஸ்தம் காசிநாட்டையே சிறுதுளியென்றாக்கியது. அவள் கைகளும் கால்களும் விடுதலைக்கு வெம்பிக்கொண்டிருப்பவை என அம்மாளிகைகளை அறிந்தன.

உள்ளத்தை அவளால் ஒடுக்க முடிந்தது. கொண்டாடி மகிழ்ந்த உடல் அந்த மாளிகையை தன்னதென்று கொண்டது.

ஆனால் முன்னிளமையிலேயே அசலை அந்த அரண்மனை மிகச்சிறிதென்று உணர்ந்திருந்தாள். "மாபெரும் அரண்மனைகள். தொலைவிலுள்ளவர்களுக்கு அவை குன்றுமேல் என்று தோன்றும். அக்குன்றே அவைதான்!" என்பாள். இப்பொழுது ஏன் அவள் நினைவு எழுகிறது என்று பலந்தரை தனக்குள் வினவிக்கொண்டாள். ஆனால் இந்திரப்பிரஸ்தத்திலிருந்து காசிக்கு திரும்பிவந்த நாள் முதல் ஒவ்வொரு தருணத்திலும் அவள் பானுமதியையும் அசலையையுமே எண்ணிக்கொண்டிருந்தாள். சூதுக்களம் முடிந்து கானேகுதல் முடிவானபோது அரசியர் தங்கள் இல்லங்களுக்குச் செல்லலாம் என்று யுதிஷ்டிரர் ஆணையிட்டார் என அணுக்கச்சேடி சந்திரை செய்தி கொண்டுவந்தபோதே அவள் காசி நாட்டுக்குத் திரும்புவதாக முடிவெடுத்துவிட்டாள். ஆனால் பிற அரசியர் தங்கள் பிறந்த நாட்டுக்குச் செல்லத் தயங்கினர்.

"நாம் இந்திரப்பிரஸ்தத்திலேயே இருந்துவிடமுடியாதா என்ன?" என்றாள் தேவிகை. அப்போது அவர்கள் அவைக்கூடத்தில் பதற்றத்துடன் செய்திகளை எதிர்கொண்டபடி காத்திருந்தனர். பலந்தரை பொறுமையின்மையுடன் "இந்திரப்பிரஸ்தம் இனி எந்த நிலத்திற்கும் தலைநகரல்ல. அஸ்தினபுரியின் எல்லைக்காவலூர் என்றே இனி இது கருதப்படும். இங்கு எவருக்கும் இனி கொடிமுறைமையும் அணிச்சேடியரும் மங்கலச்சூழ்கையும் இல்லை. அவையின்றி வாழமுடியுமெனில் இங்கிருக்கலாம்" என்றபின் ஏளனமாக இதழ்வளைத்து "அவையேதும் இல்லையேல் இங்கு பலரும் சேடியராகவே தெரிவார்கள்" என்றாள்.

தேவிகை உளம் புண்பட்டவளாக விழிகளை தாழ்த்திக்கொண்டாள். “எனக்கு திரும்பிச் செல்ல தொல்நகரொன்று உள்ளது. அங்கு என் அன்னையும் மூத்தவரும் உள்ளனர். அங்கு எந்நிலையிலும் நான் அரசியே” என்று பலந்தரை தொடர்ந்தாள். “இங்குள அரசர்கள் கான்புகுந்து மறைந்தாலும் என் குலம் என்னை அரசியென்றே அறியும்.” அந்த மங்கலமற்ற சொல்லால் சினம்கொண்ட சுபத்திரை ஏறிட்டு நோக்கி தன்னை அடக்கிக்கொண்டாள். எரிச்சலுடன் விஜயை “பிறந்த வீட்டிற்கு உகந்து செல்லும் பெண் கணவன் இருந்தும் இழந்தவள் என்பார்கள்” என்றாள். பலந்தரை சீற்றத்துடன் அவளை நோக்கி “நான் கணவனை அடையவே இல்லை, போதுமா?” என்றாள்.

எல்லைகடந்து எழுந்த சுபத்திரை “அவ்வண்ணமெனில் நன்று, முடி துறந்த அரசரை தானும் துறக்க அரசியருக்கு உரிமையுண்டு. அங்கு சென்று மங்கலம் ஒழிந்து பிறிதொரு மணத்தன்னேற்புக்கு ஒருங்கு செய்யும்படி உன் மூத்தவரிடம் சொல்க!” என்றாள். “ஆம், அதற்கும் எனக்கு தயக்கமில்லை” என்று பலந்தரை சொன்னாள். “அங்கு சென்றபின் முடிவெடுக்கிறேன். நான் இவர்களை ஏற்றது குடியிலிகளென்றாலும் நகர்கொண்டவர்கள் என்பதற்காகத்தான்.” சுபத்திரை உதடுகள் வளைய “முன்பெனில் அரசர்கள் நிரைவகுப்பார்கள். அழகியராகிய இரு உடன்பிறந்தவர்களின் ஒப்பம் நீங்கள் நின்றிருப்பீர்கள். இன்று அவர்கள் அரசியைத்தேடி சேடியர் பக்கம் விழியோட்டக்கூடும். ஆடவர்களின் உள்ளம் விழிகளால் அமைக்கப்படுவது என்பார்கள்” என்றாள்.

பலந்தரையின் செவிகளில் ரீங்காரம் எழ விழிகள் ஒளிமங்கின. அவள் கைகள் நடுங்கலாயின. பிற எவருக்கும் அத்தனை கூர்மையாக பலந்தரையை உள்புகுந்து தாக்கத் தெரியாது. சுபத்திரை அனைவர் உள்ளங்களின் இலக்குமையத்தையும் அறிந்தவள், இயல்பாக சொல்லை அதை நோக்கி தொடுக்கப் பயின்றவள். அவள் மூச்சிரைப்பதை நோக்கி மேலும் புன்னகைத்து “தாங்கள் விரும்புவதென்றால் இப்போதே கிளம்பலாம், அரசி. பிறர் கிளம்புவதைக் குறித்து இங்கிருந்து சொல்லெடுக்க வேண்டியதில்லை” என்றாள் சுபத்திரை.

அனைத்து திசைகளிலும் சொல்முட்டியமையால் குருட்டுப்பன்றியென சீற்றம்கொண்டு எழுந்தாள். “என்ன சொல்கிறாய்? ஆணையிடுகிறாயா? எனக்கு ஆணையிட நீ யார்? சொல்லெடுத்தால் என்னடி செய்வாய்?” என்று உடைந்த குரலில் கூவியபடி கழுத்து நரம்புகள் புடைக்க, இழுபட்ட வாய்க்குள் வெண்பற்கள் தெரிய, நீர்மை கொண்ட கண்களுடன் இரு கைகளையும் விரல் சுருட்டி இறுக்கிக்கொண்டு சற்று கூன்கொண்டு முன்னால் நகர்ந்து கூவினாள். “ஆம், ஆணையிடுவேன். ஏனென்றால் நான் குடிப்பிறந்தவள். தொழுதுண்டு அறியாத பதினெட்டு தலைமுறை கடந்த பெருமைகொண்டவள். அனேனஸ், பிரதிக்ஷத்ரர், சஞ்சயர், ஜயர், விஜயர், கிருதி, ஹரியஸ்வர், சகதேவர், நதீனர் என நீளும் தந்தைநிரை கொண்டவள். தந்தை பெயரையே சொல்லும் தகைமையற்றவர்கள் மேல் என் சொல் நின்றிருக்கும்!”

அவளை முற்றாக வென்றுவிட்டோம் என்று உணர்ந்த சுபத்திரை இறுகிய தாடையுடன் அவள் கண்களுக்குள் கூர்ந்து நோக்கி “அரசி, நான் ஷத்ரியப் பெண்ணல்ல. எங்கள் யாதவர் குலத்தில் பெண்கள் அகத்தளத்து அடிமைகளும் அல்ல.

காட்டில் கன்றோட்டுபவர்கள், களம் நிற்பவர்கள்" என்றாள். தன் வெண்ணிறப் பெருங்கையை ஓங்கி "என் சொல்லுக்கு மறுசொல்லெடுக்கும் எவரையும் அக்கணமே அறைந்து நிலம் தொடச்செய்வேன். பிறகொருபோதும் அவர்கள் செவிகொண்டு சொல்கேட்கமாட்டார்கள். முனிந்தால் காசிநாட்டரசன் என் கணவரையோ மைந்தனையோ களத்தில் சந்திக்கட்டும். வில்லுடன் நானும் உடனிருப்பேன்" என்றாள்.

உடலெங்கும் பரவிய குளிர் நடுக்குடன் பலந்தரை கால் நிலைக்காமல் தள்ளாடினாள். தேவிகை அவள் தோளை பற்றிக்கொண்டு "பூசல் எதற்கு, அரசி? தாங்கள் செல்க!" என்றாள். "ஆம், செல்க!" என்றாள் சுபத்திரை. தேவிகையின் தோளைப்பற்றி நிலை மீண்டபின் தரையில் ஓங்கித் துப்பி "இழிமகள்! ஷத்ரியப் பெண்ணின் முகம் நோக்கி இச்சொல்லெடுத்தமைக்காக ஒருநாள் உன் நா அரியப்படும்" என்றாள் பலந்தரை. மாறாப் புன்னகையுடன் அவளை முற்றிலும் புறக்கணித்து அப்பால் நின்ற விஜயையிடம் "தாங்கள் மத்ர நாட்டுக்கு செல்வதாக இருந்தால் தேரும் அகம்படியும் ஒருக்கச் சொல்கிறேன், அரசி" என்றாள் சுபத்திரை.

பலந்தரை மேலும் சில கணங்கள் நின்றுவிட்டு ஆடையை இழுத்து தோளில் சுற்றி விரைந்த காலடிகளுடன் நடந்து அருகிருந்த அறைக்குள் புகுந்து மேலும் இரு வாயில்களைக் கடந்து அகத்தளத்தின் இருளுக்குள் தன்னை புதைத்துக்கொண்டாள். அங்கு தனிமையில் நின்றபோது ஓங்கி நெஞ்சில் அறைந்து கதறி அழவேண்டுமென்று தோன்றியது. தான் முற்றிலும் தனிமையில் அல்ல என்றும், எங்கெங்கோ விழிகள் தன்னை நோக்கி நின்றிருக்கின்றன என்றும் உணர்ந்து

மெல்ல தன்னை அடக்கிக்கொண்டாள். மீண்டும் மீண்டும் மூச்சு இழுத்துவிட்டு உடல் தளர்ந்தாள்.

மேலாடையால் முகத்தை அழுத்தித் துடைத்தபின் தன் அறைக்குள் சென்று மஞ்சத்தில் அமர்ந்து இறகுத் தலையணையை எடுத்து மடியில் வைத்து முழங்காலை மடித்து அதில் முகத்தை வைத்து கண்களை மூடிக்கொண்டாள். எங்கோ விழுந்துகொண்டிருக்கும் உணர்வு ஏற்பட்டது. இமைகளுக்குள் குருதிக் குமிழிகள் சுழித்து பறந்தன. அக்கணமே கிளம்பிவிடவேண்டுமென்று தோன்றியது. எழுந்து சென்று தேர்பூட்ட ஆணையிடவேண்டும் என எண்ணியும் உடலை எழுப்ப இயலவில்லை. மீண்டும் மீண்டும் அத்தருணத்தில் அவள் சிறுத்துச் சீறி நின்ற காட்சியிலேயே உள்ளம் சென்றடைந்தது. அவளே அந்நாடகத்தை எங்கிருந்தோ நோக்கிக்கொண்டிருந்தாள். அங்கு நின்ற தன்பொருட்டே நாணினாள். தன்னிரக்கம் கொண்டு கலுழ்ந்தாள்.

அஸ்தினபுரியிலும் இந்திரப்பிரஸ்தத்திலும் அவள் முற்றிலும் தனித்திருந்தாள். அக்குடியில் அவளுக்கென ஏதுமில்லை என்னும் உணர்வு எப்போதும் அவளுக்கிருந்தது. அங்கிருந்த அரசியர் அனைவருமே ஏதோ ஒரு வகையில் திரௌபதியின் வடிவங்கள் என்று அங்கு வந்த சில மாதங்களிலேயே அவள் புரிந்துகொண்டாள். திரௌபதி அவள் அணுகவொண்ணா ஏதோ உயரத்தில் அமர்ந்திருந்தாள். சுபத்திரை திரௌபதியின் மறுவடிவாக இருந்தாள். வெண்ணிழல் என்றே அவளை சேடியர் அழைத்தனர். தேவிகையும் விஜயையும் ஒவ்வொரு இயல்பால் திரௌபதியை நோக்கி முதிர்வுகொண்டு சென்றுகொண்டிருந்தனர்.

அவர்கள் அனைவருமே நன்கு நூல் நவின்றிருந்தனர். அவையமர்ந்து சொல் கோக்கக் கற்றிருந்தனர். நிமிர்ந்த தலையும், நேர்நோக்கும் விழிகளும், எண்ணி எடுத்தமைத்த சொற்களுமாக எங்கும் பிறர் தலைவணங்கும் பான்மை கொண்டிருந்தனர். அவள் அவர்களைவிட நிமிர்வை காட்டினாள், சொல்கூர் தேர்ந்தாள், அவைகளில் தவறாமல் சென்றமர்ந்தாள். ஆனால் அவையனைத்தும் நடிப்பென்று அவளுக்கே தெரிந்தது. அகத்தில் அவள் வெறுக்கும் எளிய பெண் ஒருத்தி திகைத்து தத்தளித்தாள். ஆகவே அவள் என்ன செய்தாலும் ஏதேனும் பிழையிருந்தது. சீர்நடையில் ஆடை தடுக்கியது. அவைகளில் ஒவ்வாச்சொல் எழுந்தது. அத்தனை தன்னிலைக் காப்பையும் மீறி மென்சிறுமைக்கும் அவளுக்குள் இருந்து நாகம் சீறி எழுந்து சிறுமைபெருக்கி தானும் சூடிக்கொண்டது.

பீமனால் கவரப்பட்டு காம்பில்யத்தின் அகத்தளத்தில் அரசியென நுழைந்தபோது அஸ்தினபுரியின் முடிப்பெருமை ஏதுமில்லாத பாண்டவர்களின் துணைவியே தான் என்னும் உணர்வால் பலந்தரை எரிச்சலுற்றிருந்தாள். அசலையும் பானுமதியும் அஸ்தினபுரியின் அரியணையில் முடிசூடி அமர்கையில் நிலமில்லாத பாண்டவர்களின் துணைவியர்களில் ஒருத்தியாக நகரிலிருந்து நகருக்கு தான் அலைந்துகொண்டிருக்க வேண்டியிருக்கும் என்று எண்ணினாள். ஆனால் அவ்வெரிச்சலுக்கு அடியில் தொல்புகழ் கொண்ட காசிநாட்டு இளவரசியாகிய தன்னைவிட நிலமில்லாததனாலேயே அவர்கள் ஒருபடி கீழானவர்கள் என்ற உணர்வையும் அவள் அடைந்தாள். அது அவர்கள் அனைவரையும் தலைநிமிர்ந்து எதிர்கொள்ளவும் தயக்கமின்றி சொல்லெடுக்கவும் வைத்தது.

ஆனால் காம்பில்யத்தில் முதல் நோக்கிலேயே திரௌபதி அவளை எளிய சேடியென உணரச்செய்தாள். உண்மையில் அன்று திரௌபதி உளம் கனிந்து அன்னையென புன்னகைத்து இரு கைகளை விரித்து அவளை எதிர்கொண்டாள். அவளுடன் வந்த அணுக்கியாகிய மாயை தலைவணங்கி "காசி நாட்டு இளவரசி பலந்தரை. நம் இளவரசர் பீமசேனரால் மணம்கவரப்பட்டவர்" என்றாள். திரௌபதி புன்னகைத்து அருகணைந்து அவள் தோள்களை தன் பெரிய கைகளால் வளைத்து "அறிந்திருக்கிறேன். காசிநாட்டின் மூன்று இளவரசியரையும் பற்றி சூதர்கள் நல்மொழி உரைத்துள்ளனர். இக்குலம் உன் வரவால் பொலியட்டும். உன் மைந்தரால் இக்கொடிவழி சிறக்கட்டும்" என்றாள்.

அவள் தோளுக்குக் கீழ் என தன் தலை இருப்பதுதான் பலந்தரையை முதலில் நெஞ்சில் தைத்தது. பெண்ணுக்கு அத்தனை உயரமுண்டு என அவள் முன்பு உணர்ந்ததே இல்லை. நிலைப்பெருந்தோள்கள், வேழத்துதி என நீண்ட கைகள். ஆனால் அவை பெண்மையின் மென்மையும் திரட்சியும் கொண்டிருந்தன. அவள் உடலில் அவ்வணைப்பை உதறும் மெல்லசைவு கூடவே திரௌபதி மேலும் இழுத்து அவளை தன் நெஞ்சுடன் அணைத்துக்கொண்டாள். "வருந்தாதே! வீரரால் கவர்ந்துவரப்படுதல் என்பது அரசியருக்கு எவ்வகையிலும் இழுக்கல்ல. அது அவர்களின் அழகுக்கும் தகுதிக்கும் அளிக்கப்படும் நல்மதிப்பே ஆகும். பாரதவர்ஷத்தின் பேரரசிகள் பலரும் அவர்களின் கணவர்களால் கவரப்பட்டவர்களே" என்றாள்.

அவள் புன்னகை முகம் பலந்தரையின் தலைக்குமேல் விண்ணிலிருக்கும் தெய்வமெனத் தெரிந்தது. "இளைய

பாண்டவரை நான் நன்கு அறிவேன். பெருங்காதல் கொண்ட உள்ளம் அவருடையது. தன் ஆணவத்தை முற்றிலும் அகற்றி, உளக்கணக்குகள் ஏதுமின்றி பெண் முன் நின்றிருக்கும் ஆண்களுக்கு மட்டுமே உரியது பெருங்காதல். ஐவரில் அவர் ஒருவருக்கே அது இயலும்" என்றாள் திரௌபதி. "களித்தோழனாகவும் காவலனாகவும் நல்லாசிரியனாகவும் உகந்த தருணங்களில் தந்தையென்றும் அமைபவன் நற்காதலன். இப்புவியில் இளைய பாண்டவரைப்போல் அத்தகுதி கொண்டோர் மிகச் சிலரே. அவரை அடைந்த பெண் இப்புவியில் விழைந்து பெறாததாக எதுவும் இருக்கப்போவதில்லை."

பலந்தரை திரௌபதியின் கைகளைப்பற்றி விலக்கி "நன்று, ஆனால் காசிநாட்டரசரின் மகளுக்கு மலைமக்களைப்போன்று தோலாடை அணிந்து நாடில்லாது அலையும் ஒருவர் அளிப்பதற்கு ஏதுமில்லை. மலைத்தேனும் புலித்தோலும் கொம்பரக்கும் காசிநாட்டில் சந்தையிலேயே கிடைக்கும்" என்றாள். திரௌபதியின் முகம் மாறியது. ஒரு கணத்திற்குப் பின் மீண்டும் புன்னகையில் விரிந்து "இந்த ஆணவமும் நன்றே. இது அவருக்கு சற்று புதிதாக இருக்கலாம். ஆனால் வெல்லப்பட்ட ஆணவமும் பெண்களில் இனியதாகும்" என்றாள். பலந்தரை உதடுகளுக்குள் வசைச்சொல்லொன்றை உதிர்த்து முகத்தை திருப்பிக்கொண்டாள்.

திரௌபதி மாயையிடம் "இளவரசியை அழைத்துச்சென்று அகத்தளத்தில் தங்க வையுங்கள். அவர் விரும்பும் எதுவும் அவ்வண்ணமே நிகழவேண்டுமென்று நான் ஆணையிட்டிருப்பதாக கூறுக!" என்றாள். தலைவணங்கி அறைவிட்டு வெளியே வருகையில் பலந்தரை மாயையிடம்

“யாரிவள்? பாஞ்சாலத்து பாதிநிலத்தை ஆளும் அரசனின் மகள்தானே? புவியாளும் சக்ரவர்த்தினியைப்போல சொல்லெடுக்கிறாள்?” என்றாள். பற்களைக் கடித்து சிரிப்பென உதட்டை இழுத்து “தேவயானியும் தமயந்தியும்கூட இத்தனை ஆணவம் கொண்டிருக்கமாட்டார்கள்” என்றாள்.

மாயை திரௌபதியைப் போலவே மென்மையாக புன்னகைத்து “அரசி, பேரரசியர் அவ்வடிவிலேயே மண்ணுக்கு வருகிறார்கள். நிலம் கொண்டதனால் அவர்கள் நிமிர்வடைவதில்லை. நிமிர்வடைவதனால் அவர்களை நிலம் தேடி வருகிறது” என்றாள். “ஆம், அவ்வாறு சூதர் சொல்வதை நானும் கேட்டிருக்கிறேன். இதைவிட நிமிர்வையும் சொல்கூர்மையையும் கூத்தில் பேரரசியாக நடிக்கும் விறலியரிடம் கண்டிருக்கிறேன். அவர்களை நாடி சுண்டி வீசப்படும் வெள்ளிக்காசுகளே வந்து விழுகின்றன” என்று பலந்தரை சொன்னாள். மாயை நிமிர்ந்து அவள் முகத்தை நோக்கியபின் சொல்லவந்ததை அடக்கி புன்னகையை மேலும் விரித்து “வருக, அரசி!” என்று அழைத்துச் சென்றாள்.

அவள் மேலும் சொல்ல விரும்பினாள். செல்லும் வழியில் நின்றிருந்த ஒவ்வொரு தூணிலும் ஓங்கி அறைந்து உடைக்க கைகள் எழுந்தன. கூச்சலிட்டு வசைபாடினால் நெஞ்சின் அழுத்தம் குறையுமென்று உணர்ந்தாள். நெடுநேரம் கழித்தே தன் விரல்கள் இறுகி கை மூடியிருப்பதையும், பற்கள் கிட்டித்து முகம் கடுங்கசப்பை உண்டதுபோல் சுருங்கியிருப்பதையும் உணர்ந்தாள். தன்னை தளர்த்திக்கொண்டு “நான் ஷத்ரியத் தொல்குலத்தில் பிறந்தவள். பாஞ்சாலத்தரசி ஷத்ரியப்பெண் என்பதனால் அவர்முன் தலைவணங்குவதிலோ முறைமைச்சொல் உரைப்பதிலோ எனக்கு தயக்கமில்லை.

ஆனால் மற்ற சிறுகுடி அரசியர் என்னிடம் அவர்கள் மூத்தவர்கள் என்பதனால் எதையும் எதிர்பார்க்கக் கூடாது. அவர்களிடம் அவர்களின் தகுதிக்கேற்ப அவை முறைமையை நான் எதிர்பார்க்கவும் செய்வேன். இதை அவர்களிடமே உரை" என்றாள். மாயை "ஆணை, அரசி!" என்று தலைவணங்கி விலகிச் சென்றாள்.

அவள் சொல்லிலும் சிரிப்பிலும் எழுந்ததும் திரௌபதியே என அவள் சென்றபின்னர் உணர்ந்து பலந்தரை மேலும் சினம் பெருக்கிக்கொண்டாள். பின்தொடர்ந்து சென்று அவள் தலையை அறைந்து வீழ்த்தவேண்டும் என வெறிகொண்டு பின் தன்னை அடக்கினாள். தனிமையில் வெறியமைந்து ஓயும்போது அவளிலிருந்து ஆற்றல் முழுமையாக வழிந்தோடி ஈரக் களிமண் பாவையென்றாகும் உடல். உள்ளம் சொல்லற்று சோர்ந்து கிடக்கும். சினமே தன் ஆற்றல், வெறுப்பே தன் விசை. அதற்கப்பால் நான் யார்? இவ்வுணர்வுகள் என் இயலாமையிலிருந்து எழுவனவா? அன்றி அதை மறைக்க நான் ஏந்திக்கொள்வனவா?

உடனிருக்கையில் எல்லாம் எது திரௌபதியை அந்நிமிர்வு கொள்ளச் செய்கிறதென்று அவள் நோக்கிக்கொண்டிருந்தாள். அசலையும் பானுமதியும்கூட அணுக முடியாத பேருருவுடன் திரௌபதி இருப்பதை சில நாட்களிலேயே கண்டுகொண்டாள். அவள் பெண்டிரில் எங்கும் காணாத கல்வி கொண்டிருந்தாள். மூத்த பேரரசர்கள் மட்டுமே கொள்ளும் அவையுணர்வு அவளில் அமைந்திருந்தது. எங்கும் எவரையும் நோக்கிலேயே மதிப்பிட்டு ஒரு பிழைகூட இல்லாமல் எதிர்ச்சொல்லாடினாள். மிகைமதிப்போ குறைமதிப்போ நிகழாமல் பழகி மீண்டாள். அந்த நிகர்நிலை அவள் உடலில்

அசைவனைத்திலும் வெளிப்பட்டது. நீண்ட கொடிமேல் நடந்து செல்லும் வேங்கையின் உடலசைவு கொண்டிருந்தாள்.

பின்புதான் அவள் சுபத்திரையில் திரௌபதியை கண்டடைந்தாள். விஜயையில், தேவிகையில், மாயையில். அவளை அணுகும் அத்தனை பெண்டிரிலும். அவளைப்போலவே திரௌபதியைக்கண்டு கசந்தவர்களே பிந்துமதியும் கரேணுமதியும் என்று கண்டாள். அதனாலேயே அவர்களை அணுகி உடனிருக்க விழைந்தாள். ஆனால் அவர்கள் ஒருவரையொருவர் நிரப்பி தங்கள் தனியுலகை அமைத்துக்கொண்டிருந்தனர். சேதிநாட்டுப் பெருமையை, கலிங்கக் குடிமரபை தங்களுக்குள் சொல்லிச் சொல்லி பெருக்கிக்கொண்டனர். அந்த மாயஉலகில் தங்கள் வாழ்வை அமைத்துக்கொண்டனர்.

அவர்களுடனான ஒவ்வொரு உரையாடலும் சேதிநாட்டுப் பெருமையிலோ கலிங்கக் குடிச்சிறப்பிலோ சென்றடைந்தது. அதற்கு நிகரான காசிநகர் பெருமையை அவள் சொல்லத் தொடங்குகையிலேயே எரிச்சலுற்று அவர்கள் அனைத்து வாயில்களையும் மூடிக்கொண்டனர். அவர்களின் புறக்கணிப்பை வெல்ல அவள் அவர்களையும் சீண்டினாள். அவர்கள் அவளை சிறுமைசெய்தனர். பிறர் ஒருபோதும் அவளுடன் நேர்ப்பூசலுக்கு ஒருங்கவில்லை, ஆகவே அவர்களுடன் நாளுமென பூசலிட்டாள். இருமுறை மாறிமாறி பொருட்களால் அடித்துக்கொண்டனர். அச்சிறுமை சேடியர் விழிகளில் சிரிப்பென வெளிப்படத் தொடங்கியதைக் கண்டபின் அவர்களை முற்றிலும் தவிர்க்கலானாள்.

அகத்தளங்களில் ஒருபோதும் நிலையமையாத வெருகுப்பூனையென சுற்றிவருவதும் சீறுவதும் அவ்வப்போது

உளம் சோர்ந்து தனியறைக்குள் சுருண்டு நாள்முழுக்க அரையிருளில் படுத்திருப்பதும் அவள் வாழ்க்கை என்றாயிற்று. இந்திரப்பிரஸ்தத்தின் பேருருவம் அவளை மேலும் சிறுமையே கொள்ளச்செய்தது. அந்நகர் உருவாகுவதுவரை ஒவ்வொரு சொல்லிலும் நிலமற்றோர், நகரற்றோர் என்று அவள் பாண்டவர்களை இழித்துரைத்தாள். நிலம் அமைந்து நகர் எழத்தொடங்கியதும் ஏமாற்றமும் எரிச்சலும் அடைந்தாள். அதைக் குறித்த ஒவ்வொரு சொல்லையும் ஏளனத்துடன் புறக்கணித்தாள்.

முதல்முறையாக பிற அரசியர்சூழ படகில் யமுனைத் துறையில் வந்திறங்கி இந்திரப்பிரஸ்தத்தின் கோட்டைமுகப்பு வாயிலை விழிதூக்கி நோக்கியபோது அவள் கைகளும் கால்களும் நடுங்கத்தொடங்கின. உதடுகளை அழுத்தியபடி அசையாமல் நின்ற அவள் தோளைத் தொட்டு "வருக, அரசி!" என்று தேவிகை சொன்னாள். அவள் கையை தட்டிவிட்ட பின் அவள் முன்னால் சென்றாள். விஜயை தேவிகையிடம் ஏதோ மெல்லிய குரலில் சொல்ல தேவிகை அதற்கு சிரிப்பு கலந்த மெல்லொலியில் மறுமொழி சொன்னாள். அவளுடைய சினமே அவளை கேலிப்பொருளாக்கியிருப்பதை அவள் அறிந்திருந்தாள். எரியும் நெஞ்சுடன் அண்ணாந்து நோக்கினாள்.

கோட்டைவாயிலின் பேருருவம் மலைக்கணவாய் என அணுகுந்தோறும் பெரிதாகி வந்து சூழ்ந்துகொண்டது. சிறிய கணையாழித்துளை என்றாக்கும் உள்கோட்டை பெருவாயில். தேரின் இருபுறமும் எழுந்த வெண்முகில்குவை மாளிகை நிரைகள். உச்சியில் எழுந்து ஓங்கி நின்ற இந்திரனின் பெருஞ்சிலை வான் துழாவியது. உதிர்ந்து மணல்வெளியில் ஒரு பரு என மறைந்த சிலம்புமணி என அவள் தன்னை

உணர்ந்தாள். அங்கிருந்த ஒவ்வொன்றும் அவளை நோக்கி சிறுமைச்சொல் ஒன்றை உதிர்த்தன. எழுந்து அலையடித்த களிகொண்ட முகங்கள் பேயுருக்கள் என அச்சுறுத்தின.

இந்திரப்பிரஸ்தத்தின் கால்கோள் விழவின் எந்தச் சடங்குகளிலும் அவள் பங்குகொள்ளவில்லை. தலைநோவென்றும் இடையுளைச்சல் என்றும் மீண்டும் மீண்டும் தனியறைக்குள் சென்று படுத்துக்கொண்டாள். குந்தியும் திரௌபதியும் மாறி மாறி ஆணையிட சேடியரும் செவிலியரும் பின்னர் தேவிகையும் விஜயையும் வந்து அவளை எழுப்பி அழைத்துச் சென்றனர். முகத்தில் கசப்பை முடிந்தவரை வெளிப்படுத்தியபடி அவள் அணிநிகழ்வுகளில் நின்றாள். குந்தி "என்ன செய்கிறது?" என்று கேட்டபோது உதடைச் சுழித்தபடி திரும்பிக்கொண்டாள்.

அரசியர் வந்து அழைத்தபோதும் அவள் தவிர்க்கத் தொடங்கியபோது சுபத்திரை அவள் அறைக்குள் நுழைந்தாள். இடையில் கை வைத்து தலைக்குமேல் என நின்று தன் பெரிய வெண்ணிற கையைச்சுட்டி "முறைமைச் சடங்குகளில் தாங்கள் பங்கெடுத்தே ஆகவேண்டும், அரசி. உடல் நலக்குறைவால் ஓய்வெடுக்கும் உரிமை தங்களுக்கில்லை. இனியொரு சொல் என்னிடமிருந்து எழவைப்பது தங்களுக்கு உகந்ததல்ல. நான் அழைத்துச்செல்பவள் அல்ல, குழல்பற்றி இழுத்துச்செல்லவும் தயங்கமாட்டேன்" என்றாள். முகம் சிவக்க பற்களை இறுக்கியபடி, சொல்லற்று அவள் சுபத்திரையை நோக்கிக்கொண்டிருந்தாள். ஆனால் அதன்பின் அனைத்துச் சடங்குகளிலும் அரசணிக்கோலத்தில் தாலமோ மாலையோ சுடரோ ஏந்தி நின்றாள்.

இந்திரப்பிரஸ்தத்தின் ஒவ்வொரு இடமும் அவளை அயலென்று ஆக்கி வெளித்தள்ளின. அந்தப் பளிங்குப் பெருமாளிகை தனிமையை பெருக்கும் வெண்பாலை எனத் தோன்றியது. அங்குளோர் சொல்லும் ஒவ்வொரு சொல்லும் அவளை கசப்பு கொள்ளச் செய்தது. எங்கும் சோர்ந்த முகத்துடன் நின்றிருப்பதைக் கண்டு “உடல் நலமில்லையா?” என்று பீமன் அவளிடம் கேட்டபோது “ஆம், என் கால்கள் சோர்கின்றன. இத்தனை பெரிய மாளிகையில் இடைநாழியில் நடப்பது அயலூர் செல்வதற்கு நிகராக அலுப்பூட்டுகிறது” என்றாள். பீமன் நகைத்து “ஆம், எண்ணியதைவிட பெரிதாகிவிட்டது மாளிகை. நானே இருமுறை வழி தவறி இதற்குள் சுற்றிவந்தேன்” என்றான்.

முகத்தைத் திருப்பியபடி “புதையல் எடுத்த கள்வர்கள் பெருவீடுதான் கட்டுவார்கள் என்று எங்களூரில் சொல்வார்கள்” என்று பலந்தரை சொன்னாள். “என்ன சொல்கிறாய்?” என்று பீமன் சினத்தால் தாழ்ந்த குரலில் கேட்டான். “எதற்கு இப்பெருநகர்? இத்தனை பெரிய மாளிகை? பாரதவர்ஷத்தின் அரசர்கள் அனைவரையும் அழைத்து நோக்குக நோக்குக என்று காட்டும் இச்சடங்குகள் எதன்பொருட்டு?” என்று அவள் அவனை கூர்ந்துநோக்கியபடி சொன்னாள். “குலமில்லாதவர் அதை அடைய எத்தனை வீங்கவேண்டியிருக்கிறது! எவ்வளவு ஓசை தேவைப்படுகின்றது!”

பீமன் உடலும் முகமும் எரிகொள்ள “போதும்!” என்றான். “வேறெதற்கு இப்பெருமாளிகை? தொல்குடி மூதாதையர் நிரை ஒன்றிருந்திருந்தால் சிறுமரமாளிகையே போதும், பாரதவர்ஷத்தின் பெருமைமிகுந்த அரண்மனையாகியிருக்கும்” என்றாள். “போதும்!” என்று மீண்டும் பீமன் சொன்னான்.

“கௌரவர் அங்கு மாமன்னர் ஹஸ்தி அமைத்த மாளிகையில் குடியிருக்கிறார்கள். அது முத்துபோல சிறியது, முந்தையோர் கைபட்டுத் தேய்ந்த ஒளி கொண்டது. காசியின் அரண்மனை அதைவிடத் தொன்மையானது” என்று பலந்தரை தொடர்ந்தாள். “இது யாதவர்கள் கொண்ட தாழ்வுணர்ச்சியின் கல்வெளிப்பாடு. கட்டுவதனால் எவரும் அரசராவதில்லை. வேண்டுமென்றால் மானுடச் சிதல்கள் என்று சொல்வார்கள்.”

பீமன் தன் மேலாடையை எடுத்தபடி வெளியே கிளம்பினான். அவள் எழுந்து பின்னால் சென்று “சிதல் எடுக்கும் புற்றுகளில் எல்லாம் இறுதியில் நாகங்களே குடிகொள்கின்றன” என்றாள். அவன் திரும்பி “உன்னிடம் சொல்லாட என்னால் இயலாது. ஒரே அடியில் உன் கழுத்தை முறித்து இங்கு போடுவதொன்றே நான் செய்யக்கூடுவது. அது என்னால் இயலாதென்பதே உனது ஆற்றல். நன்று” என்றபின் வெளியேறினான்.

கால் தளர்ந்து உப்பரிகையின் விளிம்பிலேயே பலந்தரை அமர்ந்தாள். கைகளால் சுரண்டி தூணின் அரக்குப்பூச்சைப் பெயர்த்து அந்த இடத்தை புண்வடுவென்று ஆக்கிவிட்டிருப்பதை கண்டாள். பொருளின்றி அதை வெறித்துக்கொண்டிருந்தாள்.

[வெண்முரசு வாசிப்பு முறை – ராஜகோபாலன்]

# குருதிச்சாரல் - 52

### பகுதி எட்டு : குருதிகொள் கரியோள் – 2

பலந்தரை காசிநாட்டுக்கு திரும்பி வந்தபோது அவள் அன்னை துறைமுகப்பிலேயே அவளுக்காகக் காத்து நின்றிருந்தாள். படகிலிருந்து அவள் இறங்கியதும் ஓடிவந்து தோள்தழுவி நெஞ்சோடணைந்து “மீண்டு வந்தாயா? நன்று, அங்கேயே இருந்துவிடுவாயோ என்று அஞ்சினேன்” என்றாள். “அங்கு எனக்கென ஏதுள்ளது?” என்றாள் பலந்தரை. “அங்கு பிற அரசியர் இருக்கக்கூடுமென எனக்கு சொல்லப்பட்டது” என்றாள் அன்னை. “பிறந்த நாட்டிற்குச் செல்ல சேதிநாட்டு அரசியர்களுக்கு வாய்ப்பில்லையல்லவா? அவர்களின் தமையன் இளைய யாதவரால் கொல்லப்பட்டபின் அந்நகர் அவர்களை எதிர்கொள்ளாது என்று எண்ணினேன்” என்றாள்.

அன்னையின் பேச்சு தன்பேச்சுபோலவே இருப்பதாக பலந்தரை உணர்ந்தாள். அவள் கைவிரித்து அணுகியதுகூட அவளைப்போலவே தோன்றியது. “முதலில் கிளம்பிச் சென்றவர்கள் அவர்களே. சேதிநாடு அவர்களை தங்கள் அரசியர் என்றே எதிர்கொண்டது” என்று அவள் சொன்னாள். “செல்லத் தயங்குபவர்கள் சிறுகுடி ஷத்ரிய அரசியரான தேவிகையும் விஜயையும்தான். அங்கு இந்திரப்பிரஸ்தத்தில் ஒவ்வொருவருக்கும் நூறு சேடியரும் வெள்ளிப் பல்லக்கும் ஏழு நிரை அகம்படியரும் உண்டு. அவர்களின் மலைநாட்டிலும் பாலையிலும் ஆடு மேய்க்கவோ ஒட்டகம் புரக்கவோ அனுப்பிவிடுவார்களென அஞ்சினார்கள் போலும்” என்றாள்.

அன்னையின் முகம் மலர்வதைக் கண்டபோது அவளுக்குள் கசப்பு எழுந்தது. காசிநாட்டரசர் விருஷதர்பரின் முதலரசி அனுபநாட்டு அரசன் கர்மஜித்தின் தமக்கையான மகாபத்மை. அவளுக்குப் பிறந்தவள் பானுமதி. மகாபத்மையின் இறப்புக்குப்

பின்னர் குண்டலநாட்டில் இருந்து அவள் அன்னை காந்திமதியை தந்தை மணம்புரிந்துகொண்டபோது காசியின் மக்கள் மகிழ்ந்தனர். ஆனால் மிக விரைவிலேயே அனைவரின் வெறுப்புக்குமுரியவளாக அன்னை ஆனாள். அன்னையில் அவர்கள் வெறுப்பது எது என அப்போது அவளால் உணரமுடியும் என தோன்றியது. அஞ்சி அவள் எண்ணத்தை விலக்கிக்கொண்டாள்.

அன்னை “சென்றபடியே திரும்பிவந்திருக்கிறாயடி... வா, நீ விட்டுச்சென்ற அனைத்தும் அவ்வண்ணமே எஞ்சுகின்றன” என்று அழைத்துச் சென்றாள். தேரில் காசியின் தெருக்களின் வழியாக செல்கையில் அவள் ஒவ்வொன்றும் அங்கே இருக்கிறதா என்று நோக்குபவள்போல சாளரம் வழியாக விழிநிலைக்க அமர்ந்திருந்தாள். “நீ வருவதை நகர் கொண்டாடவேண்டும் என அறிவுறுத்தியிருக்கிறேன். இன்று மாலை ஆலயங்களில் விறலியர் ஆடலும் சூதர் பாடலும் நிகழும்” என்றாள் அன்னை. “அங்கே அவர்கள் கானேகுகிறார்கள், நாம் அதைத்தான் கொண்டாடுகிறோம் என்று தெரியப்போகிறது” என்றாள் பலந்தரை.

“அவ்வண்ணமே தோன்றட்டும். அவர்கள் நமக்கென்ன பொருட்டு?” என்ற அன்னை அவள் கைகளைத் தொட்டு மெல்லிய வஞ்சச் சிரிப்புடன் “இக்கொண்டாட்டம் என் பிற இரு மகள்களும் முற்றரசு பெற்று முடிசூடி அமர்ந்ததற்கு என்று கொள்வோம்... பிறகென்ன?” என்றாள். அவள் அன்னையின் கையிலிருந்து மெல்ல விடுவித்துக்கொண்டு “அவர்கள் அதில் மகிழமாட்டார்கள்” என்றாள். “அதெல்லாம் வெறும் பேச்சு. புகழும் முடியும் செல்வமும் நிலமும் எவரையும் மகிழவே வைக்கும். அதை காட்டுபவர்கள் மறைப்பவர்கள் என இரு

வகையினரே மானுடர்” என்றாள். அவள் விழிகளைத் திருப்பி அணுகிவரும் உள்கோட்டை முகப்பை நோக்கினாள். எத்தனை சிறிய நகர் காசி என்னும் எண்ணம் எழுந்தது.

அரண்மனையை அடைந்து ஆடைமாற்றி இளைப்பாறியதுமே அவள் தந்தையை காணச்சென்றாள். தனியறையில் அமைச்சர்களுடன் அமர்ந்திருந்த விருஷதர்பர் அவளை நோக்கி “நீ இங்கு வருவது பாண்டவர்களின் ஆணைப்படிதான் அல்லவா?” என்றார். அவள் “நான் எவர் ஆணைக்கும் கட்டுப்பட்டவள் அல்ல” என்றாள். தந்தை களைத்த கண்களும் சோர்ந்த உடலுமாக பீடத்தில் அமர்ந்திருந்தார். அவர் கையசைத்து ஏதோ சொல்ல முயல்வதற்குள் அருகே நின்றிருந்த அமைச்சர் முகுளர் அடக்கப்பட்ட சினம் தெரியும் சொற்களால் “தாங்கள் தங்கள் கணவரின் ஆணைக்கு முற்றிலும் கட்டுப்பட்டவரே, பாண்டவ அரசி. ஷத்ரியகுலத்து அரசியரின் நெறி அதுவே” என்றார்.

பலந்தரை “அது ஷத்ரியர்களால் மணம்கொள்ளப்பட்டவர்களுக்கு. இங்கிருந்து கவர்ந்து செல்லப்பட்டபோதே நான் யாதவப் பெண்ணாகிவிட்டேன். யாதவப் பெண்களை கற்போ குலநெறியோ கட்டுப்படுத்துவதில்லை” என்றபின் உதடைச் சுழித்து “வேண்டுமென்றால் இங்கு கன்றுத் தொழுவில் இருக்கும் பசுக்களை நாளை முதல் காட்டுக்கு கொண்டுசெல்லலாம் என்று எண்ணுகின்றேன்” என்றாள். முகுளர் “பேரரசி, அஸ்தினபுரியின் செய்தி இன்னமும் நமக்கு முறைப்படி வந்துசேரவில்லை. நாம் எவர் தரப்பை எடுப்பது என உத்கலத்திற்குச் சென்றுள்ள இளவரசர் வந்த பின்னரே

முடிவெடுக்கமுடியும்... அதைக் குறித்தே சொல்சூழ்ந்துகொண்டிருக்கிறோம்” என்றார்.

“என்ன முடிவு எடுக்கப்போகிறீர்கள் என எவர் அறியமாட்டார்? அஸ்தினபுரியின் கை ஓங்கியுள்ளது. சிம்மம் வேட்டையாடுவதற்குப் பின்னால்தான் நரிகள் செல்லவேண்டும்” என்றாள் பலந்தரை. “அங்கு இங்குள்ள இரு அரசியர் உள்ளனர். கொக்கியை வீசி எறிந்துவிட்டீர்கள். பற்று உறுதியா என நோக்கிவிட்டு தொற்றி ஏறவேண்டியதுதானே?” முகுளர் சிவந்த முகத்துடன் சொல்லெடுக்க முயல அவரை கைவீசித் தடுத்து விருஷதர்பர் சலிப்புடன் “செல்க, உங்களிடம் சொல்லாடும் நிலையில் இல்லை நாங்கள்” என்றபின் அமைச்சரிடம் “சுபாகுவுக்கு செய்தி சென்றுவிட்டதா என்று மட்டும் நோக்கி சொல்க!” என்றார். பலந்தரை ஏளனத்துடன் புன்னகைத்துவிட்டு அன்னையின் தோளைத் தொட்டு “வருக, அன்னையே!” என்று திரும்பி நடந்தாள்.

மீண்டு வந்த சில நாட்களிலேயே இந்திரப்பிரஸ்தத்தையும் பாண்டவர்களையும் முற்றாக மறக்க அவளால் இயன்றது. மைந்தனைக்கூட எப்போதேனும்தான் நினைவிலிருந்து எடுத்தாள். விட்டுச்சென்ற காலத்திலேயே வந்து மீண்டும் பொருந்திக்கொள்ள முடியும் என்பது அவளுக்கு எண்ணிப்பார்க்க முடியாததாக இருந்தது. அன்னை அவளை முன்பு இருந்த பலந்தரை என்றாக்க அனைத்தையும் செய்தாள். ஒவ்வொரு நாளும் முன்புபோல் அகல்விழி அன்னை உடனுறை உலகாள்வோன் ஆலயத்திற்கும் காலபைரவன் ஆலயத்திற்கும் அழைத்துச்சென்றாள். முதற்புனல் விழா அணுகியபோது அவள் முற்றிலும் காசிநாட்டவளாக மாறிவிட்டிருந்தாள்.

அஸ்தினபுரி இந்திரப்பிரஸ்தத்தை முற்றாக எடுத்துக்கொண்டதை அவள் அறிந்தாள். அதன்பின் இந்திரப்பிரஸ்தத்தில் நிகழ்ந்த முதல் இந்திரவிழவில் பானுமதியும் அசலையும் அரசணிக்கோலத்தில் அவையமர்ந்திருந்ததை ஒற்றர்கள் சொல்லி அறிந்தபோது மட்டும் அவள் உள்ளம் எரிந்தணைந்தது. “அவள் அமர்ந்து மகிழட்டும். ஆனால் பாஞ்சாலத்து அரசி வேங்கை. அது திரும்பி வருகையில் தன் அளவென்ன என்று இவள் அறிவாள்” என்றாள். அன்னை திகைத்து “என்னடி சொல்கிறாய்?” என்றாள். “நான் சொல்வதற்கொன்றும் இல்லை” என்றபின் அவள் சினத்துடன் எழுந்துசென்றாள்.

கீழே அவளுடைய அணுக்கச்சேடி விகிர்தை உள்ளே நுழைந்தாள். அவளைத் தொடர்ந்து தனிப்புரவியில் வந்த ஒற்றன் புரவியை நிறுத்தி கடிவாளத்தை அளித்துவிட்டு முற்றத்தில் நின்றான். விகிர்தை ஒற்றனிடம் தன்னைத் தொடரும்படி சொல்லிவிட்டு படிகளில் ஏறி உள்ளே வந்தாள். பலந்தரை இடைநாழிக்குச் சென்று தன்அறைக்குள் நுழைந்து மஞ்சத்திலிட்டிருந்த மேலாடையை எடுத்து அணிந்தாள். ஆடியில் நோக்கி தோளில் புரண்ட குழலை சீரமைத்தாள். ஒவ்வொரு முறை ஆடி நோக்குகையிலும் எழும் உளச்சுளிப்பை அடைந்தாள். அவளுடையது அசலையின் அதே முகம். ஆனால் அசலையிடமிருந்த அழகு முழுமையாகவே விடுபட்டிருந்தது. மூக்கும் விழிகளும் வாயும் அனைத்தும் அவையே. அவற்றை முகமென்றாக்கும் ஒன்று அமையவில்லை.

சிறு கூடத்திற்குச் சென்று பீடத்தில் அமர்ந்து மேலாடையை அரசியருக்குரிய முறையில் கைகளுக்கு குறுக்காக பொன்னூல் பின்னல் தெரியும்படி போட்டுக்கொண்டாள். விகிர்தை உள்ளே வந்து தலைவணங்கி “வணங்குகிறேன் அரசி, ஒற்றர் சுகேசர் வந்துள்ளார்” என்றாள். “வரச்சொல்” என்று அவள் கையசைத்தாள். சேடி வெளியே சென்று ஒற்றனை உள்ளே அழைத்துவந்தாள். மெல்லிய குற்றடிகள்கொண்டு உள்ளே வந்த சுகேசன் ஒடுங்கிய சிற்றுடலும் கன்ன எலும்புகள் உந்திய முகமும் கொண்டிருந்தான். அவன் தலைவணங்கி முகமன் உரைக்க அவள் மெல்ல தலையசைத்து அமரும்படி கைகாட்டினாள்.

சுகேசன் அருகிலிருந்த பீடத்தில் அமர்ந்து அவள் சொல்லெடுக்கும் வரை காத்தான். அவள் முதல் சொற்றொடரை எங்கு தொடங்குவது என்று தொட்டு தொட்டுச் சென்று சுழன்று கொண்டிருந்தாள். மிகையான ஆர்வம் எழலாகாது என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டாள். அவர்கள் எதிர்பார்க்கும் உணர்வுகளை வெளிக்காட்டியாகவேண்டும். வழக்கமான சொற்றொடர்களே ஏற்றவை. ஆனால் அவைகூட ஆர்வமின்மையாக தெரியக்கூடும். இயல்பாக நிமிர்ந்தபோது அவன் கண்களை சந்தித்தாள். “சுகேசரே, என்ன நடக்கிறது அஸ்தினபுரியில்?” என்றாள். அவ்வெற்றுக்கேள்வியால் அவளே திகைப்புற்று “போர் அறிவிக்கப்பட்டுவிட்டது என்று கேட்டேன்” என்றாள்.

அது அவளுடைய ஆர்வத்தை காட்டிவிட்டது. ஆனால் சுகேசனின் விழிகளில் ஏதும் தெரியவில்லை. “ஆம் அரசி, போர் நிகழவிருக்கிறது” என்றான். அவள் புருவத்தைச் சுருக்கி “இளைய யாதவர் போரை தடுக்கமுயல்வதாக செய்திகள்

வந்தன” என்றாள். “ஆம், அதன் பொருட்டே அவர் இரண்டாம்முறை அரசர்கள் கூடிய அவைக்கு தூது சென்றார்” என்றான் சுகேசன். “அரசப்பேரவையில் பாண்டவர்க்கென அவர் கோரியது ஐந்து சிற்றூர்கள் மட்டுமே. அவை எல்லைப்புற காட்டுக்குடிகளாக இருப்பினும் ஏற்பதாக சொன்னார். அஸ்தினபுரியின் அரசர் அதை முற்றிலும் மறுத்து ஆணையிட்டார். நீட்டிய கையை மடித்து துயருற்று தனித்து இளைய யாதவர் திரும்பிச் சென்றார்.”

பலந்தரையால் அது தனக்கு நன்மை பயப்பதா தீதிழைப்பதா என முடிவுசெய்ய இயலவில்லை. ஆனால் அவள் முகம் மலர்ந்துவிட்டது. அது ஏன் என்று உள்ளூர வியந்தாள். மறுகணமே அதை பானுமதியும் அசலையும் எப்படி எதிர்கொண்டிருப்பார்கள் என எண்ணம் ஓடியது. அவர்கள் மகிழ்ந்திருப்பார்களா? “அவையில் இளைய யாதவர் என்ன கேட்டார்?” என்றாள். சுகேசன் அவைநிகழ்வுகளை சொல்லச் சொல்ல அவள் உணர்வுகள் இருமுனைகளிலுமாக ஊசலாடின. குந்தியை துரியோதனன் அவையில் சிறுமை செய்ததைக் கேட்டபோது எழுந்த படபடப்பு உவகையா ஒவ்வாமையா என அவளுக்கே புரியவில்லை. இளைய யாதவர் துயருற்று கை சுருக்கி அவைநீங்கியதை கேட்டபோது அவள் அசலையின் முகத்தை அகக்கண்ணில் கண்டாள். அது அவளை மலரச்செய்தது. “அவர் வெல்லற்கரியவர் என்கிறார்களே, இந்த அவைச்சிறுமை அவருடைய அப்பெருமைக்கு இழுக்கு சேர்க்குமே?” என்றாள்.

அதை சொல்லியிருக்கலாகாது என உடனே உணர்ந்தாள். ஆனால் சுகேசன் முகத்தில் எவ்வுணர்ச்சியும் வெளிப்படவில்லை. “அவ்வாறு அவைநீங்கியது அவருக்கு

மேலும் பெருமையையே கூட்டியது, அரசி. ஏனென்றால் அவர் தனக்காக வரவில்லை. தன் சேவடி நோக தோழரின் பொருட்டு நடந்த பெரியோன் என்று நான் வரும்வழியில் ஒரு சூதன் பாடியதை கேட்டேன். ஊர்மன்றில் அவனைச் சூழ்ந்து நின்றிருந்தவர்கள் கண்களில் நீர்வழிய அதை கேட்டுக்கொண்டிருந்தனர். வென்று சொல்லெழுவது மட்டுமல்ல கீழ்மைமுன் திரும்புவதும் பெரியோருக்குச் சிறப்பே என்று அச்சூதன் சொன்னான்" என்றான்.

அவள் சலிப்புடன் கைவீசி "அது அவர்கள் உருவாக்கிய பாவை, அதை எந்நிலையிலும் பேணவே விழைவார்கள்" என்றாள். "இனி அவர் என்ன செய்யக்கூடும்?" சுகேசன் "அவர் அவைவந்து சொல்வைப்பதற்கு ஏதுமில்லை என்றார்கள்" என்றான். அவள் பெருமூச்சுடன் இரு கைகளையும் பீடத்தின் கைப்பிடிகளில் மெல்ல தட்டியபடி நிமிர்ந்து அமர்ந்தாள். "அஸ்தினபுரியின் மக்கள் எவ்வாறு உணர்கிறார்கள்?" என்றாள். "அங்கே நிகழ்வனவற்றை முன்பு அந்நகரைக் கண்ட எவரும் நம்பவியலாது. போருக்கு முந்தைய நகர்ச்சூழலை முன்பு கண்டவர்கள் பிறிதொன்றை எண்ணவும் இயலாது" என்றான் சுகேசன்.

"அஸ்தினபுரி போர்வெறி கொண்டிருக்கிறது. குருதி ஒன்றைத்தவிர அங்கே மக்கள் எதையும் விழையவில்லை. விடாய்கொண்ட இருள்தெய்வங்கள் அந்நகரில் குடிகொண்டிருக்கின்றன" என்று அவன் தொடர்ந்தான். "அங்கே ஏதோ நோய் பரவியிருக்கின்றது என்கிறார்கள் சூதர். நகரெங்கும் வானிலிருந்து நஞ்சு பொழிகிறது, சுவர்களில் நீலமூலி என படர்கிறது, காகங்களும் நாகங்களும் நகரை நிறைத்துள்ளன, நடுப்பகலில் நரி ஊளையிடுகிறது

என்றெல்லாம் பாடிப்பரப்புகிறார்கள். நான் எதையும் காணவில்லை. அங்கு கண்டதெல்லாம் பித்துகொண்ட கண்களையும் களிகொண்ட சிரிப்புகளையும் மட்டுமே.”

“அவை இறுதி முடிவை எடுத்துவிட்டதா?” என்றாள் பலந்தரை. “ஆம் அரசி, உண்மையில் இளைய யாதவர் அவைநீங்கியபின் அங்கே பெரிதாக எதுவும் நிகழவில்லை. அனைத்து முடிவுகளும் ஓரிரு சொல்மாற்றுகளுடன் உடனடியாக ஏற்கப்பட்டுவிட்டன. அம்முடிவுகளை ஆட்டுத்தோல் ஏடுகளில் எழுதி அரசர்கள் அனைவரிடமும் முத்திரைச் சாத்து பெற்றனர். மறுநாளே அஸ்தினபுரியின் குடிப்பேரவையில் ஷத்ரியப் பேரவையின் முடிவுகள் முன்வைக்கப்பட்டன. குடிப்பேரவை முழுதுள்ளத்துடன் அனைத்தையும் ஏற்றது. அவர்கள் அகிபீனா உண்டு வெறிகொண்டவர்கள்போல ததும்பிக்கொண்டிருந்தனர்” என்றான் சுகேசன்.

“நேற்று காலை பிதாமகர் பீஷ்மரின் பெயரால் அரசாணையாக முதன்மை அறிவிப்பு அஸ்தினபுரியின் கிழக்குக்கோட்டை வாயிலில் வெளியிடப்பட்டது. யானைமேல் ஏறி நின்ற நிமித்திகன் இரட்டை முரசொலி ஓய்ந்ததும் அதை படித்தளித்தான். பாண்டவர்களுக்கு குலமுறைப்படியும் அரசநெறிப்படியும் இந்திரபிரஸ்தத்திலோ அஸ்தினபுரியின் மண்ணிலோ கருவூலத்திலோ எவ்வுரிமையும் இல்லை என்றான். அதன்பொருட்டு பாண்டவர்கள் திரட்டியுள்ள படை அஸ்தினபுரிக்கும் அரசர்களுக்கும் எதிரான குடிக்கிளர்ச்சியாகவே கருதப்படும் என்று அவன் சொன்னபோது அங்கே கூடியிருந்தவர்கள் கொல்க, கொல்க என்று கூவினர். ஒருவன் இருவரின் தோளிலேறி குருதி, குடியிலிகளின்

குருதிவேண்டும் என் விடாய் தீர என்று கூச்சலிட்டான்" என்று சுகேசன் தொடர்ந்தான்.

"பாண்டவர்களின் துணைக்கென உடன் கூடியிருக்கும் நிஷாதர்கள், கிராதர்கள், அரக்கர்கள், அசுரர்கள் அனைவரும் பாரதவர்ஷத்தின் ஷத்ரிய மேல்கோன்மைக்கு எதிராக அறைகூவும் பெருந்தவறை இழைக்கிறார்கள், அவர்கள் படைதிரட்சியை முற்றாகக் கைவிட்டு தங்கள் இடங்களுக்கு திரும்ப வேண்டும், தங்கள் மரபு சார்ந்த வேட்டைப் படைக்கலங்கள் அன்றி வேறெந்த கொலைப்பொருளும் அவர்களிடம் இருக்கலாகாது. அவர்கள் தாங்கள் வெவ்வேறு வகையில் வாங்கித் திரட்டியிள்ள போர்க்கலங்கள் அனைத்தையும் அஸ்தினபுரியின் படைகளிடமோ பிற ஷத்ரியர் படைகளிடமோ ஒப்படைத்து தலை மண்ணில் படிய முற்றாக அடிபணியவேண்டும், இல்லையேல் அவர்கள் கொலைக்குரியவர்கள் என்று அறிவிக்கப்பட்டது."

அவன் அங்கு நிகழ்ந்ததை நேரில் கண்டு சொல்வதைப்போல உணர்வற்ற நேர்க்குரலில் சொல்லிக்கொண்டிருந்தான். "ஷத்ரியர் அவைக்கூட்டுக்கு வந்து முத்திரைச்சாத்து கொள்ளாத அத்தனை நாடுகளும் ஷத்ரியக் கூட்டமைப்புக்கு அடிபணிந்து கப்பம் கட்டி அருள்பெற்று ஒழுகவேண்டும் என்று அஸ்தினபுரியின் மன்னர் ஷத்ரியப் படைக்கூட்டின் பெயரால் ஆணையிட்டார். அதற்கு அவர்கள் தங்கள் முற்றொப்புதலை ஏழு நாட்களுக்குள் அஸ்தினபுரிக்கோ ஷத்ரியர் நாடுகளுக்கோ அறிவிக்க வேண்டும். அஸ்தினபுரியின் செங்கோலையும் தாங்கள் அடிபணியும் ஷத்ரிய அரசின் அரியணையையும் தலைசூடுவதாக வாள்தொட்டு குடிமூதாதையர் பெயரால் பொது இடத்தில் ஆணையிடவேண்டும். அவ்வாணை

கைச்சாத்திடப்பட்ட ஓலை என அஸ்தினபுரியை வந்தடையவேண்டும் எனக் கூறப்பட்டது.”

“அதன் பின்னர் அஸ்தினபுரியிலிருந்து அவர்கள் அனைவருக்கும் செங்கோல் என கொடுத்தனுப்பப்படும் அத்திமரக் கிளையை அவர்கள் தங்கள் அரியணையில் வைத்து அரசரென அரிமலரிட்டுத் தலைவணங்கி சொல்லேற்கவேண்டும். மணிமுடியும் கங்கைமுழுக்காட்டும் அக்கோலுக்கு செய்யப்படவேண்டும். அவர்களின் குடித்தலைவர்கள் அனைவரும் தங்கள் வாளையோ குடிக்கோலையோ அதன் முன் தாழ்த்தி முற்றடிபணிவதாகவும் மறு சொல்லெழுவதை பிழையென்று உணர்வதாகவும் ஆணையிடவேண்டும். குருதி தொட்டு தங்கள் தொல்நிலத்தின்மேல் ஆணை உரைக்கவேண்டும்.”

பலந்தரை நெஞ்சு படபடப்பதை உணர்ந்தாள். அது ஆவல் அல்ல அச்சம் எனத் தெரிந்தது. அச்சம் எதற்கு எனப் புரியவில்லை. இவை காசியை ஒன்றும் செய்யப்போவதில்லை. அவள் தந்தையும் தமையனும் அஸ்தினபுரியின் தலைமையில் ஷத்ரியப் படைக்கூட்டில் கைச்சாத்து இட்டுவிட்டு வந்துகொண்டிருக்கிறார்கள். அவ்வச்சம் முகமற்றது. அது படையெழுச்சியின், போரின் மெய்யான ஆற்றலை நேருக்குநேர் காணும்போது எழுவது. அதுவரை கேட்டறிந்ததெல்லாம் கவிதையிலும் கதையிலும்தான். இது சிம்மம் இரைவிலங்கைக் கொன்று கிழித்துண்பதுபோல நேரடியானது. உட்பொருட்களும் நீள்விளக்கங்களும் அற்றது. ஆனால் நான் இதை ஏன் அஞ்சுகிறேன்? நான் அரசி. இதை அஞ்சவேண்டியவர்கள் எளிய குடிகள். நான் கொலைவிலங்கின் கணம். ஆனால் அவள் கைவிரல்கள் குளிர்ந்து நடுங்கிக்கொண்டிருந்தன.

“அச்சொல்லை மீறுவார்களென்றால் அவர்கள் அனைவரும் அஸ்தினபுரியின் பெரும்படைகளால் முற்றழிக்கப்படுவதும், அவர்களின் நிலம் பறிக்கப்படுவதும் அவர்களின் குடி பெயருமின்றி ஒழிக்கப்படுவதும் முறையென்றாகும். அவர்கள் அனைவரும் தங்கள் அரச குடியிலிருந்தும், மூத்த தொல்குடிகளிலிருந்தும் ஒவ்வொரு பெண்டிரை அஸ்தினபுரிக்கோ அவர்கள் அடிமைப்பட்டுள்ள ஷத்ரிய குடிகளுக்கோ அனுப்பி வைக்கவேண்டும். அவர்கள் அங்குள்ள அரசகுடியினராலோ படைத்தலைவர்களாலோ மணம்கொள்ளப்படுவார்கள். அரண்மனைச் சேடியர் என்றும் அமர்த்தப்படுவார்கள். அவர்கள் கருவில் பிறந்த மைந்தரே அக்குடிகளுக்கு அடுத்த அரசரென்றும் வழித்தொடர் மைந்தரென்றும் அமைவார்கள்.”

“அக்குடிகளின் ஆலயங்கள் அனைத்திலும் ஷத்ரியப் பிரஜாபதிகளும், தெய்வங்களும் அவர்களின் குடித்தெய்வங்களுக்கு ஒரு படி மேலாக அமைக்கப்படவேண்டும். அவர்கள் அளிக்கும் பூசனைகளும் பலிக்கொடைகளும் முதலில் அப்பிரஜாபதிகளுக்கும் தெய்வங்களுக்கும் அளிக்கப்பட்ட பின்னரே அவர்களின் குடித்தெய்வங்களுக்கு கொடுக்கப்படவேண்டும். அவர்களின் ஊர்களிலும் நகர்களிலும் அவர்கள் அடிபணிந்து தலைக்கொண்ட ஷத்ரிய அரசின் கொடி முதன்மையாகவும் அவர்களின் கொடிகள் ஒருபடி தாழ்ந்தும் பறக்கவிடப்பட வேண்டும். அவர்களின் அத்தனை குலமுத்திரைகளுடனும் அவர்கள் அடிமைப்பட்டுள்ள நாட்டின் முத்திரை மேலே பொறிக்கப்பட்டு தாஸ என்னும் சொல் கீழே எழுதப்பட்டிருக்கவேண்டும்.”

“இவற்றை மறுத்து ஒரு சொல்லெழுவதும் நேரடிப் போருக்கான அறைகூவல் என்றே கொள்ளப்படும். வெங்குருதியால் அப்பழி முற்றாகத் தீர்க்கப்படும் என்று அஸ்தினபுரியின் அரசர் ஷத்ரிய படைக்கூட்டின்பொருட்டு ஆணையிட்டிருந்தார்” என்று சுகேசன் சொன்னான். “அச்சொற்களை அருகே நின்றமையால் நான் விழிகளால் அறிந்தேன். அவர்களைச் சூழ அஸ்தினபுரி கடற்கோள் என முழங்கிக்கொண்டிருந்தது.” பலந்தரை பெருமூச்சுவிட்டாள். “பாண்டவர்கள் என ஒரு சொல் உரைக்கப்பட்டதுமே கொல்க, அவர்களைக் கொல்க என கூவினர். வஞ்சகர்கள், கீழ்மக்கள், குடியிலிகள் என வசைபொழிந்தனர்.”

அத்தருணம் பலந்தரையின் உள்ளத்தில் சீற்றமே எழுந்தது. பற்களைக் கடித்தபடி “கீழ்மக்கள், அன்று யுதிஷ்டிரர் காலில் விழுந்து கூவியழுத பேதைகள்” என்றாள். “அவர்கள் செத்து குவிவார்கள். குருதியிலும் கண்ணீரிலும் ஆடுவார்கள். ஆம், அதுவே நிகழப்போகிறது.” சுகேசன் அவள் சொன்னதை அறியாதவன் என அமர்ந்திருந்தான். “நம் அரசரும் பேரரசரும் அவையில் ஏதும் உரைக்கவில்லையா?” என்றாள். “அரசி, ஷத்ரியப்பேரவையில் எழுந்து சொல்லுரைக்கும் இடம் நமக்கில்லை, நமக்குப் படையென ஏதுமில்லை. மரபுப்படி நாம் உலகாள்வோன் ஆலயத்தின் காப்பாளர்கள் மட்டுமே.” அவள் சினத்துடன் தலைதூக்கி பின் தன்னை அடக்கி “அவர்கள் கைச்சாத்திட்டனரா?” என்றாள். “ஆம், அரசி” என்றான் சுகேசன். “போருக்குப் பின் தங்களுக்குக் கிடைப்பதென்ன என்று ஒரு சொல்லேனும் உசாவினார்களா?” என்றாள் பலந்தரை. “இல்லை, அரசி” என்று சுகேசன் சொன்னான். “அறிவிலிகள்” என்றாள் பலந்தரை.

அவள் சொன்னதை செவிகொள்ளாதவனாக சுகேசன் தொடர்ந்தான். “பாண்டவர்களுக்கு அஸ்தினபுரியின் குடிமக்கள் என்பதற்கு அப்பால் எந்தக் குலஅடையாளமும் அரசத் தொடர்பும் அளிக்கப்படமாட்டாது என்று அவ்வரசாணை சொன்னது. அவர்கள் ஷத்ரியர்கள் அல்ல என்பதனால் நான்காம் குடியினருக்குரிய மரபுவழித் தொழில்களை ஆற்றி அவர்கள் வாழவேண்டுமென்றும் அவர்கள் மைந்தர்கள் குருகுலத்துக் கொடிவழியினர் என்றோ ஷத்ரியர் என்றோ தங்களை சொல்லிக்கொள்ளக்கூடாதென்றும் கூறியது. அவர்களை கொல்லுங்கள், நஞ்சு மிஞ்சலாகாது, அனல் எஞ்சலாகாது என ஒரு முதியவர் கூவ அனைவரும் தங்கள் வாள்களையும் கோல்களையும் தூக்கி கூச்சலிட்டனர்.”

“அரசி, மேற்குப்பாலையில் ஒருமுறை பசிகொண்ட ஓநாய்க்குழு ஒன்றின்முன் நாங்கள் சிக்கிக்கொண்டோம். இளித்த வாய்களில் எழுந்த வெறிச்சிரிப்பன்ன வெண்மையை, விழியெரித்துளிகளை இப்போதும் கொடுங்கனவிலென நினைவுகூர்கிறேன். ஆயிரக்கணக்கான பாலைநிலத்து ஓநாய்களைப் போலிருந்தனர் அம்மக்கள்” என்றான் சுகேசன். பலந்தரை கைதளர்ந்து அசையாமல் அமர்ந்திருந்தாள். பின்னர் “அவள் என்ன செய்தாள்?” என்றாள். அதை புரிந்துகொண்ட சுகேசன் “அஸ்தினபுரியின் பேரரசி இறுதிவரை அவையில் அமர்ந்திருந்தார். மறுநாள் குடியவைப் பேரவையில் அரசருக்கு இணையாக அமர்ந்து அனைத்துச் சடங்குகளையும் ஆற்றினார்” என்றான்.

பலந்தரை சிலகணங்கள் விழிதாழ்த்தி அமர்ந்திருந்தபின் “அவள் எப்படி இருந்தாள்?” என்றாள். சுகேசன் தயங்கி அமர்ந்திருந்தான். “அவையில் காவலராக இருந்தீர்கள்

அல்லவா?” என்றாள் பலந்தரை. “ஆம் அரசி, நான் அனைத்தையும் கண்டேன்.” பலந்தரை “சொல்க!” என்றாள். “அரசி, இளைய அரசியர் இருவரும் ஷத்ரியப் பேரவையிலிருந்து சினமும் விழிநீருமாக விலகிச் சென்றனர். மூத்த அரசி அவையிலேயே இருந்தார். விழிவிலக்காது அரசரையே நோக்கிக்கொண்டிருந்தார். காதல்கொண்ட முதிராமகள் என அவர் முகம் களிகொண்டிருந்தது.”

பலந்தரை போதும் என்பதுபோல கையசைத்தாள். பின்னர் எழுந்து தன் மேலாடையை விசையுடன் சுழற்றி அணிந்தபடி அறையிலிருந்து வெளியே சென்றாள். சுகேசன் எழுந்து அவள் சென்ற திசைநோக்கி தலைவணங்கிவிட்டு காகம்போல் மெல்லடி வைத்து நடந்து வெளியே சென்றான்.

வெண்முரசு வாசிப்பு முறை – ராஜகோபாலன்

# குருதிச்சாரல் - 53

**பகுதி எட்டு : குருதிகொள் கரியோள் – 3**

அன்னை அருகே வந்ததை பலந்தரை அறியவில்லை. அவள் தன் முன் அமர்ந்த அசைவைக் கண்டு திரும்பி நோக்கினாள். அன்னை நீள்மூச்சுவிட்டு “உன்னிடம் பேசிய பின் சுகேசன் என்னிடம் வந்தான்” என்றாள். முழங்கையை தன் மடியிலூன்றி முன்னால் குனிந்து அவள் விழிகளை நோக்கி “அரசரும் மைந்தரும் அஸ்தினபுரியிலிருந்து மீண்டு வந்துவிட்டனர். அஸ்தினபுரியுடன் படைக்கூட்டில் முத்திரை சாத்திட்டிருக்கின்றனர்” என்று சொன்னாள். “ஆம், அறிவேன்” என்றாள் பலந்தரை.

அரசி அவளிடம் மேலும் பேச விரும்பினாள். அதற்கான சொற்களை அமைத்தபின் தணிந்த மென்குரலில் “நீ இங்கு வந்தபோது உளம் மகிழ்ந்தேன். இங்கிருந்த பதின்மூன்று ஆண்டுகளும் என் வாழ்வில் இழந்தவை அனைத்தையும் மீண்டும் பெற்றேன். ஆனால் இப்போது நீ இங்கிருப்பது சரியல்ல என்று படுகிறது. உன்னைக் கடந்து அங்கு முடிவுகள் எடுக்கப்படுகின்றன. நீ இங்கிருக்கும் தோறும் தோற்றுக்கொண்டிருக்கிறாய்” என்றாள்.

பலந்தரை “அன்னையே, நீங்கள் அறிவீர்கள். ஷத்ரிய அரசவைகளில் உண்மையில் பெண்களின் சொல்லுக்கு எந்த மதிப்பும் இல்லை” என்றாள். “எவர் சொன்னது? அப்படியென்றால் ஏன் உன் உடன்பிறந்தார் இருவரும் ஷத்ரியப் பேரவையின் அரசவையில் சென்றமர்ந்தனர்?” என்று அன்னை கேட்டாள். “அவர்கள் அங்கு என்ன உரைத்தனர்?” என்று சொல்லி பலந்தரை இளக்காரமாக உதடைச் சுழித்தாள். “அவர்கள் ஒரு சொல்லும் எடுக்க வேண்டியதில்லை. அவையில் சென்று அமர்ந்திருந்தார்கள் என்பதே போதுமானது. அங்கிருக்கும் ஒவ்வொருவரும் அவர்கள் திரைக்குப் பின் அமர்ந்திருப்பதை அறிவார்கள். அவையின் சொல்லும் எண்ணங்களும் அவ்வுணர்வை அகத்தே கொண்டிருக்கும்” என்றாள் அன்னை.

பலந்தரை “அவர்கள் ஒன்றும் திரௌபதிகள் அல்ல” என்றாள். அன்னை அதை புறக்கணித்து “நீ இப்பக்கம் அவையில் அமர்ந்திருக்கவேண்டும். பாண்டவர்கள் எடுக்கும் அனைத்து முடிவுகளிலும் நீ எண்ணுவதென்ன என்பதும் கலந்திருக்கவேண்டும்” என்றாள். “இப்போது என்ன நிகழ்கிறது அங்கே என்று அறிவாயா? ஐந்து ஊர்களை எப்படி நாவெடுத்து யாதவர் அவர்களிடம் கேட்டார்? அரசகுடிப் பிறந்த நீ

ஊர்த்தலைவனின் தலைவியாக சிற்றில் அடுமனையிலும் புறத்தளத்திலும் இல்லப் பணியாற்றி வாழப்போகிறாயா?" என்றாள். அதை பொருட்படுத்தா உதட்டசைவுடன் "நான் அங்கு செல்லப்போவதில்லை" என்று அவள் சொன்னாள்.

"இங்கு நீ அரசியென்றிருக்கலாம். ஆனால் இங்கு அரசி எனும் இடம் அங்கு உன் கணவர் அரசர் என்பதனால்தான் அமைகிறது. அதை அளிப்பது நானோ உன் தந்தையோ அல்ல, இங்குள்ள குடியினர் என்று அறிந்துகொள். அங்கு அவர் ஊர்குடித்தலைவர் என்றானால் இங்கு நீ அரசவை அமைந்தால் எவரேனும் ஒரு ஊர்குடித்தலைவர் எழுந்து ஒரு மறிச்சொல் உரைக்கக்கூடும். அந்த நச்சிலிருந்து உனது உளம் ஒருபோதும் விடுபடமுடியாது" என்றாள் அன்னை. எரிச்சலுடன் "நான் என்ன செய்யவேண்டும்?" என்று பலந்தரை கேட்டாள். "இங்கு வீணே பொழுதழிக்க வேண்டியதில்லை. எழுந்து சென்று உபப்பிலாவ்யத்தின் அவையமர்க! இப்போது இளைய யாதவர் திரும்பி அங்கு சென்று கொண்டிருக்கிறார்" என்றாள் அன்னை.

பலந்தரை "இனி என்ன, அஸ்தினபுரியில் காலால் உதைத்து வெளியே தள்ளிவிட்டார்கள். அஸ்தினபுரியின் அரசர் இவர்களுக்கு இயன்றபடி போரை இயற்றவேண்டும். நிலம்வெல்ல படைநின்றவர் என்னும் பெருமையாவது குடியினரிலும் கொடிவழியினரிலும் எஞ்சும்" என்றாள். ஏளனத்துடன் சிரித்து "கொடியுடனும் வாளுடனும் வந்து கூடியிருக்கும் நிஷாதரும் கிராதரும் அசுரரும் இவர்களுக்கு வெற்றியை அளிப்பார்கள் என்று நம்பியிருக்கிறார்கள். வெறும் நுரை அது. அது உடைந்து சிதறுகையில் உண்மையென்ன என்று உணர்வார்கள்" என்றாள். கையசைத்து

“எவ்வண்ணமேனும் அழியட்டும். எனக்கு அவர்களிடம் சொல்வதற்கு ஒரு சொல்லும் இல்லை” என்றாள்.

அன்னை அவள் தொடையைத் தொட்டு “அவ்வாறல்லடி, இருபுறமும் இருப்பவர்கள் அறிந்த உண்மை ஒன்று உண்டு. போர் நிகழுமென்றால் பேரழிவு இரு சாராருக்குமே. எய்துவதைவிட இழப்பதற்கே மிகுதி. ஆகவே ஆற்றலை மதிப்பிட்டுக்கொள்ளும்பொருட்டு ஒரு முதற்பெரும்போர் நிகழும். அதன் இறுதியில் இரு பக்கமும் இருக்கும் மூத்த அரசர்கள் அமர்ந்து உடன்படிக்கையில் கைச்சாத்திடுவார்கள். அங்குதான் மெய்யான நிலப்பகிர்வும் கருவூலப்பங்கீடும் நிகழும். குடியுரிமை கொடிவழிகளுக்காக வகுத்தளிக்கப்படும். அப்போது நீ அங்கிருக்கவில்லையென்றால் எப்போதைக்குமென இழந்தவளாவாய்” என்றாள்.

பலந்தரை சலிப்புடன் எழுந்து “அங்கு சென்று கரியவளுக்கு சேடியாக அமைவது சலிப்பூட்டுகிறது. வெண்ணிறத்தவள் சிறுகுடிப்பெண்களுக்குரிய போர்த்தொழில் அறிந்தவள். பிறர் அடுமனைப்பெண்கள், அரசியென்று அணி சூடியவர்கள். அங்கிருப்பவர்கள் எவரும் எனக்கு உகந்தவர்கள் அல்ல. அங்கு செல்வதைப்பற்றி எண்ணினாலே சினமும் சலிப்பும் எழுகிறது” என்றாள். “சினமும் சலிப்பும் நன்று. அவை அரசருக்குரிய இயல்புகள். அவர்களிடம் எளியோர் அணுகாது தடுப்பவை அவை. பிறரை வெல்லவும் அவர் மீது சொல்நாட்டவும் ஆற்றல் அளிப்பவை. அவற்றை பெருக்கிக் கொள். படைக்கலமாக்கி ஏந்து. சென்று அங்கு நின்று உன் இடத்தை நிலைநாட்டி மீள்க!” என்று அன்னை சொன்னாள்.

எண்ணியிராக் கணத்தில் பலந்தரை உளம் தளர்ந்தாள். “அன்னையே, அறியா ஊழ் சினந்து என்னை துரத்தி வருகிறது

என்று எண்ணுகிறேன். ஒரு கணத்தில் என் வாழ்வின் அனைத்துப் பாதைகளும் மாறுபட்டன. இன்று நான் அஸ்தினபுரியின் அவைக்கூடத்தில் இணையரசியென அமர்ந்திருக்கக்கூடும். அஸ்தினபுரி வென்று நிலம் கொண்டபின் அதன் வளர்ச்சிப்போக்கில் என்றோ ஒரு நாள் என் மைந்தர்களுக்கு அதில் பாதியை நான் கேட்டுப்பெற்றிருக்க முடியும். அவர்கள் தனிமுடி சூடி தங்கள் கொடிவழியினருக்கு புகழ் சேர்த்து அளித்திருக்கவும் கூடும். நாடிலிகளும் ஏதிலிகளுமாகிய இந்த இழிகூட்டத்தின் கையில் நான் சிக்கிக்கொண்டேன்" என்றாள்.

"ஒருமுறை என் பிறவி நூலைக் கணித்த சூதர் ஒருவர் என் இயல்புக்கு இயைந்த கொடையென இதை அளித்தது என் குடித்தெய்வம் என்று உரைத்தார். இப்போதெல்லாம் உளம்சோரும் தருணத்தில் மெய்யாகவே என் தகுதி இதுதானா என்று ஐயம் கொள்கிறேன். இருண்டு சூழும் பெருமழைபோல் அந்த ஐயம் என்னை ஆட்கொள்கிறது. அச்சோர்விலும் வெறுமையிலும் இருந்து மீண்டுவர நெடுநாட்களாகும். இந்திரப்பிரஸ்தத்தையோ உபப்பிலாவ்யத்தையோ நான் அஞ்சுவது அதனால்தான்" என்று பலந்தரை சொன்னாள்.

ஏக்கம் நிறைந்த குரலில் அன்னையை நோக்கி "இங்கு நான் வருகையில் அன்று படகிலிருந்து பாண்டவ இளையவர் என்னைத் தூக்கிக் கவர்ந்தெடுத்த கணத்தைக்கடந்து இறந்த காலத்துக்கு மீள்கிறேன். இங்கிருந்து நான் செல்வதற்கு எண்ணற்ற வழிகள் உள்ளன. பெருகிப் பரவவும் பூத்துக் கனியவும் முடிவிலா வாய்ப்புகள். அந்தக் கனவுகளுடன் இங்கிருக்கவே வந்தேன். பதின்மூன்று ஆண்டுகள் அக்கனவுகளுடன் இங்கு வாழ்ந்தேன்" என்றாள் பலந்தரை.

“ஆம், அது நன்று. இனி அதை முடித்து நீ சென்றாகவேண்டும்” என்றாள் அன்னை. “சென்று என்ன செய்ய என்று சொல்லுங்கள். அங்கு என் சொல் அவை நிற்கவில்லையென்றால் என்ன செய்வது?” என்று பலந்தரை கேட்டாள். “அது நிகழக்கூடும் என்று நானும் அறிவேன். அவர்கள் வென்று நாடுகொண்டால் அதிலொரு பெரும்பங்கு உன்னை சாரவேண்டும், ஏனென்றால் நீ ஷத்ரியப் பெண். அரசனுக்கு முதல் இளையோனின் அரசி. தோற்று அவர்கள் ஏதிலிகளானால் தயங்காமல் அப்பேருடலன் அளித்த மங்கலநாண் துறந்து இங்கு திரும்பி வா. காசியின் மகளை மணம்புரிய இன்னும் அரசர்கள் ஒருங்கியிருக்கிறார்கள்” என்றாள் அன்னை.

“நீ ஒன்றை நெஞ்சில் நிறுத்துக! காசியின் குருதி அனைத்து குலங்களையும் தூய்மை செய்வது, கங்கையின் நீரைப்போல. திரிகர்த்தத்தின் மூதரசர் ஷத்ரிய அரசி ஒருத்தி அமைவாளென்றால் அவளுக்குப் பிறக்கும் மைந்தர்களுக்கு பட்டத்து உரிமையளிப்பதாக சென்ற ஆண்டே அறிவித்திருந்தார். காரூஷ நாட்டு அரசரும் யவன நாட்டு அரசரும் ஷத்ரியக் குருதிக்காக காத்திருக்கிறார்கள். உனக்கு வழிகள் எவையும் முற்றாக மூடிவிடவில்லை” என்றாள் அன்னை.

பெருமூச்சுடன் பலந்தரை “இதை பலமுறை சொல்லிவிட்டீர்கள். ஒவ்வொரு முறை கேட்கும்போதும் உள்ளிருந்து ஒன்று அது இயல்வதல்ல என்று சொல்கிறது. அதைக் கடந்து வந்து இதை பற்றிக்கொள்ள என்னால் இயலவில்லை” என்றாள். அன்னை “இத்தருணத்தில் அவ்வாறு தோன்றுவது இயல்பு. ஆனால் உன் கை துணிந்து

மங்கலநாணை அறுத்து எறிந்ததென்றால் மறுகணமே உளம்கொண்ட தடைகள் அனைத்தும் நீங்கி நீ துணிவு பெறுவாய். ஷத்ரியப் பெண்ணுக்கு அது எவ்வகையிலும் பிழையும் இழிவும் அல்ல. மைந்தரை அரசமர்த்த அவள் எதுவும் செய்யலாமென்கின்றன நெறிநூல்கள்" என்றாள்.

பின்னர் "நான் வந்தது இன்று கங்கைக்கரையில் ஊர்த்துவபிந்து அருகே அமர்ந்த அம்பையன்னைக்கு பலியூட்டும் அனலாட்டும் நிகழ்கிறது என்பதை சொல்லவே. நாம் உடனே சென்றாகவேண்டுமென்று அமைச்சர் தெரிவித்தார். நீ அணிகொள்ள வேண்டும்" என்றாள். பலந்தரை புருவத்தைச் சுருக்கி "இப்பருவத்தில் அங்ஙனமொரு பூசெய்கையும் பலிக்கொடையும் வழக்கமில்லையே?" என்றாள். "இது இத்தருணத்திற்கென ஆற்றப்படும் தனிப்பூசை" என்று அன்னை சொன்னாள். "நிமித்திகரிடம் சொல்சூழ்ந்து இதற்கான பொழுதை நானே தெரிவு செய்து ஆணையிட்டேன்."

அவள் வினாவுடன் நோக்க அன்னை "நம் குடியில் பிறந்தவர் மூதன்னை அம்பை. நம் குடித்தெய்வம் அம்பாதேவி மண்வடிவு கொண்டு எழுந்தவர் அவர் என்கின்றன கதைகள். அஸ்தினபுரியின் மீது அவர் கொண்ட வஞ்சம் ஒரு துளியும் குன்றாமல் அவ்வண்ணமே உள்ளது. அப்பழியோ ஒவ்வொரு கணமுமென பெருகி அக்குடியை சூழ்ந்துள்ளது. முன்பு இதை என்னிடம் சொல்லியிருந்தால் பொய்யென்றான பழங்கதை என்று உரைத்திருப்பேன். இன்று ஒவ்வொன்றாக எண்ணிக் கோத்து எடுக்கையில் எத்தனை பேரொழுங்குடன் அவை தங்கள் திசை தேர்கின்றன என்றுணர்ந்து திகைக்கிறேன். அச்சமும் கொள்கிறேன்" என்றாள்.

“இளையவளே, உன் உடன்பிறந்தார் இருவரும் அஸ்தினபுரிக்கு அரசியராகச் சென்றதும் அம்பையின் வஞ்சத்தினாலேயே என இன்று எண்ணுகிறேன். தங்கள் நல்லியல்பால், பெருங்காதலால் அவர்கள் அஸ்தினபுரியை அழிவுக்கு கொண்டு செல்வார்கள். மறுதிசையில் நீ உன் கசப்பால், சினத்தால் அஸ்தினபுரியை அழிவுக்கு கொண்டுசெல்வாய். சற்று முன் சொன்னாய் அல்லவா, அஸ்தினபுரியே வெல்லும் என்று? மானுடர் எண்ணும் ஒவ்வொரு கணக்கிலும் அவ்வாறே காட்டுகிறது ஈவு. ஆனால் நிமித்திகர் அனைவரும் ஒரே குரலில் நம் கணக்குகளுக்கு அப்பால் நின்றாடும் கோள்களின் சேர்க்கையையும் ஊழின் சுழிப்பையும் கணித்து உணர்ந்து சொல்வது பிறிதொன்று. அஸ்தினபுரி அழிந்தாகவேண்டும், அது அழியும்.”

“அந்நகர் எந்நெறியின்பாற்பட்டு பிறந்ததோ அந்நெறியின் ஆணை அது. அதுவே அம்பையின் நாவில் தீச்சொல்லென எழுந்தது. மானுடர் இடும் அனைத்துக் கணக்குகளையும் முடித்து அஸ்தினபுரியை வீழ்த்தும் நம் மூதன்னையின் கண்ணீர் என்று உணர்க! அஸ்தினபுரி வீழுமென்றால் உனக்கும் இரு கணக்குகள் நேராகும். உன்னை இளிவரல் செய்து கடந்து சென்ற இரு உடன்பிறந்தாரின் விழிநீருக்கு முன் புன்னகைக்கும் வாய்ப்பு உனக்கு கிடைக்கும். உன் மைந்தருக்கு வேட்டைப்பொருளில் நெஞ்சும் ஈரலும் அமையும். இத்தருணத்தில் பசியும் விடாயும் கொண்டு எழுந்து நீ ஆற்றவேண்டிய வழிகளை நான் வகுத்துரைப்பது அதனால்தான்” என்று அன்னை சொன்னாள்.

பலந்தரை “சொல்லிச் சொல்லி என்னை ஆற்றல் மிக்கவளென்று நம்பவைத்திருக்கிறீர்கள், அன்னையே. ஆனால் இதுநாள் வரை நான் எந்த அவையிலும் எழுந்து தருக்கி நிற்க

முடிந்ததில்லை. என்னைவிட மேலானவர்கள் எவரையும் விழிநோக்கி பேசவும் இயன்றதில்லை. இளவரசி என்றும் அரசி என்றும் அணிந்த இந்த ஆடைகளுக்கும் அணிகளுக்கும் அப்பால் அஞ்சியும் குழம்பியும் நின்றிருக்கும் எளிய பெண்தான் நான் என்று எண்ணுவதிலிருந்து எனக்கு விடுதலை இல்லை" என்றாள். அன்னை சினத்துடன் "அவ்வண்ணமே இருந்தாலும் என்ன? பெரும்புயலில் எழுந்து பறக்கும் சிறுகல் மலைப்பாறையை உடைக்கும் என்பார்கள். இத்தருணம் உனக்கு பேராற்றலை அளிக்கும். எவர் கண்டார்? இங்கு நிகழ்வது அனைத்தும் உன்னில் முனை கொள்ளலாம்" என்றாள்.

"மீண்டும் நான் என்ன செய்வதென்ற திகைப்பை அடைகிறேன்" என்றாள் பலந்தரை. "கிளம்பிச்சென்று பாண்டவர்களின் அவையில் அமர்ந்து உன் சொல்லை கூறு. ஒருபோதும் அவர்கள் சிறுஉடன்படிக்கையுடன் அமையக்கூடாது. அஸ்தினபுரி அழிக்கப்படவேண்டும். துரியோதனன் அழிவான். அதுவே அவன் ஊழ் என்கின்றனர் நிமித்திகர். அந்த அங்கநாட்டுச் சூதன் வில்லெடுத்து களம்நிற்பான் என்பதனால் பாண்டவர்களும் முதுகெலும்பு முறிக்கப்படுவார்கள் என்பதில் ஐயமில்லை. ஷத்ரியத் தலைமை மகதத்திற்கோ கலிங்கத்திற்கோ செல்லும். அவர்களுடன் பாண்டவர்கள் ஒப்புச்சாத்திட்டு நிலம் வெல்வார்கள். அதில் உன் மைந்தனுக்கு தனிநிலத்தை நாம் கோருவோம்."

மீண்டும் அவள் தொடையைத் தொட்டு தாழ்ந்த குரலில் "இன்று உன் பணி ஒரு தருணத்திலும் பாண்டவர்கள் அனலமைந்து எளிதில் எதையேனும் ஏற்று அமையாது காத்தல் மட்டுமே. இருபுறமும் அனலோம்பும் பணியையே உங்கள் மூதன்னையர் உங்கள் மூவருக்கும் அளித்துள்ளார்கள்"

என்றாள் அன்னை. பெருமூச்சுடன் பலந்தரை “நினைவறிந்த நாள் முதல் உங்கள் சொற்களையே என் எண்ணங்களாகக் கொண்டிருக்கிறேன். உங்கள் வழிகாட்டுப்படியே அனைத்தையும் ஆற்றியிருக்கிறேன். இம்முறையும் அதுவே ஆகுக!” என்றாள்.

அம்பையன்னையின் ஆலயமுகப்பில் அமைச்சர்கள் மூவரும் அவர்களின் தேருக்காக காத்து நின்றிருந்தனர். தேர் விரைவழிந்து திரும்பி நின்றதும் வாழ்த்தொலிகளும் மங்கல இசையும் எழுந்தன. அணுக்கச்சேடி இறங்கி நின்று வணங்க அன்னை உள்ளிருந்தே ஆடைகளை சீரமைத்துக்கொண்டு அரசணிக்கோலத்தில் கைகூப்பியபடி இறங்கினாள். அவளைத் தொடர்ந்து பலந்தரையும் இறங்கி நின்றாள். சிற்றமைச்சர் தலைவணங்கி “ஆலயம் ஒருங்கிவிட்டது, அரசியரே. இன்னும் சற்று நேரத்தில் பலிக்கொடையும் அனலாட்டும் தொடங்கவிருக்கிறது. இத்தருணம் தங்கள் வருகையால் சிறப்புறுக!” என்றார். “வாழ்க!” என்றபடி அன்னையும் பலந்தரையும் நடந்தனர்.

அம்பையன்னையின் சிற்றாலயத்தின் முகப்பில் அரசரும் மூத்தவரும் அரசணிக்கோலத்தில் கைகூப்பி நின்றிருக்க அவர்களுக்குப் பின்னால் அமைச்சர்களும் படைத்தலைவர்களும் நிரைகொண்டிருந்தனர். செவ்வாடை அணிந்த பூசகர்கள் அங்குமிங்கும் சுழன்று அனைத்தையும் ஒருக்கிக்கொண்டிருந்தனர். நீலம், சிவப்பு, பொன்மை என மூவண்ண மலர்களும் குவிக்கப்பட்ட பாயில் அப்பமும் நறவமும் கனிகளும் படைக்கப்பட்டிருந்தன. பன்னிரு தூபக்கலங்களில் புகையெழும்பி சூழ ஆலயமே

முகில்களுக்குள் இருப்பதுபோல் தோன்றச்செய்தது. சுற்றி நடப்பட்டிருந்த மூங்கில் கம்பங்களில் எரிந்த நெய்ப்பந்தங்களில் அப்பகுதியின் காட்சி நீர்ப்பாவையென அலைந்தது.

பலந்தரை அன்னையைத் தொடர்ந்து சென்று ஆலயமுகப்பில் நின்றாள். கைகூப்பி கருவறைக்குள் அமர்ந்திருந்த அம்பையன்னையை நோக்கிக்கொண்டிருந்தாள். இளஅகவையிலேயே கேட்ட கதை. சால்வனாலும் பின்பு பீஷ்மராலும் சிறுமை செய்யப்பட்டாள். தன் உள்ளனலால் உடலைச் சிதையாக்கி எரிந்தமைந்தாள். சொல்லை மட்டும் அருகே நின்றிருந்த கரும்பன்றி ஒன்றுக்கு அளித்துவிட்டுச் சென்றாள். பன்றிகளில் வாழ்கிறது அன்னையின் தீச்சொல். அத்தருணங்கள் விறலியரால் மீண்டும் மீண்டும் வெவ்வேறு சொற்களில் பாடப்பட்டன. அவள் ஒவ்வொருமுறையும் விழிநீர் வழிய உடல்மெய்ப்பு கொண்டுதான் அதை கேட்டிருந்தாள்.

ஆனால் அம்பையன்னை கொண்ட அச்சினத்தின் வேர் எது என இளமையில் அவளுக்கு புரியவில்லை. பிறிதொரு அரசரை மணம்கொண்டு மைந்தரீன்று சிறந்திருந்தால் என்ன? ஷத்ரியப் பெண்ணுக்கு கருவறையில் வீரமைந்தர் எழுவதே சிறப்பு. கணவர்கள் அவளுக்கு ஒரு பொருட்டேயல்ல என்றுதான் அவளுக்கு கற்பிக்கப்பட்டிருந்தது. அதை அவள் முதுசெவிலியிடம் கேட்டபோது “அரசியருக்கான அறம் அது, காதல்மகளிருக்கானது அல்ல” என்று செவிலி சொன்னாள். பின்னர் விறலி ஒருத்தியிடமும் அதையே கேட்டாள். “தன் காதலை தானே அறிதல் பெண்ணுக்கு தெய்வங்கள் அளிக்கும் நற்கொடை, அரசி. அறிந்தபெண் அதற்கு அடிமை” என்றாள். அம்மறுமொழியும் அவளுக்கு புரியவில்லை.

ஆனால் கங்கைநீர்ப்பரப்பின் படகில் இருந்து கோழிக்குஞ்சை உகிர்கொண்டு கவ்வி எழும் பருந்தென அவளை பீமன் எடுத்துச்சென்ற கணத்தில் ஒரு சிறு மின்னலென அம்பையன்னையின் முகமே அவளுள் எழுந்தது. படகில் அமர்ந்து உடல் குறுக்கி மேலாடையால் முகம் மூடி அமர்ந்து விழிநீர் உகுத்தபோது மிக அருகே என அம்பையன்னையை அவள் உணர்ந்தாள். அந்தப் பகல் முழுக்க முகத்திரையை மேலெடுக்காமல் நடுங்கிக்கொண்டே இருந்தாள். படகிலிருந்து இறங்கியபோது ஒருமுறை காற்றில் முகபடாம் விலக அப்பால் பீமனின் பெருங்கைகளை கண்டாள். கங்கைநீரில் மிதந்துவரும் இமயமலை பூர்ஜமரம்போல் தோன்றின. அவன் வடத்தைப் பற்றியபோது உள்ளம் திடுக்கிட அதை பெருமலைப்பாம்பு என உணர்ந்தாள்.

மீண்டும் மூடுபடம் கொண்டு முகம் மூடிக்கொண்டபோது குமட்டல் எழுந்து உடல் விதிர்த்தது. அதை விழிகளிலிருந்து விலக்க முயன்றாள். ஆனால் அதுவே அவள் சித்தமென்றாகி நின்றது. ஒருகணம்கூட அந்தக் கைகளை அவள் பார்த்திருக்கவில்லை. ஆனால் அதன் தசையமைப்பும் நரம்புவலையும் தன் உள்ளங்கை என அவள் அறிந்திருந்ததாகத் தெரிந்தது. அரண்மனைச் சடங்குகள் ஆலய வழிபாடுகள் மகளிரறைச் சந்திப்புகள் எங்கும் அவள் அந்த தசைத்திரளால் வெருட்டப்பட்ட சித்தம் கொண்டிருந்தாள். அவ்வப்போது ஏனென்றறியாமல் குமட்டியது. வாயில் வீண்நீர் ஊறியது. அவளருகே படிக்கம் ஏந்தி நின்றிருந்த சேடி அதை நீட்ட துப்பிக்கொண்டே இருந்தாள்.

குந்தியின் முன் அவள் சென்றபோது “பேரரசியை வணங்குக, அரசி” என்றாள் செவிலி. அவள் அசைவிலாது நின்றாள்.

“பேரரசியே இனி உங்கள் அன்னை” என்றாள் செவிலி மீண்டும். குந்தி புன்னகையுடன் “படகு ஆடியதனால் ஏற்பட்ட தலைச்சுழல்வு. நீங்கிவிடும்... ஓய்வெடுக்கட்டும்” என்று அவள் தலையை தொட அவள் அந்தக் கையை தலை விலக்கி உதறினாள். அழுத்தமான குரலில் “வணங்குக, அரசி!” என்றாள் செவிலி. அதன் உட்பொருளை உணர்ந்து குனிந்து குந்தியின் தாள்தொட்டாள். அந்தக் கையை தன் சென்னியில் வைக்கவில்லை. பிறகெப்போதும் அவள் குந்தியின் கால்தொட்டு வணங்கவுமில்லை. அன்று அந்தக் கை அழுக்குபட்டதென அசைக்காமல் கொண்டுசென்றாள். அப்பால் சென்றதும் யானத்தைக் கொண்டுவரச்சொல்லி கையை கழுவினாள். படிக்கத்தில் உமிழ்ந்து வாய்கழுவிக்கொண்டாள்.

காம்பில்யத்தில் கங்கைக்கரையருகே அமைந்த வேனில் மாளிகையில் அவர்களுக்கான முதலந்தியை ஒருக்கியிருந்தனர். அவள் சாளரத்தருகே காத்து நின்றிருக்க காலடியோசையின்றி உள்ளே வந்த பீமன் அறைநடுவே நின்று புன்னகையுடன் “பிழை பொறுத்தருள்க அரசி, அடுமனையில் சற்று பணி என்பதால் பிந்திவிட்டேன்” என்றபின் மேலும் தணிந்த குரலில் விழிகளில் கனிவுடன் “அனைத்திற்கும் பிழை பொறுத்தருள்க! அரசனென்றும் ஆண்மகனென்றும் என் செயல்களை ஆற்ற நேர்கிறது. அவையிரண்டும் நானல்ல என்று அகத்தே உணர்வதுண்டு. இங்கு உன் முன் வந்து நிற்பவன் அவ்வாறு உணரும் எளிய கான்மகன்” என்றான்.

அச்சொற்கள் அவளுக்கு எவ்வகையிலும் பொருள் அளிக்கவில்லை. ஐயமும் சினமும் கொண்டு சுருங்கிய கண்களுடன் அவனை நோக்கி நின்றாள். பீமன் அருகணைந்து “அச்செயலுக்கு பிழைநிகராக நான் ஆற்றவேண்டியதென்ன?”

என்று உரைத்தான். இயல்பாக அவன் கை அவள்மேல் பட்டதுமே சிலிர்த்து உதடு குவித்து “அகல்க!” என்றாள். மூச்சொலியாக “தொடவேண்டாம்” என்றாள். அவன் கையை பின்னால் எடுத்துக்கொண்டதும் விலகி சாளரத்தின் மறுபக்கம் சென்று நின்று “விலகிச் செல்க! விலங்கல்லவென்றால், கல்வியும் குடிப்பண்பும் சற்றேனும் இருந்தால் விலகிச் செல்க!” என்று உடைந்த குரலில் கூவினாள்.

இரு கைகளும் உயிரற்றவைபோல் தொங்க, விரிந்த நெஞ்சு எழுந்தமர “நன்று! இன்னும் சில என்னுள் எஞ்சியுள்ளன. அவ்வாறு நீயும் உணரும்போது நாம் அணுகுவோம், அரசி” என்றபின் அவன் திரும்பிச் சென்றான். பிறகு அவன் அவளை அணுகவேயில்லை. அவர்களுடன் துவாரகைக்குச் சென்றாள். அங்கும் தனித்தே இருந்தாள். முதல் ஆவணிவிழா அங்கே எழுவது வரை. ஆவணி எட்டாம் தேய்பிறைநாள் துவாரகையில் பெருங்களியாட்டுக்குரியது. ஆணும் பெண்ணும் மானுடத்தன்மையை இழந்து விலங்குகளும் பறவைகளுமென்றாவார்கள். தேவர்களும் கந்தர்வர்களும் ஊடுகலப்பார்கள். காமம் அன்றி உணர்வோ எண்ணமோ அறமோ பிறிதேதுமில்லை என நகர் அன்று உணரும்.

தலைமைப் பூசகர் கைகாட்ட பறைகளும் முழவுகளும் கொம்புகளும் இணைந்த பேரொலி எழுந்து இருளை நிறைத்தது. பலிக்கென ஏழு காராடுகளை பூசகர் இட்டுவந்தனர். அவள் விழிகளை மூடி அன்னையின் பின் மறைந்து நின்றுகொண்டாள். ஏழு கம்பளிக்குவைகள் போலிருந்த ஆடுகள். ஒன்றோடொன்று ஒட்டி பழுப்புக்கல் விழிகள் ஒட்டி கனைத்துக்கொண்டன. அவள் அவற்றின் கரிய நகங்களை நோக்கிக்கொண்டிருந்தாள். கன்னங்கரியவை என்பதனாலேயே

பிறந்ததுமே தெய்வங்களுக்குரியவை என்று ஆக்கப்பட்டவை. எத்தனை தலைமுறைகளாக அவை தெய்வங்கள்முன் சங்கு அறுக்கப்பட்டு விழுந்திருக்கும். சென்று பிறிதொரு வாயிலினூடாக மீண்டு வந்துகொண்டிருக்கின்றனவா அவை?

முதன்மைப்பூசகர் கைகாட்ட நிமித்திகன் வலம்புரிச்சங்கை மும்முறை ஊதி அரசப்பெருமை அறிவித்தான். "பிரம்மா, அத்ரி, சந்திரன், புதன், புரூரவஸ், ஆயுஷ், அனேனஸ், பிரதிக்ஷத்ரர், சஞ்சயர், ஜயர், விஜயர், கிருதி, ஹரியஸ்வர், சகதேவர், நதீனர், ஜயசேனர், சம்கிருதி, க்ஷத்ரதர்மா, சுமஹோத்ரர், சலர், ஆர்ஷ்டிஷேணர், காசர், தீர்க்கதமஸ், தன்வந்திரி, கேதுமான், பீமரதர், திவோதாசர், ஜயசேனர், சஞ்சயர், சுருதசேனர், பீமகர், சஞ்சயர், பீமதேவர், ஜயர், விஜயர் என நீளும் காசிநாட்டுக் கொடிவழியில் பிறந்த விருஷதர்பர் தன் மைந்தர் சுபாகுவுடன் வந்து நின்று இயற்றும் இந்தப் பூசனை முழுமைகொள்க! அன்னை நிறைவுறுக! ஆம், அவ்வாறே ஆகுக! இங்கு வந்து வணங்கி நின்றிருக்கும் அரசி குணவதியும் இளவரசி பலந்தரையும் அன்னை அருள்பெறுக! ஆம், அவ்வாறே ஆகுக!"

பூசெய்கைகள் ஒவ்வொன்றாக நிகழ்ந்தபோது அவள் எண்ணத்தின் மயக்கில் எங்கோ இருந்தாள். துணைப்பூசகர் காராட்டை இழுத்து பலிபீடம் நோக்கி கொண்டுசென்றபோதுகூட என்ன நிகழவிருக்கிறதென அவள் உணரவில்லை. பள்ளிவாள் மேலெழுந்து ஒளியுடன் விழுந்து ஆட்டின் தலையை வெட்டி குருதி வீழ்த்தியதும்தான் விதிர்த்தாள். ஆடு காலுதைத்துச் சரிய தலை விழிநோக்கு நிலைத்திருக்க அன்னையின் காலடியில் விழுந்தது.

அவள் கண்களை மூடிக்கொண்டாள். அடுத்த ஆடு வெட்டப்படுவதை ஓசையெனக் கேட்டு

அதிர்ந்துகொண்டிருந்தாள். அன்னை அவள் கையைப்பற்றி “நிமிர்ந்து நில். என்ன செய்கிறாய்? அரசியென நிமிர்ந்து நில்!” என்றாள். அவள் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது. மேலும் அன்னைக்குப் பின் ஒடுங்கி கண்களை இறுக மூடிக்கொண்டாள். வெட்டுண்டு சரியும் ஆடுகளின் குளம்புகள் மண்ணில் உரசித்துடிக்கும் அசைவை ஓசையிலேயே உணர முடிந்தது. குருதி மணம். எங்கெங்கோ எந்தெந்த தருணங்களிலோ எவற்றிலெல்லாமோ உணர்ந்த மணம்.

தலை சுழல்வதுபோல், கால் தளர்வதுபோல் உணர்ந்தாள். “முன்சென்று நில்! சுடராட்டு நிகழவிருக்கிறது!” என்று அன்னை தாழ்ந்த குரலில் சொல்லி அவளை உந்தினாள். அவள் நிமிர்ந்து நின்று விழி திறந்து நோக்கியபோது ஆடுகளின் உடலிலிருந்து குமிழியெழும் கொழுங்குருதி ஏழு கலங்களில் சேர்க்கப்பட்டு கருவறைக்குள் கொண்டு வைக்கப்பட்டது. ஏழு தலைகளும் நிரையாக அம்பையன்னையின் காலடியில் வைக்கப்பட்டிருந்தன. வஞ்சமும் துயரமும் கொண்ட விழிகளுடன் அவை கைகூப்பி நின்றிருந்தவர்களை நோக்கிக்கொண்டிருந்தன.

பூசகர் கைகாட்ட அனைத்து பந்தங்களும் எரியவிடப்பட்டன. காட்டுத்தீயென எரிந்த செவ்வெளிச்சத்தில் ஏழு கலங்களில் நிறைக்கப்பட்ட குருதியை கருவறைக்குள் கொண்டுசென்று அம்பையின் சிலைக்குமேல் பொழிந்து செம்முழுக்காட்டினார். இருமல் போலவும், தேம்பல் போலவும், விம்மல் போலவும், குழறல் போலவும் பறைகள் ஓசையிட்டன. அனைத்து ஓசையும் தன் அடிவயிற்றுக்குள் சென்று சுழிப்பதுபோல் உணர்ந்தாள். அன்னையை இடக்கையால் பற்றி காலை நன்கு ஊன்றி விழாமல் காத்துக்கொண்டாள்.

பன்னிரு துணைப்பூசகர்கள் நெய்ப்பந்தங்களை பற்ற வைத்தனர். கருவறைக்குள் பூசகர் ஏழு திரியிட்ட நெய்விளக்கை சுழற்றி அன்னைக்கு சுடராட்டு காட்டியபோது வெளியே பந்தங்களைச் சுழற்றி காற்றில் அறியா எழுத்துக்களை உருவாக்கி மறையச்செய்தனர். பூசனை முடிந்ததும் பந்தங்கள் அணைந்தன. தொழுசுடருடன் பூசகர் வெளியே வந்தபோது மெல்லிய உறுமல் கேட்டு அனைவரும் திரும்பிப் பார்த்தனர். கங்கைச் சரிவின் சேற்றுப்பரப்பில் இருந்த குறும்புதரிலிருந்து கரிய காட்டுப்பன்றியொன்று உறுமி, தலை தாழ்த்தி பிடரியின் முள்மயிர் சிலிர்க்க வளைந்த வெண் தேற்றைகள் எழுந்து தெரிய மேலேறி வந்தது.

எவரோ அறியாது ஓசையிட அது தயங்கி நின்றது. மீண்டும் தலைதாழ்த்தி உறுமலோசை எழுப்பியபடி அவர்களை நோக்கி வந்தது. பூசகர் "வராகி எழுந்துவிட்டாள். வழி விடுக! வழி விடுக!" என்றார். வலப்பக்கமாக இழுத்து சேற்றுவிளிம்பருகே இடப்பட்ட ஆடுகளின் தலையிலா உடல்களை அணுகிய பன்றி அவற்றில் ஒன்றைக் கவ்வி காலூன்றி இழுத்தபடி மீண்டும் சேற்றுச் சரிவில் இறங்கி மறைந்தது.

வெண்முரசு வாசிப்பு முறை – ராஜகோபாலன்

# குருதிச்சாரல் - 54

**பகுதி எட்டு : குருதிகொள் கரியோள் – 4**

சிற்றவைக்கூடத்தில் நின்ற வாயில்காவலனிடம் பலந்தரை அவளில் எப்போதும் எழும் எரிச்சல் கலந்த குரலில் "என் வரவை அறிவி" என்றாள். எப்போதும் ஆடையில் ஒரு

பகுதி அவள் உடலில் இருந்து சரிந்து எரிச்சலை தான் வாங்கிக்கொள்ளும். அன்று அவளுடைய தலையாடை சரிந்தபடியே இருந்தது. “உச்!” என ஒலியெழுப்பி அவள் அதை இழுத்து அமைத்தாள். எரிச்சலுடன் அமைப்பதனாலேயே அது கொண்டைமேல் சரிவர அமையாமல் முன்னால் இழுபட்டது. அவள் கை தூக்கியபோது மீண்டும் சரிந்தது.

“பொறுத்தருள்க அரசி, உள்ளே அரசர் இளைய யாதவருடன் சொல்சூழ்ந்துகொண்டிருக்கிறார். இத்தருணத்தில் உள்ளே எவரையும் ஒப்புவதில்லை என்று எனக்கு அறிவிக்கப்பட்டிருக்கிறது” என்றான். எரிச்சலை சினமாக்கிக்கொண்டு “மூடா, அது அரசகுடியினருக்கு அல்ல. நானும் சென்றமர வேண்டிய அவைதான் அது. நான் வந்திருப்பது அவர்களுக்கு இன்னும் தெரியாது. சென்று அறிவி” என்று பலந்தரை சுட்டுவிரல் அசைத்து அவனிடம் சொன்னாள். ஒருகணம் தயங்கிய காவலன் “அவ்வாறே” என்று கூறி உள்ளே சென்றான்.

கதவு திறந்து மூடப்படும் சிறுபொழுதில் உள்ளே நிகழ்ந்துகொண்டிருந்த உரத்த பூசலின் ஓசையை பலந்தரை கேட்டாள். அதில் ஓங்கி ஒலித்தது பீமனின் குரல். “குருதி!” என்று ஒரு சொல் கல் உடைக்கையில் சில் தெறித்ததுபோல வந்து செவிதொட்டது. அவள் உள்ளே நிகழ்வதென்ன என்று எண்ணியபின் குழலைச் சீரமைத்து காத்து நின்றாள்.

ஏவலன் வெளியே வர நெடும்பொழுதாகியது. அவள் மீண்டும் தன் தலையாடையை சீர்செய்து உடலை ஒசித்து இடையில் கையூன்றி நின்றாள். அரசியர் ஒருபோதும் ஒசிந்து நிற்கலாகாது என அவளுக்கு அரசியருக்குரிய அசைவுகளையும் முறைமைகளையும் பயிற்றுவித்த களரி ஆசிரியை காமிகை

சொல்வதுண்டு. உடலில் ஒசிவு உள்ளம் தளர்ந்திருப்பதையோ ஆர்வமிழந்திருப்பதையோ இளிவரலையோ விழியறிதலாகவே வெளிக்காட்டுவது. மானுடரில் பெரும்பாலும் எவரும் நிமிர்ந்து நின்றிருப்பதில்லை. ஏனென்றால் தன்னில் நிறைந்தோ தான் எனச் செருக்கியோ தன்னுள் மகிழ்ந்தோ இருப்பவர்கள் மிகமிக அரிது. ஆகவே நிமிர்ந்த நிகர்கொண்ட உடலெழுகை பார்ப்பவரில் அச்சத்தையும் மதிப்பையும் விலக்கத்தையும் உருவாக்குகிறது. அதை பயின்று அடைவதே படைக்கலப்பயிற்சியில் முதன்மையானது. உடலை நேர்நிற்கப் பயிற்றினால் உள்ளமும் அதை நடிப்பதை உணரமுடியும்.

ஆனால் அவளுக்கு படைக்கலம் உடலுடன் இயையவில்லை. வாள் வீச்சு அவள் கையின் முழு விசையையும் எடுத்துக்கொண்டது. "வாள் சுழல்வதற்கு காற்றைக் கிழிக்கும் அளவுக்கு விசையை மட்டுமே கை அளிக்கவேண்டும். உள்ளம் வாளைத் தூக்கி சுழற்றுமென்றால் உடலுறுப்புகள் அனைத்தும் விரைவிலேயே சோர்வுறும். அரைநாழிகைகூட வாள் கையில் நிற்காது" என்று காமிகை சொன்னாள். அவள் எப்போதும் வாளை நிலத்திலூன்றி மூச்சிரைக்க நெஞ்சு அறைபட தலைகுனிந்து நின்றிருப்பாள். விற்பயிற்சியில் இலக்குகள் ஒவ்வொருமுறையும் குறி தவறின. தொடுக்கும்போது அணுக்கமென நேரில் தெரியும் இலக்கு விரல்விடுக்கும்போது எப்படி அகல்கிறது என அவளால் புரிந்துகொள்ள முடியவேயில்லை.

"ஏனென்றால் உங்கள் உடலில் கோணலிருக்கிறது. உங்கள் அத்தனை உடலுறுப்புகளிலும் அக்கோணல் வெளிப்படும். இளவரசி, அதை உள்ளத்தை சீரமைப்பதனூடாகவே நேர்செய்ய இயலும்." பின்னர் காமிகை அவள்மேல் ஆர்வமிழந்தாள்.

“தோள்களை இறுக்கமாக வைத்துக்கொள்ளுங்கள். முதுகை நிமிர்த்தி கண்முன் தெரியும் மானுடரல்லாத புள்ளி ஒன்றை நோக்கி விழிநிறுத்துங்கள். ஓரளவு கூர்மை உங்கள் அசைவுகளில் வெளிப்படும்... அது ஒன்றே நான் இனி சொல்லவேண்டியது” என்றாள். அவள் பெருமூச்சுடன் கால்மாற்றியபோது இடக்கை சரிய வளையல்கள் ஓசையிட்டன. தன்னுணர்வுகொண்டு உடல் நீட்டி நேர்முதுகுடன் நின்றாள். அதற்குள் தலையாடை பின்னால் இழுபட்டது. அதை இழுத்து போட்டுக்கொண்டபோது காவலன் வெளியே வந்து தலைவணங்கினான்.

“பொறுத்தருள்க அரசி, தங்களை தனியறையில் வந்து சந்திப்பதாக இளைய பாண்டவர் சொன்னார். உள்ளே நிகழ்ந்துகொண்டிருக்கும் அரசுசூழ்கை முடிந்ததும் அங்கு வருவதாகவும் அதுவரை ஆற்றியிருக்கும்படியும் கோரினார்” என்றான். பலந்தரை உரத்த குரலில் “அவரிடம் சொல்விளையாட நான் வரவில்லை. நான் இளைய யாதவரிடம் மட்டுமே பேச வந்தேன். உள்ளே சென்று காசிநாட்டு இளவரசி பலந்தரை அவரிடம் பேச விரும்புவதாக இளைய யாதவரிடம் கூறுக!” என்றாள். “அரசி...” என்று காவலன் சற்று தயங்க “சென்று கூறுக!” என்று உரத்த குரலில் கைதூக்கி அவள் ஆணையிட்டாள்.

அவன் சலிப்புடன் விழிதாழ்த்தி தலைவணங்கி கதவைத் திறந்து உள்ளே சென்றான். எழுந்த சினத்தை உடலெங்கும் பரவவிட்டு பற்களை இறுகக் கடித்து கண்மூடி ஒவ்வொரு கணமாக அவள் கடந்து சென்றாள். கதவு திறந்து மூடிய இடைவெளியில் மீண்டும் பீமனின் குரல் “பழி!” என துள்ளி விழுந்தது. அவள் காத்துநின்றபோது உள்ளே நிகழ்வதென்ன

என உளமோட்டினாள். மீண்டும் நெடுநேரமாகியது. அவள் கால்மாற்றிக்கொண்டாள்.

கதவு திறக்கும் ஓசையில் சற்று திடுக்கிட்டாள். காவலன் "உள்ளே வருக, அரசி" என்றான். அவள் மீண்டும் தன் ஆடையைத் திருத்தி மேலாடையைச் சுழற்றி தோளிலிட்டபடி உள்ளே சென்றாள். அவன் முறைமைச்சொல் எதையோ விட்டுவிட்டான் என்னும் உணர்வு எழுந்ததுமே அவள் மீண்டும் கோத்துருவாக்கிய தன்னிலையை இழந்தாள். நடை நெளிய பற்களைக் கடித்தபடி நடந்து கூடத்திற்குள் சென்று நின்றாள்.

சொல்சூழ் அவையில் யுதிஷ்டிரர் மையமாக பீடத்தில் அமர்ந்திருக்க அவருக்குப் பின்னால் சிறுபீடங்களில் நகுலனும் சகதேவனும் அமர்ந்திருந்தனர். நேர் எதிரில் இளைய யாதவர் பிறிதொரு பீடத்தில் அமர்ந்திருந்தார். அவருக்குப் பின்னால் அர்ஜுனன் வேறெங்கோ நிலைத்த நோக்குடன் இருந்தான். சாளரத்தோரம் கைகளை மார்பில் கட்டியபடி பீமன் நின்றான். அவள் உள்ளே நுழைந்ததும் பீமனின் விழிகளைத்தான் சந்தித்தாள். நெஞ்சு திடுக்கிட விலக்கிக்கொண்டு யுதிஷ்டிரரை அணுகி தலைவணங்கினாள்.

அவைக்குள் நுழைந்தபோது பாண்டவர்களின் முகங்கள் கலங்கியும் சிவந்தும் இருப்பதை, பீமன் நிலையழிந்தவனாக உடல் ததும்ப அசைந்துகொண்டிருப்பதை பலந்தரை கண்டாள். அதுவரை அங்கு பேசப்பட்டது குந்தியின் மாண்பை அவையில் துரியோதனன் இழிவுசெய்ததை பற்றித்தான் என்றும் அவர்களின் உளக்கொதிப்புகளை இளைய யாதவர் தன் சொல்சூழ்கையால் வென்றுவிட்டிருக்கிறார் என்றும் உணர்ந்தாள். அதற்கடுத்த சொல்லுக்குச் செல்ல அவர்கள் தவித்துக்கொண்டிருந்தனர் என்று தோன்றியது. அவள் இளைய

யாதவரை வணங்கி “நான் தங்களிடம் சில வினாக்களை உசாவவே வந்தேன்” என்றாள்.

பீமன் உரத்த குரலில் “அதற்கான இடமல்ல இது. நாங்கள் முதன்மை அரசுநடவடிக்கைகள் சில குறித்து இங்கே சொல்சூழ்ந்துகொண்டிருக்கிறோம்” என்றான். “ஆம், அறிவேன். எதுவரைக்கும் உங்கள் சொல் செல்லும் என்றும் அறிவேன். அதைத்தான் இளைய யாதவரிடம் பேச வந்தேன்” என்றாள் பலந்தரை. அவ்வாறு தலை நிமிர்ந்து துடுக்காகப் பேசியது அவளுக்கே தன்னம்பிக்கையை அளிக்க “உங்கள் அவையில் இதுவரை பேசப்பட்டதென்ன என்றும் நான் அறிவேன். இப்போதல்ல, சென்ற பதினேழாண்டுகளாக” என்றாள். அந்த அவையில் திரௌபதி இல்லை என்பது அதன் பின்னரே அவள் உள்ளத்தில் உறைத்தது. அவளிடம் கூடிய அந்நிமிர்வு அதனால்தானா என ஆழத்திலொன்று வியப்பு கொண்டது.

“அவ்வாறு அறிந்திருப்பீர்களெனில், நன்று அரசி. தாங்கள் தங்கள் கொழுநர்மேல் எத்தனை பற்று கொண்டிருக்கிறீர்கள், எவ்வளவு அணுகியறிகிறீர்கள் என்பதையே அது காட்டுகிறது” என்று இளைய யாதவர் சொன்னார். “அமர்க, தாங்களும் இச்சொற்சூழ்கையில் கலந்துகொள்வது நன்றுதான்.” அந்த இன்சொல் அவளை உள்ளூர தளரவே செய்தது. மூச்சிரைக்க சுற்றும் பார்த்தாள். அங்கு பீடம் ஏதுமில்லை. நகுலன் எழுந்து விலகி அவளுக்கு பீடமளிக்க அதில் சென்று அமர்ந்துகொண்டாள். இளைய யாதவர் “அரசி, இங்கு என்ன நடந்துகொண்டிருக்கிறது என்றால்…” என்று தொடங்க “ஆம், நான் அறிவேன். இனி என்ன செய்வதாக இருக்கிறீர்கள் என்று மட்டுமே அறிய விழைகிறேன்” என்றாள்.

மீண்டும் சினமெரியத் தொடங்கியபோது அகத்தளர்வைக் கடந்து தன்னை கூர்த்துக்கொண்டாள். இளைய யாதவர் “தாங்கள் அறிந்திருப்பீர்கள் அரசி, அஸ்தினபுரி போர் அறிவிப்பு செய்துவிட்டது. பாண்டவர்கள் மீது மட்டுமல்ல பாரதவர்ஷத்தின் ஷத்ரியர்கள் அல்லாத பிற குடிகள் அனைத்திற்கு மீதும். இப்போது நம்மிடம் முதன்மை ஷத்ரிய அரசுகள் எதுவுமில்லை. ஆனால் ஷத்ரியர்களை நம் பக்கம் கொண்டுவர முடியாது என்றும் அதற்கு பொருளில்லை. நாம் இணையான படைக்கூட்டை அமைக்க முடியும். பெருவீரர்களால் அப்படை நடத்தப்படுமெனில் அது வெல்லும் திறன்கொண்டதே. ஆகவே அஞ்சி எதையும் முடிவெடுக்க வேண்டியதில்லை. நாம் இறுதி முடிவெடுப்பதற்குள் இன்னும் ஒருமுறை முயலலாம் என்றே எண்ணுகிறேன்” என்றார்.

“என்ன முயற்சி? நான் உண்மையில் அறிய வந்ததே அதைத்தான்” என்றாள் பலந்தரை. “போர் ஒழிய என்ன செய்யமுடியும் என்பதைக் குறித்து மட்டுமே நாங்களும் பேசிக்கொண்டிருக்கிறோம்” என்றார் இளைய யாதவர். பலந்தரை ஏளனச் சிரிப்புடன் “போர் அறிவிப்புக்குப் பின் போர் தவிர்த்தல் பற்றி பேசுகீறீர்கள், நன்று!” என்றாள். ஏளனம் ஓர் விழிச்சிற்பமாக நீடிக்க இதழ்களை சுழித்து வைத்திருப்பது உகந்த வழி என அவள் கற்றிருந்தாள். “நாளை போர்க்களத்திலும் நின்று அதைக் குறித்து பேசுவீர்கள் போலும். தலைகொய்யும் முன் அவர்கள் அதை செவிகொண்டால் நன்று. உயிருடன் ஒளிந்து காட்டுக்குள் ஓடி வாழமுடியும். அதற்குரிய பயிற்சியையும் எடுத்துவிட்டார்கள்” என்றாள்.

இளைய யாதவர் வாயெடுப்பதற்குள் பீமன் “உன்னுடைய நச்சுச் சொற்களை கேட்பதற்காக இங்கு நாங்கள்

அமர்ந்திருக்கவில்லை. எழுந்து வெளியே போ!” என்றான். பலந்தரை அவனை நோக்கி திரும்பி “இந்த அவை அரசரால் நடத்தப்படுகிறது, இளைய யாதவரால் எதிர்கொள்ளப்படுகிறது என்று அறிந்தேன். அதை நம்பியே இங்கு வந்தேன். இதை எவர் நடத்துவதென்று தெளிவடைந்தால் மேலே பேச முடியும்” என்றாள். பீமன் “வெளியே போ! இல்லையேல் உன்னை வெளியேற்ற என்னால் இயலும். போ வெளியே!” என்று கையை ஓங்கியபடி அருகணைய யுதிஷ்டிரர் திரும்பி “இளையவனே, அமைக!” என்றார்.

பீமன் எழுந்த கை தணிய “இவள் யாரென்று உங்களுக்குத் தெரியும், மூத்தவரே. இவளும் இவள் அன்னையும் சிறுமதியர். பெரிதென்றும் சிறந்தது என்றும் எதுவும் அறியாது வளர்க்கப்பட்டவள் இவள்” என்றான். “இது உங்களுக்குள் பேசவேண்டியது, அவையில் எழவேண்டிய சொல் அல்ல” என்று சகதேவன் கடுங்குரலில் சொல்ல பீமன் தணிந்து விழிதாழ்த்தி கைகளை அசைத்து “அவ்வாறென்றால் நான் செல்கிறேன். இந்த அவையில் நான் கூற ஏதுமில்லை” என்றான். இளைய யாதவர் “பொறுத்திருங்கள், இளைய பாண்டவரே” என்று மெல்லிய குரலில் சொன்னதும் “ஆம்” என்று தலைவணங்கி பீமன் மீண்டும் சாளரத்தருகே சென்று கைகளை கட்டிக்கொண்டான். வெளியே நோக்கியபடி உடலின் ஒவ்வொரு தசையிலும் சினம் வெளிப்பட நின்றான்.

இளைய யாதவர் பலந்தரையிடம் “காசி நாட்டரசி, போர்அறிவிப்பு என்பது போருக்கான முதல் நடவடிக்கை என்பது மெய்தான். ஆனால் அதைத் தொடர்ந்து பிறிதொரு முதன்மைச் சடங்கு உள்ளது. வைதிகர் அவையைக்கூட்டி பெருவேள்வி ஒன்றை குறிப்பது. போர்வெற்றிக்கென

தெய்வங்களை அவிகொடுத்து நிறைவடையச்செய்து உடன் கொள்வது. அதில் பங்கெடுக்கும் வேந்தர்களே படைக்கூட்டின் முதன்மைப் பொறுப்பை கொள்ள முடியும். அஸ்தினபுரியில் அத்தகைய வேள்வி ஒன்று இன்னும் ஏழு நாட்களில் நிகழவிருக்கிறது. அனைத்துக் குலங்களைச் சார்ந்த அந்தணர்களையும் அஸ்தினபுரியின் அமைச்சர்கள் அழைத்து வந்துகொண்டிருக்கிறார்கள். அங்கு நிகழவிருப்பது அதர்வ நெறிப்படி ஒரு மாபெரும் பூதவேள்வி" என்றார்.

"அந்த வேள்விச்சாலையின் அந்தணர் அவையில் இப்போரின் தேவையையும் நெறிகளையும் ஷத்ரியர்கள் முறைப்படி அவர்களுக்கு விளக்கவேண்டும். அந்தணர் அதை ஏற்று வாழ்த்துச்சொல் உரைக்கவேண்டும். அவர்களால் அதர்வ வேதம் ஓதப்பட்டு மகாபூத வேள்வி நிகழ்த்தப்பட வேண்டும். பிறகுதான் குலதெய்வங்களுக்கு குருதிப்பலி அளித்து, படைக்கலங்களுக்கு குருதிதொட்டு குறியிட்டு, போருக்கு கிளம்ப முடியும்" என்று இளைய யாதவர் சொன்னார். "இனி அந்தணர்களிடம் சென்று சொல்லாடவிருக்கிறீர்களா?" என்று பலந்தரை கேட்டாள். "அதைவிட அங்கு போர்முரசறையும் சூதர்களிடம் சென்று பேசலாம். அவர்கள் முழைக்கோலைச் சுழற்றி அடிக்காவிடில் முரசுகள் முழங்காது, படை எழுகையும் நிகழாது."

புன்னகைத்து "சினத்தில் சரியாக இளிவரல் சொல்லெடுக்கப் பயின்றுள்ளீர்கள், அரசி" என்று இளைய யாதவர் சொன்னார். "தேவையென்றால் போர்முரசு கொட்டும் சூதரிடமும் பேசமுடியும். பெரும்போர்கள் மிகச் சிறிய தொடக்கங்களை கொண்டுள்ளன. சிறிய தடைகளே அவற்றை நிறுத்தவும் கூடும். மலையிறங்கி வரும் பெரும்பாறைகள் சிறுகல்லால்

தடுக்கப்பட்டு ஆயிரமாண்டுகாலம் சரிவில் நின்றிருப்பதை நீங்கள் கண்டிருப்பீர்கள்" என்றார். பலந்தரை "அணிச்சொல்லாட நான் இங்கு வரவில்லை. இங்கு என்ன முடிவெடுக்கப்பட்டுள்ளது?" என்றாள். "இரந்துண்ணும் அந்தணரிடம் சென்று கையேந்தும் முடிவு அல்ல என்று நம்புகிறேன்."

"எடுக்கப்பட்டுள்ள முடிவு என ஏதுமில்லை. என் கருத்து ஒன்றை முன்வைத்தேன், பேசத்தொடங்கினோம்" என்றார் இளைய யாதவர். "அந்தணர் அவைக்கு சாந்தீபனியின் தத்துவ ஆசிரியராக நான் செல்லவிருக்கிறேன். அங்கிருக்கும் அந்தண முதல்வர்களை வேதச்சொல் உசாவ அழைப்பேன். அவர்கள் இப்போருக்கு அளிக்கும் ஒப்புதல் பிழையானதென்றும், அது வேதம் காப்பதற்கல்ல, காலப்போக்கில் வேதத்தை அழிப்பதற்கு மட்டுமே உதவும் என்றும் சொல்லப்போகிறேன். அவர்கள் ஒப்புவார்கள். குறைந்தது, வேதம் காப்பதற்காக எழுந்தது அப்படை என்னும் அவர்களின் அறிவிப்பையாவது உடைத்துவிட்டு மீள்வேன்" என்றார்.

பலந்தரை "இந்தத் தத்துவ பூசல்களால் என்ன பயன்? இந்த நிலத்தில் மண் விளைவதைவிட நா விளைகிறது" என்றாள். பீமன் மீண்டும் பொறுமையில்லாத உடலசைவை எழுப்ப ஓரநோட்டத்தால் அதை அடக்கி புன்னகை மாறாமல் இளைய யாதவர் சொன்னார் "அரசி, வேதம் காக்க எழுந்தது அப்படை என்னும் எண்ணம் உடைந்தால் எஞ்சியுள்ள ஷத்ரியர்களென தங்களை எண்ணி மயங்கும் சிறுகுடி அரசர்களை நம் பக்கம் இழுப்பது எளிதாகும். போர் எழுகையில் படை முதன்மைகொள்வதன் அடிப்படையிலேயே போர் முடிந்தபின் நிலம் பங்கிடப்படும். ஆகவே எப்பொழுது அவர்கள்

படைநிரையை அறிவிக்கிறார்களோ அப்பொழுதே அங்குள்ள ஷத்ரியர்களிடம் பூசலும் தொடங்கும். அவ்வாறு ஊடி விலகுபவர்கள் சிலரை இப்பக்கம் நாம் இழுக்க முடியும். எவ்வகையிலாயினும் இந்த அந்தணர் அவையில் என் குரல் ஒலித்தாக வேண்டும்.”

பலந்தரை மேலே சொல் எழாக் குழப்பத்துடன் யுதிஷ்டிரரையும் சகதேவனையும் பார்த்தாள். “தாங்கள் வந்ததும் நன்றே, அரசி. நாங்கள் பேசிப் பேசி முட்டிக்குழம்பிக்கொண்டிருந்தோம். தங்களிடம் பேசும் பொருட்டு எளிமையாக்கி சுருக்கியபோது எங்களுக்கே தெளிவு வந்தது” என்று இளைய யாதவர் சொன்னார். யுதிஷ்டிரர் மெல்ல அசைந்து அமர்ந்து “யாதவனே, பலமுறை பல வைதிக அவைகளில் வேதமும் வேதாந்தமும் முட்டிக்கொண்டிருக்கின்றன. இத்தருணம் வரை இரு தரப்பிலிருந்தும் சற்றும் நிலை தாழ்ந்த சொல் எழவில்லை. இத்தருணத்தில் என்ன நிகழக்கூடும்?” என்றார்.

“ஆம் அரசே, ஆனால் இதுவரை நிகழ்ந்த அனைத்துச் சொல்லாடல்களும் முடிவை முன் கண்டவை அல்ல. அவை அறிவுக் கருத்தாடல்களில் இரு தரப்பினரும் தங்கள் மிகச் சிறந்த நோக்குகளை அங்கே முன்வைக்கவே முயன்றிருப்பார்கள். அங்கே மெய்யைவிட தங்கள் கூர்மதி வெல்லவேண்டும் என்றே அனைவரும் எண்ணுவார்கள். எங்கேனும் சென்றடைந்தே ஆகவேண்டும் என்னும் தேவை அவர்களுக்கு இருக்கவில்லை. இப்போது அது இருக்கிறது. குருதி விடாய் கொண்ட பெருந்தெய்வமென ஆயிரம் கைகள் விரித்து அமர்ந்திருக்கும் போர்த்தெய்வத்தின் முன்னர் அமர்ந்து இச்சொல்சூழ்கை நிகழவிருக்கிறது. அந்தணரும்

வைதிகமுனிவரும் அறிந்த ஒன்றுண்டு. வேதம் காப்பதற்கே ஆனாலும் போர் என்பது வேதநெறி விளங்கும் குலங்களையும் முற்றழிப்பதேயாகும். போர் கடந்து சென்ற நிலத்தில் குலநெறிகள் அழியும். குலநெறி என்னும் பீடத்தின் மேல்தான் வேத நெறிஅமர்ந்திருக்கிறது."

"அந்தணர்போல போரை அஞ்சுபவர் பிறரில்லை. ஏனெனில் இந்தப் பெருமரத்தின் மலர்களில் தேனை மட்டும் உண்பவர்கள் அவர்கள்" என்றார் இளைய யாதவர். "அவையில் எழவிருக்கும் போரின் பேரழிவை முதலில் சொல்லி விரித்தபின் வேத வேதாந்தங்களுக்கு இடையேயான மெய்யான முரண்பாடென்ன என்பதை உணர்த்துவேன். பரம்பொருளுக்கும் பருப்பொருளுக்குமான முரண்பாடு அது. இரண்டும் ஒன்றே எனினும் இரண்டும் ஒன்றாகத் தெரியாது எனும் இடர். மாயையில் இரண்டென்றும் மெய்மையில் ஒன்றென்றுமான விளையாட்டு. அவர்களில் மிகச் சிலரேனும் அதை நோக்கிவர இயலுமென்றால்கூட நாம் வென்றவர்களாவோம்."

"நடைமுறையில் இந்தப் போருக்கு உடனடியாக அவர்கள் ஒப்புதல் கொடுக்காமல் இருந்தாலும்கூட நமக்கு வெற்றியே. உண்மையைக் கூறினால் ஓராண்டுகாலம் இப்போர் ஒத்திப்போடப்படுமென்றாலும்கூட நாம் வெற்றி நோக்கி செல்பவர்களாவோம்" என்றார் இளைய யாதவர். "ஏன்?" என்று ஐயத்துடன் யுதிஷ்டிரர் கேட்டார். "அரசே, அப்படைக்கூட்டு மிகப் பெரியது. மிகப் பெரியவை எவையும் அவற்றின் பேரளவினாலேயே வடிவ இறுக்கத்தை தக்கவைக்கும் ஆற்றல் கொண்டவையாக இருக்க வாய்ப்பில்லை. ஓராண்டு நீடிக்குமென்றால் அவர்களுக்குள் பூசல்கள் எழும். பலர் பிரிந்து அகல்வார்கள். ஆற்றல்கொண்ட பெரிய நாடொன்று பிரிந்து

சென்றால் போதும், அதுவே தொடக்கமாகும். பிரிந்து செல்ல இயலும் என்பதும் பிரிந்து சென்றால் என்ன கிடைக்குமென்பதும் ஒருமுறை அவர்களுக்கு காட்டப்பட்டால் பின்னால் கணிகரே ஆனாலும் அப்பிளவை தடுக்க இயலாது” என்றார் இளைய யாதவர்.

“இன்று அப்படைக்கூட்டு ஒற்றை உடலென உறுதியுடன் எழுந்து நிற்கிறது. அவ்வுறுதி அளிக்கும் தன்னம்பிக்கையால்தான் அவர்களின் அறிவிப்பில் அத்தனை ஆணவமும் பெருவிழைவும் உள்ளது. அந்தப் படைக்கூட்டு உடையத்தொடங்கினாலே அவர்களின் உளம் பதறிவிடும். கையிலிருக்கும் பொழுது கரைந்துகொண்டிருக்கிறது என்று அவர்கள் அறியத் தொடங்கினால் மேலுமொரு சொல்சூழ்கைக்காக நாம் அவர்களுடன் அமர முடியும்” என்று இளைய யாதவர் சொன்னார். பலந்தரை அவர் சொல்லவருவதென்ன என்பதை முற்றிலுமாக புரிந்துகொள்ளாமல் முகங்களை மாறி மாறி பார்த்தாள். பாண்டவர்களின் உடலமைவுகளிலேயே நம்பிக்கையின்மை வெளிப்படுவதை அவளால் உணரமுடிந்தது. பெருமூச்சுவிட்டபோது தன் உடலும் சோர்வைக் காட்டுமுகமாக தொய்ந்திருப்பதை உணர்ந்தாள்.

இளைய யாதவர் அவள் முகத்தைப் பார்த்து “அரசி, எனக்கு மூன்று முகங்கள் என்று தாங்கள் அறிந்திருப்பீர்கள். யாதவ குடிப்பிறந்தவன் என்ற வகையில் என் அத்தையின் மைந்தருக்காக முதலில் சொல்லுடன் சென்றேன். படைமுகம் நின்றவன், நாடாண்டவன் என்னும் முறையில் ஷத்ரிய அவையில் சென்று சொல்சூழ்ந்து மீண்டுள்ளேன். இன்று சாந்தீபனி குருநிலையில் வேதம் முற்றோதிய முதலாசிரியன்

என்ற முறையில் செல்ல எண்ணுகிறேன். இதுவே என் முதன்மை முகம். என் முழு ஆற்றலும் இதிலேயே. இது வெல்லும்” என்றார்.

யுதிஷ்டிரர் பெருமூச்சுடன் “வென்றாகவேண்டும், நமக்கு வேறு வழியில்லை” என்றார். சகதேவன் “இளைய யாதவரே, நீங்கள் படைக்கூட்டு குறித்து சொன்னீர்கள். ஷத்ரியர்கள் மாறாப் பொதுநெறி கொண்டவர்கள். ஏதேனும் பொதுநெறி கொண்டவர்கள் மட்டுமே அந்நெறிகளின் வழியாக இணைக்கப்பட்டு ஒன்றாக சேர இயலும். பாரதவர்ஷத்தில் எவ்வரசர்களேனும் படைக்கூட்டு கொள்ள முடியும் என்றால் அது ஷத்ரியர்களே. ஷத்ரியர்கள் எவர் என்பதில் மட்டுமே அவர்களிடம் பூசல் உள்ளது. ஷத்ரிய அறம் என்ன என்பதில் எப்போதும் அவர்கள் மாற்றுச்சொல் கொண்டதில்லை” என்றான்.

“ஆனால் நம் தரப்பில் இருப்பவர்கள் அப்படியல்ல” என்று சகதேவன் தொடர்ந்தான். “சென்ற சில நாட்களாகவே நம்முடன் சேர்ந்துள்ள நிஷாதர்களையும் கிராதர்களையும் அசுரர்களையும் அரக்கர்களையும் சந்தித்து வருகிறேன். நெறியென்பது என்ன என்பதிலேயே ஒவ்வொருவரும் கொண்டுள்ள பார்வை முற்றிலும் வேறாக உள்ளது. வென்றபின் எதிரியை வணங்கி தன் படை வரவின் இழப்புகளையும் செலவுகளையும் எடுத்துரைத்து அவன் அளிக்கும் கொடையை பெற்றுக்கொண்டு குடி திரும்ப வேண்டுமென்று அசுரர் குடித்தலைவர் காகர் என்னிடம் நேற்று சொன்னார். வென்ற எதிரியின் குலத்தை முற்றழித்து அவன் குருதியை மண்டைகளில் ஏந்திக் குடித்து களியாடவேண்டும் என்றும் அக்குலத்தில் ஒரு துளியேனும் எஞ்சாமல் இருக்கும்பொருட்டு அவ்வூரையும் மண்ணையும் தீ வைத்துவிட்டு மூன்று ஆண்டுகாலம் அந்நிலப்பகுதியில்

பிறிதொரு மானுடர் செல்லாமல் காவலமைத்து ஊர்திரும்பவேண்டுமென்றும் அதற்கு முந்தைய நாள் அரக்கர் குலத்தலைவர் வக்ரசீர்ஷர் என்னிடம் சொன்னார். இவர்கள் அனைவரையும் சேர்த்து நாம் அமைத்திருக்கும் இந்தப் படை அப்படை சிதறுவதற்கு முன்னரே சிதறிவிடும் என நான் அஞ்சுகிறேன்.”

“ஒரு பெரும் வேறுபாட்டை உளம் கொள்ளவேண்டும், இளையோனே” என்றார் இளைய யாதவர். “ஷத்ரியர்கள் தங்கள் விழைவின் பொருட்டு கூடியிருக்கிறார்கள். ஒவ்வொரு கணமும் இருமடங்கென வளர்வது அது. நாமோ தற்காத்துக்கொள்ளும் பொருட்டு இங்கு கூடியிருக்கிறோம். ஒவ்வொரு நாளும் சுருங்கி வரும் நம்பிக்கை இது. நம்மை ஒருங்கிணைத்து நிறுத்தும் ஆற்றல் இதற்குண்டு” என்றார். சகதேவன் “எப்படியாயினும் படைக்கூட்டுகள் நெடுநாள் நீடிக்க இயலாது” என்றான். “அணுகிவரும் போர்க்களத்தை கற்பனையில் கண்டு அவை அமைக்கப்படுகின்றன. அப்போர்க்களம் அகன்று செல்லும் என எண்ணம் எழுந்தாலே அவை ஆற்றல் இழக்கத்தொடங்கிவிடும்” என்றான்.

“வைதிகர் அவையில் தாங்கள் வேதாந்தநெறியைக் கூறி அவர்களை வென்றீர்கள் என்றால்…” என்று யுதிஷ்டிரர் தொடங்க இளைய யாதவர் கையசைத்து “பொறுங்கள். நீங்களும்கூட நான் சொல்வதென்ன என்பதை புரிந்துகொள்ளவில்லை. வேதநெறிக்கு எதிரானதல்ல வேதாந்தநெறி. வேதநெறி இறுகி விளைந்த முத்து அது. வேத அன்னை ஈன்றெடுத்த மைந்தன். வேதவிறகிலெழுந்த கனல். இதுவே அது என அவர்கள் புரிந்துகொள்ளும் ஒரு கணம். அதுவே நான் உன்னுவது. அதன் பின் வேதாந்தத்திற்கு எதிரான போர் என்பது வேதத்திற்கு

எதிரான போர் என்பதை அவர்களுக்கு புரியவைத்துவிட முடியும் என்னால்” என்றார்.

“ஆனால் அவர்கள் வேதத்தால் வாழ்பவர்கள்” என்று பீமன் திரும்பாமலேயே சொன்னான். “வேதாந்தத்தை ஏற்று அவர்களுக்கு என்ன கிடைக்கப்போகிறது? வேதம் ஓதி அனலோம்பி எழும் வேள்விகளில் கொடைபெற்று செழிக்கும் குலம் அந்தணர். வேதாந்திகளாகிய நீங்கள் எரியோம்புவதில்லை. கொடைபெற்று செழிப்பதுமில்லை. அது நான் என அமர்ந்திருக்கிறீர்கள். நெய்க்கரண்டியையும் தர்ப்பையையும் கைவிட்டு தாங்களும் அவ்வாறே அமர்வதற்கு அந்தணர் எப்படி ஒப்புவார்கள்?”

இளைய யாதவர் “ஆம் பாண்டவரே, தாங்கள் சொல்வது மெய். ஆனால் விண்ணில் செல்லும் பறவைக்கூட்டங்களை பாருங்கள். ஒற்றை உடலென அவை மிதந்து செல்கின்றனவென்றாலும் முன்செல்லும் ஒரு பறவையின் சிறகசைவே அவற்றை திசை மேற்கொள்ளச் செய்கிறது என்பதை காண்பீர்கள். வைதிகர் இந்நாடெங்கும் பெருகியிருக்கும் பரப்பென்றாலும் அதன் மையமென அமைந்த பெருவைதிகர்கள் சிலரே. அவர்களையே வேதமுனிவர்கள் என்கிறோம். நான் பேசவிருப்பது அவர்களிடமே” என்றார்.

“அவர்கள் வேதம் முற்றோதியிருப்பார்கள் என்பதனாலேயே தங்களை அறியாமலேயே வேதமுனையை வந்தடைந்திருக்கவும் செய்வார்கள். முரண் கொள்ளாமல் வேதம் கற்கவும் ஆழம் கலங்காமல் அதை முடிக்கவும் எவராலும் இயலாது. நிகர் நிலத்திற்கு வந்த பெருநதியென எட்டு திசைக்கும் ததும்பி விரியும் பெருக்கே வேதம். அதில் இல்லாத மெய்யுசாவல்களோ சொல்மோதல்களோ இல்லை.

பெருமைக்கு நிகராக சிறுமையும் கொண்டது. ஒளிக்கு நிகராக இருளும் செறிந்தது. பாற்கடல் கடைதலே வேதம் கற்றல் என்று வகுத்தனர் முன்னோர். அதிலிருந்து திரண்டு வரும் அமுதென்ன என்னும் வினா அவர்களுக்குள்ளும் இருக்கும். வண்ணங்கள் கலந்து வெண்மை எழுவதுபோல, திசைகள் சுழன்றால் மையம் சுழிப்பதுபோல ஒன்று அதற்குள் உறைந்திருக்க வேண்டுமென்று அவர்களும் அறிந்திருப்பார்கள். அதை அவர்களிடம் கூறுவோம்.”

பலந்தரை முற்றிலும் அச்சொற்களிலிருந்து உளம் விலகிவிட்டிருந்தாள். அவள் கொண்டுவந்திருந்த சினம் முற்றாக கரைய தன் கால்களால் தரையில் விரிக்கப்பட்டிருந்த மரவுரிக் கம்பளத்தை நிமிண்டியபடி தலைசரித்து விழிசாய்த்து அமர்ந்திருந்தாள். எப்போது நிகழ்காலத்திலிருந்து விடுபட்டாலும் அவள் உள்ளம் காசிநாட்டுக்கு சென்றுவிடுவது வழக்கம். அவள் கங்கைக்கரை குறுங்காட்டில் கரையோரமாக நின்ற மரமொன்றின் வேர்ப்புடைப்பில் அமர்ந்து அலைகளை நோக்கிக்கொண்டிருந்தாள். தலையாடை முற்றிலுமாகச் சரிந்து அவள் சுருள்குழல்கற்றைகள் தெரிவதையும் அவற்றிலொன்று முகத்தின்மேல் விழுந்து காற்றிலாடி அவளை இளஞ்சிறுமியெனக் காட்டுவதையும் அவள் அறிந்திருக்கவில்லை.

# குருதிச்சாரல் - 55

**பகுதி எட்டு : குருதிகொள் கரியோள் – 5**

பலந்தரை எழுந்து சென்றுவிடுவதைப்பற்றி எண்ணிக்கொண்டிருந்தாள். அன்னை எத்தனை பெரிய வீண்நெஞ்சத்தவள் என தோன்றியது. இந்நாடுகள் நகரங்கள் அரசவைகள் போர்கள் மட்டுமல்ல நூல்களும் கொள்கைகளும் வேதங்களும் என ஆண்கள் வகுத்து அமைத்து அவர்கள் மட்டுமே அமர்ந்து ஆடும் பெருங்களம் இது. அதில் பெண்கள் கருக்கள், பேசுபொருட்கள், சிலையுருக்கள் மட்டுமே. அவர்கள் அதில் ஈட்டுவதும் இழப்பதும் ஏதுமில்லை. அவர்கள் மீது பெண்களுக்கிருக்கும் ஒரே சொல்கோன்மை அவர்களின் குருதியை மைந்தராக்கி அளிக்கவியலும் என்பதே.

அங்கிருந்து எப்படி எழுந்து செல்ல வேண்டுமென்று எண்ணியபோது ஏதும் வழி தென்படவில்லை. புரியாமல் சலிப்புற்றோ, வெல்லவியலாதென்று ஏமாற்றமுற்றோ எழுவதுபோல தெரியக்கூடாது. எரிச்சலுற்று எழவேண்டும். சினந்து எழுந்து சென்றபின் அவர்கள் வருந்துவதுபோல எதையாவது சொல்லவேண்டும். அவள் அவர்களின் பேச்சுக்களை விழிகளால் நோக்கிக்கொண்டிருந்தாள். ஒரு சொல், ஒரு சிறுபொறி போதும் என. ஆனால் அவர்கள் அவளை முழுமையாக மறந்துவிட்டிருந்தார்கள்.

இளைய யாதவர் “அதன்பின் நாம் நம் உரிமையை கோருவோம். அது என்றும் அவ்வண்ணம் இருந்துகொண்டுதான் இருக்கும்” என்றபோது அவள் உரிமை என்ற சொல்லை மட்டுமே கேட்டு தன்னை பற்றவைத்துக்கொண்டாள். பீடத்தின் கைகளை இரு கைகளாலும் தட்டியபடி உரத்த குரலில் “நான் கேட்கவிருப்பது ஒன்றே. எவ்வண்ணம் நீங்கள் ஐந்து சிற்றூர்கள் மட்டும் போதுமென்று அவர்களிடம் கேட்டீர்கள்?

ஐந்து சிற்றூர்கள் என்றால் என்ன? ஐந்து மேழிகள் திருப்பும் இடமிருக்குமா? ஐந்து பசுக்கள் நின்று மேயும் நிலம் எஞ்சுமா? ஐந்து சிற்றூர்கள் பத்து மைந்தருக்கு பகிரப்பட்டால் அதில் என் மைந்தனுக்கு கிடைப்பதென்ன?" என்றாள்.

அவர்கள் அந்த எதிர்பாராத குரலில் திகைக்க அவள் மேலும் கூச்சலிட்டாள் "இதற்கப்பால் கீழ்மை என ஏதும் எழுந்து சூழக்கூடுமா? பாரதவர்ஷத்தின் வரலாற்றில் ஷத்ரியர் எங்கும் இரக்க கைநீட்டியதில்லை. இதோ, அதுவும் நிகழ்ந்துவிட்டது." இளைய யாதவர் "நான் அங்கு யாதவனாகவே சென்றிருந்தேன், ஷத்ரியனாக அல்ல" என்றார். "நீங்கள் காடுசென்று கன்றோட்டுக! நீங்கள் அந்த அவையில் பாண்டுவின் குருதியில் பிறந்த ஷத்ரியர்களுக்காக கையிரந்தீர்கள்" என்று அவள் சொன்னாள். அவள் குரல் அந்த உச்சத்தால் உடைந்தது. "ஐந்து ஊர்கள் கோரப்பட்டன என்னும் இழிவே சூதர் நாவில் இருக்கும். அது மறுக்கப்பட்டதென்னும் சிறுமையோ இன்னும் நூறு தலைமுறைக்காலம் நம் கொடிவழிகளின் உள்ளத்தில் எஞ்சும்" என்றாள்.

"என் உடல் கூசுகிறது. அவையமர்ந்திருக்கும் மூத்தவர் சொல்க, இதற்கிணையான இழிவை உங்கள் குடியில் எவரேனும் ஏற்றிருக்கிறார்களா? இழிவுபடுத்தப்படுவதே இழிவு. அவ்விழிவை ஏற்பது பேரிழிவு" என்று பலந்தரை கூவினாள். "ஆம், தொல்குடிப் பிறந்த நான் இவர்களை ஒருபோதும் எனக்கு நிகராக ஏற்றதில்லை. அதன்பொருட்டு இவர்கள் என்மேல் சினம்கொண்டதும் உண்டு. இன்று உணர்கிறேன் இவர்களை மிகச் சரியாகவே நான் புரிந்துகொண்டிருக்கிறேன் என்று. ஷத்ரியர் வாளெடுத்து சங்கு அறுத்து விழும் சிறுமைகளின்

முன் இளித்து பணிந்து வளைந்து நின்றிருக்கும் இழிசினர் இவர்கள்.”

யுதிஷ்டிரர் கைநீட்டி ஏதோ சொல்ல வர பீமன் கசப்பு நிறைந்த சிரிப்புடன் “சில தருணங்களிலேனும் மிகச் சரியாகவே என் உள்ளத்தை இவள் வெளிப்படுத்துகிறாள், மூத்தவரே” என்றான். பலந்தரை அவனை ஒருகணம் திகைப்புடன் நோக்கிவிட்டு “அங்கே அவையில் என் தந்தையும் மூத்தவரும் அமர்ந்திருந்தனர். அவர்களிடமும் சென்று இரந்துள்ளார் உங்கள் தூதர். பெண்ணென்று இனி எனக்கு இழிவு என்ன எஞ்சியிருக்கிறது?” என்றாள். மேலும் சினத்தை எழுப்பி சொல்விசை கூட்டி இளைய யாதவரிடம் திரும்பி “அதற்கும் கீழே சென்று இனி நீங்கள் கோரப்போவதென்ன? நீங்கள் வேத அவையில் வென்றீர்கள் என்றே கொள்வோம். போருக்கு அந்தணர் ஒப்புதல் அளிக்க தயங்கினார்கள் என்றே ஆகுக. அதன் பின் அவையமர்வில் நீங்கள் அவரிடம் கோரப்போவதுதான் என்ன?” என்றாள்.

“அஸ்தினபுரியின் மண்ணில் இவர்களுக்கு ஏதேனும் இடம், அவ்வளவுதான். ஐந்து இல்லங்கள். அல்லது ஐந்து குடில்கள் அமைக்கும் நிலம்” என்றார் இளைய யாதவர். “சீ!” என்று உரத்த குரலில் சீறியபடி பலந்தரை எழுந்தாள். “என்ன சிறுமை இது! இதற்கும் கீழ் ஷத்ரியர் இறங்க முடியுமா என்ன?” யுதிஷ்டிரர் முகம் சுளித்து அவளை பொறுக்கும்படி கைகாட்டிய பின் “சொல் இளையவனே, இது என்ன? எவர் கேட்டாலும் நகைக்கும் கோரிக்கை அல்லவா இது?” என்றார். இளைய யாதவர் “பாண்டவரே, அஸ்தினபுரியின் அந்நிலத்திற்குள் உங்கள் குடித்தெய்வங்கள் பதினெட்டு குடிகொண்டிருக்கின்றன. உங்கள் குல மூத்தார் அன்னமும் நீரும் பெறும் ஏழு சுனைகள்

அமைந்துள்ளன. அவற்றுக்கு பூசையும் பலிக்கொடையும் அளிக்கும் தகுதி உங்களுக்கு வரவேண்டுமெனில் நீங்கள் அந்நிலத்தில் குடியிருந்தாகவேண்டும். அதன்மேல் உங்களுக்கு குடியுரிமையேனும் எஞ்சவேண்டும்" என்றார்.

"அறிக, அரசன் தன் குடிகள் மேல் எந்நிலையிலும் படையெடுக்கமுடியாது. அவ்வாறு படைகொண்டு செல்ல வேண்டும் என்றால் மூன்று பெரும்பிழைகளை அவர்கள் இயற்றியிருக்க வேண்டும். அரசவஞ்சம், வேதம் பழித்தல், இறைமறுத்தல். இம்மூன்றும் நீங்கள் ஆற்றவில்லை என்பதை நான் வேதியர் அவையில் நிறுவிவிட்டு வந்தேன் என்றால் அதன்மேல் உங்களை குடிவிலக்கம் செய்து படைகொண்டெழ அஸ்தினபுரியின் அரசனால் இயலாது. அதை அவர்கள் இயற்றாமல் தடுப்பதே நாம் இன்று செய்யவேண்டியது" என்று இளைய யாதவர் தொடர்ந்தார். "நீங்கள் அரசகுடியினரல்ல என்றனர். ஷத்ரியர் அல்ல என்று மீண்டும் வகுத்தனர். குடியென்றேனும் அவர்கள் ஏற்றாகவேண்டும்."

"அதனால் என்ன பயன்?" என்று சகதேவன் கேட்டான். "நாம் வென்றால்கூட என்றோ ஒரு நாள் நாம் தொடுத்த போர் முறையானதல்ல என்று அந்தணர் அவை எண்ணக்கூடும். நமக்கு வேள்வி செய்ய அவர்கள் மறுக்கலாம். நம் குடியினரில் சிலரேகூட அஸ்தினபுரிக்கும் அயலாருக்குமான போரென்று அதை கருதக்கூடும். இன்றே எண்ணிச் சூழ்ந்து அதை தடுத்து வைப்பது நமக்கு நல்லது" என்றார் இளைய யாதவர். "ஏனென்றால் போர் தொடங்கியபின் அறமென ஏதுமில்லை. வெல்வதே ஒரே அறம் அங்கே. நாம் வென்றபின் அறப்பிழைகள் நூறு நம் மீது சுமத்தப்படும். குலமிலிகள்,

அஸ்தினபுரியின் நிலம்விலக்கப்பட்டோர் கொண்ட வெற்றி என்ற சொல் மட்டும் நம் மீது ஒட்டிவிடக்கூடாது.”

பலந்தரை எஞ்சிய முழு சினத்தையும் திரட்டி “இதற்கு நான் ஒருபோதும் ஒப்பப்போவதில்லை. இரந்துண்டவள் என்னும் பழியுடன் காசிநாட்டு அரசியாகிய நான் வாழப்போவதில்லை. அறிக, என் மைந்தன் ஒப்புதலின்றி நீங்கள் செல்ல இயலாது. அவனை என் சங்கில் வாள்வைத்து என் சொல்லில் நிறுத்துவேன். அவனை அகற்றி அங்கு சென்றீர்கள் என்றால் நானும் தொடர்ந்து வருவேன். அதே அவையில் எழுந்து எனக்கும் மைந்தனுக்கும் அத்தூதில் ஒப்புதல் இல்லை என்று அறிவிப்பேன்” என்றாள். “நான் உயிருடனிருக்கும் வரை என் மைந்தனின் தந்தையென்றானவர் பெயர் சொல்லி எவரும் மண்ணிரக்கப் போவதில்லை.”

யுதிஷ்டிரர் “என்ன பேச்சு இது…? இங்கே எவரும் இரக்கப்போவதில்லை, இது ஓர் அரசியல் சூழ்ச்சி” என்றார். “அரசியல் சூழ்ச்சியாக இல்லப்பெண்களை அவர்களின் படுக்கைக்கு அனுப்புவீர்களா என்ன?” என்றாள் பலந்தரை. அறைவிழுந்தவர்போல யுதிஷ்டிரர் வாய்திறந்து உறைய சகதேவன் அறியாமல் எழுந்து நின்றான். ஆனால் பீமன் கைகளை மார்பில் கட்டியபடி அசையாமல் நின்றான். உள்வலித்த குரலில் “சொல்லெண்ணுக!” என்றான் சகதேவன். “நாம் எண்ணிச் சொல்லெடுக்கலாம், ஊருக்கு அதை ஆணையிட நம்மால் இயலாது” என்றாள் பலந்தரை. “முன்னரே உங்கள் குலமகள் அவைச்சிறுமை அடைந்துவிட்டாள். அதையே சொல்லிச் சிரிக்கிறது பாரதவர்ஷம். இன்று அதையும் கடந்துசென்று நிலம் கோரி நின்றிருக்கிறீர்கள்.”

சகதேவன் “போதும்!” என மேலும் தாழ்ந்த குரலில் சொன்னான். “ஐந்து வீட்டுக்கு அமைகிறீர்கள் என்றால் நீங்கள் உங்களுக்குத் தகுதியானது என எண்ணுவது அதுவே என்று பொருள். பாதி நாடும் நகரும் கருவூலமும் கோரியது மிகைவிழைவென்று பொருள். நான் ஒப்பமாட்டேன். என் குருதியின் மீதன்றி நீங்கள் சென்று இதை கோரப்போவதில்லை” என்றாள் பலந்தரை. இளைய யாதவர் “மிக எளிதில் எங்களால் உங்களை தடுக்க முடியும், அரசி” என்றார். “உங்கள் கணவர் உங்களைத் துறந்தால் பிறகு நீங்கள் சொல்லெடுக்கவியலாது. அதற்கு மங்கலநாணைக் கழற்றி அளித்துவிடும்படி உங்களிடம் அவர் கோரினாலே போதும்” என்றார்.

பீமன் “இளைய யாதவரே, இவள்மேல் எப்பொழுதும் முதல் தருணத்தில் எழுவது சினமும் விலக்கமும் மட்டுமே. ஆனால் ஒவ்வொரு முறையும் அதன் இறுதியில் விலக்கமுடியாத அன்பொன்றையே இவள்மேல் உணர்கிறேன். ஏனென்றால் இவளும் என்னைப்போல் அறியாது பதைக்கும் சிறுமியை அகத்தில் கொண்டிருக்கிறாள். இவள் குருதியில்தான் என் மெய்நிகர் வடிவமான என் மைந்தன் பிறந்திருக்கிறான். எந்நிலையிலும் என் உடன்பிறந்தார் பொருட்டோ, குலத்தின் பொருட்டோ, இறைவடிவென என் முன் எழுந்த தங்கள் பொருட்டோகூட இவளை என்னால் துறக்க முடியாது” என்றான். “அதற்கான ஆணை எனக்கு பிறப்பிக்கப்படுமெனில் வாளெடுத்து என் கழுத்தில் வைப்பதன்றி நான் செய்யக்கூடுவதொன்றுமில்லை.”

“போதும், இளையோனே” என்றார் யுதிஷ்டிரர். “இளைய யாதவனே, அவள்மேல் ஒரு துளி அன்பு அவன் உள்ளத்தில் எஞ்சுமென்றால் இவள் எங்கள் குலமகளாகவே இருப்பாள்.

இவள்பொருட்டு அனைத்தையும் துறக்கவும் படைமுகம் நின்று முற்றழியவும் ஒருங்குவோமே ஒழிய மங்கலநாண் மறுப்பதற்கல்ல. அப்பேச்சை ஒழிக!” என்றார். இளைய யாதவர் புன்னகையுடன் “நன்று அரசி, தாங்கள் இயற்றுவதற்கும் இனி ஒன்றுள்ளது. மங்கலநாணை தாங்கள் துறக்கலாம். மிக எளிது. இடக்கையால் அதை இழுத்து அறுத்து தலைக்கு மேல் மும்முறை சுற்றி வலமாக இட்டால் போதும். காசிநாட்டு அரசியர் தொல்குடி ஷத்ரிய முறைமைகள் கொண்டவர்கள். நிஷாதர்களைப்போல எத்தனை முறை வேண்டுமென்றாலும் பூட்டவும் அறுக்கவும் அவர்களுக்கு உரிமை உண்டு” என்றார்.

“அரசி, அகல்விழி அன்னை உடனுறை உலகாள்வோன் அமர்ந்த காசி ஷத்ரிய குடிகளில் மிகத் தொன்மையானதும் தூயதுமாகும். நால்வேதங்களால் நிலைநாட்டப்பட்ட முடி அது. அந்நாட்டரசியின் குடியில் பிறந்த மைந்தர் இயல்பிலேயே முதன்மை ஷத்ரியர் ஆகிவிடுகிறார்கள். பிறப்பாலேயே வேதவாழ்த்தும் வேள்வியவையில் முதலிடமும் பெறுகிறார்கள். ஆகவே சிறுகுடி ஷத்ரியர்கள் மட்டுமல்ல பெருங்குடி அரசர்களேகூட தங்களை மீண்டும் மணம்கொள்ள நிரைவகுத்திருப்பார்கள் என்பதை தாங்களும் அறிவீர்கள். அதை தாங்கள் இயற்றலாம். அதன் பின் இக்குடியினரிடம் உங்களுக்கு எந்தக் கடமையும் இல்லை. இவர்கள் கொள்ளும் எச்சிறுமையும் தங்களுக்கும் தங்கள் மைந்தனுக்கும் வந்துசேராது” என்றார் இளைய யாதவர்.

பலந்தரை திகைத்து அமர்ந்திருக்க அவள் முகத்தை கூர்ந்து நோக்கி புன்னகை அணைந்து கூர்கொண்ட உணர்வுகளுடன் “அன்றேல் அரசியென்று காசிநாட்டில் அமையலாம். அஸ்தினபுரியின் படைக்கூட்டில் இணையலாம். வென்ற

நிலத்தில் உங்கள் மைந்தன் தனிக் கோலேந்தி அமரலாம். இந்த உடைந்த படகில் அமர்ந்திருக்க வேண்டியதில்லை" என்றார் இளைய யாதவர். அருகணைந்த அவர் முகம் அவளை ஒருகணம் உள நடுக்குறச் செய்தது. கால்தளர்ந்தவள்போல மீண்டும் பீடத்தில் அமர்ந்து தலைகுனிந்து கைகளை பின்னிக்கொண்டாள். விரல்கள் குளிர்ந்து நடுங்கிக்கொண்டிருப்பதை உணர்ந்தாள்.

"தங்கள் அன்னை தங்களுக்கு ஆணையிட்டு அனுப்பியது அதுவே என்று நான் அறிவேன். எந்நிலையிலும் இப்போரை தவிர்க்க நீங்கள் ஒப்பலாகாதென்று அவர் உரைத்தார். போர் தவிர்க்கப்பட்டு எளிய ஒப்புதல்களில் இது முடியுமென்றால் நாணறுத்து மீளும்படி ஆணையிட்டிருக்கிறார். அதை நீங்கள் செய்யலாம்" என்றார் இளைய யாதவர். "அரசே, உங்களுக்கு அதில் எண்ணமாற்று உண்டா?" யுதிஷ்டிரர் "ஆம், எண்ணினால் அதுவே நன்று என்றும் தோன்றுகிறது. காசி அஸ்தினபுரியின் படைக்கூட்டில் இருக்கையில் தந்தைமேலும் தமையனிடமும் பெரும் பற்றுகொண்டுள்ள அரசி இங்கிருந்தால் உளத்துயரே எஞ்சும். நாம் கொண்டுள்ள சிறுமைகளை பெருமைமிக்க காசி அடையவேண்டியதுமில்லை... அவர் நாண் துறந்து செல்வார் என்றால் அதை முழுதேற்கிறோம். அவர்மேல் எந்த உளக்குறையும் இன்றி ஒப்புகிறோம்" என்றபின் திரும்பி பீமனிடம் "சொல்க, இளையோனே!" என்றார்.

பீமன் "அவள் செல்லப்போவதில்லை" என்று முழங்கும் குரலில் சொன்னான். பெருங்கைகளைத் தூக்கி "ஒருபோதும் நான் அவளை விடமாட்டேன். என்னை நீங்கி அவள் சென்றால் எங்கணைந்தாலும் தேடிச்சென்று அவள் தலையை உடைப்பேன். ஆம்!" என்றபின் கதவை காலால் உதைத்துத்

திறந்து வெளியே சென்றான். மீண்டும் கதவு வந்து அறைந்த ஓசை வெடி என ஒலித்தது. பலந்தரை தன் கைகளால் பாதிமுகத்தைப் பொத்தியபடி நடுங்கும் உடலுடன் அமர்ந்திருந்தாள்.

“அரசி, அது வெறும் உணர்வு. அவரிடம் நான் பேசுகிறேன்” என்றார் இளைய யாதவர். “அவர் தமையன் சொல்லை மீறுபவர் அல்ல. தாங்களோ புவிவெல்லும் அஸ்தினபுரியின் படைக்கூட்டிலமைந்த நாட்டுக்கு செல்லப்போகிறீர்கள். தாங்கள் விரும்பினால் இன்றே நாண்நீத்து காசியின் அரசி மட்டுமே என இங்கிருந்து எங்கள் காவலுடன் கிளம்பலாம்.” பலந்தரை எழுந்து மீண்டும் அமர்ந்து முனகலாக “இல்லை” என்றாள். “நான் அவரை துறக்கவியலாது.” இளைய யாதவர் “ஏன்? அதை மட்டுமேனும் சொல்லி அகல்க!” என்றார். அவள் தலைகுனிந்து கழுத்து விம்மலில் எழுந்தமைய கைவிரல்கள் பின்னித்தவிக்க அமர்ந்திருந்தாள். “சொல்க!” என்றார் இளைய யாதவர்.

நாணில் கைபட எழுந்த அம்புபோல அவளில் இருந்து சொல் எழுந்தது. “ஏனெனில் நான் அவரை அன்றி எவரையும் உளம்கொண்டிருக்கவில்லை.” முகத்திரையை இழுத்துவிட்டு அதன் நுனியால் விழி நீரைத் துடைத்தபடி எழுந்தாள். “வெல்லும் தரப்பு அது என்று...” என்று இளைய யாதவர் சொல்லத் தொடங்குவதற்குள் சீற்றத்துடன் இடைமறித்தாள். “உங்கள் எவரையும்விட அவரை நான் அறிவேன். அப்பெருந்தோள்களை வெல்ல இப்புவியில் அரசனென்றோ ஆண்மகன் என்றோ எவருமில்லை. பாரதவர்ஷத்தின் மணிமுடிகள் அவரால் பிறருக்கென விட்டளிக்கப்பட்டிருக்கின்றன” என்றபின் அறையை விட்டு வெளியேறினாள்.

கதவுக்கு அப்பால் நின்றிருந்த சுரேசர் அவளை விந்தையென பார்க்க அவள் பொருட்படுத்தாமல் இடைநாழியினூடாக விரைந்தாள். சற்று நேரத்திற்குப் பின்னர் விழிநீர் வழிந்துகொண்டிருந்தாலும் தன் உள்ளம் முற்றிலும் துயரற்றிருப்பதை உணர்ந்தாள். வாழ்நாளில் ஒருபோதும் அத்தனை எடையின்மையை உணர்ந்ததில்லை என்று தோன்றியது. புன்னகைத்து மெல்ல நடக்கத் தொடங்கினாள். மீண்டும் தொட்டபோது கன்னத்திலிருந்த கண்ணீர் ஈரம் விந்தையெனத் தோன்ற அழுத்தி துடைத்தாள்.

அவளுக்காக குந்தியின் சேடி பார்க்கவி அறைவாயிலில் காத்து நின்றிருந்தாள். அவள் நடைதயங்கியதும் பார்க்கவி வணங்கி "பேரரசி தங்களை அழைத்துவரும்படி சொன்னார்கள்" என்றாள். பலந்தரை "நான் சற்றுமுன்னர்தான் வந்தேன், வந்ததுமே..." என தயங்க "தாங்கள் வந்ததுமே அங்கு செல்வீர்கள் என பேரரசி எண்ணினார்கள். காத்திருந்த பின் என்னிடம் அழைத்துவரச்சொல்லி ஆணையிட்டார்கள். நான் வந்தபோது தாங்கள் அவைகூடச் சென்றிருப்பதை அறிந்தேன். அதை அரசியிடம் சொன்னேன். காத்திருந்து அழைத்துவரும்படி சொன்னார்கள்" என்றாள். "நான் ஆடைமாற்றி..." என சொல்லவந்த பலந்தரை "சரி, வருகிறேன்" என்றாள்.

செல்லும் வழியில் பார்க்கவி "பேரரசி நோயுற்றிருக்கிறார். ஒவ்வொருநாளும் காலையில் சற்று உளம்தேறியிருப்பார். மாலைக்குள் துயரூட்டும் செய்திகள் எவையேனும் வந்துவிடும்" என்றாள். "அவர்கள் நன்கு துயில்வதில்லையா?" என்றாள் பலந்தரை. "அகிபீனா இன்றி துயில்வது கடினம்" என்றாள் பார்க்கவி. பலந்தரை திடுக்கிட்டவள்போல திரும்பி

நோக்க “அவர்களை கனவுகள் தொடர்கின்றன” என்றாள். “மைந்தரை எண்ணியா?” என்றாள் பலந்தரை. “இருக்கலாம். இரவிலொருநாள் மைந்தா என்று அலறியபடி விழித்துக்கொண்டார்.” பலந்தரை தலையசைத்தாள்.

“அஸ்தினபுரியின் அவையில் கௌரவமூத்தவர் நாவிலெழுந்த சிறுமையில் இருந்து அன்னை மீளவே இயலவில்லை. எவரையும் அவர் சந்திக்க விரும்பவில்லை. மைந்தர்களைக்கூட. இளைய யாதவர் சந்திக்க விழைந்தபோதுகூட மறுத்துவிட்டார்” என்று பார்க்கவி சொன்னாள். பலந்தரை உதடுகளைக் கடித்து தன் நெஞ்சை அடக்கிக்கொண்டாள். “ஆனால் பாஞ்சாலத்து அரசியை சந்திக்க விரும்பி அவரே என்னை அனுப்பினார். பாஞ்சாலத்து அரசியைக் கண்டதுமே கைகளை பற்றிக்கொண்டு கண்ணீர்விட்டார். அவர்கள் மட்டும் நீண்டநேரம் பேசிக்கொண்டார்கள். இப்போது உங்களை அழைக்கிறார்கள்” என்றாள் பார்க்கவி.

குந்தியின் அறைக்குள் நுழைந்து அவள் வரவை பார்க்கவி அறிவித்து வந்து உள்ளே செல்லும்படி கைகாட்டினாள். பலந்தரை உள்ளே நுழைந்தபோதுதான் அவ்வறை எத்தனை சிறியது என உணர்ந்தாள். மஞ்சமும் ஒரு பீடமும் போடப்பட்டபோது அங்கே பிறிதொருவர் நிற்கவே இடமிருந்தது. அவள் உள்ளே நுழைந்ததைக் கண்டு தலையணைமேல் எழுந்து அமர்ந்திருந்த குந்தி புன்னகைத்தாள். அவள் கால்களைத் தொட்டு சென்னிசூடி அருகே மஞ்சத்திலமர்ந்தாள் பலந்தரை. அவளை கூர்ந்து நோக்கிய குந்தி “என்ன?” என்றாள். “ஏன்?” என்றாள் பலந்தரை.

“உவகை கொண்டிருக்கிறாய்?” என்றாள் குந்தி. “ஆம்” என்றாள் பலந்தரை. “அவையில் என்ன நிகழ்ந்தது?” என்றாள் பலந்தரை

அவள் நிகழ்ந்ததை சுருக்கமாக சொன்னாள். “என்னிடம் அவரை நாண்நீத்து துறக்கச் சொன்னார்கள். மறுத்துவிட்டேன்.” குந்தி புன்னகைத்து “மூடர்கள், அவர்களில் அவனைத்தவிர எவருக்கும் பெண்ணுள்ளம் தெரியாது” என்றாள். “எவருக்கு?” என்றாள் பலந்தரை. “இளைய யாதவனுக்கு.” பலந்தரை நிமிர்ந்து நோக்க “அவன் உன் உள்ளம் அறிந்துதானே அவ்வாடலை நிகழ்த்தியிருக்கிறான்?” என்றாள். பலந்தரை புன்னகையுடன் தலையசைத்து “ஆனால் எனக்கே என் உள்ளம் இப்போதுதான் தெரிகிறது” என்றாள். “அதை அறிவதென்ன விந்தையா? என் மைந்தரில் பெண்டிர் ஒருபோதும் வெறுக்கவியலாதவன் அவன்” என்றாள்.

“ஆம்” என்றாள் பலந்தரை. “ஆகவேதான் அரசியும் அவரை நெஞ்சில் நிறுத்தியிருக்கிறார்.” குந்தி சிரித்து “அதுதான் உன் இடரா?” என்றாள். பலந்தரை சிரித்து தலைகுனிந்து முகத்திரையை நன்றாக இழுத்துவிட்டுக்கொண்டாள். “அறிவின்மை, ஆனால் நாம் அதிலிருந்து தப்பவியலாது” என்று குந்தி சொன்னாள். “அவர் அரசிக்கு அளித்த மாமலரைப் பற்றி சூதர்கதைகள் அங்கே வந்தன.” குந்தி “அவன் அதை அவளுக்கு மட்டும் அளிக்கவில்லை...” என்றாள். “அது அவன் உள்ளம் அல்லவா? மூதன்னையரிடமிருந்து அவன் பெற்றது.” பலந்தரை “ஆம், அது இப்போது தெரிகிறது” என்றாள்.

“அவன் தமையனிடமும் அந்த மலரே இருந்தது. அதை அவன் தன் இறைவனுக்கு படைத்தான். இவன் அதை மகளிருக்கு அளித்திருக்கிறான். அங்கே காட்டில் இடும்பியும் அதை உணர்ந்திருப்பாள்” என்றாள். முகம் நிமிர்த்தி “அவரை

பார்க்கவிழைகிறேன்” என்றாள். “கனிந்த விழிகள் கொண்டவள். அவள் மைந்தனை இருமுறைதான் நானே பார்த்திருக்கிறேன். அவனுக்கு மணம்முடித்து வைக்கவேண்டும். அவர்களின் குலத்தில் அவன் பெண்கொண்டால் அவர்களுக்குப் பிறக்கும் மைந்தன் நாடாளவியலாது. அவன் ஷத்ரியக் குடியிலேயே பெண்கொள்ளவேண்டும். அதன்பொருட்டு தூதுச்செய்திகளை அனுப்பியிருக்கிறேன். எவரும் இதுவரை மறுமொழி உரைக்கவில்லை.”

பலந்தரை “நம் படைக்கூட்டு உறுதியானதும் ஆணையும் கலந்து ஒரு தூதுச்செய்தி சென்றாலொழிய ஷத்ரியர் அதற்கு முன்வரமாட்டார்கள்” என்றாள். குந்தி சிரித்து “ஆம், அதைத்தான் நானும் எண்ணிக்கொண்டிருக்கிறேன்” என்றாள். “நீங்கள் பார்த்தபோது எப்படி இருந்தான்?” என்று பலந்தரை கேட்டாள். “மைந்தர்களில் அவனே பெருந்தோளன் என்றனர்.” குந்தி “உண்மை, என்னை ஒரு புறாவைப்போல் தோளிலேந்துபவன். உன் கணவனைவிட பெருந்தோள் கொண்டவன்” என்று குந்தி சொன்னாள். “இங்கே வரும்படி அவனிடம் சொல்லியிருக்கிறேன். முறையான படைத்திரட்டுடன் வருவதாக சொன்னான். அவனை பார்க்கத்தான் இப்போது மிகமிக விழைகிறேன்.”

பலந்தரை எழுந்துகொண்டு “ஓய்வெடுங்கள், அன்னையே” என்றாள். “நீ இங்கிருப்பாய் அல்லவா?” என்றாள் குந்தி. “ஆம், இங்கிருந்தாகவேண்டும்” என்றாள் பலந்தரை. “இப்போதுகூட என் தலைவர் பொருட்டு கையளவு நிலம் கோரி நிற்பது என்னை கூசச்செய்கிறது. ஆனால் ஏதோ நானறியாத சூழ்ச்சி உள்ளதென்று தோன்றுகிறது.” குந்தி “என்ன சூழ்ச்சி?” என்றாள். அவள் விழிகள் மாறுபட்டன. “அன்னையே, நீங்கள் அறியாததா?

உங்கள் மைந்தர் தன் கைகளால் அஸ்தினபுரியின் அரசரையும் இளையோரையும் கொன்றுகுவிக்கவிருக்கிறார். நிலம்பொருட்டு உடன்குருதியரைக் கொன்றாரென்னும் பழி அவர்மேல் அமையாமலிருக்கும்பொருட்டு இளைய யாதவர் செய்யும் சூழ்ச்சி இது.”

“ஆம்” என்றாள் குந்தி. “நீங்கள் மைந்தர்பொருட்டு கவலை கொள்கிறீர்கள் என்றாள் பார்க்கவி” என்றாள் பலந்தரை. “ஆம்” என்று குந்தி சொன்னாள். “உங்கள் இளைய மைந்தரை எவரேனும் வெல்லக்கூடும் என எண்ணுகிறீர்களா?” என்று பலந்தரை கேட்டாள். குந்தி மறுமொழி சொல்லாமல் கண்களை மூடிக்கொண்டாள். பலந்தரை திகைப்புடன் நோக்கிக்கொண்டிருந்தாள். சற்றுநேரம் கழித்து எழுந்து வெளியே நடந்தாள். வணங்கிய பார்க்கவியை நோக்கி தலையசைத்துவிட்டு இடைநாழியினூடாக மெல்ல நடந்துசென்றாள்.

வெண்முரசு வாசிப்பு -ராஜகோபாலன்

# குருதிச்சாரல் - 56

**பகுதி ஒன்பது : கதிர் இருள் பொழுது – 1**

அஸ்தினபுரியிலிருந்து சுஜாதன் வந்திருப்பதை அங்கநாட்டின் பேரமைச்சர் ஹரிதர் விருஷசேனனின் அவையிலிருந்து நேரில் வந்து உரைத்தபோதுதான் விருஷாலி அறிந்தாள். அஸ்தினபுரியிலிருந்து சுஜாதன் முந்தைய நாள் மாலையிலேயே சம்பாபுரிக்கு வந்தான் என்றும், சம்பாபுரியின் அரசப்பெருமாளிகையில் விருஷசேனனும் உடன்பிறந்தாரும்

அமர்ந்து பின்னிரவு வரை சொல்சூழ்ந்தனர் என்றும், மறுநாள் சம்பாபுரியின் குடிப்பேரவை ஒன்று கூட்டப்பட்டு அதில் அஸ்தினபுரியில் நிகழ்ந்தவை அனைத்தையும் சுஜாதன் விரித்துரைத்தான் என்றும் ஹரிதர் சொன்னார்.

“நம் அரசரை அஸ்தினபுரியின் அரசவைக்கு அழைக்கவில்லை. ஷத்ரிய படைக்கூட்டை அறிவிக்கும் பேரவையிலும் அமரச்செய்யவில்லை. அதைக் குறித்து அங்கநாட்டில் அலர் பரவியிருப்பதை தாங்கள் அறிந்திருப்பீர்கள், அரசி” என்றார் ஹரிதர். விருஷாலி “ஆம், மக்கள் சினம்கொண்டிருப்பதாக என் சேடி சொன்னாள்” என்றாள். “அதுவே மேற்பரப்பில் தெரிவது, அது உண்மையல்ல. கணவனிடம் மனைவி கொண்டிருப்பது போன்றது அரசனிடம் குடிகள் கொண்டுள்ள உறவு. பிறிதொருவருக்கு மனைவியாகி நெஞ்சுநிறைவுற மடிபெருக வாழ்ந்தாலும் அவர்களின் ஆழம் முதலுறவிலேயே நின்றிருக்கும் என்பார்கள்” என்றார் ஹரிதர். அவர் சொல்ல வருவதென்ன என்று விருஷாலிக்கு புரியவில்லை.

“அங்கநாட்டின் தொல்குடிகள் இன்னும் முந்தைய அரசரையே நெஞ்சில் நிறுத்தியிருக்கிறார்கள். அவர் செய்த கீழ்மைகளும் விளைவித்த அழிவுகளும் காலப்போக்கில் அவர்களின் உள்ளத்திலிருந்து மறைந்துவிட்டன. அவர் தீர்க்கதமஸின் மைந்தர், காக்ஷீவானின் குருதி, லோமபதரின் வழிவந்தவர் என்னும் வரிசை மட்டுமே நினைவில் உள்ளது. மகளிரும் நம் அரசர் இங்கு வந்தபின் பிறந்த இளையோரும் மட்டுமே நம் அரசர்மேல் பெரும் பற்று கொண்டிருக்கிறார்கள். நம் அரசர் பெற்ற வெற்றிகளும் கொண்டுவந்த செல்வமும் முந்தைய அரசகுடிமேல் பற்று கொண்டவர்களின் நாவை வென்றன என்பது மெய். ஆனால் எல்லா அவையிலும் முந்தைய

அங்கநாட்டு அரசர் சத்யகர்மரை விலக்கி நம் அரசர் முடிகொண்டதைப் பற்றிய ஒரு கசந்த கூற்றேனும் எழுந்து வராமலிருப்பதில்லை. நம் அரசரின் வெற்றிச்சிறப்பைச் சொல்லி அதை மறுப்பார்கள் இளையோர். ஆனால் இன்று இந்நிகழ்வு மூத்தகுடியினருக்கு வாய்க்குகந்ததாக அமைந்துவிட்டது."

"குடிப்பெருமை இல்லாதோர் ஆட்சிசெய்தால் எத்தனை வீரமும் கொடையும் புகழும் கொண்டிருந்தாலும், எப்படி கருவூலம் செழித்தாலும், காவியம் பெருகினாலும் அரசர் அவைகளில் பெருமை கிடைக்காது என்று சொல்லத் தொடங்கிவிட்டனர். அத்துடன்..." என ஹரிதர் சற்று தயங்கி "நம் பட்டத்து இளவரசர் விருஷசேனர் தங்கள் மைந்தர். இளைய அரசியின் மைந்தரான விருஷகேதுவே மேலும் தூய குருதிகொண்டவர், அவர் முடிசூடினால் சற்றேனும் அவைச்சிறப்பு இருக்கும் என்று சொல்பவர்களின் நிரை ஒன்றும் இங்கிருந்தது என அறிந்திருப்பீர்கள்" என்றார். "ஆம்" என்றாள் விருஷாலி. "உண்மையில் இதை நானே சொன்னேன். மூத்தவனே அரசாளவேண்டும். குடிச்சிறப்பு நோக்கி இளையவனை நான் அவையமைத்தால் நான் முடிசூடிய அடிப்படையை நானே தகர்த்தவனாவேன் என்றார் அரசர்."

"ஆம், அவர் சொல்வதே மெய். அத்துடன் மூத்தவரைக் கடந்து முடிசூட இளையவர் ஒருபோதும் ஒப்பவும் மாட்டார். அவர்கள் தந்தையைப் போலவே தலையெடுப்புள்ள மைந்தர்கள்" என்றார் ஹரிதர். "அரசி, முன்னரே இங்குள்ள குடிப்பழைமையோரின் அச்சொல்லுக்கு சிறுமன்றுகளில் செவியிருந்தது, இப்போது ஷத்ரியப் பேரவையில் நம் அரசர் முற்றாகவே தவிர்க்கப்பட்ட பின் அதை நோக்கி திரும்புவோர் பெருகிவிட்டிருக்கிறார்கள்"

என்றார் ஹரிதர். “அஸ்தினபுரியின் படைத்துணையும் அவைத்துணையும் மட்டுமே நமக்கு தாங்கென இருந்தது. அதையும் நாம் இழந்துவிட்டோம் என உணர்கிறார்கள் நம்மைச் சார்ந்தோர்.”

“அது எப்படி? அஸ்தினபுரியின் அரசர் இன்றும் தன் உடன்பிறந்தவர் என்றே நம் அரசரை கொள்கிறார்” என்றாள் விருஷாலி. “அரசி, அஸ்தினபுரியின் அரசர் விரும்பியிருந்தால் ஷத்ரியப் பேரவையில் முதன்மை படைத்தலைவர்களில் ஒருவராக முன் வைத்திருக்க முடியும். அங்கு கூடியிருந்த அரசர்கள் அவரை மண்ணெழுந்த தெய்வம் என்று வணங்கிய தருணம் அது. முடி கொண்ட அரசர்கள்கூட எளிய குடிமக்கள்போல கைகூப்பி ஆர்த்து கண்ணீர் மல்கி கொந்தளித்தனர் என்கிறார்கள். ஆனால் அவர் அதை செய்யவில்லை. அவருக்குத் தெரியும், அவையை அவர் முற்றிலும் வெல்வார் என. ஆயினும் நம் அரசரை அவர் அவைக்கு அழைக்கவேயில்லை” என்றார் ஹரிதர்.

விருஷாலி “அது ஏன் என்று நானும் குழம்பினேன்” என்றாள். “அது கணிகரின் கணிப்பு, அரசி. அஸ்தினபுரியின் படைக்கூட்டில் நம் அரசரை முன்வைத்து ஒரு விரிசல் எழவேண்டாம் என்று அவர் எண்ணியிருக்கலாம். அதை அஸ்தினபுரியின் அரசர் ஏற்றதுதான் விந்தை. எவருமறிந்த ஒன்றுண்டு, போர் என ஒன்று நிகழ்ந்தால், மறுபக்கம் அர்ஜுனன் இருக்கும்வரை இப்பக்கம் அங்கர் இருந்தாக வேண்டும். அவர்களே வந்து அடிபணிந்து அழைப்பார்கள். ஆனால் அவைக்கு அழைக்கவில்லை என்பது எளிதாக விட்டுவிடத் தக்கதன்று. அரசரின் அவையில் அவர் அமரவில்லை என்றால் நாளை படையெழுச்சியில் நம் அரசரின் இடம் என்ன?

அவர்களின் ஆணைக்கேற்ப வில்லுடன் செல்லும் காவல்வீரரா?” என்றார் ஹரிதர். “அத்துடன் இங்குள்ள ஒரு போர்நெறியையும் நாம் அறிவோம். சூதர் படைக்கலம் ஏந்தக்கூடாது. ஏந்தி களம்புகுந்தாலும் ஷத்ரியர்களுடன் ஒற்றைநேர்ப் போரில் ஈடுபடக்கூடாது. நம் அரசர் ஷத்ரிய அவையில் அமரச் செய்யப்படவில்லை என்பதைச் சுட்டியே அவருடன் நேர்ப்போரிட பாண்டவர் தரப்பின் ஷத்ரியர் மறுக்கக்கூடும்.”

ஏளனத்துடன் முகம் சுளித்து “போர் முதிர்கையில் பாண்டவர்களின் அம்புகளைக் கண்டு அஞ்சி ஓடிவந்து நம் அரசரின் காலில் விழுந்து மன்றாடுவர். அஸ்தினபுரியின் மணிமுடியை வேண்டுமென்றாலும் அவருக்கு அளிக்க முன்வருவர்” என்றாள் விருஷாலி. “ஆம், அதுவே நிகழும் என நாம் அறிவோம். ஆனால் அச்செயல் காலப்போக்கில் நாவும் செவியும் அறியாது மறையும். வென்றார் பக்கம் சாய்வதும் உயர்குடியினருடன் நிற்பதும் சூதர்களின் இயல்பு. நம் அரசர் வில்லுடன் சென்றார் என்பதே நிற்கும். இன்று ஷத்ரியர் அவையில் வென்றபின் கொள்ளும் நிலத்தில் அவருக்கான உரிமை ஏட்டெழுத்தால் வகுக்கப்பட்டிருந்தால் மட்டுமே அவர் அங்கே அரசர் என இணைநின்றார் என்று ஆகும். அச்சொல் அளிக்கப்படவில்லை. அரசி, படைக்கூட்டின் தலைவரென துரியோதனர் ஷத்ரியப் பேரவையில் அளிக்கும் சொல்லுக்கே மதிப்பு. தனியறையில் நிகழும் தழுவல்களும் நெகிழ்வுரைகளும் அரசியலில் எவ்வகையிலும் பொருளற்றவையே” என்று ஹரிதர் சொன்னார்.

“ஆம்” என விருஷாலி பெருமூச்செறிந்தாள். பெருமூச்சுடன் “சிறுமைகளினூடாக எழுந்து வந்தவர் நம் அரசர்.

இத்தகையதோர் சிறுமையை அவர் இதுவரை பெற்றதில்லை" என்று ஹரிதர் சொன்னார். சற்றுநேரம் எண்ணி ஆழ்ந்திருந்த பின் "அவர் ஷத்ரியர் அல்ல என்று அஸ்தினபுரியின் அரசர் அந்த அவையில் உரைத்தாரா?" என்று விருஷாலி கேட்டாள். "இல்லை அரசி, சுயார்ஜித நெறிப்படி அங்கநாட்டரசர் ஷத்ரியரே என்றும், அதை நிறுவும் பொருட்டு படைக்கலம் ஏந்தி களம் நிற்கவும் தான் ஒருக்கமே என்றும்தான் அவர் உரைத்தார். உண்மையில் அவையில் அவ்வாறு உரைப்பதன் பொருட்டே இளைய யாதவரையும் ஷத்ரியர் என்று ஏற்று அரசருக்குரிய அனைத்து முறைமைகளுடனும் அவையமர்த்தினார் என்கிறார் சுஜாதர்" என்றார் ஹரிதர்.

"ஆயினும் அந்த ஷத்ரிய படைக்கூட்டின் முதன்மை படைத்தலைவர்களில் நம் அரசர் இல்லை என்பது மட்டுமே கையும் விழியும் தொடும் உண்மை. எளிய குடிகள் அதையே அறிகிறார்கள். சித்தம் சென்று சேரும் உண்மைகளை அவர்களிடம் கொண்டு சேர்க்கவியலாது" என்றார் ஹரிதர். விருஷாலி "ஆனால் அவர் இன்றிருக்கும் நிலையில் படை நடத்த இயலும் என்று நான் எண்ணவில்லை" என்றாள். ஹரிதர் "முகில் மூடியிருந்தாலும் கதிரவன் ஒளியிலான் ஆவதில்லை. அதை அறியாத ஓர் புல்லிலைகூட இப்புவியில் இல்லை" என்றார். "மெய்யாகவே அவர் மீளமுடியுமென நினைக்கிறீர்களா?" என்று விருஷாலி கேட்டாள். "அரசி, அவரை மாவீரரென்றாக்கியது வஞ்சம். அது மீண்டுமெழுமென்றால் அவர் முந்தைய அங்கநாட்டரசரே ஆகிவிடுவார்."

விருஷாலி பொருள்நிகழா விழிகளால் அவரை நோக்கிவிட்டு வெறுமனே தலையசைத்தாள். "சுஜாதர் வந்திருப்பது நம் அரசரை நேரில் சந்திக்கும் பொருட்டு. அவரை மீண்டும்

அஸ்தினபுரிக்கு கொண்டுசென்று அரசரின் முன் நிறுத்த விரும்புகிறார். படைக்கூட்டை தான் தலைமை தாங்கி நடத்தபோகிறோமா இல்லையா என்று நம் அரசர் அஸ்தினபுரியின் அரசரிடம் நேரில் கேட்கவேண்டுமென்கிறார் சுஜாதர்.” விருஷாலி “அழைப்பின்றி அங்கு சென்று கேட்கவேண்டும் என்றா?” என்றாள். “அவ்வாறல்ல, படைக்கூட்டில் தன் இடம் என்ன என்பதை நம் அரசர் தெளிவுபடுத்திக்கொள்ள வேண்டும். தொல்குடி நாடுகளின் நிரையில் என்றும் அங்கம் இருந்துள்ளது. அங்கம் அமராத ஷத்ரியப் பேரவை முழுமையுடையதும் அல்ல.”

விருஷாலி பெருமூச்சுடன் “அவரிடம் யார் அதை சொல்வது? முறைப்படி நான் அவரைச் சென்று சந்திக்கக் கூடாது” என்றாள். “ஆம், ஆனால் நாளை கதிர்பெயர்வு பூசனை நிகழவுள்ளது. கதிரவன் ஆலயத்திற்கு அரசரை கூட்டி வருகிறேன். தாங்கள் அவரை அங்கு சந்திக்கலாம். தங்கள் சொல் அவர் செவியில் விழலாம்” என்றார் ஹரிதர். விருஷாலி “அமைச்சரே, நான் அவரை தனிமையில் சந்தித்து ஓராண்டுக்கு மேல் ஆகிறது. அரசவிழவுகளில் அருகமர்வதொழிந்து அவரிடம் தனியாக ஒரு சொல்கூட உரைத்ததில்லை. அவருடன் எப்படி சொல்சூழ்வதென்பதையே மறந்துவிட்டிருக்கிறேன்” என்றாள். பின் தயங்கி கைநகங்களை நோக்கி “ஒருவேளை அவளை அவர் சந்திக்கக்கூடும். அவள் ஷத்ரியப்பெண். அரசுசூழ்தல் அறிந்தவள்” என்றாள்.

ஹரிதர் “தாங்களே அறிவீர்கள், தங்களிடம் உள்ள அணுக்கம்கூட அவருக்கு இளைய அரசியிடம் இல்லை. அவர் அவர்களை நேரில் சந்தித்து இரண்டாண்டுகளுக்கு மேலாகிறது” என்றார். விருஷாலி அந்த மறுமொழியில் நிறைவுற்று “ஆம்,

அதை சொன்னார்கள். அவர் உலகில் இன்று பெண்களே இல்லை என்றே அறிந்தேன்” என்றாள். தான் சொன்னது மிகையாகிவிட்டது என உடனே உணர்ந்து அதை எப்படி ஈடுசெய்வதென்று அகம்தவித்தாள். ஆனால் ஹரிதர் அச்சொற்களைக் கேட்டதாகவே விழிகாட்டாமல் “அவர் ஆலயத்திற்கு வருகையில் அங்கு சுஜாதரும் வருவார். ஆலயமென்பதால் அரசர் மது அருந்தா நிலையிலிருப்பார். தங்கள் சொற்கள் அவர் செவிகளை சென்று அடையக்கூடும்” என்றார்.

“பார்ப்போம். ஆனால் இதனால் என்ன நிகழக்கூடும்?” என்று விருஷாலி கேட்டாள். “அரசர் அங்கநாட்டிலிருந்து அஸ்தினபுரி சென்று ஓராண்டாகிறது. நம் அரசரின் அகத்தில் துயர்நிறைத்த அந்த அவைச்சிறுமை நிகழ்ந்து பதின்மூன்றாண்டுகள் அவர்கள் ஒருமுறைகூட நோக்கிக்கொள்ளாமல் பிரிந்திருந்தனர். பின்னர் விராடபுரிக்கு படை கொண்டு சென்றபோது அஸ்தினபுரியின் கோரிக்கைக்கு ஏற்ப மீண்டும் இணைந்தனர். அப்போரில் நம் அரசரின் படைக்கலங்கள் கை நழுவி போர்வெற்றி குலைந்ததனால் அஸ்தினபுரியின் அரசர் நம் அரசரை நோக்கி கடுஞ்சொல் உதிர்த்ததாகவும், அரசர் உளம்வருந்தி மறுசொல்லின்றி திரும்பி இங்கு வந்ததாகவும் சொல்கிறார்கள். மெய்யா என்று சொல்லத் தெரியவில்லை, நான் அதை ஏவலரிடமிருந்தே அறிந்தேன்” என்றார்.

“என்னிடமும் எதுவும் சொல்லப்படவில்லை” என்றாள் விருஷாலி. “ஆனால், அந்தப் பதின்மூன்றாண்டுகளில் அஸ்தினபுரியின் படையுடன் சென்று பெரும் படைவல்லமை கொண்ட பாஞ்சாலம் உட்பட பதினெட்டு நாடுகளை வென்று கப்பம் கட்டவைத்திருக்கிறார் நம் அரசர். இப்போது அங்கு

ஷத்ரிய அவையில் அமர்ந்திருந்த அரசர்களில் பாதிக்கும் மேற்பட்டவர்கள் நம் அரசரின் முன் படைத்தோல்வி அடைந்து காணிக்கையும் கப்பமும் கொண்டு வைத்து முடிகவிழ்த்து வணங்கி மீண்டவர்கள். அஸ்தினபுரி இன்று கொண்டுள்ள கருவூலநிறைவும் படைமாண்பும் நம் அரசரின் கொடையாலேயே. அதை அறியாதவர்கள் பாரதவர்ஷத்தில் எவருமில்லை.” ஹரிதர் “ஆம், அதை பிற எவரையும்விட துரியோதனர் அறிவார். இருவரையும் அருகமர்ந்து தோள் தழுவச்செய்தால் பிறிதொன்று நிகழக்கூடும். சுஜாதர் விரும்புவது அதையே” என்றார்.

விருஷாலி “நன்று நிகழ்ந்தாகவேண்டும். அவர் இன்றிருக்கும் நிலையிலிருந்து எதன்பொருட்டு எழுந்தாலும் அது நன்றே” என்றாள். “முயல்வோம் அரசி, அதை சொல்லிச்செல்லவே வந்தேன்” என ஹரிதர் எழுந்தார். அவர் தலைவணங்கி விடைகொள்ள விருஷாலி மெல்லிய குரலில் “அவளிடம் சொல்லிவிடலாமே” என்றாள். ஹரிதர் நிமிர்ந்து நோக்கினார். விருஷாலி “அவளும் உடனிருக்கட்டும். அவர் மீண்டெழுவது எங்கள் இருவருக்குமே நன்று அல்லவா?” என்றாள். ஹரிதர் “ஆம், அரசி” என்றார். அவள் “மேலும் அவள் ஷத்ரியப்பெண். அவரை அவையமரச் செய்யாமை என்னைவிட அவளையே மேலும் புண்படுத்தியிருக்கும்” என்றாள். ஹரிதர் புன்னகைத்து “ஆம்” என்றார்.

அவர் கிளம்பும்போது விருஷாலி மேலும் ஓரிரு அடிகள் முன்னால் வந்து “மறுக்கப்படுவதன் மேல் விழைவுகொள்வது மானுட இயல்பு. அவள் ஷத்ரியப்பெண் என்பதனாலேயே அவர் உள்ளத்தில் அவளுக்கு இடம் சற்று மிகுதியாக இருக்கவும்கூடும்” என்றாள். ஹரிதர் நிமிர்ந்து அவள் விழிகளை

நோக்கிவிட்டு “நான் அதை அறியேன், அரசி” என்றார். அவள் பெருமூச்சுவிட்டு “நன்று” என்றாள். அவர் மீண்டும் ஒருமுறை தலைவணங்கிவிட்டு வெளியேறினார்.

கர்ணனை சந்திக்கவிருப்பது விருஷாலியை முதலில் உவகை கொள்ளச்செய்தது. அந்தச் சந்திப்பை உள்ளத்தில் நிகழ்த்திக்கொள்ளத் தொடங்கியதும் மெல்ல அவள் துணிவிழக்கலானாள். ஏன் அதை ஒப்புக்கொண்டோம் என்று எண்ணி நிலையழிந்து ஆடையைப்பற்றி கசக்கியபடி, உப்பரிகைகளிலும் இடைநாழிகளின் சாளரங்களிலும் நின்றபடி சரிந்த விழிகளுடன் அவள் அரண்மனையில் சுற்றிவந்தாள். ஹரிதரிடம் சேடியை அனுப்பி தன்னால் இயலாது என்று சொல்லிவிடலாமா என இருமுறை சேடியை அழைத்தபின் தயங்கி கையசைத்து அவளை வெளியேறச் சொன்னாள். கர்ணனிடம் இயல்பாகப் பேசிய நாளையே அவளால் நினைவுகூர முடியவில்லை. அது வேறு கர்ணன், அன்றிருந்த விருஷாலியும் வேறு ஒருத்தி. இத்தனை காலத்தில் அவள் வளர்ந்து விரிந்து பிறிதொருத்தியென்று ஆகிவிட்டிருந்தாள்.

வளர்ச்சியா? பாறையிடுக்கில் வளர்ந்த ஆலமரம். வழிந்தும் சுழன்றும் கவ்வியும் இடைவெளியிலும் வெடிப்புகளிலுமெல்லாம் வேரோடியது. அந்த ஒப்புமையை பல ஆண்டுகளுக்கு முன்பு அங்கநாட்டிலிருந்து அஸ்தினபுரிக்கு ஒரு பூசனைக்காக சென்றுகொண்டிருந்தபோது வழியருகே நின்ற ஆலமரத்தைக் கண்டு அடைந்தாள். ஆலமரத்து வேர் பாறைவளைவில் நீர் என வழிந்திருந்தது. வெடிப்புகளில் பிரிந்து செறிந்திருந்தது. தேர் செல்லத் தொடங்கியபின் அதன் பிடிக்குள் இருந்த பெரும் கற்பாறையை விழிகளுக்குள்

கண்டாள். வானிலிருந்து ஒரு கழுகின் உகிர் அதை பற்றியிருப்பதுபோலத் தோன்ற திடுக்கிட்டு விழித்துக்கொண்டாள். பெருமூச்சுடன் தலையை அசைத்து அந்த விழிப்பாவையை சித்தத்தால் கலைத்தாள்.

அந்த ஒப்புமையை பின்னர் முதுசேடி காளியிடம் சொன்னாள். அவள் நரைத்த கண்கள் ஒளிகொள்ள புன்னகைத்து "எங்களூரில் பெட்டிப்பூசணி செய்வதுண்டு, அரசி. பூசணியை மரப்பெட்டிக்குள் விட்டு அது வளர்ந்து நிறைந்தபின் பெட்டியைக் கழற்றி அதை எடுப்பார்கள். கூடைகளில் அடுக்கி படகில் கொண்டுசெல்ல உகந்தது. நகரங்களில் விரும்பி அதை வாங்குவார்கள்" என்றாள். முள்குத்தியதுபோல சினம் எழ அதை உடனே கடந்து சிரித்து "மெய், அதுதான் மேலும் பொருத்தம்" என்றாள். பின்னர் எண்ணிநோக்கியபோது அந்த ஒப்புமையின் ஆழம் விரிந்துகொண்டே வந்தது. அரசியென வந்து சேர்ந்தபோது திகைப்பளித்த அரண்மனைக்குள் அவள் மெல்ல நீர்போல நிரம்பி அனைத்து இடங்களையும் முழுமையாக நிறைத்துவிட்டிருந்தாள்.

அரண்மனையைவிட்டு அவள் வெளியேறும் தருணங்களே அரிது. அங்கநாட்டு அரசியருக்கான இரண்டு அரண்மனைகளும் சேடியர் தங்குமிடங்களும் காவலர் குடிகளும் தனியாக கங்கையின் கரையில் சிறு கோட்டை ஒன்றுக்குள் அமைந்திருந்தன. அவளுடைய அரண்மனை வடக்கிலும் இளைய அரசி சுப்ரியையின் அரண்மனை தெற்கிலும் தனித்தனியாக அரண்களுக்குள் அமைந்திருந்தன. அரசியரின் அரண்மனைகளிலிருந்து கற்படிகளினூடாக நேராக கங்கைப்பெருக்கில் இறங்கி நீராடி மீளவும் படகுத்துறைகளுக்குச் செல்லவும் வழியிருந்தது. எனவே அவள்

அரண்மனை தனியான ஓர் அரசென்று அவள் ஆட்சியில் இலங்கியது. அவளுக்கான சேடியரும் செவிலியரும் அடுமனையாளரும் அகம்படியினரும் அருகில் குடியிருந்தனர். அங்கிருந்து புலரியில் கிளம்பிச்சென்று கதிரோன் ஆலயத்தில் முதற்கதிரெழுகையை வணங்கி மீண்டபின் அவள் வெளியே செல்வதேயில்லை.

பதினேழு ஆண்டுகளுக்கு முன்பு பிரக்ஜ்யோதிஷத்தின் பகதத்தர் மைந்தராகிய பகதத்தனையும், வங்கநாட்டரசர்களான சமுத்ரசேனனையும் சத்ரசேனனையும், புண்டரநாட்டரசன் வாசுதேவனையும் வென்று கப்பம் கொண்டு மீண்ட கர்ணன் தனக்குக் கிடைத்த பங்கைக் கொண்டு சம்பாபுரியின் தெருக்களையும் அரண்மனையையும் கோட்டையையும் விரிவாக்கிக் கட்டியபோது நகரம் அழிந்து பிறிதொன்றாகியது. அர்க்கபுரி என அது பெயர்மாற்றமும் பெற்றது. ஓராண்டு கழித்து அங்கு மீண்டும் வந்த அயல்வணிகர் அது முற்றிலும் வேறுநகர் என்று மயங்கினர்.

புதிய நகரம் அங்குள்ள ஒவ்வொன்றையும் மாற்றியது. இல்லங்களும் சாலைகளும் அங்காடிகளும் மட்டுமல்லாமல் மக்களின் ஆடைகளும் பேச்சும்கூட மாறுபட்டன. அங்காடி பெருகியபோது அங்குவரும் பொருட்கள் பெருகின, அவற்றை வாங்கும் மக்கள் பெருகினர், அங்கே வணிகமும் பெருகியது. கையில் எடுக்கும் எப்பொருளுக்கும் ஏழுமுறை விலைசொல்லி ஊடும் நகர்ப்பெண்கள் முதல்விலையிலேயே அமைந்தனர். எப்போதும் படைக்கலங்களையே விரும்பி வாங்கும் ஆண்கள் அணிகலன்களையும் ஆடைகளையும் நாடினர். அதைவிட அவர்களின் முன்னோர்களைக் குறித்த அனைத்துக் கதைகளும்

வளர்ந்து உருமாறின. முன்பிருந்த பெருநகர் ஒன்றின் ஒரு சிறுபகுதியே அந்தச் சம்பாபுரி என்று முதியோர் சொன்னார்கள்.

உண்மையில் ஐநூறாண்டுகளுக்கு முன்பு அங்கமாமன்னர் லோமபதரின் ஆட்சியில் தலைநகரமாக இருந்த சம்பாபுரி பன்னிரு சிறுதெருக்கள் மட்டுமே கொண்ட சிறுநகர். ஆனால் பாரதவர்ஷத்தின் நகர்களில் அதுவே முழுவட்ட வடிவு கொண்டது. ஆகவே சூரியனின் சகடநிழல் என அது புகழ்பெற்றிருந்தது. அங்கம் சரிவடைந்தபோது அதன் பெரும்பகுதி இடிந்து மண்சுவர்களால் ஆனதாக மாறியது. நகரம் இடிபாடுகளிலிருந்து சிதல்புற்றென கட்டுப்பாடின்றி வளர்ந்து உருவானது. மறைந்த சம்பாபுரியை அதன் வடிவில் மீட்டுக் கட்டவேண்டும் என்பது அங்கநாட்டரசர்கள் அனைவருமே முடிசூடுகையில் கொள்ளும் கனவு. மாறிமாறி வங்கத்திற்கோ கலிங்கத்திற்கோ மகதத்திற்கோ கப்பம் கட்டிவந்த அவர்களால் அக்கனவை அகத்திலிருந்து வெளியே எடுக்கவே இயலவில்லை.

திசைக்கதிரோன் ஆலயத்தில், சித்திரை மாதம் அனல்மீன் பொழுதில் நடுகம்ப நிழல் மறையும் உச்சிவெயில் வேளையில், கொன்றைசூட்டும் விழாக்கொடையின்போது வெறியாட்டெழுந்த பூசகன் வேல்சுழற்றி ஆடி “சம்பாபுரியின் தெய்வம் நான்! சம்பாபுரி என் மலர். சம்பாபுரி என் ஒளிகொள் கலம். சம்பாபுரி என் சகடத்தின் நிழல். நகர் எழுக! இது பொழுது, அருளினேன். எழுக சம்பாபுரி!” என்று கூவினான். “ஆணை, எனை ஆள்பவனே” என கர்ணன் தலைவணங்கினான். தொல்சுவடிகளை நாடெங்கிலுமிருந்து மீட்டுக்கொண்டு வந்தான். சம்பாபுரியின் வடிவையும் முறைமைகளையும் அவற்றிலிருந்து எடுத்து அவற்றின்படி நகரை மீட்டமைத்தான்.

அதன் வழியாகவே கர்ணன் அங்கநாட்டு மக்களின் உள்ளத்தில் ஆழ இடம்பெற்றான்.

கலிங்கநாட்டிலிருந்து வந்த சிற்பிகள் சூரியபாதையை கணக்கிட்டு சம்பாபுரியை வடிவமைத்தார்கள். நகரம் முழுமையான வட்டவடிவமாக அமைக்கப்பட்டு அதன் நடுவே ஏழு முகடுகள் கொண்ட கோபுரத்துடன் சூரியனின் பேராலயம் எழுந்தது. அதன் வலப்புறம் அரசனின் அரண்மனையும், அதன் இரு கைகள் என குடிப்பேரவையும் அரசப்பேரவையும் நிறுவப்பட்டன. இடப்புறம் படைத்தலைவர்களின் மாளிகை நிரை. நேர்முன்னால் அந்தணர்கள். பின்னால் ஆலய ஊழியர்கள். சகடத்தின் இருபத்துநான்கு ஆரங்களாக பாதைகள் எழுந்து வட்டமான கோட்டையைச் சென்றடைந்து உட்பக்கப் பெருஞ்சாலையில் இணைந்தன. ஆறு வாயில்கள் கொண்ட சம்பாபுரியின் கற்கோட்டைக்குமேல் இருபத்துநான்கு காவல் மாடங்கள் அச்சாலைகளை நோக்கி திறந்திருந்தன.

அங்கநாட்டு அரசர்களின் வாழ்க்கையை வகுத்துரைக்கும் சூரியதாசவிலாசம் என்னும் தொல்நூலின் நெறிகள் நடைமுறைப்படுத்தப்பட்டன. அங்கநாட்டு அரசரின் அனைத்துச் செயல்பாடுகளையும் விண்கதிர் செல்லும் வழியைக்கொண்டு வகுத்தது அது. கதிர் செல்லும் பாதைக்கேற்ப அரசர்களின் அன்றாடச் செயல்களும் நாள்தோறும் மாறுபட்டன. தென்பெயர்வும் வடபெயர்வும் அவையில் அரியணையை திசைமாற்றின. அதற்கேற்ப திரும்பும்படி அரைவட்ட வடிவில் அவைமாளிகை வடிவமைக்கப்பட்டிருந்தது. நகர்மையத்தில் செங்கல்லால் கட்டப்பட்ட நிழல்மாளிகையில் சுவர்களின் நிழல் விழுவதைக்கொண்டு பொழுதை நாழிகையில் அறுபதில் ஒரு பங்கு என கணித்தனர்.

அங்கநாட்டரசன் மையமாக அமைந்த சூரியனில் இருந்து பன்னிரண்டு பாகைகளில் அமைந்த பன்னிரு அரண்மனைகளில் மாதம் ஒன்றில் என தங்கினான். ஒவ்வொரு மாதத்திற்கும் வெவ்வேறு வண்ணங்களில் உடையணிந்தான். வேனிலில் பசுமை முதல் குளிர்கால இறுதியில் வெண்மை வரை என அது வகுக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு நாளும் அன்று மலர்ந்த பருவமலர்கள் அவன் அவையில் காட்சிவைக்கப்பட்டன. ஒவ்வொரு மாதத்திற்கும் உரிய தனிப் பண்கள் அவன் அவையில் இசைக்கப்பட்டன. கோடையில் வெண்புரவிகளும் கார்காலத்தில் செம்புரவிகளும் குளிர்காலத்தில் கரும்புரவிகளும் பூட்டிய தேரில் அவன் பயணம் செய்தான். அங்கநாட்டு அரசர்கள் பதினான்கு நாட்களுக்கு ஒருமுறை சூரியநகர்வுக்கேற்ப வகுக்கப்பட்ட நற்பொழுதுகளில் தங்கள் அரசியரை வந்து சந்திக்க வேண்டுமென்று அந்நூல் கூறியது.

அந்நெறிகள் வகுக்கப்பட்ட பின்னர் கர்ணன் அரசியரிடமிருந்து மெல்ல மெல்ல அகன்றுசென்றான். அவன் விழிகள் மாறிக்கொண்டே செல்வதை விருஷாலி கண்டாள். அவனிடம் எப்போதுமிருக்கும் உள்ளொடுங்கல் அகன்று ஆணவம் தோள்களிலும் சிரிப்பிலும் உரைக்காத ஒற்றைச் சொற்களிலும் கூடியது. அவையமர்ந்து மீசையை மெல்ல நீவியபடி அமைச்சர்களையும் குடிகளையும் நோக்கும்போது எங்கோ தொலைவில் இருப்பவன் எனத் தெரிந்தான். "அனைவரையும் காண்பவன், அனைவரையும் தழுவிக்கொள்பவன், அனைவருக்கும் அளிப்பவன், எவரும் அணுகமுடியாதவன். அவன் வாழ்க!" என்று அவையில் வேசரநாட்டுப் புலவர் ஒருவர் கர்ணனை வாழ்த்தியபோது விருஷாலி உளம் விம்மி மூடிய முகத்திரைக்குள் விழிநீர் கொண்டாள்.

முதலில் விருஷாலிக்கு அவ்வாறு உருவான அகல்வு ஒரு விடுதலையென்றே தோன்றியது. தன்னை மேலிருந்து நோக்கும் இரு விழிகள் அகன்றதுபோல. மிகச் சிறுதுளி எனக்காட்டும் பெருமலை ஒன்றிலிருந்து சேய்மைகொண்டதுபோல. எப்போதேனும் அவைகளில் அவனை அணுக்கத்தில் காணும்போது மட்டும் அறியமுடியாத ஓர் ஏக்கம் எழும். அஞ்சியவளாக அதை அவளே பிற எண்ணங்களால் மூடிக் கடப்பாள். மைந்தர் வளரத் தொடங்கியபோது அவள் கர்ணனை நினைப்பதே அரிதாயிற்று. விருஷசேனனும் இளையோரும் கர்ணனின் உருவை துளிமாற்றின்றி தாங்களும் கொண்டிருந்தனர். நிழலசைவில் நெஞ்சு திடுக்கிடும்படி அவர்கள் கர்ணனை காட்டினர். அரைச்செவியில் அவர்கள் குரல் கேட்டால் அதுவும்கூட கர்ணன்போலவே ஒலித்தது.

"அது இயல்பே, அரசி. களிப்பாவையாக வந்த மதயானைபோல இப்போது அவர் உருவாகவே மைந்தர் உங்களுக்கு அமைந்துவிட்டிருக்கிறார்கள். அவர் வடிவும் அந்நிமிர்வும் கொண்டவர்களாயினும் உங்களுக்கு உகந்தவர்கள்" என்றாள் காளி. "அன்னையர் கணவர்களை எப்படி அகத்தில் காண்கிறார்களோ அவ்வாறு மைந்தர் பிறக்கிறார்கள். மலையில் இருந்து ஒரு கல் எடுத்து அருகே மலையென நிறுத்தி ஆலயம் சமைத்து வணங்குவதைப்போல."

விருஷாலி காளியை வரச்சொல்லி சேடியை அனுப்பினாள். முதுமை மேலும் மூத்து அவள் வளைந்தொடுங்கி இருந்தாள். ஒவ்வொரு முறை அவளைக் காண்கையிலும் விருஷாலி உளம் திகைப்பதுண்டு. "காலம் ஒரு களிறுபோல என் மேல் ஏறிச்சென்றுவிட்டது. சிதைந்த உடல் எஞ்சுகிறது" என்றாள்

காளி ஒருமுறை. சேடியின் கைபற்றி வந்த காளி அவள் அறையில் தரையில் சுவர் சாய்ந்து அமர்ந்தாள். விருஷாலி அவளிடம் "அன்னையே, தங்கள் சொல் எனக்குத் தேவை. நான் இருக்கும் நிலையை என்னாலேயே கணிக்க முடியவில்லை" என்றாள். "நான் நெடுந்தொலைவில் இருக்கிறேன், அரசி. என்னால் சிற்பச்செதுக்கல்களை காண இயலாது. ஆனால் பேராலயங்கள் சிறு அணிகலன்கள்போல் தெரிகின்றன" என்றாள் காளி.

விருஷாலி அனைத்தையும் சொன்னாள். முதுமகளின் செவி கூர்கொண்டிருந்தமையால் அவள் உளம்விம்மியும் சொல்ததும்பியும் சொன்னவற்றை துளிசிந்தாமல் பெற்றுக்கொண்டாள். பற்களில்லாத வாயை மென்றபடி அமர்ந்திருந்தாள். முகம் பிசையப்படும் மாவென உருமாறிக்கொண்டே இருந்தது. பின்னர் விழிதிறந்து புன்னகைத்தாள். வெண்பச்சையாக மாறிவிட்டிருந்த விழிகள், பல்லில்லாத வாய். ஆயினும் அவள் புன்னகை அழகாகவே இருந்தது. "அரசி, நீங்கள் சொல்லி அவரை திசைகொள்ளச் செய்ய இயலாது. நீங்கள் அல்ல, எவரும் அதை செய்ய முடியாது. ஏனென்றால் அவர் பெருமானுடர். அவர்களை தெய்வங்கள் கைகளில் ஏந்தியிருக்கின்றன. அவர்களின் செல்வழிகள் முன்னரே வகுக்கப்பட்டுவிட்டன. அவர்கள் ஆற்றவேண்டிய பணி அவர்களுக்கு முன்னரே முடிவுசெய்யப்பட்டுவிட்டது."

"ஆனால் நீங்கள் அவரிடம் சென்று பேசலாம்" என்று காளி தொடர்ந்தாள். "அத்தெய்வங்களில் ஒன்று தருணம்நோக்கி இருக்குமென்றால் உங்கள் சொல் சென்று அதை தொடக்கூடும். நண்டுவளை உடைப்பெடுத்து பெருநதிகள் திசைமாறுவதுண்டு."

விருஷாலி “ஆம், அவ்வாறே நிகழவேண்டுமென தெய்வங்களை வேண்டிக்கொள்கிறேன்” என்றாள்.

வெண்முரசு வாசிப்பு முறை – ராஜகோபாலன்

# குருதிச்சாரல் - 57

### பகுதி ஒன்பது : கதிர் இருள் பொழுது – 2

அக்கோடையில் கர்ணன் சம்பாபுரிக்கு தெற்காக அமைந்த தென்புரி என்னும் அரண்மனையில் தங்கியிருந்தான். அரண்மனையை ஒட்டிய சிறிய அவைக்கூடத்தில் ஒவ்வொரு நாளும் குடியவையும் அரசவையும் கூடின. ஆனால் அவை மிகச் சிறிய அளவில் வெறும் சடங்கென்றே நிகழ்ந்தன. குடியவைக்கு முதிர்ந்து, விழியும் செவியும் மங்கிய மூன்று குடித்தலைவர்கள் தங்கள் கொடிகளுடனும் முறையாடைகளுடனும் சென்று அமர்ந்தனர். அரசவையில் சிற்றமைச்சர் கருணர் தன் மைந்தனுடன் சென்று முறைமைகள் அனைத்தையும் இயற்றினார். அவற்றை எவரும் எவ்வகையிலும் பொருட்படுத்தவில்லை.

நகர்மையத்திலிருந்த அரண்மனையை ஒட்டிய பேரவையில்தான் குடிகளும் அமைச்சர்களும் படைத்தலைவர்களும் கூடினர். அங்கே விருஷசேனன் தம்பியருடன் அமர்ந்து தந்தையின் ஆணைகளை தான் இட்டு அரசை நடத்தினான். அங்கே அரியணை ஒன்று அமைக்கப்பட்டு அதன்மேல் கர்ணனின் வில் மட்டும் வைக்கப்பட்டது. பன்னிரண்டு ஆண்டுகளுக்கும் மேலாக சம்பாபுரியின் மக்கள் அந்த வில்லையே அவன் என நோக்கி

உணர்ந்துகொண்டிருந்தனர். வில்லை அங்கு வைக்கச் சொன்ன ஹரிதர் “அனைத்துக்கும் அப்பால் குடிகளுக்குத் தேவையாவது பாதுகாப்புணர்வுதான். அது இங்கிருக்கும்வரை அவர்கள் தந்தை நிழலில் மைந்தர் என்று உணர்வார்கள்” என்றார். “அத்துடன் தாங்கள் இடும் ஆணைகளுக்குப் பின்னால் அந்த வில் இருக்கிறதென்பதை ஒவ்வொருவரும் உணர்ந்தாகவேண்டும்.”

கர்ணன் எந்த அவையிலும் அரைநாழிகை பொழுதுகூட அமர்வதில்லை. அரண்மனையை ஒட்டி நிகழும் சிறிய குடியவைக்கு வந்து முடிசூடி வாளேந்தி கோல்கொண்டு அமர்ந்து முறைமைச் சொற்களைக கேட்டு முடித்ததுமே எழுந்து தலைவணங்கி அவை நீங்கினான். அரசவையில் ஓர் ஓலையைக்கூட முழுதாகக் கேட்கும் உளம் அவனுக்கு அமையவில்லை. அவனுக்கு தெரிவித்தாகவேண்டிய செய்திகளைக்கூட விருஷசேனனின் பொருட்டு இளையவனாகிய விருஷகேது நேரில்சென்று புலரியில் தந்தை துயிலெழுந்து முகம் கழுவிக்கொண்டிருக்கையில் உரைத்து மீண்டான். ஒவ்வொன்றையும் சுருக்கி எளிய சொற்களில் மூன்றுநான்குமுறை அவன் சொன்னான். அதுவும் கர்ணனின் உள்ளத்தில் பதிந்தனவா என்றே ஐயுற்றான்.

ஒவ்வொரு முறையும் கூறப்படுவதை முற்றிலும் புதியதென்றே கர்ணன் கேட்டான். முகம் கழுவி முடித்து மரவுரியால் துடைத்துக்கொண்டதுமே அவன் உள்ளம் மதுவை நோக்கிச் செல்வதை விழிகளின் பறதி காட்டத் தொடங்கும். அதன்பின் ஒரு சொல்லும் அவனுள் நுழையாது. ஒவ்வொரு செய்தியையும் வெவ்வேறு சொற்களில் நான்கைந்து முறை விருஷகேது சொல்லவேண்டியிருந்தது. ஒருமுறைகூட திருத்தமோ மாற்றோ கர்ணனிடமிருந்து எழவில்லை.

ஒருமுறை மீண்டும் ஒருமுறை சொல்ல முற்பட்ட விருஷகேதுவை கையால் தடுத்து “அவன் என் மைந்தன். அவன் சொல் என் சொல்” என்று சொல்லி கண்களை மூடிக்கொண்டான். விருஷகேது “ஆம், தந்தையே. அவ்வாறே” என்று சொல்லி பின்வாங்கினான்.

சில ஆண்டுகளாக விழித்திருக்கும் பொழுதெல்லாம் கர்ணன் மதுமயக்கிலேயே இருந்தான். அவன் உடலின் மின்னும் கருநிறம் வெளிறியது. நீண்ட கைகள் மேலும் மேலும் நடுக்கு கொள்ளத்தொடங்கின. விரல்களை ஒன்றுடன் ஒன்று கோத்துக்கொள்வதற்கே அவன் தடுமாறுவதை விருஷகேது ஒவ்வொருமுறை அவனிடம் சொல்லெடுக்கையிலும் அறியாமல் நோக்கி விழிவிலக்கிக்கொண்டான். மெலிந்த கழுத்தும் உலர்ந்த உதடுகளும் நடுங்கிகொண்டிருந்தமையால் குரலும் பதறிப்பதறியே ஒலித்தது. தசை தளர்ந்த கன்னங்களும், நிழல்விழுந்து மென்கதுப்பு வீங்கி வளைந்து பழுப்போடிய கண்களும் அவ்வப்போது இருமலுமாக பல்லாண்டு அகவையைக் கடந்தவன் என்றானான்.

அணுக்கரான சிவதரால் கர்ணன் பேணப்பட்டான். அவனுடன் அவரும் முதுமைகொண்டு புருவங்களும் நரைத்து நடுங்கும் கால்களும் கைகளும் கொண்டிருந்தார். பிறரிடம் அவர் பேசுவது குறைவு. கர்ணனிடமும் ஒருசொல் மொழிகள் மட்டுமே. எப்போதும் அவனருகே அவர் இருந்தார். மதுவுண்டதும் கர்ணன் பெரும்பாலும் மயங்கி தலைதொங்க அமர்ந்திருப்பான். கனைப்பொலிகளும் மூச்சொலிகளும் மட்டுமே அவனிடமிருந்து எழுந்துகொண்டிருக்கும். அரிதாக கட்டற்று பேசத்தொடங்குவான். சினந்து கூச்சலிடுவான். சிவதரை அடிப்பதற்காக கையோங்கியபடி செல்வான்.

சினமெழுந்தால் அதன் உச்சத்தில் உளமுடைந்து விம்மி அழுவது அவன் வழக்கம். அவ்வண்ணமே படுத்து விசும்பியபடி துயில்வான். அவனுடன் வேறு எவரும் இருக்க சிவதர் ஒப்புவதில்லை. அவர்கள் தனியுலகில் வாழ அப்பாலென நின்று ஏவலர் அவர்களை நோக்கிக்கொண்டிருந்தனர்.

ஷத்ரியர்களைப்போல கர்ணன் எப்போதுமே மதுவை விரும்பியவனாக இருக்கவில்லை என்பதை விருஷகேது அறிந்திருந்தான். கௌரவர் அவைகளில் மட்டுமே அவர்களுடன் மதுக்களியாட்டில் ஈடுபட்டான். வேட்டைகளிலும் உண்டாட்டுகளிலும் குறைவாக மதுவருந்தி சொல்கரந்து விழிகளால் புன்னகைத்தபடி அமர்ந்திருப்பான். “மெய்மறக்க குடிப்பதில்லை நீங்கள். அங்கரே, மதுவுக்கு நம்மை அளிக்காவிட்டால் மதுவின் தெய்வம் இறங்கிவருவதில்லை” என்று துரியோதனன் சொல்லி மேலும் மேலும் கோப்பைகளை அவன் கையில் வைத்தாலும் வாங்கி புன்னகையுடன் வெறுமனே வைத்திருப்பான்.

கௌரவ நூற்றுவரும் குடித்து நிலையழிந்து பூசல்கொள்கையில் அவனுடைய முழங்கும் குரலே அவர்களை எல்லை மீறாது காக்கும். அவர்களை கைக்கு ஒருவராக அள்ளிக் கொண்டுசென்று அறைசேர்ப்பதோ தேரிலேற்றுவதோ அவன் பணியாகவே எஞ்சும். அவர்கள் மதுவில் எல்லை மீறினால் பானுமதியும் அசலையும் பிற அரசியரும் அவனைத்தான் கடிந்துகொள்வார்கள். அதை ஏற்று தலைகுனிந்து விழிதாழ்த்தி ஓரிரு சொற்களில் முனகலாக விடையிறுப்பான்.

பன்னிரு படைக்கள நிகழ்வுக்குப் பின் அங்கநாட்டுக்கு திரும்பியபோதுதான் கர்ணன் பெருங்குடியனாக

மாறிவிட்டிருந்தான். அங்கு அரண்மனையிலும் வருவழியில் தேரிலும் சித்தம் சிதறிப்பரவும்வரை குடித்து புலம்பியபடி துயின்றான். எழுந்ததும் தலையைப் பற்றியபடி அமர்ந்திருந்தான். குளிர்ந்த ஈரத்துணியை அவன் கழுத்தைச் சுற்றிக் கட்டி பீடத்தில் தலைசாய்த்து அமர்த்தி புளித்தநீர் அளித்து அவன் தலைநோவை அகற்றினார் சிவதர். ஆனால் மெல்ல நிலைமீண்டு உணவருந்தி வெளியே சென்று மானுடரைப் பார்த்ததுமே வெருண்டவன்போல் அவன் தன் அறைக்கு மீண்டான். கைகள் பதற "சிவதரே, மது. மது எங்கே? கொணர்க மது!" என்று கூவினான். மீண்டும் வெறிகொண்டவனாகக் குடித்து வாயுமிழ்ந்து விழுந்து துயின்றான். மூன்றுமாதம் அவன் ஒருநாளில் ஒருநாழிகைகூட விழிப்புளத்துடன் இருக்கவில்லை.

மீண்டுவிடுவான் என்றுதான் மைந்தர் எண்ணினர். ஹரிதர் "எந்தத் துயரும் சில நாட்களுக்கே என வகுத்த தெய்வங்களை நம்புவோம். பிரிவு ஒரு மாதத்திற்கு, இழப்பு மூன்று மாதத்துக்கு, சிறுமை ஆறு மாதத்திற்கு" என்றார். ஆனால் நாளும் அவன் துயரும் குடியும் வளர்ந்துகொண்டே சென்றன. விருஷசேனன் "இது அவர் கொண்ட சிறுமை அல்ல. அவர் இழைத்த சிறுமை, அமைச்சரே" என்றான். "அவர் தன் ஆசிரியர் முன்பும் தெய்வத்தின் முன்பும் வீழ்ச்சியடைந்துவிட்டதாகவே உணர்கிறார். மது மீறிச்செல்கையில் அவர்களை வசைபாடுகிறார், வெறிகொண்டு கூவுகிறார், பின்னர் எண்ணி உளம்கலுழ்கிறார்." ஹரிதர் "அவருடன் சிவதர் இருக்கிறார். முற்றிலும் இவ்வுலகின் பிடி அறுந்துசெல்ல வாய்ப்பில்லை" என்றார்.

ஓராண்டுக்குப்பின் ஹரிதர் அஞ்சத் தொடங்கினார். “சிவதரைப்பற்றிய என் கணிப்பு பிழை என ஐயுறுகிறேன், இளவரசே. அரசருக்கு மதுவூற்றிக்கொடுப்பதை அவரே செய்கிறார். நாம் இவ்வண்ணம் இருந்தால் மீட்கமுடியாத ஆழத்திற்கே அரசர் சென்றுவிடக்கூடும்.” அவைசூழ்ந்து ஆவதென்ன என்று தேர்ந்தனர். “அவரிடம் எவர் சொல்ல முடியும்? இரு அன்னையரும் இருவகையில் அவருக்கு சேய்மையில் இருக்கிறார்கள். அவர்கள் ஒரு சொல்லையேனும் அவரிடம் கூறவியலாது” என்றான் விருஷகேது. சத்யசேனன் “ஆம், அன்னையையும் தந்தையையும் அவர் தன் உள்ளத்திலிருந்து விலக்கிவிட்டார்” என்றான். “மைந்தராகவும் குடிகளாகவும் நாம் சென்று மன்றாடலாம்” என்றார் ஹரிதர். அவர்கள் மறுமொழி சொல்லாமல் அமைதியாக அமர்ந்திருந்தார்கள். அதனால் பயனில்லை என அவர்கள் அறிந்திருந்தனர்.

சற்றுநேரம் காத்தபின் “ஆம், நீங்கள் உணர்வதை நான் அறிவேன். ஆனால் அவர் காலடியில் தலைவைத்து மன்றாடவில்லை என்றால் நாம் நம் கடமையை செய்யாதவர்கள் என்று உணர நேரிடும்” என்றார் ஹரிதர். அவர்கள் தலையசைத்தனர். சேர்ந்துசென்று கர்ணனைக் கண்டு மன்றாடினர். விருஷசேனனும் விருஷகேதுவும் தனித்தனியாகக் கண்டு கண்ணீருடன் கோரினர். “தந்தையே, தாங்கள் களம்பட்டு இறந்தீர்கள் என்றால் அதை எங்கள் குடிப்பெருமை என்று எண்ணுவோம். தீச்சொல் விழுந்தவர்போல் இப்படி உருகி அழிவது எங்கள் கொடிவழிகள் வரை துயர்நிறைப்பது. அருள்க, தாங்கள் நஞ்சூட்டுவது தங்களுக்கு மட்டும் அல்ல” என்றான் விருஷசேனன். “அங்கம் மாவீரர் ஒருவரால் அருளப்பட்டிருக்கிறது என்று மக்கள்

மகிழ்ந்திருந்த காலம் இது, தந்தையே. அவர்கள்மேல் தங்கள் சினம் என்ன?” என்றான் விருஷகேது.

அவர்களின் சொற்களைக் கேட்டு மீசையை நீவியபடி அமர்ந்திருந்த பின் ஒரு சொல்லும் உரைக்காமல் கர்ணன் எழுந்துசென்றான். விருஷகேது ஒருமுறை கண்ணீருடன் அவன் காலடியில் அமர்ந்து “செவிகொள்க, தந்தையே! ஒற்றைக்கடிவாளக் கற்றையால் ஒவ்வொரு புரவியையும் தனித்தனியாக ஆளும் உங்களுக்கு உங்கள் உள்ளம் அடங்கவில்லை என ஏற்கமாட்டேன். அளிகொள்க, தந்தையே! உங்கள் கண்ணெதிரே நாளை உங்கள் மைந்தரும் அழியவிடாதீர்கள்” என்றான். கர்ணன் அவனை நோக்கி அமர்ந்திருந்தான். அவன் இடக்கண் துடித்தது. சிவந்த விழிகளிலிருந்து புண்ணுமிழ் குருதி என நீர் வழியலாயிற்று. நெடுநேரம் ஒரு சொல் எழாமல் அவன் விழிநீருகுத்துக்கொண்டிருந்தான். பெருமூச்சுடன் விருஷகேது எழுந்துகொண்டான்.

பின்னர் திருவிடத்திலிருந்தும் யவனநாட்டிலிருந்தும் மருத்துவர்களை வரவழைத்து அவன் உடலை நோக்கச் செய்தனர். மாதக்கணக்கில் தங்கி நோக்கிவிட்டு “அவரே உளம்விழையவேண்டும், அன்றி அடிமையளித்தலுக்கு மருந்தில்லை, இளவரசே” என்றனர். “அவர் உள்ளம் நோயுற்றிருக்கிறது. அந்நோயை ஆற்றுவது மருத்துவரால் இயலாதது. அவர் அதிலிருந்து மீண்டாலொழிய இதை சீரமைக்க இயலாது.” யவன மருத்துவரான சைமர் “அவர் உள்ளம் கொண்ட எரியை இன்று இதுவே ஆற்றுகிறதென்று தோன்றுகிறது. இதை நிறுத்தினால் உயிர்துறக்கவும்கூடும்” என்றார்.

“புதைசேற்றில் மூழ்கிக்கொண்டிருக்கும் யானையைப் பார்த்துநிற்கும் துயர்” என்று ஹரிதர் சொன்னார். “நாம் அறிந்த அங்கர் இறந்துவிட்டார். உடல் சிதைநோக்கி செல்கிறது.” தனியறையில் அதைக் கேட்டு சீற்றத்துடன் எழுந்த விருஷசேனன் பின்னர் நெஞ்சில் குத்துபட்டவன்போல நடுங்கி மீண்டும் பீடத்திலமர்ந்து தலையை பற்றிக்கொண்டான். “நான் சொல்வது…” என ஹரிதர் சொல்லவர “போதும்” என்று தளர்ந்த குரலில் சொல்லி செல்லும்படி கைகாட்டினான். அவர் தலைவணங்கி வெளியேறியதும் விருஷகேது “அவர் சொல்வது சரிதான்… இன்றிருக்கும் அவரா பாரதவர்ஷமே அஞ்சும் வில்வீரர்? பரசுராமரின் முதன்மை மாணவர்?” என்றான். “போதும்” என உரக்கக் கூவி கைகாட்டினான் விருஷசேனன். சத்யசேனன் இளையவனின் தோளைப்பற்றி அடக்கினான்.

கர்ணன் காலையில் எழுந்து நீராடி ஆடை மாற்றி வந்து அமர்ந்ததுமே பொற்கிண்ணத்தில் மது வழங்கப்படவேண்டும். சிவதரே மதுக்கிண்ணங்களை கொண்டுவந்து நிரத்துவார். கோப்பையை இரு கைகளாலும் வாங்கி அவன் அருந்தும்போது காலையில் அரசுச்செய்திகளை சொல்லிவிட்டு நின்றிருக்கும் விருஷகேது விழிகளைத் திருப்பி பெருமூச்சுவிடுவான். மும்முறை அருந்தி கிண்ணத்தை வைத்து மரவுரியால் உதடுகளைத் துடைத்து கண்களை மூடி உடல் வியர்க்கவிட்டு சற்று பொழுதமர்ந்து மெல்ல மீண்டு வருகையில் அவன் முற்றிலும் மாறிவிட்டிருப்பான். அவன் இயல்புக்கு எவ்வகையிலும் பொருந்தாத கோணலான நகையொன்று இதழ்களில் ஏறியிருக்கும். உள்ளத்தில் இறுகிய ஒன்றை உந்தி அசைப்பதன் கோணல் அது எனத் தோன்றும்.

நடிப்பென்றோ பிறிதெங்கிருந்தோ வந்து பொருந்தும் இயல்பென்றோ தோன்றும் சிறுகளிப்புடன் “சொல்க மைந்தா, நாடு எங்ஙனம் உள்ளது? நான் அறிவேன் உங்கள் கையில் அங்கநாட்டின் கோல் சிறக்கும் என்று. ஆகவேதான் இங்கு ஒதுங்கிக்கொண்டேன். அஸ்தினபுரியிலிருந்து ஏதேனும் செய்தி வந்ததா? நான் செய்ய வேண்டியதென்ன?” என்பான். விருஷகேது தலைவணங்கி சொல்லத் தொடங்கும்போதே திரும்பி மீண்டும் மது ஊற்றிக்கொடுக்க சிவதரிடம் கைகாட்டுவான். சிவதர் ஊற்றிக்கொடுத்ததை கையிலேந்தியபடி “சொல்க, அங்கம் குறையின்றி இருக்கிறதல்லவா? என் வில் தேவையாகிறதா?” என்று கேட்பான். விருஷகேது “தேவையானபோது தெரிவிக்கிறேன், தந்தையே” என்றபின் வெளியே செல்வான்.

ஒவ்வொருநாளும் கர்ணனை விருஷகேது மட்டும் சென்று சந்தித்துக்கொண்டிருந்தான். பின்னர் அது குறைந்து கதிர் நாளில் மட்டும் என்றாயிற்று. பின்னர் அதுவும் இன்றி தவிர்க்க இயலா செய்தி ஏதேனும் இருந்தால் என்றாயிற்று. நாளடைவில் அரண்மனையும் அங்கநாடும் அவனை மறந்தன. சம்பாபுரியின் முதன்மை அரண்மனையில் விருஷசேனன் கூட்டும் அரசவையும் குடியவையுமே அனைத்தையும் முடிவு செய்தன. முடி சூடாமலேயே அந்நாட்டை விருஷசேனன் அரசன் என்று அமர்ந்து ஆண்டான். அவன் சொற்களும் நோக்கும் உடலசைவுகளும்கூட தந்தையைப்போன்றே இருந்தன. அளியும் ஆணவமும் சொற்சுருக்கமும்கூட கர்ணனையே காட்டின.

இளஅகவையில் கரிய நெடிய உடலும், ஒளிகொண்ட விழிகளும், சுருண்டு தோளில் பரவிய குழல்புரிகளுமாக

இளங்கதிரோன் என நீலம் சுடர யானை மேலேறி நகர்வலம் வந்த கர்ணனை அவனைப்போன்றிருந்த விருஷசேனனையும் அவனைப்போலவே தோன்றிய மைந்தரையும் பார்க்கையில் சம்பாபுரியின் மக்கள் நினைவுகூர்ந்தனர். “கதிரவன் மேற்கில் மறைந்தால் மேலும் இளமையுடன் கிழக்கில் எழுந்தாக வேண்டும். தன்னை நோக்கும் பரப்பை எல்லாம் தான் என்றே ஆக்குவது அவன் ஒளி” என்று சூதர் பாடினர். “மைந்தரைப் பாடுக, அது தந்தையரைப் பாடுவதேயாகும். அரசர்கள் எனும் அலைகளுக்கு அப்பால் உள்ளது அரசன் எனும் கடல்.”

விருஷாலி ஒவ்வொரு நாளும் கணவனை நினைத்துக்கொண்டிருந்தாள். அவளையறியாமல் எவ்வகையிலேனும் அவளில் எழும் நினைவு அது. ஒருநாள் கனவென்று, பிறிதொருநாள் எவர் சொல்லிலேனும் எழும் அவன் பெயர் அளிக்கும் திடுக்கிடல் என்று, சிலமுறை எதனுடனேனும் தொடுத்தெழும் நினைவுச்சரடு என்று, அரிதாக விடியற்காலையின் குளிரில் பெருகி எழுந்து சூழ்ந்துகொள்ளும் நினைவுகளின் பெருக்கு என்று. அவன் சொற்களை, விழிநிறைத்த தோற்றத்தை, அவனிலிருந்த மாண்பைக்கூட தன்னால் மறக்கமுடிவதையும் அவன் உதடுகள் தனக்களித்த முத்தங்கள், அவன் பெருங்கைகளுக்குள் உடல்குழைய அடைந்த நிலையிழப்புகள் மட்டுமே நாள்தோறும் கூர்கொண்டு அன்றுநிகழ்வதென, ஐம்புலனறிதல்கள் என நின்றிருப்பதையும் எண்ணி வியந்தாள்.

ஆணை உடலென்றே பெண் அறியமுடியும்போலும் என்று எண்ணிக்கொண்டாள். “ஆம் அரசி, ஆளென்று அறிந்து உடலென்று சுருங்குவதே பெண்ணுக்கு ஆண். உடலென்று

ஏற்று சுவையென்று நின்று உணர்வென்று கூர்வதே ஆணுக்குப் பெண்” என்றாள் காளி. விருஷாலி பெருமூச்சுவிட்டாள். மீண்டும் அங்கு சென்று சேரவியலாதா என்று அவ்வப்போது உளம் எழுவதுண்டு. அதை உய்த்துணர்ந்ததுபோல் காளி சொன்னாள் “கடந்துவந்தவற்றை மீண்டும் சென்று இயற்றமுடியும் என்றாலும் அவ்வாறே செய்வோம். அந்தக் காற்றில் அந்தச் சுடர் அவ்வாறுதான் அசையவியலும்.” ஒவ்வொரு எண்ணக்கொந்தளிப்பையும் ஏதேனும் அன்றாடச் செயலில் முழுவிசையுடன் ஈடுபட்டுக் கடப்பதே அவள் கண்டடைந்த வழியாக இருந்தது.

சம்பாபுரியின் மரபுகளின்படி அவள் அரசனைச் சென்று பார்க்கக் கூடாது. அங்கிருந்து ஒவ்வொரு நாளும் ஒரு சேடி தனக்கு செய்தி கொண்டுவர வேண்டுமென்று அவள் வகுத்திருந்தாள். மீள மீள ஒரே செய்தியையே சேடியர் கொண்டுவந்தனர். புலரி எழுந்ததுமே மதுவருந்தி மிகைக்களிப்பு கொண்டு, பின்னர் உடல் சோர்ந்து துயின்று, பின் உச்சிப்பொழுதில் எழுந்து உணவுண்டு, மீண்டும் மதுவருந்தி துயின்று, அந்தியில் விழித்துக்கொண்டு, குடிக்களியாட்டுக்கென்றே வந்து சூழும் கீழ்மக்களாகிய சூதருடனோ அயல்நிலத்துப் பாணருடனோ விறலியருடனோ களியாடி நகைத்து கூத்தாடி, கீழ்மையில் திளைத்து பின்னிரவில் நின்ற இடத்திலேயே அமர்ந்து உடல்நீட்டி அவ்வண்ணமே துயின்று ஏவலரால் தூக்கிக் கொண்டுசென்று மஞ்சத்தில் படுக்க வைக்கப்பட்டான்.

“அரசி, அங்கு நிகழ்வதொன்றே. அரசர் தன்னை கீழ்மகன் என்றாக்க முயல்கிறார். நான் கீழ்மகன், ஆட்டன், களியன் என்று கூவிச்சொல்கிறார். நெஞ்சிலறைந்து தெய்வங்களை நோக்கி வெல்விளி எழுப்புகிறார்” என்றார் ஹரிதர். “அக்கீழ்மைக்

களியாட்டுகளை குடிப்பிறந்தோர் ஒருவர் சற்று பொழுதுகூட நோக்கி இருக்க இயலாது. மானுட அசைவனைத்தையும் கேலிக்குரியனவாக ஆக்கும் குரங்குகளைப்போன்று இங்கு திகழும் அறங்களனைத்தும் அங்கு கீழ்க்கூத்தென்று நடிக்கப்படுகின்றன. அதற்கென்றே நாடெங்குமிருந்து வந்து குழுமுகிறார்கள் ஆட்டரும் களிமக்களும்.” அவள் கண்கலங்கி நோக்கியிருக்க “குடியில் என்ன நிகழ்கிறது என நான் வியப்பதுண்டு? தன்னை தலைகீழாக்க மானுடன் கொள்ளும் உள்விழைவை தொட்டு முளைக்கவைக்கிறதா மது? தலைகீழாக நின்று இவ்வுலகையே அவ்வண்ணம் திருப்பிக்கொள்கிறார்களா?” என்றார்.

நாளடைவில் அவள் நிகழ்வன ஒவ்வொன்றாக தவிர்த்துக் கடந்துசென்று அவன் கை பற்றி அங்கு வந்து சேர்ந்த நாட்களை மீட்டெடுத்து தன் அரண்மனைக்குள் அந்த முகத்தை நிறுத்திகொண்டாள். என்றோ ஒருநாள் அந்தக் கர்ணனைக் குறித்து அவள் சொன்னபோது விறலியான சம்பை “அரசி, நீங்கள் இப்பொழுதுபோல் உளம் மகிழ்ந்து அவருடன் அன்று இருந்ததில்லை” என்றாள். விருஷாலி விழிசுருக்கி “என்ன சொல்கிறாய்?” என்றாள். “இந்த அரண்மனையில் உங்கள் அன்பின்பொருட்டு அவர் வந்து காத்து நின்றிருந்ததை நான் அறிவேன். காதலன் என்றோ கணவன் என்றோ நீங்கள் அவரை கண்டதே இல்லை. அரசர் எனக் கண்டு அடிமையென பணிந்து எழுந்தீர்கள்” என்றாள் சம்பை.

அவள் நெஞ்சு அறைபட தலைதிருப்பிக்கொண்டாள். சம்பை “இன்று நீங்கள் மீட்டெடுத்து நிறுவியிருக்கும் இந்த அங்கர் உங்கள் இளமையின் தனிமைக் கனவுகளில் வாழ்ந்தவர். இந்தக் காதலின் ஒரு துளியையேனும் அன்று அவருக்கு

அளித்திருக்கலாம். இன்று அவர் அக்கோப்பையில் ஊற்றி ஊற்றி அருந்திக்கொண்டிருப்பது ஒவ்வொரு திசையிலிருந்தும் அவர் மீது பெய்த வெறுமையை அல்லவா?” என்றாள். சினந்து எழுந்து “செல்க!” என்றாள் விருஷாலி. “எண்ணுவதை உரைத்தாகவேண்டும் என்பது விறலியின் கடன்” என்று சம்பை சொன்னாள். உரத்த குரலில் “செல்க!” என்றபின் கைநீட்டி மூச்சிரைத்தாள்.

“இதையே கலிங்கத்தரசி கேட்டாலும் சொல்வேன், அரசி. அவர் மைந்தரை கருவுற்றபோதுகூட எவர் மைந்தர் மூத்தவர் என முடிபெறுவார் என்ற கணிப்புகள் மட்டுமே உங்களை ஆட்டுவித்தன” என்று சம்பை தொடர்ந்தாள். “உங்கள் குருதியில் பிறந்த மைந்தர் அரசனாவார் என்றால் நீங்களும் இயல்பாக அரசகுடியாவீர்கள் என எண்ணினீர்கள். அன்றைய உளச்சிறுமையில் வருநாளின் எழுதல் குறித்து அவ்வண்ணம் கனவுகண்டீர்கள்.” அவள் நீர்பரவிய விழிகளுடன் விறலியை நோக்கி அமர்ந்திருந்தாள். “இன்று அந்த அங்கநாட்டரசர் எவ்வண்ணம் உங்களுக்கு உவப்புக்குரியவர் ஆகிறார்? ஏனென்றால் இன்று நீங்கள் உங்களை அரசியென்று உணரத் தொடங்கிவிட்டீர்கள். பொற்குறடுகள் மேல் தயக்கமின்றி கால்வைத்துச் செல்கிறீர்கள். துயிலுக்கு முன் அருமணி நகைகளை சலிப்புடன் கழற்றி அப்பாலிடுகிறீர்கள்” என்றாள் விறலி.

“இழந்தவை மீளாது என்பதை மீளமீளச் சொல்வதே என்றும் கவிதையின் வழி. வாழ்க வாழ்க என்று மானுடரிடம் கிணையும் யாழும் முழக்கி சொல்லிக்கொண்டிருக்கிறோம் பாணரும் விறலியரும். எனினும் காலத்தை நழுவவிட்டு கடந்துசென்று திரும்பி ஏங்குவதையே மானுடரில்

பெரும்பாலானவர்கள் இன்பம் என கொண்டிருக்கிறார்கள்.” விருஷாலி பெருமூச்சுவிட்டு தோள்தணிய அமர்ந்திருந்தாள். பின்னர் “நீ சொன்னது மெய் விறலி, ஆனால் நான் பொன்னாலோ முடியாலோ புகழ்மொழியாலோ இவ்வண்ணம் ஆகவில்லை” என்றாள்.

அவள் விழிகளை நோக்கி “என் மைந்தன் அவர் உருவில் எழுந்தபோதுதான் நான் உணர்ந்தேன், அவர் எனக்குரியவர் என” என்றாள். விறலி “அவ்வண்ணமென்றால் நீங்கள் உளம்கொண்டிருக்கும் அங்கர் அவரல்ல, உங்கள் மைந்தனே” என்றாள். நெஞ்சு திடுக்கிட்டாலும் மேலே சொல்லெடுக்க விருஷாலியால் இயலவில்லை. விறலி எழுந்து தலைவணங்கி விடைபெற்ற பின்னரும் நெடுநேரம் அங்கேயே அமர்ந்திருந்தாள். அப்போது தன் உள்ளம் சென்றடைந்த இடத்தை உணர்ந்ததும் அவள் திடுக்கிட்டாள். அதை தன்னிடமிருந்து அகற்ற முயன்றபின் ஆம் என பெருமூச்சுவிட்டாள்.

அன்று மாலை அணிகளைந்து ஆடைமாற்றி துயில்கொள்ளப் போகும்போது அணிச்சேடியிடம் “கலிங்கநாட்டரசியிடம் அணுக்கமான எவரையேனும் நமக்குத் தெரியுமா?” என்றாள். அணிச்சேடி “நான் ஓராண்டு அங்கே அணிசெய்துகொண்டிருந்தேன், அரசி” என்றாள். அதை முன்னரே அறிந்திருப்பதை விருஷாலி அப்போது நினைவுகூர்ந்தாள். உள்ளத்தின் ஆழமே முன்செல்கிறது, அலைகளாலான மேல்பரப்பு அஞ்சியும் பிந்தியும் அறியாததென நடித்தும் தொடர்கிறது. “அங்கே அரசர் எவ்வகையிலேனும் இருக்கிறாரா?” என்றாள். “அரசி?” என அவள் புரியாமல் கேட்டாள். “இங்கு அரசர் இருப்பதை நீ அறிவாய் அல்லவா?”

என்றாள் விருஷாலி. “ஆம், அரசி” என்றாள் சேடி. “அதைப்போல அங்கு அவர் இருக்கிறாரா?”

சேடி சில கணங்கள் அமைதியாக இருந்துவிட்டு “அவர்களுக்கும் மைந்தர்கள் இருக்கிறார்கள், அரசி” என்றாள். முதல் கணம் அந்த மறுமொழி சீற்றத்தை ஏற்படுத்தியது. உடனே அது பொருத்தமான கூற்று என்றும் தோன்றியது. அதை எண்ணிக்கொண்டு அன்று முழுக்க மஞ்சத்தில் துயிலாது படுத்திருந்தாள். பின்னர் சுப்ரியையாக மாறி அவ்வரண்மனையில் வாழ்ந்தாள். அது மிக எளிதாக தோன்றியது. ஏனென்றால் அங்கே அவள் மைந்தர்களாக இருந்தவர்களும் அதே முகம் கொண்டிருந்தனர்.

மறுநாள் விறலியிடம் அவள் அதைக் குறித்து கேட்டாள். “அவளும் இழந்ததில் வாழ்வாள் போலும், விறலி” என்றாள். “அனைவரும் அவ்வாறுதானே வாழ்கிறார்கள், அரசி?” என்றாள் விறலி. “அனைவருமா?” என்றாள் விருஷாலி. “ஆம், அவ்வாறல்ல எனில் ஒரு சொல்லும் காவியம் கற்றிருக்கலாகாது. அணியும் ஆடையும் அகச்சொல்லும் ஆக நம்மை நிறைத்திருக்கும் காவியம் நம்மை நடைகாலத்திலிருந்து அகற்றுகிறது” என்றாள் விறலி. விருஷாலி விழித்து நோக்கி அமர்ந்திருக்க “அன்றேல் காவியம் முழுத்துச் சூழ்ந்து நம் அணிகளை, ஆடைகளை, அகச்சொற்களை ஒவ்வொன்றாகக் கழற்றவேண்டும், அரசி” என்றாள்.

# குருதிச்சாரல் - 58

**பகுதி ஒன்பது : கதிர் இருள் பொழுது – 3**

கலிங்கச் சிற்பிகளால் மூலஸ்தான நகரியிலிருந்த மாபெரும் சூரியதேவன் ஆலயத்தின் அதே வடிவில் செந்நிற மென்கற்களைக் கொண்டு சம்பாபுரியின் மையத்தில் கட்டப்பட்ட நாளவன்கோட்டம் பன்னிரு வாயில்கள் கொண்டு வட்ட வடிவில் அமைந்திருந்தது. தரையிலிருந்து நான்கு ஆள் உயரத்தில் எழுப்பப்பட்ட அரைக்கோள வடிவிலான பீடத்தின் மீது ஒன்றன்மேல் ஒன்றென அடுக்கப்பட்ட ஏழு முகடுகளுடன், உச்சியில் கூர்ந்துநின்ற பொன்முலாம் பூசப்பட்ட கலத்துடன், மணிமுடிசூடிய தலைபோல் தொலைவிலிருந்தே அது தெரிந்தது. விருஷாலி சாளரத்தைத் திறந்து வளைவின்றி நேராகச் சென்ற பாதையின் மறுபக்கம் மெல்ல விரிந்து அணுகிவந்த ஆலயத்தை விழிநிலைத்து நோக்கிக்கொண்டிருந்தாள்.

சேய்மையில் முழுப்பும் மெழுக்கும் கொண்டு செந்தெங்கின் இளங்காய் வளைவென மின்னிய கல்வளைவு அணுகுந்தோறும் பருப்பையும் மழை வடுக்களையும் நீர்வழிவையும் காட்டத்தொடங்கியது. கிழக்கு நோக்கிய முதன்மைப் பெருவாயிலின் முன் அமைந்த அரைவட்ட முற்றத்தில் அவள் தேர் சென்று நின்றது. அங்கு அவளுக்காக காத்து நின்றிருந்த ஹரிதரும் சிற்றமைச்சர்கள் இருவரும் கைகூப்பியபடி அவளை நோக்கி வந்தனர். அவள் இறங்கி நின்றதும் தேர் திரும்பிச் சென்றது. தொடர்ந்து வந்த சிறிய தேரிலிருந்து அணுக்கச் சேடியர் இறங்கி அவளுக்குப் பின்னால் நின்றனர்.

ஹரிதர் கைகூப்பி "அரசிக்கு குலமுதல்வோன் ஆலயத்திற்கு நல்வரவு. பூசனைகளுக்கான ஒருக்கங்கள் துவங்கியுள்ளன.

தங்கள் மீது ஒளியிறை அருள் பொழிக!” என்றார். சிற்றமைச்சர்கள் தலைவணங்கி முகமனுரைத்தனர். முகமன்களுக்கு புன்னகையுடன் எதிர்முகமன் அளிக்கவும், வரவேற்புகளையும் தலைவணங்கல்களையும் இயல்பாக ஏற்று மாறா புன்னகையுடன் நிமிர்ந்த தலையுடன் சீர்நடையிட்டு செல்லவும் அவள் பழகியிருந்தாள். இருபத்திநான்கு கல்படிகளினூடாக வளைந்து மேலேறி அகன்ற ஒற்றைக்கல் படியில் நின்றாள். அணிச்செதுக்குக் கல்நிலையின் இருபுறமும் கங்கையும் யமுனையும் அமுதகலங்களேந்தி வாயில்தேவதைகளாக நின்றிருந்தனர். தலைக்குமேல் தாமரை மலர்களும் கொடிகளும் பின்னி உருவாக்கிய நுண்செதுக்கு அரைவட்ட வளைவு பெரிய பொன்வளையல் என தெரிந்தது.

நிலைச்சதுரத்துக்கு அப்பால் ஆலயத்திற்குள் பன்னிரு வாயில்களினூடாக உள்ளே புகுந்து நிறைந்த காற்றின் ஒவ்வொரு ஒழுக்கும் பிறிதொன்றுடன் மோதி குலைந்து சுழன்று கொப்பளித்துக் கொண்டிருந்தது. தொடர்ந்து திசைமாறும் காற்றொழுக்கே சூரியனின் ஆலயத்தின் தனிச்சிறப்பு. சுடர்களைக் காக்க அனைத்து விளக்குகளின் மீதும் சிறிய வெண்கலப் புரிகளில் சுழன்ற இரண்டு இலைத்தடுப்புகள் இருந்தன. அதன்மேலிருந்த சிறிய விசிறிச்சிறகு வீசும் காற்றை கணித்து அதற்கு எதிர்த் திசையில் இலைத்தடுப்பைத் திருப்பி சுடரைக் காத்தது. ஆலயத்திற்குள் நுழைந்ததுமே ஆடையை மும்முறை சுழற்றி செருகிக்கொள்ளும் வழக்கம் அனைவருக்கும் இருந்தது. ஆயினும் எழுந்து உப்பி படபடக்கும் ஆடைகளால் அங்கு செல்லும் ஒவ்வொருவரும் வானில் சிறகுலையப் பறக்கும் பறவைகள் எனத் தோன்றினர். சுடர்கள் எப்போதும் எழுந்தாடிக்கொண்டிருப்பதனால் இரவில் ஆலயமே விண்ணில் அலையடித்துக்கொண்டிருக்கும்.

ஆலயத்தின் வெளிச்சுற்று அறுபத்துநான்கு யோகினியரால் ஆனது. ஆனால் அங்கே பாரதவர்ஷத்தின் பெருநதிகளே யோகினியர் என அமர்ந்திருந்தனர். கருவறைக்கு ஒரு நீர்மகள் அன்னை வடிவில் அருள் காட்டி அமைந்திருந்தாள். ஒவ்வொரு கருவறைக்கு முன்னும் கல்லாலான ஏழு தட்டு நிலைவிளக்கு எழுசுடர் கொண்டு நின்றிருந்தது. முதல் ஆலயத்தில் முதலைமேல் அமுதகலம் ஏந்தி கங்கை அமர்ந்திருந்தாள். அருகே ஆமைமேல் அமர்ந்த யமுனை. தாமரைமேல் சிந்து. மீன்மீது கோமதி. அனைத்து விளக்குகளிலும் நெய்ச்சுடர்கள் அசைந்தன. கருவறைக்குள் சுடர்கள் அசைவிலாது இதழாகியிருந்தன.

விருஷாலி வணங்கி மலர்கொண்டபடி சுற்றுப் பிராகாரத்தை வளைத்து நடந்து மீண்டும் நின்ற இடத்திற்கு வந்தாள். அவளுக்காக வந்ததுபோல் அன்றி வந்து காத்து நின்ற ஆலயப்பூசகர் “வணங்குகிறேன், அரசி” என அழைத்து நடுவிலிருந்த ஆழிவடிவ மையக்கருவறை நோக்கி அழைத்துச் சென்றார். கற்பலகைகள் பரப்பப்பட்ட முற்றத்தின் மீது வானம் இளநீல வளையமெனத் தோன்றியது.

முற்றத்தில் நின்றாலே முழுத் தோற்றமும் தெரியும்படி உயரமாக எழுந்த கருவறைக்குள் மூன்றுவாரை உயரத்தில் சூரியனின் பெருஞ்சிலை அமைந்திருந்தது. ஏழு புரவிகள் விசைகொண்டு கால் தூக்கி நின்றிருக்க பீடத்தில் அருணன் மலர்ச்சொடுக்கு சாட்டையுடன் விழித்த கண்களும் திறந்த வாயுமென அசைவு கொண்டிருந்தான். இரு மேற்கைகளில் தாமரை மலர்கள், அஞ்சலும் அருளலும் காட்டிய கீழிருகைகள். ஏழு முகடுகள் கொண்ட மணிமுடி சூடிய தலைக்குப் பின்னால் நூற்றெட்டு நெய்விளக்குச் சுடர்கள் அவற்றுக்குப் பின்னால்

ஏழிலை வட்டமாக அமைந்த முத்துச்சிப்பிகளாலான குவியாடித்தொகைகளால் ஒளிதிருப்பப்பட்டு சுடர்வட்டமென்று ஒளிர்ந்து கொண்டிருந்தன. எழுகதிர்மேல் தோன்றியதெனத் தோன்றியது போலிருந்தது கதிரவன் முகம்.

விருஷாலி கைகூப்பி நின்றபோது அவள் முதல் முறையாக கண்ட கர்ணனின் முகத்தை எண்ணிக்கொண்டாள். அன்று அது முன்பு கண்ட ஏதோ முகமென்று உளம் பதைத்தது. எவர் எவரென்று உசாவி நான்கு நாட்களுக்குப் பின்னரே புலரியின் அரைக்கனவில் வெண்புரவிமேல் கிழக்கிலிருந்து எழுந்து வந்த கதிரோனின் முகம் அது என கண்டுகொண்டாள். முன்பெப்போதோ அன்னையுடன் அருணபுரி எனும் சிற்றூருக்குச் சென்று அங்கு சிறிய குன்றொன்றின்மேல் அமைந்த கணையாழி வடிவக் கதிரவனின் ஆலயத்தின் முன் நின்று வணங்கியபோது நேர்கண்ட கல்முகம்.

எப்போதும் கதிரோன் முன் வணங்கவோ வழிபடவோ வேண்டவோ ஒன்றும் உள்ளத்தில் எழுவதில்லை. வெறும் விழிகளென அங்கு நின்றிருந்தாள். ஒளிரும் கரிய தோள்கள். நீண்ட பெருங்கைகள். சிற்றிடையில் கச்சை. ஊன்றிய நிலைத்தொடைகள். குறையற்ற பேருடல். அவள் விழிகளிலிருந்து நீர் பெருகி கன்னங்களிலும் நெஞ்சிலும் சொட்டத்தொடங்கியது. அணுக்கச் சேடி சாரதை அவளுக்குப் பின்னால் சற்று அருகணைந்து தோளைத்தொட அவள் தலைகுனிந்து தலையாடையை எடுத்து முகத்தை மறைத்துக்கொண்டாள்.

அவள் வலச்சுற்று முடித்து நின்றபோது ஹரிதர் அவளருகே வந்து “இளைய கௌரவர் அணுகிவிட்டார், அரசி” என்றார். “தாங்கள் அவருடன் ஓரிரு சொற்கள் தனிச்சொல்லாட

இயலுமென்றால் நன்று. கங்கையன்னையின் ஆலயமுகப்பில் அவர் தங்களுக்காக காத்து நின்றிருக்கிறார்." அவள் முகத்தைத் துடைத்து தலையாடையை விலக்கி பின்கொண்டை மேல் சுற்றியபின் "ஆம், வருகிறேன்" என்று சொன்னாள். ஹரிதர் தலைவணங்கி விலக அவள் மேலுமிருந்த சிற்றாலயங்களில் வணங்கி மலர்கொண்டு கங்கையின் கருவறை முன் கல்விளக்கருகே நின்றிருந்த சுஜாதனை அணுகினாள்.

அவன் வேறெங்கோ நோக்கி நின்றிருந்தான். சிலம்பொலி கேட்டு திரும்பி அவள் வருவதைக்கண்டு கைகூப்பினான். மெல்ல அருகணைந்த அவள் "சம்பாபுரிக்கு தங்கள் வரவு நலம் கொணர்க, இளைய கௌரவரே" என்றாள். சுஜாதன் "அரசி, மெய்யாகவே நலம் கொணரத்தான் வந்தேன். அஸ்தினபுரிக்கும் சம்பாபுரிக்கும்" என்றான். படபடப்பும் மூச்சுத்திணறலுமாக "தாங்கள் அறிவீர்கள், அங்கு போர்முகம் கொண்டு நின்றிருக்கின்றன படைகள். வெற்றியை எவர் அளிக்க முடியுமோ அவர் இங்கு உடல்சோர்ந்து உளம்கலைந்து அமர்ந்திருக்கிறார். அவரை அழைத்துச் செல்லவே நான் வந்தேன்" என்றான். அவன் பேச்சில் இளைஞர்களுக்குரிய விரைவும் திக்கலும் இருந்தது. அது அந்நிலையிலும் விருஷாலியை புன்னகைக்கச் செய்தது. "ஆம், நான் அறிவேன்" என்று மென்குரலில் சொன்னாள்.

"இன்று அவர் இங்கு வரும்போது மதுவிலா உள்ளத்துடன் இருப்பார் என்று சொன்னார்கள். நாம் சில சொற்களை அவரிடம் சொல்ல முடியும். இன்று நாம் அவரிடம் படைமுகம் கொண்டு செல்வதைக் குறித்தோ அங்கு அவர் பெறப்போகும் இடத்தை குறித்தோ எதுவும் பேசவேண்டியதில்லை. இங்கு வரும்வரை பலவாறு எண்ணி நான் வந்தடைந்த முடிவு இது"

என்றான் சுஜாதன். “ஒரு பொய்யுரையைக் கூறலாமென்று நான் இப்போது முடிவெடுத்தேன். அஸ்தினபுரியின் அரசர் தன் தோழரை பார்க்க விரும்புகிறார் என்று அவரிடம் சொல்வோம். அதை அவரால் தட்ட இயலாது. அவர் என்னுடன் வந்தால் மூத்தவரை அவர் சந்திக்க வைப்பேன். அவர்கள் அருகமர்ந்தாலே அனைத்தும் முடிவுக்கு வந்துவிடும்.”

விருஷாலி “ஆனால் அவர்களுக்குள் பூசல் என்று ஏதுமில்லையே!” என்றாள். “இல்லை அரசி, பூசல் உள்ளது. விராடபுரியின் தோல்விக்குப் பின் திரும்பிவருகையில் அரசர் அங்கரிடம் கடுஞ்சொற்களை சொன்னதை மூத்தவர் சுபாகு என்னிடம் சொன்னார். உளம் உடைந்து தன் வில்லை வீசிவிட்டு புரவியைத்தட்டி அங்கிருந்து விரைந்து அஸ்தினபுரிக்கு வந்தவர் வழியிலேயே தன் படைகளை சம்பாபுரிக்கு திரும்பும்படியான ஆணையை படைத்தலைவரிடம் அளித்துவிட்டு திரும்பி தனியாகவே அங்கிருந்து இங்கு மீண்டுவிட்டார். அவர் வந்து சேர்ந்தபின்னர் ஏழு நாட்கள் கழித்தே சம்பாபுரியின் படைகள் வந்து சேர்ந்தன என நினைவுகூர்வீர்கள்.”

“ஆம்” என்றாள் விருஷாலி. “ஆனால் அவர் அகம் அந்தப் பூசலில் இல்லை. வருகையிலேயே அவர் அதை மறந்தும்விட்டிருப்பார். அவர் உள்ளம் மாறாதிருப்பது பிறிதொரு பெரும் துயரில். அத்துயரை மேலும் பெருக்கும் முன்னிலையாகவே உங்கள் மூத்தவர் இருக்கப்போகிறார். ஆகவே அவர் அதை விரும்பமாட்டார். இங்கிருந்து கிளம்பி வந்து அஸ்தினபுரியின் அரசவையில் அமர்ந்தால் மேலும் அகச்சீற்றம் கொள்ளவும் தன்னை மேலும் மேலும் நஞ்சூட்டிக்கொள்ளவுமே அவர் முயல்வார்.”

சுஜாதன் தலைகுனிந்து “ஆம், அனைவரும் மறக்க எண்ணும் சில அங்கு நிகழ்ந்துவிட்டன” என்றான். “ஆனால் அவர் எண்ணுவதுபோல அல்ல, இருமுறை இளைய யாதவர் வந்து சொன்ன தூதிலும், அதற்குமுன் சஞ்சயனே தந்தையிடம் சொன்ன செய்தியிலும் தெளிவது ஒன்றே. அன்று நிகழ்ந்ததன் வஞ்சத்தை துருபத அரசி முற்றாகவே மறந்துவிட்டார்கள். பாண்டவ மூத்தாரும் உடன்பிறந்தாரும் அக்கசப்பில் இருந்து மிகவும் அகன்றுவிட்டிருக்கிறார்கள். அது இன்று அனைவருக்கும் பொய்யாய் தொல்கதையாய் மாறிவிட்டிருக்கிறது. உண்மையில் அஸ்தினபுரிக்கு கிளம்பிவந்து அவைநின்று அதை சொல்லவேகூட பாஞ்சாலத்து அரசி சித்தமானார். அதையறிந்தால் அங்கநாட்டரசர் உளம் மீளக்கூடும்.”

“அவளோ அன்றி பாண்டவர்களோ, இப்பாரதவர்ஷமோ, முன்னோரோ, விண்ணமைந்த தெய்வங்களோ ஏற்பது குறித்து அல்ல அவரது துயர். அவரால் அதை ஏற்றுக்கொள்ள முடியவில்லை என்பது மட்டும்தான். ஒருபோதும் உளத்தால் உண்டு செரிக்க இயலாத நஞ்சொன்று அப்போது அவருள் புகுந்துவிட்டது. அது அவரை கொன்று கொண்டிருக்கிறது” என்றாள் விருஷாலி.

“அவ்வாறெனில் என்ன செய்வது? இங்கு இவ்வாறு இருந்து மட்கி அழிவதா? அரசி, அவர் போர்முகம் கொள்ள வேண்டுமென்று நான் விழைவது நாங்கள் வெல்ல வேண்டும் என்பதற்காக மட்டும் அல்ல. படைக்கலங்கள் போரிலேயே பயனுறுகின்றன. கைதொடப்படாதபோது துருவேறுகின்றன. பெருவீரன் படைமுகம் கொள்கையிலேயே தன்னை மீட்டு தொகுத்துக்கொள்ள முடியும். அங்கு முனைகொண்டிருக்கும்

போர்ச்சூழல் அவரை முற்றிலும் மீட்டெடுக்கும் விசைகொண்டது. இங்கிருந்து எவ்வகையிலேனும் அவரை கொண்டுசென்று அக்களத்தில் நிறுத்தவே நான் விழைகிறேன். நாணொலி எழுப்பி படைமுகப்பிலெழும் அங்கரே முழுமையானவர்” என்றான் சுஜாதன்.

“அதை நானுமறிவேன்” என்றபின் விருஷாலி “ஒன்று தோன்றுகிறது…” என்றாள். சுஜாதன் அவளை கூர்ந்துநோக்க அவள் தயங்கி “வேண்டாம்… அதை உன்னால் புரிந்துகொள்ள முடியாது” என்றாள். “சொல்க, நான் உளம்முதிர்வற்றவன் என்பது உண்மை. ஆனால் நினைவறிந்த நாள் முதல் என் தலைவர் என மூத்தவர் கர்ணனை நெஞ்சில் நிறுத்தியவன். அத்தகுதியினால் சிலவற்றை என்னாலும் புரிந்துகொள்ள முடியும்” என்று சுஜாதன் சொன்னான். ஆம் என்று தலையசைத்த விருஷாலி உதடுகள் மட்டும் அசைய சொல் எண்ணி பின் தலைதூக்கி அவனை நோக்கி “ஒருவேளை பாஞ்சாலத்தரசி மீது அப்பழைய வஞ்சத்தை அவர் மீட்டுக்கொண்டாரென்றால் உயிர் கொண்டெழக்கூடும்” என்றாள்.

“என்ன சொல்கிறீர்கள்?” என்று சுஜாதன் கேட்டாலும் அவன் விழிமாறுதல் அவள் சொல்வதை அவன் புரிந்துகொண்டான் என்பதை காட்டியது. “அவள் மீது கொண்ட வஞ்சத்தால் அவர் உள்ளம் நஞ்சு நிறைந்திருந்தது. அந்நஞ்சை முறிக்கும் பொருட்டே இப்பழியெனும் நஞ்சை அள்ளி அருந்தினார். இதை ஈடு செய்யும் அளவிற்கு அந்நஞ்சு பெருகும் என்றால் அவர் மீளக்கூடும்” என்றாள் விருஷாலி. சுஜாதன் “உண்மையில் நானும் அதை எண்ணாமல் இல்லை” என்றான். “ஆனால் இத்தனை தெளிவாக அல்ல. நீங்கள் சொன்னதுமே எனக்கு அது புரிகிறது” என்றான். “வஞ்சமனைத்தையும் பாஞ்சாலத்து

அரசி விட்டுவிட்டார்கள் என்று கேட்டபோது ஒருகணம் எனக்கு ஏமாற்றமே ஏற்பட்டது. அது அங்கரை மேலும் சினம்கொள்ளச் செய்யும் என்றே எண்ணினேன். அது ஏன் என இப்போது புரிகிறது” என்றான்.

விருஷாலி “நமது இந்தக் கணக்குகளுக்கெல்லாம் வாழ்வில் எப்பொருளும் இல்லை. இதற்கப்பால் நாமறியா ஏதோ நிகர்களாலும் நிலையழிவுகளாலும் ஆனது மானுட உள்ளம்” என்றாள். “இல்லை, நீங்கள் இப்போது சொன்னபோது என் உள்ளத்தில் தெளிவுற அதை காண்கிறேன். அவர் வரவில்லை என்றால் பாண்டவர்கள் களம் வெல்வார்கள். அஸ்தினபுரியும் இந்திரப்பிரஸ்தமும் அவர்களின் உரிமையென்றாகும். கௌரவர்கள் முழுமையாக மடிந்தழிவார்கள். அரசி, அதன் பின் மும்முடி சூடி இந்திரப்பிரஸ்தத்தில் அமர்ந்திருக்கும் பாஞ்சாலத்து அரசியின் காலடியில் வாள் தாழ்த்தி முடி சரித்து அங்கர் வணங்கி நின்றிருக்க வேண்டும். அதை அவரிடம் சொல்வோம்.”

விருஷாலி அவனை நோக்கி ஒருசில கணங்கள் அசைவற்று உறைந்துவிட்டு தலையசைத்தாள். “ஆம், இப்போது அவரிடம் சொல்வதற்கு உகந்த சொல் இதுவே” என்றாள். “இழிவுகளில் இறுதியானது என அவர் எண்ணுவது அவள் முன் சென்று பணிந்து நின்றிருப்பதே.” சுஜாதன் இயல்பான குரலில் “அதைவிட அவர்கள் கணவர் ஐவருக்கும் முன் நின்றிருப்பது” என்றான். விருஷாலி திடுக்கிட்டு சுஜாதனை நோக்க “ஆண் என அதை என்னால் சொல்லமுடியும், அரசி” என்றான். பின்னர் தத்தளிப்புடன் கைகளை மார்பில் கட்டி மீண்டும் தாழ்த்தி “அதைவிட அவர்களின் அன்னை யாதவப் பேரரசியின் முன்

நின்றிருப்பது கடினம்” என்றான். அவள் அவனை நோக்க இருவர் விழிகளும் சந்தித்து அகன்றன.

விருஷாலி பெருமூச்சுடன் “நீ கூறுவதுபோல் அச்சிறுமைகளை எண்ணினால் அவர் சினங்கொண்டு எழக்கூடும். இப்போது அவர் உள்ளத்தில் அவ்வாறு நிகழ்வதற்கான வாய்ப்பு உள்ளது என்பதை போட்டுவைப்போம். அவர் கொள்ளும் குடிவெறி மயக்கில் அக்கற்பனை பெருகும். அது வஞ்சமென்று ஆகுமென்றால் நம் சொல்லுக்கு அவர் செவி சாய்க்கக்கூடும்” என்றாள். சுஜாதன் முகம் மலர்ந்து “அவர் வந்துகொண்டிருக்கிறார். தாங்கள் அவரிடம் பேசி முடிக்கையில் நானும் இருக்கிறேன். தாங்கள் கூறியதையே மேலும் உணர்வுநிறைத்து நான் உரைப்பேன். அவர் உள்ளம் மேலும் அனல் கொள்ளுமெனில் நன்று” என்றான்.

விருஷாலி “நன்று” என்று திரும்பி, பின் ஏதோ எண்ணி “ஆனால்...” என்றாள். அவள் சொல்வதை சுஜாதன் விழிகளால் காத்தான். “மானுட உள்ளத்தை எவரும் வகுத்துரைக்க இயலாது, இளையோனே. ஒருவேளை அவள் முன் அவ்வாறு வாள் தாழ்த்தி முடிஅளித்து நின்றால்தான் இவர் அழல் அடங்குமோ?” என்றாள். சுஜாதன் “ஒருபோதும் அது நிகழாது. உறுதி கொள்க, அரசி” என்றான். “ஏன்?” என்றாள். “அது பெண்டிரால் தேர்வு செய்யப்படும் வழி. ஆண்களுக்குரியது அல்ல” என்றான் சுஜாதன் “ஆணென்ற சொல்லால் முற்றிலும் உரைக்கப்படவேண்டியவர் அங்கர். அவர் சங்கறுத்து விழுந்து மறையக்கூடும், மடிந்து விழமாட்டார்.”

“இருக்கலாம். நான் அறிந்த அங்கர் கங்கைப்பெருக்கிலிருந்து குடத்தால் அள்ளிக்கொண்டு வந்து பூசையறைக்குள் வைத்த நீர்போல. என் கலத்தளவே ஆனவர்” என்றாள் விருஷாலி.

சுஜாதன் தலைவணங்கி விலகிச்செல்ல அவள் கங்கையன்னையின் முகப்பில் மண்டபத்தின் கல்படியில் அமர்ந்தாள்.



ஹரிதர் அருகே வந்து “அரசரின் தேர் தென்மேற்கு வாயிலை அடைந்துள்ளது, அரசி” என்றார். நிமித்தநூலின்படி அந்த மாதத்திற்கு உரிய வாயில் அது என்று அப்போதுதான் விருஷாலி நினைவுகூர்ந்தாள். சேடியரை திரும்பி நோக்கிவிட்டு வளைந்த இடைநாழியினூடாக தென்மேற்கு வாயிலை நோக்கி சென்றாள். ஹரிதர் துணையமைச்சர்களுடன் வெளியே சென்று முற்றத்தில் நின்றார். மங்கல இசைக்கலங்களுடன் சூதர்களும் அணித்தாலங்களுடன் சேடியரும் வெளியே இருநிரைகளாக நின்றனர். வாயிலினூடாக அப்பால் தெரிந்த முற்றம் ஓவியத் திரைச்சீலை போலிருந்தது. அதன் மேல் விளிம்பிலிருந்து நீர்த்துளி முழுத்துச் சொட்டி வழிந்து அணுகுவதுபோல வெண்ணிறப் புரவிகள் பூட்டப்பட்ட வெள்ளித்தேர் அணுகி வந்தது. அதைத் தொடர்ந்து காவலரின் இரட்டைநிரை வெண்புரவிகளில் வந்தது.

தேர் முற்றத்தின் மையத்தில் வந்து வளைந்து நிற்க புரவிகள் தலைதாழ்த்தி மூச்சிரைத்து பிடரி சிலிர்த்தன. சகடம் முன்னும் பின்னும் ஆடி நிற்க அதன் கால் கீழே சக்கைகளை இரு ஏவலர் இட்டனர். இருவர் கொண்டுஅமைத்த படி மீது வெள்ளிக்குறடுகளை வைத்து இறங்கி முற்றத்தில் நின்ற கர்ணன் வெண்பட்டாடையும் வெள்ளிக்கங்கணங்களும் வெள்ளியாலான சரப்பொளி ஆரமும் அணிந்திருந்தான்.

வெண்கலக் குண்டலங்கள் அவன் அசைவில் ஒளி திரும்பி ஆடின. சிவதரும் இரு ஏவலரும் தொடர்ந்து வந்த பிறிதொரு தேரிலிருந்து இறங்கி அவனுக்குப் பின்னால் நின்றனர்.

ஹரிதர் கைகூப்பி முகமன் உரைத்து அழைத்து வர, வெண்பட்டுப்பாகைமேல் வெண்ணிற அன்னச்சிறகு சூடி வெண்முத்துமாலைகள் சுற்றிய மணிமுடி ஒளிரும் நிமிர்ந்த தலையுடன் கால் நீட்டிவைத்து கர்ணன் நடந்து வந்தான். உடல் தளர்ந்திருந்தாலும் அவள் விழிக்குள் இருந்த இளைய நடை அவனில் இருந்தது. நீண்ட கால்களென்பதனால் விரைந்து நடக்கையிலும் மெல்ல என்றே தோன்றும். அவனைச் சூழ்ந்து பிறர் தங்கள் குற்றுடலுடன் நடக்கையில் தெரியும் விரைவு அவனை மேலும் மெல்ல என காட்டும். அது அவன் எதையும் பொருட்டெனக் கொள்ளவில்லை என்று தோன்றச்செய்யும். அவனால் சினம்கொள்ளவோ வெடித்து நகைக்கவோ பாய்ந்து விசைகொள்ளவோ இயலாதென்றே உள்ளம் மயங்கும்.

ஆலயப் படிகளில் அவன் அணுகியபோது கல் நீர்மைகொள்ள அவன் அதில் மூழ்கி மறைந்ததுபோல் தோன்றியது. பின்னர் அவன் தலை கதிரெழுகை என கல்லுக்குள்ளிருந்து தோன்றியது. எழுந்து முழு உருக்கொண்டு பொருநையும் வையையும் இரு காவல்தேவதைகளாக நின்றிருந்த கல்வாயிலுக்குள் நின்றான், சட்டத்திற்குள் ஓவியம் என. கற்பரப்பில் குறடுகள் ஒலிக்க நடந்து வந்தபோது பெருகிக்கொண்டே இருந்தான். கைகூப்பி விழிதாழ்த்தி அவள் நின்றிருந்தாள். அவன் கால்கள் மிதித்த மண்ணில் தான் நின்றிருப்பதே அவளை மெய்ப்பு கொள்ளச்செய்தது. தோள்கள் இறுகி, கழுத்து இழுபட்டிருக்க இடத்தொடை துடித்துக்கொண்டிருந்தது. நெஞ்சில் ஒரு சொல் எஞ்சவில்லை.

அருகணைந்த கர்ணன் சற்று தயங்க விருஷாலி “அரசருக்கு பாத வணக்கம். இத்தருணத்தில் என் மூதன்னை தேவதைகள் என்னை வாழ்த்துக!” என்று முகமன் உரைத்தாள். “நன்று, நெடுநாளாயிற்று அணுக்கமெனக்கண்டு” என்றபின் கர்ணன் தொடர்ந்து நடக்க அவனுடன் நடக்கும்படி ஹரிதர் விழிகளால் அவளிடம் சொன்னார். அவன் குரல் அதே இளமையுடனிருப்பதை அவள் மீண்டுமொரு மெய்ப்பு தழுவிப்பரவ உணர்ந்தாள். அவனுக்குப் பின்னால் நடந்து சற்று தள்ளி நின்றாள். பொருநை அன்னையின் ஆலயக்கருவறை முகப்பில் அவன் கைகூப்பி வணங்கினான். பூசகர் சுடராட்டு காட்டி கொண்டுவந்த தழலில் கைதொட்டு விழி நிறைத்து பூசகர் அளித்த வெண்மலரை கைகளில் வாங்கி கண்களில் ஒற்றி குழலில் செருகிவிட்டு அடுத்து அமைந்த வையை அன்னையின் ஆலயத்தை நோக்கி சென்றான்.

அவனுக்குப் பின்னால் நடந்தபடி அவள் “இவர்கள் தென்றிசை நதிகள் என எண்ணுகின்றேன்” என்றாள். அச்சொற்களை அவன் கேட்டதுபோல் தெரியவில்லை. பொன்னி அன்னையின் ஆலயத்தில் அவன் வணங்கி நின்றபோது “காவிரி என்றல்லவா இவ்வன்னைக்குப் பெயர்?” என்றாள். அவள் தன் அருகே நடந்து வருவதை அப்போதுதான் உணர்ந்ததுபோல அவன் திரும்பிப்பார்த்தான். அவள் பேசவிழைவதை புரிந்துகொண்டான். எப்போதுமே எளிய ஒன்றில் ஐயம் எழுப்புவதே அவள் பேசத்தொடங்கும் முறை. “ஆம், தென்னிலத்துப் பெருநதி. சோழர்களின் குலக்கொடி. என் ஆசிரியருடன் அதன் கரைவரை சென்றுள்ளேன்” என்றான் கர்ணன்.

அருகமைந்த பெண்ணையின் ஆலயத்திற்குச் சென்று அவன் வணங்கியபோது அவளும் அருகே சென்று நின்றாள். அவன் அவள் அருகமைவை உணர்ந்து இயல்படைந்தான். பாலை அன்னையின் ஆலயத்தில் அவன் வணங்கி நின்றபோது அவள் “நான் தங்களிடம் சில சொற்களை உரைப்பதற்காக இங்கு காத்து நின்றேன்” என்றாள். “ஆம், உன்னை பார்த்தபோதே அதை எண்ணினேன்” என்ற கர்ணன் புன்னகைத்து “அச்சொற்களை நானும் உய்த்துணர்ந்துகொண்டேன்” என்றான். “உங்களுக்குத் தெரியாத ஒன்றை உளம் கொள்வது என்னாலும் இயல்வதல்ல” என்று விருஷாலி சொன்னாள். “அஸ்தினபுரியிலிருந்து குருகுலத்து மூத்தவர் துரியோதனரின் செய்தியுடன் இளையவன் சுஜாதன் இங்கு வந்திருக்கிறான்” என்றாள்.

“ஆம், இன்றுகாலை எவரோ சொன்னார்கள்” என்றபின் “இனியவன். அந்நூற்றுவரில் எனக்கு அவனே அணுக்கமானவன்” என்றான். “அதைவிட நீங்கள் அரசருக்கு அணுக்கமானவர் அல்லவா?” என்றபடி கோதையின் முற்றத்தில் நின்றாள். “என்ன செய்தி?” என்று கர்ணன் கேட்டான். “தங்களை அஸ்தினபுரியில் காண்பதற்கு அரசர் விழைகிறார். உடனழைத்துச் செல்லும்பொருட்டு சுஜாதன் வந்திருக்கிறான்” என்றாள். கர்ணன் நகைத்து “இந்தப் பொய்யை இங்கு நின்று சொல்சூழ்ந்து அமைத்தீர்கள்போலும்” என்றான். அவள் பதறி “இல்லை” என்றபின் தயங்கி “ஆம்” என்றாள். “என்னை அழைக்கும் உளநிலையில் இன்று அஸ்தினபுரியின் அரசர் இருக்க வாய்ப்பில்லை” என்று கர்ணன் சொன்னான். “அவர் எந்நிலையில் இருக்கிறார் என நான் நன்கறிவேன்.”

“அரசே இன்று அங்கு நிகழ்ந்துகொண்டிருக்கும் போர்ச்சூழலை தாங்கள் அறிந்திருப்பீர்கள். தாங்கள் இல்லையேல் அஸ்தினபுரி வெல்லப்போவதில்லை. அவர்கள் வென்றால் ஒருநாள் அவள் மும்முடி சூடி அமர, காலடியில் வாள் தாழ்த்தி அருகே நிற்கும் இழிநிலை தங்களுக்கு அமையக்கூடும். அதை அஞ்சியே சுஜாதன் இங்கு வந்திருக்கிறான்” என்றாள் விருஷாலி. விரிவாக எண்ணிச்சூழ்ந்த அனைத்தையும் ஓரிரு சொற்றொடர்களில் சொன்னதுமே இவ்வளவுதான் அது என்று தோன்றியது. கர்ணன் ஏதும் சொல்லாமல் துங்கையையும் கிருஷ்ணையையும் நர்மதையையும் வழிபட்டபடி முன்னால் சென்றான். அவள் “தங்கள் முடிவை இனி ஒத்திவைக்க இயலாது, அரசே” என்றாள்.

கர்ணன் திரும்பாமல் “போர்சூழ்கை நிகழ்கையில் வில்லுடன் நான் அங்கு செல்வேன். அங்கத்தின் அரசன் என்றோ, ஷத்ரியன் என்றோ என்னை அவர் அழைக்க வேண்டியதில்லை. எளிய படைவீரனாக எண்ணினும் அன்றி தேரோட்டும் சூதனேயாக எனினும் அவர் பொருட்டு படைமுகம் நிற்பது என் கடமை. தேவையெனில் அக்களம்பட்டு கடன் தீர்க்கவும் சித்தமாக உள்ளேன்” என்றான். “ஆனால் வேறு எதன்பொருட்டும் செல்லமாட்டேன். கொடுப்பதற்கன்றி கொள்வதற்காக எவர் முன்னாலும் நிற்கப்போவதில்லை.”

“தாங்கள் ஷத்ரியர் என படைமுகம் நிற்கவில்லையென்றால் தங்களிடம் தனிப்போர் கொள்ள பாண்டவர்கள் மறுக்கலாம். தாங்கள் போருக்குச்சென்றும் பயனிலாதாகும்” என்று விருஷாலி சொன்னாள். “இன்னும் சின்னாளில் அங்கு வேதப்பேரவை நிகழவிருக்கிறது. அதில்தான் இறுதி முடிவு எடுக்கப்படும். அதில் தாங்கள் பங்கேற்கவேண்டும்.” கர்ணன்

“விருஷை, அங்கு ஷத்ரியப் பேரவை முடிந்துவிட்டது. படைமுகம் நிற்கவேண்டியவர்களின் பெயர்கள் அறிவிக்கப்பட்டுவிட்டன. இனி எவரும் அதில் செய்வதற்கு எதுவும் இல்லை” என்றான்.

அவள் அவன் குரலில் தன் பெயர் எழக்கேட்டு மீண்டும் மெய்ப்பு கொண்டாள். நீள்மூச்சுடன் நெஞ்சை வென்று மேலும் சொல்திரட்டி “மெய்யாக போர் அறிவிக்கப்படுவது அந்தணர் அதை ஏற்றபின்னர்தான், அரசே” என்றாள். “அதன் பின்னரே அஸ்தினபுரியின் அரசப்பேரவை கூடும். தாங்கள் அஸ்தினபுரியின் அரசப்பேரவைக்குச் சென்று அரசரிடம் பேசுங்கள். வேதம் காக்க வேள்விக்களத்தில் அரசத்துணைவரென நீங்கள் நின்றிருந்தால் படைக்களத்தில் பிறன் என்று எவரும் எண்ணமாட்டார்கள்.” அவன் நாவெடுப்பதற்குள் “இது உங்கள் பொருட்டு அல்ல, அவர் பொருட்டுதான். இல்லையேல் இளைய பாண்டவரை வெல்ல கௌரவர் தரப்பால் இயலாது” என்றாள் விருஷாலி.

கர்ணன் நிமிர்ந்து திரும்பி புன்னகைத்து “நீ சொல்வதும் அதற்கப்பால் எண்ணுவதும் எனக்கு புரிகிறது. ஆனால் இப்பிறவியில் எவரிடமும் எதையும் கேட்கப்போவதில்லை” என்றான். “ஆனால்...” என்று விருஷாலி சொல்ல “அது அவர்களின் தேவை என்று சொல்கிறாய். அதை அவர்கள் உணரட்டும், அவர்கள் என்னிடம் முறைப்படி கோரட்டும். அதன் பின் நாம் இதைப்பற்றி பேசுவோம்” என்றான். அவள் மேலும் சொல்ல வாயெடுக்க அவள் தலையை கையால் மெல்ல சுண்டி “உன் சிறிய சித்தம் இத்தனை பெரிய அரசுசூழ்கைகளுக்கு பீடமாவதை எண்ணினால் விந்தையாக

உள்ளது. ஒரு காலத்தில் மணிமுடியும் அரியணையும் துன்புறுத்துகிறது என்றவள் நீ” என்றான்.

அவள் அவன் தொடுகையில் விழிநீர் கொண்டாள். தலைகுனிந்து புன்னகைத்து நின்றபோது அதுவரை எண்ணியதும் சொன்னதுமான ஒரு சொல்லும் அவளில் எஞ்சவில்லை. அவன் தொடுகை ஒன்றே அத்தருணத்தின் மெய் என நின்றது. கர்ணன் திரும்ப சிறு கனைப்போசையுடன் அப்பால் வந்து நின்ற சுஜாதன் “வணங்குகிறேன், மூத்தவரே” என்றான். கர்ணன் “இங்கு வந்திருக்கிறாய் என உணர்ந்தேன்…” என்றான். சுஜாதன் விருஷாலியின் கண்களை பார்க்க அவள் இல்லை என விழியசைத்துவிட்டு நோக்கை விலக்கிக்கொண்டாள். சுஜாதன் கைகூப்பியபடி கர்ணனை அணுகி “தங்களை இங்கு சந்திக்க வேண்டும் என்று எண்ணினேன், மூத்தவரே” என்றான். கர்ணன் அவன் தோளை கைகளால் வளைத்து உடலுடன் இறுக்கியபடி “மேலும் பெருத்திருக்கிறாய். அதாவது கையால் கதை தொட்டு நெடுநாள் ஆகிறது” என்றான்.

“அவ்வாறல்ல” என்று சுஜாதன் தயங்க “சரி, கதைசுழற்றும் பொழுதை விட உண்ணும் பொழுது சற்றே மிகுதி… வா!” என்றபடி அவன் தோளைத்தட்டி அழைத்துச் சென்றான். “மூத்தவரே, தாங்கள் என்னுடன் வந்தாகவேண்டும். தங்களை அழைத்து வருவதாக சொல்லிவிட்டு வந்தேன்” என்றான் சுஜாதன். “அவையில் நான் சிறுமைசெய்யப்பட்டேன் என்றால் என்ன செய்வாய்?” என்றான் கர்ணன். “என் உடைவாளை எடுத்து…” என்று தொடங்கிய சுஜாதன் தயங்கினான்.

“பிதாமகரோ ஆசிரியர் துரோணரோ சொல்மிஞ்சினால் உன்னால் என்ன செய்யமுடியும்?” என்றான் கர்ணன். “என்

கழுத்தில் பாய்ச்சிக்கொள்ளத் தடையில்லை அல்லவா? அங்கேயே...” என்று தொடங்கிய சுஜாதனை மீண்டும் அணைத்து “அந்த இக்கட்டுக்கு உன்னை கொண்டுசெல்ல என்னால் முடியுமா என்ன?” என்றான் கர்ணன். சுஜாதன் மேலும் ஏதோ சொல்ல வாயெடுக்க “வேண்டாம். நீ என்ன சொன்னாலும் நான் ஒப்பப்போவதில்லை. நீ வந்தது எனக்கு நிறைவளிக்கிறது. இங்கிருப்பது வரை என்னுடனேயே இரு” என்ற கர்ணன் “வா, உள்ளே செல்வோம்” என்று அழைத்துச்சென்றான்.

[வெண்முரசு வாசிப்பு முறை – ராஜகோபாலன்]

# குருதிச்சாரல் - 59

**பகுதி ஒன்பது : கதிர் இருள் பொழுது – 4**

அஸ்தினபுரியிலிருந்து விகர்ணனும் அவன் துணைவி தாரையும் உடன்பிறந்தான் குண்டாசியுடன் சம்பாபுரிக்கு வந்திருக்கும் செய்தியை முன்புலரியில் கதிரவன் ஆலயத்திற்கு செல்லும்போதுதான் விருஷாலி அறிந்தாள். தேரில் செல்லும்போதுதான் அணுக்கச்சேடி ஒவ்வொரு செய்தியாக அவளிடம் சொல்வது வழக்கம். சூழ்ந்தமைந்த அன்னையரை வழிபட்டு, கதிர்முகம் எழுகையில் தாமரை மலர்களை படைத்து நாளவனை வணங்கும்பொருட்டு அவள் உள்முற்றத்தில் இறங்குகையில் அவளைக் காத்து ஹரிதர் நின்றிருந்தார். உடன் துணையமைச்சர் துங்கரும் இருந்தார்.

“இன்று ஏன் அமைச்சர் ஆலயத்திற்கு வந்துள்ளார்?” என்றாள். சேடி “ஏதேனும் தனி வழிபாடாக இருக்கும், அரசி” என்றாள். “அவர்கள் முன்புலரியிலேயே எரிகடன் ஓம்பவேண்டிய

பொறுப்புள்ளவர்களல்லவா?” என்றாள். “ஆம், இங்கு வருவதென்றால் அதற்கு முன்னரே அதை முடித்திருப்பார்” என்றாள் சேடி. கைகூப்பி அருகணைந்து முகமனுரைத்த ஹரிதரை உளத்திலெழுந்த குழப்பம் முகத்தில் தெரியாமல் நோக்கி மறுமுகமன் உரைத்து அவள் நின்றாள். “ஆதவனை வணங்கி மீள்க அரசி, நான் காத்திருக்கிறேன்” என்றார் ஹரிதர்.

ஆலயத்தில் நுழைந்த பின் எண்ணங்களை முற்றொதுக்கி விழிகளில் மட்டும் சித்தத்தை நிறுத்தி வழிபட அவள் கற்றிருந்தாள். முதற்கதிர் எழும் பொழுதில் நாளவன் ஆலயத்தில் பிறிதெங்குமிலாத மெல்லிய பொன்னிறம் ஒன்று உருவாகும். செந்நிறக் கற்களால் கட்டப்பட்ட ஆலயத்தின் அனைத்துத் தூண்களும் பொன் என மின்னத் தொடங்கும். வானிலிருந்து தொங்கும் செவிக்குழைபோல ஆலயத்தின் தலைக்கோபுரம் ஒளிகொள்ளும். ஒவ்வொன்றும் உருமாறி பொன்னென்றாகும். அக்கணம் அவள் வாழ்வின் நாளென்றும் தொடரும் அனைத்து செயல்களுக்கும் பொருள் கூட்டுவது. ‘பொன் எனப் பிறந்து வெள்ளியென ஒளிர்ந்து, பொருளென்றாகி பயனென்று கனியும் பருப்பொருட்களால் ஆனது இப்புவி’ என்று முன்பு அவளுடன் வந்த விறலி ஒருமுறை பாடினாள்.

பதினான்கு ஆண்டுகளாக அந்த வரி இயல்பாக உள்ளத்தின் ஆழத்திலிருந்து எழுந்து வராமல் நாளவன் ஆலயத்தில் அவள் இருந்ததே இல்லை. தூண்களிலும் மேலே தாங்குவளைவுகளிலும் செதுக்கப்பட்டிருந்த கல்மலர்கள் அவ்வொளியில் இதழ்மென்மை கொள்கின்றன. காற்றடிக்கையில் நெகிழ்ந்தசையுமோ என விழிமாயம் கூட்டுகின்றன. அருகணைந்தால் நறுமணம் கொள்ளுமோ என எண்ணி உளமெழச் செய்கின்றன. ஒவ்வொரு முறை

பார்க்கையிலும் அவ்விந்தையால் அவள் ஆட்கொள்ளப்பட்டு நின்றிருப்பாள். “கதிர் தொட்டு மலைகள் மலரடுக்குகளாக ஆவதைக் காண நீங்கள் இமயமலைக்கு ஒருமுறை செல்ல வேண்டும், அரசி” என்றாள் முதுசேடி காளி ஒருமுறை. “இளநீலத் தாமரை மலரொன்றுக்குள் நாம் நின்றிருப்பதுபோலிருக்கும். மலையடுக்குகள் செந்தாமரை என எழுந்து பொற்றாமரை என பொலிந்து கண்நிறைப்பதை அங்கு காணலாம்.”

“கண்ணுக்கு காட்சிகளை மட்டுமே தெய்வங்கள் அளித்துள்ளன என்பது ஓர் எளிய உலகியல் அறிதல் மட்டுமே. காட்சி மயக்கங்களே இப்புவியில் காட்சிகளைவிட மிகுதி. இங்கு வாழ்வதற்கும் பெருகுவதற்கும் போரிடுவதற்கும் மட்டுமே காட்சிகள் நமக்கு அளிக்கப்பட்டுள்ளன. இங்குள்ளவற்றுக்கு அப்பால் சென்று அறியவேண்டியன அனைத்தும் காட்சி மயக்கங்களாகவே நம்மை சூழ்ந்துள்ளன” என்றாள் காளி. “அரசி, காட்சி மயக்கம் ஒரு மறுமெய்மை. இங்குள்ள பொருட்கள் ஒவ்வொன்றும் நாற்களத்தில் வைக்கப்பட்ட புரவியும் யானையும் படைவீரனும் அரசனும் அரசியும்போல இவற்றுக்குமேல் ஒன்றைச் சுட்டி நிற்கும் சிறுகருக்கள். இப்புவியின் பருப்பொருட்பெருக்கே பிறிதொன்றை சொல்லும் பொருட்டு வைக்கப்பட்ட குறிகள்தான். இது இறைச்சிப் பொருள் தாங்கி நிற்கும் பெருங்காவியம். இங்குள அனைத்தும் இங்குறைந்து அங்கும் ஆகி எங்குமென நிற்கும் ஒன்றைக் காட்டும் பொருட்டே இவ்வாறு உருக்கொண்டு விழிமுன் இலங்குகின்றன.”

“இவை இவை என விழிதொட்டு வடிவம் வகுத்து, பெயரிட்டு பொருள் ஏற்றி, பயன் கற்பித்து நாம் ஒவ்வொன்றையும்

தனித்தெடுத்து சித்தத்தில் அடுக்கிக்கொள்கிறோம். ஒன்று பிறிதை நமக்குரிய பயன் பொருட்டே சந்தித்து இணைகிறது. நம்மை மீறி இங்குள ஒன்று தான் பிறிதொன்றென மயங்கும் தருணத்தில் நாம் இழப்பது சித்தம் கொண்டுள்ள அப்பகுப்பையே. ஒன்று பிறிதொன்றாகும் எனில் அனைத்தும் ஒன்றென்றாகும். ஒவ்வொன்றையும் இணைத்து அனைத்துமென்றாகும். விழிமயக்குகள் நம்மை மேலும் அதை அணுகவே வைக்கும்.”

“விழிமயக்கென்பது முழுதறிவுக்குச் செல்வதற்கான பாதை. விழிமயக்கு கவிதையிலெழும் சொல்மயக்குபோல் சொல்லப்படாத பொருள் வெளி நோக்கி நம்மை இழுத்துச் செல்வது. சொல்லப்படாத ஒன்று சொல்லப்பட்ட அனைத்திலும் எஞ்சுவது, பலவென்றான அனைத்திலும் ஒன்றென்றாகி நிற்பது. ஏனெனில் அறியும் ஒன்றென நிற்குமளவுக்கு அது சிறிதல்ல. உணரும் வெளியென விரியவே அதனால் இயலும்.” காளியின் சொற்களில் இருந்து அவள் சித்தம் விடுதலை கொள்வதேயில்லை.

கருவறைக்குள் எழுந்து ஓங்கி நின்ற சூரியனின் கல்சிற்பத்தை ஒவ்வொரு நாளும் கால் தொட்டு தலை வரை என நூற்றெட்டு முறை விழியுருகி நோக்கி உயிர் அளித்து உளம் நிரப்பிக்கொண்டாள். அதன் கரிய பெருந்தோள்களை, இரு பலகை மணிமார்பை, சிற்றிடையை, வலுத்தொடைகளை, முழங்கால் மூட்டுகளை, பதிந்த பாதங்களை பார்க்கும்தோறும் கிளர்ந்தெழும் ஒன்றினால் மீளமீள அவள் தன்னை கண்டடைந்துகொண்டிருந்தாள்.

வெயில் வெள்ளி கொள்ளத் தொடங்குகையில்தான் அவள் வெளியே வந்தாள். அப்போது வாயிலுக்கு அருகே ஹரிதர்

நின்றார். அவள் அணுகியதும் தலைவணங்கினார். “தங்களை சந்திக்கும்பொருட்டே இங்கு காத்து நின்றேன், அரசி” என்றார். அவர் நின்றிருப்பதை அப்போதுதான் நினைவுகூர்ந்தவள் என அவள் மீண்டும் வியப்பும் தடுமாற்றமும் கொண்டாள். “ஆம், காலையிலேயே இங்கு தங்களை பார்த்தேன்” என்றாள். “தாங்கள் இத்தனை பொழுது இங்கு வழிபடுவீர்கள் என்று எனக்குத் தெரியாது, அரசி” என்று ஹரிதர் சொன்னார். “பொறுத்தருள்க, அமைச்சரே! இந்தப் பொழுதே என் வாழ்வில் நிறைவு தருவதாக உள்ளது” என்றாள். “ஆம், இந்நகரை ஆளும் முதன்மைத் தெய்வம் கதிரோன். அனலினூடாக நாங்கள் முதலில் அவியளிப்பதும் அவனுக்கே” என்றார். அவள் அவர் மேலே சொல்வதற்காக காத்து நின்றாள்.

ஹரிதர் இயல்பான குரலில் “அஸ்தினபுரியிலிருந்து இளைய கௌரவர்கள் விகர்ணனும் குண்டாசியும் நேற்று பின்னிரவில் நகர்புகுந்தார்கள். அவர்கள் தங்களை சந்திக்க விழைகிறார்கள். அவர்களுடன் விகர்ணனின் துணைவி தாரையும் வந்துள்ளார்” என்றார். விருஷாலி “அரசியர் பிறநாடு செல்வதற்குரிய முறைமைகள் பல உள்ளன. முன்னரே முறைப்படி அறிவிக்கப்பட்டிருக்கவேண்டும் அல்லவா?” என்றாள். “ஆம், ஆனால் இளைய அரசி முறைமைகளை பொருட்படுத்தாமல் இருப்பதற்கு புகழ்பெற்றவர்” என்று ஹரிதர் சொன்னார். “அத்துடன் அவர் தன் கணவருடன் வந்திருப்பதனால் அதை பெரிய முறைமீறல் என்று கொள்ளமாட்டார்கள்.”

“நான் அவர்களை எங்கு சந்திப்பது?” என்று விருஷாலி கேட்டாள். “அரசமுறைப்படி சந்திப்பதென்றால் நான் அவைக்கு வரவேண்டும். அஸ்தினபுரியின் சிற்றரசர், சிற்றரசியாக அவர்கள் வந்திருப்பதனால் தாங்கள் முறைப்படி

அவைமாளிகையில்தான் சந்திக்கவேண்டும். ஆனால் இச்சந்திப்பு தங்கள் மைந்தர்களுக்கு பின்னர் தெரிவிக்கப்பட்டால் போதும் என அவர்கள் எண்ணுகிறார்கள். புலரியிலேயே தங்களை சந்தித்து உரையாடிவிட்டு மைந்தரையும் அரசரையும் சந்திக்கவேண்டுமென்று விகர்ணன் சொன்னார்” என்றார் ஹரிதர். “சொல்லுங்கள்” என்றாள் விருஷாலி. “முறைப்படி தாங்கள் இன்று வேறெங்கும் செல்வதற்கு நெறியில்லை. ஆனால் இந்த ஆலயத்திற்கு வருவது அன்றாட வழக்கம். தாங்கள் சற்று நேரம் இங்கேயே பொறுத்திருக்க முடியுமென்றால் அவர்களை இங்கு வரச்சொல்வேன்.”

விருஷாலி “ஆம், நின்றிருக்கிறேன்” என்றாள். “இந்தச் சுற்றுவட்டப்பாதையின் எல்லையில் துங்கையன்னையின் ஆலய முகப்பில் உள்ள மண்டபம் சற்று பெரிது. அங்கு நீங்கள் அவர்களைச் சந்திக்கலாம்” என்றார் ஹரிதர். “நன்று, வரச்சொல்க!” என்றபின் அவள் திரும்பி சேடியிடம் “நம்முடன் வந்த காவலரிடம் நான் அகத்தளம் திரும்ப சற்று பொழுதாகும் என்று சொல்லி அனுப்பிவிடு” என்றாள். ஹரிதர் “அவர்கள் மிக அருகேதான் தங்கியிருக்கிறார்கள். காலையிலேயே எழுந்து நீராடி ஆடையணிந்து சித்தமாக இருக்கிறார்கள். தாங்கள் மண்டபத்தில் காத்திருக்கலாம். காலை உணவாக இங்கு படைத்த அப்பங்களையும் பழங்களையும் உண்ணுங்கள். உண்டு முடிப்பதற்குள் அவர்கள் இங்கு வந்துவிடுவார்கள்” என்றார்.

விகர்ணனின் முகத்தை நினைவிலிருந்து மீட்டெடுக்க விருஷாலியால் இயலவில்லை. அவனைப் பார்த்த நினைவு எழுந்ததே ஒழிய முகமென்று எழுந்தது துரியோதனனின்

தோற்றம்தான். கௌரவர்கள் அனைவரும் ஒருவரே என்றும் ஒற்றைப்பெருக்கின் அலைகளே என்றும் எப்போதும் அவளுக்கு தோன்றியிருந்தது. அவளால் துச்சாதனனையும் துர்முகனையும் துச்சலனையும் தனித்து அறிய முடிந்ததில்லை. உண்மையில் அவ்வெண்ணம் விறலியராலும் சூதராலும் பாடிப் பாடி நிறுவப்பட்டது என்றும் தோன்றியது. அதை ஒரு முறை சொல்ல கர்ணன் சிரித்தபடி "ஆம். அவர்கள் ஓருடலும் ஓருள்ளமும் மட்டுமல்ல, ஆன்மா ஒன்றென்றே கொண்டவர்கள்" என்றான். "அவர்களின் துணைவியருக்குக்கூடவா?" என்று அவள் கேட்டாள். "அவர்களிடம் இருக்கும் கீழ்மையை மட்டும் ஒருவேளை துணைவியருக்கு காட்டுகிறார்களோ? கீழ்மை ஒவ்வொருவரிலும் ஒன்று" என்று கர்ணன் சொன்னான்.

ஆனால் குண்டாசி மட்டும் அவர்களில் தனித்து தெரிந்தான். அவனை கௌரவ நிரையைச் சார்ந்தவன் என்று ஒருபோதும் அவளால் எண்ண முடிந்ததில்லை. நீண்ட நாள் மதுப்பழக்கத்தால் மெலிந்து, தோள்கள் கூன் விழுந்து முன்வளைந்தமையால் புயம் மெலிந்த கைகள் தொங்கி ஆட, அதிர்ந்துகொண்டிருக்கும் விரல்களும் வெளுத்து கருத்த உதடுகளும் பல்லுதிர்ந்த வாயும் ஒட்டிய கன்னங்களுக்கு மேல் குழிக்குள் சிவந்து கலங்கிய கண்களுமாக நடந்துவரும் குண்டாசி அயல் நிலத்திலிருந்து வந்து நகர் நடுவே திகைத்து நிற்கும் காட்டு மனிதனின் மெய்ப்பாட்டை எப்போதும் கொண்டிருந்தான். "என்ன ஆயிற்று அவனுக்கு?" என்று கர்ணனிடம் கேட்டபோது "நன்றென ஒன்று நிகழ்ந்தது. அதை பற்றி மேலேற அவனால் இயலவில்லை. நிலைக்காத ஊசல்" என்று கர்ணன் சொன்னான். "என்ன அது?" என்று அவள்

மீண்டும் கேட்க “அதற்கப்பால் அதைப்பற்றி எதுவும் சொல்ல இயலாது” என்றான்.

குண்டாசி அவர்கள் அஸ்தினபுரியின் அரண்மனையிலிருக்கையில் அவ்வப்போது கர்ணனை பார்க்க வருவான். ஒவ்வொரு முறையும் அவளைப் பார்த்ததும் வணங்கி முகமன் உரைப்பான். அவன் முதல் நோக்கில் அவளில் ஒவ்வாமையை எழுப்ப அவள் தயங்கி முகம் சுளித்து நோக்கு விலக்கி நிற்பாள். அத்தருணத்தை எப்போதும் ஓர் இளிவரல் நடிப்பென மாற்றிக்கொள்ள அவனால் இயன்றது. கைகளை தலைக்குமேல் கூப்பி “அன்னையே, அடிபணிகிறேன்” என்று கூவுவான். வாய்பொத்தி உடல் வளைத்து நின்று “தங்களை சந்திக்கும் பேறு பெற்றேன்” என்பான். ஒருமுறை மண்டியிட்டு நிலத்தில் விழுந்து தரையில் தலை வைத்து “தங்கள் அடி என் தலைமேல் படுகையில் மீட்பு பெறுவேன், அன்னையே” என்றான். ஒருமுறை அஞ்சி அருகே நின்ற தூணில் பற்றி ஏற முயன்றான்.

அவன் தன்னை நகையாடுகிறான் என்றே அப்போது அவளுக்கு தோன்றியது. ஒருமுறை அதை காளியிடம் சொன்னபோது “அல்ல அரசி, களிமகன்களின் உள்ளம் முற்றிலும் வேறுபட்டது. அவர்கள் பித்தர்களையும் மந்தர்களையும்போல பிற மானுடருடன் தங்களை சேர்த்துக்கொள்ள எப்போதும் முயல்கிறார்கள். தங்களை விலக்கிவிட வேண்டாம் என்றுதான் அவர்கள் ஒவ்வொரு செயலிலும் மன்றாடுகிறார்கள். ஆனால் இரக்கமின்றி உலகம் அவர்களை விலக்கிக்கொண்டும் இருக்கிறது. அத்தருணத்தை வெல்லும் பொருட்டு பேரன்பை காட்டுகிறார்கள், நெகிழ்கிறார்கள், பணிகிறார்கள். அதற்கும் அப்பால் சென்று தங்களை அவைக்கோமாளிகளாக

ஆக்கிக்கொண்டு நம்மை நகைக்க வைக்கிறார்கள். அதனூடாக நம்முடன் அவர்கள் தொடர்பு கொள்கிறார்கள்” என்றாள்.

குண்டாசி கர்ணனின் அவைக்குள் நுழைந்து ஒவ்வொரு முறையும் முன்பு நிகழாத ஒன்றை நிகழ்த்துவான். கைகூப்பியபடி கால்களில் விழுவதுண்டு, அறை மூலையில் சென்றமர்ந்து விசும்பி அழுவதுண்டு, ஓலையையோ கணையாழியையோ எடுத்து உரத்த குரலில் கூவியபடி அவன் முன் வீசுவதுண்டு. ஒருமுறை அவன் பின்னால் நின்று கர்ணனின் தோள்களைத் தழுவி முத்தமிடுவதை அவள் கண்டாள். மடியில் தலை வைத்து அமர்ந்து கண்ணீர் விடுவதை கண்டிருக்கிறாள். ஒருமுறை அருகறையில் அவள் இருக்கையில் உரத்த குரலில் அழுகை ஓசையைக் கேட்டு கதவு திறந்து உள்ளே சென்றாள். குண்டாசி தரையில் கர்ணனின் முன் அமர்ந்து இரு கைகளாலும் தலையை ஓங்கி ஓங்கி அறைந்து அழுதுகொண்டிருந்தான். தோள்கள் குலுங்க இடக்காலும் இடக்கையும் இழுபட்டு துடிதுடிக்க வாயும் கண்ணும் இடப்புறமாக வலித்திருக்க அவனில் நிகழ்ந்த அழுகையைக் கண்டு அவள் திகைத்து சுவரோடு ஒட்டிக்கொண்டாள். பின்னர் தன் கண்களில் நீர் வழிவதை உணர்ந்தாள்.

கர்ணன் இரு கைகளையும் கட்டி விழியசையாமல் அவனை நோக்கிக்கொண்டிருந்தான். அழுது ஓய்ந்து மெல்ல பெருமூச்சுகளும் சீறல்களுமாக மீண்டு மேலாடையால் முகத்தை அழுத்தி துடைத்தபின் கையூன்றி குண்டாசி எழுந்தான். “சென்று வருகிறேன், மூத்தவரே. நீங்கள் நலமாக வாழவேண்டும்” என்று வாயிலை நோக்கி நடந்தான். அப்போதேனும் கர்ணன் ஏதேனும் சொல்வான் என்று

விருஷாலி எதிர்பார்த்தாள். அவனிடமிருந்து ஒரு சொல்லும் எழாமை கண்டு முன்னால் சென்று “இளையோனே, நில்! கண்ணீருடன் இவ்வறையை நீ நீங்குவது துயருறச் செய்கிறது” என்றாள். அவன் திரும்பி வணங்கி “இல்லை அன்னையே, தாங்கள் இச்சொற்களைக் கேட்கும் பேறு பெற்றேன். இத்தருணம் நிறைவுற்றது. இத்துயரையும் இவ்வெறுமையையும் இதற்குப்பின் எஞ்சும் களிப்பையும் நான் ஏழு மொந்தை மதுவால் மட்டும்தான் நிரப்பமுடியும். இல்லையேல் இறந்துவிடுவேன்” என்றான்.

அவள் சொல்லின்றி நிற்க மீண்டுமொருமுறை வணங்கி சுவர் பற்றி தள்ளாடி நடந்து சென்றான். அவள் திரும்பிச்சென்று கர்ணனிடம் “ஒரு சொல் சொல்லியிருக்கலாமல்லவா?” என்றாள். “அவனிடம் சொல்ல என்னிடம் ஒரு சொல்லும் இல்லை” என்று கர்ணன் சொன்னான். “உங்கள் ஆறுதல் சொற்களுக்காகவே அவன் இங்கு வருகிறான். ஒருமுறைகூட நீங்கள் அவனை ஆற்றுப்படுத்தியதில்லை” என்றாள். கர்ணன் “அல்ல, அவன் தன்னை என்னிடம் நோக்கவே இங்கு வருகிறான்” என்றான். அவள் திகைப்புடன் “ஏன்?” என்று கேட்டாள். “அவன் அறிவான் எனக்குள்ளும் அவனுடைய ஒரு துளி இருப்பதை. யார் கண்டார், ஒருநாள் நானும் அவனைப்போல ஆகக்கூடும்” என்று பெருமூச்சுவிட்டான். “இது என்ன பேச்சு?” என்று அவள் சீறினாள். கர்ணன் நகைத்தபடி “நன்று, அவ்வாறு நிகழாதிருக்கட்டும்” என்று எழுந்தான்.

பின்னர் ஒருமுறை அவள் நோக்கியிருக்க சம்பாபுரியின் அரசஅவைக்கு அழைத்துவரப்பட்ட கர்ணன் இரு ஏவலரின் தோள்களையும் கைகளால் தாங்கியபடி கால்கள் ஆற்றலிழந்து தரையில் இழுபடும் ஓசையுடன் வந்து தாங்கியோர் அவன்

எடையால் நிகரிழக்க தள்ளாடி நின்றான். அருகிருந்த தூணைப்பற்றி கூந்தல் இழைகள் முகத்தில் சரிய தலைகுனிந்து நின்றபின் திரும்பி ஏவலரிடம் செல்வோம் என்று கைகாட்டினான். மேலுமிரு காவலர்கள் தாங்கிக்கொள்ள அலைகளில் ஊசலாடிச் செல்லும் பெருங்கலம்போல சென்றான். அப்போது அவள் இயல்பாக குண்டாசியை நினைவுகூர்ந்தாள். அந்நினைவுமீது தான் அறிந்த அனைத்துச் சொற்களையும் உணர்வுகளையும் கொண்டு மூடி அப்பால் தள்ளினாள். ஆனால் பல நாட்களுக்கு அறியாத ஏதோ ஒன்று உள்ளே எழுந்ததுபோல உள்ளம் திடுக்கிட்டுக்கொண்டே இருந்தது.

விகர்ணன் மூன்று முறை வெவ்வேறு செய்திகளுடன் சம்பாபுரிக்கு வந்திருந்தான். ஒவ்வொரு முறையும் அவனுடன் சுஜாதனும் வருவதுண்டு. தொலைவில் துரியோதனன் துச்சாதனனுடன் வருவதாகவே அதை உளம் உணரும் கணத்தில் அது துரியோதனன் அல்ல என்று உளம் தெளியும். கௌரவர் என்னும் திரளில் இருந்து விகர்ணன் என்னும் பெயரும் அடையாளமும் கொண்டு அவன் எழுந்தபின் அவனை வகுத்துக்கொள்ள முடியாத திகைப்பே எப்போதும் இருக்கும். கௌரவரிடமில்லாத ஒன்று அவனிடம் எப்போதும் இருப்பதை அப்போது உணர முடியும். அவன் விழிகள் கௌரவ நூற்றுவருக்குரியதல்ல என்று அவள் உணர்வதுண்டு. அவை பாண்டவரின் விழிகள் என்று ஒருமுறை தோன்றியது. இவ்வெண்ணங்களுக்கு ஏதேனும் பொருள் உண்டா என்று அவள் எண்ணினாள். பின்னர் ஒருமுறை வேறேதோ எண்ணத்தினூடாக செல்லும்போது விகர்ணன் நகுலனைப்போல என்று தோன்றியது.

காளியிடம் “விகர்ணனை பார்க்க நகுலன் போலிருக்கிறார் அல்லவா?” என்றாள். “இருவர் விழிகளும் ஒன்றே” என்றாள் காளி. “மெய்யாகவே நானும் அதைத்தான் நினைத்தேன்” என்றாள் விருஷாலி. காளி புன்னகைத்தாள். “விலகி நின்றிருப்பதன் பெருந்துயர் கொண்டவை அவர்கள் மூவரின் விழிகள். தருக்கி விலகியவர் விகர்ணன், விலகியதனால் உடைந்தவர் குண்டாசி. கள்ளமின்மையால் விலகுவது மட்டுமே இன்பம் அளிக்கிறது. சுஜாதன் அக்களிப்புடன் மண்ணில் மறைபவர்” என்றாள். அச்சொற்களை அவள் மீளமீள நினைத்து விரித்துக்கொண்டதுண்டு. ஒருவரை பிறிதொருவராக்கி எண்ணிப்பார்க்கையில் எழும் திகைப்பை சொற்களாக வடிக்க அவளால் இயலாது. “அப்படியென்றால் சகதேவன்?” என்று அவள் கேட்டாள். “அறிந்தபின் கடந்து அறிவின்மைகொள்வதன் உவகையில் இருப்பவர்” என்றாள் காளி.

அஸ்தினபுரியின் இந்திரவிழவில் வில்லுடன் எழுவதற்காக அரசரின் அழைப்பைக் கொண்டு அம்முறை விகர்ணன் வந்திருந்தான். அவனும் சுஜாதனும் பேசிக்கொண்டிருக்கையில் மீசையைச் சுழற்றியபடி தாழ்ந்த கண்களுடன் அசைவிலாதமர்ந்து கர்ணன் அதை கேட்டுக்கொண்டிருந்தான். “அஸ்தினபுரி அஞ்சிக்கொண்டிருக்கிறது, மூத்தவரே. அந்நகருக்குள் அனைவரின் உள்ளங்களின் ஆழத்தில் கொடுங்கனவொன்றின் நொதித்துளியென இளைய பாண்டவர் அர்ஜுனர் இருந்துகொண்டிருக்கிறார். எங்கோ அவர் தன் வில்திறனை பெருக்கிக்கொண்டிருக்கிறார், பேருருக்கொண்டு வஜ்ரமென வில்லை ஏந்தி நகர் முன் வந்து நின்றிருக்கப்போகிறார் என்று அவர்கள் எண்ணுகிறார்கள். இந்திரவிழவுக்கு வருபவர்களின் எண்ணிக்கை ஒவ்வொரு

ஆண்டும் குறைந்துகொண்டிருக்கிறது என தாங்கள் அறிந்திருப்பீர்கள். இம்முறை அது ஒரு வெற்றுச் சடங்கென்றே நிகழ வாய்ப்பு மிகுதி. ஆகவேதான் தாங்கள் வரவேண்டுமென்று அவையினரும் அரசரும் எண்ணினார்கள். தங்கள் வில்திறன் அங்கு எழும்போது அஸ்தினபுரி மீண்டும் நம்பிக்கை கொள்ளும். தாங்களன்றி அஸ்தினபுரி சார்ந்திருக்க எவருமில்லை. இது தங்கள் கடன்" என்றான்.

கர்ணன் "நான் அங்கு இப்போது வரும் நிலையில் இல்லை, இளையோனே" என்றான். "தாங்கள் வந்தாகவேண்டும். தங்களை அழைத்து வருவேன் என்று மூத்தவரிடம் சொல்லித்தான் இங்கு வந்தேன்" என்றான் சுஜாதன். "தாங்கள் இல்லையேல் அஸ்தினபுரி வில்லற்ற கை என்று தோன்றும், மூத்தவரே." விகர்ணன். "தங்களை அழைத்து வரும்படி என்னிடம் துரோணரே சொன்னார்" என்றான். கர்ணன் அவனை நோக்கி திரும்பி "ஏன், சூதன் மகனின் வில்திறன் அவருக்கு இப்போது தெரிகிறதா?" என்றான். "தன் முதன்மை மாணவனுக்கு எதிராக சூதனை நிறுத்த அவருக்கு இப்போது மறுப்பில்லயோ?" விகர்ணன் "அவர் அஞ்சிக்கொண்டிருக்கிறார். இன்று அவர் எண்ணுவதெல்லாம் தன் மைந்தனின் அரசைக் குறித்து மட்டுமே. பாஞ்சாலத்தை நீங்கள் எளிதில் வென்றதையே அவர் ஆறுதலென கொண்டிருக்கிறார்" என்றான்.

"தன் மைந்தனை அர்ஜுனனுக்கு நிகரான வீரன் என்றல்லவா அவர் எண்ணுகிறார்?" என்றான் கர்ணன். "ஆம், பதினான்கு ஆண்டுகளில் அர்ஜுனன் செல்லும் தொலைவும் அடையும் அம்புகளும் என்ன என்று அவருக்கு தெரியவில்லை. ஒருமுறை சிற்றவையில் பிதாமகருடன் சொல்லாடுகையில் நீங்கள் அஸ்வத்தாமரைவிட, பிதாமகரையும்விட ஒரு படி

மேல் என்றார். பிதாமகர் சினத்துடன் ஏன் என்றார். ஏனென்றால் தவத்திறன் கொண்ட ஒருவரை நீங்கள் ஆசிரியரென பெற்றிருக்கிறீர்கள் என்றார் துரோணர். இவ்வுலகில் இலக்கு என ஏதுமில்லாதவர்கள் அடையும் வில்லறிதலே தனுர்வேதம் எனப்படும். பிற அனைத்தும் தனுர்சாஸ்திரமே என்று சொன்னார். பார்த்தர் அப்படி ஒரு தவத்தாரை சந்தித்து அம்புபெற்றார் என்றால் அனைவரையும் கடந்துவிடக்கூடும் என்று அவர் சொன்னபோது பிதாமகர் ஒன்றும் சொல்லாமல் தாடியை நீவிக்கொண்டிருந்தார்" என்றான் விகர்ணன்.

"அஸ்வத்தாமர் ஒவ்வொரு ஆண்டும் இந்திர விழவுக்கு வருகிறார். அவர் வில்திறன் கண்டு அஸ்தினபுரியின் மக்கள் ஆர்ப்பரிக்கிறார்கள். ஆனால் அவரை அவர்கள் தங்களவர் என்று எண்ணவில்லை" என்றான் சுஜாதன். "நான் வந்தால் மட்டும் அவ்வாறு எண்ணுவார்களா? சூதன் எவ்வாறு அவர்களுக்கு அரசனாக தோன்றுவான்?" என்றான் கர்ணன். விகர்ணன் ஒருகணம் சொல்லின்றி அமைந்தபின் "தாங்கள் பொறுத்தருள்வீர்கள் என்றால் இதை நான் கூறியாகவேண்டும், மூத்தவரே. தாங்கள் இளைய பாண்டவரின் அதே உருவத்தோற்றம் கொண்டவர். களம் நின்று வில்லாடுகையில் சூழ்ந்திருக்கும் ஆயிரங்களில் ஒருவராக நின்று உங்களை பார்த்தால் இளைய பாண்டவரே வில்லுடன் எழுந்ததாக தோன்றும். பல தருணங்களில் அவ்வாறே வாழ்த்தொலிகள் எழுவதுண்டு" என்றான்.

கர்ணன் இகழ்ச்சியில் இதழ்கள் வளைய "நன்று. ஆனால் கூத்துமேடையில் பிறிதொருவனென மாற்றுருக்கொண்டு நடிப்பதற்கு எனக்கு ஆர்வமில்லை" என்றான். பின்னர்

எழுந்துகொண்டு “அரசரிடம் சொல்லிவிடுங்கள், நான் வர இயலாது” என ஆடையை எடுத்துக்கொண்டான். அவன் திரும்ப சுஜாதன் ஓடிவந்து அவன் கைகளைப்பற்றி “மூத்தவரே, தங்களை அழைத்து வருவேன் என்று நான் சொன்னேன். தாங்கள் வந்தாகவேண்டும்” என்றான். “போரெனில் அழைக்காமலேயே வில்லுடன் வருவேன், இளையோனே” என்றபின் அவனை உடலோடு தழுவி “பருத்துக்கொண்டே வருகிறாய்” என்றான். “மூத்தவரே...” என்று சுஜாதன் கெஞ்ச அவன் கன்னத்தில் இருமுறை தட்டிவிட்டு கர்ணன் வெளியே சென்றான்.

விகர்ணன் அருகே அமர்ந்திருந்த விருஷாலியிடம் “தாங்கள் ஒரு சொல் உரைக்கலாகாதா, அரசி?” என்றான். “அரசுசூழ்தல் குறித்த செய்திகளில் எனக்கு உரைக்க ஒரு சொல்லுமில்லை” என்றபின் அவள் தலைவணங்கி சேடியிடம் தன் மேலாடையை சீர் செய்ய ஆணையிட்டாள். சுஜாதன் “அரசி, என் சொற்களை மூத்தவர் தட்டமாட்டார் என்று எண்ணியே இங்கு வந்தேன்” என்றான். விகர்ணன் “ஆம், ஆனால் அவர் உன்மேல் தந்தைக்குரிய அன்பு கொண்டிருக்கிறார் என்று தெரிகிறது. தந்தையருக்கே உரிய முறையில் உனது சொற்களை மைந்தனின் குதலை என நடித்து தட்டிவிட்டுச் செல்கிறார்” என்றான். சுஜாதன் முகம் மலர்ந்து “ஆம், நான் தந்தையென்றே அவரை உணர்கிறேன்” என்றான்.

அணுக்கச்சேடியர் வாழையிலைகளில் கதிரோனுக்கு படைக்கப்பட்ட கனிகளையும் அப்பங்களையும் கொண்டுவந்தனர். “உணவருந்துக, அரசி. அவர்கள் வந்துகொண்டிருக்கிறார்கள்” என்றாள் சேடி. அவள் அவற்றை உண்ணத் தொடங்கும்போதுதான் தாரை உடன் வருவதை

நினைவுகூர்ந்தாள். அவள் முகமோ தோற்றமோ நினைவிலெழவேயில்லை. அவள் மச்சநாட்டவள் என்னும் செய்தி மட்டும் தொலைவில் எங்கிருந்தோ வந்தது. கௌரவ இளவரசியரும்கூட ஒற்றைப்பெருந்திரளாகவே விழிமயக்கு கொண்டிருந்தனர். அவர்களுக்கு முகமிருக்கவில்லை. வண்ண ஆடைகளின் அலைவும் சுழிப்புமென்றே எண்ணங்களில் எஞ்சினர். சம்படை? அவள் தெறித்து அப்பால் சொட்டிநின்ற ஒரு தனித்துளி. விருஷாலி பெருமூச்சுவிட்டாள்.

# குருதிச்சாரல் - 60

**பகுதி ஒன்பது : கதிர் இருள் பொழுது – 5**

காவலர்தலைவன் வந்து சேய்மையிலேயே நின்று தலைவணங்கி “அவர்கள் வந்துகொண்டிருக்கிறார்கள், அரசி” என்றான். சேடி விருஷாலியின் ஆடைகளை சீரமைத்தாள். இன்னொருத்தி அவள் படைப்பன்னம் உண்ட இலைகளையும் தொன்னைகளையும் அகற்றினாள். கூந்தலை சீரமைத்து விருஷாலி நிமிர்ந்து அமர்ந்தாள். தொலைவில் ஹரிதர் வழிநடத்த விகர்ணனும் குண்டாசியும் அவர்களுக்குப் பின்னால் தாரையும் நடந்துவருவதை அவள் கண்டாள். அவர்களுக்கு முன்னால் வீரன் ஒருவன் எதிரே எவரும் வராமல் விலக்கியபடி வந்தான். இடையில் அறிவிப்புச்சங்கு செருகியிருந்தான்.

தொலைவில் நடந்தணையும் அசைவிலேயே குண்டாசி மது அருந்தியிருக்கவில்லை என்று தெரிந்தது. ஆனால் அவன் நடையில் தளர்ச்சியும் கைகளில் நடுக்கமும் இருப்பதும்

புலனாகியது. கூன்விழுந்து முன்வளைந்த மெலிந்த உடலில் தொங்கிய அணியாடைகள் முட்புதரில் சிக்கி காற்றில் உலைபவை என அசைந்தன. அவள் அவன் கால்களை நோக்கினாள். பறவைப்பாதங்கள் என அவை மெலிந்து எலும்பும் நார்களுமாக இருந்தன. ஒன்றன்பின் ஒன்றென வைக்கப்பட்ட சிற்றடிகள். அவள் நோக்கை விலக்கிக்கொண்டாள்.

கௌரவர் திரளில் ஒருவனாகத் தோன்றி, மெல்ல தனி முகம் திரட்டி, தெரிந்த விழிகள் என்றாகி விகர்ணன் அருகே வந்தான். அவர்களுக்குப் பின்னால் தலையாடையால் முற்றிலும் முகம் மறைத்து வரும் தாரையை அவளுடைய சிற்றடிகளிலிருந்து அவள் அறிந்தாள். சிட்டுக்கால் என்றே அரண்மனையில் அவளுக்குப் பெயர் என்று அவள் அறிந்திருந்தாள். "சிற்றுணவு, நிலைகொள்ளாமை, சிறகடிப்பு. இவள் என் சிட்டு" என்று காந்தாரி ஒருமுறை சிரித்தபடி சொன்னாள். ஆனால் பிற அரசியர் அச்சொல்லை களியாக்குதலாகவே பயன்படுத்தினர்.

கௌரவர் அரண்மனையை சிறுமியர் மன்று என்றே காளி சொல்வதுண்டு. "மூத்த அன்னை சத்யசேனைக்கே இன்னும் அகவை முதிரவில்லை. மடியில் வறுத்த பயறை கட்டிவைத்து எவரும் பார்க்காமல் வாயிலிட்டு மெல்கிறார். தசார்ணை ஒருமுறை கீழாடையை இரு கைகளாலும் பற்றியபடி சுழன்றாடியதை கண்டேன். அவர்களின் மருமகள்களை கைக்குழவி கால்கொண்டவர்கள் என்றே சொல்லவேண்டும்." விருஷாலி சிரித்து "ஆம், அவர்கள் அனைவரிலுமுள்ள அந்த முதிராமை விந்தையானது" என்றாள்.

காளி கரிய வாய் திறந்து நகைத்து "அரண்மனையின் தடித்த சுவர்களுக்குள் காலம் நகர்வதில்லை. காலம் நுழைவது

சூழ்ந்திருக்கும் பொருட்களின் மாற்றத்தினூடாக. மொழியின் அலைகளினூடாக. இரண்டும் அங்கு மாற வாய்ப்பில்லை. எனவே மூப்பின்றி சிறுமியரென்றே வாழ்ந்து விண்புகுவார்கள் அவர்கள். அங்கே விண்நுழைந்துள்ள அவர்களின் மூதன்னையரும் மூப்பில்லாதவர்களே" என்றாள். "மூப்பு கொள்பவர்கள் அங்கே சாளரம் வழியே வெளியே நோக்கி அமர்ந்திருப்பவர்கள் மட்டும்தான்." ஏனென்றறியாமல் நெஞ்சு திடுக்கிட "என்ன பேச்சு... விடு!" என்று கைவீசி அச்சொல்லை விருஷாலி தவிர்த்தாள்.

தாரையின் முகம் அவள் நினைவில் எழவில்லை. எண்ணும்போதெல்லாம் அசலையும் பானுமதியும்தான் வந்துசென்றார்கள். மேலும் அருகே வந்தபோது தாரையின் நடையில் இருந்த சிறிய தாவலை அவள் பார்த்தாள். அரசியாக அத்தனை ஆண்டுகள் ஆகியும்கூட நீள்நடை அவளுக்குப் பழகவில்லை. சுமை கொண்டுசெல்லும் சிற்றூர் பெண்கள் போன்ற அத்தாவல் அவளுக்குள் புன்னகையை எழுப்பியது. மறுகணமே அவள் முகத்தை அருகெனக் கண்டாள். மிகச் சிறிய தாடையும், அழுந்திய கன்னஎலும்புகளும் கொண்ட கூர் முகம். உள்ளங்கையளவே அவள் முகம் இருப்பதை அவள் இருமுறை சொல்லி சிரித்திருக்கிறாள். மெலிந்த உதடுகள், கண்குழிக்குள் மின்னும் மணிகள்.

வெள்ளெலி என்று சில அரசியர் அவளை சொல்வதுண்டு. சிறுமியருக்குரிய கீச்சுக்குரல். உணர்வுகள் கொந்தளித்து உருமாறிக்கொண்டே இருக்கும். பேசும்போது எவராயினும் எட்டி கைகளை பற்றிக்கொள்ளவும் அக்கையை தன் நெஞ்சின்மேல் வைத்து தலைசரித்து சொல்லாடவும், உணர்வு மீதூறும்போது கட்டிக் கொள்ளவும், தோளில் முகம்

புதைக்கவும் அவளால் இயலும். அரசியென்று ஆவது உடலை பிற உடல்களிலிருந்து அயலென்று ஆக்குவதுதான். உடலுக்குமேல் சித்தத்தின் வேலியொன்றை கட்டிக்கொள்வது அது. அரசியென தன்னை தடுத்துக்கொள்ளாமையால் அவள் அகவைமுதிர்வு கொள்ளக்கூடும். ஆனால் அவர்களில் அவளே என்றும் சிறுமி. தன்னைச் சூழ்ந்து பிறிதொன்றால் அவள் வேலி கட்டிக்கொண்டிருக்கிறாள். 'சுவர்களால் மட்டுமல்ல, வானத்தாலும் அரணிட்டுக்கொள்ள இயலும்' என்ற காளியின் சொற்களை நினைவுகூர்ந்தாள்.

விகர்ணன் அருகே வந்து தலைவணங்கி "அங்கநாட்டின் அரசியை சந்திக்கும் நற்பொழுதுக்காக தெய்வங்களுக்கு நன்றி கூறுகிறேன். நானும் என் இளையோனும் துணைவியும் தங்களை சந்திக்கும்பொருட்டு அஸ்தினபுரியிலிருந்து வந்திருக்கிறோம். இப்பொழுதை பரிசெனப் பெற்றோம்" என்றான். "நலம் சூழ்க!" என்று அவள் அவனை வாழ்த்தினாள். குண்டாசி தளர்ந்த குரலில் "இத்தருணத்திற்கு என் முன்னோருக்கு நான் கடன்பட்டிருக்கிறேன், அரசி. தங்களை இவ்வாறு ஆலயத்தில் காக்க வைத்ததற்கு பொறுத்தருளவேண்டும்" என்றான். "ஆலயம் இனியோரை காண்பதற்கு உகந்த இடமல்லவா?" என்றாள் விருஷாலி. "ஆலயத்தில் பிறரை தாள்தொடலாகாது என்று நெறி. எனவே உள்ளத்தால் தொடுகிறேன், அரசி" என்றான் குண்டாசி. அவள் புன்னகைத்து "உள்ளத்தால் உன் தலைதொடுகிறேன், இளையோனே" என்றாள்.

தாரை அருகே வந்து வணங்கி "அருள்புரிக, அன்னையே!" என்றாள். அவள் தாரையை இழுத்து தன் தோள்தொட்டு அணைத்துக்கொண்டாள். "எப்படியடி இருக்கிறாய்? அரண்மனை

இன்னும் சலிக்கவில்லையா உனக்கு? அண்மையில் மச்சநாடு சென்றாயா?” என்றாள். தலையிலிருந்து ஆடை நழுவி விழ, சிறிய முகத்தை தூக்கி ஒளிரும் கண்களுடன் புன்னகைத்தபடி தாரை “மச்சநாட்டிற்கு சென்று நோக்குகையில் நான் அறிந்த எதுவும் அங்கில்லை, அரசி. அஸ்தினபுரிக்கு பெண்கொடுத்த குடி என்பதனாலேயே தந்தை பிற மச்சர் குடி அனைத்திற்கும் தலைவராகிவிட்டார். அஸ்தினபுரியின் பொருட்டு அவர் கப்பம் கொள்கிறார். மூன்றடுக்கு மாளிகை கட்டியிருக்கிறார். புரவிகளும் யானைகளும் முற்றத்தில் நின்றிருக்கின்றன. ஆயிரம் அம்பிகள் சர்மாவதியில் ஓடிக்கொண்டிருக்கின்றன என்று என்னிடம் பெருமையுடன் சொன்னார். ஆகவே சென்ற ஆறாண்டுகளாக நான் அங்கு செல்லவில்லை” என்றாள்.

பேசும்போது அவள் புருவங்கள் நெளிவதையும் உடல் ஒவ்வொரு சொல்லுக்கும் ஏற்ப குழைவதையும் கண்டு சிரித்து “நன்று, நீ அவ்வாறே இருக்கிறாய். ஆயிரம் அம்பிக்கு தலைவனின் மகளாக மாறவேண்டியதில்லை” என்றாள். “இங்கு தங்களிடம் பேச வருவதாக இவர் சொன்னார். நானும் கிளம்புகிறேன் என்றேன். அதற்கு முறைமை இல்லை என்றார்கள். முறைமையை நான் வந்து சொல்லிக்கொள்கிறேன் என்று சொல்லி தேரில் பாய்ந்து ஏறிக்கொண்டேன். கைபிடித்து இறக்கிவிட இயலாமல் தவித்தனர். கண்களை மூடி அமர்ந்துகொண்டேன். ஒன்றும் செய்வதற்கில்லை” என்றாள் தாரை சிரித்துக்கொண்டே.

“உன்னைக் கண்டது நிறைவளிக்கிறது, சிட்டு” என்றாள் விருஷாலி. “என்னை இப்போது பரல் என்கிறார்கள்” என்று தாரை சிரித்தாள். “ஏன்?” என்றாள் விருஷாலி. “அது இளைய யாதவர் இவளைப்பற்றி சொன்னது. அதை இவளே

அனைவரிடமும் சொல்லி பரப்பிக்கொண்டிருக்கிறாள்” என்றான் விகர்ணன். “நல்ல பெயர். பரல்போல் ஒளியுடன் இருக்கிறாய்…” என்று விருஷாலி சொன்னாள். “பரலைப்பற்றி ஒரு கதை உண்டு. பெரிய மீன்கள் அதை விழுங்க முடியாது. வாய்க்குள் சென்றால் கண்வழியாகவும் செவுள் வழியாகவும் வெளியே வந்துவிடும்” என்றாள் தாரை.

விருஷாலி உரக்கச் சிரித்து “நீ இன்று மாலை என்னுடனேயே தங்கு. தனி அரண்மனையில் அவர்கள் தங்கிக்கொள்ளட்டும்” என்றாள். தாரை “உங்கள் முதுசேடி, அவர் இருக்கிறாரா?” என்றாள். “காளியை சொல்கிறாயா?” என்றாள் விருஷாலி. “ஆம். அவருடன் நான் நிறைய உரையாடியிருக்கிறேன். ஒவ்வொரு சொல்லையும் நாம் அறியாத வேறேதோ கரவிடத்திலிருந்து அவர்கள் எடுக்கிறார்கள் என்று தோன்றும். உண்மையில் அவர்களுடன் ஒரு நாளாவது இருக்கவேண்டும் என்று எண்ணிக்கொண்டுதான் வந்தேன்” என்று தாரை சொன்னாள்.

விகர்ணனை நோக்கி அவள் விழிதூக்க அவன் அதை புரிந்துகொண்டு மேலும் தலைவணங்கி “அரசி, தங்கள் பொழுதை நீட்டிக்க நான் விரும்பவில்லை. இது பொது இடம்” என்றான். “சொல்க!” என்றாள் விருஷாலி. “நான் அங்கநாட்டு அரசரிடம் ஒரு சொல் உரைக்கவே வந்தேன். இன்னும் இங்கு இவ்வாறு இருப்பது அவருக்கு உகந்ததல்ல” என்றான் விகர்ணன். “அதை அறியாதவர் யார்?” என்று தலைதாழ்த்தியபடி விருஷாலி கேட்டாள். “இங்கு மைந்தரும் நானும் நாளும் அதை கையறுநிலையில் நோக்கிக்கொண்டிருக்கிறோம். தெய்வங்களிடம் முறையிடுவதன்றி நாங்கள் செய்வது ஏதுமில்லை.”

“அவையில் நிகழ்ந்ததை தாங்கள் அறிந்திருப்பீர்கள், அரசி. அங்கே இளைய யாதவரை மூத்தவர் இழிவு செய்துவிட்டார். நீட்டிய கையுடன் அவர் அவை நின்றபோது நீங்களும் நிலமில்லாதவர் அல்லவா, உங்களுக்கென கேளுங்கள் என்றார். அவர் அவையிலிருந்து துயருடன் எழுந்து செல்லும்போது என்னால் இடைநாழிவரைகூட உடன்செல்ல இயலவில்லை. பின்னால் சென்று தயங்கி நின்றேன். தலைசுழன்று அமர்ந்துவிட்டேன். என்னை மஞ்சத்தறைக்கு கொண்டுசென்றனர். மதுவருந்தி மூன்று இரவுகள் எங்கிருக்கிறேன் என்றே தெரியாமல் இருந்தேன்” என்றான் விகர்ணன்.

“நிகழ்ந்தது அறப்பிழை, குலப்பழி பெருகிக்கொண்டே இருக்கிறது என உணர்ந்தேன். ஆனால் என்ன செய்வதென்றே தெரியவில்லை. அணுகிய அனைவரிடமும் சினம்கொண்டேன். இவள் உடன் இருந்ததால் மட்டுமே உயிருடன் மீண்டேன்.” அவன் விழிகள் நீர்கொண்டவை என பளபளத்தன. விருஷாலி “ஆம், இவள் உனக்கு இறைக்கொடை” என்றாள். விகர்ணன் “அரசி, எவருக்கும் அங்கு நிகழ்ந்ததன் மெய்ப்பொருள் புரியவில்லை. மீண்டும் ஒரு குலமகள் அரசவை நடுவே சிறுமைப்படுத்தப்பட்டிருக்கிறார். நம் குலத்து அன்னையின் கற்பை அவை நடுவே இழிவுபடுத்தியபோது உடன்பிறந்தோர் அனைவரும் முன்பு போலவே அதை நோக்கி மூடர் என அவையமர்ந்திருந்தனர். அன்று போலவே பிதாமகரும் ஆசிரியரும் ஊமைப்பாவைகளென ஆயினர்” என்றான்.

“ஷத்ரிய அவையில் இழிவுபடுத்தப்பட்டது நம் அன்னை மட்டுமல்ல, ஒரு குலமகள். இனி பிறக்கவிருக்கும் அஸ்தினபுரியின் அனைத்துப் பெண்டிரும் அவைச்சிறுமை

கொண்டிருக்கின்றனர். இனி எந்த மன்றிலும் எந்த ஆணும் அன்னையையும் துணைவியையும் அவைக்கு வந்து தன் கருப்பைமுளைக்கு புறச்சான்று சொல்க என்று ஆணையிடமுடியும். எந்த மைந்தனையும் தாயைச் சொல்லி அவைவிலக்கு செய்ய முடியும். கீழ்மையை மானுடருக்கு கற்பிக்கவேண்டியதில்லை, அதை அவர்களே நன்கறிவார்கள். அதை செய்யலாகாது என முன்னோர் அளித்த ஆணையை மட்டும் சற்று வேலியுடைத்துவிட்டால் போதும், திரண்டு பெருக்கெடுக்கும் நம் சிறுமதியும் தன்னலமும் பெருவிழைவும்."

"அந்த அவையில் எனக்கு குரல் இல்லை. அரசி, இதை எங்குதான் நான் சொல்வது? எனக்கிருக்கும் இடம் இன்னமும் நெஞ்சில் அனல் எஞ்சும் அங்கர் அவைதான் என்று இவள் சொன்னாள்." விருஷாலி ஒன்றும் சொல்லாமல் நிலம் நோக்கி விழிசரித்திருந்தாள். "ஆம், அன்று அவையில் அவரும்தான் கீழ்ச்சொல் எடுத்தார். ஆனால் அதன்பொருட்டு இங்கு எரிந்தழிகிறார். அந்த அனலை நோக்கி பேசவேண்டும் என்றே வந்தேன்" என்றான் விகர்ணன். விருஷாலி தாரையைப் பார்த்து "ஆனால் அவர் என்ன செய்ய முடியும்?" என்றாள். "அரசி, அஸ்தினபுரியின் அரசரிடம் இன்னும் ஒரு சொல் உரைக்கும் இடம் அங்கநாட்டரசருக்கு மட்டுமே உள்ளது. பிதாமகரும், ஆசிரியர்களும், அமைச்சர் விதுரரும் தோற்றுவிட்டனர். அன்னையும் தந்தையும் அகன்றுவிட்டனர். இனி தோழரென்று உரைக்கப்படும் ஒருவர் சொல் மட்டுமே அவர் செவி வரைக்கும் செல்ல முடியும்" என்றாள்.

விருஷாலி "அச்சொல்லை கேட்கும் நிலையில் உள்ளாரா அரசர்?" என்றாள். "கலி அவரை கவ்வியுள்ளது என்றார்கள்.

அவரிலெழுந்து பேசுவது மானுடரை காலடியின் சிற்றெறும்புகளென்றாக்கும் பெருந்தெய்வம் என்று சூதன் இங்கே பாடினான்” என்றாள். தாரை தயங்க விகர்ணன் “அவர் சொல்வதை கேட்பார் என நம்புவதன்றி வேறு வழியில்லை, அரசி” என்றான். குண்டாசி நடுங்கும் உரத்த குரலில் “நான் சொல்கிறேன்” என்றான். “இளையோனே, நீ பேசாதே” என்றான் விகர்ணன். குண்டாசி அவனை கையால் விலக்கி ஓணான் என தலை முந்தி நீள, உதடுகள் துடிக்க “ஏன் தெரியுமா? ஏன் தெரியுமா? மூத்தவர் துரியோதனருள் கூடிய அதே இருளில் ஒரு பகுதி அங்கரிடமும் உள்ளது. ஆம், அதனால்தான்!” என்றான்.

“இளையோனே…” என்றான் விகர்ணன். விருஷாலி அவனை கையமர்த்தி “அவன் சொல்லட்டும்” என்றாள். “நான், நான், நான்…” என குண்டாசி திக்கினான். “நான் சொல்வது அதனால்தான். அவ்விருளால் அங்கர் மேலும் அரசருக்கு அணுக்கமாக இருக்க முடியும். ஒரு சொல்லேனும் அவர் செவியில் போட முடியும். ஏனென்றால் ஏனென்றால் ஏனென்றால் நாகம் நாகம் நாகம்…” என்றான். நாத்தடுமாற கைகளை வீசி “ஏனென்றால் கருநாகத்தை அரசநாகமே ஆளமுடியும். வாசுகியின் நஞ்சை முறிக்க சேடநஞ்சு வேண்டும். அதன் பொருட்டே வந்தோம்” என்றபின் “நான் சொல்வது என்னவென்றால்…” என்றான்.

“என்ன சொல்கிறாய்?” என்று விகர்ணன் குண்டாசியின் தோளை பற்றினான். “நான் மது அருந்துவதே என் நாவில் எழுவதை சொல்வதன் பொருட்டுதான். இப்போதுகூட ஒரு மிடறு அருந்திவிட்டுதான் வந்திருக்கிறேன். அந்தத் தெய்வம் துணையில்லாமல் என்னால் உளமோட்ட முடியாது” என்று

குண்டாசி சொன்னான். “ஏனென்றால் நான் ஒரு சிறிய நாகம்... நஞ்சற்ற புழுபோன்ற நாகம். தலைதூக்கமுடியாத உரகம்.” விகர்ணன் சினத்துடன் “போதும்” என்றான். அவன் “ஆம், அவ்வளவுதான் நான் சொல்லவருவது” என்றான். “இனி நீ வாய் திறக்கவேண்டாம். மூத்தவரிடம் நானே பேசிக்கொள்கிறேன். அரசி உடனிருப்பார்” என்றான் விகர்ணன்.

விருஷாலி “நான் அவரிடம் சொல்வதற்கு ஏதுமில்லை. நாங்கள் இருவரும் அவரிடமிருந்து நெடுந்தூரம் அகன்றிருக்கிறோம். அதற்கு இங்குள்ள சடங்கையும் முறைமையையும் சுட்டிக்காட்டலாம். ஆனால் அதை நாங்கள் பயன்படுத்தி எங்கள் கரைகளுக்கு ஒதுங்கிக்கொண்டோம் என்பதே உண்மை” என்றாள். “எங்களுக்கென ஒரு தருணத்தை உருவாக்கி அளிப்பதாக அமைச்சர் ஹரிதர் கூறியிருக்கிறார். நாங்கள் அவரை சந்திக்கையில் நீங்களும் உடன் இருக்கவேண்டும். அங்கு நிகழ்ந்தனவற்றை முழுமையான வடிவில் அங்கர் இன்னும் அறிந்திருக்க மாட்டார். அவற்றை நாம் சொன்னாலே போதும்” என்றான் விகர்ணன். “யாதவ அரசி சிறுமை செய்யப்பட்டதறிந்தால் அவருள் வாழும் நாகம் எழும்” என்று குண்டாசி சொன்னான். விருஷாலி அவனைப் பார்த்ததும் விழி திருப்பிக்கொண்டாள். விகர்ணன் “ஏன்?” என்றான். தாரை அவனிடம் விழி காட்டி அடக்கினாள்.

விகர்ணன் “இப்போதுகூட அஸ்தினபுரியில் அறம்திகழச்செய்ய வாய்ப்புள்ளது, அரசி. அரசரிடம் அங்கர் வந்தமர்ந்து பேசட்டும். அரசர் ஒப்பவில்லை என்றால் அஸ்தினபுரிக்கு வந்து குழுமியிருக்கும் வைதிகர்களிடம் அறமுரைக்கட்டும். அஸ்தினபுரியில் போரெழுகைக்காக புருஷமேத வேள்வி நிகழ்த்துவதென முடிவெடுக்கப்பட்டுள்ளது.

வேள்விச்சாலையின் சொல்சூழ்கையின்போது அனைத்து தரப்புகளும் ஒலிக்க இடமளித்தாகவேண்டும். அதில் இளைய யாதவர் வந்து அமரவிருப்பதாக பேசப்படுகிறது. அந்த அவையில் அங்கநாட்டரசர் வந்து தன் உள்ளத்தை பேசவேண்டும்” என்றான் விகர்ணன்.

“வேள்வியன்னத்தை பகிர்ந்து உண்டபின்னரே போருக்கென வாள்தூக்கி வஞ்சினம் உரைப்பார்கள். அந்த அன்னத்தில் ஒரு வாயேனும் அங்கர் உண்டாக வேண்டும். அப்போது மட்டுமே அவர் ஷத்ரியர் என்று வைதிக அவையால் ஏற்றுக்கொள்ளப்படுவார். அதன்பொருட்டும் அவர் அஸ்தினபுரிக்கு வரவேண்டும்” என அவன் தொடர்ந்தான். “அவரை அவையமரச் செய்ய மாதுலர் சகுனியும் கணிகரும் மறுக்கலாம். ஷத்ரியர் எதிர்க்கலாம். ஆனால் அதை அரசரிடம் அங்கர் கோரிப்பெறவேண்டும். வைதிகர் அவையில் அன்னை பொருட்டு ஒரு சொல்லையேனும் அங்கர் கூறவேண்டும்.”

“ஆம், வில்லேந்தத் தெரிந்தவன் நாவில் சொற்களும் கூர்கொள்ளும்” என்றான் குண்டாசி. விகர்ணன் “இப்போரை தடுக்கமுடியவில்லை என்றால் ஒரு சொல்லையேனும் வைதிகர் நாவிலிருந்து அங்கர் கேட்டுப்பெறவேண்டும், அரசி” என்றான். “இப்போர் அரசர்களுக்கு எதிரானதே ஒழிய அரச மைந்தர்களுக்கு எதிரானதல்ல, பெண்டிருக்கு எதிரானது அல்ல. அவை நடுவே குலமகள் இழிவுசெய்யப்பட்டதைச் சுட்டி வைதிகர்களை உளம்குன்றச் செய்தால் அதை நிகர்செய்யும்பொருட்டு இந்தச் சொல்லை அவர்கள் அளிப்பார்கள். எங்கள் மைந்தர் உயிருக்கான உறுதியையாவது அஸ்தினபுரியின் அரசரிடமிருந்து அங்கர் பெற்று எங்களுக்கு

அளிக்க வேண்டும். இனி நாங்கள் மன்றாடுவதற்கு பிறிதொரு இடமில்லை.”

விருஷாலி பெருமூச்சுவிட்டாள். விகர்ணன் விசைதாழ்ந்து தளர்ந்த குரலில் “அரசி, போருக்கென சில நெறிகளை வேதமரபு வகுத்துள்ளது. அந்தணரும், ஆநிரைகளும், கற்பரசியரும், இளமைந்தரும், விளைவயல்களும் பேணப்பட வேண்டும். நீர்நிலைகளும் சாலைகளும் அழிக்கப்படலாகாது. இளமைந்தரென்பதில் எங்கள் மைந்தரும் அடக்கமென்று அந்தணர் அவையில் அங்கநாட்டு அரசர் சொல்லவேண்டும். இத்தருணத்தில் இனி நாங்கள் எதிர்பார்ப்பதற்கு பிறிதொன்றுமில்லை” என்றான். குண்டாசி “யாதவ அரசிக்கு இழைக்கப்பட்ட சிறுமைக்கு நிகர்மாற்றாக இந்தக் கொடையை அவர்களிடமிருந்து அங்கர் கேட்டுப்பெறவேண்டும்” என்றான். விகர்ணன் அவனை நோக்கி பல்லை கடித்தான்.

விருஷாலி “அவரை எவ்வண்ணம் சந்திக்கவிருக்கிறோம் எனத் தெரியவில்லை. இங்கே ஆலயத்தில் சந்திப்பதில் மட்டுமே முறைமைத்தடையென ஏதுமில்லை” என்றாள். தாரை “அதை நான் ஹரிதரிடம் பேசிக்கொள்கிறேன்” என்றாள். குண்டாசி “என்னுள் மது இறங்கத் தொடங்குகிறது. நான் நிகர்நிலை அடைந்தால் தீயவனாக ஆகிவிடுகிறேன் என்று சொல்லப்படுவதுண்டு” என நகைத்தான். அவன் வாயில் பற்கள் பெரும்பாலும் உதிர்ந்திருந்தமையால் சிரித்தபோது அது குகைபோல திறந்து மூடியபோது அழுந்தி மூக்கு தொங்குவதுபோலத் தெரிந்தது. “உடனே மது அருந்தியாகவேண்டும்… நல்லூழாக தேரிலும் சிறிது மது வைத்திருக்க பாகனிடம் சொல்லியிருக்கிறேன்” என்றான்.

“அரசவைகளில் நீ சொல்லெடுக்கவேண்டியதில்லை, இளையோனே” என்றான் விகர்ணன். “நான் நாகம். நாநீட்டலாகாது என்று என்னிடம் சொல்லவேண்டியதில்லை. மாநாகம் விரும்பினால் என்னை உண்ணட்டும். அதன் வயிற்றுக்குள் வாழ்கிறேன்” என்றான் குண்டாசி. சீறும் ஒலியெழச் சிரித்து “நான் வந்ததே அவரிடம் சில கேள்விகளை கேட்கவேண்டும் என்றுதான். அன்று கேட்டிருக்கவேண்டும். எப்போது? எப்போது?” என்றவன் கையை காற்றில் நிறுத்தி “பாஞ்சாலத்தரசி அவைச்சிறுமை செய்யப்பட்டபோது. அன்று அன்று அன்று கேட்டிருக்கவேண்டும். அன்று நான் மதுவருந்தி படுத்துவிட்டேன். என்னை அறையிலிட்டு பூட்டிவிட்டனர். நான் எழுந்தபோது அங்கர் சம்பாபுரிக்கு கிளம்பிவிட்டார் என்றனர்” என்றான்.

அவன் முகம் சிவந்து கண்கள் வெறித்தன. “அன்று கேட்டிருந்தால் இவ்வினா இத்தனை நஞ்சு கொண்டிருக்காது. இன்று இது என் உடலெங்கும் பரவி வளர்ந்திருக்கிறது. அன்று அன்று…” அவன் விருஷாலியின் அருகே தன் முகத்தை கொண்டுவந்தான். தாடியில்லையேல் அது வெறும் மண்டையோடு என அவளுக்குத் தோன்றியது. “அன்று கேட்டிருந்தால் அழுதிருப்பேன். இன்று சிரித்துக்கொண்டே கேட்பேன். ஐவருக்கும் பத்தினி அவள் என்றால் இவள் யார் அங்கரே என்று. அங்கு பழிகொண்டால் இங்கு நிகர்செய்யவேண்டும் கருநாகரே என்று. ஹெஹெஹேஹெ.” அவன் சிரித்து இருமினான்.

விகர்ணன் “போதும்” என்றான். “ஆம், போதும். ஆனால் நான் என்ன சொல்லிக்கொண்டிருந்தேன்?” என்றான் குண்டாசி. “நீ ஒன்றும் சொல்லவேண்டியதில்லை. செல்க!” என்றான்

விகர்ணன். “சம்படை என்ற ஒருத்தி. அவளும் அன்னைதான். அவள் உருகி உருகி செத்தாள். அவள் பாலைநிலத்தை நோக்கிக்கொண்டிருந்தாள். ஒரு சாளரத்தினூடாக... ஆனால்” அவன் கைகளை காற்றில் அசைத்தான். “அவளுக்கு மது தேவையாக இருக்கவில்லை. குருதி நொதித்துப் புளிக்குமென்றால் அதுவே மதுவென உடல்நிறைக்கும். அவர்களுக்கு மது தேவையில்லை.”

விகர்ணன் கையசைக்க அருகே வந்த காவலனிடம் “அரசரை தேருக்கு அழைத்துச் செல்க!” என்றான். “தேரிலேறுவதற்கு முன் ஒரு சொல். அதாவது நான் அங்கரிடம் கேட்கவேண்டியது. குருதி நஞ்சாக வேண்டுமென்றால் அதை உறைகுத்த முதற்துளி நம்முள் இருக்கவேண்டும் அல்லவா? அங்கரே, அழகரே, வில்லவரே, முதற்துளி நஞ்சு எங்குள்ளது? உங்கள் குருதி புளிக்கும் அந்த முதற்துளி...” அவன் மேலாடையை சீரமைத்து “நான் என்ன சொன்னேன்?” என்றான். “செல்க, தேரில் மது உள்ளது” என்றான் விகர்ணன். “ஆம், என் உடலில் மது குறைகிறது. அதனால்தான் உளறத் தொடங்குகிறேன்... செல்வோம்” என்ற குண்டாசி காவலன் தோளைப்பற்றியபடி நடந்தான்.

கூன்விழுந்த உடலும் தொங்கியாடும் கைகளுமாக அவன் செல்வதை விகர்ணன் நோக்கி நின்றபின் பெருமூச்சுடன் “பொறுத்தருள்க, அரசி” என்றான். “அவர் அங்கநாட்டரசரை சந்தித்துவிடக்கூடாது. அதை கருத்தில் கொள்க! இந்நச்சுச் சொற்களை அவரிடம் சொல்லிவிடக்கூடும்” என்றாள் தாரை. “சந்தித்தாலும் ஒன்றுமில்லையடி. அவர் இவனிடமிருந்து விரும்புவதே இத்தகைய முட்களைத்தான் என நினைக்கிறேன்” என்றாள் விருஷாலி.

அவர்கள் ஆலயத்தைவிட்டு வெளியே வந்தபோது அங்கு நின்றிருந்த ஹரிதர் தலைவணங்கி “தங்களுக்குரிய தேர்கள் ஒருங்கியுள்ளன, அரசே” என்று விகர்ணனிடம் சொன்னார். விருஷாலி “இவள் என்னுடன் வரட்டும்…” என்றாள். தாரை “ஆம், நான் அரசியுடன் சென்று தங்குகிறேன். என்னை அங்கே வந்து சந்தியுங்கள். என் திட்டத்தை சொல்கிறேன்” என்றாள். ஹரிதர் “முறைமைப்படி…” என்று சொல்லத் தொடங்க “முறைமையா? நான் மச்சர்குடிப் பெண். எங்கள் முறைமைகள் வேறு” என்றாள் தாரை. ஹரிதர் புன்னகைத்து மீண்டும் தலைவணங்கினார்.

அவர்கள் தேர்களில் ஏறிக்கொண்டனர். விகர்ணனும் குண்டாசியும் ஊர்ந்த தேர் முன்னால் செல்ல தொடர்ந்து விருஷாலி தாரையுடன் ஏறிக்கொண்ட அரசத்தேர் சென்றது. “அருகே மூன்றாவது பெருந்தெருவில்தான் எங்களுக்கு அளிக்கப்பட்ட மாளிகை, அரசி. அரசர்கள் வந்தால் தங்குவதற்காக கட்டப்பட்டது. அரக்குமணம் மாறாதது” என்றாள் தாரை. விருஷாலி வெளியே நோக்கி “கொம்பொலியா?” என்றாள். தாரை “எங்கே?” என்றாள். “இளவரசர்களுக்குரியது!” என்று விருஷாலி சொன்னாள். “இந்தப் பொழுதில் அவர்கள் இங்கு வர வாய்ப்பே இல்லையே?” தாரை “ஒருவேளை எங்களைப் பார்க்கவென்று வரக்கூடும்” என்றாள். “இங்கு எவரும் முறைமைகளை மீறுவதில்லை” என்றாள் விருஷாலி.

புரவியில் காவலர்தலைவன் அவளை நோக்கி வந்து தேர் அருகே விரைவழிந்தான். “என்ன?” என்று விருஷாலி கேட்டாள். “அரசி, பட்டத்து இளவரசர் வந்துகொண்டிருக்கிறார். வேட்டைக்குச் சென்றவர் இங்கு அஸ்தினபுரியின் இளைய

அரசர்கள் வந்திருப்பதை அறிந்து வழிதிரும்பினார்.” அவள் விழிகளை நோக்கியபின் “ஆம், சிறு முறைமை மீறல். ஆனால் அவர் அதற்கு முடிவெடுத்திருக்கிறார்” என்றான். விருஷாலி தெருவின் முகப்பில் கரிய குதிரையில் அறிவுப்புக் கொம்பை ஊதியபடி முதற்காவலன் வருவதை கண்டாள். பின்னர் வளைவு திரும்பி ஏழு புரவிகள் வந்தன. வெண்புரவியில் வெண்ணிற ஆடையும் தலையணியும் வெள்ளி அணிகளுமாக விருஷசேனன் அமர்ந்திருந்தான்.

முன்னால் சென்றுகொண்டிருந்த தேர் நிற்பதற்குள் அதிலிருந்து குண்டாசி பாய்ந்து தெருப்புழுதியில் வீசப்பட்டதுபோல விழுந்தான். மேலாடை நழுவ கையூன்றி எழுந்து இரு கைகளையும் விரித்து உடல் நடுங்க நின்றான். கைகளை தலைக்குமேல் கூப்பி “மூத்தவரே, அங்கரே” என்று கூவினான். “அஸ்தினபுரியில் கதிரவன் துணை வர அன்று நுழைந்த அதே கோலம்! ஆம், நீங்கள் என்றுமிருப்பவர். காலத்தை ஆக்கி விளையாடும் நாளவன் நீங்கள்!” என்றான். கைகள் பதற திரும்பி தேரிலிருந்து இறங்கிய விகர்ணனை நோக்கி “நோக்குக, அந்தச் செம்பொன்கவசம்! மணிக்குண்டலம்! அதே கதிரெழு பேரழகு!” என்றபின் “எந்தையே! எந்தையே!” என்று அழுதபடி ஓடினான்.

குண்டாசி தலைக்குமேல் கைகூப்பியபடி தடுமாறி திசைகுலைந்த கால்களுடன் ஓடிச்சென்று புரவியிலிருந்து இறங்கிய விருஷசேனனின் கால்களில் குப்புற விழுந்தான். அவனைத் தொடர்ந்து ஹரிதரும் சிற்றமைச்சர்களும் ஓடிவந்து தயங்கி நின்றனர். “அரசே!” பதறியபடி விருஷசேனன் குனிந்து அவனை தூக்கிக்கொள்ள குண்டாசி விருஷசேனனின் மார்பில் முகம் பதித்து கைகளைக் கூப்பியபடி நரைத்த தாடி அசைய

விம்மி அழுதான். விகர்ணன் கைகூப்பியபடி விருஷசேனனை அணுகினான். தாரை கண்களில் பளபளப்புடன் அதை நோக்கி அமர்ந்திருந்தாள். விருஷாலி “நாம் செல்வோம்” என்றாள்.

[வெண்முரசு வாசிப்பு – ராஜகோபாலன்]

# குருதிச்சாரல் - 61

**பகுதி ஒன்பது : கதிர் இருள் பொழுது – 6**

கர்ணனின் அரண்மனையில் சிற்றவையை ஒட்டிய சிறிய ஊட்டறையில் விருஷாலி தாரைக்கு அருகே பதற்றத்துடன் அமர்ந்திருந்தாள். இப்போதுகூட பிழையென ஏதும் நிகழவில்லை, எழுந்து சென்றுவிடலாம் என அவள் எண்ணினாள். ஆனால் உடலை எழுப்பமுடியவில்லை. அவள் கைவிரல்களை பின்னிக்கொண்டே இருப்பதைக் கண்ட தாரை “அரசி, இது முறைமைமீறல் அல்ல. இது அரசரின் அவை அல்ல. அவைக்குத்தான் அரசமுறைமைகள்” என்றாள்.

“அறியாது பேசுகிறாய் நீ. உனக்கு இங்குள்ள நடைமுறைகள் தெரியாது” என்றாள் விருஷாலி. “ஆம், ஆனால் நடைமுறைகள் என்றால் என்ன என்று தெரியும். உரிய தேவையின்பொருட்டு மீறி, தெளிவாக விளக்கவும் முடிந்தால் எந்த முறைமையையும் உடனே மாற்றிக்கொள்வார்கள் என்று நூறுமுறை செய்து கற்றிருக்கிறேன். அமைதியாக இருங்கள். நான் பார்த்துக்கொள்கிறேன்” என்றாள் தாரை. “அனைத்து முறைமைகளையும் உருவாக்கியவர்கள் அவர் ஆணைப்படியே அவ்வாறு செய்தனர்” என்றாள் விருஷாலி.

“ஆம், அவர் தன்னை சூரிய வடிவாக இந்நகரில் நிலைநாட்ட விழைந்தார். குலஇழிவு சொன்னவர்களை அவ்வடையாளத்தினூடாக கடந்தார். இன்றிருப்பவர் அந்த அங்கநாட்டரசர் அல்ல. இதை என் பொறுப்பில் விடுங்கள்.” விருஷாலி பெருமூச்சுவிட்டு “நான் சொல்வதற்கொன்றுமில்லை. வந்திருக்கலாகாது, ஏதோ ஓர் உணர்வுநிலையில் உன்னுடன் கிளம்பிவிட்டேன்” என்றாள். தாரை சிரித்து “அதே உணர்வுநிலையால் என்னை நம்புங்கள்” என்றாள்.

அடுமனையாளர்கள் அதற்குள் அங்கே தாரையின் சொற்களையே செவிகொள்ளவேண்டுமென தெரிந்துகொண்டவர்களாக அவளை நோக்கி நின்றிருந்தனர். புதிய உணவின் மெல்லிய நறுமணம் கதவை சற்று திறந்துமூடும்போதெல்லாம் விசிறிக்காற்று வந்து தொடுவதுபோல வீசியணைந்தது. சிற்றறை வெண்பட்டாடை விரிக்கப்பட்ட குறும்பீடத்தைச் சூழ்ந்து வெண்பட்டு விரிக்கப்பட்ட மணைகள் போடப்பட்டு காத்திருந்தது. உணவறை மணம் நிலைகொள்வதற்காக ஏலக்காயையும் சுக்கையும் துளசியுடன் கொதிக்கவைத்து எடுத்த நறுமணநீரை அறைக்குள் தெளித்திருந்தனர்.

வெளியே பேச்சுக்குரல் கேட்டது. கதவைத் திறந்து குண்டாசியும் விகர்ணனும் உள்ளே வந்தனர். “வந்துகொண்டிருக்கிறார், அரசி” என்றான் விகர்ணன். “அவரை பார்த்தீர்களா?” என்று தாரை கேட்டாள். “ஆம், நாங்கள் அவர் அறைக்கே சென்றோம். துயில்முடிந்து நீராடச் சென்றிருந்தார். அணிபுனைவதுவரை காத்திருந்தோம். உணவறையில் காத்திருப்பதாக சொன்னதும் செல்க, நான் ஓர் ஓலையை

மட்டும் பார்த்து அனுப்பிவிட்டு வந்துவிடுகிறேன் என்றார்” என்றான் விகர்ணன்.

தாரை தலையில் மெல்ல தட்டி “அறிவிலிகளும் உய்த்துணர்வது... எதன்பொருட்டு உங்களை அனுப்பினேன் என்றுகூடப் புரியாமல்...” என்றாள். குண்டாசி நாக்குழைந்த குரலில் “நான் அதை சொன்னேன், அவர் மதுவருந்தாமல் உணவருந்த வரவேண்டியது நம் தேவை என” என்றான். விகர்ணன் “ஆம், அதற்காகவே சென்று அணியறைவாயிலில் நின்றோம்” என்றான். தாரை “அவர் உணவருந்துவதற்கு முன் யவன மது அருந்துவார். அதை அருந்தாமல் கூட்டிவரவேண்டும் என்றுதான் அணியறைக்கே உங்களை அனுப்பினேன்” என்றாள்.

“அவர் ஓலை...” என்ற விகர்ணன் தயங்கி “ஆம், நான் தவறு செய்துவிட்டேன்” என்றான். “இங்கே அவர் எந்த ஓலையை பார்க்கிறார்? அதை வந்ததுமே தெரிந்துகொண்டோம் அல்லவா?” என்றாள் தாரை சீற்றத்துடன். “ஆம், ஆனால் அவர் ஓலை நோக்கச்செல்வதாக சொல்லும்போது என்ன செய்ய முடியும்?” என்றான் விகர்ணன். “உடன்சென்று நின்றிருக்கவேண்டும். அவர் இங்கு வரும்வரை ஒருவர் உடன் நின்றிருக்கவேண்டும்.” விகர்ணன் சலிப்புடன் தலையை அசைத்தான்.

குண்டாசி வாயில் எதையோ அதக்கியிருந்தான். அவன் முகம் வீங்கி விழிகளுக்குக் கீழே தசைகள் நனைந்த துணி என தழைந்திருந்தன. அடிக்கடி பற்களை இறுகக் கடித்து தாடையை கிட்டித்தான். கைகளைச் சுருட்டி இறுக்கியும் ஆடைநுனியைப் பற்றி முறுக்கியும் நிலையழிவை காட்டிக்கொண்டிருந்தான். அவன் மதுவருந்தியிருக்கவில்லை என்று விருஷாலிக்கு

தெரிந்தது. ஆனால் மேலும் பதற்றமும் நடுக்கும் கொண்டிருந்தான்.

வெளியே ஓசைகேட்டு குண்டாசி கதவைத் திறந்து செல்ல விகர்ணன் “இளைய அரசி” என்றான். “அவளை யார் அழைத்தது?” என்று விருஷாலி திகைப்புடன் கேட்க தாரை “நான்தான் அழைத்துவரச் சொன்னேன், அரசி. அவர்களும் உணவருந்த அமரட்டுமே” என்றாள். “அவ்வழக்கமே இங்கில்லை. நானும் அவளும் விழவுகளில் மட்டுமே அரியணையில் அருகருகே அமர்வது வழக்கம்” என்றாள் விருஷாலி. “விருந்தினரின் பொருட்டு அவர்களின் முறைமையை கடைப்பிடிக்கும் வழக்கம் அரசரிடம் உண்டு. எங்கள் நாட்டில் இவ்வழக்கமே” என்ற தாரை “நீங்கள் தனிப்பட்ட முறையில் ஒன்றும் சொல்லவேண்டியதில்லை, முறைமையை மட்டும் கொள்க!” என்றாள். விருஷாலி திணறலை வெல்ல பெருமூச்சுவிட்டு அசைந்தமர்ந்தாள்.

தாரை எழுந்து நிற்க குண்டாசியால் வரவேற்கப்பட்டு சுப்ரியை உள்ளே வந்தாள். அங்கே விருஷாலி இருப்பதை அவளும் எதிர்பார்க்கவில்லை என்பதை முகம் காட்டியது. ஆனால் உடனே நிலைமீட்டுக்கொண்டு தாரையிடம் “சம்பாபுரிக்கு நல்வரவு, அரசி. அஸ்தினபுரியின் அரசியால் இந்நாள் அழகு கொண்டது” என்றாள். தாரை “நான் கலிங்கத்தரசியின் முன் தலைவணங்கும் பேறுகொண்டேன்” என்றாள். விருஷாலியை நோக்கி தலைதாழ்த்தி “வாழ்த்துக மூத்தவளே, மீண்டும் சந்திக்க நல்லூழ் அமைந்தது” என்றாள் சுப்ரியை. “ஆம், இந்நாள் மூதன்னையருக்குரியது” என்று விருஷாலி சொன்னாள்.

அவர்கள் அமர்வதன் ஆடையோசைகள் மட்டும் அறையில் ஒலித்தன. விகர்ணன், குண்டாசி இருவரும் வெளியே

சென்றனர். தாரை சிரித்துக்கொண்டு சுப்ரியையிடம் “நான் தங்களை இதுவரை பார்த்ததில்லை. அஸ்தினபுரிக்கே நீங்கள் வந்ததில்லை என எண்ணுகிறேன்” என்றாள். சுப்ரியை “ஆம், அங்கே நான் வந்தால் அஸ்தினபுரியின் அரசியருக்கு சேடியாக சென்றுள்ளேன் என கலிங்கத்தில் அலர் கிளம்பும்” என்றாள். விழிகளிலோ முகத்திலோ எந்த வஞ்சமும் இளிவரலும் இன்றி இயல்பாக அதை அவள் சொன்னது தாரையை சற்று திகைக்கச் செய்தது. “அலர் கூறுவது எளியோரின் இயல்பு” என்று மட்டும் பொதுவாக சொன்னாள்.

“ஆம், சூதனொருவன் பாடியதைக் கேட்டு எந்தை எனக்கு ஓலை அனுப்பியிருந்தார். அங்கர் சம்பாபுரியில் அரசர், அஸ்தினபுரியில் சூதர் என. உன்னை சம்பாபுரிக்கே அனுப்பியிருக்கிறோம், நினைவில் கொள்க என்றார். அஸ்தினபுரிக்கென அவர் வேறு அரசியை மணம்கொண்டுள்ளார் என்று நான் மறுமொழி சொன்னேன்.” தாரை விருஷாலியை நோக்கி திரும்பாமல் தலையை வைத்துக்கொண்டாள். சுப்ரியை தன் விழிகளில் எவ்வுணர்வையும் காட்டாமலிருக்கப் பயின்றவள் என்று எண்ணினாள். ஆனால் விழிகளில் உணர்வை முற்றிலும் வெளிக்காட்டாமலிருப்பது பயின்ற நடிப்பல்ல, அவள் அச்சொற்களை முழுமையாக நம்புவதனால்தான் என அவள் உணர்ந்தாள். இயல்பான அன்றாட நிகழ்வென்றே அவள் அதை சொல்கிறாள்.

சுப்ரியை பெருமூச்சுடன் உடலைத் தளர்த்தி இயல்பாக மூச்செறிந்து “இவ்வாறு ஒரு விருந்து இங்கு வழக்கமில்லை. சூரியநூல்களின்படி நாங்களிருவரும் ஒன்றென அமரலாகாது” என்றாள். “ஆம், ஆனால் எங்கள் வழக்கப்படி அரசர் தன்

அரசியருடன் அமர்ந்து இணைந்து விருந்துண்டாலொழிய அதை வரவேற்பென ஏற்கமாட்டோம் என்று ஹரிதரிடம் சொன்னேன். அவர் இதை ஒருங்கமைத்தார்” என்றாள் தாரை. சுப்ரியை திகைப்புடன் “அவரா? இது அரசரின் ஆணை என்றல்லவா எனக்கு சொல்லப்பட்டது?” என்றாள். “அரசர் விருந்துண்ண ஒப்புக்கொண்டார் என்றாலே இது அரசரின் ஆணையென்று ஆகிவிடுகிறதே” என்றாள் தாரை.

“நன்று” என்று மட்டும் அவள் சொன்னாள். மூவரும் அசைவில்லாமல், நோக்கு முட்டாமல் அமர்ந்திருந்தார்கள். சொல்லெழாதபோது உடல்களிலிருந்து எவ்வளவு உணர்ச்சிகள் எழுந்து சூழ்கின்றன என தாரை வியந்தாள். சுப்ரியையின் உடலில் வெறுப்பையும் ஆணவத்தையும் காட்டும் அசைவு எது என தன் ஓரவிழியால் அளக்கமுயன்றாள். பின்னர் விருஷாலியிடமிருந்து கடுந்துயரென எது காட்சிப்படுகிறது என்று நோக்கினாள். உடலசைவு அல்ல, உடல்கள் சிலையென அமைந்திருந்தன. உடலின் அமைவிலேயே அவ்வுணர்ச்சிகள் இருந்தன. அத்தருணத்தை அப்படியே சிலையென்றாக்கினால் அவை காலத்தில் நிலைத்து என்றுமென்று அமைந்திருக்கும். உணர்ச்சிகள் காற்று, ஒளி, அனல், நீர் என கணந்தோறும் மாறுபவை. அவற்றை நிலைக்கச்செய்தால் தெய்வவடிவங்கள் ஆகிவிடுகின்றன போலும்.

வெளியே சங்கொலி எழுந்ததும் மூவரும் எழுந்து நின்றனர். குண்டாசியை தோளுடன் அணைத்துக்கொண்டே கர்ணன் உள்ளே வந்தான். கர்ணனின் பெரிய கைகளுக்குள் சிற்றுடல் ஒடுக்கி நனைந்த பறவை என மெல்ல நடுங்கி அரைக்கண்மூடி நடந்துவந்தான் குண்டாசி. விகர்ணன் வலப்பக்கம் கைகளைக் கூப்பியபடி வந்தான். அவர்களின் தலைகள் அவன்

நெஞ்சுக்குக்கீழே இருந்தன. கர்ணனின் முகம் வியர்த்திருந்ததும், உதடுகள் அழுந்திய புன்னகையும் அவன் மதுவருந்தியிருப்பதை காட்டியது. அறைக்குள் தேவியர் இருவரைக் கண்டதும் அவன் திகைத்து புருவம் அசைய ஒரு கணம் சொல் நிலைத்தான். உடனே புன்னகையை மீட்டு "நன்று! இருவரையும் சேர்ந்து பார்க்கும் நல்வாய்ப்பு" என்றான்.

சுப்ரியையும் விருஷாலியும் அஞ்சியவர்களாக தலைகுனிந்து நின்றனர். அறியாமல் விகர்ணனும் குண்டாசியும் ஒரு பின்னடி வைத்தனர். தாரை புன்னகையுடன் "அரசே, இது சூரியநெறி இலங்கும் நாடு என்றும் இங்கு இதெல்லாம் வழக்கமில்லை எனவும் அறிவேன். ஆனால் என் குலவழக்கம் இது, அரசகுடியினரை அரசர் தன் துணைவியருடன் வரவேற்று இணையமர்ந்து உணவுண்பது. இங்கு நான் முதன்முறையாக வந்தபோது இவ்வாறு நீங்கள் என்னை வரவேற்றீர்கள் என மச்சர்குலப் பாடகர் எங்கள் கொடிவழிகளுக்கு சொல்லவேண்டுமென விரும்பினேன்" என்றாள்.

கர்ணன் "ஆம், அவ்வாறே அமைக! மச்சர்குலம் நாளை மண்நிறைத்து ஆளும்போது என் பெயரும் அதில் நிலைக்கட்டும்" என்றான். அருகே வந்து தாரையை வணங்கி "அஸ்தினபுரியின் மச்சநாட்டரசி அங்கநாட்டுக்கு வருகை தந்ததை என் தெய்வமும் குடியும் கோலும் மகிழ்ந்து வரவேற்கிறது. தங்கள் வருகையை நினைவில் நிறுத்தும்பொருட்டு அவைக்கவிஞர் பத்து பாடல்களை இயற்றவேண்டும் என்றும் அவை எங்கள் ஆலயத்தின் சுற்றுச்சுவரில் கல்லெழுத்துக்களில் பதிக்கப்படவேண்டும் என்றும் ஆணையிடுகிறேன்" என்றான்.

“என் குடியின் நல்லூழ் அது” என்றாள் தாரை. “அமர்க அரசே, இன்னமுது கொள்க!” என்று விகர்ணன் சொன்னான். “அதற்காக நீ என்னிடம் முறைமைச்சொல் எடுக்கவேண்டியதில்லை. அடித்து பல்லுதிரச் செய்வேன்” என்றபடி கர்ணன் அமர்ந்தான். அவன் கால்மடித்து அமர்ந்து உண்ணும்பொருட்டு அகன்ற மணை போடப்பட்டிருந்தது. விகர்ணனும் குண்டாசியும் அவனுக்கு இருபக்கமும் அமர்ந்தனர். தாரை நேர்எதிரில் அமர அவளுக்கு இருபுறமும் சுப்ரியையும் விருஷாலியும் அமர்ந்தனர்.

கர்ணன் திரும்பி குண்டாசியை நோக்கி “இவன் என்ன என்னிடம் ஒரு சொல்லும் பேசாமலிருக்கிறான்? என்னுருவில் ஏதோ கொடுந்தெய்வத்தை கண்டதுபோல் அஞ்சுகிறான்?” என்றான். குண்டாசி தலைகுனிந்து அமர்ந்திருந்தான். கர்ணன் அவன் தோளை கையால் தட்டி “பேசுக, இளையோனே! நான் அஸ்தினபுரியில் விரும்பிய மொழி உன்னுடையதுதான்” என்றான். குண்டாசி உதடுகளை இறுக கடித்துக்கொண்டான். அவன் கழுத்தில் தளர்ந்த தசைகள் இழுபட்டு அசைந்தன.

“நேற்று இவன் ஹரிதர் தொடர என் தனியவைக்கு வந்தான். என்னைக் கண்டதும் திகைத்து நின்றுவிட்டான். மகாருத்ரனின் ஆலயத்தின் கருவறைமுன் என கைகூப்பி நின்றுகொண்டிருந்தான். நான் எத்தனை சொல் வினவினாலும் மறுமொழி சொல்லவில்லை. அமர்க, என்னுடன் மதுவருந்துக என்றேன். இல்லை இல்லை என பதறி பின்னால் சென்று சுவரில் முட்டிக்கொண்டான். பின்னர் திரும்பி கதவைத் திறந்து வெளியே ஓடிவிட்டான். நான் பின்னால் எழுந்துவந்து பார்த்தேன். தூண்களில் முட்டி விழுந்து எழுந்து ஓடுவதைக்

கண்டேன். காவலரிடம் பிடியுங்கள், கொண்டுசென்று அறைசேருங்கள் என்றேன்” என்றான் கர்ணன்.

“என்ன ஆயிற்று இவனுக்கு என ஹரிதரிடம் கேட்டேன். இத்தனைக்கும் அப்போது இவன் மது அருந்தியிருக்கவில்லை. என் தோற்றம் இவனை திகைக்கச் செய்துவிட்டது என்றார். மெய்தான், இவனை நான் பார்த்து பதினான்காண்டுகள் கடந்துவிட்டன. அன்று இளமையுடன் இருந்தேன்” என்ற கர்ணன் “இவன் கூடத்தான் என் நினைவில் இளமைந்தன் போலிருந்தான். இன்று என்னைவிட முதியவனாக தெரிகிறான்” என்று மீண்டும் குண்டாசியின் தோளை தட்டினான்.

விகர்ணன் “நேற்று அங்கிருந்து திரும்பி வந்ததுமுதல் ஒரு சொல்லும் உரைக்கவில்லை. என்ன என்று கேட்டேன். மறுமொழியில்லை என்பதனால் ஹரிதரிடம் கேட்டு அறிந்துகொண்டேன். தங்களை சந்திக்க வருவதை என்னிடம் சொல்லவில்லை. செல்லக்கூடாதென்று கடுமையாக விலக்கியிருந்தேன்” என்றான். “ஏன்?” என்றான் கர்ணன். “அவன் நாவெல்லாம் நஞ்சு, அரசே” என்றான் விகர்ணன். கர்ணன் குண்டாசியிடம் “அந்நஞ்சில் சில துளிகளை அளிக்கலாகாதா, இளையோனே?” என்று சிரித்தபடி கேட்டான். குண்டாசி தலைதூக்கவில்லை.

விகர்ணன் “முதன்மையாக அதன்பின் இவன் இதுவரை ஒருதுளி மதுவும் அருந்தவில்லை” என்றான். கர்ணன் “அடடா, ஏன்?” என்றான். விகர்ணன் “ஏன் குடித்தான் என்று தெரிந்தால் அல்லவா ஏன் விட்டான் என்று கேட்கலாம்” என்றான். கர்ணன் “இன்று மாலை நாம் அருந்துவோம். இரவை நனைப்போம்” என்று குண்டாசியிடம் சொன்னான். இல்லை என அவன் தலையசைத்தான். “ஏன்? என்னிடம் என்ன அச்சம்?” குண்டாசி

மீண்டும் வேண்டாம் என தலையசைத்தான். “ஏன்? என்ன எண்ணுகிறாய்?” என்றான் கர்ணன்.

குண்டாசி மெல்லிய விசும்பலோசையுடன் அழத்தொடங்கினான். கர்ணன் “இளையோனே, என்ன? என்ன ஆயிற்று?” என்று அவன் தோளை மீண்டும் அணைத்தான். விருஷாலி “அவனை விட்டுவிடுங்கள்… அவனே மீள்வான்” என்றாள். கர்ணன் “ஆம்” என கையை எடுத்துக்கொண்டான். குண்டாசி மேலாடையால் கண்களை துடைத்தான். சீறல் ஓசையுடன் அவன் மெல்ல மீண்டுவருவதை அவர்கள் நோக்கி அமர்ந்திருந்தனர்.

தாரை “அரசே, எங்கள் குலவழக்கப்படி முதல் அப்பத்தை இரண்டாகப் பகுத்து ஒரு பகுதியை நீங்கள் எனக்கு அளிக்கவேண்டும்” என்றாள். “ஆம், அவ்வாறே நிகழட்டும்” என்றான் கர்ணன். தாரை விழிகாட்ட அடுமனையாளர் உணவை பரிமாறத் தொடங்கினர். அரிசி அப்பமும் கோதுமை அடையும் அன்னமும் முதலில் பரிமாறப்பட்டன. மிளகும் காரைப்புளிப்பழமும் இட்டுச்செய்த பன்றிக்குழவி ஊன்கறியும், பொரித்த இளமான் தொடைகளும், பருப்புடன் கலந்து செய்த கலவைக் காய்கறிக்கூட்டும், நெய்யில் வறுத்த கோவைக்காய் பொரியலும், துருவிய இளம்பனங்கொட்டைப் பருப்புடன் சேர்த்து ஆவியில் வேகவைக்கப்பட்ட அயிரைமீன் கூட்டும் விளம்பப்பட்டன. குழையச் சமைத்து பயறிட்டு எடுக்கப்பட்ட பூசணிக்காய் மென்கூட்டும், துடரிக்காயுடன் வேகவைத்த காராமணிக்கூட்டும் பரிமாறப்பட்டதும் முதலூணுக்கென வரிசை அமைந்தது.

பரிமாறுபவர்களின் மெல்லிய குரல் ஒலியும் அடுகலங்கள் முட்டும் கிணுக்கமும் கேட்டுக்கொண்டிருந்தன. பரிமாறி

முடித்து அடுமனையாளர் தலைவர் கைகூப்பி அன்னத்தை வழிபடும் வேதச்சொல்லை உரைக்க அவர் உதவியாளர்கள் உடன் இணைந்தனர். கர்ணனும் பிறரும் கைகூப்பி விழிமூடி அமர்ந்திருந்தனர். "அமைதி! அமைதி! அமைதி! ஆம், அமைதி!" என அத்தொழுகை முடிந்ததும் கர்ணன் ஓர் அரிசி அப்பத்தை எடுத்து இரண்டாகக் கிழித்து பாதியை தாரைக்கு அளித்து "இவ்விருந்தால் தெய்வங்களும் முன்னோரும் பசியாறுக! உடலென அமைந்த ஐந்து பருப்பொருட்களும் நிறைவுகொள்க! நாவில் அமைந்த அன்னை ஸ்வாதா மகிழ்க! ஆம், அவ்வாறே ஆகுக!" என்றான்.

அவள் அதை வாங்கி தலைக்குமேல் தூக்கி விண்ணுக்குக் காட்டியபின் ஒரு சிறுதுண்டை கிழித்து தலைக்குப்பின் வீசினாள். எஞ்சியதை இரண்டாகப் பகுத்து விகர்ணனுக்கு அளித்தாள். "உண்போம்" என்றான் கர்ணன். அவர்கள் உண்ணத் தொடங்கினர். முதல் வாயை உண்டதுமே முகம் மலர்ந்து "நல்லுணவு" என்று தாரை சொன்னாள். கர்ணன் "அதை அடுமனையாளரிடம் சொல்க!" என்றான். "ஆம், உண்டு முடித்ததும் அவருக்கு ஒரு பரிசில் அளிக்கவிருக்கிறேன்" என்றாள். சுப்ரியை "அரசர்கள் உண்ணும்போது அடுமனையாளரை பாராட்டுவதில்லை" என்றாள். "நாங்கள் பாராட்டும் குலத்தவர்" என்றாள் தாரை புன்னகைத்தபடி. சுப்ரியை அப்புன்னகையால் திகைத்து விழிவிலக்கிக்கொண்டாள்.

தாரை மிக விரைவிலேயே ஊனின் சுவையில் முழுமையாகவே ஈடுபட்டாள். இரண்டாவது ஊணாக பயறு போட்டுச் செய்த அரிசிப்பொங்கலும் வறுத்த தினையுடன் மான்கொழுப்பிட்டு உருட்டி அவித்தெடுத்த அப்பங்களும்

வந்தன. தெங்கின் சாற்றில் மிளகுடன்சேர்த்து வேகவைத்த பலாக்காய் சுளைகளும் மாங்காய்ச்சாற்றில் வெள்ளரிக்காய் இட்டு செய்த புளிகறியும் பாலுடன் வாதுமைப் பருப்பிட்டு செய்த எரிவில்லா கூட்டுகறியும் தயிருடன் புளிக்கீரை கடைந்துசெய்த கறியும் நிரந்தன.

தாரை "எவ்வளவு ஊன்! இவையனைத்தையும் முழுதறிந்து உண்ண ஒருநாள் முழுமையாகவே வேண்டும்" என்றாள். விருஷாலி புன்னகைக்க சுப்ரியை "ஊண்மேடையில் இவ்வாறு சுவைபேசும் வழக்கமில்லை" என்றாள். தாரை அதே புன்னகையுடன் "நாங்கள் பேசுவதுண்டு, அரசி" என்றாள். விகர்ணன் அவளை நோக்கி விழிகாட்ட கர்ணன் உரக்க நகைத்து "இவளையும் விகர்ணனையும் அங்கநாட்டிலேயே வைத்துக்கொள்ளலாமென எண்ணுகிறேன்" என்று விருஷாலியிடம் சொன்னான். "உன் தங்கையர் எவரேனும் இருந்தால் சொல். உன்னைப்போன்று இருக்கவேண்டும், என் மைந்தருக்காக" என்றான்.

"இருக்கிறார்கள், ஆனால் பட்டத்தரசியாகவே வருவார்கள்?" என்றாள் தாரை. "என்ன ஐயம்? வேண்டுமென்றால் இன்னும் நான்கு அரசுகளை வென்றுகூட அரியணை அமர்த்துவேன். என்ன சொல்கிறாய்?" என்று சுப்ரியையிடம் கேட்டான். அவள் முகம் சிவந்து மூச்சுத்திணறினாள். "பட்டத்து இளவரசர் மூத்த அரசியின் மைந்தர் அல்லவா?" என்றாள் தாரை. விகர்ணன் "என்ன சொல்கிறாய்?" என சீற்றம் கொள்ள தாரை "பேச்சுக்காக கேட்டேன்" என்றாள். அவர்கள் கைகழுவ ஏனங்களில் நறுமணநீர் வந்தது. கைகழுவி மரவுரியில் துடைத்துக்கொண்டதும் தேனிலூறிய கனிகளும், வெல்லத்தில்

வேகவைக்கப்பட்ட வாழைக்காய்த்துண்டுகளும், பனங்கற்கண்டு இட்டு வேகவைக்கப்பட்ட பலாச்சுளைகளும் வந்தன.

இனிப்பை உண்டு முடித்து மீண்டும் கைகழுவி மரவுரியால் துடைத்துக்கொண்டிருந்தபோது கர்ணன் நன்றாக வியர்த்திருந்தான். அவன் தலை சற்று நடுங்கியது. ஏவலர்தலைவர் "அரசரும் அரசியரும் அடுத்த அறையில் அமர்ந்து வாய்மணம் கொள்ளலாம்... இங்கு சற்று வெக்கை மிகுதி" என்றார். கர்ணன் முதலில் எழுந்தான். தொடர்ந்து பிறரும் எழுந்தனர். தொடுப்பறையில் தாழ்வான பீடங்கள் ஒருக்கப்பட்டிருந்தன. கர்ணன் அவற்றில் ஒன்றில் அமர்ந்ததும் பிறரும் அமர்ந்தனர். கர்ணனின் விழிகள் சொக்கத் தொடங்கியிருப்பதை விகர்ணன் கண்டான். அவன் விழிகளை தாரை சந்தித்து மீண்டதை விருஷாலி கண்டாள்.

சுப்ரியை "அஸ்தினபுரியின் அரசநிகழ்வுகள் வந்துகொண்டிருக்கின்றன" என்றாள். ஓர் அரசியெனப் பேசுவதன்பொருட்டே அதை அவள் சொல்கிறாள் என்று விருஷாலிக்கு புரிந்தது. அதையே தாரை தொடக்கமாகக் கொள்வாள் என அவள் கணித்திருந்தாள். தாரை "ஆம், ஒவ்வொன்றும் அதன் எல்லையை மீறிக்கொண்டிருக்கின்றன. அவைநின்று இரந்த இளைய யாதவரை இழிவுசெய்து திருப்பியனுப்பினார் அரசர். நாம் அளிக்கும் இழிவுகள் அனைத்தும் வஞ்சமென திரும்பிவருகின்றன என்று என் மூதன்னையர் சொல்வதுண்டு" என்றாள். சுப்ரியை "வஞ்சத்தை அஞ்சுபவர்கள் ஷத்ரியர்கள் அல்ல" என்றாள். "எச்சமின்றி பகைமுடிக்கவேண்டும் என்றுதான் அவர்களின் நெறிநூல்கள் சொல்கின்றன."

“நெறிநூல்களில் எவருக்கு ஒட்டுதல்?” என்று தாரை இயல்பான குரலில் சொன்னாள். “நெறிநூல்களை அவைத்தேவைக்கென தொட்டுக்கொள்கிறார்கள். அந்தந்தத் தருணத்திற்கு ஏற்றபடி நெறிநூல்களும் உள்ளன.” மணப்பொருள்சுருளை எடுத்து வாயிலிட்டு மென்றபடி “அவைநடுவே குலமகளை சிறுமை செய்தனர். அதை நோக்கி அமர்ந்து ரசித்தனர் ஆண்தகையர். அதற்கும் துணைவந்தன நெறிநூல்கள்” என்றாள். கர்ணன் உடலில் ஓர் விதிர்ப்பு ஏற்பட்டது. சுப்ரியை எச்சரிக்கை அடைந்து விருஷாலியை ஒருகணம் நோக்கியபின் சொல்தவிர்த்தாள்.

மிக இயல்பாக தாரை தொடர்ந்தாள் “அது அன்று அஸ்தினபுரியில் அனைவரையும் கொந்தளிக்கச் செய்தது. பாரதவர்ஷத்து ஷத்ரியர்கள் பலர் செய்திகேட்டு சீறி எழுந்து வாளுருவினார்கள் என்று அறிந்தேன். ஆனால் அஸ்தினபுரியின் படை அங்கரின் வாளுடன் சென்றபோது வந்து தலைவணங்கி கப்பம் கட்டினர். அடுத்த இந்திரவிழவுக்கும் வேள்விக்கும் முடியும் கொடியுமாக வந்து அவையிலமர்ந்து முகமனுரைத்து அரசரை வாழ்த்தினர். இன்று அவைநிறைத்துப் பெருகி அமைந்து அரசர் பெயர் சொல்லி கூச்சலிட்டு கொந்தளித்தனர்.”

கர்ணன் எழுந்துசெல்லவிருப்பவன்போல ஓர் அசைவை வெளிப்படுத்தினான். ஆனால் மதுவின் மயக்கால் அவனால் எழ இயலவில்லை. இமைகள் சரிந்துகொண்டிருந்தன. தாரையின் முகத்தை நோக்கியபோது அரசுசூழ்கை அறியாத மீனவப்பெண் எனவே தோன்றினாள். “இதோ, புருஷமேத வேள்வி நிகழவிருக்கிறது. வேதம் காக்க அந்தணனை அவியாக்கி நடத்தப்படும் பெருங்கொடை விழவு. அதில்

வேள்விக்காவலராக அரசர் அமரவிருக்கிறார். அவைநிறைக்கவிருக்கிறார்கள் ஷத்ரிய அரசர்கள்.” சுப்ரியை பேச்சைத்திருப்பும் பொருட்டு “ஆம், அதற்கு அழைக்கவே சுஜாதர் வந்தார்” என்றாள்.

ஆனால் அதை அடுத்த நகர்வுக்கான படியாக தாரை எடுத்துக்கொண்டாள். “அதை அறிந்துதான் வந்தோம். அவ்வேள்வியில் அங்கர் சென்றமர அவர்கள் ஒப்பமாட்டார்கள். அவைச்சிறுமையே எஞ்சும். அவர்கள் ஏற்றுக்கொண்டால் அது அவரை ஷத்ரியர் என நிறுவும், ஆனால் அரசரும்கூட அவர்களிடம் ஒன்றும் சொல்லவியலாது” என்றாள். “பாஞ்சாலத்து அரசியை துகில்களைந்து சிறுமை செய்தது அஸ்தினபுரியின் அவை. மும்மடங்கு பெரிய ஷத்ரிய அவை இப்போது யாதவப் பேரரசியை தன்மதிப்பை அழித்து மேலும் சிறுமை செய்தது. அவர்கள் அவரை ஏளனம் செய்து நகைத்ததை என் செவிகளால் கேட்டபின் வேதம் வாழுமா அவர்களின் வாளில், வாழுமென்றால் அது வேதமாகுமா என்றே எண்ணினேன்.”

கர்ணன் கையூன்றி எழுந்தமர்ந்து “யார்? யார் சிறுமை செய்தது?” என்றான். தாரை “அரசே, தாங்கள் அறிந்ததுதான்” என்றாள். “சொல், என்ன நிகழ்ந்தது?” என்றான் கர்ணன். அவன் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது. “அரசே, இளைய யாதவர் கடந்த ஷத்ரியப் பேரவையில் வந்து பாண்டவர்களுக்காக ஐந்து சிற்றூர்களை இரந்தபோது அரசர் அவையில் எழுந்து சொன்னதென்ன என்று இன்று அறியாதோர் இல்லை. யாதவப் பேரரசி குந்தி கற்பற்றவர் என்றார். கணவர் அறியாமல் விரும்பியவருடன் சென்று அவர் கருத்தரித்த மைந்தர்களே பாண்டவர் என்பதனால் அவர்கள் சூதர்களே என்றார்.”

கர்ணனின் முகத்தை நோக்க விருஷாலிக்கு அச்சமாக இருந்தது. அக்கண்களில் அந்த வஞ்சத்தை அவள் பதினைந்தாண்டுகளுக்கு முன்பு கண்டிருந்தாள். “அவ்வண்ணம் இல்லை என்றால் அவைக்கு வந்து எழுந்து நின்று தன் கற்புக்கு அவர் சான்றுரைக்கவேண்டும் என்றார். அவருக்கு மைந்தரை அளித்தவர்களின் பெயர்களை அவைமுன் வைக்கவேண்டும் என்று சொல்லி எக்களித்தார். அவையிலேயே அறச்செல்வரான விதுரர் மயங்கிவிழுந்தார். உலகை வெல்லும் உளம்கொண்ட இளைய யாதவர் கண்கலங்கி கைகூப்பி அழுதார்.”

தாரையின் குரல் இப்போது அறியாப் பெண்ணுக்குரியதென ஒலிக்கவில்லை என விருஷாலி அறிந்தாள். “அறம் அறிந்தோர் என எழுந்து ஒரு சொல் கேட்க அந்த அவையில் எவரும் இருக்கவில்லை. பிதாமகர் நாவடங்கி அமர்ந்திருந்தார். ஆசிரியர்கள் தலைகுனிந்திருந்தனர். முதுஷத்ரியர்கள், தொல்குடியினர், இளையவர்கள் அனைவரும் நகையாடிச் சிரித்தனர். எவருடைய அன்னையென்றால் என்ன, அன்னையே அவர் என்று எண்ண அங்கே எவரும் இல்லை. தொல்லன்னையரின் நுண்ணுடல்கள் அந்த அவையைச் சூழ்ந்து நின்று தவித்திருக்கவேண்டும்.”

தாரை குரல் தளர்ந்தாள். “அரசே, அங்கே உபப்பிலாவ்யத்தில் அச்செய்தியைக் கேட்டதுமே யாதவ அரசி மயங்கி விழுந்து இப்போதும் நோயுற்றிருக்கிறார் என்று கேட்டேன்” என்று சொன்னபோது அவள் கண்களில் நீர் மின்னியது. “ஐவரைப் பெற்றும் அவைச்சிறுமைகொண்டு கிடக்கிறார். தெய்வங்களும் கைவிடும் நிலை அது. இன்று எண்ணுகையில் அந்த அவையிலெழுந்து சங்கறுத்து விழுந்திருக்கவேண்டும் என்று

தோன்றுகிறது. ஆனால் அதற்கும் ஒரு வாய்ப்பு வந்துள்ளது. அந்தணர் குழுமும் வேதியர் மன்று செல்கிறேன். அங்கு சென்று அறம் கேட்கிறேன். வேதம் பெண்ணுக்கு எதை அளிக்கிறதென்று அவர்கள் சொல்லட்டும். இல்லையேல் என் குருதி விழுந்த மண்ணில் அமர்ந்து அவர்கள் அதற்கு அவியூட்டட்டும்."

"வேண்டாம்" என்றபடி கர்ணன் எழுந்தான். மீசையைச் சுருட்டி இறுக்கி இழுத்து மீண்டும் சுருட்டியபடி பற்கள் கடிபட தாடை இறுகியசைய "நான் அஸ்தினபுரிக்கு வருகிறேன்" என்றான். "தங்களை அழைத்துச்செல்லவே வந்தோம்" என்றான் விகர்ணன். அவர்கள் அனைவரும் எழுந்து அவனைச் சூழ்ந்து நின்றனர். "ஷத்ரியர்கள் கூடிய வேள்வியவையில் எழுந்து அவர்களின் அறம் என்ன என்று கேட்கிறேன். அவர்கள் தங்கள் சொல்லுக்காக கண்ணீரோ குருதியோ சிந்தியாக வேண்டும்" என்றான். சுப்ரியை. "அரசே, ஷத்ரியப் பேரவைக்கு எதிராக…" என சொல்ல சினத்துடன் திரும்பி உரத்த குரலில் "என் வில்நாணோசை கேட்டு அஞ்சும் நரிக்கூட்டம் அது. அதை அவர்களுக்கு காட்டுகிறேன்" என்றான்.

விருஷாலி நெஞ்சு படபடக்க நின்றாள். "அஸ்தினபுரியின் அரசருக்கு எதிராக கிளம்புகிறீர்கள்" என்றாள் சுப்ரியை மீண்டும். "ஆம்" என்றான் கர்ணன். "அரசே, நான் அனைத்தையும் சொல்லியாகவேண்டும். இளைய யாதவர் புருஷமேத வேள்வியில் இருப்பார். இம்முறை சாந்தீபனி குருநிலையின் ஆசிரியராக வேள்வியின் சொல்லுசாவலில் பங்கெடுக்க வருகிறார். அவ்வேள்விக்கு தங்களை அழைத்துவரவேண்டும் என அவருடைய செய்தி எனக்கு வந்தது. அதன்பொருட்டே நான் வந்தேன்" என்றாள்.

“நான் நீ சொல்லிமுடித்ததுமே அதை உணர்ந்தேன்” என்றான் கர்ணன். “அவர் ஆடும் விளையாட்டு எது என்று அறியேன். நான் எளிய கருவென்றும் இருக்கலாம். ஆனால் இது என் கடன்.” தாரை தலைவணங்கினாள். அவன் திரும்பி குண்டாசியிடம் “நாம் நாளை காலையே கிளம்புகிறோம்” என்றபின் சுப்ரியையிடம் “நீயும் கிளம்பு” என்றான். வஞ்சப் புன்னகை இதழ்களில் எழ “நீ ஷத்ரிய குலத்தவள் அல்லவா? ஷத்ரியர்கள் நிரந்த வேள்விமன்றில் அமர ஒரு வாய்ப்பு” என்றான்.

சுப்ரியை அவன் சிரிப்பை புரிந்துகொள்ளாமல் விழிசுருக்கி நோக்கினாள். கர்ணன் குண்டாசியின் தோளை வளைத்து “என் அறைக்கு வருக, இளையோனே! மதுவருந்தாமல் பேசிக்கொண்டிருப்போம்” என்றான். குண்டாசி மேலாடையால் முகம் துடைத்து “ஆம்” என்றான்.

.வெண்முரசு வாசிப்பு – ராஜகோபாலன்

# குருதிச்சாரல் - 62

**பகுதி பத்து : பெருங்கொடை – 1**

அஸ்தினபுரியின் மையப் படகுத்துறையிலிருந்து வலமாகப் பிரிந்து கங்கைக்கரை ஓரமாகவே செல்லும் பாதையின் இறுதியில் அஜமுகம் என்னும் சிறிய பாறை கங்கைக்குள் நீட்டி நின்றிருந்தது. அதை ஒரு சிறு துறைமேடை என்றாக்கி அங்கே சிறிய மீன்பிடிப்படகுகளும் அக்குறுங்காட்டில் வேட்டைக்கு வருபவர்களின் வாள்படகுகளும் அணையும் வழக்கமிருந்தது. அஸ்தினபுரியின்

தலைமையில் தொடங்கவிருக்கும் பெரும்போர் வெல்லும் பொருட்டு ஒருக்கூட்டப்படும் புருஷமேத வேள்விக்காக அஸ்தினபுரியின் தலைமை வைதிகராக அமைக்கப்பட்ட காசியப குலத்து கிருசர் வடக்கே இமயமலைச்சாரலில் இருந்து வந்திருந்த அதர்வ வைதிகர்களான குத்ஸ குலத்து தாரகரும் மௌத்கல்ய குலத்து தேவதத்தரும் உடனமர திசைதேர்ந்து கோள்நோக்கி குறித்த இடம் அது.

தேர்ந்தெடுக்கப்பட்ட அந்தக் குறுங்காடு நான்கு எல்லையிலும் குருதிபலி கொடுக்கப்பட்டு நடுகற்களில் நிறுவப்பட்ட பதினாறு ருத்ரர்களால் காக்கப்பட்டது. உயரமற்ற நெல்லி, மஞ்சணாத்தி, பூவரசு மரங்களும் கொன்றைகளும் கிளைகள் தொடாது ஆங்காங்கே நிற்க குறும்புதர்கள் ஊடே பரவிய இளங்காடு சரிந்து கங்கை நோக்கி சென்றது. மழைக்காலத்தில் நீரோடும் ஓடைகளின் தடங்கள் நரம்புகளென அதில் பரவியிருந்தன. முயல்வளைகளும் சரிந்த பாறைகளின் அடியில் நரிமடைகளும் கொண்டிருந்த அந்நிலம் நாணல் செறிந்த கங்கைக்கரைச் சதுப்பை சென்றடைந்தது. கரையிலிருந்து ஆலமரங்கள் நீர்மேல் சாய்ந்து விழுதுகளால் ஒழுக்கை வருடியபடி நின்றிருந்தன.

சிந்துநாட்டுச் சிற்பியான பரமரும் அவருடைய ஏழு மாணவர்களும் இடம்தேர்ந்து மகாபுருஷமேத வேள்விக்கான வேள்விச்சாலையை அக்காட்டின் நடுவே அமைத்திருந்தனர். வேள்விப்பந்தல் மணிவிளைந்த ஆயிரத்தெட்டு பெருமூங்கில்கால்களின் மேல் ஒன்றுடன் ஒன்று தொடுத்து பின்னி அமைக்கப்பட்ட மூங்கில்வலைப்பரப்பின் மேல் விரிந்த ஈச்சையோலைக் கூரை கொண்டிருந்தது. கிருசரும் தாரகரும் தேவதத்தரும் இணைந்து வசிட்டரின் மைந்தர் அதர்வா

வகுத்தளித்த தொல்மரபின் அடிப்படையில் பூர்ஜமரப்பட்டையில் வரைந்தளித்தபடி சிறகுவிரித்த செம்பருந்தின் வடிவில் அது அமைக்கப்பட்டிருந்தது. நான்கு வாயில்கள் கொண்டிருந்த அப்பந்தலின் ஒவ்வொரு நுழைவிலும் வேள்விச்சாலையைக் காக்கும் பைரவர், வீரபத்ரர், காளி, அனந்தன் ஆகிய தெய்வங்கள் நிறுவப்பட்டிருந்தன.

பருந்தின் தலையில் வேள்வித் தலைவருக்கான எண்கால் மரப்பீடமும் வலச்சிறகில் வேள்விக்காவலனாகிய அஸ்தினபுரியின் அரசனுக்கும் அரசிக்குமான கல்லால் ஆன அரியணைகளும், அஸ்தினபுரியின் அரசகுடியினருக்கான தர்ப்பை விரிக்கப்பட்ட தாமரை வடிவு கொண்ட மணைகளும் அமைந்திருந்தன. இடச்சிறகில் முனிவர்களும் அந்தணர்களும் அமர்வதற்கான இருக்கைகள் போடப்பட்டிருந்தன. கழுகின் உடலென்று அவையமரும் அரசர்களுக்கான பகுதியும் அதன் இரு வால்சிறகுகளாக வேள்விப்பணியாளர் நின்றிருக்கவேண்டிய இடங்களும் வகுக்கப்பட்டிருந்தன.

வேள்விச்சாலையின் கிழக்கே இந்திரன் கரும்பு வடிவில் நிலைநாட்டப்பட்டான். அவன் யானையாகிய ஐராவதமாக கங்கையின் வெள்ளுருளைக் கல்லும் மின்படையாக சிற்றாடியும் அருகே வைக்கப்பட்டன. தென்கிழக்கே அனலவன் சுடர்விளக்கின் வடிவில் நிறுவப்பட்டான். புண்டரீகமெனும் திசையானையாக செந்தாமரை மலரும் அவன் கொடிக்குறியாக பூனைக்காது மலரும் அங்கே அமைக்கப்பட்டன. தெற்கே யமன் எருமைக்கொம்பு வடிவில் நிறுவப்பட்டான். வாமனம் என்னும் அவனுடைய யானைக்கு கரிய உருளைக்கல் நிறுவப்பட்டது. செம்பருந்தின் இறகு சிம்மக்கொடியடையாளமாக. குமுதம் என்னும் திசையானையின் அடையாளமாக வெண்தாமரையும்

யாளிக்கொடி என பூளைமலரும் வைக்கப்பட்டு அதன்மேல் சிறிய ஈச்ச ஓலையாலான நாகச்சுருளின் வடிவில் அன்னை நிருதி நிறுவப்பட்டாள்.

மேற்கே மாகாளை வடிவமாக தேங்காயும் கரிய கல்வடிவமாக அஞ்சனமும் நிறுவப்பட்டு அதன்மேல் வெள்ளிக்குடத்தில் நிறைக்கப்பட்ட கடல்நீராக வருணன் கோயில்கொண்டிருந்தான். வடமேற்கே புஷ்பதந்தம் என்னும் திசைக்களிறாக கதாயுதமும் அருகே கழுதைவால்மயிரிலிட்ட ஏழு முடிச்சுகளாக கொடிக்குறியும் நிலைவைக்கப்பட்டு அதன்மேல் ஓம் எனும் எழுத்து பொறிக்கப்பட்ட கற்பலகை வாயுதேவனாக நிறுவப்பட்டிருந்தது. வடக்கே பொன்நாணயமாக பீடத்தில் வைக்கப்பட்ட குபேரனுக்குக் கீழே திசையானையாகிய சார்வபௌமம் பூசணிக்காய் வடிவில் அமைக்கப்பட்டு யானைக்கொடியாக பூசணிப்பூ வைக்கப்பட்டது. ஈசானன் சுப்ரதீகம் என்னும் திசைக்கரிக்கு அடையாளமாக வைக்கப்பட்ட நிறைநாழிக்கும் அதன்மேல் கொடியாக சூட்டப்பட்ட காகச்சிறகுக்கும் மேல் சுண்ணமும் மஞ்சளும் கரைத்த குருதி நிறைத்த செம்புச்சிமிழ் வடிவில் அமைக்கப்பட்டிருந்தார்.

வேள்விக்குரிய ஐந்துவகை எரிகுளங்கள் பருந்தின் நெஞ்சில் அமைக்கப்பட்டன. கங்கையின் களிமண்ணால் வார்த்து சுடப்பட்ட செங்கற்களில் அஸ்தினபுரியின் அரசனின் வெற்றிக்கென அமைக்கப்படும் மகாபுருஷமேத வேள்விக்கென வார்க்கப்பட்டவை அவை என எழுத்துக்கள் பதிக்கப்பட்டிருந்தன. கன்னிப்பசுவின் சாணியால் மெழுகப்பட்ட தரையில் பூதவேள்விக்காக அரைவட்ட வடிவில் ஐந்து எரிகுளங்கள் அமைந்தன. முன்னோர் நிறைவுறுவதற்காக இயற்றப்படும் எரியளிப்புக்கு முக்கோணவடிவ எரிகுளம்,

மைந்தர் நலம்பெறுவதற்கான கொடைக்கான நாற்கோண வடிவ எரிகுளம், முற்பழியும் நிகழ்பழியும் வருபழியும் அகலும்பொருட்டு இயற்றப்படும் அவிசொரிவுக்காக ஐங்கோண எரிகுளம், நீள்வாழ்வுக்கென இயற்றப்படும் எரியோம்புதலுக்காக அறுகோண எரிகுளம், எதிரிகளை முற்றழிப்பதற்கான குருதியளிப்புக்காக எண்கோண வடிவ எரிகுளம்.

அதன் நடுவே அமைந்த மகாவேதிகை ஐஷ்டிகவேதி அமைப்பதற்கான அதர்வவேத நெறியின்படி ஐந்துபூதங்கள் அமைந்த ஐந்தடுக்குகள் கொண்டு ஆயிரத்து முன்னூற்றியெண்பது செங்கற்களை அடுக்கி கட்டப்பட்டிருந்தது. அதன் வடக்கே உத்தரவேதி பருந்தின் விரிசிறை வழிவில் நானூற்றியெழுபது செங்கற்களால் அமைக்கப்பட்டது. தெற்கே தென்னெரிக்கான சிறு எரிகுளமும் மேற்கே அனலவனுக்கான எரிகுளமும் அமைந்தன. சோமச்சாறு அளிப்பதற்கான சிறு எரிகுளம் வடகிழக்கே அமைந்தது. அதற்கப்பால் சோமச்சாறு பிழிவதற்கான மரத்தாலான கலங்களும் குழவிகளும் அவற்றைப் பிழிபவர்கள் அமர்வதற்கான நூற்றெட்டு மணைகளும் அமைக்கப்பட்டிருந்தன.

அவையனைத்தையும் நிறைவுசெய்தபின் நிகழ்த்தப்படும் வேள்விநிறைவில் முழுவெற்றியன்றி பிறிதெதையும் அளிக்காத தேவர்கள் உண்டு நிறைவதற்காக வேதமுழுமைகொண்ட அந்தணனை அவியாக்குவதற்குரிய வட்டவடிவ எரிகுளம் அப்பந்தலுக்கு வெளியே குறுங்காட்டுக்குள் எட்டடி ஆழமும் பன்னிரண்டு அடி விட்டமும் கொண்டதாக அமைக்கப்பட்டிருந்தது. அங்கு செல்வதற்குரிய செம்மண்ணாலான பாதை பந்தலில் இருந்து

வலப்பக்கமாக எழுந்து மண்ணில் வடுவென வளைந்து சென்றது. இடப்பக்கமாகச் சென்ற பாதை வேள்விக்காவலனாகிய அரசன் ஏர் உழுது ஒன்பது மணிகளை விதைப்பதற்குரிய வேள்விப்புனத்தை சென்றடைந்தது.

வேள்விக்கென வந்துசேரும் அந்தணர்களும் வைதிகமுனிவர்களும் தங்குவதற்கான குடில்கள் பெருஞ்சாலைக்கு மறுபக்கம் கங்கையை நோக்கி இறங்கிய சாந்தை என்னும் ஓடையின் கரையில் அமைக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு வைதிகர் குழுவுக்கும் தனித்தனியாக வேலியிடப்பட்ட குடில்தொகை அளிக்கப்பட்டது. ஈச்சையோலைகளால் கூரையிடப்பட்டு மரப்பட்டைச் சுவர்கொண்ட சிறுகுடில்கள் சூழ்ந்து நடுவே எழுந்த மையக்குடிலை நோக்கி வாயில் திறந்திருந்தன. ஆசிரியர்கள் தங்கும் அக்குடில்மேல் அவர்களின் குருமரபை குறிக்கும் அடையாளங்கள் கொண்ட கொடி பறந்தது. கங்கைவழியாக படகில் வரும் ஏவலர் அவர்களுக்குரிய உணவுப்பொருட்களையும், விறகுகளையும், எரியோம்புவதற்கான நெய்யையும் பிறவற்றையும் கொண்டுவந்து அளித்தனர். வேள்வி அறிவிக்கப்பட்டது முதல் ஒவ்வொரு நாளும் அந்தணர் வந்துகொண்டே இருந்தமையால் அக்குடில்நிரை மேலும் மேலும் கட்டப்பட்டு காட்டுக்குள் ஊடுருவிச்சென்று ஒரு சிறுநகர் என்றே ஆகியது.

வேள்விப்பந்தலுக்கு சென்றுசேர்வதற்கு அந்தணருக்கும் அரசகுடியினருக்கும் பிறருக்குமென மூன்று சாலைகள் அமைக்கப்பட்டன. அனைத்துச் சாலைகளும் சென்று வேள்விக்குடிலின் முன்னாலிருந்த தேர்முற்றத்தில் வளைந்து மறுபக்கம் வழியாக திரும்பிச்சென்று பெருஞ்சாலையை

மீண்டும் அடைந்தன. அஜமுகத்தின் மேல் பலகைகள் அறையப்பட்டு தடிக்கால்கள் நாட்டப்பட்டு படகுத்துறையும் உருவாக்கப்பட்டது. அங்கே படகுகள் அணையும் பொருட்டு பன்னிரு நிலைகள் கொண்ட மூங்கில்கோபுரம் எழுப்பப்பட்டு அதன்மேல் அஸ்தினபுரியின் அமுதகலக்கொடி ஏற்றப்பட்டது. கங்கையின் கரையோரமாக பதினெட்டு காவல்மாடங்கள் அமைக்கப்பட்டு அதன்மேல் இரவும்பகலும் காவலர் வில்லம்புடன் விழித்திருந்தனர்.

பீதர்நாட்டு விரைவுப் பாய்கள் கொண்ட காவல்படகுகள் கங்கைக்குள் காவலுக்கு சுற்றிவந்துகொண்டிருந்தன. அவை நாகதாராக்கள் என்று அழைக்கப்பட்டன. கரையிலிருந்து மிகுந்த விரைவில் நீருக்குள் பாயும் மிகச்சிறிய தாக்குதல்படகுகள் நாணல்களுக்கு நடுவே காத்து நின்றிருந்தன. அவை மீன்குத்திகள் எனப்பட்டன. முரசொலியாலும் இரவில் அனல்சுழற்றலாலும் அவை ஒற்றைச் செய்திவலையில் இணைக்கப்பட்டிருந்தன. அவற்றுக்கான காவலர் படகுகளில் அஸ்தினபுரியின் பெருந்துறையிலிருந்து கங்கை வழியாக வந்து சென்றனர்.

வேள்விச்சாலைக்கு வலப்பக்கமாகச் சென்ற சாலை சென்றடையும் தாழ்ந்த நிலத்தில் குறுங்காடு தெளிக்கப்பட்டு ஆநிலை உருவாக்கப்பட்டது. ஒன்றுக்குள் ஒன்றென அமைந்த மூன்று வட்டக் கொட்டில்களுக்கு நடுவே நான்காள் உயரத்தில் மூங்கிலால் கட்டப்பட்ட காவல் கோபுரம் எழுந்து நின்றது. அதன்மேல் அமைந்த மேடையில் நாற்புறமும் நோக்கும்படியாக ஏறுமாடம் அமைந்திருந்தது. அதில் கூர்ந்த அம்புகளும் நாண் விரைத்து நின்ற விற்களுமாக ஐந்து வீரர்கள் எப்போதும் காவலிருந்தனர். ஆநிலையைச் சுற்றி கன்றுகளைக்

காக்கும் தெய்வங்கள் எட்டுத் திசையிலும் அமைக்கப்பட்டு அந்நடுகற்களுக்குமேல் எழுந்த மூங்கில் தூண்களில் இரவுகளில் மீன்எண்ணெய்ப் பந்தங்கள் எரியவிடப்பட்டன.

வேள்வியில் பங்குகொள்ளும் சொல்திகழ் அந்தணர்களுக்கு கொடையளிக்கவேண்டிய கரிய காம்பும் வெண்ணிற உடலும் பொன்னிறக் கொம்பும் செந்தாமரை இதழ்போன்ற மூக்கும் கரிய பீலிகள் கொண்ட விழிகளும் கொண்ட ஆயிரத்து எட்டு பசுக்கள் அங்கு பேணப்பட்டன. அடுத்த இரு வட்டங்களில் வேள்விக்குரிய நெய்யை வழங்கும் கொழும்பசுக்கள் புரக்கப்பட்டன. அவற்றுக்கான பசும்புல் கற்றைகள் படகுகளில் சூழ்ந்திருந்த சிற்றூர்களிலிருந்து வந்து அஜமுகத்தை அணுகி அங்கு மலையென குவிக்கப்பட்டன. சகட வண்டிகளில் அவற்றை ஏற்றிய ஏவலர் உருட்டிக் கொண்டு வந்து கோநிலைகளில் அடுக்கினர். இரவும் பகலும் புல்உண்ணும் பசுக்களின் கழுத்து மணியோசை கேட்டுக்கொண்டிருந்தது. அவை உண்பதற்கான கம்பும் வரகும் கலந்து பொடிக்கப்பட்ட மாவும் மூட்டைகளில் வந்து இறங்கின.

மூன்று பசுக்களுக்கு ஒருவன் என ஆவலர் அமர்த்தப்பட்டிருந்தனர். ஒவ்வொருநாளும் பசுக்களை கங்கைக்கு கொண்டுசென்று கழுவி உடலெங்கும் வேப்பெண்ணை புரட்டி பூச்சிகளிலிருந்து காத்து சற்று நேரம் காலோய காட்டுக்குள் நடக்கவிட்டு மீட்டு கொண்டுவந்து கட்டினர். இரவெல்லாம் அங்கே குந்திரிக்கமும் அகிலும் புகைந்தன. இடம் வகுக்கப்பட்டு தென்கிழக்கு கன்னிமூலையில் தறி நிறுத்தி நூல்கட்டி அளந்து களம் வரையப்பட்டதுமே அந்நிலம் வேள்விநிலை என்றாகிவிட்டது என்பது நெறி. ஒவ்வொருநாளும் அந்தணர் அங்கே வந்து மூன்று வேளை

எரியோம்பினர். வேள்விநிலை ஆநீரால் ஒவ்வொருநாளும் தூய்மைசெய்யப்பட்டது. வேள்விச்சாம்பலால் ஆநிலை தூய்மைசெய்யப்பட்டது. அவிமிச்சத்தை கொண்டுவந்து ஆநிலையின் பசுக்களுக்கு பகிர்ந்து ஊட்டி அவற்றை மலரிட்டு வணங்கி மீண்டனர்.

பசுக்களிலிருந்து கறக்கப்பட்ட பால் மண்குடங்களில் நுரைசூடி ஆய்ச்சியர் தலைகளிலேறி அக்காட்டிற்குள்ளேயே அமைக்கப்பட்டிருந்த பால்நிலைக்கு கொண்டுசெல்லப்பட்டது. அங்கு பெரிய யானங்களில் பாலை ஊற்றி காய்ச்சி மரத்தாலான கலங்களில் சேர்த்தனர். கங்கையின் ஒழுக்கில் சுழலும் சிறகாழிகளுடன் இணைக்கப்பட்டு விசைபெற்று சுழன்றுகொண்டிருந்த பதினெண்முக மத்துகள் அவற்றை கடைந்தன. பகலெல்லாம் அவை பாலை அலைக்கும் ஓசை பாறைச்சரிவில் ஆறு செல்லும் ஓசையென கேட்டுக்கொண்டிருந்தது. சிற்றுயிர்களை தவிர்ப்பதற்காக அப்பகுதியை தேவதாருவின் அரக்கு கலந்த புகையால் திரையிட்டிருந்தனர். அதனுள்ளிருந்து முகிலில் எழுபவர்கள்போல வெண்ணிற ஆடையணிந்த ஆய்ச்சியர் எழுந்து மீண்டும் சென்று மறைந்தனர்.

அலைநுரை என உருண்டெழுந்த வெண்ணெய் மண்கலங்களால் திரட்டப்பட்டு அங்கேயே உருக்கி நெய் ஆக்கப்பட்டு செம்புக்குடங்களில் நிறைக்கப்பட்டது. மூடி பொருத்தி விளிம்புகளை ஈயத்தை உருக்கி ஊற்றி ஒட்டி கொண்டுசென்று கங்கையின் குளிர்நீர் ஆழத்திற்குள் இறக்கி சேர்த்தனர். ஒவ்வொருநாளும் நூற்றுஎட்டு குடம் நெய் கங்கைக்குள் இறக்கப்பட்டது. நெய்க்குடங்கள் கட்டப்பட்ட கயிறுகள் ஒன்றோடொன்று பிணைந்த வலையை

தொடுத்துக்கொண்டபடி படகுகள் கங்கையின் அலைகளில் ஆடி நின்றன.

வேள்விச்சாலையின் மேற்கு எல்லையில் வேள்விக்குரிய தொன்மையான அன்னங்களான வரகு, சாமை, கம்பு, எள், கொள் எனும் ஐந்து மணிகளும் தனித்தனி வயல்களில் விளைவிக்கப்பட்டன. நீளாயுளுக்காக பாலும், நற்புகழுக்காக நறுமணப்பொருட்களும், மைந்தர்பெருக வெண்குருதித் துளியென தயிரும், விண்ணவர் மகிழ நெய்யும், நற்சொல் அமைய தேனும், இன்னுளம் அமைய கருப்புச்சாறும், பெருநிதி சேர சந்தனமும், இல்லறம் பெருக அன்னமும், மங்கலம் விளைய மஞ்சளும், ஆபெருக பழங்களும் என நூலோர் வகுத்த அவிப்பொருட்கள் அனைத்தும் கொண்டுவரப்பட்டு வேள்விநிலையின் இடப்பக்கத்திலமைந்த கலவறையில் சேர்க்கப்பட்டன.

ஒவ்வொரு நாளும் பணி முடிந்து ஏவலர் விலகிச் சென்றதும் காட்டைச் சுற்றி பல்லாயிரம் நெய்ப்பந்தங்கள் ஏற்றப்பட்டு விலங்குகள் உள்நுழையாது காக்கப்பட்டன. அஸ்தினபுரியின் ஆயிரத்தவர் படைகள் இரண்டு துணைப்படைத்தலைவன் சிம்ஹபாகுவின் தலைமையில் இரவும் பகலும் இரண்டு அணிகள் என வேள்விக்காட்டை காத்து நின்றிருந்தன.

அஸ்தினபுரியின் அரசவையில் புருஷமேத வேள்வி ஒன்றை இயற்றவேண்டும் என்னும் எண்ணத்தை காசியப குலத்து கிருசர்தான் முதலில் சொன்னார். அவர் சிந்துநாட்டிலிருந்து கணிகரால் வரவழைக்கப்பட்டவர். போரெழுகை குறித்த பேச்சு அப்போது அவையில் நிகழ்ந்துகொண்டிருந்தது. “இது வேதத்திற்கான போர்.

பெருவேள்வி ஒன்றினூடாக நாம் வேதியரின் வாழ்த்தை பெறவேண்டும். நாம் நிகழ்த்தும் போர் எதன்பொருட்டு என்று அதன்பின் எவருக்கும் அறிவிக்கவேண்டியதில்லை. வாளும் வில்லும் ஏந்தும் ஒவ்வொருவரும் அதை உணர்ந்திருப்பார்கள்” என்று கிருசர் சொன்னார்.

விதுரர் “ஆம், ஒரு மகாசத்ரயாகம் செய்யவேண்டும் என்று வைதிகர்களும் சொன்னார்கள்” என்றார். “இளவேனிற்காலத்தின் வளர்நிலா காலம் வேள்விகளுக்கு உகந்தது என்பார்கள்.” கிருசர் “வேள்விகள் பலநூறு உள்ளன. கோமேதம், அஜமேதம், அஸ்வமேதம் என இத்தருணத்தில் இயற்றக்கூடியவற்றை தெரிவுசெய்யவும்கூடும். ஆனால் அதர்வவேதம் ஆணையிடும் புருஷமேதமே அவற்றில் தலையாயது. அதை நாம் முதுவேனிலில் தேய்பிறைநாளில் நடத்தலாம் என்கின்றன நூல்கள்” என்றார்.

அவர் அதைச் சொன்னதுமே கணிகரின் குரல் அது என உணர்ந்து அவை அமைதிகொண்டு செவிகூர்ந்தது. விதுரர் எழுந்து “புருஷமேதமா? அது நாமறியாத் தொல்காலத்தில் எப்போதோ நிகழ்த்தப்பட்டது. இன்று அதை கேள்விப்பட்டவர்களே சிலர்தான்” என்றார். கிருசர் “ஆம், நான் மூவேதம் கொண்டவன். சென்ற முந்நூறாண்டுகளாக யஜுர்வேத மரபு மேலோங்கி, அதன் எதிர்நிலை என வேதமுடிபுக் கொள்கைகள் காடுகளை நிறைத்தபோது அதர்வவேதம் அவையஞ்சியவனின் சொல் என ஆழத்திற்கு சென்றுவிட்டது. ஆனால் அது சிவம் கழுத்திலமைந்த நஞ்சு. எழாது பரவாது என்றுமழியாது அங்கிருப்பது” என்றார். “உள்ளமைந்திருத்தலால் அது விதை. ஒரு குடம் நீர் பெற்றால் கிளையும் விழுதும் விரித்த பெருமரம்.”

“மகாபூதவேள்விகளை செய்பவர்களே பாரதவர்ஷத்தில் அருகிவிட்டனர். அதன் பெரும்செலவை அரசர்கள் அஞ்சுகின்றனர். அரசவைகளில் எழும் அமைச்சர்கள் பூதவேள்விகள் அவ்வரசன் கொண்ட பெருவிழைவின் பொதுஅறிவிப்புகள், ஒவ்வொரு மகாபூதவேள்வியும் பிற அரசரிடம் எச்சரிக்கையையும் அச்சத்தையும் ஊட்டுகிறது என்று சொல்லி அதன் அரசியல் விளைவுகளை சுட்டிக்காட்டி அவர்களை தடுக்கின்றனர். அந்தணரும் முனிவரும் அதர்வ வேத வேள்விகள் பிற மூன்று வேதங்கள் கூறும் மங்கல வேள்விகளுக்கு எதிரானவை என்கின்றனர். இவ்வுலகில் ஒன்றை நாடுபவர் அவ்வுலகில் ஒன்றை கைவிட்டே அதை செய்கிறார்கள் என்கின்றது தர்மசமுச்சயம். பெரிதொன்றை நாடுவோமென்றால் அதைவிடப் பெரிதொன்றை இழப்போம்” என்று விதுரர் சொன்னார்.

“அரசே, புருஷமேத வேள்வி ஆசுரவேதத்தில் இருந்து அதர்வம் கைக்கொண்டது. விருத்திரன் முதல் ஹிரண்யகசிபு ஈறாக பரம்பொருளால் மட்டுமே வெல்லத்தக்க வீரம் கொண்டிருந்த அசுரப் பேரரசர்களால் இயற்றப்பட்டது. பாரத மண்ணை மும்முறை வென்ற கார்த்தவீரியன் அதை இறுதியாக ஆற்றினார். கருவூலம் ஒழிய பொன்இறைத்து ஊற்றி எழுப்பப்படவேண்டியது அவ்வேள்வி. எனவே இன்று அதை இயற்றும் ஆற்றல் கொண்ட பிறிதொருவர் இந்நிலத்தில் இல்லை” என்றார் கிருசர். “பெருவேள்விகள் பெரிதாகவும் அரிதாகவும் இருப்பதே பெரியோரும் அரியோரும் மட்டுமே அவற்றை செய்யவேண்டும் என்பதற்காகத்தான்.”

முன்னர் அங்கநாட்டு அரசன் கர்ணனின் தலைமையில் அஸ்தினபுரி வடக்கே கின்னர நாடு முதல் தெற்கே வேசர

எல்லை வரை, மேற்கே யவன நாடு முதல் கிழக்கே காமரூபம் வரை படைகொண்டு சென்று கப்பம் ஈட்டி கருவூலத்தைப் பெருக்கி வைத்திருந்தமையால் அமைச்சர்களும் குடியவையும் பிறிதொன்று கூறவில்லை. அத்துடன் அவர்களுக்கு அந்த வேள்வியின் விரிவும் பொருளும் அப்போது புரியவுமில்லை. சகுனி "ஆம், பிறரால் இயலாது என்பதே நாம் இயற்றவேண்டும் என்பதை காட்டுகிறது" என்றார். "புருஷமேத வேள்வி ஒன்றை இயற்றும் ஆற்றல் தங்களுக்கு இருக்கிறதென்பதை அஸ்தினபுரி அறிவிப்பது தொடங்கவிருக்கும் அரசப் பேரவையில் நமக்கு முன்தூக்கம் அளிக்கும்" என்று கணிகர் சொன்னார்.

"புருஷமேதம் அஸ்வமேதத்திற்கான அறைகூவல். ராஜசூயம் அவ்விரு புரவிகளால் இழுத்துவரப்படும் பொற்தேர்" என்று கிருசர் சொன்னார். "புருஷமேதம் நிகழ்த்தியவன் தன்னை எரித்து கனலென்றான காட்டுமரம். அவனை எண்ணி எவரும் அஞ்சுவர்." துரியோதனன் அரியணையில் மீசையை சுட்டுவிரலால் நீவியபடி கூர்விழிகளுடன் அமர்ந்திருந்தான். "இத்தருணத்தில் இவ்வேள்வியை அறிவிப்பதே ஓர் அறைகூவல்தான். எவருக்கேனும் ஷத்ரியக்கூட்டின் பேரவையில் முதன்மை கொண்டு அமர வேண்டுமென்ற விழைவிருந்தால் அந்தக் கனல் துளியை கரியென்றாக்கிவிடும் இது" என்றார் கணிகர். சகுனி "ஆம், புருஷமேத வேள்வியை பாய்வதற்கு முன் சிம்மம் நிலத்திலறைந்து முழங்குவதுடன் ஒப்பிடுகின்றன நூல்கள்" என்றார். "அதைக் கேட்டு யுகங்களாக ஆழ்துயிலில் மூழ்கியிருக்கும் போர்த்தெய்வங்கள் விழித்தெழுகின்றன. அவற்றின் விடாய் தீர்வதற்கான குருதி இப்போரிலுண்டு என்று அவற்றுக்கு நாம் சொல்கிறோம்."

விதுரர் சீற்றத்துடன் "அதர்வ வேதத்தின் வேள்விகள் அனைத்துமே அவற்றுக்குரிய எதிர்விளைவுகளும் கொண்டவை எனப்படுகின்றன. நோய்க்கு நச்சுமருந்து அளிப்பதைப் போன்றவை அவை. ஆறாக் கொடுநோய்க்கு அவை உகந்தவை என்றாலும் நிகர்நோய் ஒன்றை உருவாக்கியே அவை நலம் அளிக்கின்றன" என்றார். "ஆம், இத்தருணத்தில் நாம் நஞ்சு கொள்ள வேண்டியிருக்கிறது. நெடுநாள் வஞ்சம் தீர்க்கக் காத்திருக்கும் அரசநாகம் எந்த இரையையும் கொத்தாமல் தன் நச்சைப் பேணி நீலமணி என்றாக்கி நாவுக்குள் கரந்திருக்கும் என்பார்கள். நாம் அந்நிலையிலிருக்கிறோம்" என்று சகுனி சொன்னார். "நூறாண்டு தவமிருந்தால் அந்நீலமணியின் ஒளியை அது தன் கண்களில் அடையும். பின்னர் நோக்கியே நஞ்சூட்டும். நாம் வேண்டிய தவம் செய்துவிட்டோம்."

கணிகர் "அமைச்சரே, புருஷமேத வேள்வி அரக்கத் தொல்குடியினர் கொண்ட போர் வழக்கம் ஒன்றிலிருந்து எழுந்ததென்று அறிக! பெரும்போருக்கு தங்களை ஒருக்கூட்டிக் கொள்ளும் குடியினர் தங்கள் உளஉறுதியை, மற்றொன்றின்மையை, மீளவிழையாமையை தங்களுக்கும் தங்கள் தெய்வங்களுக்கும் அறிவித்துக்கொள்ளும் பொருட்டு செய்யும் சடங்கொன்று உண்டு. அக்குடித்தலைவன் தன் இளமைந்தர்களில் அழகும் அறிவும் திகைந்த ஒருவனை மூதாதையர் நடுகல் என நின்ற ஆலமரத்தடிக்கு கொண்டு சென்று தன் குலத்தோர் கூடி நிற்க அன்னையரும் சூழ்ந்து நோக்க தலைமயிர் பற்றி சங்கறுத்துக் கொன்று அக்குருதியால் அந்நடுகற்களை நீராட்டுவார். அது புத்ரமேதம் எனப்பட்டது" என்றார்.

“தன் மைந்தர் அனைவரும் களம்பட்டால்கூட போரிலிருந்து பின்னடி வைக்கப்போவதில்லை, எந்நிலையிலும் இழப்பை எண்ணி துயருறப்போவதில்லை, எவருக்காகவும் அஞ்சவும் போவதில்லை என்று அறிவிக்கும் செயல் அது. இங்கு நாம் செய்வதும் அதுவே. புருஷமேதத்தினூடாக நாம் யயாதிக்கு ஹஸ்திக்கு குருவுக்கு பிரதீபருக்கு சந்தனுவுக்கு விசித்திரவீரியருக்கு நம் உறுதிகோளை அறிவிக்கிறோம். நம் குடியினருக்கு இனி கண்ணீரில்லை என்று தெரிவிக்கிறோம். நம்மைச் சூழ்ந்து படைகொள்ளவிருக்கும் ஷத்ரியர்களுக்கு மறுக்கவியலா ஆணைகளை அளிக்கும் ஆற்றலை பெறுகிறோம். அதனூடாக பாரதவர்ஷத்தின் பிறர் அனைவருக்கும் வாழ்வை விழைந்தால் பணிக என்னும் எச்சரிக்கையை விடுக்கிறோம்” என்றார் கணிகர்.

விதுரர் இறைஞ்சும் குரலில் துரியோதனனை நோக்கி “அரசே, மீண்டுமொருமுறை எண்ணுக! இந்த அவை கலையட்டும். ஏழு நாட்கள் பொழுது கொள்வோம். மூன்றுமுறையேனும் அமர்ந்து சொல்சூழ்வோம். உடன்முடிவு எடுப்பதற்கானதல்ல இது” என்றார். “ஏனென்றால் இன்னமும் ஷத்ரியப் பேரவை கூடவில்லை. இன்னமும்கூட நாம் பாண்டவர்களிடம் முற்றிலும் சொல்முறித்துக் கொள்ளவில்லை. அங்கிருந்து அரசகுடித் தூதர் என எவரும் இங்கு வரவில்லை. இளைய யாதவர் வரப்போவதாக ஒற்றர்சொல் வந்துள்ளது. புருஷமேதம் அறிவிக்கப்பட்டு வேள்விநிலைக்கு கால்நாட்டப்பட்டுவிட்டால் அதன்பின் பின்னெட்டு வைக்க இயலாது. விழித்தெழுந்த தெய்வங்களுக்கு விடாய்குளிர குருதியளிக்காவிட்டால் அவை பெருநோயும் பஞ்சமும் பரப்பி அவ்வழைப்பு விடுத்தவரின் நகரையும் குடிகளையும் அழிக்கும். கொடிவழிகள் மேல் அத்தெய்வங்களின் வஞ்சம் நின்றிருக்கும்.”

துரியோதனன் வெற்று விழிகளுடன் மீசையை முறுக்கியபடி அமர்ந்திருந்தான். சகுனி "இப்போதும் நம்முடன் ஷத்ரியர் படைக்கூட்டுக்குத் தயங்குவது ஒன்றினாலேயே. அவர்கள் உங்கள் உடன்குருதியர். எனவே இறுதியில் ஓர் அவையிலமர்ந்து சொல்முடிப்பதில்தான் சென்று நிற்கும் இப்படைப் புறப்பாடு என அவர்கள் ஐயுறுகிறார்கள். அவர்களுடன் சொல்முறுகி நின்றிருக்கும்பொருட்டு சேவல் செட்டைவிரிப்பதுபோல இப்போர்க்குமுறலை அஸ்தினபுரியின் அரசன் நிகழ்த்துகிறான் என்று சூதர்கள் இளிவரல் பாடிக்கொண்டிருக்கிறார்கள். அதில் உண்மையில்லை என்று நானும் சொல்லமாட்டேன்" என்றார். "இவ்வேள்வியை அறிவிப்பது அந்த அனைத்து ஐயங்களையும் பொசுக்கிவிடும் என்று உணர்க!"

"ஒருவேளை நாம் வேண்டிக்கொண்டதற்கேற்ப பாண்டவர்கள் நிலம் கோருவதை கைவிட்டால்? போருக்கு ஒருக்கமல்ல என்று மீண்டும் கானேகினால்? அரசே, புருஷமேதம் நிகழ்ந்தபின் போர் ஒழியமுடியாது" என்றார் விதுரர். "அவ்வாறென்றால் நாம் அசுரரையும் நிஷாதரையும் கிராதரையும் அரக்கரையும் அழிப்போம். பாரதவர்ஷம் முழுக்கவும் ஷத்ரியக்கொடி பறக்கவேண்டுமென்று படைகொண்டெழுவோம். குருதிக்கு குறைவிருக்காது" என்றார் சகுனி. "ஆம், இப்போர் பாண்டவர்களுக்கு எதிரானது அல்ல, இது மெய்ச்சொல் இந்நிலமெங்கும் நின்றிருக்கவேண்டும் என்பதற்கானது" என்றார் கணிகர்.

துரியோதனன் மெல்ல எழுந்தபோதே விதுரர் உளம்தளர்ந்து அமர்ந்துவிட்டார். கைவீசி தாழ்ந்த குரலில் "ஆம், புருஷமேதம் நிகழ்க!" என்று துரியோதனன் ஆணையிட்டான். அவைசொல்லி

எழுந்து அச்சொல்லை மும்முறை எதிரொலிக்க அவையில் அமர்ந்திருந்த வைதிகர்கள் எழுந்து உரத்த குரலில் "ஆம், அவ்வாறே ஆகுக!" என்று சொல்லளித்தனர். அவையினர் அனைவரும் எழுந்து தங்கள் கோல்களைத் தூக்கி "வேள்வி நிறைக! போர்த்தெய்வங்கள் எழுக! அரசர் வெல்க! அஸ்தினபுரி சிறப்புறுக!" என்று முழக்கமிட்டனர்.

# குருதிச்சாரல் - 63

**பகுதி பத்து : பெருங்கொடை – 2**

புருஷமேத வேள்வியில் தன்னாகுதி அளிக்க நூற்றெட்டு அதர்வர் அமர்ந்த வேதக்கூடலில் தெரிவு செய்யப்பட்ட அவிரதன் எனும் இளைய வைதிகன் வேள்விக்காட்டின் வடக்கு எல்லையில் கங்கைக் கரையில் கோரைப்புல்லால் கட்டப்பட்ட சிறுகுடிலில் நோன்பு மேற்கொண்டு தங்கியிருந்தான். மரவுரி அணிந்து, ஒருவேளை உணவுண்டு, காலை, உச்சி, அந்தி என மூவேளை நீர் வணங்கி எரியோம்பி நாற்பத்தொரு நாட்களாக அவன் அங்கு தங்கியிருந்தான். அவன் விழிகள் மானுடர் எவரையும் நோக்கலாகாதென்றும் அவன் செவியிலும் நாவிலும் வேதச்சொல் அன்றி பிறிது திகழக்கூடாதென்றும் நெறியிருந்தமையால் அவனை அந்தணர் எவரும் அணுகவில்லை. முற்றிலும் தனிமையில் அவன் அங்கே இருந்தான்.

முதல்நாள் அவனுக்கு வேதமுதற்சொல் அளித்த ஆசிரியர் அமூர்த்தர் அவனை வலக்கை பற்றி கொண்டுவந்து அக்குடிலில் அமர்த்தினார். அங்கே அவனுக்கு நாற்பத்தொரு

நாட்களுக்குத் தேவையான உணவும் நெய்யும் வேள்விக்குரிய பிறவும் ஒருக்கப்பட்டிருந்தன. அவன் வேள்வித்தீயின் அனலையும் வான்சுடர்களையும் அன்றி பிற வெளிச்சத்தை பார்க்கலாகாதென்பதனால் அக்குடிலில் விளக்குகள் இருக்கவில்லை. அனல்படாத உணவையே அவன் உண்ணவேண்டும் என்பதனால் பழக்கப்படுத்தப்பட்ட பசு நாளும் புதுக் கிழங்குகளும் கனிகளும் தேனும் பாலும் கொண்டு அவன் குடில்முற்றத்திற்கு வந்து மீண்டது. தர்ப்பையிலன்றி அமரவோ இலைகளிலன்றி உணவருந்தவோ அவனுக்கு ஒப்புதலிருக்கவில்லை. எனவே அக்குடிலில் கலங்களோ பொருட்களோ ஏதுமிருக்கவில்லை.

புலரிக்கு முன்னர் இருளில் அவன் கங்கையில் வழிபடச் சென்றபோது அந்தணர் அன்றி பிறர் அவனைப் பார்ப்பது விலக்கப்பட்டிருந்தமையால் தொலைவில் காவல்மாடத்தின்மேல் அமர்த்தப்பட்டிருந்த இளைய வைதிகன் ஒருவன் சங்கொலி எழுப்பினான். அதைக் கேட்டதும் காவலர் அனைவரும் அகன்று நோக்கு எல்லைக்கு அப்பால் சென்றனர். கங்கைக்கரை மணலில் உடல்கழுவி நீராடி அவன் குடில்முகப்புக்கு மீண்டான். எரியெழுப்பி அவியளித்து அம்மிச்சத்தை உணவெனக்கொண்டான். மீண்டும் எழுகதிர் வணங்க அவன் கங்கைக்குச் சென்றபோது சங்கொலி அவன் வருகையை அறிவித்தது. உச்சியிலும் அந்தியிலும் பொழுதிணைவு வணங்கவும் அந்தி நீராடவும் மீண்டும் அவன் கங்கைக்கு சென்றான். அந்தச் சங்கொலியால் மட்டுமே இருப்பு கொண்டவன் என்றானான்.

பகல் முழுக்க அக்குடிலுக்குள் அவன் வேதம் முற்றோதியபடி தர்ப்பை விரிக்கப்பட்ட மணைமேல் அமர்ந்திருந்தான். இரவு

எழுந்தபின் வந்து குடிலுக்கு முன்னால் வலமுற்றத்தில் நின்றிருந்த மகிழ மரத்தடியில் அமர்ந்து விண்மீன்கள் வானில் ஒவ்வொன்றாக ஊறி துளிர்த்து ஒளிகொள்வதை நோக்கிக்கொண்டிருந்தான். வேதமன்றி ஒரு சொல்லும் நாவிலும் நெஞ்சிலும் எழலாகாதென்று தனக்குத்தானே ஆணையிட்டுக்கொண்டிருந்தான். அந்நெறிகளை ஆசிரியர் நாவிலிருந்து கேட்டுக்கொண்டபோது அது எவ்வண்ணம் இயல்வதென்றே அவன் அகம் வியந்தது. “நீ எண்ணுவது புரிகிறது. ஆனால் வேதம் கங்கை. நடு ஒழுக்குக்குச் செல்வது மட்டுமே நீ செய்யவேண்டியது” என்றார் ஆசிரியர்.

அந்தணர் நிலையில் இருந்து கிளம்பும் தருணத்தில் அவன் அகம் கொந்தளித்தெழுந்தது. விழிநீர் உகுக்கலாகாது என்று அவன் தன் ஒவ்வொரு உளச்சொல்லையும் இறுக்கிக்கொண்டான். அவனுடன் இருந்த பிற வைதிகர்கள் அங்கே நிகழ்வதை சரியாக உணராதவர்கள்போல் முகம்காட்டி வெவ்வேறு திசைகளில் திரும்பி நின்றிருந்தார்கள். சிலர் மேலாடை நுனியை கைகளால் பற்றி முறுக்கிக்கொண்டிருந்தனர். சிலர் விரல்களை நெருடினர். அவன் குனிந்து நடந்தபோது கால்விரல்கள் அனைத்தும் மண்ணில் பதிந்து அசைந்துகொண்டிருப்பதை கண்டான். அவன் இடக்கால் பதறிக்கொண்டிருந்தது. இடகாலவுணர்வு கலங்கி பெருஞ்சுழி ஒன்றின் மையத்தில் நிற்பதுபோல் உணர்ந்தான்.

ஆசிரியர் அவனிடம் “இறுதியாக இவ்வினாவை கேட்கவேண்டும் என்று நெறியுள்ளது, உத்தமரே. தாங்கள் விரும்பினால் இப்போதும் பின்னடி வைக்கலாம். மூன்று காலடி பின்னால் சென்றால் அனைத்தையும் மறுத்தவராவீர். அதனால் எவ்வகையிலும் பழியோ ஏளனமோ உங்களுக்குச்

சேராது” என்றார். அவன் அவர் முகத்தை நோக்கி புன்னகையுடன் “இதுவே என முடிவெடுத்துவிட்டேன், ஆசிரியரே” என்றான். அவனுள் பிறிதொருவன் இல்லை, இது நான் எண்ணியதல்ல, இது வேறு என பதறினான். அது நாப்பழக்கமென எழுந்த சொல். நாவை அதற்கு பழக்கியிருக்கிறார்கள். வேதக் கல்வி என்பது நா கொள்ளும் பழக்கமன்றி வேறல்ல. என் நெஞ்சு இதோ எழுகிறது. நாவை அது எட்டிப் பற்றிக்கொள்கிறது.

“நன்று, வேதத்தின் தெய்வங்கள் துணைநிற்கட்டும்” என அவர் அவனை வாழ்த்தினார். மூத்தவர்களும் ஆசிரியர்களுமாகிய ஏழு வைதிகர்களை அவன் கால்தொட்டு சென்னிசூடி வணங்கினான். அவன் தலையில் மஞ்சளரியிட்டு அவர்கள் வாழ்த்தினர். உள்ளிருந்து அவன் சாலைத்துணைவரும் தோழர்களுமான இளவைதிகர்கள் மரவுரி அணிந்தவர்களாக தலைகுனிந்து வந்து முற்றத்தின் எல்லையில் நிரந்து நின்றனர்.

குடில்முற்றத்தில் பசுஞ்சாணம் மெழுகப்பட்டு சிறிய எரிகுளம் ஒருக்கப்பட்டிருந்தது. அதன் அருகே கிழக்குநோக்கி போடப்பட்ட தர்ப்பைப் புல் இருக்கையில் அவன் அமர்ந்தான். அவர் அவனுக்கு எதிரே அமர்ந்துகொண்டார். அக்குருநிலையின் ஏழு முதிய வைதிகர் வந்து அவருக்குப் பின்னால் அமர்ந்தனர். அவனுக்கு புல்லாழி அணிவித்த ஆசிரியர் “உத்தமரே, இங்கிருந்து நீங்கள் எழுகையில் அனைத்தும் அடைந்து அடைந்தவற்றிலிருந்து விடுபட்டவராக இருக்கவேண்டும். ஒவ்வொரு வேதநுண்சொல்லும் உங்கள் ஒரு தளையை அறுப்பதாகுக!” என்றார். இளவைதிகர் கொண்டுவந்த எரியை விறகில் பொருத்தி நெய்யூற்றி எழுப்பினார்.

அதர்வம் வகுத்தளித்த ஒவ்வொரு நுண்சொல்லாக அவர் சொல்ல அவன் அவற்றை பதினெட்டுமுறை சொல்லி மரக்கரண்டியால் எரியில் நெய்யூற்றினான். அரவுப்பழி அகற்றும் சுபர்ணஸ்த்வா, அனைத்து விழைவுகளையும் அளிக்கும் இந்திரேணதத்தம், கொடுங்கனவுகள் நீக்கும் யமஸ்யலோகால், பெண்ணின்பம் பெருக்கும் காமோஜேவாஜி, எதிரிகளை அழிக்கும் சதபகன், யேன பேகதிசம் என்னும் மணமங்கலம் அருளும் சொல், மைந்தரை அருளும் அயந்தேயோனிஹ, செல்வழி சிறக்கும் பிருஹஸ்பதிர்ன பாதுபரி, அறிவுத்திறன் பெருக்கும் அக்னேகோபின்னம், நிலைபெயராமையை அளிக்கும் த்ருவம்துருவேணம், ஆணவத்தை அழிக்கும் அகந்தேபக்னம், பற்றறுக்கும் யே மே பாசா, இறவாமையை அளிக்கும் முஞ்சாவித்வம்.

ஒவ்வொரு சொல்லினூடாகவும் அவன் வாழ்ந்து நிறைந்து கடந்து சென்றான். இறுதி வேதச்சொல் ஓதி வணங்கி எழுந்து அவிமிச்சத்தைப் பகிர்ந்து அங்கு நின்றிருந்த வைதிகர் அனைவருக்கும் அளித்தான். உள்ளம் ஒரு சொல் எஞ்சாமல் ஓய்ந்திருந்தது. அவன் முகம் தெய்வங்களுக்குரிய நிறைவொளி கொண்டிருந்தது. ஆசிரியர் அவன் கையில் மலர்த்தாலத்தை அளித்து அவன் கால்களில் தலைவைத்துப் பணிந்து வணங்கினார். அவன் மூன்று மலர்களை அவர் தலைமேலிட்டு “மெய்மை அடைக!” என அவரை வாழ்த்தினான். முதிய வைதிகர்கள் நிரையாக வந்து அவன் காலடியை வணங்கினர். அவன் அவர்களை வாழ்த்தி நற்சொல்லளித்தான். அதன் பின்னர் கங்கைநீர் தெளித்து தான் செல்லும் வழியை தூய்மை செய்தபின் கையிலிருந்த மலர்களை திரும்பி நோக்காமல் தலைக்குமேல் தூக்கி பின்னால் வீசிவிட்டு அவன் நடந்தான்.

குடிலை அடைந்தபோது அவன் சிறுகுழவிபோல காணும் ஒவ்வொன்றையும் கூர்ந்து நோக்கி அதன் பெயரை சொல்லிக்கொண்டிருந்தான். ஒவ்வொரு மரத்தையும் செடியையும் பறவையையும் சிற்றுயிரையும் சொல்லாக்கினான். பாறைகளை, கூழாங்கற்களை, செம்மண் கிளறிப் பரப்பப்பட்ட பாதையை, காலடித்தடங்களை, அப்பால் தெரிந்த குடில்கூரைகளை, காவல்மாடங்களில் எழுந்து நின்ற வீரர்களின் மின்னும் வேல்முனைகளை, நீண்டு சரிந்திருந்த நிழல்களை, நீரோடைத்தடங்களை, கால்பட்டுச் சரிந்த கற்களின் புதைவுத்தடங்களை, உதிர்ந்த சருகுகளின் பொன்னிறத்தை, இலைத்தளிர்களில் ஒளிவிட்ட பசுமையை. குடிலருகே வந்துசேர்ந்தபோது அவன் உள்ளம் மீண்டும் சொற்களால் செறிந்திருந்தது.

அத்தனிமையை அங்கு வந்தணைந்த முதற்கணமே உணர்ந்தான், குளிர்ந்த கரிய ஆழ்சுனையென. அதன் விளிம்பில் தயங்கி நின்றிருந்தான். பின்னர் திரும்பிநோக்காமல் மெல்ல உள்ளே நுழைந்தான். விடைபெறாமல் ஆசிரியர் திரும்பிச்சென்றார். அந்தச் சிறுகுடிலின் சாணிமெழுகப்பட்ட திண்ணையில் அமர்ந்தபோது இரும்புக்குவை என உள்ளம் சொற்களால் எடைகொண்டிருந்தது. அதை எங்கே வைப்பதென்று அறியாதவன்போல அவன் அதற்குள் சுற்றிவந்தான். நீள்மூச்சுகளாக விட்டு தன்னை ஆற்றிக்கொள்ள முயன்றான். ஒவ்வொரு சொல்லும் நுரைத்து நுரைத்துப் பெருகியது. நெஞ்சிலறைந்தபடி சூழ்ந்திருந்த காட்டின் அமைதி நோக்கி கூச்சலிடவேண்டும் என்று தோன்றியது.

ஏதோ ஒரு கணத்தில் அனைத்தையும் அறுத்துக்கொண்டு காட்டுக்குள் ஓடிவிடுவான் என அவனே உணர்ந்தபோது

உள்ளே சென்று கண்களை மூடிக்கொண்டு அதர்வவேதத்தை சொல்லத் தொடங்கினான். நாப்பழக்கமாக வேதம் ஓடிக்கொண்டிருக்க சிறுவழியில் முண்டியடிக்கும் வெள்ளாட்டுச் செச்சைபோல சொற்கள் வேறெங்கோ பெருகிச் சென்றுகொண்டிருந்தன. ஏமாற்றமும் சிறுமையுமாக எழுந்து வெளியே ஓடி வெட்டவெளியில் நின்று கண்ணீர் மல்கினான். உள்ளம் விண்முகிலென நீரென நெருப்பென காற்றென உருவற்றது. அதை எவர் ஆளமுடியும்? சொல்லை மேலும் சொல்லால் மட்டுமே அடக்கமுடியும். சொல்லை வெல்லமுயல்வதே சொல்பெருக்குவதுதான். முடியாது என உணர்ந்தபோது விடுதலை உணர்வு ஏற்பட்டது. இந்நோன்பை வகுத்தவர்கள் அறியாததா இது? நாவில் வேதம் திகழ்வதொன்றே நான் செய்யக்கூடுவது. உள்ளத்தை ஆளும் தெய்வங்களுக்குமேல் எனக்கு ஆணையில்லை.

அதன்பின் கொந்தளிப்பு அடங்கி மீண்டும் வந்தமர்ந்து வேதமோதத் தொடங்கினான். இரண்டு நாட்களுக்குள் இரு பெருக்குகளும் ஒன்றென்றாயின. வேதத்தினூடாக மேலெழுந்து மறையும் அடித்தளமென்று இருந்தது சித்தப்பெருக்கு. பின்னர் எப்போதோ உணர்ந்தான், மிக அரிதாகவே சித்தம் சொல்வடிவு கொள்வதை. அது செயலென்றாகி உடலில் பரவிவிட்டிருந்தது. புலரியில் எழுந்தான். கங்கையாடினான். அரணிகடைந்து அனல்கறந்தெடுத்து எரிகுளம் மூட்டி அவியளித்தான். பொழுதிணைவு வணக்கங்களை செய்தான். இருளில் விண்மீன் நோக்கி அமர்ந்திருந்தான். அவன் ஆழம் வேதமாக இருந்தது.

அவன் உத்கல நாட்டைச் சேர்ந்த பெருவைதிகரான திரிபுவனரின் எஞ்சிய எட்டு மைந்தரில் மூத்தவன். வேதம்

பயிலும்பொருட்டு அவனை நகர்கள்தோறும் பயணம் செய்து வேள்விகள் இயற்றும் அதர்வ வைதிகர்களான ஹிரண்யகர்ப்பம் என்னும் குருமரபினரிடம் அவன் தந்தை ஒப்படைத்தார். அங்கு அவன் தன் பன்னிரு அகவையில் தொடங்கி ஏழு ஆண்டுகள் அதர்வவேதம் பயின்றான். தந்தையிடமிருந்து மூவேதங்களையும் முதலிறுதி, இறுதிமுதல், சொல்திருப்பல், சொல்லெண்ணுதல், சொல்மாற்றுதல் என்னும் தொல்முறைகளில் முன்னரே கற்றுத் தேர்ந்திருந்தான். அவனுடைய தந்தையும், மரபினரும் ரிக்வேதிகள். தந்தையின் ஆணைப்படி அவன் அதர்வ வைதிகனானான்.

எண்ணியிரா கணத்தில் உள்ளத்திலெழுந்த தந்தையின் நினைவால் அவன் திடுக்கிட்டான். மரத்தடியிலிருந்து எழுந்துநின்று செவியில் கைவைத்து கன்றுக்காது முத்திரைகாட்டி வேதச்சொல் தொடுக்கத் தொடங்கினான். பெருகிவிழும் மழை புழுதியை என அவனுள்ளிருந்து சொற்களைக் கழுவி அகற்றி தான் பரவி நின்றுகொண்டது வேதம். விண்மீன்கள் நிலைமாறியிருப்பதை உணர்ந்தபோதுதான் தன்னுணர்வுகொண்டான். காட்டிலிருந்து குளிரலைகள் எழுந்துகொண்டிருந்தன. அவற்றில் ஏறி அணுகிய விலங்குகளின் ஓசைகளும் பறவைமுழக்கமும் வேற்றுச்சுதி கொண்டிருந்தன. அவன் எழுந்து குடிலுக்குள் சென்று தர்ப்பைப் புல் பாயை எடுத்து விரித்தான்.

பாயின் அடியிலிருந்து சிறிய நாகக்குழவி ஒன்று நெளிந்தோடியது. சுவர் மடிப்பில் குழம்பி வால் தவிக்க அங்குமிங்கும் பாய்ந்து ஒரு மூங்கில் விரிசலில் நுழைய முயன்று முடியாமல் தலை மீண்டு அப்பால் விரைந்து வழியைக் கண்டுகொண்டு வெளியேறியது. அது செல்வதை

சற்றுநேரம் நோக்கியிருந்தபின் அவன் பாயை விரித்து முருக்குத்தடித் தலையணையை வைத்துக்கொண்டு உடல்நீட்டி படுத்துக்கொண்டான். மீண்டும் வேதச்சொல் இயல்பாக நெஞ்சிலெழுந்து ஓடத் தொடங்கியது. அச்சொற்கள் தயங்குவதை, ஒன்றுடன் ஒன்று முட்டிக்கொள்வதை உணர்ந்தான். தேன்சிட்டென ஒரு சொல் மட்டும் நின்று சிறகடித்துக்கொண்டிருக்க துயிலில் ஆழ்ந்தான்.

துயிலின் ஆழத்தில் எங்கோ அவன் தன் அன்னையை கண்டான். அவளை கனவில் கண்டு பல ஆண்டுகளாகின்றன என்பதை அக்கனவுக்குள்ளேயே அவன் வியந்துகொண்டான். அவர்களின் மரப்பட்டை வேய்ந்த ஆளுயரக் குடிலுக்கு தென்கிழக்கு மூலையில் தனியாக ஈச்ச ஓலைக் கூரையிட்ட சிறுகுடில் அடுமனைக்குள் கால்மடித்து அமர்ந்து களிமண் அடுப்பிலிருந்து அனலில் வெந்த அப்பங்களை சிறு கம்பியால் குத்தி எடுத்துச் சுழற்றி அருகிலிருந்த சிறிய மூங்கில் கூடையில் போட்டுக்கொண்டிருந்தாள். சற்றே கரிந்து, புதுமணம் எழுப்பிய அப்பங்கள். வெளியே கூரைநுனிகளிலிருந்து மழை சொட்டிக்கொண்டிருந்தது. அப்பால் நின்றிருந்த அசோகமரம் கிளைவிரித்துச் சுழன்றாடியது. நீர்த்துளிகள் அடுமனைக்குள் தெறித்து காற்றில் தூசிபோல் பறந்தன.

அவன் அன்னையிடம் ஏதோ பேசிக்கொண்டிருப்பதை அவனே அவ்வறையின் வேறொரு மூலையிலிருந்து பார்த்துக்கொண்டிருந்தான். அவன் சொற்களை புன்னகையுடன் கேட்டு அன்னை தலையசைத்தாள். காதோரம் அவள் தலைமுடி பொன்னொளி கொண்டிருந்தது. காலை வெளிச்சமா என அவன் திரும்பி நோக்கினான். அப்போதுதான் கதிர் எழுந்துகொண்டிருந்தது. அடுமனையை ஒட்டிய புழக்கடை

முற்றத்தில் சிறுகுருவிகள் எழுந்தமைந்து எதையோ கொத்தியபடி சிறுமொழி பேசிக்கொண்டிருந்தன. அவற்றின் நிழல் இலையசைவுபோல அப்பாலிருந்த மண்சுவரில் தெரிந்தது. அங்கிருந்த மண்தொட்டி நீரில் விழுந்த ஒளியின் அலைவு அடுமனைக்குள் கூரைச்சரிவில் ஒளியென ததும்பியாடியது.

அடுமனையின் சிறுசாளரத்தினூடாக உள்ளே மூன்று சட்டங்களாக இறங்கிய மஞ்சள் வெயிலில் நீராவியும் புகையும் கலந்து தழல்போலாடின. அன்னை அவனிடம் என்ன கேட்டுக்கொண்டிருக்கிறாள் என அவ்வறைக்குள் நின்றிருந்த அவன் செவிகூர்ந்து முன்னால் சென்றான். மேலும் மேலுமென அருகே சென்று தடுக்கியவன்போல நின்று விழித்துக்கொண்டான். கனவை எண்ணியபடி படுத்திருந்தபோது அன்னை முகம் மிக அருகிலெனத் தெரிந்தது. வாடிய பாளை என சுருக்கங்கள் அடர்ந்த ஒட்டிய முகம். கிண்டியின்மேல் வெண்துகில் விழுந்ததுபோல் அவள் முகத்தோலுக்குள் இருந்து எலும்புகள் புடைத்திருப்பதாக அவன் எண்ணுவதுண்டு.

அன்னையின் முகம் விழுந்து மட்கும் பனம்பழம் ஓடென்றானதுபோல் மெலிந்து மெலிந்து தசையை இழந்து உருவானது. கண்கள் குழிக்குள் இறங்கி வாயைச் சுற்றி தசை வறண்டதனால் பற்கூட்டு மேலெழுந்து, கழுத்து வளையங்களை அடுக்கியதுபோலாகி இருந்தது. வற்றிய ஈறுகளிலிருந்து நீண்டிருந்தன பற்கள். ஆயினும் அவள் புன்னகை அழகானது. அது அவனுக்காகக் கனிவதனால் மட்டும் அல்ல. அவள் இளமையில் என்றோ அழகியாக இருந்திருக்கக்கூடும். புன்னகை மட்டும் அவ்வழகின் பகுதியாக எஞ்சக்கூடும்.

உடைந்திருந்தாலும் களிம்பிருந்தாலும் விளக்கின் சுடர் ஒளிகுன்றுவதில்லை.

அவன் இளமையில் கவிஞனாக விழைந்தான். கவிதை வரிகளை பெரும் பித்துடன் உளப்பதிவு செய்தான். வேதநுண்சொற்களுக்கு நிகராக அவற்றை சொல்லிக்கொண்டிருந்தான். ஒருநாள் தன் பெருங்காவியம் மும்முடி கொண்டமர்ந்த பேரரசர் ஒருவரின் கவியவையில் அரங்கேறுவதைப் பற்றி பகற்கனவுகள் கண்டான். காலங்களுக்கு அப்பால் தென்னகத்திலும் வடகிழக்கிலும் அறியா நிலங்களில் அவன் அறியாத மைந்தர் அச்சொற்களைப் பயில்வதை எங்கிருந்தோ நோக்கிக்கொண்டிருந்தான். அவனுடைய அவ்விழைவை அன்னை மட்டுமே அறிவாள். ஆம், அடுமனையில் அன்னையின் அருகே அமர்ந்து அவன் தன் கவிதையைப்பற்றித்தான் பேசிக்கொண்டிருந்தான்.

அவன் இருளுக்குள் உளம் மயங்கி விழிநீர் உகுத்தான். அங்கே எவரோ நின்று தன்னை கண்காணிப்பதாக உணர்ந்தவன்போல பெருமூச்சுகள் அடக்கி ஓசை தவிர்த்தான். நெஞ்சு எடைகொண்டு விம்மலென வெடித்தெழுந்துவிடும்போல் தோன்றியது. முகத்தை கைகளால் அழுத்தி பிடித்துக்கொண்டான். மீண்டும் அக்கனவில் புகுந்துகொள்ள விரும்புபவன்போல குப்புறப்படுத்து மண்ணில் உடலை புதைத்துக்கொண்டான். அன்னையின் முகத்தை நினைவுகூர்ந்தான். ஆனால் அது நீரில் மூழ்குவதுபோல அகன்று கரைந்து மறைந்தது. இறுதியொளியாக அவள் புன்னகை மட்டுமே விழிக்குள் எஞ்சியது.

உத்கலத்தின் அவனது சிற்றூரில் அந்தணருக்கு நாளும் அன்னமிடும் அளவுக்கு வேளிரும் ஆயரும் வணிகரும்

செல்வந்தர்கள் அல்ல. எட்டுமாதகாலம் அயலூர்களில் தர்ப்பையுடன் அலைந்து சடங்குகள் செய்து தானியங்களையும் வெள்ளி நாணயங்களையும் ஈட்டியபடி திரும்பி வரும் தந்தை எஞ்சிய நான்கு மாதம் ஊரில் அதைக்கொண்டு குடிபுரந்தாக வேண்டும். உத்கலத்தின் மழைக்காலம் வீச்சு மிக்கது. கீழைக்கடலில் இருந்து பல்லாயிரம் சவுக்குகள் என மழை மண்ணை அறையும். புயலெழுந்து மரங்களைப் பிடுங்கி வீசும். இல்லக்கூரைகள் சருகுகள் என பறந்தகலும். நீரில் நின்ற கலங்களைத் தூக்கி கரைமேல் வீசியதுமுண்டு. மகாநதி பேருருக்கொண்டு மறுகரை காணாததாகும். அதன் கைகள் நாளுமென பெருகி நகர்களை, சிற்றூர்களை தழுவி உள்ளிழுத்துக்கொள்ளும்.

மக்கள் அந்நதியை மூதன்னை என நன்கறிந்திருந்தனர். எப்போதும் உடனிருக்கும் எடையில்லாச் சிறுபடகுகளிலும் பரிசல்களிலும் ஏறி ஊர்விட்டு அகன்று குன்றுகளுக்குமேல் ஏறிக்கொள்வார்கள். அனைத்து வீடுகளையும் தெருக்களையும் வயல்களையும் செந்நிற வண்டலால் மூடியபடி நதி நிலைமீண்ட பின்னர் அவர்கள் திரும்பிவருவார்கள். மீண்டும் இல்லங்கள் விளக்கேறி சுவர்கள் வெண்மைமீண்டு வயல்கள் பசுமைகொள்ள ஒரு மாதமாகும். அப்போதும் உத்கலம் பல்லாயிரம் வெறிகொண்ட ஓடைகளால் பல துண்டுகளாக சிதறடிக்கப்பட்டிருக்கும். “வேதச்சொற்களை மழையோசை முற்றாக மறைத்துவிடும். பசியென்னும் அனலை அக்குளிர்நீர் மூண்டெழச் செய்யும்” என உத்கலத்து அந்தணர் சொல்வதுண்டு.

எட்டுமாத பயணத்தில் மூன்றுமுறை தந்தை திரும்பிவந்து பொருள் அளித்துச் செல்வார். அப்பொழுதுகளில் அவன்

குடிலில் உணவு மணம் எப்போதுமிருக்கும். எண்ணை ஏனத்தை அடுப்பிலேற்றி அரிசி முறுக்கும் சீடையும் செய்து அளிப்பாள் அன்னை. எண்ணை கொதிப்பதன் இனிய மணம், நறுநெய்யின் சுவை அப்போதுதான் மூக்கிலும் நாவிலும் தொடும். ஆண்டெல்லாம் இனிய நினைவென அது நீடிக்கும். அவன் தன் இளையோரின் மகிழ்ந்த முகங்களையும் சிரிக்கும் வெண்பற்களையும் களிக்கூச்சல்களையும் எப்போதும் கேட்டுக்கொண்டிருப்பான். அவர்களை ஓயாது பூசலிட்டு அழுது சிணுங்கும் முகங்களாகவே ஆண்டெல்லாம் கண்டிருப்பான். அவர்களில் துயரென இருள்வதும் மகிழ்வென ஒளிர்வதும் அன்னம்தான், இலைப்பசுமையும் மலர்வண்ணமும் நீரே என்பதைப்போல என எண்ணிக்கொள்வான்.

மழைக்காலத் தொடக்கத்தில் முடிந்தவரை தானியங்களையும் நாணயங்களையும் சேர்த்துக்கொண்டு தந்தை இல்லம் மீண்டதுமே அதை கொடை பெற்றுக்கொள்ள அந்தணக்குடியில் எழுந்த வறியோரும் முதியோரும் வந்துகொண்டே இருப்பார்கள். ஆறு மாதம்கூட நிலைகொள்ளக்கூடும் என்று நம்பிக்கையளித்த அனைத்தும் ஒரு மாதத்திலேயே தீர்ந்துவிட மழைக்காலம் இருண்டு குளிர்ந்து இடியோசை எழுப்பி மின்னல்சீறி எழுந்தணையும். பின்னர் நிலைக்காத வான்பொழிவு. எங்கும் ஈரம். கால்களிலும் கைகளிலும் ஈரப்புண். எப்போதும் உடனிருக்கும் பசி. பல நாட்களுக்கு ஒருமுறையே அடுப்பில் அனலெழும். ஆனால் ஒருமுறைகூட குடில்முன் பாளைகளைப் பின்னி கூரையிட்டு இருவர் மட்டுமே அமரும் அளவுக்கு தந்தை அமைத்திருக்கும் வேள்விச்சாலையின் எரிகுளத்தில் அனலெழாமல் இருந்ததில்லை. தந்தை எரியோம்புவதை அன்னை குடிலின் சிறுதிண்ணையில் மெலிந்த கைகளைக் கோத்தபடி உணர்வற்ற

விழிகளுடன் பார்த்திருப்பாள். அவன் தந்தைக்கு வேள்வியில் உதவுவான். அவன் இளையோர் அப்பால் கைகூப்பி நின்றிருப்பார்கள்.

அவனும் அன்னையும் குறுங்காடுகளில் அலைந்து சேர்த்துவரும் மலைக்கிழங்குகளும், காய்களும் மட்டுமே அவர்களுக்கு உணவு. புளிப்பிலை சேர்த்து வேகவைத்தோ, மும்முறை நீர் வடித்தோ அவற்றின் கசப்பையும் நஞ்சையும் நீக்குவதை அன்னை மலைக்குறவப் பெண்களிடம் கேட்டு தெரிந்துகொண்டிருந்தாள். ஆயினும் தொடர்ந்து மலைப்பொருட்களை உண்ணும்போது குடல் வலுவிழந்துவிடும். ஒவ்வொரு மழைக்காலத்திலும் இளையோர்களில் ஒருவன் வயிறு ஒழுகிவழிய உயிர் துறப்பதுண்டு. அவன் அன்னை ஈன்ற மைந்தர் ஆணும்பெண்ணுமாக பதினாறு. எஞ்சியவர்கள் எண்மர்.

அவனுக்கு மூன்று அகவை இருக்கையில் அவனைவிட ஓராண்டு இளையவனாகிய சம்புகன் இறந்தபோது “அன்னையே, அவனுக்கு என்ன நோய்?” என்று அவன் கேட்டான். திண்ணையில் கால் மடித்தமர்ந்து பொழிந்துகொண்டிருந்த மழையை வெறுமனே நோக்கிக்கொண்டிருந்த அன்னை அவனை திரும்பிநோக்கி “அது ஒரு கொடிய நோய். இப்புவி தோன்றிய காலம் முதலே இருந்துகொண்டிருக்கிறது” என்றாள். “அதற்கு என்ன மருந்து?” என்று அவன் கேட்டான். “அன்னம்” என்று அவள் சொன்னாள். அவள் சொன்னது முற்றிலும் புரியவில்லை என்றாலும் அவன் மெய்ப்புகொண்டு அவள் உடலுடன் தன் உடலை சேர்த்துக்கொண்டான். அவள் தன் சுள்ளி போன்ற கையை

அவன் தலைமேல் வைத்து குடுமியைச் சுழற்றி தலையை வருடியபடி அமர்ந்திருந்தாள்.

அன்னையின் முலையொடிய நெஞ்சுக்கு இருபக்கமும் விலாவெலும்புகள் மரச்சீப்புபோல எழுந்திருக்கும். அவள் நெஞ்சில் தலை சேர்க்கையில் மூச்சோடும் ஓசையும் நெஞ்சு துடிக்கும் ஓசையும் செவிக்கு கேட்கும். என்றாவது ஒருநாள் அன்னையைப்பற்றி ஒரு காவியத்தை எழுதவேண்டும் என அவன் எண்ணிக்கொள்வான். மாமுனிவர்களைப் பற்றியும், பெருவீரர்களைப் பற்றியும் எழுதுகிறார்கள். வேதத் தவம் செய்யும் அந்தணர் பற்றி எழுதுகிறார்கள். அன்னையரைப் பற்றி ஏதேனும் பெருங்காவியம் உள்ளதா? கவிதைகளைக்கூட அவன் பயின்றதில்லை. ஒருமுறை அதை உசாவியபோது தந்தை "எல்லா விதைகளும் பிளந்து மட்கியழியவேண்டும் என்பது மண்ணின் நெறி" என்றுமட்டும் சொன்னார்.

அவன் அன்னை தாம்ரலிப்தியில் வாழ்ந்த பெருவைதிகரான சித்ரகரின் நான்காவது மகள். சித்ரகர் வணிகக் குழுக்களுக்கு வழிச்செலவு தொடங்கும்போது வழிமங்கலம் ஏகும் அதர்வவேத வேள்விகளை செய்தளிப்பவர். மழைக்காலத்தில் அவர்களின் பண்டங்கள் தேவர்களால் காக்கப்படுவதற்கான வேள்விகளை செய்வார். அவர் மடியில் பொன் விழாத நாளே இல்லை. அவள் இல்லத்தின் முன் எப்போதும் செம்பட்டுத் திரையுடன் மூன்று பல்லக்குகள் நின்றிருக்கும். தந்தைக்குரியது வெள்ளிப்பூண் இட்டது. மகளிருக்குரியது பித்தளைப்பூணிடப்பட்டது. அன்னை மூன்று தோழியருடன் அன்றி எங்கும் சென்றதில்லை. பட்டன்றி ஆடை அணிந்ததில்லை. ஏழு கல் குழையும் செம்மணி மூக்குத்தியும் பொற்செதுக்கு வளையல்களும் அணிந்திருந்தாள்.

சித்ரகர் வணிகர்களின் கோரிக்கைக்கு ஏற்ப வேள்விகளை நீட்டியும் குறுக்கியும் இயற்றும் வழக்கம் கொண்டிருந்தார். அவர்கள் பொன்னளித்தமையால் எதிரிகளை அழிக்கும் சதபதக வேள்விகளையும் பலமுறை செய்திருந்தார். வயிற்றுக்கடுப்பு நோய் வந்து படுக்கையில் விழுந்தபோது அது தன் வேதப் பிழையால்தான் என்பதில் அவருக்கு ஐயமே இருக்கவில்லை. நாளுமென வயிறு வீங்கி வந்தது. உணவு கொள்ளுதல் தடைபட்டது. நிமித்திகர் வந்து நோக்கி "ஆம் அந்தணரே, வேதப்பழியால் விளைந்தது இது. மகோதரம் முற்பிறவியிலோ இப்பிறவியிலோ அன்னம் முடக்கியவர், அன்னைப்பழி இயற்றியவர், பெண்சொல் கொண்டவர் பெறுவது என்பர். இப்பிறவியில் மட்டுமல்ல செல்வழிக்கும் தொடர்ந்து வரும். கொடிவழியில் நின்றிருக்கும்" என்றார்.

"என்ன செய்வது?" என்று கண்ணீருடன் சித்ரகர் கேட்டார். "கொடையும் நோன்பும் பிறருக்குரியவை. அந்தணருக்குரிய ஆற்றுநெறிகள் என்ன என்று அறியோம். அதை உசாவி இயற்றுக!" என்றார் நிமித்திகர். அந்தணர் எழுவர் கூடி அமர்ந்து நூல்நோக்கி மறுநெறி சொன்னார்கள். அதன்படி சித்ரகர் தன் செல்வத்தில் பாதியை அதர்வவேத அந்தணர்களுக்குப் பகிர்ந்தளித்தார். தன் நான்கு மகள்களில் இருவரை அந்தணருக்கு மகள்கொடையாக கையளித்தார். பதினாறு அகவையில் அவன் அன்னை வாயிலில் வந்து நின்று கையிரந்த அவன் தந்தைக்கு சித்ரகரால் நீரூற்றி கொடையளிக்கப்பட்டாள். பதினெட்டு பொன்பணத்துடன் அவன் அன்னையையும் அழைத்தபடி தந்தை உத்கலத்தில் மகாநதிக்கரையில் மாவகம் என்னும் தன் சிற்றூரில் அமைந்த சிறுகுடிலுக்கு வந்தார்.

கரிச்சான் புலரிக்குரல் எழுப்பக்கேட்டு அவன் எழுந்தான். கைகூப்பி வேதச்சொல் எழுப்பி நெஞ்சில் நிறுத்தியபடி வெளியே திரண்டிருந்த கருக்கிருட்டுக்குள் இறங்கினான்.

# குருதிச்சாரல் - 64

**பகுதி பத்து : பெருங்கொடை – 3**

ஹிரண்யகர்ப்பம் என்னும் அதர்வவேதக் குழுவில் அவனை சேர்க்கலாம் என்று தந்தை முடிவெடுத்தபோது அன்னை அதற்கு ஒப்பமாட்டாள் என்னும் ஐயம் அவருக்கு இருந்தது. பல நாட்களாகவே அவரைத் தேடி அக்குருநிலையிலிருந்து வைதிகர்கள் வந்துகொண்டிருந்தனர். அவர்கள் அங்கிரீசரின் சொற்குலம். அதர்வம் அவர்களுக்கு பழிசேர்ப்பது. “மைந்தரை அதர்வத்திற்கு அனுப்புவது எத்தனை துயரளிப்பதென்று அறிவோம். ஆனால் அவன் அங்கிரீச குலத்தவன் என்பதே அவனுக்குக் காப்பென்றுணர்க! ஒரு பிழையும் நிகழாது இயற்றப்படும் அதர்வம் பிற மூன்று வேதங்களைவிட பெரும்பயன் அளிப்பது” என்றார் அவனை அழைக்கவந்த உக்ரர் என்னும் வைதிகர்.

அவர் அருகே இருந்த சுப்ரபர் “எவர் அறிவார்? அவனை ஒரு மாமுனிவனென தவத்தின் உச்சிமுனையில் அது அமர்த்தலாம். மண்ணிலுள்ள அனைத்துச் செல்வங்களையும் தெய்வங்கள் அள்ளி அவன் காலடியில் கொட்டலாம்” என்றார். அவன் தந்தை முகம்சுளிக்க அதை அக்கணமே உணர்ந்த உக்ரர் “அதர்வம் மீது நீங்கள் கொண்டிருக்கும் ஐயமும் விலக்கமும் பொருளற்றவை. இங்கு ரிக்கும் சாமமும் பயிர்கள். யஜுர் அதைச் சூழ்ந்த

உயிர்வேலி. அதர்வமே முள்வேலி என்று உணர்க! அதர்வத்திற்கு நீங்கள் அளிக்கும் கொடை உங்கள் குருமரபு பேணி வளர்த்தவை அழியாதிருக்க செய்யப்படுவது என்று கொள்க!” என்றார்.

சுப்ரபர் “வேதம் ஓம்பி நீங்கள் இதுவரை அடைந்ததென்ன, அந்தணரே? ஒவ்வொரு மழைக்காலத்திற்கும் ஒரு மைந்தனை விண்ணுக்களித்து நீரூற்றி மீள்கிறீர்கள்” என்றார். சீற்றத்துடன் அவன் தந்தை “ஆம், வேதம் விதைத்து இரந்து வரும் செல்வத்தை எல்லாம் என்னிடம் இரந்து வருபவருக்கு அளிக்கிறேன். இறுதியாக கை நீட்டி மிருத்யூ வந்து நிற்கிறாள்” என்று சொன்னார். உக்ரர் அத்தருணத்தை பற்றிக்கொண்டு “ஒரு மைந்தனை அதர்வ வேதம் என்னும் அன்னைக்கு அளியுங்கள். இப்புவி உங்கள் பிற மைந்தரை கைநீட்டி ஏந்திக்கொள்வாள். இக்குடி தழைக்கும்” என்றார். தந்தை கசப்புடன் தலையசைத்தார்.

ஆனால் தந்தை ஒவ்வொருநாளும் உறுதி குலைந்து வருவதை அவன் கண்டான். முதல்முறை சுப்ரபரிடம் சுட்டுவிரல் காட்டி “இனி இப்பேச்சை என்னிடம் எடுக்க வேண்டியதில்லை. நான் உங்கள் இரை அல்ல. நன்று. கிளம்புக, அந்தணரே!” என்றார். மறுமுறை “இனி ஒரு சொல்லும் எழவேண்டியதில்லை” என்று தாழ்ந்த குரலில் சொல்லி கைகூப்பி எழுந்தகன்றவர் மீண்டும் அவர்கள் வந்தபோது சோர்ந்த குரலில் “எளியவனின் துயரை வைத்து ஆடவேண்டியதில்லை, அந்தணரே. என்னால் இயலாது” என்று தழுதழுத்த குரலில் கூறினார்.

அன்றுதான் அவன் இளையோன் ஜலஜன் விண்ஏகி பதினாறு நாட்கள் கடந்திருந்தன. பதினாறாவது அன்னமூட்டுக்கு பிடி அரிசி இன்றி பகலெல்லாம் இல்லங்கள்தோறும் சென்று இரந்து

வெறும் கையுடன் மீண்டிருந்தார். அன்னை “அன்னமின்றி இறந்தவன். அன்னம் என கைச்சிமிழ் அளவாவது அளிக்காவிட்டால்...” என்றாள். மீண்டும் சென்று திரும்பிவரும் வழியில் காடோரம் கதிர்கொண்டு நின்றிருந்த புல்கதிரின் மணிகளை உருவி உள்ளங்கையில் குவித்து கொண்டுவந்து அன்னையிடம் கொடுத்தார். “அன்னம் அளிக்கவேண்டும் என்பதே நெறி. வேதம் தகைந்த அந்தணனுக்கு மைந்தன் எனப் பிறந்தாலும் அவனுக்கு இப்புவி அளிப்பது இத்தனை மணிகள்தான் என்றால் அவ்வாறே ஆகுக!” என்றார். அந்நெல்லை தன் உள்ளங்கையில் வாங்கி அதையே நோக்கிக்கொண்டிருந்தாள் அன்னை. இன்னொரு கையால் அதை கசக்கி உமி நீக்கி ஒரு சிறு கரண்டியில் நீரெடுத்து அதை ஊறவைத்து அனல்காட்டி வேகவைத்து மரச்செப்பில் அளித்தாள். சிறு குருவிக்கும் போதாத அந்த அன்னத்தை அன்று மூச்சுலகில் அமைந்து தன் இறுதி அன்னமென இளையோன் பெற்றுக்கொண்டான்.

இலைகள் அனைத்தும் மழைத்துளி உதிர்த்துக்கொண்டிருக்க, மெய்ப்புகொண்டு சிலிர்த்துக்கொண்டிருந்த நதியின் கரையில், பெயர்ந்து பாதி மூழ்கிக்கிடந்த கல்படியில் அமர்ந்து தந்தை நீரள்ளி ஜலஜனுக்கு நீத்தார்கடன் முடித்தார். அவன் ஜலஜனை எண்ணியபடி நின்றிருந்தான். அவனுக்கு தவழும் அகவையே ஆகியிருந்தது. கைக்கு எட்டிய அனைத்தையும் எடுத்து வாயிலிட்டபடி அவன் இல்லமெங்கும் அலைந்து திரிந்தான். புவியில் அவன் கற்றுக்கொண்ட சொல் அன்னம் மட்டுமே. ‘ன்ன ன்ன’ என வாய்வழியச் சொன்னபடி அவன் நிலையற்றிருந்தான். எதையாவது கையிலெடுக்கையில் முன்வாயின் ஒற்றைப் பல் தெரிய “ன்ன!” என சிரித்து மகிழ்ந்தான்.

தலைக்குமேல் கைகூப்பி எழுந்து கரை நோக்கி வந்தபோது அவர் நெஞ்சில் நீர் வழிந்து கொண்டிருந்தது. விழிநீரே அவ்வண்ணம் பெருகிப் பொழிவதாக அவன் எண்ணினான். அவனிடம் 'செல்வோம்' என்று கைகாட்டி முன்னால் நடந்தார். பன்னிருஅடி முன்னால் வைத்தபின் எண்ணியிராக் கணத்தில் தலைக்குமேல் கைகூப்பி திரும்பி "எந்தையே, எளியோனை பொறுத்தருள்க!" என்று பெருங்குரலெடுத்து கூவினார். அவன் முன்னால் சென்று தந்தையின் ஆடையை பற்றிக்கொண்டான். கூப்பிய கையை நெஞ்சோடமைத்து தலைகுனிந்து தந்தை குமுறி அழுதார். தாடியின் நீர்த்துளிகள் நெஞ்சில் உதிர்ந்தன. "தந்தையே தந்தையே" என்று அவன் அவரை உலுக்கினான்.

அவர் தன்னை அடக்கி முகத்தை இருமுறை கையால் வழித்து நீரை உதறிய பின் "உம்" என்ற ஒலியெழுப்பி குடில் நோக்கி நடந்தார். குடிலுக்குள் அன்னை அடுமனையில் ஏதோ கிழங்கை சுட்டுக்கொண்டிருந்தாள். அவளைச் சூழ்ந்து எஞ்சிய மைந்தர்கள் அமர்ந்திருந்தனர். அவர்களின் விழிகள் அடுப்பில் வெந்துகொண்டிருந்த கசப்புக் கிழங்கிலேயே நிலைகொண்டிருந்தன. தந்தை "உம்" என முனகினார். அன்னை வறண்ட விழிகளை தூக்கி நோக்கிவிட்டு தலைதிருப்பிக்கொண்டாள்.

ஏழு நாள் கழித்து மீண்டும் அதர்வ வைதிகர் வந்தபோது தந்தை முறைமைச் சொல் உரைத்து வரவேற்கவில்லை. வேள்வி முடிந்த கொட்டகையில் மரத்தாலான மணை மீது கால் மடித்து தலைகுனிந்து அமர்ந்திருந்தார். அவர்கள் அவர் முன் அமர்ந்து முகமன் உரைத்தனர். "இது இறுதிச்சொல், அந்தணரே. இனியொருமுறை இவ்வண்ணம் கோரமாட்டோம். இக்கனி அதர்வத்திற்குரியது என்று எங்கள் நூல்

உரைத்ததனால் வந்தோம். இதன்பொருட்டு எங்கள் ஆசிரியர் அங்கே காட்டு விளிம்பில் காத்திருக்கிறார். முடிவுச்சொல் தாங்கள் உரைக்கவேண்டும்” என்றார் உக்ரர்.

நெடுநேரம் தலைகுனிந்து அமர்ந்திருந்த தந்தை பெருமூச்சுடன் கலைந்து விழிதூக்கி “நான் அவன் அன்னையிடம் ஒரு சொல் கேட்கிறேன்” என்றார். “ஆம், கேட்டு உரையுங்கள்” என்று உக்ரர் சொன்னார். தந்தை எழுந்து அவனிடம் ‘வருக!’ என்று கைகாட்டிவிட்டு குடிலுக்குள் சென்றார். அவர் வருகையைக் கேட்டு அன்னை எழுந்து தலைகுனிந்து நின்றாள். அவர் “ஏன் வந்திருக்கிறேன் என்று அறிவாய். இதுவே தெய்வங்களும் மூதாதையரும் வகுத்த வழி என்றிருக்கலாம்” என்றார். அவள் ஒன்றும் சொல்லவில்லை. “நதிபெருகி நிலம் நீர்மூடிக் கிடக்கிறது. மீண்டெழ பல மாதங்களாகும் என்கிறார்கள். இம்மைந்தரைக் காக்க நம்மால் இயலாது போகலாம்” என்றார். அவள் அதற்கும் எதிர்வினை காட்டவில்லை.

அவர் தனக்கே என “ஒவ்வொரு ஆண்டும் இவன் பெறும் செல்வத்தை வணிகர்களினூடாக இங்கு நம்மிடம் சேர்ப்பார்கள் என்கிறார்கள். இன்று அதர்வர்களுக்கு கிடைக்கும் செல்வம் எவருக்கும் வருவதில்லை. நாமும் நம் குடியும் மீள்வோம். இங்கு நம் முன்னோர் நெறிப்படி ஒரு வேதசாலை அமைக்க முடியும். நம் மைந்தரை மகாவைதிகர்களாக ஆக்கமுடியும். யாரறிவார், அவர்கள் ஒருநாள் அரசர்களின் அவைகளில் தலைமை வைதிகர்களாக அமர்ந்திருக்கவும் கூடும்” என்றார். அன்னை அங்கிருப்பதாகவே தெரியவில்லை.

தந்தை மெல்ல உடல்திருப்பினார். அவ்வசைவில் அவள் விழித்துக்கொண்டு அவனை நோக்கி அருகே வா என்று கைகாட்டினாள். அவன் அருகே சென்றதும் “நீ என்ன

நினைக்கிறாய்?” என்றாள். “அன்னையே, என் வழி அது என்றே எண்ணுகின்றேன். என் பொறுப்பு அது” என்றான். “இத்தனை நாள் பிந்தாமலிருந்தால் என் இளையோர் நால்வரேனும் எஞ்சியிருப்பார்கள் என்றே வருந்துகிறேன்.” அவள் அவன் தலைமேல் கைவைத்து “சென்று வருக! நலம் திகழ்க!” என்று வாழ்த்தினாள். அன்னையின் கால்தொட்டு வணங்கி விடைகொண்டான்.

வெளியே செல்கையில் தந்தையிடம் “நீங்கள் எவ்வகையிலும் துயருறக்கூடாது தந்தையே, என் கடன் இது என்று உணர்கிறேன். என் சிறப்பும் அங்குதான் அமையும். என் பொருட்டு எண்ணி சோர்வுற வேண்டியதில்லை. என் இளையோர் வேதச் சிறப்பும் வாழ்க்கையில் வெற்றியும் இறுதி நிறைவும் பெறவேண்டும். அதர்வ அன்னை துணையிருக்கட்டும்” என்றான். தந்தை “அதர்வ வேதத்திற்கு தன்னைக் கொடுப்பதென்பதற்கு மெய்யாக என்ன பொருள் என அறிவாயா?” என்றார். “ஆம்” என்றான். “அது திரும்பிவர முடியாத திசை” என்றார் தந்தை. “ஆம், முன்னரே அதை உசாவி அறிந்தேன்” என்று அவன் சொன்னான். பெருமூச்சுடன் “நன்று!” என்ற தந்தை வெளியே சென்று அங்கு நின்றிருந்த உக்ரரிடமும் சுப்ரபரிடமும் “இவனை அளிக்கிறேன். அன்னை வாழ்த்துரைத்துவிட்டாள்” என்றார். “அதர்வம் பெருங்கருணை கொண்டது அந்தணரே, பெருஞ்சினம் அதன் மறுபக்கம் மட்டுமே” என்றார் உக்ரர். “உங்கள் இல்லம் செல்வத்தால் நிறையும்” என்றார் சுப்ரபர்.

“இளையோர் உன்னிடம் விடைபெற்றுக்கொள்ளட்டும், மைந்தா” என்றார் தந்தை. அவனுடைய ஏழு இளையோரும் கமுகுப்பாளைகளை ஆடையாக அணிந்து சணலால் ஆன

முப்புரி நூலுடன் குடிலுக்கு வெளியே ஒருவரோடொருவர் உடல் ஒட்டி விழிகள் ஏந்தி நின்றிருந்தனர். அவன் அருகே சென்று "இளையோரே, உங்கள் ஒவ்வொருவரையும் அறிவும் செல்வமும் புகழும் தொடர்ந்து வரட்டும். உங்களை அணுகும் ஒவ்வொரு அந்தணனும் உங்களுக்கு வேதத்தை அளிக்கட்டும். ஒவ்வொரு முனிவரும் ஞானத்தை அளிக்கட்டும். ஒவ்வொரு அரசரும் பொன்னை அளிக்கட்டும். நான் உங்கள் அனைவருக்கும் அன்னமென்றானேன். அன்னமே முதல் மெய்மை என்றுணர்க!" என்றான்.

இளையோரில் மூத்தவனாகிய குசுமன் கண்ணீர் வழிய விழிகளை அழுத்தியபடி தலைவணங்கி நின்றான். தந்தை "இளையோரே, உங்கள் மூத்தவன் காலடியைத் தொட்டு வணங்கி நற்சொல் பெறுக!" என்றார். அவர்களில் இளையோனாகிய சுகுமாரன் அவன் கால்தொட்டு வணங்கினான். அவன் தலைமேல் கைவைத்து அவன் வாழ்த்தினான். ஒவ்வொருவராக வணங்கி வாழ்த்துபெற்றதும் அவன் வீட்டிலிருந்து வெளியிலிறங்கி ஏழு அடி வைத்து திரும்பிநோக்கி தலைக்குமேல் கைகூப்பி கும்பிட்டான். முன்னரே சென்று வழியில் காத்து நின்றிருந்த வைதிகர்கள் அவனை அருகணையச் சொல்லி கைகாட்டினர். அவர்களுடன் அவன் சென்று கலந்து திரும்பி நோக்காமல் இல்லம்விட்டு நீங்கினான்.

முறைமைகளின்படி அவன் தந்தை வாழையிலை விரித்து அருகம்புல் சூடிய எள்ளன்னம் வைத்து மலர்படைத்து நீரூற்றி அவனுக்கு இறுதிக்கடன் முடித்து அவ்விலையுடன் அன்னத்தை இடம் வீசி இல்லக்கதவைப் பூட்டி அக்குடியிலிருந்து அவனை இறந்தவனாக ஆக்குவாரென்று

அவன் அறிந்திருந்தான். அந்நிலமும் இல்லமும் அக்குடியும் அன்னையும் தந்தையும் இளையோரும் இனி ஒருபோதும் தனக்கில்லையென்று எண்ணியபோது உளம் கொந்தளித்தெழுந்து உடலை அதிர வைத்தது. பின் அனைத்து உள்ளுறுப்புகளில் இருந்தும் குருதி சொட்டி வழிந்து வெறுமைகொள்ள முன்பொருபோதும் அவனறியாத விடுதலை உணர்வொன்றையும் அடைந்தான்.

ஹிரண்யகர்ப்பத்தின் முதன்மை ஆசிரியர் அமூர்த்தர் அவனுக்கு அதர்வத்தில் உறையும் இமாதேவியை விருப்பத் தெய்வமாக அளித்து அவளுக்குரிய நுண்சொல்லை அளித்தார். அவனுக்கு கையில் புல்லாழி கட்டி முதல் வேதச் சொல்லெடுத்து அளித்து “அதர்வம் முற்றிலும் பிறிதொன்று. இது மண்ணிலுள்ள அனைத்து விலங்குகளிலும் அருவியிலும் அலைகளிலும் ஒலிக்கும் நாதத்தை தன் ஓசையெனக் கொண்டது. இது உன் நாவில் எழ வேண்டுமென்றால் ஒவ்வொரு சொல்லாக பிற வேதங்களை நீ மறந்தாக வேண்டும். அவற்றை மறப்பதற்கு எளிய வழி இதை கருத்தூன்றி கற்பதே ஆகும். தானென்றாகி பிறிதொன்றிலாது நின்றிருப்பவையே தெய்வங்கள். அதர்வை அன்னை உன்னை ஆட்கொள்க!” என்றார்.

“நாகத்தின் நச்சுப்பல் என இது அந்தணரில் அமர்ந்திருக்க வேண்டும். அவனை அப்பல் ஒருபோதும் தீண்டிவிடக்கூடாது” என்றார் அமூர்த்தர். “ஆம்” என்று சொல்லி அவன் தலைவணங்கினான். வேதம் பயின்றபடியே அக்குழுவுடன் அவன் கிழக்கே காமரூபம் முதல் தெற்கே வேசரத்தின் எல்லைவரை பயணம் செய்தான். ஏழு மகாபூதவேள்விகளை

அக்குழு இயற்றியது. பொன்னில் அவன் பெற்ற பங்கு வணிகர்களினூடாக தந்தைக்கு சென்று சேர்ந்தது. அங்கே அவர் பதினெட்டு துணைக்குடில்களும் நடுவே இரண்டடுக்கு மையக்கட்டடமும் கொண்ட குருநிலை ஒன்றை அமைத்திருப்பதாகவும் நூற்றெட்டு மாணவர்களுக்கு ஆசிரியர் என அமர்ந்திருப்பதாகவும் அவன் அறிந்தான்.

அஸ்தினபுரியின் பெருவேள்வி நிகழவிருப்பதை அவன் ஆசிரியர் அமூர்த்தர் சொல்லி அறிந்தான். பொன் பெருகும் வாய்ப்பு அது என்று அவர் எண்ணினார். "நாம் வேதம் விதைத்து பொன்னை அறுவடை செய்பவர்கள். இது நூறுமேனி பெருகும் வயல்" என்று அவர் அவனிடம் சொன்னார். பெருவேள்விகளின் பொருட்டு அவந்தியினூடாக விதர்ப்பம் வந்து மாளவத்தை அடைந்து பாலையினூடாக பயணம் செய்து அவர்கள் கூர்ஜரத்தை வந்தடைந்திருந்தனர். "கிளம்புக அந்தணர்களே, பிறிதொருமுறை இது எப்போது நிகழுமென நாம் அறியோம். இம்முறை தெய்வங்கள் நமக்கு வாய்ப்பளித்துள்ளன" என்றார் ஆசிரியர்.

புருஷமேத வேள்வி என்றால் என்ன என்று அவனுக்கு தெரிந்திருக்கவில்லை. அஸ்வமேதம், அஜமேதம், கோமேதம் போல அதுவும் ஒரு தொன்மையான அதர்வ வேள்வி என்று மட்டுமே அறிந்திருந்தான். அஸ்தினபுரியை அவர்கள் சென்றடைந்தபோது வரவேற்க கோட்டைமுகப்பிலேயே சகுனியின் தலைமையில் மூன்று சிற்றரசர்கள் காத்து நின்றிருந்தனர். "வருக அந்தணர்களே, இன்று பாரதவர்ஷத்தில் இவ்வேள்வியை தொல்முறைப்படி செய்துமுடிக்க தங்களால் இயலும் என அறிந்தேன். உங்கள் வேள்வியால் அஸ்தினபுரி

வெற்றியும் புகழும் கொள்க! இதன் கொடிவழிகள் சிறப்புறுக!” என சகுனி வாழ்த்தினார்.

அவருடன் தேரில் சென்றிறங்கியபோது அரண்மனை முகப்பில் கணிகர் வந்திருந்தார். “அனைத்தும் முறைப்படி நிகழட்டும். ஒன்றும் இங்கு குறைவுபடாது” என்றார். அமூர்த்தர் “மகாபூத வேள்விகள் பல உள்ளன. அஜமேதமும் கோமேதமும்கூட அவ்வப்போது நிகழ்த்தப்படுகின்றன. அவையும் நிறைந்த பயனுள்ளவையே” என்றார். கணிகர் “புருஷமேதத்தின் பொருட்டே நீங்கள் வந்துள்ளீர்கள். அவையில் எடுக்கப்பட்ட முடிவு இது” என்றார். “ஆம், ஆனால் அனைத்து விளைவுகளையும் அறிந்தே இறுதிநிலை எடுக்கவேண்டும். அரசரிடம் நாங்களே அதை விளக்கிச் சொல்கிறோம்” என்றார்.

துரியோதனன் வீற்றிருந்த பேரவையில் அமூர்த்தர் எழுந்து வணங்கி புருஷமேத வேள்வியை விரித்துரைத்தார். “அரசே, ஒரு பிழையும் இன்றி இயற்றப்படவேண்டியது இது. வேதம் ஒரு சொல்கூட பிழைபடலாகாது. அவி ஒரு துளி குறையலாகாது. கொடை ஒரு முறைகூட மறுக்கப்படக்கூடாது. இவ்வேள்வி ஒரு சொல்லாலும் எதிர்க்கப்படக்கூடாது” என்றார். “தொடங்கியபின் குறைவுறும் புருஷமேத வேள்வி குலம் முற்றழிக்கும் என உணர்க! அவியென்றளிக்கும் ஆத்மாவை தெய்வங்கள் ஏற்றுக்கொள்கையில் நாம் வேண்டியதை அடைகிறோம். அவியை எவ்வகையிலேனும் தெய்வங்கள் மறுக்குமென்றால் நாம் அந்தணனை கொலைசெய்த பெரும்பழியை அடைவோம். தெய்வங்களும் தப்பமுடியாதது அது என்று தெளிக!”

அவையினர் நடுக்குற்றவர்கள் என அமர்ந்திருந்தனர். துரியோதனன் அவர் சொல்லி முடித்ததும் எழுந்து “சொல்லி

மாற்றும் வழக்கம் எனக்கில்லை அந்தணரே, புருஷமேதம் நிகழ்க!” என்றான். அவன் ஒருகணமும் எண்ணாது உரைத்தது அமூர்த்தரை சற்று சீற்றம் கொள்ளச் செய்தது. “புருஷமேதம் போன்ற கொடுவேள்விகளின் இடர் என்னவென்றால் நாம் முற்றும் தகைந்தவர்களாக இருந்தாலும் நமைச் சூழ்ந்தவர், நம் எதிரிகள், நாமறியாதபடி நம்முடன் ஊழால் பிணைக்கப்பட்டோர் எவர் செய்த பிழைக்கும் நாம் பொறுப்பேற்க வேண்டியிருக்கும். நம் கொடிவழியினரும் குடியினரும் பழிகொள்ள வேண்டியிருக்கும்” என்றார். “மறுசொல் இல்லை, வேள்வி நிகழ்க!” என்று துரியோதனன் சொன்னான். அவர் அவன் விழிகளை நோக்கியதும் சொல்நின்று “அவ்வாறே ஆகுக!” என்றார்.

அவையில் இறுதிமுடிவு எடுக்கப்பட்டபின் மூத்த வைதிகர்கள் அனைவரும் முகமாற்றம் அடைந்திருப்பதை திரும்பிச்செல்லும்போதுதான் அவிரதன் உணர்ந்தான். வழக்கமாக அவை கலைந்து செல்லும்போது ஒருவருக்கொருவர் அவை நிகழ்வுகளைப் பேசி தாங்கள் புரிந்துகொண்டதைக் கூறி அதனூடாக புரிந்துகொள்ளாததைப் பற்றி உசாவி அறிந்துகொள்வது அவர்களின் முறை. தங்களுக்கு ஏதாவது ஒன்று புரியவில்லை என்பதை வெளிப்படுத்துவது பொதுவாக அந்தணரின் இயல்பல்ல என்பதை அவன் அறிந்திருந்தான். ஒரு கருத்தைச் சொல்லி எதிர்தரப்பு அதற்கு அளிக்கும் மறுமொழியினூடாக தன் புரிதல் இடைவெளிகளை நிரப்பிக்கொள்வார்கள். தங்களிடம் சொல்லும் எதையும் முன்னரே அறிந்திருப்பதாகவோ அல்லது ஏற்றுக்கொள்ள மறுப்பதாகவோ கூறுவார்கள். ஆகவே வைதிகர்களுக்கான குடில்கள் அமைந்திருக்கும் வழியெங்கும்

பறவைக்கூட்டம்போல ஓசை எழுப்பியபடியே செல்வது அவர்களின் வழக்கம்.

அன்று எவரும் எதுவும் பேசாமல் நடப்பதைக் கண்டு அவன் சற்று நடைதளர்ந்து பின்னடைந்து இருபுறமும் மாளிகைகளையும் வணிகர்களையும் பெண்களையும் நோக்கியபடி வந்துகொண்டிருந்த சற்று மூத்த வைதிகனாகிய பௌர்வனிடம் "என்ன ஆயிற்று? ஏன் எவரும் சொல்லாடவில்லை?" என்றான். பௌர்வன் கலிங்கத்தில் அவர்களுடன் சேர்ந்துகொண்டவன். அக்குழுவில் வாய்மொழியில் அவனுடையதே அவிரதனுக்கு அணுக்கமானதாக இருந்தது. பௌர்வன் "புருஷமேதம் மெய்யாகவே நிகழக்கூடும் என்று எவரும் எதிர்பார்க்கவில்லை" என்றான். "ஏன்?" என்று அவன் கேட்டான். "ஆயிரம் ஆண்டுகளில் மூன்று முறையே அது நிகழ்ந்துள்ளது. பிராமணங்களில் அதற்கான குறிப்புகளும் பெரிதாக இல்லை. மெய்யுரைப்பதென்றால் இன்றுள்ள எவரும் எதையும் அறிந்தது இல்லை" என்றான்.

"அவ்வளவு அரிதா என்ன?" என்று அவன் கேட்டான். "ஏன், வைதிகனை வேள்வித்தீயில் அவியாக்குவதை இதற்குமுன் பலமுறை நீ அறிந்திருக்கிறாயா?" என்றான். "வைதிகனையா?" என்று கேட்டு அவன் பின்னால் நின்றுவிட்டான். இரண்டடி வைத்து முன்னால் சென்ற பௌர்வன் திரும்பிப்பார்த்து "நிற்காதே" என்றான். அவன் ஓடி அருகணைந்து "என்ன சொன்னீர்கள்? வைதிகனையா?" என்றான். "ஆம்" என்றான் பௌர்வன். "அதர்வம் ஓதி தகைந்த வைதிகனையேதான்." "ஏன்?" என்றான் அவிரதன். "எதன் பொருட்டு அஸ்வம் அவியாக்கப்படுகிறது? ஆவும் ஆடும் அவி என்றாகிறது?

எரிகொடை அளிக்கும் உயிர்கள் தூயவையாக இருக்கவேண்டும். தேவர்களுக்கு உகந்தவையாக இருக்கவேண்டும்.” அவிரதன் “ஆம்” என்றான்.

“புனிதமானவற்றில் புனிதமானது அந்தணன் உடல்தான். வேதத்தால் தூய்மை செய்யப்பட்டது அது” என்றான் பௌர்வன். அவன் தன் நெஞ்ச ஓசையைக் கேட்டு பின்னர் இருமுறை எச்சில் விழுங்கி வறண்ட தொண்டையை ஈரப்படுத்தியபின் “எவரை அவியிடப்போகிறார்கள்?” என்றான். “அதை அந்தணர்கள் தங்களுக்குள் கூடி முடிவெடுப்பார்கள். அதற்கென்று தொன்மையான வழிமுறைகள் உள்ளன” என்றான் பௌர்வன். அவன் நெஞ்சுத்துடிப்பை கேட்டபடி உடன்நடந்தான். அதற்குள் நகரெங்கும் அவர்கள் ஏன் வந்திருக்கிறார்கள் என்னும் செய்தி சென்று சேர்ந்துவிட்டிருந்தது. விழிகள் அவர்களைத் தொட்டதும் எரிதொட்ட சிற்றுயிர்கள் என திகைத்து சிதறின.

மீண்டும் சொல்லெடுக்க அவனுக்கு பொழுதாகியது. அவர்கள் அஸ்தினபுரியின் வடக்கெல்லையைக் கடந்து புராணகங்கைக்குள் சென்றனர். “அவ்வாறு முடிவெடுக்கப்பட்டவன் அதை ஏற்றாக வேண்டும் இல்லையா?” என்றான் அவிரதன். “இல்லை, அவன் மறுக்கலாம். ஆனால் அந்தணர் மறுப்பதில்லை. ஏனென்றால் அந்தணன் என்பவன் எந்நிலையிலும் தன் நலனையோ மகிழ்வையோ இருப்பையோ ஒரு பொருட்டென கொள்ளலாகாது. தங்கள் மூதாதையர் பொருட்டோ தெய்வங்கள் பொருட்டோ குடி பொருட்டோ கொடிவழிகளின் பொருட்டோ நெறிகளின் பிறழ்வு நிகழ்த்தக்கூடாது” என்றான் பௌர்வன்.

“எரியில் எழும் பொறியே அந்தணர் என்கின்றன தொல்நூல்கள். வேதமே எரி” என்றான் பௌர்வன் மீண்டும். “ஆம்” என்று அவன் தலையசைத்தான். அதன்பின் குடில் வரைக்கும் அவனால் சொல்லாட முடியவில்லை. உள்ளத்தில் ஒருங்கிணைந்த சொற்களும் எழவில்லை. வெளிக்காட்சிகள் சென்று முட்டி முட்டி சித்தம் திரும்பி வந்தது. ஒழுங்கின்மை கொண்டு அகம் பரந்தமையால் அனைத்து அடுக்குகளும் கலைய ஒருகணத்தில் அனைத்தும் பொய் என்றும் வெறும் சொல்லென்றும் தோன்றியது. எரியில் அந்தணரை அவியாக்குவதா? அப்படியொன்று நிகழுமா என்ன? அதை பிற அந்தணரும் குடிகளும் எப்படி ஏற்பார்கள்? அது இயல்வதா என்ன?

எத்தனை சித்தம் குவித்து எண்ணம் செலுத்தினாலும் அவனால் அக்காட்சியை உளம்கொள்ள இயலவில்லை. ஓர் அந்தணன் இறங்கி எரிபுகும் அளவுக்கு பெரிய வேள்விக்குளம் அமைக்கப்படுமா? முதிய அந்தணர்கள் எவரையேனும் எரியூட்டுவார்கள் போலும் என்று எண்ணினான். அவன் அகக்கண் முன் அக்குருநிலையின் சில முகங்கள் மின்னிச் செல்ல உடல் விதிர்த்தது. மறுகணம் ஓர் எண்ணம் எழுந்தது. மீளமீளச் சுழன்றாலும்கூட தான் அவ்வண்ணம் எரிபுகக்கூடும் என்ற ஐயமே ஏன் எழவில்லை? அவன் எரியிறங்குவதுபோல கற்பனை செய்தான். அம்முயற்சியையே உளம்கொள்ள முடியவில்லை.

தன் குடிலில் அந்திச் சடங்குகளுக்குப்பின் தர்ப்பைப் பாய்மேல் முருக்கு மரக்கட்டை தலையணையில் சாய்ந்து கண்களை மூடியபோது பௌர்வன் சொன்ன சொற்கள் அனைத்தும் மீண்டும் நிகழ்வனபோல் நினைவில் எழுந்தன. அப்போது

அறியாத பௌர்வனின் முகஉணர்வுகள் அண்மையிலெனத் தெரிந்தன. அவன் கிளர்ந்திருக்கிறான் என்று தோன்றியது. அச்சமல்லவா வேண்டியது? கிளர்ந்திருக்கிறான் என்றால் அவன் அதை அஞ்சவில்லையா? அவனும் தான் எரிபுகப்போவதில்லை என்று உறுதிகொண்டிருக்கிறான்போலும். அவ்வண்ணமென்றால் நானும் அக்கிளர்ச்சியைத்தான் அளைந்துகொண்டிருக்கிறேனா?

மெல்ல புரண்டு கைநீட்டி அருகே படுத்திருந்த பௌர்வனைத் தொட்டு "மூத்தவரே" என்றான். அவன் "சொல்" என்றான். அவனும் துயிலாதிருப்பதை எப்படி உணர்ந்தோமென வியந்தபடி "தாங்கள் அஞ்சவில்லையா?" என்றான். "ஏன்?" என்று அவன் கேட்டான். "எரிபுக நேருமென்றால்?" பௌர்வன் "புகவேண்டியதுதான். போர் எழுமென்றால் படைவீரர்கள் நிரை நிரையாகச் சென்று மடிவார்கள். எரியூட்டலில் குடிகள் அழியும். பின்னர் பஞ்சத்தில் குலங்களும் அழியும். ஓர் அந்தணன் இறப்பதிலென்ன?" என்றான். அவிரதன் "ஆனால்..." என்றபின் "ஆம், உண்மை" என்றான்.

"நாம் அமைத்த அஸ்வமேதத்தின் பொருட்டும் கோமேதத்தின் பொருட்டும் பல்லாயிரம் படைவீரர்கள் இதுவரை போர்களில் மடிந்திருக்கிறார்கள். அவர்களின் குருதியைத்தான் ராஜசூயத்தில் பொன் என பெற்றுக்கொண்டிருக்கிறோம். ஒரு பலியினூடாக நாம் அதற்கு நிகர் செய்வோமென்று இருக்கட்டுமே" என்றான் பௌர்வன். "ஆம்" என்றான் அவிரதன். ஆனால் நீங்கள் உங்கள் இறப்பென அதை இன்னமும் எண்ணவில்லை பௌர்வரே என உள்ளூர சொல்லிக்கொண்டான். இருவரும் சொல்லின்றி குடில்

கூரையில் அசைந்த கங்கை நீர் ஒளியை பார்த்துக்கொண்டிருந்தனர்.

மூன்றாம்நாள் காலையில் முதலொளி எழுந்த பின்னர் அமூர்த்தரின் ஆணைப்படி அங்கு வந்திருந்த அதர்வ வைதிகர் அனைவரும் கங்கைக்கரையின் மணல்மேட்டில் கூடினர். ஒவ்வொரு மணற்பருவும் தெரியும்படி விழிநோக்கு தெளிமைகொள்ளும் இளவெயில் வெண்மணல்மேல் பரவியிருந்தது. அப்பால் கங்கை நீலநீர்ப்பெருக்காக வளைந்து சென்றுகொண்டிருந்தது. மூத்தோர் வழிகாட்ட அதர்வம் நிறைவுற்ற வேதிகர் நூற்றெண்மரும் ஒன்றன்பின் ஒன்றென அமைந்த வளையங்களாக முழங்கால் மடித்து முன்னிருப்பவரின் முதுகை முட்டும்படி நெருங்கி அமர்ந்தனர். “இடைவெளி விழலாகாது, மணல் தெரியலாகாது” என உக்ரர் சொன்னார்.

அனைவரும் அமர்ந்ததும் முன்னிருந்து பின்னும் திரும்பவுமென எண்ணி அறுதிசெய்தபின் “அமைக!” என அவர் ஆணையிட அத்திரள் ஓசையற்று நோக்கி அமர்ந்திருந்தது. உக்ரரும் அமர்ந்துகொள்ள வளையங்களின் நடுவே அமைந்த சிறுவட்டத்தில் அமூர்த்தர் நின்றார். அவர் அருகே பெரிய கூடையில் அரிசிப் பொரி வைக்கப்பட்டிருந்தது. “அதர்வ அன்னை நம்மிலொருவரை தேர்ந்தெடுக்கட்டும். நம் அனைவர் பொருட்டும் அவர் அன்னைக்கு அன்னமாகட்டும். தேவர்கள் அவிகொண்டு நிறைக! நம்மைப் புரப்போர்க்கு வெற்றியும் புகழும் விளைக! ஆம், அவ்வாறே ஆகுக!” என்று அமூர்த்தர் சொன்னார். கூடியிருந்தவர்கள் அனைவரும் தங்கள் கைகளில் வெண்ணிற ஆடைகளை விரித்து நீட்டியபடி விழிகளை மூடி வேதமோதத் தொடங்கினர்.

வேதமெழுந்த நாவுடன் அமூர்த்தர் பொன்னாலான ஒரு பொரிவடிவ மணியை எடுத்து அக்கூடையின் உள்ளே இட்டார். பின்னர் அதை இன்னொரு கூடைக்குள் கொட்டி மீண்டும் முதற்கூடைக்குள் கொட்டினார். ஏழுமுறை அதைக் குலுக்கி ஆற்றியபின் தன் கையில் எடுத்துக்கொண்டு நிமிர்ந்தார். வேதக்குரல் எழுப்பியபடி அந்தப் பொரிக் கூடையை தூக்கிச் சுழற்றி அவர்கள் மேல் வீசினார். மழையென பெய்த பொரிப்பருக்கள் அவர்களின் தலைமேலும் தோள்மேலும் ஏந்திய துணியிலும் தொடையிடுக்கிலுமாக விழுந்தன. "ஆம், அவ்வாறே ஆகுக!" என்றபடி அமூர்த்தர் கைகூப்பினார்.

அவர்கள் ஒவ்வொருவரையாக நோக்கியபடி உக்ரர் சுற்றிவந்தார். அந்தப் பொன்மணி எவர்மேல் விழுந்திருக்கிறதோ அவரே புருஷமேதத்திற்கான பலிபுருஷன் என அவிரதன் அறிந்திருந்தான். தன் மடியிலிருந்த பொரியைத்தான் அவன் முதலில் பார்த்தான். அதில் பொன்மணி இல்லை என்று தெரிந்ததும் நெஞ்சின் ஓசை மெல்ல அடங்க வியர்த்த உடல்மேல் குளிர்காற்றென ஓர் ஆறுதல் உருவானது. பெருமூச்சுடன் தோள்தொய்ந்து மெல்ல உள்ளமும் ஓய்ந்தான். அதன் பின்னர்தான் அது யார் என ஆவலெழுந்தது. அங்கிருந்த அனைவர் முகமும் அவன் அறிந்திருந்ததுதான். ஒவ்வொரு முகமாக தொட்டுத்தொட்டுச் சென்றுகொண்டிருந்தது அவன் சித்தம்.

ஓசை மாறுபாடு ஒன்றை அவன் செவி உணர்ந்தது. மெல்லிய சொல் ஒன்று எவரிடமோ எழுந்தது. மூச்சொலிகள். அமூர்த்தர் அவனை நோக்கிக்கொண்டிருந்தார். அவன் அவ்விழிகளை நோக்கியபின் மெல்லிய உளக்குலைவுடன் விழிவிலக்க தன்னருகே உக்ரர் நின்றிருப்பதை உணர்ந்தான். நிமிர்ந்து அவர்

விழிகளை நோக்கியபோதே அவனுக்கு புரிந்துவிட்டது. நெஞ்சு குமுறி எழுந்து அறைபட செவிகளில் அவ்வோசை மட்டுமே எழுந்தது. கண்களின் நரம்புகளில் செவிமடல்களில் வெம்மைகொண்ட குருதியை உணர்ந்தான். உக்ரர் "உத்தமரே, உங்கள் மீது" என்றார். குனிந்து அவன் குடுமியிலிருந்து அந்தப் பொன்மணியை எடுத்து அவனிடம் காட்டினார்.

# குருதிச்சாரல் - 65

**பகுதி பத்து : பெருங்கொடை – 4**

அஸ்தினபுரிக்கு கர்ணனுடன் கிளம்புவதை சுப்ரியை எண்ணிநோக்கியதே இல்லை என்பதனால் அவன் நாவிலிருந்து அச்சொல் எழுந்தபோதுகூட அவள் உள்ளம் அதை வாங்கிக்கொள்ளவில்லை. அன்றே அமைச்சரிடமிருந்து செய்தி வந்தபோதுதான் சித்தத்தில் அது உறைத்தது. அவள் நிலையழிந்து அகத்தளத்தில் சுற்றிவந்தாள். அணுக்கச்சேடி சபரியும் பிறரும் அவளுடைய பயணத்துக்கான ஒருக்கங்களை செய்துகொண்டிருந்தார்கள். அவள் அதெல்லாம் தனக்காக என்பதை மெல்ல மெல்லத்தான் உள்வாங்கினாள். சபரியிடம் "நான் சென்றுதான் ஆகவேண்டுமா என்று பிறிதொருமுறை அரசரிடம் கேட்டுவரச்சொல்" என்றாள். சபரி "தாங்கள் அறிவீர்கள் அரசி, பிறிதொரு சொல் என்பதே அரசரின் வழக்கமல்ல" என்றாள்.

அவள் சலிப்புடன் தன் கையிலிருந்த மேலாடையை மஞ்சத்தில் ஓங்கி வீசி "இதில் நான் எதற்காக?" என்றாள். "என் இடம் என்ன என்று அங்கே எவரும் அறியமாட்டார்கள்.

அஸ்தினபுரியின் அடிதாங்கும் நாடொன்றின் சூதர்குலத்தரசரின் துணைவி. அவ்வாறு தோற்றம்கொண்டு அவர்கள் முன் சென்று நிற்பதைவிட…” என்றபின் “நீ சென்று விருஷகேதுவிடம் சொல். அன்னைக்கு இப்பயணத்தில் விருப்பமில்லையென்று அவன் தந்தையிடம் சொல்லும்படி” என்றாள். “அதுவும் இங்கு இயல்வதல்ல, அரசி” என்று சபரி சொன்னாள். “மறுசொல் எழுவதை அரசர் விரும்புவதில்லை.”

அது உண்மையென்று அறிந்திருந்தமையால் அவள் கால் தளர்ந்து முழு எடையும் அழுந்த பீடத்தில் விழுந்து தலையை கையில் சாய்த்துக்கொண்டாள். சபரி அவள் மஞ்சத்திலிட்ட மேலாடையை எடுத்து கைகளால் நீவி இரு நுனியையும் பற்றி மெல்ல முறுக்கி சுருள் என்றாக்கி அதை வைக்கவேண்டிய பனையோலைப் பேழைக்குள் வைத்தாள். சுப்ரியை சீற்றத்துடன் தலைதூக்கி “அவ்வாறென்றால் நான் யார் இங்கு? கொட்டில் விலங்குகளுக்கும் எனக்கும் என்ன வேறுபாடு?” என்றாள். சபரி தாழ்ந்த குரலில் “மண்ணில் உயிர்கொண்டு வந்தவை அனைத்தும் பிறவிக்கடன்களை அவ்வுடலின் பகுதியென கொண்டுவருகின்றன என்பார்கள். விலங்குகள் தங்கள் கடனை அறியாது இயற்றுகின்றன. அறிந்து இயற்றுகிறார்கள் மானுடர்கள்” என்றாள்.

சலிப்புடன் தலையை அசைத்தபின் “இந்நகரிலிருந்து வெளியேற எனக்கு விருப்பமில்லை. இந்நகரிலேயேகூட என் அணுக்கரன்றி பிற எவர் விழிகளையும் சந்திக்க நான் விரும்பவில்லை. சந்திக்கும் விழிகளில்கூட கரந்திருப்பது என்னவென்று எனக்குத் தெரியும்” என்றபின் “இது நான் எனக்கென்று உருவாக்கிக்கொண்ட பொய்யுலகு” என்றாள். மஞ்சத்திலிருந்த அருமணிகள் பதித்த பூண்கள், பீதர்நாட்டுப்

பட்டாடைகள், பொன்னூல் பின்னலிட்ட கலிங்கத்து மேலாடைகள், தந்தப் பேழைகள் ஆகியவற்றை கையால் அப்பால் தள்ளி “இதெல்லாம் என்ன? முடிகொண்டு அரியணை அமர்ந்த பேரரசியர் கொண்டுள்ள அனைத்தையும் இங்கு நானும் கொண்டுவந்து சேர்த்திருக்கிறேன்” என்றாள். உதட்டைச்சுழித்து “இங்கு எனக்கும் அரியணை ஒன்று உள்ளது. மணிமுடியும் சூட்டப்படுகிறது. ஆனால் கூத்தில் அரசியென மேடையேறும் விறலிக்கும் எனக்கும் வேறுபாடில்லையென்று உள்ளூர நன்கறிவேன்” என்றாள்.

சபரி ஒருபோதும் அவ்வுணர்வுகளுக்கெதிராக எதுவும் சொல்வதில்லை. சுப்ரியை “இறைஞ்சுகொடையெனப் பெற்ற நாட்டை ஆளும் ஓர் அரசன். ஷத்ரியன் என அவையிலும் சூதன் என தெருவிலும் சொல்லப்படுபவன். அவனுக்குத் துணைவியெனச்சென்று எங்கு நான் மதிப்பையும் முறைமையையும் பெற முடியும்?” என்றபின் எழுந்து அறைக்குள் நிலைகொள்ளாது உலவினாள். காற்றிலாடிய சாளரத் திரையை எரிச்சலுடன் பிடித்து தள்ளினாள். கையைத் தூக்கி வீசியபடி திரும்பி உரத்த குரலில் “என்னால் இயலாது. நான் அஸ்தினபுரிக்கு செல்லப்போவதில்லை. என் தலை கொய்யப்பட்டு இங்கு விழுந்தாலும் சரி, சென்று சொல்!” என்றாள்.

சபரி பேழையை மூடி அருகே வைத்தபடி வெறும் விழிகளால் நோக்கினாள். “என்னடி பார்க்கிறாய்? இது என் ஆணை! சென்று சொல் உன் அரசனிடம், நான் அஸ்தினபுரிக்கு வரப்போவதில்லை. என் தலைவெட்டி வீழ்த்தப்படட்டும், அன்றி கற்துறுங்கில் என்னை அடைக்க ஆணையிட்டுவிட்டு அவர் அச்சூதச் சிறுமகளுடன் செல்லட்டும். பொய்யுரு தாங்கி,

நோக்குவோர் இளிவரல் கொள்ள அஸ்தினபுரியின் வாயிலில் சென்று நிற்க என் உள்ளம் ஒப்பாது. நான் பெருங்குடிக் கலிங்கனின் மகள். இங்குள்ள ஒவ்வொருவரும் அதை மறந்தாலும் நான் மறப்பதற்கில்லை. சென்று சொல்!" என்றாள். சபரி "அரசி..." என்று தொடங்க "சென்று சொல்! இது என் ஆணை! சென்று சொல்!" என்றாள். சபரி தலைவணங்கி வெளியேறினாள்.

சுப்ரியை மீண்டும் உடல் தளர்ந்து மஞ்சத்தின் விளிம்பில் அமர்ந்தாள். கால்களைத் தூக்கி சேக்கைமேல் வைத்து முழங்கால் மடிப்பில் முகத்தை வைத்துக்கொண்டாள். பின்னர் உள்ளிருந்து எழுந்த விசையால் உடல் உலுக்க கையால் தலையை ஓங்கி ஓங்கி அறைந்துகொண்டாள். சேக்கையில் குப்புற விழுந்து தலையணையில் முகம் புதைத்துக்கொண்டபோது உள்ளிருந்து வெம்மை வெளியேறுவதுபோல் அழுகை வந்தது. கண்ணீர் பெருகி தலையணையை நனைக்க நெஞ்சும் தோள்களும் உலுக்கிக்கொள்ள விம்மி அழுதாள். பின்னர் எழுந்தமர்ந்து முகம் துடைத்துக்கொண்டபோது நெடுந்தொலைவு வந்திருந்தாள்.

சபரியிடம் சொன்னவையெல்லாம் நினைவுக்கு வர எழுந்து கதவைத் திறந்து வெளியே வந்தாள். இடைநாழியில் கண்ணில்பட்ட சேடியிடம் "சபரி எங்கே? உடனே அவளை என்னை வந்து பார்க்கச் சொல்" என்றாள். படிகளில் சபரி மேலேறி வருவது தெரிந்தது. "என்னடி சொன்னாய்? இப்போது சென்று என்ன சொன்னாய்?" என்று அவள் கேட்டாள். "நான் இன்னும் செல்லவில்லை, அரசி. அதற்குள் தேர்ப்பாகன் என்னை பார்க்கவேண்டும் என்றான். தேரில் எவ்வளவு

பொருட்கள் ஏற்றப்படுமென்றும் அரசியுடன் எத்தனை சேடியர் செல்வார்கள் என்றும் கேட்டான். அவனிடம் பேசிவிட்டு இதோ வருகிறேன். தாங்கள் விழைந்தால் அரசரை…” என்று அவள் சொல்ல “வேண்டாம்” என்று அவள் சொன்னாள்.

திரும்பி அறைநோக்கிச் சென்றபடி “என் அணிப்பேழைகள் அனைத்தும் தேரிலேற்றப்படவேண்டும். ஆடைப் பெட்டிகள் அனைத்தும் தேவை” என்றாள். “அனைத்தையும் ஒரு தேரில் ஏற்ற முடியாது, அரசி” என்றாள். “அப்படியென்றால் தனித்தேர் கேள். ஏன் அங்கநாட்டில் தேர்களுக்கா பஞ்சம்?” என்றாள். “தேர்கள் ஏராளமாகவே உள்ளன, அரசி” என்றாள் சபரி. அவள் நஞ்சு ஊறிய நகைப்புடன் “ஆம், இது சூதர்கள் நாடாயிற்றே. புரவிக்கும் தேருக்கும் என்ன குறைவு?” என்றபின் “என் ஆடைகளை எடுத்து வை. நான் நீராட வேண்டும்” என்றாள்.

நீராடி அணிபுனைந்து ஆடியில் நோக்கியபோது முதல்முறையாக மெல்லிய உவகை ஒன்று அவள் உள்ளத்தில் எழுந்தது. கடிமணம்புரிந்து சம்பாபுரிக்கு வந்த பின்னர் அவள் அக்கோட்டையை விட்டு வெளியே செல்வதே அரிதாக இருந்தது. ஆண்டுக்கு ஒருமுறை கோட்டைக்கு வெளியே தென்மேற்கு மூலையில் அமர்ந்த கொற்றவை ஆலயத்திற்கு பலிகொடை விழாவுக்காகவும் கங்கையில் நிகழும் புதுநீர்ப்பெருக்கு விழவை நோக்கவும் சென்றிருக்கிறாள். அவை அரசநிகழ்வுகள். ஒவ்வொரு கணமும் முறைமைகள், சடங்குகள், சந்திப்புகள், முகமன்கள். அவை ஒரே மேடையில் மீண்டும் மீண்டும் நடிப்பவை.

அஸ்தினபுரி எனில் அது கங்கையில் நான்கு நாட்கள் எதிரொழுக்கில் பயணம். இருபுறமும் சிறியவையும் பெரியவையுமாக ஏழு நகரங்கள் வந்து கடந்து செல்லும்.

நூற்றுக்கும் மேற்பட்ட கரையோரச் சிற்றூர்கள். எண்ணிமுடியாத படகுத்துறைகள். அஸ்தினபுரியைப் பற்றி அவள் இளஅகவையிலேயே நூல்களில் பயின்றிருந்தாள். 'ஹஸ்தபாகு மாகாத்மியம்' என்னும் நூல் அந்நகரின் உருவாக்கத்தையும், அதன் தெருக்களின் அமைப்பையும், அங்கிருக்கும் தெய்வங்களையும், அதன் படைவல்லமையையும், அங்கு கோலோச்சிய மன்னர்களின் பெருமையையும் சொல்வது.

உண்மையில் கலிங்க நகரங்கள் பல அஸ்தினபுரியைவிட மும்மடங்கு பெரியவை என்று அமைச்சர் அவளிடம் சொன்னார். "தாம்ரலிப்தியின் ஒரு பகுதிக்கு இணையாகாது அஸ்தினபுரியின் அளவு. நம் ராஜபுரியின் மாளிகைகளில் நூற்றிலொன்றுகூட அங்கில்லை. ஆயினும் அஸ்தினபுரி தொல்பெருமை மிக்கது. முனிவர்களாலும் புலவர்களாலும் சூதர்களாலும் பாடப்பட்டது." அவள் "ஆனால் அதுவே பாரதவர்ஷத்தின் முதற்பெருநகர் என்கிறார்கள்" என்றாள். "அரசி, சொற்கள் விதைகளை நீர் என உண்மைகளை வளர்ந்தெழச் செய்கின்றன. இடையளவு உயரமுள்ள பாறை ஐந்து புலவர்களும் ஐம்பது சூதர்களும் நாதொடுத்தால் இமயமலையென்றே ஆகும்" என்றார் அமைச்சர்.

சம்பாபுரிக்கு வந்த பிறகு பலமுறை கர்ணன் அவளிடம் அஸ்தினபுரிக்கு செல்வதைப்பற்றி சொன்னான். ஒவ்வொருமுறையும் "முதன்மை அரசி என்று அன்றி என்னை எதிரேற்கும் எங்கும் என்னால் நுழைய முடியாது" என்று அவள் மறுத்தாள். "நீ அஸ்தினபுரியின் அரசரையும் அவர் துணைவியையும் புரிந்துகொள்ளாமல் பேசுகிறாய். அந்நகரின் அரசரும் அரசியும் உன்னை கோட்டைவாயிலில் வந்து

வரவேற்க வேண்டுமெனில் அதை சொல். அஸ்தினபுரியின் பேரரசிக்குரிய அரியணையில் அமர விழைந்தால் அதை கூறு” என்று கர்ணன் சொன்னான். “இரந்துபெற நான் பிராமணி அல்ல, நடிப்பதற்கு விறலியும் அல்ல. நான் ஷத்ரியப் பெண்” என்று அவள் சொன்னாள்.

அவன் விழிகளில் ஒருகணம் சீற்றம் எழுந்து பின் அணைந்து மெல்லிய நகைப்பு குடியேறியது. “நன்று. நீ மெய்யாகவே அரசியென்று உணர்கையில் உன்னை அழைத்துச் செல்கிறேன்” என்றான். அவள் அவன் சொன்னதை புரிந்துகொள்ளாமல் “நான் பிறந்ததில் இருந்து அரசிதான்” என்றாள். அவன் நகைத்தபடி எழுந்துகொண்டு “அரசியர் தாங்களே அரசியர், பிறரால் ஆக்கப்படுவதில்லை” என்றபின் மேலாடையை எடுத்தணிந்து வெளியே சென்றான். அவள் அவன் செல்வதை சினந்த விழிகளுடன் நோக்கி அமர்ந்திருந்தாள். அவன் தன்னை ஏளனம் செய்ததாக உணர்ந்தாள், எவ்வாறென்று புரியவில்லை.

சுப்ரியையின் கனவுகள் அனைத்தும் சம்பாபுரியிலிருந்து கிளம்பி அறியா நிலங்களுக்குச் செல்வது குறித்தவையாகவே இருந்தன. அந்நகரை அவள் அமர்ந்திருக்கும் ஒரு மரச்சில்லை என, அதை உதைத்து விசைகூட்டி சிறகு விரித்து வானிலெழப் போவதாக, எண்ணினாள். பயணச் செய்திகளையும் அயல்நிலங்களின் காட்சி விரிவுகளையும் சொல்லும் நூல்களை நூற்றுக்கணக்கில் தன் சுவடிஅறைக்குள் சேர்த்து வைத்திருந்தாள். பயணக் கதைகளைப் பாடும் சூதரையும் விறலியரையுமே அவள் விரும்பினாள். நூல்களை ஏடுசொல்லிகள் வாசிக்க விழிமூடி மயங்கியவள் என மஞ்சத்தில் கிடப்பாள். மூச்சில் மார்புகள் எழுந்தமையும். முகம்

உணர்வுகள் எழுந்தமைய உவகையும் அச்சமும் வியப்பும் தனிமையும் கொண்டு மாறிக்கொண்டிருக்கும்.

அவர்களின் சொல்லினூடாகவே அவள் பெருமணல் எழுந்த சோனக நிலத்தை, வெண்பனி சூடிய கின்னர நாடுகளை, பசுமூங்கில் செறிந்த மணிபூரகத்திற்கும் அப்பால் உள்ள பீதர்நாடுகளை, தண்டகாரண்யத்தை, வேசர நாட்டை, அதைக் கடந்துசென்று அடையவேண்டிய திருவிடத்து மேட்டுநிலத்தை, அதை நனைத்து செல்லும் கிருஷ்ணையையும் கோதையையும் கண்விரித்து எனக் கண்டாள். ஒவ்வொரு நாட்டின் எல்லையையும், அங்குள்ள மலைகளின் பெயர்களையும் அவற்றைக் கோத்திருக்கும் நதிகளையும் துணையாறுகளின் பின்னலையும் அவற்றில் ஒளிரும் நகர்களையும் பரவிய ஊர்களையும் அவள் அறிந்திருந்தாள். மக்களின் குடிப்பிரிவுகளும், ஆடைகளும், அணிகளும், மொழிகளும் அவளுக்குத் தெரிந்தன.

“யானைத்தந்தப் பிடியிட்ட குத்துக்கத்திகளுக்கு வேசரத்தின் ஜெயத்துங்கநாடே முதன்மையானது” என்று அவள் அந்நாட்டில் இருந்து வந்த விறலியிடம் சொன்னாள். “ஆனால் அவர்கள் உருக்கி கூர்கொடுத்துப் பொருத்தும் இரும்புப் பட்டை விஜயபுரியின் ஆலைகளில் இருந்து வருகிறது.” விறலி அதை அறிந்திருக்கவில்லை. வியப்புடன் “ஆம், அரசி. இரும்பு ஆலைகளே ஜெயத்துங்கநாட்டில் இல்லை. நான் இதை எண்ணியதேயில்லை” என்றாள். உப்புப் பாறையை நீர் பீய்ச்சி கரைத்துச் செதுக்கி உருவாக்கப்பட்ட ஒளிர்வெண்சிலை ஒன்றைக் கண்டதுமே இது திரிகர்த்தத்தில் சம்பூர் என்னும் சிற்றூர் சிற்பிகளால் உருவாக்கப்பட்டது என்றாள். மூங்கில்மணிகளை உருட்டிக்கடைந்து செய்யப்படும்

மாலைகளை ஒரு வணிகன் காட்டியதுமே அவை மணிபூரகத்திற்கு அப்பால் உள்ள நாகநாட்டின் கைத்திறன் வெளிப்பாடு என்று அவள் சொன்னாள். வியந்து நின்றிருந்த வணிகரிடம் "ஒவ்வொரு நிலமும் தனக்கென ஒரு கைத்திறனை கொண்டுள்ளது. அது அம்மக்களுக்கு அந்நிலம் அளிக்கும் பரிசு" என்று அஷ்டதரங்கிணியின் வரியைச் சொல்லி புன்னகைத்தாள்.

தன் சேடியருடன் எப்பொழுதும் தொலைநிலங்களைக் குறித்தே பேசிக்கொண்டிருந்தாள். ஒவ்வொருமுறையும் தொலைபயணம் செய்யும் விறலியரை அழைத்து வருகையில் சபரி "அரசி, தாங்கள் அறியாத எதையும் அவர்கள் சொல்லப்போவதில்லை. பதினாறு ஆண்டுகளாக ஒவ்வொரு நாளும் இங்கிருந்து நீங்கள் பாரதவர்ஷத்தை சொற்களால் அறிந்துகொண்டிருக்கிறீர்கள்" என்றாள். "ஆம், ஆனால் சொற்களால் மட்டுமே. கால்களால் அறிபவர்களுக்கு எப்போதும் ஏதோ ஒன்று புதிதாக சொல்வதற்கு இருக்கும்" என்றாள். "இவ்விறலியைப் பார்! இவள் மாளவத்திலிருந்து வருபவள். மாளவத்தைப் பற்றி மட்டும் எழுபத்திரண்டு நூல்கள் என் சுவடியறையில் உள்ளன. நூறுக்குமேல் விறலியரும் பாணரும் இங்கு வந்து அந்நாட்டைப் பற்றி பாடியிருக்கிறார்கள். எவரும் சொல்லாத ஒன்றை இவள் சொல்வாள் என்பதில் ஐயமில்லை. அது என்னவென்று நோக்கு."

மாளவத்தைப் பாடிய விறலி அதன் குறுங்காடு பரவிய மலைச்சரிவுகளை, செறிந்த கருமை இறுகியதெனத் திரண்ட பாறைகளை, அவற்றில் உருவான இயற்கையான குகைகளை, அங்கு உறுமும் வெண்பல் அனல்விழிச் சிறுத்தைகளைப் பற்றி சொல்லிச் சென்றாள். ஒரு சொல் எழுந்து சுப்ரியையை முகம்

மலரச் செய்தது. ஒற்றைக் கருகமணி காதில் அணிந்த பெண்கள்! சுப்ரியை கைகாட்டி "கருகமணியை காதணியாக அணிகிறார்களா அங்கு?" என்றாள். விறலி "ஆம் அரசி, மாளவத்தில் உள்மலைச் சரிவுகளில் கருகமணியையே காதில் அணிகிறார்கள்" என்றாள். சுப்ரியை "கருகமணியை தாலியாக அணிவர் வேசரநாட்டவர். அவர்கள் கருகமணி என்பவை கல்மணிகள்" என்றாள்.

விறலி "அரசி, அங்கே கருகமணிகள் சிறிய மலர்ச்செடி ஒன்றில் விளையும் விதைகள். அவை பெருங்கற்களால் அறைபட்டாலொழிய உடையாத அளவுக்கு கடினமானவை. எண்ணையில் அவற்றை ஊறவைத்து நிழலில் நெடுநாள் உலர்த்தி மேலும் ஒளியூட்டுகிறார்கள். சுழற்சகடம் நடுவே நிறுத்தப்பட்ட இரும்பு ஊசியில் அதை வைத்து சகடத்தை விரையச் சுழற்றி சிறுதுளையிடுகிறார்கள். பொற்கம்பியாலோ வெள்ளிச்சரடாலோ கட்டி அதை காதில் அணிகிறார்கள்" என்றாள். சுப்ரியை முகம் மலர்ந்து "அத்தகைய காதணிகள் இரண்டு எனக்கு வேண்டும்" என்றபின் திரும்பி சபரியிடம் "இதுநாள்வரை இச்செய்தியை நீ கேள்விப்பட்டிருக்கிறாயா?" என்றாள். சபரி "இல்லை" என்று சொன்னாள். "கேட்கும் நிலம் நாம் அறிந்த நிலத்திலிருந்து நீண்டோ நேர்மாற்று கொண்டோ எழுவது. நேரிலறியும் நிலம் நாம் அறிந்த அனைத்தையும் முற்றாகத் தவிர்த்து உருக்கொள்வது" என்ற சுப்ரியை "நம் ஒற்றர்களிடம் சொல். அக்காதணிகள் இரண்டு இங்கு வந்தாகவேண்டும்" என்றாள். "ஆணை, அரசி!" என்றாள் சபரி.

ஒவ்வொரு நாள் காலையிலும் முன்னிரவில் கேட்டு நிறுத்திய பயணநூலில் இருந்து தொடர்ந்தெழுந்த கனவு ஒன்றை நினைவுகூர்ந்தபடி சுப்ரியை விழித்துக்கொண்டாள். கனவுகளில்

எழும் நிலங்கள் ஒவ்வொரு கணமும் சித்தத்தை வியந்து விரியச் செய்பவையாக இருந்தன. அவை எங்குள்ளன தனக்குள் என வியந்துகொள்வாள். சென்ற பிறவிகளில் வாழ்ந்த நிலங்களா? அறியாத எவரேனும் தன்னுள் புகுந்து அவர்களின் காட்சிகளை நிறைக்கிறார்களா? ஒற்றை ஓநாய் கால்தடம் நூல்தையல் வரி என ஓடிச்சென்று பிணைத்த செவ்வலை ஏடுகளால் ஆன பாலை மணல்வெளி. இமயமலைச்சரிவு மீது மெல்ல நகர்ந்து செல்லும் மலைமுகில் நிழல். குளிர்நீர் கோதையின் மீது அசைவற்று நின்றிருக்கும் முதலைவடிவப் படகுகள். ஏடுகளை அடுக்கி வான் வரை நிறுத்தியது போன்று அங்குள்ள கற்தட்டு மலைகள். காலையில் அந்நிலக்காட்சியை நினைவுகூர்ந்தபடி உடலும் உள்ளமும் ஓய்ந்து படுத்திருப்பாள். சிலநாள் உள்ளம் உவகையில் இனித்துக்கொண்டிருக்கும். சிலநாட்கள் அது உருத்திரளா ஏக்கம்கொண்டு விழிநீர் கசியச்செய்யும்.

தன் கனவுகளில் அவள் எப்பொழுதும் அரசியென்றே வெளிக்கிளம்பினாள். ஆயிரம் அகம்படியர் முன்னும் பின்னும் சூழ்ந்து வர, படைக்கலன்களும் கவசங்களும் தலைப்பாகைகளும் ஒளிவிடும் வீரர்கள் நிரைவகுக்க, குறடொலிகளும் சகட ஒலிகளும் சூழ்ந்தெழ, பறைகொட்டியும் கொம்பூதியும் சூதர் முன் செல்ல, மங்கலமகளிர் அமர்ந்த தேர்கள் தொடர, பட்டுக்கொடி நெளியும் பொற்குவைத் தேரில் செம்பட்டுச் சேக்கையில் சாய்ந்தமர்ந்து இருபுறமும் முகம் மலர்ந்து வாழ்த்தும் பெருந்திரளை நோக்கியபடி அவள் விரிந்து சென்ற சாலைகளில் சென்றாள்.

அவளை பெருங்கோட்டை வாயில்களில் முடிசூடி குடைகவித்து அரசியருடன் நின்றிருந்த பேரரசர்கள்

அருகணைந்து தலைதாழ்த்தி முகமனுரைத்து வாழ்த்தி வணங்கினர். அவள் தேரிறங்கி மண் நின்றபோது அரிமலர் மழையென அவள்மேல் பொழிந்தனர். அவளை அரசரும் அமைச்சரும் சூழ அழைத்துச் சென்று அவைமேடைகளில் இடப்பட்ட பீடங்களில் அமர்த்தினர். அந்தணரும் அமைச்சரும் அவையோரும் எழுந்து தலைதாழ்த்தி அவளை வாழ்த்தி குரலெழுப்பினர். அவள் வருகையைப் புகழ்ந்து புலவர் பாடினர். அவள் செல்லும் தெருக்களில் பாணரும் அவளை ஏத்தி நின்றனர்.

மேலும் மேலுமென பெருகிச் செல்லும் அக்கனவு எங்கோ ஒரு புள்ளியில் சலிக்கையில் புரண்டு படுத்து தன்னந்தனி விறலியென மரவுரி ஆடை அணிந்து தோளிலொரு மூட்டையும் கையிலொரு கழியுமாக தனித்த பாதைகளில் அவள் நடந்து சென்றாள். அயல்வணிகர் குழுக்களுடன் இணைந்துகொண்டாள். இசைச்சூதர்களுடன் ஒருகுலமென்றாகி அலைந்தாள். தனித்த விடுதிகளிலும் பெருமரத்தடிகளிலும் உறங்கினாள். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு இடத்தில் உணவுண்டாள். ஒவ்வொரு நாட்டுக்கும் ஒரு பெயரிட்டாள். ஒவ்வொரு முறையும் வெவ்வேறு மொழிகளில் பேசினாள்.

அவை கனவுகள் என்று அறிந்திருந்தாலும் என்றோ ஒருநாள் கிளம்பி சம்பாபுரியின் எல்லைகளைக் கடந்து தான் சென்றுவிடுவோம் என்று மெய்யாகவே அவள் நம்பினாள். சபரியிடம் அதைச் சொல்லும்போது கூடவே முனிந்து "ஆம், நீ உள்ளூர நகைப்பதை நான் அறிவேன். இத்தனை நாள் அஞ்சியஞ்சி இச்சிறைக்குள் வாழ்ந்தவள் சிறகுகளை இழந்திருப்பேன் என்று எண்ணுகிறாய். எவரும் அவ்வாறே எண்ணுவர். ஆனால் ஒரு நாளும் நான் கனவுகளை

ஒழிந்ததில்லை. இதுவே என் இடமென்று அமைந்ததுமில்லை. எனவே நான் எழுவேன். என்றேனும் ஒருநாள் எங்கிருக்கிறாள் இவள் என்று நீங்கள் அனைவரும் எண்ணும்படி முற்றிலும் தொலைந்து போவேன். ஒவ்வொரு நாளும் புதுப்பிறவி எடுத்தபடி பாரதவர்ஷத்தின் இப்பெருநிலங்களில் வாழ்ந்துகொண்டிருப்பேன்” என்றாள்.

சம்பாபுரியிலிருந்து கிளம்பியதுமே அவள் மெல்ல உருமாறலானாள். படகுத்துறை வரை தேரில் செல்லும்போது நிலைகொள்ளாமல் எழுந்து தேர்த்தூணைப் பற்றியபடி காற்றில் நெளிந்தாடிய திரைச்சீலைகளினூடாக நகரை நோக்கிக்கொண்டிருந்தாள். சபரி “அமர்க, அரசி!” என்று சொன்னபோது எரிச்சலுடன் திரும்பிநோக்கி “இது ஒன்றும் அரச ஊர்வலமல்ல” என்றாள். “ஆம்” என்று சபரி சொன்னாள். “ஆனால் படகுத்துறைக்கான வழி சற்று சரிவானது. அமராவிடில் நிலைகுலைய நேரும்.” அவள் கைவீசி அதை புறக்கணித்தாள். சம்பாபுரியின் ஒவ்வொரு மாளிகையாக விழிதொட்டு நோக்கிக்கொண்டே சென்றாள். தன் உள்ளம் சிறுமிபோல் கிளர்ச்சி கொண்டிருப்பதை, கூவி நகைத்தபடி கைகொட்டித் துள்ள வேண்டுமென்று தோன்றுவதை, அவளே விந்தையாக உணர்ந்தாள்.

அந்த உளமாற்றத்தை சபரி அறிந்துவிடக்கூடாதென்பதற்காக எரிச்சலை வரவழைத்தபடி “இந்நகர் எப்போதுதான் துயிலெழும்?” என்றாள். “இது கோடைகாலம், அரசி. அந்தியில் தொடங்கும் சந்தைகளும் கேளிக்கைகளும் நள்ளிரவு வரை நீள்கின்றன. எனவே புலரியில் விழித்திருப்பவர் சிலரே” என்றாள். “நெடுங்காலமாக இப்படியே சோம்பி

அமர்ந்துவிட்டால்…” என்றபின் சலிப்பு மிகையாக வெளிப்பட உதட்டைச் சுழித்து “சரிதான், உழைத்துப் பொருளீட்டி என்ன பயன்? தேனீ சேர்ப்பதை கரடி அருந்துகிறது” என்றாள். சபரி அத்தகைய சொல்வெளிப்பாடுகளுக்கு வெறும்விழி காட்டப் பயின்றிருந்தாள்.

மீண்டும் மாளிகையைப் பார்த்தபோது விந்தையான எண்ணம் ஒன்று வந்தது. இந்நகரிலிருந்து எப்போதைக்குமென கிளம்பிச்செல்கிறோம் என்று. மறுமுறை இங்கு வரவே போவதில்லை என்றால் இந்தக் காட்சிகள் அனைத்திற்கும் எத்தனை மதிப்பு உருவாகிவிடும்! குடைக்காளான் வண்ணத்தில் சுதைக்கூரை கவிழ்த்த இந்த மாளிகை இனி ஒருபோதும் என் விழிகள் முன் தோன்றப்போவதில்லை. பீதர்நாட்டு வெண்ணிற ஓடுகள் வேய்ந்த இந்த மாளிகை, சிவந்த களிமண் ஓடுகள் கவிழ்த்த அந்த இரண்டடுக்கு மாளிகை, நடுவே செல்லும் அச்சிறு சந்து, அதற்கப்பால் தெரியும் ஏழன்னையரின் ஆலயத்தின் கோபுரமுகடு.

இவற்றை நான் இனி பார்க்கவே போவதில்லை என கற்பனை செய்தாள். மறுமுறை நோக்கவே வாய்ப்பில்லாதவையே பேரழகு கொண்டவை எனும் சொல் நினைவிலெழுந்தது. ஏதோ பயண நூலொன்றில் நெடுங்காலம் முன் அதை படித்திருந்தாள். நெஞ்சில் பதிந்து பல முறை அவளே மீளமீள சொல்லிக்கொண்டிருந்தாள். தொலைநிலங்கள் பேரழகு கொள்வது அதனால்தான். அலைந்து அல்லலுற்று அங்கு சென்றுசேர்ந்து நோக்குகையில்கூட அவ்வழகு முழுமை கொள்வதில்லை. எவ்வண்ணமோ மீண்டு இச்சிறுவாழ்வில் பிறிதொருமுறை அங்கு செல்ல இயலாதென்று நன்குணர்ந்து நினைவில் மீட்டெடுக்கையில் நெஞ்சை நிறைக்கும்

பெருந்துயரொன்றையும் அவை சேர்த்துக்கொள்கின்றன. துயர் களிப்பென்றும் ஆகும் தருணம் அது.

இச்சிறுவாழ்வு எனும் சொல்! இது சிறிதே என்னும் ஏக்கம். இதை இவ்வளவு நிறைத்திருக்கிறேன் எனும் பெருமிதம். நில்லாதலையும் துலாமுள்ளே உவகை என்பது. நிலைகொள்கையில் துயரோ மகிழ்வோ இல்லை. ஆம், மகிழ்வென்பது அலைபாய்தல், குமிழி, கொப்பளிப்பு, கொந்தளிப்பு. மீண்டும் சம்பாபுரிக்கு வரவேகூடாது. கங்கைப் பெருக்கில் பாய்ந்துவிட வேண்டும். குளிர்ந்த ஆழத்தில் மூழ்கி மறைந்தால் அத்தருணத்தில் இந்நகர் இதன் ஒவ்வொரு கணுவிலும் தெய்வப் பேரழகுடன் என் சித்தத்தில் உறையும் போலும்.

படகுத்துறைச் சரிவில் கிளைவிரித்துப் படர்ந்துநின்ற ஆலமரத்திடம் இனி நான் வரப்போவதில்லை என்று சொல்லவேண்டுமென்று தோன்றியது. இனி கற்பலகைகள் பதித்த இச்சாலை எனக்கில்லை. மீனெண்ணெய் விளக்குகளைச் சூடி நிற்கும் கற்தூண்களிலும், வளைந்து சரிந்து இறங்கிச் செல்லும் இதன் இருபுறமும் நிரைவகுத்திருக்கும் சுங்கமாளிகைகளிலும், அப்பால் மரக்கலங்கள் ஆடி நிற்கும் துறைமுகப்பிலும், அங்குள்ள காவல்மாடங்களிலும் நான் இனி விழிபதிக்கப் போவதில்லை. ஒவ்வொரு காட்சியிலும் முழுச் சித்தத்தையும் விழியென்றாக்கி பதித்தாள். துளித்துளியென நோக்கிச் சென்றாள்.

இரவெல்லாம் இறக்கி அடுக்கப்பட்ட பொதிகளை ஏற்றிய சகடங்களை உடற்தசைகளை நாணென இறுக்கி, புட்டங்கள் புடைக்க கால்களை உந்தி, தலைதாழ்த்தி இழுத்துச்சென்ற காளைகள். அச்சு இறுகிச்சுழன்று எழுப்பும் உரசலோசையுடன்

இணைந்த சகடப்பட்டை ஒளிநெளிவு. ஆற்றுப்பரப்பிலிருந்து எழுந்த காற்றில் துடிக்கும் வண்ணக்கொடிகள். வணிகர்களின் மேலாடைகள் எழுந்து பறந்தன. வண்ணத் தலைப்பாகைகள் காலையொளியில் தெளிந்து மின்னின. இதோ மெல்ல திரும்புகிறது ஒரு தேரின் குடமுகடு. மின்னி அணைகிறது ஒரு கவசத்தின் மார்புவளைவு. சுடரேற்றிக் கொண்டிருக்கின்றன வேல்முனைகள். அருகணையும் வீரனொருவனின் வாளுறையின் ஒளி அலைவுறுகிறது. நீர்ப்பரப்பில் பல்லாயிரம் கோடி வெள்ளி ஒளிச்சிமிட்டல்கள். சுமை நீங்கும்தோறும் மேலெழுந்து நீர்த்தடம் காட்டும் படகுப் பள்ளைகள்.

“ஆம், கிளம்பிவிட்டேன்” என்று ஒரு சொல் எவரோ சொல்லி செவியேற்றதுபோல் நெஞ்சிலெழுந்தது. அதன் பின்னரே அவ்வுணர்வை உள்ளம் அடைந்தது. துறைமேடை அலையிலாடி அணுகுவதுபோலத் தெரிந்தது. “ஆம், இதோ கிளம்பிவிட்டேன்” என மீண்டும் சொன்னாள். கால் தளர்ந்தவளாக தேரின் பீடத்தில் அமர்ந்துகொண்டாள்.

# குருதிச்சாரல் - 66

**பகுதி பத்து : பெருங்கொடை – 5**

துறைமேடையில் விருஷசேனனும் விருஷகேதுவும் சத்யசேனனும் அவளுக்காகக் காத்து நின்றிருந்தனர். கர்ணன் கிளம்பிய பின்னரே அங்கே சென்றுசேரவேண்டுமென எண்ணி அவள் பிந்தி கிளம்பியிருந்தாள். தேரிறங்கியதும் விருஷசேனன் வந்து தலைவணங்கி “அஸ்தினபுரிச் செலவு அவர்களுக்கும் நமக்கும் நலம் பயப்பதாகுக, அன்னையே”

என்றான். அவன் தலைதொட்டு “வெற்றி நிறைக!” என வாழ்த்தினாள். பிற மைந்தரும் அவள் கால்தொட்டு வாழ்த்து பெற்றனர்.

கர்ணனும் சிவதரும் ஏறிய அரசப்படகின் அமரமுனையில் எழுந்த தலைமைக் குகன் கொம்பொலி எழுப்ப படகுத்துறையிலிருந்து மேடைமேலேறிய காவலன் மறுகொம்பொலி அளித்தான். பதினெட்டு பாய்கள் கொண்ட அரசப்படகு மேடேறும் யானை என அலைகளில் பொங்கி பின் மூழ்குவதுபோல் இறங்கி முன்னால் சென்றுகொண்டிருந்த காவல்படகுகளை தொடர்ந்தது. ஒரு சிறுநகர் கிளம்பிச்செல்வதுபோல அவளுக்குத் தோன்றியது. விழிமயக்கு கொண்ட ஒரு கணத்தில் அவள் நின்றிருக்கும் படித்துறை சென்றுகொண்டிருப்பதாக எண்ணி தலைசுழல சபரியின் தோளை பற்றிக்கொண்டாள்.

அமைச்சர் ஹரிதர் வந்து வணங்கி “அனைத்தும் ஒருங்கிவிட்டன, அரசி. தங்கள் அகம்படிப்படகுகள் இரண்டாம் படித்துறையிலிருந்து கிளம்பிவிட்டன” என்றார். “சென்று வருக, அன்னையே” என்றான் விருஷசேனன். அவள் தலையசைத்துவிட்டு திரும்பி சபரியை நோக்கி தொடரும்படி விழி காட்டினாள். வாழ்த்தொலிகளும் மங்கல இசையும் ஒலிக்க படகை அணுகி நடைபாலத்தினூடாக ஏறி படகுக்குள் சென்றமர்ந்தபோது அவள் கால்கள் பதறிக்கொண்டிருந்தன. உள்ளே நுழைந்ததும் பாலம் விலகிச் சென்றது. பிடியைக் கண்ட களிறோசை என படகிலிருந்து கொம்பொலி எழுந்தது.

அவள் ஆடும் தரையில் நின்று கரையை நோக்கினாள். உள்ளம் கொப்பளித்துக்கொண்டிருந்தது. இதோ இச்சிறு சில்லையை உதைத்து மேலெழுந்துவிட்டேன். இதுநாள்வரை கரந்து

வளர்த்த சிறகுகளை முற்றிலும் விரிக்கவிருக்கிறேன். வானில் நீந்தி திரும்பி நோக்குகையில் எப்படி இருக்கும் இந்நகர்? கைவிடப்பட்ட சிதைந்த கூடு. இத்தனை நாள் இங்கிருந்தோமா என்று வியக்க வைக்கும் சிறுவட்டம். அவள் உதடுகளை உள்மடித்து உளவிசையை அடக்கிக்கொண்டாள்.

தொழுதபடி படகுத்துறையில் நின்றிருந்த மைந்தரைப் பார்த்ததும் அவளுக்கு உள்ளிருந்து ஒரு புன்னகை ஊறியெழுந்தது. இவர்கள் என்னை அறிந்திருக்கவில்லை. என்னுடன் இரவும் பகலும் இருக்கும் இச்சேடி என்னை அறியாள். நான் சென்ற தொலைவுகள் எதையும் இவர்கள் உணர இயலாது. சிறு வைரக்கல்லுக்குள் ஒளி பல்லாயிரம் யோஜனை தூரம் பயணம் செய்கிறது என்ற காவிய வரியை நினைவுகூர்ந்தாள். அவ்வைரத்தை கரிய பட்டில் சுற்றி என் தனிப் பேழைக்குள் வைத்திருக்கிறேன். முடிவிலாது திரும்பித் திரும்பி சென்றுகொண்டே இருக்கின்றது ஒற்றைச்சுடர் நீட்சி. இவர்கள் எப்போதும் எதையும் அறியப்போவதில்லை.

படகு கொம்போசையுடன் முன்னகர்ந்தபோது அவள் திடுக்கிட்டு நிலையழிந்து கயிற்றை பற்றிக்கொண்டாள். சகடத்தைச் சுழற்றி நீருக்குள் இருந்து நங்கூரத்தை மேலே தூக்கினர். அவள் அதன் பச்சைப்பாசி படிந்த பருத்த கொக்கிகளை பார்த்தாள். நீரைக் கவ்வும் முட்கள். எத்தனை தடித்தவை! மிக மென்மையானதென்று தோன்றும் நீரைக் கவ்வ அவை தேவையாகின்றன. பெருங்கலங்களை கவ்வி நிறுத்தியிருக்கிறது நீர். அலைநெளியும் மேற்பரப்பில்தான் அது மென்மையானது. ஆழத்தில் வைரமென இறுகுவது. பாய்கள் பெரிய கொடிகளென சுருளவிழ்ந்து மேலெழுந்து சென்றன.

நெய்பற்றி மேலேறும் தழல்களென அவற்றை தொல்பாடல் ஒன்று சொல்வதை எண்ணிக்கொண்டாள்.

எண்ணியிராத கணத்தில் "சிறகு!" என்னும் சொல் நெஞ்சிலெழுந்தது. ஆடையை பற்றிக்கொள்பவள்போல நெஞ்சை அழுத்திக்கொண்டாள். இக்கணமே நான் இறந்துவிடுவேனா என்ன? சிறகுகள் விரிகின்றன. இப்பெருங்கலத்தைத் தூக்கி வானில் மிதக்கவைக்கும் அளவுக்கு அகன்றவை. கொடிமர உச்சியில் கொடி துடிதுடித்தது. முழங்கை தடிமனுள்ள வடங்கள் அனைத்தும் சீற்றம்கொண்டவைபோல் சுருள்களிலிருந்து விசைகொண்டு எழுந்து நீண்டு இறுகி மூங்கில்களென உருமாறி நின்றன. "நீர் வந்து அறையும் அரசி, உள்ளே வருக!" என்றான் குகன். "இல்லை, என்னால் உள்ளே அமரவியலாது" என்றாள் சுப்ரியை.

நூறு கையசைவுகள் வழியாக படகுக்கு ஆணைகள் வந்தன, விடைபெறல்கள் நிகழ்ந்தன. வடங்களை அவிழ்த்து சுருட்டி கரைநோக்கி வீசினர். அமரத்தின் கூர்முகப்பு வானில் எழவிரும்பும் பறவையின் அலகென மேலே தூக்க படகு அலைமேல் ஏறி அப்பால் சரிந்து அலைவளைவில் சறுக்கி முன் சென்றது. பயிலாப் புரவியென படகு தன்னை பின்பக்கம் தூக்கி முன்பக்கம் தள்ளிக் கவிழ்க்க முயல்வதை அவள் கண்டாள். அனைத்து கட்டுகளையும் மறந்து கைவீசி உரக்க கூவி நகைத்தாள் அவளைத் திரும்பிப்பார்த்த சபரி புன்னகைத்து "கிளம்பிவிட்டோம், அரசி" என்றாள் "ஆம்" என்று அவள் சொன்னாள்.

பகல் முழுக்க அவள் அமரமுனையருகே படகின் விலாவிளிம்பில் பாய்மரக் கயிறுகளைப் பற்றியபடி நின்று தொலைவில் பச்சைப்பெருக்கென சென்றுகொண்டிருந்த

கரையோரக் குறுங்காடுகளை பார்த்துக்கொண்டிருந்தாள். கடந்துசெல்லும் ஒவ்வொரு படகையும் விழிமறைவதுவரை நோக்கினாள். சிறகடித்து தாழ்ந்திறங்கி பாய்க்கயிற்றில் அமர்ந்து சிறகுப்பிசிறுகள் உலைய ஆடிய நீர்ப்பறவைகளை நோக்கி கைவீசிச் சிரித்தாள். அணுகும் படகுத்துறைகளைக் கண்டதுமே அது எந்த ஊர் என்று சொன்னாள். அங்கிருக்கும் துலாநிலைகளின் எண்ணிக்கையை, சாலைகளின் அமைப்பை சபரியை நோக்கி கூவினாள்.

முதலில் அது தொடக்க எழுச்சி என்றும் விரைவிலேயே விழிசோர்ந்து உளம்நிறைந்து உள்ளே வந்துவிடுவாள் என்றும் சபரி எண்ணினாள். ஆனால் பகல் முழுக்க சுப்ரியை அங்கே நின்றிருக்கக் கண்டு "அரசி, கோடைவெயில் எரிக்கிறது. உள்ளே வந்தமர்க!" என்றாள். "இல்லை, நீ செல்க!" என்றாள் சுப்ரியை. மேலும் வெயில் எழுந்தபோது பாய்நிழலில் சென்று நின்று நோக்கிக்கொண்டிருந்தாள். கரைகளையும் வானையும் நீர்மீன்களையும் ஒரே தருணத்தில் நோக்கும்படி விழிகளை பகுத்துக்கொண்டிருக்கிறாள் என்று தோன்றியது.

வெயில் தழையத் தொடங்கும்போதேனும் ஓய்வெடுக்க வருவாள் என சபரி எண்ணினாள். நீர்க்காற்று வெயிலை அறியச்செய்யவில்லை என்றாலும் பகல் முழுக்க காய்ந்த அவள் முகம் சுண்டி தேன்நிறம் கொண்டிருந்தது. தலைமயிர் காய்ந்து சிறுகீற்றுகளாக பறந்துகொண்டிருந்தது. கூச்சல்களும் நகைப்புகளும் மெல்ல ஓய அவள் விழிகள் திறந்து கனவிலென அமர்ந்திருந்தாள். அறைவாயிலில் நின்று நோக்கிய சபரி அவள் கருவிழிகள் ஓயாது அசைந்துகொண்டிருப்பதை, உதடுகள் ஏதோ சொல்லிக்கொண்டே இருப்பதை, கைவிரல்கள் பின்னிவிளையாடுவதை கண்டாள்.

அந்தி எழத்தொடங்கியது. நீரிலாடிய வான்செம்மை மறைந்தது. வானம் இருண்டு முகில்கள் ஒவ்வொன்றாக அணைந்தன. நீர் கரிய வழிவாக படகுகளின் ஒளியை சிதறடிக்கும் சிற்றலைகளுடன் நெளிந்தது. அப்பால் சென்ற படகுகள் சாளர ஒளிப்புள்ளிகள் கண்களாக பெரிய மீன்கள் என கடந்துசென்றன. பகல் முழுக்க நீரிலிருந்து எழுந்துகொண்டிருந்த நீராவிமணம் மாறி சிதறிய நீர்த்துளிகளில் பாசிமணம் தெரிந்தது. கரையிலிருந்து வந்த காற்றில் மென்குளிரும் தழைமணமும் கரைச்சேற்றுமணமும் இருந்தன. கரையில் இருளே வேலியெனத் தெரிந்தது. அவ்வப்போது மாபெரும் தட்டுவிளக்குபோல் ஏதேனும் படகுத்துறை வந்து மிதந்தலைந்து பின்னால் ஒழுகிச்சென்றது.

சபரி அவளருகே சென்று “அரசி, தாங்கள் உள்ளே வரலாமே?” என்றாள். “நீ சென்று படுத்துக்கொள்” என்றாள் சுப்ரியை. “அரசி, இன்னும் நெடுந்தொலைவு இருக்கிறது. இரவெழுந்துவிட்டது. நீராடி உணவருந்தி ஓய்வெடுக்கலாம்” என்று சபரி சொன்னாள். அவளிடம் செல்லும்படி சுப்ரியை கைகாட்டினாள். கதவருகே சென்று நின்று நோக்கிக்கொண்டிருந்த சபரி கால்கடுத்து அமர்ந்தாள். மீண்டும் அருகே சென்று “அன்னம் கொண்டுவரலாமா, அரசி?” என்றாள். “ஆம்” என்றாள் சுப்ரியை. அவள் தாலத்தில் அப்பங்களையும் பழங்களையும் நீரையும் கொண்டுசென்று கொடுத்தாள். அங்கிருந்தபடியே அவற்றை உண்டு தாலத்திலேயே கைகழுவிக்கொண்டாள்.

அவளை நோக்கியபடி சபரி அமர்ந்திருந்தாள். அமரவிளக்கின் ஒளியில் செந்நிறத் தீற்றலாக கரியவெளியில் எழுதிய ஓவியமெனத் தெரிந்தாள். தலையைச்சுற்றி சேலையை இழுத்துவிட்டுக்கொண்டு உடல் ஒடுக்கி அமர்ந்து

நோக்கிக்கொண்டிருந்தாள். படகு திரும்பிய கோணத்தில் விழிமணிகளின் மின்னிப்பு தெரிந்து மறைந்தது. விண்ணில் மீன்கள் முழுத்தெழுந்து வந்தன. அள்ளிவிடலாமென அருகே வளைந்திருந்தது வானம். பாய்கள் தலைக்குமேல் படபடத்து ஓசையிட்டன. காற்றில் புடைத்து கயிறுகளில் திரும்பிக்கொண்டன.

அவளை இருபதாண்டுகளாக அறிந்திருந்த சபரி முற்றிலும் புதிய ஒருத்தியை நோக்கிக்கொண்டிருந்தாள். அல்லது, என்றும் அறிந்திருந்ததே இவளைத்தானோ? அவள் துயின்று தலை கதவின் சட்டத்தில் சென்று முட்டிக்கொண்டபோது விழித்துக்கொண்டாள். வாயைத் துடைத்தபடி எங்கிருக்கிறோம் என உணர்ந்தபோது அரசியைப்பற்றிய எண்ணத்தை அடைந்தாள். பாய்ந்தெழுந்து நோக்கியபோது அவள் அங்கேயே அசையாமல் அவ்வண்ணமே அமர்ந்திருப்பதை கண்டாள். தன் ஆடை எழுந்து பறப்பதையும், காற்று நன்றாக குளிரத்தொடங்கியிருப்பதையும் உணர்ந்து உள்ளே சென்று பருமனான கம்பளிப் போர்வையை கொண்டுவந்து அவளிடம் அளித்தாள். அதை எச்சொல்லுமின்றி வாங்கி அவள் போர்த்திக்கொண்டாள்.

அந்த விழிகளின் மின்னை அவள் திடுக்கிடலுடன் பார்த்தாள். பித்தர் விழிகள். பேய்கொண்டவர்களின் விழிகள். அவள் மீண்டும் வந்து வாயிலருகே அமர்ந்தாள். மீண்டும் துயின்று விழித்தபோது விடிவெள்ளி எழுந்திருந்தது. அவள் அங்கேயேதான் இருந்தாள். விடியலெழுவதை நோக்கிக்கொண்டு சபரி நின்றிருந்தாள். ஒவ்வொரு விண்மீனாக உள்ளிழுக்கப்பட்டு வானம் வெளிறியது. நீர் நிறம் மாறத்தொடங்கியது. அதன் பரப்பைக் கிழித்தபடி மீன்கள்

எழுந்து எழுந்து விழுந்த அலைவட்டங்கள் ஒன்றுடன் ஒன்று விளிம்புமுட்டி கலைந்தன. ஒளி கொண்டன பாய்கள். பின் கிழக்கே செம்மை தெரியலாயிற்று.

அவள் உள்ளே சென்று ஏவலனிடமிருந்து கொதிக்கும் அக்காரஅன்னப்பாலை கொண்டுவந்து அரசிக்கு அளித்தாள். அவள் அருந்தி முடித்ததும் "வருக அரசி, சற்று இளைப்பாறுக!" என்றாள். அவள் சபரியை எவரென அறியாதவளாக நோக்கினாள். "அரசி, தாங்கள் காலைக்கடன் கழிக்கவேண்டும். உடைமாறவேண்டும்." அவள் பாவை என எழுந்துகொண்டாள். அவள் ஆடைமாற்றிக்கொண்டிருக்கையில் கைகளிலும் கன்னத்திலும் தோல் வெந்ததுபோல சிவந்திருப்பதை சபரி கண்டாள். அவள் கேட்ட அனைத்துக்கும் ஓரிரு சொற்களிலேயே சுப்ரியை மறுமொழி சொன்னாள்.

அவளிடம் சற்று படுக்கும்படி சபரி சொன்னாள். ஆனால் மேலாடை ஒன்றை எடுத்துக்கொண்டு அவள் மீண்டும் படகின் விளிம்புக்கே சென்றாள். சபரி ஒரு நீண்ட பீடத்தில் மரவுரி விரித்து வெளியே கொண்டுசென்று போட்டாள். அதில் அமரும்படி கோரினாள். சுப்ரியை அதிலமர்ந்து நீரையும் கரையையும் நோக்கிக்கொண்டிருந்தாள். பின்னர் அதிலேயே விழுந்து துயின்றாள். எழுந்தமர்ந்து மீண்டும் நோக்கிக்கொண்டிருந்தாள். அன்றிரவும் அவ்வண்ணமே அமர்ந்திருந்தாள். மறுநாள் பகலில் ஆடைமாற்றி அங்கே சென்றமர்ந்தாள். அப்பயணம் முழுக்க அவள் அங்கேயேதான் இருந்தாள். அவள் மொழியையே மறந்துவிட்டிருந்தாள் என சபரி எண்ணினாள்.

அவள் செயல்கள் ஒவ்வொன்றும் திகைப்பூட்டின. எண்ணும்தோறும் அச்சத்தையும் பதற்றத்தையும் நிறைத்தன.

ஆனால் சொற்கள் ஓய அவளை வெறுமனே நோக்கியிருக்கையில் அந்த சுப்ரியையை அவள் முன்னரே நன்கறிந்திருப்பதாகத் தோன்றியது. அது ஏன் என்று அவள் தன்னை உசாவிக்கொண்டாள். உள்ளம் அவ்வாறு உணர்வதற்கெல்லாம் எந்த விளக்கமும் இல்லை என்று பின் எண்ணிச் சென்றடைந்தாள். அவள் முன்பு சொன்ன சொற்கள் நினைவுக்கு வந்தன. ஆனால் அச்சொற்களென்ன என்று அவளால் தெளிவுற எடுக்க முடியவில்லை. அச்சொற்களால் உருவான உணர்வுமட்டும் நிலைத்திருந்தது அகத்தில்.

அஸ்தினபுரியை படகுகள் சென்றடைந்தபோது சபரிக்கு சற்று ஆறுதல் ஏற்பட்டது. சுப்ரியை விரைவில் மீண்டுவிடுவாள் எனத் தோன்றியது. கால்கள் பழகிய நிலைத்த தரை சித்தத்தையும் நிலைகொள்ளச் செய்யும் என எண்ணினாள். அன்று காலை புலரி எழுந்ததும் அவர்கள் படகுத்துறையை அணையக்கூடும் என்று சொல்லப்பட்டது. அவள் கருக்கிருளிலேயே சுப்ரியையை அழைத்து உள்ளே கொண்டுசென்று நீராட்டி கூந்தல் முடைந்தாள். முகச்சுண்ணமும் வண்ணமும் தீட்டினாள். அரசியருக்குரிய பொன்னூலாடையும் அணிகளும் அணிவித்தாள். சுப்ரியை அதையெல்லாம் அறிந்ததுபோலவே தெரியவில்லை. பாவையை அணிவிப்பதுபோலிருந்தது.

“தாங்கள் சொன்னபடி அனைத்து அணிகளையும் கொண்டுவந்திருக்கிறோம், அரசி... தாங்கள் விரும்புவதை அணியலாம்” என்றாள் சபரி. “ஆம்” என்று அவள் பொருளில்லாமல் சொன்னாள். “மகத அரசியிடம் மட்டுமே இருக்கும் செவ்வைரம் பதித்த நெற்றிச்சுட்டி உள்ளது... அதை

எடுக்கட்டுமா?” என்றாள் சபரி. “ஆம்” என்றாள் சுப்ரியை. “அன்றி, இந்த வெண்பட்டாடைக்கு நீலமணி பொருந்துமென எண்ணுகிறேன். அருமணிப் பதக்கம் ஒன்றுள்ளது. நாம் அதை காம்போஜ அரசரிடமிருந்து கப்பமாகப் பெற்றோம். அதை சூடுகிறீர்களா?” அதற்கும் சுப்ரியை பொருளில்லாமல் “ஆம்” என்று தலையசைத்தாள்.

சபரி பெருமூச்சுவிட்டாள். பின்னர் மேலே கேள்விகளேதுமின்றி அவளை அணிசெய்தாள். அவளை ஆடிமுன் நிறுத்தி “முழுதணிக்கோலம், அரசி. இத்தகைய கோலத்தில் நீங்கள் சம்பாபுரியில்கூட எழுந்தருளியதில்லை” என்றாள். அவள் தலையசைத்தாள். “அஸ்தினபுரியின் அரசியர் எவருக்கும் நிகராக அணிகள் இருக்கவியலாது. ஒருவேளை முதலரசி பானுமதி கொண்டிருக்கலாம். பாரதவர்ஷமே பணிந்து கப்பம்கட்டிய அரசரின் அரசி நீங்கள் என அறிய உங்கள் அணிகளை நோக்கினாலே போதும்.” அவளிடம் சீற்றமோ இகழ்ச்சியோ வெளிப்படும் என எண்ணியே அவள் அதை சொன்னாள். ஆனால் சுப்ரியை அதற்கும் “ஆம்” என்றாள்.

சபரி சலிப்புடன் பெருமூச்சுவிட்டாள். “இன்னும் சற்றுநேரத்தில் நாம் படகுத்துறையை அடைவோம், அரசி. அங்கே தேர்கள் ஒருக்கமாகி நின்றிருக்கும். அங்கிருந்து சாலையில் சென்று அஸ்தினபுரியின் கோட்டையை அடையவேண்டும்” என்றாள். சுப்ரியை தலையசைத்தபடி படகின் விளிம்புக்குச் செல்ல “அரசி, தாங்கள் அங்கே நிற்கக்கூடாது. தாங்கள் தோன்றுவதற்கென நெறிகள் உள்ளன. மேலும் ஆடையும் அணியும் காற்றில் கலைந்துவிடக்கூடும்” என்றாள் சபரி. அவள் தலையசைத்துவிட்டு மரவுரி விரித்த படுக்கையில் அமர்ந்தாள்.

படகுகள் அஸ்தினபுரியின் பெரிய அரசப்படகுத்துறையை சென்றடைந்ததை கொம்பொலிகளும் முரசுமுழக்கமும் அறிவித்தன. ஏவல்படகுகள் அணுகி ஏவலர் இறங்கிச்சென்று நின்றனர். காவலர்கள் நிரைநிரையாக இறங்கி அணிவகுத்தனர். மங்கல இசையும் வாழ்த்தொலிகளும் எழுந்தபடியே இருக்க அரசப்படகு முகம்நீட்டி துறைதொட்டது. கர்ணனும் சிவதரும் நடைபாலத்தினூடாக கரைநோக்கி சென்றனர். அவர்களுக்கு முன் அங்கநாட்டின் சூரியக்கொடி ஏந்தி ஒரு வீரன் சென்றான். கர்ணனின் யானைச்சங்கிலிக் கொடியுடன் இன்னொருவன் தொடர்ந்தான். கர்ணன் ஒளிவிடும் பொற்கவசமும் மணிக்குண்டலங்களும் செம்பருந்தின் இறகுசூடிய அங்கத்தின் மணிமுடியுமாக அரசணிக்கோலத்தில் இருந்தான்.

அவர்களை வரவேற்க துர்மதனும் துச்சகனும் வந்திருந்தார்கள். அவர்கள் கைகூப்பியபடி அணுக அமைச்சர் கனகரும் துணையமைச்சர் மாதவரும் பின்னால் வந்தனர். முறைமைப்படி அணித்தாலம் உழிந்து பரத்தையர் வரவேற்றனர். மங்கல இசைசூழ, வாழ்த்தொலிகள் எழ அவர்கள் கர்ணனை வரவேற்று தேரிலேற்றி அழைத்துச்சென்றனர். அதன் பின்னரே அவர்கள் சென்ற படகு கரையணைய ஆணை எழுந்தது.

படகின் முகப்பு கரைமேடையை அடைந்தபோதுதான் சபரி அவர்களை வரவேற்க படகுத்துறையில் அஸ்தினபுரியின் அரசியரான அசலையும் தாரையும் வந்திருப்பதை கண்டாள். அவர்களுக்குப் பின்னால் நின்றிருந்த அரசியரை அவளால் அடையாளம் காணமுடியவில்லை. உள்ளே ஓடிச்சென்று மஞ்சத்தில் சாளரத்துளையினூடாக நோக்கி அமர்ந்திருந்த சுப்ரியையிடம் “அரசி, அஸ்தினபுரியின் இரண்டு அரசியர்

தங்களை வரவேற்க வந்துள்ளனர்” என்றாள். “அது வழக்கமே இல்லை. தொல்குடி ஷத்ரிய அரசர்களுக்கு மட்டுமே அந்த முறைமை அளிக்கப்படுகிறது.” சுப்ரியை “வந்துவிட்டோமா?” என்றபடி எழுந்தாள். விழிகளில் அச்சொற்களை அவள் உள்வாங்கிக்கொண்டதே தெரியவில்லை. “பொறுங்கள், அரசி. நான் அனைத்தும் சித்தமான பின் அழைக்கிறேன்” என்று சபரி வெளியே ஓடினாள்.

வெளியே கலிங்கத்தின் சூரியக்கொடி ஏறத்தொடங்கியது. முரசுகளும் கொம்புகளும் முழங்கின. “கலிங்கமகள் வாழ்க! அங்கநாட்டரசி வாழ்க!” என வீரர்கள் வாழ்த்து கூவினர். நடைமேடை நீண்டுவந்து படகின் விளிம்பை தொட்டது. சபரி அவர்களில் ஒருத்தி அவந்திநாட்டு இளவரசி அபயை என்று அடையாளம் கண்டாள். உடனே பின்னால் நிற்பவர்களில் கௌரவ அரசியர் கௌமாரி, ஸகை, சுகுமாரி, சுகிர்தை அனைவரையும் அறிந்துகொண்டாள். உள்ளே ஓடிச்சென்று “அரசி, ஏழு அரசியர் வந்து வரவேற்பது அஸ்தினபுரியின் வரலாற்றிலேயே இதுவரை நிகழ்ந்திருக்காதென்று எண்ணுகிறேன். இது எளிய செய்தி அல்ல. நாளை சூதர்கள் பாடுவார்கள், சொல்லி அழியாது வாழும் நாள் இது...” என்றாள்.

“வந்துவிட்டோமா?” என சுப்ரியை ஆர்வமின்றி கேட்டாள். சபரி திகைத்துவிட்டாள். ஒருகணம் சினம் எழுந்து முகத்தை அனலாக்கியது. ஆணவத்தின் உச்சம் அது என்று தோன்றியது. அப்படி தருக்க அவள் யார், கலிங்கத்தின் ஒரு பகுதியை ஆளும் அரசனின் இளைய அரசியின் மகள் மட்டும்தானே? சித்ராங்கதனை பேரரசன் என்று எவரும் எண்ணுவதில்லை. “சென்றமுறை தங்கள் தந்தை தட்சிண கலிங்கத்திலிருந்து அவந்தி சென்றபோது அரசரின் ஏழாம் மைந்தர் வந்து

வரவேற்றார் என்பதையே சூதர்களைக்கொண்டு செவிக்காவியமாக பாடச்செய்தார்கள். இதோ, அவந்தியின் அரசியே வந்து நின்றிருக்கிறார்கள்” என்றாள். அவள் எண்ணியதுபோல சுப்ரியை சினம் கொள்ளவில்லை. “நன்று, நாம் இறங்கலாமா?” என்றாள்.

சுப்ரியையின் முகத்தை கூர்ந்து நோக்கிய சபரி அவள் சித்தம்பிறழ்ந்திருக்கலாமோ என ஐயுற்றாள். ஆனால் இயல்பாக எழுந்த சுப்ரியை “நாம் செய்யவேண்டியதென்ன என்று அவர்கள் செய்யும் கையசைவுகளைக்கொண்டு கணித்து என்னிடம் சொல்லிக்கொண்டிரு” என கூந்தலை சீரமைத்தாள். வெளியே வரவேற்கும் கொம்பொலிகள் எழுந்தன. சபரி அவள் ஆடைகளையும் குழலையும் சீரமைத்து “வருக, அரசி!” என அழைத்துச்சென்றாள். பாவைபோல நீளடிவைத்து சுப்ரியை நடந்தாள். அவள் மேலாடை தலையிலிருந்து நழுவியதை உணரவில்லை. சபரி அதை எடுத்து அவள் கொண்டைமேல் இட்டாள்.

சுப்ரியை வெளியே தோன்றியதும் வாழ்த்தொலிகள் உச்சம்கொண்டன. நடைமேடையினூடாக அவள் வெளியே சென்றதும் மலர்மழை பொழிந்தது. அஸ்தினபுரியின் மண்ணில் அவள் காலடி வைக்குமிடத்தில் மலரிட்டனர். அசலையும் தாரையும் அபயையும் அருகணைந்து வணங்கி “அங்கநாட்டரசிக்கு தலைவணங்குகிறோம். அங்கே அரண்மனை முகப்பில் தங்களுக்காக மூத்த அரசியர் சத்யசேனையும் சத்யவிரதையும் அரசி பானுமதியுடன் காத்திருக்கிறார்கள். தங்களை நேரடியாகவே அகத்தளத்திற்கு கூட்டிச்செல்லும்படி பேரரசி காந்தாரியின் ஆணை. தங்களுக்காக நகரே

ஒருங்கியிருக்கிறது” என்றனர். தாரை “அஸ்தினபுரி மகிழும் நன்னாட்களில் ஒன்று இது, அரசி” என்றாள்.

அபயை “அனைவரையும்விட அரசர் மகிழ்வுகொண்டிருக்கிறார். ஏழுமுறை கனகரே வந்து இங்கே அனைத்தையும் ஒருக்கியிருக்கிறார்” என்றாள். ஸகை “இது தங்கள் அரசென்றே கொள்க, அரசி... வருக!” என்றாள். அவர்கள் வழிநடத்தி கூட்டிச்செல்ல சுப்ரியை நடந்தாள். அவள் திரும்பி நோக்க சபரி அவள் எண்ணத்தை உய்த்துணர்ந்து “அணிப்பேழைகள் அனைத்தையும் அரண்மனைக்கே கொண்டுவரும்படி ஆணையிட்டுள்ளேன், அரசி” என்றாள். ஆனால் அச்சொற்களை அவள் உளம்பெறவில்லை என விழிகள் காட்டின. “இந்தப் படகு நாம் செல்லும்வரை இங்கே நின்றிருக்குமா?” என்றாள் சுப்ரியை. சபரி திகைத்து திரும்பி நோக்கியபின் “ஆம்” என்றாள். அசலை “நீங்கள் திரும்பிச்செல்ல இன்னும் நெடுநாட்களாகும், அரசி. வேள்விக்குப் பின் இங்கே அரசவைக்கூடுகைகளே பல உள்ளன, தங்கள்பொருட்டு விழவுகளேகூட ஒருங்கமையக்கூடும்” என்றாள்.

வெண்ணிறமான கொழுத்த உடலும் பெரிய கைகளும் உருண்ட முகமும் கொண்டிருந்த அசலையின் சிறிய உதடுகளும் கண்களும் சேர்ந்து எப்போதுமே சிரித்துக்கொண்டிருப்பவை போலிருந்தன. அவளை எங்கோ பார்த்திருப்பதுபோல சபரி எண்ணினாள். அவள் உள்ளத்தை உணர்ந்துகொண்ட அசலை “என் அக்கையை பார்த்திருப்பீர்கள். நான் அவள் தோற்றம் கொண்டவள்” என்றாள். சபரி “ஆம்” என்றாள். சுப்ரியை “நாம் செல்வதுவரை இப்படகு இங்கேயே நின்றிருக்கட்டும்” என்றாள். சபரி சிறு ஒவ்வாமையை உணர்ந்தபடி “ஆம் அரசி, ஆணை” என்றாள்.

அவர்கள் தேர்களை நோக்கி சென்றனர். பொன்முலாம் பூசிய வெள்ளித்தேர் கலிங்கக்கொடியுடன் நின்றிருந்தது. சபரி மீண்டும் உள எழுச்சியுடன் “பொற்சுடர்தேர் அரசி, தங்களுக்காக” என்றாள். “ஆம்” என்றாள். சபரி பெருமூச்சுவிட்டாள். அவள் உள்ளம் அமைந்து அனைத்து எண்ணங்களும் அசைவிழந்தன. காவலர்கள் கரிய புரவிகளில் வேல்களுடன் அணிவகுத்து முன்னால் சென்றனர். தொடர்ந்து மங்கலச் சேடியரின் தேர்கள். அதைத் தொடர்ந்து வந்து நின்ற வெள்ளித்தேரில் ஏறும்படி அசலை கைகாட்டினாள். சபரி “ஏறுக, அரசி!” என்றாள். சுப்ரியை படிகளில் ஏறி உள்ளே அமர்ந்தாள். தன் மேலாடையை எடுத்து முகம் மீது போட்டுக்கொண்டாள்.

சபரி ஏறி அமர்ந்தாள். அசலை “தேர் கோட்டைமுகப்பை அடைந்ததும் திரைகள் அகலட்டும். கலிங்க அரசி மக்கள் காண நகர்நிறைகோலத்தில் செல்லவேண்டுமென்று பேரரசியின் ஆணை” என்றாள். “ஆணை” என சபரி தலைவணங்கினாள். திரைகள் சரிய தேர் கிளம்பியது. சுப்ரியை “நம் படகுகள் அனைத்தும் இங்கே நின்றிருக்கும் அல்லவா?” என்றாள். “ஆம், அரசி” என்ற சபரி ஏதோ நீரணங்கு அரசியை பற்றிவிட்டது என்ற முடிவுக்கு வந்தாள். அஸ்தினபுரியில் ஏதேனும் நிமித்திகனை எவருமறியாமல் அழைத்து அவளை நோக்கச் செய்யவேண்டும். முடிந்தால் அணங்கு ஒழிய ஒரு வெறியாட்டையும் இரவில் இயற்றிவிடவேண்டும்.

அவர்களின் தேர் மேலேறி அஸ்தினபுரி செல்லும் சாலையை நோக்கி சென்றது. சபரி திரைவழியாக நோக்கியபோது அசலை திரும்பி சுங்கமாளிகைக்கு அருகே கங்கையின் நீர்ப்பரப்பின் அருகே கிளைபரப்பி நின்ற ஆலமரத்தடியில் இருந்த சிற்றாலயத்திலமர்ந்த அன்னை ஒருத்தியின் முன் கைகூப்பி

நிற்பது தெரிந்தது. அருகே பிற இளவரசியர் நின்றனர். அது அம்பை அன்னையின் ஆலயம் என அவள் நினைவுகூர்ந்தாள். அஸ்தினபுரியின் அமுதகல முத்திரைகொண்ட பெருவளைவைக் கடந்து தேர் சென்றது. அது விரைவு கொண்டதும் சபரி பதற்றம் விலகி சாய்ந்தமர்ந்தாள். சுப்ரியை திரைகளை விலக்கி வெளியே சென்றுகொண்டிருந்த குறுங்காட்டை நோக்கிக்கொண்டிருந்தாள்.

புதிய சாலைகள் இரண்டு கிளைபிரிந்து சென்றன. “இடப்புறம் செல்வது வேள்விக்காட்டுக்கு, வலப்புறம் அந்தணர்குடிகளுக்கு” என்றாள் சபரி. “அரசி, இதைப்போல ஒரு வேள்வி இதற்கு முன்னர் கார்த்தவீரியர் மட்டுமே நிகழ்த்தினார் என்கிறார்கள்.” சுப்ரியை மறுமொழி சொல்லாமல் நோக்கிக்கொண்டு வந்தாள். “இங்குள்ள வரவேற்பைக் கண்டால் நாம் எண்ணிவந்தது எளிதில் ஈடேறுமென்று தோன்றுகிறது. அரசத்தோழர் என நம் அரசர் வேள்வியவையில் அமர்வார். அருகே நீங்களும் முடிசூடி அமர்வீர்கள்.”

சுப்ரியை அதை கேட்டாளா என ஐயுற்று “ஆனால் ஒருவேளை அந்த உரிமையை நமக்கு மறுக்கும்பொருட்டு இந்த மிகையான வரவேற்பு அளிக்கப்படுகிறது என்றும் கொள்ளலாம்” என்றாள் சபரி. அதற்கும் அவளிடம் எதிர்வினை இல்லை என்று கண்டு பெருமூச்சுவிட்டு கால்களை நீட்டி கண்களை மூடிக்கொண்டாள். தேரின் குலுக்கல்களில் அவள் நீர்ப்பரப்பின் மேல் அலைவுறும் படகொன்றில் அமர்ந்திருப்பதாக உணர்ந்தாள்.

# குருதிச்சாரல் - 67

**பகுதி பத்து : பெருங்கொடை – 6**

புலரியில் சுப்ரியை ஒரு கனவு கண்டாள். மிகச் சிறிய படிகள். அவை சதுர வடிவான கிணறு ஒன்றுக்குள் மடிந்து மடிந்து இறங்கிச் செல்ல மங்கலான ஒளியில் அப்படிகளின் மேற்பரப்பை மட்டுமே நோக்கியபடி அவள் காலெடுத்து வைத்து இறங்கிச் சென்றுகொண்டே இருந்தாள். மேலும் மேலுமென படிகள் இருளிலிருந்து எழுந்து வந்துகொண்டிருந்தன, ஏடு புரளும் முடிவற்ற நூல் என. தலைக்குமேல் மெல்லிய ஒளியுடன் தெரிந்த அச்சதுரத் திறப்பு சிறிதாகியபடியே சென்றது.

இருமுறை கால் தடுமாறி சுவரைப் பற்றிக்கொண்டு உடல் நடுங்கி நின்றபோதுதான் காலடிக்குக்கீழ் எத்தனை ஆழம் என்று தெரிந்தது. அங்கிருந்து குளிர்ந்த காற்றில் மட்கும் தோலும் மயிரும் எழுப்பும் கெடுமணம் வந்துகொண்டிருந்தது. திரும்பி மேலே சென்றுவிடலாமா என்று தயங்கி ஆனால் தவிர்க்க இயலாத ஓர் அழைப்பிற்கு உளம்கொடுத்தவள்போல அவள் சென்றுகொண்டிருந்தாள். பலமுறை நின்று மூச்சுகொண்டு மேலும் சென்று அண்ணாந்து பார்த்தபோது அச்சதுரம் மிகச் சிறிய ஒரு வட்டம்போல கரிய வானில் அசைவற்று நின்றிருந்தது.

இருளுக்குப் பழகிய விழிகளுக்கு பிறிதொரு இருள் வடிவென படிகள் புலப்பட்டன. ஆழத்தில் மூச்சொலியும் முனகலோசையும் கேட்டன. அவள் நன்கறிந்திருந்த ஒரு குரல் “அரசி” என்றது. மேலும் பல படிகள் இறங்கி கீழே நோக்கியபோது முடிவிலாது சென்றுகொண்டிருந்த படிகளை பார்த்தாள். இதை யார் கட்டினார்கள்? எதன் பொருட்டு? இது

கனவிலன்றி பிறிதெங்கும் இருக்க இயலாது. இது கனவுதான். ஆனால் இங்கு பலமுறை வந்திருக்கிறேன். இப்படிகளை கால்கள் நன்கு அறிந்திருக்கின்றன. இது எந்த இடம்? கலிங்கமா? அங்கமா? இல்லை, நான் அறிந்த எந்நிலமும் அல்ல.

மீண்டும் கீழிறங்கத் தொடங்குகையில் நெடுந்தொலைவு வந்துவிட்டோம், இத்தனை படிகளையும் திரும்பி மேலேறிச்செல்வது இயல்வதே அல்ல, எப்போதைக்குமென இதற்குள் சிக்கிக்கொண்டுவிட்டோம் என்று ஆழம் பதறிக்கொண்டிருந்தது. கீழே மீண்டுமொருமுறை அக்குரல் "அரசி" என்றது. மறுமுறை மிகத் தெளிவாக குரல் கேட்கவும் அவள் விழித்துக்கொண்டு "யார்?" என்றாள். எழுந்து அமர்ந்து அறையை நோக்கினாள். அகல்சுடர் கரிகொண்டு எரிய சுவர்கள் செந்நிறமாக அசைந்தன.

சபரி அவளருகே வணங்கி நின்றிருந்தாள். "அரசி, புலரியிலேயே தாங்கள் சித்தமாக இருக்கவேண்டும் என்று சொல்லப்பட்டது" என்றாள். "ஆம்" என்றபின் எழுந்து அமர்ந்து குழல் சுருட்டிக்கட்டி "ஒரு கனவு" என்றாள். சபரி புன்னகைத்து "நற்கனவு என்று எண்ணுகின்றேன்" என்றாள். "நெடுநாட்கள் நீங்கள் எண்ணிய அனைத்தும் நேற்று ஈடேறின. இரவில் நான் எண்ணிப்பார்க்கையில் இவை நிகழுமென்றே கருதியிருக்கவில்லை என்று உணர்ந்தேன். கோட்டை மீது தங்கள் பொருட்டு கலிங்கக் கொடி ஏறியது. முகப்பு வாயிலில் ஏழு அரசியர் தங்களை வரவேற்று அழைத்துச் சென்றனர். அஸ்தினபுரியின் குடிகள் அரசப் பெருஞ்சாலையின் இருபுறமும் கூடிநின்று தங்களை வாழ்த்தி அரிமலர் தூவினர். மங்கல இசையும் குரவை ஒலியும் பெருகிச்சூழ அரண்மனை முற்றத்தை வந்தடைந்தீர்கள்."

சுப்ரியை அவளுக்கு விழிகொடுக்காமல் தன் மேலாடையை எடுத்துக்கொண்டாள். சபரி மேலும் ஊக்கம்கொண்டு "அரண்மனைமுற்றத்தில் அஸ்தினபுரியை ஆளும் மாமன்னர் துரியோதனரின் பட்டத்தரசி பானுமதியே தங்களை வரவேற்க நின்றிருந்தார். உடன் இளைய அரசி சுதர்சனையும் வந்திருந்தார். இளைய அரசி பட்டத்தரசியுடன் இணைந்து நிற்பது அரிதினும் அரிது என்று இங்கே சொல்லிக்கொள்கிறார்கள். நேற்றெல்லாம் சேடியர் அதைத்தான் பேசிக்கொண்டிருந்தார்கள்" என்றாள். சுப்ரியை அதை செவி கொள்ளாதவள்போல "நீராட வேண்டுமல்லவா?" என்றாள்.

சபரி ஏமாற்றத்துடன் "ஆம்" என்றாள். "நேற்று மிகவும் களைத்துவிட்டேன்" என்று சுப்ரியை சொன்னாள். "ஆம் அரசி, நானும் களைத்திருந்தேன். கோட்டை முகப்பிலிருந்து அரண்மனைக்கு வந்து சேர்வதற்கே மூன்று நாழிகை ஆகிவிட்டது. அனைத்து தெருச்சந்திகளிலும் தேர் நின்று குடிகளின் வாழ்த்துகளை பெற்றுக்கொள்ள வேண்டியிருந்தது" என்று சபரி சொன்னாள். திரும்பிப்பார்க்காமல் சுப்ரியை நடக்க அவளைத் தொடர்ந்தபடி சென்று சபரி "இன்று புலரியில் சம்பாபுரியிலிருந்து பறவைச் செய்தி ஒன்று வந்தது. இவ்வேளையில் அது பொருத்தமானதா என்று தெரியவில்லை" என்றாள்.

அதையும் சுப்ரியை செவி கொள்ளவில்லை என்று தோன்றவே சிற்றடி எடுத்து வைத்து அவளுக்கு இணையாக நடந்தபடி "தங்கள் முதுசேடி சரபை நேற்று அந்தியில் உயிர் துறந்தாள்" என்றாள். சுப்ரியை திரும்பிப்பார்த்து "நோயுற்றிருந்தாள் அல்லவா?" என்றாள். அச்செய்தியும் அவளைச் சென்று தைக்கவில்லை என்று சபரிக்கு தோன்றியது. "ஆம் அரசி,

கலிங்கத்திலிருந்து தங்கள் பொருட்டு வந்து உடன் பணியாற்றியவள். அரசரின் சினத்திற்கு ஆளானதால் விலக்கப்பட்டாள். ஆயினும் தங்கள் ஆதரவில் சம்பாபுரியில் தனிஇல்லத்திற்குச் சென்ற பின்னர் அனைவராலும் மறக்கப்பட்டாள்” என்றாள். சுப்ரியையின் விழிகளில் சினம் எழுவதைக் கண்டதும் விரைந்து “ஆறுமாதம் முன்புகூட நாம் சென்று பார்த்து வந்தோம். தங்கள் கைகளைப்பற்றி கண்களில் ஒற்றியபடி விம்மியழுதாள்” என்றாள் சபரி. சுப்ரியை “ஆம், அளியள்” என்றாள்.

சபரி தன் உள்ளே எழுந்த புன்னகையை காட்டாமல் “அவைகளில் தலைநிமிர்ந்து கோல்கொண்டு நின்றிருந்த அவளுடைய உருவம் என் விழிகளில் நிற்கிறது” என்றாள். “ஆம்” என்றாள் சுப்ரியை. “ஆனால் அன்று நாம் பார்த்தவள் நைந்து பாதி மட்கி மண்ணில் பதிந்து கிடக்கும் வாழைத்தண்டு போலிருந்தாள்” என்றாள் சபரி. அந்த ஒவ்வொரு சொற்றொடரிலும் தான் கொடுத்த அழுத்தத்தை சுப்ரியை உணர்கிறாளா என்று ஓர விழியால் பார்த்தாள். சுப்ரியை பெருமூச்சுவிட்டு “நன்று, அவள் ஆத்மா நிறைவுறுக! சம்பாபுரிக்கு என் செய்தியை அனுப்புக! தன் குலத்திற்குரிய அனைத்து முறைமைகளுடனும் அவள் உடல் எரியூட்டப்படட்டும்” என்றாள்.

அப்போது சுப்ரியையின் விழிகளில் வந்து திகழ்ந்து உடனே மறைந்த துயர் சபரியை சற்று ஆறுதல்படுத்தியது. “ஆம் அரசி, நாம் மீண்டு சென்ற உடனே அவள் சிதைத்தடத்திற்குச் சென்று படையலிட்டு முறைச்சடங்கு செய்யவேண்டும். அவளுக்கென ஒரு படுக்கைக்கல் தென்புலத்தில் நாட்டப்பட வேண்டும்” என்றாள். சுப்ரியை புருவம் சுளித்து “திரும்பிச்

செல்லும்போதா?” என்றாள். “ஆம், அரசி. இங்கு வேள்வி முடிந்ததும்...” என்று சொல்லெடுத்த சபரி நிலையழிந்த விழிகளுடன் சுப்ரியை வேறெங்கோ பார்ப்பதைக் கண்டு நிறுத்திக்கொண்டாள். சுப்ரியை “நீராட்டறை இங்கல்லவா?” என்றாள்.

“ஆம் அரசி, அனைத்தும் சித்தமா என்று நோக்கிவிட்டுத்தான் தங்களை அழைக்க வந்தேன். தாங்கள் நீராடி வருகையில் ஆடை அணிகள் அனைத்தையும் எடுத்து வைத்திருப்பேன்” என்றாள் சபரி. மீண்டும் அவளை அறியாமலேயே உள்ளெழுந்த மகிழ்ச்சியுடன் “இன்று அஸ்தினபுரியின் பட்டத்தரசிக்கு நிகராக நீங்கள் அவையமரவிருக்கிறீர்கள். தாங்கள் அறிந்திருப்பீர்கள், தங்கள் உடன்பிறந்தவர் சுதர்சனையும் இங்கே அரசரின் துணைவிதான். எந்த அவையிலும் அவரை அமர்த்துவதில்லை. எவ்விழாவிலும் அவர் பங்கெடுத்ததுமில்லை. அவ்வாறு ஒருவர் இருப்பதையே அனைவரும் மறந்துவிட்டனர். இன்று உங்களுக்காக அவர்கள் அளிக்கும் அவைமுறைமை பல்லாண்டுகளாக அவருக்கு மறுக்கப்பட்டது” என்றாள்.

சுப்ரியை ஒன்றும் சொல்லவில்லை. சபரி மீண்டும் “யாரிவர் என்று இங்குள்ள மூத்த குடிகளும் பெருவணிகரும் நோக்கட்டும், கலிங்கத்து அரசி என்ற சொல் இன்னும் சில நாள் இந்நகரத்தின் நாவுகளில் நிகழட்டும்” என்றாள். சுப்ரியை நீராட்டறையின் வாயிலை அடைந்து நின்று “விரைந்து நீராடவே எனக்கு விருப்பம்” என்றாள். “ஆனால் அவையமர்வதனால் மஞ்சள் சந்தன மெழுக்கும், எண்ணெய் உழிச்சலும், புகையாட்டும் நறுஞ்சுண்ணப்பூச்சும் தேவையல்லவா?” என்று சபரி சொன்னாள். சலிப்புடன் தலையசைத்துவிட்டு சுப்ரியை உள்ளே சென்றாள்.

நீராட்டறைக்குள் அவளைக் காத்து நின்றிருந்த சேடியர் தலைவணங்கினர். தலைமை நீராட்டுச் சேடி "கலிங்க அரசிக்கு நல்வரவு. அரச முறைப்படி முழு நீராட்டுக்கு என்று அனைத்தையும் ஒருக்கியுள்ளோம்" என்றாள். அவள் மறுமொழி சொல்லாமல் சென்று சிறிய பித்தளைப் பீடத்தில் அமர அவர்கள் அவள் ஆடைகளை களைந்தனர். தலைமை நீராட்டறைச் சேடி "என் பெயர் சூக்ஷ்மை. நான் இங்கு பட்டத்தரசிக்கும் பேரரசிக்கும் மூத்த அரசியருக்கும் மட்டுமே நீராட்டுப்பணி செய்வது வழக்கம். நானே வரவேண்டுமென்று பட்டத்தரசி ஆணையிட்டதனால் வந்தேன்" என்றாள். அவள் ஒன்றும் சொல்லாமல் தரை நோக்கி அமர்ந்திருந்தாள்.

சூக்ஷ்மை அவள் குழல்கற்றைகளைப் பிரித்து பின்பக்கம் விரித்திட்டாள். இரு நீராட்டுச் சேடியர் அவள் கால்களை நீட்டி நகங்களை ஒழுங்குபடுத்தத் தொடங்கினர். மஞ்சள் சந்தனக் கலவையை சுட்டுவிரலால் குழைத்தபடி சூக்ஷ்மை "தங்கள் வருகை இரு நாட்களாகவே இங்கு உவகையுடன் பேசப்படுகிறது, அரசி. தங்களை சந்திப்பதற்கு பேரரசியும் பட்டத்தரசியும் மிகுந்த ஆவலுடன் இருந்தனர். அங்கநாட்டரசருக்கு அரசியாகி வந்தபின் இத்தனை ஆண்டுகளில் முதன்முறையாக அஸ்தினபுரிக்கு வருகிறீர்கள் அல்லவா?" என்றாள். சுப்ரியை தலையசைத்தாள்.

"நேற்று தங்களை பேரரசி காந்தாரி சந்தித்ததைப்பற்றி அரண்மனையில் இன்று சேடியர் வியந்து பேசிக்கொண்டனர். தங்களை இடைவளைத்து அருகமர்த்தி தோளையும் கன்னங்களையும் இடையையும் தடவி நோக்கி பேரரசி மகிழ்ந்தார்கள் என்றார்கள். தன் மருகியரையும் பெயர் மைந்தர்

மனைவியரையும் மட்டுமே அவ்வண்ணம் பேரரசி தோளுடன் அணைத்துக் கொள்வார்” என்றாள் சூக்ஷ்மை. சுப்ரியை அவையனைத்தையும் தான் மகிழும்பொருட்டு அவள் சொல்கிறாள் என்று உணர்ந்தாள். அவள் பேசுவதை தான் விரும்பவில்லையென்று எப்படி தெரியப்படுத்துவது என்று எண்ணி பின்னர் அவ்வெண்ணத்தை அகற்றினாள்.

சேடியரின் கைகள் அவள் உடலில் அலைந்துகொண்டிருந்தன. நாய்மூக்கின் முத்தங்கள்போல என தோன்றியதுமே சரபையின் முகம் நினைவிலெழுந்தது. அருகில் அவள் நிற்பதைப்போல மெல்லிய திடுக்கிடலுடன் அவள் திரும்பிப்பார்த்தாள். பின்னர் பெருமூச்சுடன் கண்களை மூடி பீடத்தில் சாய்ந்து அமர்ந்தாள். சரபை அவளிடம் எதையோ சொல்ல நாவெடுப்பதுபோல் தோன்றியது. “என்ன?” என்று அவள் கேட்டாள். சூக்ஷ்மை “அரசி?” என்றாள். “அல்ல, உன்னிடம் அல்ல” என்றபின் மீண்டும் அவள் விழிமூடினாள். கலைக்க முடியாததாக சரபை முகமே நின்றது. “என்னடி?” என்று அவள் மீண்டும் கேட்டாள். உதடு அசைய ஒலியின்றி மீண்டும் சரபை எதையோ சொன்னாள். “என்ன சொல்கிறாய்?” என்று அவள் மீண்டும் கேட்டாள். அது மெல்லிய முனகல்போல் எழ காலில் நகத்தை ஒருக்கிக்கொண்டிருந்த அணிச்சேடி “அரசி…” என்றாள். “ஒன்றுமில்லை” என்று அவள் சொன்னாள்.

சூக்ஷ்மை “இங்குள்ள பெண்டிர் அனைவரும் தங்களை அணிசெய்து கொள்கிறார்கள். அஸ்தினபுரியில் நிகழவிருக்கும் இப்பெருவேள்வி ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு பாரதவர்ஷத்தில் நடந்தது என்கிறார்கள்” என்றாள். “வேள்வியென்றால் அது வேள்விச்சாலையில் நிகழும் அனற்கொடை மட்டுமல்ல. பெருவேள்விகளின்போது

வேதாங்கங்கள் உபவேதாங்கங்கள் அனைத்துமே பயிலப்படும். சொல்லொலி, செய்யுளமைவு, இலக்கணம், வானியல், சடங்கியல் என வேதக்கூறுகளைச் சேர்ந்த அறிஞர்களும் வருவார்கள். உடலியல், சிற்பவியல், வில்லியல், கலையியல் என்னும் நான்கு துணைவேதங்களையும் இங்கே முழுமையாக நிகழ்த்தவேண்டும் என்பது நெறி. துணைவேதக்கூறுகளில் ஒன்றுகூட விடப்படலாகாது. ஒவ்வொரு துறையிலிருந்தும் முதன்மையர் அனைவரும் நாளும் என நகர்நுழைந்துகொண்டிருக்கிறார்கள்."

பேசியபடியே அவள் பூச்சுவிழுக்கை கலந்து முடித்து மரவுரியால் கைகளை துடைத்துக்கொண்டாள். "சில நாட்களுக்கு முன்பு இங்கு ஒவ்வொருவரும் குருதி பெருகும் பெரும்போர் ஒன்றுக்கான உளநிலையிலிருந்தனர். இன்று அனைவருமே போரை மறந்துவிட்டனர். இந்நகரின் நூறு மையங்களிலாவது இரவெல்லாம் கூத்தும் பாட்டும் ஆடலும் நிகழ்கின்றன. அனைத்து மன்றுகளிலும் புலவர் அமர்ந்து சொல்கூட்டுகிறார்கள். இல்லந்தோறும் சூதர்கள் வந்து பாட அமர்கிறார்கள். இன்று பாரதவர்ஷத்தின் கலை மையமென்றும் மெய்மை நிலை என்றும் அஸ்தினபுரி மாறிவிட்டிருக்கிறது" என்றாள் சூக்ஷ்மை. "அவைநிகழ்வுகள் முடிந்தபிறகு தாங்கள் பல்லக்கிலேறி இந்நகரத்தை ஒரு சுற்று சுற்றி வரலாம், அரசி. கலையென்றும் அறிவென்றும் மானுடன் அடைந்த அனைத்தையுமே ஓரிரவுக்குள் விழிகளாலும் செவிகளாலும் அறிந்து மீளலாம்."

பேசியபடியே இருப்பது அவள் இயல்பென்று தோன்றியது. அவள் சொற்களை செவிகொள்ளாமலும் இருக்கமுடியவில்லை. உள்ளம் எதையும் குவிக்காமல் கலைந்து

பரந்துகொண்டிருந்தமையால் அவள் பேச்சே அதன் எல்லைகளை அமைத்தது. சூக்ஷ்மை சந்தனவிழுக்கை தன் உடலில் வைத்தபோது மெல்லிய விதிர்ப்புடன் அவள் விழிதூக்கி அவளை பார்த்தாள். அப்போதுதான் அவள் இருபாலினத்தவள் என்று அவளுக்குத் தெரிந்தது. அதை அவள் உணர்ந்ததை உணர்ந்த சூக்ஷ்மை புன்னகைத்தாள்.

“எந்த ஊரைச் சேர்ந்தவள் நீ?” என்று சுப்ரியை கேட்டாள். “நான் கிருஷ்ணையின் கரையிலுள்ள விஜயபுரியை சார்ந்தவள். அடுமனைக் கலை பயில்வதற்காக காசிக்குச் சென்றேன். அணியறைக் கலை பயின்று அங்கிருந்து அஸ்தினபுரிக்கு வந்தேன். இங்கு வந்து ஓராண்டே ஆகிறது” என்று சூக்ஷ்மை சொன்னாள். சுப்ரியை புன்னகைத்து “நன்று” என்று கண்களை மூடிக்கொண்டாள். சூக்ஷ்மையின் கைகள் அவள் உடலில் மெழுக்குப்பூச்சுடன் வழுக்கி ஒழுகிச் சென்றுகொண்டிருந்தன. தன்னை வண்ணம் தொட்டு ஒரு திரையில் அவள் வரைந்துகொண்டிருப்பதாக சுப்ரியை உணர்ந்தாள்.

சூக்ஷ்மை “நேற்றுமுன்னாள் அஸ்தினபுரியின் தெருக்களினூடாக சென்றுகொண்டிருந்தேன். இங்குள்ள அத்தனை சொல்மன்றுகளிலும் கலையரங்குகளிலும் சென்று நோக்கிவிட வேண்டுமென்று என் உள்ளம் எழுகிறது. நான் அறியாத ஒன்று வேறெங்கோ நிகழ்ந்துகொண்டிருப்பதுபோல. இது இன்று பாரதவர்ஷத்தின் உள்ளம் என்றாகிவிட்டது. இப்பெரும்பரப்புக்குள் கடலென உளம் விரிந்த வியாசனே சிறு துளியென்று ஆவான் என்று அறிந்திருந்தாலும் என்னால் பதைத்து அலையாமல் இருக்க இயலவில்லை” என்றாள். “எத்தனை கவியரங்குகள்! எத்தனை பெருங்காவியங்கள்! சிறிய கவிதைகள், சொல்மடக்குகள் செவிப்படாமல் எங்கும்

நின்றிருக்க முடியாது. தெருமுனைகளில் எல்லாம் கொந்தளித்து நுரை பெருகி ஓடும் சூதர்பாடல்கள். ஆனால் யானையின் விழியென, குன்றாது ததும்பாது நிற்கும் சிறுசுனைகள் என, ஒளிகொண்ட குறுங்கவிதைகள்தான் என் உள்ளத்தை பித்தேற வைக்கின்றன. அவை என்னுள் எழுந்து பேருருக்கொள்கின்றன."

"கவிதைகளைக் கேட்கையில் மொழியிலன்றி பிறிதெங்கிலும் மானுடன் வெளிப்பட இயலாதென்று தோன்றுகிறது. அப்பால் சென்று ஒரு நடனத்தை பார்க்கையில் ஒன்று சொல்லி பிறிதொன்றை உய்த்துணர வைக்கும் மொழிதான் எத்தனை எளியது, நின்று நடித்து நுடங்கி அவைநிறையும் உடலுக்கு அப்பால் தெய்வங்கள் பேச மொழியேதுள்ளது என்று தோன்றுகிறது. ஒற்றைக்கம்பியில் உலவும் வில்லெழுப்பும் இசையைக் கேட்கையில் இப்புவியை இசையால் அல்லவா பிரம்மம் நிறைத்துள்ளது என உள்ளம் விம்முகிறது. பிற அனைத்தும் மீறலும் தெறிப்புகளுமாக தொடர்புறுத்துகையில் ஒன்றுதலும் இசைதலுமாக பொருள்கொண்டு நின்றிருப்பது இசைமட்டுமல்லவா என்று எண்ணம் மயங்குகிறது" என்றாள் சூக்ஷ்மை.

"ஒவ்வொரு கலையும் பேருருக்கொண்டு நானே பிரம்மம் என்கிறது. ஒன்று முழுமையென்றால் பிற அனைத்தும் இன்மை என்றே பொருளல்ல. ஒவ்வொன்றிலும் முழுமையென ஒன்று நிறையுமென்றால் அது என்ன?" என சூக்ஷ்மை தொடர்ந்தாள். "அரசி, நகருக்குள் விழிப்புற்ற உள்ளத்துடன் உலவுபவர் எவராயினும் பித்தெழாமல் மீள இயலாது. பித்துநிலையே பெருநிலை. நிகர்நிலை என்பது என்ன? ஏதோ ஒன்றைக்கொண்டு நாம் நம்மை நிலைகொள்ளச் செய்கிறோம்

என்பதுதானே? அது இந்த அன்றாடத்தில் இருந்து நாம் எடுத்துக்கொள்வது அல்லவா? நாளென்றும் பொழுதென்றும் பொருளென்றும் நமைச் சூழ்ந்திருக்கும் இவற்றுடன் நம்முள் எழும் முடிவிலியை கட்டிப்போடுவதல்லவா அது? கிழித்து வீசி எழுந்தால், மீறி மீறிச் சென்றால், நம்முள் நிறையும் பெருவெளியே பித்து. ஒன்றுக்கு உளமளிக்காமல் அனைத்துக்கும் நம்மை விரிப்பது அது."

இடைவெளியின்றி பேசியபடியே சென்றாள் சூக்ஷ்மை. அவள் உள்ளம் முழுக்க சொற்கள் என சுப்ரியை நினைத்தாள். அவள் விரல்கள் மெல்லிய விசிறல்களாக வளைந்து வளைந்தசைந்து சந்தனமஞ்சள் மெழுக்கை புரட்டின. அவள் உதவியாளர்கள் சுப்ரியையின் குழலை சிறுபிரிகளாகப் பிரித்து நறுமண எண்ணெய் பூசி சுழற்றிக் கட்டினர். எழுந்து நின்று ஆடியில் தன்னைப் பார்த்தபோது ஒரு வெண்கலச் சிலையென மாறியிருப்பதை சுப்ரியை கண்டாள். அவள் பின்எழுச்சியில் மெழுக்கு பூசியபடி "ஆடிநோக்கி நில்லுங்கள், அரசி. உடலை நோக்குவது பெண்டிருக்கு நன்று. உடல் வழியாகவே அவள் வெளிப்படமுடியும். எந்நிலையிலும் பெண் உடல் அழகானதே. அகவைக்கு ஓர் அழகு கொள்கிறது அது" என்றாள் சூக்ஷ்மை.

சுப்ரியை "இந்நகருக்குள் எவ்வளவு தொலைவு செல்ல முடியும்?" என்று கேட்டாள். அவ்வினாவிலிருந்த விந்தைத் தன்மையில் இரு அணிச்சேடியரும் விழிதூக்கினர். ஆனால் அதன் அனைத்து உட்பொருட்களையும் உடனடியாக புரிந்துகொண்ட சூக்ஷ்மை எழுந்து முகம் மலர்ந்து "வைரத்திற்குள் ஒளி எத்தனை தொலைவு செல்ல இயலும், அரசி?" என்றாள். முகம் மலர்ந்து அவளை நோக்கி "ஆம், மெய்" என்றாள் சுப்ரியை. "வேதம் என்றெழுந்தது உண்மையில்

ஒற்றைச்சொல் மட்டுமே. அச்சொல்லுக்கும் முதல்முழுமை என நின்றிருக்கும் மெய்மைக்குமான அணுவிடைவெளியை பல்லாயிரத்தில் ஒன்றென ஆக்கிய சிற்றிடைவெளியை நிரப்பவே மேலும் மேலுமென வேதங்களை கண்டடைந்தனர் மானுடர்.”

“குலத்திற்கொரு வேதம். நிலத்திற்கு நூறு வேதங்கள். வேதம் பெய்து பெய்து அவ்வெளியை நிரப்பிக்கொண்டே இருக்கின்றனர். அரசி, நால்வேதங்களும் சென்றடையாத இடைவெளியை துணைவேதங்கள், வேதக்கூறுகள் கொண்டு நிரப்பினர். ஒருபோதும் நிரம்பாதது அது. எண்ணிய அக்கணமே மானுடரை கொந்தளித்து எழச்செய்வது. ஒருகணமும் ஓயாது விசைகொள்ள வைக்கிறது” என்றாள் சூக்ஷ்மை. கனவில் பேசுபவள்போல அவள் சொற்கள் எழுந்தன. அவளை சுப்ரியை ஆடியில் நோக்கிக்கொண்டிருந்தாள். தன் உடலும் அவள் உடலும் இணைந்து ஓருடலாகத் தெரிவதாக உணர்ந்தாள்.

“நான் உன்னுடன் வருகிறேன்” என்று சுப்ரியை சொன்னாள். “என்னுடனா? எனது வழிகள் வேறு. இவ்வரண்மனையில் எங்களைப்போன்றோர் பலர் உள்ளனர். நாங்கள் ஆண்களின் நெறிகளை பேணவேண்டியதில்லை. பெண்டிரல்ல என்று எக்கணமும் கூறிவிடவும் முடியும். எனவே எங்களுக்கு வாயில் திறவாத எவ்விடமும் இங்கில்லை.” சுப்ரியை அவள் கைமேல் தன் கையை வைத்து “உன்னுடன் அன்றி பிற எவருடனும் சென்று இந்நகரை நான் நோக்க இயலாது. இதன் வெற்று முறைமைகளுக்குமேல் வெறும் தக்கையென மிதந்து செல்ல எனக்கு உளமில்லை” என்றாள்.

“அதற்கு அரண்மனை நெறிகள் ஒப்புவதில்லை, அரசி” என்றாள் சூக்ஷ்மை. “நான் நெறிகளில் நின்றிருக்க விழையவில்லை”

என்றாள் சுப்ரியை. சூக்ஷ்மை கிளுகிளுத்துச் சிரித்து "கன்றுக்குத் தறியும் கன்னியருக்கு நெறியும் என்று ஒரு சொல் உண்டு. உங்கள் சொல் அது, எங்கள் சொல் அல்ல" என்றாள். பின்னர் "இந்நகரை நீங்கள் பார்த்தாக வேண்டுமென்று ஏன் தோன்றுகிறது என்று நான் வியந்துகொண்டேன். நேற்று நீங்கள் இவ்வரண்மனையின் வாயிலில் இந்நகரின் பட்டத்தரசியால் வரவேற்கப்பட்டீர்கள். இதன் பேரரசியின் அகத்தளத்திற்கு அணிச்சேடியர் தாலமேந்தி முன்செல்ல மங்கலச்சீர்வரிசை தொடர அழைத்துச் செல்லப்பட்டீர்கள். இளமகளென அவர் மடியில் அமர்ந்தீர்கள். நான் சேடியர் குழாமிலிருந்து நோக்கிக்கொண்டிருந்தேன். ஒருகணமும் நீங்கள் அச்சடங்குகளுக்கு உளம் கொடுக்கவில்லை. உங்கள் நோக்கு உள்நோக்கி மடிந்திருந்தது. அப்போது தோன்றியது, நீங்கள் பார்க்க விரும்பியது இந்நகரின் மக்களையோ மாளிகையையோ அன்றாடமென அவர்கள் புழங்கும் ஆயிரம் சடங்குகளையோ அல்ல என்று" என்றாள்.

"இந்நகரில் இப்போது குடியேறியிருக்கும் பெரும் கனவை மட்டுமே நீங்கள் அறிய வேண்டும். அரசி, அனல்கொண்டு பழுத்த இரும்பு காரிரும்பிலிருந்து ஒளியால், நெகிழ்வால், வெம்மையால் வேறுபடுகிறது. அது உருமாற விழைகிறது. ஏனெனில் கலத்தில் நீர் என அதில் அனல் நிறைந்துள்ளது. இந்நகரில் குடியேறிய அனலை வந்து நோக்குக! அஸ்தினபுரி நோக்கி விண்ணிலிருக்கும் அனைத்து தெய்வங்களும் இறங்கிவருகின்றன என்கிறார்கள் சூதர்கள். ஒவ்வொரு கலைக்கும் அதற்குரிய தெய்வங்கள் உண்டு. ஒவ்வொரு சொல்லுக்கும் தனியாக தேவர்கள் உண்டு. ஒருவர் மிச்சமின்றி இங்கு கூடிவிடுவார்கள்."

அவள் விழிகளை சந்தித்து “தெய்வங்களெனும்போது மண்ணுக்கு அடியில் இருண்ட பேராழங்களிலிருந்து எழும் தெய்வங்களையும்தான் சொல்கிறேன். தெய்வங்களில் இருளென, ஒளியென வேறுபாடு இல்லை. முடிவின்மையே அவற்றின் இயல்பு. அங்கு இரண்டின்மையே உள்ளது” என்றாள். சுப்ரியை பெருமூச்சுவிட்டாள். மரவுரியால் கைகளை துடைத்துக்கொண்டு “மெழுக்கு முடிந்துவிட்டது, அரசி” என்றாள். அவள் கைவிரல்கள் விலகியதும்தான் அவை தன்னுடன் பேசிக்கொண்டிருந்ததாக உளமுணர்ந்தாள். அந்த விரல்களை மட்டும் தனியாக நோக்கினால் அவை ஒரு நடனமென தோன்றக்கூடும். பொருள்கொண்ட அடவுகளாக.

அணிச்சேடி “அரசி, வெந்நீர்த் தொட்டி ஒருங்கிவிட்டது” என்றாள். “வருக!” என்று சூக்ஷ்மை அவள் கையைப்பற்றி அழைத்துச் சென்றாள். இளவெந்நீர் நிரம்பிய தொட்டிக்குள் மெல்ல இறங்கி அவள் அமர்ந்தாள். அவள் உடலை நறுமண நீரால் அணிச்சேடியர் கழுவத் தொடங்கினர். அவள் குழலுக்குள் கைவிரல்களை செலுத்தி வருடி நீட்டியபடி சூக்ஷ்மை சொன்னாள் “அறிவதனைத்தும் தன்னையறிதலே என்று ஒரு சொல்லுண்டு. அறிந்திருப்பீர்கள்.” ஆம் என்று சுப்ரியை தலையசைத்தாள்.

“அறிவின்மை என்பது தன்னை அறியாதிருத்தலே.” அவள் குழலை சுருட்டி அதன் மீது மெழுக்கு நீக்கும் இலைக்குழம்பை பூசியபடி “தன்னை அறியத் தொடங்கும் முதற்கணம் தான் எனும் ஆணவம் அழியத் தொடங்குகிறது. தானென்று இறுக்கி எழுப்பி நிறுத்தியிருப்பது பொய்யே என்றும் அவை ஒன்று பிறிதைக் குறிக்கும் வீண்சொற்களின் வெறும் குவையே என்றும் உணர்வதிலிருந்து அனைத்தும் தொடங்குகிறது.

ஒவ்வொன்றையும் தொட்டு திறந்து செல்லும் ஒரு பயணம். அரசி, தங்கள் ஆணவம் அழிந்திருப்பதையே நான் கண்டேன். அது எப்போது தொடங்கியது?” என்றாள்.

சுப்ரியை விழி மூடி அமர்ந்திருந்தாள். பின்பு “எவற்றுக்கும் திரும்பிச் செல்லப்போவதில்லை என்று தோன்றியபோது” என்றாள். சூக்ஷ்மை புன்னகைத்து “நன்று” என்றாள். நீர் ஓசையிட்டது. “உங்கள் உடன்பிறந்தவரை சந்தித்தீர்களா, அரசி?” என்றாள். “முறைமைச்சொல் உரைத்தேன். சொல்லாடவில்லை” என்றாள் சுப்ரியை. “சந்தியுங்கள். ஒருவேளை அதன்பொருட்டே நீங்கள் இங்கு வந்தீர்கள் போலும்” என்றாள் சூக்ஷ்மை.

# குருதிச்சாரல் - 68

**பகுதி பத்து : பெருங்கொடை – 7**

அஸ்தினபுரியின் தெற்குப் பெருஞ்சாலையில் அங்கநாட்டுக்கு என ஒதுக்கியிருந்த தேஜஸ் என்னும் வெண்ணிற மாளிகையின் முகப்பில் பொன்முலாம் பூசப்பட்ட அணித்தேர் வந்து நின்றது. அதிலிருந்து இறங்கிய பாகனை நோக்கிச்சென்ற அங்கநாட்டு காவலர்தலைவன் தலைவணங்கி முகமன் உரைத்து உரையாடுவதை மேலிருந்து நோக்கிய சபரி மூச்சிரைக்க ஓடிவந்து அணி முழுமை செய்துகொண்டிருந்த சுப்ரியையிடம் “தேர் வந்துவிட்டது, அரசி. நாம் முகப்பிற்கு செல்லவேண்டியதுதான்” என்றாள். தன்னை மீண்டுமொருமுறை ஆடியில் நோக்கியபின் சுப்ரியை தலையசைத்தாள். அணிச்சேடி இறுதியாக ஒருமுறை அவள் ஆடைமடிப்புகளை சீரமைத்தாள். குழையிலிருந்து புல்லாக்குக்கு வந்த நான்கடுக்கு

பொற்சரடுகளை அடுக்கிப்பரப்பினாள். சுப்ரியை "போதும்" என அவள் கையை விலக்கிவிட்டு எழுந்துகொண்டாள்.

நிமித்தச் சேடி வலம்புரிச்சங்கை எடுத்துக்கொண்டு எழுந்தாள். வாய்மணப் பேழைகளையும் மலர்த்தாலங்களையும் எடுத்துக்கொண்டு ஏழு சேடியர் உடன்சென்றனர். சபரி படிகளில் இறங்கி கீழே சென்று கூடத்தில் நின்றிருந்த காவலனிடம் "அரசி எழுந்தருள்கிறார்கள்" என்றாள். அவர்கள் இயல்பாக சீர்நிலை கொண்டனர். நிமித்திகன் கொம்பை எடுத்து மும்முறை ஊதி அரசி எழுந்தருள்வதை அறிவித்தான். அவர்கள் நெடுநேரமாக நின்றிருந்தார்கள் என்பதை முகங்கள் காட்டின. அஸ்தினபுரிக்கு வந்ததைக் கொண்டாட முந்தையநாள் மதுக்களியாட்டில் இருந்தார்கள் என்பதையும்.

நிமித்தச் சேடி வலம்புரிச்சங்கு ஊதி அரசி எழுந்தருள்வதை அறிவிக்க, மங்கலத்தாலமேந்திய மூன்று சேடியர் முன்னால் வர, சுப்ரியை படிகளில் இறங்கி கூடத்திற்கு வந்தாள். அவளருகே வந்த சபரி "அரசி, இந்த அணித்தோற்றத்தில் இன்றுவரை எவரையும் நான் பார்த்ததில்லை. இந்திரன் அருகே அமர்ந்த விண்ணவர்க்கரசி இவ்வாறுதான் இருப்பாள் என்று தோன்றிவிட்டது" என்றாள். அவள் முகமனுரைக்கவில்லை என முகம் கொண்ட நெகிழ்வு காட்டியது. "முழுதணிக்கோலம் மானுடர்க்குரியதல்ல, மானுட உடலில் தெய்வங்களின் எழுகை அப்போது நிகழ்கிறது என்பார்கள்."

சுப்ரியை ஆர்வமில்லாமல் சூழ நோக்கி வெளியே நின்றிருந்த தேரை விழிதொட்டாள். சலிப்பு தோன்ற "நாம் எப்போது கிளம்புகிறோம்?" என்றாள். சபரி உணர்வுகள் அமைய "அரசரும் சிவதரும் கிளம்பி வந்த பின்னர் என்றார்கள்" என்றாள். சுப்ரியை "நாம் கிளம்பலாமே" என்றாள். "அங்கநாட்டரசர் தன்

அரசியுடன் அணித்தேரில் சென்று புஷ்பகோஷ்டத்தின் முகப்பில் இறங்கவேண்டும் என்பது அஸ்தினபுரியின் அரசரின் விழைவு என காவலர்தலைவர் சொன்னார். அங்கு அரசரின் இளையோர் துச்சாதனர் தன் இளையோருடன் உங்களுக்காக காத்திருக்கிறார்" என்றாள். "நாம் பேரவைக்கு அல்லவா செல்கிறோம்?" என்றாள் சுப்ரியை. "இல்லை அரசி, பேரவை பிற்பகலில் கூடுகிறது. அதற்கு முன்னர் உங்களை அரசர் தன் தனியறையில் சந்திக்கிறார். பட்டத்தரசியும் இளையோரும் உடன்இருப்பார்கள்" என்றாள் சபரி.

சுப்ரியை "அவர்கள் இன்னும் சந்தித்துக்கொள்ளவில்லையா என்ன?" என்றாள். "இல்லை, நேற்று மாலை நம் அரசர் நகர்புகுந்தபோது அரசர் இங்கில்லை. மகாபூதவேள்விக்கு வருகை தந்திருக்கும் அரசர்களை வரவேற்று அவர்களை மாளிகையில் அமரச்செய்வதன் பொருட்டு அரசரே நேரில் சென்றிருந்தார். வேள்விக்கூடத்தின் அருகே எழுந்திருக்கும் புதிய மண்டபத்தில் ஒரு சிறு அவைக்கூடல் நிகழ்ந்தது. அது முடிந்து அவர் வரும்போது இருளேறிவிட்டிருந்தது" என்றாள் சபரி. சுப்ரியை "இவர் என்ன செய்தார்?" என்றாள். சபரி ஒன்றும் சொல்லவில்லை. "மதுவில் நீராட்டியிருப்பார்கள். தொகுத்துக்கொண்டு வந்த வஞ்சத்தில் பாதி அணைந்திருக்கும்... என்ன செய்வதென அவர்களுக்கு நன்கு தெரியும்" என்றாள் சுப்ரியை.

அப்பால் கொம்போசை எழுந்தது. சபரி "அரசர் எழுந்தருள்கிறார்" என்றாள். முற்றத்தில் எழுந்திருந்த அங்கநாட்டுப் படைவீரர்கள் மூன்று நிரைகளாக அணி வகுத்தனர். காவலர்தலைவன் தன் இடையிலிருந்த கொம்பை எடுத்து ஊதி "அரசர் எழுந்தருள்கை!" என்று அறிவித்தான்.

அங்கநாட்டின் சூரியக்கொடியும் கர்ணனின் யானைச்சங்கிலிக்கொடியும் ஏந்தியபடி இரு வீரர்கள் முன்னால் வர கவசஉடை அணிந்த நான்கு வீரர்கள் தொடர்ந்து வந்தனர். கர்ணன் வெள்ளிக்கவசமும், கொக்குச்சிறை என வெள்ளித் தோள்காப்புகளும், வெண்நுரை என கங்கணங்களும், அங்கநாட்டின் சூரிய படம் கொண்ட மணிமுடியும் அணிந்து வெண்பட்டாடை உடுத்து நடந்து வந்தான். வெள்ளியால் ஆன குறடுகள் முயல்கள் என முந்தி முந்தி வந்தன.

கர்ணன் சீர்நடையிட்டு கூடத்தை அடைந்ததும் அங்கு நின்றிருந்த அரண்மனைப் பணியாளரும் காவலர்களும் “அங்கநாட்டு அரசர் வெல்க! நாளவன் மைந்தர் வெல்க! நிகரிலா வீரர் வெல்க! சம்பாபுரியின் தலைவர் வெல்க!” என்று வாழ்த்தொலி எழுப்பினர். கர்ணன் சுப்ரியையை எந்த உணர்வு மாற்றுமில்லாத விழிகளுடன் நோக்கியபின் சிவதரிடம் மெல்லிய குரலில் ஏதோ கேட்டான். அவர் தலையசைத்து சொன்ன உதடசைவிலிருந்து இருவரும் ஒரே தேரில் செல்வதைத்தான் கூறுகிறார் என்று அவள் அறிந்தாள். கர்ணனின் முகம் சுளிக்கிறதா என ஓரவிழி நாட்டி நோக்கினாள். அவன் அதை பொருட்படுத்தியதாக தெரியவில்லை.

தலைமைக்காவலன் அருகே வந்து “அரசே, தேர் ஒருங்கியிருக்கிறது. நற்பொழுதும் அமைந்துள்ளது” என்றான். கர்ணன் ஆம் என கையசைத்து நடக்க அவன் சுப்ரியையிடம் “வருக, அரசி. கதிரோன் தன் துணைவியுடன் என இருவரும் தன் மாளிகை முகப்பில் வந்து இறங்கவேண்டுமென்பது அஸ்தினபுரியின் அரசரின் விருப்பம் என்று செய்தி வந்தது” என்றான். கர்ணனைத் தொடர்ந்து அவள் சென்றாள். தன்

உடலில் இருந்து எழுந்த அணியோசையை வேறு எவரோ தன்னைத் தொடரும் ஓசை என அவள் உணர்ந்தாள். திரும்பி தன்னைத் தொடரும் சேடியரையும் பிறரையும் நோக்கிவிட்டு முன்னால் சென்றாள். அந்த ஓசை அவளை மீண்டும் எரிச்சலூட்டியது.

கர்ணன் சென்று தேரில் ஏறி அமர்ந்தான். சபரி உடன்வர சுப்ரியை ஏவலர் இட்ட படிகளிலேறி அதன் பீடத்தில் அவனருகே அமர்ந்தாள். அவனருகே அமரும் ஒவ்வொரு தருணத்திலும் அவன் உயரமே அவளை குன்றவும் சீற்றம்கொள்ளவும் வைப்பது வழக்கம். அவன் தோளுக்குக் கீழ் அவள் தலை அமைந்திருக்கும். விந்தையான மாயச் செயலொன்றால் குற்றுருவம் கொண்டுவிட்டதுபோல் தன்னை உணரவேண்டியிருக்கும். ஓரவிழியால் அவன் முகத்தையும் தோள்களையும் பார்த்தபின் அங்கு நின்றிருந்த வீரர்களின் கவச உடைகளையும் கூர்மின்னும் வேல்களையும் நோக்கி விழிதிருப்பிக்கொண்டாள்.

முகப்புக்காவலன் வெண்புரவியிலேறிக்கொண்டு கொம்பூதியதும் சூரியக் கொடியுடன் முதல் வீரன் கிளம்பி சாலை நோக்கி சென்றான். கர்ணனின் கொடியுடன் அடுத்த வீரன் தொடர கவச உடையணிந்த காவலரின் நான்கு நிரைகள் தொடர்ந்து சென்றன. மீண்டும் ஒரு கொம்போசை எழுந்ததும் அணித்தேர் பின்னிருந்து இளங்காற்றால் உந்தி எழுப்பப்படும் வெண்முகிலென அசைந்தெழுந்தது. தேருக்குப் பின் மங்கல இசைச்சூதர் ஏறிய தேர்களும் ஏவலர் ஏறிய புரவி நிரையும் தொடர்ந்தன. அவள் அத்தேரிலிருந்து இறங்கிவிடவேண்டும் என்று உளத்தழைவு கொண்டாள். நிறுத்தும்படி சொல்லிவிடுவோம் என்று எழுந்த சொல்லை தவிர்த்தாள்.

பின்னர் வெளியே ஓடிய நகரை நோக்கத்தொடங்கி அதில் தன்னை பொருத்திக்கொண்டாள்.

இருபுறமும் திரைகளைச் சுருட்டி மேலேற்றியிருந்ததனால் சுப்ரியை மென்புலரி வெளிச்சத்தில் விழிநிறைத்த தொன்மையான மாளிகைகளையும், கூட்டி தூய்மை செய்யப்பட்டிருந்த தெருக்களில் எஞ்சியிருந்த துடைப்பத்தின் வளைவலைகளையும் நோக்கியபடி சென்றாள். சற்றே வளைந்துசென்ற அச்சாலையின் இருபுறமும் கொன்றைகள் பொன்மலர் கொண்டிருந்தன. காலையில் தூய்மை செய்தபோது பணியாளர் அந்த மலர்களை அள்ளவில்லை என்று அவள் நினைத்தாள். ஒரு காற்று வந்து மரக்கூட்டங்களிடையே கடந்துசெல்ல யானைச்செவிபோல மெல்ல கிளைகள் அசைந்தபோதே மலர்கள் மழையென பெய்வதை கண்டாள். அவள் கண்ணெதிரிலேயே மரங்களுக்குக் கீழே பொற்கம்பளங்கள் உருவாகி வந்தன.

அச்சாலையின் மாளிகைகள் அனைத்தும் இரு கைகளாலும் சுற்றி வளைக்க முடியாத பருத்த மரத்தூண்களுக்குமேல் நுண்செதுக்குகள் கொண்ட மரத்தாலான மாடம் அமையப்பெற்றவையாக இருந்தன. வட்டக்கூம்புக் கூரைகளுக்குமேல் மையக்கம்பத்தில் கொடி நுடங்கியது. கீழிருந்த சுவர்கள் இல்லையென்று எண்ணினால் காற்றில் மிதந்து நிற்கும் மரக்கலங்களௌன தோன்றின அவை. யானைமேல் அமைந்த அம்பாரி போன்ற மரக்குடைவு உப்பரிகைகள், குவைவளைவுக்குக் கீழே உந்தி எழுந்த சாளரங்கள், அவற்றிலாடிய பட்டுத் திரைச்சீலைகள்.

அந்த வகை கட்டடங்கள் இருநூறாண்டுகள் பழைமையானவை. பீதர்நாட்டுப் பொருட்கள் மிகுதியாக வந்துசேர்வதற்கு

முந்தையவை. யவனச் சிற்பிகள் கட்டிய மாளிகைகளின் பாணியில் உள்ளூர் சிற்பிகளால் வடிவமைக்கப்பட்டவை. அவற்றை யவனிகம் என்று சொல்வார்கள். முகப்பில் முதலைவிழி என உந்திய சாளரங்களும் அவற்றில் மென்பட்டுத் திரைச்சீலைகளும் யவனிக மாளிகைகளின் தனித்தன்மைகள். திரைச்சீலைகளே ஐநூறாண்டுகளுக்கு முன்பு யவனத்திலிருந்து வந்தவைதான். ஆகவேதான் அவை யவனிகை என பெயர்கொண்டன. சிந்துவை நோக்கி செல்லச் செல்ல மாடந்தாங்கித் தூண்கள் வெண்சுதையாலோ வெண்ணிறக் கல்லாலோ ஆனவையாக மாறும். சாளரச்சட்டங்களும்கூட கல்லால் ஆனவையாக இருக்கும். கூம்புக்கூரைகளுக்கு மாற்றாக குவைமாடங்கள். அவற்றின் மீது வெண்சுண்ணம் பூசப்பட்டிருக்கும். வெண்தாமரை மொட்டுகளின் கொத்துபோன்றிருக்கும் அந்த மாளிகைகள். அத்தகைய கூரைக்கு பெயர் என்ன? அவள் எண்ணத்தை ஏட்டு அடுக்கு என புரட்டிப் புரட்டி தேடினாள். எவரோ சொன்னதுபோல நினைவில் அச்சொல் எழுந்தது. முகுளிகை. இந்தக் கூரைவிளிம்பின் இதழ்போன்ற மடிப்பின் பெயர் புஷ்பிகை.

அக்காலைப்பொழுதில் மாளிகை முகப்புகளில் காவலர்கள் மட்டுமே இருந்தனர். ஒரு மாளிகை முகப்பில் அவந்திநாட்டின் மாங்கனிக்கொடி பறந்தது. பிறிதொன்றில் மாளவத்தின் கொடி. புஷ்பகோஷ்டத்தின் வாயிலை அணுகும்முன்னரே அவர்களின் வருகையை அறிவிக்கும் முரசொலியை சுப்ரியை கேட்டாள். தேர் காவல்மாடத்தை கடந்ததும் ஏழு நிரைகளாக நின்றிருந்த அஸ்தினபுரியின் கவச உடையணிந்த காவலர்கள் வேல்களையும் வாள்களையும் தலைக்கு மேல் சுழற்றி கர்ணனை வாழ்த்தி குரலெழுப்பினர். “வெய்யோன் வாழ்க!

வில்திறன் வேந்தன் வாழ்க! அங்கநாட்டரசர் வாழ்க! அரசருக்கு இனியோன் வாழ்க!” என ஓசை எழுந்து அலைகொண்டு நின்றது.

தேர் நின்றதும் அரண்மனை முகப்பில் காத்து நின்றிருந்த அணிச்சேடியர் தாலங்களுடன் இரு நிரைகளாக அணுகினர். அவர்களுக்கு இருபுறமும் மங்கல இசை எழுப்பியபடி சூதர் வந்தனர். கர்ணன் சுப்ரியையை நோக்காமல் “முதலில் நீ இறங்க வேண்டுமென்பது இங்குள்ள மரபு” என்றான். சுப்ரியை தலையசைத்தபின் ஏவலர் கொண்டுவைத்த படிக்கட்டில் வலக்கால் வைத்திறங்கினாள். அணிச்சேடியர் தாலமுழிந்து குரவையிட்டு அவளை வரவேற்றனர். முதுசேடி அவள் நெற்றியில் குங்குமத் துளி ஒன்றை வைத்து “அஸ்தினபுரியின் அரண்மனை மங்கலம் கொள்க!” என்றாள்.

கர்ணன் இறங்கியதும் மீண்டும் வாழ்த்துக்களும் குரவையோசைகளும் எழுந்தன. சேடியரும் சூதரும் இரு பக்கமும் விலக கவச உடையும் செம்பருந்திறகு சூடிய தலைப்பாகையும் தோளிலைகளும் பொற்கச்சையும் கங்கணங்களும் அணிந்த துச்சாதனனும் துர்முகனும் துச்சகனும் துர்மதனும் துச்சலனும் சுபாகுவும் கைகூப்பியபடி கர்ணனை நோக்கி வந்தனர். துச்சாதனன் “வருக, மூத்தவரே! அரசர் உங்களைக் காத்து சிற்றவைக்கூடத்திலிருக்கிறார்” என்றபின் சுப்ரியையிடம் “இடம் சேர்ந்து நில்லுங்கள், அரசி. வாழ்த்து பெற்றுக்கொள்கிறேன்” என்றான். கர்ணன் சுப்ரியையிடம் முதல்முறையாக புன்னகைத்து “அருகே வா” என்றான். சுப்ரியை அவனருகே சேர்ந்து நின்றாள். துச்சாதனன் குனிந்து அவர்கள் கால்களைத் தொட்டு தலைசூடினான். அவன் தலையைத் தொட்டு கர்ணனும் சுப்ரியையும் வாழ்த்தினர்.

துர்முகனும் துச்சலனும் சுபாகுவும் துச்சகனும் துர்மதனும் வந்து கால் தொட்டு தலைசூடி வாழ்த்து கொண்டனர்.

கர்ணன் துச்சாதனனின் தோள்களைத் தழுவியபடி "நேற்று வந்ததுமே உன்னைப் பார்க்கவே விரும்பினேன். சிவதரை அனுப்பினேன், நீங்கள் கங்கைக்கரை காட்டிலிருப்பதாக சொன்னார்" என்றான். "ஆம் மூத்தவரே, வேள்விக்காக அரசர்கள் வந்துகொண்டே இருக்கிறார்கள். தாங்கள் அறிவீர்கள் ஒவ்வொருவரும் தங்களுக்கு அளிக்கப்படும் மதிப்பென்ன என்பதிலேயே உளம் கொண்டிருப்பார்கள்" என்றான். உடனே இயல்பாக சுப்ரியையை திரும்பிநோக்கி "ஷத்ரியர்களின் அவைமுறைமைகள் மிகச் சிக்கலானவை" என்றான். அவன் அவளை திரும்பிநோக்கியதன் பிழையை உணர்ந்து சுபாகு அதை ஈடுசெய்யும் விரைவுடன் "ஆம், ஆனால் அவை அவர்களுக்கு வேதத்தால் வழங்கப்பட்டவை" என்றான். கர்ணன் உரக்க நகைத்தான். அவன் நகைப்பது ஏன் என அவளுக்குத் தெரிந்தாலும் அதில் உளம் ஒட்டவில்லை.

"அனைவரும் முன்னரே ஷத்ரியப் பேரவைக்கூட்டத்திற்கு வந்தவர்கள்தானே?" என்றான் கர்ணன். "ஆம், சென்று சில நாட்கள் அங்கு அரசிருந்து உடனே மீண்டும் வருகிறார்கள். சிலருக்கு சென்றமுறை போதிய மதிப்பு கிடைக்கவில்லை எனும் குறை. சிலர் சென்றமுறை கிடைத்த வரவேற்பு இப்போது குறைகிறதா என்ற நோக்கு கொண்டிருக்கிறார்கள்" என்றான் துர்மதன். கர்ணன் நகைத்து "இது ஷத்ரியர்களிடையே ஆயிரம் ஆண்டுகளாக இருந்துவரும் பூசல். எவர் எப்படி நடந்துகொண்டாலும் இறுதியில் உளக்குறைகளே எஞ்சும். அரசவைகள்தோறும் அமைச்சர்களாலும் புலவர்களாலும் சொல்லி அவை பெருக்கப்படும்" என்றான்.

வேண்டுமென்றே சுப்ரியையை ஒருமுறை நோக்கியபின் "எவர் பெரியவர் என்ற பூசல் ஷத்ரியரிடையே ஏன் ஓயவில்லையென்றால் அவர்கள் எவரும் மெய்யாகவே பெரியவர்களல்ல என்பதனால்தான்" என்றான் கர்ணன். துச்சாதனன் உரக்க நகைத்து "மெய்தான். ஆனால் இவ்வாறு முடிவின்றி துலாநிகர் செய்யும் தொல்லையை எப்போது முடிப்போம் என்றிருக்கிறது" என்றான். கர்ணன் "சில நாட்கள்தான், அவர்கள் ஒவ்வொருவரும் உண்மையில் என்ன மதிப்பு கொண்டிருக்கிறார்கள் என்பதை போர் அவர்களுக்கே காட்டும். போருக்குப் பின் எவருக்கும் தன் இடம் என்ன என்ற ஐயமோ இடம் அமையவில்லையென்னும் குறையோ இருக்காது" என்றான்.

அவர்கள் படிகளில் ஏறி பெருங்கூடத்தை அடைந்தபோது கனகர் உள்ளிருந்து ஓடிவந்து தலைவணங்கி "நேராக சிற்றவைக்கூடத்திற்கே செல்லலாம் என்று ஆணை, இளையவரே" என்றார். துச்சாதனன் "அரசர் அங்கு வந்துவிட்டாரா?" என்றான். "ஆம், அரசரும் காந்தாரரும் கணிகரும் அங்கிருக்கிறார்கள்" என்றார். துச்சாதனன் "அவர்கள் வருவதாக சொல்லவில்லையே" என்றான். "அரசர் அவர்களை வரச்சொல்லியிருக்கிறார்" என்றார் கனகர். கர்ணன் முகம் மாறுபட மீசையை நீவியபடி "அவர்கள் இருப்பது நன்று" என்றபடி படிகளில் ஏறினான்.

துச்சாதனன் "போர் அறிவிக்கப்பட்டதுமே ஒவ்வொரு அரசரும் உள்ளூர தாங்கள் கொண்டிருக்கும் மதிப்பென்ன என்று உணர்ந்துவிட்டார்கள். ஆகவேதான் மிகையாக காட்டிக்கொள்கிறார்கள். அஞ்சிய விலங்கு மயிர்சிலிர்ப்பது போல" என்றான். கர்ணன் "ஆம், வேட்டை விலங்கின் முதல்

அடியிலேயே மயிர் மீண்டும் படிந்துவிடும்” என்றான். இடைநாழியைக் கடந்து சிற்றவைக்கூடத்தை அடைந்தபோது அவர்களை எதிர்கொள்ள அங்கே வாயிற்காவலர் இருவர் நின்றிருந்தனர். “அங்கநாட்டரசர் வருகை!” என்று துச்சாதனன் சொல்ல அவன் தலைவணங்கி உள்ளே சென்று கர்ணன் வருகையை அறிவித்து மீண்டு தலைவணங்கி கதவைத் திறந்தான்.

கர்ணன் உள்ளே நுழைவதற்கு முன்னரே மையப்பீடத்தில் அமர்ந்திருந்த துரியோதனன் எழுந்து இரு கைகளையும் விரித்தபடி அருகே வந்தான். கர்ணன் கைகளை விரிக்காமல் வெறுமனே நோக்கியபடி நின்றான். துரியோதனனின் இரு கைகளும் இயல்பாக தணிந்தன. முகம் ஒளியிழந்து மீண்டும் புன்னகை கொண்டது. அருகணைந்து கர்ணனின் தோள்களை வளைத்து தழுவிக்கொண்டு “அங்கநாட்டரசருக்கு அவருடைய நாட்டுக்கு நல்வரவு” என்றபின் சுப்ரியையிடம் “முதல்முறையாக அஸ்தினபுரிக்கு வருகை தரும் கலிங்கத்தரசியை வரவேற்கிறேன். தங்கள் கால்கள் தொட்டமையால் இந்நிலம் வளம் பெறட்டும்” என்றான்.

சுப்ரியை முகமன் எதுவும் உரைக்காமல் தலைவணங்கிவிட்டு அப்பால் நோக்கியபடி நின்றாள். கர்ணன் அவளை ஒருகணம் கூர்ந்து நோக்கிவிட்டு துரியோதனனிடம் “பேரவைக்கூட்டத்திற்கு முன் நாம் தனியாக சந்திக்க நேர்ந்தது நன்று. எந்த உளநெகிழ்வுக்கும் நான் இங்கு வரவில்லை” என்றான். துரியோதனன் “அமர்க அங்கரே, அமர்ந்து பேசுவோம்” என்றான். கர்ணன் அவனுக்கிடப்பட்ட உயர்ந்த பீடத்தில் அமர்ந்து இரு கைகளையும் மடியில் கோத்தான். அவனுக்குப்

பின்னால் இடப்பட்ட பீடத்தில் சுப்ரியை அமர்ந்தாள். கர்ணனின் கைகளும் தலையும் நடுங்கிக்கொண்டிருப்பதை, தாடை இறுகி இறுகி அசைவதை கண்டாள். சுபாகு "பட்டத்தரசி வந்துகொண்டிருக்கிறார்கள், அரசே. ஓர் அரசியர்சந்திப்பு நிகழ்ந்துகொண்டிருக்கிறது" என்றான்.

கர்ணன் சகுனியையோ கணிகரையோ ஒரு கணமும் திரும்பிப்பார்க்கவில்லை என சுப்ரியை சற்று கழித்தே உணர்ந்தாள். அதன் பின்னரே அவர்களிருவருக்கும் தானும் முகமன் உரைக்கவோ வணக்கம் செய்யவோ இல்லையென்று நினைவுகொண்டாள். என்ன ஆயிற்று தனக்கு என்று வியந்தாள். உடலெங்கும் ஒட்டியிருந்த அணிகளையும் பொற்பின்னலாடைகளையும் பிடுங்கி வீசிவிட்டு கதவைத் திறந்து வெளியே ஓடிவிடவேண்டுமென்று ஒரு கணம் உளமெழுந்தது. திரும்பி நோக்கியபோது கணிகரின் விழிகள் அவளை நோக்கிக்கொண்டிருப்பதை கண்டாள். அவள் நோக்கை சந்தித்த கணிகர் புன்னகைத்தார். அவர் உடல் கூன் கொண்டிருந்தபோதும் முகம் அழகிய புன்னகையுடன் இருந்தது. சகுனி தாடியை நீவியபடி சரிந்த விழிகளால் கர்ணனை நோக்கிக்கொண்டிருந்தார்.

துரியோதனன் "அங்கரே, பலமுறை இங்கிருந்து அவையில் கலந்து கொள்வதற்காக அழைப்பு விடுத்திருந்தேன். இப்போதாவது தாங்கள் வருகை புரிந்தது எனது நல்லூழ்" என்றான். கர்ணன் "நான் வந்தது ஒரு கேள்விக்காக மட்டுமே. ஷத்ரியப் பேரவையில் நிகழ்ந்ததென்ன?" என்றான். துரியோதனன் விழிகள் கூர்ந்திருக்க இயல்பாக "அதை விகர்ணனின் மனைவி தாரை சொல்லியிருப்பாள்" என்றான். "ஆம், அவர்கள் அதன்பொருட்டே அங்கு வந்தார்கள். அரசே,

முதியவரும், ஐந்து மைந்தருக்கு அன்னையும், அஸ்தினபுரியின் குலத்திற்கு மூத்தவருமாகிய யாதவப் பேரரசியை அவையில் இழிவு செய்தீர்கள் என்று அறிந்தேன்” என்றான் கர்ணன்.

அக்கணத்தின் உளவிசையால் இரு கைகளாலும் இருக்கையை அறைந்தபடி எழுந்து “அன்னைக்கு எவரும் மைந்தரே. இழிவு செய்தவருக்கு எதிர்நின்று பழிநிகர் செய்யும் பொறுப்பு எவருக்கும் உண்டு” என்றான். அவன் குரல் எழுந்தபோது தலை நடுங்கத்தொடங்கியது. “குருதியால் அப்பழி தீருமென்றால் அதைத் தீர்க்கவும் சித்தமாகவே வந்துள்ளேன்…” துச்சாதனனும் துச்சகனும் அறியாது சற்று முன்னகர சுபாகு அவர்களைப் பற்றி தடுத்தான். துரியோதனன் சற்றும் நிலைமாறாமல் “இழிவு செய்யவில்லை, அங்கரே. ஒரு வினா மட்டுமே கேட்டேன், அன்னையென அவர் தன் மைந்தருக்கு அறமிழைத்துள்ளாரா என்று” என்றான். கர்ணன் கைகள் தளர்ந்து இரு பக்கமும் சரிய “என்ன?” என்றான். “ஆம், மைந்தருக்கு அன்னையிடம் கடமை உண்டு. அக்கடமை அன்னை தன் மைந்தருக்குச் செய்த கடமையிலிருந்து எழுவது. அதை யாதவப் பேரரசி செய்தாரா? அவையில் நான் கேட்டது அதை மட்டுமே.”

கால் தளர்ந்தவனாக கர்ணன் தன் பீடத்தில் மீண்டும் அமர்ந்தான். “என்ன சொல்கிறீர்கள், அரசே? எனக்கு விளங்கவில்லை” என்றான். “அன்னை என அவர் நடந்துகொள்ளவில்லை. மூன்றாம்குடியில் பிறந்தவர், ஊழ்வழியால் அரசியென்றானதும் அரசநிலைமேல் பெருவிருப்பு கொண்டு அறம் மறந்தார். பெரும்பிழை செய்து பழிகொண்டார். நான் அதை அவையில் சொன்னேன்.” கர்ணன் நடுங்கும் விரல்களை கோத்தான். அவன் உதடுகள்

அதிர்ந்துகொண்டிருந்தன. “அங்கரே, நான் கோரியது பாண்டவர்களுக்காகவும்தான். தங்கள் மெய்தந்தை எவரென்று அறிந்துகொள்ளும் உரிமை அவர்களுக்குண்டு. நாளை அவர்கள் அரசர்களென அவையமர்கையில் ஓர் அந்தணர் எழுந்து அவர்களின் குருதி என்ன என்று உசாவினால் எம்மொழி சொல்ல இயலும்?”

ஏவலன் வந்து தலைவணங்க சுபாகு அருகே சென்று ஒரு சில சொற்கள் பேசி அவனை அனுப்பிவிட்டு கதவை மூடினான். கர்ணனை நோக்கி முகத்தை கொண்டுசென்று துரியோதனன் கேட்டான் “குருதியாலானது குலம். குலமே ஆடவரின் நிலைமண். அதை மைந்தரிடமிருந்து மறைக்க அன்னையருக்கு என்ன உரிமை? மைந்தரின் தந்தையென பாண்டு இருந்து அவையிலெழுந்து சொல்வாரென்றால் அது வேறு. அவர் நகர்காணாமல் அவைநில்லாமல் மறைந்த பின் அன்னை சொல்லை அவை ஏற்குமா என்ன?” கர்ணன் ஏதோ சொல்ல வாயெடுத்தான். மொழியெழாமல் தலையை மட்டும் அசைத்தான்.

உரத்த குரலில் துரியோதனன் தொடர்ந்தான். “விலங்கல்ல மானுடர். மைந்தரை ஈன்று பெருவழியிலிட்டுச் செல்லும் உரிமை எந்த அன்னைக்கும் இல்லை. அங்கரே, முன் சென்று தன் ஊழின் இறுதிநுனியை அறியும் பொறுப்பு மானுடருக்கு தெய்வங்களால் அளிக்கப்பட்டுள்ளது. பின் திரும்பி தன் ஊழின் முதல்நுனியை எண்ணி எண்ணி ஏங்குபவர் ஒருபோதும் அந்த மீட்பை அடையவியலாது. செல்லாது தேங்கிய எதுவும் அழுகி நாறும். அச்சுழலில் பிறப்பாலேயே வீசப்படும் மானுடர்போல் அளியர் எவருமில்லை. அவர்களுக்கு மீட்பருளும் தெய்வங்கள் இல்லை, வஞ்சமே அந்த பீடத்தில் அமர்ந்திருக்கிறது.

முன்னோர் சொல் என ஏதுமில்லை, பிறிதொரு மொழிகொள்ள செவி ஒப்புவதில்லை. அங்கரே, அவர்களுக்கு உலகின்பமும் இல்லை. ஆறா நோய் என வாழ்வெலாம் தொடர்வது அந்த அறியமுடியாமை.”

நெற்றிநரம்பு ஒன்று மண்புழு என புடைத்து அசைந்துகொண்டிருக்க கர்ணன் கண்மூடி தலைகவிழ்ந்து அமர்ந்திருந்தான். துரியோதனன் சீற்றத்துடன் தொடர்ந்தான் “தீச்சொல்லிட அன்னையருக்கும் பத்தினியருக்கும் உரிமை உண்டு. ஆனால் தெய்வமே ஆனாலும் பிழை செய்யாதவருக்கு தீச்சொல் அளித்தால் ஏழிரட்டி விசைகொண்டு அது திரும்பிவருமென்று சொல்கின்றனர் மூத்தோர். பிறந்த குழவி செய்த பிழை என்ன? பிறவிகள்தோறும் நீளும் பழியை அதன்மேல் சுமத்த அன்னையென எவருக்கேனும் உரிமையுண்டா என்ன?”

கணிகர் “அன்னைக்கும் கங்கைக்கும் நெறி வகுக்க எவருக்கும் உரிமையில்லை என்பதுண்டு” என்றார். துரியோதனன் “நான் நெறி வகுக்கவில்லை. ஆனால் புண்பட்டால் அழுவதற்கு உரிமை உண்டு எவருக்கும். நான் அவையில் சொன்னது ஒன்றே, தன் மைந்தருக்கு அடையாளத்தை அளிக்கவேண்டும் யாதவப் பேரரசி, அவ்வளவுதான். தன் அரசியல் ஆடலின் வெறும் களக்கருக்களாக மைந்தரை அவர் எண்ணக்கூடாது. அது ஆணை அல்ல. ஏளனமோ வஞ்சவுரையோ அல்ல. எளிய மன்றாட்டு மட்டுமே” என்றான்.

சகுனி “அது முன்னர் அஸ்தினபுரியின் பேரவையில் பாஞ்சாலத்தரசியிடம் அங்கர் கேட்ட அதே வினாவும்தான்” என்றார். கர்ணன் திரும்பி அவரை நோக்கியபோது கண்கள் காய்ச்சல்கொண்டவை போலிருந்தன. “அங்கரே, அன்று நீங்கள்

சொன்னதுபோல ஒருவனைப்பற்றி ஓரகத்திருத்தல் உயர்குடிப் பெண்டிர்க்கு அழகு, அந்நெறி கடந்தவர் எவராயினும் முதன்மை அவை மதிப்பிற்குரியவரல்ல. அம்மதிப்பை ஈட்ட வேண்டுமென்றால் அது வேதம் வகுத்த நெறியின்படியாகவேண்டும். அந்நெறி பேணப்பட்டதா என்று மட்டும்தான் அரசர் அவையில் உசாவினார்" என்றார். சுப்ரியை கணிகரை நோக்க அவர் விழிதொட்டு புன்னகைத்தார்.

சுப்ரியை எழுந்து சென்றுவிடவேண்டும் என்ற உணர்வை அடைந்தாள். சகுனி திரும்பி சுபாகுவை நோக்கி அந்தச் சிற்றவையை முடித்துவிடலாம் என விழிகாட்டினார். சுபாகு "அவைநிகழ்வுக்குப் பொழுதாகிறது மூத்தவரே, நாம் கிளம்பலாம் என எண்ணுகிறேன்" என்றான். "ஆம்" என்று கர்ணன் சொன்னான். சகுனி தன் புண்பட்ட காலை மெல்ல நீட்டி எழுந்துகொண்டு "அரசே, இந்த அவையிலேயே அறிவித்துவிடுங்கள் உங்கள் வேள்வித்துணை எவரென்று. அங்கர் வேள்விக்கூடத்தில் அமர்ந்துவிட்டார் என்றால் படைத்தலைமை எவர் என்ற வினாவே எழாது" என்றார். கணிகர் "ஆம், அதை இளைய யாதவர்கூட எதிர்க்கப்போவதில்லை" என்றார்.

துரியோதனன் எழுந்து தன் சால்வைக்காக கைநீட்ட துச்சகன் சால்வையை எடுத்துக்கொண்டு அவனை அணுகினான். சுப்ரியையும் எழுந்தாள். சுபாகு தாழ்ந்த குரலில் "பட்டத்தரசி கலிங்க அரசியை சந்திக்கச் சென்று பிந்திவிட்டது என செய்தி வந்துள்ளது, அரசே. அவர்கள் நேரடியாகவே அவைக்கு வருவார்கள்" என்றான். சுப்ரியை ஆடையை நீவியபடி கர்ணனை நோக்கினாள். அவன் அசையாமல் தலைகுனிந்து கைகளைக் கோத்தபடி அமர்ந்திருந்தான்.

# குருதிச்சாரல் - 69

**பகுதி பத்து : பெருங்கொடை – 8**

கர்ணன் எழாதிருத்தல் கண்டு அவர்கள் அனைவரும் தயங்கி நின்றனர். சுபாகு “மூத்தவரே…” என மெல்லிய குரலில் அழைக்க கர்ணன் அவனை ஏறிட்டு நோக்கிவிட்டு பதற்றம்கொண்டவன்போல தன் குழலை நீவி தோளுக்குப் பின்னால் இட்டான். அவன் எழப்போகிறான் என சுப்ரியை எண்ணினாள். வெடித்துக் கூச்சலிட்டபடி வாளை உருவக்கூடும். அல்லது வெளியே செல்லக்கூடும். ஆனால் அந்த மெல்லிய அசைவுத்தோற்றம் மட்டும் அவனுடலில் ததும்பியதே ஒழிய அவன் எழவில்லை. துரியோதனன் மீண்டும் அமர்ந்தான். சகுனியும் அமர்ந்தார்.

சகுனி “இதை மறந்துவிடலாம், அங்கரே. எழுக!” என்றார். “நம் அன்னையரையும் துணைவியரையும் குறித்து நமக்கு பெருமிதமிருக்குமென்றால் பிறர்நெறி குறித்து உசாவுவதில் எந்தத் தடையுமில்லை. அங்கரே, நீங்கள் பாஞ்சாலத்தரசியிடம் கேட்ட வினா அவ்வகையில் உகந்ததே. ஏனென்றால் நீங்கள் உங்கள் அன்னையை நம்பி மைந்தன் என இங்கு அமர்ந்திருக்கிறீர்கள்” என்றார். “காந்தாரத்து அரசியின் மைந்தர் யாதவ அரசியை நோக்கி கேட்ட வினா அதே போன்று முறையானதே.” “ஆம், பிறிதொரு ஆண்மகனை நோக்கா விழிகொண்டவள் என தன் அன்னையை உணரும் ஒருவன் அவ்வினாவைக் கேட்பதில் என்ன பிழை?” என்றார் கணிகர்.

கர்ணன் எழப்போகிறவன்போல் நெஞ்சு முன்னகர்ந்தான். பின்னர் தலையை அசைத்து “இது வீண் பேச்சு… நாம் மேலும் கீழ்மையில் இறங்குகிறோம்” என்று கையைத் தூக்கி ஏதோ சொல்ல நாவெடுத்தான். விசைகொண்ட காற்றில் ஆடும் கிளைபோல அவன் கை நடுங்குவதை சுப்ரியை கண்டாள். சகுனி “தாங்கள் தங்கள் இயல்புநிலையில் இல்லை” என்றார். “தங்கள் கை நடுங்குகிறது. அம்பொன்றை எடுத்து நாணில் பொருத்த தங்களால் இன்று இயலுமென்று எனக்குத் தோன்றவில்லை. மது தங்கள் உடலாற்றலை மட்டுமல்ல உள்ள நிலையையும் அழித்துவிட்டது.”

“ஆம், நான் களிமகனாகிவிட்டேன்” என்று உரத்த குரலில் கூவியபடி கர்ணன் எழுந்தான். “சென்ற பதினான்கு ஆண்டுகளாக ஒவ்வொரு நாளும் மதுவருந்துகிறேன். விழித்தெழுந்தது முதல் இரவு வரை என் நெஞ்சுக்குள் மதுவை ஊற்றிக்கொண்டே இருக்கிறேன். ஒருகணம்கூட என்னை மறந்து இருந்ததுமில்லை. ஏனெனில் அஸ்தினபுரியின் அவையில் பாஞ்சாலத்து அரசியை சிறுமை செய்த கீழ்மை பார்ப்புப்பழியென என்னை துரத்துகிறது. தன் மலத்தை தான் தின்றவனைப்போல உணர்கிறேன்” என்று பற்களைக் கடித்தபடி சொன்னான். “நான் என்னை இழிவுசெய்துகொள்கிறேன். என்னை அழிக்கிறேன். என் பிணம் இது… அரசே, நான் இறந்துவிட்டேன்.” அவன் குரல் இடறியது.

துரியோதனன் புன்னகையுடன் “நான் அவ்வாறு உணரவில்லை. எது நெறியோ அதை மட்டுமே உரைத்தேன். மும்முடிசூடி அரசமைய பெண்ணென்பது அவளுக்குத் தடையாக இல்லையென்றால் அவை நடுவே நின்றிருக்கவும், அடிமையென ஆடை களையவும் அது தடையல்ல” என்றான்.

கர்ணன் அழுகை கலந்த குரலில் “வேண்டாம், நாம் இச்சொல் எடுக்க வேண்டியதில்லை. இவையனைத்தையும் நானும் நூறுமுறை எண்ணிவிட்டேன். ஒவ்வொரு மறுமொழியையும் நெய்யென ஏற்று பெருகுகிறது அந்த அனல். ஒரு கீழ்மையை எத்தனை சொற்களாலும் எவரும் விலக்கிவிட முடியாது. கூவி அலறி பாறையைக் கரைக்க முயல்வதுபோல...” என்றான்.

கைகளை வீசி “இங்கு வருவது வரை நான் பிறிதொருவன். ஆனால் நேரில் கண்டபின் தெரிகிறது, என்னால் உங்களை எதிர்க்க முடியாது. உங்கள் முன் உளம்கனியாது நிற்கமுடியாது. அரசே, ஆயினும் நெஞ்சைத்தொட்டு இதை கேட்கிறேன். உங்கள் அன்னையோ துணைவியோ அன்று நிகழ்ந்ததை ஒரு கணமேனும் ஏற்றுக்கொண்டிருக்கிறார்களா? அவர்களின் சொல் பெற்று உங்களால் பாண்டவர்களுக்கெதிராக படைகொண்டு செல்ல இயலுமா?” என்றான் கர்ணன். துரியோதனன் “எவர் சொல்லுக்கும் காத்துநிற்கும் இடத்தில் நான் இன்றில்லை, அங்கரே” என்றான். “இனி என் தெய்வமொன்றே என்னை ஆளும்... பிறிதொன்றுமல்ல.”

கர்ணனிடமிருந்து எழுந்த மெல்லிய விசும்பல் ஓசை சுப்ரியையை உடல்சிலிர்க்கச் செய்தது. அவள் நடுங்கும் கைகளைக் கோத்தபடி கர்ணனை நோக்கிக்கொண்டிருந்தாள். கண்ணீர் வழிய அவன் தன் முகத்தை கைகளால் தாங்கிக்கொண்டான். தலையை அசைத்தபடி விம்மி அழுதான். அந்த ஓசை உண்மையில் எழுகிறதா அன்றி தன் செவிமயக்கா என அவள் ஐயுற்றாள். ஓசையின்றி ஒருவர் அழக்காண்பதைப்போல நெஞ்சுருக்குவது பிறிதில்லை. ஓசை பிறருக்கான அழைப்பு, பகிர்வு. ஓசையின்றி அழுபவர் தன்னைச் சூழ்ந்திருக்கும் காற்றுவெளியை திரையென்றாக்கி

ஒளிந்துகொள்பவர். அனல் எரிய உருகும் அரக்குப்பாவை எனத் தோன்றினான் கர்ணன்.

சகுனி விழிகாட்ட துச்சாதனன் எழுந்து சென்று மதுக்குடுவையுடன் வந்தான். “அருந்துக, மூத்தவரே!” என அதை அவன் நீட்ட கர்ணன் பசித்த குழவி என பாய்ந்து கிண்ணத்தை பற்றிக்கொண்டான். ஒரே வாயில் அதை குடித்து மீண்டும் நீட்டினான். மீண்டும் மீண்டும் துச்சாதனன் ஊற்றிக்கொண்டே இருந்தான். ஏழு கோப்பைகளுக்குப் பின் அவன் போதுமா என திரும்பி சகுனியை நோக்க அவர் மேலும் ஊற்ற விழிகாட்டினார். மேலும் நான்கு கோப்பைகளுக்குப் பின் சுப்ரியைக்கே அச்சமாக இருந்தது. ஆனால் அவள் வெறுமனே நோக்கி அமர்ந்திருந்தாள். மேலும் இரு கோப்பைகள் அருந்தியதும் கர்ணன் விக்கி மூச்சுத்திணறினான். இருமுறை எதிர்க்களித்தபின் கோப்பையை அருகே வைத்தான். கண்களை மூடி தலைகுனிந்து அமர்ந்திருந்தான்.

துரியோதனன் “நான் எதையும் விளக்க விரும்பவில்லை, அங்கரே. நீங்கள் வஞ்சம் மறக்கலாம், நான் மறக்கப்போவதில்லை. யாதவப் பேரரசி மீது என் முதல் கசப்பு அவர் பாண்டவர்களின் அன்னை, நிலவிழைவை அவர்களில் நிலைநிறுத்துபவர் என்பதனால் அல்ல. நீங்கள் என் தோழர் என்பதனால் என்றும் என் நஞ்சு அவ்வண்ணமே என்னுள் இருக்கும்” என்றான். கர்ணன் தலை முன்னால் தொங்கித் தழைந்திருக்க மெல்ல அசைந்தபடி அமர்ந்திருந்தான்.

“நீங்கள் ஷத்ரியர் அவையில் வந்து அமரவேண்டும் என நான் விழைந்தேன். இன்று வந்திருக்கிறீர்கள். வேள்வியவையில் என் தோழன் என அமர்க! ஷத்ரியர்களில் எவர் எழுந்து மறுசொல் உரைத்தாலும் அக்கணமே அவர் என் எதிரியென்றாகிறார்.

அவர் தலையை அறுப்பேன், நிலத்தை சிதைப்பேன், அவர் குடியையும் கொடிவழியையும் வேரறுப்பேன். அதை வேள்வியவையிலேயே சொல்கிறேன். ஒருவேளை அந்தணர் மாற்றுரைத்தார் என்றால் அவ்வேள்வியை அசுரப் பூசகரைக்கொண்டு நிகழ்த்துவேன். ஆசுரம் என் சொல்லென்றாகும். பாரதவர்ஷத்தில் என் கோலால் ஆசுரம் நிலைநிறுத்தப்படும் என அவர்களிடம் சொல்வேன்.”

துரியோதனன் கைநீட்டி கர்ணனின் மடித்த முழங்காலை தொட்டான். “எனக்கும் என் தம்பியருக்கும் நீங்களே முதன்மையானவர். பிறிதெவரும் அல்ல. வேதமும், நாடும், குலமும், மூதாதையரும்கூட அல்ல. இதை எனையாளும் தெய்வத்தைச் சான்றாக்கி சொல்கிறேன், அறிக இவ்வுலகு!” என்றான். கர்ணன் அதை கேட்டானா என்று சுப்ரியை ஐயம்கொண்டாள். ஆனால் அவன் கழுத்தில் மெய்ப்புகொண்டதன் புள்ளிகள் தெரிவதை பின்னர் நோக்கினாள். “அங்கரே, அவையில் உங்கள் குலம்சொல்லிக் குரலெழும் என நீங்களும் அறிவீர்கள். அங்கே உங்கள் பொருட்டு எழுவது என் வாளே அன்றி எவருடைய நாவும் அல்ல.”

துரியோதனனின் குரல் மேலும் உரத்தது. “ஐவரின் நிலையும் அதுவே என்றேன். அறமென துளியேனும் நெஞ்சிலிருந்தால் அம்முதுமகள் வந்து ஷத்ரியர் அவையில் நின்று உரைக்கட்டும். அன்றி அந்தணருக்கு சொல் அளிக்கட்டும். அனைத்தும் அக்கணமே முடிந்துவிடும்.” சில கணங்கள் தயங்கி முனகல்போல “ஆம், அனைத்தும் முடிந்துவிடும். முடிக்குரியவர் எவர் என்ற ஐயமே எவருக்குமிருக்காது” என்றான் துரியோதனன். கர்ணன் மெல்ல முனகினான். “அதை

நான் சொன்னதும் மறுசொல்லின்றி அப்படியே அமர்ந்தான் இளைய யாதவன். எதை அஞ்சுகிறார்கள்? ஒவ்வொரு சொல்லிலும் எது எழாமல் தவிர்க்கிறார்கள்? ஒரு சொல். ஒற்றைச்சொல், தெய்வங்கள் அறிய அதை சொல்லட்டும் அவையில் என்றேன். என் பிழை என்ன?”

இரு கைகளாலும் இருக்கையின் விளிம்பைத் தட்டியபடி துரியோதனன் எழுந்தான். “ஆம், உங்கள் உள்ளம் இச்சொல்சூழ்கையை ஏற்காதென்று அறிவேன். ஆனால் நான் உங்களைப்போல் அனைவருக்கும்மேல் தலை எழுந்தவன் அல்ல. நான் அனைவரிலும் ஒருவன். அனைவரும் ஏற்கும் சொல்லையே என் நா எழுப்பும். ஆகவேதான் அன்று அவை எழுந்து என் சொல்லை ஏற்றுக் கொந்தளித்தது.” சகுனியை நோக்கி “மாதுலரே, நாம் அவைபுகுவோம். அங்கர் ஓய்வெடுக்கட்டும்” என்றான். “அவரை வேள்வித்துணைவராக அறிவிப்பதென்றால்…” என்று சகுனி சொல்ல “அறிவிக்கிறேன். இனி எச்சொல்லையும் நாவால் உரைக்கப்போவதில்லை, என் வாளே மொழியும்” என்றான் துரியோதனன்.

கணிகர் “அரசி வந்துள்ளார்கள், அவர்கள் அவையில் அமரட்டும்” என்றார். துரியோதனன் சுப்ரியையை நோக்கிவிட்டு “ஆம், அது முறை” என்றான். கணிகர் “அவைக்கு எழுந்தருள்க, அரசி!” என்றார். சுப்ரியை எண்ணியதைச் சொல்ல உதடசையவில்லை. அவள் தலையசைத்தாள். அசைவு எழக்கண்டு கர்ணனை திரும்பி நோக்கினாள். அவன் தன் நீண்ட கால்களை நன்றாக நீட்டி கைகள் பீடத்தின் இரு பக்கமும் சரிந்து நிலம்தொட்டு நீண்டிருக்க தலை மார்பில் படிந்து விழிமூடி வாய் கசிந்து வழிய மெல்லிய மூச்சொலியுடன் துயில்கொண்டிருந்தான். சுப்ரியை “இல்லை, நான் அவைக்கு வரவில்லை. அரசர் இன்றி

நான் வருவது முறையல்ல” என்றாள். கணிகர் மேலும் சொல்ல வாயெடுக்க மறித்து “நான் என் உடன்பிறந்தவளை சந்திக்கவேண்டும்” என்றாள். துரியோதனன் “ஆம், அது முறைதான்” என்றான்.

சபரி சலிப்புற்ற குரலில் “தாங்கள் சென்று அவையில் அமர்ந்திருக்க வேண்டும், அரசி. இது கலிங்கத்திற்கான ஏற்பு மட்டும் அல்ல, நம் அரசருக்கானதும்கூட. அவரை அரசர் தன் வேள்வித்தோழர் என அவையில் அறிவிக்கவிருக்கிறார் என்றால் அது எளிய நிகழ்வல்ல. சம்பாபுரியின்மேல் இன்றும் நின்றிருக்கும் பழி என்பது நம் அரசர் பிறப்பால் சூதர் என்பதே. வேள்வியமைவு அதை முற்றாக அழித்திருக்கும்” என்றாள். சுப்ரியை மறுமொழி சொல்லாமல் நடக்க சபரி தொடர்ந்து நடந்தபடி “அவையில் அங்கர் இல்லாதிருப்பது நன்று. நீங்கள் இருப்பது மிக நன்று. நாம் உங்கள் உடன்பிறந்தவரை பின்னர்கூட பார்த்துக்கொள்ளலாம்” என்றாள்.

அரண்மனை முகப்பில் காவலர்தலைவர் பத்ரசேனர் அவளை அணுகி வணங்கினார். சுப்ரியை “என் ஆணையை அறிவி” என்றாள். சபரி சலிப்புடன் ஒரு கணம் நின்றபின் முன்னால் சென்று அவரிடம் செய்தியைச் சொல்லி கணையாழியை காட்டினாள். பத்ரசேனர் அணுகி வந்து “அரசி, இளையஅரசி இருக்குமிடம் மேற்குவாயிலுக்கு அப்பால் குறுங்காட்டுக்குள் அமைந்த சம்வரணம் என்னும் சிறுமாளிகையில். அவர்களை நீங்கள் சந்திப்பதென்றால்…” என்றார். “சொல்க!” என்றாள் சுப்ரியை. “அவர்கள் இருக்கும் நிலையை அறிவீர்கள் என எண்ணுகிறேன்” என்றார் பத்ரசேனர். “ஒருவாறு அறிவேன்”

என்றாள் சுப்ரியை. “அதன் பின்னரும் ஆணை என்றால் அவ்வாறே” என்றார் பத்ரசேனர். “நான் தேர் ஒருக்குகிறேன்...”

வெளியே தேர் வந்துநின்றதும் பத்ரசேனர் மீண்டும் உள்ளே வந்து “கிளம்புக, அரசி!” என்றார். அவள் வெளியே சென்று அங்கு நின்றிருந்த எளிய தேரில் ஏறிக்கொள்ள சபரி உடன் ஏறி அமர்ந்தாள். பத்ரசேனர் அவரே முன்னால் நின்ற புரவியில் ஏறிக்கொண்டு வழிநடத்திச் சென்றார். “அவர் இல்லையேல் அங்கு செல்ல ஒப்புதலிருக்காதென்று எண்ணுகிறேன்” என்றாள் சபரி. சுப்ரியை வெளியே நோக்கியபடி அமர்ந்திருந்தாள். தேர் அரண்மனை எல்லையை அடைந்து திரும்பி மேற்குநோக்கி செல்லத் தொடங்கியது. தொலைவில் அலையடிக்கும் ஏரியின் ஒளி தெரியலாயிற்று. கோட்டைச்சுவரின் கருமை. அதையொட்டிச் சென்று வெளியேறிய பாதை சற்று மேடேறி குறுங்காட்டினூடாக சென்றது.

தொலைவில் மரத்தாலான பெரிய சுவர் கட்டி மறைக்கப்பட்ட மாளிகை வந்தது. அதன் கூம்புமுகடு மட்டுமே மேலெழுந்து தெரிந்தது. பத்ரசேனர் சென்று காவலனிடம் பேசிவிட்டு வந்து தலைவணங்கி “அரசி, தாங்கள் உள்ளே சென்று உடன்பிறந்தவரிடம் உரையாடலாம்” என்றார். சுவர்போலவே தெரிந்த கதவு உருளைகள்மேல் ஓசையிட்டபடி விலகிச்செல்ல தேர் உள்ளே நுழைந்தது. பத்ரசேனர் நின்றுவிட அவரை மறைத்தபடி கதவு மூடிக்கொண்டது.

மாளிகை முகப்பில் தேர் நின்றபோது சுப்ரியை அங்கு வந்திருக்கலாகாது என்னும் எண்ணத்தை அடைந்தாள். சபரி இறங்கி “வருக, அரசி” என்றாள். மாளிகை முகப்பிலிருந்த காவலர்தலைவன் அணுகி தலைவணங்கினான். “அரசிக்கு தலைவணங்குகிறேன். என் பெயர் உக்ரசேனன். என்னை

அங்கநாட்டரசர் காலகன் என்று அழைப்பார்… அவருடன் நான்கு போர்களில் தோளிணை நின்றிருக்கிறேன். தங்கள் அருள்பெறும் வாய்ப்புக்கு மகிழ்கிறேன்” என்றான். சுப்ரியை முகமனோ வாழ்த்தோ கூறாமல் “என் உடன்பிறந்தாளை சந்திக்கவேண்டும். அதன்பொருட்டே வந்துள்ளேன்” என்றாள்.

காலகன் “அவரை நீங்கள் சந்திக்கலாம். அவர் இருக்கும் நிலை என்னவென்று அறிந்திருப்பீர்கள்” என்றான். “தனிமையில் இருப்பதாக அறிந்திருந்தேன். அவள் உள்ளம் நிலைகொண்டிருக்கவில்லையோ என அன்று விழிகளை நோக்கியபோது எண்ணினேன்” என்றாள். “அரசி, கலிங்கத்திலிருந்து வந்தபோதே இளைய அரசி நிலைகொள்ளாமல்தான் இருந்தார்” என்றான் காலகன். “எவர் சொன்னது?” என்று சுப்ரியை சீற்றத்துடன் திரும்ப “அவ்வாறுதான் சொல்லப்பட்டது” என்று காலகன் சொன்னான். “இதற்கப்பால் ஏதும் எனக்குத் தெரியாது. இங்கு இளைய அரசியின் செவிலி பிரவீரை இருக்கிறாள். நீங்கள் அவளிடமே பேசலாம்” என்றபின் “பேசியபின் இளைய அரசியை சந்திப்பது நன்று” என்றான்.

அவளை அழைத்துச்சென்று சிறிய கூடத்தில் அமரச்செய்தான். சுப்ரியை கைகளைக் கோத்தபடி அமர்ந்திருந்தாள். அவள் விரல்கள் பிசைந்துகொண்டே இருந்தன. அதை அவளே உணர்ந்து மார்பில் கைகளை கட்டிக்கொண்டாள். சற்று நேரத்தில் காலகன் பிரவீரையை அழைத்துவந்தான். கூன்விழுந்த மெல்லிய உடலும் பழுத்த விழிகளும் கொண்டிருந்த பிரவீரை எந்த முகமலர்வும் இன்றி கைகூப்பி “அரசிக்கு வணக்கம். இங்கே தாங்கள் வரக்கூடும் என பல்லாண்டுகளாக எதிர்பார்த்திருந்தேன்” என்றாள். சுப்ரியை

அவளை சில கணங்கள் நோக்கிவிட்டு “அவளுக்கு என்ன? அவள் இங்கே அரசருடன் மகிழ்ந்திருக்கிறாள் என்றே நான் அறிந்திருந்தேன்” என்றாள்.

“ஆம், இங்கு வந்த ஓராண்டும் உளமகிழ்வுடன்தான் இருந்தார்கள். அன்றே நான்தான் கலிங்கஅரசிக்கு சேடியென்றிருந்தேன்” என்றாள் பிரவீரை. “அக்காலத்தில் ஒவ்வொரு நாளும் அரசர் இளைய அரசியைத் தேடி வந்துகொண்டிருந்தார். அரசிக்கென அஸ்தினபுரியின் புஷ்பகோஷ்டத்திற்கு அருகே அணிக்காட்டுக்கு அப்பால் மாளிகை ஒன்று ஒதுக்கப்பட்டது. ஒவ்வொரு நாளும் காலையில் இளைய அரசி புஷ்பகோஷ்டத்தின் அகத்தளத்திற்குச் சென்று பட்டத்தரசியுடன் சொல்லாடியும் அங்குள சேடியருடன் விளையாடியும் மீள்வதுண்டு. ஒவ்வொன்றும் எவ்வண்ணம் அமையவேண்டுமோ அவ்வண்ணம் அமைந்திருந்தது.”

“அதில் ஒரு பிழையைக் கண்டவள் நானே. அரசி, ஆண்மேல் பெண்கொள்ளும் காதல் அவள் தன் உடல்மேல் கொள்ளும் விருப்பமாகவே வெளிப்படும். அதுவே வழக்கம்” என்று பிரவீரை தொடர்ந்தாள். “ஆனால் இளைய அரசி தன் உடலை முற்றிலும் மறந்தவராக இருந்தார். அரசரின் தோற்றத்திலேயே மயங்கிக் கிடந்தார். சொல்லெல்லாம் அதுவே. விழிநோக்காதபோதும் உளம் நோக்கிக்கொண்டிருந்தது அவ்வுருவையே. பட்டத்தரசியே வேடிக்கையாக என்ன இது, இவளுக்கு வேறு எண்ணமே இல்லையா என்ன என்று ஒருநாள் என்னிடம் சொன்னார். மெல்ல அகத்தள மகளிர் அனைவரும் அதை சொல்லலாயினர். அதை நோக்கத்

தொடங்கியதும் தெரிந்தது வேறெதையும் அரசி எண்ணுவதேயில்லை என."

"அது மிகச் சிறிய கோணல். ஆனால் நாளும் எனப் பெருகியது" என்று பிரவீரை தொடர்ந்தாள். "பின்னர் எப்பொழுதும் அரசருடன் இருக்க விழைந்தார். சாளரத்தருகே அமர்ந்து அவர் வருகைக்காக ஏங்கினார். பின்னர் அவ்வாறு இருப்பதாக உளம்மயங்கினார். அரண்மனைச் சுவர்களில் எல்லாம் அவர் ஓவியத்தை வரைந்து வைத்தார். அவருடைய ஆடைகளை, அணிகளை நோக்கு தொடும் இடத்தில் எல்லாம் பரப்பி வைத்தார். வெளியே செல்வது குறைந்தது. அவர் விழிகளில் இருந்து பிறர் தொட்டு எடுக்கும் உணர்ச்சிகள் மறையலாயின. தனக்குள் பேசியும் சிரித்தும் தானே துள்ளிச்சுழன்றும் களித்திருந்தார்."

"அப்போதுதான் அரசரே அவர் உளநிலை பழுதுகொண்டுள்ளது என்பதை உணர்ந்தார். மருத்துவரும் நிமித்திகரும் வந்து அவரை நோக்கினர். மருத்துவர் அவர் உள்ளம் உவகைகொண்டிருக்கிறது என்று மட்டும் கூறினர். நிமித்திகர் அக்களிப்பு மானுடரால் அளிக்கப்படுவதல்ல, அவரை ஏதோ கந்தர்வனோ தேவனோ ஆட்கொண்டிருக்கிறான் என்றனர். அத்தெய்வம் ஏதென்று அறியும்பொருட்டு கணியர் வந்து சோழிபரப்பி நோக்கினர். பூசகரில் வெறியாட்டெழுந்த தெய்வங்கள் உசாவின. எவராலும் எதையும் கண்டறிய இயலவில்லை."

"ஒருநாள் அரசருடன் இருந்த அரசி அலறியபடி எழுந்து ஓடி வெளியே வந்தார். ஓசைகேட்டு பதறி வந்த நான் ஆடையை எடுத்து அவருக்கு அணிவித்தேன். அணைத்துச்சென்று என்ன என்று உசாவினேன். திகைத்தவராக அரசர் வந்து நின்று என்ன

ஆயிற்று என வினவினார். அரசியால் பேசமுடியவில்லை. அவர் பேரச்சத்தில் நடுக்குற்று விழிமலைத்திருந்தார். அரசர் கிளம்பிச்சென்றார். நான் இரவெல்லாம் அரசியுடன் இருந்தேன். ஒவ்வொரு நிழலசைவுக்கும் எழுந்து அஞ்சி அலறிக்கொண்டிருந்தார். அகிபீனா அளித்து துயிலச்செய்தேன். மறுநாள் காலையில்தான் அவர் உளநிலை மெல்ல அடங்கியிருந்தது. என்ன நிகழ்ந்தது என்று கேட்டேன். அச்சம்கொண்டு மீண்டும் அலறியழத் தொடங்கினார். மீண்டும் மீண்டும் கேட்டு மறுநாள்தான் என்ன நிகழ்ந்தது என்று அறிந்தேன்.”

“அரசி, அரசர் தன்னை முயங்கிக்கொண்டிருந்தபோது களிமயக்கில் விழிசரிந்திருந்த அரசி இயல்பாக நோக்கு கொண்டபோது அகலின் சிறுசுடரின் ஒளியில் அரசரின் நிழல் எழுந்து சுவரில் தெரிவதை கண்டார். அது ஒரு மாபெரும் காளையின் நிழல்.” சுப்ரியை “காளையா?” என்றாள். “ஆம், கொம்பும் காதுமாக காளைத்தலைகொண்ட மானுட உடலின் நிழல்” என்றாள் பிரவீரை. “அதை தான் நேர்விழிகளால் நோக்கியதாக சொன்னார். செவிலியரும் சேடியரும் அவரிடம் பேசிநோக்கினர். நிமித்திகர் வந்து களம்வரைந்து பார்த்தனர். பாணினியரும் நாகவிறலியரும் வந்தனர். அரசி அவர்கள் கண்டது அதையே என்று உளம்செறிந்திருந்தார்.”

“அதன்பின் அவர்களுக்கிடையே உறவே அமையவில்லை” என்று பிரவீரை சொன்னாள். “பின்னர் எப்போதெல்லாம் அரசரைக் கண்டாரோ அப்போதெல்லாம் அரசி அந்தக் காளைநிழலை கண்டார். ஒவ்வொருமுறை கண்டபின்னரும் நடுக்குற்று காய்ச்சல்கண்டு நெடுநாட்கள் கழித்து மீண்டார். நாளடைவில் எப்போதும் அதை எண்ணி அஞ்சி

அழத்தொடங்கினார். அவரை இங்கே கான்மாளிகைக்கு கொண்டுவந்தோம். அரசரைப்பற்றிய செய்தியே அவர் செவிகளில் விழாதபடி காத்தோம். இங்கே எங்கும் காளையோ பசுவோ அவற்றின் வடிவங்களோகூட அவர் விழிகளில் படுவதில்லை. ஆனால் அவர் அச்சம் நாளும் வளர்ந்தது. முதற்சில ஆண்டுகாலம் எப்போதும் நடுங்கிக்கொண்டும் மூலைகளில் பதுங்கி அமர்ந்து விம்மியழுதபடியும் இருந்தார். பின்னர் நடுக்கும் அழுகையும் நின்றன. விலகி விலகி வேறெங்கோ சென்றுவிட்டார். இன்று அவர் இருக்கும் உலகுக்கும் எங்களுக்கும்கூட எந்தத் தொடர்பும் இல்லை.”

சுப்ரியை எழுந்தாள். “நான் கிளம்புகிறேன்” என்றபின் மீண்டும் அமர்ந்து “அவளை அழைத்து வருக…” என்றாள். பிரவீரை “அஞ்சுவதற்கேதுமில்லை, அரசி. அவர் மானுடர் எவரையும் அடையாளம் கண்டுகொள்வதில்லை. அவரை ஒரு பொருளென்றோ விலங்கென்றோ நம் அகம் உணரும்” என்றபின் உள்ளே சென்றாள். சபரி “அரசி, நீங்கள் கிளம்பிவிடுவதே மேல் என நினைக்கிறேன். அவரைச் சந்திப்பது உங்கள் உள்ளத்தின் ஆழத்தை கலக்கிவிடக்கூடும். அதன்பின் எண்ணி வருந்த நேரும்” என்றாள். சுப்ரியை அவளைத் தவிர்த்து நோக்கை விலக்கிக்கொண்டாள்.

பிரவீரை சுதர்சனையின் தோளைப்பற்றி அழைத்துவந்தாள். சுதர்சனை தன்னைப்போன்ற தோற்றத்துடன் ஆனால் மேலும் சற்று பருத்த கைகளும் இடையும் கொண்டிருப்பதாக சுப்ரியை எண்ணினாள். வெளிறிய முகத்தில் கன்னங்கள் துயிலெழுந்தவைபோல உப்பி சற்று தொய்ந்திருந்தன. கண்களுக்குக் கீழே கருமை இறங்கியிருக்க விழிகள் சற்று கலங்கி அலைபாய்ந்துகொண்டிருந்தன. “அமர்க, அரசி!” என்றாள்

பிரவீரை. சுதர்சனை அவள் சொற்களுக்குப் பணிந்து பீடத்தில் அமர்ந்து தன் மேலாடையை எடுத்து கைகளில் சுற்றிக்கொண்டாள்.

“அரசி, இது தங்கள் உடன்பிறந்தவர்… கலிங்க இளவரசி சுப்ரியை” என்றாள் பிரவீரை. சுதர்சனை அவளை அடையாளம்கண்டதுபோலத் தெரியவில்லை. கண்கள் அங்குமிங்கும் அலைய அவள் தனக்குள் ஏதோ சொல்லிக்கொண்டிருந்தாள். கைவிரல்களும் நிலையழிந்து ஆடையை சுழற்றிக்கொண்டிருந்தன. “அக்கையே, என்னைத் தெரிகிறதா? இது நான், சுப்ரியை. அக்கையே” என சுப்ரியை அழைத்தாள். முணுமுணுவென்று எதையோ சொன்னபடி சுதர்சனை பக்கவாட்டில் நோக்கினாள். “நம் சொற்கள் செவிகளில் விழுவதேயில்லை. ஓயாது அவர்கள் பேசிக்கொண்டிருக்கும் எதுவும் நாம் அறிந்தவை அல்ல” என்றாள் பிரவீரை.

“என்ன பேசுகிறார்கள்?” என்றாள் சுப்ரியை. “பெரும்பாலும் உதிரிச்சொற்கள். ஏதேனும் ஒரு சொல்லோ சொற்றொடரோ அமைந்தால் ஓரிரு நாட்கள் அவையே சென்றுகொண்டிருக்கும்.” சுப்ரியை திடுக்கிட்டு திரும்பி நோக்கி “மாளவம் என்கிறார்” என்றாள். “ஆம், அதைத்தான் காலைமுதல் சொல்லிக்கொண்டிருக்கிறார்.” சுப்ரியை “ஏன்?” என்றாள். பிரவீரை “அதை நாம் உணரவேமுடியாது, அரசி. இப்புவியில் நாம் இணைக்கப்பட்டிருக்கும் வலைக்கண்ணிகளுக்கு முற்றிலும் அப்பாற்பட்ட ஏதோ சரடு அது” என்றாள்.

“நான்கு, நான்கு, ஆனால் அவ்வாறல்ல, நான்கில் அல்ல” என்று சுதர்சனை தலையாட்டினாள் மறுப்பவள்போல. “ஆனால் மூன்றிலிருந்து நான்குக்கு நான்கல்ல… ஆமாம்.”

பிரவீரை "இவ்வாறுதான் இருக்கும் எல்லா பேச்சுக்களும்" என்றாள். "எவ்வகையிலும் நம் சித்தத்தால் தொடுக்கவோ இணைக்கவோ இயலாது." சுப்ரியை சுதர்சனையின் தொடையைப் பற்றி உலுக்கி "அக்கையே, அக்கையே, கேட்கிறீர்களா? இது நான். அக்கையே" என்றாள். அவள் விழிகள் சுப்ரியையை நேருக்குநேர் நோக்கின. ஆனால் கண்களில் அறிதல் நிகழவில்லை. "ஆனால் ஒன்றிலிருந்துதான். மாளவத்தில் அது வேறு. ஒன்று எப்படி இரண்டு? ஆனால்..." என்றாள்.

சுப்ரியை பெருமூச்சுடன் எழுந்துகொண்டு "நான் கிளம்புகிறேன். அக்கையை நோக்கிக்கொள்க!" என்றாள். "அஸ்தினபுரி இளைய அரசியை முழுமையாகவே மறந்துவிட்டது, அரசி" என்றாள் பிரவீரை. "இவர்கள் இங்கிருப்பதை இருபதாண்டுகளுக்குப் பின்னர் நேற்றுதான் நினைவுகூர்ந்தனர். அதுவும் கனகரின் மைந்தர் ஸ்ரீகரர் இப்போது அரண்மனை வரவேற்புத்தொழில் சிற்றமைச்சராக இருக்கிறார். தாங்கள் வருவதனால் இளைய அரசியும் வந்து வரவேற்புக்கு நிற்கலாம் என அவருக்குத்தான் தோன்றியது." சுப்ரியை "சித்தம் கலங்கியவர்கள் இறந்தவர்கள்போலத்தான். அவர்களை மறக்காமல் வாழ்க்கை இல்லை" என்றாள்.

சபரி "நாம் செல்வோம், அரசி..." என்றாள். "ஒருவேளை அரசப் பேரவை முடியவில்லை என்றால் நாம் அங்கே செல்லமுடியும்." அவளை சினத்துடன் நோக்கிவிட்டு "நான் கிளம்புகிறேன், அக்கை" என்று சுதர்சனையிடம் சொன்னாள். சுதர்சனையின் விழிகள் நோக்கிலாது அலைய உதடுகளில் சொற்கள் அசைந்தன. "கருகுமணிக் காதணி... துளையிட்ட கருகுமணி." சுப்ரியை திகைத்து, கைகள் நடுங்க "என்ன

சொல்கிறார்?” என்றாள். “அவர் மாளவத்தில் இருக்கிறார். அங்குள்ள ஏதேனும் வழக்கமாக இருக்கும்” என்றாள் பிரவீரை. “நாம் செல்வோம் அரசி, இங்கிருப்பது உங்களை நிலையழியச் செய்கிறது” என்றாள் சபரி.

அவர்கள் எழுந்து வெளியே செல்ல பிரவீரை உடன்வந்தபடி “இதை ஜீவபாலாயனம் என்று நிமித்திகர்கள் சொல்கிறார்கள். உடல் உயிரையும் உள்ளத்தையும் தன்னிடம் பிடித்து வைத்திருக்கும் ஆற்றல்கொண்டிருக்கிறது, பாறை உப்பையும் அனலையும் உள்ளே கொண்டிருப்பதுபோல. அத்திறனை உடல் கைவிடுகையில் உயிரும் உள்ளமும் எழுந்து அலையத் தொடங்குகின்றன. அவற்றுக்கு காலமும் இடமும் இல்லை. எங்கும் எப்போதும் இருக்க அவற்றால் இயலும். கால இடத்தில் அவற்றை நிறுத்துவது உடலே” என்றாள்.

சுப்ரியை ஒன்றும் சொல்லாமல் தேரை நோக்கி சென்றாள். சபரி “நாம் பேரவைக்குச் சென்று பார்ப்போம், அரசி” என்றாள். “வேண்டாம், நம் மாளிகைக்கே செல்வோம்” என்றாள் சுப்ரியை.

# குருதிச்சாரல் - 70

**பகுதி பத்து : பெருங்கொடை – 9**

களைத்து படுத்து துயின்று மிக விரைவிலேயே ஏதோ ஓசை கேட்டு சுப்ரியை எழுந்துகொண்டாள். அந்த ஓசை என்ன என்று அறிந்தாள், விசைகொண்ட ஒரு தென்றல்கீற்று அறைக்குள் சுழன்று சென்றிருந்தது. பித்தளைத்தாழ் எவரோ வந்துசென்றதன் தடயம் என அசைந்துகொண்டிருந்தது. சொல்லி முடித்த உதடுபோல மெல்ல அமைந்தது சாளரத்திரை.

அவள் பெருமூச்சுடன் எழுந்து சென்று உப்பரிகையை அடைந்து இருண்ட தோட்டத்தை நோக்கிக்கொண்டு நின்றிருந்தாள். இருளுக்குள் இலைகள் அசைவிழந்திருந்தன. பின்னர் மீண்டுமொரு காற்றில் இருள் கலைவடைந்தது.

தூணைப் பற்றியபடி உப்பரிகை விளிம்பில் அமர்ந்தாள். விண்மீன்கள் சில இலைகளினூடாக தெரிந்தன. இலைகளிலிருந்து இளவெம்மைகொண்ட ஆவிக்காற்று எழுந்தது. எங்கோ பசுவின் புதுச்சாணியின் மணம். மிகத் தொலைவில் யானை உறுமியது. ஒரு வண்டி சகடம் குலுங்க விரைந்துசென்றது. மிகத் தொலைவில் புரவி ஒன்றின் கனைப்பு நகைப்போசை என கேட்டது. காவல்பொழுது மாற்றத்தை அறிவிக்கும் கொம்போசையை கேட்டாள். அத்தனை நேரம் கடந்துவிட்டதா என வியந்தாள். அதுவரை என்ன எண்ணிக்கொண்டிருந்தோம்? எதுவுமே எண்ணவில்லை. ஆனால் எதுவும் எண்ணாமல் ஒருவர் அமர்ந்திருக்க முடியுமா?

பெருமூச்சுவிட்டபடி அசைந்து அமர்ந்தாள். அறைக்குள் சென்று மண்குடுவையிலிருந்து குளிர்நீர் அருந்தவேண்டுமென நெஞ்சு தவித்தது. ஆனால் அங்கிருந்து எழமுடியுமென தோன்றவில்லை. எழுந்து எழுந்து சலித்து பின் உடலிலேயே அமைந்தது அவள் உள்ளம். நெடுநேரம் அசைவில்லாது அமர்ந்திருந்தமையால் தோள்கள் கடுத்தன. சோம்பல்முறித்த பின்னர் திரும்பி அமர்ந்தாள். அமர்ந்திருக்கையில்கூட உடல் களைப்பு கொள்கிறது. ஏனென்றால் உடற்தசைகள் ஓய்வில் இல்லை. திமிறி விலகும் தசைகளை பிற தசைகள் பற்றி இழுத்து நிறுத்தியிருக்கின்றன. அவற்றின் நிகர்நிலையையே உடல் என்கிறோம்.

சபரி உடனிருந்தால் நன்று என ஓர் எண்ணம் எழுந்தது. அவளுடைய சொற்களில் அறிவும் கூர்மையும் அமைவதேயில்லை. எளிய அடுமனைப்பெண் போன்றவள். அணுக்கச் சேடியர் வழக்கமாகக் கற்றிருக்கும் நெறிநூல்களையும் காவியங்களையும்கூட அவள் அறிந்திருக்கவில்லை. ஆனால் அவளுடைய அண்மை எப்போதும் தேவைப்பட்டது. சேடியர் கட்டுத்தறிகள்போல. அவர்களில்லையேல் களமும் நெறியும் நிலைகொள்வதில்லை. ஒவ்வொரு கணமும் அவள் கைவிட்டுச் செல்லும் உலகை நினைவுறுத்துபவள் சபரி.

முந்தையநாள் அந்தியில் திரும்பும்போது அவள் சொன்ன ஒரு வரி அவளை திடுக்கிட்டு நோக்கச் செய்தது. “உடன்பிறந்தவரும் நீங்களும் ஒன்றே, அரசி. அவர் கொண்ட பெருவிருப்பும் நீங்கள் கொண்ட கொடுவஞ்சமும் நிகர்.” அவள் “ஏன்?” என்றாள். “தெரியவில்லை, தோன்றியது” என்றாள் சபரி. “அவர் எண்ணியதை ஆழம் எண்ணவில்லை. உங்களுக்கும் அவ்வாறுதானா?” சிலகணங்களுக்குப் பின்னர் சுப்ரியை சூள்கொட்டி தன்னை தெருவை நோக்கி திருப்பிக்கொண்டாள்.

மாளிகை முகப்பை அடைந்தபோது சபரி “அரசர் இன்னும் வந்துசேரவில்லை” என்றாள். சுப்ரியை அதை கேட்டதாகவே காட்டிக்கொள்ளவில்லை. சபரி “அவர் அங்கே களியிலிருந்து விழித்து மீண்டும் குடிக்கத் தொடங்கியிருப்பார்” என்றாள். சுப்ரியை களைப்பு கால்களை தளரச்செய்ய மேலே சென்றாள். ஆடைகளைக் களைந்து நீராடி மாற்றாடை அணிந்து தன் அறைக்குள் சென்றபோது கதவுகளை மூடி உள்ளே பதுங்கிக் கொள்ளவேண்டும் என்று தோன்றியது. சபரி வந்து “இரவுணவு கொண்டுவரவா, அரசி?” என்றபோது “வேண்டாம்” என்றாள். “பால்

மட்டுமாவது கொண்டுவருகிறேன்” என்றாள் சபரி. அவள் தலையசைத்தாள்.

களைப்பில் கைகளைத் தூக்கி பால்குவளையை வாங்கவும் இயலவில்லை. கண்ணிமைகள் சரிந்தபடியே இருந்தன. எழுந்து சென்று மஞ்சத்தில் படுத்தபோது அதில் புதைந்து கரைந்தழிந்துவிடுவோம் என்று தோன்றியது. சேற்றுமண்ணில் விழுந்த வாழை என மறுநாள் தன் உடல் மட்கி அதன்மேல் கிடக்கும். கண்களை மூடிக்கொண்டபோது சுதர்சனையின் முகத்தை அருகே கண்டாள். அவள் விழிகளை நோக்கியபடி உள்ளத்தில் அசைவிலாது இருந்தபோது தான் கலிங்கத்தில் இருப்பதாக நினைத்தாள்.

மெல்லிய புன்னகையுடன் சுதர்சனை “கலிங்கம் சிந்துவிலிருந்து நெடுந்தொலைவில் உள்ளது” என்றாள். “ஆம், ஆனால் ஒரு சிறுவெண்புறா பறந்துசெல்லும் தொலைவுதான்” என்றாள் சுப்ரியை. “சென்றுவிட்டதா?” என்று சுதர்சனை கேட்டாள். “இன்னும் கிளம்பவில்லை” என்று அவள் சிரித்தபடி விழிதிருப்பிக்கொண்டாள். மென்மையான தசையில் பூமுள் குத்தியிருப்பதுபோல, விரலால் அதை மெதுவாக வருடிக்கொண்டிருப்பதுபோல உள்ளம் குறுகுறுத்தது. “ஏன்?” என்றாள் சுதர்சனை. அவள் “அறியேன்” என்றாள்.

அருகிலிருந்த விறலி சமீரை “அது முட்டைக்குள் இருக்கிறது. இப்போது இரு முதற்துளிகளாக கடுகுபோன்ற கண்கள் மட்டுமே எழுந்துள்ளன. அக்கண்களின் நோக்கு வெளியே நீளவில்லை. தன் அகம்நோக்கி நான் என்கிறது. இனி அது நான் வளர்க என்று சொல்லும். நின்றிருக்க மரமல்லி மலர்போல சிறிய கால்கள் எழும். அதன்பின் பஞ்சுப்பிசிறுபோல சிறகுகள். சிறகுவிரிக்க இடம்தேடி உள்ளே

சுற்றிவரும். நெல்மணி போன்ற சிறிய அலகு என அவ்விழைவு கூர்கொள்ளும். தன்னைச் சூழ்ந்திருக்கும் மிகச் சிறிய வெண்ணிற வானை அது குத்திக் கிழிக்கும். மிகப் பெரிய வானை நோக்கியபடி எழுந்து நின்று சிறகடித்து ஈரம் களையும்" என்றாள்.

"பின்னர் அது வானை எண்ணியே கணம்தோறும் வாழும். மரக்கிளையில் நின்று வான் வான் என ஏங்கும். பொய்ச்சிறகடிப்பில் உள்ளத்தால் பறக்கும். காற்றை சிறகும் சிறகை காற்றும் அறிந்த பின்னர் வானில் எழும். கீழே அமிழும் இம்மாளிகையை, இச்சிறுநகரை, இந்த நாட்டை நோக்கி புன்னகைத்தபடி மேற்குவெளியில் மறையும்" என்றாள் சமீரை. சுதர்சனை சிரித்து "எங்கிருந்தடி இக்கவிதை?" என்றாள். "நானே புனைந்தது, இப்போது" என்றாள் அவள். "இவளைப்போன்ற சேடியர் சொல்வதைக் கேட்டு அவரைப்பற்றி எண்ணம் கொண்டிருக்கிறாய். அவர் எவரென்று நாம் அறியவே முடியாது" என்றாள் சுதர்சனை. "அரசுசூழ் அவையிலமர்ந்து சைந்தவர் எனக் கேட்டால் முற்றிலும் பிறிதொருவரை அளிப்பர் அமைச்சர்."

எரிச்சலுடன் "பிறகெப்படி நமக்குரிய ஆணை தெரிவு செய்வது?" என்றாள் சுப்ரியை. "இப்புவியை, இக்குலத்தை, இவ்வுறவுகளை நீயா தெரிவு செய்தாய்? தெய்வங்களுக்கு அதை விட்டுவிடுக! நான் செய்யவிருப்பது அதுவே" என்றாள் சுதர்சனை. சுப்ரியை உதட்டைச் சுழித்தாள். "என் சொற்களைக் கேள். அவரை நீ உளம்கொண்டிருப்பது அவருக்குத் தெரிந்தாலும் உன்னை அவர் வெல்வது நிகழுமென்று உறுதியில்லை. நம் தந்தையின் அரசியல் கணக்குகள், சூழ்ந்திருக்கும் அரசர்களின் ஆற்றலின் நிகராடல்கள்.

அனைத்துக்கும் அப்பால் அவருடைய அரசியலுக்கு இது தேவையென்று தோன்றவும் வேண்டும். பாரதவர்ஷத்தின் அரசியலோ ஒவ்வொருநாளுமென மாறிக்கொண்டிருக்கிறது.”

“அங்கம் நம் அண்டைநாடென்பதனாலேயே எதிரிநாடு. அங்கத்தின் நட்புநாடு சிந்து” என்று சுதர்சனை தொடர்ந்தாள். “இதையெல்லாம் எண்ண எனக்கு ஆற்றல் இல்லை, நான் உளம்கொண்டுவிட்டேன். அதுவன்றி எதையும் நான் அறியவேண்டியதில்லை” என்றாள் சுப்ரியை. “நீ கதைகளில் வாழ்கிறாய். வாளின் நிழலைக் கண்டு உளம்கொண்டு பின் தவமிருந்து அத்தலைவனை அடைந்த இளவரசியின் கதைகள் முதிரா இளமையில் கேட்க இனிதானவை. அவ்வண்ணம் சில நடந்துமிருக்கும், அவையே சூதர்பாடலாகின்றன. உளம்கொண்டவனை அடையமுடியாது ஏங்கி அழிந்த அரசியரை சூதரும் கவிஞரும் சொல்வதேயில்லை.”

சுப்ரியை அவளுடன் மேலும் பேசப் பிடிக்காமல் அமைதியாக இருந்தாள். “நான் அவரைப்பற்றி உசாவினேன். அவருடைய இயல்புகள் வேறு. ஆணவமும் தனிமையும் கொண்டவர். நற்பண்புள்ள தந்தையால் வளர்க்கப்பட்டவர் அல்ல. குடிப்பழி ஒன்று அவர் தந்தையை தொடர்கிறது. அது அவரையும் உருத்துவந்து ஊட்டும்” என்றாள் சுதர்சனை. சுப்ரியை எழமுயன்றாள். “என்னடி, உண்மை உறுத்துகிறதா? எண்ணிப்பார்” என்றாள் சுதர்சனை. “நான் அவரைப்பற்றி எண்ணுவதை விட நீதான் எண்ணிக்கொண்டிருக்கிறாய்” என்றபடி சுப்ரியை எழுந்தாள். முகம் சிறுக்க “என்னடி சொல்கிறாய்?” என்றாள் சுதர்சனை.

“ஆம், எண்ணிப்பார். சென்ற ஓராண்டாக இதைத் தவிர எதையேனும் என்னிடம் நீ பேசியிருக்கிறாயா?” சுதர்சனை “நீ

என்னை சிறுமைசெய்கிறாய்” என்றாள். “இல்லை, இப்போதுதான் உன்னை புரிந்துகொள்கிறேன்” என்றாள் சுப்ரியை. “நன்று, சிறுமைசெய்து என்னை விலக்கி உன் கனவை காத்துக்கொள்வாய் என்றால் அவ்வாறே ஆகுக. ஆனால் ஒன்று நினைவுகொள். நீ எண்ணியது நிகழ எவ்வகையிலும் வாய்ப்பில்லை. ஜயத்ரதருக்கும் தொலைநிலமாகிய கலிங்கத்தால் ஆவதொன்றில்லை. அஸ்தினபுரியின் கரும்பனையைத்தான் அவர் விழைவார். அதுவே அவருக்கு துவாரகையை எதிர்கொள்ளும் படைவல்லமையை அளிக்கும். கலிங்கம் மகதத்திற்கும் அஸ்தினபுரிக்கும்தான் இன்று தேவை. அவர்களில் ஒருவரால் வேட்டைவிலங்கென நீ துரத்தி வெல்லப்படுவாய். கூண்டில் சிறகொடுக்கி வாழ்வாய். அதுதான் உன் ஊழ்” என்றபடி சுதர்சனை எழுந்து சென்றாள்.

அவள் சொற்கள் சுப்ரியையை உளம் நடுங்கச் செய்தன. அவள் அத்தனை கூர்மையாக அவளை தாக்கவேண்டும் என விரும்பவில்லை. உண்மையிலேயே அவள் சொற்கள் தன் கனவை கலைத்துவிடலாகாதென்று அஞ்சியே அவ்வாறு சொன்னாள். அவள் சென்று மறையும் சிலம்பொலியைக் கேட்டபடி அமர்ந்திருந்தாள். விறலி “நீங்கள் நேரடியாகப் பேசியிருக்கக் கூடாது, இளவரசி” என்றாள். “ஏன்?” என்று அவள் கேட்டாள். “எப்போதும் வண்ணம் மயங்கி ஆடும் இந்தக் களத்தில் நேர்ச்சொற்கள் அனைத்தும் நஞ்சும் கூர்மையும் மிகுந்தவை. இத்தனை அணிச்சொற்களும் கவிதைகளும் அதனால்தான் தேவையாகின்றன” என்றாள் விறலி.

சுப்ரியை எழுந்து மேலாடையை தலைக்குமேல் போட்டுக்கொண்டு நடந்தாள். சபரி எங்கிருக்கிறாள் எனத் தெரியவில்லை. அறைக்காவலாக நின்றிருந்த ஆணிலி

தலைவணங்கினான். அப்பால் நீண்டுசென்று படியிலிறங்கிய இடைநாழியில் விளக்கொளி நீர்போல பரவிக்கிடந்தது. அவள் படியிறங்கி கூடத்திற்குச் சென்று அங்கிருந்த காவலர்களின் வணக்கத்தை விழிகொள்ளாமல் மறுபக்கம் படியேறி அங்கிருந்த இடைநாழியினூடாகச் சென்று கர்ணனின் மஞ்சத்தறையை அடைந்தாள். அறைக்காவலன் தலைவணங்கி விலகினான். கதவைத் திறந்து உள்ளே சென்றாள்.

கர்ணன் படுக்கையில் மேலிருந்து விழுந்தவன் போல கிடந்தான். கைகால்கள் மஞ்சத்திற்கு வெளியே என நீண்டிருந்தன. மூச்சு மெல்ல ஏறியிறங்கிக்கொண்டிருந்தது. அவள் அவனை நோக்கியபடி அங்கே சற்றுநேரம் நின்றிருந்தாள். அவன் தோள்களும் புயங்களும் நெஞ்சும் மெலிந்திருந்தாலும்கூட பெரிய எலும்புக்கட்டமைவால் அவன் பேருருவனாகவே எஞ்சினான். அவன் உதடுகளை ஒருகணம் நோக்கிவிட்டு விழிதாழ்த்திக்கொண்டாள். தொடர்பற்ற ஓவியங்களாக நினைவுகள் உள்ளத்தை நிறைத்தன. ஒன்று பிறிதொன்றை மறைக்க எதிலும் நிலைகொள்ளாமல் அவள் அகம் தவித்தது.

பின்னர் பெருமூச்சுவிட்டுக்கொண்டு மெல்ல பின்னடைந்தாள். கதவில் முட்டிக்கொள்ள அது சுவருடன் அறைந்து ஓசையெழுப்பியது. கர்ணன் “யார்?” என துயிலில் குழறியபடி அசைந்து படுத்தான். அவள் நெஞ்சதிர நோக்கிக்கொண்டு நின்றாள். அவன் விழித்துக்கொண்டால் என்ன சொல்வது என எண்ணியதுமே மேலும் ஓர் அடி வைத்து பின்னால் சென்றாள். அவன் விழித்துக்கொள்ளவேண்டும் என்ற விழைவு தன்னுள் இருப்பதை அதன்பின் உணர்ந்தாள். சில கணங்கள் நின்றபின் தன் வளையல்களில் ஒன்றைக் கழற்றி மெல்ல தூக்கி அவன்

மஞ்சத்தின் மேல் எறிந்தாள். அவன் “யார்?” என மீண்டும் குழறினான். வாயை சப்புகொட்டியபடி புரண்டு படுத்தான். அவள் சற்றுநேரம் நின்றிருந்தபின் மெல்ல பின்னால் சென்று கதவை மூடிக்கொண்டாள்.

சபரி அவள் அறைக்குள் வந்தபோது சுப்ரியை மீண்டும் உப்பரிகையில் அமர்ந்திருந்தாள். “துயில் விழித்தீர்களா, அரசி?” என்று அவள் கேட்டாள். “இல்லை, சற்றுமுன் விழித்துக்கொண்டேன்” என்று அவள் சொன்னாள். “முகம் வீங்கியிருக்கிறது, அதனால் கேட்டேன்” என்று சபரி இயல்பாகச் சொல்லி “நாம் இன்று அரசவையில் நிகழும் விருந்து ஒன்றுக்கு அழைக்கப்பட்டுள்ளோம்” என்றாள். “என்ன விருந்து?” என்றாள் சுப்ரியை. “ஏழு அரசியரை விருந்துக்கு அழைத்திருக்கிறார் பட்டத்தரசி. அதில் நாமும் உண்டு. பிறர் அனைவருமே தொல்குடி ஷத்ரிய அரசரின் துணைவியர்.”

சுப்ரியை எதுவும் சொல்லாததை உணர்ந்து சபரி “நேற்று அவையில் நிகழ்ந்ததன் நீட்சியாக இவ்விருந்தை பட்டத்தரசி ஒருக்கியிருக்கிறார் என நினைக்கிறேன். அரசியர் எவர் வருகிறார்கள், என்ன சொல்கிறார்கள் என்று பார்க்க விழைகிறார்கள்போலும்” என்றாள். சுப்ரியை அதற்கும் ஒன்றும் சொல்லவில்லை. “அரசி, நேற்று குடியவையில் அஸ்தினபுரியின் அரசர் வேள்வியவையில் துணைவராக அங்கரும் அவருடன் அரசியென நீங்களும் அமரவிருப்பதாக சொன்னார். அவையிலிருந்து ஒரு மறுகுரலும் எழவில்லை.” சபரி சிரித்து “அவையினருக்குத் தெரியும், அரசர் இன்று பேருருக்கொண்டு அவர்களின் தலைக்குமேல் நின்றிருக்கிறார் என” என்றாள்.

“அவையில் பிதாமகர் பீஷ்மரும் துரோணரும் இல்லையா?” என்றாள் சுப்ரியை. “இல்லை, இது குடியவை. அவர்கள் வேள்விக்கு வந்துகொண்டிருக்கும் முனிவர்களை வரவேற்று குடிலமர்த்தும் பொறுப்பிலிருக்கிறார்கள்” என்று சபரி சொன்னாள். “நன்று... நான் நீராடவேண்டும் அல்லவா?” என்றாள் சுப்ரியை எழுந்தபடி. “ஆம், அரசி. நேற்று முழுதணிக்கோலம் பூண்டீர்கள். ஆனால் பேரவையில் அமர இயலவில்லை. இன்று அரசியர் மன்றில் அவர்கள் விழியஞ்சும் அருமணிகளுடன் உங்கள் அணித்தோற்றம் திகழவேண்டும்” என்றாள் சபரி. சுப்ரியை மறுமொழி சொல்லாமல் எழுந்துகொண்டாள்.

நீராட்டறைக்குச் செல்லும் வழியில் சபரி “அஸ்தினபுரியில் எவருக்கும் மறுகருத்து இல்லை. அனைவருக்கும் தெரிந்திருக்கிறது, அங்கர் வில்லெடுக்கவில்லை என்றால் போர்வெற்றி அமையாது என்று. அர்ஜுனரை எண்ணி அஞ்சாதவர்களே இந்நகரில் இன்றில்லை. அவர் கைலைமலைக்குச் சென்று விண்ணமர்ந்த உமைமணாளனிடமிருந்தே பாசுபதம் என்னும் பேரம்பு பெற்று மீண்டிருக்கிறார் என்கிறார்கள். ஒரு கணத்தில் உலகை அழிக்கும் வல்லமை கொண்ட அம்பு அது” என்றாள். சுப்ரியை நடக்க உடன் எட்டு வைத்து “அத்தகைய அம்பை வெல்லும் அம்பு நம் அரசரிடம் உள்ள அரவம்பு என்கிறார்கள். அது வாசுகி உமிழ்ந்த நஞ்சாலானது. இது தட்சனின் நஞ்சாலானது” என்றாள்.

சுப்ரியை நீராட்டறைக்குள் சென்றாள். உள்ளே செல்லும்போதே தன் நெஞ்சு ஓசைகொள்வதை எண்ணி வியந்தாள். அணிச்சேடியர் வணங்கியபோது அதில் சூக்ஷ்மை இல்லை என்பதை உணர்ந்தாள். அது அவளுக்கு ஆறுதலை அளித்தது.

தன் உடலை அவர்களிடம் அளித்துவிட்டு கண்களை மூடிக்கொண்டாள். அவள் சூக்ஷ்மையைப் பற்றி கேட்பாள் என சேடியர் எதிர்பார்த்தனர். சற்றுபொறுத்து ஒருத்தி "மூத்தவர் சூக்ஷ்மை நேற்றுமுதல் நகரில் அலைந்துகொண்டிருக்கிறார். அவர் வருவதும் செல்வதும் கணிக்க இயலாதவை. சிலநாட்களாகவே நிலைகொள்ளாமை மிகுந்துவிட்டிருக்கிறது" என்றாள். சுப்ரியை ஒன்றும் சொல்லவில்லை.

நீராடி ஆடைமாற்றி அவள் கிளம்பியபோது சபரி உடன் வந்தபடி "ஆறு அரசியரே விருந்துக்கு வருகிறார்கள், அரசி. கோசலத்தின் அரசி சௌமித்ரை தலைநோவு என்று சொல்லி தங்கிவிட்டார்" என்றாள். சுப்ரியை "ம்" என்றாள். "அவர்கள் தங்கிவிட்ட செய்தியை அறிந்தபின் வேறு சிலரும் அம்முடிவை எடுக்கக் கூடும்" என்று சபரி சொன்னாள். "இது அவர்களின் ஏற்பை அறிவதற்காக அரசர் அமைத்த விருந்து அல்ல. ஏற்க மறுப்பவர்களுக்கு என்ன எஞ்சும் என்பதை பிறருக்குக் காட்டுவதற்காக அமைத்துள்ள பொறி. கோசலநாட்டு அரசி தன் அரசருக்கும் அமைச்சருக்கும் தீங்கை இழைத்துக்கொண்டிருக்கிறார்." சுப்ரியை திரும்பி நோக்கி "எப்படி தெரியும்?" என்றாள். "சற்று முன் கீழே காவலர் பேசிக்கொண்டிருந்தனர்." சுப்ரியை "காவலரா?" என்றாள். "அரசி, காவலர் அறியாத அரசு நிகழ்வுகள் சிலவே" என்றாள் சபரி.

அவர்களுக்கான தேர் காத்து நின்றிருந்தது. அருகே சிவதர் நின்றிருந்தார். அவர் தலைவணங்க தேரில் ஏறுவதற்கு முன் ஒருகணம் தயங்கிய சுப்ரியை "அரசர் இன்றேனும் அவைபுக வாய்ப்புண்டா?" என்றாள். "இன்று அவருக்கு நிகழ்வுகளேதும் சொல்லப்படவில்லை. நேற்று சற்று குடிமிகுந்துவிட்டது. எழுந்ததுமே தலைவலியும் நிலைகொள்ளாமையும் இருந்தது.

ஓய்வெடுக்கும்படி சொன்னேன்” என்றார். சுப்ரியை தேரில் ஏறியமர சபரி அருகே அமர்ந்தாள். தேர் நகர்ந்ததும் “நேற்று நள்ளிரவில் நினைவிலா நிலையில் கொண்டுவந்தனர்” என்றாள்.

“யார்?” என்றாள் சுப்ரியை. “குண்டாசியும் சுஜாதரும் மட்டுமே உடன்வந்தார்கள். அவர்கள் இருவரும் குடித்திருக்கவில்லை.” சுப்ரியை தலையசைத்தாள். “குண்டாசி நெடுநேரம் அரசரின் அறைவாயிலில் துயரத்துடன் நின்றிருந்தார். அவரை வற்புறுத்தி அழைத்துச்சென்றார்கள்.” சுப்ரியை “நாம் இன்று ஆற்றவேண்டிய பணி என்ன? விருந்திலமர்வது மட்டும்தானா?” என்றாள். “ஆம் அரசி, இது வெறும் முறைமைவிருந்து. அணிச்சொற்கள் ஆற்றுவதொன்றே நாம் செய்யக்கூடுவது” என்றாள். “இன்று எவரேனும் என்னை தைக்கும் சொல் எடுக்கக்கூடுமா?”

சபரி அதை எதிர்பார்க்கவில்லை. பின்னர் “அஸ்தினபுரியின் அரசியின் முன் அங்கரைப்பற்றி எவரும் சொல்லெடுக்க முடியாதென்று அனைவரும் அறிந்திருப்பார்கள்” என்றாள். பின்னர் சற்று தயங்கி “தாங்களும்கூட அவ்வாறு நம் அரசரைப் பழித்து சொல்லெடுக்க பட்டத்தரசி ஒப்பமாட்டார்கள், அரசி” என்றாள். சுப்ரியை சினத்துடன் திரும்பி நோக்க “அரசரின் குறைகள் அனைவரும் அறிந்தவை. கலிங்கத்தரசிக்கு அவர் நிகரல்ல என்பதை அறியாதவரும் இல்லை. ஆயினும் அஸ்தினபுரியில் அவர் துரியோதனருக்கு நிகராகவே கருதப்படுகிறார். அவரை அவர்கள் மூத்தவர் என்றே அழைக்கிறார்கள். அதிலும் பட்டத்தரசிக்கு…” என்றாள். சுப்ரியை “போதும்” என்றாள். சபரி “நான் சொல்ல வருவது…” என தொடர உரத்த குரலில் “போதும்” என்றாள்.

தேர் அரசப்பெருவீதியை அடையும் வரை சுப்ரியை உடல் பதறிக்கொண்டிருந்தாள். அதை சபரி அறிந்திருப்பாள் என உணர்வு வந்ததும் ஓரக்கண்ணால் அவளை நோக்கினாள். அவள் அனைத்தையும் மறந்து வெளியே நோக்கிக்கொண்டிருந்தாள். நுண்மைகளை உணரமுடியாத இச்சேடியை நான் வேண்டுமென்றேதான் தெரிவு செய்துகொண்டிருக்கிறேனா? அவள் ஆடையை சீரமைக்கத் தொடங்கினாள். முன்மடிப்புகளை செம்மை செய்து, முந்தானை அடுக்குகளை அமைத்து இடைக்கொசுவங்களை ஒழுங்குபடுத்தியபோது தன் அகத்தையும் நிலைகொள்ளச் செய்ததாக உணர்ந்தாள்.

புஷ்பகோஷ்டத்தின் வாயிலை தேர் அடைந்தபோது அவள் சபரியைத் தொட்டு "வந்துவிட்டோம்" என்றாள். அவள் வெளியே நோக்கி "ஆம் அரசி, எவர் வந்திருக்கிறார்கள் என்று நோக்கினேன். காசிநாட்டரசியும் வங்கநாட்டரசியும் புண்டரநாட்டரசியும் வந்திருக்கிறார்கள். அந்தக் கொடி எது என புரியவில்லை. பொற்பன்றி முத்திரை எவருடையது?" என்றாள். சுப்ரியை எட்டிப்பார்த்தபின் "அத்தேரின் சகடங்களில் கரடி முத்திரை உள்ளது. சிந்துவின் அரசருக்குரியது" என்றாள். "சிந்துநாட்டரசி துச்சளை வந்துவிட்டுச் சென்றார் என்றல்லவா அறிந்தேன். மீண்டும் வந்துள்ளாரா?" என்றாள் சபரி. "பெருவேள்வி என்பதனால் வந்திருக்கலாம்" என்றாள் சுப்ரியை.

அவர்களை அரண்மனைப் பொறுப்பிற்கு அமைக்கப்பட்டிருந்த அமைச்சர் ஸ்ரீகரர் வணங்கி வரவேற்றார். "அங்கநாட்டரசிக்கு நல்வரவு. நான் மூத்த அமைச்சர் கனகரின் மைந்தன், என்னை ஸ்ரீகரன் என்பார்கள்" என்றார். "நான் அங்கருக்கு மிக அணுக்கமானவன். என்னை தோள்வளைத்து அணைக்காமல்

அவர் பேசுவதே இல்லை.” சுப்ரியை முகம் மலர்ந்து “ஆம், நேற்றுகூட ஒருவர் அவ்வாறு சொன்னார்” என்றாள். “ஆம், அவனை அங்கநாட்டரசர் காலகன் என்று அழைப்பார்... இங்கே நாங்கள் அனைவருமே அவருக்கு இளையோரும் மைந்தரும் அணுக்கர்களும்தான்... வருக, அரசி” சுப்ரியை அவருடன் நடந்தபடி “அவர் இங்கே நெடுநாட்கள் இருந்திருக்கிறார் அல்லவா?” என்றாள். அவர் கர்ணனைப்பற்றி பேசிக்கேட்க அவள் விரும்பினாள்.

“ஆம், ஆனால் சென்ற பதினான்காண்டுகளாக அவர் இந்நகருக்குள் நுழையவில்லை. இருமுறை நாட்டின் எல்லைக்குள் நுழைந்து சென்றிருக்கிறார். காலகன் அவருடன் இரு போர்களில் தோளிணைந்துள்ளான். அமைச்சர்களுக்கு அவ்வாய்ப்பு இல்லை அல்லவா?” என்றார் ஸ்ரீகரர். எதிரில் அரண்மனைக்குள்ளிருந்து ஒரு சிறு குழு வந்தது. “சைந்தவர் விடைகொள்கிறார். சற்று பொறுங்கள், அரசி” என்றார் ஸ்ரீகரர். அறிவிப்பாளன் கொம்போசை எழுப்பி “சிந்துநாட்டரசர் ஜயத்ரதர் எழுந்தருள்கை!” என அறிவித்தான். கவச உடையணிந்த நான்கு வீரர்கள் வர தொடர்ந்து ஜயத்ரதன் தோன்றினான்.

“அவரைத் தாங்கள் அறிவீர்கள் எனில் ஒரு சொல் முகமனுரைக்கலாம், அரசி” என்றார் ஸ்ரீகரர். “ஆம், அது முறையல்லவா?” என்றபடி சுப்ரியை நடந்தாள். ஜயத்ரதன் அவளை நோக்கியதும் புன்னகையுடன் நின்றான். அவள் அருகணைந்து “சைந்தவரை சந்திக்க நேர்ந்ததில் மகிழ்வுகொள்கிறேன். இந்நாள் இனிது” என முகமன் உரைத்தாள். அவன் முகமெங்கும் புன்னகை விரிய “நெடுநாள் விழைந்திருந்த சந்திப்பு” என்றபின் திரும்பி நோக்காமலேயே ஸ்ரீகரரிடம் விலகிச்செல்ல கையசைத்தான். அவர்

தலைவணங்கி அகன்றார். சபரியும் பின்னடைந்தாள். அவள் திரும்பி நோக்க அவர்களைச் சூழ்ந்திருந்தவர்கள் விலகி அந்த முற்றத்தில் தனிமையின் வட்டம் ஒன்று அவர்களைச் சுற்றி அமைந்திருந்தது.

ஜயத்ரதன் "நான் நேரில் சந்தித்ததில்லை. ஆனால் உங்கள் ஓலை கிடைத்ததும் விறலியர் வழியாக ஓவியங்களைச் சேர்த்து நோக்கினேன். அவற்றில் தெரிந்த அதே உருவம் நடந்துவருவதைக் கண்டு என் விழிகள் மலைத்துவிட்டன" என்றான். சுப்ரியை கொதிக்கும் நெய் என சினம் நுரைத்தெழுவதை உணர்ந்தாள். அதை அடக்கியபடி "அஸ்தினபுரியின் இளவரசி இங்கே வந்துசென்றார்கள் என அறிந்தேன். அவர்களை சந்திக்க விழைந்திருந்தேன்" என்றாள். ஜயத்ரதன் "அவள் சென்றுவிட்டாள். அவள் உருவத்திற்கு இந்த அரண்மனையை தொழுவத்தை யானை என உணர்கிறாள்" என்று சொல்லி உரக்க நகைத்து "நான் அவளை சந்திப்பதே அரிது" என்றான்.

"மைந்தருக்கும் சிந்துநாட்டிற்கும் நன்னலம் சூழ்க!" என்றபின் கைகூப்பி தலைவணங்கினாள். ஜயத்ரதன் விழிகளில் திகைப்பும் பின் சினமும் எழ "நான் பலமுறை அங்கத்தின்மீது படைகொண்டெழ எண்ணியதுண்டு. மண்ணுக்காக மட்டுமல்ல பெண்ணுக்காகவும் படையெழலாம் என்பது சிந்துவின் நெறி. அஸ்தினபுரியின் நட்பு அங்கத்தை காத்தது" என்றான். அவள் நிமிர்ந்து அவன் முகத்தை நோக்கி புன்னகைத்து "சிந்துவைக் காத்தது என்று சொல்லுங்கள்" என்றபின் "விடைகொள்கிறேன், அரசே" என்று முன்னால் சென்றாள். அவன் சினத்துடன் அவளிடம் மறுமொழிசொல்ல எழுந்த வாயுடன் நிற்பதை உளவிழியால் கண்டாள்.

சபரி வந்து அவளுடன் சேர்ந்துகொண்டு “பேச்சை முறித்துக்கொண்டு வந்ததுபோல் தோன்றியது, அரசி... சைந்தவர் சினம் கொள்ளக்கூடும். அவையில் நம் அரசர் அரசத்துணைவராக அமரவேண்டும் என்றால் சைந்தவரின் ஒப்புதல் தேவை. இயல்பாக அங்கே அமரவேண்டியவர் அவர்தான்” என்றாள். சுப்ரியை “எவ்வழி?” என்றாள். சபரி “நம்மை வரவேற்க பட்டத்தரசியின் அவைச்சேடி சம்புகை வந்திருக்கிறாள்” என்றாள். திரும்பி நோக்கி “சைந்தவர் சினம்கொண்டிருக்கிறார். அமைச்சர் ஸ்ரீகரரை கடிந்துகொள்கிறார்” என்றாள். சுப்ரியை “மிகச் சிறியவர்” என்றாள். சபரி “ஆம் அரசி, இங்கே அந்தண அமைச்சர்களை எவரும் இப்படி கடிந்துகொள்வதில்லை” என்றாள்.

ஸ்ரீகரர் அருகே வந்து “வருக அரசி, சம்புகை நம்மைத்தான் எதிர்நோக்கி நின்றிருக்கிறாள்” என்றார். சம்புகையை நோக்கி அவர் கைகாட்ட அவள் மங்கலத்தாலங்கள் ஏந்தி நின்றிருந்த மூன்று அணிச்சேடியருடன் அருகே வந்தாள். “அஸ்தினபுரியின் பட்டத்தரசியின் அகத்தளத்திற்கு நல்வரவு அரசி. இந்நாளில் மங்கலங்கள் பொலிக!” என்றாள். “நலம் சூழ்க...” என்று சுப்ரியை சொன்னாள்.

# குருதிச்சாரல் - 71

**பகுதி பத்து : பெருங்கொடை – 10**

ஊட்டறைக்குள் நுழைவதுவரை அங்கே எவரெல்லாம் வரப்போகிறார்கள் என அவள் அறிந்திருக்கவில்லை. அவளை சம்புகை வரவேற்று மேலே கொண்டுசென்றபோது வேறுவேறு

எண்ணங்களில் அலைபாய்ந்துகொண்டிருந்தாள். பானுமதியை பார்த்ததும்தான் அங்கே விருந்துக்கு வந்திருப்பதை அவள் அகம் உணர்ந்தது. “என் விருந்தறைக்கு வந்து என்னையும் அஸ்தினபுரியையும் மதிப்புறச் செய்துவிட்டீர்கள், அங்கநாட்டரசி. வருக!” என முகமன் உரைத்து பானுமதி அவளை உள்ளே அழைத்துச் சென்றாள்.

அங்கே புண்டரநாட்டரசி கார்த்திகையும் வங்கநாட்டரசி சுதையும் அமர்ந்திருந்தனர். முகமன் உரைத்து சுப்ரியை அமர்ந்தாள். அதன்பின் சேதிநாட்டரசி பத்ரையும் விதர்ப்பநாட்டரசி சுகதையும் மாளவநாட்டு அரசி சுபத்ரையும் வந்தனர். அனைவரும் அமர்ந்துகொண்டதும் பானுமதி “இது இயல்பாக நிகழும் ஊண்களியாட்டுதான். ஒவ்வொருநாளும் அங்குமிங்குமாக விருந்துதான் நடந்துகொண்டிருக்கிறது. இவ்விருந்தை என் பொருட்டு ஏற்பாடு செய்தேன். என் உளத்திற்கினியவர்களை சந்திக்கவேண்டும் என்று. எந்த அரசமுறையும் இல்லை. உணவருந்தி மகிழ்வதையும் சிறுசொல்லாடுவதையும் தவிர” என்றாள்.

“இவள் எனக்கு அகவையில் இளையோள். தகுதியால் மூத்தோள். அஸ்தினபுரியின் படைமுகம் நிற்பவரும் அங்கநாட்டரசரும் எங்கள் அரசருக்கு மூத்தோர்நிலை கொண்டவருமான கர்ணனின் துணைவி. கலிங்கநாட்டில் பிறந்தவள். சுப்ரியை என்று பெயர்” என்றாள் பானுமதி. “ஆம், அறிந்துள்ளேன். இவர்களின் தமக்கை ஒருவர் இங்கிருக்கிறார் அல்லவா?” என்றாள் சேதிநாட்டரசி பத்ரை. “ஆம், அவள் இங்கு வந்த சிலநாட்களிலேயே தன் விருப்பத்தெய்வமொன்றை முழுதளிப்பு வழிபாடு செய்ய தலைப்பட்டாள். அது அஸ்தினபுரிக்கு நலம் பயப்பதுதானே? ஆகவே மேற்குக்

காட்டில் ஒரு மாளிகை கட்டப்பட்டு அங்கே சென்றுவிட்டாள். கலிங்கம் பங்குகொள்ளும் விழவுகளில் மட்டும் எழுந்தருள்வதுண்டு” என்று பானுமதி இயல்பான புன்னகையுடன் சொன்னாள்.

வங்கநாட்டரசி சுதை “அங்கரை நான் ஒருமுறை பார்த்திருக்கிறேன். எங்கள் நாட்டின்மேல் அஸ்தினபுரியின் படை எழுந்தபோது நாங்கள் ஒரு மாற்றுறுதி ஓலையில் கைச்சாத்திட்டோம். வங்கநாட்டு மரபின்படி நானும் அதில் முத்திரையிடவேண்டும். அதன்பொருட்டு நாங்கள் எங்கள் குலதெய்வமான மாகாளியின் மண்டபத்தில் சந்தித்தோம்” என்றாள். சுபத்திரை “அரசியர் போர்நிறுத்த ஓலையில் முத்திரையிடுவதா? கேட்டதே இல்லையே” என்றாள். சுதை “நாங்கள் தீர்க்கதமஸின் வழிவந்தவர்கள். எங்கள் நாட்டு நிலம் முழுக்க பெண்டிருக்கே உரியது” என்றாள்.

சுகதை “ஆம், அங்கே அரசமைந்தர் அரசருக்கே பிறந்தவர்களாக இருக்கவேண்டும் என்பதில்லை என்று விறலி சொல்லி அறிந்திருக்கிறேன்” என்றாள். “அதெப்படி?” என்று பத்ரை கேட்க சுகதை “தீர்க்கதமஸ் இவர்களின் பெண்களின் வயிற்றில் விதைத்ததே குலமெனப் பெருகியது. அங்கம் வங்கம் கலிங்கம் புண்டரம் சுங்கம் ஆகிய ஐந்து நாடுகளுக்கும் தீர்க்கதமஸ்தான் முதல் துளி. அவரிலிருந்து பெண்கள் பெற்றுக்கொண்டது அந்நிலம்” என்றாள். பத்ரை திரும்பி சுப்ரியையிடம் “அங்கத்திலுமா?” என்றாள். சுகதை சிரித்து “அங்கத்தில் எப்படி? அங்கத்தை ஆண்ட லோமபதரின் கொடிவழி அழிக்கப்பட்ட பின்னர்தான் இன்றைய அரசர் முடிகொண்டார். அஸ்தினபுரியின் அரசரிடமிருந்து அவர் முடியை

கொடையாகக் கொண்டதை அறிந்து விழிநீர் உகுக்காதவர் எவர்?” என்றாள்.

பேச்சு தொடங்கிய சிலகணங்களிலேயே உரசிக்கொள்ளத் தொடங்கிவிட்டதைக் கண்டு சுப்ரியை திரும்பி பானுமதியை நோக்க அவள் புன்னகை செய்தாள். பத்ரை “எங்கள் நாட்டில் ஆண்களை ஆண்களென்றே நூல்கள் சொல்கின்றன. நிலமும் பெண்ணும் சொல்லும் ஆண்களுக்கே” என்றாள். கார்த்திகை “ஆம், அறிந்துள்ளேன்” என்றாள். அவள் விழிகளில் வந்துசென்ற நச்சுத்துளியை சுப்ரியை கண்டாள். “சேதிநாட்டில் மகளிரை அருமணிகள் என்றே நினைக்கிறார்கள். ஆகவே கைப்பற்றியவருக்குரியவர்கள் அவர்கள் என்று நெறி.” சுப்ரியை விழிகளை எவ்வுணர்ச்சியும் இன்றி வைத்துக்கொள்ள முயன்றாள். “சேதிநாட்டு சிசுபாலர் கோபதத்தின் அந்தகக் குலத்து யாதவ சிற்றரசர் பஃப்ருவின் மனைவி விசிரையை கவர்ந்து வந்ததை அறிந்திருப்பீர்கள். அன்று யாதவர்களிடையே தொடங்கிய போரில்தான் இறுதியில் சிசுபாலர் இளைய யாதவரால் தலையறுத்து கொல்லப்பட்டார்.”

“ஆம்” என சுதை ஊக்கத்துடன் சொன்னாள். கார்த்திகை “யாதவ அரசியை பட்டத்திலமர்த்த சிசுபாலர் விழைந்தார். அதற்கு தந்தை தமகோஷர் ஒப்புக்கொள்ளாததனால்தான் விசாலநாட்டுக்குச் சென்று அரசி பத்ரையை கவர்ந்து வந்தார். அவர் வைசாலியின் கோட்டைமுகப்பில் வீரர்கள் பன்னிருவரை கொன்று குவித்துவிட்டு இளவரசியை கவர்ந்துவந்த கதையை நான் விறலி சொல்லி கேட்டிருக்கிறேன். மெய்ப்புகொள்ளச் செய்யும் வீர கதை” என்றாள். சுப்ரியை பத்ரையை நோக்க அவள் விழிகள் சினம்கொண்டு சிவந்திருப்பது தெரிந்தது.

கார்த்திகை எங்கே செல்கிறாள் என்று அவளுக்கு புரியவில்லை.

ஆனால் அது சுதைக்கு தெரிந்திருந்தது. “சூக்திமதியை இப்போது தமகோஷர்தானே ஆள்கிறார்?” என்றாள். “ஆம், ஆனால் அவர் பேரரசராக முடிசூடுவதுடன் சரி. அவையமர்ந்து நாடாளும் அகவையில் இல்லை. தமகோஷரின் ஷத்ரிய அரசி கிருபையின் மைந்தன் சீர்ஷதேவர்தான் சூக்திமதியின் இன்றைய அரசர். சிசுபாலரின் இறப்புக்குப் பின் அவர் முடிசூடினார். அருகே உள்ள கராளமதியை அவர் ஆள்கிறார். சிசுபாலரின் அரசியரையும் அவரே மணந்துகொண்டார்.” சுதை உரக்க “என்ன இது? அரசியரை கைப்பற்றிக்கொள்வதா?” என்றாள். “அங்குள்ள வழக்கம் அது” என்றாள் கார்த்திகை.

பத்ரை “ஆம், எங்கள் குடியில் பெண்கள் கைம்மை நோற்பதில்லை, சிதையேறுவதுமில்லை” என்றாள். சுதை “யாதவ அரசியையும் இப்போது சீர்ஷதேவரா கொண்டிருக்கிறார்?” என்றாள். “ஆம், அதைத்தான் சற்றுமுன் சேதிநாட்டு அரசி சொன்னார், அவர்களுக்கு கைம்மை நோன்பு இல்லை என்று” என்று சுகதை சொன்னாள். “அவர்களின் நெறிகள் நமக்கு புரிவதில்லை. இந்தக் கதையை கேட்டிருப்பீர்கள். அந்தகக் குலத்து பஃப்ருவை வென்று மனைவியை கவர்ந்து வந்தார் சிசுபாலர். பின்னர் கதாவசானத்தில் நிகழ்ந்த பெரும்போரில் பஃப்ருவைக் கொன்று குருதிபடிந்த கச்சையை கொண்டுசென்று அரசிக்கு அளித்தார். விசிரை அந்தக் குருதிக்கச்சையை தன் தலையில் முடி என சூட்டிக்கொண்டு மகிழ்ந்தார். அதன்பின்னர் சிசுபாலர் கொல்லப்பட்டதும் அவருடைய குருதியை கச்சையில்

நனைத்துக்கொண்டுவந்து விசிரைக்கு அளித்தார்கள். அதையும் அவர் தன் தலையில் சூடிக்கொண்டாராம்.”

பத்ரை “எவர் சொன்னது அது?” என்றாள். “விறலியர் கதைகளை நானும் முழுமையாக நம்புவதில்லை” என்று கார்த்திகை சிரித்துக்கொண்டே சொன்னாள். சுதை “இவ்வாறு கச்சையை அளிக்கும் வழக்கம் சேதிநாட்டில் உண்டா என்ன?” என்றாள். பத்ரை சீற்றத்துடன் ஏதோ சொல்ல வாயெடுப்பதற்குள் பானுமதி திரும்பி அப்பால் நின்றிருந்த முதுசேடி சம்புகையை நோக்கினாள். அவள் அருகே வந்து குனிந்து அவள் காதில் சில சொல்ல அவள் “ஓ” என்றாள்.

தலையசைத்து அவளை செல்லும்படி பணித்துவிட்டு கூர்ந்து தன்னை நோக்கியிருந்த அரசியரை நோக்கி புன்னகைத்தாள். அவர்களின் விழிகளை நோக்கியபோது அனைவரும் எதையோ எதிர்பார்த்திருப்பதை, அச்செய்தியா அது என ஆவலுற்றிருப்பதை சுப்ரியை உணர்ந்தாள். பானுமதி புன்னகையுடன் “ஒன்றுமில்லை, சிறிய ஒரு குழப்பம். இங்குள்ள நெறிகள் அயலரசர்களுக்கு தெரியவில்லை என்பதனால் ஒவ்வொருவருக்கும் தனித்தனியாக சூதரை அனுப்பி அறிவித்திருந்தோம். இருந்தும் இவ்வாறு நிகழ்ந்துவிடுகிறது” என்றாள்.

“நாங்கள் அறியக்கூடுவதென்றால்…” என சுதை சொல்ல “பெரிய செய்தி அல்ல. ஆனால் எவருக்கும் சற்று அறத்துன்பம் அளிப்பது. கோசல அரசர் பிருகத்பலரின் துணைவி சௌமித்ரை இன்று காலை காட்டில் உலவச் சென்றிருக்கிறார். வழிதவறி அஸ்தினபுரியின் முன்னோருக்கு படையல் அளிக்கும் குறுங்காட்டுக்குள் நுழைந்துவிட்டார். அதை தடுத்த காவலனை அவருடைய காவலர்கள் வெட்டிவிட்டனர். அரசி

கால்குறடுகளுடன் உள்ளே சென்று அங்கே நின்றிருந்த நெல்லிமரத்தில் இருந்து சில கனிகளையும் பறித்து உண்டிருக்கிறார். அங்கே ஆண்டிற்கு ஒருமுறை ஆடிமாதம் கருநிலவுநாளில் மட்டுமே மானுடர் நுழைய ஒப்புதல். அதுவும் குருதியுறவுகொண்டோர், கொடிவழியினர் மட்டும்" என்றாள் பானுமதி.

ஒவ்வொரு அரசியராக உடல் தளர்ந்தனர். "அதை அறிந்ததும் அமைச்சர் கனகரின் ஆணைப்படி காவலர்தலைவன் நூறுகாவலருடன் சென்று அவர் தங்கியிருந்த பாடிவீட்டை வளைத்து அதைத் தடுத்த அத்தனை காவலரையும் கொன்று அரசியை சிறைபிடித்து அஸ்தினபுரியின் சிறையில் அடைத்துவிட்டான். கோசல அரசரையும் சிறைபிடித்திருக்கிறார்கள். அவரை ஷத்ரியக்கூட்டிலிருந்து வெளியேற்றக்கூடும்" என்றாள் பானுமதி. சுதை பெருமூச்சிட பத்ரை "அவர்களுக்கு நெறி தெரிந்திருக்கவேண்டும்" என்று பொதுவாக சொன்னாள்.

அதன்பின் அவர்களிடையே சொல் எழவில்லை. சுகதை "சேதிநாட்டிலிருந்து பேரரசர் தமகோஷர் வருகிறாரா?" என்றாள். "இல்லை, பேரரசர் உடல்நலம் குன்றியிருக்கிறார். மைந்தனின் இறப்புக்குப் பின் அவர் நோயிலேயே வாழ்கிறார்" என்றாள். "ஒருமுறை மருத்துவர் திருவிடநாட்டிலிருந்து ஒரு மருந்தை கொண்டுவருவதைப்பற்றி சொன்னபோது இந்நோய்க்கு ஒரே மருந்துதான், இளைய யாதவனின் நெஞ்சுபிளந்த குருதி என்றார்." சுதை "ஆம், அவ்வஞ்சம் இருக்கும்தான்" என்றாள்.

கார்த்திகை "புண்டரத்தின் அரசரும் தன் தந்தையைக் கொன்ற இளைய யாதவர்மேல் பெருவஞ்சம் கொண்டிருக்கிறார். தந்தையைக் கொன்றவனின் குருதி காணாமல் மஞ்சத்தில்

படுப்பதில்லை என நோன்பு கொண்டிருக்கிறார். எப்போதும் தரைப்பலகையில்தான் பள்ளிகொள்கிறார்” என்றாள். “ஆகவே நீங்களும் மரப்பலகையில்தானா?” என்றாள் பத்ரை புன்னகையுடன். “மரப்பலகையில் படுப்பதைப்பற்றி எண்ணிக்கூட நோக்கவியலவில்லை.”

கார்த்திகை “குருதிப்பழி என்பது அவ்வாறுதான் அமையவேண்டும். ஒவ்வொருநாளும் அதை எண்ணிக்கொள்ளவேண்டும். எண்ண எண்ண அது பெருகும். பேருருக்கொண்டு தன் கையில் நம்மை படைக்கலமாக ஏந்திக்கொள்ளும். அதுவே பழிகொள்வதற்கான வழி” என்றாள். “ஷத்ரியர் வழிமுறைகள் அவை. ஆனால் எங்குமல்ல” என்ற சுதை “வேள்வியாலும் நோன்பாலும் அந்தணர், வஞ்சத்தாலும் கொடையாலும் ஷத்ரியர், சேமிப்பாலும் கொடையாலும் வைசியர், உழைப்பாலும் விருந்தோம்பலாலும் சூத்திரர் என்பது பிரகஸ்பதி சூத்திரம்” என்றாள். “விசாலநாட்டு அரசர் எவரும் வஞ்சினம் ஏதும் உரைக்கவில்லையா?” என்றாள்.

பத்ரை நாவெடுப்பதற்குள் பானுமதி “நாம் உணவருந்துவோம்… சேடி வந்து நிற்கிறாள்” என்றாள். அனைவரும் ஆடைகளும் அணிகளும் ஒலிக்க எழுந்தனர். பத்ரை “இளைய யாதவர் எப்போது நகர்புகுகிறார்?” என்றாள். சுப்ரியை அவள் விழிகளை நோக்கினாள். அதில் பகையோ சினமோ தெரியவில்லை. சுதை “அவர் நகர்புகப்போவதில்லை, நேராக வேள்விக்காட்டுக்கே செல்வார் என்றார்கள்” என்றாள். “ஆம், அவர் இங்கு வரப்போவதில்லை. இம்முறை அவர் சாந்தீபனி குருநிலையின் வேதமுடிபறிந்த முனிவராகவே வருகிறார். அவர்கள் கங்கையிலிருந்து நேராக வேதியர் குடில்களுக்கு சென்றுவிடுவார்கள்…”

சுதை “மாணவர்களுடன் வருகிறாரா?” என்றாள். “இல்லை, சாத்யகி மட்டுமே துணையென வருகிறார்” என்றாள் பானுமதி. “உபப்பிலாவ்யத்திலிருந்து நடந்தே வருகிறார். மரவுரி அணிந்த தோற்றம். பொது உணவை உண்பதில்லை. மரநிழல்களில் அந்தியுறங்குகிறார்” என்றாள். “எப்போது வருகிறார்?” என பத்ரை மீண்டும் கேட்டாள். “நாளை காலை வந்துசேர்வார் என்றனர்” என்றாள் பானுமதி. “வருக! உணவு நமக்காக ஒருங்கியிருக்கிறது. அஸ்தினபுரியின் அடுகலையை உணர அரசியருக்கு வாய்ப்பு” என்றாள். பத்ரை “முதன்மை அடுமனையாளர் இங்கில்லை என்று அறிவோம்” என்றாள். பிற அரசியர் நகைத்தபடி ஊட்டறை நோக்கி சென்றனர்.

ஊட்டறைக்குள் காலில்லா மணைகளுக்கு முன் அரையடி உயரமான பீடங்களில் பொற்தாலங்கள் பரப்பப்பட்டிருந்தன. நீருக்காக பொற்கிண்ணங்கள் வைக்கப்பட்டிருந்தன. பானுமதி “அமர்க, அரசி!” என அவர்களில் மூத்தவளான சுதையை அழைத்தாள். “நல்லுணவுக்கான சூழல்” என முகமன் உரைத்தபடி அவள் சென்று அமர மற்றவர்களை அகவைநிரைப்படி அழைத்து பானுமதி அமரச்செய்தாள். சுப்ரியையின் அருகே நின்றிருந்த மாளவத்து அரசி சுபத்ரை அணுக்கக் குரலில் “நீங்கள் இளைய யாதவரை பார்த்ததுண்டா?” என்றாள். “இல்லை” என்றாள் சுப்ரியை. “நானும் பார்த்ததில்லை” என அவள் மேலும் தாழ்ந்த குரலில் சொன்னாள்.

“நான் உசாவியறிந்தேன். நாளை காலை முதலொளியில் அந்தணருக்கான படகுத்துறையில் இளைய யாதவர் வந்திறங்குகிறார். நான் பார்க்கச் செல்லலாம் என எண்ணுகிறேன்.” சுப்ரியை மெல்லிய மூச்சுத்திணறலுடன்

“எவ்வண்ணம்?” என்றாள். “அந்தணருக்கு அறமளிக்கும் வழக்கம் அரசியருக்குண்டு. முன்புலரியில் கங்கையில் நீராடிவிட்டு அந்தணநிலையில் நின்றிருந்தால் அவர் வந்திறங்குவதை காணமுடியும்.” சுப்ரியை மேலும் மூச்சுத்திணற “நானும் வருகிறேன்” என்றாள். “நான்...” என சுபத்ரை தயங்க “நானும் வருவேன்” என்றாள் சுப்ரியை.

சுபத்ரையுடன் சுப்ரியை வேள்விக்காட்டுக்குச் சென்றபோது வைதிகர்கள் முதற்காலைக்கு முன்னரே எழுந்து வேள்விச்செயல் முடித்து தங்கள் குடில்களுக்கு திரும்பிக்கொண்டிருந்தனர். அவிமிச்சத்தை உண்ட பின்னர் புலரிவணக்கத்திற்கு சிறிய குழுக்களாக சிலர் சென்றனர். அவர்களின் தேர் சென்று சிறிய முற்றத்தில் நின்றபோது அங்கிருந்த தலைமைக் காவலன் வந்து வணங்கினான். சுபத்ரை பலமுறை அங்கே வந்திருப்பவளாகத் தோன்றினாள். “அந்தணர் கங்கைக்கு செல்லத் தொடங்கிவிட்டனர், அரசி” என்றான் காவலர்தலைவன். சுபத்ரை “நன்று, எஞ்சியிருப்போர் நூற்றெண்மருக்கு நாங்கள் கொடைவணக்கம் செலுத்தி வாழ்த்துபெற விழைகிறோம்” என்றாள்.

அவர்கள் கீழிறங்கி அங்கு நின்றிருந்த அரசமரத்தின் அடியில் நிற்க தொடர்ந்து வந்த தேரிலிருந்து இறங்கிய இரு சேடியர் பெரிய கூடைகளை கொண்டுவந்து அவர்கள் அருகே வைத்தனர். அவற்றில் இளஞ்செம்மையுடன் மணியரிசி நிறைந்திருந்தது. அருகே இரு பித்தளை ஏனங்களை சேடியர் வைத்தனர். அவற்றில் பொன்னாலான அரிசிமணிகள் இருந்தன. தொலைவில் அந்தணர் வரும் பேச்சொலி கேட்டது. இலைநிழல் செறிந்த குறுங்காட்டில் வானொளி

இறங்காமையால் புலரி எனத் தெரியவில்லை. அவர்களின் வெண்ணிற ஆடைகளின் அசைவுகள் அணுகின.

முதன்மையாக வந்த முதிய அந்தணர் உரத்த குரலில் “நாங்கள் பொழுதிணைவு வணக்கத்திற்குச் செல்ல நேரமாகிறது. எளிய கொடைகளை பெற்றுக்கொண்டிருக்க பொழுதில்லை” என்றார். சுபத்ரை “பொறுத்தருள்க அந்தணரே, இவை எங்கள் பொருட்டும், எங்கள் மைந்தர் பொருட்டும். ஏற்றுக்கொண்டு வாழ்த்தருளவேண்டும்” என்றாள். “அரிசியை எல்லாம் நாங்கள் மிகுதியாக பெற்றுக்கொள்வதில்லை. அதை என்ன செய்வதென்று தெரியவில்லை. இங்கிருந்து நாங்கள் பிறிதொரு வேள்விக்கே செல்லவிருக்கிறோம்” என்றார் அந்தணர்தலைவர்.

“அரிசியால்தான் அந்தணரை வணங்கவேண்டும் என்று எங்கள் குலநெறி. ஏற்றருளவேண்டும்” என்று சுபத்ரை சொன்னாள். “இவ்வளவு அரிசி தேவையில்லை. சடங்குக்கு அரைக்கைப்பிடி போதும்” என்றபடி அந்தணர் தன் கலத்தை நீட்டினார். சுபத்ரை அதில் இரண்டு பிடி அரிசியை இட்டு மூன்றாம் பிடியுடன் மூன்று பொன்மணிகளையும் சேர்த்து அளித்தாள். அவர் “காந்தாரரும் சைந்தவரும் பொன்நாணயங்களை கைநிறைய அள்ளி அளிக்கிறார்கள். அதர்வம் பொன்னாலன்றி பிறிது எதனாலும் நிகர்செய்யப்படாதது என்பார்கள்” என்றபடி கைதூக்கி “அரசர் நீடுவாழ்க! நிலம் செழிப்புறுக! களஞ்சியம் நிறைக! மைந்தர் பெருகுக! ஆம், அவ்வாறே ஆகுக!” என்று வாழ்த்தினார்.

அவர் விலகிச்செல்ல அடுத்த அந்தணருக்கு சுப்ரியை கொடையளித்தாள். அவர் “விரைவாக. நாங்கள் இன்றே உசிநாரர்களின் பெருங்கொடைக்கு செல்லவேண்டும்” என்றபடி மிக விரைந்த சொற்களில் அவளை வாழ்த்தினார்.

இன்னொருவர் கைநீட்டியபடி “நான் அங்கேதான் செல்வதாக எண்ணினேன்” என்றார். “அரசக்கொடைகளே சிறந்தவை. அரசியரின் நோன்புக்கொடைகளில் அவர்களுக்கு சில எல்லைகள் உள்ளன” என்றபடி அடுத்த அந்தணர் அருகே வந்தார். விலகிநின்றவர் “விரைந்து வருக... இந்த அரிசிக்கொடைக்கு நின்றால் அருமணிக்கொடைகளை இழப்பீர்கள்” என்றார்.

ஒவ்வொருவரும் ஒருவருக்கொருவர் உரத்த குரலில் பேசியபடி வந்து கொடைபெற்று வெற்றோசைபோல் ஒலித்த வாழ்த்தை உரைத்து அப்பால் சென்றனர். மேலும் உரத்துப் பேசியபடியே கங்கை நோக்கி சென்றனர். நூற்றெண்மரும் கொடைபெற்றுச் சென்றதும் சுப்ரியை சலிப்புடன் “ஏன் நாம் இவர்களுக்கு கொடுக்கவேண்டும்?” என்றாள். “அவர்கள் வேதத்தை நிலைநிறுத்துகிறார்கள்” என்றாள் சுபத்ரை. சுப்ரியை கூர்ந்து நோக்கியதும் “பல்லாயிரம் பேரில் சிலரே மெய்வைதிகர். பல்லாயிரம்பேர் கொண்டதாக அந்த அமைப்பு இருக்கையில்தான் அந்த மெய்வைதிகர் உருவாக முடியும்” என்றாள்.

“அவர்களின் ஒவ்வொரு அசைவும் எனக்கு ஒவ்வாமையை அளிக்கிறது” என்றாள் சுப்ரியை. சுபத்ரை “ஷத்ரியர்களின் ஒவ்வொரு அசைவும் கீழுள்ள பிரிவினருக்கு அதே ஒவ்வாமையை அளிக்கக்கூடும்” என்றாள். சுப்ரியை சிரித்து “மெய்தான்” என்றாள். சுபத்ரை காவலர்தலைவனிடம் “நாங்கள் படகுத்துறை வரைக்கும் சென்று வருகிறோம்... புதிய துறை என்றனர். நாங்கள் பார்த்ததில்லை” என்றாள். “மிகச் சிறியது, அரசி. நதிக்குள் மூங்கில்களை நட்டு உருவாக்கியிருக்கிறார்கள். பெரிய படகுகள் அணையவியலாது” என்றான். “எதுவானால்

என்ன?” என்றபடி அழைத்துச்செல்ல சுபத்ரை கைகாட்டினாள். அவன் தலைவணங்கி முன்னால் செல்ல அவர்கள் தொடர்ந்தனர்.

“கோசல அரசியை விட்டுவிட்டார்களா?” என்றாள் சுப்ரியை. சுபத்ரை “ஆம், நேற்று நள்ளிரவிலேயே விட்டுவிட்டார்கள். பிழை நிகழ்ந்துவிட்டது என இளைய அரசர் துச்சாதனர் மாப்பு கோரினாராம். ஆனால் கோசல அரசி உடனடியாக அஸ்தினபுரியிலிருந்து செல்லும்படி அரசரின் ஆணை. கருக்கிருளிலேயே அவர்கள் கிளம்பிச்சென்றுவிட்டனர்” என்றாள். சுப்ரியை பெருமூச்சுவிட்டாள். “அதை எதிர்பார்த்திருந்தோம்” என்று சுபத்ரை சொன்னாள். “கோசலத்து அரசி அவ்வாறு நடந்துகொண்டபோதே அது பொறி என எங்கள் அமைச்சர்கள் சொன்னார்கள்.” சுப்ரியை ஒன்றும் சொல்லவில்லை.

“வேள்வியரங்கில் அங்கரை தன் துணைவராக அஸ்தினபுரியின் அரசர் அமர்த்துவார் என்பது முன்னரே அனைவரும் அறிந்தது. அதைப் பற்றிய ஒவ்வாப் பேச்சுகள் அரசரிடையே நிகழ்ந்துகொண்டிருந்தன. இனி அப்பேச்சுகள் எழாது” என்ற சுபத்ரை “வேள்வியரங்கில் அங்கநாட்டரசருடன் நீங்களும் அமர்வீர்கள் அல்லவா?” என்றாள். சுப்ரியை “ஆம், அதன்பொருட்டே வந்தேன்” என்றாள். “நன்று, இங்கே பேசப்படுவதெல்லாம் குலப்பெருமை குறித்தே. ஏனென்றால் வில்லுடன் எழுந்தால் அங்கரின் முன் நிற்பவர் என எவருமில்லை” என்றாள்.

சிறிய துறைமேடையில் நீண்ட கொதும்புத்தோணிகள் ஒன்றோடொன்று தொட்டுக்கொண்டு அலைகளிலாடி நின்றிருந்தன. துறைமேடையின் வலப்பக்கம் பொதிகள்

இறக்கும் படகுகளும் இடப்பக்கம் பயணிகளுக்கான படகுகளும் என வகுக்கப்பட்டிருந்தது. பொதிப்படகுகளில் இருந்து மரவுரிக்கட்டுகளும் தர்ப்பைகளும் மரத்தாலான குடுவைகளும் பல வகையான இரவலர் கொப்பரைகளும் மண்கலங்களும் இறங்கின. பயணியர் அனைவருமே அயலூர் அந்தணர்களாக இருந்தனர். நீண்ட படகுப்பயணத்தால் களைத்து துயிலிழப்பால் வீங்கிய கண்களுடன் கரையிலிறங்கி உள்ளுடல் ஊசலாட தள்ளாடி ஒருவரை ஒருவர் பற்றிக்கொண்டனர். முதியவர்கள் அங்கேயே கால்மடித்து அமர்ந்தனர். தங்கள் பொதிகளுடன் கடந்துசென்றவர்கள் அவர்களை கண்சுருக்கி நோக்கியபடி சென்றனர்.

“இங்குதானா?” என்றாள் சுப்ரியை. “ஆம், நான் நேற்றிரவு என் ஒற்றனிடம் இன்னொருமுறை உறுதிசெய்துகொண்டேன்” என்றாள் சுபத்ரை. “உங்கள் ஒற்றனா?” என்றாள் சுப்ரியை. “ஆம், எனக்கு எல்லா நாட்டிலும் ஒற்றர்கள் உள்ளனர். அனைவரும் நான் பிறந்த சூரசேனநாட்டைச் சேர்ந்தவர்கள். ஏன் உங்களுக்கு கலிங்க ஒற்றர்கள் இல்லையா?” என்றாள் சுபத்ரை. “இல்லையே” என்று சுப்ரியை சொன்னாள். “தேவையென எனக்குப் படவில்லை.” சுபத்ரை “அப்படியென்றால் அங்கநாட்டின் ஆட்சியில் உங்கள் பிடி என்ன?” என்றாள். சுப்ரியை திகைத்து “நானா? எனக்கு எதுவுமே தெரியாது. சொல்லப்போனால் பல ஆண்டுகளாக நான் ஓர் அரண்மனைக்குள்ளேயே வாழ்கிறேன்” என்றாள்.

சுபத்ரை “விந்தைதான்” என்றாள். “ஆனால் பாரதவர்ஷத்தின் அரசியர் எவரும் அப்படி இருப்பதில்லை. அரசின்மேல் தங்கள் பிடி தளரவிடும் அரசி மெல்ல மெல்ல பொருளற்றவள் ஆவாள்” என்றபின் “அவ்வண்ணமென்றால் அங்கநாட்டின்

மெய்யான அரசி விருஷாலிதானா?” என்றாள். சுப்ரியை “இல்லை, அவளும் ஓர் அரண்மனைக்குள் ஒடுங்கிக்கொண்டிருக்கிறாள்” என்றாள். “மேலும் விந்தை” என்ற சுபத்ரை “அரசர்களின்மேல் பெண்களின் செல்வாக்கு அரசியால் கட்டுப்படுத்தப்படவேண்டும். அங்கநாட்டரருக்கு அணுக்கமான பரத்தையர் பலர் உண்டா?” என்றாள். சுப்ரியை “இல்லை, அவருக்கு வேறு பெண்கள் இல்லை” என்றாள். “அதெப்படி? அவர் அரசரல்லவா?” என்றாள் சுபத்ரை. “ஆம், ஆனால் இதை நான் உறுதியாகவே அறிவேன், அவருக்கு வேறு பெண்கள் இல்லை.” சுபத்ரை பொதுவாக தலையசைத்தாள்.

படித்துறையில் பரபரப்பு உருவாவதை சுப்ரியை கண்டாள். அதை முன்னரே கண்ட சுபத்ரை “அவர்தான், அவர் வந்துகொண்டிருக்கிறார்” என்றாள். அது சுப்ரியைக்கும் உறுதியாகத் தெரிந்தாலும் “எப்படி தெரியும்?” என்றாள். சுபத்ரை மறுமொழி சொல்லவில்லை. படித்துறை அருகே நின்றவர்களை காவலர்கள் அகலச் செய்தனர். அங்கு நின்றிருந்த இரு படகுகள் விலகி மேடையொழிந்தன. தொலைவில் ஒரு கொம்போசை எழுந்தது. ஒற்றைப் பாய்கொண்ட ஒரு படகு மரங்களுக்கு அப்பாலிருந்து மூக்கு நீட்டியது. “அவர்தான்” என்று சுபத்ரை சொன்னாள். சுப்ரியை விழிகளால் தேடினாள். படகுமுனையில் நின்ற குகன் துடுப்பை மேலும் மேலும் உந்தினான். இன்னொருவன் சுக்கானைத் திருப்ப அது முகம் திருப்பி படகுமேடை நோக்கி வந்தது.

குகன் துடுப்பை மேலே வைத்துவிட்டு எழுந்து நின்று கைவீசினான். படகு அதன் இயல்பான விசையால் மேடையை அடைந்து மூங்கில்பத்தைமேல் முட்டி விசையழிந்தது. வடம் சுருளவிழப் பறந்துசென்று படகின்மேல் விழுந்தது. அதைப்

பற்றி இழுத்து படகின் தூண்களில் கட்டினான். நடைபாலம் முன்னகர்ந்து படகைத் தொட்டது. படகிலிருந்து முதலில் வருவது சாத்யகி என சுப்ரியை உணர்ந்தாள். அவன் நிலத்தை அடைந்து விலகி நிற்க கைகளைக் கூப்பியபடி இளைய யாதவர் வெளியே வந்தார்.

கூட்டத்திலிருந்து மெல்லிய கலைவோசை எழுந்தது. வாழ்த்தோ முகமனோ உரைக்கப்படவில்லை. துறைமேடையை அடைந்து இரு பக்கமும் கூடிநின்றவர்களை நோக்கி தொழுதபின் இளைய யாதவர் நடந்தார். சாத்யகி குகன் மேலே கொண்டுவந்து வைத்த மான்தோல் மூட்டையை எடுத்துக்கொண்டு அவரை தொடர்ந்தான். இளைய யாதவர் இடையிலணிந்திருந்த மரவுரியைச் சுழற்றி தோளில் முடிச்சிட்டிருந்தார். நெடும்பயணத்தில் வண்ணம் மாறிய குழல்கற்றைகள் தோளில் சரிந்திருந்தன. கால்கள் புழுதிபடிந்து சேற்றிலூறிய வேர்களைப்போலத் தெரிந்தன.

அவர் மீதிருந்து விழிவிலக்காமல் எங்கிருக்கிறோமென்ற உணர்வை முற்றிலும் இழந்து சுப்ரியை நோக்கி நின்றிருந்தாள். அவர் தன்னைக் கடந்து சென்று தோள்களுக்கும் மரக்கிளைகளுக்கும் அப்பால் மறைந்த பின்னரே அவள் மீண்டாள். சென்றுவிட்டார் என்னும் எண்ணம் எழுந்து பதைப்பு உருவானதும் மீண்டும் நோக்கினாள். தலைகளுக்கு அப்பால் பீலி மட்டும் தெரிந்தது எனத் தோன்றியது.

# குருதிச்சாரல் - 72

**பகுதி பத்து : பெருங்கொடை – 11**

முதற்புலரிக்கு முன்பே அசலையும் தாரையும் கர்ணனின் மாளிகை முகப்புக்கு வந்தனர். வேள்வியில் அமர்வதற்கு உலோகங்களோ, தோலோ, பட்டோ கூடாதென்பதனால் வெண்ணிற பருத்தியாடைகளும், வெண்சங்கு போழ்ந்த வளையல்களும், தீட்டப்பட்ட விதைகளாலான கருமணியும் செம்மணியும் கோத்த மாலைகளும் மட்டுமே அணிந்திருந்தனர். அங்கே காத்திருந்த துணைப்படைத்தலைவன் உக்ரசேனன் வணங்கி முகமன் உரைத்து "அரசரும் அரசியும் ஒருங்கிக்கொண்டிருக்கிறார்கள், அரசி" என்றான்.

தாரை "பொழுதாகிறது, அணிகளை எங்கேனும் நிறுத்திக்கொள்ள வேண்டியதுதான்" என்றாள். அசலை "அரசர் எந்நிலையிலிருக்கிறார்?" என்றாள். உக்ரசேனன் சிரித்து "நன்னிலையில்தான்... ஸ்ரீகரர் உள்ளே சென்றிருக்கிறார்" என்றான். அசலை "வேள்விக்கு தூய்மையும் எளிமையுமே அணிகள் என்பார்கள்" என்றாள். தாரை நகைத்து "அவையிரண்டையும் பார்ப்பவர்கள் உணரும்படி செய்வது எளிதல்ல, அரசி. அரசர் பலர் நேற்றிரவு முதலே அணிகொள்ளத் தொடங்கிவிட்டனர். வேள்விக்கு அணிசெய்யக் கற்ற அணிச்சூதர்கள் சிலரை கூட்டிவந்திருக்கிறார் சைந்தவர்" என்றாள்.

அவர்கள் படியேறி மேலே சென்றபோது சபரி மூச்சிரைக்க ஓடிவந்து அவர்களை எதிர்கொண்டாள். "கலிங்கத்தரசி அணிகொள்கிறார். நான் கீழே வரும்போதே முடிந்துவிட்டது... அவையறையில் சற்று பொறுத்திருக்கவேண்டும், அரசி" என்றாள். அவர்கள் அங்கிருந்த பீடங்களில் அமர, சபரி

படிகளில் ஓசையுடன் மேலேறிச்சென்று அணியறையை அடைந்து “இரு அரசியரும் வந்துள்ளனர், அரசி. அவர்கள் வந்தபின் நாம் பிந்துவது முறையல்ல” என்றாள். ஆடிநோக்கி உளம் அழிந்து அமர்ந்திருந்த சுப்ரியை திரும்பி நோக்கி “என்ன?” என்றாள். “அரசியர் இருவருமே வந்துள்ளனர்” என்றாள் சபரி.

சுப்ரியையும் வெண்பருத்தியாடையும் செந்நிறக் குன்றிமணிகள் கோத்த ஆரமும் தேய்த்த கல்மணிகளால் ஆன காதணியும் குருதிச்சந்தனத்தில் செதுக்கியமைத்த வளையல்களும், மரக்கடைவுத் தண்டைகளும் அணிந்திருந்தாள். ஆடியில் தன்னை நோக்காமல் விழிமூடி சரிந்திருந்தவள் ஏதோ ஒலிகேட்டு விழிதிறந்து எதிரே முன்னறியாத பெண்ணைக் கண்டு திகைத்து பின் அதிலேயே உளம்நிலைத்து அமர்ந்திருந்தாள். “இன்னும் ஒரு மணி” என்று அணிச்சேடி சொன்னாள். அதை நோக்காமல் சுப்ரியை எழுந்ததும் அணிச்சேடி “ஒரே ஒரு தையல்... ஒரு சிறு இணைப்பு, அரசி” என்றாள்.

சபரி சினத்துடன் “நேற்று பின்னிரவில் தொடங்கியது... இன்னமும் அணிசெய்து முடிக்க உன்னால் இயலவில்லை என்றால் இனி நீ அணிசெய்யவே வேண்டியதில்லை... வருக, அரசி” என்றாள். “அணிசெய்வதைப்போலவே அணிகளைவதும் ஒரு பெருங்கலை என ஆக்கிவைத்திருக்கிறார்கள்” என முனகிக்கொண்டாள். சுப்ரியை தலைகுனிந்து எண்ணம் கலையாமலேயே உடன்வந்தாள். சபரி “அனைத்தும் ஒருங்கிவிட்டிருக்கின்றன. நகரே ஒழிந்து வேள்விச்சாலையை சூழ்ந்துகொண்டிருக்கிறது. வேள்வி முடிவதுவரை நோன்புகொண்டு திறந்த வான்கீழ் தங்கியிருக்கவேண்டும்

என்பது நெறி. வேள்விநிறைவின்போது அவிப்புகையை கரைத்து வான்மழை இறங்கும். அதன் துளி உடலில் படுவதே தெய்வங்களும் தேவர்களும் வானுறை முனிவர்களும் அளிக்கும் வாழ்த்து” என்றாள்.

படியிறங்கியபோது சுப்ரியை “இளைய யாதவர் இன்று வேள்வியவைக்கு வருவாரா?” என்றாள். “வருவார், ஆனால் அவருடைய இடம் வைதிகரும் முனிவரும் அறிஞரும் அமரும் அவையில்தான்” என்றாள் சபரி. சுப்ரியை பெருமூச்சுவிட்டாள். “காலையிலேயே நம் அரசர் அணிகொண்டு முடித்துவிட்டார். ஸ்ரீகரர் அவரை ஒருக்கி கொண்டுவரச் சென்றிருக்கிறார்” என்றாள் சபரி. அவளைக் கண்டதும் அசலையும் தாரையும் எழுந்தனர். சபரி “அரசி, இத்தோற்றத்தில் உஷைதேவி எழுந்ததுபோல் இருக்கிறீர்கள்” என்றாள். சுப்ரியை புன்னகை செய்து “அரசர் எழுந்துவிட்டாரா?” என்று கேட்டாள். சபரி “இதோ நோக்கிவருகிறேன்” என்றாள்.

அதற்குள் அப்பால் சங்கொலி எழுந்தது. “எழுந்தருள்கிறார்” என்று சபரி சொன்னாள். “இரவிலேயே வெள்ளித்தேர் வந்துவிட்டது. நாம் கங்கைக்கரையை அடைவது வரை விடியாது. விடியலில் சென்றிருந்தால் இளங்கதிர்பட்ட முகில்போல பொன்னிறம் கொண்டிருக்கும்.” சபரி “எழுக, அரசி!” என்றாள். சுப்ரியை எழுந்து இருபக்கமும் அசலையும் தாரையும் துணைவர வெளியே சென்றாள். சபரி “சில நாட்களுக்கு முன்புவரை இந்நகரை மூடி இருண்ட முகில் நின்றிருந்தது என்கிறார்கள். நஞ்சென ஒரு பாசி படிந்து நகரே நோயிலிருந்ததாம். நகரெங்கும் காக்கைகளும் நரிகளும் நிறைந்திருந்தனவாம். வேள்விக்கு முடிவெடுத்ததுமே இரவு விடிவதுபோல் நகர் ஒளிகொண்டு எழுந்துவிட்டது” என்றாள்.

மறுபக்கப் படிகளினூடாக கர்ணன் துணையாக குண்டாசியும் சுஜாதனும் நடந்துவர படியிறங்கினான். வெண்ணிற அரையாடைக்குமேல் மெல்லிய வெண்பருத்தி மேலாடையைச் சுற்றியிருந்தான். காதுகளில் பளிங்குக்கல் கடைந்த மணிகளால் ஆன குண்டலங்கள். வேறெந்த அணிகலன்களுமில்லை. சந்தனக்குறடுகள் அவன் காலடியில் ஒலியெழுப்பின. சுப்ரியை அவனை அத்தோற்றத்தில் கண்டதும் முதற்கணம் உள்ளம் மலைக்க கால்நிலைத்துவிட்டாள். "அரசி" என சபரி சொன்னதும் மேலும் நடந்தாள்.

அவளால் அவன் உடலைவிட்டு விழிநீக்க இயலவில்லை. கரிய பெருந்தோள்கள் போர்வடுக்களுடன் நீர்வழியும் உச்சிமலைப் பாறையென திறந்துவிரிந்திருந்தன. பாறையின் உப்புவரிகளென அவற்றிலோடும் நரம்புகள். இளங்களிற்று மத்தகம்போல் புடைத்தசையும் புயத்தசைகள். அவன் மார்பையே நோக்கிக்கொண்டிருப்பதை அவளே உணர்ந்ததும் விழிவிலக்கிக்கொண்டாள். அயலவன்போல என எண்ணியதும் விந்தையுடன் விழிதூக்கி மீண்டும் நோக்கினாள். அயலவன் போலத்தான் இருந்தான். அவனை அத்தனை எளிய தோற்றத்தில் முன்னர் நோக்கியதே இல்லை. அந்தக் காட்சியிலிருந்து அவள் கண்ட கர்ணனின் அத்தனை தோற்றங்களையும் சென்றடைந்தாள்.

சபரி "அணியின்மை ஆண்களுக்கு அழகு, அரசி" என்றாள். அவள் ஒன்றும் சொல்லாமல் தரைநோக்கி நடந்தாள். "நீராடி எழும் இளங்களிறெனத் தோன்றுகிறார்" என்றாள் சபரி மீண்டும். "கதிர்மைந்தன் கரியோனாக இருப்பது ஏன் என்று ஒரு சூதன் ஒருமுறை பாடினான். கனல் நீர்பட்டால் கருமைகொள்ளும். அங்கர் இங்குள்ள பெண்களின் விழிநிறைந்த காதலால்

கருமைகொண்டிருக்கிறார்.” சிரித்தபடி “ஆம், இந்நிலத்தில் இன்று அங்கரைப்போல் அழகர் பிறரில்லை” என்று தாரை சொன்னாள். அசலை “அதை நீ சொல்லி அரசி அறியவேண்டுமா என்ன?” என்றாள். தாரை “நான் என்ன சொன்னேன்? சூதர்பாடல்களில் அவர் அழகைப்பற்றி சொல்லாத ஒன்றுகூட இல்லை என்றுதான்” என்றாள்.

அசலை அவளை நோக்கி புன்னகைக்க விழிகளால் சுப்ரியையை சுட்டிக்காட்டிவிட்டு தாரை தொடர்ந்தாள். “அனல் அழகுறுவது வேள்விநிலையில், அங்கர் போர்நிலையில் என ஒரு விறலி பாடினாள். போர்க்கலையின் இரு அழகுகளை பார்த்தரிடமும் அங்கரிடமும் காணலாம் என்றாள். அது பெண்ணுடலின் நடனம் என்றிருக்கும். இது ஆணுடலின் தாண்டவம். அது மான், இது சிம்மம். அது மயில். இது மலைக்கழுகு. ஆடவல்லானுடன் அம்மை ஆடுவதுபோல் இருவரும் தோளிணைந்து போர்புரிந்தால் விண்ணுலகும் வெல்லப்படும் என்றாள்.”

அசலை புன்னகைத்து “அவர்கள் இணைந்து ஆடி முழுமையை அடைந்தபோது ஈருடலும் ஒன்றாகி இடமொருமகள் என்றானார் என்பது தொல்கதை” என்றாள். தாரை “எனக்கும் தோன்றியுள்ளது. அவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் நிறைக்கிறார்கள். அங்கரில் குறைவதே அர்ஜுனர் என்பேன்” என்றாள். “அங்கரில் குறைவது அவரா?” என்றாள் அசலை. அவர்கள் அத்தருணத்தை களியாட்டென ஆக்க விரும்பினர். ஆனால் ஓயாது பேசிக்கொண்டிருந்த சபரி அப்பேச்சிலிருந்து அகன்றுவிட்டிருந்தாள். “ஆம், அன்னையில் மைந்தர் என” என்றாள் தாரை. அசலை சிரித்தாள்.

சுப்ரியை அச்சொற்களை கேட்டுக்கொண்டே இருந்தாள். அச்சம் கொண்டவள்போல, அரிதொன்றின் அணுக்கம் கண்டவள்போல நெஞ்சு துடித்துக்கொண்டே இருந்தது. ஸ்ரீகரர் முற்றத்தில் இறங்கி கைகாட்ட நிமித்திகன் சங்கொலி எழுப்பினான். படைவீரர்கள் வாளும் வேலும் தாழ்த்தி வாழ்த்தொலி எழுப்பினர். கர்ணன் ஸ்ரீகரரின் தோளில் கைவைத்து தலைசரித்து நகைமொழி சொன்னான். அவர் சிரித்தபடி விழிதிருப்ப அவளைக் கண்டு "அரசி, வருக!" என்றார். சுப்ரியை அருகே சென்று நின்றதும் திரும்பி நோக்கிவிட்டு அருகே வந்து நின்ற உக்ரசேனனிடம் "நாசிகரே, தேருக்கு முன்னால் நீங்கள் செல்வீர்கள் அல்லவா?" என்றான். அவன் சிரித்து "இல்லை அரசே, இங்கே காவல்பணியை நான் ஒருங்கிணைக்கிறேன்" என்றான்.

"அரசர் சென்றுவிட்டாரா?" என்றான் கர்ணன். "அவர் கிளம்பி ஒருநாழிகை கடந்துவிட்டது." கர்ணன் "இந்த அணிசூடலுக்குத்தான் பொழுதாகிறது அணியருக்கு. இது அவர்களுக்கு பழக்கமே இல்லை" என்றான். சுஜாதன் "ஆம், நோக்கி நோக்கி திகைக்கிறார்கள். என்ன என்று கேட்டேன். ஒத்திசைவே இல்லை என்றார்கள்" என்றான். கர்ணன் நகைத்து "பொதுவாக மானுட உடல் அப்படித்தான். வேறு எந்த உருவிலாவது இப்படி இருபக்கமும் இரண்டு பெரிய உறுப்புகள் தொங்கி பொருளின்றி ஆடிக்கொண்டிருந்தால் நன்றாக இருக்குமா என்றேன்" என்றான்.

சுஜாதன் ஊக்கம் பெற்று "ஆம், அதோடு காது. அவ்வப்போது நான் எண்ணுவதுண்டு. மனித உடலுக்கு தேவையே இல்லாத உறுப்பு என்றால் காதுதான். எவ்வளவு அழகின்மையுடன் நீட்டி நிற்கிறது" என்றான். குண்டாசி "நான் அதையே எண்ணுகிறேன்.

ஒற்றைவீரனின் சிலையென அமைக்கப்படும் நீளுருளையே மனிதருக்கு உகந்த நல்வடிவம்” என்றான். கர்ணன் சிரித்து அவன் தோளைத்தட்டினான். சுஜாதன் குண்டாசி சொன்னதில் நகையாட்டு இருக்குமோ என எண்ணி பிடிகிடைக்காமல் தவிர்த்து “கிளம்பலாம், அரசே” என்றான்.

ஏவலர் படி அமைக்க அதில் ஏறி கர்ணன் தேரின் பீடத்திலமர்ந்ததும் சுப்ரியை தொடர்ந்து ஏறி அருகே அமர்ந்தாள். தொடர்ந்துவந்த தேரில் தாரையும் அசலையும் சபரியும் ஏறினர். அதற்கடுத்த தேரில் சுஜாதனும் குண்டாசியும் ஏறினர். குண்டாசி கைவீசியபடியே செல்ல ஸ்ரீகரர் ஆணையை செய்கை காட்டினார். தேர் கிளம்புவதை அறிவிக்க கொம்போசை எழுந்தது. அப்பால் மேலும் மேலும் கொம்பொலிகள் எழுந்தன. சுப்ரியை திரும்பி அந்த மாளிகையை நோக்கினாள். நீரில் மூழ்கும் பெருங்கலமென அது பின்னகர்ந்து சென்றது.

தேர் கிளம்பியபோது இனிப்புண்ட நாவு என தன் உடலே சுவையறிவதை உணர்ந்தாள். அவளுக்கும் அவனுக்கும் நடுவே நிறைய இடைவெளி இருந்தது. மெல்ல நகர்ந்து அதை நிறைத்து அணுகிவிடவேண்டும் என எண்ணினாள். அதில் கையை வைத்து நகர்த்தியபின் அஞ்சி எடுத்துக்கொண்டாள். மீண்டும் மீண்டும் அந்த இடைவெளியிலேயே படிந்தது அவள் உள்ளம். அவள் அதில் நிறைய நிறைய அது விரிந்தகன்றது. பின்னர் அணுகியது. அணுக்கம் என அவள் உணர்ந்ததும் அகன்று மாயம் காட்டியது. பின்னர் அவள் நீண்ட பெருமூச்சுடன் அசைந்து அமர்ந்தாள். அவள் அவனை நோக்குவதை அவன் அறியவில்லை. ஒருமுறைகூட சாலையிலிருந்து நோக்கை விலக்கவில்லை.

அவள் எதையேனும் அவனிடம் பேச விரும்பினாள். வேள்வியவையில் அவன் இடம் குறித்து பேசினால் அவன் செவிகொள்ளக்கூடுமோ? துரியோதனனைக் குறித்து பேசினால் என்ன? ஆனால் முதலில் எப்படி தொடங்குவது? அவன் விழிதிருப்பி அவளை நோக்கினால் பேசத் தொடங்கிவிடலாம். அவனை அழைப்பது எப்படி? அவனை தான் அழைத்ததே இல்லை என்று நினைவுகூர்ந்ததும் அவள் திடுக்கிட்டாள். உண்மையிலேயே ஒருமுறைகூட அவள் அவனை கணவன் என சொல் விளித்து பேசியதில்லை. ஆகவே அத்தனை ஆண்டுகளில் அப்படி ஒரு சொல்லே திரண்டு அமையவில்லை. இப்போது எச்சொல்லில் அழைத்தாலும் அது பொருந்தாததே. அரசே என்றழைக்கலாம். ஆனால் அச்சொல் அன்று அவளுக்கு அயலானதாகத் தோன்றியது.

கர்ணன் அவளை நோக்காமல் தாழ்ந்த குரலில் "அங்கே வேள்வியவையில் அமர்ந்திருக்கும் ஷத்ரியர்கள் பெரும்பாலானவர்கள் என்னால் வெல்லப்பட்டவர்கள். என்னை வெல்ல ஒரு தருணமென இந்த அவையை அவர்கள் எண்ணக்கூடும்" என்றான். அவன் குரல் இடறியது தேரின் ஓட்டத்தால் எனத் தோன்றியது. அவள் நெஞ்சு ஒலிப்பது செவியிலெழ சொல்லெடுக்க இயலாமல் உயிரிழந்து தடித்த நாவுடன் அமர்ந்திருந்தாள். "அந்தணர் தங்களுக்கு அரசரையே சுண்டி எறியும் ஆற்றலுண்டு என நிறுவும் தருணமாக இதை கொள்ளவும்கூடும். அவைச்சிறுமை நிகழுமென்று என் உள்ளுணர்வு சொல்கிறது. எதுவானாலும் அது எனக்குரியதே. உனை நோக்கியல்ல என்று கொள்க!" என்றான்.

அவள் பற்களைக் கடித்தபடி "அவ்வண்ணமென்றால் என்னை ஏன் அழைத்துவரவேண்டும்? உங்கள் சூதஅரசி வந்திருந்தால்

அவைச்சிறுமையை நிகராக பங்கிட்டுக்கொண்டிருக்கலாமே?" என்றாள். கர்ணன் திரும்பி நோக்கி ஒருகணம் விழிநிலைத்து பின்னர் புன்னகைத்து "ஆம், பிழைதான். பாதி அவளுக்குரியதே, கொண்டுசென்று அளித்துவிடுகிறேன்" என்றபின் மீண்டும் சாலைநோக்கி திரும்பிக்கொண்டான். அவள் திகைத்து உடல் குளிர்ந்துநடுங்க அமர்ந்திருந்தாள். தன் வாய்க்குள் கொடிய நாகம் ஒன்று நாவென்று அமைந்திருக்கிறதுபோலும். அச்சொற்கள் என்னுடையவை அல்ல. அக்கீழ்மை என்னுடையதல்ல. அரசே, என் கதிரே, அவற்றை என்மேல் ஏறிய ஏதோ இருள்தெய்வமே உரைத்தது. அவள் தொண்டை அடைத்திருந்தது, மூச்சு ஏறியிறங்கியது.

ஏன் அதை சொன்னேன்? நாப்பழக்கமாகவா? அன்றி அவனை வேல்நுனியால் குத்தி எனை நோக்குக என்றேனா? அச்சொல்லை திரும்ப எடுப்பது எப்படி? அது இழிசொல்லே. கீழ்மையென நான் வெளிப்பட்ட தருணமே. என் இறையே, அதில்கூட பிறிதொருத்தியுடன் பகிரமுடியாமையை அல்லவா நான் சொன்னேன். அவள் தன்னுள் உளம் கரைந்து சொல்பெருக்கினாள். பொழிந்து ஓய்ந்து துளிசொட்டி அமைதியானபோது உள்ளம் வெறுமைகொண்டிருந்தது. இரு கைகளிலும் தலையை தாங்கி குனிந்து அமர்ந்திருந்தாள். விழியூறிக்கொண்டிருந்தது. ஒருதுளி சொட்டத் தொடங்கினால் கதறி அழுதுவிடுவோம் என தோன்றியது.

தேர் நின்றபோதுதான் வேள்விச்சாலை முகப்புக்கு வந்துவிட்டிருப்பதை அவள் உணர்ந்தாள். மறுபக்கம் தேருக்கு வெளியே வைதிகர் எழுவர் நிறைகுடங்களுடன் நின்றிருந்தனர். கர்ணனுடன் அவள் இறங்கியபோது நீர்தெளித்து வேதமோதி

வாழ்த்தினர். வாழ்த்தொலியோ குரவையோ மங்கல இசையோ எழவில்லை. கர்ணன் பாதக்குறடுகளை கழற்றி வைத்துவிட்டு பசுஞ்சாணி மெழுகப்பட்ட பாதையில் நடக்க அவள் அவனுக்கு ஓர் அடி பின்னால் தொடர்ந்து சென்றாள். பின்னால் வந்த தேரிலிருந்து இறங்கிய அசலையும் தாரையும் பிறிதொரு வழியினூடாக அவைநோக்கி செல்ல குண்டாசியும் சுஜாதனும் மட்டும் அவர்களுடன் இணைந்தனர்.

சுஜாதன் "அரசர் வந்து அவைமுகப்பில் அமர்ந்திருக்கிறார், மூத்தவரே" என்றான். "இந்த அவை பருந்தின் வடிவுகொண்டது. வலச்சிறை அரசருக்குரியது." குண்டாசி "அமைச்சரிடம் சென்று மூத்தவர் எங்கமரவேண்டும் என்று கேட்டு வருக!" என்றான். சுஜாதன் ஓடிச்செல்ல கர்ணன் அவன் திரும்பிவர பொழுதளித்து மிக மெல்ல நடந்தபடி "விதுரர் வரவில்லையா?" என்றான். "இல்லை, மூத்தவரே. அவருக்கு உடல்நலமில்லை. தொடர்ந்து காய்ச்சலும் நினைவழிதலுமாகவே இருக்கிறார். துவாரகையிலிருந்து அவர் மைந்தர் சுபோத்யரும் சுசரிதரும் வந்து உடனிருக்கிறார்கள்" என்றான். "அவர்கள் பாண்டவரின் தரப்பை உளம்கொண்டவர்கள். ஆகவே அரசரை சந்திக்க வரவில்லை." கர்ணன் "இளமையில் அவர்களை கண்டிருக்கிறேன்" என்றான்.

சுஜாதன் ஓடிவந்து அவர்களுடன் இணைந்துகொண்டு "அரசருக்கு வலப்பக்கம், பீடம் அங்குதான் போடப்பட்டிருக்கிறது" என்றான். வேள்வியரங்கு நிறையத் தொடங்கியிருந்தது. வைதிகமுனிவர்களான வேதமித்ரர், சௌபாரி, சாகுல்யர் மூவரும் அனலெழுகையை மேல்நோட்டமிட்டுக்கொண்டிருந்தனர். விஸ்வாமித்திர மரபைச் சேர்ந்தவரான காலவர் மைந்தர் சிருங்கவானுடன் உள்ளே

நுழைய வைதிகர்களிடம் கார்வையொலி எழுந்தது. வேள்விநிலைக்குள் எவருக்கும் முகமனோ வரவேற்போ வாழ்த்தோ வழங்கப்படவில்லை. எனினும் அந்தணருக்கும் முனிவருக்கும் மட்டுமே அங்கே ஏற்பின் முழக்கம் எழுந்தது என சுப்ரியை உணர்ந்தாள்.

அஸ்தினபுரியின் தலைமை வைதிகர் காசியப குலத்து கிருசர் வெண்ணிற கீழாடையும் தோளில் முடிச்சிட்ட வெண்மேலாடையும் கழுத்தில் கல்மணிமாலையும் அணிந்தவராக அவர்களைக் கடந்து கைவீசி ஆணையிட்டபடியே ஓடினார். அவர் அருகே வந்த இளவைதிகர் அவர் ஆணையை ஏற்று தலைவணங்கி பல திசைகளுக்காக சிதறினர். சுஜாதன் "வில்லில் இருந்து அம்புகளென எழுந்து பறக்கிறார்கள்" என்றான். கலிங்க நாட்டு மன்னர் சுருதயுதர் பட்டத்து இளவரசன் சக்ரதேவனுடன் உள்ளே நுழைந்து தன் இடத்தை தேட சுஜாதன் "இதோ வருகிறேன், மூத்தவரே" என அவரை நோக்கி ஓடினான்.

அதர்வ வைதிகர்களான குத்ஸ குலத்து தாரகரும் மௌத்கல்ய குலத்து தேவதத்தரும் தங்கள் மாணவர்களுடன் ஐந்து எரிகுளங்களையும் மீண்டுமொருமுறை நோக்கிக்கொண்டிருந்தனர். அங்கிரசின் மகன் ஹோரரர் அவ்வேள்விக்கென அவிக்கொடையாளராக சிறப்பு அழைப்பின் பேரில் வந்திருந்தார். அவரை கிருசர் நேரில் அழைத்துவந்து பீடத்தில் அமரச்செய்தார். வேள்விச்சாலையை அமைத்த சிந்துநாட்டுச் சிற்பியான பரமரும் அவருடைய ஏழு மாணவர்களும் வைதிகர்களால் கொண்டுவரப்பட்டு அவைமுகப்பில் அமரச்செய்யப்பட்டனர்.

கௌதம குலத்தவரான சிரகாரி தன் மாணவர்களுடன் அவை நுழைந்து இளவைதிகர்களால் தர்ப்பையிடப்பட்ட பீடத்திற்கு கொண்டுசென்று அமர்த்தப்பட்டதை சுப்ரியை கண்டாள். அகத்தியகுலத்தவரான திருடஸ்யூவும் திருடேயுவும் அவைக்கு வந்தனர். ஒவ்வொருவரையும் அவள் முன்னரே அறிந்திருந்தாள். அவர்களின் நெடும்பயணங்கள், அணுகவொண்ணா காடுகளிலும் மலைகளிலும் அயல்நிலங்களிலும் அமைந்த அவர்களின் குருநிலைகள் அனைத்தும் நினைவிலெழுந்தன. சற்று தொலைவில் அமர்ந்திருப்பவர் கண்வமரபினரான திரிசோகர். அப்பால் எரிகுளங்களின் அருகே பொருட்களை ஒருக்கிக்கொண்டிருப்பவர்கள் பெருவைதிகர்களான குண்டஜடரரும் குண்டரும். அவள் விழிகள் ஒவ்வொருவரையாக தொட்டுச்சென்றபோது அவள் அவர்களனைவரையும் முன்னரே அணுகிப்பழகி அறிந்திருப்பவளாக உணர்ந்து அகம் திகைத்தாள்.

துரியோதனன் மரத்தாலான தாழ்ந்த பீடத்தில் கால்மடித்து அமர்ந்திருந்தான். அவனருகே துச்சாதனனும் துச்சலனும் துர்மதனும் துச்சகனும் அமர்ந்திருந்தனர். வைதிகர் ஒருவர் அவன் இடையில் தர்ப்பையாலான கச்சை ஒன்றை கட்டிக்கொண்டிருந்தார். துச்சாதனன் எழுந்து கர்ணன் அமர்வதற்காக பீடத்தை சுட்டிக்காட்டினான். துச்சகன் அப்பால் பானுமதி அமர்ந்திருந்த இடத்தைச் சுட்டி அங்கே அமரும்படி சுப்ரியையிடம் கைகாட்டினான். கர்ணன் தனக்கான பீடத்தில் அமர்ந்ததும் சுப்ரியை சென்று பானுமதியின் அருகே அமர்ந்தாள். பானுமதி புன்னகைத்து விழிகளால் வரவேற்றாள்.

வெளியே வலம்புரிச்சங்கம் ஒலித்துக்கொண்டே இருந்தது. வசிட்ட மரபினரான குந்ததந்தர் தன் துணைவர்களான ஊர்ஜர், ரஜஸ், காத்ரர், ஊர்த்வபாகு, சவனர், சுதபஸ் ஆகியோருடன் அவைக்குள் வந்து அமர்ந்தார். பானுமதி விழிகளால் சுட்டி “அவர்கள் யார்?” என்று கேட்டாள். சுப்ரியை நோக்கிவிட்டு “அரசி, அவர்கள் விஸ்வாமித்திர மரபினரான காபிலேயரும், காரூஷரும்” என்றாள். “அவர்கள் கலிங்கத்தில் ஏதேனும் வேள்விக்கு வந்துள்ளனரா?” என்றாள் பானுமதி. “இல்லை அரசி, நான் அவர்களை பார்த்ததே இல்லை. ஆனால் அவர்களைப்பற்றிய சூதர்பாடல்களை கேட்டிருக்கிறேன்.”

பானுமதி வியந்து “சொல்லில் இருந்து இத்தனை கூர்மையாக மானுடமுகங்களை எடுத்துக்கொள்ள முடியுமா?” என்றாள். “மானுடமுகங்களை சொல்லாக்கலாமென்றால் இதுவும் இயல்வதே” என்றாள் சுப்ரியை. “நீ காவியங்களை பயில்வதுண்டா?” என்றாள் பானுமதி. “இல்லை, அரசி. நான் பயணங்களை மட்டுமே நோக்குவது வழக்கம். இங்கே பயணங்கள் வேள்விகளின்பொருட்டும் படையெடுப்பின்பொருட்டும் வணிகத்தின் பொருட்டும் மட்டுமே நிகழ்கின்றன.” பானுமதி சிரித்து “குலத்திற்கு ஒன்று சொல்லிவிட்டாய். நான்காவதையும் சொல். சூத்திரர் பஞ்சத்தின்பொருட்டு பயணம் செய்கிறார்கள்” என்றாள். சுப்ரியை புன்னகைத்து “நீங்கள் காவியம் பயில்கிறீர்கள்” என்றாள்.

அரசர்கள் சிறிய குழுக்களாக வந்து தங்களுக்கான இருக்கைகளில் அமர்ந்தனர். அனைவரும் வெண்ணிற ஆடைகளும் மரத்தாலும் விதைகளாலும் எளிய கற்களாலுமான அணிகளும் மட்டுமே சூடியிருந்தனர்.

அணியாடைகள் இல்லா நிலையில் சிலர் மிக எளிய வணிகர்கள்போல ஏவலர்போல மாறிவிட்டிருந்தனர். சிலர் மேலும் அழகும் நிமிர்வும் கொண்டிருந்தனர். ஜயத்ரதன் அந்தணரையும் முனிவரையும் வணங்கியபடி வந்து அவையிலமர்ந்தான். அஸ்வத்தாமனும் கிருதவர்மனும் இணைந்து வந்தனர். ருக்மியை அவள் அமர்ந்திருக்கும் அரசர்களின் நடுவே அடையாளம் கண்டாள். அருகிருப்பவனை ஒருகணம் கழித்து கோசலமன்னன் பிருகத்பலன் என்று புரிந்துகொண்டாள்.

"அவர் பிழையீட்டுப் பூசைக்குப்பின் சேர்த்துக்கொள்ளப்பட்டார்" என்று அவள் நோக்கை உணர்ந்து பானுமதி சொன்னாள். அவள் திரும்பி நோக்க "அவர் ஓர் இரவு முழுக்க பிற ஷத்ரியரை எதிராக திருப்ப முயன்றார். அவர்கள் அவரை ஏற்கவில்லை" என்றாள். சுப்ரியை "ஏன்?" என்றாள். "அனைவரும் வெல்ல விழைகிறார்கள். வெல்லும் தரப்பிலிருந்து விலக எவருக்கும் எண்ணமில்லை." சுப்ரியை புன்னகை செய்தாள். சல்யரும் பால்ஹிகநாட்டரசர் சோமதத்தரும் காந்தாரத்தரசர் சுபலரும் சேர்ந்து அவைபுகுந்தனர். மேலுமொரு ஓசை எழ பானுமதி திரும்பாமலேயே "பிதாமகரா?" என்றாள். பீஷ்மரும் கிருபரும் துரோணரும் அவையிலமர்ந்தனர். அவர்களைத் தொடர்ந்து சேதிநாட்டு தமகோஷரும் விதர்ப்பநாட்டரசர் பீஷ்மகரும் சேர்ந்து அவைக்குள் வந்தமர்ந்தனர்.

சுக முனிவரின் மைந்தர்களான கிருஷ்ணர், கௌரபிரபர், ஃபூரி, தேவஸ்ருதர் ஆகியோர் சேர்ந்து அவையில் வந்தமர்ந்தனர். "சுகரின் மைந்தர்கள்" என்று எவரோ சொல்ல சுப்ரியை எட்டிப்பார்த்தாள். விதுரரின் உருப்பொதுமை அவர்களிடமிருப்பதை கண்டாள். "விதுரரின் மைந்தர்களோ என

எண்ணினேன்” என்றாள் பானுமதி. அவர்களை அனைவருமே ஆர்வத்துடன் நோக்குவதை சுப்ரியை கண்டாள். அவர்கள் பீடம்கொள்வதுவரை அவையில் ஓசை நீடித்தது.

“வியாசர் வரமாட்டாரா?” என்றாள் சுப்ரியை. “மெய்யுரைப்பதென்றால் அவர் இருக்கிறாரா என்பதே ஐயம்தான். அவரை சென்ற எண்பதாண்டுகளில் எவருமே கண்டதில்லை. அவருடைய மாணவர்கள் என பலர் கிளம்பி வருகிறார்கள். அவர் எழுதியவை என கவிதைகளும் குறுங்காவியங்களும் சூதரிடம் ஒலிக்கின்றன. ஒவ்வொருவரும் அவரை ஒவ்வொரு வடிவில் ஒவ்வொரு இடத்தில் பார்த்ததாக சொல்கிறார்கள். எந்த வேள்விக்கும் விழவுக்கும் அவர் தோன்றியதில்லை. உயிருடன் இருக்கிறாரென்றால் எப்போதோ அகவை நூறை தாண்டியிருக்கும். விழியும்செவியும் அவிந்து எங்கேனும் உடல்முடங்கியிருக்கவே வாய்ப்பு” என்றாள் பானுமதி.

முன்பு ஒருமுறை மட்டுமே தான் கண்ட பானுமதியிடமிருந்து இப்போதிருப்பவள் மிக விலகி வந்துவிட்டிருக்கிறாள் என்பதை அப்போதுதான் சுப்ரியை உணர்ந்தாள். அன்று ஓரிரு நாட்களின் மேலோட்டமான பழக்கமே இருந்தது. அன்றிருந்தவள் எவ்வண்ணமோ ஓர் அன்னையை போலிருந்தாள். இன்று அவளிடமிருக்கும் இந்த எள்ளல் அன்று கூடியிருக்கவில்லை. பானுமதி “நீள்சடையுடன் வருபவர் சமீகர், இங்கு முன்பு ஒரு வேள்விக்காக வந்துள்ளார்” என்றாள். “அவருடன் அவைபுகுபவர்கள் தேவலரும் மைந்தர் ஸ்வேதகேதுவும். அவர்களின் குருநிலை கங்கையின் மறுகரையில் வாரணவதத்திற்கு அப்பால் உள்ளது. ஒருமுறை அங்கு சென்றுள்ளோம்.”

அப்பால் வந்தமைந்த ஒருவரை நோக்கி “அவர் பெயர் ஜங்காரி, விஸ்வாமித்ர குருநிலையை சேர்ந்தவர்” என்று பானுமதி சொன்னாள். “முன்பு இங்கு வேள்விக்கென வந்தவர். அப்பால் அமர்ந்திருக்கும் வெண்சடை கொண்டவர் தேவஸ்ரவஸ். அவரும் விஸ்வாமித்ரரின் மரபினர்தான்.” சுப்ரியை “விஸ்வாமித்திரரின் மரபிலிருந்துதான் மிகுதியானவர்கள் வந்திருக்கிறார்கள் என எண்ணுகிறேன்” என்றாள். “ஆம், வசிட்ட மரபிலேயே குறைவான கிளைகள் இருக்கும். அவர்கள் அந்தணர்களால் மட்டுமே ஆனவர்கள். விஸ்வாமித்திர மரபும் பிருகுமரபும் அனைவரையும் உள்ளிழுப்பவை. எனவே அம்மரபு பாரதவர்ஷமெங்கும் பெருகிக்கொண்டிருக்கிறது.”

வேள்விக்கான சடங்குகள் ஒவ்வொன்றாக நிகழ்ந்துகொண்டிருந்தன. ஆகுதிப்பொருட்கள் கொண்டுவந்து வைக்கப்பட்டன. ஆல், அத்தி, அரசு, அகில், கருங்காலி, புரசு, அருகு, பூவரசு, நெல்லி, நாவல், எருக்கு, கடுகு, ரோகிணி, வன்னி, வெட்டிவேர், மூஞ்சுப்புல், தர்ப்பைப் புல், விளாமிச்சை வேர், சந்தனம், நொச்சி, நாயுருவி, தேவதாரி, மா என எரிவிறகுகள் தனித்தனியாக கொண்டுவந்து குவிக்கப்பட்டன. ஒவ்வொரு பொருளும் வேள்விச்சாலையின் மணத்தை நுட்பமாக மாற்றியது. முன்னர் இருந்த மணம் பிறிதொன்றாகியது. புதியதொன்றை ஏற்றுக்கொண்டது. நெய்க்குடங்கள் ஒவ்வொன்றாக கொண்டுவரப்பட்டு ஐந்து எரிகுளங்களுக்கு அருகிலும் வைக்கப்பட்டன.

வேள்வித் தலைவருக்கான எண்கால் மரப்பீடத்தின் அருகே வலப்பக்கமும் இடப்பக்கமும் இரு இளைய வைதிகர் காவல்நின்றனர். வேள்விச்சாலையின் வலப்பக்கம் அமைந்த கல்லால் ஆன அரியணைகளை கௌரவர்களான சகன், விந்தன்,

அனுவிந்தன், துர்தர்ஷன், துஷ்ப்ரதர்ஷணன் ஆகியோர் காவல் காத்து நின்றனர். அவையில் உலோகப்பொருள் ஆகாதென்பதனால் மரத்தாலான வில்லையும் அம்பையும் படைக்கலங்களாக ஏந்தியிருந்தனர். அருகே அரசத்துணைவருக்கான பீடமும் அவருடைய அரசிக்கான பீடமும் இருந்தது. அவற்றை கௌரவர்களான சலன், சத்வன், சுலோசனன், சித்ரன், உபசித்ரன் ஆகியோர் காவல்காத்தனர்.

அஸ்தினபுரியின் அரசகுடியினருக்கான மணைகள் அனைத்திலும் கௌரவ மகளிர் வந்து நிறைந்திருந்தனர். வேள்விச்சாலையின் இடது நீட்சியில் முனிவர்களும் அந்தணர்களும் அமர்வதற்கான இருக்கைகள் பெரும்பாலும் நிறைந்திருந்தன. வேள்விச்சாலையின் நேர்நீட்சியில் அமைந்த அரசர்களுக்கான பகுதியில் அரசர்களின் நிரைகளில் வந்தமர்ந்துகொண்டே இருந்தனர். எவருக்கும் வாழ்த்தும் அறிவிப்பும் இல்லையென்பதனால் அவர்கள் அனைவருமே சற்று நிலையழிந்திருந்தனர். அரசர்களுக்குரிய நீள்காலடியை இசையிலாது வைத்தபோது அது ஒவ்வாமலிருந்தது. இயல்பாக நடந்தபோது அவர்கள் அரசர்களல்லாமல் தோன்றினர்.

அங்கு ஒவ்வொரு மூலையிலும் ஒவ்வொரு சடங்கு நிகழ்ந்துகொண்டிருந்தது. வேள்வியில் அனலூட்ட அமர்பவர்களை தூய்மைப்படுத்தும் சடங்கு அந்தணர் பகுதியில் நிகழ்ந்தது. கங்கைநீர் தெளித்து வேதமோதி வாழ்த்தப்பட்ட அவர்கள் தங்கள் ஆசிரியர்களையும் முனிவர்களையும் வணங்கி வேதநிலையை சுற்றிவந்து அதன் எட்டு மூலையிலும் நிறுவப்பட்டிருந்த திசைத்தேவர்களை தொழுது வெளியே நிறுத்தப்பட்டிருந்த பசுவை வணங்கி தர்ப்பைத் திரியால் வேள்விப்புரிநூல் அணிந்து உள்ளே வந்தனர்.

சுப்ரியை பந்தலுக்குள் இளைய யாதவர் சாத்யகியுடன் நுழைவதை கண்டாள். எளிய வெண்ணிற ஆடையை தோள்சுற்றி அணிந்திருந்தார். அணிகளென ஏதுமில்லை. அவர் தலையில் அந்த மயிலிறகு மட்டும் மின்னிக்கொண்டிருந்தது. இளவைதிகர் ஒருவர் அவரை அழைத்துச்சென்று முனிவர்களின் நிரையில் அமரச்செய்தார். கௌதமகுடியின் ஏகதர் த்விதர் திரிதர் ஆகியோருக்கு அருகே அவர் அமர்ந்து அவர்களிடம் இன்சொல் உரைத்து புன்னகைத்தார். கௌதம குடியின் காக்ஷீவான் அவரிடம் வந்து குனிந்து முகமனுரைத்தார். அவருக்குப் பின்னால் அமர்ந்திருந்த தேவத்யூதியும், தேவமதரும் அவரை நோக்கி முன்னகர்ந்து ஏதோ சொல்ல அவர் புன்னகை செய்தார்.

சுப்ரியை திரும்பி கர்ணனை நோக்கினாள். ஒரு நெஞ்சதிர்வுடன் மீண்டும் இளைய யாதவரை நோக்கினாள். "என்ன?" என்றாள் பானுமதி. "ஒன்றுமில்லை, நேற்றிரவின் துயில்நீப்பு... களைத்திருக்கிறேன்" என்றாள். கண்களை மூடிக்கொண்டபோது எங்கோ விழுந்துகொண்டிருக்கும் உணர்வு எழுந்தது. "வேள்விப்பொழுது முழுக்க எதுவும் அருந்தும் வழக்கம் இல்லை" என்றாள் பானுமதி. "ஆம், அறிவேன்" என்று அவள் சொன்னாள். வேள்வியவை மெல்ல முழுமையடைவதை ஓசையினூடாகவே அவள் கேட்டாள். விழிக்குள் எழுந்த பிம்பங்களால் மீண்டும் திடுக்கிட்டு விழிதிறந்தாள். இருவரையும் நோக்கியபின் தலைகுனிந்து மேலாடையை இழுத்து தன் முகத்தின்மேல் விட்டுக்கொண்டாள்.

# குருதிச்சாரல் - 73

**பகுதி பத்து : பெருங்கொடை – 12**

அவைக்கு வருபவர்களை அறிவிக்கும் சங்கொலிகள் ஓய்ந்ததும் வேள்வியரங்கு முழுமைகொண்டுவிட்டதா என்று காசியப கிருசர் எழுந்து நின்று நோக்கினார். அவருடைய மாணவர்கள் அந்தணர்நிரையிலும் அரசர்நிரையிலும் முனிவர்நிரையிலும் நின்று விழிகளால் தொட்டு எண்ணி நோக்கி அவைநிறைந்துள்ளது என உணர்ந்ததும் கைகூப்பி அவருக்கு அறிவித்தனர். காசியப கிருசர் திரும்பி வேள்விப்பொருட்களை மேல்நோக்கு செய்துகொண்டிருந்த குத்ஸ தாரகரிடமும் அப்பால் வேள்விக்குளங்களை நோக்கிக்கொண்டிருந்த மௌத்கல்ய தேவதத்தரிடமும் வினவினார். அவர்கள் கைகூப்பியதும் அவருடைய மாணவனிடம் மெல்லிய குரலில் ஆணையிட்டார்.

அவருடைய மாணவனாகிய பாவுகன் மூச்சிரைக்க ஓடி துரியோதனனின் அருகே சென்று குனிந்து வேள்வி தொடங்கவிருப்பதை சொன்னான். தேவதத்தரின் மாணவன் வலம்புரிச்சங்கை மும்முறை ஒலித்தான். அவை அமைதியடைந்து நோக்கியது. காசியப கிருசர் கைகூப்பியபடி வேள்வியவை முன் சென்று நின்று மூன்றுபுறமும் நோக்கி வணங்கியபின் உரத்த குரலில் "அவைநிறைந்திருக்கும் முனிவர்களை வணங்குகிறேன். அந்தணர்களை வணங்குகிறேன். அரசர்களை வாழ்த்துகிறேன். இங்கு சொல்வன பிழையிலாதாகுக! ஆற்றுவன நலமே பயப்பதாகுக! எண்ணுவன இலக்கெய்துக! அனைத்தும் நன்னிறைவடைக! ஆம், அவ்வாறே ஆகுக!" என்றார். "ஆம்! ஆம்! ஆம்!" என அவை அதை ஏற்று குரல் எழுப்பியது.

“வேதச்சொல் என மண்ணிறங்கிய பேரருளை வணங்குவோம். மண்ணில் அளியென்றும் அறமென்றும் பரவியிருக்கும் அது நம்மை ஆளட்டும்” என காசியப கிருசர் தொடர்ந்தார். “இந்த அவையில் பரத்வாஜம், கௌசிகம், வாத்ஸம், கௌண்டின்யம், காசியபம், வாசிஷ்டம், ஜாமதக்னம், வைஸ்வாமித்ரம், கௌதமம், ஆத்ரேயம் என்னும் பத்து முதற்குலங்களையும் சார்ந்த அந்தணர் அவையமர்ந்திருக்கிறீர்கள். அகத்திய, அங்கிரீச, வாதூல, பார்க்கவ, சியவன, தலப்ய, கர்க, மைத்ரேய, மாண்டவ்ய, சாண்டில்ய, சௌனக, வால்மீகி குருநிலைகளைச் சேர்ந்த அந்தணர் வருகை புரிந்துள்ளீர்கள். உங்கள் அனைவரையும் வணங்கி வரவேற்கிறேன். இந்த வேள்வியவை பாரதவர்ஷத்தில் நிகரற்றது என்னும் பெருமையை இந்நகர் கொள்க!”

வாழ்த்தொலிகள் நடுவே காசியப கிருசர் தொடர்ந்தார். “பாரதத்தில் வேதப்பயிர் காக்கும்பொருட்டு அருந்தவம் முதிர்ந்த பிரஜாபதிகளால் உருவாக்கப்பட்ட ஐம்பத்தாறு ஷத்ரிய அரசர்களில் பெரும்பாலும் அனைவரும் இங்கு அமர்ந்திருக்கிறீர்கள். இந்த அவையில் மண்மறைந்த அத்தனை அரசர்களும் தங்கள் வாழ்த்துக்களுடன் வந்து நின்றிருக்கிறார்கள். அவர்கள் வாழ்க! வேதம் வாழ என்றும் அவர்களின் கொடிகள் அரணமைப்பதாகுக!” அரசர்கள் தங்கள் கோல்களை தூக்கி “ஆம்! ஆம்! ஆம்!” என ஓசையிட்டனர்.

“அவையினரே, இங்கு இந்த வேள்விச்சாலையில் மகாசத்ரவேள்வி ஒன்று நிகழவிருக்கிறது. அஸ்தினபுரியின் அரசரும் விசித்திரவீரியரின் பெயர்மைந்தரும் தார்த்தராஷ்டிரருமான துரியோதனரும் வேதச்சொல் காக்கும்பொருட்டு அவருடன் உடனிணைந்துள்ள ஷத்ரிய

அரசர்களும் போர் வெல்லும்பொருட்டும், விழைவன எய்தும்பொருட்டும், அவர்களின் செயல்களினூடாக நால்வேதம் வகுத்த நெறி நிலைகொள்ளும்பொருட்டும் இந்த வேள்வி இங்கே நிகழவிருக்கிறது" என காசியப கிருசர் தொடர்ந்தார்.

"தொல்நூல்கள் வகுத்த மகாசத்ரவேள்வியாகிய புருஷமேதம் இங்கே நிகழவிருக்கிறது. அதர்வவேதியரான குத்ஸ குலத்து தாரகரும் மௌத்கல்ய குலத்து தேவதத்தரும் துணைநின்று உதவ, வசிட்டரின் மைந்தர் அதர்வா வகுத்தளித்த தொல்மரபின் அடிப்படையில் ஹிரண்யகர்ப்பம் என்னும் அதர்வவேதக் குழுவினரால் அவர்களின் தலைவர் அமூர்த்தர் வேள்வித்தலைவராக அமைய இந்த வேள்வி இங்கே நிகழ்த்தப்படவுள்ளது. மகாசத்ர வேள்விக்குரிய அனைத்தும் இங்கு ஒருங்கியிருக்கின்றன. புருஷமேதத்திற்குரிய தூய பலிகொடைகள் அனைத்தும் சித்தமாக உள்ளன. இந்த வேள்வி இங்கு சிறப்புற நிகழ்ந்தேற இங்கு கூடியிருக்கும் அவையின் வாழ்த்துக்களை வேண்டுகிறேன்."

அவை அமைதியாக இருந்தது. எவரேனும் முதற்சொல் உரைக்கவேண்டும் என அவர்கள் காத்திருப்பதை உணரமுடிந்தது. ஒவ்வொருவரும் பிறரை பார்த்தபடி அமர்ந்திருந்தனர். காசியப கிருசர் அவையை சூழநோக்கியபடி நின்றார். அகத்தியகுலத்தவரான திருடஸ்யூ எழுந்தபோது அங்கிருந்த இறுக்கம் அகன்றது. பலர் புன்னகை புரிந்தனர். திருடஸ்யூ "வைதிகரே, இவ்வேள்வியை இங்கு நிகழ்த்துவதற்கான இன்றியமையாமை என்ன என்று அறிய விரும்புகிறேன்" என்றார். "தொல்வேள்விகள் பல உள்ளன. அவற்றில் இன்றிருப்பவை சிலவே. நலம் பயப்பவை என

நிறுவப்பட்டவையும் ஏராளம். பூதவேள்விகளே தீங்கிழைப்பவை என்று நம்புவோர் உள்ளனர்"என்றார்.

காசியப கிருசர் "முனிவரே, ஐந்து வேள்விகளை தன்பொருட்டும் குடிகள்பொருட்டும் அரசர் ஆற்றியாகவேண்டும் என்கின்றன நூல்கள். அவை பிரம்ம யக்ஞம், பித்ரு யக்ஞம், தேவ யக்ஞம், பூத யக்ஞம், புருஷ யக்ஞம். இவை அஹுதம், ஹுதம், ப்ரஹுதம், பிராம்யம், ப்ராசிதம் என அழைக்கப்படுகின்றன. பிரம்ம யக்ஞம் பயிற்றலும் கற்றலுமென நிற்பது. பித்ரு யக்ஞம் முன்னோர் நினைவை நிலைநிறுத்துகிறது. தேவ யக்ஞம் மண்ணுக்கு விண்ணவரின் அருளை கொண்டுவருகிறது. பூத யக்ஞம் மண்ணை வளம்மிக்கதாக்குகிறது. பருப்பொருட்களை ஆளும் தெய்வங்களை மகிழ்விக்கிறது. புருஷ யக்ஞம் குடியினரை நலமுறச்செய்கிறது" என்றார்.

"எளிய மானுடன் இவ்வேள்விகளை தன் அன்றாடச் செயலால் இயற்றலாம் என்கின்றன நூல்கள். பயிற்றுதல், முன்னோரை வணங்குதல், இறைதொழுதல், மண்செழிப்புறச் செய்தல், விருந்தினரை வரவேற்றல் ஆகிய ஐந்தையும் செய்பவன் ஐந்து வேள்விகளை செய்தவனேயாவான். அரசனோ தன் குடிகள் இயற்றும் ஐந்து வேள்விகளையும் ஒருங்கிணைப்பவன். அஸ்தினபுரியில் இவ்வைந்து வேள்விகளும் ஒவ்வொரு குடியினராலும் இயற்றப்படுகின்றன என்பதையே இங்குள்ள பெருவேள்விகள் அறிவிக்கின்றன."

"ஐவகை வேள்விகள் இயற்றப்படும் மண் தூயது, தெய்வங்களால் காக்கப்படுவது. தன்னை காத்துக்கொள்ளும் பொறுப்பும் தன் எல்லைகளை விரிக்கும் கடமையும் அதற்குண்டு. அதை எதிரிகள் சூழ்வார்களென்றால்

அன்னைப்புலி சீற்றம் கொண்டு எழுவதுபோல அது போர்க்கோலம் கொள்ளவேண்டும் என்கின்றன நூல்கள். அதன் நகங்களும் பற்களும் ஆகின்றது அதர்வம். அதன் பெருங்குரலாகிறது யஜுர். அதன் மூச்சாகிறது சாமம். அந்தணரே, அதன் விழிகளாகிறது ரிக். சினந்தெழுவது வேதமேயாகும்.”

“அஸ்தினபுரி தன்னை எதிர்க்கும் வேதமறுப்பாளர்களுக்கு எதிராக பிடரிசிலிர்த்து நிலமறைந்து அறைகூவல் விடுக்கிறது. இன்று வேதம் காக்கும் தெய்வங்கள் அதனிடம் கேட்கின்றன, நீ எதுவரை எங்களுடன் நின்றிருப்பாய், எவ்வளவு அளிப்பாய் என. இறுதிவரைக்கும் என்றும், எல்லாவற்றையும் என்றும் அவற்றுக்கு மறுமொழி உரைக்கவேண்டியிருக்கிறது. இந்த புருஷமேதவேள்வி அதன்பொருட்டேயாகும். இது விண்நோக்கி அளிக்கும் ஒரு வாக்குறுதி” என்றார் காசியப கிருசர்.

“ஐம்பெரும் வேள்விகள் அன்றாடம் நிகழவேண்டியவை. வாழ்வென அமையவேண்டியவை. அவற்றின் உச்சங்களே முப்பெரும் அழைப்புகளும், ஐம்பெரும்கொடைகளும். வாஜபேயம், அக்னிஹோத்ரம், அதிராத்ரம் என்னும் முப்பெரும் அழைப்புகள் மண்ணில் தேவர்களை இறக்குகின்றன. கோமேதம், அஸ்வமேதம், அஜமேதம், மகிஷமேதம், புருஷமேதம் என்னும் ஐந்து கொடைகள் மானுடரை அவர்களின் படைக்கலங்களாக்குகின்றன. முப்பெரும் அழைப்புகள் வாழ்வு சிறக்கையில் நிகழ்ந்தாக வேண்டியவை. ஐம்பெரும் கொடைகளோ மேலும் சிறக்கும் பொருட்டும், எதிரிகளை வெல்லும் பொருட்டும், அழிவிலிருந்து எழும் பொருட்டும் நிகழவேண்டியவை.”

“ஐம்பெரும்கொடைகள் ஆற்றப்படும் நிலம் தேவருலகுபோல் வெற்றியும் செல்வமும் பொலிவது என்கின்றன நூல்கள். அந்தணரே, இங்கு நிகழும் புருஷமேதமே கொடைகளில் உச்சம், இனி பிறிதொன்றில்லை என்னும் அறிவிப்பு இது. மாற்றிலாத வெற்றிக்கு இதுவே வழியாகும். இது இங்கு நிகழ அவையோர் ஒப்புதல் அளிக்கவேண்டும்” என்றார் காசியப கிருசர். நன்கு பயின்ற சொற்களில் அவர் அவையினர் உள்ளத்தை பிணித்திருந்தார். அச்சொற்கூர்மைக்கு முன் அகத்தியமரபினரால் சொல்லெடுக்க இயலவில்லை.

“அந்தணரே, இந்த வேள்வியை இயற்றுபவர் வேதத்தின் சாறு அருந்தியவராக, அதன் அனலை தன்னுள் கொண்டவராக, ஐயத்திற்கிடமில்லாது வேதச்சொல்லில் அமைந்தவராக இருக்கவேண்டும் என்பது நூல்நெறி. ஏனென்றால் இதை இயற்றுபவர் தான் கொண்டதன் பொருட்டு தன் குடிகளை, தன் நிலத்திலுள்ள பல்லாயிரம் உயிர்களை பலியிட எழுகிறார். பிழையென ஒன்று நிகழ்ந்துவிட்டால் பேரழிவே எஞ்சும். வேதத்தின்பொருட்டு அழிந்தவர்களைவிட வேதப்பிழையின்பொருட்டு அழிந்தவர்களே மிகுதி என்கின்றன தொல்வரலாறுகள். உங்கள் அரசர் அவ்வண்ணம் அமைந்தவரா?” என்றார் திருடஸ்யூ.

காசியப கிருசர் “ஆம்” என்றார். “வாளின் பிடியழகும் அலகின் வளைவும் கூரின்பொருட்டே என உணர்ந்தவர் அவர். அதில் ஐயமற்றிருக்கிறார்.” திருடஸ்யூ “அதற்கு என்ன சான்று?” என்றார். “இந்த வேள்வியின் காவலராக அவர் வந்தமைவதே சான்று. இது காட்டெரிமுன் அமர்வது என்று அறிந்தவர் அவர் என அறியாதோர் எவருமில்லை” என்றார் காசியப கிருசர். “வேதம் அதன் எதிரிகளால் சூழப்பட்டுள்ளது. வேதச்சொல்

காக்கும் தெய்வங்களின் படைக்கலமாக தன்னை அளிக்கிறார் அஸ்தினபுரியின் அரசர்.”

திருடஸ்யூ “இவ்வேள்வியை ஒழியவேண்டும் என்று இந்த அவையில் கோரவே நான் என் உடன்பிறந்தானுடன் வந்தேன். எதன்பொருட்டும் தன்னையும் தன்னைச் சார்ந்தவற்றையும் முழுதளிக்க அரசனுக்கு உரிமை இல்லை. ஆணவத்தால், பெருவிழைவால் அவன் பிழை செய்யலாம். அவையோரே, நலம்நாடியும் அறம்நின்றும் அளிகொண்டும் அவன் அதைவிட பெரும்பிழையை செய்யலாம். பேரழிவை கொண்டுவந்து தன் காலத்தின்மேல் சுமத்தலாம். அறவோர் அவனுக்கு இதை எடுத்துரைக்கவேண்டும். அவைபுகுந்து சொல்ல எனக்கு உரிமையில்லை. அந்தணர் முன் நின்று இதை சொல்ல விழைகிறேன். இங்குள்ளோர் இந்த வேள்விக்கு ஒப்புதல் அளிக்கலாகாது” என கைகூப்பியபின் அமர்ந்தார்.

காசியப கிருசர் “அகத்தியரே, தங்கள் சொல் அவைமுன் நிற்கட்டும். இங்குள்ள அந்தணரும் முனிவரும் அரசரும் அதை உளம்கொண்டு தங்கள் முடிவை எடுக்கட்டும்” என்றார். “ஆனால் அனைவரும் உணர ஒன்றுண்டு. பலி இன்றி போர் இல்லை. முழுதளிப்பதையே பலி என்கிறோம். முழுதளிக்கிறோம் என்னும் சொல்லே இங்கு வேள்வியென உருக்கொள்கிறது. இது நிகழ அவை ஒப்புதல் அளிக்கவேண்டும்.”

சுகரின் மைந்தரான தேவஸ்ருதர் எழுந்து “அதர்வரே, வேதம் வாழ்வது அச்சொல்லில் அல்ல. அதற்கப்பால் அதன் பொருளிலும் அல்ல. அதற்கும் அப்பால் ஒலியிலும் அல்ல. அதற்கும் அப்பாலுள்ள உணர்வில்கூட அல்ல. எங்கிருந்து அது எழுந்ததோ அங்கு” என்றார். “அங்கிருக்கும் அது தன்னை

முனிவரின் தவத்தில் உணர்வென்றாக்கியது. அதை பிறர் செவிகொள்ளும்பொருட்டு ஒலியென்றாக்கினர். உளம்கொள்ளும் பொருட்டு பொருளென்றாக்கினர். பயிலும்பொருட்டு சொல்லென்றாக்கினர். விழிகொள்ளும்பொருட்டே செயலென்றாக்கினர். வேள்வி என்பது நுண்மையான அதை புலன்வடிவென உணரும் ஒரு தருணமே. எனவே அந்நுண்பொருள் பெருகி உலகச்செயல் என்றாகும் எத்தருணமும் வேள்வியே என்றறிக!" என்றார்.

"அந்தணர்களே, விதையிலிருந்து எழுகிறது மரம். மரத்திலிருந்து உள்ளம் கூர்ந்து சென்று விதைக்குள் வாழும் நுண்மையை அடையலாம். மரத்தை எரித்து சாம்பலாக்கி உருட்டி மீண்டும் விதையாக்க முயல்வது மடமை. வேள்விச்செயல்கள் அனைத்தும் வேதமுணர்வதற்கான ஊழ்கத்தின் நடன வடிவங்களே. ஒவ்வொரு கைப்பிடி நெய்யும் அதில் விழுகையில் வேதவிழுப்பொருளான உண்மையையே சென்றடையவேண்டும். உலகுவிழைந்து எண்ணிய எய்துவதற்கான இவ்வேள்வி வேதமெய்மையை சிறுமை செய்கிறது. இதனால் எப்பயனும் இல்லை" என்றார் அவருடைய இளையவரான கௌரபிரபர்.

"இவ்வேள்வி முழுமையாகவே பயனளிப்பது என்பதே நூல்களின் கூற்று" என்றார் காசியப கிருசர். "எந்த நூல்கள் அன்றாட அவிக்கொடை பயனளிப்பவை என்கின்றனவோ அவையே ஐம்பெருங்கொடைகளையும் வலியுறுத்துகின்றன. இவை பயனற்றவை என்றால் அவையும் பயனற்றவை என்றே பொருள். அவ்வாறு இந்த அவையில் நீங்கள் உரைக்கவிரும்புகிறீர்களா, முனிவரே?" திருடஸ்யு "வேள்வி என்பது அறிதல். அறிதலற்ற வேள்வி பயனற்ற செயல்"

என்றார். “மருந்துண்ணுதல் நோயை ஒறுக்கும் வழி. அதில் மருந்தைக் குறித்த அறிதல் இல்லையேல் மருந்து பயனற்றுப்போகும் என்று மருத்துவர் உரைப்பதில்லை” என்றார் காசியப கிருசர்.

“நீங்கள் விழைந்தால் இதை செய்க! இது போருக்கான தற்கொடைபோல ஒரு வெற்றுச்சடங்கென்றால் அவ்வாறே ஆகுக! அருள்கூர்ந்து இதை வேள்வியென சொல்லாதிருங்கள். பிறிதொன்றும் நான் சொல்வதற்கில்லை” என்று சொல்லி கௌரபிரபர் அமர்ந்தார். காசியப கிருசர் “இந்த அவையில் மாற்றுச்சொல் என ஏதும் எஞ்சியுள்ளதா?” என்றார். அவை அமைதி காத்தது. “மாற்றுச்சொல் உண்டா? மாற்றுச்சொல் உண்டா? மாற்றுச்சொல் உண்டா?” என மும்முறை கோரிவிட்டு “மாற்றுச்சொல் இல்லை என்றால் இந்த வேள்விக்கு ஒப்புதல் அளிக்க விழையாத அந்தணர் அவையிலிருந்து அகலலாம்” என்றார். திருடஸ்யூ தன் இளையோன் திருடேயுவுடன் வெளியே சென்றார். சுகரின் மைந்தர்களான கிருஷ்ணர், கௌரபிரபர், ஃபூரி, தேவஸ்ருதர் ஆகியோர் அவரைத் தொடர்ந்து வெளியேறினர்.

“இந்த அவை இவ்வேள்விக்கு ஒப்புதல் அளிக்கிறதென்றே எண்ணுகிறேன். ஆம், அவ்வாறே ஆகுக!” என்று காசியப கிருசர் கைதூக்கி கூவினார். “ஆம்! ஆம்! ஆம்!” என்று அவையினர் குரலெழுப்பினர். “அவ்வாறென்றால் இந்த வேள்வியை தலைமைகொண்டு நிகழ்த்தும்பொருட்டு ஹிரண்யகர்ப்ப அதர்வ வேதக் குழுவின் தலைவரான அமூர்த்தரை இந்த அவை அழைப்பதாகுக!” என்றார் காசியப கிருசர். அவை ஆமொலி எழுப்பியது.

காசியப கிருசர் அதர்வ வைதிகர்களான குத்ஸ குலத்து தாரகரும் மௌத்கல்ய குலத்து தேவதத்தரும் உடன் வர வேள்விச்சாலையில் இருந்து வலப்பக்கமாகச் சென்று வாயிலுக்கு வெளியே நின்றிருந்த அமூர்த்தரை வேதமொழியால் அழைத்தார். புலித்தோலாடையும் கரடித்தோலாடையும் அணிந்து நின்றிருந்த அமூர்த்தரும் அவருடைய குருநிலையினரும் அவர்கள் அணுகியதும் உரக்க வேதச் சொல் கூவி அணுகிவந்தனர். அமூர்த்தரின் மாணவராகிய உக்ரர் அவர்கள் அங்கு நாற்பத்தொரு நாட்களாக அணையாது பேணிவந்த எரிகுளத்திலிருந்து எடுத்த அனலை மண்சட்டியில் கையில் வைத்து அவருக்குப் பின்னால் வந்தார்.

அமூர்த்தரின் முதன்மை மாணவரான சுப்ரபர் கரிய காம்புகளும் சிவந்த கொம்புகளும் கொண்ட வெண்ணிறமான பசுவை அழைத்தபடி வேள்விச்சாலைக்குள் நுழைந்தார். தொடர்ந்து கங்கைநீர் நிறைந்த மண்கலங்களுடன் அவருடைய ஏழு மாணவர்கள் வந்தனர். அமூர்த்தர் தன் இரு கைகளையும் கூப்பியபடி வேள்விச்சாலைக்குள் நுழைந்தபோது அந்தணர் வேதச்சொல் கூவி அவரை வாழ்த்தி வரவேற்றனர். காசியப கிருசரும் தாரகரும் தேவதத்தரும் அவரை எதிர்கொண்டு வேள்வித்தலைவருக்கான எண்கால் பீடத்திற்கு அழைத்துச் சென்றனர். காலையிலேயே அரணிக்கட்டை உரசி எழுப்பப்பட்டு மூன்று அந்தணரால் அவியளித்து பேணப்பட்ட தென்னெரியை மும்முறை சுற்றிவந்து வணங்கி அவர் பீடத்தில் அமர்ந்தார்.

காசியப கிருசர் “இவ்வேள்விப்பந்தலை அமைத்த சிந்துநாட்டுச் சிற்பியான பரமரும் அவருடைய மாணவர்களும் இவ்வேள்வியின் முதற்பயனை கொள்க!” என்று அறிவித்தார்.

அவையினர் வாழ்த்த பரமர் தன் ஏழு மாணவர்களுடன் வேள்வித்தலைவரின் பீடத்தை அணுகி வேள்விப்பந்தலை அமைத்திருந்த மூங்கில்களில் வெட்டிய ஒரு கிளையை அவரிடம் அளித்து வேள்விநிலையை அவரிடம் ஒப்படைத்தார். அவரை வணங்கி அருள் பெற்றபின் இடப்பக்கமாக சென்று வேள்விநிலையிலிருந்து வெளியேறினார்.

அனைவருமே அங்கு நிகழும் அனைத்தையும் வெற்றுச்சடங்கெனக் கருதி பிறிதொன்றுக்காகக் காத்திருப்பதாக சுப்ரியை உணர்ந்தாள். அவர்களின் விழிகள் கர்ணனையே தொட்டு மீண்டுகொண்டிருந்தன. “எவருக்கும் இச்சடங்குகளில் ஆர்வமில்லை” என அவள் மெல்லிய குரலில் சொன்னாள். பானுமதி “ஆம், இல்லையென்றால் அகத்தியரின் குரலுக்கே நூறு எதிர்ப்புகளும் ஆதரவுகளும் எழுந்திருக்கும். இன்றைய நாள் அதிலேயே முடிந்திருக்கும்” என்றாள்.

காசியப கிருசர் “இந்த வேள்விநிலை இருள்தெய்வங்களிடமிருந்து தேவர்களால் காக்கப்படுக! எதிர்நிற்கும் மானுடரிடமிருந்து தெய்வங்களால் வலுவூட்டப்பட்ட வேள்விக்காவலரால் காக்கப்படுக! இந்த வேள்வியின் அனைத்து நற்பலன்களும் சொல்லாலும் பொருளாலும் அருளாலும் இவ்வேள்வியை அமைத்த அஸ்தினபுரியின் அரசர் துரியோதனருக்கே உரியது. இந்த வேள்வியின் காவலராக அவரை அவையமர அழைக்கவேண்டும் என்று வேள்வித்தலைவரை இறைஞ்சுகிறேன்” என்றார். அவை ஆமொலி எழுப்பியது.

அமூர்த்தர் எழுந்து “அஸ்தினபுரியின் அரசரும் தார்த்தராஷ்டிரருமான சுயோதனர் இந்த வேள்வியை காவல்நின்று நிகழ்த்தும்படி அழைக்கிறேன்” என்றார்.

துரியோதனன் கைகூப்பியபடி சென்று தென்னெரியை வலம் வைத்து அமூர்த்தரின் கால்தொட்டு வணங்கினான். அவனை அவருடைய இரு மாணவர்கள் அழைத்துச்சென்று பீடத்தை காட்டினர். தாரகர் துரியோதனன் தலையில் மென்மரத்தாலான கொந்தையை சூட்டினார். தேவதத்தர் அவன் கழுத்தில் மலர்மாலையை அணிவித்தார். அஸ்தினபுரியின் ஏழு குடித்தலைவர்கள் இணைந்து வேள்விக்காவலுக்கான மூங்கில்கழியை அவன் கையில் அளித்தனர். அவன் வேள்வித்தலைவரையும் அவையையும் வணங்கிவிட்டு கல்லால் ஆன பீடத்தில் அமர்ந்தான்.

அஸ்தினபுரியின் ஏழு முதுமங்கலைகள் வந்து பானுமதியை அழைத்துச்சென்று துரியோதனன் அருகே பீடத்திலமரச்செய்தனர். பானுமதி கையில் மூங்கில்நாழியில் நிறைநெல்லுடன் சென்று தென்னெரியை வலம் வந்து வேள்வித்தலைவரை வணங்கி தன் பீடத்தில் அமர்ந்தாள். அவளுக்கு தலையில் மலர்களான முடியையும் மாலையையும் முதுமகளிர் அணிவித்தனர். அவள் விழிகள் ஒருகணம் வந்து சுப்ரியையை தொட்டுச்சென்றன. நெஞ்சடைக்க மூச்சுத்திணற அவள் விழிவிலக்கிக்கொண்டாள். அவையை விழிதூக்கி நோக்கவே இயலாதென்று தோன்றியது.

பின்னர் அவள் கர்ணனை நோக்கினாள். நீண்ட உடல் பீடத்தில் மிகச் சரியாக மடிந்து அமைய அசைவின்றி அமர்ந்திருந்தான். அங்கிருப்பது மானுடன் அல்ல பாறை என்பதுபோல உணர்ந்தாள். அவன் இமைகளை நோக்கிக்கொண்டிருந்தாள். அவை அசைவதுபோல தெரியவில்லை. அவன் நோக்கு காலடி மண்ணை நோக்கி சரிந்திருந்தது. துரியோதனனையும் பானுமதியையும் வேள்விக்காவலர்களாக நிறுத்தும் சடங்குகள்

நிகழ்ந்துகொண்டிருந்தன. பானுமதியின் இடக்கையிலும் துரியோதனனின் வலக்கையிலும் தர்ப்பையால் காப்பு கட்டப்பட்டது. நறும்புகையாட்டு சுற்றியும் கங்கைநீர் தெளித்தும் அவர்களை தூய்மைசெய்தபின் மலரிட்டு வாழ்த்தினர். வேதம் ஒலித்துக்கொண்டே இருந்தது.

“விஷ்ணுவிலிருந்து பிரம்மனில் தோன்றிய அத்ரி முனிவர் வாழ்க! அவர் மைந்தன் சந்திரனிலிருந்து தோன்றிய அஸ்தினபுரியின் இக்குலம் வெல்க! புதன், புரூரவஸ், ஆயுஸ், நகுஷன், யயாதி, புரு, ஜனமேஜயன், பிராசீனவான், பிரவீரன், நமஸ்யு, வீதபயன், சுண்டு, பஹுவிதன், ஸம்யாதி, ரஹோவாதி, ரௌத்ராஸ்வன், மதிநாரன், சந்துரோதன், துஷ்யந்தன், பரதன், சுஹோத்ரன், சுஹோதா, கலன், கர்த்தன், சுகேது, பிருஹத்ஷத்ரன், ஹஸ்தி, அஜமீடன், ருக்ஷன், சம்வரணன், குரு என்னும் கொடிவழியினன் இவ்வரசன். குருகுலத்தவனாகிய இவன் புகழ் வெல்க! ஜஹ்னு, சுரதன், விடூரதன், சார்வபௌமன், ஜயத்சேனன், ரவ்யயன், பாவுகன், சக்ரோத்ததன், தேவாதிதி, ருக்ஷன், பீமன், பிரதீபன், சந்தனு, விசித்திரவீரியன் என்னும் குலவரிசை சிறப்புறுக! திருதராஷ்டிரனின் மைந்தனாகிய இவ்வரசனால் இவ்வேள்விச்சாலை காக்கப்படுவதாக” என்று அதர்வ வைதிகரான மௌத்கல்ய குலத்து தேவதத்தர் வாழ்த்த அவையினர் “வாழ்க! வாழ்க!” என ஒலித்தனர்.

காசியப கிருசர் எழுந்து கைகூப்பி “அஸ்தினபுரியின் அரசரின் காவல்துணைவராக அங்கநாட்டரசர் விருஷசேனரை அமரச்செய்ய இந்த அவை ஒப்புதல் அளிக்கவேண்டும்” என்றார். அவையில் அமைதி செறிந்திருந்தது. “அவரே தன் முதன்மைத் தோழர் என்று அஸ்தினபுரியின் அரசர் அறிவித்திருக்கிறார். இங்கு அவையமர்ந்துள்ள அரசர்கள் அனைவரும் அதை

ஏற்றுக்கொண்டவர்களே. மாற்றுரைப்பவர்கள் தங்கள் சொல்லை அவைமுன் வைக்கலாம்” என்று காசியப கிருசர் சொன்னார். ஷத்ரியர் அவையிலிருந்து சொல்லெழவில்லை.

“அந்தணர்களிடமிருந்து மாற்றுச்சொல் இருந்தால் எதிர்நோக்குகிறோம்” என்றார் காசியப கிருசர். அந்தணர்கள் ஒருவரை ஒருவர் நோக்கிக்கொண்டனர். “இந்த வேள்வியில் பங்குகொள்ளும் வைதிகர்களின் உள்ளம் பிறிதென்றால் அவர்கள் அறிவிக்கட்டும்” என்றார் காசியப கிருசர். சற்றுநேரம் காத்தபின் “முனிவர்களில் மாற்றுரைப்போர் இருப்பின் சொல்லுக்காக காக்கிறோம்” என்றார். அனைவரும் முனிவர்களின் முகங்களை மாறிமாறி நோக்கிக்கொண்டிருந்தனர். காசியப கிருசர் அந்தப் பொழுதை நீட்ட விரும்பாமல் “ஆகவே…” என தொடங்க வைதிகரான குண்டஜடரர் தன் பெருத்த உடலை உந்தியபடி எழுந்து “எங்களுக்கு மாற்றுச்சொல் என ஏதுமில்லை, வைதிகரே. முறைமைகளை மட்டுமே எதிர்பார்க்கிறோம்” என்றார்.

“முறைமைகள் கடைபிடிக்கப்படும், அந்தணரே” என்றார் காசியப கிருசர். குண்டஜடரர் “அவ்வண்ணமென்றால் முதலில் அஸ்தினபுரியின் அரசருக்கு உரைக்கப்பட்டதுபோல அங்கருக்கும் குலமுறை கிளத்துசொல் எழுக!” என்றபின் அமர்ந்தார். அரசரவையில் எழுந்த ஏளனச் சிரிப்போசை ஊமைமுழக்கமாக பந்தலை நிறைத்தது.

காசியப கிருசர் “அவர் குலமுறைப்படி அரசை அடைந்தவரல்ல என்பதனால் அது தேவையில்லை” என்றார். “ஆம், ஆனால் வேள்வியில் அமர்கையில் அவருடைய மூதாதையருக்கான வேதச்சொல்லை அவர் உரைத்தாகவேண்டும். அவர்களுக்கு அவர் அளிக்கும் அவி எங்கு சென்றுசேருமென இந்த அவை

அறிந்தாகவேண்டும்” என்றார் குண்டஜடரர். “அதை நாம் அறிந்தாகவேண்டுமென நூல்கள் உரைக்கின்றனவா?” என்று காசியப கிருசர் கேட்க “ஆம், வழக்கமாக அது கோரப்படுவதில்லை. ஆனால் அந்த அவி விண்வாழ் அரக்கருக்கோ அசுரருக்கோ அன்றி இருட்தெய்வங்களுக்கோ செல்கிறதா என உறுதிசெய்தாகவேண்டும். நம் வேள்வியால் எதிரிகள் பெருகலாகாது. ஏனென்றால் இது புருஷமேதம்” என்றார் குண்டர்.

காசியப கிருசர் “இது முறையல்ல…” என்று தொடங்க கௌதம குலத்தவரான சிரகாரி “ஆம், அவர் சொல்வது முறையே. வேள்வியவையில் அமர்பவர் எவர் என நாம் அறிந்திருக்கவேண்டும்” என்றார். “முனிவரே, வேள்விக்கான தகுதி பிறப்பால் வருவதா என்ன? நாற்குலமும் வேள்விசெய்ய உரிமைகொண்டவை என்றல்லவா தொல்நூல்கள் சொல்கின்றன?” என்றார் காசியப கிருசர். கண்வமரபினரான திரிசோகர் “ஆம், ஆனால் நாங்கள் இங்கு கோருவது அவருடைய மூதாதையர் எவர் என்பதை நாங்கள் அறியவேண்டும் என்றே” என்றார். “அவர் சூதரான அதிரதனின் மைந்தர். தந்தையென அவரை ஏற்றுக்கொண்டவர். அதிரதரின் மூதாதையர் நிரையை அவர் கொள்ளலாம்” என்றார் காசியப கிருசர்.

“அவ்வாறென்றால் அவர் இந்த வேள்வியவையில் அரசர் என அமரவியலாது” என்று குண்டஜடரர் சொன்னார். “இது ஷத்ரியர் அமரவேண்டிய பீடம் என்றே நூல்கள் சொல்கின்றன. பிறப்பால் ஷத்ரியர் அல்லாதவர் உரிய வேள்விச்சடங்குகள் வழியாக தன்னை ஷத்ரியரென ஆக்கிக்கொள்ளவேண்டும். அவர் அச்சடங்குகளை செய்திருக்கிறாரா?” காசியப கிருசர் திகைத்து

துரியோதனனை நோக்கிவிட்டு கர்ணனை நோக்க அவன் எழுந்து "இல்லை, அச்சடங்குகளைச் செய்ய நான் என் தந்தையையும் தாயையும் துறந்து பசுவின் கருக்குழியில் மீண்டும் பிறந்தெழவேண்டும் என்று எனக்கு சொல்லப்பட்டது. ஒருபோதும் அவர்களைத் துறக்க என்னால் இயலாது என்றேன்" என்றான். வசிட்ட மரபினரான குந்ததந்தர் "அவ்வாறெனில் நீங்கள் ஷத்ரியர் அல்ல, நீங்கள் இந்த அவையில் காவலராக அமர இயலாது" என்றார்.

கர்ணன் "இந்த வேள்விக்கான பொருளனைத்தும் என் படைவல்லமையால் ஈட்டப்பட்டவை. இந்த வேள்வி வரவிருக்கும் போரின்பொருட்டு நிகழ்த்தப்படுவது. அப்போரில் வெல்ல என் வில்லின்றி இயலாது. அந்தணரே, நான் வினவ விரும்புவது இதுவே. வேதம் காக்க எழும் உரிமை எனக்கில்லையா?" என்றான். "நான்கு குலங்களுக்கும் அவ்வுரிமையும் கடமையும் உண்டு. அங்கரே, சூதராக நின்றே நீங்கள் அக்கடமையை செய்யமுடியும்" என்றார் குண்டஜடரர்.

"அவ்வாறென்றால் நான் வரவிருக்கும் போரில் படைக்கலம் ஏந்தலாகாதா? சம்மட்டி ஏந்தி தேர்ப்பாகனாகத்தான் அமர்ந்திருக்கவேண்டுமா?" என்று கர்ணன் கேட்டான். "இந்த அவை சொல்லட்டும். நான் போர்முகப்பில் நிற்கலாமா? நான் சூதன் மட்டுமே என இங்கு அறிவிக்கப்படுமென்றால் வில்லேந்தும் உரிமையை இழந்தவன் ஆவேன்." காசியப கிருசர் "ஆம் அரசர்களே, இங்கு அங்கரை அஸ்தினபுரியின் அரசர் தன் காவல்துணைவராக அமரச்செய்ததே வேள்விநிலையின் ஏற்பு அவ்வுரிமையை அவருக்கு அளிக்கும் என்பதனால்தான்."

அவை திகைத்ததுபோல அமர்ந்திருந்தது. மீசையை மெல்ல நீவியபடி கர்ணன் அவர்கள் எவரையும் நோக்காத விழிகளுடன் நின்றான். துரியோதனன் அங்கில்லாதவன் போலிருந்தான். குந்ததந்தர் கண்களை மூடி சிலகணங்கள் அமர்ந்திருந்தபின் விழித்துக்கொண்டு "நாங்கள் அரசுசூழ்தலை எண்ண முடியாது. எங்கள் பணி பிழையின்றி வேள்விநிகழ்த்தி முழுமைசெய்வது மட்டுமே. எது தொல்வேதநெறியோ அதை மட்டுமே இந்த அவையில் நாங்கள் சொல்லமுடியும். அங்கர் வேள்வித்துணைவராக அமர இயலாது" என்றார். காசியப கிருசர் "ஆனால்..." என தொடங்க "அவர் இல்லாமல் இப்போர் தோற்குமென்றால், வேதம் அழியுமென்றால் அது தெய்வங்களின் ஆணை என்றே பொருள். வேதத்தை மானுடர் காப்பதில்லை, மானுடரையே வேதம் காக்கிறது" என்றார்.

"மானுடர் வேதக்காவலர்களான தெய்வங்களின் கைகளில் படைக்கலங்களே. தெய்வங்களுக்கு அங்கரோ துரியோதனரோ பீஷ்மரோ தேவையில்லை. வேதங்கள் விழைந்தால் அவை எளிய வீரர்களையே தங்கள் கைகளில் ஏந்திக்கொள்ளும்" என்று சிரகாரி சொன்னார். "ஆம், ஆம்" என்றனர் பிற முனிவர்கள். கண்வமரபினரான திரிசோகர் உரத்த குரலில் "மறுசொல் இல்லை. இதுவே எங்கள் முடிவு" என்றார். அந்தணர் அவையிலிருந்த முதிய அந்தணர் எழுந்து "ஆம், அதையே நாங்களும் கூறுகிறோம்" என்றார். ஷத்ரியர்களின் அவை முழக்கமிட்டு அதை வழிமொழிந்தது.

# குருதிச்சாரல் - 74

**பகுதி பத்து : பெருங்கொடை – 13**

கர்ணன் இளைய யாதவரையே நோக்கிக்கொண்டிருப்பதை சுப்ரியை கண்டாள். அவை அவருடைய சொல்லுக்காகவே முதற்கணம் முதல் காத்திருந்தது எனத் தெரிந்தது. காசியப கிருசர் “அவையின் ஆணை அவ்வாறென்றால் அங்கநாட்டரசர் வெளியேறுவார்” என்று சொல்லி காத்திருந்தார். சுப்ரியை துரியோதனனை நோக்கினாள். மாறா கல்தன்மையுடன் அவன் அமர்ந்திருந்தான். காசியப கிருசர் “அவை முடிவை வேள்வித்தலைவர் அறிவிக்கவேண்டும்” என்றார். வேள்வித்தலைவரான அமூர்த்தர் “நெறிகளின்படியும் இந்த அவைகொண்ட முடிவின்படியும் அங்கநாட்டரசர் சூதர் என்றே கொள்ளப்படவேண்டும். வேள்விக்காவலராக அமர சூதருக்கு உரிமையில்லை” என்றார்.

கர்ணன் “நன்று! வேதம் தன் வழியை தானே தேர்க!” என்று சொல்லி தொழுது திரும்பும்போது இளைய யாதவர் எழுந்தார். கர்ணன் அவரை நோக்கியபடி தயங்கி நிற்க “காசியப கிருசரே, நான் சில சொற்கள் உரைக்கலாமா?” என்றார் இளைய யாதவர். “ஆம், தங்கள் சொற்களுக்காக காத்திருக்கிறோம்” என்றார் காசியப கிருசர். இளைய யாதவர் வேள்வித்தலைவரையும் அவையையும் நோக்கி கைகூப்பி “வேள்வித்தலைவருக்கும், முதன்மை வைதிகருக்கும் என் பணிதல். அவையமர்ந்துள்ள முனிவர்களுக்கும் வேதியருக்கும் என் மெய்வழியின் வணக்கம். அரசர்களுக்கு என் வாழ்த்துக்கள். என் ஆசிரிய நிரையை இத்தருணத்தில் உளம்கொள்கிறேன். அவர்களின் சொல் அழியாது வாழ்க!” என்றார்.

“இந்த அவையில் சாந்தீபனி குருநிலையின் ஆசிரியன் என்ற நிலையில் நான் உசாவ விரும்பும் வினா ஒன்றே. நான்கு

வேதங்களும், சிக்ஷா, கல்பம், சந்தஸ், வியாகரணம், நிருக்தம், ஜியோதிஷம் என்னும் ஆறு வேதக்கூறுகளும், கந்தர்வவேதம், தனுர்வேதம், ஸ்தாபத்யவேதம், ஆயுர்வேதம் என்னும் நான்கு துணைவேதங்களும் நிகரா? வேதங்களுக்குள் வேறுபாடுண்டா? அனைத்தும் ஒன்றே எனில் வில்வேதம் தேர்ந்த வீரனுக்கும் மூவேதம் கற்றறிந்த வைதிகனுக்கும் ஏன் அவையில் வேறுபாடு காட்டப்படுகிறது? இசை தேர்ந்தோனும் நிமித்த நூல் துறை போகியவரும் இலக்கணம் அறிந்தவரும் சொல்நூல் நவின்றவரும் நால்வேதம் உரைத்தவர்களுக்கு கீழே என வேள்வி அவைகளில் ஏன் அமைக்கப்படுகிறார்கள்?” என்றார்.

வேள்வித்தலைவர் அமூர்த்தர் புருவங்கள் சுருங்க இளைய யாதவரை பார்த்தார். அந்த வினாவிலிருந்து இளைய யாதவர் எங்கு செல்லப்போகிறார் என்பதை அவரால் உய்த்தறிய இயலவில்லை எனத் தெரிந்தது. அவர் விழி சரித்து நோக்க அவர் அருகே அமர்ந்திருந்த முதன்மை மாணவரும் வேள்விச்சாலைப் பொறுப்பாளருமான உக்ரர் “சாந்தீபனியின் ஆசிரியரே, மிக எளிய இவ்வினாவிற்கு முன்னரே யாககல்பம் எனும் நூலில் அழகிய ஒப்புமையினூடாக கௌதம முனிவர் மறுமொழி பகன்றிருக்கிறார். உடல் மகிழ நீராடும் வெந்நீரிலும், அடுமனையில் வெந்தமையும் உணவிலும் அனல் உறைந்திருக்கிறது. கொல்லனின் உலையில் ஒளிகொண்டு நெகிழ்ந்து இரும்பு அனலென்றாகிறது. விறகோ தன்னை எரித்து கனல் என உருக்கொள்கிறது. ஆயினும் பொன்னொளியுடன் எழுந்தாடும் தழல் ஒன்றே தூயது. வணங்கத்தக்கது. அனைத்திலும் குடிகொள்ளும் அனலை வணங்கும் வேதியர் அவியளிப்பது வேள்விக்குளத்தில் எழும் அனலுக்கு மட்டுமே” என்றார்.

“நன்று! நானும் அந்நூலை பயின்றுள்ளேன். அதையே தாங்களும் கூறுகிறீர்களா என்பதை இவ்வவையில் உறுதி செய்ய விரும்பினேன்” என்றார் இளைய யாதவர். “அதிலிருந்தெழும் அடுத்த வினா இது. அனலென நின்றிருப்பது எது? ஒளியும் வெம்மையும் அதில் நாமறியும் சிறப்பியல்புகள் மட்டுமே. அவையோரே, எவருமே அறியவில்லையெனினும் அனலை அனலென்று ஆக்குவது எது? அதுவே மரம் எரிகொள்ளும்போதும், இரும்பு பழுத்துருகுகையிலும், அன்னம் அமுதாகுகையிலும், குளிர்நீர் இன்னீர் ஆகுகையிலும் நிகழ்கிறது. அவையனைத்தும் கொள்ளும் அனலின் அனல்மை என்ன?” என்றார்.

அவர் எங்கு சென்றுகொண்டிருக்கிறார் என்பதை வைதிகர் எவரும் உணர்ந்ததுபோல தெரியவில்லை. அவை வேதச்சொல்லுசாவல்களில் தொடக்கநிலையினர் பேசுபவை என அவர்கள் அறிந்திருந்தனர். ஒருவரை ஒருவர் விழிகளால் நோக்கிக்கொண்டும் உடல்களை அறியாமல் அசைத்துக்கொண்டும் அவர்கள் அச்சொற்களை செவிகொண்டனர். அவையிலிருந்த கௌதம சிரகாரி “அதற்கும் தொல்நூல்களில் மறுமொழியுள்ளது, சாந்தீபனி ஆசிரியரே. மகாகௌதமரின் பிருங்க சூத்திரத்தில் அனல் எந்நெறிகளின்படி அனைத்தையும் நிகழ்த்துகிறதோ அந்நெறியே அனல் என்று சொல்லப்பட்டுள்ளது” என்றார்.

“பருப்பொருளென இங்கு வெளிப்படும் ஒவ்வொன்றும் நம் புலன்களும் சித்தமும் சென்றுதொடா பெருவெளியில் தங்களுக்குரிய தனிஅறத்தை கொண்டுள்ளன. இங்கு இவ்வாறும் பிறிதெங்கோ பிறவாறும் அவ்வண்ணம் பலநூறாயிரம் கோடி வகைகளிலும் அனல் தன்னை

வெளிப்படுத்த இயலும். அறிக, அந்நெறியே அனலெனப்படும்!” என்றார் கௌதம சிரகாரி. “மாறாத் தன்னியல்பின் ஒரு பகுதியையே பொருள் தன் சிறப்பியல்பென்றும் காட்டுகிறது. அவையிரண்டும் வேறல்ல என்று கௌதமம் உரைக்கிறது. குணாகுணிபேதபங்கம் என அந்த முழுதறிதலை கௌதம மரபு குறிப்பிடுகிறது என்பது தாங்கள் அறியாதது அல்ல.”

இளைய யாதவர் ஓங்கிய குரலில் “அவ்வண்ணமெனில், கூறுக! வேதமெனும் அனலின் நெறியென்ன?” என்றார். அவையில் எழுந்த உடலசைவு இளைய யாதவர் செல்லுமிடத்தை வைதிகர் உணர்ந்துவிட்டதை காட்டியது. கௌதமர் “வேதமுடிபினரே, ஒரு பொருளின் இயல்பைக் குறிக்கும் சொல்லே அவ்வியல்புக்கும் நிகரீடு என நிற்கும் என்பதே அளவைநெறியினரின் நிலைபாடு. சொல்தொட்டு அவ்வியல்பை அறிதல், அவ்வியல்பே அதன் நெறியென்று உணர்தல், அந்நெறியே அது என்று தெளிதல், அதுவே அனைத்துமென்றாதல் அளவைநூலோரின் வழி. கடுவெளி மழையெனக் கனிந்து மண்மேல் இறங்குவதுபோல பிரம்மம் சொல்லென்றாகியது. சொல்லே அது. அதை குணசப்தார்த்தபரீக்ஷை என்று கௌதமம் வகுக்கிறது. ஒலியை வணங்குக, ஒலியே மெய்மை என்றாகும்” என்றார்.

“அந்த மெய்மையை கொண்டுள்ள வேதமுடிபினர் ஆயிரம் பல்லாயிரம் மறுப்புகளினூடாக மட்டுமே குறிப்பிடுகிறீர்கள். அளவைநோக்கினனான நான் இச்சூழலில் இந்த மொழியில் இக்காலஇடத்தில் அதை முன்னோர் சொன்ன பிரம்மம் எனும் சொல்லால் சுட்டுவேன். வேதமெனும் அனலின் அனல்மை என்பது பிரம்மமே” என்றார் வசிட்ட குந்ததந்தர். இளைய யாதவர் “நான் மேற்சென்று உசாவ எண்ணுகிறேன், அந்தண

முனிவரே. அனைத்திலும் உறைவது அனலே என்றால் அனல்களுக்குள் வேறுபாடுண்டா? எதனால் வேதங்களுக்குள் வேறுபாடு அமைகிறது?” என்றார்.

கௌதம சிரகாரி “ஆம், அனலுக்குள்ளும் வேறுபாடுகள் உண்டு. எங்கு எதையுண்டு எழுகிறது என்பதிலிருந்து அது அமைகிறது. அதர்வம் அழுக்கிலும் ஊனிலும் எரியும் தழல். யஜூர் விறகிலெரிவது. சாமம் அன்னத்தில் எரிவது. ரிக்வேதமோ தூய நெய்யில் எரிந்து எழுவது. பசுநெய் அனல்கொண்ட பின்னர் நெய்யும் எஞ்சுவதில்லை. நீலநிற பீடத்தில் நின்றிருக்கும் வெறுமையின் மேல் தழல் எழுந்து ஆடக் காண்கிறோம். அனலுடன் அது உண்டவற்றில் எரிந்து அனலென்றாகாது எஞ்சியவையும் வெளிப்படுகின்றன. புகையென மணமென. உண்ட அனைத்தும் முற்றிலும் அனலென்றான தழலே ரிக் என்க!” என்றார். “அனலின் தூய்மை அதன் தனிமையால் அளக்கப்படும்.”

இளைய யாதவர் தலையசைத்து “வேதத்தின் தூய்மை எதனால் ஆகிறது என்று எனக்கும் இந்த அவைக்கும் உரைக்கவேண்டும்” என்றார். “சொல்லின் தூய்மை அச்சொல் சுட்டுபொருள் பிறிதொன்றிலாதாகும்போது எழுகிறது. சாந்தீபனியின் ஆசிரியரே, வேதம் அதன் மெய்மையாலேயே விசையும் எழிலும் கொள்கிறது. பிரம்மத்தை கூறும்போது அது பிரம்மம் என்றே ஆகிறது.” அவைநோக்கி திரும்பி வணங்கி “நற்சொற்கள், கௌதமரே. நான் கூற வருவது அனைத்தையும் தங்கள் சொல்லிலிருந்தே இந்த அவை அறியக்கடவதாக!” என்று இளைய யாதவர் சொன்னார். அவையினர் அந்த சொல்லுசாவல் மேல் ஆர்வமற்றவர்கள்போல

வெற்றுவிழிகளுடன் அமர்ந்திருந்தனர். அவர்கள் பிறிதொன்றை நோக்கி அது செல்வதற்காக காத்திருந்தனர்.

“அவையினரே, வேதங்கள், வேதக்கூறுகள், துணைவேதங்கள் அனைத்தும் வேதமெய்மை என்றே அறியப்படுகின்றன. ஒவ்வொன்றிலும் வேதம் என இங்கு தன்னை வெளிப்படுத்தியுள்ள பிரம்மத்தின் இருப்புள்ளது. சொல்லில் என வில்லிலும் யாழிலும் கல்லிலும் கலுவத்திலும் அது வெளிப்படுகிறது. மலரும் கனியும் சூடுதலே வேர்முதல் இலைவரை செடியின் இலக்கு. பிரம்மத்தை வேட்பதனால்தான் அதர்வம் வேதமாகிறது. பிரம்மத்தை நிகழ்த்துவதனால்தான் யஜூர் வேதமென்றாகிறது. பிரம்மத்தை இசைப்பதனால்தான் சாமம். பிரம்மத்தைச் சுட்டுவதனால் ரிக் முதல்வேதம்” என்றார் இளைய யாதவர்.

“விழைவே அதர்வம். அளித்தல் யஜூர். உணர்தல் சாமம். அதுவாதல் ரிக் என அறிக!” என இளைய யாதவர் தொடர்ந்தார். “இங்குள்ளவை அனைத்து பிரம்மமே என்று உணர்ந்து இவற்றை விழைந்து எழுவதனால் அதர்வம் பிரம்மஜிஞ்ஞாசை எனப்படுகிறது. இங்குள்ள அனைத்தும் அதுவே என அறிந்து அனைத்தையும் அதற்களிக்கும் சடங்குகளினூடாக யஜூர் ஒருபடி மேம்பட்டதாகிறது. இங்குள்ள ஒவ்வொன்றுக்கும் ஓசையே சாறு என உணர்ந்து அதை கைக்கொள்வதனால் சாமம் அதைவிட மேலானதாகிறது. இங்குள்ள ஒவ்வொன்றாகக் கூறி, மறுத்து மறுத்துச் சென்று, அதுவொன்றே என உணர்ந்து, அதுவே ஆகி நின்றிருப்பதனால் ரிக் வேதங்களில் உச்சமாகிறது.”

“நன்று சொன்னீர், யாதவரே” என்றார் வசிஷ்ட மரபினரான ஊர்ஜர். தலைவணங்கி “உங்கள் பெருமரபால்

வாழ்த்தப்பட்டேன், ஆசிரியரே” என்ற இளைய யாதவர் “அவையினரே, ரிக்வேதமே வேதங்களின் மகுடம். அதன் உச்சம் என எழுந்து வருவது அதன் இறுதிப்பகுதி. அவ்விறுதியின் கூர் ஓமெனும் சொல்” என தொடர்ந்தார். “வேதமல்ல, வேதமுடிவே மெய்மை என்று உணர்க! வேதங்களனைத்தும் வேதமுடிவு நோக்கி குவியவேண்டியவை. வேதத்திற்கு வேதமுடிவே மையம். வேதமரத்தின் கனி அது. வேதமெனும் ஆலயத்தின் இறை” என இளைய யாதவர் தொடர்ந்தார்.

“நாம் அறிந்திருப்போம் இப்புவியின் அனைத்து அறிதல்களும் பயனுள்ளவை என. எனவே அனைத்து அறிவும் வேதமே என்று சொல்லப்படுகின்றது. ஆனால் ஓர் அறிதல் மேம்பட்ட அறிதலுடன் முரண்படும் என்றால் மேம்பட்டதே ஏற்கப்படவேண்டும். அவையோரே, துணைவேதங்கள் ஒன்றுடன் ஒன்று முரண்படுமென்றால் எது வேதத்திற்கு அணுக்கமானதோ அது ஏற்கப்படவேண்டும். வேதங்கள் ஒன்றுடன் ஒன்று முரண்படுமென்றால் எது ரிக்வேதத்திற்கு அணுக்கமானதோ அது ஏற்கப்படவேண்டும். கூறுக, ரிக்வேத பாடல்கள் ஒன்றுடன் ஒன்று முரண்படுமென்றால் எது ஏற்கப்படவேண்டும்?”

அவையை நோக்கியபின் கைகளைத் தூக்கி உரத்த குரலில் “எவருக்கும் மாற்றுச் சொல்லிருக்க இயலாது. எது ரிக்வேத முடிபோ அது ஏற்கப்படவேண்டும்” என்றார் இளைய யாதவர். “வேதங்கள் அனைத்திலும் வெளிப்படுவது வேதமுடிபு கண்டடைந்த மெய்மை மட்டுமே. இதை இந்த அவையில் எவர் மறுக்கிறார்கள் என்று அறிய விழைகிறேன்.” கௌதம சிரகாரி “இந்தச் சொல்லாடலை எங்கு இட்டுச் செல்கிறீர்கள் என்று இப்போது மேலும் தெளிவடைந்தேன், இளைய யாதவரே.

இவ்வினாக்கள் அனைத்தும் முன்னோர்களால் மீண்டும் மீண்டும் அவைகளில் பேசப்பட்டவை. வேதமுடிபு என்பது மெய்வேதம் உசாவி கண்டடைந்து மறுத்து மேலும் கண்டடைந்து முனிவர் சென்றடைந்தது என்பதை வேதம் அறிந்தோன் மறுக்க மாட்டான். வேதத்தினூடாக சென்றடையும் இடமும் அதுவே என்பதிலும் ஐயமில்லை” என்றார்.

“ஆயினும் ஒன்றுண்டு. இமயத்தின் உச்சியில் ஆமுகம் எனும் ஊற்றில் இருந்து பெருகி வரும் கங்கையே தூயது. விண்ணிற்கு அருகிலுள்ளது. தெய்வங்கள் அங்கிருந்தே அதை கொள்ள முடியும். மாமுனிவர் இங்கிருந்து மலையேறிச் சென்று அதில் நீராடி தங்களை தூய்மை செய்து கொள்ளவும் இயலும். ஆயினும் விரிசடை அண்ணல் அது நிலம் நோக்கி சரிய வேண்டுமென்று விழைந்தார். செல்க பெருகுக என ஆணையிட்டார், சரிந்திறங்கி நிகர்நிலத்திற்கு வந்தது. நூறு நூறு ஓடைகளை இழுத்து தன்னுள் சேர்த்துக்கொண்டது. பல்லாயிரம் கிளைகளாகப் பரவி பாரதவர்ஷமெங்கும் விரிந்து இந்நிலத்தின் குருதி ஓட்டமாக மாறியது. உங்கள் இல்லத்தில் வந்தணையும் வண்ணம் நீங்கள் அருந்தும் குடிநீர் கங்கையே. உங்கள் அழுக்குகளுடன் உங்கள் மூதாதையர் நினைவுகளை கழுவி விடும் நீரும் அதுவே.”

“யாதவரே, தூய வேதமுடிபை முன்னிறுத்தி வேதமெனும் பெருக்கை வகுத்துவிட முடியாது. ஒவ்வொரு படித்துறையிலும் அது என்ன, ஒவ்வொரு வயலிலும் அதன் பயன் எது என்பதைக்கொண்டே முடிவு செய்ய வேண்டும். ஆற்றில் மாசுசேர்க்கலாகாது. ஆனால் வயலில் மாசு உரமென்றாகும். கடல்சேரும்தோறும் கங்கை மாசுடையது, மலைநோக்கும்தோறும் தூய்மைகொள்கிறது. ஆனால்

பனிமலைத் தவக்கன்னியை அல்ல கைவிரித்து முலைபெருகிய அன்னையையே மக்கள் தெய்வமெனத் தொழுகிறார்கள்” என்று வசிஷ்ட குந்ததந்தர் தொடர்ந்தார்.

“வேதமுடிபே மெய்மையென்றால் அது வில்லில் எழ வேண்டியதில்லை. மருத்துவர் கலங்களிலும் இசைவாணர் கருவிகளிலும் நிமித்திகர் களங்களிலும் நிகழவேண்டுமென்பதில்லை. எங்களுக்கும் உங்களுக்கும் பெரும் வேறுபாடுள்ளது. நீங்கள் கங்கையை மீண்டும் மலையூற்றுக்கு கொண்டுசெல்ல முயல்பவர்கள்.” அந்தணர் அவையிலிருந்து “ஆம், ஆம்” என ஓசைகள் எழுந்தன. அதிலிருந்த மறுப்பின் விசையை சுப்ரியை திரும்பி நோக்கினாள். பல விழிகளில் வஞ்சத்தையே கண்டாள்.

“நாங்கள் உங்களைப்போல் அருந்தவத்தோருக்காகவோ அறிவில் அமர்ந்தோருக்காகவோ அல்ல வேதமோதுவது. இப்புவியும் உயிர்க்குலமும் மானுடரும் நலம் கொள்ளும்பொருட்டே” என்றார் கௌதம ஏகதர். “எளிய மானுடர் என்று நின்றே நாங்கள் வேதமுணர்கிறோம். புலரி கண்டதும் சென்று கங்கையிலிறங்கி நீரள்ளி ஒளிநோக்கி விடுத்து மூதாதையரை எண்ணி நீராடி அனலோம்பி தெய்வங்களை வாழ்த்துபவர்கள். அன்னமென்றும் நீரென்றும் கங்கையின் மடியில் வாழ்பவர்கள். வேள்விகள் அனைத்தும் வேள்வியின்றி வேதத்தை உணரமுடியாதவர்களுக்காக அமைந்தவையே என்றுணர்க! யாதவரே, நாடும், அரசும், குலமும், குடியும்கூட அவர்களுக்காகவே. ஆமுகத்தில் அமர்பவர்களுக்கு அவையும் தேவையில்லை.”

இளைய யாதவர் “தங்கள் கூற்று தெளிவு அளிக்கிறது, அந்தணரே” என்றார். “கங்கை நிலத்திறங்கும்போது அங்கு

நீர்விழைவோனும் நிலம்உழுவோனும் சென்று நின்றிருக்கவில்லை. அதன் விசை அவர்களை அழித்திருக்கும். மண்ணில் எதையும் விழையாத யோகியின் வறண்ட விரிசடையே அதை ஏந்தியது. அது உண்டதுபோக எஞ்சியதே உலகுக்கு அளிக்கப்பட்ட கங்கை. கட்டற்ற கங்கை அழிவென்று அறிக! கட்டுறுத்தும் ஆற்றல்கொண்ட முனிவர் முறை சொல்க என்றே இந்த அவையில் கோருகிறேன்" என்றார்.

"நீரில் எண்வகைக் கழிவுகள், ஆறுவகை செயல்கள் முன்னோரால் தடை செய்யப்பட்டுள்ளன. அதை எவ்வகையிலும் பயன்படுத்தலாம் என மூதாதையர் ஏன் வகுக்கவில்லை? ஏனென்றால் நீர் எங்கு எவ்வுருக்கொள்ளினும் அது கங்கையென்றே இருக்கவேண்டும். முற்றிலும் பிறிதுணர்த்தி நின்றால் கங்கையென்று மண்ணுக்கு தெய்வங்கள் அளித்த ஒன்று மானுடரால் இழக்கப்படும். இசைவாணர் யாழிலோ நிமித்திகர் பன்னிருகளத்திலோ மருத்துவர் மூலிகைக் கலுவத்திலோ வேதத்தை உணர்ந்தாக வேண்டும். வேதமென்பது அதன் மெய்மையே. எனவேதான் வேதமுடிவு எழாத எச்செயலும் வேதத்தால் ஏற்கப்பட்டதல்ல. ஆற்றுபவனை அனைத்திலிருந்தும் விடுவிக்கும் செயலே யோகம். யோகமென இயற்றப்படும் எதுவும் வேள்வியே" என்றார் இளைய யாதவர்.

கௌதம சிரகாரி "ஆம், ஆகவேதான் வேதம் எங்கும் ஒவ்வொரு கணமும் நிகழ்ந்துகொண்டிருக்கிறது எனப்படுகிறது" என்றார். "அவ்வண்ணமென்றால் வேள்வி என ஒன்று எதற்கு?" என்றார் இளைய யாதவர். "எங்குமுள்ளது தெய்வம் என்பதனால் எக்கல்லும் தெய்வச்சிலையே. எனினும் கல் ஒன்றைச் செதுக்கி கருவறையில் பீடத்தில் அமர்த்துகிறோம்" என்றார்

கௌதம சிரகாரி. இளைய யாதவர் “அவ்வண்ணமெனில் கூறுக, ஒரு செயலை வேள்வி என்றாக்குவது எது? அச்செயலின் நெறிகளா? அச்செயலில் திரளும் உள்ளமா? கூடும் உணர்வா? அன்றி, அச்செயலில் திரளும் மெய்மையா?” என்றார்.

கௌதமர் “அப்பிரிவினை முற்றிலும் அறிவுத்தள உசாவலுக்கானது. முழுமையாக இயற்றப்படும் செயல் தன்னளவிலேயே மெய்மையை உள்ளடக்கியது. மெய்மையே செயலுக்கு ஒழுங்கையும் அழகையும் அளிக்கிறது. அதன் இலக்கை எய்தச் செய்கிறது. இலக்கும் அழகும் ஒழுங்கும் இல்லாத செயல் எவராலும் தொடர்ந்து பயிலப்பட இயலாது. ஆகவே தொடர்ந்து பயிலப்படும் எதுவும் அவை மூன்றையும் அடைந்து மெய்மையென்றாகி நிற்கும் தகைமைகொண்டது. அது எச்செயலாயினும். ஊனறுத்து விற்று மெய்மையை அடைந்தவரின் கதையை நாம் வேதத்தில் காண்கிறோம்” என்றார்.

“உளம் படியாமல் வெறும் கைகளால் ஆற்றப்படும் செயலில் மெய்மை எழுமா?” என்றார் இளைய யாதவர். “உளமென்பது உடலுக்குள் தனித்து இருப்பதில்லை. கையில் நிகழ்வதும் உள்ளமே. நாவிலும் கண்ணிலும் வெளிப்படுவதும் அதுவே” என்றார் கௌதம சிரகாரி. “ஒருவேளை செயல் ஒருவனை மெய்மை நோக்கி கொண்டுசெல்லவில்லை என்றால் அதை செயல்யோகமென்று உரைக்கலாகுமா?” என்றார் இளைய யாதவர். “அவ்வாறு ஒன்று நிகழ வாய்ப்பே இல்லை. எச்செயலுக்கும் அதற்குரிய தெய்வங்கள் உண்டு. செயலை ஆள்பவை, அதன் முழுமையில் வெளிப்படுபவை. அவை அச்செயலுக்கான பயன்களை அளிக்கும் என்பதே அளவைநெறியின் முடிபு” என்றார் கௌதமர்.

இளைய யாதவர் “அந்தணரே, ஆசிரியர்களே, ஒரு செயலின் முழுமையை எவ்வண்ணம் வகுப்பது? அதன் இலக்காலா, வெற்றியாலா? எண்ணத்தாலா செயலாலா?” என்றார். “யாதவரே, செயலின் விளைவு எதிர்காலத்தில், முடிவின்மையில் உள்ளது. அதை எண்ணி எவரும் செயலாற்ற இயலாது. கொள்ளும் இலக்கு என்பதுகூட அறியமுடியாமையிலேயே அமைந்துள்ளது. நாம் அறிவது நம் கையும் நெஞ்சும் ஆற்றும் செயலை மட்டுமே. செயலை நாம் உருவாக்குகிறோம், செயல் நம்மையும் உருவாக்குகிறது. புரவியை நாம் பழக்குகிறோம், புரவி நம்மை இட்டுச்செல்கிறது. நிறைசெயல் ஆற்றும் வழி ஒன்றே. முழுமைநாடி, முழுதுளம்கொடுத்து, பிறழ்வின்றி அச்செயலை ஆற்றுவது. ஒவ்வொரு கணமும் அச்செயலில் இருந்து கற்றுக்கொள்வது. அச்செயலுக்கான தெய்வங்களை மகிழ்வித்து எழுப்புவதே நம் கடன். நம்மை இட்டுச்செல்லவேண்டியவை அத்தெய்வங்களே” என்றார் கௌதம ஏகதர்.

“அச்செயலின் விளைவெனத் திரண்டு நம்முள் எழும் நுண்ணறிவையா, அச்செயலென வெளியே திகழும் நெறிகளையா எவற்றை நாம் உளம்கொள்ளவேண்டும்? அந்நுண்ணறிவுக்கு முரணாக நெறிகள் அமையுமென்றால் செய்யவேண்டியது என்ன?” என்று இளைய யாதவர் கேட்டார். “செயல் என இங்கு நிகழும் அனைத்தும் தங்களுக்குரிய தனியொழுங்கையும் உட்பொருளையும் கொண்டவை என்று அளவைநெறி சொல்கிறது” என்றார் ஏகதர். “ஒவ்வொரு செயலும் இப்புடவியெனும் பெருநெசவின் ஒரு கண்ணி. ஒவ்வொரு கணமும் ஒரு செயலும்கூட” என அவர் தொடர்ந்தார்.

“ஆகவே ஒவ்வொரு செயலையும் இப்புடவிநெசவை ஆக்கும் விசைகளே ஆள்கின்றன. அவை நம் சித்தத்தின் எல்லைகளைக் கடந்தவை. எண்ணித்தேர்ந்து அவற்றை இயற்ற எண்ணுபவன் செயலின்மையிலேயே அமைவான். நற்செயல் தேர்வதும், செயலுக்கு தன்னை அளிப்பதும், செயலினூடாக வளர்வதுமே மானுடன் செய்யக்கூடுவது. சென்றடைவது செயல்படுபவன் அல்ல, செயலே என்றுணர்ந்தால் அவன் முழுமையை அடைகிறான்.” வசிட்ட குந்ததந்தர் “செயலின் நுண்மையெனத் திரள்வதை செயலாற்றுவோன் நம்பவியலாது, யாதவரே. பாற்கடலில் எழுந்தது அமுதும் நஞ்சும் என அறியாத அந்தணர் எவர்?” என்றார்.

கௌதம சிரகாரி “யாதவரே, வேதமுடிபினருக்கும் அளவைநெறியினருக்குமான வேறுபாடு ஒன்றே. ஏந்தும் கலம் இயல்பிலேயே தூயது என்று கொள்ளாமல் வேதமுடிபை எவரும் ஏற்கவியலாது. தன் மெய்மையை முழு மெய்மை என முற்றுணரும் நிலையையே வேதமுடிபினர் உச்சமெனக் கொள்கிறார்கள். நானேயிறை என்னும் உங்கள் ஊழ்க நுண்சொல்லில் நான் என்றும் உள்ளது என உணர்ந்தவரே அளவைநெறிக்கு வருகின்றனர்” என்றார். அவையிலிருந்த அந்தணர்கள் “ஆம்! மெய்ச்சொல்!” என்றனர். சிலர் உணர்வெழுச்சியுடன் எழுந்தனர். கிருசர் கையசைத்து அவர்களை அமரச்செய்தார். கைதொழுது கௌதம சிரகாரியிடம் பேசும்படி கோரினார்.

“வாங்கும் கலம் மாசு முற்றிலும் அகல ஒண்ணாதது என்று அறிவதே அளவைநெறியின் தொடக்கம்” என கௌதம சிரகாரி தொடர்ந்தார். “ஆணவமும் தன்னலமும் அச்சமும் குழப்பமும் சற்றேனும் கொண்டவர்களாகவே நாம் செயலில் இருந்து நம்

அறிதலை திரட்டிக்கொள்கிறோம். செயல் மாசிலா நுண்ணறிவை அளிப்பதில்லை. அந்த மாசை அகற்றுவது மேலும் மேலும் செயல்தான். அச்செயலை எய்திய நுண்ணறிவைக்கொண்டு திசை வகுத்தோமென்றால் படிந்த மாசை பெருக்குவதே விளைவென்று ஆகும். ஆகவே செயலுக்கு முற்றளிப்பதொன்றே மெய்மைக்கான வழி."

"ஆம், மெய்! வேதநெறி அதுவே. வேதம் உரைப்பது அதுவே!" என அவையினர் முழக்கமிட்டனர். சுப்ரியை அங்கு எழுந்தெழுந்து அமைந்த முகங்களை ஒவ்வொன்றாக நோக்கியபடி அமர்ந்திருந்தாள். அங்கு பேசப்படும் ஒரு சொல்லும் தன்னுள் பொருளெனத் திரளவில்லை என்று உணர்ந்தாள். அவை முன்னரே அவர்களால் பேசப்பட்டவற்றின் நீட்சி என்றும், எப்போதும் அப்பூசல் சூழலில் இருந்துகொண்டிருந்தது என்றும் தோன்றியது. அத்தனை காலம் நீடித்தது என்பதனாலேயே அது இறுதிவிடையற்ற வினா. ஆகவே அச்சொற்பூசலில் வெற்றியென்றும் தோல்வியென்றும் ஏதும் இருக்கவியலாது. எங்கு எவர் எப்போது என்பதே முடிவென்றாகிறது.

இந்த அவையில் எது வெல்லும் என அவள் எண்ணினாள். இது நாற்களமாடல். கண்ணுக்குத் தெரியும் களமும் கருக்களும் கருத்தால் அறியப்படத்தக்க வேறு சிலவற்றின் பருவடிவங்கள் மட்டுமே. வெல்வதும் வீழ்வதும் அங்கே நுண்ணுருக்கொண்டு வலுதிரட்டி முரண்பட்டு நின்றிருக்கின்றன. இதை நோக்கி அறிவதைவிட அதை உய்த்தறிவது மேலும் எளிதுபோலும். அவள் பெருமூச்சுவிட்டு பீடத்தில் சாய்ந்து அமர்ந்து விழிகளை மூடிக்கொண்டு அக்குரல்களை கேட்டாள்.

# குருதிச்சாரல் - 75

**பகுதி பத்து : பெருங்கொடை – 14**

இளைய யாதவர் மேலும் சொல்லெடுப்பதற்குள் அவையிலிருந்த மெலிந்த உருக்கொண்ட மிக இளைய வைதிகன் ஒருவன் எழுந்து உளவிசையால் உடல் விதிர்க்க, உதடுகள் துடிக்க “அவையினரே, வேதியரே” என்றான். சொல்லுக்கென எழுந்த அவன் கை காற்றில் நின்று நடுங்கியது. அவையினர் அவனை நோக்கி திரும்பினர். “அந்தணரே, அனலோம்புவதென்றால் அடுப்பூதும் குழல் சிறந்த அந்தணன், வேதமோதுவதென்றால் தவளையே முதன்மை வைதிகன் என்கிறார்கள் சார்வாகர்கள். இந்த அவையில் மூத்த வைதிகரும் முனிவரும் சொல்வது பிறிதொன்றல்ல” என்று அவன் உரத்தகுரலில் சொன்னான்.

“பன்னிரு ஆண்டுகளாக நான் வசிட்டமரபின் குருநிலையில் வேதம் பயில்கிறேன். நசுங்கிய குழலும், உயிரோய்ந்த தவளையும் என என்னை நான் ஆக்கிக்கொண்டேன். இந்த அவையில் அதை மெய்மையின் வழி என்று சொல்கிறீர்கள். சொல்லுங்கள், அந்த வழி உங்களுக்கு அளித்தது என்ன?” அந்தணர்அவை கலைவோசை எழுப்பியது. அவன் “நான் எதையும் அடையவில்லை. ஒழிந்தகலம் நான். எய்யப்படாது இறுகி நின்றிருக்கும் அம்பு. சொல்க, நான் அடைந்தது என்ன?”

“நீ எதுவாக ஆனாயோ அதை” என்று சினத்துடன் வசிட்ட குந்ததந்தர் சொன்னார். “சொல், உன் பெயர் என்ன? உன் ஆசிரியர் யார்?” அவன் “வசிட்ட குருமரபின் வைதிகர்

பிரதர்தனரின் மாணவனாகிய என் பெயர் த்வன்யன். நான் இந்த அவையிலிருக்கும் வைதிகர் அனைவரிடமும் கேட்கவிழைவது இதுவே. அறியாது சொல்லும் வேதத்தால் ஆவதென்ன? இங்குள்ள எவருடைய வாழ்க்கை சற்றேனும் மேம்பட்டுள்ளது? அருவி ஓடித் தேயும் மலைப்பாறை என அன்றாடச் செயலால் நாம் வடிவம் கொண்டிருக்கிறோம் என்பதன்றி நமக்கு அது அளித்தது என்ன?"

வசிட்ட குந்ததந்தர் திகைப்புடன் தன்னைச் சுற்றி நோக்க அவை அமைதியாக இருப்பதை கண்டார். த்வன்யன் மேலும் உரத்த குரலில் கூவியபடி அவையின் மையம் நோக்கி வந்தான். "வேதத்தைக் கண்டடைந்தவர்கள் எண்ணியது இதுவா? எனில் ஏன் வேதம் பொருள்கொண்ட சொல்லாலால் அமைந்தது? ஓதுவதற்கு மட்டுமே என்றால் வெற்றொலிகள் போதுமே? உணராச்சொல் வெற்றொலி அல்ல தோழர்களே, அது கைவிடப்பட்ட தெய்வம். நாம் வேதத்திலிருந்து இந்த வீண்செயல்களால் விலக்கப்பட்டிருக்கிறோம். இதைக் கடக்காமல் நாம் அடைவது ஏதுமில்லை..." அழுகையும் மூச்சுத்திணறலுமாக உடைந்த குரலில் அவன் கூவினான். "எழுக, நம் தோள்மீது ஏற்றப்பட்டுள்ள இந்தப் பாறைகளை வீசிவிட்டு எழுக! நாம் சென்றடையவேண்டிய பாதை நெடுந்தொலைவு. நாம் அடையக்கூடுவது வானளவு."

"இளையோனே, இவ்வெண்ணம் வந்ததுமே நீ அளவைநெறியிலிருந்து விலகிவிட்டாய். இனி நீ செல்லுமிடம் வேதமுடிபுநெறியே" என்றார் வசிட்ட குந்ததந்தர். "ஆனால் அறிக, அங்கு சென்று வேறுவகை சுமைகளைத் தூக்கி தோளில் வைத்துக்கொள்வாய். சொல்கற்பாய், ஒவ்வொரு சொல்லும் பிறிதொன்றுடன் முரண்படுவதைக் காணும் எல்லைவரை

செல்வாய். உன்னுள் இருந்து சொல்லுக்குப் பொருள்கொள்வது உள்ளமல்ல, சித்தமல்ல, ஆணவமே என்று உணர்வாயானால் அமர்ந்திருக்கும் கிளையொடிந்து மண்ணுக்கு வருவாய். மீண்டும் இங்கேயே திரும்பி அணைவாய்.”

“கேட்டுப்பார், இங்கிருப்பவர்களிடம்! வேதமுடிபிலிருந்து திரும்பி வந்தவர்கள் இங்கே எத்தனைபேர் என்று…” என்றார் வசிட்ட குந்ததந்தர். த்வன்யன் திரும்பி நோக்க ஏராளமானவர்கள் “நாங்கள்! நாங்கள்!” என கைதூக்கினர். “நீ இன்னமும் சிறுவன். பன்னிரு ஆண்டுகளில் நீ வேதக்கல்வியின் பொருளின்மையை உணர்ந்தாய். நன்று, முப்பத்தாறாண்டுகளாகும் நீ வேதச்சொல்லுசாவலின் பொருளின்மையை உணர. உன் குருதி வற்றவேண்டும். நான் நான் என உன்னை எண்ணவைக்கும் இளமை அவியவேண்டும். உலகைவெல்ல எழும் காமமும் ஆணவமும் உன்னை கைவிடவேண்டும். அது நிகழ்க!” என்றார் வசிட்ட குந்ததந்தர்.

“அறிக, அங்குசெல்பவர்களில் பெரும்பாலானவர்கள் முதிரா இளையோர். இங்கு மீள்பவர்களில் பெரும்பாலானவர்கள் அறிந்தவிந்த முதியோர். அதுவே எது நிலையான மெய் என்பதற்கான சான்று” என்றார் கௌதம சிரகாரி. முதிய வைதிகர்கள் பலர் உரக்க நகைத்தனர். அவர்கள் ஒருவரோடொருவர் உதிரி வரிகளைச் சொல்லி நகையாடிய ஓசையெழ கிருசர் கைகாட்டி அவர்களை அமைதிப்படுத்தினார். கௌதம சிரகாரி “எதையும் பெறாதவன் எங்கும் பெறுவதில்லை, இளையோனே” என்றார். “இங்கு ஐயத்துடன் செயலாற்றினாய். எதையும் ஈட்டாமல் அங்கு செல்கிறாய். அங்கு ஐயத்துடன் சொல்லுசாவினால் எதையும்

ஈட்டாமல் எஞ்சுவாய். அது நிகழாதொழிக!” வைதிகர் உரக்க நகைத்தனர்.

த்வன்யன் “ஆம், என் இளமையின் விசையால் நான் இதை கேட்கலாம். என் பிழையே இவையென்றுமிருக்கலாம். ஆனால் ஒன்றையே ஆற்றி, ஒன்றில் அமைந்து, ஓடைக்கரைப் பாறையென பாசிபற்றுவதற்கா மானுட உள்ளம் படைக்கப்பட்டது? இங்கு எனைச் சூழ்ந்திருக்கும் வைதிகர்களை பார்க்கிறேன். பழகுந்தோறும் ஆட்டுக்கல் ஓசையற்ற மென்மை கொள்கிறது. மேலும் பழகும்போது தேய்ந்து ஓசையிடத் தொடங்குகிறது. இவர்களின் நெடுங்கால வேதச்செயல் கற்றசொல் தேய்ந்து வெற்றொலி என்றாவதற்கே உதவியுள்ளது. பொருளின்மை என்று அன்றி அதை எவ்வகையிலும் எவரும் உரைக்கவியலாது” என்றான்.

வைதிகர்கள் பலர் கைநீட்டி கூச்சலிட்டபடி எழ கிருசர் “அமைதி... இந்த அவையில் சொல்லிட அனைவருக்கும் முற்றுரிமை உண்டு. அமர்க, அந்தணரே! அமர்க, வைதிகர்களே!” என்றார். அவர்கள் மூச்சிரைக்க சினச்சொல் எஞ்சியிருக்கும் இதழ்களும் விழிகளுமாக அமர்ந்தனர். கௌதம சிரகாரி ‘இளையோனே, வேள்வி என்பது நாவைப் பழக்குதல் அல்ல, நெஞ்சைப் பழக்குதல் என்று அறிக! சொல்திருந்துவதல்ல அதன் நோக்கம். கனவுகள் திருந்துவதே. ஒருநாளில் அது அமைவதில்லை. முட்டை உடைத்தெழுந்த வாத்துக்குஞ்சுகள் அன்னையைத் தொடர்வதுபோல, அகிடிருக்கும் இடம் பிறந்ததுமே கன்றுக்குத் தெரிவதுபோல குருதியில் ஊறிப் படியவேண்டும் வேதம். அதன்பொருட்டே வேதமோதல் நிகழ்கிறது” என்றார்.

“வேதமுடிபு தனியொருவரின் மீட்பை நோக்கி பேசுகிறது. ஒருவர் அடைந்த மீட்பை அவர் பகிர முடியாது, விட்டுச்செல்ல இயலாது. பிறர் அறியாமல் அவரில் எழுந்து அவரில் மறையும் முழுமை அது. ஊமையன் கண்ட கனவு என அதை அளவைநெறியர் சிலர் சொல்வதுண்டு, நான் அதை ஏற்பதில்லை. அது நாம் அறியாத பிறிதொன்று. அளவைநெறியினர் அறிந்து வகுத்த வேதமுடிபு என்ன என்று கொண்டுதான் நான் இங்கு மறுப்பு உரைக்கிறேன். இந்த அவைக்காக, இத்தருணத்திற்காக” என்று கௌதம சிரகாரி தொடர்ந்தார்.

“அளவைநெறி இரண்டு அறிதல்களை அடிப்படையாகக் கொண்டுள்ளது. மெய்மை என்பது ஒரு தனிமானுடனின் உள்ளத்தால் அள்ளப்படக்கூடியது அல்ல. ஏனென்றால் உள்ளமென்பது மொழியால் ஆனது. மொழி என்பது எல்லைகொண்டது. எந்த அறிதலும் மொழியென்றானதுமே சிறுத்து ஒரு கருத்தென்று மட்டுமே ஆகிவிடுகிறது. கருத்தென அமைவது எதுவும் மறுகருத்தும் எதிர்கருத்தும் கொண்டது. ஆனால் மாற்றும் நீட்சியும் இல்லாததே மெய்மையென்றாக முடியும். ஆகவே தனியொருவரின் உள்மொழியில் முழுமைநிகழ்வது இயல்வதல்ல என்பது அளவைநூல்களின் முதல்அறிதல்.”

“இரண்டாவது அறிதல் உள்ளமும் எண்ணமும் உடலின் ஓர் உறுப்பே என்பது. அவையோரே, கருக்கொண்டு உருவுசமைத்து ஈன்றெடுக்க உடல் அறிந்திருக்கின்றது. அன்னைப்பறவை குஞ்சுகளை என கட்டைவிரல் பிற விரல்களை அறிகிறது. உணவை எரித்து உயிரென்று ஆக்கும் மெய்மையை உடல் பயிலாமல் அறிந்திருக்கிறது. ஆக்கலும் புரத்தலும் அழித்தலும்

நிகழ்கின்றன உடலில். நம் உள்ளமும் சித்தமும் அறிந்த அனைத்தையும்விட எண்ணிறந்த மடங்கு நம் உடலுக்குத்தெரியும்."

"உடலால் கற்பதே அளவைநெறியின் செயல்களால் நிகழ்கிறது என்கின்றன நூல்கள். ஐம்புலன்களாலும் உள்ளத்தாலும் சித்தத்தாலும் ஆற்றப்படவேண்டியவை வேள்வி முதற்றாய செயல்கள். அவை நம்மை பயிற்றுகின்றன" என கௌதம சிரகாரி தொடர்ந்தார். "செயல்கள் கல்வியென்றாகவேண்டும் என்றால் அவை நம்மை பயிற்றவேண்டும், நாம் அவற்றை பயிற்றலாகாது. செயல் முடிவிலா நிகழ்வுப்பெருக்கு. நாம் ஆற்றும் எளியசெயலைக்கூட நாம் அறியவியலாது. உண்பவர் அறிவாரா உணவு என்ன ஆகின்றதென்று? புணர்பவர் அறிவாரா அம்மைந்தனின் ஊழ் என்ன என்று? செயலை சித்தத்தால் அறியமுயன்றால் முடிவிலாக்கோடி தகவுகளில் ஒன்றைத் தொட்டு எடுக்கிறோம். அதைக்கொண்டு செயலை வகுத்தால் நம் அறிவின்மையை விதைக்கிறோம். அறிவின்மையை அறுவடை செய்வோம்."

"அந்தணரே, முனிவரே அறிக! முடிவின்மையின் உயிர்விளக்கமே துரியம். துரியத்தின் துளியே ஆழுளம். அதன் அலையே கனவு. கனவின் நுனியே நனவு. நனவைப்பழக்கி கனவை அடைந்து ஆழத்தில் படிந்து துரியத்திற்குச் செல்லவேண்டும். . நம் கல்வி என்பது கைகளில் இருந்து கனவினூடாக ஆழ்நிலைகளைக் கடந்து துரியத்தை அடைவது. அவையோரே, நம் கைகளே ஆழுள்ளமும் கனவும் துரியமும் ஆகுக! எண்ணுவதை இயற்றவில்லை மூச்சுக்குலை. எண்ணித் துடிக்கவில்லை இதயம். இங்கே இப்போதென்று ஆன

துரியத்தின் பகுதியென அமைந்துள்ளன அவை. எண்ணாமல் செயலியற்றும் கைகளும் அவ்வண்ணமே ஆகுக!”

“எது இப்புடவியாகி நின்றுள்ளதோ அதுவே இவ்வுடலும் என்பதனால் புடவியின் சாறென அமைந்திருப்பது இவ்வுடலிலும் அமைவது இயல்வதே. இங்கு அதை அமையச்செய்வதே அளவைநெறி கூறும் சடங்குகளால் ஆவது. அதை வகுத்தறிந்த மெய்யர் வாழ்க!” என்றார் கௌதம சிரகாரி. அவையிலிருந்த அந்தணர் கைகளைத் தூக்கி “ஆம்! ஆம்! ஆம்!” என வாழ்த்தொலி எழுப்பினர். “நம் கைகள் கனவென்றாகாமல் தடுப்பது நாம் என்னும் உணர்வு. அந்த ஆணவத்தை வெல்லாமல் அமைவதில்லை எதுவும். வேதமுடிபு ஆணவத்தினூடாக அறிதல். நாம் ஆணவத்தை அகற்றி அறிகிறோம்.”

“எந்த வழியும் செல்லுமிடம் ஒன்றே என்று நூல்கள் சொல்கின்றன. ஆனால் இந்த வழி எளியோருக்கும் வலியோருக்கும் உரியது. வேதமுடிபின் வழி முனிவருக்கே பயனளிப்பது. முனிவர் இமயமலைமுகடில் எண்புறமும் சூழ்ந்த வெறுமையில் அமர்ந்திருப்போர். நான் என அவர்கள் எண்ணுகையில் நீ நீ என முடிவின்மையென்றான பாழ் அவர்களை சூழ்கிறது. பிரம்மம் என அது பொருள்கொள்கிறது. இங்கு பல்லாயிரம்கோடி முகங்களுடன் உயிர்க்குலமும் பொருள்தொகையும் சூழ்ந்திருக்கும் உலகில் நின்று நான் என ஒருவன் எண்ணும்போதே நானே நானே என கோடிமுகம் எழுப்பி பெருகிச்சூழ்கின்றது அவன் ஆணவம்.”

“ஆணவத்தை அழிக்கும் கலையறிந்தவனே அளவைநெறியன் என்று உணர்க! தன் முற்றத்தில் ஒரு தென்னையை நட்டு நீரூற்றும் முதியவன் ஆணவத்தை கடக்கிறான். அதன்

காய்களை அவன் காணப்போவதில்லை என்று அறிவான். தான் என்பது தன்னைச் சூழ்ந்தவர்களெனப் பெருகி இடம்நிறைக்கிறது என்றும் தன் கொடிவழி என நீண்டு காலத்தை நிறைக்கிறது என்றும் உணர்ந்தவன் தானெனத் தருக்குவதில்லை. நாம் வேரில் நீரூற்றுகிறோம். பல்லாண்டுகாலம் அதை செய்தபின்னரே கனியின் சுவைபெறுகிறோம். தனக்கு இச்செயலின் பயன் என்ன என்று ஒருகணம் எண்ணிவிட்டவனால் பிறகு இது இயலாது.”

“அளவைநெறியாளன் ஒருபோதும் தனியொருவன் அல்ல. அவன் ஒரு திரள். ஒரு பெருக்கு. காலந்தோறும் குலங்களின் நிரை என எழும் ஒற்றைப்பேருரு. ஒருவர் அடைந்தது மெய்மையின் ஒரு துளி என்றால் அது செயலென்று சடங்கென்று ஆகி பகிரப்படும். இங்கே என்றுமென இருந்துகொண்டிருக்கும். பல்லாயிரம் சிதலெறும்புகள் கூடி பலநூறாண்டுகளாக எழுப்பும் புற்றுக்கூடு என அவர்களில் திரண்டு எழுந்துகொண்டிருக்கிறது வேதமெய்மை. அவர்களில் ஒருவரிடம் கேட்டால் அவர் அதை அறியாமலிருக்கலாம். அவர் ஆற்றுவதென்ன என்றே உணராமலும் இருக்கலாம். அவர் உணரவேண்டுமென்பதில்லை. திரளுக்கு, பெருக்குக்கு தன்னை கொடுத்தாலே போதும்.”

“அளவைநெறியருக்கு வேள்வி என்பது கொடை. அன்றாடச் சிறுகொடைகள். பெருங்கொடைகள். முழுதளிக்கும் இறுதிக்கொடைகள். கொடையின் கொண்டாட்டமே வேள்வி என்க! இங்கு நிகழும் கொடையில் நாம் ஒவ்வொருவரும் அவியாகுவோம். இங்கு நிகழும் கொடையில் நாம் ஒவ்வொருவரும் அனலென எழுவோம். இந்த எரிகுளம் சாவின் வாய். நம்மை அது உண்க! இந்த எரிகுளம் அன்னைக்

கருவழி. நம்மை அது ஈன்றெடுக்கட்டும். ஆம், அவ்வாறே ஆகுக!” என்று கௌதம சிரகாரி கைகூப்பினார். அந்தணர் “ஆம்! ஆம்! ஆம்!” என முழங்கினர்.

த்வன்யன் நிறைவற்ற முகத்துடன் தத்தளித்து இளைய யாதவரை நோக்கினான். “மறுசொல் இருந்தால் கூறுக, அந்தணரே” என்றார் கிருசர். அவன் மேலும் பதற்றம் கொண்டு அவையை சூழநோக்கியபின் “இல்லை” என்றான். சிறுமைசெய்யப்பட்டதுபோல அவன் முகம் சிவந்து கண்கள் நீரணிந்தன. உதடுகளை அழுத்திக்கடித்து கழுத்துத் தசைகள் இழுபட்டு அசைய தலைகுனிந்து மீண்டும் தன் இடம் நோக்கி செல்ல முற்பட்டான். அமர்ந்திருந்தவர்களின் நடுவே அவன் வந்தமையால் உருவான வழியில் அவன் செல்ல அவன் ஆசிரியரான பிரதர்த்தனர் கைநீட்டி தடுத்தார். அவன் திகைத்து நின்றான்.

பிரதர்த்தனர் “இளையவனே, பன்னிரண்டு ஆண்டுகள் என் சிறகின் வெம்மைக்குள் இருந்தாய். என் மைந்தரைவிட எனக்கு இனியவனாக திகழ்ந்தாய். ஐயம்கொண்டபின் நீ வேதியன் அல்ல. நீ உன் வழி தேரலாம். நீ தேடுவன அனைத்தும் உனக்கு மெய்ப்படுக! என் வாழ்த்தும் என் சொல்லில் வாழும் என் ஆசிரியநிரையின் கனிவும் உன்மேல் பொழிக!” என்றார். அவன் கைகூப்பி கண்ணீர் வழிய நின்றான். அவன் தோழர்கள் அவனை நோக்கிக்கொண்டு நின்றனர். அவன் எட்டுறுப்பும் நிலம்படிய விழுந்து அவரை வணங்கியபின் அவையிலிருந்து தலைகுனிந்து வெளியேறினான். அவன் சென்று மறைவது வரை அவை அவனை நோக்கி அமர்ந்திருந்தது.

கௌதம சிரகாரி இளைய யாதவரை நோக்கி “நீங்கள் கேட்டதற்கும் கேட்க எண்ணுவதற்கும் மறுமொழியை

சொல்லிவிட்டேன், யாதவரே” என்று புன்னகைத்தார். “முழுமைநோக்கி செய்யப்படும் செயல்களெல்லாம் வேள்விகளே. வேள்வி என செய்யப்படுவன முழுமைகொண்ட செயல்களில் இருந்து முன்னோர் திரட்டி எடுத்த அடையாளச் செயல்கள். ஒவ்வொரு செயலிலும் அதன் இறையெழும் தருணத்தைக் கண்டடைந்து அவற்றை மீளநிகழ்த்துவது இது. இது வேட்டையும் அனலூட்டலும் ஆபுரத்தலும் வேளாண்மையும் தொழிலும் குடிசூழலும் அரசமைதலும் பிறப்பும் இறப்பும் களியாட்டும் துயர்கொள்ளலும் ஒற்றைப்புள்ளியில் நிகழும் ஒரு நாடகம். மலர்க்காடு புக்கு தேன்வெளி கண்டு மீண்டு கூடுவரும் தேனீ தன்னவர்க்கு அறிவிக்க ஆடிப்பாடும் நடனம்.”

“இது நாம் நினைப்பறியா காலம்தொட்டு இங்கு நிகழ்ந்துவருகிறது. தலைமுறைகளில் ஏறி ஒழுகிச்சென்றுகொண்டே இருக்கிறது. நம் முன்னோரையும் நம்மையும் நம் வழித்தோன்றல்களையும் ஒன்றென இணைத்துக் கட்டுகிறது. நம்மிடம் வந்துசேர்ந்திருப்பவை இச்செயல்கள் மட்டுமே. இவற்றுக்கு அவர்கள் கொண்ட பொருள் என்ன என்று நமக்குத் தெரியாது. இச்செயல்களின் உள்ளே அவை உறைந்திருக்கக் கூடும், பறவைச்சிறகில் காற்றும் வானமும் என. முழுமையுடன் இவற்றை ஆற்றுகையில் நம் கைகள் அவற்றை அறியலாம், நம் கனவும் ஆழமும் உணரலாம். நம் துரியம் அவற்றை வாங்கிக்கொள்ளலாம்.”

“ஆகவே இவற்றை நாம் ஒருபோதும் பொருள்கொள்ள முயலக்கூடாது. அப்பொருள் நம்முடையது. நாம் இத்தருணத்தில், இவ்விடத்தில், இங்குள்ள தேவைக்கும்

உணர்வுக்கும் ஏற்ப அளிப்பது. நம் எல்லைகளுக்குள் அடங்குவது. தங்கள் பொருளை தாங்களே கொள்ளலாம் என்றால் நாம் நம் வழித்தோன்றல்களுக்கு இவற்றை கையளிப்பதில் என்ன பொருள் உள்ளது? ஒவ்வொரு தலைமுறையும் தன்னை நேற்றிலிருந்தும் நாளையிலிருந்தும் வெட்டிக்கொள்ளவேண்டுமா என்ன? அவ்வாறென்றால் ஒவ்வொருவரும் தன்னை பிறரிடமிருந்து வெட்டிக்கொள்ளவேண்டும் அல்லவா? ஒருவரே தன் நேற்றிலிருந்து தன்னை பிரித்துக்கொள்ளவேண்டும் என்பீர்களா?" என கௌதம சிரகாரி தொடர்ந்தார்.

"மெய்மையை காலஇடமற்ற திரள்பெருக்காகச் சென்றே அறியமுடியும் என்றன எங்கள் நூல்கள். அவ்வாறு திரளென எங்களைத் திரட்டும்பொருட்டு உருவானவை இச்சடங்குகள். இவற்றுக்கு இன்றுநேற்றுநாளை இல்லை. இடம்பொருளேவல் இல்லை. இவற்றில் ஒருதுளியையேனும் மாற்றும் தகுதியோ திறனோ உரிமையோ எங்கள் எவருக்குமில்லை. இங்கு திரண்டுள்ள நாங்கள் அனைவரும் மீன்கள், எங்களை கொண்டுசெல்லும் கங்கைப்பெருக்கே வேதவேள்வி. இதை நாங்கள் உண்பதனால் இதில் உமிழலாம். இதில் நாங்கள் பிறந்தமையால் இதில் இறக்கலாம். எங்கள் வானும் மண்ணும் இல்லமும் பாதையும் இதுவே. எங்கள் உள்ளும் புறமும் நிறைந்திருப்பது இதுவே. இதிலமைதல் அன்றி எங்களால் ஆவதொன்றில்லை என்று அறிக!"

"எனவே பிழையின்றி இதை ஆற்றி நிறைவுறுத்துவது அன்றி எங்களுக்குக் கடமை ஏதுமில்லை. அதையே இந்த அவையில் உங்கள் வினாக்கள் அனைத்திற்கும் விடையென சொல்ல விழைகிறேன், யாதவரே" என்று கௌதம சிரகாரி கைகூப்பினார்.

அவையிலிருந்த அவருடைய மாணவர்கள் கைகூப்பி "வேதமென எழுந்ததற்கு வணக்கம். வேள்வியென நிகழ்வதற்கு வணக்கம். வகுத்துரைத்த முனிவருக்கு வணக்கம். கற்பித்த ஆசிரியர்களுக்கு வணக்கம். வேட்டுநிற்கும் அந்தணர்க்கு வணக்கம். ஐந்துமென நின்றிருக்கும் அனலோனுக்கு வணக்கம்" என்று பாடினர்.

இளைய யாதவரை நோக்கி அவையின் விழிகள் திரும்பின. அவர் மறுமொழி சொல்வதற்குள் குண்டஜடரர் உரத்த குரலில் "உங்கள் நெறியே வேறு. வேள்விகள் தேவையில்லை, வேதமொன்றே போதும். வேதங்கள் முழுதும் தேவையில்லை, ரிக் ஒன்றே போதும். ரிக் முழுதும் தேவையில்லை அதன் முடிவுமட்டும் போதும். அதன் முடிவும் தேவையில்லை அதன் முதற்சொல்லே போதும். ஓங்காரமும் தேவையில்லை, அதன் தொடக்கமென அமைந்த அமைதியே போதும். ஆம், அதுவும் வழியே. ஆனால் இங்கல்ல. மலையுச்சியின் வெறுமைசூழ்ந்த பீடத்தில். அங்கு செல்க!" என்றார். குந்ததந்தர் "ஆம் யாதவரே, செல்க அங்கு! ஆனால் ஒன்று மட்டும் அறிக! பல்லாயிரம் ஊர்களை தன் மடியெங்கும் விரித்துக்கொண்ட மலையின் உச்சியில் ஒற்றைக்காலூன்றவே இடமிருக்கும்" என்றார்.

"ஆம், ஆகவேதான் உங்கள் குலம் உங்களை துரத்தியது. உங்கள் குருதிமைந்தராலும் புறக்கணிக்கப்பட்டிருக்கிறீர்கள். நன்று, வேதமுடிபு தேரும் முனிவருக்கு உகந்த முழுத்தனிமையை அடைந்துள்ளீர்கள்" என்று வைதிகமுனிவரான வேதமித்ரர் சொன்னார். அந்தணர்நிரையில் ஏளனச்சிரிப்போசை எழுந்து பெருகி அலையென அணுகி வந்தது. வசிட்ட மரபினரான காத்ரர் "ஆனால் நீங்கள் அந்த நல்வாய்ப்பை தவறவிட்டிருக்கிறீர்கள். திருதெய்வத்துடன்

சினந்து அவள் அக்கையை சென்றடைந்ததுபோல வேதத்தால் துறக்கப்பட்டதும் அசுரவேதத்தையும் அரக்கவேதத்தையும் சுமந்து நின்றிருக்கிறீர்கள்” என்றார்.

அது ஒரு தொடக்கம் என பலரும் கைகளை நீட்டியபடி எழுந்தனர். “சொல்லுங்கள் இளைய யாதவரே, அசுரவேதத்தை நீங்கள் எவ்வண்ணம் ஏற்கிறீர்கள்? இங்கு வேதவேள்வியை இகழ்ந்தீர்கள். தலைவெட்டி தணலில் இடும் ஆசுரவேள்விகளில் என்ன செய்வீர்கள்?” என்றார் ஒரு முதியவர். “என்ன செய்வார்? நடுத்துண்டு கேட்டுவாங்கி அவிமிச்சம் உண்பார்” என்று ஒருவர் இகழ்ச்சியால் வலித்திழுத்த முகத்துடன் கூவினார். “அவர் என்றும் வேதஎதிரி. பூதனை என்னும் வல்லரக்கியிடம் அவர் உண்ட பால் ஊறியுள்ளது உடலில்” என்றார் இன்னொருவர்.

“அமைதி… நாம் சொல்லுசாவலின் எல்லைகளை மீறுகிறோம்!” என்று கிருசர் கூவினார். அவர்கள் அதை கேட்கவில்லை. மேலும் மேலும் என எழுந்து கூச்சலிட்டனர். வெளிப்படத் தொடங்கிய பின்னர் காட்டெரி என சினமும் வெறுப்பும் பெருகுவதை சுப்ரியை கண்டாள். “இந்திரனுக்கு யாதவர் அளித்துவந்த வேள்விக்கொடையை நிறுத்தியவர் இவர். இங்கு எப்படி அவையமர்ந்து வேள்விமிச்சம் கொள்கிறார்?” என்று ஒருவர் கூவினார். “கேளுங்கள்! அதை முதலில் கேளுங்கள்!” என்று பலகுரல்கள் எழுந்தன. “சிசுபாலன் கேட்ட வினா அவ்வண்ணமே நின்றுள்ளது. கழுத்தறுத்து சொல்லை நிறுத்த இயலாது” என ஒருவர் இரு கைகளையும் விரித்து கூச்சலிட்டார்.

அமூர்த்தர் கைகாட்ட அவருடைய மாணவரான உக்ரர் எழுந்து வலம்புரிச்சங்கை எடுத்து மும்முறை ஊதினார். அதர்வ வைதிக மரபுக்குரிய அத்தனியொலி சிம்மக்குரல் பிற

விலங்குகளை என அந்தணரை அஞ்சி உறையச்செய்தது. “அமர்க அந்தணரே, அமர்க!” என கிருசர் கூவினார். “அமர்க, இங்கு எவர் அமரவேண்டுமென வகுப்பது தொல்வேத குருநிலைகளே ஒழிய வேதியர் அல்ல. அமர்க!” என்றார். மெல்ல அனைவரும் அமர்ந்ததும் “அவைச்சொல் தொடர்க!” என்றார்.

கண்வமரபினரான திரிசோகர் எழுந்து “இந்த அவையில் இறுதிச்சொல் கௌதமரால் உரைக்கப்பட்டுவிட்டது. வேதவேள்விகளில் ஒரு சொல்லுக்கு பொருளுரைத்து வகுக்கவோ ஒரு நெறியை மாற்றுநோக்கி அமைக்கவோ எவருக்கும் உரிமை இல்லை” என்றார். “வேதத்தைச் சொல்லுசாவினால் வேதமே வேதத்தை மறுக்கும். அரவின் தலை வாலை விழுங்கும். அச்சுழியில் முடிவிலாது உழல்வதே வேதமுடிபினரின் வழி என்றால் அவ்வாறே ஆகுக! நாம் வேதத்தை நம் தொழுவில் கட்டிக் கறந்து அமுதுண்பவர்கள்.”

“ஆகவே இந்த அவையில் இளைய யாதவர் சொன்ன முதல் கேள்வியை முற்றாக மறுக்கிறோம். வேதத்தின் ஒருபகுதி பிறிதொன்றை மறுக்காது. வேதமையம் வேதச்செயல்களை துறக்காது. வேதத்தில் இருந்து வேதத்தைக் கடந்துசெல்லும் எதையும் கண்டடைய இயலாது. வேதமென தன் ஆணவத்தை வகுப்பவர்களின் வீண்பாதை அது. அதை இந்த அவை முழுமையாக மறுக்கிறது.”

காசியப கிருசர் தலைவணங்கி “ஆம், அவ்வாறே ஆகுக!” என்றார். பின் இளைய யாதவரிடம் திரும்பி “சாந்தீபனியின் ஆசிரியரே, இந்த அவையில் நீங்கள் சொல்லும் மறுப்பென மேலும் ஏதேனும் உள்ளதா?” என்றார். இளைய யாதவரின்

முகத்தை சுப்ரியை நோக்கினாள். அங்கு நிகழ்ந்த அனைத்துக்கும் அப்பால் என அவர் முகத்தில் ஒரு கனவுநிலை இருந்தது. என்றும் மாறாததோ என புன்னகையும் நின்றிருந்தது. அவள் கர்ணனை நோக்கியபோது அவனும் அவரையே பார்த்துக்கொண்டிருப்பதை கண்டாள்.

# குருதிச்சாரல் - 76

**பகுதி பத்து : பெருங்கொடை – 15**

இளைய யாதவர் தணிந்த குரலில் “கௌதம முனிவரின் நற்சொற்களைக் கேட்கும் பேறு பெற்றேன். இந்நாளும் இங்குள்ள ஒவ்வொரு எண்ணங்களும் என்றும் என் நெஞ்சில் நிலைகொள்வதாக!” என்றார். “ஆனால் தங்கள் சொற்களை எதிர்கொண்டாகவேண்டிய நிலையில் உள்ளேன். நான் சாந்தீபனி குருநிலையின் வழித்தோன்றல் என்பதனால். என் கொள்கை தங்களுடையதை மறுக்கிறது என்பதனால். அனைத்தையும்விட மேலாக தாங்கள் தங்கள் சொற்களை இங்கே வகுத்துரைத்தமையால். அவை கருத்துக்கள் என உருக்கொண்டமையாலேயே தாங்களே கூறியபடி மறுப்பையும் மாற்றையும் கொண்டவையாகின்றன.”

மெல்லிய குரலில் அவர் பேசியமையால் அனைவரும் ஆழ்ந்த அமைதிகொண்டால் மட்டுமே செவிகொள்ளமுடியும் என்ற நிலை உருவானது. அதுவரை கொந்தளித்த உணர்வுகளுக்கும், ஒன்றோடொன்று மோதி அலையெதிரலை கொண்ட குரல்களுக்கும் மாற்று என அவருடைய சொற்கள் ஒலித்தமையாலேயே அவை மேலும் அழுத்தம் கொண்டன.

அத்துடன் அந்த மென்குரலால் அவர்மேல் ஏவப்பட்ட வசைகளையும் இளக்காரத்தையும் காணாதவர் என கடந்துசென்றுவிட்டார் என சுப்ரியை உணர்ந்தாள்.

“அந்தணரே, முனிவரே, அறிவு என்று ஒன்று இங்கு இருப்பதனாலேயே அறியப்படலாகும் என அது தன்னை அறிவிக்கிறது என்றே பொருள். அறியப்பட்டது என்பதற்கு அறிவென்று இங்கு எஞ்சுவதே சான்று” என்று இளைய யாதவர் தொடர்ந்தார். “அறியமுடியாது என்று சொல்லி ஓர் அறிவுச் சொல்லாடல் நிகழவியலாது. ஒன்றுசேர்ந்து சொல்லாடுக, உங்கள் கூட்டு வலுவுற்றதாகுக என ரிக்வேதம் அறைகூவுவது நம் அனைவருக்குமாகவே. அறியவொண்ணாமையே எஞ்சும் என்றால் வேள்விக்குமுன் சொல்லவை சூழவேண்டும் என்று தொல்முனிவர் வகுத்திருக்கமாட்டார்கள்.”

கௌதம சிரகாரி கைதூக்கி உரத்த குரலில் “ஆம், ஆனால் சொல்லவை வேள்விச்செயலை சொல்லென்று சுருக்கிக்கொள்ளும்பொருட்டு அல்ல. வேள்விச்செயலுக்குத் தடையென்றாகும் எண்ணங்களை விளக்கி விலக்கும்பொருட்டு. வேதச்சொல்லை ஐயமறத் தீட்டிக்கொள்ளும் பொருட்டு. தெய்வங்களின் பெருமையை நாம் அறிவோமென்றாலும் சொல்லெடுத்து ஏத்துவதைப்போல” என்றார். “அவ்வாறென்றால் தன்தரப்பு மட்டுமே ஒலிக்கவேண்டும். மறுதரப்புக்கு இடம்கொடுப்பது ஏன் வகுக்கப்பட்டுள்ளது?” என்றார் இளைய யாதவர். “யாதவரே, தன் தரப்பை வலுப்படுத்துவது மறுதரப்பே. வேதமறுப்பும் வேள்விகள்மேல் ஐயமும் ஒலிக்கும் சூழலில் இருந்து இங்கு வருகிறார்கள் வைதிகர். இச்சொல்லவை ஒரு நீராட்டு. உடலழுக்கை என உள்ளத்து மாசையும் கழுவி அவையமர்வதற்கானது” என்று கௌதம ஏகதர் சொன்னார்.

குந்ததந்தர் நகைத்து “இந்த அவையில் உங்கள் சொல்லுக்கு என்ன இடம் என்று கௌதமர் வகுத்துவிட்டார், யாதவரே. நீங்கள் தொடரலாம்” என்றார். இளைய யாதவர் புன்னகைத்து “நன்று, எவ்வாறென்றாலும் என் சொல் இங்கு எழ வாய்ப்பளித்தமைக்கு உவகைகொள்கிறேன்” என்றார். “அந்தணரே, அளவைநெறியின் எதிர்ச்சொல் என வேதமுடிபின்மேல் இங்கு வைக்கப்பட்டவற்றில் முதன்மையானது அது சொல்லை கருத்து என குறுக்கிக்கொள்கிறது என்பதும், செயலை எண்ணமென்று வகுத்துக்கொள்கிறது என்பதும்தான்” என்றார். “ஆம், அதுவே அதன் பிழை தொடங்குமிடம். அக்குறுக்கலை நிகழ்த்தும் ஆணவமே இரண்டாவது பெரும்பிழை” என்றார் கௌதம சிரகாரி.

“கௌதமரே, கிணற்றுக்கு நீர்நோக்குவோர் கையில் வைத்திருக்கும் வேப்பங்கழியைக் காணும் பிறர் அக்கழியிலுள்ளதுதான் அவர்களின் ஞானம் என எண்ணுவதுபோன்றது எண்ணத்தை துணைக்கொள்பவர்களை பிறர் கருதுவது. கழியில் அல்ல, அதை ஏந்தியிருக்கும் கையிலும் அல்ல, அதில் குவியும் விழிகளிலோ உள்ளத்திலோ அல்ல, அதற்குமப்பால் அக்கழி வடிவில் தன்னை உருக்கொளச் செய்யும் பிறிதொன்றில் நிகழ்கிறது அவ்வறிதல். எண்ணம் எண்ணத்திற்கு அப்பாலுள்ள நுண்மை ஒன்றின் கருவியே. எண்ணமென அது வெளிப்பட இயலுமென்பதனால் எண்ணத்தை ஆளாமல் அதை ஆளவியலாது. எண்ணத்தை அளைந்து அளைந்து ஒரு தருணத்தில் அறியாது தொட்டு அதை எழுப்புகிறோம். அது விசைகொண்டதும் எண்ணத்தை உதறி அதில் ஏறிக்கொள்கிறோம்.”

“அந்தணரே, நம் எண்ணத்தாலானது அறிவு என்றால் அது வாலறிவு. இப்புவியிலுள்ள அனைத்தையும் படைத்ததும் அனைத்துமாகி நிற்பதும் அதுவே. அது ஒவ்வொரு மானுடரிலும் உறைகிறது. ஒவ்வொருவரும் தன்னுள் அதைச் சென்று தொடமுடியும். அதுவே நுண்ணறிவு. ஆனால் அது ஒரு மானுடரில் உறைவது அல்ல. மானுடப்பெருந்திரளில் உறைவதுகூட அல்ல. உயிர்க்குலங்கள் அனைத்திலும் அது உறைகிறது. ஆகவே அதை இலங்கறிவு என்கிறோம். அதற்கும் அப்பால் அத்தனை பொருட்களையும் இணைத்து விரியும் பேரறிவு ஒன்றின் ஒரு பகுதி அது. அதை வியனறிவு என்கிறோம். வியனறிவோ வான்கோள்களை ஆளும் வானறிவின் சிறுதுளி. வானைக்கடந்த ஒன்றையே வாலறிவு என்கிறோம். வாலறிவன் என நின்றோனை அறியாவிடில் கற்றதனால் என்ன பயன் என்கின்றன நூல்கள்.”

“எது எண்ணங்களை பிரித்திணைக்கிறதோ அந்நெறியே உயிர்க்குலங்களை பிரித்திணைக்கிறது. ஆசிரியர்களே, உலோகங்களையும் உப்புகளையும் அமிலங்களையும் காரங்களையும் ஆளும் நெறி அதுவே. கோள்கள் சுழல்வதும் மீன்கள் தோன்றி அமிழ்வதும், வான்கதிர்கள் திசைகொள்வதும் அதன்படியே. எண்ணத்தை இகழ்பவர் தன்னுள் எழுந்த சூரியனை இகழும் பனித்துளி என்று அறிக!” என இளைய யாதவர் தொடர்ந்தார். “எண்ணுக, எண்ணம்போல் விரியச்செய்வது பிறிதில்லை. ஏனென்றால் உடல் காலமும் இடமும் கொண்டது. அன்னத்தின் நெறிகளால் ஆளப்படுவது. நோயும் இறப்பும் அச்சமும் தயக்கமும் கொண்டது. எண்ணம் கிளைவிட்டெழும் பறவை என உடல் உதறி வான் தேர்வது, கட்டற்றது, காற்றென்று ஆகும் கலையறிந்தது.”

“எண்ணுவதனூடாகவே இப்புடவி இவ்வண்ணம் உருக்கொண்டு நம்மை சூழ்ந்தது. எண்ணுவதனூடாகவே ஒவ்வொன்றையும் பொருள் எனக்கொண்டோம். பொருள் அளித்து சொல்லில் பொருத்தி மொழியாக்கினோம். எண்ணி எண்ணி பொருள்கடந்த பொருள்தொட்டு வேதத்தை சென்றடைந்தோம். எண்ணுபவர் தன்னை கரைத்து எண்ணமென்றே ஆகிறார். எண்ணமே வேதமுனிவர். எண்ணமே பிரஜாபதிகள். ஒற்றைமலையில் எழுந்த உச்சிமுடிகள். எளிய கூழாங்கல் எனினும் அந்த மலையே நாம். எண்ணுவோர் இறப்பர், மறக்கவும்படுவர். எண்ணம் என்றுமிருக்கும். எண்ணப்பெருக்கில் அலையென்றாகுக, துளியென்றும் துமியென்றும் ஆகுக! அதுவே ஆணவத்தை வெல்லும் வழி.”

“எண்ணத் தொடங்கும் இளையோன் தான் என தருக்குகிறான். எண்ணிக் கனிந்தோன் தானழிந்து அதுவென்றாகிறான்” என்றார் இளைய யாதவர். “ஆம், உடலெனும் பெருக்கு ஒழுங்கென அறிதலைப் பயின்று உட்செலுத்தி கனவென்றும் ஆழமென்றும் துரியமென்றும் ஆக்கி ஆதல்கொள்வதை நானும் அறிவேன். அந்தணரே, உடலென்றோ எண்ணமென்றோ தன்னை வகுப்பது மெய்தேர்வோனின் தெரிவு மட்டுமே. உடலென தன்னைக் கொள்பவன் உடலின் நோயையும் முதுமையையும் தன்னுடன் சேர்த்துக்கொள்கிறான். காலத்தில் இடத்தில் அமையும் உடலுடன் தன் சித்தத்தை கனவை ஆழத்தை பிணைத்துக் கொள்கிறான். அனலில் எரியாத, நீரில் நனையாத துயரும் உவகையும் நிலையழியச் செய்யாத ஒன்றென உணர்க! அதுவென்றாகுக!”

“அறிவரே, நாம் அறிவது எவ்வண்ணம்? இதோ இந்த மூங்கில்தூணை எப்படி மதிப்பிடுகிறோம்? நம்மின் மடங்காக.

விண்பெருக்கையே அவ்வாறுதான் உணர்கிறோம். நாமென்று நாம் உணர்வதே நாம் அறிவதனைத்திற்கும் அடிப்படை அலகு. 'நானேயிறை' என்னும் சொல்லின் முதற்பொருள் அதுவே. நான் என அறிவதன் மடங்கு அது. எண்ணிலா மடங்கு. எண்ணிச்செல்லவியலா விரிவு. ஆயினும் அது நானே. நான் எனத் தொட்டு இது என அறிந்து இவை என விரிந்து அது என உணர்ந்து அதுவே எனத் தெளிதலே அறிதலின் பாதை. உடலென்று உங்களை உணர்ந்தால் அம்முழுமை அன்னத்தின் பேருரு. எண்ணமென்று உணர்ந்தால் எண்ணத்தின் அலகிலி. இனியோரே, உள்ளூறையும் உவகையாக உணர்க! அவ்விறுதியை பேருவகையின் வெளி என சென்றடைவீர்கள்."

"இவ்வுடல் இன்றிருந்து நாளை மறைவது. பிணியும் சாக்காடும் கொள்வது. இதன் உள்ளூறைகிறது மூவாமுதலா உவகை ஒன்று. கல்லில் உறையும் கனல் அது. அலையற்றது, தழலாதது, பரவாதது. புகையும் ஒளியும் வெம்மையும் என உருப்பெறாதது. உண்ணாதது, அணையாதது. கல்லனல் எனக் கனிந்து உள்ளூறையும் மெய்மையே அங்குமிருப்பது. ஏனென்றால் தொடங்கும் புள்ளியிலேயே எப்போதும் முடிவும் இருக்கும் என்பது புடவியின் நெறிகளில் ஒன்று. அனல்கொண்ட கல்லை அறிக! அதிலிருந்து தொடங்குக!" என்றார் இளைய யாதவர்.

ஒரு கணம் எங்கிருக்கிறோம் என்பதையே உணராத விம்மிதமொன்றை சுப்ரியை உணர்ந்தாள். பின்னர் விழி பெருகிவழிய அழத்தொடங்கினாள். அழுந்தோறும் அவளுள் இனிமை மிகுந்து வந்தது. கைவிரல்கள் இனிமை கொண்டன. கால்நுனியிலிருந்து இனிமை எழுந்தது. உடலே தேனில் நாவென திளைத்து ஆடத்தொடங்கியது. கூசி மெய்ப்புகொள்ளச்

செய்யும் இனிமை. உடலை எட்டுத்திசையிலும் உடைத்துத் திறந்து எழுந்துவிடவேண்டும் என்று உளம்பொங்கச் செய்யும் இனிமை.

“கௌதமர் இங்கு உரைத்த சொற்களின் பொருட்டு தலைவணங்குகிறேன். ஆம், அந்த முழுமை ஒற்றைச் சித்தத்தில் அள்ளப்படுவது அல்ல. மானுடம் ஓருயிரென்றாகி காலகாலமெனச் சென்று அறியவேண்டிய முழுமை அது. ஆனால் அறிவரே, பருப்பொருளை அளையும் கட்டைவிரலறிந்த நுண்மைக்கு நூறுமடங்கை ஒளி துழாவும் விழி அறியும். வெளிபரவும் ஒற்றைச் சொல் அதனினும் நூறு மடங்கை அறியும். நாம் சொல்லும் ஒவ்வொரு சொல்லும் நம் முன்னோரின் முடிவிலாநிரையால் சொல்லிச் சொல்லி பொருளேற்றப்பட்டதே. அந்தணன் தான் வணங்கிய இறைச்சிலையை, ஷத்ரியன் தான் பழகிய வில்லை, சிற்பி தான் பயின்ற உளியை மைந்தனுக்கு அளித்துச்செல்வதுபோலவே ஒவ்வொரு சொல்லையும் நமக்கு அளித்துள்ளது நெடுமுன்மரபு.”

“உளமென்றும் மொழியென்றும் நீங்கள் உரைப்பது என்ன என்று உணர்ந்தீர்கள் என்றால் அது ஒருவர் அகத்தே முளைத்து அங்கேயே வாழும் ஒரு துளி என சொல்லமாட்டீர்கள், அளவைநெறியினரே” என்றபோது இளைய யாதவரின் குரல் மேலெழுந்தது. “இங்கு உரைத்தீர்கள் அல்லவா? வேள்விச்செயல் ஒவ்வொன்றும் தொல்முனிவர் ஆற்றிப்பழகி அளித்த மரபு என, சொல்லும் எண்ணமும் உணர்வும்கூட அவ்வாறு கையளிக்கப்பட்டவையே. ஒவ்வொரு சொல்லும் ஒரு வேள்விச்செங்கல். ஒவ்வொரு எண்ணமும் அவியுண்டு எழும் எரி. ஒவ்வொரு சொற்களமும் வேள்வி என்று உணர்க!

சொல்லிச் சொல்லிச் செல்லும் இப்பெருவேள்வியினூடாக சென்றடையவிருக்கிறது மானுடம்."

"ஆகவேதான் சொல்லை அறிய முன்னோர் வழக்கே முதல்நெறி என வகுத்தது இலக்கணம்" என இளைய யாதவர் தொடர்ந்தார். "சொல்லை கீழே கிடக்கும் கல் என எடுக்கிறோம். முன்னோர் வகுத்த வழிபடுநெறி என அதை தெய்வமாக்குகிறோம். வழிபடுகையில் எழுவது நம் தெய்வம். அது என்றென்றும் அக்கல்லில் உறைவதே. காலந்தோறும் தனித்தனி உண்மை என்று உருக்கொண்டு எழுவதே முழுமையின் வழி" என அவர் தொடர்ந்தார். "வேதமுடிபினன் சென்றடையும் பெருநிலையைப் பகிர்ந்துகொள்ள முடியாது. சொல்கையில் அது கருத்தாகிறது. சுட்டுகையில் சிலையாகிறது. வகுக்கையில் நெறியாகிறது. கடப்பதனூடாக அடைவதை பகிர்ந்து அளிக்கவோ பொறித்துச்செல்லவோ இயலாதுதான். ஆனால் நான் என இங்கு நின்றிருக்கலாம் சிலகாலம். நானே என காட்டலாம். ஆசிரியர்களே, அவ்வண்ணம் இங்கு வேதமுடிபின் வெறுமைப் பீடத்தில் அமர்ந்த உயிர்கடந்தோரை நீங்கள் கண்டதில்லையா? பரமஹம்சர் என பாதம் பணிந்ததில்லையா?"

"அவர்கள் சென்றமர்ந்த இடங்கள் ஆலயங்களாகின்றன. அவர்கள் நீராடிய நதிகள் தூநீர் ஆகின்றன. அவர்களின் நினைவுகள் விண்மீன்களென மானுடச் சித்தவானில் என்றும் நின்றிருக்கின்றன. வேதமுடிபின் வழி முழுமைக்கானது என்பதற்கு அவர்களே விழிக்கூடான சான்று" என்றார் இளைய யாதவர். "ஒவ்வொரு மெய்பயில்வோனும் அவராகும் படி ஒன்றில் நின்றிருக்கிறான். வேதமுடிபின் ஒவ்வொரு சொல்லும் அவரைச் சுட்டி நின்றுள்ளன. இருந்திறந்தோர்.

எண்ணி எண்ணம் கடந்தோர். இதுவெனச் சுட்டுகையில் அதுவென்று நின்றோர். அவர்களை முன்வைத்தே இந்த அவையில் நெஞ்சுதொட்டு நிலை ஓங்கி நின்று ஆம், வேதமுடிபே பெருவழி என சொல்லத்துணிவேன்.”

“ஆணவம் குறித்து இங்கே பேசப்பட்டது. நன்று, இவ்வேள்விச்செயல் செய்து ஆணவம் அறுத்தோர் எவர்? இதோ அவைநிறைத்து அமர்ந்திருக்கும் இந்த அந்தணர்களா? கொடை குறைந்தால் முகம் சுளிப்பவர்கள். வேதச்சொல்லுக்கு பொன் மதிப்பிடுவோர். இவர்களின் வழியையா சுட்டுகிறீர்கள், கௌதமரே?” என்றார் இளைய யாதவர். அந்தணர்கள் சிலர் திகைத்தபடி எழ கையமர்த்தி அமரச்செய்துவிட்டு கௌதம சிரகாரி “நல்வழி என்பது அதை நண்ணி இறுதிவரை சென்றடைந்தோரால் மதிப்பிடப்பட வேண்டியது” என்றார். “ஆம், அதையே வேதமுடிபினருக்கும் அளியுங்கள். வெற்றுச்சொல் எடுக்கும் வேதமுடிபினனும் பொன்னுக்கு வேதமுரைப்பவனும் நிகரே. அதையே இந்த அவையில் நின்று சொல்கிறேன்.”

“ஆணவம் அனைத்து வழிகளிலும் மாசென வந்து படிவதே. அந்தணரே, மானுடர் எவராயினும் மாசடைந்த கலம் கொண்டவர்களே. மாசற்ற கலம்கொண்டவர்கள் மெய்தேடவேண்டியதே இல்லை. அக்கலத்தில் அதர் வினாவி வந்து அமரும் அம்மெய்மை. கல்வி என்பது மெய்மை வந்தமர பீடம் அமைத்தலன்றி வேறல்ல” என்றார் இளைய யாதவர். தன் சொற்களினூடாகவே அவர் நெடுந்தொலைவு சென்றுவிட்டவராக, அங்கிருக்கும் எவரையும் அப்போது அவர் தன்னுள்ளே உணரவில்லை என்று தோன்றியது. அவர் முகத்தையன்றி வேறெதையும் நோக்கமுடியாதவளாக சுப்ரியை அமர்ந்திருந்தாள். பல்லாயிரம் சிற்பங்கள் செறிந்த

ஆலயத்தில் அவையனைத்துக்கும் அப்பால் என் நின்றிருக்கும் கருவறைக் கருஞ்சிலை.

“செயலை அல்ல, சொல்லையும் எவரும் முழுதறியவியலாது, கௌதமரே. சொல் இப்போது அளிக்கும் பொருள் என்ன என்று கொண்டே சொல்லாடுகிறோம். சொற்பொருளை ஊழ்கம் கனிந்தால் எழவிருக்கும் தெய்வமென்று திசையெல்லையின் முடிவிலியில் நிறுத்துகிறோம். இங்கு மானுடர் ஆற்றக்கூடும் எதுவும் அவ்வண்ணமே இயல்வதாகும் என்றுணர்க! எனவே செயலில் என்றல்ல எங்கும் ஆணவமொழிதலே அறிவின் வழி. அறிதலினூடாக ஆணவம் கொள்ளவும் ஆணவத்தை அழித்தலும் கூடும். ஆணவமெனும் ஆசு இரிய நாம் அணுகுபவனையே ஆசிரியன் என்றன நூல்கள். கற்றலெனும் வேள்வியின் தலைவன் அவன். தென்றிசையில் ஆலமர்ந்தோன். தவத்தில் பெருகிய விரிசடையை தோள் நிரத்தி, மூவிழியில் முனிவதை மட்டும் மூடி, விழியும் கையும் அருள் காட்டி, இளநகை கூட்டி அமர்ந்திருப்போன். அவன் வாழ்க!”

அந்தணர் “குருவருள் பெருகுக! அறமுறை ஆசிரியன் அடி வாழ்க!” என வாழ்த்தினர். “ஆணவமறுத்தலை இங்கு சொன்னது அளவைநெறி. எங்ஙனம் ஆணவத்தை அறுப்பீர்? எது வேள்விநெறியென்று வகுக்கிறீர்? எது அல்லவென்று விலக்குகிறீர்? பிரித்துநோக்கும் மையமென உங்களை வைக்கும் ஆணவத்திலிருந்து எங்ஙனம் விடுபடுவீர்? தூயது தேர்வோன் மாசையே எண்ணிக்கொண்டிருக்கிறான். நன்று தேர்வோன் தீதையே பகுப்பாய்வுசெய்கிறான். அன்புசெய்வோன் வெறுப்பால் அதை எல்லை வகுத்திருக்கிறான். இருளில்லா வெளியையே

ஒளியென்று உணர்கின்றன விழிகள்” என இளைய யாதவர் தொடர்ந்தார்.

“அந்தணரே, அறிக! ஆணவத்தை வெல்லும் ஒன்று தன்னுவகையே. உயிர்களின் உட்பொறிக்கப்பட்டுள்ளவை இரண்டு முதலுணர்வுகள். தான் என உணரும் ஆணவம். தான் என உணரும் உவகை. இருக்கிறேன் என எண்ணி எழுகிறது பார்த்திவப் பரமாணு. ஆம், இருக்கிறேன் என்று மகிழ்கிறது அது. உவகையை பற்றிக்கொள்க! உவகையை பின்தொடர்க! உவகையில் நிலைகொள்க! உவகையன்றி எதையும் தெய்வமெனக் கொள்ளாதொழிக!”

“அந்தணரே, அறிஞன் என்பவன் காய்தல் உவத்தலின்றி உவகையை உளம்கொண்டவன். இன்பதுன்பங்களுக்கு அப்பால் மகிழ்ந்து அமர்ந்திருப்பவன். அறிக, குன்றா ததும்பா உவகையில் அமர்ந்திருப்பவனையே விடுபட்டவன் என்கின்றன வேதமுடிபின் நூல்கள். ஆணவத்தை வென்றவன் அவன் மட்டுமே” என்றார் இளைய யாதவர். “அவன் செயலாற்றலாம், கருத்தாடலாம், கடந்துசென்று ஊழ்கத்திலமையலாம். அவன் உவகையிலமர்ந்திருக்கின்றானா என்பதே அவன் அறிந்தானா அமைந்தானா என்பதற்கான சான்று.” அவையெங்கும் எழுந்து முழங்கிய பெருங்குரலில் “அத்தகையோரே இங்கு கௌதமர் வினவியதற்கு விடை. ஆம், முடிவிலியை தனி மானுடன் உளம்கொள்ள முடியும். எல்லையின்மையை பீடமாக்கி அவன் அமரமுடியும். முழுமை மானுடனுக்கு இயல்வதென்பதற்கு உயிர்கடந்தோரே சான்று” என்றார்.

அவையின் அமைதியை நோக்கி விழி செலுத்தி அவர் நின்றார். பின் “அதை எய்துவது தன்னந்தனிப் பயணம் வழியாகவே. திரளெனப் பெருகிச்சென்றல்ல. ஆனால் அத்தனியரை கூட்டாக

காலகாலமாக தவம் செய்து ஈட்டிக்கொள்கிறது மானுடம். ஆகவே அவர்கள் அடைந்ததெல்லாம் மானுடத்திற்கும் உரியனவே. தனிக் குகைக்குள் முழுமையடையும் ஒரு பரமஹம்சர் மானுடத்தை முழுமைநோக்கி கொண்டுசெல்கிறார். இந்த அவைநின்று முழுமைகொண்டமைந்த அத்தனை பேருருவர்களையும் தலையால் தாள்வணங்குகிறேன்” என்றார். அவையினர் கைகூப்பி வணங்கி “ஆம்! ஆம்! ஆம்!” என்றனர்.

“முழுத்தோர் சென்ற வழியேதென்று எளியோர் உணரவேண்டியதில்லை. அவர் நின்ற மண்ணில் நின்றே அதன் விழுப்பயன் கொள்ளமுடியும். இணையாகவே, வேள்விச்செயலின் பொருளறிய வேண்டிய தேவை அதனால் பயன்கொள்ளும் பல்லாயிரம்கோடியினருக்கு இல்லை, கௌதமரே. அவர்கள் மருந்துண்டு நலம்கொள்ளும் நோயாளர் மட்டுமே” என இளைய யாதவர் தொடர்ந்தார். “ஆனால் மருத்துவர் அறிந்தாகவேண்டும். நாள்தொறும் மாறும் சூழலுக்கேற்ப மருந்தின் அளவும் கலப்பும் உடன்கொள்ளும் நோன்பும் மாறியாகவேண்டும் . அதையுணர்ந்து அளிக்கும் நல்மருத்துவர் இல்லாமல் மருந்துண்பது நஞ்சுண்பதென்றே ஆகிவிடக்கூடும். ”

“நான் நோயாளரை நோக்கவில்லை, மருத்துவரிடமே உசாவ வந்துள்ளேன். அந்தணரே, நோய்தீர்க்கும் மருத்துவனே ஆசிரியன், வேள்வித்தலைவன் அவன்” என்றார் இளைய யாதவர். “கற்றலோ வேட்டலோ, மானுடனின் இயல்பென்று ஒன்றுண்டு. நிலத்தெழுந்த நீரெனப் பரவுவது அவன் உள்ளம். நிலையற்ற சிட்டு. தாவும் குரங்கு. நுனிமேயும் கன்று. அயல்பச்சை தேடும் புரவி. எனவேதான் அனைத்திற்கும்

இலக்கென்றும் மையமென்றும் ஒன்று அமைந்தாகவேண்டும் என்கின்றனர் நூலோர். நோய்நாடி நோய்முதல் நாடி மருந்தும் அறிந்தவனே மருத்துவன். கல்வியின் இலக்கும் வழியும் அறிந்தவனே ஆசிரியன். வேள்வித்தலைவர் அறிந்திருக்கவேண்டும் வேள்வியின் மையமென்ன, இலக்கென்ன என்று. வேள்வியின் வழியை அவர் வகுக்க அதுவே அடிப்படையாகவேண்டும்.”

“வேதங்கள் சொல்லிச் சென்றடைந்த உச்சமென்பது வேதமுடிபு. வேதம் பயிலும் முனிவர் சென்றடையும் முழுமை. வேள்வியின் மையமும் இலக்கும் அதுவே. அங்கிருந்துகொண்டு அவர்கள் வேதக்கூறுகளின், துணைவேதங்களின் இறுதிமுனைவரை சென்று சொல் ஆளவேண்டும். எங்கும் எவ்வகையிலும் வேதமோ துணைவேதங்களோ வேதக்கூறுகளோ வேதமுடிபுடன் மாறுபடும் என்றால் வேதமுடிபே தீர்வென்று கொள்ளப்படவேண்டும். கங்கை அடுமனையில், கழனியில் அன்னம் ஆகலாம். கலங்களை ஏந்திச்செல்லும் கருவியாகலாம். ஆனால் கங்கை என ஒரு கைப்பிடி அள்ளி வேள்விக்குக் கொண்டுவருகையில் நாம் அதில் உளம்கொண்டு உணர்வது ஆமுகத்தின் தூய்மையையே.”

“அந்தணரே, ஒவ்வொரு வேதச்சொல் உரைக்கப்படுவதும் ஒவ்வொரு துளி நெய் அவியிடப்படுவதும் வேதமுழுமையென எழும் ஒன்றின்பொருட்டே. அந்த மெய்மையையே அத்தனை சொற்களும் உணர்த்துகின்றன. அத்தனை செயல்களும் காட்டுகின்றன. அதுவென்றாகி அமர்ந்திருப்பவர்களையே அந்தணர் என்கிறோம். பிரம்மவடிவு கொள்கையிலேயே பிராமணன். அது எழாத வேள்வியில் அன்னம் அன்னமென்றே

எஞ்சும். அனல் அனலென்றும் சொல் சொல் மட்டுமே என்றும் இருக்கும். அந்தணன் மானுடன் என்றே அமைவான். அது வேள்வியல்ல, வெறுஞ்செயல். உண்பது வெறுஞ்செயல். புணர்வதும் அவ்வாறே. பிரம்மகொடை என ஆற்றப்படுகையிலேயே செயல் வேள்வியென்றாகிறது.”

“இது வேள்வி இது அல்ல என்று களைந்து கடந்து வந்தே ஒவ்வொரு வேள்வியையும் ஒருக்கூட்டுகிறீர்கள். எது ஒக்கும் எவை ஒவ்வா என்று எவ்வாறு முடிவு செய்கிறீர்கள்? எது சொல்லப்பட்டது எது செய்யப்பட்டது என்று மட்டுமே உசாவுகிறீர்கள். அந்தணரே, முனிவரே, எது வேதமுடிபுடன் ஒப்பது எது முரண்கொள்வது என்று மட்டுமே நோக்கவேண்டும் என்கிறேன். ஆசிரியர் அளித்த மருந்தை அவ்வண்ணமே அளிக்கும் மருத்துவன் கொலைஞனாகக்கூடும். வேதியரே, ஊழ்கத்திலமைந்து நோயை அறிக என்கிறேன்.”

“நூறாண்டுகள் ஆயிரமாண்டுகள் இங்கு வேள்விகள் நிகழ்ந்துகொண்டிருக்கின்றன. என்றும் அவ்வாறே அவை இங்கு நிகழும். ஆனால் அறியா மைந்தன் அலைகளை மாறா நிகழ்வு என்று காண்பதுபோல் ஆகலாகாது நம் பார்வை. ஓர் அலை பிறிதொருமுறை எழுவதில்லை. காற்றும் வானும் சமைக்கின்றன அலைகளின் வடிவங்களையும் விசையையும். படைப்புப்பெருக்கில் ஒன்று மீளநிகழ்வதென்று ஒருபோதும் இல்லை என்று உணர்க!”

“எது வேள்வி என்று வேதமுடிபு உரைக்கட்டும். வேதமுடிபிலமர்ந்த வேள்வித்தலைவர் இங்கு அதை சொல்லட்டும்” என்று இரு கைகளையும் விரித்து அமூர்த்தரை நோக்கி இளைய யாதவர் சொன்னார். “அந்தணரே, நீங்கள் அறிந்த வேதம் சொல்வதென்ன? அதன் ஒவ்வொரு சொல்லும்

காடுறங்கும் விதை என அறியாதவரா நீங்கள்? வேதமே உலகாகுக என்று ஆணையிடுகிறது வேதம். செயலனைத்தும் வேள்வியாகுக என அறிவுறுத்துகிறது. 'உலகேயொருகுடி' என்பதே அது அளிக்கும் ஊழ்கநுண்சொல். வேதம் கட்டுண்டு கறந்தளிக்கும் தொழுவப்பசு அல்ல. கால்களும் கண்களும் திறந்த வேள்விப்பரி. அது வெல்வதற்கு விரிந்துள்ளது இப்புடவி. அன்னையின் ஆணை மைந்தரை என நம்மை ஆள்கிறது வேதம் கொண்டுள்ள அவ்விழைவு. அதைத் தள்ளி புறம்காட்டி இங்கு அமர்ந்திருப்போமா நாம்?"

"சைந்தவத்தில் பிறந்தது நால்வேதம். காங்கேயத்தில் பொலிந்தது. இதுவே வேள்வி செழித்த நாற்றடி. இங்கிருந்து எழுந்து உலகாகவேண்டும் மூத்த முழுச்சொல். இதை இங்கேயே கட்டிப்போடுவது எது? இதன் கைகளிலும் கால்களிலும் கவ்விப்பற்றி நிறுத்தியிருப்பவர் எவர்? வேதம் காக்க அமைந்தது ஷத்ரியப் பெருங்குடி. ஆயிரமாண்டுலம் தங்கள் கடமையைச் செய்து வேதம் புரந்தனர் அவர்கள். இன்று தங்கள் கடமையை உரிமையென மயங்கியிருக்கிறார்கள். வளர்ந்த பின்னரும் மகளை மடியிலிருந்து இறக்காத தந்தையரைப்போல. தங்கள் நிலத்தில் வேதத்தை அணைகட்ட முயல்கிறார்கள். தங்களுக்குரியதென்று அறைகூவுகிறார்கள்."

"அறிக, உங்கள் நாட்டில் நுழைவதனால் நதி உங்களுடையதாவதில்லை. அது உங்கள் குளங்களை நிறைத்துவிட்டு கடந்துசெல்லும். படித்துறைகளே உங்களுடையவை. அங்கே மலரிடுங்கள், வழிபடுங்கள். அணைகட்ட நினைத்தால் பெருகி உங்கள் ஊர்களை மூழ்கடிக்கும். உங்கள் இல்லங்களை அள்ளி எடுத்து தன் திசையை நாடும். ஷத்ரியரே, வேதம் மேலும் மேலும் தன்

காவலரைக் கண்டடையும். அவர்களின் வாள்கள் வேலியிட விரிந்து விரிந்து நிலம்தழுவிப் பெருகும். உங்கள் போர் வரவிருக்கும் வேதக்காவலரிடம் என்றால் வேதத்தையே நீங்கள் எதிர்க்கிறீர்கள் என்றே பொருள். வேதத்தைக் காப்பதற்காக அல்ல, அடிமைகொள்ளவே இங்கு வேள்விமுகம்கொண்டு அமர்ந்திருக்கிறீர்கள். வேதத்தின் பொருட்டு உங்களை அளிப்பதற்காக அல்ல, வேதத்தை அள்ளி களஞ்சியம் நிரப்பவே படைக்கலம் கொண்டிருக்கிறீர்கள்."

ஒரு கணம் அவை அமைதியாக இருந்தது. சினத்துடன் ருக்மி எழுந்து கைநீட்டி "இது ஷத்ரிய வெறுப்பு! குலமிலியின் கீழ்மைச்சொல்!" என்று கூவியதும் ஷத்ரியர்கள் கூச்சலிட்டபடி எழுந்தனர். கைகளை நீட்டியபடி "அமர்க! அவையெழுந்த சூத்திரன் சொல் இது. அமர்க அவன்! இக்கணமே அவை நீங்குக! கீழ்மை! இழிசொல்!" என கூச்சலிட்டனர். கௌதம சிரகாரி "அமைதி! அமைதி!" என்று கூவ அவருடைய மெல்லிய குரல் எழவேயில்லை. காசியப கிருசர் கைகளை வீசியபடி நாற்புறமும் நோக்கி "அமர்க! அமர்க!" என்று கூவினார். அமூர்த்தர் கண்காட்ட உக்ரர் பெருஞ்சங்கத்தை முழக்கினார். அதர்வத்தின் ஒலி அவர்களை திகைக்கச் செய்தது. அவை மெல்ல அடங்கியது.

அதுவரை கைகளைக் கட்டியபடி புன்னகையுடன் இளைய யாதவர் நின்றிருந்தார். அவர் விழிகள் ஒவ்வொரு முகத்தையும் தொட்டுத்தொட்டுச் சென்றன. கர்ணன் விழிகள் நிலம் தொட்டு ஊன்றியிருக்க கைகளை தொங்கவிட்டு தலைதாழ்த்தி நின்றிருந்தான். காசியப கிருசர் "சொல் எழுக, யாதவரே!" என்றார். இளைய யாதவர் "வணங்குகிறேன், ஆசிரியரே. அவையில் நான் எழுப்பும் இச்சொல் இன்றுள்ள

எச்செவிகளுக்காகவும் அல்ல. என்றுமுள்ள உள்ளங்களுக்காக. ஏனென்றால் இந்தப் பூசல் என்றுமிருக்கும். இது மெய்மைக்கும் அதை தன் உலகியல் படைக்கலமாகக் கொள்ளவிரும்புபவர்களுக்கும் இடையே நிகழ்வது. பிறப்புரிமைக்கும் வெல்லுமுரிமைக்கும் நடுவே எழுவது. நின்றிருப்பவர்களுக்கும் செல்பவர்களுக்கும் ஊடே ஓங்குவது" என்றார்.

"சிதறிப்பரவுவது மானுட உள்ளம். அது இயற்றும் செயல்களனைத்தும் தங்கள் எல்லைகள் தோறும் முட்டிவிரிவதே வழக்கம். ஒவ்வொன்றும் வடிவிழந்து மையமழிந்துகொண்டே இருப்பதையே நாம் சூழவும் காண்கிறோம். அதை தொகுக்கும் வழிகளென இரண்டை முன்னோர் கொண்டனர். எல்லைகட்டி வகுத்து அமைத்தல் ஒன்று. மையம் அமைத்து சுட்டிச் செல்லுதல் பிறிதொன்று. இரண்டு வழிகளும் தேவையானவையே. வடிவத்தை நிலைநிறுத்துவது முதல் வழி. விசை குன்றாமலிருக்கச் செய்வது இரண்டாவது வழி. அளவைநெறியின் வழி எல்லை வகுத்தமைவது. வேதமுடிபினரோ மையத்தில் எழுந்து விசைநாடுபவர்கள்."

"அந்தணரே, சென்ற ஆயிரமாண்டுகளில் வேதச்சொல் ஒவ்வொன்றும் இங்குள்ள சொல்வளர்காடுகளில் பெருகி வளர்ந்து வியனுருக் கொண்டன. நாற்றடியில் பயிர்செழித்த காலம் அது. அதன் காவலர் என ஐம்பத்தாறு ஷத்ரியர் அமைந்தனர். அன்று எல்லை வகுத்து இதன் வடிவு காத்த அளவைநெறி தன் பணியை சிறப்புறவே நிகழ்த்தியது. இன்று பாரதவர்ஷம் உழுது நீர்மேவிய விளைநிலமென காத்துக்கிடக்கிறது. இங்கிருந்து எழுந்து பரவவேண்டும் வேதம்.

இதற்குரியது அதன் மையத்தை வகுத்து முன்னெடுத்துச் செல்லும் வேதமுடிபின் விசையே. வடிவு மாறாமையை இன்று கைகொண்டால் அதை தேங்கி நிற்கச்செய்தவர்களாவோம். பயிர்க்காவலர் சிறைக்காவலர்களென மாறுவார்கள்.”

“அவர்களிடம் வேதத்தைச் சிறையிட வேண்டாம் என கோரவில்லை நான். அம்முயற்சியில் குடியும் குலமும் உடைந்தழிய பெயரொன்றே எஞ்சும் தீயூழ் கொள்ளவேண்டாம் என்றுதான் மன்றாடுகிறேன். வேதத்தைப் பேணும் பொறுப்பு அவர்களுக்கு அளிக்கப்பட்டதே அவர்களால் வேதம் நலம்பெறவேண்டும் என்பதனால் அல்ல, வேதத்தால் அவர்கள் நலம்பெறவேண்டும் என்பதனால்தான். இன்று அவர்கள் கொண்டுள்ள நாடும் செல்வமும் புகழும் வேதத்தின் கொடையே. அதன்பொருட்டேனும் வேதம் பெருக அவர்கள் எழவேண்டும். வாளேந்தி நின்றவர்கள் வேதத்தேராளிகளென்றாகுக! அதுவே அவர்களை மேலும் பெருமைகொள்ளச் செய்யும்.”

“பாரதவர்ஷமெங்கும் வேதம் செல்லும். உலகநிலங்களை நனைத்து செழிப்புறச் செய்யும். நதி தன் கரையில் மரம் செறிந்து கரையென்றாகச் செய்வதுபோல் வேதமே தன் காவலர் நிரையை உருவாக்கும். அவ்வாறு எழுந்து வரும் புதிய குடியினரை எதிர்த்து நிற்க இன்று இங்கிருக்கும் ஷத்ரியர்களால் முடியாது. கண்ணெதிரே எழுந்து நின்றிருக்கும் படை சிறிதென்று உங்களுக்குத் தோன்றலாம். ஷத்ரியரே, அதை ஏந்தியிருப்பது வேதமென்று உணர்க! அதை வெல்ல ஒருபோதும் உங்களால் இயலாது. அதை உணர்ந்துகொள்ள

ஷத்ரியர்களால் முடியாது என்றால் மெய்யுரைக்கும் முனிவர், நெறிநிற்கும் அந்தணர் வழிகாட்டுக!”

“உங்கள் கோரிக்கையை முற்றுசெய்க, யாதவரே” என்றார் அமூர்த்தர். “வேதம் காக்கும் வில்லுடன் எழுந்து நின்றிருக்கும் அங்கநாட்டரசர் அவ்வண்ணம் இங்கு எழவிருக்கும் பல்லாயிரம் புதிய ஷத்ரியர்களின் முதல் வடிவம். அவர் அவையமர வேண்டும். வேள்விச்செயல் முடிக்கவேண்டும். அது பாரதவர்ஷத்திற்கே இப்பெருவேள்விநிலை அளிக்கும் செய்தியாக அமையவேண்டும்” என்றார் இளைய யாதவர்.

# குருதிச்சாரல் - 77

**பகுதி பத்து : பெருங்கொடை – 16**

காசியப கிருசர் அவை நோக்கி கைதூக்கி “இந்த அவையில் ஷத்ரியர் தங்கள் தரப்பை சொல்லலாம்” என அறிவித்தார். “வேள்வியவையில் ஷத்ரியர் பேசுவதற்கு வகுக்கப்பட்டுள்ள முறைமைகளை அறிந்திருப்பீர்கள், அரசர்களே. ஷத்ரியர் வேதங்களைக் குறித்தோ, வேள்விநெறிகளைக் குறித்தோ ஐயமோ மாற்றுரையோ முன்வைக்கலாகாது. அந்தணர்மீது கருத்துரைக்கலாகாது. அந்தணர்சொல்லை மறுத்துரைத்தலும் ஏற்கப்படுவதில்லை. அவர்கள் முனிவர்களின் சொல்லை மறுத்துரைக்கவேண்டுமென்றால் பிறிதொரு முனிவரின் மாணவராக இருக்கவேண்டும், அம்முனிவரின் ஒப்புதல்பெற்றிருக்கவேண்டும்.”

“அரசுசூழ்தல் களத்தில் எக்கருத்தையும் எவரும் சொல்லலாம், ஒருவர் சொன்னதை பிறர் மீண்டும் சொல்லக் கூடாது. ஒருவர் கருத்தை பிறர் மறுக்கலாம், ஆனால் அக்கருத்துக்கள் அனைத்தும் வேள்வித்தலைவரை நோக்கியே சொல்லப்படவேண்டும். இளிவரலோ வசைச்சொல்லோ தவறியும் எழலாகாது. எழுந்தால் வேள்விச்சாலையை தூய்மைப்படுத்தி மாற்றமைத்து மீண்டும் முதலில் இருந்தே வேள்வியை தொடங்கவேண்டும் என்பது நெறி. அச்செலவுடன் பிழைச்செல்வத்தையும் அவ்வரசர் அளிக்கவேண்டும். அவர் ஏழு நாட்கள் உணவும் நீரும் நீத்து நோன்புகொண்டு தன்னை தூய்மை செய்து ஆப்பொருள் ஐந்து அருந்தி நிறைவுசெய்த பின்னரே வேள்வியவைக்குள் வந்தமர முடியும்.”

“வேள்வித்தலைவரிடம் அவிமிச்சம் பெற்ற பின்னரே அவர் தன் செங்கோலையும் அரியணையையும் தொடமுடியும். வேள்விக்காவலர் விழைந்தால் அவச்சொல் உரைத்தவரை வேள்வியைத் தடுத்தவர் என அக்கணமே கொல்ல ஆணையிடமுடியும். வேள்வியில் அவச்சொல் உரைத்தவரின் முதல் மைந்தருக்கு தந்தையை முடிநீக்கம் செய்து தான் அரசுகொள்ளும் உரிமையையும் வேள்விநெறி வழங்குகிறது. வேள்வித்தலைவரின் விருப்பமே அதில் முதன்மையாக கருத்தில் கொள்ளப்படும்” என்றார் காசியப கிருசர். “வேள்விச்சாலையின் உள்ளே திகழும் காற்றுவெளி வேதமொழியால் ஒழுங்கமைக்கப்பட்டுள்ளது. அதில் தேவர்கள் நிறைந்துள்ளனர். அவர்கள் அவைவிலகும் ஒரு சொல்லும் இங்கு உரைக்கப்படலாகாது. ஆணை தலைக்கொள்க அவை!”

அரசர்கள் தலைவணங்கி “ஆம்! ஆம்! ஆம்!” என்றனர். காசியப கிருசர் அவையை நோக்கியபடி காத்து நின்றார். அமைதி

நிலவிய அவையில் விழியறியாமலேயே சொல்திரள்வதை நுண்ணுள்ளத்தால் உணரமுடிந்தது. சுப்ரியை ஒவ்வொரு முகமாக நோக்கிச் சென்றாள். பீஷ்மர் துயிலில் என தொய்ந்திருந்தார். சகுனி தொலைவில் விழிநட்டு அமர்ந்திருந்தார். ஜயத்ரதனும் ருக்மியும் உடலை தளரவிட்டு கால்நீட்டி அமர்ந்திருந்தனர். துரோணர் கிருபரிடம் ஏதோ மெல்லிய குரலில் சொல்லிக்கொண்டிருக்க கணிகர் மின்னும் சிறுகண்களுடன் தென்னெரியின் தழலை நோக்கிக்கொண்டிருந்தார். அரசர்களிடமிருந்து மெல்லிய முழக்கமொன்று கேட்கத்தொடங்கியது, குகைக்குள் தேனீ ஓசை என.

சல்யர் எழுந்து வணங்கி "நான் வேள்வி குறித்து இங்கே ஒன்றும் சொல்ல விழையவில்லை. இதிலுள்ள அரசுசூழ்தல் நுட்பத்தை மட்டும் அவையினருக்கு சொல்ல விரும்புகிறேன். இளைய யாதவர் மிகச் சிறப்பாக சொல்நகர்த்தி சரியான புள்ளிக்கு கொண்டுவந்துள்ளார். இன்று இந்த அவைக்கு இரண்டு வாய்ப்புகளே உள்ளன. நாம் அங்கநாட்டரசரை வேள்வியவையிலிருந்து வெளியேற்றுவது. அதனூடாக நாம் நம் தரப்பில் வில்லேந்தவிருந்த மாபெரும் வீரர் ஒருவரை இழக்கிறோம்" என்றார்.

அரசர்களிடமிருந்து எழுந்த சொல்லிலா முழக்கத்தை நோக்கி புன்னகையுடன் தலையசைத்துவிட்டு சல்யர் சொன்னார் "அல்லது அவரை அவையமரச் செய்யலாம். அதனூடாக நாம் வேள்விக்காவலுக்கென முன்னோரால் அமைக்கப்பட்ட தொல்குடி ஷத்ரியர்களின் உரிமைக்காக எழுந்துள்ளோம், வேதநெறி மாறாது காக்க உறுதிகொண்டுள்ளோம் என்பதை நாமே மறுக்கிறோம். அதன்பின் ஷத்ரியப் படைக்கூட்டே

பொருளில்லாமலாகும். இரண்டில் எதை தெரிவு செய்தாலும் நாம் தோற்றவர்கள், அவர் வென்றவர்.”

அரசர்களிடமிருந்து சினம் வெளிப்படும் மென்முழக்கம் எழுந்தது. சல்யர் “இதில் அங்கர் வெளியேற்றப்பட்டால் நாம் இழப்பது சிறிது. போரில் எந்தத் தனிமனிதனும் இன்றியமையாதவன் அல்ல. பீஷ்மர், துரோணர், அஸ்வத்தாமர், ஜயத்ரதர், துரியோதனர் என்னும் பெருவீரர்கள் நமக்கிருக்கிறார்கள். ஷத்ரியப் பெருவீரர் உடனிருக்கிறார்கள். கரையிலாப் பெரும்படை உள்ளது. நாம் வெல்வோம் என்பதில் ஐயமில்லை. ஆனால் அவரை வேள்விக்கு அமர்த்தினோமென்றால் நம் படை மெல்ல மெல்ல சிதறுவதை நம்மால் தடுக்கவே முடியாது” என்று தொடர்ந்தார்.

“ஏனென்றால் தென்றிசை அரசர்கள் இப்போதே சைந்தவ, சாரஸ்வத, காங்கேய நிலத்தின் தொல்குடி ஷத்ரியர்கள் படைமுதன்மை கொள்வதை எண்ணி கசப்பும் அச்சமும் கொண்டிருக்கிறார்கள். அவர்களிடம் இது வேத உரிமைகொண்ட ஷத்ரியர்களின் படைக்கூட்டு என்னும் சொல்லே நாம் சொல்லும் மறுமொழியாக உள்ளது. அதை மறுத்தால் இக்கூட்டை கட்டியமைத்திருக்கும் சரடு அறுபடுகிறது. பாண்டவர் தரப்பின் மிகப் பெரிய படைக்கலம் இளைய யாதவரின் நாக்கே என்பதில் ஐயம் தேவையில்லை.”

கைகூப்பி தலைவணங்கி சல்யர் அமர்ந்ததும் அரசர்களின் அவையிலிருந்து “ஆம்! மெய்!” என்று குரல்கள் எழுந்தன. “நம் படைக்கூட்டுதான் நம் வல்லமை” என்று தமகோஷர் உரத்த குரலில் சொன்னார். சுபலர் “நாம் நம் ஒற்றுமையை இழந்தோமென்றால் அழிவோம்!” என்றார். “சூதனை வேள்விக்காவலனாக அமரச்செய்தால் பின்னர் ஷத்ரியப்

படைக்கூட்டு எதற்கு?” என்றார் சோமதத்தர். காசியப கிருசர் கையமர்த்தி “வெற்றுசொல் வேண்டியதில்லை. சல்யர் தன் தரப்பை சொல்லிவிட்டார்” என்றார்.

அஸ்வத்தாமன் எழுந்து “இளைய யாதவரிடமே நான் கேட்க விழைகிறேன். வேதமுடிபின் மையநிலை குறித்து இங்கே சொல்லெடுத்தீர்கள். அசுரவேதமும் அரக்கவேதமும் நாகவேதமும் பயிலும் குலங்களைத் திரட்டி நீங்கள் அமைத்துள்ள பாண்டவப் படைக்கூட்டும் வேதமுடிபுக் கொள்கையை நிலைநாட்டுவதற்குத்தானா?” என்றான். பல அரசர்கள் அவர்களின் சொற்களே அவ்வாறு ஒலித்தன என உணர்ந்து உள்ளெழுச்சியால் எழுந்துவிட்டனர். பூரிசிரவஸ் “ஆம், நான் கேட்க விழைவது அதுவே” என்றான். ஜயத்ரதன் “முதலில் அதற்கு மறுமொழி சொல்லட்டும் யாதவர். அவரிடம் சொல்லில்லை என்றால் இக்கணமே அவை நீங்கட்டும்” என்றான்.

இளைய யாதவர் இயல்பு மாறா குரலில் “அஸ்வத்தாமரே, நான் அசுரவேதத்தையும் அரக்கவேதத்தையும் நாகவேதத்தையும் பிற நிஷாதவேதங்களையும் அணைத்துக்கொள்வதும் வேதமுடிபை நிறுவுவதன்பொருட்டே” என்றார். ஒருகணம் அச்சொற்கள் புரிபடாமல் அவை திகைத்து அமர்ந்திருந்தது. எங்கோ ஏளனமும் சினமும் கலந்த ஒரு எக்காளச் சிரிப்பு எழுந்ததும் நெய்யனல் என பற்றிக்கொண்டு அவையினர் கொந்தளித்தெழுந்தனர். “அறிவின்மை! ஆணவம்!” என்று அந்தணர் கூச்சலிட்டனர். குண்டர் எழுந்து கைநீட்டி இளைய யாதவரை நோக்கி ஓடிவந்தார். “அவைச்சிறுமை! அவைச்சிறுமை! வேதத்தை இழிவு செய்த இவரை இன்னுமா தாங்கிக்கொண்டிருக்கிறோம்? துணைவரே, வேதியரே, இதைவிட

வேதமறுப்பென்று ஒன்று உண்டா என்ன?” என்று கூவினார். குண்டஜடரர் “வேதமறுப்பே வேதமுடிபின் வழி… வேறேது சான்று தேவை?” என்று கூவினார்.

அலையென்றான கைகளுக்குமேல் ததும்பி தத்தளித்தன முகங்கள். வெறுப்பில் ஏளனத்தில் சுளித்தவை, இழுபட்டவை, இளித்தவை. நடுவே இளைய யாதவர் முகம் எவ்வுணர்ச்சியும் இல்லாத புன்னகையுடன் அசைவிலாது நின்றிருந்தது. காசியப கிருசர் கைவீசி “அமர்க, அவர் சொல்வதை சொல்லி முடிக்கட்டும்! அமர்க!” என்று கூச்சலிட்டார். அமூர்த்தரே எழுந்து கைதூக்கி “அமர்க!” என ஓங்கிய குரலில் சொன்னார். களிற்றுப்பிளிறலென ஒலித்த அதர்வம் பயின்ற குரல் அனைவரையும் அக்கணமே வாய்நிலைக்கச் செய்தது. கைகள் தொய்ந்திறங்கின. “அமர்க!” என்றார் அமூர்த்தர். அவர்கள் அமரும் ஓசைகள் நுரைப்படலம் குமிழிகளுடைந்து அழிவதுபோல ஒலித்தது.

காசியப கிருசர் “சொல்லுங்கள், இளைய யாதவரே” என்றார். “அவையோரே, இமயத்திலிருந்து எழுந்ததே கைலை மலைமுடி. ஆனால் புலரிப்பொன்னொளியில் வான்விரிவு அதை தான் எடுத்து மடியில் வைத்திருக்கிறது. வேதமுடிபு வேதமே. ஆனால் முழுமையின் மெய்யொளியில் அது வேதங்களுக்கும் மேல் விண்ணில் எழுந்து நிற்கிறது. வேதங்களை, வேதக்கூறுகளை, துணைவேதங்களை மதிப்பிடும் துலாவின் நடுமுள் அது. அறிவனைத்தும் வேதத்தின் ஒளியால் துலங்குபவை என்கின்றனர் முன்னோர். எனவே மானுட மெய்மை அனைத்தையும் அளவென்றாகி மதிப்பிட்டு, மையமென்றமைந்து தொகுத்து, ஒளியென்றாகி துலக்கி, வானின்

ஒலியென்றாகி வழிகாட்டிச் செல்லும் தகைமை கொண்டது வேதமுடிபு” என்றார் இளைய யாதவர்.

“எவ்வண்ணம் வேதமுடிபை அளவையாகக்கொண்டு வேதங்களையும் வேதக்கூறுகளையும் துணைவேதங்களையும் மதிப்பிடுகிறோமோ அவ்வண்ணமே வேதத்தால் ஒளிகொள்ளும் மானுட அறிவனைத்தையும் மதிப்பிடவேண்டும் என்று ஆணையிடுகிறது வேதம். இது வேதத்திற்கு உகந்ததல்ல என்று விலக்கலாமென்றால் அந்நெறிப்படியே இது வேதத்திற்கு உகந்ததே என்று ஏற்கவும் செய்யலாம். ஆசுரம், அரக்கம், நிஷாதம் என்னும் புறக்குடியினரின் வேதங்களிலிருந்தும் யவனம், சோனகம், காப்பிரி என்னும் அயல்குடியினரின் வேதங்களிலிருந்தும் உகந்த அனைத்தையும் அறிந்து, அளந்து, முகந்து தன்னுள் இணைத்து வளர்ந்தெழுவதே வேதமுடிபுக்கொள்கை. அவ்வண்ணமே அது உலகாளமுடியும்.”

“அறிக, ஒரு நாள் வரும். அன்று வேதமுடிபு உலகெலாம் காண எழுந்து நிற்கும். அனலென்றாகி உலகமெய்மைகள் அனைத்தையும் உருக்கி மாசகற்றி ஒளியூட்டி ஒன்றென்றாக்கும். அந்தணரே, பிரித்தகற்றுவதல்ல அதன் நெறி, ஒருங்கிணைப்பதே. வெல்வதல்ல, தழுவுவதே. ஆள்வதல்ல, அனைத்துமாவதே. வேதமுடிபால் தனதல்ல என்று ஒதுக்கப்படும் ஒன்றும் இங்கு இல்லை. நன்றுதீதுக்கு அப்பால் நின்றிருப்பது அது. தானேயாம் என்று தழுவி அமர்ந்து முழுமைகொள்வது. அந்நெறியை யோகம் என்றது என் குருமரபு. அச்சொல்லை இங்கு முன்வைக்கவே அவையெழுந்தேன். யோகத்திலமர்ந்து நான் என்று ஒற்றைச்சொல்லில் உலகே தன்னை உணரும் ஒருநாள்.

அன்றுதான் முழுதும் வென்றது வேதமுடிபென்று முந்தை முனிவரிடம் சொல்லவியலும் மானுடம்.”

“அதன் தொடக்கத்தை இங்கு நிகழ்த்தவே வந்தேன். முதலில் நாற்றங்காலில் இருந்து அதை பிடுங்கி நடுவோம். கழனிகள் விரிந்துள்ளன பாரதவர்ஷத்தில். கரட்டுநிலங்களும் காடும் விரிந்துள்ளன உலகமெங்கும். இனி இந்நிலத்தில் வேதங்கள் தங்களுக்குள் போரிடா. இனி இங்கு நிகழ்வது முரண்களின் யோகம் மட்டுமே. பல்லாயிரம் கிளைப்பிரிவுகளுக்கு அடியில் தழுவி ஒன்றாகுக வேர்கள்! உங்கள் சொற்கள் ஒன்றாகுக என்று ஆணையிட்ட வேதத்திற்கு ஆமென்று மறுமொழியுரைக்கும் தருணம் எழுந்துள்ளது இன்று” என்றார் இளைய யாதவர்.

பின்னர் சற்று மாறுபட்ட குரலில் “ஆம், இனி வேதப் போரில்லை, அரசர்களே. உண்டென்றால் அதுவே இறுதிப்போர். அதில் வேதமுடிபே வெல்லும். ஏனென்றால் மெய்மை வென்றாகவேண்டும் என்னும் நெறியை முதற்கண்ணியென்று கொண்டே இப்புடவியை முடைந்திருக்கிறான் பிரம்மன். அப்போர் நிகழுமென்றால் எதிர்த்தரப்பை முற்றழித்து அது நின்றிருந்த இடமொன்றே எஞ்ச கடந்துசெல்லும் வேதமுடிபு. அவ்வழிவை விழிமுன் காண்கிறேன். அறிக, ஆக்கத்திற்கு முந்தைய அழிவே கொடியது. உழுகையில் அழிபவை வேட்டையில் இறப்பவற்றைவிட பலமடங்கு. இதற்கப்பால் அரசரிடம் நான் சொல்ல பிறிதொன்றுமில்லை” என்றார்.

மறுசொல் நாடி அனைவரும் கௌதம சிரகாரியை நோக்க அவர் “யாதவரே, அவ்வண்ணம் உலக வேதங்கள் அனைத்தையும் ஒருங்கிணைக்கும் வேதமுடிபு தன் முதல் வேதமென்று நால்வேதத்தை கொள்ளுமா?” என்றார். “தன்

வேதம் இதுமட்டுமே என்று கொள்ளுகையில் குடியில், நிலத்தில், மொழியில் தன்னை நிறுத்திக்கொள்கிறது வேதமுடிபு. ஏனென்றால் வேதம் குடியில், நிலத்தில், மொழியில் மட்டுமே அமையமுடியும். அது செவிக்கும் செயலுக்கும் சிக்குவது. வேதமுடிபோ சித்தத்திலிருந்து முடிவின்மை நோக்கி எழும் நுண்மை. அது நிலம் கடந்து குலம் கடந்து சொல் கடந்து மட்டுமே நின்றிருக்கவியலும்" என்றார் இளைய யாதவர்.

கௌதம சிரகாரி "அவ்வண்ணமென்றால் நீங்கள் மானுட குலத்திற்குமேல் நால்வேதத்தின் முதன்மையை மறுக்கிறீர்களா?" என்றார். "ஆம்" என்றார் இளைய யாதவர். "தொல்முனிவர் யாத்து வியாசர் தொகுத்த நால்வேதம் இந்நிலத்திற்கும் இம்மொழிக்கும் இங்குள குலங்களுக்குமானது. விரிந்துளது உலகு. ஒருநாள் துவாரகையின் கடல்முகத்தில் நின்று நோக்குக! மனிதமுகங்களின் முடிவிலா வடிவுகளில் எழுகின்றன நிலவிரிவுகள், குலத்தொகைகள். வேதமெனக் கனிந்து இங்கு இறங்கியது அங்கும் வந்தமைந்திருக்கும். அந்தணரே, அங்கு மாரி பெய்கிறது என்பதே வேதமும் பொழிந்திருக்கும் என்பதற்கான சான்று. அவை வேதங்கள் என்றால் இவ்வேதம் கொண்ட மெய்மையே அவற்றிலும் அமைந்திருக்கும். இவையனைத்தும் வேதங்கள் என்றால் ஒன்றையே உரைத்து நின்றிருக்கும்."

"வேதியரே, முனிவரே, அந்த ஒன்றெனத் திரள்வதே வேதமுடிபு. இங்கு இவ்வேதத்தில் திரண்டெழுந்தது அது என்பதனாலேயே அனைத்திலும் அதுவே உறைகிறது என்று உறுதிகொண்டிருக்கிறேன். மொழிகற்று நூலாய்ந்து நான் கண்டடைந்தது இது. இங்கிருக்கும் எவருக்கும் மீதாக எழுந்து

நின்று காலநெடுந்தொலைவை நோக்கி கண்செலுத்தி இதை சொல்கிறேன், ஒன்றே மெய்!” என்றார் இளைய யாதவர். “ஒன்றே யாம்! அவ்வொன்றே இவையனைத்தும்.” வலக்கையைத் தூக்கி ஓங்கிய குரலில் அவர் சொன்னார் “எவர் அதை எவ்வண்ணம் வேண்டுகிறார்களோ அவர்களை அது அவ்வண்ணம் சார்கிறது. அந்தணரே, மானுடர் எங்கும் அதன் வழியை மட்டுமே தொடர்கிறார்கள்.”

சுப்ரியை மீண்டும் மெய்ப்புகொண்டாள். அவள் கால்கள் உதறித்துடித்தன. முதல்முறையாக மகப்பேற்றின் வலியின்போதுதான் அத்தகைய உடல்துடிப்பை அவள் அடைந்தாள். தன்னுடலில் பிறிதொரு உயிர் எழுந்து துடிப்பதை. விடுபட்டெழ வெம்புவதை. கூடவே அங்கிருந்து எழுந்து சென்றுவிடவேண்டும் என்ற துடிப்பும் எழுந்தது ஏன் என அவள் ஆழம் வியந்தது.

“அவையோரே, இங்கு நின்று என் நெஞ்சைத்தொட்டு ஐயமின்றி சொல்கிறேன், அறிக, நானேயிறை!” என்றார் இளைய யாதவர். “காலந்தோறும் நான் பிறந்தெழுவேன். களந்தோறும் முகம் கொள்வேன். நிலந்தோறும் சொல்சூடுவேன். இங்குள மெய்மையெல்லாம் ஒன்றே என்றும் ஒன்றென்றானதே நான் என்றும் எங்கும் நின்றுரைப்பேன். அறுபடா மாலையின் முடிவிலா மணிகள் என காலந்தோறும் நான் எழுந்துகொண்டே இருப்பேன். வாளேந்துவேன். சொல்சூழ்வேன். ஊழ்கத்திலமர்வேன். ஒருபோதும் ஒழியமாட்டேன். உலகெங்கும் என் சொல் நிலைகொள்ளும். இக்கணம் அதை சான்றுரைக்கட்டும். ஆம், அவ்வாறே ஆகுக!”

சுப்ரியை அவையினர் முகங்களை மாறிமாறி நோக்கினாள். அவர்களில் முழு மூடர்களெனத் தெரிந்தவர்கள்கூட தங்கள்

விழிகளைக் கடந்த ஒன்றைக் கண்டவர்கள்போல திகைப்பு கொண்டிருந்தனர். கௌதம சிரகாரி அந்த அமைதியில் மெல்ல கைகூப்பியபடி எழுந்தார். "யாதவரே, தாங்கள் எவர் என்று என் உள்ளம் ஒருகணம் திகைத்தது. பிறிதெங்கோ இருந்து இங்கு மீண்டுவந்தேன். என்னை மீண்டும் சொல் சொல்லென தொகுத்துக்கொண்டேன். என் ஆசிரியமரபு எனக்களித்த ஆணையை அவையுரைப்பது என் கடன் என உணர்ந்தேன். பிறிதெதுவாகவும் என்னை வகுத்துக்கொள்ள இப்பிறவியில் எனக்கு உரிமையில்லை. ஆகவே இதை மீண்டும் இந்த அவையில் முன்வைக்கிறேன்."

"முன்பு பிரம்மன் வேதச்சொல்லுடன் உயிர்க்குலத்தை ஒருமிக்கப் படைத்து இட்ட ஆணை என்ன என்று தொல்நூல் சொல்கிறதென்று அறிந்திருப்பீர்கள். இச்சொல்லால் பல்குவீர்கள், நீங்கள் விரும்புவன அனைத்தையும் இது உங்களுக்கு அருளும் என்றது அது" என்றார் கௌதம சிரகாரி. "உளமொன்றி இயற்றப்படும் அனைத்துச் செயல்களும் வேள்விகளே. வேள்வி பிரம்மத்திலிருந்து பிறந்தது. பிரம்மம் அமுதத்திலிருந்து. ஆகவே அனைத்துமான அது வேள்வியில் நிலைகொள்கிறது. யாதவரே, வேள்விகளுக்காவது புவியெங்கும் ஒருமையென ஒன்றுண்டு என்று ஏற்கிறீர்களா?"

இளைய யாதவர் "முனிவரே, இந்த அவையில் நீங்கள் உரைத்தீர்கள், திரளென அமைந்து காலப்பெருக்கினூடாக மெய்மையைச் சென்றடைய உன்னுகிறீர்கள் என்று. அத்திரளென்பது உங்கள் குலமென்றும் நாடென்றும் ஏன் அமையவேண்டும்? பாரதவர்ஷமென்று ஏன் வகுத்துக்கொள்ளவேண்டும்? இப்புவியென்று ஏன் ஆகக்கூடாது? புவியொரு பெருந்திரள் எனச் சென்றடையும் முழுநிலை

ஒன்று இருக்கலாகாதா என்ன? வேள்விச்செயல் அங்கு சென்றடையலாகாதா?” என்றார். “குலமெங்கும் வேள்விகள் நிகழ்கின்றன. நிலம்தோறும் வேள்விகளின் இயல்பு மாறுகிறது. மெய்யறிதல்கள் ஒன்றென்று ஆகலாமென்றால் ஏன் வேள்விகள் திரண்டு பொதுமை கொள்ளலாகாது?”

“அது இயல்வதே என்று வேள்வியின் மையமென்ன என்று அறிந்தவர் கூறக்கூடும், அந்தணரே. எது வேள்வி எது அல்ல என்று வகுக்கும் மையமென வேதமெய்மை நிலைகொள்ளுமென்றால் அவ்வளவையுடன் உலகுநோக்கி உங்கள் விழி விரியக்கூடும். எது வேள்வியல்ல என்ற நோக்குடன் இன்று அனைத்தையும் அணுகுகிறீர்கள். எது வேள்வி என்ற நோக்குடன் அணுகுக! உலகு உங்களைச் சூழ்வதை காண்பீர்கள்.” கௌதம சிரகாரி உறுதியான குரலில் “மீண்டும் இந்த அவையில் நான் சொல்வது ஒன்றே. யாதவரே, மாறாததே சடங்கு எனப்படும்” என்றார்.

இளைய யாதவர் “அல்ல, மாறாச் சடங்கென்று இப்புவியில் ஏதுமில்லை. சடங்கு என எழுந்த மெய்மையே மாறாமலிருக்கவேண்டும். சடங்கு அம்மெய்மையை தன்னில் கொள்ளவும் உலகுக்கு அளிக்கவும் மாறிக்கொண்டே இருந்தாகவேண்டும்” என்றார். “அந்தணரே, இவ்வண்ணம் கொள்க! சடங்கு ஆய்ச்சி, மெய்மை அவள் தலையிலமர்ந்த நெய்க்குடம். அதை நிலைநிறுத்தி கொண்டுசெல்லும்பொருட்டே அவள் உடலில் எழுகின்றன அனைத்து அசைவுகளும். உடல் உலைந்தாடுகையிலும் அசையாமலிருக்கிறது அவள் தலைச்சுமை. அசைவன அனைத்தும் அசைவின்மை பொருட்டே நிகழ்கின்றன அவளில். செயலில் செயலின்மையும்

செயலின்மையில் செயலையும் காண்பவரே மெய்யறிந்தோர் என்க!”

“ஆகவேதான் வேள்வியைவிட ஞானம் சிறந்தது எனப்படுகிறது. ஏனென்றால் அனைத்துச் செயலும் ஞானத்தின்பொருட்டே. அனைத்துச் செயல்களையும் தன் ஊர்திகளெனக் கொண்டு காலத்தில் முன்செல்லும் மெய்மையே முதற்பொருள். இன்று இந்த அவையில் எல்லைகட்டி சடங்குகளை நிறுத்த விரும்பும் அளவைநெறியினருக்கு ஒன்று உரைப்பேன். வருங்காலத்தில் உங்கள் வேள்விகள் உருமாறும். நீங்கள் அருகணையும் குலங்களின் வேள்விகளும் வழிபாடுகளும் உங்களால் கொள்ளப்படும். உங்கள் சடங்குநூல்கள் காலந்தோறும் உருகி உருவழிந்து புதுவடிவு கொள்ளும். உங்கள் உள்ளத்தில் இறுகி நின்றிருக்கும் நம்பிக்கைகளின் நெடுங்கோட்டையை உடைத்தே அது நிகழவேண்டுமென்பது ஊழ் என்றால் அவ்வாறே ஆகுக!” என்றார் இளைய யாதவர்.

“அந்தணரே, அன்று செய்வதை இன்றே மேலெழுந்து காணுங்கள். இன்றின் எல்லையை கடந்தீர்கள் என்றால் இன்றெனச் சூழ்ந்திருக்கும் இம்மக்கள்திரளை, இப்புரங்களை, செல்வங்களை நாளை என எழுவது நொறுக்கியழிக்கும் பேரழிவை தடுத்தவர்களாவீர்கள். உங்களுக்கு முன் அளிக்கப்படும் பெருவாய்ப்பு இது என்று கொள்க! நீங்கள் இயற்றவேண்டியது மிக எளிது. உங்கள் கால் பழகிய பாதையிலிருந்து விலகி ஓர் அடி எடுத்து வையுங்கள். ஆசைகொண்டோ அஞ்சிப்பதறியோ விழிமயங்கி வழிபிறழ்ந்தோ வைக்கும் பிழையடி அல்ல இது. உங்கள் உள்ளத்திலுள்ள இலக்கை நோக்கி எண்ணி முடிவெடுத்து வைக்கும் நல்லடி.”

“நிகழ்காலத்தைக் காணவே ஊன்விழிகளால் இயலும். அந்தணரே, கல்வியால், ஞானத்தால், நுண்ணுணர்வால் திறக்கும் அகவிழிகள் எதிர்காலத்தை காணவேண்டும். அகவிழி திறந்த முனிவர் ஒருவரேனும் இந்த அவையிலெழுக! உங்கள் மாணவர்களுக்கு மெய்வழி காட்டுக! தலைக்குமேல் பெருவெள்ளம் எழுகையில் உங்கள் தனிக் கிணறுகளால் என்ன பயன்? முனிவர்களே, காலச்சரடு இத்தருணத்திலொரு முடிச்சிட்டுக் கொண்டிருக்கிறது. நம் மெய்மையால் அதை மெல்ல அவிழ்த்தெடுப்போம். இல்லையேல் வெட்டி அறுத்தெறியும் இரக்கமில்லாத வாள் ஒன்று உள்ளது என்று உணர்க! அதற்குரிய இறுதித் தருணம் இது. இதை தவறவிடவேண்டாம்.”

இளைய யாதவரின் குரல் தணிந்தது. “கடல்பெருகி எழுந்தாலும் நிலைபெயரா மலைமுடியென என்னை நிறுத்தும் கலை பயின்றவன் நான். ஆவன அனைத்தும் அறிவேன். ஆயினும் எண்ணிநோக்குகையில் திடுக்கிட்டு எழுந்தமர்ந்து விழிநீர் உகுத்திருக்கிறேன். கணம் கோடி உயிர்கள் மாயும் இம்மாயப் பெருவெளிக்கு மக்கட்பெருந்திரள் என்பது திரண்டதுமே அழியும் சிறுகுமிழி என்றறிந்தும் உளம் பதறுகிறேன். தந்தையென்று நின்று ஆம் என்கிறேன், தாயென்று உணர்ந்து இல்லை என்கிறேன். நானே கள்வனும் காவலனும் என்று உணர்கிறேன். ஆரா அளிகொள்கிறேன், அணையாச் சினம்கொள்கிறேன். கணம் ஓயா இரு நிலை கொண்டு ஊசலாகிறேன்.”

அவர் குரல் துயர்கொண்டு உடைந்தது. “என் மைந்தரே, இங்கு உங்கள் அனைவருக்கும் முலையூட்டி மடிபரப்பிய மூதன்னை என நின்று கோருகிறேன். விரிக, சற்றே விரிக! உங்கள் கைகள்

பற்றியிருப்பதை ஒருமுறை விடுக! உங்கள் கால்கள் அணுவிடையேனும் மண்ணிலிருந்து எழுக! இக்கணத்தை வெல்லுங்கள். நின்று நலம்பெருகுக! உங்கள் குலங்கள் நீடூழி வாழ்க! உங்கள் இல்லங்களில் உவகையும் களஞ்சியங்களில் அன்னமும் பெருகுக! நிரைவகுத்து காட்டெரி நோக்கிச் செல்லும் எறும்புகளே, மெய்யென்று ஒன்று மிக அருகில் நின்றிருக்கிறது. தெரிந்தவற்றிலிருந்து உளம் விடுத்து தெரியவேண்டியதை ஒருகணம் நோக்குக!"

இளைய யாதவரின் விழிகளில் இருந்து நீர் பெருகி கன்னங்களில் வழிந்தது. உதடுகள் துடிக்க கைகூப்பி தலைவணங்கி நின்றார். சுப்ரியை நம்பமுடியாமல் விழிகள் விரிந்து நிற்க உடையப்போகும் நீர்க்குமிழி என உடல் விம்ம அவரை நோக்கிக்கொண்டு அமர்ந்திருந்தாள்.

கௌதம சிரகாரி மீண்டும் எழுந்து "இனியொன்றும் எங்களுக்கும் சொல்வதற்கில்லை, யாதவரே. இது வேர்கள் விண்ணிலெழுந்ததும் கிளைகள் மண்ணில் பரந்ததுமான பெருமரம் என்கின்றன நூல்கள். வேர் எண்ணாத எதையும் கிளைகள் இயற்றவியலாது. இலைகளின் ஒவ்வொரு அசைவும் விண்ணிலிருந்து வேர்கள் கொண்ட நீரால் வகுக்கப்பட்டுள்ளன. இது எங்களுக்கு அப்பாற்பட்டது. எங்கள் அறிவு இதனால் கொளுத்தப்படும் சுடர் என்று அல்ல, இதன்மேல் படியும் மாசு என்றே நாங்கள் உணர்கிறோம். குன்றாது குறையாது கையளித்தல் அன்றி நாங்கள் இதில் இயற்றுவதற்கொன்றுமில்லை" என்றார்.

பின்னர் அவைநோக்கி திரும்பி "அந்தணரே, முனிவர்களே, வேதத்தால் அனல்கொண்டு வேதத்தை விளக்கவல்லோம் என்பவர்கள் வேதமுடிபின் கொள்கையை ஏற்று

அவையெழுந்து தங்கள் சொல்லை உரையுங்கள். நம் முகங்கள் என, நம் உடல்தோற்றம் என, இது நமக்கு அளிக்கப்பட்டது, நம்மால் அளிக்கப்படுவது என எண்ணுபவர்கள் என்னுடன் சேர்ந்து சொல்லளியுங்கள். இந்த அவையின் எண்ணம் உணர்ந்தபின் வேள்வித்தலைவர் முடிவெடுக்கட்டும்" என்றார்.

காசியப கிருசர் "அவை தன் எண்ணத்தை அறிவிக்க வேண்டும்" என்றார். "இங்கே அவையிலெழுந்து மாற்றுச்சொல் உரைத்தவர் இளைய யாதவர் என்பதனால் அவருடன் உடன்படுவோர் எழுந்து தங்கள் சொல்லை அளிக்கலாம்." அவர் அவையை சூழ நோக்க அந்தணரும் முனிவரும் அசைவில்லாது அமர்ந்திருந்தனர். மீண்டும் மீண்டும் அவர் விழிகள் அவையில் உலவுவதை ஒலியென்றே உணரமுடியுமென்று தோன்றியது. "எவருமில்லையா?" என்றார் காசியப கிருசர். "அவையினரே, இங்கு எவருமில்லையா?" இளைய யாதவர் எவரையும் நோக்காமல் நிலத்தில் விழிநிலைத்து நின்றிருந்தார். காசியப கிருசர் "மூன்றாம் முறை இது, எவருமில்லையா?" என்றார். மீண்டுமொருமுறை அவையை சூழ நோக்கிவிட்டு அமூர்த்தரிடம் "அவையெழுந்த எதிர்ச்சொல்லை ஆதரிக்க எவருமில்லை, வேள்வித்தலைவரே" என்றார்.

குண்டஜடரர் உரக்க "நன்று, தன்னை வேதரிஷி என எண்ணும் எவரும் நம்மிடையே இல்லை என்று ஆறுதல்கொள்வோம்" என்றார். குண்டர் உரக்க நகைக்க அவையில் எவரும் அவருடன் இணைந்துகொள்ளவில்லை. "அவையினரே, கௌதம சிரகாரி முன்வைத்த சொற்களை ஆதரிப்போர் எவர்?" என்றார் காசியப கிருசர். அதற்கும் அவையிலிருந்து எக்குரலும் எழவில்லை. "சொல்க, அதை ஆதரிப்போர் எவர்?" என்றார்

காசியப கிருசர். அவையிலிருந்து சங்குக்கார்வை கேட்டுக்கொண்டிருந்தது. காசியப கிருசர் “கௌதம சிரகாரி சொல்லை இந்த அவை ஏற்கிறதென்றால் இணைந்து ஓங்காரம் எழுப்புக” என்றார்.

மிகத் தொலைவில் இருந்து காற்று அணுகிவருவதுபோல எவரோ சொன்ன ஓங்காரம் கேட்டது. பெருகிப்பெருகி அது அவையை மூடி எழுந்து வேள்விச்சாலையின் வெளியை நிறைத்தது. செவிபுகுந்து உடலுக்குள் நிறைந்து விம்மச்செய்தது. உடல் ஒரு சங்கென ஆனதுபோல. போதும் போதும் என அகத்துளி தவித்தது. கௌதம சிரகாரி கைகூப்பி தலைவணங்கினார். காசியப கிருசர் கை தூக்கியதும் அலைசுருண்டு தன் அடியிலேயே தான் மடிவதுபோல அவ்வொலி அமைந்தது. காசியப கிருசர் “வேள்வித்தலைவரே, இந்த அவையின் முடிவை அறிந்துகொள்க!” என்றார்.

அமூர்த்தர் “வேள்வியவை கூடி எடுத்த முடிவை நாங்கள் ஏற்றுக்கொள்கிறோம். இந்த அவையில் வேள்விக்காவலருக்குத் துணைவராக அமரும் தகுதி அங்கருக்கில்லை. ஏழு தலைமுறைக் குருதிநிரை சொல்லத்தக்கவரும், ஐவகைப் பெருவேள்விகளை இயற்றி ஷத்ரியர் என அறிவித்துக்கொண்டவரும், பிற ஷத்ரியர்களால் அவையில் ஏற்றுக்கொள்ளப்பட்டவரும் மட்டுமே வேள்வியில் காவலர் என வாள்கொண்டு அமர முடியும். இதை வேள்வித்தலைவர் என அறிவிக்கிறேன்” என்றார்.

கர்ணன் தலைவணங்கி திரும்பிச் சென்றான். அவன் செல்வதை அவையினர் அனைவரும் சொல்லின்றி நோக்கி அமர்ந்திருந்தனர். எங்கோ ஓர் இளிவரல் ஒலிக்க, எவரோ மெல்ல சிரித்தனர். கர்ணன் வேள்விச்சாலையில் இருந்து

வெளியே சென்று விழிக்கு மறைந்ததும் அவையெங்கும் உடல்கள் இயல்புநிலை மீளும் அசைவுகள் பரவின. சுப்ரியையின் அருகே வந்த சேடி தணிந்து “தாங்கள் அவையொழிகிறீர்களல்லவா, அரசி?” என்றாள். அவள் திரும்பி இளைய யாதவரை நோக்கினாள். சந்தையை நோக்கும் இளமைந்தனின் நோக்கு என விழி மலர்ந்து அவர் அமர்ந்திருந்தார். “இல்லை, நான் இருக்கிறேன்” என்று சுப்ரியை சொன்னாள்.

# குருதிச்சாரல் - 78

**பகுதி பத்து : பெருங்கொடை – 17**

அவையில் இருந்த அமைதியை நோக்கியபடி காசியப கிருசர் சற்றுநேரம் நின்றார். கர்ணன் சென்றதை விழிகளால் நோக்கி இயல்புநிலையை அடைந்த பின்னர்தான் அவன் போரில் பங்குகொள்ளாமை அளிக்கும் இழப்பை அவர்கள் முழுதுணர்ந்தனர். பின்னர் ஒருவருக்கொருவர் மெல்ல பேசிக்கொள்ளத் தொடங்கினர். அவனை ஷத்ரிய அரசன் என்றல்லாமல் சிற்றரசனாக போரில் ஈடுபடுத்துவதைப்பற்றியும் எதிர்த்தரப்பில் அரக்கரும் அசுரரும்கூட படைகொண்டு வந்து நின்றிருக்கையில் சூதன் வில்லேந்தலாகாது என்னும் நெறிக்கு என்ன பொருள் என்றும் உரையாடினர். சொல்லும் மறுசொல்லுமென அவைபெருகி முழக்கமாயிற்று.

காசியப கிருசர் கைதூக்க அவைச்சங்கம் மும்முறை முழங்கியது. துரியோதனனை அணுகிய துச்சாதனனிடம் அவன் தலையசைக்காமல் விழியிமைக்காமல் உதடுகள்

மட்டுமே அசைய ஆணையிட்டான். துச்சாதனன் ஜயத்ரதன் அருகே சென்று குனிவதைக் கண்டதுமே அவையினருக்கு தெரிந்துவிட்டது. அவர்களில் சிலர் அதற்கு எதிர்வினையாற்றினர். எங்கோ எவரோ சொன்ன மொழிக்கு சிரிப்பு மறுமொழியாக எழுந்தது. சினத்துடன் ஜயத்ரதன் அத்திசை நோக்கி திரும்பிப்பார்த்தான். காசியப கிருசர் கைகளை அசைத்து "அமைதி! அமைதி!" என்றார். இளைய யாதவர் கண்களைத் தாழ்த்தி அசைவில்லாது அமர்ந்திருந்தார்.

காசியப கிருசர் துரியோதனனிடம் சென்று பேசிவிட்டு அமூர்த்தரிடம் ஒரு சொல் உரைத்துவிட்டு திரும்பிவந்து கைதூக்கி விழியீர்த்து உரத்த குரலில் சொன்னார் "அவையோரே, இங்கு வேள்விக்காவலராக அமைந்த அரசரின் துணைவராக அமர சிந்துவின் தொல்குடி அரசரும் பிருகத்காயரின் மைந்தருமான ஜயத்ரதரை அவைக்கு அழைக்கும்படி வேள்வித்தலைவரின் ஆணை." ஜயத்ரதன் எழுந்து அவையை வணங்கிவிட்டு தென்னெரியை வலம் வந்து அமூர்த்தரை வணங்கி அனல்மிச்சம் நெற்றியில் அணிந்து கொந்தையும் மலர்மாலையும் மரவாளும் கொண்டு துரியோதனனின் வலப்பக்கம் நின்றான்.

காசியப கிருசர் "அவையோர் அறிக! விஷ்ணு, பிரம்மன், புதன், புரூரவஸ், ஆயுஸ், நகுஷன், யயாதி, புரு, ஜனமேஜயன், பிராசீனவான், பிரவீரன், நமஸ்யு, வீதபயன், சுண்டு, பஹுவிதன், ஸம்யாதி, ரஹோவாதி, ரௌத்ராஸ்வன், மதிநாரன், சந்துரோதன், துஷ்யந்தன், பரதன், சுஹோத்ரன், சுஹோதா, கலன், கர்த்தன், சுகேது, பிருஹத்ஷத்ரன், ஹஸ்தி, அஜமீடன் பிருஹதிஷ்ணு, பிரகதத்தன், பிருகத்காயன் எனத் தொடரும் கொடிவழி சிறப்புறுக! ஜயத்ரத மாமன்னர் இவ்வேள்விக்காவலின்

முழுப்பயன் பெறுக!” என வாழ்த்தினார். அவை வாழ்த்தொலி எழுப்பியது. “நோயில் இருக்கும் பட்டத்தரசி துச்சளையின் பொருட்டு இளைய அரசி காமிகை அவையமர்க!” என்றார் காசியப கிருசர். கைகூப்பியபடி மலர்ந்த முகத்துடன் காமிகை எழுந்து அவைமேடை நோக்கி சென்றாள்.

அவள் ஜயத்ரதன் மல்லநாட்டிலிருந்து கவர்ந்துகொண்டுவந்த எட்டாவது அரசி என சுப்ரியை அறிந்திருந்தாள். மல்லநாட்டரசனின் ஆறாவது அரசியின் பன்னிரு மகள்களில் இளையவள். ஜயத்ரதனைவிட முப்பதாண்டுகள் குறைந்த அகவை கொண்டவள். அவளுக்கு சிந்துவில் அரசிப்பட்டம் இல்லை என்பதை அவையில் எவரேனும் அறிந்திருப்பார்களா? ஆனால் அவையெங்கும் நகைப்புடன் பரவிய உதிரிச்சொற்கள் அதை அவர்கள் அறிந்திருப்பதையே காட்டின. காமிகை தென்னெரியை வலம் வந்து பானுமதியின் வலப்பக்கம் அமர்ந்தாள்.

காசியப கிருசர் “இளைய யாதவரே, இப்போது இவ்வேள்விக்கென வேள்விக்கோல் நடவிருக்கிறோம். அதை வணங்குபவர்கள் இவ்வேள்வியை முழுமைபெறச் செய்ய உறுதிகொள்கிறார்கள். அதர்வ வைதிகக் குழுவான ஹிரண்யகர்ப்பத்தினர் தங்கள் தலைவர் அமூர்த்தரை முதன்மைகொண்டு அஸ்தினபுரியின் அரசர் துரியோதனர் வெற்றியும் முழுமையும் கொள்ளும்பொருட்டு இங்கு நிகழ்த்தப்படும் மகாசத்ரவேள்வியாகிய புருஷமேதத்தை ஏற்று உறுதிசொல்ல இயலுமென்றால் தாங்கள் அவையமரலாம்” என்றார்.

இளைய யாதவர் எழுந்து “இல்லை, நான் இவ்வேள்விக்குரியவன் அல்ல” என்றார். “எவ்வேள்விக்கும்

உரியவர் அல்ல” என ஒரு குரல் எங்கிருந்தோ ஒலித்தது. “வேள்வியை ஒழிக்கும் வழி வேதமுடிபு. ஞானம் பேசுவதெல்லாம் கர்மத்தை அழிக்க. கர்மம் அழிந்தபின் ஞானம் தன்மூப்பு கொள்ளும். தான் சொன்னதே கர்மம் என்று வகுக்கும்” என்றார் குண்டர். “அமைதி!” என்று காசியப கிருசர் சொன்னார். “இங்கு இளைய யாதவர் பேசியவற்றை இப்போது தொகுத்துக்கொண்டால் அவ்வாறுதான் பொருள் வருகிறது. மெய்மையும் தூய்மையும் மையமும் பேசப்படுவது எப்போதும் நடைமுறையை அன்றாடத்தை விரிவுகளை அழிக்கும்பொருட்டே” என்றார் குண்டஜடரர்.

“நாம் பேசி முடித்துவிட்டோம், அந்தணரே” என்றார் காசியப கிருசர் அவர்களை நோக்கி. அக்கடுமையால் அவர்கள் அமைதிகொண்டனர். “தாங்கள் அவை நீங்குகிறீர்கள் என்றால் சொல்பெற்றுக்கொள்ளலாம்” என்றார் கிருசர். இளைய யாதவர் “அவ்வண்ணமே” என தலைவணங்கினார். அவையை நோக்கி மூன்றுதிசையிலும் வணங்கிவிட்டு “இந்த அவையில் அளவைநெறியின் மெய்மையை முழுதறியும் பேறுபெற்றேன். இங்கு அதை மறுத்து நான் உரைத்தவை அனைத்தும் விதையிலுறங்கும் உயிரை எழுப்பும்பொருட்டு அதன் தோலையும் அழிக்கும் நிலத்தின் செய்கை போன்றதே. செயலின்றி வேதமில்லை என்று அறிவேன். செயல் யோகமென்றாகும்போது வேதமுடிபுக்கு உகந்ததென்று உருக்கொள்கிறது. அச்செயல்யோகம் இங்கு திகழ்க!” என்றார்.

கௌதம சிரகாரியை நோக்கி வணங்கி “மாறா நெறியிலமைந்த அளவைநெறி முனிவர் கௌதம சிரகாரியை வணங்குகிறேன். வசிட்ட குந்ததந்தரையும், கௌதம ஏகதரையும் பிற பெருமுனிவர்களையும் தலை நிலம்தொட வணங்கி

விடைச்சொல் கொள்கிறேன். முனிவரே, மண்ணில் மணமும் தீயில் ஒளியும் உயிர்களில் மூச்சும் தவத்தோரில் முழுமையும் என அமைவது இங்கு எழுக! படிந்தோரில் அறிவும் ஒளிர்வோரில் அனலும் அதுவே. ஆற்றல்கொண்டவரின் விருப்பு. உயிர்களில் கடமைதேரும் உறுதி. நேர்நிலை, எதிர்நிலை, நிகர்நிலை என்னும் மூன்றும் அதிலிருந்து எழுபவை என்றாலும் அது அவையாக இல்லை. காமமும் சினமும் விழைவும் அதிலிருந்து எழுகையிலும் அவையல்ல அது. அது இங்கு அமைக!" என்றார்.

"அதை வழிபடுவோர் துன்புற்றோர், பயன்நாடுவோர், அறிவுதேடுவோர், மெய்யிலமைவோர். நான்கையும் தன்னுள் அடக்கி யோகமென தன்னைப் பயிலும் ஞானிக்கு இனியது அது. அதற்கு இனியவன் ஞானி" என இளைய யாதவர் தொடர்ந்தார். "அந்தணரே, எவர் எவ்வகையில் வணங்குகிறார்களோ அவருக்கு அவ்வகையில் எழுவது அது. எண்ணிய எய்தும் அவர்களுக்கு அளிக்கும் தகைமை கொண்டது. ஆனால் ஒன்றுணர்க, தேவர்களைத் தொழுவோர் தேவர்களை எய்துகின்றனர். மெய்மையைத் தொழுபவர்களே அதை அடைகிறார்கள்."

தலைவணங்கி திரும்பிய இளைய யாதவரிடம் நடுக்குற்ற தாழ்ந்த குரலில் "யாதவரே, நீங்கள் யார்?" என்றார் கௌதம சிரகாரி. "அனைத்துயிரையும் அறிந்ததும் அறியப்படாததுமான ஒன்று. அதை நான் என்றும் அது என்றும் சொல்வது எங்கள் மரபு" என்று சொல்லி புன்னகைத்த இளைய யாதவர் திரும்பி துரியோதனனிடம் "அஸ்தினபுரிக்கரசே, சாந்தீபனி குருநிலையின் வேதமுடிபுநெறியின் ஆசிரியனாகிய நான் அவைநீங்குகிறேன். என் சொற்களுக்குரிய பரிசிலை இந்த

வேள்வியவையிலிருந்து பெற்றுச்செல்ல விழைகிறேன்” என்றார்.

துரியோதனன் அவர் முகத்தை இமையா விழிகளுடன் நோக்கி “முனிவரே, தாங்கள் தங்களுக்கென விழைவன எதையும் அளிக்க சித்தமாக உள்ளேன். பிறருக்கெனில் எவருக்கென இங்கே உரைக்கவேண்டும். பெறுபவர் தகுதியறியாது அரசன் எதையும் அளிக்கலாகாதென்பதே நெறி” என்றான். இளைய யாதவர் “நான் எனக்கெனக் கோருவன அனைத்தும் இந்த அவையில் கோரப்பட்டு மறுக்கப்பட்டன. எனக்கு முன்னால் வந்தவர்களுக்கும் அனைத்தும் மறுக்கப்பட்டது. நாளை எழுபவர்களுக்கும் மறுக்கப்படும். அரசே, அலையலையென காலம்தோறும் எழுந்து கைநீட்டி, விலக்கப்பட்டு, வாழ்த்தி திரும்பிக்கொண்டிருக்கிறேன்” என்றார்.

“இந்த அவை இதோ என்னை வெறுங்கையுடன் திருப்பி அனுப்புகிறது” என்று இளைய யாதவர் தொடர்ந்தார். “ஆனால் அரசமைந்த நீங்கள் என்னை அவ்வண்ணம் அனுப்பலாகாது. நான் பரிசிலெனக் கோருவது பாண்டவர்களின் பொருட்டு” என்றார். துரியோதனன் “அவர்களுக்காகவும் தாங்கள் கோரலாம், யாதவ முனிவரே. ஆனால் அந்தணரும் ஷத்ரியரும் வைசியரும் நாலாம்நிலையினரும் அரசரிடம் எவற்றைக் கோரவேண்டுமென்று நெறியுள்ளது என அறிந்திருப்பீர்கள்” என்றான் துரியோதனன். “ஆம், ஆகவேதான் அஸ்தினபுரியின் எளிய குடிகளாக அவர்களை ஏற்கவேண்டுமென்று கோருகிறேன். நிஷாதருக்கும் கிராதருக்கும்கூட உரிமையுள்ளது காலடி மண் கோர. அவர்கள் இந்நாட்டின் எல்லைக்குள் வாழ ஐந்து இல்லங்களையாவது அளிக்கவேண்டும் தாங்கள்.”

துரியோதனன் "யாதவமுனிவரே, அவற்றை அவர்களுக்கு அளிக்க எனக்கு மாற்று எண்ணம் இல்லை. ஆனால் அரசன் தன் நிலத்திற்குள் இடம்கொடுக்கக்கூடாதவர்கள் என சிலரை தொல்நூல்கள் வகுத்துச் சொல்கின்றன. வேதமறுப்பு கொண்டவர்கள், பிறவேதத்தை அந்நிலத்தில் ஓதுபவர்கள், ஒவ்வாத் தெய்வங்களை வழிபடுபவர்கள், பிறகுடிக்கு உளவறிபவர்கள், அரசன்மேல் வஞ்சம் கொண்டவர்கள், அரசுக்கு விழைபவர்கள், கூடா ஒழுக்கத்தை பரப்புபவர்கள் என எழுவர். அவ்வேழு நிலையிலும் பாண்டவர்கள் அஸ்தினபுரிக்குள் இடம்பெற தகுதியற்றவர்கள். ஆகவே ஒருபிடி மண்கூட அவர்களுக்கு என்னால் அளிக்கவியலாது" என்றான்.

அலையற்ற குரலில் அவன் அதை சொன்னதனால் அவன் தாழ்ந்த ஒலியில் பேசுவதாகத் தோன்றியது. ஆனால் அவையிலமர்ந்திருந்த அனைவருக்கும் அச்சொல் செவிப்பட்டது. இளைய யாதவர் "நான் கைநீட்டிவிட்டேன், அரசே. இந்த மண்ணில் சிற்றுரிமையேனும் அவர்களுக்கு அளியுங்கள்" என்றார். "இது வேள்விநிலை, முனிவரே. இங்கு செயல் ஒவ்வொன்றும் வகுத்த முன்னெறிப்படியே எழ முடியும் என்பதையே இப்போது முனிவரும் அந்தணரும் பேசி முடித்தனர். நெறிகளின்படி அவர்களுக்கு அஸ்தினபுரிக்குள் எவ்வுரிமையும் அளிக்கவியலாது" என்றான் துரியோதனன்.

இளைய யாதவர் "அரசே, ஐந்து இல்லங்களை அளித்து உங்கள் குடியழிக்கும் பெரும்போர் ஒன்றை நீங்கள் தவிர்க்கலாம்" என்றார். "இப்போர் நிலத்திற்காக அல்ல, நெறிகளுக்காக. நெறிகடந்தால் இவையனைத்திற்கும் பொருளில்லை" என்றான் துரியோதனன். "இறுதியாகக் கோருகிறேன், எனக்கு நீங்கள் அளிக்கவிருக்கும் கொடை என்ன?" என்றார் இளைய யாதவர்.

துரியோதனன் மாறாத குரலுறுதியுடன் “என் மூதாதையர்மேல், என் முடிமேல், கொடிவழிகளின்மேல் ஆணை. நீங்கள் உங்களுக்கெனக் கோருக! இக்கணமே எழுந்து என் முடியை உங்களுக்கு அளிப்பேன். பாண்டவருக்கு என்றால் ஊசிமுனை ஊன்றும் நிலம்கூட அளிக்கவியலாது” என்றான்.

எழாக் குரலுக்கு எத்தனை எடையிருக்கமுடியும் என்று சுப்ரியை உணர்ந்தாள். மூச்சு நிலைத்திருப்பதை உணர்ந்தபின் இழுத்து நெடுநீட்டென வெளிவிட்டாள். பக்கவாட்டில் தெரிந்த இளைய யாதவரின் முகம் துயர்திரண்டு உருவானதுபோல் தோன்றியது. மழலையருடையவை என அகன்ற விழிகளின் மயிரடர்ந்த இமைகள் சரிந்தன. நீட்டிய கைகளை அசையாமல் முன்வைத்தபடி அவர் நின்றார். பானுமதி எழுந்து தன் கையில் இருந்த கணையாழியை நீட்டி “யாதவரே, வெறுங்கையுடன் நீங்கள் அவைநீங்கலாகாது. இது என் கொடை. ஏற்று எனக்கு அருள்க!” என்றாள்.

அவர் நிமிர்ந்து அவள் விழிகளை நோக்கினார். பின்னர் “இல்லை, அரசி. இக்கொடையின் கடனை நான் நிகர்செய்யவியலாது. இங்கிருந்து எழுகையில் என் புறங்காலின் பொடியை தட்டிவிட்டுத்தான் செல்வேன். இந்நகருக்கும் இவ்வரசகுடிக்கும் இனி நான் பொறுப்பல்ல. இங்குள்ள அரசர் எவருக்கும் நான் இனி அளிக்கவேண்டியதென ஏதுமில்லை” என்றார். பானுமதியின் கை அந்தக் கணையாழியுடன் நடுங்கிக்கொண்டிருந்தது. இளைய யாதவர் திரும்பி வேள்விமேடையில் அமர்ந்திருந்த அமூர்த்தரை வணங்கிவிட்டு வலப்பக்கமாகத் திரும்பி வேள்வியவையிலிருந்து வெளியேறினார். சாத்யகி எழுந்து அவரை தொடர்ந்தான். அவர் செல்வதை நோக்கி அமர்ந்திருந்த

அவையினர் காட்சி மறைந்ததும் ஒற்றைமூச்சென ஒலி எழுப்பினர்.

சுப்ரியை பெருமூச்சுடன் எழுந்துகொண்டாள். அவைச்சேடி அருகே வந்து “கிளம்புகிறீர்களா, அரசி?” என்றாள். “ஆம், என் தேர் ஒருங்குக!” என்றாள் சுப்ரியை. மேலாடையை சீரமைத்துக்கொண்டு சேடியுடன் வேள்விப்பந்தலுக்கு வெளியே சென்றபோது அவளுக்குப் பின்னால் வலம்புரிச்சங்கம் மும்முறை முழங்குவதை கேட்டாள்.

வேள்விச்சாலைக்கு வெளியே ஏவலர்களின் வளையம் ஒன்றும் அதற்கப்பால் காவலர்களின் வளையமும் இருந்தன. வெளியே அவளுக்காகக் காத்து நின்றிருந்த சபரி அணுகிவந்து “அரண்மனைக்குத்தானே, அரசி?” என்றாள். ஆம் என தலையசைத்து அவள் நடக்க சபரி உடன் வந்தபடி “அரசர் இப்போதுதான் கிளம்பிச் சென்றார். உடன் விகர்ணரும் சுஜாதரும் சென்றனர்” என்றாள். அவள் மறுமொழி சொல்லாமல் தேர்முற்றத்திற்கு வந்தாள். “சுஜாதர் சினம்கொண்டு கூச்சலிட்டார். அரசர் களைத்தவர் போலிருந்தார். அவர்கள் மதுவருந்தச் செல்கிறார்கள் என்று எண்ணினேன்” என்றாள் சபரி.

தேரில் ஏறிக்கொண்டதும்தான் சுப்ரியை தன் நெஞ்சத்துடிப்பை உணர்ந்தாள். பெருமூச்சுகள்விட்டு தன்னை எளிதமைத்துக்கொண்டாள். சபரி ஏறி அருகே அமர்ந்து “அரண்மனைக்கு…” என்று பாகனிடம் சொன்னாள். அப்போதுதான் அச்சொல் நெஞ்சில் உறைக்க “இல்லை” என்றாள் சுப்ரியை. “அரசி?” என்றாள் சபரி. சுப்ரியை மூச்சைத்திரட்டி சொல்லென்றாக்கி “இளைய யாதவர்

எங்கிருக்கிறார்?” என்றாள். “அவர் அரசரென வரவில்லை. அவர்களுக்குத் தங்க இங்கு அந்தணர்நிலையில் குடில் அளிக்கப்பட்டுள்ளது என்றனர்” என்றாள். “நான் அறிவேன்… அங்கு செல்க தேர்!” என்றாள் சுப்ரியை.

தேரின் ஒவ்வொரு அதிர்வையும் உடலால் வாங்கியபடி அவள் பீடத்தில் அமர்ந்திருந்தாள். உள்ளத்தின் விசையால் சாய்ந்தமர இயலவில்லை. பற்களைக் கிட்டித்திருப்பதை, கைவிரல்களை இறுகப் பற்றியிருப்பதை உணர்ந்து தன் உடலை உள்ளத்திலிருந்து விடுவித்துக்கொண்டாள். விழிகளில் அனல்பட்டதுபோல் வெம்மையை, உடலெங்கும் குளிர் வியர்வையை உணர்ந்தபோது களைத்து கைகால்கள் படியத்தொடங்கியிருந்தன. தேர் அந்தணர்சோலைக்குள் நிரையாக அமைந்த சிறுகுடில்களுக்கு நடுவே சென்றது. அவ்வேளையில் அந்தணர் எவரும் அங்கிருக்கவில்லை. அவர்களுடன் வந்த ஏவலர் சிலர் மட்டும் தேரைக் கண்டு எழுந்து நின்றனர்.

பாதையைக் கடந்து ஓடிய சிற்றோடையின் கரையில் தேர் நின்றது. தேர்ப்பாகன் “இங்கிருந்து பன்னிரண்டாவது குடில், அரசி. ஆனால் தேர் அங்கு செல்லாது” என்றான். அவள் இறங்கி மேலாடையைச் சுழற்றி தலைமேல் இட்டு மறுபக்கம் இழுத்துக்கொண்டு சிலம்புகளும் கைவளைகளும் ஒலிக்க நடந்தாள். சபரி அவளுக்குப் பின்னால் ஓடிவர திரும்பி கையசைவால் அவளை தடுத்தாள். அந்தச் சிறுகுடிலின் வாயிலில் பறந்த யாதவர்களின் பசுக்கொடியிலிருந்து அதை உறுதிசெய்துகொண்டாள்.

குடில்வாயிலில் எவருமில்லை. அவள் ஐயுற்று அதன் சிறுவாயிலினூடாகக் குனிந்து நோக்கியபோது உள்ளிருந்து

சாத்யகி வெளியே வந்தான். விழிகளைச் சுருக்கி நோக்கி "வணங்குகிறேன், அரசி" என்றான். அவன் தன்னை அடையாளம் காணவில்லை என்று உணர்ந்து அவள் "நான் கலிங்கநாட்டரசி. அங்கநாட்டரசர் வசுஷேணரின் துணைவி" என்றாள். "இச்சிறுகுடிலுக்கு நல்வரவு, அரசி. நான் இயற்றவேண்டியது எது?" என்றான் சாத்யகி. "நான் இளைய யாதவரைப் பார்க்கும்பொருட்டு வந்தேன்." சாத்யகி "நான் அறிவிக்கிறேன். நாங்கள் கிளம்பிக்கொண்டிருக்கிறோம்" என்றான். அவன் சினத்தில் தழல்கொண்டவன் போலிருந்தான். "நான் காத்திருக்கிறேன்" என்றாள் சுப்ரியை.

அவன் உள்ளே சென்று மீண்டுவந்து "வருக, அரசி" என உள்ளே அழைத்துச்சென்றான். இருவர் படுக்கும் அளவுக்கு மட்டுமே இடமிருந்த சிறிய புற்குடிலின் நீள்சதுர அறையில் இளைய யாதவர் கோரைப்புல் பாயில் அமர்ந்திருந்தார். அவளைக் கண்டதும் எழுந்து கைதொழுது "வருக, அரசி! இக்குடில் தங்கள் வரவால் பெருமைகொண்டதாகிறது" என முகமன் உரைத்தார். அவள் கைகூப்பி "நல்லூழ் இன்று கனிந்தது" என்றாள். சாத்யகி இன்னொரு பாயை எடுத்து விரித்தான். இளைய யாதவர் கைகாட்டி "அமர்க, அரசி..." என்றார். அவள் கால்மடித்து அமர்ந்தாள். அவர் அவள் எதிரே அமர சாத்யகி வெளியே சென்றான்.

இளைய யாதவர் அவளை நோக்கியபடி அமர்ந்திருந்தார். அவர் முகத்தில் எப்போதுமிருக்கும் புன்னகையை அப்போது காணமுடியவில்லை என எண்ணிக்கொண்டாள். எங்கிருந்து சொல்லெடுப்பதென்று தெரியவில்லை. மீண்டும் அவர் நோக்கை சந்தித்தபின் "நான் அவையில் இருந்தேன்" என்றாள். "ஆம், பார்த்தேன்" என்றார். அவளால் மேலும் என்ன

சொல்வதென்று திரட்டிக்கொள்ள முடியவில்லை. “நீங்கள் அவைநீங்குவதைக் கண்டேன். ஏனென்றே தெரியவில்லை, நான் உங்கள் பின்னால் வந்தேன்” என்றாள். இளைய யாதவர் புன்னகைத்து “அந்த அருளுக்கு நான் கடப்பாடு உடையேன்” என்றார். “நான் அவையிலமர்ந்து அழுதேன்” என்றாள்.

சொன்ன பிறகு என்ன பேசிக்கொண்டிருக்கிறோம் என அவள் உள்ளம் திகைத்தது. பேதைச்சிறுமகளாக காட்டிக்கொள்கிறோமா? அன்றி இப்பைதல் பேச்சை ஏன் எடுக்கிறேன்? அப்போது தோன்றியது பெண்கள் பதின்ம அகவைக்குப்பின் அயலாரிடம் பேசக் கற்றுக்கொள்வதேயில்லை என்று. எனவே எந்த அகவையிலும் முதிராமகளின் மொழியையே அவர்களால் எடுக்க முடிகிறது. சிறுமைகொண்டு அவள் உள்ளம் சுருங்கியது. எழுந்துசென்றுவிடவேண்டும் என எண்ணினாள். ஆனால் வந்தது ஏன் என்று எப்படி சொல்வது? எதன்பொருட்டு வந்தேன்? சிறுமைசேராத எதையேனும் சொல்லிவிட்டு எழுந்துவிடவேண்டும்.

“உள்ளுறை உவகை குறித்து சொன்னீர்கள்” என்றாள். அதை அவளிலிருந்து எழுந்த பிறிதொருத்தி சொன்னதுபோல் திகைத்தாள். ஆனால் அவளே சொல்லிக்கொண்டுமிருந்தாள். “அச்சொற்களைச் செவிகொள்வது வரை நான் என்னை நோக்கியறியவே இல்லை என்று உணர்ந்தேன். நான் அந்த உவகையை என்னுள் அறிந்திருக்கிறேன். பிறர் அறியாமல் அதை கரந்திருக்கிறேன். அதை மறைப்பதற்காக நான் அணிந்த முகமும் மொழியுமே இதோ அமர்ந்திருக்கும் நான். இவையனைத்தையும் களைந்து நின்றிருக்கும் ஓர் இடம்

எங்கோ எனக்காக உள்ளது என எண்ணிக்கொண்டே இருந்தேன். அல்லது அவ்வாறு கற்பனை செய்துகொண்டேன்.”

இளைய யாதவர் புன்னகைத்தார். “நீங்கள் புன்னகைப்பது ஏன் என்று எனக்குப் புரிகிறது. இது நடுஅகவையில் அனைத்து மகளிரும் உணர்வது. காதலைக் கடந்து, மைந்தர் வளர்ந்து விலகி, இயற்றுவதற்கேது இனி என்றிருக்கும்போது; பெண்ணழகு அள்ள அள்ள நழுவியகல உடல் பிறிதொன்றென ஆகிக்கொண்டிருக்கும்போது அவர்கள் அடைபட்டிருப்பதாக உணர்கிறார்கள். திறந்து வெளியேறுவதை கனவுகண்டபடி நாட்களை செலுத்துகிறார்கள். உடல் முதிர்ந்து அம்முதுமையை உள்ளமும் ஏற்றுக்கொள்கையில் அது ஒரு காலகட்டத்தின் எண்ணப்பிறழ்வென்று சுருக்கிக்கொள்கிறார்கள். இது அது அல்ல. நான் வாயிலைத் திறக்க மெய்யாகவே விழைகிறேன்.”

“அது தன்னலமா, உலகியல்விருப்பா என்ற ஐயமே இதுநாள் வரை என்னை அலைக்கழித்தது. அது ஒவ்வொரு ஆத்மாவும் கொள்ளும் விழைவு என்று இன்று தெளிந்தேன். என்னை இட்டுச்செல்லவேண்டியது அதுவே என்று நீங்கள் சொன்னபோது உறுதிகொண்டேன்.” அவள் முகம் தெளிந்து புன்னகை செய்தாள். அத்தனை தெளிவாக தன்னால் சொல்லிவிடமுடிந்திருக்கிறது. ஏனென்றால் இதை ஆயிரம்பல்லாயிரம் தடவை சொல்லிக்கொண்டிருந்திருக்கிறேன்.

இளைய யாதவர் புன்னகையுடன் “அவ்வண்ணமென்றால் அங்கிருந்தே கிளம்பியிருப்பீர்களே, அரசி?” என்றார். அவள் திகைப்புடன் அவர் விழிகளை நோக்கினாள். “இங்கு வந்து ஏன் இதை சொல்கிறீர்கள்? மேலும் ஒரு துளி ஐயம்

எஞ்சியிருக்கிறதா? அதை என்னிடம் சொல்லி தெளிவுபெற விழைகிறீர்களா? அன்றி என் சொல்லில் அதுவே மீண்டும் ஒலிக்கக்கேட்டு உறுதிகொள்ள எண்ணுகிறீர்களா?” சுப்ரியை தோள் தளர்ந்தபோது கைவளைகள் ஓசையிட்டன. “அறியேன்” என்றாள். “வரவேண்டுமென்று தோன்றியது என்பதன்றி நான் ஒன்றும் சொல்வதற்கில்லை” என்றாள்.

“கிளம்புவதென்றால் உங்களுக்கு நானோ அந்த அவைநிகழ்வோ என்ன பொருட்டு? இவ்வுணர்வை ஏன் வந்து இங்கு சொல்லவேண்டும்?” என்றார் இளைய யாதவர். “ஆம், மெய்தான்” என்றபின் அவள் எழுந்துகொண்டாள். “அரசி, உங்களை இதுவரை பற்றி நிறுத்தியிருந்தவற்றில் ஒரு பிடிப்பு எஞ்சியிருக்கிறது. அது அறாமல் ஆகாது” என்றபடி இளைய யாதவரும் எழுந்தார். “சிறு பிடிப்பா?” என்றாள். “சின்னஞ்சிறு பற்றுதல்கூட இறுதிவரை எஞ்சுவதுண்டு. எஞ்சியிருக்கும் வரை சிறிதென்றும் பெரிதென்றும் ஏதுமில்லை” என்றார் இளைய யாதவர். “ஏதென்று தெரியவில்லை” என்று சுப்ரியை தலைகுனிந்தாள். “நான் கிளம்புகிறேன், அரசே” என்றாள். “நன்றுசூழ்க!” என்றார் இளைய யாதவர்.

“நீங்கள் கிளம்புகிறீர்கள் என்று கேட்டேன்” என்றாள் சுப்ரியை. “ஆம், கிளம்பிவிட்டேன். இன்னும் அரைநாழிகையில் படித்துறையில் இருப்பேன்” என்று இளைய யாதவர் சொன்னார். அவள் வேறெங்கோ நோக்கியவளாக “நான் விடமுடியும், எய்தமுடியும் என எண்ணுகிறீர்களா?” என்றாள். “விடும்வரை துறவைக் குறித்தும் எய்தும்வரை தவத்தைக் குறித்தும் எவரும் சொல்லிவிடமுடியாது. நாமேகூட” என்ற இளைய யாதவர் “புறத்தே பற்றின்றி தன்னுள் உவகையை காண்க! அதை பிரம்மயோகம் என்கின்றன நூல்கள்” என்றார். சுப்ரியை

தலைகுனிந்து பெருமூச்சுவிட்டாள். பின்னர் “என்னை வாழ்த்துக, யாதவரே!” என மெல்லிய குரலில் நிலத்தை நோக்கியபடி சொன்னாள். “உவகை நிலைகொள்க!” என்றார் இளைய யாதவர்.

சுப்ரியை முகம் மலர்ந்து “நான் வந்தது ஏன் என்று இப்போது தெரிகிறது” என்றாள். “நான் சொல்லிக்கொள்ள விழைந்தேன். நான் எழுவேன் என்பதில் ஐயமில்லை. ஆனால் இப்புவியில் ஒருவரிடமாவது சொல்லிக்கொள்ளவேண்டும் என்று தோன்றியது. என்னை அறியும் ஒருவரிடம் அதை சொல்கையில் ஒரு காலகட்டம் முடிவுறுகிறது” என்றபின் திரும்பாமல் வெளியே நடந்தாள். வாயில்வரை வந்து நின்றிருந்த இளைய யாதவரை நோக்காமல் முற்றத்தில் இறங்கி தலைவணங்கிய சாத்யகிக்கு மறுவணக்கம் காட்டி தேரை நோக்கி நடந்தாள்.

எதிரே யுயுத்ஸு நடந்து வருவதைக் கண்டு அவள் தயங்கி நின்றாள். யுயுத்ஸு தலைவணங்கி “அங்கநாட்டரசிக்கு என் வணக்கம். இளைய யாதவருக்கு பேரரசரின் செய்தியுடன் செல்கிறேன்” என்றான். “நன்று சூழ்க!” என வாழ்த்திவிட்டு அவள் நடந்து சென்று தன் தேரை அடைந்தாள். யுயுத்ஸுவின் தேரோட்டியுடன் அவளுடைய தேரோட்டியும் சபரியும் பேசிக்கொண்டிருந்தனர். அவள் தேரில் ஏறியதும் சபரி ஏறி அருகே அமர்ந்தாள். “அரண்மனைக்கு அல்லவா, அரசி?” என்றாள். “ஆம்” என்றாள் சுப்ரியை. தேர் கிளம்பியது.

சபரி “யுயுத்ஸு பேரரசர் திருதராஷ்டிரர் இளைய யாதவருக்கு அளித்த செய்தியுடன் செல்கிறார். அச்செய்தியைக் குறித்தே அவருடைய தேர்ப்பாகனிடம் பேசிக்கொண்டிருந்தேன்” என்றாள். அவள் மேலும் வினவாமை கண்டு தானே தொடர்ந்தாள்.

“பெரிய செய்தி. சற்றுநேரத்தில் அஸ்தினபுரியே அதைக் குறித்துதான் பேசப்போகிறது…” சுப்ரியை அதையும் என்ன என்று கேட்கவில்லை. சபரி அசைந்து அருகே வந்து “அரசி, பேரரசர் பாண்டவர்களுக்கு மூத்த தந்தையென்று நின்று அவர் அளித்த ஆணையை திரும்பப் பெற்றுக்கொள்கிறார்” என்றாள்.

சுப்ரியை அதை சரிவர புரிந்துகொள்ளாமல் “என்ன?” என்றாள். “பாண்டவர்கள் தன் மைந்தரை களத்தில் எதிர்கொள்ளலாகாதென்றும், தன் மைந்தரையோ பெயர்மைந்தரையோ எந்நிலையிலும் கொல்லலாகாதென்றும் பேரரசர் ஆணையிட்டிருந்தார். அதை பாண்டவ மூத்தவரும் ஏற்று சொல்லளித்திருந்தார். இன்று பேரரசரின் ஆணை அவரால் விலக்கப்பட்டுவிட்டது” என்று சபரி சொன்னாள். “அதை பாண்டவருக்கு இளைய யாதவரிடம் சொல்லி அனுப்புகிறார் பேரரசர்.”

சுப்ரியை ஒன்றும் சொல்லவில்லை. “அவ்வண்ணமென்றால் போருக்கான இறுதித் தடையும் அகன்றுவிட்டது, அரசி. இங்கிருந்து இளைய யாதவர் போரின்றி வழியில்லை என்னும் செய்தியுடன்தான் உபப்பிலாவ்யம் செல்கிறார்” என்றாள் சபரி. சுப்ரியை ஏதேனும் சொல்வாள் என்று அவள் எதிர்பார்த்தாள். ஆனால் அவள் ஒன்றும் சொல்லவில்லை. அச்செய்தி அவளுக்கு புரியவில்லையோ என்று எண்ணி மேலும் சொல்ல சபரி எண்ணினாள். ஆனால் சாளரத் திரைச்சீலையைத் திறந்து வெளியே நோக்கிக்கொண்டு வந்த சுப்ரியை திரும்பி நோக்கவேயில்லை.

# குருதிச்சாரல் - 79

**பகுதி பத்து : பெருங்கொடை – 18**

சுப்ரியை தன் மாளிகையை அடைந்தபோது மிகவும் களைத்திருந்தாள். தேரிலேயே சற்று துயின்றிருந்தாள் என்பது மாளிகையை நோக்கிய சாலைத் திருப்பத்தில் தேரின் அதிர்வில் அவள் விழித்துக்கொண்டபோதுதான் தெரிந்தது. உடல் விழித்தும் உளம் எழாமல் அவள் இருக்கையிலேயே அமர்ந்திருந்தாள். சபரி "அரசி, மாளிகை" என்றதும் கையூன்றி மெல்ல எழுந்துகொண்டு உள்ளே சென்றாள். சபரி பேழைகளுடன் பின்னால் வரும் காலடியோசை தலையில் விழும் அடிகளைப்போல கேட்டது.

தன் அறைக்குள் மீண்டபோது அவளிடம் எந்த நினைவுகளும் எஞ்சியிருக்கவில்லை. எங்கு சென்று மீண்டோம் என்பதையே எண்ணி எடுக்கவேண்டியிருந்தது. காலோய்ந்து பீடத்தில் அமர்ந்து சபரி பேழைகளை கொண்டுவந்து வைப்பதை ஆர்வமில்லாமல் நோக்கிக்கொண்டிருந்தாள். பின்னர் எழுந்து மஞ்சம் நோக்கி சென்றாள். சபரி "ஆடையணி களையவேண்டும், அரசி. நான் அணிச்சேடியரை வரச்சொல்கிறேன்" என்றாள். "நான் களைத்திருக்கிறேன்" என்றபடி அவள் சேக்கையில் படுத்தாள். கைகளும் கால்களும் எடைகொண்டு மென்னிறகுப் பரப்புமேல் அழுந்தின. இமைகள் தழைந்தன.

சபரி எதுவோ சொல்வது கேட்டது. அதை அவளால் சொல்லென புரிந்துகொள்ள முடியவில்லை. அப்பால் அவளுடைய காலடியோசைகள். எப்போது இத்தகைய பெருங்களைப்பு ஏற்பட்டது? இளைய யாதவரிடம் விடைபெறுகையிலா? அதற்கும் முன்பு அவையிலிருந்து

கிளம்பும்போதா? இன்றைய நாளில் என் உள்ளம் கொண்டது மிகுதி. இன்று கற்றவை வாழ்நாளெல்லாம் பெற்றவற்றுக்கு நிகர். அல்ல, இது கல்வியல்ல. உவகையை அளிப்பதே கல்வி. ஒன்று கற்கையில் ஏழு விடாய் கொள்ளச்செய்வதே கல்வி. இது ஓர் அணிகளைதல். அல்லது நோய்கொள்ளல். அல்லது எரிந்தழிதல். அல்லது…

அவள் விழித்துக்கொண்டபோது நாகம் ஒன்று தன்னை முத்தமிட்டுக்கொண்டிருப்பதை உணர்ந்தாள். மிகமெல்ல தொட்டுத்தொட்டுச் சென்றது அதன் குளிர்ந்த கூர்முகம். பறக்கும் மெல்லிய நா நீர்த்துளி என தெறித்தது. அவள் விழிதிறந்தபோது அதன் இமையா மணிக் கண்களை கண்டாள். சொல் திகழா விழிகள் இப்புவிக்குரியவையே அல்ல. அவள் அவற்றை நோக்கிக்கொண்டே இருந்தாள். சீறலோசை கேட்டது. மீண்டும் கேட்டபோது மானுடமூச்சு. அவள் உலுக்கி சித்தம் விழித்தாள். தன் உடலில் இருந்து சூக்ஷ்மை அணிகளை விலக்கிக் கொண்டிருப்பதை உணர்ந்தாள்.

அவள் எழப்போனபோது “படிக, அரசி!” என சூக்ஷ்மை மெல்லிய குரலில் சொன்னாள். “களைத்திருக்கிறீர்கள், அணி களையாமல் துயின்றுவிட்டீர்கள். அருமணிகள் உடலில் குத்தினால் நஞ்சுகொள்ளக்கூடும் என்று சபரி வந்து சொன்னாள்.” சுப்ரியை வெறுமனே விழித்து நோக்கினாள். “நாக நஞ்சு அமையும் இடங்களில் வைரமும் ஒன்றென சொல்லப்பட்டுள்ளது, அரசி” என்றாள் சூக்ஷ்மை. “ஏன்?” என்று அவள் கேட்டாள். சூக்ஷ்மை சொல்லிக்கொண்டிருப்பது அவளுக்கு புரியவில்லை. அவள் விழிகள் இமைக்காமல் நாகநோக்கென நிலைகொண்டிருக்கின்றனவா என்று ஐயம் கொண்டு உலைந்தது உள்ளம்.

“வைரம் நஞ்சல்ல. ஆனால் அதை உண்டால் உயிர் விலகும்” என்றாள் சூக்ஷ்மை. “நஞ்சென்றாவது அதன் கட்டின்மையே. அரசி, நீர் செல்லும் வழியாலானது உடல். அதற்குள் வைரம் தனக்குரிய தனிப்பாதையை கண்டடைகிறது. குடல்களை தசைகளை ஊடுருவிச் செல்கிறது. தன் மறுதரப்பைத் தேடி உடலுக்குள் தவித்தலைகிறது.” அவள் கைகள் சுப்ரியையின் வளையல்களை பட்டுத்துணியிட்டு வழுக்கி உருவி எடுத்து அப்பால் வைத்தன. “தேனீக்கூட்டில் குளவி என வைரம் மானுட உடலில் நுழைகிறது.”

“ஏன் அதை சொல்கிறாய்?” என்றாள் சுப்ரியை சினத்துடன். சூக்ஷ்மை சிரித்தபடி “தெரியவில்லை, எதையேனும் சொல்லி நினைத்ததை சென்றடைவது என் வழக்கம்” என்றாள். சுப்ரியை எழுந்து அமர்ந்து “போதும்” என்றாள். “ஏன்? துயிலவில்லையா தாங்கள்?” என்றாள் சூக்ஷ்மை. “இல்லை, இனிமேல் துயிலமுடியும் என்று தோன்றவில்லை” என்றபடி மேலாடையை அணிந்துகொண்டாள். அவள் என்ன சொல்லப்போகிறாள் என்பதுபோல கையில் அவளிடமிருந்து கழற்றிய வளையலுடன் சூக்ஷ்மை நோக்கினாள்.

“அரசர் என்ன செய்கிறார்?” என்றாள் சுப்ரியை. சூக்ஷ்மை “அதை சபரியிடம்தான் கேட்கவேண்டும். அவருடைய அரண்மனையில் உடன் சூதர்களும் விறலியரும் இருக்கிறார்கள் என்று மாலையில் சொன்னார்கள். மதுக்கேளிக்கை நிகழ்கிறதென எண்ணுகிறேன்” என்றாள். “இப்போது பொழுதென்ன?” என்று சுப்ரியை சாளரத்தை நோக்கினாள். “முன்னிரவு” என்று சூக்ஷ்மை சொன்னாள். “முதற்காவலர் சற்றுமுன்னர்தான் நிலைமாறினார்கள்.” சுப்ரியை “நான் அவரை பார்க்கவேண்டும்” என்றாள்.

“நான் உங்களை இன்றிரவு நகர்காண அழைத்துச்செல்லலாம் என எண்ணியிருந்தேன்” என்று சூக்ஷ்மை சொன்னாள். “இன்று மகாசத்ரவேள்வி தொடங்கிவிட்டது. நகரின் கொண்டாட்டங்கள் உச்சமடைந்திருக்கின்றன.” சுப்ரியை நோக்கை விலக்கிக்கொண்டு “இன்று என்னால் இயலுமென்று தோன்றவில்லை” என்றாள். சூக்ஷ்மை “அரசி, நஞ்சில்லாது கொண்டாட்டமில்லை என கேட்டிருக்கிறீர்களா?” என்றாள். சுப்ரியை புருவம் சுளிக்க திரும்பி நோக்கினாள்.

சூக்ஷ்மை விந்தையானதோர் கள்ளச் சிரிப்புடன் “நிலையழியாது மானுடரால் கொண்டாட இயலாது. நிலையழியச்செய்வது எதுவும் நஞ்சே. மது முதல் நஞ்சு. நாகத்தின் பல்லில் உள்ளது இறுதி நஞ்சு. நடுவே புகைப்பதும் முகர்வதும் உண்பதும் என நூறுநூறு நஞ்சுகள். நஞ்சுண்டு எழுந்து மானுடர் களியாடுகிறார்கள். நெறிகளை மீறி வழிகளை கலைத்து காலத்தை இடத்தை மறந்து கொண்டாடுகிறார்கள்” என்றாள்.

“இந்நகரில் பிறிதெங்கும் இல்லாத நஞ்சு ஒன்று பரவியது. கருநீல நிறம்கொண்ட பாசிபோல சுவர்களில் பரவியது. காட்டிலிருந்து வந்த காகங்களால் நகரில் அது பரப்பப்பட்டது என்று மருத்துவர் சொல்கிறார்கள். வானிலிருந்து நாட்கணக்காகப் பெய்த மென்மழை அதைப் பெருக்கி மண்ணிலும் நீரிலும் பரப்பியது. இங்குள்ள மானுடர் அந்நஞ்சை உண்டு நிலையழியலாயினர். பின்னர் அதற்கான விடாய் கொண்டனர். சுவர்களில் இருந்து சுரண்டி சுரண்டி உண்டனர். வெறும்நாவால் பாறையிலிருந்து நக்கி உண்பவரை கண்டிருக்கிறேன்.”

“மேலும் மேலுமென அந்நஞ்சை நாடி மக்கள் வந்துகொண்டிருந்தனர். அதன் சுவை அன்றி பிற சுவை எதையும் அறியாதாயினர். நாவிலிருந்து சொல்லுக்குக் குடியேறியது அந்நஞ்சு. இங்கிருந்து செல்பவர் ஒவ்வொருவரும் அந்நஞ்சுடன் சென்று நிலமெங்கும் அதை பரப்பினர். கிழக்கே காமரூபத்திலிருந்தும் மேற்கே காந்தாரத்திலிருந்தும் அதன் சுவைதேடி மக்கள் வந்துகொண்டே இருந்தனர். மும்மடங்கு திரள்கொண்டு வீங்கியது இப்பெருநகர்” சூக்ஷ்மை சொன்னாள்.

“இன்று அந்நஞ்சு முழுமையாகவே இந்நகர்மக்களின் குருதியில் கலந்துள்ளது. பாணரில் இசையாக, ஆட்டரில் நடனமாக, ஓவியர்களில் வண்ணமாக, கணியரில் எண்களாக அது நுரைத்தெழுகிறது. அரசி, வணிகர்களில் விழைவும் ஷத்ரியர்களில் வெறியும் என்றாகிப் பெருகுகிறது. அந்தணரில் வேதமென்று இன்று அமைந்திருப்பது அந்நஞ்சே. என்னுடன் வருக, நஞ்சு கொள்ளும் முடிவிலா தோற்றங்களை நான் காட்டுவேன். நஞ்சு கொள்ளுதலே விடுதலை என்று உணர்வீர்கள்.”

சுப்ரியை “இல்லை, நான் அரசரை பார்க்கவேண்டும்” என்றாள். சூக்ஷ்மை அவளருகே விழிகள் அணுகிவர எழுந்து முகம் நீட்டி “மெய்மையும் ஒரு நஞ்சென்று அறிக! அதன் களிகொண்டவர்களையே ஞானிகள் என்கிறோம். அதற்கு முற்றடிமைப்பட்டவர்களை சித்தரென்கிறோம். பித்தரென்று இங்கும் சித்தரென்று அங்கும் மானுடரை ஆட்டுவிப்பது நஞ்சே” என்றாள். சுப்ரியை அறியாது இரண்டு அடி பின்னடைந்தாள். சூக்ஷ்மை புன்னகைத்து “மண்ணில் நஞ்சுகள் ஆயிரம். விண்ணில் நஞ்சனைத்தும் ஒன்றே” என்றாள்.

“ஆழிவண்ணனின் சேக்கை. அனல்விழியனின் ஆரம். உலகன்னையின் மேகலை. நஞ்சில்லாத தெய்வமேது?”

சுப்ரியை தலையை இல்லை என்பதுபோல் அசைத்தாள். “தெய்வங்கள் மானுடருக்கு அளிப்பது நஞ்சொன்றையே” என்றாள் சூக்ஷ்மை. அவள் குரல் கிசுகிசுப்பென ஒலித்தது. “துரியோதன மாமன்னருக்கு அவர் கொண்ட தெய்வம் அளித்த நஞ்சால் நுரைத்தெழுந்துள்ளது இந்நகர். இதன் இன்பக் கொந்தளிப்பை இன்றுவரை இப்புவியில் எந்நகரும் அடைந்ததில்லை. ஒருவேளை இவ்வுச்சம் இனிமேல் நிகழாதொழியலாம். இது நிகழ்ந்ததென்பதனாலேயே இந்நகர் விழுந்துடைந்து அழிந்து மறையலாம். இங்கு எழுவது பெருமழைக்கு முந்தைய ஈசல்சிறகுகளின் ஒளியாக இருக்கலாம். ஆனால் இந்நகர் இன்று உச்சம் கொண்டிருக்கிறது.”

அவள் ஒருகணத்தில் தன்னை அவ்விழிகளிடமிருந்து விடுவித்துக்கொண்டு வெளியே சென்றாள். காலடியோசை கேட்டு அரைத்துயிலில் சிறுபீடத்தில் அமர்ந்திருந்த சபரி எழுந்துகொண்டு “அரசி!” என்றாள். “அரசரின் மாளிகைக்கு…” என்றாள் சுப்ரியை. “இந்தப் பொழுதில் அங்கே…” என்று சபரி தயங்க “எவ்வழி?” என்றபடி அவள் முன்னால் சென்றுவிட்டாள். சபரி பின்னால் ஓடிவந்தாள். கூடத்தில் படியிறங்கி மறுபக்க படிகளில் அவளே ஏறினாள். வழி நன்கு தெரிந்திருந்தது. ஏதோ கனவில் நூறுமுறை இங்கு நான் வந்திருக்கவேண்டும்.

கர்ணனின் சிற்றறை வாயிலில் நின்றிருந்த அங்கநாட்டுக் காவலன் “அரசி!” என திகைப்புடன் சொன்னான். “அரசரை நான் சந்திக்கவேண்டும்” என்றாள். “இப்போது…” என அவன் தயங்க “உடனே” என்றாள். அவன் தலைவணங்கி உள்ளே சென்று

மீண்டான். “அரசி, அவர் தன்னிலையில் இல்லை. உடனிருக்கும் பாங்கர்களும் களிவெறியில் இருக்கிறார்கள்…” என்றான். அவள் கதவைத் திறந்து உள்ளே சென்றாள்.

கர்ணன் தாழ்வான மஞ்சத்தில் தலையணைமேல் ஒருக்களித்துச் சாய்ந்து தலைதொங்க அமர்ந்திருந்தான். அவன் முன் உணவுப்பொருட்களும் மதுக்குடுவைகளும் சிதறிக்கிடந்தன. காலடியில் ஒரு சூதன் குப்புற விழுந்து துயின்றுகொண்டிருந்தான். அப்பால் ஒருவன் பீடத்தில் நன்றாகக் கால்நீட்டி சாய்ந்திருந்தான். ஒருவன் மகரயாழை மடியில் வைத்து தடுமாறும் விரல்களுடன் அதை மீட்டினான். அதிலிருந்து துளித்துளியாக பொருளற்ற ஓசை எழுந்தது. கோப்பைகளுடன் நின்றிருந்த விறலி அவளைக் கண்டதும் பின்னால் விலகிச்சென்று சுவரோடு ஒட்டிக்கொண்டாள். இரு சூதர்கள் கண்களில் ஏளனத்துடன் அவளை நோக்கினர்.

“அரசரிடம் பேசவந்திருக்கிறேன்” என்றாள் சுப்ரியை. சூதர்களில் ஒருவன் கர்ணனின் காலைப்பற்றி உலுக்கி “அரசே, அரசே” என்றான். “என்ன?” என்று கர்ணன் விழித்தான். “ஏன் பாட்டு நின்றுவிட்டது? பாடுக… எங்கே என் நாகம்? என் குவளை எங்கே?” சூதன் “அரசே, அரசி வந்துள்ளார்” என்றான். “எந்த அரசி?” என்று கர்ணன் கையூன்றி எழுந்து திரும்பி நோக்கினான். “ஆ! இவள்…” என்று சுட்டிக்காட்டினான். சுட்டுவிரல் அப்படியே நிற்க அவன் முகத்தில் ஏளனப் புன்னகை பரவியது. இதழ்கள் இளிப்பில் இழுபட “இவள்…” என்றான். மீண்டும் ஒருமுறை சிரித்து திரும்பி சூதனை நோக்கி “இவள் யார் தெரியுமா?” என்றான்.

“சம்பாபுரியின் அரசி!” என்றான் சூதன். “அல்ல, அல்ல மூடா” என கர்ணன் நகைத்தான். “சொல்” என்று கோப்பை ஒன்றை எடுத்து

இன்னொரு சூதன்மேல் எறிந்தான். அவன் “கலிங்க அரசி” என்றான். “இல்லை” என்று கர்ணன் உரக்க நகைத்தான். எழுந்து அமர முயன்றபோது உடல் ஒருபக்கமாக சரிந்தது. கையூன்றி அமர்ந்து “இவள் சிந்துநாட்டின் அரசி. ஜயத்ரதரை உளம்கொண்டவள்…” என்றான். சூதர்கள் திகைப்புடன் அவளை நோக்க சுப்ரியை “அரசே” என்றாள். “இன்று வேள்விநிலையில் காமிகை அவையமர்ந்தபோது நிலையழிந்து துயர்கொண்டவள்… இவள்… ஆனால்…”

அவன் சொல்லக்கூடாது என்பதுபோல விரலை அசைத்தான். அவ்விரலை வாய்மேல் வைத்து மூடிக்கொண்டு தலையை ஆட்டினான். ஊன்றியிருந்த இன்னொரு கையை இயல்பாக தூக்க மீண்டும் நிலையழிந்து மஞ்சத்தில் விழுந்தான். சுப்ரியை திரும்பி கதவைத் திறந்து வெளியே சென்றாள். கர்ணன் ஏதோ குழறுவது அவளுக்குப் பின்னால் கேட்டது. இடைநாழியை அடைந்ததும் அவள் ஓடத் தொடங்கினாள். அவளுக்குப் பின்னால் சபரி நுனிக்கால் வைத்து ஓடிவந்தாள்.

மூச்சிரைக்க அவள் தன் அறைவாயிலுக்கு வந்ததும் திகைத்தவள்போல நின்றாள். உடன் வந்து நின்ற சபரி “அரசி!” என்றாள். அஞ்சிய காலடி எடுத்துவைத்து அவள் உள்ளே சென்றாள். அங்கே அறைமூலையின் சிறிய பீடத்தில் சூக்ஷ்மை அமர்ந்திருந்தாள். அவள் உள்ளே நுழைவதை முன்னரே எதிர்நோக்கியவை என அவள் விழிகள் கூர்கொண்டிருந்தன. அவள் அவ்விழிகளை சந்தித்து மெல்ல தளர்ந்தாள். கைகள் அணியோசை எழ விழுந்தன.

அஸ்தினபுரியின் கோட்டைக்கு வெளியே குறுங்காட்டுக்குள் இருந்த சிறிய நாகபீடத்தை அடைந்ததும்

சூக்ஷ்மை நின்றாள். அவளைத் தொடர்ந்து வந்துகொண்டிருந்த சுப்ரியை கால் தளர்ந்து மூச்சுவாங்க அடிமரம் ஒன்றைப் பற்றியபடி நின்று பின் சாய்ந்துகொண்டாள். கண்களை மூடியபோது திசை சுழல்வதை உணரமுடிந்தது. கால்கள் வலுவிழக்க அவள் மெல்ல அமர்ந்துகொண்டாள். சூக்ஷ்மை அவளை அறியாதவள்போலச் சென்று நாகபீடத்தின் முன் நின்றாள்.

தொன்மையான பதிட்டை அது. கருங்கல் பீடமும் அதன்மேல் நிறுவப்பட்டிருந்த ஐந்து மாநாகங்களின் சிலைகளும் நெடுநாட்கள் மழைவிழுந்து அரித்து உருக் கரைந்திருந்தன. அவற்றின்மேல் கொடிகள் படர்ந்து சருகுகள் பொழிந்து மூடியிருக்க ஒளிந்துபதுங்கி நோற்றிருப்பவைபோலத் தோன்றின. சுப்ரியை விழிதிறந்தபோது கைகளை மடியில் கோத்துவைத்து கால்மடித்து அமர்ந்து சிலையில் விழிநட்டு அசையாமலிருக்கும் சூக்ஷ்மையை நோக்கினாள். பின்னாலிருந்து பார்த்தபோது அவள் எவரோ என தோன்றி துணுக்குறச்செய்தாள்.

நினைவிலிருந்து ஒவ்வொன்றாக எடுத்துக்கொண்டாள். சூக்ஷ்மை சிறு கொம்புச்சிமிழில் அருந்தக்கொடுத்த நச்சுத்துளி நாக்கை எரித்து தொண்டையை அனலாக்கியபடி உடலில் இறங்கியது. சற்றுநேரத்தில் குருதியெங்கும் எரிந்தபடி பரவியது. தோல் காந்தத் தொடங்கியது. அவள் “என்னால் தாளமுடியவில்லை. உடலில் அனல்பற்றிக்கொண்டதுபோலிருக்கிறது” என்றாள். “ஆடைகளை கழற்றிவிடுங்கள், அரசி” என்றாள் சூக்ஷ்மை. “என் தசைகள் உருகுகின்றன. ஊன் பற்றி எரிகிறது” என்றாள் சுப்ரியை.

சூக்ஷ்மை அவள் ஆடைகளை கழற்றினாள். முன்னரே அவள் உடலில் உலோகமென ஏதுமில்லாமல் அணிகளைந்திருந்தாள். மெல்லிய தோலாடை ஒன்றை அளித்து “இதை அணிந்துகொள்ளுங்கள், அரசி” என்றாள். அது மென்மரப்பட்டை போலிருந்தது. “இது என்ன?” என்றாள். “தோலாடை… ” என்று சூக்ஷ்மை சொன்னாள். “மலைப்பாம்பின் தோல்.” சுப்ரியை திடுக்கிட்டு அதை கீழே போட்டாள். “இதையன்றி நீங்கள் எதையும் அணிய முடியாது, அரசி. பட்டும் பருத்தியும் மரநாரும் பற்றி எரியும்…” என்றாள் சூக்ஷ்மை. தயங்கியபடி அவள் அதை அணிந்துகொண்டாள். வாழைப்பட்டையை உடுத்ததுபோல் தண்ணென்றிருந்தது.

“வருக!” என்று சூக்ஷ்மை அழைத்தாள். “இவ்வரண்மனையில் இருந்து நான் நடந்து வெளியே செல்லவியலாது” என்று சுப்ரியை சொன்னாள். “எங்களுக்கான பாதைகள் வேறு… விழியறியாது உலவுபவர்கள் நாங்கள்” என்றாள் சூக்ஷ்மை. “நகரில் எங்கு சென்றாலும் என்னை கண்டுகொள்வார்கள்” என்று சுப்ரியை மேலும் சொன்னாள். “ஆடியில் நோக்குக! அந்தப் பெண்ணை நீங்களே முன்னர் நோக்கியிருக்கமாட்டீர்கள்” என்றாள் சூக்ஷ்மை. அவள் திடுக்கிட்டு ஆடியை நோக்கி திரும்ப அங்கிருந்து நோக்கிய அறியா அயலவள் அவளை நெஞ்சதிர்ந்து விலகச்செய்தாள். கரிய நிறமும், சிவந்த இமையா விழிகளும் கொண்டிருந்தாள்.

“வருக!” என அவள் கையைப்பற்றி சூக்ஷ்மை அழைத்துச்சென்றாள். மாளிகைக்குள் நுழைந்து மூன்று சிற்றறைகளைக் கடந்து இருண்ட கலவறைக்குள் சென்றாள். அங்கே சுவரென்றமைந்த மரப்பலகையை அவள் இழுத்து எடுத்தபோது ஒருவர் தவழ்ந்து உள்ளே செல்லத்தக்க

சுரங்கவழி தெரிந்தது. கூர்ந்து நோக்கி “இது என்ன?” என்றாள் சுப்ரியை. “எங்கள் வழி, நானே அகழ்ந்தது” என்றபின் சூக்ஷ்மை கீழே படுத்து நெளிந்து உள்ளே நுழைந்தாள். சுப்ரியை நிலத்தில் படுத்து கைகளால் உந்தியபோது நாகமென நெளிவுகொண்டு உடல் அதற்குள் நுழைந்தது. விலாவெலும்புகள் அலையலையென அட்டையின் கால்கள்போல அசைந்து அவளை முன் செலுத்தின.

இருண்ட குகைவழியினூடாகச் சென்று மேலெழுந்தபோது அவர்கள் நகரின் கொந்தளிப்பின் நடுவே இருந்தனர். “இங்கு உண்மையும் பொய்யும் எல்லை கடந்துவிட்டிருக்கின்றன. நாம் திகழவேண்டிய இடம் இதுவே” என்றாள் சூக்ஷ்மை. வெளியே மக்கள்திரள் வண்ணங்களென உருகி ஒற்றைப்பெருக்காகி அலைகொண்டு சுழித்து கரைமோதி கொப்பளித்துக் கொண்டிருந்தது. தெருமுனைகளெங்கும் மேடைதோறும் விறலியரும் பாணரும் ஆட்டரும் கூத்தரும் பாடிஆடினர். அங்கிருந்து அவை பரவி நகர்மக்கள் அனைவருமே ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டுமிருந்தனர்.

முதற்சில கணங்களுக்குப்பின் அவள் அங்கு நிகழ்வது வெறும் காமமே என்று கண்டாள். அத்தனை கூச்சல்களும் சிரிப்புகளும் உடலசைவுகளும் ஒன்றையே நிகழ்த்திக்கொண்டிருந்தன. இசையும் தாளமும் பாடல்மொழியும் அதனுடன் இணைந்தன. கூட்டத்தில் பாறைநடுவே நீர் என நெரிசலில் உருமாறி வழிந்தோடிய ஒருவனைக் கண்டு திகைத்து அவன் கால்களை நோக்கி அவன் நாகம் என்று உணர்ந்து மெய்ப்பு கொண்டாள். மறுகணமே அங்கு நிறைந்திருந்த மக்களில் சிறகுகொண்ட கந்தர்வர்களை, ஒளிவடிவான தேவர்களை, அலையலையாக

சுழன்றுகொண்டிருந்த கின்னரர்களை அவள் காணத் தொடங்கினாள்.

சூக்ஷ்மை திரும்பி அவளிடம் “வருக!” என்றாள். அவள் எழுந்து அருகே சென்றாள். “இங்கிருந்து நாம் கிளம்பிச்செல்கிறோம்” என்றாள். “ஆம்” என்றாள் சுப்ரியை. சூக்ஷ்மை புன்னகைத்து “எங்கு என்று வினவாமையால் கிளம்பும் தகுதிகொண்டிருக்கிறாய்” என்றாள். தன் அருகே சுட்டிக்காட்டி “அமர்க!” என்றாள். அவள் சூக்ஷ்மையின் அருகே அமர்ந்தாள். அப்போதுதான் நாகசிலைகளுக்கு அடியில் அசைவுகளை கண்டாள். இருளுக்குள் மெல்லிய வழிவெனச் சுழன்ற நாகத்தின் உடலில் இருந்து படம் ஒற்றையிலைக் காளான்செடி என எழுந்தது.

“கை நீட்டி அதன் அருளை பெற்றுக்கொள்க!” என்று சூக்ஷ்மை சொன்னாள். சுப்ரியை கையை நாகத்தை நோக்கி நீட்டினாள். இருபுறமும் படம் விரிந்து பருக்க நாகம் நா பறக்க அசைந்தது. அவள் அதன் விழிகளையே நோக்கிக்கொண்டிருந்தாள். கையில் பருத்த மழைத்துளி ஒன்று விழுந்ததுபோல் உணர்ந்தாள். மெய்ப்பு கொண்டு நிமிர்ந்து நாகத்தை நோக்க அது மெல்லத் தழைந்து தன்னை புதருக்குள் இழுத்துக்கொள்ளத் தொடங்கியது. சூக்ஷ்மை “இனி உனக்கு ஆடைகள் தேவையில்லை” என்றாள்.

அவிரதன் தன் குடிலின் முற்றத்தில் அமர்ந்தபடி தொலைவில் வேள்விச்சாலையின் வேதச்சொல்லொழுக்கை கேட்டுக்கொண்டிருந்தான். தொடங்கிய கணம் முதல் ஒழியாது அது எழுந்துகொண்டிருந்தது. அவனுள் ஓடிக்கொண்டிருந்த அதே சொற்கோவைகள். ஆனால் செவியில் அவை

எழுகையில் பிறிதென்று தோன்றின. வானிலிருந்து பொழிபவைபோல. மானுட நாவையும் உள்ளத்தையும் அறியாதவைபோல.

எப்போதோ அவன் துயின்றுவிட்டிருக்கக் கூடும். விழித்தபோது பின்னிரவின் குளிர் இருந்தது. வேதச்சொல் முழக்கம் நிலைக்காது சென்றுகொண்டிருக்க காட்டின் அனைத்து ஓசைகளும் மாறிவிட்டிருந்தன. அவன் குடிலுக்குள் சென்று தன் மரவுரியை எடுத்துக்கொண்டான். பின்பக்கம் சென்று மண்குடத்தை தோளிலேற்றியபடி கங்கை நோக்கி சென்றான். விழிகளுக்கு இருளில் தடமென பாதை தெரிந்தது. குறுக்காக இரு நாகங்கள் இணையாக ஒழுகிச்சென்று மறைவதை கண்டான். நீரோடையின் மினுப்பும் குழைவும் கொண்டவை. இலையசையாமல் அவை புதர்களுக்கு அடியில் மறைந்தன.

மரத்தழைப்புக்கு அப்பால் கங்கை நீரொளியாகத் தெரிந்தது. அவன் சரல்பரப்பெனச் சரிந்த கரையை அடைந்து மெல்ல இறங்கி சதுப்புக்கரையருகே நின்றான். இடையில் கையை ஊன்றியபடி நீரலைகளின் ஒளியாடலை நோக்கிக்கொண்டிருந்தான். மீண்டும் எண்ணம் கொண்டதும் ஆடையைக் களைந்து மரவுரி அணிந்துகொண்டான். குடத்தை மணல்மேட்டில் வைத்தபின் கங்கைவிளிம்பில் வளைந்து நின்ற வேர்ப்புடைப்பில் ஏறி நின்று காலடியில் சுழித்த நீரை நோக்கினான். சிலமுறை உள்ளம் ஆயம்கொண்டது. எண்ணியிராக் கணத்தில் நீரில் பாய்ந்து ஆழத்தில் மூழ்கி கைதுழாவி சென்றான்.

குமிழிகளுக்கும், சருகுகளுக்கும், பரல்களுக்கும் மேலாக கைவீசி பறந்து சென்றான். வாய் முழுக்க நீரை அள்ளியபின் மேலெழுந்து வந்தான். நீட்டி எய்துவிட்டு விண்மீன்கள் துறித்து

நின்ற வானை நோக்கியபடி மல்லாந்து நீந்தினான். மீண்டும் மூழ்கி கைகளை வீசி ஆழ்ந்து ஆழ்ந்து சென்றான். ஆழத்தின் செறிவு அவனை வெளியே தள்ளியது. அழுத்தி தன்னை மேலும் கீழிறக்கினான். நீர்மை பாறையென்றாகி அவனை ஏந்தியது. அதில் தலையால் முட்டியபின் உதைத்து மீண்டும் மேலே வந்தான். வானில் முகில்கள் மெல்லிய ஒளிகொண்டிருந்தன. நீர்ப்பரப்பில் அந்த ஒளி பெருகியிருந்தது.

அவன் தொலைவில் இரண்டு பெரிய மீன்கள் எழுந்து எழுந்து விழுவதை கண்டான். வெள்ளியுடல்கள் மின்னி வளைந்து நீரில் அமிழ்ந்து அப்பால் மீண்டுமெழுந்தன. அவன் நீந்தி முன்னால் சென்று நீரை உந்தி மேலெழுந்து அவற்றை மீண்டும் நோக்கினான். அவை இரு பெண்ணுடல்கள் என்பதை கண்டான். ஒன்றையொன்று தழுவியும் விலகியும் நீரில் பாய்ந்தெழுந்து விழுந்து மூழ்கி பிறிதொரு இடத்தில் மேலெழுந்து அவர்கள் விளையாடிக்கொண்டிருந்தனர்.

[குருதிச்சாரல் நிறைவு]